# Katirvel Pillai's Tamil Dictionary

# தமிழ்ச் சொல்லகராதி

(மூன்றாம் பாகம்)

இது,
திருவாவடுதுறை யாதீன வித்துவானும்,
மதுரைத் தமிழ்ச் சங்கத்துச்
சைவ நூற் பரிசோதகருமான

**சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரால்**

பரிசோதிக்கப் பெற்றது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**தரமணி, சென்னை – 600 113.**

# Katiravel Pillai's Tamil Dictionary Vol - III

**Author:**
**C.W. Katiravel Pillai**

**Published by:**
**International Institute of Tamil Studies,**
C.I.T. Campus, Taramani, Chennai - 600 113.

| | | |
|---|---|---|
| Publication No | : | **287** |
| Edition | : | **Reprint** |
| Year | : | **1998** |
| Language | : | **Tamil** |
| Size | : | **1/4 Crown** |
| No. of Copies | : | **1000** |
| No. of Pages | : | **xii + 608** |
| Price | : | **200. 00** |
| Printed by | : | **Parkar Computers,**<br>293, Royapattah High Road,<br>Chennai - 600 014.<br>Phone: 8551363, 8266637. |
| அட்டைப் படம் வடிவமைப்பு | : | வே. கருணாநிதி,<br>பர்வீன் கருணாநிதி |

தமிழ் வளர்ச்சி இயக்கத்தின்
அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தில்
நிதியுதவி பெற்று
இந்நூல் வெளிவருகின்றது.

திி. பி. 2029/மீனம், 15

**முனைவர் மு. தமிழ்க்குடிமகன்,**
எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்

# அணிந்துரை

யாழ்ப்பாணம் கு. கதிரைவேல் பிள்ளையவர்கள் ஓர் அரிய தமிழ்ப் பணியைச் செய்திருக்கிறார்கள். அதுதான் அவர் உருவாக்கிய 'தமிழ்ச் சொல்லகராதி'. தமிழில் சொல்லுக்குப் பொருள் காணும் முயற்சியாகத்தான் 'நிகண்டுகள்' பிறந்தன. இவை கவிதை வடிவில் அமைந்தன. 1782இல் வீரமாமுனிவர்தான் உரைநடை வடிவில் இப்போதுள்ள அகரமுதலி முறையைக் கொண்டுவந்தவர். அதுதான் 'சதுரகராதி' என்பது. அதன்பின் எத்தனையோ பெருமக்கள் பலவகையான அகரமுதலிகளைக் கொண்டு வந்துள்ளனர். அதில் தமிழகத் தமிழ் அறிஞர்களும் வெளிநாட்டு அறிஞர் களும் அதிலும் குறிப்பாக யாழ்ப்பாணத் தமிழறிஞர்களும் பெரும் பங்காற்றியுள்ளனர். இதுகாறும் 64 வகையான அகரமுதலிகள் வெளி வந்துள்ளன.

நீதியரசராயிருந்து ஓய்வுபெற்ற இவ்வறிஞர் இந்நூலைச் செய்துள்ளார் என்பது வியப்புத்தான். இதுபற்றி அவரே எழுதுகிறார்.

> "நாம் முன்நெடுங்காலந் தொட்டு வாசித்துவந்த நூல்களில் உள்ளனவாய்ச் சதுரகராதி, மானிப்பாயகராதி, சென்னை யகராதிகள், உவின்சிலோ அகராதி, வைத்திய அகராதி என்னுமிவற்றில் இல்லாதனவாகிய சொற்களைப் புதிதாக ஓரகராதி செய்யவேண்டுமென்று புத்திபண்ணிக் காலாந் தரத்திற் குறித்து வைத்திருந்தோம்; ஆயினும் முன்னர்த் தமிழ் ஆங்கிலேயம் என்னும் இரு பாஷைகளிலும் நூலுரை யாசிரியராயும் பின்னர் அத்துவக்காத்தாயும் நீதிபதியாயும் ஏற்பட்டுச் செய்துவந்த கடமைகள் எமது காலத்தைக் கொள்ளை கொண்டமையால் எமது அபிப்பிராயத்தை நிறைவேற்றுவதற்கேற்ற சமயம் வாயாமற் போயிற்று. நீதிபதித் தொழிலினின்று ஓய்ந்திருக்கும் பின்னிட்ட ஐந்து

வருட காலங்களில் நோயனார் கைக்கொண்ட காலம் ஒழித்து எஞ்சிய காலத்தில் இவ்வகராதி எழுதுவதே நமது தொழிலாயிற்று."

பணி செய்த காலத்தில் செய்ய விழைந்த பணியை, ஓய்வு பெற்றதும் உழைத்து முடித்திருக்கிறார் என்பதே பெருமைக்குரியதாகும். இவர் இதற்கான முன்னுரையை 1904 சனவரி 1 இல் எழுதியுள்ளார்.

அதன்பின் இந்த நூல் என்ன வளர்ச்சியைக் கண்டது; வடிவம் எடுத்தது என்ற வரலாற்றைச் சற்றுப் பார்க்க வேண்டும். சண்முகம்பிள்ளை தம் நூலில் குறிப்பிட்ட செய்தியை அப்படியே தருகிறேன்.

"**தமிழ்ச்சங்க அகராதி**

தமிழ் - தமிழ் அகரமுதலிகளுள் மிகவும் பெரியது தமிழ்ச் சங்க அகராதி. இது மூன்று பெருந்தொகுதிகளாக வெளி வந்துள்ளது. சொற்பொருள் விளக்கம் தவிரப் பொருள், தொகை, தொடை அகராதி என்னும் சேர்க்கை இந்த அகராதியில் இல்லை. இந்த அகராதியைப் பல்லாண்டுகள் உழைத்து உருவாக்கியவர் யாழ்ப்பாணம் நீதிபதி கு. கதிரை வேற்பிள்ளையாவார்.

இவர் சதுரகராதி, மானிப்பாய் அகராதி, சென்னை அகராதி கள், வின்சுலோ அகராதி, வைத்திய அகராதி என்னும் இவற்றில் இல்லாத புதுச் சொற்களைத் திரட்டி விளக்கம் தந்துள்ளார். இதனை முற்றுமாய் வெளியிடும் முன்னர் இவர் காலமானார்.

பின்னர் அப்பொழுது மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவராக விளங்கிய பொன். பாண்டித்துரைத் தேவரவர்கள் அகராதிப் படிவங்களைக் கதிரைவேற்பிள்ளையின் குமாரர் பாலசிங்கம் என்பவரிடமிருந்து பெற்றார்; மதுரைத் தமிழ்ச் சங்க வித்து வான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டு வெளியிடப் பணித்தார். சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் முதலிய பலரும் பல்லாண்டுகள் உழைத்து இந்த அகராதியை மூன்று பகுதி களாக 1910, 1912, 1923ஆம் ஆண்டுகளில் வெளியிட்டு முற்றுவித்தனர்.

நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளை கூட்டிய 'தமிழ் சொல் லகராதி' என்னும் பெயருடன் இந்த அகரமுதலி வெளி வந்தபோதிலும் மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்டமையால் 'தமிழ்ச்சங்க அகராதி' எனக் குறிப்பதே பெருவழக்காயிற்று.

ஒரு சொற் பல்பொருள்களுக்கு விளக்கம் தரும்போது பொருள்களை 1, 2 என எண் குறியிட்டுக் காட்டியிருப்பது புதுமை. இதனால் ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள்கள் உண்டு என்பதும் தெளிவுபடுகிறது. மேலும், சொற் பொருளுக்கு அடிப்படை ஆதாரமான நூற்சான்றுகளையும் உதாரணம் என எடுத்துக் காட்டியது புதுமுயற்சி. சொற் பொருளுக்கு இலக்கிய இலக்கணம் முதலிய நூல்களில் இருந்து மேற்கோள் எடுத்துத் தந்த முதல் தமிழ் - தமிழ் அகராதி இதுவே.

இவர் 344 நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண் டுள்ளார். சொல் மூலங்களைக் காட்டியதோடு வடசொற்கள், இந்துஸ்தானிச் சொற்கள், தெலுங்குச் சொற்கள் முதலிய வற்றையும் இனஞ்சுட்டிக் காட்டியுள்ளார். இந்த அகரமுதலி யில் முந்திய அகரமுதலிகளில் இல்லாத பல சொற்களும் திருந்திய விளக்கங்களும் காணப்படுகின்றன. தமிழ் - தமிழ் அகரமுதலிகளுள் கால அடைவில் விரிவு பெற்ற பேரகராதி இதுவே.”

இதிலிருந்து நாம் பெறும் உண்மைகள் பல.

யாழ். அறிஞர் கதிரைவேற்பிள்ளையின் அகரமுதலிதான் 'மதுரைத் தமிழ்ச் சங்க அகராதி'யாகியுள்ளது. பல அகரமுதலிகளில் இல்லாத பலவற்றை இவர் திரட்டியுள்ளார்.

சிங்காரவேலு முதலியாரின் 'அபிதான சிந்தாமணி' அச்சுக் கட்டத்தில் வந்து தவித்தபோது, எப்படி, செந்தமிழ் அரிமா, தென்பாண்டித் தமிழ்த் தென்றல் பாண்டித்துரைத் தேவர் தானே முன்வந்து நூற்படியைப் பெற்று, வெளியிட்டுச் சிறப்புச் சேர்த்தாரோ அதேபோல இந்த அகரமுதலியையும் பெற்று வெளியிட்டுள்ளார் என்பது பெருமைக்குரியது. பல புதுமைகளை இவர் செய்துள்ளார் என்றும் பிற அறிஞர்கள் உறுதிப்படுத்துகிறார்கள்.

மேற்கோள் காட்டி விளக்கிய முதல் நூல் என்ற பெருமை பெறுகிறது. அதிலும் 344 நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியிருப்பதால் அவரது பன்னூற் பயிற்சியும் புலமையும் நமக்குத் தெரிகின்றன. 'கால அடைவில் விரிவுபெற்ற முதல் பேரகராதி இதுவே' என்பதுதான் பெரிய சிறப்பு.

1998 மார்ச்சு 29ஆம் நாள் இதனை வெளியிடும் வாய்ப்புப் பெற்றமைக்காக மகிழ்கிறேன். இதனால்தான்,

> **"என்னை நன்றாகக் கலைஞர் படைத்தார்**
> **அன்னைத் தமிழுக்கு அணிசெய்யு மாறே"**

என்று நான் அழுத்தமாகக் கூறிவருகிறேன். என் துறையில் இயங்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இதனை வெளியிடுகின்றது. இதனை விரைந்து வெளிக்கொணர்ந்த இராமர் இளங்கோ, அவர்களைப் பாராட்ட வேண்டும்.

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்ககம் தான் ஒவ்வொரு தொகுதிக்கும் உரூபா 10,000/- நிதி வழங்கியிருக்கிறது. வழங்கவும் வாங்கவும் எங்கள் துறைகளே பயன்பட்டுள்ளன என்பது குறித்து மகிழ்வெய்துகிறேன்.

அட்டைப்படம், உறுத்தல் இல்லாத வண்ணத்தில் சிறப்பாக அமைந்துள்ளது. அட்டைப்படம் போட்டவர் வே. கருணாநிதி, வடிவமைத்தவர் பர்வீன் கருணாநிதி.

இந்த நூலுக்கு மறுவாழ்வளித்து உங்கள் கைகளில் எல்லாம் தவழ வைத்தவரும் கருணாநிதிதான். ஆம்! தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் அவர்கள்தான்.

இதுபோன்ற பயன்பாடு மிக்க பணிகளைப் பார்க்கும் போதுதான் தமிழ் வளர்கிறது என்ற பூரிப்பும், வளர்ந்து விடும் எனும் நம்பிக்கையும், வளர்த்துக் காட்டுவோம் எனும் சூளுரையும் பிறக்கின்றன.

பணி தொடரட்டும்!

29 - 03 - 1998.

அன்புடன்

**(மு. தமிழ்க்குடிமகன்)**

1998 மார்ச்சு 28

**முனைவர். ச. சு. இராமர் இளங்கோ**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,**
**தரமணி, சென்னை – 113.**

## இரண்டாம் பதிப்பு முன்னுரை

தொல்காப்பியர் ஒரு சொல்லைக் குறிக்கும் பல பொருள்களை உரியியலில் குறிப்பிடுகிறார். எனவே தொல்காப்பியருக்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டுகளுக்கு அவர் தோற்றுவாயாக அமைந்தார். நிகண்டு களில் திவாகரம், பிங்கலம், சூடாமணி என்பன புகழ் பெற்றவை.

நிகண்டு எனும் வடசொல்லுக்குத் தொகுப்பு என்பது பொருளாகும். முதன்முதலில் நிகண்டு என்னும் சொல்லைச் 'சூடாமணி நிகண்டு' எடுத்து ஆண்டுள்ளது. நிகண்டு எனும் வடசொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல் 'உரிச்சொல் பனுவல்' ஆகும்.

நிகண்டுகளில் தெய்வப் பெயர், மக்கட் பெயர், இன்னோரன்ன தொகுதிகள் காணப்படினும் 'ஒரு சொல் பல்பொருள்' எனும் தொகுதியே அகராதி அமைப்பை ஒத்திருக்கிறது.

தமிழ் மொழியில் அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கம் தரும் அகராதி தோன்றுவதற்கு முன்னர் நிகண்டுகள் அப்பணியைச் செய்தன. எனவே அகராதிகளுக்கு முன்னர் தோன்றிய நிகண்டுகளைக் 'கருவி நூல்கள்' எனலாம்.

அக்காலத்தில் நிகண்டுகள் மனனம் செய்வதற்கு ஏற்ற வகையில் பெரு வழக்காய் இருந்த செய்யுள் வடிவில் எழுதப்பட்டன. அகவல், விருத்தம், வெண்பா, கட்டளைக் கலித்துறை முதலிய பா வடிவங்களில் அவை இயற்றப்பட்டிருந்தன.

நிகண்டுகளில் ஒரு சொல்லுக்குரிய பொருளை அறிய வேண்டின் அந்நிகண்டு முழுவதையும் முதலில் படிக்க வேண்டும். பின்னர் அச்சொல் எந்தத் தொகுதியில் வருகிறது என்பதைத் தேடிப் பிடிக்கவேண்டும். நிகண்டுகள் செய்யுள் வடிவில் எழுதப்பட்டிருந்தமையால் அசைச் சொற்

களும் அடைமொழிகளும் இடம்பெற்றிருந்தன. எனவே நிகண்டுகளை மனனம் செய்தால்தான் பொருளை அறிய முடியும். அதனால் நிகண்டுகளை நம்முன்னோர் மனனம் செய்தனர்.

ஆங்கிலக் கல்வி இந்தியாவில் பரவிய பின்பு அகராதிகள் எழுதப் பட்டன. நிகண்டுகள் செய்யுள் வடிவில் அமைய, அகராதிகள் உரை நடையில் அமைந்தன. நெடுங்கணக்கு முறையைப் பின்பற்றி 'அகராதிகள்' அகரநிரலில் எழுதப்பட்டன.

ஒரு மொழியில், அகர நிரலில் ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களை அறிய உதவுவது அகராதியாகும். 'அகராதி' என்பதற்கு 'அகரத்தை முதலாக நெடுங்கணக்கு முறையில் அமையும் சொற்பொருள் விளக்கம்' என்று 'மானிப்பாய் அகராதி' விளக்கம் தருகிறது.

மொழியின் சொல் வளத்தை அறிய அகராதி துணை செய்கின்றது. அகராதி என்பதை அகரம் + ஆதி எனப் பிரித்து ஆதி என்பது வடசொல் என்பர். எனவே அகராதி எனும் வடசொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல் 'அகரமுதலி' என்பதாகும்.

1906இல் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் வெளியிட்ட 'சேந்தன் செந்தமிழ்' எனும் நூலில் அகர நிரலில் அமைந்த பகுதியை 'அகரமுதல்' என்று அவர் குறிப்பிடுகிறார். எனினும் 'அகரமுதலி' என்று இன்று வழங்கும் சொல்லைப் பெருவழக்காய் ஆக்கியவர் மொழி ஞாயிறு தேவநேயப்பாவாணர் ஆவார்.

தமிழ் மொழியில் அகராதியை உருவாக்கிய பெருமை 'பெஸ்கி' எனும் வீரமாமுனிவரைச் சாரும். அவர் எழுதிய சதுரகராதி 18ஆம் நூற்றாண்டில் முடிந்திருந்தாலும் 19ஆம் நூற்றாண்டில்தான் மக்களிடம் வந்தது.

சதுரகராதி என்பதற்கு 'நான்கு வகை அகராதி' என்று பொருள்.

| | |
|---|---|
| முதலாவது | பெயரகராதி |
| இரண்டாவது | பொருளகராதி |
| மூன்றாவது | தொகையகராதி |
| நான்காவது | தொடை அகராதி. |

இவற்றுள் முதற்கண் சுட்டிய பெயரகராதியில் 'ஒரு சொல்லுக்குரிய பல பொருள்கள்' தரப்பட்டுள்ளன. இப்பகுதியே பிற்காலத்தில் அகராதி

பெருகுவதற்கு வழிவகுத்தது. மேலும் வீரமாமுனிவர் தமிழ் இலத்தீன் அகராதி, தமிழ் - போர்ச்சுகீசு அகராதி ஆகிய இரு மொழி அகராதிகளை வெளியிட்டார்.

வீரமாமுனிவரின் சதுரகராதிக்குப் பின்பு 1842இல் சந்திரசேகர பண்டிதரின் 'யாழ்ப்பாணத்து அகராதி' எனும் மானிப்பாய் அகராதி வெளி வந்தது. 1899இல் நா. கதிரைவேற்பிள்ளையின் 'தமிழ் பேரகராதி எனும் தமிழ் மொழியகராதி' என்ற நூலும், 1909இல் இராமநாதனின் 20ஆம் நூற்றாண்டுத் 'தமிழ் அகராதி' என்ற நூலும் அடுத்தடுத்து வந்தன.

ஈழத்தைச் சார்ந்த நீதியரசர் கு. கதிரைவேற்பிள்ளை அவர்கள் 'தமிழ்ச் சொல்லகராதி' என்னும் இவ்வரிய அகராதியை உருவாக்கினார். இவரது அகராதி உருவாக்க ஆர்வத்தையும், உழைப்பின் மேன்மையையும் நம்மால் புரிந்துகொள்ள இயலுகிறது. விரிவாக எழுதப்பட்ட இவ்வகராதி வெளி வருவதற்கு முன்னமே அவர் மறைந்தது இரங்குதற்குரியது.

மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் பாண்டித்துரைத் தேவர் அவர்கள் கதிரைவேற் பிள்ளையின் மகன் பாலசிங்கம் என்பவரிடம் அச்சுக்கூடம் செல்லா அந்த அகராதியைப் பெற்று மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்களின் துணையுடன் 1910இல் முதல் தொகுதியையும், 1912இல் இரண்டாம் தொகுதியையும், 1923இல் மூன்றாம் தொகுதியையும் வெளியிட்டார்.

88 ஆண்டுகளுக்கு முன்னர் மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்ட 'தமிழ்ச் சொல்லகராதி'யை மீண்டும் புதுப்பொலிவுடன் உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது. 'நல்லார் துணையுடன் நாளும் தமிழ்ப்பணி' என்ற நோக்கில் பணியாற்றி வரும் இந்நிறுவனம், இந்நேரத்தில் இந்நூல் வெளியீட்டுக்குத் துணைபுரிந்த நல்லார் பலரையும் நன்றியுடன் நினைவு கூர்வதிலும் மகிழ்வுறுகிறது.

இவ்வகராதியை மீண்டும் வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தை எனக்கு உருவாக்கிய பெருமக்கள் இருவர். ஒருவர் மொழி பெயர்ப்புத்துறை யில் முன்னோடியும் அரிய நூல்களைச் சேர்த்து வைத்திருக்கும் கருத்துக் கருவூலமான தஞ்சை வழக்கறிஞர் உயர்திரு. டி.என். ராமச்சந்திரன் ஆவார். மற்றவர் பேராசிரியர் அ. தட்சணாமூர்த்தி ஆவார். இப்பெருமக்கள் இருவருக்கும் எங்கள் நன்றி.

இவ்வகராதியை வெளியிட இசைவு தந்த மதுரைத் தமிழ்ச்சங்கச் செயலாளர் திரு. தனுக்கோடி பாண்டியன் அவர்களுக்கும், மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவி சேதுபதி அரசியார் திருமதி இந்திராதேவி அவர்களுக்கும் நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் திரு. த. இரா. சீனிவாசன் இ. ஆ. ப. அவர்களுக்கும் எங்கள் நன்றி.

அரிய நூல்கள் வெளியிடும் திட்டத்தில் இந்நூலை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர் ச. நாகராசன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

கண்ணையும் கருத்தையும் கவருமாறு நூலினைச் சிறப்புற அச்சிட்டுத் தந்த 'பார்க்கர் கம்ப்யூட்டர்ஸ்' திரு. வே. கருணாநிதி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

# முதலாம் பதிப்பின் முகவுரை

இவ்வகராதியின் முதலிரண்டு பாகமும் வெளியிட்டபின் யான் திருவாவடுதுறை யாதீனத்திற் பல ஆண்டு தங்கியிருக்க நேர்ந்தமையாலும், மறுபடி யான் இங்குவந்து இம்மூன்றாம் பாகத்தை விரைவில் வெளியிடக் கருதி அச்சிட்டு வருங்கால் 1920-ம் ஜூன் மீ 20 உ சங்கத்தில் நேர்ந்த தீ விபத்தில் இம்மூன்றாம் பாகத்தில் தா-முதல் நகரம் வரையுள்ள அச்சிட்ட பாகந் தவிர, அச்சிடுவதற்குப் பரிசோதித்து வைத்திருந்த அசலும் நகலும் ஆகிய காகிதக் கையெழுத்துப் பிரதிகள் முழுவதையும் இழந்து விட்டமை யாலும், ப.ம.ய.வ. என்ற அக்கர வர்க்கச் சொற்களடங்கிய அவ்விழந்த பாகத்தைப் புதிதாய்த் தேடிச் சேர்த்துப் பரிசோதித்து வெளியிடத் தொடங்கிய பொழுது, நம், சங்க அச்சியந்திரசாலையில் வேண்டிய எழுத்துக்கள் போதுமான அளவு வராதிருந்தமையாலும், பின் இப்புத்தகம் அச்சிடுவதில் எனக்கு உதவியாயிருந்தவர் விலகிக் கொண்டமையால் யான் ஒருவனே சொற்களைத் தேடிப் பொருள் கண்டெழுதுதல், ஒப்புநோக்குதல், திருத்துதல், எழுதுதல் முதலிய எல்லா வேலைகளையும் கவனிக்க வேண்டியிருந்தமையாலும் இதனை வெளியிட இத்தனையாண்டு தாமதமேற்பட்டதென்பதை மிக்க விசனத்துடன் தெரிவித்துக் கொள்கின்றேன். உலகில் வழங்குஞ் சொற்களும் பொருள்களும் அளவில்லனவாதலால், யானொருவனாக என் சிற்றறிவுக்கியன்றவரை பதங்களும் பொருள்களுந் தெரிந்து இத்தமிழ்ச்சொல்லகராதியின் மூன்றாம் புத்தகமாகிய இதனில் வெளியிட்டிருக்கின்றேன். இனிப் பேரறிவுடைய பெரியோர்கள் இன்னும் விரிவாகக் கண்டெழுதி வெளியிட்டு உலகிற்குபகாரமாகச் செய்யவேண்டுமென வேண்டுகின்றேன்.

இப்பெருங்காரியத்தை இடையே நேர்ந்த இடையூறெல்லாமகற்றி நிறைவேற்றி வைத்த எல்லாம் வல்ல இறைவனை மனமொழிமெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

இங்ஙனம்,

திருவாவடுதுறையாதீன வித்துவானும்,

மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் சைவநூற்பரிசோதகருமான

**சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர்**

**மதுரைத் தமிழ்ச்சங்கம்,**

**மதுரை.**

**தன்மன்**—1. இயமன். 2. தருமராசன். (உ-ம்) "தன்மனையம்மனைதம்பிமா." (பாரத. வேத்திர. ௬௫.) 3. திப்பிலிமூலம். (மலையக.)

**தன்மாத்திகாயம்**—சமணமதத்திற் சொல்லிய அசீவபதார்த்தத்தின் நான்குவகையுள் ஒன்றாகிய புற்கலத்தின்வேறாய் நன்மைபயப் பதோரத்திகாயம். (சிவஞானபா.) (மணிமே.)

**தன்மாத்திரை**—பிருதிவியாதி பஞ்சபூதங்களுக்குக் காரணங்களாயும் அவற்றிலுஞ் சூக்ஷமங்களாயுமிருக்கும் தத்துவங்கள்; அவை—கந்தம், இரதம், உருவம், பரிசம், சத்தமாகிய தத்துவ சமூகம். (பௌட். ௬: அ.) [அந்தந்த இந்திரியங்களுக்குத் தக்கபடி நின்று காரியப்படுகையாலும், அப்படிக் காரியப்படுத்துமிடத்துத் தத்தங்குணங்களுக்கு ஏற்றக்குறைவின்றி நிற்றலாலும், தன்மாத்திரையெனப் பெயர்பெற்றன.]

**தன்மாநுகிருதிலக்கணை**—சிவனைச் சிவனைன்றாற்போலுமோரிலக்கணை. (சி. சி. ௪. உஅ. ஞானப்.)

**தன்மாநுமாநம்** — பூர்வகாட்சி யநுமானம். (இதனை சி. சி. க. அளவை. கஉ-காண்க.)

**தன்மி**—தன்மத்தை யுடையது. (உ - ம்.) "தன்மபேதத்தாற்றன்மிபேதிக்கும்" (சி. சி. க: ௬௬. ஞானப்.)

**தன்முன்**—மூத்தசோதரன். (உ-ம்.) "தன்முன்றனக்கென்றிருந்தமக-ளாம்." (திருவிளை. தண்ணீர். ௫.)

**தன்மூலம்**—திப்பிலிமூலம். (உ-ம்.)"பத்திரதாருகமரத்த - சித்திரகந்தன்மூலம்" (தையில. தைலவ. உஉ.)

**தன்மேம்பாட்டுரை**—ஓரலங்காரம். அஃது ஒருவன் தன்னைத்தானே புகழ்ந்து சொல்வது. (உ-ம்.)"தான்றற்புகழ்வதுதன்மேம்பாட்டுரை" (தண்டி. எ௦.) இது நெடுமொழியென்பர். (பிங்கலந்தையில்.)

**தன்மேம்பாடு**—தற்புகழ்ச்சி.(தண்டிய.எ௦.)

**தன்மை**—1. அழகு. (சூ. நி. கக: னகரவெ. ௬ ) 2. ஓரலங்காரம். (உ-ம்.) "எவ்வகைப் பொருளுமெய்வகைவிளக்குஞ் - சொன்முறை தொடுப்பதுதன்மையாகும்." (தண்டி. உஎ.) 3. குணம், இயல்பு. (உ-ம்.) "ஒருகால்வெம்மைத்தன்மைகுன்றா - தவன்" (மரு-தி. ௬.) 4. நன்மை. 5. பெருமை. 6. மூவிடத்தொன்று. (உ-ம்.) "தன்மைமுன்னிலைபடர்க்கை மூவிடனே" (நன். உ௬௬.) (4, 5-பிங்கல. ௬௬உஉ.)

**தன்மைதிரிபெயர்**—அலி.(உ-ம்.)"தன்மை திரிபெயருறுப்பின்கிளவி" (தொல். சொல். ௫௬.)

**தன்மைநவிற்சியணி**—தன்மையணி.(குவல. க௬.)

**தன்மையெழுத்து**—உணர்வெழுத்து;அது, செவிப்புலனாகிய வொலியெழுத்து. (பிங்கல. உ௦அஎ.)

**தன்மொழி**—ஒருமொழி. (பி. வி. உ௬. உரை.)

**தன்வசம்**— } தன்னிலைமை, சுவாதீனம்.
**தன்வயம்**— }

**தன்வந்தரி**— 1. ஒரு வைத்தியசாத்திரி அவன் திருப்பாற்கடல் கடையும்போதுண்டான தேவர் மருத்துவன்; இத்தேவர் மருத்துவனே ஆயுர்வேதத்தைவெளிப்படுத்தவேண்டித் தீர்க்கதமன் புத்திரனாக அவதரித்தானென்பர். (அபிதானகோசம்.) 2. சிவன். 3. சூரியன்.

**தன்வினை**—1. ஊழ்வினை, தான் முற்செய்வினை. 2. எழுவாய்க்கருத்தாவின் புடைபெயர்ச்சியாய் நிகழுந்தொழில், தன்னுலாயதொழில்.

**தன்வேதனை**— } மானதக் காட்சி
**தன்வேதனைக்காட்சி**— } விசேடம் பற்றி மேம்பட்டுநிகழுஞ் சத்துவகுணமுதலியவற்றின் விளக்கமாகிய இன்பதுன்பங்கள் புருடனதறிவிற்கு விடயமாம்படி அராகமுதலிய வைந்து தத்துவங்களானும் புணர்க்கப்படுமதனையுயிரின்றேனுணர்வு தெரிவது. (சி. சி. அளவை. எ. சிவஞா.)

**தன்வயாதம்**—சிறுகாஞ்சொறி. (மலையக.)

**தன்னந்தனி**— தனிமையின் மிகுதிப்பாட்டை யுணர்த்திநிற்கும் ஒரு தொடர்மொழி. (உ-ம்.) "தன்னந்தனியிருப்பார்க்கு"(அபிராமியந். ௫௬.)

**தன்னநுமாநம்**—தற்பொருட்டநுமானம். (சி. சி. க: ௪. ஞானப்.)

**தன்னம்**—1. அற்பம். 2. பசுவின் கன்று. (க, உ. சூ. நிக. கக: ரகரவெ. உ.)

**தன்னமை**—1. அழகு. 2. குணம். 3. பெருமை. (பிங்கல. ௬௬உ.) 4. தன்மையிடம். (உ-ம்.) தன்மை முன்னிலை. (நன்னூல். பெயரி. ௪.)(1. 2. 4. சூ. நிக. கக: னகரவெ. க௬.)

**தன்னரண்காத்தல்**—எண்வகை வெற்றியினொன்று. இதனை நொச்சியென்பர். (சூ. நிக. கஉ: கஉ.)

**தன்னியல்பு**—ஒருபொருட்கு வேற்றுச்சாதிப்பொருளினுந் தன்சாதிப்பொருளினுஞ்செல்லாது தனக்கு மாத்திரையே யுரித்தாய் நிலைபெறுந்தன்மை. (உ-ம்.) "அந்நியசாதியுந்தன்

சாதியுமகன்றுநிற்ற - றன்னியல்பு." (சி. சி. அளவை. ௪.)

தன்னிலை—சுபாவநிலை.

தன்னிறம்—மாந்தளிர்ச்சிலை. (உ-ம்.) வந்து ழிக்காண்க.

தன்னிறமாக்கி—குளவி. (வழக்.)

தன்னினமுடித்தல்— தந்திரயுத்திகளுளொன்று; அஃது-ஒன்றைச்சொல்லுமிடத்து அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு முடித்தல். (தொல். சொல். கக௬. சேனா.)

தன்னினி—வேங்கைமரம். (மலையக.)

தன்னுட்கையாறெய்திடுகிளவி — தலைவி தன்னிடத்துள்ள துன்பத்தைப் பிறிதொன்றின்மேலேற்றிச் சொல்லுஞ்சொல். (திருக்கோவை. ௧௭௭. முகம்.)

தன்னுண்மை—சொரூபலக்கணம். (சி. சி. க: ௭௦. சிவஞா.)

தன்னுதோணி—
தன்னுவத்தை— } சிறுவத்தை. (வழக்.)

தன்னை—1. தமக்கை. (கந்தபு. மார்க்கண். ௬௧.) 2. தன்னுடைய சுவாமி. (புறப்பொரு.) 3. தாய். (பிங்கல. ௯௧௨.) 4. மூத்தோன். (உ-ம்.) "பயந்தோன்றன்னை."(அகப்பொ.ஒழிபி. ௬.)

தன்னையர்—1. தமக்கையர். (உ-ம்.) "தன்னையரில்லவர்தங்கையரிலராேனார்." (கந்தபு. மார்க்க. ௬௧.) 2. தமையன்மார். (உ-ம்.) "நற்றாய்தந்தைதன்னையர்க்கறத்தொடு - நிற்குமென்ப" (அகப்பொ. அகத்தி. ௬௮.)

தன்னைவேட்டல்—ஒருதுறை; அது—தமது வேந்தன்விசும்பைச்சேர்ந்தானாக, வெய்யமாறுபாட்டையுடையானொருவீரன் உயிரை ஆகுதிபண்ணியது. (புறப். வெண்.)

தனகல்—உள்ளக்களிப்புறல். (உ-ம்.)"அருத்திவாழ்வொடுதனகியமனைவியுமுறவோரும்" (திருப்பு. க௬௧.)

தனது—1. உள்ளக்களிப்பு. 2. தெரிநிலை வினைப்பகுதி.

தனதுதல்— 1. உள்ளங்களித்தல். 2. சரசஞ்செய்தல்.

தனத்தனம்—ஒருவகைச்சதிக்குறி. (உ-ம்.) "தனத்தனந்தன தனதனதன வென்சதிக்கிசைந்திடநடமிடுசதுரன்." (சிவதரு. க: ௫௨.)

தனது—1. உரிமை. (வழக்.) 2. தன்னுடையது. [தான்+அ+து.]

தனவனு—ஆச்சாமரம். (மலையக.)

தனவை—
தனவையாதம்— } சிறுகாஞ்சொறி. (வைத்திய மூ. அகராதி.)

தனுது—தன்னுடையது. [தான்+ஆது. ஆறும்வேற்றுமையுருபு.]

தனி—1. ஒப்பின்மை. (உ-ம்.) "தனிமுதல் சடையிற்சூடும்." (நைடத. காப்பு.) 2. ஒற்றை. 3. கலப்பில்லாதது. 4. சுத்தம். (3. 4-வழக்.) 5 தனித்த இடம்.(உ-ம்.) "சுனைப்பா- லொண்டனியிருந்தோர்புலியன்பெரிதுறங்க." (கோயிற்பு. இரணிய. ௯௧.) 6. தனிமை, துணையின்மை. (உ-ம்.) "இன்னே - தனிதரும்." (திருக்கோ. ௯௮.) 7. தனிமைப்பொருள். (உ-ம்) "தன்னையொப்பாரையில்லாத்தனியை நோக்கி" (திருவாச. புணர்ச்சி. ௭.) 8. தெரிநிலைவினைப்பகுதி.

தனிச்சொல்—1. ஒருமொழி. 2. செய்யுளில் ஒருசீராய் வந்துநிற்பது. (உ-ம்.) "சீரியவான்றனிச்சொல்லடிமூய்ச்செப்பலோசை குன்றுது." (யாப். காரிகை. செய். ௬.)

தனிசு—கடன். (சீவகசி.)

தனித்தல் — உதவியற்றிருத்தல். (உ-ம்.) "தனித்தேங்குவாள்." (இராமா. கரன்வ. ௧௨.)

தனித்துருமம் — மூங்கில். (வைத்தியமூ. அகராதி.)

தனிநிலை—1. ஆய்தவெழுத்து. (உ-ம்.) "தனிநிலைபத்துஞ்சார்பெழுத்தாகும்." (நன். எழுத். ௫.) 2. தனித்துநிற்கை. 3. தத்துவங்களுடன்கூடாது கடந்துநிற்றல்.

தனிப்பாட்டு—முத்தகம், தனித்துநின்று முடிவதாகிய ஒற்றைக்கவி.

தனிப்பாடு—தனிப்பு. பாடு-தொழிற்பெயர் விகுதி. நன்னூல்-பதவியல். அன் ஆன் என்ற சூத்திரவுரை.

தனிப்பு—தனிமை.

தனிப்புடம்—ஓரிருக்கை. (உ-ம்.) "தனிப்புடமண்டிலமேகபாதம்"(சிலப். வேனிற். ௨௫. உரை.)

தனிமை—1. உவமையின்மை. 2. ஏகாந்தம். (உ-ம்.) "தனிமைசான்றசவுநகன்"(சேதுபு. இராமதீர். ௪.) 3. தனிப்பு.

தனிமையாற்றல் — வணிகரெண்குணத்தொன்று. (பிங்கல. ௭௭௧.)

தனிமொழி—1. இருவகைச்சொற்களுளொன்று; அது-சமயவாற்றலாற் பொருள்விளக்குவது. (தொல். சொல். க. சேனா.) 2. தனியே நிற்குஞ்சொல். 3. பிரணவம். (கந். நவ. ௧.)

தனியன்—தனித்தவன். (உ-ம்.) "தன்றனைத்தானுணர்ந்திடுங்காற்றான்றனியன்."(சேதுபு. இராமனரு. ௧௬௫.)

தனியுப்பு—அமுரி. (வைத்தியபரிபா.)

தனிவல்லி— } குப்பைமேனி.
தனிவல்லிப்பெருமாள்— } (மலையக.)
தனை—அளவு. (சூ. நிக. அ: கக.)

## தா.

தா—1. குற்றம். (திருநூற்றந்-கக.) 2. கேடு. (உ-ம்.) "தாவிலாவுருவாகியோர்தானவன்மூளைத்தான்." (திருவிளை. மாயப். ச.) 3. தாண்டுதல், பாய்தல். இது, முதனிலைத்தொழிற் பெயர். 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. பகை. (சூ. நிக. அ: கஉ) 6. பரப்பு. (உ-ம்.) "தவ்வென்றசைஇத்தாதுளிமறைப்ப." (நெடுநல். கஅரு.) 7. வருத்தம். (உ-ம்.) "தாவில்கொள்கைத்தந்தொழின்முடிமார்." (திருமுரு. அக.) 8. வலி. (உ-ம்.) "தாவினன்பொன்." (புறநா. கருஉ.)

தாஅம்—பரக்கும். (ஐங்குறு. உ0அ.)

தாஅய்—பரந்து. (ஐங்குறு கூஉஅ.)

தாஅய—பரந்த. (மதுரைக்.)

தாஅயது—கடந்தது. (உ-ம்.) "தாஅயதெல்லாமொருங்கு." (வள். கூக0.)

தாஅனுட்டிந்தனுதுநிறுப்பு— எழுவகைமதத்தினென்று; அது - தானேயொருபொருளையெடுத்துநாட்டிவருமிடந்தோறு நிறுத்துதல். (உ-ம்.) "தாஅனுட்டித்தனுதுநிறுப்பே."(நன். கக.)

தாக்க—மோத. (ஐங்குறு.)

தாக்கணங்கு—1. இலக்குமி. (உ-ம்.)"தாக்கணங்கமர்ந்தமார்பிற் றண்டுழாய்முகுந்தன்." (கூர்மபு. தக்கன்வேள். ச.) சிந்தாமணியில், எல்லாரிடத்திலுஞ்சென்று தங்குந்திரு என்றார். 2 தீண்டவருத்துந்தெய்வம். (சிலப். அரும்பத.)

தாக்கம்—எதிர்தாக்குதல். (அம்-தொழிற்பெயர் விகுதி.)

தாக்கல்—1. எதிர்த்தல். (சூ.நிக. கூ: சஎ.) 2. தாக்குதல், அடிததல். (உ-ம்.) "தண்டாயுதம்." பார். 3. வெட்டல். (உ-ம்.) "அருஞ்சமந்ததையத்தாக்கி." (புறநா. கஉகூ.)

தாக்காட்டுதல்—1. ஏமாற்றுதல். 2. பராக்குக்காட்டுதல். (1. 2. வழக்.)

தாக்கு—1. அடி. (உ-ம்.) "தாக்குபாவியர்தங்களைத்தண்டித்தே." (சிவரக. நந்திகேசுரர்நமனு. ஞ.) 2. அதிர்ச்சி. 3. இடம். 4. எதிர்தாக்குதல். 5. கனம். (உ-ம்.) "தாக்குரலடிகொள்யானைத்தரணிபர்."(பாரத. திரௌபதி. கச.) 6. தெரிநிலை வினைப்பகுதி. (உ-ம்.) "சந்திரசூரியரங்கிதாக்குகதிரினம்." (சிவரக. கணபதிகுமரன். எ.) 7. போர். (சூ. நிக. கூ: சகூ.) 8. வலி. 9. வேகம். (ஏனையவற்றிற்குதாரணம் வந்துழிக்காண்க.)

தாக்குதல்—1. அடித்தல். "தண்டாயுதம்." பார். 2. எண்கூட்டிப்பெருக்கல். (உ-ம்.)"அன்றவன் சொன்னநாளிலாதிரைவரையுமெண்ணி-நின்றதோரேழிற்றாக்கிநேர்படவெட்டுக்கிந்தால். (சோதிடவிதெவி) 3. கனத்தல். 4. எதிர்த்தல், எதிர்ப்படுதல். (உ-ம்.)"மன்றவெற்றாக்குதலின்." (மலைபடு. கூகூ.) 5. தள்ளல். 6. பாய்தல். (உ-ம்.) (வள். சஅகூ.) 7. முட்டுண்ணல். 8. மோதல். (உ-ம்.) "தலைப்படவெழுக்களிற்றண்டிற்றாக்கினர்." (கந்தபு. தருமகோபன்வதை. உகூ.) 9. வெட்டுதல். (புறநா.)

தாககம்—சுடுதலைச்செய்வது, சுடுவது.

தாககூரம்—ஒரு சுரம். (வழக்.)

தாகநம்—தகனம். (சி. வி. கிரியாபா. கரு. உரை.)

தாகம்—1. ஆசை. (உ-ம்.) "அங்கவடனையிதயத்திற் - றாகமொடுறநினைத்தனைசார்குவையாயில்." (சிவரக. தாருக. கக.) 2. எருது. 3 சுடுதல். (சி. சி. க: கூகூ. ஞானப்.) 4. நீர்வேட்கை. (உ-ம்.) "அடும்பசிதாகமுங்கொடிதாலென." (திருவிளை. நாகமெய்த. எ.)

தாகமடக்கி—புளியாரை. (மலையக.)

தாகித்தல்—தாகங்கொள்ளல். (உ-ம்.) "தாகித்த இடத்திற்றுனே நீரிருக்கவுமதனை யுண்ணாது" (கூர்மபு. திருக்கல். சக. உரை.)

தாங்கல்—1. குளம். (சூ. நிக. ரு: உகூ.) 2. சகித்தல். (உ-ம்.) "அசுரன்மகன்றாங்கல்செல்லா - நீளாகுலத்தில்." (கந்தபு. பானுகோபன்வதை. ச0.) 3. சுமத்தல். (உ-ம்.) "தாங்கரியபெருங்கருணைத்தன்மையினால்." (கோயிற்பு. பதஞ்சலி. எ.) 4. தாங்குக. (சிந்தா.) 5. தாங்குதல். (உ-ம்.) "ஓங்குயர்நெடுவரையொன்றின்றது- தாங்கலதிருநிலந்தாழ்ந்து" (இராமா. சடாயுகாண். கூ.)6. பிடித்தல்.(உ-ம்) "சாயவார்குழலொருகை கலையொருகையுறத்தாங்கி." (கோயிற்பு. பதஞ்சலி. கரு.) 7. விசனப்படுகை, வருந்தல். (வழக்.) (உ-ம்.) தாங்கித்தேடி-(திருவிளை. விருத்தகுமார. உகூ.)8. விலக்கிச்செல்லுதல். (உ-ம்.) "களிறுபரந்தியலக்கடுமாதாங்க." (பதிற்றுப். சக.)

தாங்கி—1. ஆதாரம். (உ-ம்.) "சுமைதாங்கி" (வழக்.) 2. கம்மற்பூண்டு. 3. பனிதாங்கி. 4. தடுத்து. (புறநா.) 5. பணிகளின்கடைப்பூட்டு. 6. பூண். (சூ. நிக. எ: கூக.) 7. மலைதாங்கி. 8. வருந்தி. (உ-ம்.) "தாங்கித்தேடி." (திரு

வினை. விருத்தகுமார. உக.) (2, 3, 7- வைத்தியபரிபா.)

தாங்து—தாங்கல்.

தாங்குதல்-1. ஆதரித்தல். (வழக்.) 2. காத்தல். (உ-ம்.) (திருவாச. நீத்தல்வி. க.) 3. கெஞ்சல். (வழக்.) 4. சகித்தல். (உ-ம்.) "அளப்பிலசெற்றந்- தாங்கியுயிர்ப்பொடுதக்கனிருந்தான்." (கந்தபு. திருமண. சசு.) 5. சுமத்தல். (சூ. நிக. கூ: ருகூ.) 6. தரித்தல். (உ-ம்.) "நீறு தாங்கியதிருநுதலானை." (சுந்தர. திருத்தினை நக. க.) 7. தாமதித்தல். (திருவால. திருவிளை.) 8. தோணிதள்ளல். (வழக்.) 9. பொறுத்தல். (உ-ம்.) "அகழ்வாரைத்தாங்குநிலம்போல." (வள்-கருக.) 10. வருந்தல். (உ-ம்.) "தாங்கித் தேடி." (திருவிளை. விருத்தகுமார. உக.) 11. விலக்கல். (உ-ம்.) "தலைவந்த - போர்தாங்குந் தன்மை." (வள். எசுஎ.) 12. தடுத்தல். (பரிபாடல்.)

தாங்குநர்—புரப்பார். (உ-ம்.) "தண்கடல் வரைப்பிற்றாங்குநர்ப்பெறாது" (பெரும்பா.சஅ)

தாச்சா—முந்திரிகை. (வைத்தியபரிபா.)

தாச்சி—சோனைப்புல். (மலையக.)

தாசத்துவம்—அடிமைத்தனம்.

தாசநம்பி—சாத்தாதவன். இது வைணவர் வழக்கு.

தாசநெறி—தாதமார்க்கம். (சி. சி. அ: கஅ. சுப்பிர.)

தாசபாலநம்—தயாவிருத்திபதிஞன்கினொன்று; அஃது அடிமைகாத்தல். (தயாவிருத்திபார்.)

தாசமார்க்கம்—சரியைநெறி; அது-திருக்கோயிலினுட்டிருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், பத்திரபுஷ்பமெடுத்து மாலைமுதலியகட்டுதல், தோத்திரஞ்செய்தல், திருவிளக்கேற்றுதல், நந்தவநம்வைத்தல், சிவனடியாரைக்கண்டால் வழிபடுதல் முதலியனவாம். (சி. சி. அ: கக. சுப்பிர.)

தாசர்—1. அடிமைகள். 2. செய்தநிலமாக்கள். (உ-ம்.) "தாசர்தங்குலத்துக்கதிபதியளித்ததையலை." (பாரத. குருகுல. கூக.)

தாசரதி—தசரதபுத்திரனாகிய இராமன். (பி. வி.)

தாசரி-1. தாதன். (வழக்.) 2. மலைப்பாம்பு. (வைத்திய பரிபா.)

தாசன்—1. அடிமை. 2. தாதன். 3. மீன்பிடிகாரன். (பாரத. குருகுல. கூக.)

தாசா—உற்சாகம். [இந்துஸ்.]

தாசி—1. அடிமை. (வி-ணி.) 2. கழுதை. (இராசவைத்.) 3. நாடகக்கணிகை. (உ-ம்.) "ஆனவற்புதமெய்த்தவத்தாலிவராதிதாசியராயடைந்தாரென்பாள்." (சிவரக. தேவ்நாட்டியம். உ௦.) 4. பரணிநாள். (பிங்கல. உசக.) 5. மருதோன்றி. (மலையக.)

தாசியர்—சேடியர். (சிந்தா.)

தாசூரன்—ஒருமுனிவர். (உ-ம்.) "சரலோமாவின்மைந்தன்றாசூரப்பெயர்முனிவன்." (ஞானவா. தாசூர. ருசு.)

தாசேகரம்— } ஒட்டகம். (சூ. நிக. ந: உகூ)
தாசேரம்— }

தாசோகம்—நானடியேன். (சி. சி. அ: கக. சிவாக்.)

தாசோகம்பாவனை — நான்தாசனென்று பாவிக்கும்பாவனை. (சி. சி. கூ: எ. ஞாநப்.)

தாட்கம்—கொடிமுந்திரிகை. (வைத்தியமூ. அகராதி.)

தாட்கோரை—ஒருபுல்.

தாட்சண்ணியம்— }
தாட்சணம்— }
தாட்சணியம்— } கண்ணோட்டம்.
தாட்சணை— }

தாட்சம்—கொடிமுந்திரிகை. (மலையக.)

தாட்சாயணி—1. இருபத்தேழு நட்சத்திரப்பொது. 2. உரோகணிநாள். 3. தக்கன்மகள். (உ-ம்.) "தக்கன்றன்குமாரிதாட்சாயணி தவயோகத்தாலே," (மச்சபு. அஷ்டோ. கக.) [இது-உமையினவதாரத்தொன்று.]

தாட்டன்—ஆண்குரங்கு. (வைத்தியபரிபா.)

தாட்டாந்தம்—திருட்டாந்தத்தைக் கொண்டது.

தாட்டாந்திகம்—திருட்டாந்தத்தான்முடிக்கப்படுவது. (சைவப்பி. நஅ.)

தாட்டி—1. ஆண்மாரி, மூர்க்கமுடையவள். 2. கெட்டிக்காரி. (1. 2-வழக்.)

தாட்டிகம்—1. அகந்தை. 2. வலிமை.

தாட்டுதல்—கடத்தல். (வழக்.)

தாட்டோட்டம்— } எத்து. (வழக்.)
தாட்டோட்டு— }

தாட்பாள்—கதவடைக்குந்தாள். (வழக்.)

தாடகம்—1. நீர்முள்ளி. 2. வீழி. (1. 2-மலையக.)

தாடகை—ஓரரக்கி, மாரீசன்றாய். (உ-ம்.) "தாடகையென்பதச்சழக்கிநாமமே." (இராமா. பாலகா. தாடகைவதை. உச.)

தாடங்கம்—தோடு, இது காதணி. (பிங்கல. ககஎசு.)

தாடநம்—1. அடித்தல். 2. தட்டல்.

தாடபத்திரம்—ஒரு காதணி.

தாடாண்மை—முயற்சி. (தாளாண்மை என்

பதன் மருஉ.)

**தாடாளன்**—முயற்சியுள்ளோன். (கந்தரலங். எசு.)

**தாடி**—1. ஆசு, விரலுறை. (சிந்தா.) 2. சேவற்கழுத்திற்றொங்குவது. 3. மாடுமுதலிய வற்றின் கழுத்தாரம். 4. மீசை. (உ-ம்.) "கலை யிருமருப்பிற்கோடிக்காதளவோடிக்தாடி" (திருவிளை. மாபாத. உஉ.) 5. மோவாய். (உ-ம்.) "சுரியற்றாடிமருள்படுபூங்குழல்." (மணிமே. மலர்வனம். கககு.) 6. மோவாய்மயிர். 7. சத்திசாரணை. (வைத்தியபரிபா.)

**தாடிமஞ்சம்** — சத்திக்கொடி. (பிங்கல. உககக.)

**தாடிமம்**—1. சிற்றேலம். (மலையக.) 2. தாதுமாதுளை. (பிங்கல. உஎஉஉ.)

**தாடிரி**—கண்டங்கத்திரி. வைத்தியபரிபா.)

**தாடை**—தாடி.

**தாண்டகச்சந்தம்**— தாண்டகவடிமிக்குஞ் சந்தவடி மிகாதும்வரப்பெற்றசெய்யுள். (சிந்தா)

**தாண்டகம்**—ஒரு கவி இஃது-இருபத்தா றெழுத்தின் மிக்கவடியால்வருஞ்செய்யுள். அளவியற்றாண்டக முதலாயப் பலவகைப்படும். (யாப்பருங்கலவிருத்தி. செய்யுளிய. கரு.)

**தாண்டல்**—தாண்டுதல். (பிங்கல. உகஅரு.)

**தாண்டவம்**—1. கூத்து. (உ-ம்.) "மருவுமுயிர்க்குயிராகித் தாண்டவஞ்செய்யாண்டவனைவழுத்துவோமே." (சிவரக. சுகமுனி. க.) பஞ்சகிர்த்திய தாண்டவமுதற் பலவகைப்படும். (அபிதானசிந்.) 2. தாவல். 3. செலுத்தல். (2, 3-பிங்கல. ஙசுஉச.)

**தாண்டவன்**—சிவன்.

**தாண்டு**—1. கடத்தல். 2. தாவுகின்ற. (உ-ம்)"தாண்டுமாசெறுற்றையாழித்தேரினும்" (திருவிளையா. திருநகரப். எஎ.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. வெற்றி.

**தாண்டுதல்**—1. ஆடுதல். 2. கடத்தல். 3. பாய்தல். 4. வெல்லுதல்.

**தாணி**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. தான்றிமரம். (வழக்.)

**தாணித்தல்**— } 1. தறைதல். 2. பலப்
**தாணிப்பு**— } படுத்தல்.

**தாணு**—1. குற்றி. 2. சிவன். (உ-ம்.) "தாணுவேயுனையல்லதாணுவே. (சேதுபு. சிவதீர். கக.) 3. தாபரம், புகலிடம். (உ-ம்.) (2) பார். 4. தூண். 5. நிலைபேறு. 6. புவர்லோகத்திலிருக்கும் மகேச்சுவரரின் மாநசோற்பவரான ஏகாதசருத்திரரில் ஒருவர். (வி-ணி. உசஉ.) 7. பிரதிட்டாகலையிற்றன்மாத்திராதத்துவபஞ் சகத்திலிருக்கும் ஐந்து புவனங்களுளொன்று. (சி-வி. கிரியா, உக: உரை.) 8. மலை. (1, 4, 5, 8-சூ நிக. கக: ணகரவெ. கச.)

**தாணுநி**-ஒரு பாலாரிஷ்டதேவதை. (வி-ணி. உகூஅ.)

**தாணுமதி**—சுத்ததத்துவத்திலிருக்கும் ஒரு புவநம். (வி-ணி. உஎசு.)

**தாணுவட்டகர்**—அகங்கார தத்துவத்திலிருக்கும் சகலண்டாதி யெண்மர். (சி. சி. அ: உ. மறை.)

**தாணையம்**-கோட்டைக்குள்ளிருக்கும்படை. [இந்துஸ்.]

**தாத்தாரி**—நெல்லி. (மலையக.)

**தாத்தி**—ஆத்தி. (வைத்தியமூ-அகராதி.)

**தாத்திரம்**—1. கூன்வாள். 2. கோடாலி.

**தாத்திரி**—1. ஆடுதின்னுப்பாளை. (மலையக.) 2. சுக்கிரன் குமரன். (அபிதானசிந்தாமணி.) 3. நெல்லி. (உ-ம்.) "தாத்திரிகளுசிசுரசை." (தைல. தைலவ. கூஅ.) 4. பூமி. (உ-ம்.) "தாத்திரியைப்பெருந்தாழியாக்கி." (அரிச். நாட்.௪.)

**தாத்தரு**-1. ஆதிப்பிரமனுக்குப்பிறந்த இருவர்மக்களுள் ஒருவன். (வி-ணி. உருஎ.) 2. துவாதசாதித்தரிலொருவன்.

**தாத்துதல்**—புடைத்தாற்றிக்கழித்தல்.

**தாத்துருசம்**—அதுபோல்வது. (சி. சி. க: கஙு. சிவாக்.)

**தாத்துவாசம்**—செவ்வியம். (வைத்தியபரிபா.)

**தாத்துவிகம்**—தத்துவசம்பந்தம். (உ-ம்.) "தாத்துவிகசகலபிரபஞ்சம்." (சி. சி. க: ஙo. ஞாகப்.)

**தாத்ரு**—நிவர்த்திகலையிற்பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவனங்களுள் ஒன்று. (சி. வி. கிரியா. உக. உரை.)

**தாத்ருப்பியருபகம்**-உருவகவணி இரண்டனுள் ஒன்று. அது - உபமேயத்தில் உபமானத்தின் செய்கையை ஒற்றுமையின்றி ஆரோபித்தலால் வருவதாகியவதன்செய்கைரூபகம். (குவல. ௫. உரை.)

**தாதகி**—1. ஆத்திமரம். (பிங்கல. உஏஙஎ.) 2. ஒரு நாடு. (சிந்தா.) 3. பேய்ச்செம்மட்டி. (மலையக.)

**தாதச்சி** — தாதப்பெண், அடிமைக்காரி. (வழக்.)

**தாதநம்**—கரிக்குருவி. (வைத்தியபரிபா.)

**தாதமார்க்கம்**—தாசமார்க்கம். (உ-ம்.) "தாதமார்க்கமென்று." (சி. சி. அ: கஅ.)

**தாதர்த்தியேசதுர்த்தி** — கொள்வோனைவிட்டு ஆதிகாரணகாரியம் நிமித்தகாரணகாரியம் என்னும் இரண்டன்பின்னரும்வருங் குகா

வுருபு. (பிரயோக. கசு. உரை.)

**தாதரீ**—ஆடுதின்னுப்பாளை. (வைத்தியபரிபா.)

**தாதன்**—1. அடிமையாளன். 2. கொடையாளன். (வழக்.)

**தாதா**—1. தனக்கியன்றதொன்றை வரையாதுகொடுக்குஞ் சிறப்புடையவன். (உ-ம்.) "இரக்கத்தாலாதரவாலேதேனுமீயும் - வரத்தினன்ருதாவாவான்."(சைவச. பொது. சஉஉ.) 2. பாட்டன். [தெலுங்கு.] 3. பிதா. 4. பிரமன். (பிங்கல. கடுசு.)

**தாதாத்மியத்திரயம்**—சகசதாதாத்மிகம், பிராந்திஜதாதாத்மியம், கன்மஜதாதாத்மியம். என்பன. (உபநிட. உச. மூகம்.)

**தாதாத்மியம்**— } ஒன்றுபட்டிருத்தல், நீங்
**தாதான்மியம்**— } காமை. (சி. சி. உ: க. சிவஞான.)

**தாதி**—1. அடியவள். (உ-ம்.) "சிவபூசையின்பேற்றினலாதி சந்நிதித்தாதியராயினர்." (சிவரக. தேவிநாட்டியம். உடு.) 2. கைத்தாய் செவிலித்தாய். (உ-ம்.)"ஏந்திவளர்த்திடுந்தாதி தன்னையழைத்திடுதியென." (ஏகாதசி. உருக்குமாங்கதச். கூஉ.) 3. தாசி. 4. பரணிநட்சத்திரம். (3. 4-பிங்கல. கூசுஉடு.)

**தாதிமம்**—தாதுமாதுளை. (ஆசிரியநிக. ச: கக.)

**தாது**—1. காவிக்கல். (உ-ம்.) "சாந்துசாய் தடங்கடோறுந்தாதுராகத்திற்சார்ந்த." (இராமா. வரைக்கா. சச.) 2. கேள்வி. [இந்துஸ்.] 3. சத்ததாது. (உ-ம்.) "பல்வகைத்தாதுவினுயிர்க்குடல்போற்பல - சொல்லாற்பொருட்கிடனுக." (நன். பெயரி. கச.) 4. தாதுமாதுளை. (வைத்தியமூ-அகராதி) 5. தேன். (உ-ம்.) "ஒங்குவரைமருங்கினுண்டாதுறைக்கும்." (பட்டின. கடுஉ.) 6. நரம்பு. 7. நீறு. (மதுரைக். கூகக. உரை.) 8. பஞ்சபூதம். 9. பூந்தாது. (உ-ம்.) "தாதவிழ்கடுக்கையன்." (பிரம்மோத். பஞ்சாட். கசு.) நீறு, என்பர் (மதுரைக்காஞ்சியில்.) 10. பூவிதழ். (பிங்கல. உஅகக.) 11. பொன்னுதியேழு. 12. வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களுட் பத்தாவதாண்டு. (வருஷாதிநூல்.)(8, 11. சூ. நிக. கக: தகரவெ. உக.)

**தாதுகந்தம்**—கந்தகம். (வைத்தியமூ.)

**தாதுகீ**—செங்கல். (வைத்தியபரிபா.)

**தாதுசேகரம்**—தருசு. (வைத்தியபரி.)

**தாதுமாதுளை**—பூமாதுளை. (இதற்குத் தாடிமம் என்று நிகண்டிற் பெயர்கூறுவர்.)

**தாதுமாரிணி**—பொரிகாரம். (வைத்தியபரிபா.)

**தாதுரோகம்**—ஒரு வியாதி.

**தாதுவல்லபம்**—பொரிகாரம்.

**தாதுவாதம்**—கலைஞானம் அறுபத்துநான்கினென்று.

**தாதுவாதி**—பொன்முதலிய லோகங்களைப் பரிசோதிப்போன்.

**தாதுவிநுத்தி**—1. ஒரு நூல். (பி. வி. பக்கம்-எக.)

**தாதுவைரி**—1. ஏலம். 2. கடுக்காய். 3. கந்தகம். (1, 2, 3-வைத்தியபரிபா.)

**தாதீ**—1. அடியவள். 2. செவிலித்தாய். 3. பரணி. (பிங்கலநிக-கூசுஉடு.)

**தாதை**—1. தந்தை. (உ-ம்.) "தாதைதாளினில்விழுந்தா." (பாரத. குருகுல. கஙக.) 2. பாட்டன். (பிங்கல. கூடு.) 3. பிரமன். (உ-ம்.) "பொன்னடிபணிந்துவல்லே- யேகியதாதை." (கந்தபு. பிரமயாக சு.) 4. பேய்க்கொமட்டி. (மலையக.)

**தாதைதாதை**-பாட்டன். (சூ.நிக. உ: எடு.)

**தாந்தம்**-குரு சிட்டி. (ஓர் பூடு. வைத்திய.)

**தாந்தன்**—தவஞ்செய்தலிலுண்டாகுந் துன்பத்தைச்சகிப்பவன்.

**தாந்தி**—தன்னடக்கம். (உ-ம்.) "சாந்திவகுத்திடுதாந்திமுற்குணங்கள்."(சூத. ஞானயோ. எ: கூகூ.)

**தாந்திமம்**—பஞ்சேந்திரிய நிக்கிரகம்.

**தாந்திரிகம்**—1. தந்திரத்திற்கடுத்தது, தந்திரத்திற்குரியது. 2. தந்திரத்திற் சொல்லப்பட்டது. (உ-ம்.) "திருவானை-கோச். கஎ." தந்திரம்=ஆகமம்.

**தாந்திரிகன்**—தந்திரத்திற் கைவந்தவன்.

**தாநகம்**—1. கொத்துமல்லி. (வைத்தியபரிபா.) 2. பரதத்தின் பொதுவிலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (உ-ம்.)"தாவறு கரகேத்திரங்கரகரணந் தாநகமே சுத்தசாரி." (திருவிளை. மாறியாடின. அ.)

**தாநசுத்தி**—பஞ்சசுத்தியிலொன்று: அஃது இருதகுந்தாநத்தைச்சுத்திபண்ணல். சிவபூசைவிதியிலறிக. (சைவசமய. நு௦உ)

**தாநத்துமணி**— சுடுகாட்டுமணி. (உ-ம்.) "கடலகமுடையநம்பி - தாநத்துமணியுந்தானுமிரட்டுறத்தோன்றினனே." (சிந்தா. நாமகள். கூடுஅ.) தாநம் - சுடுகாடு.

**தாநப்பொருத்தம்** — செய்யுட்பொருத்தம் பத்தினுளொன்று. (வெண்பாப்பாட்.கூ.உரை)

**தாநம்**—1. இடம். (உ-ம்.) "அகனகத்தாநத்தடிவீழ்ந்தலற." (மருதூரந். டு.) 2. ஈகை. (உ-ம்.) "மாநங்குலங்கல்விவண்மையறிவுடைமை - தாநந்தவமுயற்சிதாளாண்மை."(நல்வழி.

உசு.) இது-இராசதகுணத்தொன்று. அறமு மாம். (பிங்கலநி. ௬௬௫.) 3. உபாயநான்கி னொன்று. (உ-ம்.) "சாமபேத-தாநதண்டமெ னநிருபர்தருமமுறைமையிற்புகலுந்தகுதி நோக்கி." (பாரத. கிருட். உ.) 4. கணித எண்ணின்றாநம். 5. செய்யுட்பொருத்தம் பத்தினு ளொன்று; அது, "குறிலைந்தும்"என்னும் வெண்பாப்பாட்டியல் சு-ம் செய்யுளிற் காண்க. 6. துண்டித்தல். 7. தேவலோகம். (பிங்கல. ௬௬௫.) 8. தேன். (உ-ம்.) வந்துழிக்காண்க. 9. நன்னிலை. (உ-ம்.) "தாநமழியாமைதான டங்கிவாழ்வினிதே." (இனியவை எ.) 10. தருமம்; அது-நீதிவழியாற் பெற்றபொருளைப் பிரத்தியுபகாரங்குறியாது சற்பாத்திரருக் கன் போடுகொடுத்தல். (சைவப். சுச.) இதனை உத்தமம், மத்திமம், அதமம் என மூவகையாகக் கூறுவர். (சூ. நிக. கஉ: கக. கஉ.) 11. நீராட்டு. 12. யானைமதம். (உ-ம்.) "செங்கையுமொழுகு வதாநநீராறு." (திருவிளை. நகர. ௬௬.) 13. வலி. (சூ. நிக. அ: உக.) 14. வேட்டல். (7. 14. பிங்கல. ௬௬௫.) (10. 11. சூ. நிக. ணகர வெ. ௬)

**தாநவர்**—1. அசுரர். (உ-ம்.) "தருப்பொதிற்பயில்காலையிற்றாநவர்காணு." (பாரத. குருகுல. ௪௦.) [தநுபுத்திரர், இது-தத்திதாந்தநாமம்.] 2. வித்தியாதரர். (சிந்தா.)

**தாநவன்**—1. அசுரன். (உ-ம்.) "தா"பார். 2. சந்திரன். (சூ. நிக. க: ௫௬.)

**தாநர்கம்**—கொத்துமல்லி. (வைத்தியபரி.)

**தாநாதிபதி**—படைத்தலைவன்.

**தாநாபதி**—1. தூதன். 2. படைத்தலைவன்.

**தாநி**—1. இருப்பிடம். 2. கொத்துமல்லி. 3. தாநத்தையுடையது. (நன். உ௬௦. உரை.)

**தாநிகம்**—கொத்துமல்லி. (மலையக.)

**தானிகன்**—ஒருருக்கல்லது இடத்துக்கு அதிபதியாய் மேல்விசாரணைக்காரனா யிருப்பவன். (வழக்.)

**தானிகை**—கொத்துமல்லி. (உ-ம்.) "சுத்திபுரிமதுஸ்மிகிதாநிகைபலப்பஞ்சிங்கி." (தைல. தைலவ. க௩௬.)

**தாநியம்**—1. கொத்துமல்லி. (மலையக.) 2. நென்முதலியமணிகள். (உ-ம்.) "காயிலைதோலுண்பலங்-கீழாழாதிவர்தானியவகை."(தைல. தைலவ. உக.)

**தானியராசன்**—கோதுமை. (ஒருதேய வழக்கு.)

**தானியவிலக்குமி**—அட்டலக்குமியிலொரு த்தி.) (உ-ம்.) (அட்டலக்குமிபார்.)

**தாநியாகம்**-கொத்துமல்லி. (வைத்தியபரி.)

**தாநியாகுபெயர்**- விளக்குமுரிந்ததென்றாற் போலத் தாநியின்பெயரதன் தாநத்திற்காவது. (நன். உ௬௦. உரை.)

**தானை**—1. ஆடை. (உ-ம்.) "குஞ்சியழகுங் கொடுந்தானைக்கோட்டழகும்" (நாலடி. கல்வி. க.) 2. ஆயுதப்பொது. 3. காலாட்கள். (உ-ம்.) "சுலவுதானைதொடர்தரவேட்டஞ்செய்."(அரிச்ச. வேட்ட. ௬.) 4. படை. (2, 4-சூ. நிக: கக. ணகரவெ-கஉ.)

**தானைமாலை**—அகவலோசையிற் பிறழாது உயர்ந்தஅரசர்க்குரிய ஆசிரியப்பாவால் முன்னெடுத்துச்செல்லுங் கொடிப்படையைச் சொல்லும் ஒரு பிரபந்தம். (உ-ம்.) "ஆசறவுணர்ந்தவரசர்பாவாற்- றூசிப்படையைச்சொல்வதுதானைமாலையாகும்." (இலக்கணவி. அ௬௬.)

**தானையர்**—சேனாவீரர். (உ-ம்.) "திருமகன் திருமுன்னேகுந்தானையர்தலைவன்." (திருவிளை. மெய்க்கா. உஅ.)

**தாப்பிசை**— } தாப்பிசைப் பொ
**தாப்பிசைப்பொருள்**- } ருள்கோள்(உ-ம்)
"இடைநிலைமொழியேயேனையீரிடத்தும் - நடந்துபொருளைநண்ணுதறாப்பிசை" (நன். ௪கசு) [தாம்பு - ஊசல். இசை-சொல். ஊசல்போல் இடைநின்று இருமருங்குஞ்செல்லுஞ் சொல்லென்பது.]

**தாப்பு**—பொருத்தமான இடம். (வழக்)

**தாபகன்**—நிலைநிறுத்துபவன்.

**தாபசப்பிரியை**—கொடிமுந்திரி. (வைத்தியபரிபா.)

**தாபசுரம்**-சுரரோகம், அறுபத்துநான்கனு ளொன்று; அது-அதிகவெரிச்சல், மிகுசீதளம், நீரருந்தினும் நாவுலரல், மார்பெரிச்சல், நித்திரைப்பங்கம் என்னுமிவைமுதலிய குணங்களை யுண்டாக்கும். (சீவரட். சஎ.)

**தாபத்திரயம்**-மூவகைத்தாபங்கள்; அவை-ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன. அவற்றுள் ஆத்தியான்மிகம்-குன்மம், வாதம், அதிசாரம், சுரம், சூலை, இவைமுதலியவற்றாலும், மிருகம், பிசாசம், பறவை, சோரர், இராட்சதர்களாலும் வருந்துக்கமாகிய சரீரசம் என்றும், அசூயை, அவமாநம், ஈரிஷை இவைமுதலியவற்றால் வருந்துக்கமாகிய மாநசம் என்று மிருதிறப்படும். ஆதிபௌதிகம்-உட்டணம், காற்று, மழை, மின், இடியென்னு மிவைகளாலவருந் துக்கம். ஆதிதைவிகம்-கர்ப்பம், சென்மம், நரை, திரை, அஞ்ஞாநம், மரணம், நரகம் என்னுமிவைகளால்வருந் துக்கம். (உ-ம்.) "மண்பெண்பொன்னிறைசையுந்தாபத்திரயமவையும்"(சிவரக. சிவதன். கச. சி.சி. உ:

௭௬. சிவாக்.) இவத்தைவேதாந்தசூடாமணியில் தாபத்திரயாக்கினிகளென்பர்.

**தாபதநிலை**—தபவொழுக்கம். (புறப்பொருள். வெ. பொதுவிய-௪.)

**தாபதம்**—முனிவர்வாசம். (உ-ம்.) "தண்டமார்கரியரியிவைதாபதமதன்கட் - பண்டைவான்பகைசீர்ந்தொருதுறையினீர்பருகும்." (சேதுபு. நைமிசா. ௧௬.)

**தாபதவாகை**—தபோதனவேடத்தர் புண்ணியத்தோடுதழுவி யொழிதலுணராதநடை. (புறப்பொ. வெ.) தபவொழுக்கம்.

**தாபதர்**—தபவேடம்பூண்டவர். (உ-ம்.) "நிலையெடுத்து நெடுநிலத்து நீயிருக்கத் தாபதர்கள்-நிலையெடுத்து." (இராமா. சூர்ப். ௪௦௧.)

**தாபதை**—ஒரு பாலாரிஷ்டதேவதை. (வி-ணி. உ௬அ.)

**தாபந்தம்**—, **தாபந்திரியம்**— } வேதனை. (வழக்.)

**தாபநம்**—தாபிப்பு. (உ-ம்.) "தாவிலாவாகநதாபநசந்நிதாநசந்நிரோதநந்தான்." (சிவரக. பாசமோ. ௧௧.)

**தாபநன்**—சூரியன் (பிங்கல. உ௪௦)

**தாபனி**—1. அதர்வணவேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூர் உ௬. உரை.)

**தாபநீயம்**—உபநிடதம் முப்பத்திரண்டிலொன்று. (கூர்மபு. அட்ட. உ௬. உரை.)

**தாபம்**—1. உட்டணம். (சூ. நிக. அ: ௬௦.) 2. துக்கம். (உ-ம்.) "தாபத்திரயம்பார்."

**தாபமாரி**—தான்றி. (மலையக.)

**தாபரம்**—1. இடம். (பிங்கல. ௭௩௧.) 2. உடல். (சூ. நிக. ௧௧: ௨.) 3. சிவலிங்கம். (உ-ம்.) "தாபரசங்கமங்களென்றிரண்டுருவினின்று." (சி. சி. உ: உஅ.) 4. தஞ்சம். (உ-ம்.) "மருதூரரென்றுபரமே." (மருதூரந். ௬௦.) 5. நிலை. (உ-ம்.) "சதுர்மறைக்குந்தாபர." (மருதூரந். ௬௧.) 6. நிலைத்திணைப்பொருள். (உ-ம்.) "சங்கமந் தாபரங்கடத்தங் கன்மத்துக்கீடா-வங்குருயோநிமாறும்." (சி. சி. உ: ௪௧.) 7. மரப்பொது. (சூ. நிக. ௧௧: பகரவெ. உ.)

**தாபரன்**—கடவுள்.

**தாபரித்தல்**—தாங்குதல். (வழக்.)

**தாபன்**—சூரியனது துவாதச கலைகளாகிய மெய்காவலருளொருவன். (வி-ணி.)

**தாபி**—தெரிநிலைவினைப்பகுதி.

**தாபிஞ்சம்**—1. ஆமணக்கு. 2. பச்சிலைமரம். (1. 2. மலையக.)

**தாபித்தல்**—1. இருத்துதல், அல்லது நிலைபடச்செய்தல். (சூ. நிக. ௯: உஅ.) 2 பிரதிட்டைசெய்தல். (உ-ம்.) "அங்கோரிலிங்கமணலர்க்கூப்பித் - தனுதிதயந்தனினின்றுந்தாபித்தான்பாறழைத்தவன்பாலாட்ட." (சேதுபு. கடவுள்வா. ௧அ.)

**தாபிதம்**—1. சூடு. 2. தாபித்தல்.

**தாபிநி**—சூரியன் துவாதசகலையிலொன்று.

**தாபிநீமுத்திரை**—ஆவாகநமுத்திரை யதோமுகமாகச்செய்யப்படுவது. (சித்தா. சாரா. கிரியா. உ௬. உரை.)

**தாம்**—1. இருதிணை இருகூற்றுப் பன்மையில்வரும் ஒருபெயர். (நன். உ௮௭.) 2. ஓரசைநிலைச்சொல். (உ-ம்.) "அன்றுந்தாந்தான்கின்று நின்றசைமொழி." (நன். ௪௪௧.) 3. தாளத்தைக்கருதுமோர் ஒலிக்குறிப்பு. (யாப். காரிகை. செய்யு. ௯. உரை.)

**தாம்பாளம்**—ஒருவகைத் தட்டம். [தெலுங்கு.]

**தாம்பிரகர்ப்பம்**—துரிசு. (வைத்தியபரிபா.)

**தாம்பிரசூடம்**—1. சேவல். 2. நடுவிரலுஞ் சுட்டுவிரலும் பெருவிரலுந்தம்மில் நுனியொத்துக்கூடி வளைந்து சிறுவிரலும் அணிவிரலும் முடங்கி நிமிர்வது. (சிலப்பதி.)

**தாம்பிரபர்ணி**—இது மலயத்துதித்த இருநதிகளிலொன்று. (வி-ணி. உ௬அ.)

**தாம்பிரம்**—செம்பு. (சூ. நிக. ௬: ௯.)

**தாம்பிரவன்னி**—ஓரியாறு.

**தாம்பிராட்சம்**—குயில். தாம்பிரநிறமுள்ள கண்ணுடையது.

**தாம்பு**—கயிறு. (உ-ம்.) "பருத்தவாசுகித் தாம்பிழுப்பாரென." (அரிச்ச. விவாக. உ௧௬.)

**தாம்புலோவல்லி**—மஞ்சாடி. (மலையக.)

**தாம்பூரம்**—மஞ்சிட்டி. (வைத்தியபரிபா.)

**தாம்பூரவல்லம்**—வாழை. (மலையக.)

**தாம்பூலதன்**—அடைப்பைக்காரன், தாம்பூலங் கொடுப்பவன்.

**தாம்பூலம்**—1. வெற்றிலை. (பிங்கல. ௧௭௰.) 2. வெற்றிலைபாக்கு முதலிய பொருட்கள். (உ-ம்) "செருப்போடுதாம் - பூலமெண்ணெய் மாதர்புணர்ப்புவிட்டு." (சேதுபு. சேதுயாத். ௭.)

**தாம்பூலவல்லி**—வெற்றிலைக்கொடி. (சூ. நிக. ௪: ௬௭.)

**தாம்பூலி**—தாம்பூலவல்லி. (சூ. நிக. ௪: ௬௭.)

**தாம்பூலிகன்**—வெற்றிலை வாணிபன்.

**தாமக்கிரந்தி**—அஞ்ஞாதவாசத்திற்குநிரைப்பாகனுக வேடம்பூண்டநகுலன்பெயர். (உ-ம்) "கிளைபடுபுரவிபுரந்திடுந் தாமக்கிரந்தியாம் பெயர்புனைநகுலற்கு." (பாரத. நாடுகரந்துறை. உ௬.)

**தாமசபாவங்கள்**—அதர்மம், அஞ்ஞானம்,

அநைசுவரியம் என்பன. (சி. லி. ஞானபாத-ககூ. தாற்பரி.)

**தாமசம்**—1. இருள். 2. ஸ்ரீகண்டபரமே சுவரனுடைய சத்தி பரிசித்தமாத்திரத்திலே பிரகிருதியிலே நின்றுமுண்டான மூன்றுகுணங்களுளொன்று. இஃது இந்திரநீலப்பிரகாசமாயிருக்கும். இதனைக்காலருத்திரர் அதிட்டித்துநின்று சங்காரகிருத்தியம் பண்ணுவர். இதில் அந்நியமம்,மோகம்,ஆலசியம் ஆகியமூன்று குணங்களுள. (சி. சி. உ: ருஎ. சிவாக்.) 3. தடை. (வழக்.)

**தாமசன்**—நான்காமநு. (அபிதா.)

**தாமசவேளை**—தாமதவேளை. (வருஷாதி நூல்பார்.)

**தாமணி**—கயிறு.(சூ நிக. கக: மகரவெ. ச.)

**தாமத்தர்** — திருவள்ளுவர்குறளுக்குரை செய்த பதின்மருளொருவர். (அபிதாந.)

**தாமதகுணம்**—பேருண்டிமுதலியவற்றைச் செய்வது. (பிங்கல. கூசச.)

**தாமதகுணசித்திகள்** —ஆகருடணம், அதிரிசியம், அஞ்சநம், வசியம், இரசவாதம், வயத்தம்பம், தம்பநம், மோகநம் என்பவை. (கூர்மபு. வருணச். கச. உரை.)

**தாமதம்**—தாமசம்.

**தாமதவகங்காரம்** — அகங்காரத்தொருவகை. இதினின்று தன்மாத்திரைகளைத்தோன்றும். (சித். பி-கை. கூ)

**தாமதவேளை**—(சோதிட) ஒவ்வொருதிநத்திலும் வரும் முக்குணவேளைகளிலொன்று.

**தாமதாத்திரம்**— பகைவருடைய கண்ணுமனமுமிருளச்செய்வதோரத்திரம். (மணிமே.)

**தாமதாயிநி** — சோடசகலைகளிலொன்று. (வி-ணி. உசகூ.)

**தாமதித்தல்**—தாழ்த்தல். (உ-ம்.)"மாருமதிக் கநந்தேர்." (மருதூர. ககூ.)

**தாமம்**—1. அச்சம். 2. இடம். 3. உடல். 4. ஒழுங்கு. 5. கயிறு. 6. கிரணக்கற்றை, ஒளித்தொகுதி 7. கொன்றைமரம். 8. சோதி, (உ-ம்.) "கவுசலைகாளைநட்டதாமமாரிலிங்கமூர்த்திசந்நிதிதன்னிலெய்தி." (சேதுபு. சங்கரபா. எச.) 9. நகரம். 10. புள்ளின்கழுத்தாரம். 11. பூ. 12. பெருமை. 13. போர்க்களம். 14. மணிக்கோவை. மூவாறுகோவையுள்ள மாதரிடையணியுமாம். 15. மலர்களை வெவ்வேறு பத்தியாக வைத்து வளைவின்றி நீளமாகக்கட்டுகின்ற பத்திமாலை; இது தோளிலணிவது. (பெரியபு. தடுத்தாட். உஅ. உரை.) [கோத்தமாலையென்பர் திருவிளையாடற்புராண வுரைகாரர். திருவிளை. தருமி. கூ.] 16. மலை. 17. மாலை. (உ-ம்.)"தாமந்திகழ்தருமொய்ம்பொடு." (பிரமோ. அ: ககூ.) 18. முடியுறுப்புஜந்தனுள் ஒன்று. (பிங்கல. கககூகூ.) 19. யானை. 20. விருப்பம். 21. வீடு. (4, 5, 7, 9, 11, 13, 14, 16, 19-சூ. நிக. கக: மகரவெ-அ.) [இதில், சாந்திற்கும் பெயர்கூறுவர்]

**தாமரம்**—தாமரை. (மலையக.)

**தாமரை**—1. காசிபர்தேவி. (அபிதாநசிந்.) 2 ஒரெண். (உ-ம்.)"தாமரைக்குணத்தினனே" (சிந்தா கனகமாலையா-ககூக.) 3. நீரிலுண்டாகும் ஒரு கொடி. (உ-ம்.) "தாமரைபொன்முத்துச்சவரங்கோரோசனை." (நீதிவெண். க.)

**தாமரைக்கண்ணன்** — விட்டுணு. (வன். கக0கூ.)

**தாமரைக்கோட்டை**—பொகுட்டு. (பிங்கல. கூ00க.)

**தாமரைச்சத்துரு**—ஒரு பாஷாணம்.

**தாமரைச்சுருள்**—தாமரைவளையம். (பிங்கல-கூ0க0.)

**தாமரைநாயகன்** —சூரியன். (உ-ம்.) "சகடசக்கரத்தாமரைநாயகன்." (கந்தபு. காப்பு.)

**தாமரைப்பாசினி**—அரிதாரம். (வைத்தியபரிபா.)

**தாமரைமணி**—தாமரைக்கொட்டை. (வைத்தியமூ. அகரா.)

**தாமரையால்** — ஓர் மஞ்சட் பாஷாணம். (வைத்தியமூ. அகரா.)

**தாமரையாள்**—இலக்குமி. (உ-ம்.) "தாமரையாள்வாழ்தண்கடிமார்பா." (திருவிளை. பழியஞ்சி. கஎ.)

**தாமரைவாசி**—1. ஒரு பாஷாணம். 2. தாமரையாள்.

**தாமலகி**—கீழ்க்காய்நெல்லி. (மலையக.)

**தாமலகிதளம்**—தாளிசபத்திரி. (வைத்தியமூ. அகரா.)

**தாமலை**—புன்னை. (மலையக.)

**தாமன்**—சூரியன். (உ-ம்.) "தாமன்மேல்வரவுடைந்திடுதமமெனும்படி."(பாரத. முசற்போர். சஉ.)

**தாமிச்சிரம்**—1. ஒருவகை நரகம். 2. தமோமய சிருட்டி ஐவகையில் நான்காவது. அது: திவ்யாதிவ்ய பேதமாகியசத்தாதி தசசித்தியின் பொருட்டும், அணிமாதி யட்டசித்தியின் பொருட்டும் பண்ணுஞ்சாதந வைகல்யம் வந்தகாலத்திலும் சித்தியாய் இவைகளுக்கு நாசம்வந்த காலத்திலும் இந்தப் பதினெட்டிலும் வருந்தாபம். (சி. சி. உ: ருஅ. சிவாக்)

**தாமிசிரம்**—தாமிச்சிரம். "2" பார்.(உ-ம்.) "அது தமமோகம் புகலுமாமோகந் தாமிசிரம்."

(சூத. சிவமா. ௪௦: உ.)

**தாமிரகருணி**—மேற்றிசை யானைக்குப் பெண் யானை. [செப்புத்தன்மையுள்ள காதையுடைய தென்றபடி.]

**தாமிரசிகி** — கோழி. செம்புநிறமுள்ள சிகையையுடையது.

**தாமிரபருணி**—1. அஞ்சனமென்னுந் திக்குயானையின் பெண்யானை. (அபிதாந.) 2. பொருநையாறு.

**தாமிரபல்லவம்**—அசோகு. (வைத்தியமூ. அகரா.)

**தாமிரம்**—செம்பு. (சூ. நிக. சு: கூ.)

**தாமிரன்**—முராசுரன் மகன். இவன் கண்ணபிரானாற் கொல்லப்பட்டவன். (அபிதாந.)

**தாமிரிகை**—குன்றிக்கொடி. (வைத்தியமூ. அகரா.)

**தாமிரை**—1. செம்பு. 2. தக்கன்மகள். (அபிதாந.)

**தாமை**—தாம்பு.

**தாமோதரன்**—1. ஆமை. (வைத்தியமூ. அகரா) 2. விட்டுணு. (சூ. நிக. க: கஉ.)

**தாய்**—1. அண்ணன்றேவி, ஊட்டுந்தாய், குருவின்றேவி, செவிலித்தாய், தன்றேவியையீன்றாள், நற்றாய், பாராட்டுந்தாய்; தாயின் சகோதரிக்கும் பெயர்கூறுவர். 2. தாவி (உ-ம்.) "ஒல்லைதாயதிற் படர்கறிக்கருந்துணருதுப்ப." (திருவிளை. நாட். கூ௫.) 3. பரக்கப்பட்டு. (பரிபாடல்.) 4. முதல். (உ-ம்.) "தாய்பிளந்துக்க காரகில். (இராமா. பாலகாண். தாடகைவதை. அ.) 5. முதன்மை.

**தாய்க்கீழ்ப்பிள்ளை**—எட்டிக்கன்று. (வைத்திய பரிபா.)

**தாய்ச்சி**—தாய். (வழக்.)

**தாய**—தாவிய. (உ-ம்.) "எவ்வுலகுந் - தாய வடியிணைகடன்கருத்திற் பிணித்தான்." (பாரத. கிருட்டி-கூஎ.)

**தாயசத்து**—பீதரோகணி. (வைத்தியபரிபா.)

**தாயத்தார்**—ஞாதியர். (சூ. நிக. உ: எஎ.)

**தாயபாகம்**—சுதந்திரபாகம், தந்தைமுதலாயினார் பொருளை மைந்தர் முதலானோர் பிரித்துக்கொள்ளுதல். (மிருதி. கூ.)

**தாயம்**—1. உடைத்தல். 2. உபகாரம். 3. உரிமை. (உ-ம்.) "முரசுகெழுதாயத்தரசோதஞ்சம்" (புறநா. எகூ.) 4. ஒரு சூதாடுகருவி. 5. கொடை. 6. சூதாடுகருவிற்காட்டும் ஒன்றென்னுமிலக்கம். (உ-ம்.) "தாயமுற்றிடக்கொடாது தருமனைச்சதித்ததே" (பாரத. சூதுபோர். ௧அஅ.) 7. பங்கு.

**தாயமாடல்**—1. சூதாடல். 2. தாமசஞ்செய்தல். (வழக்.)

**தாயரைவர்**—ஐவகைத்தாயரைக்காண்க.

**தாயாதி**—, **தாயாதிகள்**— } தாயத்தார்.

**தாயான்**—ஒன்பது. [ஒரு குழூஉக்குறி.]

**தாயித்து**—அட்சரமடைக்கிற உடு. [தெலுங்கு.]

**தாயினன்**—தாவியெனப்பொருள்படும் ஒரு முற்றெச்சமுமாம். (உ-ம்.) "அவிந்தாளைத்-தாயினன்வந்திங்கிட்டயர்கின்றான் றமியன்றான்" (திருவிளை. பழியஞ். கக.) தாவினானென்னும் ஒரு முற்றுச்சொல்லுமாம்.

**தாயுமானவர்**—, **தாயுமானார்**— } சிரகிரியின்மேலிருக்கிற கடவுள்.

**தாயைக்கொல்லி**—1. குட்டியிடுக்கி. இது கோட்டைக்கிழங்கென்றுஞ்சிற்றரத்தையென்றுங்கூறுவர். (மலையக.) 2. மாதாவைக்கொன்றவன், பரசுராமன்.

**தாயைக்கொன்றான்**—1. புல்லூரி. 2. வாழைக்காய் (மலையக.)

**தார்**—1. ஒரு வாதத்தியம். (உ-ம்.) "பம்பை தார்முரசம்" (இராமா. பிரம்மாஸ்திர. ௫.) 2. ஒழுங்கு. (உ-ம்.) "கோட்டார்" (திருநூற். ௪௦.) 3. கிண்கிணிமாலை. (பிங்கல. கூகூஉகூ.) 4. கிளியின் கழுத்திட்டவரை. (உ-ம்.) "செந்தார்ப்பசுங்கிளியார்" (சிந்தா. குணமா. கஅகூ.) 5 கொடிப்படை, தூசிப்படை. (உ-ம்.) "தாரொடு பொலிந்தவினைநவில்யானை" (மலைபடு. உஉஎ.) 6. சங்கிலி. (சி. சி. ஞானப்.) 7. சிங்கத்தின் கழுத்திலுள்ள சடை. (உ-ம்.) "தாரணிபெருந்தின்வாரல்வள்ளுகிர்" (பதிற்று. கஉ.) 8. சேனை. (ஆசிரியநிக. உ: கரு.) 9. படைவகுப்பு. (பிங்கல. க௫௦கூ.) 10. பூ. (உ-ம்.) "தார்கொண்டதாளிணைகள்" (அரிச்ச. பாயிர. க.) 11. பூமாலை. (உ-ம்.) "தாரடர்ந்தபுயமும்" (அரிச்ச. நகர. கூ.) 12. மார்பின்மாலை. (பரிபாடல்.)

**தார்க்கிகன்**—தருக்ககாரன்.

**தார்க்கியன்**—கருடன். (உ-ம்.) "கத்துருவினைத்தெரிபுதார்க்கியன்கனன்றே" (சேதுபு. கத்துரு. அகூ.)

**தார்த்தராட்டிரர்**—திருதராட்டிரன் மக்கள். (உ-ம்.) "தாண்டுவெம்பரித்தேர்த்தார்த்தராட்டிரர்" (பாரத. திரௌ. கூஅ.)

**தார்நிலை**—தூசிப்படையைத் தடுப்பேனென அரசற்கு ஒருவீரன்றனது தறுகண்மையைச் சொல்லியது. (புறப்பொ. வெ.)

**தார்ப்பிடம்**—மரமஞ்சள். (வைத்தியபரி.)

**தார்மபத்தநம்**—மிளகு. (வைத்தியமூ. அக.)

**தார்மிகை**—ஏகாதசித்திதி.

**தாரகப்பிரம்மம்**—பிரணவமந்திரம். (உ-ம்.) "ஆசிருரகப்பிரமமாமதன்பயனுய்ந்தான்" (கந்தபு. அயனைச். புரி. கக.)

**தாரகம்**—1. ஆதாரம். (சி. சி. உ: ௬௦. ஞாநப்.) 2. ஒரு மந்திரம், அது-பிரணவம். (உ-ம்.) "தாரகத்தொன்மறையுருவாய்" (சிவராத். கடவுள். அ.) 3. கடப்பித்தல். (த. நி. போ. ௯௫௬.) 4. சன்மத்தின் திரிவிதத்திலொன்று. (சி. சி. உ: ௯௧. ஞாநப்.) 5. தரிக்கிறது. (சி. சி. உ: ௬௫. சிவாக்.) 6. துணை. 7. பலண்டுறுக பாஷாணம். 8. வெள்ளி. (பிங்கல. கஉ௯௪.)

**தாரகன்**—1. கடப்பிப்போன். 2. கண்ணன் தேர்ச்சாரதி. 3. தாங்குவோன்.

**தாரகாரி**—1. காளி. 2. குமரன். (1. 2. சூ. நிக. கக: ரகரவெ. ௪௦.)

**தாரகை**—விண்மீன். (உ-ம்.) "தாரகைக் கெலா-நாணிலாவென" (பிரமோ.சநிப்பிர.௪.)

**தாரகைமாலை**—ஒரு பிரபந்தம்; அது: கற்பினையுடைய மகளிர்க்குள்ள இயற்கைக்குணங்களைக் கூறுவது. (உ-ம்.) "வகுப்பாற்கற்புடைமகளிர்க்குள்ள - தகைத்திறங்கூறுதருரகைமாலை" (இலக்கணவி. அ௬௭.)

**தாரசாரம்**—யசுர்வேத உபநிடதத்தொன்று. (கந். நவ. கஅ.)

**தாரகூத்திகரம்**—ஈயம்.

**தாரணை**—வியாழவட்டமாகிய அறுபது வருடத்துட் பதினெட்டாவது வருடம்.

**தாரணநட்சத்திரம்**—மூலம், ஆயிலியம், கேட்டை, திருவாதிரை என்னு நட்சத்திரங்கள். (விதாந. பஞ்சா. ௨௦. உரை.)

**தாரணம்**—1. யோகம். (தாரணயோகம்பார்.) 2. தரித்தல். (உ-ம்.) (இலிங்கதாரணஞ்செய்தவன். வழக்.)

**தாரணயோகம்**—அட்டாங்கயோகத் தொன்று; அஃது, அங்கங்கேயுள்ளனவற்றை மநவாயுவாலேபிடுங்கி எங்கே நிறுத்தவேண்டுமோ அங்கே நிறுத்தியும் பிரித்தும் பிரித்ததை ஏற்றுமிடங்களிலேற்றி இறக்குமிடங்களிலிறக்கிக் கூட்டுமிடங்களிற்கூட்டி யிப்படித்தரிக்கச் செய்வது. (த. நி. போ. ௯௬௯.)

**தாரணி**—1. சூரியன் துவாதசக்கலையி லொன்று. (வி-ணி.) 2. பூமி. (உ-ம்.) "தன்னிற்றீர்ந்ததனிமையின்றுயரந்தீர்த்தான்" (கந்தபு. வள்ளி. ௨௯௪.)

**தாரணை**—1. சரிநிலையினிற்றல். 2. தரித்தல். (வி-ணி.) 3. தாரணயோகம். (உ-ம்.) "வயமார்பிரத்தியாகாரம் வருதாரணையே தியானமே" (சூத. ஞாந. க௯: ௨.)

**தாரதண்டுலம்**—வெண்சோளம். (வைத்திய பரிபா.)

**தாரதம்**—1. கடல். 2. சிந்தூரம்.

**தாரதம்மியதை**—ஏற்றக்குறைவாந்தன்மை. (சி. சி. உ: ௫அ. சிவாக்.)

**தாரதம்யம்**—ஏற்றத்தாழ்ச்சி.

**தார்பீடம்**—மரமஞ்சள். (வைத்தியபரிபா.)

**தாரம்**—1. அரிதாரம். (வைத்தியபரிபா.) 2. அரும்பண்டம். (உ-ம்.) "அளந்துகடையறியாவளங்கெழுதாரமொடு" (மதுரைக்கா. ௬௬௭.) 3. சிற்றரத்தை. (மலையக.) 4. தரா. 5. தேவதாரம். (பரிபாடல்.) 6. நட்சத்திரம். 7. நா. (பிங்கல. க௦௪௯.) 8. நாரத்தை. (வைத்தியமூ. அக.) 9. நீர். 10. பலபண்டம். (உ-ம்.) "பல்வேறுதாரமொடுகெல்லகத்தீண்டி" (மதுரைக்கா. ௨௯௦.) 11. பாதரசம். 12. பார்வை. (சூ. நிக. கக: ரகரவெ. ௬.) 13. பிரணவம். 14. மனைவி. (உ-ம்.) "பழிக்கஞ்சாத்தாரத்தினன்றுதனி" (நல்வழி. ௯௪.) 15. மிதுநராசி. (சூ. உள்ளமு. ராசி. ௯.) 16. மூத்து. 17. மூக்காற்பிறக்குமிசை. (பாரத. சிறப்புப்பா. க௭.) 18. மேன்மை. 19. வல்லிசை. 20. வீணைநரம்பினொன்று. (உ-ம்.) "தாரத்துட்டோன்றுமுழை" (சிலப். வேனிற். ௯௨. உரை.) 21. வெண்கலம். 22. வெள்ளி. 23. மந்தாரமென்னுந் தெய்வதரு. (சிலப்பதி.) 24. சாதிலிங்கம். (வைத்தியபரிபா.) (4. 7. 22. பிங்கல. ௯௬௨௭.)

**தாரா**—1. ஒருபுள்; அது-ஆண்டித்தாரா, கண்ணுடித்தாரா, காட்டுத்தாரா, மணற்றாரா, பெருந்தாரா. எனப் பலவகைப்படும். 2. ஒரு பெயரெச்சம். (ஈறுகெட்டது.) 3. ஒரு வினைமுற்று. 4. ஒரு வினையெச்சம். 5. விண்மீன். (உ-ம்.) "தாராகணத்தொடுமமைகவன்னன்" (இராமா. பால. மிதிலைக்கா. ககஅ.)

**தாராகதம்பம்**—கடம்பு. (வைத்தியபரிபா.)

**தாராந்தரம்**—ஆலங்கட்டி. (வைத்தியபரிபா.)

**தாராட்டு**—தாலாட்டு. (வழக்.)

**தாராதரம்**—1. மேகம். (பிங்கல. ௫அ.)

**தாராபதி**—1. சந்திரன். 2. வியாழன்.

**தாராழக்கன்**—ஒரு பாம்பு.

**தாராளம்**—1. உதாரம். 2. தெளிவு. 3. மிகுதி. 4. விசாலம். (1. 2. 3. 4. வழக்.)

**தாரி**—1. அரிதாரம். (வைத்தியபரிபா.) 2. உடையோன். 3. குணம், இசைக்குணமென்க. (உ-ம்.) (திருவிளை. விறகுவிற்ற. ௯௪.) 4. தரிப்பவன். 5. வழி. (பிங்கல. ௪௭௯.)

**தாரித்தல்**—தரித்தல். (உ-ம்.) "தனையேமகவாமெனவே வயினிற்றாரித்திடுமெப்பாரிப் பெய

ரே" (சிவரக. கணபதிவங். அ.)

தாரித்திரம்—தரித்திரம்.

தாரித்திரியம் —சாரித்திரம்.

தாரிப்பு—1. தரித்தல். (உ-ம்.) (பெரியபு. இளையான். க.) 2. மதிப்பு. 3. மேம்படச்செய்தல். [இந்துஸ்.]

தாரு—1. தேவதாரு. (உ-ம்.) "மூக்கடு"பார். 2. மரக்கொம்பு. (பிங்கல. உஎகரு.) 3. மரப்பொது. (உ-ம்.) "தாருகவரிக்கடைபண்பாடும் வேதத்தலத்திறைமுன்" (மறைசை. எங.)

தாருகதலி—கானவாழை. (மலையக.)

தாருகவநம்-தாருகாவனம். (உ-ம்.) "பெரிய தாருகவநமுநித்தலைவோர்" (சிவரக. தேவியுடன். க.)

தாருகற்செற்றாள்-காளி. (சூ. நிக. க: ௩அ.)

தாருகற்செற்றோன்—குமரன். (சூ. நிக. க: உ௩.)

தாருகன்—தாருகாசுரன்.

தாருகாசுரன்—தாருகன், காளியாற்கொல்லப்பட்ட ஓரசுரனும், குமரனாற்கொல்லப்பட்ட ஓரசுரனுமாம்.

தாருகாவநம்—ஒரு வனம், தாருகவநம்.

தாருசம்—செம்புளிச்சை. (மலையக.)

தாருண்ணியம்—இளம்பருவம்.

தாருணம்—அச்சம். (சூ. நிக. அ: ருரு.)

தாருணி—நத்தைச்சூரி. (மலையக.)

தாருவநம்—தாருகவநம். (உ-ம்.) "சிறைவண்டறையுந்தாருவநத்தெய்வமுநிவர் பன்னியர்தம்" (திருவி. வளையல். உ.)

தாரை—1. அபிடேகம். 2. அரதநக்குற்றமைந்தனுளொன்றாகியகீற்று. (திருவிளை. மாணிக்க. சச. உரை.) 3. கண் (உ-ம்.) "வேற்றுரையருமுடன்விளிந்தார்" (சேதுபு. அனுமகு. உஎ.) 4. கண்மணி. (சூ. நிக. உ: கசு.) 5. குதிரைநடை. (பாரத. பழம்பொரு. கக.) 6. கூர்மை. (உ-ம்.) "வெறித்தாரைவேலரக்கர்" (இராமா.சூர்ப்பநகை க௩சு.) 7. சிறு சின்னம். (உ-ம்.) (பாரதம். கசு. போர். ருக.) 8. சுவடு. (பிங்கல. ௩கசுஉஎ.) 9. தத்தம்பண்ணு நீர். (உ-ம்.) "தாரைவாரெனக்கௌசிகன்சாற்றிட" (அரிச்ச. சூழ்வி. எக.) 10. நேரோடல். (சூ. நிக. கக: ரகரவெ. கக.) 11. பஞ்சகந்நியரிலொருத்தியான சுரகுரு பந்நி. (உ-ம்.) "இளநிலா நகைத்தாரையைவிடுக்கலன்" (காசிகா. கரு: கஎ.) 12. மழை. (சூ. நிக. கக: ரகரவெ. கக.) 13. வழி. (உ-ம்.) "நெறித்தாரைசெல்லாதநிருதர்" (இராமா. சூர்ப்பநகை. க௩சு.) 14. வாலியின்மனைவி. (உ-ம்.) "துணைவருங்கிளையுஞ் சுற்றத்-தாரையைவணங்கி" (இராமா. கிட்கிந். அரசிய. ருஉ.) 15. விண்மீன். (உ-ம்.) "திங்கள் சூழ்தருதாரையின்கணமென" (பாரத. படையெழு. கக.) 16. விரைவு. (பிங்கல. உககச.) வைத்திய பரி பாடையிற் சின்னியென்பர்.

தால்—1. தாலாட்டு 2.நா.(சூ.நிக.உ:கச.) 3. பிள்ளைக்கவியுறுப்பினொன்று.(உ-ம்.)"கடுங் கொலைநீக்கிக்கடவுட்காப்புச்—செங்கீரைதால் சப்பாணிமுத்தம்" (இலக்கணவி. அ0௬.)

தாலகி—கள். (வைத்தியபரிபா.)

தாலகேதநன்—1. பலராமன். (பிங்கல. கசரு.) வீட்டுமசாரி. (பாரத. க0. போர். ௩ரு.)

தாலபத்திரி —மரமஞ்சள். (மலையக.)

தாலபீசநியாயம்-(தாலவீசநியாயம் பார்.)

தாலபோதம்—ஆவிரை. (மலையக.)

தாலம்—1. அறுடம். (உ-ம்.) "தாலந்தொழுத்-தருமதிதச்சன்" (விதாந. பஞ்சா. உ0.) 2. உண்கலம். (உ-ம்.) "பெருந்தோட்டாலம்பூசன் மேவர"(புற.நா. கஉ0.) 3. உலகம். (உ-ம்.) "தாலம்பதினாலு நடுங்கிட" (அரிச்ச. நாட்டு. க.) 4. ஓராளவை. (சி-வி. கிரி. கரு. உரை.) 5. கூந்தற்பனை (மலையக.) 6. தாலம்பபாஷாணம். அது, ஒரு மருந்து. 7. தேன். (வைத்தியபரிபா. அஎ.) 8. நா. 9. பனை. 10. யானைச்செவி. (பிங்கல. உச௩0.) (8. 9. பிங்கல. ௩௬௩0.)

தாலம்பபாஷாணம்— ஒரு மருந்து.

தாலமூலி—நிலப்பனை. (மலையக.)

தாலவட்டம்—1. தாலவிருந்தம். 2. பூமண்டலம். 3. யானைவால். (சூ. நிக. ௩: சு.)

தாலவிருந்தம்·—பேராலவட்டம். (பிங்கல. கஎ0உ.)

தாலவீசநியாயம் — சகத்திர நியாயங்களுளொன்று; அது-பனை காரியப்படுவதற்குக்கொட்டையும், கொட்டைகாரியப்படுவதற் குப்பனையும் காரணமாயிருத்தல்பற்றிப் பனை முந்தியதோ கொட்டைமுந்தியதோ என்பதிற்போல வழக்குரைத்தல். இதனைப்பீசாங்குரநியாயமென்பர். பீசாங்குரநியாயத்தைச் சிவப்பிரகாசம். (உ-ம்.) (சூத்திரம். க௩-ம் உரையிற்காண்க.)

தாலாட்டு—ஒராட்டு. (உ-ம்.) "நாயகனைத் தாலாட்டுநலம்பலபாராட்டினார்" (பெரியபு. திருஞாந. சச.)

தாலி—1. ஐம்படையாகியவோரணி. இது; திருமால்பஞ்சாயுதவடிவமாகச்செய்துகுழந்தை கட்கணிவது. (உ-ம்.) "தாலியைம்படைதழுவும்" (இராமா. நாட்டு. ருஅ.) 2. கீழ்க்காய்நெல்லி. மலையக.) 3. பலகறை. "உ-ம்.) "வரிவெண்டாலிவலைசெத்துவெரூஉ" (ஐங் குறு. கசுரு.) 4. மங்கலநாண். (உ-ம்.) "தாலிகட்டையிலேதொடுத்து" (சிவப்பிர. சரித்திரம்.) 5.

மட்பாத்திரம். (உ-ம்.) "அனையவரதனையிவா ராரழற்குலியொன்று- தனையவன்பாணிநல்கி" (சேதுபு. சாத்தி. ௬அ.)

**தாலியம்**—பாதிரி. (வைத்தியமூ. அகரா.)

**தாலீபாகம்**—தீட்சையிற்குருபகுக்குமங்கம். (சி. சி. அ: ௬. மறை.)

**தாலு**—நா. (உ-ம்.) "தருமனுந்தம்பிமாருந் தாலுவும்புலர்ந்து" (பாரத. நச்சுப். உஉ.)

**தாலுகண்ணி**—வெள்ளைக்காக்கணம். (வைத்தியமூ. அகரா.)

**தாவட்டம்**—சிற்பநூன்முப்பத்திரண்டிலொன்று.

**தாவடம்**—தாழ்வடமென்பது தாவடமென ழுகரங்கெடக்கூறுவர். (வழக்.)

**தாவடி**—1. தாவி. (உ-ம்.) "ஆயிரமக்கள் தாவடிபோயினர்" (நன். பொ. க.) 2. போர். (உ-ம்.) "தாவடியோட்டுமயிலும்" (கந்தரலங். கரு.)

**தாவணி**—1. கண்டங்கத்திரி. (மலையக.) 2. பெண்களிடும் உத்தரீயம். (வழக்.) 3. மாட்டைக்கூட்டமாகக்கட்டுமிடம். (வழக்.)

**தாவதர்**—முனிவர். (உ-ம்.) "தாவதர்க்கினிய காய்கிழங்குகனிதந்து" (சேதுபு. பாவநாச. ௬௬.)

**தாவந்தம்**—இக்கட்டு. (வழக்.)

**தாவநம்**—1. சுத்திசெய்தல். (உ-ம்.) "தந்த தாவநம்" (வழக்.) 2. தாபநம்.

**தாவம்**—1. காட்டுத்தீ. (சூ. நிக. க: ருஉ.) 2. காடு. (உ-ம்.) "தணியாப்பலமருத்துந்தாவமு ணுந்தாவம்" (தைல. தைலவ. ககரு.) 3. தீ. (உ-ம்.) "2" பார். 4. வெப்பம். (உ-ம்.) "தாவமிகும்படிபரவாச்சாபங்கள்பலவிட்டார்" (கோயிற்பு. பதஞ்சலி. உ௬.)

**தாவரம்**—1. அசரம், நிலையியற்பொருள். (உ-ம்.) "தாவரசங்கமங்களென" (சைவவினா. பக்கம். ௬.) 2. இடம் (வழக்.) 3. உடல். (சூ. நிக. உ: அரு.) 4. நிலை. 5. பூமி. 6. மரப்பொது. (பிங்கல. உஎ௬0.) 7. மலை.

**தாவரலிங்கம்**—பரார்த்தலிங்கம். (சைவவி. பக்கம். ருஎ.)

**தாவரன்**—கடவுள்.

**தாவரித்தல்**—1. காப்பாற்றுதல். 2. தாங்குதல். 3. நிலைபெற்றிருத்தல். (1. 2. 3. வழக்.)

**தாவல்**—1. தாக்குதல், பற்றுதல். (சிவப்பிர. எ: க. உரை.) 2. தாண்டல். (பிங்கல. உக அரு.) 3. பரத்தல். (சூ. நிக அ: ௬.) 4. வருத்தம். (உ-ம்.) "தாவலுய்யுமோமற்றேதாவாது" (பதிற்று. ௬க.)

**தாவளக்காரர்**—தேசாந்திரவணிகர். (ஒரு தேசவழக்கு.)

**தாவளம்**—1. இருப்பிடம். [தெலுங்கு.] 2. மருதநிலத்தூர். (சூ. நிக. ரு. ௬0.)

**தாவளி**—கண்டங்கத்திரி. (வைத்தியபரிபா.)

**தாவளியம்**—வெண்மைத்தன்மை. (பி. வி. ௬௬.)

**தாவாது**—ஒழியாது. (ஞானமி.)

**தாவாரம்**—தாழ்வாரம். [ழுகரங்கெட்டுநின்றது.] (வழக்.)

**தாவு**—1. உறைவிடம். 2. கேடு. 3. குற்றம். (உ-ம்.) "தாவில்கணம்புடைசூழ்" (கோயிற்பு. பதஞ்சலி. ௬.) 4. செல்லுதல். (பிங்கல. உகஅ௬.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. பகை. 7. பாய்ச்சல். 8. வருத்தம். 9. வலி. (2, 6, 7, 8, 9-சூ. நிக. கக: வகரமெ. க௬.) தா என்னு முதநிலைக்கே இப் பொருள் கொள்ளுவாருமுளர்.

**தாவுதல்**—1. அழிதல் 2. கடத்தல். (சூ. நிக. ௬: ௬க.) 3. சாய்தல். 4. தாண்டல். (உ-ம்.) "தாவிச்சென்றனர்" (இராமா. கரன்வ. ருரு.) 5. பரத்தல். (நெடுநல். ௬௬. அடி. பார்.) 6. பிடித்தல்.

**தாழ்**—1. கதவுறுதாள். (உ-ம்.) "அன்பிற்கு முண்டோவடைக்குந்தாழ்" (வள். எக.) 2. சீப்பு. (பிங்கல. ௬கஅ௬.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

**தாழ்க்கல்**—1. தாமதிக்காதே எனப் பொருள்படும் ஒரு முன்னிலையே வல்வினை. 2. தாமதித்தல்.

**தாழ்க்கோல்** — தாழைத்திறக்குங்கோல். (நன்னூ. மெய். உஉ.)

**தாழ்ச்சி**—1. தவறு. 2. தாழ்வு. 3. நீட்டிப்பு, அது—செய்யுங்காலத்துச்செய்யாமை. (உ-ம்.) "சூழ்ச்சிமுடிதுணிவெய்தலத்துணிவு - தாழ்ச்சியுட்டங்குதறீது" (வள். ௬எக.)

**தாழ்த்தல்**—1. இருத்தல். 2. கீழ்ப்படுத்துதல். 3. குறைத்தல். 4. தாமதித்தல். (உ-ம்.) "தாழ்த்திடாமன்-மின்னிடைவெந்தீ" (சேது. சங்கர. எக.) 5, பணித்தல், தாழ்தல் என்பதற்கு பிறவினை.

**தாழ்த்துதல்**—தாழ்த்தல்.

**தாழ்தல்**—1. அமிழ்ந்துதல். (உ-ம்.) "இருநிலந்தாழ்ந்து" (இராமா. சடாயுகா. ௬.) 2. ஆசை. (பிங்கல. கஅ௬௬.) 3. ஆசைப்பெருக்கம். (சூ நிக. அ: எ௬.) 4. இளகல். (உ-ம்.) "தாழ்ந்த மனத்தாள்" (இராமா. பூக்கொய். உ௬.) 5. குறைதல்.) 6. சரிதல், சீர்கெடுதல். (உ-ம்.) "தாழுங் காலத்துந்தாழ்வில" (இராமா. மராமரப். க.) 7. சோம்பல். 8. தங்கல். (உ-ம்.) "நீலமஞ்சுக டாழுமிஞ்சிகள்" (ஏகாதசி. உருக். ரு.) 9. தாமதித்தல். (உ-ம்.) "தாழாதறஞ்செய்மின்" (சுக

தர. தேவார. கேதார. க.) 10. தொங்குதல். (உ-ம்.) "பின்றாழ்குழவி" (யாப். காரிகை. செய்யு. க.) 11. தோற்குதல். 12. படிதல். (ஐந்திணையை.) 13. பணிதல். (உ-ம்.) "தாழ்ந்துமலரேந்தியிறைதன்றிருமுனின்றே" (திருவாத. திருப்பெரு. சச.) 14. வீழ்தல். (உ-ம்.) "சங்கரமாறவம்மோதழலினீதாழ்வாயல லை" (சேதுபு. சங்கர. எக.)

**தாழ்ப்பம்**—தாழ்த்துதல்.

**தாழ்ப்பு**—1. தாழ்ச்சி. 2. தாழ்த்துதல்.

**தாழ்மை**—1. இளிவு. 2. எளிமை. 3. கீழ்மை. 4. பணிவு. 5. தாமதிப்பு. (1, 2, 3-பிங்கல. க. சு: கஉ)

**தாழ்வடம்**-ஒரணிவடம், உருத்திராக்கமணி மாலைக்கும் பெயர்கூறுவர். (உ-ம்) "வேட்டியுந் தாழ்வடமும்" (ஒழிவி. சரியைக் ச.)

**தாழ்வரை** — மலையினடிவாரம். (உ-ம்.) "கயிலைத்தாழ்வரை" (பெரியபு. திருமலை. அ)

**தாழ்வாரம்**—1. சோபனம். (சூ. நிக. ரு: ருக.)

**தாழ்வு**—1. அடக்கம். (உ-ம்) "தாழ்வின் றிக்-கொன்னேவெகுளிபெருக்கலும்" (திரிகடு. கஅ.) 2. கீழ்மை. 3. குறைவு. (உ-ம்.) "உன்னருளா-லென்றாழ்வுகெடத்தேற்றாய்" (திருவிளை. பழியஞ் கஉ) 4. தவறு. 5. பள்ளம். (சூ. நிக. ரு: சுக.) 6. வறுமை. (வள். ககஎ.) 7. மலையடி. (சிந்தா.)

**தாழ்வுறல்**—வணங்கல். (உ-ம்.) "தாழ்வுற் றிடுவோருமைசங்கரனைச்-சூழ்வுற்று" (கந்தபு. தெய்வயானை. உஉ0)

**தாழக்கோல்**—தாழ்கோல். (உ-ம்.) "வன்னிலைக்கதவநூக்கித்தாழக்கோல்வலித்து"(திருவிளை. அங்கம். அ.) தாழாகிய கோல் என்பது பொருள். (நன். மெய் உஉ.)

**தாழம்**—தாமதம். (உ-ம்.) "தருதற்குமகிழ்ந் துவந்தேன்றாழமீங்கொழிகவென்றான்"(சூளா. கல்யாண. கசசு.)

**தாழாமை** — குறையாமை. தாழ்வினெதிர் மறை.

**தாழி**—1. அரிதாரம். 2. குடம். (உ-ம்.) "விண்ணோர்-தானந்திகழ்தாத்திரியைப்பெருந் தாழியாக்கி" (அரிச்ச. நாட்டுச். ச.) 3. சாடி. (உ-ம்.) "வியன்மலரகன்பொழிலீமத்தாழி-யக விதாகவினைமோ" (புறநா. உருசு.) 4. சிவதை. 5. பரணிநாள். (சூ. நிக. க: சுஎ.) 6. பாண்டம். (உ-ம்.) "கஃசுபயமுபயமுற்சுரசமிழையிட்டெ லாங்கலவல்கொடுதாழியுளிடே" (தைல. தைலவ. எச.) (1, 4-வைத்தியவ.)

**தாழிகை**—கலிப்பாவுக்கு இரண்டாமுறழ் பாகித்தாழம்பட்ட ஓசையுடையதாய்த்தரவினி ன்றுஞ் சுருங்கிவருவது. (உ-ம்.) (யாப். காரிகை. செய். கசு.)

**தாழுகை**— } தாழ்தல்.
**தாழுதல்**— }

**தாழை**—1. தழுதாழை. (உ-ம்.) "அரிக்காந் திதாழை" (தைல. தைலவ. எக.) 2. தாழஞ் செடி; அது: கற்றாழை ஆனைக்கற்றாழை செந் தாழை வெண்டாழை பேய்த்தாழை தழுதா ழை எனப் பலவகைப்படும். 3. தாழைமரம். (உ-ம்) "கமழுந்தாழைக்கானலம்பெருந்துறை" (பதிற்று. ருரு.) 4. தெங்கு. (உ-ம்.) "வாழை முழுமுதறுமியத்தாழை-யிளநீர்விழுக்குலையுதி ரத்தாக்கி" (திருமுரு. கூ0எ.

**தாள்**—1. ஆதி. (பிங்கல உஉசஎ.) 2. உற் சாகம். (சூ. நிக. கூ: ருக.) 3. கதவுறுதாள். (உ-ம்.) "திருக்கருந்தாட்கொளுவி"(பெரியபு. திருநாவு. கூசு) 4. கால். (உ-ம்.) "தந்தைதா ளொடும்பிறவித்தாளெறிந்து"(திருவிளை.பாயி. உஉ.) 5. சிவசத்தி: (சி. சி. அ: கூஅ. ஞானப்.) 6 திறவுகோல். (சிந்தா.) 7. தெரிநிலைவினைப் பகுதி. 8. நெல்லரிபுல். (பிங்கல. கூசுகூ.) 9. பணிகளின் கடைப்பூட்டு.). (வழக்.) 10. முயற்சி. (உ-ம்.) "மடியுளாண்மாமுகடியென்ப மடியிலான் - றாளுளாடாமரையினாள்" (வள். சுகஎ.) 11. படி. (உ-ம்.) (பதிற்றுப்பத்து.)

**தாள்கழுவல்** — பாதசுத்திபண்ணல். இது, தீர்த்தவர்க்குச்செய்புண்ணிய மொன்பதினொன் று. (சூ. நிக. கஉ. கூஅ.)

**தாளக்கம்**— } அரிதாரம். (வைத்தியமூ.
**தாளகம்** — } அகராதி.)

**தாளசமுத்திரம்**—ஒரு தமிழ்நூல்.

**தாளத்திரயம்**— உலக்கைமூவிரலால் இட துள்ளங்கையின் முத்தரந்தட்டுதல். (சைவச. பொது. உ0ரு. உரை.)

**தாளநம்**—பிளத்தல். (சீவரட். உஅ0.)

**தாளப்பிரமாணம்** — சங்கீதசுருதிப்பிரமா ணம்; அஃது-அங்கம், இலயை, கலை, காலம், கிரகம், கிரியை, சாதி, பிரத்தாரம், மார்க்கம், யதி எனப் பத்துவகைப்படும்.

**தாளம்**-1. ஒருவாச்சியம். (பிங்கல.கஉசசு.) 2. கலைஞானமறுபத்துநான்கினொன்று. 3. சதி, இது நாற்பத்தொன்றென்பர் சிலப்பதிகாரத் தில். 4 தாளகம். 5. தாளிசம். 6. பொன்னரி தாரம். 7. முத்து. (4, 5, 6, 7-வைத்தியபரி பா.)

**தாளவகை**—இது நான்கென்பர்; சிலப்பதி காரம் உளர்காண் காதையில் அவை-கொட்டு, அசைதூக்கு, அளவு என்பனவாம்.

தாளவகையோத்து—ஒரு தமிழ்நூல். (அபி தாந.)

தாளவொற்று—சதி. (பிங்கல. கசசுசு.)

தாளாண்மை—1. ஊக்கம். (சூ. நிக. கூ: ருஎ.) 2. முயற்சி. (உ-ம்.) "தாளாண்மையில் லாதான்வேளாண்மை" (வள். சுககச.)

தாளாளர்—1. ஊக்கமுடையோர். (உ-ம்.) "வாளாடுகூத்தியர்கண்போற்றமொறங் தாளாளர்க்குண்டோதவறு" (நாலடி. தாளாண் க.) 2. வைசியர். (உ-ம்.) "தாளாளராக்கூரிற்றுன்றேன்றிமாடமே" (திருவாக்கூர். தேவார. திருஞா. ரு.) (பிங்கல. எரு.)

தாளாளன் — முயற்சியுடையவன். (உ-ம்.) "தாளாளனென்பான் கடன்படாவாழ்பவன்" (திரிகடு. கஉ.)

தாளி—1. அநுடநாள். (சூ. நிக. ச: எச.) 2. ஒரு படர்கொடி; அது கம்பந்தாளி காட்டுத்தாளி குறுகுற்றுளி செந்தாளி தேவதாளி சிறுதாளி நாகதாளி நெரலைத்தாளி நறுந்தாளி பெருந்தாளி எனப் பலவகைப்படும். (சூ. நிக ச: ருரு-ஆம்பாட்டில், மஞ்சிகமென்றுர்.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. சிவதை. (வைத்திய பரிபா.) 5. பனைமரம். (பிங்கல. உஎருரு.)

தாளிக்கம்—திடன். (வழக்.)

தாளிசபத்திரி—ஒருமருத்திலை. (தைல. தைலவ. கூச.)

தாளிசம்—ஒரு செடி (உ-ம்.) "தாளிசந் தகரம்" (தைல. தைலவ. உரு.)

தாளித்தல்—1. கறியைச்சமைத்துச்சுவைப் பட வாசமூட்டுதல். (உ-ம்.) "பட்டநறையாற் றுளிச்து" (பெரியபு. சிறுத்தொ. சுசு.)

தாளிதம்—தாளிப்பு.

தாளிப்பனை—சீதாளம்.

தாளிப்பு—1. தாளிதம். 2. மதர்ப்பு. (வழக்.)

தாளினி—1. சிவதை. 2. நிலவாகை. (1, 2- மலைபக.)

தாளியம்-வில்வப்பத்திரி. (வைத்தியபரிபா.)

தாளீசம் — தாளிசபத்திரி. (உ-ம்.) "தாளீசம்பச்சைதகரமசைகோட்டம்"(தைல.தைலவ. ககூரு.)

தாளுதல்—முயற்சித்தல்.

தாற்பரியம்—கருத்து.

தாற்று—மூட்கோல். (உ-ம்.) "சொற்றுற் றுச்கொண்டுசுனைத்தெழுதல்" (நாலடி. அவையறி. ரு.) சொல்லாகியதாற்றுக்கோல் என்பது பொருள்.

தாற்றுக்கோல்—மூட்கோல். (சிந்தா. காந்தரு. ருoஉ. உரை.)

தாற்றுதல்—1. தரித்தல். (வழக்.) 2. புடைத் தாற்றிக்கழித்தல்.

தாறு—1. அங்குசம். 2. அளவு. (பிங். ருசுருச.) 3. இருப்புமுள். (உ-ம்.) "சாலடீடா குந்தம்" (சேதுபு. கத்தரு. ருரு) 4. கமுகு வாழைமுதலியவற்றின்குலை.(பிங்கல.ருசுருச. 5. நூனழி இது, நெய்வார்கருவியினென்று. 6. பரிக்கோல். (உ-ம்.) "தாறடுகளிற்றின்வீறு பெறவோச்சி" (கு-பா. கறு௦.) 7. விற்குதை. (4, 7-சூ நிக. கக: நகரவெ. ரு.)

தாறுகன்னி—வெள்ளைக்காக்கணம். (மலையக.) [தாலுசண்ணியெனச்சிலர் எழுதுவர்.]

தாறுகோல்—செலவுமுடுக்குங்கோல். அது "சோலின்-றுறுகளைந்தேறென்றேற்றி" என்பதனைற்பெறப்படும். (பொருந. கசுசு.)

தாறுபாய்ச்சல் — அரையிலுடுக்கப்பட்ட புடவையினுட்டலைப்பைக்கொடுக்குப்பாய்ச்சல் (வழக்.)

தாறுமாறு—முருட்டுத்தன்மை. (வழக்.)

தான்—1. அசைச்சொல். (உ-ம்.) "என்ன தோர்நன்மைதான்" (திருக்கோ. உசசு.) 2. இருதிணைக்கும் பொதுவாயுள்ளதோர் பெயர். (நன். உஅஉ.)

தான்றி—1. ஒருமரம். (சூ. நிக. ச: உசு.) 2. மருதோன்றி. (உ-ம்.) "தான்றிகவிர்மயிலை" (தைல. தைலவ. கரூரு.)

தான்றேன்றி — ஒருவராலுண்டாக்கப்படாதது. (உ-ம்)"தான்றேன்றிமாடமே"(தேவார. திருவாக்கூர். திருஞா.)

தானநிலை — வலி, மெலி, சமன் என்னுமிசைக்கூறுபாடு. (சிலப்.)

தானனுட்டித்தனுதுநிறுப்பு—எழுவகைமதத்தினென்று. (நன். பாயி. க்க.)

தானிகம்— } கொத்துமல்லி. (தைலவ.)<br>தானிகை— }

தானியாசன்-கோதுமை. (வைத். பரிபா.)

தானழவகை—1. அவை எழுத்து, அசை, சீர் என்பன. (சிலப்.) 2. தலைப்படுதானம், இடைப்படுதானம், கடைப்படுதானம். (அபிதானசிந்.)

தானெடுத்துமொழிதல்—தந்திரயுத்திமுப்பத்திரண்டனுளொன்று; அது பழைய சூத்திரத்தைத்தான் ஒரோவிடத்து எடுத்துச்சொல்லுதல். (உ-ம்.) "தானெடுத்துமொழிதல்பிறன்கோட்கூறல்" (நன். கச.)

தானைநிலை—ஒருதுறை. அது, இரண்டுசேனையுமறத்தையேச்சப் போர்க்களத்துச் சிறப்பெய்தியது. (புறப். வெண்பா.)

தானைமறம்—ஒரு துறை. அது, பொரவெதிர்ந்தவிருவகைசேனைதாம்பொருதுமடியாமை

கரித்த ஆற்றலினதுயர்ச்சியைச் சொல்லிய (புறப்-வெண்பா.)

## தி.

**திக்கங்கம்**—அட்டபாலர்குறி; அவை: கிழக்காதிமுறையே கொடி, புகை, சீயம், நாய், இடபம், கழுதை, யானை காகம் என்பன. (சூ. நிக. கல: அo.)

**திக்ககம்**—திக்கயம்.

**திக்கயம்**—திக்குகளிலுள்ள அட்டயானை; அவை: கிழக்காதிமுறையே ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம் என்பன. (உ-ம்.) "தேராட்டிக்கயங்காட்டுந்திரண்மா" (கோயிற்பு. பாயிர. எ.)

**திக்கரித்தல்**—நிந்தித்தல். (உ-ம்.) "சினத்துப்பொற்பொருப்பைப்பொட்டெழுத்தித் திக்கரித்து" (திருப்பு. சஉசு.)

**திக்கரை**—முருக்கு. (வைத்தியபரிபா.)

**திக்கற்றவன்**—தாபரமற்றவன். (நன். பொது. நூஅo. உரை.)

**திக்கிடுதல்**—1. திக்குதல், அது பேச்சுத் தடக்காதல். 2. துணுக்குறல். (வழக்.)

**திக்கிராந்தம்**—முப்பத்திரண்டுவகைத்தேசிசாரிகளுளொன்று (உ-ம்.) "எற்றதிக்காரந்தமாதியாமுப்பத்திருவகைத்தேசிசாரிகளும்" (திருவிளை. கான்மாறியா. கஉ.)

**திக்கு**—1. ஆதரவு. (உ-ம்.) "திக்குவேறில்லை" (அருணைகிரி. அந்-தி) 2. உலகம். (உ-ம்.) "செற்றதுகாதிகடீர்ப்பதகாதிகடிக்கறிய" (திருநூற். அஅ.) 3. கொடுவேலி. (மலையக.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. திசை. (உ-ம்.) "எட்டாந்-திக்குடையான்" (சிவரக. கணபதிகுமர. க.) 6. பேச்சுத்தடக்கு. (வழக்.)

**திக்குத்திக்கெனல்**—1. அச்சக்குறிப்பு. 2. ஓரொலிக்குறிப்பு.

**திக்குதல்**—கொன்னிப்பேசுதல். (வழக்.)

**திக்குபதிக்கிரகம்** — திசாபதிக்கிரகங்கள், கிழக்காதிதிக்கின்முறையேயிருக்கும் சூரியன், சுக்கிரன், செவ்வாய், இராகு, சனி, சந்திரன், புதன், வியாழன் ஆகிய திசாபதிகள்.

**திக்குப்பாலகர்** — அட்டதிக்குப் பாலகர்; அவர் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னுமிவர். (சூ. நிக. கஉ: எக.)

**திக்குவணன்**—பிராமணனுக்கு அயோகவகன்னியிடத்துப்பிறந்தவன்; இவன் றொழில் தோல்வர்த்தகஞ்செய்வது. (அபிதானசிந்.)

**திக்துறு**—புனமுருங்கை. (மலையக.)

**திகச்சம்**— } ஓமம். (மலையக.)
**திகசம்**— }

**திகதி**—தேதி.

**திகந்தம்**—திகாந்தம். (உ-ம்.) "திகந்தமுற்றிடவேலைகளுழக்கினன்றிரிய" (கந்தபு. ததீசியுத். உரு.)

**திகந்தராளம்**—எழுவகையன்மொழித் தொகையுளொன்று. (பி-வி. உச. உரை.)

**திகம்**—1. அதிகம். 2. புலித்தோல். 3. வைராக்கியம்.

**திகம்பரர்**—1. சமணமுநிவர். (சூ. நிக. உ: கூ.) 2. நிருவாணிகள்.

**திகம்பரன்**—1. அருகன். (சூ. நிக. க: கூ) 2. சிவன். (பிங்கல. கூச. நக்கன் என்பர்.) 3. நிருவாணி.

**திகம்பரி**—1. நிருவாணி. 2. பார்ப்பதி. (உ-ம்.) "திகம்பரிக்குமணியாகம். (மறைசை. கஎ.)

**திகரடி**—சோர்வு. (வழக்.)

**திகரம்**—1. ஓரெழுத்து. தி. 2. சோர்வு. (வழக்.)

**திகழ்**—1. ஒளி. (உ-ம்.) "திகடசக்கரச்செம்முகம். (கந்தபு. காப்பு. க.) 2. ஒருவமையுருபு. (உ-ம்.) "மின்றிகழ்வாழ்வோர்விழிபுணர்காலந்தொறும்" (கோயிற்பு. நடரா கூஅ.) 3. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "திகழ்நால்வேதன்" (சிவரக. கணபதிகுமர. க.)

**திகழ்ச்சி**—1. தோற்றம். 2. விளக்கம்.

**திகழ்தல்** — 1. உள்ளடக்கிக்கொள்ளுதல். 2. தோற்றல். 3. பிரகாசித்தல். (உ-ம்.) "திகழ்வேற்கண்ணார்" (அரிச்ச. மயா. உ.)

**திகழ்பு**—விளங்குதல். (உ-ம்)"பொன்றிகழ்பங்கயமூழ்கி" கோயிற்பு. பாயிர. கஎ.)

**திகழ்வு**—விளக்கம். (உ-ம்.) "திகழ்வுகண்டுவந்து" (கோயிற்பு. பதஞ்சலி. அஅ.)

**திகனு**—கொடுவேலி. (மலையக.)

**திகாந்தம்**—திக்கின்முடிவு. (உ-ம்.) "திகாந்தத்தளவு" (நன். விருத். சங்கர. உரைப்பா.)

**திகிர்**—திகில். (வழக்.)

**திகிரி**—1. உருளை. (உ-ம்.) "ஒருதனித்திகிரியுரவோற்காணேன்" (சிலப். அந்திமா. உ.) 2. குயவன்சக்கரம். (உ-ம்.) "வேட்கோவர்-திரித்துவிட்டசக்கரமெனலாகுமத்திகிரி" (காஞ்சிபு. திருநகரப். எசு.) 3. சக்கராயுதம். (உ-ம்.) "பைம்பொனெடுந்தனித்திகிரிப்பரந்தாமன்" (பாரத. கிருட்டி. உக:) 4. தேர். (ஞானமி.) 5. மலை. (சூ. நிக. கக. ககரவெ. ரு.) 6 மூங்கில். (உ-ம்.) "நிரைகெழுதிகிரியின்றரித்திலம்"

(சேதுபு. திருநாட். உஎ.) 7. வட்டவடிவு. (பிங்கல. ௩௬௬௭.)

திகிரிக்கல்—1. ஆட்டுக்கல். 2. கோரோசனை. (வைத்தியபரிபா.) 3. சக்கரவாளகிரி.

திகிரிகை—சக்கரம்.

திகில்—பயம். (வழக்கு.)

திகிலிடுதல்—பயப்படுதல். (வழக்கு.)

திகிற்படுதல்—திகிலிடுதல். (வழக்கு.)

திகு—ஒரு தாளக்குறிப்பு. (உ-ம்.) "சித்திரப் பவுரிக்குத்திகுதிகு" (திருப்புக. உ.)

திகுதிகெனல் — 1. ஒரொலிக்குறிப்பு. 2. சீக்கிரக்குறிப்பு.

திகை—1. திகைப்பு. 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. திசை. 4. தேமல். (3. 4-பிங்கல. ௩௬௩௩௮.)

திகைத்தல்— } பிரமித்தல், மயங்கல்.
திகைப்பு— } (உ-ம்.) "திருவிங்குவரு வாள்கொல்லோவென்றகந்திகைத் தாளின்றாள்" (இராமா. சூர்ப்பனகை. ௫௬.)

திகைப்பூடு— } ஒருபூடு.
திகைப்பூண்டு— }

திங்—வினைமுற்றுச்சொல். (உ-ம்.) "திங் கிருத்தோடுந்தலைப்படுமே" (பி-வி. ௩௦.)

திங்கட்குடையோன்— காமன். (சூ. நிக. க: உ௬.)

திங்கண்முக்குடையான்—அருகன் (சிந்தா.)

திங்களுள்—மிருகசீரிடம். (சூ. நிக. க: ௬௩)

திங்கள்—1. சந்திரன். 2. பன்னிரண்டு. (உ-ம்.) "திங்களாம்படிவகைக்கிறுத்து"(தைல. தைலவ. ௯௪.) 3. மாதம். (1, 3-சூ. நிக. கக: ௩கரவெ. க)

திங்கள்சூடி—சிவன். (உ-ம்.) "திங்கள்சூடி கணை. (கூர்மபு. தக்க. வமி. ௬௫.)

திஙந்தசத்தம்—வினைச்சொல் (சத்தசங்கிரகம். ௩௪.)

திசாதிசை—பலதிசை. (உ-ம்) "திசாதிசை போதும்" (இராமா. யுத்தகா. மந்திரப். ௪உ.)

திசாயம்—குச்கில். (வைத்தியபரிபா.)

திசி—திசையையுடையது.

திசை—1. திக்கு. (உ-ம்.) "எருமையின் திசையினீள்வடிவுற்று" (சேதுபு. சங்கதீ. ௧௦.) 2. கிரகபலம், வருங்காலம்.

திசைச்சொல்—செந்தமிழ்நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலங்களிலுமுள்ளோர் தங்குறிப்பினவாய் அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ்நிலத்துவந்து வழங்குஞ் சொல். (உ-ம்.) "செந்தமிழ்நிலஞ்சேர்பன்னிரு நிலத்தினுந் - தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி. (தொல்கா. எச்சவி. ௪.) பதினெண்மொழிகளுள்ளே தமிழொழிந்த பதினேழ்மொழிகளுஞ்சேர்த்துத் திசைச்சொலென்பர். (நன் உஎ௬.)

திசைநா—கொடுவேலி. (மலையக.)

திசைப்பு—திகைப்பு. (உ-ம்.) "அவித்தையேழுந்-திசைப்புறுதலுறுஞ்சீவர்க்காவனவாம்" (வேதா. சூ. ககo.)

திசைபிலம்—மருக்காரை. (மலையக.)

திசைமுகன்—பிரமன். (உ-ம்.) "சீர்கொண்ட செழுங்கமலத்திசைமுகனும்"(அரிச்ச.பாயிர.க.

திட்கல்— } அச்சக்குறிப்பு, திடுக்கிடு
திட்கிடுதல்— } தல். (உ-ம்.) "கொக்கைத்
திட்டுகனல்— } துட்கத்திட்கப்பொரு வேலா" (திருப்பு. ௪உஎ.)

திட்டத்துய்மன் — யாகசேனன் குமாரன். (பாரத. அபிதான...)

திட்டம்—1. ஒப்புரவு. 2. கட்டளை. 3. காணப்படுந்தன்மை. (உ-ம்.) "திட்டமுமதிட்டமுமில்சிட்டசிவபட்டா" (சேதுபு. சருவதீர். உ௬.) 4. திறம். (வழக்.)

திட்டல்—வைதல். (வழக்கு.)

திட்டனம்—இருப்பைமரம். (மலையக.)

திட்டாந்தப்போலி — அஃது இருவகைப்படும், சாதன்மியம், வைதன்மியம். (அநுமான வி.)

திட்டாந்தம் – ஐவகையநுமானாவயவங்களிலொன்று, அது பிரதிஞ்ஞையும் ஏதுவுமிருக்கக்கண்டவிடம், அக்கினியும் புகையுமிருக்கக்கண்ட பாகசாலைபோல்வது. (வேதா. சூ. உ௬. உரை.)

திட்டாந்தரம்—திட்டாந்தம். (உ-ம்.) "திட்டாந்தரந்தெரியுஞ்சிங்கையே"(சிங்கைச்சிலே.)

திட்டாருத்தாபத்தி—அருத்தாபத்திப் பிரமாணத்திலொருவகை ; அது காட்சியோடுகலந்த அருத்தாபத்தி பகலிலுண்ணாதபுருடன் தேகம் பருத்திருப்பதைப்பார்த்து இரவிற் கரவிலொளித்துண்பானென வறிவதுபோல்வது. (வே. தா. சூ. உ௬. உரை.)

திட்டி—1. கண். (உ-ம்.) "சிவத்துரோகங் கள்செய்த பாவியின்றேன்திட்டிமுன்னேயுற வந்தபாவந்தீர" (சிவரக. சிவதன். அ.) 2. கண்ணூறு. (உ-ம்.) "பாருமேபாருவைக்குணங்களெல்லாம்பழிவந்துமுடியுமடாதிட்டிதோஷம்" (தேரையர்வைத்தியம்.) 3. தினை. (மலையக.)4. நுழைவாயில். 5. பார்வை. (உ-ம்.) "தீமையாங் கடினப்பாவர்திட்டியுண்டானபோது" (சோதிடக்கள. எ: க௪.) 6. மந்திட்டிவேர். (உ-ம்.) "ஆகி திட்டிகோலமிருவேர்" (தைல. தைலவ. ௬அ.)

திட்டித்தம்பம்—கண்கட்டு, அது கலைஞான மறுபத்துநான்கிலொன்று. (அபிதானசிந்.)

திட்டித்தல்—காண்டல்.

திட்டிவிடம்—கண்ணில் விடமுடையதோர் பாம்பு, இதன்விழிக்கு எதிர்ப்பட்டோர் இறப்பர். (உ-ம்.) "எட்டிருநாளிலிவ்விராகுலன்றன்னைத்-திட்டிவிடமுணும்" (மணிமே. பீடிகை. சக.)

திட்டிவிதை—ஒரு மருந்துவிதை.

திட்டினம்—இலுப்பை. (வைத்தியவக.)

திட்டு—1. சிறு திடர். 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. வசை, வைதல். (வழக்கு.)

திட்டுதல்—நிந்தித்தல், வைதல்.

திட்டெனல்—ஒலிக்குறிப்பு.

திட்டை—1. உரல். 2. திண்ணை. 3. மேடு. (உ-ம்.) "வரிமணலகன்றிட்டை" (பட்டினப் பாலை. சுo.) 4. வெள்ளறுகு. (மலையக.) (1, 2-பிங்கல. ரூசுசo.)

திட்டோபமானப்பிரமாணம்—உவமப்பிரமாணத்திலொருவகை; அது காட்சியோடுகலந்த உவமானப்பிரமாணம் பசுவைப்போல மரை அலைதாடியின்றியிருக்குமெனக்கேட்டவன் பசுவைக்கண்டு அது மரைபோல அலைதாடியின்றியிருத்தலால் பசுவெனவறிதல்போல்வது. (வேதா. சூ. உங. உரை.)

திட்பம்—1. காலநுட்பம். (பிங்கல. உஅo.) 2. திண்மை. (உ-ம்.) "திட்பநுட்பஞ்சிறந்தன சூத்திரம்" (நன். கஅ.)

திடத்துவம்—பெலத்தன்மை.

திடபரம்—நிச்சயம். [தெலுங்கு.]

திடம்—1. உறுதி. (உ-ம்.) "திடமுடனுன்றுய்பரையையருத்தியுடன்றுத்திநத்தி" (சிவரக. கணபதியுடன்கட. ரு.) 2. தைரியம். (வழக்.) 3. மெய். (உ-ம்.) "திடமதன்முடிவு இல்லைத்திகழ்வனமாகும்" (கோயிற்பு. பதஞ். எசு.) 4. வலி. (உ-ம்.) "திடமார்தருவேநிழலா" (கோயிற்பு. வியாக். கச.)

திடமை—வெள்ளெருக்கு. (மலையக.)

திடர்—1. மலை. (உ-ம்.) "திடருடைக்குங்குமச்சேறும்" (இராமா. நகரநீங். கஅங.) 2. மேடு. (பிங்கல. சஅக.)

திடர்ச்சுண்டி—வறட்சுண்டி. (மலையக.)

திடல்—திடர். (உ-ம்.) "இவ்வுலகந்-திடரேட்டமெனக்கிடக்கும்வகை" (இராமா. குலமுறை. [அ.)

திடன்—திடம். இது போலி.

திடாரி—தைரியவான்.

திடாரிக்கம்—திடம். (வழக்கு.)

திடீரிடுதல்—, திடீரெனல்— } 1. ஒலிக்குறிப்பு. 2. சீக்கிரக்குறிப்பு. (வழக்கு.)

திடுக்கம்—அச்சம். (வழக்கு.)

திடுக்காட்டம்—திடுக்கிடுதல்.

திடுக்கிடுதல்—பயத்தாலுடல் கம்பித்தல்.

திடுக்கீடு—திடுக்கம்.

திடுக்கு—திடுக்கம், அச்சம். (வழக்.)

திடுக்குத்திடுக்கெனல்—, திடுக்கெனல்— } அச்சக்குறிப்பு.

திடுதிடுத்தல்—, திடுதிடுப்பு— } ஈரடுக்கொலிக்குறிப்பு.

திடுதிடெனல்—1. ஈரடுக்கொலிக்குறிப்பு. (சூ. நிக. கo. சக.) 2. சீக்கிரக்குறிப்பு.

திடுமல்—திண்மை. (வழக்.)

திடுமலி—திண்மையுள்ளவன்.

திடுமன்—திண்மை. (வழக்.)

திடுமெனல்—ஒலிக்குறிப்பு.

திண்கல்—சுக்கான்கல்.

திண்டகம்—கிலுகிலுப்பை. (மலையக.)

திண்டாட்டம்—, திண்டாட்டு— } அலைக்கழிவு.

திண்டாடல்—, திண்டாடுதல்— } அலைக்கழிதல், வலியழிதல். (கந்தரந்தாதி. உ௫.)

திண்டி—1. அரசு. (மலையக.) 2. பச்சிலைக்கொடி. 3. படகம். (சூ. நிக. எ: ஙசு.) 4. பாலை (வைத்தியவக.)

திண்டிமம்—படகம். (பிங்கல. கரு: கக.)

திண்டு—வளைந்தமெத்தை. [தெலுங்கு.]

திண்ணக்கம்—மநவுரம். (வழக்கு.)

திண்ணகம்—1. செம்மறிக்கடா. (சூ. நிக. ங: கஎ.) 2. தட்டார் கருவியிலொன்று. (வழக்கு.) 3. தருவாட்டேறு. (பிங்கல. உசஅஉ.)

திண்ணம்—1. மெய்ம்மை. (உ-ம்.) "திண்ணமந்துணர்வொன்றுமிலாதவர்" (பாரத. நிரை. இ. உசஉ.) 2. வலி. (உ-ம்.) "திண்ணவெண் கண்ணன்மதமாத்திரியுஞ்சிலம்பகம்" (மணிற. தி. சுக.)

திண்ணன்—1. கண்ணப்பநாயனார். (உ-ம்.) "இவ்வண்ணந்திண்ணனார்கிரம்புநாளில்" (பெரியபு. கண்ணப்பநா-பு. சங.) 2. திண்ணியன்.

திண்ணியன்—வலியுடையோன். (சூ. நிக. உ: ருo.)

திண்ணெனல்—ஒலிக்குறிப்பு.

திண்ணை—1. ஒட்டுத்திண்ணை. 2. வேதிகை. (உ-ம்.) "சாளரம்" பார்.

திண்மை—எண்வகையூறிலொன்று. 2. கலங்காநிலைமை. (உ-ம்.) "பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னுந் - திண்மையுண்டாகப்பெறின்" (வள். ருச. உரை.) 3. மெய்ம்மை. "திண்மையலமறச்செய்யலாமோ" (இராமா. கிட்கி. வாலிவதை. எஎ.) 4. வலி. (உ-ம்.)

"திண்மைநிலைபோம்" (ந-றி. ரு.)

திணறல்—திணறுதல். (வழக்கு.)

திணறுதல்—மூச்சுத்தடுமாறல். (வழக்கு.)

திணி—1. திண்மை. (உ-ம்.) "அன்னான் திணியுடல்சிதைப்ப" (திருவிளை. அங்க. ௧௩.) 2. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "பொன்றிணிபொலன்கொடி" (இராமா. சூளாம. ௯.)

திணிகம்—போர்.

திணித்தல்—1. அடைத்தல். 2. செறித்தல்.

திணிதல்—1. திண்மையாயிருத்தல். 2. செறிதல். (புறநா.)

திணிப்பு—திணித்தல்.

திணிவு—திணிதல்.

திணுக்கம்—நெருக்கம்.

திணுங்கல்— / திணுங்குதல்— } நெருங்கல். (சூ. நிக. அ: ௧௪.)

திணை—1 இடம். (பிங்கல. எ௧௧.) 2. ஒழுக்கம். (உ-ம்.) "மேம்படவெறுத்தவவன்றொஃறிணை மூதூர்" (மலைபடு. ௪0௧.) 3. குலம். (சூ. நிக. ௧௧: ணகரவெ. ரு.) 4. குறிஞ்சிமுதலிய ஐந்திணை. (உ-ம்.) "நானிலத்தைந்திணைவளமும்" (காஞ்சிபு. திருநாட். ௧௩0.) 5. பூமி. (பிங்கல. ௪௪அ) 6. பொருள். கைக்கிளைத்திணை, பெருந்திணை எனவிரண்டுங்கூட்டி எழுவகைப்படும். (அகப். அகத்திணை. ௧.) அஃது உயர்திணைப்பொருள், அஃறிணைப்பொருள் என விருவகைப்படும்.

திணைப்பெயர்—குறிஞ்சிமுதலிய திணைகாரணமாகவரும் பெயர். (நன். பெயரி. ௧௯.)

திணைமயக்கம் — ஒருநிலத்துக்குரிய கருப்பொருள்வேற்றுநிலத்துவந்துபொருந்தல் (திருவிளை-நாட்டு. ௬௪. மூகம்.)

திணையைந்து — ஐவகைத்திணை; அவை: குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்பன. (அகப்பொரு. அகத்திணை. ௬ )

திணைவழு—ஒருதிணைச்சொல் ஏனைத்திணைச்சொல்லோடு முடிவது. (தொல். சொல். ௧௧. சேநா.)

தித்தகம்—1. கசப்பு. (வைத்தியமூ-அகரா.) 2. நிலவேம்பு. 3. மலைவேம்பு. (மலையக.)

தித்தகோசாதகி — பேய்ப்பீர்க்கு. (தைல. தைலவ. ருஉ.)

தித்தம்—1. கசப்பு. (தைல. தைலவ.) (பிங்கல. ௧௧௬௧.) 2. நிலவேம்பு. 3. மலைவேம்பு. (மலையக.)

தித்தன்—ஒரு சோழன், இவன் உறையூரிலிருந்தவன். (உ-ம்.) "மாவண்டித்தன்வெண்ணெல்வேலியுறந்தையென்ன" (புறநா. ௩௫௨.)

தித்தா—1. தாளக்குறிப்பு. 2. பீதரோகிணி. (மலையக.) 3. வட்டத்திப்பி. (வைத்தியமூ-அக.)

தித்தி — 1. ஒருநுகுழல். 2. சதி. (உ-ம்.) "நித்தித்திதித்தியெதி" (திருப்புக. ௬௧௬.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. தேமல். (பதிற்று.)

தித்திகம்—பேய்ப்புடல். (மலையக.)

தித்திசாகம்—மாவிலிங்கு. (மலையக.)

தித்தித்தல்— / தித்திப்பு— } இனித்தல். (உ-ம்.) "தேனுமுடன்கலந்ததிதுதித்திக்குமெனமொழிந்தார்" (பெரியபு. கண்ணப்ப. ௧௫0.)

தித்தீயம்—அரத்தை. (வைத்தியபரிபா.)

தித்திரம்—அரத்தை. (மலையக.)

தித்திரி — ஒரு முனி. (அபிதானசிங்.) 2. சிச்சிலிக்குருவி. (பிங்கல. ௨௯௬.)

தித்திரு— / தித்திருச்சி— } நாணல். (வைத்தியமூ-அக.)

தித்துதல்—திருத்தல்.

தித்துதி—ஏகாதசபதிவிரதைகளிலொருத்தி. (வி-ணி. ௨௬௯.)

தித்தேகி—பற்படகம். (வைத்தியபரிபா.)

தித்துப்பாடு—திருத்தம்.

திதகம்—மலைவேம்பு (வைத்தியபரிபா.)

திதம்—1. உறுதி. 2. நிலை. (உ-ம்.) "திதமதாகவேதிநந்தொறுந்திநந்தொறுமரடலாஞ் சேர்ந்தங்கண்" (சேதுபு. சேதுபல. ௪௯.)

திதம்பை—ஒரு நதி. (வி-ணி. ௨௯0)

திதலை—தேமல். (உ-ம்.) "கழனியூரன்மார் புறமாஇத்-திதலையல்குனின்மகள். (ஐங்குறு. ௨௧.)

திதளம்—மாமரம். (மலையக.)

திதாம்—பீதரோசணி. (வைத்தியபரிபா.)

திதி—1. காசிபப்பிரமாவின் மனைவிகளிலொருத்தி, அசுரர்தாய். (இராமா. ஆரணி: சடாயுகாண். ௨௧.) 2. காத்தல். (பிங்கல. ௬௯௪௨.) 3. சந்திரனுள்; அது-பஞ்சாங்கவுறுப்பினென்று. (உ-ம்.) "குன்றமெடுத்தவன்றிதிபன்னான்கினிடை" (பாரத சளப்பலி. ௨.) 4. திதிகர்த்தா, ஆகுபெயர். "இலயித்த-தத்திதியெனின்" (சி-போ. ௧: ௨. வெண்-சிற்.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. நிலைபெறுதல். (சூ. நிக. அ: ௪௯.) 7. பாக்கியம். (வழக்.)

திதிசர்— / திதிசுதர்— } அசுரர்.

திதித்தல்—காத்தல். (உ-ம்.) "சுத்தமாயையினின்றுஞ்சிருட்டித்துத் திதித்துச்சங்கரித்து" (சி. சி. ௧: ௯. ஞானப்.)

திதித்திரயம்—ஒருநாளில்வரும் மூன்றுதிதி. (உ-ம்.) "திதித்திரயஞ்சேர்ந்துவரில்வைதிகர்க்குஞ்சைவருக்குஞ்சிறந்ததாகும்" (சிவராத்திரி. சிவராத்திரிமான். ௨௯.)

திதித்துவயம்—ஒருநாளில்வருமிரண்டுதிதி.

**திதிமைந்தர்**—அசுரர். (சூ. நிக. க. சரு.)

**திதியம்**—அழிவின்மை.

**திதிக்கை**—1. திதிட்சை, இன்பதுன்பமுத லியவைகளை பிராரத்துவமென்று சமசித்தமாய் அடங்கியனுபவிப்பது. 2. யமன் மனைவி. (அபி தானசிந்.)

**திதிசன்**—ஐம்பத்தோருருத்திரரிலொருவன். (வி-ணி. உஎசு.)

**திந்திடம்**—புளியமரம். (மலையக.)

**திந்திடி**— } புளியமரம். (வைத்தியபரி
**திந்திடிகம்**— } பா.) (சூ. நிக. சு. கசு.)

**திந்திடிகை**—புளி.

**திந்நாகம்**—திக்கயம், விகாரச்சொல்.(உ-ம்.) "திந்நாகமாவிற்செறிகேட்டிசைக்காவல்செயும்" (இராமா. கடறுவு ருக.)

**திந்திரிச்சி**—நாணல். (வைத்தியபரிபா.)

**திந்திருணி**—புளியமரம். (பிங்கல. உஎ0௧.)

**திநப்பிரளயம்**—தேவமானத்தாலே பன்னீ ராயிரவருடப்பிரமாணமுள்ள ஒரு தேவயுகமா கிய கிருதயுகம்; திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகமென்னு நான்குயுகமும் ஆயிரம்விசை மாறிமாறி வந்துபோனபின்பு மூன்றுலோகங்க ளுக்குமுண்டாகுஞ் சங்காரம்; இது பிரமதின முடிவில் நிகழ்வதால் இப் பெயர்பெற்றது. (சி-வி. ஞாந. உச. உரை.)

**திநம்**—1. சாமம் எட்டுக்கொண்டது.(உ-ம்.) "தினமேவுமறுட்டாநகருமங்கள்புரிந்து" (சிவ ரக. பசாசுமோசந. சு.)

**திநகரன்**—சூரியன். (உ-ம்.) "திநகரன்று றுதயமுறுமமையமதிற்கூடினத்வைத யோகவே தையதாமென்று" (ஏகாதசி. காலநிர்ணய. ரு.)

**திநந்திநம்** — நாடோறும் - விகாரச்சொல், (உ-ம்.) "அன்றுதிதிநத்திநமருக்குமென்பர்" (அருணகிரி. நாட்டு. உ0.)

**திநந்திரயம்**—ஒருநாளில் மூன்று நட்சத்தி ரமுமல்லது மூன்றுதிதியுஞ் சம்பவிப்பது (வி தாந. குணகுண. க0௧.)

**திநபலம்**—ஐந்தாம் ஆறும் ஏழாம் எட்டாம் பதினொன்றும் பன்னிரண்டாமிராசிகள். நித நடக்கும் பலன்.

**திநம்**-எப்போதும். (உ-ம்.) "திநமுஞ்சிறக்கு மூகமும்" (அரிச். மயாந. உஅ.)

**திநமணி**—சூரியன். (உ-ம்.) "திநமணியுதிக் குங்காலையில்" (சிவராத்திரி. சிவராத்திரிமான். உஎ.)

**திநமிநத்து**—அத்தமவிட்டம் முதற்காலும், விசாகம் திருவாதிரை இரண்டாங்காலும், ஆயி லியமுத்திரட்டாதி மூன்றுங்காலும், பரணி மூலம் நாலாங்காலுமாம். (உ-ம்.) "அத்தமவிட் டம்...சத்தமறிவோர்திநமிருத்தென்றனர்தாழ் குழலே" (விதாந. குணகுண. )

**திப்பம்**—திப்பிலி. (வைத்தியபரிபா.)

**திப்பி** — 1. ஒருபொருளின் மறுக்கப்பட்ட பகுதி. (உ-ம்.) "திப்பியைவத்திரத்திலிட்டு" (தைல. தைலவ உரு. உரை.) 2. கிட்டம்;இது: பன்னிரண்டுதாநத்தில் பன்னிரண்டுவித மல மாம். அவை கண்ணிற்றேன்று பீழையாயும், செவியிற்றேன்று குறும்பியாயும், மூக்கினழுக் காயும், நாவினழுக்காயும், பல்லினழுக்காயும், மிடற்றிற்கோழையாயும்,மலமாயுஞ், சலமாயும், நகங்களினழுக்காயும், சரீரத்தில்வேர்வையா, யும், குதத்திலழுக்காயும், குய்யத்தழுக்காயும், பன்னிரண்டு வகைப்படும். (சிவதரு. சொநா மரண. அ-ம் உரையும்.) 3. கோது. (வழக்கு.)

**திப்பியம்**—1. அசமதாகம். (மலையக.) 2. திவ்வியம்; தெய்வீகம். (உ-ம்.) "சிறந்தவாடக புனிதபங்கயதிப்பியப்புனலாடுவித்து" (திருவி ளை. விடைபி. கரு.)

**திப்பியன்**— அதிசயமுடையோன்-தெய்வீக முடையோன். (ஞானமி.)

**திப்பிலி**—1. அலைவு. 2. ஒரு சரக்கு; அது கண்டத்திப்பிலி யானைத்திப்பிலிமுதற் பலவ கைப்படும். (வைத்தியமூ. அக.)

**திப்பிலிக்கட்டை**—திப்பிலிமூலம். (வைத் தியமூ. அக.)

**திப்பிலிக்கோச்சிக்காய்**-சிறுமிளகுக்காய். (மலையக.)

**திப்பிலிமூலம்**— } திப்பிலிக்கொட்டை, திப்
**திப்பிலியரிசி**— } பிலிவகையிலொன்று.
(வைத்தியமூ. அக.)

**திப்பிலியாட்டம்**— }
**திப்பிலியாட்டல்**— } அலைவுபண்ணல். (வழக்.)
**திப்பிலியாட்டுதல்**- }

**திப்புத்தோளார்** — கடைச்சங்கப் புலவரு ளொருவர். (அபிதானசிந்.)

**திபதிச்சம்**— }
**திபதிசம்**— } வாலுளுவை. (மலையக.)

**திம்மவாது** — துரியோதனன்றம்பி. (அபி தாந சிந்தா.)

**திமி** — 1. காசிபர்தேவி. (அபிதாநசி.) 2. பெருமீன். (சூ. நிக. ரு: எக.)

**திமிங்கிலகிலம்** -- திமிங்கிலத்தை விழுங்கு மீன். (சூ. நிக. ரு: எக.)

**திமிங்கிலம்**—யானையைவிழுங்குமீன். (சூ. நிக. ரு: எக.)

**திமிசம்**—வேங்கை. (வைத்தியபரிபா.)

**திமிசு**—வேங்கைமரம். (சூ. நிக. சு: உரு.)

**திமிதகுமுதம்**—1. இரைச்சல். 2. மகிழ்ச்சி.

(1, 2-வழக்.)

**திமிதம்**—1. துளி. (வழக்கு.) 2. பேரொலி. (உ-ம்.) "திமிதிமிட்டுத்திரியுந்திரைக்கடல்" (இராமா. சேதுபந்தன. சஉ.)

**திமிதிமி**—1. தாளக்குறிப்பு.

**திமிதிமியெனல்**—1. ஈரடிக்கொலிக்குறிப்பு. (வழக்.) 2. தாளக்குறிப்பு. 3. விரைவுக்குறிப்பு. (வழக்கு.)

**திமிர்**—1. சந்நி. 2. சோம்பு. (வழக்கு.) (வைத்தியபரிபா.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பரிசமின்மை. 5. விறைப்பு. (வழக்.)

**திமிர்ச்சி**—திமிர்.

**திமிர்த்தல்**—திமிர்கொள்ளுதல்.

**திமிர்தல்**—1. கம்பித்தல். (உ-ம்.) "நிலைதளர்ந்துடலந்திமிர்ந்துவேர்வரும்பி" (திருவிளை. நாக. கக.) 2. பூசுதல், அப்புதல். (உ-ம்.) "குங்குமச்சேதகந்திமிர" (இராமா. வரைக்கா. ருசு.) 3. பேரொலி. (சூ. நிக. கo: ருக.)

**திமிர்ப்பு**—திமிர்ச்சி.

**திமிர்வாதம்**—ஒருவகை ரோகம். (உ-ம்.) "திமிர்வாதஞ்சந்நிகசிலேஷ்மம்" (தைல. தைலவ. கசக.)

**திமிர்வாயு**—திமிர்வாதம். (உ-ம்.) "பிசநிய சருமத்திமிர்வாய்வும்" (தைல. தைலவ. க.)

**திமிர்வு**—திமிர்தல்.

**திமிரகாசம்**—கண்ணோயுளொன்று.

**திமிரம்**—1. இருள். (உ-ம்.) "செவ்வந்தி நீலத்தினீடுமுற்றுததிமிரமுமே" (கந்தரந். சு.) 2. விறைப்பு. (வழக்கு.)

**திமிரி**—1. திமிரன். 2. திமிர்ந்து. (உ-ம்.) "ஆய்முதுமகளிர்தம்மாலகிறபத்திமிரியாட்டி" (சிந்தா. விமலை. ச.)

**திமில்**—1. எருத்தினெரிப்பு. (உ-ம்.) "சேட்டிளந்திமிலுடைச்செங்கணேற்றொடும்" (கந்தபு. திருநாட்டு. உ.) 2. தோணி. (சூ. நிக. எ: ருஉ.) 3. மீன்படகு. (உ-ம்.) "விலங்குவலைப் பரதவர்மீன்றிமில்விளக்கமும்" (சிலப். கடலாடு. கசஉ.) 4. வேங்கைமரம். (பிங்கல-உசுசுரு.)

**திமிலதுமிலம்**—திமிதகுமுதம்.

**திமிலம்**—1. யானைமீன். (பிங்கல. உகூஉ0.) 2. பேரொலி. (சூ. நிக. கo: ருக.)

**திமிலர்**—நெய்தநிலமாக்கள். (உ-ம்.) "பாய்திமிலர்வலையோடு மீன்வாரிப்பயின்றெங்கும்" (தேவார. திருவேட்டகுடி. உ. சம்பந்த.)

**திமிலி**—வேங்கை. (வைத்தியமூ. அக.)

**திமிலிடுதல்**—ஒலித்தல். (வழக்.)

**திமிலை**—சல்லரி. (உ-ம்.) "குடமுழாத்திமிலைமொந்தைகுணிலுடைநந்திதட்டை" (சேதுபு. இராமநாத. சுரு.) (பிங்கல.)

**திமிறல்**—1. சிந்துதல். 2. பலாத்காரமாய் விலகல். 3. வளர்தல். (2, 3-வழக்.)

**தியக்கம்**—1. அசைவு. 2. சோர்தல். 3. மயக்கம். (1, 2, 3-வழக்கு.)

**தியக்கி**—சல்லிக்கொடி. (வைத்தியபரிபா.)

**தியக்கு**—1. தியக்கம். 2. தெரிநிலைவினைப் பகுதி.

**தியங்குதல்**—1. சோருதல். (உ-ம்.) "சென்று நின்றுதியங்கியே" (சிவரக. தேவியுடன். கக.) 2. மயங்கல்.

**தியசம்**—மரமஞ்சள். (மலையக.)

**தியசேயி**—மரமஞ்சள். (வைத்தியமூ. அக.)

**தியந்தி**—திராய். (வைத்தியமூ-அக)

**தியா**—எட்டாவது வசு. (அபிதானசி.)

**தியாகம்**—1. கைவிடல். பிராணத்தியாகம் பண்ணுவேன். (வழக்.) 2. கொடை. (உ-ம்.) "வித்தந்தியாகமுதவாவுலோபர்க்கு" (மறைசை. ருo.)

**தியாகர்**—தியாகஞ்செய்பவர்.

**தியாகராசர்** — திருவாரூரிலே சிவலிங்க மூர்த்தங்கொண் டெழுந்தருளியிருக்குஞ் சிவனார். (உ-ம்.) "தியாகராசரேவந்திருந்தனரெனில்" (திருவானை. திருநாட். சு.)

**தியாகி**—கொடையுளோன் (சூ. நிக. உ: சஅ.)

**தியாச்சியம்**—ஒவ்வொரு நட்சத்திரத்திலுஞ் சுபகாரியங்களுக்குவிலக்கப்பட்டநேரம்; அஃது அச்சுவினிக்கு ஐம்பதுநாழிகையின் பின்னும் பரணி பூராடம் உத்திரட்டாதிகளுக்கு இருபத்துநாலு நாழிகையின்பின்னும், கார்த்திகை இரேவதி புனர்பூசம் மகங்களுக்கு முப்பதுநாழிகையின் பின்னும், உரோகிணிக்கு நாற்பது நாழிகையின் பின்னும், மிருகசீரிடம் சுவாதி விசாகம் கேட்டைகளுக்கு பதினான்கு நாழிகையின் பின்னும், திருவாதிரை அத்தங்களுக்கு இருபத்தொரு நாழிகையின்பின்னும், பூசம் பூரம் சித்திரை உத்திராடங்களுக்கு இருபதுநாழிகையின் பின்னும், ஆயிலியத்திற்கு முப்பத்திரண்டு நாழிகையின்பின்னும், உத்திரம் சதயங்களுக்குப் பதினெட்டுநாழிகையின் பின்னும் அநுடம் அவிட்டம் திருவோணங்களுக்குபத்து நாழிகையின் பின்னும், மூலத்திற்கு இருபது நாழிகையின் பின்னும், ஐம்பத்தாறு நாழிகையின்பின்னும், பூரட்டாதிக்கு பதினாறுநாழிகையின்பின்னும்வரும் நன்னான்கு நாழிகைகொண்ட நேரம். (தாரண. பஞ்சாங்கம்.) [மூன்றே முக்கானாழிகையென்பாருமுளர்.] 2 விலக்குகை.

**தியாதிரு**—தியாகிக்கிறவன். (சி. சி. அ: கூo. ஞாநப்.)

தியானசமாதி—யோகநிலையினொன்று (சி.சி. அ: ௨௯. ஞானப்.)

தியாநநாநம் — அமுதசலமாகத் தியானித்து முழுகுதல். (த-பி. ம்.)

தியாநம்—1. அட்டாங்கயோகத்தொன்று; அஃது: ஐம்புலனடக்கிச் சிவயோகஞ்செய்தல். இது ஐவகைப்படுமென்பர். (மணிமே.) (சூ.நிக. ௧௨:அ௨) 2. மாநதசெபத்திறோர்வகை. (உ-ம்.) "புரைமாநதமிருவகையாம்போற்றுமாநாந்தியாநமெனா" (சூத. ஞாநயோக. ௧௪: ௧௫.)

தியாநயக்யம்—தியாநயாகம்.

தியாநயாகம்— இருதயாதிஸ்தாநங்களிலே சதாசிவாதிமூர்த்திகளைப்பலகாலுந்தியாநிப்பது. (சி. சி. அ: ௨௯. சிவாக்.)

தியாநயோகம்—சித்தத்தாலே நோக்குதல். (த. நி. போ. ௯௭௦.)

தியானவர்ன்—யோகி.

தியாநவிந்து-யசுர்வேதவுபநிடதங்களுளொன்று. (௧௩. நவ. ௧௮.)

தியாநி-1. தியாநவான். 2. தெரிநிலைவினைப் பகுதி.

தியாநித்தல்—சிந்தித்தல்.

தியாநிப்பு—தியாநித்தல்.

தியாசேயம்-மரமஞ்சள். (வைத்தியபரிபா.)

தியாமம்—1. இருவேலி. 2. முயற்புல். 3. வேலிப்பருத்தி. (வைத்தியபரிபா.) (1, 2-மலையக.)

தியூதம் — கவறுமுதலியவற்றாற் சூதாடல். (மிருச. ௫.)

தியேசேயம்—மரமஞ்சள். (வைத்தியபரிபா.)

திர்சியம்—பார்வை.

திரக்கத்தாரு—நிலப்பனை. (மலையக.)

திரக்கம்—கொன்றை. (மலையக.)

திரக்கரித்தல்—நிந்தித்தல். (உ-ம்.) "சிவாத்துவைதிமதந்தரிசிப்பித்துத் திரக்கரிக்கின்றார்" (சி. சி. ௫: ௯. ஞாநப்.)

திரக்காரம்—நிந்தை.

திரக்கிரணி--பிரண்டை. (மலையக.)

திரகம்—கொன்றை. (மலையக.)

திரகமூலகம்—
திரகமூலம்— } முடக்கற்றான். (மலையக.)

திரகரணம்—சகுநம் சதுஷ்பாதம் கிம்ஸ்துக்கிநம் நாகவம் என்னு நாலுகரணங்கள். (விதாந. பஞ்சாங்க. ௨௬. உரை.)

திரகலாமம்—செம்புளிச்சை. (மலையக.)

திரங்க—புலர. (ஐங்குறு.)

திரங்கம்—மிளகு. (மலையக.)

திரங்கல்—1. சருளல். (மணிமே.) 2. திரைதல். (உ-ம்.) "தானிழிந்துதிரங்கிமுலைசரிந்து வீழ" (பெரியபு. கண்ணப்ப. ௭௮.) 3. மிளகு. (மலையக.)

திரங்கலம்—மிளகு. (மலையக.)

திரங்கி—உலர்ந்து. (புறநா.)

திரங்கலாமம்—செம்புளிச்சை. (மலையக.)

திரங்குதல்—1. உலர்தல். (உ-ம்.) "திரங்குமரநாரிற்பொலியச்சூடி" (மலைபடு. சங்க.) 2. திரைதல். (உ-ம்.) "திரங்கிமுலை" (பெரியபு. கண்ணப்ப. ௭௮.)

திரட்கோரை — ஒரு கோரை. (பிங்கல. ௨௧௧௪.)

திரட்சி—1. உண்டை. (சூ. நிக. அ: ௯௰) 2. திரள், கூட்டம். 3. திரண்டதன்மை.

திரட்டல்—கூட்டல். (உ-ம்.) "திருமூலப்பாலிலேனோன்றுந்திரட்டி" (திருவிளை-பாண்டியன் சுரந்தீர்த். ௨௦.)

திரட்டு—1. இருதவாதல். (வழக்.) 2. சேர்த்தொன்றாக்கியிருப்பது. (உ - ம்.) "பன்னூற்றிரட்டு" 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. திரளை.

திரட்டுதல்—1. உருட்டுதல். 2. சேர்ப்பு.

திரட்டோசை—அலறல். (பிங்கல. ௧௪௪௯.)

திரடம்—வெண்ணொச்சிமரம். (வைத்தியமூ. அக.)

திரண்டகல்—குண்டுக்கல். (பிங்கல. ௫௦௭.)

திரண்டகொடிச்சி—புற்றாம்பழம். (மலையக.)

திரண்டசி—எவட்சாரம். (வைத்தியபரிபா.)

திரண்டோர்—சபை. (சூ. நிக. ௨: ௧௧.)

திரணச்சி—எவட்சாரம்.

திரணபதி —வாழை. (மலையக.)

திரணபிந்து — சமதக்கினிமுனிவர் குமாரராகியமுனிவருக்கொருபெயர். (அபிதாநசிந்.)

திரணம்—1. அற்பம், உன்னைத்திரணமாக நினைப்பேன். (வழக்.) 2. துரும்பு. (உ - ம்.) "வன்னியிற்றிரணமென்னமாய்ந்திடும்" (அருணகிரிபு. அருந்தவ. ௧௯.) 3. புல். (வி-ணி.) 4. வலி. (ஞானமி.)

திரணராசன் —நிலப்பனை. (மலையக.)

திரணபதி—வாழை. (வைத்தியப்ரிபா.)

திரணி—ஒரு செடி. (வைத்தியமூ. அக.)

திரளை—திரட்சி. (வழக்.)

திரந்திகம்-திப்பிலிமூலம். (வைத்தியமூ. அக)

திராட்சத்திரங்கள்—உரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி என்னு நட்சத்திரங்கள். (விதாந. பஞ்சா. ௨௦. உரை.)

திராப்பட—நன்மையுண்டாக. (ஞானமிர்.)

திராப்படுதல்—உறுதிப்படுதல்.

திராப்புசம்—கத்தரி. (வைத்தியமூ-அக.)

திராபுட்பம்—
திராபுலம்— } தத்தாாகம். (மலையக.)

**திரம்**—1. உரம். 2. உறுதி. 3. தகரைச்செடி (மலையக.)

**திரமம்**—சாதிலிங்கம். (வைத்தியமூ.அக.)

**திரமாதம்** — ஆவணி, கார்த்திகை, மாசி, வைகாசியென்னுமாதங்கள்.

**திரமிடம்**—தமிழிற்கு ஓர்பெயர்.

**திரமிடவாந்திரதிலாவாபநியாயம்**—தமிழனுந் தெலுங்கனுங்கூடி எள்ளுவிதைத்தலாற் பெற நியாயம். (சி. சி. உ: சுக. சிவாக்.)

**திரமிளன்**—துவட்டா சத்திரியப்பெண்ணைக் கூடப்பிறந்தபிள்ளை. (உ-ம்.) துவட்டாமன்ன வர்மகளைப்புணரவந்தோன்றிரமிளனால்" (சூத. சிவமான் கஉ: ருரு)

**திரயசிரம்**— துவாதசப்பிரசாதகலைகளி லாருவதாகியநிரோதினி; அது முக்கோணவடிவம். (சி-வி. கி-ரி. கூ.)

**திரயம்**—மூன்று. (உ-ம்.) இரத்தினத்திரயம்.

**திரயமுகம்**—திரயமுகநட்சத்திரம்; அவை: அசுவினி, மிருகசீரிடம், புனர்பூசம், அத்தம், சித்திரை, சோதி, அநுடம், கேட்டை, ரேவதி என்பன. (உ-ம்.) "யாத்திரைகோடல்கொடை திரயமுகத்தாமென்பரே" (விதாக. பஞ்சாங்க. ககூ.)

**திரயாங்கம்**—(சோதிடம்) மூவங்கம்; அவை: திதிவார நட்சத்திரங்கள்.

**திரயாவரணபூசை**—வித்தியேசுரர்களையும், கணேசுரர்களையுநீக்கிப் பஞ்சப்பிரமசடங்க தேவரையும், உலகபாலர் பதின்மரையும், அவர்களாயுதங்களையும் பூசிப்பது. (சைவச. பொது. ருஉக. உரை.)

**திரயோதசி**—பதின்மூன்முந்திதி. (உ-ம்.) "அரும்பிரதோடத்திநம்வந்தடுத்ததங்நா-டிங்கடீரயோதசியாத்திரையும்வந்து" (சிவரக. அபுத்தி. ௭ரு.)

**திராசி**—இடபம், கும்பம், சிங்கம், விருச்சிகம் என்னுமிராசிகள். (உ-ம் வருஷா-பக்க.சுசு.)

**திரல்**—காட்டாமணக்கு. (மலையக.)

**திரலடி**—ஏலம். (வைத்தியமூ-அக.)

**திரலிங்கம்**—பரார்த்தலிங்கம். (உ-ம்.) சைவ. உ௦உ.)

**திரவகத்துவம்**—ஈரத்தன்மை.

**திரவணன்**—வருணன்குமரன். (அபிதான சிந்தா.)

**திரவத்துவம்**-முதல்ஒழுகுதலின் அசமவாயிகாரணம்; அது நைமித்திகத்திரவத்துவம், இயற்கைத்திரவத்துவம் என இருவகைப்படும். (தர்க்க-பா. ருரு.)

**திரவர்தி**—காட்டாமணக்கு. (மலையக.)

**திரவபோதம்**—பூசனி. (மலையக.)

**திரவம்**—1. சாரம், திராவகம். (உ-ம்.) "விரிதிரவநீர்படங்கு" (தைலவர்க்க.) 2. நீர்முதலிய வற்றினெகிழ்ச்சி.

**திரவாதி**—காட்டாமணக்கு.

**திரவிடம்**—திராவிடம். (தமிழ்.) இது ஆரியர் தமிழற்கு இட்டபெயர். (அபிதானசிந்.) (தமிழ்) இது ஐவகைப்படும். தமிழ், ஆந்திரம், கன்னடம், மாராட்டிரம், கூர்ச்சரம் என்பன. (அபிதானசிந்.)

**திரவியசுத்தி**—பஞ்சசுத்தியிலொன்று; அது: சுவர்ணமுதலியவற்றானியற்றிய அருக்கியமுதலிய பாத்திரங்களை அத்திரமந்திரத்தாற் கழுவி விந்தமிர்தமாகிய நீரை வௌஷடந்த இருதய மந்திரித்தானிறைத்துப்பூசாதிரவியங்களிட்டுப் பஞ்சபபிரமமுதலிய மந்திரங்களான் முறைப்படிபூசித்துச் சங்கிதாமந்திரத்தா லபிமந்திரத்துத் திக்குபந்தநமும் அவகுண்டநமுஞ்செய்து தேநுமுத்திரைகொடுத்து அருக்கியசலத்தாலே தன்னையும் பூசோபகரணங்களையும் புரோட்சித்துக்கவசத்தால் அப்பியுக்கணமும், இருதயத்தால் அபிமந்திரித்தலும், கவசத்தால் அவகுண்டனமும், தேநுமுத்திரையால் அமிர்தீகரணமுஞ்செய்து புட்பத்தால் அருக்கியநீரெடுத்துத் திருமஞ்சனக்குடத்தின் கணிட்டுத் தேநுமுத்திரைகொடுத்தல். (திருவாத. திருப்பெரு. எ௦. உரை.)

**திரவியதாநம்** — உதயத்துக்கு இரண்டாமிடம்.

**திரவியம்**—1. ஒருவகைக் கலப்புச்சரக்குகள். (வழக்.) 2. பொருள். அது ஒன்பதுவகை. தருக்கசங். பக்க. ௬.) 3. பொன். (உ-ம்.) "கட்டித்திரவியமெப்படிப் பாடகக்கால்வைப்பளே" (தனிப்பா. உ-ம் பாக. ருஅஉ.)

**திரவியமைந்து**—ஐந்துவகைத்திரவியங்கள். பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன. இவையன்றியும்; மலை, கடல், காடு, நாடு, நகர் இவ்வைந்தில் ஒவ்வொன்றிலுமுண்டாகு மைவகைத் திரவியங்களுமாம். (சூ. நிக. கஉ: ௪சு, ௪எ, ௪அ.)

**திரவீரன்**—முதலாம்வசுவின்மகன். (வி-ணி. உருசு.)

**திரள்**—1. இயக்கநான்கினுளொன்று. (சிலப்.) 2. உண்டை. (பிங்கல. உஉருசு.) 3. கூட்டம். (உ-ம்.) "அடங்குபிடர்க்குளமாந்தவுளைத்திரள்" (சிவரக. தேவிமய. கரு.) 4. திரட்சி, தொழிற்பெயர். 5. படை. (திவாகர. உ: தொகுதி.) 6. மிகமுடுக்கியநடையையுடையபாடல். (சிலப்)

**திரள்கோரை**—பஞ்சாய்க்கோரை. (சூ.நிக. ௪: சுஉ.)

**திரள்பு**—திரண்டு. (உ-ம்.) "அவனுமிசையு கீர்த்திரள்பீண்டி" (மதுரை. உசுo.)

**திரளல்**— திரளுதல். (உ-ம்.) சங்கிதனில் வேறுதிரண்டு. (சேதுபு. வேதாள. உஅ.)

**திரளாசம்**— நிலப்பனை. (வைத்தியபரிபா.)

**திரளாரம்**—நிலப்பனை. (வைத்தியபரி.)

**திரளி**— ஒருவகை மீன். (வழக்.)

**திரளுதல்**—1. இருதுவாதல்.(வழக்.) உருட்சியாதல். கூடுதல்.

**திரளை**—1. உருண்டை. 2. கட்டி. (உ-ம்.) "தகைமிகுமூரற்றிரளைசேர்சேர" (சோணசைல. சுகு )

**திரா**—1. ஐம்பத்தொரு ருத்திரசத்திகளிலொருதிதி. (வி-ணி. உஎஎ.) 2. திராமரம்; அது பவளமல்லிகை. (மலையக.)

**திராகியாயநம்**—திராகியாய நாராற்செய்யப்பட்ட சூத்திரம்; அது பிராமணருளொருவகையாரார் கொள்ளப்படுவது.

**திராசநம்** — ஆதாரசத்திமுதற்குடிலாசத்தியீறான ஆதநம். (சைவச.பொது.ருஉச.உரை.) 2. நிலைப்பட்ட ஆசநம். (உ-ம்.) "மலமுழைஞ்சினிலேபுகுந்துந்திராசநத்திலேயிருந்தும் அப்பியாசவசத்தினுலே பசிதண்ணீர்த் தாகத்தையடக்கியும்" (சி. சி. கo: ரு. சிவாக்.)

**திராட்சம்**—கொடிமுந்திரிகை. (மலையக.)

**திராட்சாபாகம்**—செய்யுட்பாகம் நான்கனுளொன்று. (கம்பரங். கூகூ. உரை.)

**திராட்சை**—திராட்சைப்பழம். (உ-ம்.)"கர்ப்பூரந்திராட்சை. (தைல. தைலவ. கூகூ.)

**திராணி**—
**திராணிக்கம்**— } பலம். (வழக்.)
**திராணிக்கை**—

**திராதநம்**—திராசநம். (உ-ம்.) "திராசநம் பார்"

**திராபகந்தி** — கம்பந்திராய். (வைத்தியமூ. அகரா.)

**திராபை**—புத்தியற்றவன்.

**திராமரம்**—பவளமல்லிகை.

**திராம்**—ஒரு கசப்பானபூண்டு; அது கம்பந்திராய் முதற் பலவகைப்படும். (வைத்தியமூ- அக.) ஒரு கீரையென்பர் சிந்தாமணியில்.

**திராயந்தி**—கம்பந்திராய். (மலையக.)

**திராலம்**—ஒருவகை வெள்ளரிச்செடி.(வைத்தியஅக.)

**திராவககீறு**-வெடியுப்புச்சுண்ணம். (வைத்தியர் வழக்கு.)

**திராவகம்**—செய்நீர். (வைத்தியர்வழக்கு.)

**திராவகன்**—1. அறிஞன். 2. கள்வன்.

**திராவடி**— ஏலம். (மலையக.)

**திராவணம்**—ஓடுதல். (கூர்மபு.அட்டமூர்த். கக. உரை.)

**திராவிடம்** — தமிழிற்கு வடமொழியிற்கூறும்பெயர். [திராவிடம்] - ஓட்டுவதென்று பொருள்கூறுவர். (உ-ம்.) "எவ்வினையுமோட்டுதலாற்றிராவிடமென்றியல்பாடை" (காஞ்சிப்பு. தழுவக். உசுகூ.)

**திராவிடமகாபாடியம்** — சிவஞானபோதத்திற்குச் சிவஞானசுவாமிகளாற் தமிழிற்செய்யப்பட்ட விருத்தியுரை.

**திரி**—திரிதல். (உ-ம்.) "சிறுகண்யானை திரிதருநெறி" (ஐங்குறு. கூ௫௫.) 2. முதனிலைத்தொழிற்பெயர். 3. பெண். ஸ்திரியென்பது திரியெனவந்தது. 4. மூன்று. (உ-ம்.) "திரிகுணம்" 5. விளக்குத்திரி. (உ-ம்.) திரியழற்காணிற்றொழுவர்" (நான்மணி. சுகூ.) 6. வெள்ளைப்பூண்டு. (உ-ம்.) "சீனநற்றிரிரத்தமுரோசநஞ்சிகரம்" (தைல. தைலவ. கூக.)

**திரிகடம்** — யானைநெருஞ்சில். (வைத்திய அக.)

**திரிகடு**—சுக்கு திப்பிலி மிளகு எனப்படும் மூன்று சரக்குகள். (உ-ம்.) "அம்பினடி"பார்.

**திரிகடுகம்**—1. ஒரு நூல். (உ-ம்.) "திரிகடுகமென்னுமொருநூல்"2. சுக்கு மிளகு திப்பிலி. (உ-ம்.)"இம்மூன்றுந்-திரிகடுகம்போலுமருந்து" (திரிகடு. க.)

**திரிகடுகு**—திரிகடுகம்.

**திரிகண்டகம்**—நெருஞ்சில். (மலையக.)

**திரிகண்டகி**—நெருஞ்சில். (தைலவ.)

**திரிகண்டகை** —நெரிஞ்சில். (உ-ம்.) "மலைதாங்கிதிரிகண்டகைவெண்சாறடை" (தைல. தைலவ. கரு )

**திரிகண்டம்**—நெரிஞ்சில். (மலையக.)

**திரிகத்தம்**-திரிகர்த்தம், ஒருதேயம். (உ-ம்.) "திக்கோதையெழுவிம்மமுரசங்களரசானதிரிகத்தர்கோன்" (பாரத. நிரைமீட்சி. அ.) இத்தேயம் ஆரியாவர்த்தத்துக்கு வாயுதிக்கிலுள்ள தேசமென்பர். (அபிதானசிந்தாமணியில்.)

**திரிகத்தானம்**— முதுகின்கீழ் நடுத்தண்டெலும்பின்மூட்டும் இரண்டு தொடைகளினெலும்பின்மூட்டுஞ்சேர்ந்திருக்குமிடம்.(சீவரட்.ரு.)

**திரிகந்தம்**—வாசனைத்திரவியமெனப்பட்ட சந்தநம், செஞ்சந்தநம், அகில் என்பன. [கிராம்பு, நாவற்பூ, சண்பகப்பூ என்னுமிவையுமாம்] (வைத்தியபரிபா.)

**திரிகபம்**—காசம், சுவாசம், சயம் என்னு மூவித கயரோகங்கள். "ஒவ்வொருகஃசாடுண்ணித்-திரிகபங்கடுப்புமேகஞ்சிறியரிர்க்குண்டியீதே" (தைல. தைலவ. உo.)

**திரிகரணம்**—மநம் வாக்கு காயம் (உ-ம்.) "கருமந்திரிகரணம்வேறு" (மறைசை. ௬௬)

**திரிகாயன்** — புத்தன். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**திரிகாலகன்**—பிரகவணர் இடத்தில் காமிகங் கேட்டவொருவன் (த. நி. போ. கரு௮.)

**திரிகாலம்**—முச்சாலம்; அவை உச்சி, காலே, மாலே; அன்றியும் இறப்பு எதிர்வு நிகழ்வுமாம்.

**திரிகாலன்**—கலைதத்துவத்திருக்குமோருருத்திரன். (வி-ணி. உஎ௫.) [மாயாதத்துவத்திருக்குமோருருத்திரனுமாம்]

**திரிகாலோசிதம்**—குசைப்புல். (மலையக.)

**திரிகுணம்**—முக்குணம். (சூ. நிக. சு: அ.)

**திரிகூடம்**—ஒருமலை. (உ-ம்.) "இலகுதிரிகூடாதிதேயங்கள்" (திருவிளை. மாணிக். எ௮.)

**திரிகை**—1. எந்திரம். 2. குலாலசக்கிரம். (உ-ம்.) "ஆடுங்கறங்குந்திரிகையும்போல" (தாயுமா. பாயப்புலி. ருசு.) 3. திரிதல். 4. நந்திரிகை மரம். (வைத்தியமூ-அக.)

**திரிகோணப்பாலை** — நால்வகைப் பாலையுளொன்று. (சிலப். ஆய்ச்சியர். உரை)

**திரிகோணம்**—1. (சோதிடம்.) உதயமும் ஐந்தும் ஒன்பதும். 2. முக்கோணம், சிவசத்தியினுடைய இரேகைகள். (உ-ம்.) ஆனந்தலகிரி. "சிவகோணமென்னும்" முதற்குறிப்புடைய கவியிற்காண்க.

**திரிகோணமலை**—திருக்கோணமலை. இஃது ஈழநாட்டிலுள்ளது. (உ-ம்.) "கித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே" (திருஞாநசம். திருக்கோண. பதி. ௧.)

**திரிகோணவுப்பு**—சத்தியுப்பு. (வைத்தியபரிபா.)

**திரிச்சியம்**—திரிசியம்.

**திரிசங்கு**—அரிச்சந்திரன் றந்தை. (உ-ம்.) "மீதுபோந்திரிசங்கைவிண்ணிடையின்மீனெடும்-போதலாயுறவீசலால்" (கந்தபு ஆற்று.உஉ.)

**திரிசங்குசொர்க்கம்** — திரிசங்குவென்னுமரசன்பொருட்டு விசுவாமித்திரரால் உண்டாக்கப்பட்டதோர் தானம்; அஃது அனுடமுதலைந்து நட்சத்திரங்கள் விளங்குவது. (இராமா. மிதிலைக்காட். ககக.)

**திரிசடை**—விபீடணன் மகள். (உ-ம்.) ஆயிமிடைத்திரிசடையென்னுமன்பினாள்" (இராமா. காட்சிப். ௬௧.)

**திரிசத்திகள்** — மூன்றுசத்திகள்; அவை: ஆரணி, செநநி, ரோதயித்திரியென்பன. [இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞாநசத்தியுமாம்.]

**திரிசயம்**—காட்சிப்பொருள். (உ-ம்.) "சிவன் திரிசயமன்றால்" (வைராக்கியசத. உ௬.)

**திரிசரேணு**—சிறுபுழைவழிவருஞ் சூரியகிரணத்திலே நுண்ணிதாகக் காணப்படுகிறதுகள்; இது பரமாணு எட்டுக்கொண்டது. (மிரு. சரு௮.)

**திரிசதன்**—நாலாமநுவந்தரத்திந்திரன். (அபிதாநசி.)

**திரிசமஞ்சரி**—துளசி. (வைத்தியபரிபா.)

**திரிசாகபத்திரம்**—வில்வமரம். (வைத்தியபரிபா.)

**திரிசாதம்** — இலவங்கப்பட்டை, இலவங்கபத்திரி, ஏலம் எனப்படு மூன்று சரக்குகள். (தைல. தைலவ. ௬0.)

**திரிசாரம்**—எவட்சாரம், சத்திசாரம், நவச்சாரம் (வைத்தியபரிபா.)

**திரிசிகம்**—வில்வமரம். (வைத்தியபரிபா.)

**திரிசிகி**—யசுர்வேதவுபநிடதமைம்பத்தொன்றனுளொன்று. (கந். நவ. க௮.)

**திரிசிகை**—சூலம். (உ-ம்.) "திணமார்கதைமழுவோதிரிசிகையுங்கரமுடையார்" (அருணகிரிபு. அருந்தவ. ௬.)

**திரிசியம்** — 1. கண்ணுக்குப்புலப்படல். (வி-ணி.) 2. காணப்படும் மாயாகாரியமாகிய சடம். (உ-ம்.) "திருந்தியவேதாந்தநூலியம்புறுவதிருக்குத்திரிசியமென்றிருபொருள்" (வேதா. சூ. உ௫.) 3. செவ்வள்ளி. (வைத்தியபரிபா.)

**திரிசிரபுரம்**—திரிசிராப்பள்ளி.

**திரிசிரன்** — 1. அக்கினி. 2. இராவணன் மகன். அதிகாயன் யுத்தத்தில் அநுமனாற்கொல்லப்பட்டவன். (அபிதானசிந்தா.)

**திரிசிரா**-ஓரிராக்கதன். (உ-ம்.) "தூடணன் றிரிசிராத்தோன்றல்" (இராமா. கரன்வ. ௫க.)

**திரிசிராப்பள்ளி**-திரிசிரபுரத்தின் கோயில்.

**திரிசிராமலை**—ஒரு மலை, திரிசிரபுரமலை.

**திரிசிருங்கம்**—திரிகூடசைலம்.

**திரிசுகந்தம்** — சாதிக்காய், சாதிபத்திரி, லவங்கம். (வைத்தியபரிபா.)

**திரிசுடர்**—முச்சுடர். (சூ. நிக. கஉ: ௬.)

**திரிசுத்தி**—மூவகைச்சுத்தி. (சி. சி. அ: ௬0: ஞாநப்.) பார்.

**திரிசூலம்**—முத்தலைவேல்.(உ-ம்.) "தண்டாயுதமுந்திரிசூலமுமிவிழத்தாக்கி" (கந்தரலங்.)

**திரிசூலி**—1. கற்றாழை. (வைத்தியபரிபா.) 2. காளி. (உ-ம்.) "சுந்தரி சாமுண்டி திரிசூலி (அரிச்சந்திர. பாயிர. எ.) 3. சிவலோகத்தில் தட்சணதிசையில் ஒலக்கஞ்சேவிக்கும் பதினெட்டுக் கணேசரிலொருவன். (வி-ணி. உ௬௪.) 4. சிவன்.

**திரிசேசபுவநம்**—நிவிர்த்திகலையிற் பிருதுவிதத்துவத்திருக்குநூற்றெட்டுப்புவநங்களுளொ

ன்று. (சி-லி. கிரி. உக.)

திரிசொல் — கல்லாதவராற் பொருளறியப் படாது கற்றோராற் பொருளறியப்படுஞ்சொல். (உ - ம்.) "அரிதுணர்பொருளன திரிசொல்லாகும்" (நன். உஎஉ.) [இயற்சொல்லின்வேறுபட்டசொல்லென்பது.]

திரிஞ்சில்—துரிஞ்சில் என மருவியது என்றும், உசிலமரம், வாவல் என்பது பொருளென்றுங்கூறுவா.(சூ.நிகண்டில். வாவலுக்குத்துருஞ்சில் என்று கூறுவர்.)

திரிணீகரம்—அற்பமாகஎண்ணல். (வி-ணி.)

திரிணீகாரம்—திரிணீகரம். (பௌட்-பும். ருஅ.)

திரித்தல்—1. கயிறுமுறுக்கல். 2. சுழற்றல். (திருமுரு. ககக-அடி. உரை.) 3. மாற்றுதல். 4. மாறுபடுத்தல், வேறுபடுத்தல். (உ - ம்.) "இளைஞர்தன்பால்வரமனந்திரித்து"(திருவிளை. அங்கம். சு.)

திரித்து—திருப்பி. (புறப்பொ. வெ.)

திரித்துவம்—முத்தன்மை.

திரித்தோன்றல் — திரிவிழுதலாகிய ஒருவகைப்பீநசரோகம். (உ-ம்.) "சோரிவீழல்"பார்.

திரிதசர்—தேவர். (காஞ்சிப். அமரீசப். உக.)

திரிதசன்—1. கடவுள். 2. சதருத்திரரிலே ளர்த்தப்பிரதேசத்திருக்குந் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ௦.)

திரிதசாதிபபுவநம்—நிவிர்த்திகலையிற் பிருதுவிசத்துவத்திருக்கும் நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-லி. கிரியா. உக.)

திரிநசி — 1. அகத்தியமுனிவர் குமாரன். (அபிசாநசிந்.) 2. திரயோதசி.

திரிதண்டம்—திரிதண்டு.

திரிதண்டி—1. ஒரு விட்டுணுபத்தன். (வி-ணி.உருஅ.)2. கரணமூன்றுமடக்கினோன். 3. முக்கோலையுடைய சந்நியாசி.)

திரிதண்டு— முக்கோல். (உ-ம்.) "மாத்திரிதண்டியல்வைத்தவஞ்சனும்" (இராமா.சடாயுவதை. ருச.)

திரிதத்துவம் —ஒருவகைத்தீக்கை. (உ-ம்.) "ஏகதத்துவதிரிதத்துவமுதலாகிய தீக்கைபலவுமுள" (சி. சி. அ: ரு. மறை.)

திரிதா—நீங்க. (சிந்தா.)

திரிதால்—1. சுழலல். (பிங்கல. உகூஅச.) 2. திரிதல். 3. மீளல். (பரிபாடல்.)

திரிதரிசநம்—முத்தரிசநம், முப்பதார்த்தரூபதரிசநம். (சி. சி. அ: ரு௦. ஞாநப்.)

திரிதல்—1. அலைதல். (உ - ம்.) "திருவடி சுமந்துகொண்டுகாணநான்திரியுமாறே" (தேவாரம். திருநா. தனித்திருநேரிசை. சா.) 2. உருளல். 3. உலாவல். 4. கெடுதல். 5. சுழலல். (உ-ம்.) "புனையிழைதன்னைக்காணார்புலம்பியேதிரிதலுற்றான்" (கந்தபு. வள்ளி. கரு௭.) 6. புணர்ச்சிவிகாரம் மூன்றனுளொன்று, அது கற்சட்டியென்றாற்போல வருவது. (உ - ம்.) "தோன்றறிரிதல்கெடுதல்விகாரம்" (நன்.உயிரீ. ச. 7. போதல். (பிங்கல. உஉ௦ரு.) 8. மாறுபடல், வேறுபடல். (புறநா.) 9. மீளல்.(பிங்கல. சகசுo.) (3, 4-சூ. நிக. கக. மகரவெ. ரு.)

திரிதியம்—செவ்வள்ளி. (மலையக.)

திரிதியை—1. ஒரு நதி. (வி-ணி. உஉக.) 2. மூன்றாந்திதி.

திரிதீர்க்கம்—மணப்பொருத்தம் பத்தினுென்று; அது பெண்ணாள்முதற் புருடனுள்பதின்மூன்றுக்குமேற்பட்டுவரும் பொருத்தம்.(உ-ம்.) "பெண்ணினுண் முரன்மைந்தனன்று - ளென்றபன்மூன்றுக்குமேற்றிரிதீர்க்கமிசையுறமே" (விதாந. கடிமண. க.)

திரிதேகம்—மூன்றுதேகங்கள்; அவை பரதேசம், சூக்குமதேசம், தூலதேசம் என்பன. (சி. சி. பாயிர. சிவசத்தி. உ ஞாநப்.)

திரிதேகி—பர்படகம். (மலையக.)

திரிதேசன்— சதருத்திரரி லிந்திரதிக்கினிருக்குந் தசருத்திரரிலொருவர். (வி-ணி.உசுக.)

திரிதேகி—பற்படாகம். (வைத்தியபரிபா.)

திரிதோடம்—ஒரு நோய்.

திரிநிம்பம்—கருவேப்பு, நிலவேம்பு, வேம்பு. (வைத்தியபரிபா.)

திரிநெரிஞ்சில்— செப்புநெரிஞ்சில், யானைநெரிஞ்சில், நெரிஞ்சில். (வைத்தியபரிபா.)

திரிப்பு— 1. மாற்றுதல். 2. முறுக்குதல்.

திரிபங்கி—ஒருவகைச்சித்திரகவி; அது யாதேனும் ஒரு செய்யுளாய்நின்றே ஒருபொருள் பயப்பதன்றி அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்துமுடிந்து வெவ்வேறு பொருள்பயக்கத்தக்கதாகவும் பாடப்படுவது. (கு. தண்டி. கூரு. உரை.)

திரிபணி—ஓரலங்காரம்; அஃது உபமாநப் பொருள் நிகழ்கின்றசெய்கையிற் பயன்படுதற் பொருட்டு உபமேயத்தின் உருவத்தைக்கொண்டுமித்தல். (உ-ம்.) "செப்புவமாநமுவமேயமாகத்திரிந்துதொழி- லைப்பயனுக்கொளவந்தாற்றிரிபணியாகும்" (குவல. சு-வது.)

திரிபத்திரி—லவங்கபத்திரி, சாதிப்பத்திரி, தாளிசபத்திரி. (வைத்தியபரிபா.)

திரிபதகை—கங்கை. (சூ. நிக. க: ருக.)

திரிபதாகை — பதாகைக்கையினணிவிரன்முடக்குவது. (உ-ம்.) "திரிபதாகைதெரியுங்காலை, யறைபதாகையின் ணிவிரன்முடக்கின:

தாமெனமொழிபவதிந்திரிசேரே" (சிலப். அரங்கேற்று. கஅ. உரை)

**திரிபதார்த்தம்**—சைவசித்தாந்த நூல்களிலே சொல்லப்படுமூன்றுபதார்த்தங்களாகிய பசுபதி பாசம். (சி. சி. அ: உஎ. ஞானப்.)

**திரிபதை** — இசைப்பா வகையுளொன்று. (உ-ம்.) "செப்பரியசிந்துதிரிபதைசீர்ச்சவலை" (சிலப். கடலா. கூடு உரை.)

**திரிபந்திகள்**—ஒருவகைச்சகலர். (சி. சி. அ: உ. ஞானப்.)

**திரிபயன்**—கடுக்காய். (வைத்தியபரிபா)

**திரிபலம்**—1. திரிபலை. (உ-ம்.) "சாதுர்சாதந்திரிபலம்" (தைல. தைலவ. சுகூ.) 2. முருங்கை. (வைத்தியபரிபா.)

**திரிபலாசம்**—முருக்கமரம். (வைத்தியவக.)

**திரிபலை**—கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் எனப்படும் மூன்று (பிங்கல கூருகூ.)

**திரிபன்றி**—ஓர் யந்திரம். (சிந்தாம.)

**திரிபாகி**—ஒருவகைச்சித்திரகவி; அது மூன்றெழுத்துக்களைச்சேர்க்க ஒரு மொழியாகவும் அதன் கணுள்ள முதலெழுத்தையும் இறுதியெழுத்தையுஞ்சேர்க்க மற்றொரு மொழியாகியும் இடையெழுத்தையுங்கடையெழுத்தையும் சேர்க்கப் பின்னொருமொழியாகியும் வருவது. (கு.சண்டி கூறு. உரை.) [திரி-மூன்று: பாகி-பாகமுடையது.]

**திரிபாதி**—சிறுபுள்ளடி. (மலையக.)

**திரிபிடகம்**—பௌத்தாகமம்; அது விநயபிடகம், சூத்திரபிடகம், அபிதன்மபிடகம் என மூன்றுவகைப்படும். (மணிமே. வஞ்சி. சுசு. உரை.)

**திரிபு**—1. தப்புதல். (உ-ம்.) "நெறியறிசெறி குறிபுரிதிரிபறியாவறிவனைமுந்துறீஇ" (கலி. கூக.) 2 திரிவு. (உ-ம்.) "திரிபிறேடுவிகற்ப முஞ்சேர்கிலா" (சேதுபு. கோடிதீ. கஎ.) 4. புணர்ச்சிவிகாரத்தொன்று. (உ-ம்.)"வலிவரின்-இயல்புந்திரிபுமாவனவுளபிற" (நன். உஉக.) 5. வேறுபாடு.

**திரிபுக்காட்சி**—திரிவுக்காட்சி.

**திரிபுடி**—காண்பான்,காட்சி,காட்சிபொருள் என்பன. (உ-ம்.) "திரிபுடிகண்டுநீங்குஞானதிருஞானஞேயமாம்" (வேதா. சூ. எஅ.)

**திரிபுடிபலம்** — ஆமணக்கு (வைத்தியமூ. அக.)

**திரிபுடை**—1. சத்ததாளத்தொன்று. 2. சிற்றேலம். (வைத்தியவக.)

**திரிபுண்டரதாரணி**—ஓர் யோகினி. (வி-ணி. உசக.)

**திரிபுண்டரம்**—மூன்றுவரியாய்ப்பூசும் விபூதிப்பூச்சு, முக்குறித்தொகுதி. (சை. வி. சஉ-ம் பக்கம்.)

**திரிபுயம்**—கக்கரி. (வைத்தியபரிபா.)

**திரிபுரசுந்தரி**—உமை. (உ-ம்.) "அணியுந் திரிபுரசுந்தரியாவதறிந்தனமே" (அபிராமியந்தாதி.) [திரிபுரசக்கரமுடைமையாலிப்பெயர் வந்தது.]

**திரிபுரத்தான்**—குப்பைமேனி. (வைத்தியபரிபா.)

**திரிபுரம்** — பூமி, அந்தர, சுவர்க்கத்தில் முறையே இரும்பு, வெள்ளி, பொன் என்பவற்றால் மயன்செய்யப்பட்ட மூன்றுகோட்டையுள்ளவூர். (காஞ்சிப். முப்புராரிகோ. க.)

**திரிபுரமல்லிகை**—ஒரு மல்லிகை. (வைத்தியவக.)

**திரிபுரமெரித்தான்**—1. சிவன். (பிங்கல. கச.) 2. நொச்சி. (மலையக.) 3. மாவிலிங்கை. (வைத்தியமூ. அக.)

**திரிபுராதபிநீ**—அதர்வணவேத உபநிடதத்தொன்று. (கந். நவ. கஅ.)

**திரிபுராந்தகி**—ஓர் யோகினி. (வி-ணி.உசக.)

**திரிபுரி**—சாறடை, இது சாறணை. (பிங்கல. உகூ௦உ.)

**திரிபுரா** — 1. இருக்குவேத உபநிடதத்தொன்று. (கந். நவ. கஎ.) 2. சாறணை. (வைத்தியபரிபா.) 3. வாமமதத்தார்சொல்லும் ஒரு சத்தி. (த. நி. போ. உசஎ.)

**திரிபுவநம்**—சுவர்க்கம், மத்தியம், பாதலம் என்பன. (உ-ம்.) "திரிபுவநமுழுதாண்டுசுடர் நேமிசெலநின்றோர்" (இராமா. குலமுறை.நு.)

**திரிம்சத்து**—முப்பது. (த-நி. போ.)

**திரியஞ்சள்**—கத்தூரிமஞ்சள், மஞ்சள், மரமஞ்சள் என்பன. (வைத்தியமூ. அக.)

**திரியணை**—தருவலசு. (வழக்கு.)

**திரிமரம்**—திரிகை. (பத்துப்பா.) இதுவரைத்திரிக்கிறதிரிகை யென்பர்.

**திரிமலங்கள்** — ஆணவமுதலிய மும்மலங்கள். (உ-ம்.) "செங்கமலத்தாளிணைகள்சேரலொட்டாத்திரிமலங்களறுத்து" (சி. சி. கஉ:க.)

**திரிமுண்டம்**—திரிபுண்டரம். (உ-ம்.) "திகழ் தருசெம்புன்றலைதிரிமுண்டம்" (கோயிற்பு. நடரா, உக.)

**திரிமூர்த்தி** — 1. ஈசானிடத்தில் பிரசாகமங் கேட்டவன. (த. நி. போ. கறுஅ) 2. ஐம்பததொரு ருத்திரரிலொருவர். (வி-ணி. உஎக.) 3 சாந்திகலையில் பிருதுவிதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி கிரியா. உக.) 4. மும்மூர்த்தி.

**திரிமூலம்**—கண்டுமூலம், சித்திரமூலம், கப பிலிமூலம் என்பன. (வைத்தியவக.)

**திரிய**—மீள. (உ-ம்.) "திரியவுந்தநுக்கோடி தீரதன்மேன்மையொன்றதுசெப்புவான்" (சேதுபு. தருமது. க.)

**திரியக்ககப்பை**—குறுக்காக நீண்டிருக்கிற அகப்பை. (தைல. பாயிர. கஎ. உரை.)

**திரியக்கம்**—நிவிர்த்திகலையிற் பிருதுவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவனங்களு ளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை)

**திரியக்கி** — தேங்காய். (வைத்தியபரிபா.) (தைல. தைலவ.)

**திரியக்கு**—1. குறுக்கு. (தைலவ.) 2. பசு பட்சியாதி சாதிகள். (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

**திரியக்குசுரோதசிருட்டி**—பிரமன் குறுக்கே பார்க்கப்பிறந்தசிருட்டி; அது விலங்குசாதியின் சிருட்டி. இது "இனையவப்போழ்துதிரியக்குசுரோதமெனப்படுசிருட்டியுண்டாயிற் - றனையது பசுமுன்னாகியசிருட்டி" என்றும் (சூத. சிவமான். கச-ம் செய்யுளாற் பெறப்படும்.

**திரியம்**—1. மூன்று. (உ-ம்.) "நல்குஞ்சுழுமுனையிடைபிங்கலையெனு நாடித்திரியமதை" (மதுரைப்பதிற்று. ருரு.) 2. செவ்வள்ளி. (மலையக.)

**திரியம்பகம்** — 1. ஒரு மந்திரம். (உ-ம்.) "அதமிலா மறுவென்றியாருமறை திரியம்பகத்தால்" (சூத. ஞான. ச: கசு.) 2. வீரபத்திரர் தக்கன்யாகத்தை அழிக்கஎடுத்த வில்லு. (அபிதா.)

**திரியம்பகன்**—1. அரன். (பிங்கல: கூச.) 2. அருகன். (உ-ம்.) "சினேந்திரன்றிரியம்பகன் சாந்தன். (திவாகரம்.முதலாவது.) 3. விட்டுணு. 4. விநாயகன். (பிங்கலநி. கூரு.) 5. வீரபத்திரன். (பிங்கலநி. கசச.)

**திரியல்**—திரிதல். (உ-ம்.) "திரியலாவகை" (சேதுபு. கவிதீர். உஉ.)

**திரியேகம்**—முப்பொருளொன்றாயிருத்தல், பதிபசுபாசமூங்கூடியிருத்தலென்பர்..

**திரிராத்திரி**— 1. கறிமஞ்சள், மரமஞ்சள், கத்தூரிமஞ்சள் என்னு மூவகை மஞ்சள். (உ-ம.) "கண்டபாரங்கி" பார். 2. மூன்றிரவு.

**திரிலவங்கம்**—சிறுநாகப்பூ, செண்பகப்பூ, கிராம்பு. (வைத்தியபரிபா.)

**திரிலட்சணபாவனை**—புத்தர் சொல்லுகிற படி முத்திசித்தித்தற்காகிய மூன்று ஞானம்; அவை சர்வந்துக்கந்துக்கம், சர்வம் அநித்தியம் அநித்தியம், சர்வஞ்சூநியம் சூநியம் என்பன. (பெரியபு. திருஞாந. கூகரு. உரை.)

**திரிலிங்கம்** — 1. திரீலிங்கம், பெண்பால். 2. புல்லிங்கம், திரீலிங்கம், நபுஞ்சகலிங்கம் என்னும் மூன்று லிங்கம் 3. தான்றி. (மலையக.)

**திரிலேகரி**—விட்டுணுகரந்தை. (மலையக.)

**திரிலேகிதம்** — 1. துழாய். 2. திரிபலா. (வைத்தியபரிபா.)

**திரிலோகசிந்தூரம்**—ஒரு மருந்து.

**திரிலோகம்**—1. திரிபுவனம்; அவை சுவர்க்க மத்திய பாதலம் என்பன. 2. பொன் வெள்ளி செப்பு என்பன.

**திரிலோகி**—விட்டுணுகரந்தை. (மலையக.)

**திரிலோசநம்**—1. நிவிர்த்திகலையிற் பிருதுவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவனங்களு ளொன்று. (சி-வி. கிரியா. உக.) 2. மூன்று விழி.

**திரிலோசநி**—காளி. (சூ. நிக. க: கூஅ.)

**திரிவருக்கம்**—1. அகவியன்மூன்று; அவை: அசுத்தம், அறியாமை, சுத்தம் என்பன. 2. அரசியன் மூன்று; அவை: ஆதாயம், நட்டம், மத்திமம் என்பன. 3. இயல்பாய்விரும்புவது மூன்று; அவை: கடமை செல்வம், பெண்போகம் என்பன. 4. மூவகைச்சரக்கு; அவை: சுக்குத் திப்பிலி மிளகு. (தைல. தைலவ. சரு.)

**திரிவாசம்**—சக்கரி. (மலையக.)

**திரிவிக்கிரமன்**—1. ஓரரசன். 2. விட்டுணு. மூன்றடிகொண்டளந்து பராக்கிரமஞ்செய்தமையாற்பெற்றபெயர்.

**திரிவிச்சதா**—மூக்கிரட்டை. (வைத்தியபரிபா.)

**திரிவிதகாரியகர்த்திருத்துவம்**—காரணகர்த்திருத்துவம், சங்கற்பகர்த்திருத்துவம், சந்நிதானகர்த்திருத்துவம் என்னும் மூவித காரியகர்த்திருத்துவம். (வி-ணி. கசுஅ.)

**திரிவிதத்துவங்கள்** — சிவம், சதாசிவம், மகேசம் என்னும் மூவித தத்துவங்கள். (த-நி. போ. கசுரு.)

**திரிவு**—1. திரிபு. 2. தப்பு. (புறப். வெ.)

**திரிவுக்காட்சி**—ஒருபொருளைப் பிறிதொன்றாகக்காணுங்காட்சி; அது கட்டையைக் கள்வனென்று கொள்வதுபோல்வது. (சி. சி: அளவை. ரு. நிரம்ப.)

**திரிவேணிசங்கம்**—ஒருதலம்; அது கங்கை, யமுனை, சரசுவதியென்னு மூவாற்றுப் பொருத்து.

**திரீலிங்கம்** — பெண்பால். (பி-வி. சரு. உரை.)

**திரு**—1. அழகு. (உ-ம்.) "செம்பதுமைதிருக்குமரா" (கந்தபு. காமதகந. கக.) 2. இலக்

குமி (உ-ம்.) "திருவாரணங்குமணமகன்" (மறை-தி. க.) 3. செல்வம். (உ-ம்.) "திருக்குழாமொண்செய்யாள்பார்த்துறினுண்டாகும்" (நான்மணி.சுஎ.) 4. தெய்வவுத்தியென்னுமோரணி. (பிங்கல. கஉ00.) 5. நல்வினை. (சிந்தா.) 6. பெண். (உ-ம்.) "நந்தார்தவழுஞ்சிதைக்குமிந்தத்-திரு. (மரு-தி. உ.) 7. மங்கலமொழியிலொன்று. (சூ. நிக. கஉ: ககஎ.) 8. மங்கிலியம். (உ-ம்.)"திங்கள்வாணுதனீயேழிரண்டாண்டிற்றிருவிழந்திருக்குவையென்ன" (பிரமோத்தர. சோமவார. உகூ.) 9. மூலைமேற்றோன்றும்வீற்றுத்தெய்வம். (சிலப். மனையறம். கஅ-வரி.) 10. மேன்மையாகியசிறப்பு. (சூ.நிக. கக: ரகரவெ.)

**திருக்கடைக்காப்பு** — 1 கோயிற்றிருக்கதவுசாத்தல். (வழக்.) 2. திவ்வியபிரபந்தத்தின் முடிவுப்பாட்டு. (வழக்.)

**திருக்கடவூர்**—ஒரு சிவத்தலம்.

**திருக்கயிலாசபரம்பரைச் சந்தானகுரவர்கள்**— மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்ததேசிகர் கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர் என்னும் நால்வர்கள். (சைவவினாவிடை.)

**திருக்கழுக்குன்றம்**-செங்கல்பட்டுக்கு அருகிலுள்ள ஒரு சிவத்தலம்.

**திருக்களாஞ்சேரி** — மறைஞானசம்பந்த தேசிகர் பரிபூரணதசையடைந்த தலம். (கோயிற்பு. சந்தானகுரவர்வரலாறு. ச.)

**திருக்களிற்றுப்படியார்**— திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார் திருவாய்மலர்ந்தருளிய சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கனுளொன்று. (சைவவி.)

**திருக்காட்சி**—தேவதரிசனம். (வழக்.)

**திருக்காட்டுப்பள்ளி**—ஒரு தலம். (உ-ம்.) "வெள்ளியங்கிரிமேவினேன் விழைதிருக்காட்டுப்-பள்ளியம்மையார்" (திருநாகைக்காரோ. திருநாட். ருக.)

**திருக்காளத்தி**—ஒரு தலம்.

**திருக்கு**—1. ஆணவமலம். (உ-ம்.) "ஒன்றுமுளத்திருக்கு" (கோயிற்பு. பாயி. கஎ.) 2. கண். (சூ. நிக. உ: கூகூ.) 3. காண்பானாகிய சித்து. (உ-ம்.) "திருக்கியவேதாந்தநூலியம்புறுவதிருக்குத்திரிசியமென்றிருபொருள்"(வேதா. சூ.) 4. குற்றம். (உ-ம்.) "திருக்கையறுத்தென்னையாளும்பதந்தரவே" (மரு-தி. சுகூ.) 5. தந்திரம்.(வழக்.)6.முறுக்கு.(சிந்தா.)7. வஞ்சம்.

**திருக்குன்றமலை**—திருக்கோணமலை. (ஈழநாட்டு வழக்கு.)

**திருக்கூட்டம்** — தேவதொண்டர் கூட்டம். (வழக்.)

**திருக்கை**—ஒருவகை மீன்; அஃது ஆடாத்திருக்கை, ஒட்டைத்திருக்கை, கருந்திருக்கை, குருவித்திருக்கை, கோட்டாத்திருக்கை, செந்திருக்கை, நெய்த்திருக்கை, பஞ்சாடித்திருக்கை, புள்ளித்திருக்கை, மணற்றிருக்கை எனப் பலவகைப்படும். (பரதவர். வழக்.)

**திருக்கொன்றை** — பிரணவவடிவமான தாதுள்ளவோர் கொன்றை இது, சிவபிரானுக்குரியது.

**திருக்கோணமலை**—திரிகோணமலை.

**திருக்கோலம்**—தேவகோலம். (வழக்.)

**திருக்கோவையார்**—மாணிக்கவாசக சுவாமிகளாற் றிருவாய்மலர்ந்தருளப்பட்ட திருச்சிற்றம்பலக்கோவையார். (அபிதா.)

**திருகவிருத்தநீரம்**-இருபக்கமும் வந்துவையுடைய சலப்பைவடிவுள்ளதாகிய நாசம்; இது துவாதசப்பிரமாதகலைகளிலேழாவது. (சி.வி. கிரி. கூ.)

**திருகமரி**—சங்குதிருகி. (தட்டார்வழக்கு.)

**திருகணை**—புரிமணை. (வழக்.)

**திருகம்**—சாதிக்காய். (மலையக.)

**திருகல்**—1. முரணல். 2. முறுகல். (பிங்கல உஉசரு)

**திருகலி**—நுனிவளைந்த யனைமுதலியவற்றிற்குச் சொல்லப்படும் ஒருபெயர். (வழக்.)

**திருகாணி**—திருகணி. (வழக்.)

**திருகியகள்ளி** — திருகுகள்ளி. (வைத்தியபரிபா.)

**திருகு**—1. கள்ளம். 2. திருகுதல். (உ-ம்.) "திருகுசால்கடுப்பினேடித்திசைதிசை கால்வாய்முட்டி" (சேதுபு. திருநாட். உகூ.) 3. தேர்நிலை வினைப்பகுதி. 5. முறுக்கு. (உ-ம்.) "சில்லோதியைச்செங்கையாற்றிருகுறப்பற்றி" (இராமா. சூர்ப்பநகை. கூகூ.) 6. வஞ்சனை.

**திருகுகள்ளி**-ஒருகள்ளி. (வைத்தியமூ-அக.)

**திருகுதல்**—1. சுழற்றிப்பிடுங்குதல். (உ-ம்.) "கரக்குவட்டினையிருகையாற்றிருகினரெறிந்தார்" (கூர்மபு. அட்டமூர். கூ.) 2. திரும்புதல். (உ-ம்.) "திருங்குமி" (கலிங்கத்துப்பரணி.) 3. பறித்தல். 4. முறுகுதல். (புறநா.)

**திருகுதாழை**— ஒரு தாழை. (வைத்தியமூ-அக.)

**திருகுபலை**—வலம்புரிக்காய். (உ-ம்.) "திருகுபலையட்சம்பப்பத்து" (தைல. தைலவ. கoச.)

**திருகூசி**—தமரூசி.

**திருச்சியம்**—காணப்படுகிறபொருள். (சி.சி. கூ: கூ. ஞானப்.)

**திருச்சீரலைவாய்**- திருச்செந்தூர். (திருமுருகாற்றுப்படையிற்காண்க.)

திருச்செந்தூர்—இராமேச்சுரத்துக்குத்தெற்குள்ள சுப்பிரமணியர் பிரதான தலங்களிலொன்று.

திருசோபம்—வெண்டாமரை. (மலையக.)

திருட்டகன்மம்—இம்மையிலேபலிக்கும் இம்மையிற்செய்த கன்மம். (சி. சி. உ: கஉ. மறை.)

திருட்டம்—காணப்பட்டது.

திருட்டாதிருட்டம் — திருட்டாதிருட்டகன்மம். (சி சி. உ: கஉ. மறை.) அது இம்மை மறுமையிற் பலனடைதற்கேதுவான இம்மையிற்செய்யப்படுங் கன்மம்.

திருட்டாந்தம்—1. உதாரணம். 2. காணப்பட்ட முடிபுடையது. (சைவப்பி. கஉ.)

திருட்டாந்தரம்—திருட்டாந்தம்.

திருட்டாநுமாநம் — பூர்வகாட்சியநுமாநம். (சி. சி. அளவை. கஉ. ஞாநப்.)

திருட்டி — 1. அறிவு. 2. கண். (பிங்கல. க௦௫௩.) 3. தினை. (வைத்தியபரிபா.) 4. பார்வை.

திருட்டியம்—ஞாநம்.

திருட்டு—களவு. (சூ. நிக. ௯: ௫அ)

திருட்டுத்தநம்—கள்ளக்குணம். (வழக்.)

திருட்டுப்பு — ஒருவகைச்சந்தம். (கூர்மபு. உ௯. உரை.)

திருடக்கிரந்தி—மூங்கில். (மலையக.)

திருடகம் — வியூகவிரி மூப்பசனுளொன்று. (வள். எசுஎ. பரி. குறிப்.)

திருடகாண்டம்—மூங்கில். (மலையக.)

திருடம் — 1. உறுதிப்படுத்தல். (சி .சி. சா கஅ. சிவாக்.) 2. கடினம். (சி. சி. உ: ௫எ. சிவாச்.)

திருடமூலம்—தேங்காய். (வைத்தியமூ. அக.)

திருடர்—கள்வர். (சூ நிக. உ: சக)

திருடல்—திருடுதல்.

திருடலோமை—காட்டுப்பன்றி.

திருடழம்—தேங்காய். (வைத்தியமூ. அக.)

திருடன்—1. கள்வன். (உ-ம்.) "பிறர்தம்பொருளேவெளவுந் - திருடனுர்மேலவருக்கறமுறைப்பதென" (அரிச்சபு. பாயிர. கஉ.) 2. விட்டுணுகரந்தை. (வைத்தியமூல. அக.)

திருடாய் — விட்டுணுகரந்தை. (வைத்தியபரிபா.)

திருடி—1. கள்ளி. (வைத்தியமூ. அக.) 2. திருடுகள்ளி. (உ - ம்.) "நளியனற்சிதமிந்திரவல்லிபிசுகங்குடமென்னுளும்பிணங்குதிருடி" (தைல. தைலவ. கஉசு.) 3. நொடிப்பொழுது. (சி. சி. உ: ௫ச. சிவாக்.) 4. களவுசெய்தவள்.

திருடு—1. களவு. 2. தெரிநிலைவினைப்பகுதி.

திருடுதல்—களவெடுத்தல்.

திருணகேது—மூங்கில். (வைத்தியமூ.அக.)

திருணசாரை—வாழை. (வைத்தியமூ. அக.)

திருணசூநியம்—தாழை (வைத்தியமூ. அக.)

திருணம்—1. தேன். 2. தேனீ. (1, 2-வைத்தியபரிபா.)

திருத்தம்—1. ஒழுங்கு. (உ-ம்.) "திருத்தராய் மதுராபுரி" (திருவிளை. கான்மா. க.) 2. சுகம் (உ-ம்.)"மாசதனிற் றூய்மையினில்வறுமைவாழ்வில்வருத்தத்திற் றிருத்தத்தின் மைதுனத்திற் சினத்தில்" (சி. சி. அ: ௯௯.) 3. திருத்துகை. 4. திருந்தல். 5. தீர்த்தம். (உ-ம்.) "திருத்தம் வானவர்சென்னியிற்சென்றதால்." (இராமா. சேதுபந். ௬௧.)

திருத்தல்—திருத்துதல். (உ-ம்.) "சீதையென்பவடன்னைவிட்டம்மனிதரைத் திருத்தல்" (இராமா. படைகாட்சி. ௬௯.)

திருத்தாண்டகம்—தேவாரத்திலோர் பகுதி; இது திருநாவுக்கரசுநாயனார் திருவாய்மலர்ந்தருளியது (உ-ம்.) "சரணம்"பார்.

திருத்தாண்டவம்— திவ்யநடனம். (உ-ம்.) "ஐந்துதொழி - லென் னுந்திருத்தாண்டவம்புரிதல்கண்டால்" (திருவாத-புத்தரை. ௬௧.)

திருத்தி—1. செவ்விதாக்கி. (புறநா.) 2. பூரணம். (சி. சி. ஞானப்.)

திருத்து—1. தெரிநிலைவினைப்பகுதி.(உ-ம்.) "வரைவிறிருத்தொண்டரணி" (கோயிற்பு. பாயிர. கஅ.) 2. பயிர்செய்த நிலம்

திருத்துதல் — 1. சீர்ப்படுத்தல். (வழக்.) 2. தேற்றுதல். (வழக்) 3. விளக்குதல். (உ-ம்.) "பரிகலந்திருத்தி" (திருவிளை.விருத்தகு.உ௯.) (1, 2, 3-வழக்.)

திருத்துறையூர் — பெண்ணையாற்றுக்குச் சமீபத்திலேயுள்ளதலம். இது, அருணந்திசிவாசாரியர் பரிபூரணதசையடைந்த தலமுமாம். (சந்தானகுரவர் வரலாறு.)

திருத்தொண்டர்—தேவதொண்டர். (உ-ம்.) "வளர்கதிருத்தொண்டரணி" (கோயிற்பு. பாயிர. கஅ.)

திருத்தொண்டு—திவ்யவழிபாடு. (வழக்.)

திருதராட்டிரன்—1. சூரியன்முன்பாடுந் துவாதச கந்திருவரிலொருவன். (வி-ணி. உ௬௫.) 2. துரியோதநன்றந்தை. (பாரத சம்பவ.உஉ.) உரை.) [பூமியைத்தாங்குபவன் என்றபடி.]

திருதி—1. ஒருவகைச்சந்தம். அஃது ஓரடி பதினெட்டெழுத்துப்பெற்று வருவது. (வீரசோ. யாப். ௯௯. உரை.) 2. சந்திரனது சோடச கலைகளிலொன்று. (வி-ணி. உசசு.) 3. திருத்தி. 4. மநங்கலங்காமை. (உ-ம்.) "மூத்தியுறற்கேதுவாமென்றெண்ணலேதிருதி" (சூத.

ஞான. கங: கக.)

**திருதியை**—மூன்று.

**திருதியைப்பிரகரணம்**—விவேகசிந்தா என்னுஞ் சாத்திரத்தினோர் பிரகரணம் இதிற் றத்துவசிருட்டிசொல்லப்படும். (த. நி. போ. கூஅ.)

**திருதீயாதற்புருடன்**—மூன்றும்வேற்றுமைத் தொகை. (பி. வி. உக. உரை.)

**திருந்தலர்**—திருந்தார். (உ-ம்.) "திருந்தலர் வணங்க" (பிர-காண். கச: க.)

**திருந்தார்**—பகைவர். (உ-ம்.) "திருந்தாரையேயொழிக்கும்" (நளவெண்பா.சுயம்வர கூஉ.)

**திருந்து**—1. ஒப்பனை. (உ-ம்.) "திருந்தார் மன்றற்குழலணங்கின்செவிலித்தாயர்" (பாரத. திரௌ.கூச.) [முதனிலைத்தொழிற்பெயர்.] 2. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "திருந்தம் பலவன்" (திருக்கோ. கூஉ.)

**திருந்துகை**—செவ்வைப்படுதல்.

**திருந்துதல்**—1. சீர்ப்படல், திருத்தமாதல். 2. தேறுதல். 3. நன்றாய்முடித்தல். (1, 2, 3- வழக்.)

**திருநாமச்செடி**— } திருநாமப்பாலை.(வைத்
**திருநாமத்துத்தி**— } தியவக.)

**திருநாமப்பாலை**— } ஒருபூடு, அது நன்னாரி.
**திருநாரிப்பாலை**— } (வைத்தியபரிபா.)

**திருநாள்**—விசேடாராதனைத்தினம். (உ-ம்.) "சீரார்தரவருதிருநாள்படிமுதல்" (கோயிற்பு. திருவிழா. ரு0.)

**திருநாளைப்போவார்** — அறுபத்துமூன்றுநாயன்மாரிலொருவர். (உ - ம்.) "திருநாளைப்போவார்நாயனார்புராணம்"

**திருநீலகண்டர்**—அறுபத்துமூன்றுநாயன்மாரிலொருவராகிய திருநீலகண்டநாயனார்.(உ-ம்.) "திருநீலகண்டநாயனார்புராணம்"

**திருநீற்றுக்கோவில்** – திருநீற்றுப்பை. (வழக்.)திருநீறுசிவமாகவும் பையைக்கோவிலாகவுங்கொண்டு கூறுவர்.

**திருநீற்றுச்சோழன்**— அநபாயச்சோழனார். (உ-ம்.) "உலகுய்யத்-தன்றுபுகழ்த்திருநீற்றுச்சோழனெனமுடிசூடி" (கோயிற்பு. பாயிர. க.)

**திருநீற்றுப்பச்சை** — திருநீற்றுப்பத்திரி. (வைத்தியமூ. அக.)

**திருநீற்றுப்பத்திரி**—உருத்திரசடைப்பூடு

**திருநீறு**—விபூதி. (உ-ம்.) "நாதன்-றன்னடிமைத்துட்கொண்டுதகுந்திருநீறுசாத்தி" பெரிய பு. தடுத்தாட். ககூ.) (பிங்கல. களருகூ.)

**திருநெடுங்களம்**—ஒருதலம். (உ-ம்) "பண்ணுமேன்மைசால் பரம்பரன்றிருநெடுங்களமும்" (திருநாகைக்காரோ. திருநாட். ருஅ.)

**திருநெல்வேலி**—தென்னாட்டோர்தலம்.

**திருப்படைவீடு**—சுப்பிரமணியர் ஆறுபடைவீட்டிற்குங்கூறுவர். (பத்துப்பா. முகவுரை.)

**திருப்பணி** — ஆலயங்கட்கும் பெரியோர்க்குஞ்செய்யும் பணி. (வழக்.)

**திருப்பதி**—1. தேவதலம். 2. விட்டுணு.

**திருப்பம்**—திரும்புகோடி. (வழக்.)

**திருப்பரங்குன்று**—மதுரைக்கருகிலுள்ள ஒருமலை; இது சுப்பிரமணியக்கடவுளுக்கு பிரதானதலமாயுள்ளது. (உ-ம்.) "திருப்பரங்குன்றமர் சேயைப்போற்றுவாம்" (கந்தபு.கட. வாழ். கஉ.)

**திருப்பள்ளி**—1. தெய்வசயநம். 2. திருக்கோயில்.

**திருப்பள்ளித்தாமம்** – திருக்கோவிலுக்குச் சாத்தும்படி தொடுக்கப்படும் பூமாலை. பள்ளி- கோவில்.

**திருப்பள்ளியெழுச்சி**—தேவர்கள் அநந்தல் விட்டெழுதல்.

**திருப்பனையூர்**—ஒரு தலம். (உ-ம்.) "உம்பர் சென்றேறித்திரிசிற்குந் திருப்பனையூரனையாளை" (திருக்கோ. கூஎ.)

**திருப்பி**—வட்டத்திருப்பி. (வைத்தியபரிபா.)

**திருப்பு** — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. வளைப்பு. (வழக்.)

**திருப்புகழ்**—திருவண்ணாமலையிலிருந்த அருணகிரிநாதராற் சுப்பிரமணியக்கடவுளைக்குறித்துச்செய்யப்பட்ட ஒருநூல்.

**திருப்புதல்**—1. கவிழ்த்தல். 2. மடக்கல். 3. மாற்றல். 4. மீட்குதல். 5. வளைத்தல். இத் திருப்புதல் பெரும்பாலும் வழக்கில்வரும்.

**திருப்பூட்டு**—மங்கலியதாரணத்துக்குக் கூறும் வழக்கு. திருமங்கிலியம்.

**திருப்பூடடுதல்**—மங்கலியந்தரித்தல்.

**திருப்பெண்ணாகடம்** — மெய்கண்டதேவர் திருவவதாரஞ்செய்த தலம். (கோயிற்பு. சந்தானகுரவர் வரலாறு.)

**திரும்பல்**—திரும்புதல். (உ-ம்.) "தீத்தேடிச் சென்று திரும்பி. (சேதுபு. வேதாள. உரு.)

**திரும்பு**—தெரிநிலைவினைப்பகுதி.

**திரும்புதல்**—1. கவிழ்த்தல். 2. பின்னிடல். 3. மடங்கல். 4. மாறல் 5 மீளல். 6. வளைதல், இவை வழக்கிற் பெரும்பாலும் வரும்.

**திருமகண்மைந்தன்**—மன்மதன். (பிங்கல. கசரு.)

**திருமகள்**—இலக்குமி. (உ-ம்.) "திருமகள் வலக்கண்வாக்கின்சேயிழையிடக்கண்" (திருவிளை. நான்மாட. உ)

**திருமகளாடல்** — பரவையென்று பெயர். (சூ. நிக. கூ. ரு0.)

**திருமஞ்சனம்** — தெய்வ அபிடேகம். (திருவாதவூ. திருப்பெ. ஏ௦. உரை.)

**திருமண்** — வைணவர் நெற்றியிலிடுவது. (வைணவர் வழக்கு.)

**திருமயிலை** — மயிலாப்பூர் (மரூஉ.)

**திருமரம்** — அரசு. (பிங்கல. உகூகூ௬.)

**திருமலர்** — தாமரை. (பிங்கல. கூ௦௦எ.)

**திருமலை** — சிவபிரான் திருமாலிருக்கு மலைகட்குச் சிறப்பித்துக்கூறும் பெயர்.

**திருமறுமார்பன்** — 1. அருகன். (சூ. நிகண். க: ரு.) 2. திருமால். (பிங்கல. கங௦.) திருவாகிய மறுவையணிந்தமார்பன் என்பர், பரிபாடலில்.

**திருமால்** — விட்டுணு. (உ-ம்.) "புல்லாணித் திருமான்முன்னே" (அரிச்சபு. பாயிர. கசு.)

**திருமால்கொப்பூழ்** — தாமரை. (பிங்கல. கூ௦௦௯.)

**திருமால்வதாரம்பத்து** — விஷ்ணுவின் அவதாரம் பத்து; அவை: மச்சம், வராகம், கூர்மம், நரசிங்கம், வாமநம், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி என்பன. (பிங்கல. கஙகூ.) [சநகன், சநந்தநன், சநாதன், சநற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன் என விட்டுணுவின் அவதாரம் பதினைந்தாகவுங்கூறுவர்.] (பிங்கல. கச௦.)

**திருமாலாயுதமைந்து** — விட்டுணுவின் ஆயுதம் ஐந்து; அவை: பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கும், சுதரிசநமென்னுஞ்சக்கரமும், சாரங்கமென்னும் வில்லும், நாந்தகமென்னும் வாளும், கௌமோதகியென்னுந் தண்டுமாம். (பிங்கல. கஙூ-முதல் கஙூ௬-வரை.)

**திருமாலுந்தி** — தாமரை. (சூ. நிக. ௬: ருகூ.)

**திருமாளிகைத்தேவர்** — திருவிசைப்பாடியருளிய ஓரடியார். (சைவச.)

**திருமாற்பேறு** — திருமால் பூமியிலே சிவனைப் பூசித்தவோரு தலம். (சி. சி. உ: கூஉ. உரை.)

**திருமுகம்** — பெரியோர்வரைந்து விடுக்கு மோலைக்கு மங்கலமாகக்கூறு, மொருபெயர். (நன்னூ பெயரி. ௬௦.)

**திருமுட்டு** — பூசைத்தட்டுமுதலியன. (உ-ம்.) "இலங்குநற்றிருமுட்டிவை முதலியவீந்தார்" (வேதாரணியபு. மேன்மை. ருஉ.)

**திருமுதல்** — திரும்புதல்.

**திருமுருகாற்றுப்படை** — நக்கீரதேவராற் செய்யப்பட்ட ஒரு நூல். (பத்துப்பா.)

**திருமுற்றம்** — 1. குதிரைலாயமுளவீதி. (சூ. நிக. ரு: சகூ.) 2. கோயிற்சந்நிதாநம். (வழக்.)

**திருமுறை** — திவ்யபுத்தகம் பன்னிரண்டு. (உ-ம்.) "திருமுறைகண்டபுராணம்" பார்.

**திருமுன்** — } திருமுன்பு, தேவர்பெரியர் சந்நிதானம். (வழக்கு.)
**திருமுன்பு** — }

**திருமூலட்டாநம்** — தில்லைமூலத்தாநம். (கோயிற்பு. வியாக். கசு. உரை.) [திருமூலஸ்தாநம் திருமூலட்டாநமென மரீஇயிற்று.]

**திருமெழுக்கு** — குற்றமற்றகோமயமும்வடித்தெடுத்த சலமுங்கொண்டு கோயின்முதலியவற்றை மெழுகல். (உ-ம்.) "பூசைத்தலம்புகுந்தே திருமெழுக்காற்புதுக்கிடுவார்" (சிவரக. வைமிச. உகூ.)

**திருமேனி** — 1. குப்பைமேனி. (வைத்தியவக.) 2. திவ்யதேகம்.

**திருமேனியழகி** — குப்பைமேனி. (மலையக.)

**திருமொழி** — ஆகமம்; ஜைந (சிந்தா.)

**திருவட்டி** — கள்ளி. (வைத்தியமூ. அக.)

**திருவடி** — 1. அநுமார். வைணவர் வழக்கு. (உ-ம்.) "திருவடியென்னுந்தன்மையாவர்க்குந் தெரியநின்றான்" (இராமா. மயேந்திரப். உகூ.) 2. திவ்யபாதம். (உ-ம்.) "திருவடியின்மிதியடியும்" (கோயிற்பு. பதஞ்ச. கக.)

**திருவடிநிலை** — பெரியோர்பாதுகைக்குப்பெயர். (வழக்.)

**திருவடையாளம்** — சிவபிரானுக்குரிய சிறந்த அறிகுறியாகிய பமாலை அது, உருத்திராக்கமாலை, கொன்றைமாலையைக்குறிக்கும்பெயர். (பெரியபு. திருஞானச. கஉக௦.) (சி. சி. காப்பு. க. உரை.)

**திருவம்** — குதிரைவத்தி. (வைத்தியபரிபா.)

**திருவமுது** — திவ்யவுணவு. (வழக்.)

**திருவருட்பயன்** — கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த ஒரு சித்தாந்தசாத்திரம்.

**திருவலகு** — கோவில்களிலேகொள்ளப்படும் விளக்குமாறு. (சி. சி. அ. கக: மறை.)

**திருவள்ளுவர்** — திருக்குறள் என்னும் ஒரு நூல்செய்த ஆசிரியர். (உ-ம்.) "திருத்தகுதெய்வத் திருவள்ளுவர். (திருவள்ளுவமாலை. க.)

**திருவன்** — திருவுடையவன்.

**திருவனம்** — துளசி. (வைத்தியபரிபா.)

**திருவாக்கு** — திவ்யவாக்கு. (வழக்.)

**திருவாசகம்** — 1. திருவாக்கு (வழக்.) 2. மாணிக்கவாசகசுவாமிகளாற்செய்யப்பட்ட ஒரு தமிழ்வேதம்.

**திருவாசி** — மரத்தினாலேனும் உலோகங்களினாலேனும் வில்லாகாரமாய்ச்செய்து விக்கிரகத்தின்மேல் வைக்கப்படுவதொன்று. (உ-ம்.) "ஒங்காரமேநற்றிருவாசி" (உண்மைவிளக். கூசு.)

**திருவாசிகை** — திருவாசி.

**திருவாடுதண்டு**—திருவுருவைச்சுமக்கு மரம். ஓர் குழூஉக்குறி.
**திருவாத்தி**—ஒரு பூமரம்.(உ-ம்.)"திருவாத்தியணைந்தருளி. (பெரியபு. சிறுத். சக.)
**திருவாதிரை**—ஒருநாள். (பிங்கல. உசச.)
**திருவாபரணம்**—தெய்வாபரணம். (வழக்.)
**திருவாய்மொழி** — 1. திவ்வியவாக்கு. 2. வைணவரது தமிழ்வேதம்.
**திருவாயில்**—திருக்கோயில்வாயில். (வழக்.)
**திருவாரூர்**—ஒரு தலம். (உ-ம்.) "திருவாரூர்ப் பிறந்தார்களெல்லார்க்குமடியேன்" (திருத்தொண்டத்தொகை.)
**திருவாவிநன்குடி**—சுப்பிரமணியக் கடவுளுடைய விசேடத்தலங்களுளொன்று. அது, ((பழநி.) (திருமுருகாற்றுப்படை பார்.)
**திருவான்கோடு**--ஒரு பட்டினம்.
**திருவானைக்கா**— திருச்சிராப்பள்ளிக்கருகில் ஒரு தலம். (திருவானைக்காபுரா. பாயிரம்.)
**திருவில்**—இந்திரவில். (உ-ம்.) "திருவிலலதுகொலைவிலறியார்" (புறநா. உ0.) தெய்வவில் என்றபடி.
**திருவிழா**—உற்சவம். (உ-ம்.) (திருவானைக். திருவிழாப்பட.)
**திருவிளக்கு**—திவ்யதீபம். (உ-ம்.) "திருமாலைதிருவிளக்கோடு" (சிவரக.பசாசுமோசந.கூசு)
**திருவிளம்**—1. சிவதை. 2. திராய். (1, 2- மலையக.)
**திருவிளையாட்டு**—தெய்வவிளையாட்டு.
**திருவிளையாடல்**—1. ஒரு புராணம். (உ-ம்.) (திருவிளையாடற்புராணம்.) 2. தெய்வவிளையாட்டு.
**திருவினள்**—திருமகள். (உ-ம்.) "போதிலார் திருவினாள்புகழுடைவடிவென்றும்" (சிலப். மங்கலவாழ்த்து.)
**திருவுந்தியர்**—பதினன்குசித்தாந்தசாத்திரங்களுளொன்று.
**திருவுரு** — திவ்யமேனியாகிய விக்கிரகம். (உ-ம்.) (கருணைதிருவுருவாகி. (கோயிற்பு. பாயிர. உ.)
**திருவுளம்**— திவ்யசித்தம். (உ - ம்.) "அச்சிறைவிலேசேதற்குன்றன்திருவுளமறியேனென்றான்" (அரிச்ச-பு. மயாந. கூ.)
**திருவூசல்**—
**திருவூஞ்சல்**— } திவ்யவூஞ்சலாட்டு.
**திருவெண்ணெநல்லூர்**—ஒரு தலம்.
**திருவெழுச்சி**—தெய்வமெழுதல்.(உ-ம்.) "எந்தைபிரான்றிருவெழுச்சியின்பமெய்த" (கோயிற்பு. திருவிழா. உரு.)
**திருவெழுத்து**—பஞ்சாக்கரம். (உ-ம்.) "இது திருவெழுத்தினீடே" (சிவப்பி. ௪0: ௧௬.)
**திருவென்றசாரம்**—காசிச்சாரம்.(வைத்திய பரிபா.)
**திருவேங்கடம்**—ஒரு தலம்.
**திருவேடம்**—1. சைவமடங்களிலுள்ள வடியார் காதணி. (குழூஉக்குறி.) 2. திவ்யவேடம்.
**திருவேரகம்**— சுப்பிரமணியக்கடவுளுடைய விசேடத்தலங்களுளொன்று. திருமுருகாற்றுப்படைபார்.
**திருவொற்றடை**—விக்கிரகங்களுக்கு அபிடேகமானபின்னுற்றுஞ்சீலை.
**திருவொற்றியூர்** — சென்னைக்கருகிலுள்ள ஒரு சிவதலம்.
**திருவோணம்**—ஒரு நாள். (பிங்கல. உகூ0.)
**திருவோலக்கம்**— மகாதிவ்யசபை, ஒலக்கம்-சபை. (ஞானமி. சு0. உரை.)
**திரேகம்**—தேகம். (வழக்.)
**திரேசந்தி**—திராய். (வைத்தியமூ. அக.)
**திரேதம்**—திரேதாயுகம். (உ-ம்.) "என்னே திரேதத்திரேணுகையேகூற்றுவனுந்- தன்னேர் நீதிரேதத்திற்சாநகியே" (நீதிவெண்பா.)
**திரேதாயுகம்** — நான்குயுகங்களில் இரண்டாவதயுகம்; அது: பன்னிரண்டு இலட்சத்துத் தொண்ணூற்றாறுயிரம் மநுடவருடங்கொண்ட காலம். (சி-வி. ஞாந. உசு. உரை.)
**திரேந்தி**—திராய். (மலையக.)
**திரை**—1. அலை. (உ-ம்.) "திரைகடியிற்றுமால்" (அரிச்ச.பு. நாட்டு. ரு0.) 2. உடற்றிரை. (உ-ம்.) "நரைதிரைமூப்பிவைமாற்றி" (இராமா. குலமுறை. சு.) 3. கடல். (உ-ம்.) "எற்றுந்திரையினமிர்தை"(திருக்கோ.௬௬௪.)4. சுருள். (உ-ம்.) "கப்புரப்பசுந்திரைகதிர்செய்மர்மணி" (சிந்தா. நாமக. கசுஅ.) 5. திரைச்சீலை, இதனை இடுதிரையென்பர் நிகண்டில். 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "திரைகட்லோடியுந்திரவியந்தேடு" (கொன்றைவேந்தன்.) 7. யாறு. உ-ம்.) "தெண்டிரைசேர்சடையாருந்திருவுள்ளமகிழ்ந்தருளி" (கோயிற்பு. இரணி. ருக.) 8. வெற்றிலை.(உ-ம்.)"இளிந்தகாய்கமழ்திரைவாசமீண்டி" (சிந்தா. கேம. சுஅ.) 9. வைக்கோற்புரி.
**திரைத்தல்**—1. சுருக்கல். 2. சுருட்டுதல். (உ-ம்.) "நிலந்திரைக்குங்கடற்றானை" (புறநா. ௬௭.)
**திரைதல்**— 1. உறைந்தபால் கன்விடுதல். (உ-ம்.) "திரைந்தபால்" (வழக்.) 2. சுருங்கல். 3. திரங்கல். 4. திரளல், சுருள்.
**திரைந்து**—சாய்ந்து. (உ-ம்.) "சில்லம்போ

தின்மேற்றிரைத்துதேனுலாம்" (சிந்தா. கோவிந்தை. ௫.)

திரைப்பு—திரைதல்.

திரையல் — 1. சுருங்கல். 2. வெற்றிலை. (உ-ம்.) "பாசிலைத்திரையலும்பளிதமும்படைத்து" (மணிமே. கச்சிமாந. உசரு.)

திரையன் —நெய்தநிலத்தலைவன்.

திரைவு—திரைப்பு.

திரோகிதம்—1. மறைக்கப்பட்டது. (சி. சி. உ: கஉ. சிவாக்.) 2. மறைவு.

திரோதகம்— மறைத்தல். (உ-ம்.) "ஞாநதிரோதகமென்னில்" (சி. சி. உ: அ௫. சிவாக்.)

திரோதசத்தி— மாயை, கன்மம், ஆணவம், வைந்தவம் என்னும் நால்வகைப்பாசத்தினுடைய அநாதித்தன்மைநிகழ்வதற் கேதுவாயிருக்கின்ற சிவசத்தி. இது கிரமத்திலேபேரின்பமாவதாய் அந்தப்பேரின்பத்திற்குக் காரணமாகுஞ் சிற்றின்பத்திற்கு நிமித்தமாகிய சிருட்டி, திதி, சங்காரம், திரோபாவமென்கின்ற நான்கு கிருத்தியங்களை ஆரணி, செநநி, ரோதயித்திரி என்னும் முச்சத்திரூபமாயிருந்து பண்ணுவது. (சி. சி. கை; சி. சி. ஞாநப்.)

திரோதம்—திரோதமலம்.(உ-ம்.) "ஆசுறுதிரோதமேவாதகலுமாசிவமுன்னுக" (சிவப்பிர ) திரோதம் - மறைப்பு.

திரோதமலம்—பஞ்சமலங்களுளொன்றாகிய திரோதாயி. (உ-ம்.) "அம்மலங்கட்கநுகூலமாய் நின்றுசெய்யுஞ்சிவசத்தி பாசசத்தியி னடங்குமாயினுந்தொழில்வேற்றுமைபற்றியுபசாரத்தாற்றிரோத மலமெனவேறுவைத் தெண்ணப்படும்" (சி. சி. உ: அஎ. சுப்பி.)

திரோதயம்—திரோதம்.

திரோதாநகரி — திரோதாநசத்தி. (உ-ம்.) "ஏயுமும்மலங்கடத்தந்தொழிலினையியற்றவேவுந் - தூயவன்றனதோர்சத்திதிரோதாநகரியதென்றும்"(சி.சி. உ: அஎ.)[திரோதாநத்தைச்செய்வதென்னும்பொருட்டு.]

திரோதாநசத்தி — திரோதசத்தி. (உ-ம்.) "வள்ளலாலாமெனவே, திரோதாநசத்தியதுவண்மையும்பெற்றும். அது பாகம் வருவித்தற்பொருட்டு மலத்தின்வழிநின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற்கேதுவாதல்பற்றி மலமென்றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மலகன்மமாயை திரோதாநம் மாயாகாரியமென்னு மைவகைப்பாசமுங் கண்டுகொள்க" (சிவஞாநபோ. உ: உ-ம் அதிகரணம்.சிவஞா.)ஆன்மாக்களோடு ஆணவமலம் பக்குவமாகும்படி அதை மறைத்தற்கனுகூலஞ் செய்வது என்பர். (சிவப்பிர. உ: உ. உரை.)

திரோதாநம் — 1. திரோதாநசத்தி. 2. மறைப்பு.

திரோதாயி — திரோதாநசத்தி. (உ-ம்.) "மூயங்கிநின்றுபாகமிகவுதவு திரோதாயியொன்று" (சிவப்பிர. உ: கச.)

திரோபவம்—1. பஞ்சகிருத்தியத்தொன்று. (சைவவி.) 2. மறைவு. (உ-ம்.) "செவ்வருட்குறியிலீசன்றிரோபவஞ்செய்தான்" (சேதுபு. சங்கரபாண். க0௨.)

திரோபவித்தல் — திரோபவஞ்செய்தல். (சி.சி. உ: க௫. சிவஞா.)

திரோபாவம்— பாசங்களுக்குச் சாமர்த்தியமுண்டாக்குதலாகிய அநுக்கிரகத்தைச்செய்து அதனுற் சேதநர்களை ஏற்றபோகங்களை வழுவாமல் உண்ணும்படிமறைத்தல். "திரோபவம்" 1 பார். (சைவப்பி. ௫சு.)

திரௌபதி — பஞ்சபாண்டவர் மனைவி. (உ-ம்.)"இன்னமுதச்-சொல்லாய்நல்லாய்மென்பூவாய்தோகாய்பாவாய்திரௌபதியே" (பாரத. திரௌபதிமாலை. சசு.)

தில்—1. ஆசையுங், காலமும், ஒழிந்தசொல்லுமாகிய மூன்றுபொருளைத்தருமோ ரிடைச்சொல். (உ-ம்.) "விழைவேகாலமொழியிசைதில்லே" (நன். சருக.) 2. ஓரசைச்சொல். (சூ. நிக. க0: கஎ.)

தில்லகம் — வெள்ளிலோத்திரம். (உ-ம்.) "முப்பாலைநறுக்குமூலங் — குட்டமகிழ்தில்லகமுஞுதி" (தைல. தைலவ. எச.)

தில்லம்—காடு. (உ-ம்.) "தில்லமும்பலதேசமுங்கடந்தவண்சென்றான்"(சேதுபு. மங்கல. எரு.)

தில்லி—டில்லிப்பட்டணம்.

தில்லியம் — 1. எட்சாட்டி, எள்ளுதிர்ந்த செடி.) 2. நல்லெண்ணெய். (உ-ம்.) "தில்லியமுமுருவினுக்கொருககரமதுரகிசிங்கி முக்கடுமுப்பலம்" (தைல. தைலவ. சு.)

தில்லை—1. ஒருமரம். (உ-ம்.) "தில்லைமுல்லைவன்னிபுன்னை" (சிவரக. தேவர்முறை. க.) 2. சிதம்பரம். (உ-ம்.) "தில்லை—மீதிலைந்திருவருட மேவியபலன்மேவும்" (சேதுபு. சேதுபல. ச.) [தில்லைமரக்காடு மிகுதியாயிருந்ததினால் இப்பெயர் வழங்கிற்று.]

தில்லைநாயகம்—ஒருநெல். முக்கூடற்பட் பிரபந்தத்திற்காண்க.

தில்லைவனம்—சிதம்பரதலம். (உ-ம்.) "தடமாடியர்தில்லைவனத்து" (கோயிற்பு. வியாக்கிர. க0.)

திலகம்—1. கலித்துறை. 2. சிந்தூரம். (பிங்கல. கஉ௨கரு.) 3. திலோதகம், எள்ளுநீரும்.

4. நுதற்குறி. (பிங்கல. கரு உச.) 5. பொட்டு. (உ-ம்.) "சிந்தூரத்திலகநுதற்சிந்தூரத்தின்மருப் பொசித்தசெங்கண்மாலே" (பாரத. கிருட்டி. கச.) 6. மஞ்சாடிமரம். (உ-ம்.) "திலகமும்வகு ளமுஞ்செங்கால்வெட்சியும்" (மணிமே. மலர் வன. கசுக.) 7. மேன்மை. (உ-ம்.) "திலகமா மெந்தைநாமஞ்சேர்ந்து" (சிவரக. காயத்திரி. உஎ.) மேலாதல் என்பர் நச்சினார்க்கினியர்.

**திலகலம்**—செக்கு.

**திலகற்கம்**—திலகடம், பிண்ணாக்கு.

**திலகாதுகன்**—வாணியன்.

**திலதண்டநன்**—வாணியன்.

**திலதம்**—1. சுட்டி. 2. நெற்றித்திலகம்.

**திலபநணி**— } சந்தனம். (மலையக.)
**திலபநணிகை**— }

**திலபவம்**—எண்ணெய். (உ-ம்.) "வடித்த படியேதிலபவம்வார்த்து"(தைல.தைலவ.உரு.)

**திலபாவி**—கொளுஞ்சிமரம்.

**திலபாவிநி**—சாதிமல்லிகை.

**திலம்**—1. எள். (உ-ம்.) "செவ்விளநீர்"பார். (பிங்கல. உகஎ௦.) 2. மஞ்சாடிமரம். (வைத்திய மூ. அக.)

**திலமயூரம்**—ஒருவிதமயில். [எள்ளுப்போ லும் புள்ளிகளையுடையமயில் என்றபடி.]

**திலரசம்**—எண்ணெய். (உ-ம்.) "திலரசமுங் கலந்து" (தைல. தைலவ. சுரு.)

**திலவகம்**—வெள்ளிலோத்திரம்.(வைத்திய மூ. அக.)

**திலாசா**—தைரியப்படுத்தல். [பார்சி.] திலா சாப்பண்ணிவருகிறேன். (வழக்.)

**திலீபன்**—ஓரரசன். (உ-ம்.)"தெண்ணீர்மை மதியனையான் திலீபனெனுந் தேர்வேந்தன்" (இரகு. அரசியற். எ.)

**திலோத்தமை**—1. ஓரரம்பை. (உ-ம்.) "திராரியேவவிஞல்வந்ததிலோத்தமை தன்னை க்கண்டார்" (பாரத. இந்திர.சுரு.) 2. பதுமை யின்றாய்; புத்திசேனன்தாய். (சிந்தா.)

**திவ்யசாதிசர்ப்பம்**—சர்ப்பபேதமிரண்டனு ளொன்று. அது தலைமையும் உத்தமசாதியும் கடவுட்பாம்புமாகிச் சிறப்புற்று அட்டதிக்குக ளில்வாசஞ்செய்யும் வாசுகி, அநந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என எட்டுப்பேதப்படும். (சீவ ரட். ருகக.)

**திவ்யம்**—திவ்வியம். (உ-ம்.)"தொண்டருக் கிசைந்ததிவ்யவிம்பகோடியே" (சிவரக. நந்தி கேசுர. கரு.)

**திவ்யத்தொனி**—தேவர்கள் அருகனுக்குச்செ ய்யு மெண்வகைச்சிறப்பினுள் ஒன்று. (சிந்தா.)

**திவ்வியது**—திவ்வியமானது.

**திவ்வியநாநம்**—சூரியகிரணம்பாயு மழைத் தூறலிற்படிதல்; இஃது எழுவகை நாநத்தொ ன்று.

**திவ்வியம்** — 1. இனிமையானது. (வழக்.) 2. தெய்வத்தன்மை, தைவிகம். (உ-ம்.) "திவ் வியநரம்பும்" (திருவிளை. திருநகரப் ருஉ.) 3. மேன்மையானது. (உ-ம்.) "அரவணிவேணி யான்- றிருவுளஞ்செய்ததிவ்வியமென்மொழிப் பொருளும்" (அரிச்ச. பு. மயாந. சரு.)

**திவ்வியமுத்திரை** — ஒருவகை முத்திரை. (சைவச. பொது. ருருச. உரை.)

**திவ்வியாத்திநம்**—சிந்தாமணி, சூடாமணி யென்னுமிரத்தினங்கள்.

**திவ்வியவருடம்** — தேவவருடம்; அது: மா னிடவருடம் முந்நூற்றறுபத்தைந்து கொண் டது.

**திவ்வியலிங்கம்** — அமூர்த்திசாதாக்கியம். (உ-ம்.) "மேலைத்திவ்வியலிங்கமெனவு - மூலத் தம்மமெனவுமொழிந்தனர்" (சதாசிவ. கஉ.)

**திவ்வியாதிவ்வியசம்பந்தம்** — தேவ இருடி யிடத்திருந்து மநுட இருடியிடத்துவந்த ஆகம சம்பந்தம்; இது ஐந்தாவது சம்பந்தம். (சி-லி. சசி. உ.)

**திவச்சுவான்**—துவாதசாதித்தரிலொருவன்.

**திவசகரன்**—சூரியன்.

**திவசம்**—நாள். (உ-ம்.) "கற்பாந்த - திவசம் பொரினும்" (பாரத. கிருட்டி. உருச.)

**திவடல்**—துவளுதல்.

**திவண்ட**—திளைத்த. (சிந்தா.)

**திவண்டது**—குழைந்தது. (சிந்தா.)

**திவண்டல்**—திவடல்.

**திவண்டன**—விளங்கின. (திருக்கோ. ரு௦௦ உரை.)

**திவம்**—நாள். (உ-ம்.) "திவநிலைமாற்றி - மற் றெங்கெழுந்தாலென்னசெங்கதிரே- திருச்சிற் றம்பலதேசிகர்கலம்பகம்" பார்.

**திவலை**—1. மழை. (சூ. நிக. க: அசு.) 2. மழைத்துளி. (பிங்கல. சுக.)

**திவவு**—செங்கோட்டியாழுறுப்பினுளொன் று; அது: நரம்புகளைவலிபெறக்கட்டும் வார்க் கட்டு. (உ-ம்.) "தந்திரிகரத்தொடுதிவவுறுத்தி யார்த்து" (சிலப். புறஞ்சேரி. க௦எ.)

**திவள**—1. அசைய. 2. விளங்க. (1,2 சிந்தா.)

**திவளல்**—1. அசைதல். (சிந்தா.) 2. சேர்தல். (உ-ம்.) "பன்மணிதிவள்கதிர்மேகலைதிளைக்கு மல்குலும்" (கூர்ம.திருக்கல். உஅ.) 3. துவளல். (சிந்தா.) 4. விளங்கல். (உ-ம்.) "தார்திவளப் பதுமுகனிவ்விருந்தோன்"(சிந்தா.கருக.உருரு.)

திவளுதல்—திவளல்.
திவா—பகல். (பிங்கல. உஉக.)
திவாகரம்—ஒரு நிகண்டு.
திவாகரன்—1. சூரியன். (உ-ம்.) "இலகொளி விட்டொருகோடிதிவாகரரென்னவிளங்கியிருப்பதுவே" (மதுரைப்பதிற்று. ருக.) 2. சூரியனது துவாதசராட்சதர்களாகிய மெய்காவலர்களுளொருவன். (வி-ணி. உசரு.) 3. திவாகரஞ் செய்தவன்.
திவி—1 சுவர்க்கலோகம். (உ-ம்.) "திவிதலபோகபேதந்திளைப்பர்" (சிவதரு.சிவதருமகக.) 2. சூரியன். (உ-ம்.) "திவிவரநாழிகைபத்தெனவாயுத்திசையுறமே" (செவுளிசாத்திரம்.( 3. புலி. [குறுக்கல்விகாரம்.] (பிங்கல. உசகக.)
திவிதிராட்சம் — கொடிமுந்திரிகை. (மலையக.)
திவிபிநாமம்-கொடிவேலி.(தைல.தைலவ.)
திளைக்கும்—அசையும். (சிந்தா.)
திளைத்தல்—1. அசைதல். (சிந்தா.) 2. அநுபவித்தல்.(உ-ம்.)"கண்டவடிவாற்றிளைப்பதற்கு" (திருவிளை. வளை. உரு.) 3. அழுந்தல், (உ-ம்.) "வள்ளற்றூரகலந்தன்னில்வனமுலைதிளைக்க" (நைடதம். அன்ன. கண். எ.) 4. அருகுதெருழுகுதல். (சிந்தா.) 5. ஒருதொழிலை யிடைவிடாது பயிறல். (சிலப். அரும்பத.) 6. நிறைதல். (சூ. நிக. கக: ளகரவெ. கூ.) 7. நெருங்கல். (ஐங்குறுநூ.) 8. பெருகுதல். (உ-ம்.) "இக்கடம்பவனத்தின்றுகண்டுவகைதிளைத்தேம்" (திருவிளை. இந்திர. எசு.)
திளைத்தவர் — தொழிலில் இடைவிடாது பயின்றவர். (சிந்தா.)
திளைப்ப—1. அசைய. (உ-ம்.) "திருந்துகாழல்குறிளைப்பவுஉஇ" (திருமுரு. உ0ச.) 2. விளையாட. (உ-ம்.) "இளையார்திளைப்ப" (புறநா. உருக.)
திறப்பட—கூறுபட. (சிந்தா.)
திற்றி—1. இறைச்சி. (பதிற்றுப்.) 2. தின்பன. (உ-ம்.) "தேனெடுகடமான்பாலுந்திற்றிகள்பிறவுநல்கி" (கந்தபு. வள். எகூ.) (மதுரைக்கா. உகக. அடி. உரை.)
திறக்குதல்—திறத்தல். (உ-ம்.)"கதவினைத்திண்ணமாகத்திறந்தருள்செய்மினே" (தேவார. திருமறை. க. திருநாவு.)
திறத்தல்—1. திறக்குதல். (உ-ம்.) "பூட்டு" பார். 2. பிளவுபடுதல். 3. வனுத்தல்.
திறத்தார் — பகுதியார். (உ-ம்.) "முனிவர்விண்ணுளாகியதிறத்தாரோடுமெனுகுதி" (கந்தபிரமயாக. கூ.)

திறப்படுதல்—1. சீர்ப்படல். 2. தேறுதல். 3. பலப்படுதல்.
திறப்பணம்—துறப்பணம், தமருசி.(குழூஉக்குறி.)
திறப்பு—1. காவலின்மை. 2. திறத்தல்.
திறம்—1. அதிகம். (வழக்.) 2. அரையெனும் ஓரிலக்கணம். (தைலவ.) 3. இடம். (மணிமே.) 4. உறுதி. (உ-ம்.) "அறைந்தவைகட்கெவ்விதத்துந்திறந்தான்மண்ணே" (ஊ தல. கஅ.) (பிங்கல. க0அஎ.) 5. ஐசுவரியம். 6. கற்பு. (சிலப்.) 7. காரணம். (பிங்கல. உஉஅரு.) 8. குறைநரம்புள்ளவீணை. (சூ. நிக. க0: சக.) 9. சாமர்த்தியம். 10. சுற்றம். (உ-ம்.) "புனைகடிமாலைமாதர்திறத்திது மொழிந்துவிட்டார்" (சிந்தா. சுரமஞ்ச. எஎ.) 11. தன்மை. (மணிமே.) 12. நிலைபேறு. (பிங்கல. கஅ0எ.) 13. வகை. (உ-ம்.) "அறமுதனான்குமகவிடத்தோரெல்லாந்திறமுறத்தேர்ந்துதெளிய" (வள்-மா. கூஅ.) கூறுபாடு. (புறநா.) 14. வரலாறு. (மணிமே.) 15. வலி. (பிங்கல. களசுக.)
திறம்பல்—1. தவறுதல். (உ-ம்.) "சிராத்தசேடத்தை முகந்துகொண்டு திறம்பிடாமல்" (ஏகாதசி. காலநிர். ருகூ.) 2. மாறுபடல் (உ-ம்.) "திரம்பாதேபணிசெய்துநிற்கையன்றேசீரடியார்தம்முடையசெய்திதானே" (சி. சி. கூ: கக.)
திறம்புதல்—திறம்பல்.
திறமை — 1. சமர்த்து. 2. வகைமை. 3. வலிமை
திறல்—1. உபாயம். (உ-ம்.) "ஒருநிருதனைவேறற்-கிரணத்திறல்குருவிருளிற்றரவர்" (கோயிற்பு. திருவிழா. ருசு.) 2. ஒளி. (உ-ம்.) "திறல்விடுதிருமணியிலங்குமார்பின்" (பதிற்று. சசு.) 3 வலி. (உ-ம்.) "அழலெனவுயிர்க்குமஞ்சுவருகடுந்திறல்" (திருமுரு. கசக.) 4. வெற்றி. (உ-ம.) "திறல்புனைந்துவைகினார்" (திருவிளை. வளைய. ருசு.)
திறலோன்—1. வலிமையுடையவன். (உ-ம்.) "செங்கோலறத்தின்முறையேசெலுத்துந் திறலோன்" (அரிச்சபு. மயாந. உசு.) 2. திண்ணியன். (சூ. நிக. உ: ரு0.)
திறவாளி—
திறவான்— } வலியன்.
திறவிது—செவ்விது. (உ-ம்.) "திருவிளைகடிமனைதிறவிதின்மொழிவாம்" (சிந்தா.காமக. கரு.)
திறவு—1. உளவு. (வழக்.) 2. திறத்தல், வெளிப்படை. (உ-ம்.) "திறவிலேகண்டகாட்சியே" (திருவாச. பிடித். சு.)
திறவுகோல்—தாட்கோல். (வழக்.)

திறன் — 1. காரணம். னகரம்போலி. 2. கூறுபாடு. 3. வரலாறு. (உ-ம்.) "நூலேநுவல் வோனுவலுந்திறனே"(நன். பாயி. ௩.) 4. வழி. (உ-ம்.) "அறனொடுபுணர்ந்ததிறனறிசெங்கோல்" பொருந. ௨௩௦.)

திறனல—நெறியல்லாதன. (சிந்தா.)

திறனில்யாழ் — நெய்தல்யாழ்த்திறம். (சூ. நிக. ௧௦: ௩௪.)

திறுதிறுத்தல்—
திறுதிறுப்பு—
திறுதிறெனல்— } அச்சக்குறிப்பு.

திறை—அரசிறை, இறைப்பொருள். (உ-ம்.) "ஒன்னார்திறைகொணர்ந்துபுகுவதையன்றி" (கூர்மபு. தக்கன்வமி. ௩௧.)

தின்—தெரிநிலைவினைப்பகுதி.

தின்பன—திற்றி. (பிங்கல. ௧௧௫௬.)

தின்மர் — தின்பவர். (உ-ம்.) "உண்மருந் தின்மரும்" (பதிற்றுப். ௨௪.)

தின்மார் —தின்மர். (பதிற்றுப்.)

தின்மை —தீமை. (உ-ம்.)"தின்மைநெறிவர வேண்டா" (பழமொழிவி. ௪.)

தின்றல் —உண்ணல். (சூ. நிக. ௯: ௬)

தின்றி—தீன்.

தின்று—கடித்து. (உ-ம்.)"வாளெயிறுதின்று" (கூர்மபு. தக்க. வமி. ௫௬.)

தின்னல்—1. அழித்தல். (உ-ம்.) "அறத் தினைத்தின்ற" (திருவிளை. மாயப். ௩௩.) 2. கடித்தல் (உ-ம்.) "வாளெயிற்றிற்றின்னவோ" (இராமா. சூர்ப்பந. ௧௨௧.) 3. மெல்லுதல். வெற்றிலைபாக்குத்தின்றான். (வழக்.)

தின்னி—தின்கிறவன். மிகத்தின்பவனுக்குக் கூறுவர். (வழக்.)

தின்னுகை—
தின்னுதல்— } தின்னல்.

தினவு—சொறி. (உ-ம்.) "பகைவர்ப்பெரு மையாற்றினவுறுதடந்தோள்" (கூர்மபு.தக்கன் வமி. ௫௦.) (பிங்கல. ௧௧௮௪.)

தினவெடுத்தல்—சொறிவுண்டாதல்.

தினுசு—வகை. (உ-ம்.) "தன்மூலம்"பார். (தைல. தைலவ. ௨௨.)

தினை —ஒருவகைத்தானியம்; அது: வெள் ளைத்தினை, அச்சித்தினை, காட்டுத்தினை, செந் தினை கருந்தினை, அணில்வாற்றினை எனப் பலவகைப்படும். (உ-ம்.) "மொய்வரைத்தினை மென்சோறு" (பெரியபு. கண்ணப். ௩௪.)

தினைக்குருவி—ஒருசிறு குருவி.

தினைச்சாமை—ஒரு சாமை.

தினைத்தாள்—அருவி. (பிங்கல. ௨௩௬௩.)

தினைப்பொழுது — மிகச்சிறிய பொழுது. (உ-ம்.) "தினைப்பொழுதமவப்பொழுதாய்ச்செ லுத்தாதார்சிவகணத்தின்செய்கையோரே" (சி வரக. நந்திமனு. ௩௬.)

## தீ.

தீ—1. அறிவு. (உ-ம்.) "தீதாவசவநிமலர் செல்வா" (கந்தரந். ௩௧.) 2. இனிமை. (உ-ம்.) "தீயவாஞ்சுவைப்பாலாவிற்றேவராவ திகம்" (திருவிளை. மூர்த்திவி. ௧௧.) 3. கொடுமை. (உ-ம்.)"தீமலியிடுக்கண்டீர்த்தசேவடி"(சேதுபு. சேதுச்சரு. ௩.) 4. கோபம். (சிந்தா.) 5. தெரி நிலைவினைப்பகுதி. 6. நரகம். (வள். ௧௬௮.) 7. நெருப்பு. (உ-ம்.) "பகற்பெய்யார்தீயினு ணீர்" (ஆசாரக்கோவை. ௬.) 8. பஞ்சபூதத் தொன்று.

தீக்கஞ்சி—ஆரதிகருப்பூரம், இது: தீபமேற் றுதற்குரிய கருப்பூரம். (வைத்தியபரிபா.)

தீக்கடன்—ஈமத்திலே அக்கினியாற்செய்யுங் கடன். (உ-ம்.) "நீர்க்கடனுந்தீக்கடனுஞ்செய் விப்பீர். (பாரதவெண்பா.)

தீக்கடைகோல்—ஞெலிகோல். (பிங்கல. ௫௦.)

தீக்கணம்—கணப்பொருத்தவகையுளொன் று; அஃது: இடைநேராகிய புளிமாங்கனி. (இலக்கணவி. ௮௦௦. உரை.)

தீக்கணவகை—தேயு, வாயு, அந்தரம், சூரி யன், இந்நான்குகணமுந்தீது.(பிங்கல.௪௬௪௩.)

தீக்கணுக்கிநி—ஒருநோய். (உ-ம்.) "விட மந்தீக்கணுக்கிநி" (தைல. தைலவ. ௧௨௩.)

தீக்கதர்—தீட்சதர்.

தீக்கதிக்கும்பச்சை—நாகப்பச்சை. (வைத் தியமூ. ௮௧.)

தீக்கருமம் — 1. அக்கினிகொண்டுசெய்யுங் கருமம். (உ-ம்.) "நவைவிநீக்கருமம்யாவும்"(கூர் மபு. பதிக. ௨௫.) 2. ஈமத்திற்செய்யும் அக்கினி காரியம். 3. தூர்க்கிரியை.

தீக்கரை—முருக்கு. (மலையக.)

தீக்கல் —தீக்காலுங்கல், அது: சூரியகாந்தக் கல்.

தீக்காரியம்—அக்கினிகருமம்.

தீக்காலி—ஓரசுரன். (பெரியபு.திருக்குறிப் புத். ௩௦.)

தீக்கிணதாராத்திரசய்யாநரகம்— ஒரு நர கம். (உ-ம்.) "மாறு-மஞ்ஞான்றுதீக்கிணதாராத் திரசய்யாநரகத்தடைப்பர்" (சேதுபு. துராசார. ௨௭.)

தீக்கித்தல்—தீட்சித்தல்.

**தீக்கிதர்**—தீட்சிதர். (சி. சி. உ: எ௯. மறை.)

**தீக்குணம்**—1. தூர்க்குணம்; அது: பொய் சொல்லல், கோபித்துச்சொல்லல், கோட்சொல்லல், பயனிலசொல்லல் என்னும் வாக்கின் குணம்நாலும்; களவுக்குப்போதல், வறிதேதொழில்செய்தல், கொலைசெய்தல் என்னும் காயத்தின் குணமூன்றும்; கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசையென்னும் மநசின் குணமூன்றும் ஆகப்பத்துவகைப்படும். (சி. சி அ: கஉ. நிரம்ப.) 2. தீயின்குணமைந்து. பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர்வேட்கை. (சிலப்ப.)

**தீக்குணர்**—கீழ்மக்கள். (சூ. நிக. உ: ௫௯.)

**தீக்குதல்**—தீயச்செய்தல்.

**தீக்குதித்தல்**—ஆவேசமுதலியவற்றாற் றீப்பாய்தல். (வழக்.)

**தீக்குருவி**—தழல்விழுங்கி. இது மலையாளதேசத்தில் மிகுதியாயுள்ளதென்பர். (வழக்.)

**தீக்குவெறுங்குகை**—சவுக்காரம். (வைத்தியபரிபா.)

**தீக்குறி**—தூர்க்குறி.

**தீக்கூர்மை**—1. இந்துப்பு. 2 திலாலவணம். (1, 2-வைத்தியபரிபா.)

**தீக்கை**—1. தீட்சை. (உ-ம்.) "அவன்செய் தீக்கைதகக்கொண்டு" (சைவச. பொது. கஉ௫.) 2. விரதநியமம்.

**தீக்கையோன்**—1. அரன். 2. குரு. 3. தீட்சைபெற்றோன்.

**தீக்கோள்**—தூர்க்கிரகம். உள்ளமுடையான் பார்.

**தீங்கனி**—1. இனிமையானபழம். 2. செல்விக்கனி. (உ-ம்.) "கைத்துக்கடிதடுங்காஞ்சிரந் தின்பவன்றீங்கனிவயத்துய்த்து" (திருநூற். ௫௬.)

**தீங்கினர்**—தீயோர்.

**தீங்கு**—1. குற்றம். (உ-ம்.) "தீங்கிலாதின்னங்கேட்கச்சிந்திக்கின்றேம்" (சிவரக. நந்திமனு. ௯.) 2. கேடு. (சூ. நிக. அ: ௬எ.) 3. துன்பம். (உ-ம்.) "ஓலமிட்டுத்தீங்கணைந்தோரல்லுக்கேறாய்" (திருக்கோ. ௧எக.)

**தீச்சதுநம்**—தூர்ச்சகுநம்.

**தீச்சுடம்**—அமுரி. (வைத்தியபரி.)

**தீச்சணம்**—மிளகு. (வைத்தியபரி.)

**தீச்சலம்**—கடனுரை.

**தீச்சனகம்**—இலுப்பை. (வைத்தியபரி.)

**தீச்சுடர்**—1. தீபம். (உ-ம்.) "தற்புகழ்தல்" பார். 2. வெடியுப்பு. (வைத்தியபரிபா.)

**தீச்சொல்**—1. சாபம். 2. சிறுசொல். (பிங்கல. உ0கஉ.) 3. பழிச்சொல்.

**தீஞ்சுவை**—நற்சுவை.

**தீஞ்சேறு**—இனியபாகு. (உ-ம்.) "அறையுறு கரும்பின்றீஞ்சேற்றியாணர்" (பதிற்று. எ௫.)

**தீஞ்சொல்**—இனியசொல். (உ-ம்.) "மாங்குயிலனையதீஞ்சொல்" (நைடத. சுயம்வர. கஉ.)

**தீட்டணபத்திரம்**—1. அலரி. 2. கொத்தமல்லி. (1, 2-வைத்தியபரிபா.)

**தீட்சணபுட்பம்**—கராம்பு. (மலையக.)

**தீட்சணம்**—1. கஞ்சாங்கோரை. (மலையக.) 2. கூர்மை. 3. நஞ்சு. (வைத்தியபரிபா.) 4. நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) 5. மிளகு. (உ-ம்.) "மலையசந்தீட்சணம்பா-லதிலிரண்டுமிழை" (தைல. தைலவ. ௯.)

**தீட்சணகண்டகம்**—முள்நாவல். (மலையக.)

**தீட்சணகந்தகம்**—சருள்ளி. (வைத்தியமூ.)

**தீட்சணகம்**—வெண்கடுகு. (மலையக.)

**தீட்சணசாரம்**—இலுப்பை. (வைத்தியபரி.)

**தீட்சணதண்டுலம்**—திப்பிலி. (மலையக.)

**தீட்சணபத்திரம்**—அலரி. (மலையக.)

**தீட்சணரசம்**—வெடியுப்பு. (வைத்தியபரிபா. அக.)

**தீட்சணியம்**—கூர்மை.

**தீட்சிதன்**—சோதிட்டோமம்புரிந்தோரது பரம்பரையில் வந்தவர்க்குரிய பட்டப்பெயர். (அபிதானகோச.)

**தீட்சாவரன்**—தீட்சிதன்.

**தீட்சித்தல்**—தீட்சைசெய்தல். (சி. சி. பாயிர. ௯. ஞாநப்.)

**தீட்சை**—1. உபதேசம். அது: சட்சுதீட்சை, பரிசதீட்சை, வாசகதீட்சை, மாநததீட்சை, சாத்திரதீட்சை, யோகதீட்சை, ஔத்திரிதீட்சை என எழுவகைப்படும். அவற்றுள், மச்சஞ்சினையைப்பார்த்துத்தானுக்குமாறுபோல ஆசாரியன் உண்மையிலே சித்தத்தைவைத்து ஞாநதிருட்டியைவிழித்து அத்துவாக்களிற் கட்டுண்ட கன்மங்களைத்தகித்து இராகுவினாலே விடப்பட்ட சந்திரனைப்போல மலத்திரயங்களினின்று சீடனைநீக்குவது சட்சுதீட்சை. பஞ்சப்பிரம சடங்கங்களைச் சொரூபமாகவுடைய பஞ்சாட்சரத்தை வலக்கையிலேந்திப் பிராரத்தவாதனையை நீக்குவதுபொருட்டாகச் சீஷனுடையதலையிலே சோதிமயமாகவைத்து அந்தச் சோதிமயமான தடையை உள்ளும் புறம்பும் பரிபூரணமானதாகத் தியானித்து அந்தக்கையாலே அவனுடைய தேகத்தில் பஞ்சகலாத் தானங்களைப் பரிசித்து வாதனையையொழிக்குமது பரிசதீட்சை. பஞ்சாக்கரத்தின் பொருளாயிருக்கிற திரிபதார்த்தங்கள் ஞாந ஒளியுடனேகூடி உபதே

சிக்குமது வாசகதீட்சை. சிஷனைத்தானுகப் பாவிக்குமது மானததீட்சை. இந்த முறைமைகளெல்லாம் இவனுக்குச்சந்தேகங்கள்தீரச் சாத்திரங்களிலே கேட்டல், சிந்தித்தல், தெளிதல் உண்டாக்குமது சாத்திரதீட்சை. அட்டாங்கயோகங்களினுலேமனேபாவனையைக்கெடுத்து நிட்டையிலே புரிவிக்குமது யோகதீட்சை. [இவ்வாறு தீட்சையும் பக்குவர்க்குச்செய்வது.] குண்டமண்டலத்தோடேசெய்யுமது ஔத்திரிதீட்சை. 2. சங்கற்பம்.

தீட்டணசாரம்—இருப்பை. (மலையக.)

தீட்டணம்—கஞ்சாங்கோரை. (மலையக.)

தீட்டல்—1. எழுதுதல். (பிங்கல. உகஉச.) 2. கோதல். (உ-ம்.) "கூந்தறீட்டி" (புறநா.சுஉ.) 3. தீட்டுதல். (உ-ம்.) "ஊட்டி" பார். 4. துலக்கல். (பிங்கல. உகசஉ.)

தீட்டு — 1 அழுக்கு. 2. ஆசௌசம். 3. எழுத்து. (உ-ம்.) "காரணமூலகுக்குதவுமின்னடியார்கையெழுத்திட்டதீட்டன்றோ" (மதுரை. பதிற்று. சுஎ.) 4. சித்திரித்தல். (உ-ம்.) "தீட்டார்மதில்புடைசூழ்" (திருவாச-திருவப். கூ.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. பரிசித்தல், தீண்டுதல். (உ-ம்.) "ஒட்டு" பார். 7. மகளிர் சூதகம். (வழக்கு.)

தீட்டுக்கல்—சாணைக்கல்.

தீட்டுகல்—தீட்டுக்கல்.

தீட்டுதல் — 1. அரிசிதீட்டல். (வழக்.) 2. எழுதுதல். (உ-ம்.) "கயிற்கூடுகண்ணிடையாகாசந்தீட்டுதல்கைக்கரிதே" (மறைசை. எக.) 3. கட்டுதல். 4. கூராக்குதல். (வழக்.)

தீடன்—கஞ்சாங்கோரை.(வைத்தியபரிபா.)

தீண்டல்—அணுகல். (உ-ம்.) "தீண்டிலெடுத்தவர்தீவினைதீர்ப்பவன்" (திருக்கோ. உசகூ.) 2. தொடுதல். (பிங்கல. உகஙகூ.) 3. பாம்பு முதலியனதீண்டுதல். (உ-ம்.) "வாளரவந்தீண்டிடவேவீழ்ந்துமாண்டு" (சிவரக. அபுத்திபூ. உக.)

தீண்டியம்—பவளக்குறிஞ்சி. (வைத்தியபரிபாடை.)

தீண்டுகை—தீண்டுதல்.

தீண்டுதல் — 1. தீண்டல். 2. விஷந்தீண்டல்.

தீத்தட்டிக்கல்—தீக்கல், இதனலெ தீயுண்டாக்குவர். (வழக்.)

தீத்தம்—1. சிவாகமமிருபத்தெட்டினென்று. (இரண்டாவது சைவவினுவி. தீப்தம் தீத்தமென நின்றது.) 2. தீர்த்தம், ரகரங்கெட நின்றது.

தீத்தர்—சதாசிவதத்துவத்திலிருக்கும் அணுசதாசிவர் பதின்மருளொருவர். (சி. சி. க: உடு. மறை.)

தீத்தல்—தீப்பொறிகளாக்கல். (உ-ம்.) "இமைத்தீத்தொளிர்செங்கண்" (கூர்மபு. அட்டமூர்த்த. கூ.)

தீத்தா—வட்டத்திருப்பி. (மலையக.)

தீத்தாங்கம்—மயில். (வைத்தியபரிபா.)

தீத்தியம்— அரத்தை. (மலையக.)

தீத்திரள்—ஊழித்தீ. (பிங்கல. சுடு.)

தீத்திறம்—கொலை. (மணிமே.)

தீத்தெய்வம் — அக்கினிதேவன், பாவகன் என்று பெயர். (சூ. நிக க: ருஉ.)

தீத்தொழில்—1. அக்கினிகருமம். 2. தீச்செய்கை. (உ-ம்.) "தீத்தொழிலகன்றித்திரிதந்து. (நன்னூ. உயிரீற். ரு. உரை.)

தீத்தோபலம் — சூரியகாந்தக்கல். (வைத்தியமூ )

தீதல்—சருக்குதல்.

தீது—1. குற்றம். (உ-ம்.) "தீதகலேகாதசிதான்" (ஏகாதசி, காலநிர்ண.எ.) 2. கொடுமை.) (உ-ம்.) "புலைஏன்செய்ததீதகமுணர்ந்து" (திருவிளை. அங்கம். ௪௦) 3. கோள். (பிங்கல. கஅஅஎ.) 4. தீமையுடையது. (உ-ம்.) "அறனழீஇயல்லவைசெய்தலிற்றீதே" (வள். கஅஉ.) 5. துன்பம். (ஐங்குறு.) 6. பாவம். (உ-ம்.) "உள்ளத்தாலுள்ளலுந்தீதே" (வள். உஅஉ.) (7) மரணம். (சிந்தா.)

தீந்தொடை—1. நரம்பு. (உ-ம்.) "தீந்தொடையகரவீணைத்தெள்விளி" (சிந்தா.காந்தருவ. ககசு.) 2. யாழ். (சிந்தா.)

தீநட்பு — தீக்குணத்தாரோடுளதாயநட்பு. (வள். அஉ-ம் அதி.)

தீநம்—கேடு.

தீநர் — 1. இரப்போர். (சூ. நிக. உ: சஅ.) 2. தீமைசெய்வோர் (உ-ம்.) "சிவபத்தரல்லாத்தீநருக்கும்" (சிவரக. பசாசு. உக.)

தீநன்—1. இரப்போன். (சூ. நிக. உ: சஅ.) 2. தரித்திரன்.(சூ. நிக. உ: சக.)3.பெருந்தீநன். (வழக்.)

தீநா — கப்பற்காரர்துறைபிடிக்கக் கொழுத்தின வெளிச்சம். (பரதவர் வழக்கு.)

தீநாய்—ஒருவகை நாய். (மணிமே )

தீநிறம்—மாந்தளிர்க்கல். (வைத்தியமூ.அக.)

தீநீர்—திராவகம். (வைத்தியமூ. அக.)

தீப்பியம்— அசமதாகம். (வைத்தியமூ.)

தீப்பிரகாசி—குங்கிலியம். (மலையக.)

தீப்பிராயகம்—ஓமம்.(வைத்தியபரிபா.அக.)

தீப்பு—சருக்குதல்.

**தீப்புட்பம்**—சண்பகப்பூ. (வைத்தியமூ.)

**தீப்பொறி**—நெருப்புப்பொறி. (உ-ம்.) "தீப் பொறியொன்றுற்றுல்" (சிவரக. அபுத்திபூருவ. ௬.)

**தீபக்கால்**—1. விளக்குத்தண்டு. 2. விளக் கேந்துகருவி. (திருவிளை. மூர்த்திவி. உஅ.)

**தீபகம்**—1. ஓரலங்காரம், அஃது ஒருசொல் குணமுதலிய நான்கனுள் யாதேனும் ஒன்ற னைக்குறித்து ஒருகவியிலே ஓரிடத்தினின்று பலவிடத்துஞ்சென்று பொருளைவிளக்குவது. (தண்டி. ௩அ.) [ஓரிடத்துவைக்கப்பட்ட விளக் கானது பலவிடங்களிற்சென்றுபொருளைவிளக் குதல்போல இஃது ஓரிடத்துநின்று பலவிடங் களிலுஞ்சென்று பொருள்களை விளக்குதலா லே தீபகம் எனப்பட்டது.] 2. பார்வைமிருகம். (உ-ம்.) "சகலர்க் தழும்மலமாய்ந்தறுக்கப்-பாங் குறுதீபகம்போ லுருக்கொண்டு பரன்வருமே" (திருவாத. திருப்பெருந். கசு. உரை.) 3. மஞ் சள். (வைத்திய.) 4 விளக்கு.

**தீபகாந்தி**—வயிரக்கல்.

**தீபகாந்தியோன்**—தீபகாந்தி.

**தீபசாலம்** — சோதிவிருட்சம். (உ-ம்.) "திளைத்தவேர்முதற்கிளையுறவிரிவன தீபசால மும்போன்ற" (பாரத. காண்டவ. ௩ரு.)

**தீபதிச்சம்**—வாலுளுவை. (மலையக.)

**தீபதைலி**—ஆமணக்கு. (வைத்திலமூ.)

**தீபநம்**—1. ஆகாரம். (உ-ம்.) "தீபநங்கள் சென்றதினால்" (அகத். குருநாடி. உ0க.) 2. மஞ்சள். (வைத்தியபரிபா.) 3. வளரப்பிரகா சிக்கச்செய்யுங்கருவி. (சிந்தா.)

**தீபளி**—கயா. (வைத்தியபரிபா.)

**தீபபுட்பம்**—சண்பகப்பூ. (மலையக.)

**தீபம்**—1. இரவெரிமரம் இது, சோதிவிருச் சம். (உ-ம்.) "தேக்கிலாரநாகஞ்சிந்துரந்திலகந் தீபம்" இரகு. ஆற்று. கக.) 2. சோதிநாள். (சூ. நிக. க: எ௩.) 3. தீவு. (உ-ம்.) "பல்வேறு தீபத்துச்செங்கோன்மை. (திருவிதவூரடி. அ.) 4. விளக்கு. (பிங்கல. சசு)

**தீபமரம்**—சோதிவிருக்ஷம். (உ-ம்.) "தீபமா மரங்களாலும். (பெரியபு. கண்ணப்ப க௩௧.)

**தீபாக்கிநி**—ஒருசுடர்கொண்டெரியும் நெ ருப்பு. காடாக்கிநி, கமலாக்கிநி, தீபாக்கிநி என் னு மூவித அக்கினியிலொன்று: அது. தீபம்போ லொருசுடராக நின்றெரிவது ) ஒருவிற்குவைத் தெரிப்பது என்பர். (வைத்தியபரிபா. அக.)

**தீபாந்தம்**—பெருச்சாளி. (வைத்தியமூ.)

**தீபாவலி**—ஐப்பசிமாசத்தில் அபரபக்கச் சதுர்த்தசியில் உஷத்காலத்தில் நரகாசுரனைத் திருமால் கொன்றதனால் இவ்வேளை எழுந்து அப்பியங்கஸ்நாநஞ்செய்துகொண்டு கோடி தரித்துப் பலகாரங்களருந்தி யுலகத்தார் மங்க ளங் கொண்டாடவேண்டுமென அவ்வசுரன் வேண்டுகோளால்திருமால்அங்ஙனமேயாகவென் றதினமாம். இத்தினம் தைலத்தில் இலக்குமி யும் வெந்நீரிற்கங்கையும் வசிக்கின்றார்கள் ஆகையால் தைலாப்யங்கஞ் செய்துகொண்டு வெந்நீரிலே ஸ்நாநஞ்செய்யச் சகல தரித்திரத் தையும் ஒழிக்கின்றாராவர். ஸ்நாநஞ்செய்தவுட னே அலங்காரமாய்த்தரிக்கும் ஆபரணங்களா லும் புதுவத்திரங்களினாலும் அதிகமேன்மை யான சம்பத்தையுமடைகிறார். (அபிதானசி.)

**தீபாவளி**—தீபாவலி.

**தீபிகை**—1. சாந்தியதீதகலையிற் சிவதத்து வத்திருக்கும் பத்துப்புவநங்களுளொன்று. (சி- வி. கிரி. உக.) 2. பிரமரந்திரத்துக்குள்ளான ஒரு சிவகலை. (பௌட். எ௫௩.) 3. விளக்கு. (சூ. நிக. க: ௫உ.)

**தீம்**—இன்சுவை. (பிங்கல. கசுக௫.)

**தீம்பண்டம்** — 1. இனிய பழம். (சிந்தா.) 2. நற்பணிகாரம்.

**தீம்பர்**—1. கீழ்மக்கள். (சூ. நிக. உ: ௫௪.) 2. தீங்குசெய்வோர். (உ-ம்.) "சிவன்பொற்கோயிற் செம்பொனுங்கவர்ந்ததீம்பர்" (அருணகிரிபு. நாட்டு. உ௩.)

**தீம்பாலை**—திருதிவாதிமரம்.(வைத்தியமூ- அக.)

**தீம்பு**—1. கீழ்மை. 2. தீது. (வழக்.)

**தீம்புழல்**—இனியபண்ணியாரம். (உ-ம்.) "தீம்புழல்வல்சிக்கழற்கான்மள்ளர்" (மதுரை. ௩௧௫.) [இருப்பைப்பூவென்றுங்கூறுவர்.]

**தீம்புளி** — கருப்புக்கட்டிகூட்டிப்பொரித்த புளி. (உ-ம்.) "இருங்கழிச்செறுவிற்றீம்புளி வெள்ளுப்பு" (மதுரை. ௩௧அ.)

**தீம்பூமரம்** — ஒருமரம். (உ-ம்.) "நீரதீம்பூ மரநிரந்ததக்கோலமும்" (சிந்தா. விமலை. க௩.)

**தீமநுகல்**—ஒரு சரக்கு; அது: வைப்புப்பாஷ முப்பத்திரண்டினொன்று.

**தீமை**—1. இனிமை. (ஐங்குறு.) 2. கேடு. (உ-ம்.) "எனது - தீமைவிழிக்கடைநோக்கி" (கோயிற்பு. பதஞ்சலி. க௫.) 3. கொடுமை. (புறநா.)

**தீய**—1. இனிமையான. 2. தீதான. (1, 2- புறநா.)

**தீயது**—1. இனியது. 2. தீங்குள்ளது.

**தீயபுட்பம்**—சண்பகப்பூ. (மலையக.)

**தீயம்**—தித்திப்பு. [தெலுங்கு.]

**தீயர்** — 1. கீழ்மக்கள். (சூ. நிக. உ: ௫௪.) 2. பொல்லாதவர்கள்.

**தீயல்**—தீதல்.

**தீயளி**—காயா. (வைத்தியமூ. அக.)

**தீயன**—1. இனிமையுள்ளன. 2. தீங்குள்ளன. (உ-ம்.) "சாந்தனையுந்தீயனவேசெய்திடினும்" (மூதுரை. ௬௦.)

**தீயாக்கீரை**—பொன்னாங்காணி. (மலையக.)

**தீயாடி**—சிவன். (உ-ம்.) "வீயினன்ன-தீயாடி சிற்றம்பலமனையாள் தில்லையூரனுக்கு" (திருக்கோ. ௬௭௪.)

**தீயார்** — தீயோர். (உ-ம்.) "தீயாரைக்காண்பதுவுந்தீதே" (மூதுரை. ௯.)

**தீயோர்**—கீழோர். (பிங்கல. அ௭உ.)

**தீர்**—தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "தீர்வழிதேற்றமிலையேல்" (இன்னிசை. கச.)

**தீர்க்கக்ஷணம்**—வெண்சீரகம். (வைத்தியமூ. அக.)

**தீர்க்ககந்தை** — மெருகன்கிழங்கு. (தைலவ. தைலவ.)

**தீர்க்ககாண்டம்**—சோரைப்புல். (வைத்தியமூ. அக.)

**தீர்க்கசத்திரமகம்**—ஒருவகையாகம். (உ-ம்.) "தீர்க்கசத்திரமகநடத்தினர்" (சேதுபு. இலக்கும. எ.)

**தீர்க்கசந்தி**—வடமொழிப்புணர்ச்சியி னொன்று. அது: அ ஆக்களின்பின் ஆவும் இ ஈக்களின்பின் ஈயும் உ ஊக்களின்பின் ஊவும் தோன்றல். (நன். மெய்யீ. கஅ. உரை )

**தீர்க்கசாலம்**—ஆச்சாமரம். (வைத்தியமூ. அக.)

**தீர்க்கணம்**-வெண்சீரகம். (வைத்தியபரிபா.)

**தீர்க்கதண்டம்**—1. ஆமணக்கு. (வைத்தியமூ. அக.) சாட்டாங்கதண்டம்.

**தீர்க்கதமன்**—ஒரு முனிவர். (உ-ம்.) "தீர்க்கதமனவன்குமரன்கக்ஷீவான்" (சேதுபு. அகத்திய. எ.)

**தீர்க்கதரிசி**-முக்காலவருத்தமானமறிவோன்.

**தீர்க்கதரு**—பனைமரம். (வைத்தியமூ. அக.)

**தீர்க்கதாரு**—நிலைப்பனை. (மலையக.)

**தீர்க்ககந்தை**-மெருகன்கிழங்கு. (தைலவ.)

**தீர்க்கநாசிகை** — ஐம்பத்தொருருத்திரசத்திகளிலொருத்தி. (வி-ணி.)

**தீர்க்கபத்திரம்**—உள்ளி. (வைத்தியபரிபா.)

**தீர்க்கபர்ணி**—வாழை. (தைலவ.)

**தீர்க்கபன்னி**—தீர்க்கபர்ணி. (உ-ம்.) "செங்கீரை" பார்.

**தீர்க்கபாகன்** — திருதராட்டிரன் குமரன். (அபிதானசி.)

**தீர்க்கபாது**—1. சதருத்திரரிலேவருணதிக்கிலிருக்கும் சதருத்திரரிலொருவன். (வி-ணி. உ௭௦.) 2. நிவிர்த்திகலையிற்பிருதுவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவனங்களு ளொன்று. (சி-லி. கிரியா. உக. உரை.)

**தீர்க்கபாதபம்**—தென்னமரம். (மலையக.)

**தீர்க்கபுயன்** — திருதராட்டிரன் குமரன். (அபிதானசி.)

**தீர்க்கம்**—1. ஆறுமேழாமிராசிகள். 2. நிச்சயம். (சூ. நிக. அ: சசு.) 3. நீளம். 4. நெடில். (பி. வி. ரு.)

**தீர்க்கமுகி** — ஐம்பத்தொரு உருத்திரசத்திகளி லொருத்தி. (வி-ணி. உ௭சு.)

**தீர்க்கமூலம்**—1. தொட்டாற்சுருங்கி. (வைத்தியமூ. அக.) 2. முடக்கொற்றான். (வைத்தியமூ. அக.)

**தீர்க்கரதம்**—பன்றி. அதிகப்புணர்ச்சிசெய்வது. (வைத்தியமூ. அக.)

**தீர்க்கராசிகை**—மஞ்சள். (வைத்தியபரி.)

**தீர்க்கலேகிதம்**—துளசி. (வைத்தியபரிபா.)

**தீர்க்கலோகிதம்**—1. சிலிந்தி. 2. தருப்பை. (1, 2-மலையக.)

**தீர்க்கலோசநன்**—திருதராட்டிரன்குமரன். (அபிதானசி.)

**தீர்க்கவசன்** — திருதராட்டிரன் குமரன். (அபிதானசி.)

**தீர்க்காதேவி**—நிருதியின்றேவி. (அபிதானசி.)

**தீர்க்கவிருக்கம்**—பெருமரம். (மலையக.)

**தீர்க்கவைரம்**—நெடுநாளையில் விரோதம்.

**தீர்த்தகர்**—சமணமுனிவர்.

**தீர்த்தகரர்**—, **தீர்த்தங்கரர்**— } சமணகுருக்கண்மார். அவர் ஏமசந்திர, காகசந்திர, நேமிசந்திர, ஏகிசந்திர, மாகசந்திர, அருகந்த, ஆதிநாத, அசகள, பாரீஸ்வநாத, சௌகத, சுருதிகீர்த்தி, ஸ்ரீமதகாமரகிதமுனிசுவாமி முதலிருபத்துநால்வர். (த. நி. போ.)

**தீர்த்தம்** — 1. ஆகமம்; ஜை. (சிந்தா.) 2. சுத்தம். 3 திருமஞ்சநநீர். (உ-ம்.) "இன்மலர் கந்தநீர்த்தமிவற்றொடுமொருசாருய்ப்ப" (கந்தபு. திருக்கல். எசு.) 4. திருவிழா. 5. நீர். (4,5-சூ. நிக. கக: ரகரவெ. கரு.)

**தீர்த்தர்**—1. கடவுளர். 2. பரிசுத்தர். (உ-ம்.) "தீர்த்தராய்முத்தீவேட்குஞ் செல்வர்தம் மிருக்கைசொல்வாம்" (திருவிளை. நகர. அஉ.)

**தீர்த்தல்**—1. ஒழிதல். (உ-ம்.) "பெண்முதலாப்பற்றறுதீர்த்தவெம்பாவனைதீர்த்த" (திருநூற். அஅ.) 2. தீர்மானித்தல். 3. நீக்குதல். (உ-ம்.) "இடுக்கண்டீர்த்தசேவடி" (சேதுபு. சேதுச. க.)

**தீர்த்தன்**—1. அருகன். (உ-ம்.) "பெண்முத லாப்பற்றதுதீர்த்தவெம்பாவனைதீர்த்த" (திரு நூற்.அஅ.) 2. குரு. (பிங்கல.எஅஉ.)3. சிவன். (உ-ம்.) "உலகுயிர்யாவுந்தீர்த்தன்மேனிகொள் பேரொளிநோக்கியேதியங்கி"(கந்தபு.ததீசிஉத். கசஎ.) 4. பரிசுத்தன். (உ-ம்.)"புலவன்றீர்த்தன் புண்ணியன்புராணன்"(மணிமே. மணிமேகலா. தோன். கூஅ.)

**தீர்த்திகை**—1. தீர்த்தம். (உ-ம்.) "தீர்த்தி கைச்சினைச்சிகரநண்ணினான்" (கந்தபு. வள்ளி யம்மை. ருகூ.) 2. யாறு. (பிங்கல. ருருo.)

**தீர்தல்**—ஒழிதல். (உ-ம்.) "சிந்தையிலுறை பவற்குருவக்தீர்ந்ததால்" (இராமா. சூர்ப். கஉ.)

**தீர்ந்தவன்**—1. துறந்தவன் 2. தேறினவன். (மருதூரந்தாதி. உ.)

**தீர்ந்தன்று**—தீர்ந்தது. (புறநா.)

**தீர்ப்பான்**—வைத்தியன். (தைலவ.

**தீர்ப்பு**—1. தீர்மானம். (வழக்.) 2. நிவிர்த்தி.

**தீர்பு**—தீர்வு. (உ-ம்.) "பாடினமாயையாற் றீர்புரைப்பீரென" (சேது. இலக்கும் கக.)

**தீர்மானம்** — 1. தாளத்தீர்ப்பு. 2. தீர்ப்பு. (1, 2-வழக்.)

**தீர்மானித்தல்**—1. தாளந்தீர்த்தல். 2. நிச்ச யித்தல்.

**தீர்மானிப்பு**—தீர்மானம்.

**தீர்வினை**—வினைத்தீர்வு. (உ-ம்.)"சீதவறன்மூ ழ்கிடுபுதீர்வினையடைந்தான்"(சேது.காசிப்.கூ.)

**தீர்வு**—1. தீர்தல். (உ-ம்.) "மையதீர்வுறவெ ய்தனன்" (சேதுபு. சேதுவந். க.) 2. பிராயச் சித்தம். (உ-ம்.)"பற்றியபழிக்குத்தீர்வு"(திருவி. வரகுணனுக்குச்சிவ. எ.)

**தீர்வை** — 1. கிரி. (பிங்கல. உருஉரு.) 2. சுங்கம். (வழக்.)

**தீர்வைத்துறை**—ஆயத்துறை. (வழக்.)

**தீர**—1. நீடித்த. (உ-ம்.) "தீரகாமமுஞ்செவ் வியுமிகும்படிதிளைத்தான்" (பாரத. குருகுல. அ.) 2. முற்றாக. (உ-ம்.) "இன்னந்தீரத்தேரு மின்" (திருவி. பழிய. உகூ.)

**தீரகாகளம்**—வெற்றிச்சின்னம். (உ-ம்.) "தீர காகளம்பெறுதலின்" (பாரத. பாயிர. கஎ.)

**தீரத்துவம்**—1. உறுதி. 2. தைரியம்.

**தீரத்துறந்தார்**—முற்றத்துறந்தார். (உ-ம்.) "தலைப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி - வலைப் பட்டார்மற்றையவர்" (வள். கூசஅ.)

**தீரம்**—1. கரை. (உ-ம்.) "அதன்றீரத்தோர்" (பிரமோத். கூ: உ.) 2. சிறுவரம்பு. (சூ. நிக. ரு: கஅ.) 3. மஞ்சள். (வைத்தியபரிபா.) 4. மகத்தைரியம். 5. வெற்றி. (உ-ம்.) "தீரகாகளம் பெறுதலின்" (பாரத. சிறப்பு. கஎ.)

**தீரன்**—1. சதருத்திரரில் அதோபாதத்திருக் கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி உஎo.) 2. திண்ணியன். (உ-ம்.) "இறையவனடியார்க் குளவன்ஞானதீரன்" (சிவரக. சிவதன்மா. உஎ.)

**தீராமை**—நீங்காமை. (உ-ம்.) "திருவினைத் தீராமையார்க்குங்கயிறு" (வள். சஅஉ.)

**தீவகம்**—தீபகம்.

**தீவகமிருகம்**—ஒரு பார்வைமிருகம்.(உ-ம்.) "தீவகமிருகந் - தளிருடைக்கரங்கொடாடப்பார் சிலர்தாமே" (சேதுபு. சங்கரபா. கசு.)

**தீவம்**—விளக்கு. (உ-ம்.) "தீவந்தோன்றிய மூழைத்துணையெனத்தெறுகண்ணார்" (இரா மா. படைகாட்சி. உக.)

**தீவர்த்தி**—ஒரு விளக்கு. (வழக்.)

**தீவலஞ்செய்தல்**—கலியாணச்சடங்கிலொ ன்று. அஃது: அக்கினிப்பிரதட்சணம்பண்ணல். (சூ. நிக. கூ: ச.)

**தீவாந்தரம்**—தீவுகள். (உ-ம்.) "விரிபொழிற் சாலிவேய்மிகுகிள்ளைவேறுதீவாந்தரம்" (திரு விளை. நரிபரி. கoஎ ) 2. வெளி.

**தீவான்**—கறையான். (வைத்தியபரிபா.)

**தீவி**—1. ஒருபட்சி. 2. புலி. (பிங்கல.உசகக.)

**தீவிகை**—தீபம். (சிந்தா.)

**தீவிதிராட்சம்**—கொடிமுந்திரிகை. (வைத் தியமூ. அக.)

**தீவிய**—இனிய. (சிந்தா.)

**தீவியது**—இனியது.

**தீவிரகந்தம்**—துளசி. (வைத்தியபரிபா.)

**தீவிரதரம்** — நால்வகைச்சத்திநிபாதங்களு ளொன்று. அது: தீ. இரும்பைத்தன்வண்ண மாக்குவதுபோலச் சிவம் ஆன்மாவைத்தன்வண் ணமாக்கிச் சிவாநந்தம்மேலிடச்செய்துநிற்றல். (திருவாத. திருப்பெரு. கூஎ. உரை.)

**தீவிரம்**—1. சூரியகிரணம். (பிங்கல.உகஉ.) 2.நால்வகைச்சத்திநிபாதத்துளொன்று.அஃது என்னின்கணெண்ணெய் இனிது விளங்கித் தோன்றினும் பிறித்தறியப்படா துடனிற்றல் போல ஆன்மாவின்கட் சிவம் இனிதுவிளங்கித் தோன்றினும் பிரித்தறியப்படாதுடனிற்றல். (திருவாத. திருப்பெரு. கூஎ. உரை.) 3. பிரா ரத்தமூன்றனுளொன்று. அஃது எல்லாரையும் வாதிக்குமாறுலும் சிவஞானிகளை மிகுதியும் வா தியாது. (சி. சி. கo. சு: ஞானப்.)

**தீவிளங்துவைரம்**—மீனம்பர். (வைத்தியமூ. அக.)

**தீவிளி**—காய். (சூ. நிக. ச: ருக.)

**தீவிழித்து**—தீப்புறப்படவிழித்து. (சிந்தா.)

**தீவினை**—1. கொடுமை. (சூ. நிக. கக: கஅ.) 2. பாவம். அஃது இருவினையினொன்று

(உ-ம்.) "தீவினைக்கிடமாய்ப்பூண்டவூனருந்தி" (பிரமோத். சு அ.) (பிங்கல. கஅசக.)

தீவு—1. இனிமை. 2. கடலிடைக்குறை, இது எழுவகை. (சூ. நிக. கஉ: சுக.) (உ-ம்.) "ஆரமுதின்கடல்வேலிசெழுந்தருவாய்மணிபம் பியதீவூடே" (ஆனந்தலகரி. அ.) 3. தீதல்.

தீவேட்டல்—1. அக்கினிக்குமுன் விவாகஞ் செய்தல். (உ-ம்.) "உலகறியத்தீவேட்டானென் னுமதுவென்னேடி" (திருவா. திருச்சா. கூ.) 3. யாகம்பண்ணல். (உ-ம்.) "மூத்தீவேட்கு மிவர்" (திருவிளை. உலவாக்கிழி. கஉ.)

தீற்றல்—உண்பித்தல். (சிந்தா.)

தீற்றி—பூசி. (சிந்தா.)

தீற்றுக்கல்—மணியாசிக்கல். (வழக்.)

தீற்றுதல்—1. சுத்தம்பண்ணுதல். 2. சுவர் முதலியமெழுகுதல் (வழக்.) 3. தின்னப்பண் ணுதல். (உ-ம்.) "நென்மாவல்சிதீற்றிப்பண் ணுட்" (பெரும்பாணு. நூசுகூ.) 4. பூசுதல். (உ-ம்.) "சிறையைந்துமிடுதுமென்பார்தீற்று துஞ்சிருங்கியென்பார்" (சிந். பதுமை. ககஉ.)

தீற்றுப்பலகை—மணியாசிப்பலகை. (வழக்.)

தீன்—உணவு.

தீன்பண்டநல்கல் — உணப்பொருளீதல். அஃது அறம் முப்பத்திரண்டினுென்று. (சூ. நிக. கஉ: கருடு.)

தீனி—தீன், தின்னப்பட்டது. (உ-ம்.) "தீனி யிலாசைதெவுட்டாதுதேவர்க்கும்" (திருமந் திரம.)

## து.

து—1. ஒரு விகுதி. இவ்விகுதி அது என் றூற்போலப்பெயரிலும், குழையதுஎன்றுற்போ லவினைக்குறிப்புமுற்றிலும், அவ்வினையாலணை யும்பெயரிலும், பாய்த்து என்றுற்போலத் தொழிற்பெயரிலும், வந்தது வந்து வருது என் பனவற்றிற்போலத் தெரிநிலைவினைமுற்றிலும், வரும். (நன்னூலிற்காண்க.) 2. ஓரிகழ்ச்சிக் குறிப்பு. (வழக்கு.) 3. சுத்தம். (உ-ம்.) "எற்ப தங்கன்றுவளர்சோமனங்கி" (மறைசை. சுஅ.)

துக்ககன்—துயரமுள்ளோன்.

துக்கசகிதர் — மாரிடர். (உ-ம்.) "சந்திர மௌலிநகைசெய்து துக்கசகிதரைத் தோற்றி டேன்யானே" (சூத. சிவமான். கo: கடு.)

துக்கடி—துண்டுபட்டது. (வழக்.)

துக்கத்திரயம்—கடவுளாலு முயிர்த்தோற் றங்களாலும் பஞ்சபூதியங்களாலு முண்டாகு மூவகைத்துக்கம். அவை: ஆதிதைவிகம், ஆதி பௌதிகம், ஆதியாத்மிகம்என மூவகைப்படும். அவற்றுள்; கர்ப்பாசயத்திலேவரும் விதநமும் பிறக்குங்காலத்திலேவரும் விதநமும், மூப்பில் நரை திரையால்வரும் விதநமும், அஞ்ஞாநத் தாலே செய்யப்பட்டிருக்கிற அளவில்லாத சங் கற்பத்தினுலேவரும்விதநமும், இயமனுயிரைக் கொண்டுபோகும்போதுவரும் விதநமும், நர கரகத்திலழுந்தும் விதநமுமுதலானவை ஆதி தைவிகம்; சீதத்தாலும் பெருமழையாலும் கொடுவெயிலாலும் பெருங்காற்றாலும் மின்னா லும் இடியாலும்வரும் விதநமும் ஆன்மாக்க ளொன்றையொன்று கட்டிவைக்கையாலும் ஒன்றையொன்று கொல்கையாலும்வரும் விதந முதலானவை ஆதிபௌதிகம்; ஆதியாத் மிகம்-தேகத்தைப்பற்றிவரும் விதநமும, மநத் தைப்பற்றிவரும் விதநமும் என இரண்டுவகை. அவற்றுள், தேகத்தைப்பற்றிவரும் விதநம்- வாதத்தாலும், பித்தத்தாலும், சேட்டுமத்தாலும் வெப்பாலும், சூலையாலும், சத்துருக்களாலும, விலங்காதிகளாலும், அழுகு தொழுநோய்களா லும், நீர்ப்பாட்டாலும், இராக்கதராலும், ஸ்திரி புருடர்கூட்டப்பிரிவினுலும், குருதெய்வங்களி னுலும், தபசினுலும், உள்ளமுயற்சியினுலும், சம்பத்தின்மிகுதியாலே அடாதனசெய்கையா லும்வரும் விதநமுதலியவாம். மநத்தைப்பற்றி வரும் விதநம்-பந்துக்கள் திரவியமுதலியவற் றைப் பிரிகையால்வருஞ்சோகம், பிறருடைய அறிவுமாக்கமுங்கண்டு பொறாமை மநத்துக்கு இழிவுவருதல் விடயத்திலிச்சை கோபம் முத லியவாம். (வி-ணி.)

துக்கம்—1. கிலேசம். (பிங்கல. கஅஅக.) 2. தன்பம். (உ-ம்.) "துக்கமாமடவிதன்னைச் சுடுங்கொடுந்தீயுமாகி" (சிவரக. உருத்திரவீணை. கூகூ.) மணிமேகலையில் துக்கம் ஆறென்பர்.

துக்கர்—துக்கமுள்ளாராகிய பாவிகள்.

துக்களம்—குங்கிலியம். (வைத்தியபரிபா.)

துக்காணி—இரண்டுதம்படிகொண்ட நரு செம்புநாணயம். [தெலுங்கு.] "துக்காணிபோ லொருபொட்டிட்டுநீறுதுலங்கவிட்டு" இது திருவாரூர்த்தேசிகர் தனிக்கவி.

துக்கி—துக்கத்தையுடையவன். (சி. சி. உ: டு மறை.)

துக்கித்தல்—1. கிலேசித்தல். 2. புலம்பல்.

துக்கிதம்—துக்கம்.

துக்கிதர்—துக்கமுள்ளவர். (சி. சி. க: டுகூ. சிவாக்.)

துக்கிப்பு—துக்கம்.

துக்கு—கீழ்மை. [தெலுங்கு.]

துக்குணி—அற்பம். (வழக்.) (உ-ம்.) "சீனிச் சரக்குத்துக்குணிக்கிள்ளிதாயம்மே" (குற்றாலக்

குறவஞ்சி.)

துகள்—1. குற்றம். (உ-ம்.)"துகடீர்பெருஞ் செல்வம்" (நாலடி. செல்வநிலை. உ.) 2. தாது. (பரிபாடல்.) 3. புழுதி.

துகிநம்—பனி. (சூ. நிக. க: கoக.)

துகிர்—பவளம். (உ-ம்.) "துகிரிதழ்வைத்து நல்வளைகண்முழக்கின" (பாரத. கிருட்டிண. உoச)

துகிர்த்தாளி— } பவளமல்லிகை. (வைத்தியபரிபா.)
துகிர்தாளி— }

துகில்—1. சீலை. (உ-ம்.) (சூ. நிக. எ: சுகூ.) 2. வெண்பட்டு. (சிந்தா.)

துகிலிகை—எழுதுகோல். (சூ.நிக.எ: கச.)

துகினூல்—வெண்ணூல். (சிந்தா.)

துகைத்தல் — 1. சஞ்சரித்தல். (உ-ம்.) "வரம்பெறவாமணமாறுகைக்குந் திருவாயிற் கோபுரம்" (மரு. தி. கஉ.) 2. நசுக்கல். (உ-ம்.) "துன்றுகடிகாவினையடிக்கொடுதுகைத்தான்" (இராமா. சுந்தரகா. பொழிலிறு. அ.) 3. வருத்தல். (சிந்தா.)

துகையல்—துகைத்தபொருள்.

துங்கபத்திரி — துங்கபத்திரை. (உ-ம்.) "துங்கபத்திரிதீம்பாலி" (திருவிளை. தலவிசே. கக.)

துங்கபத்திரை—ஒருநதி. (வி-ணி. உஉ கூ.)

துங்கம்—1. அகலம். (பிங்கல. ௬௬௪அ.) 2. உயர்ச்சி. (உ-ம்.) "துங்கமாம்விசையையோடு" (சிவரக. விசையை. கஎ.) 3. பெருமை. (பிங்கல. ௬௬௪அ.)

துங்கரீகம்—காவிக்கல். (வைத்தியபரிபா.)

துங்கன்—மேன்மையுடையோன்.

துச்சத்தாரு—ஆமணக்கு. (வைத்தியபரிபா.)

துச்சம்—1. கீழ்மை. 2. கொம்மட்டி. 3. நிஷ்பலம். (சி. சி. ௬௬. சிவாக்.) 4. பேய்க் கொம்மட்டி. (2, 4-வைத்தியபரிபா.)

துச்சன்—கீழ்மகன்.

துச்சாசநன்—துச்சாதநன். (உ-ம்.) "நீட்டிய துச்சாசநனுடையநெஞ்சை"(கலி.கoக.உரை.)

துச்சாதநன்—துரியோதனன்தம்பி. (உ-ம்.) "தருகதகிலெனவெழுந்துதங்களை வன்போடு துச்சாதநன்சொலாமுன்" (பாரத. சூதுபோர். உசுசு.)

துச்சார்—காமுகன். (நாலடி. கூ: ச.)

துச்சில் — 1. ஒதுக்கிடம். (உ-ம்.) "துச்சி லிருந்தவுயிர்க்கு. (திருவள். ௬௪o.) 2. தங்குமிடம்.

துசபரிசம்—சிறுகாஞ்சொறிவேர். (உ-ம்.) "சதபுட்பிதுசபரிசமூண்டிவீழி" (தைல. தைலவ. எசு.)

துசகம் —சோம்மட்டிமாதுளை. (மலையக.)

துசம்—1. இருபிறப்புள்ளன. 2. குங்கிலியம். 3. கொடி. [இது துவசமென்பதன் விகாரம்.]

துஞ்சல்—துஞ்சுதல்பார்.

துஞ்சுதல் — 1. இறந்துபடுதல். (உ-ம்.) "பொய்த்துயிறுஞ்சும்" (கலி. ஏடு.) 2. உறங்குதல். (உ-ம்.) "துஞ்சாநாய்துயிலறிந்து"(கந்தபு. வள்ளியம்மை. கசுச.) 3. சோம்பல். 4. சோர்தல். 5. தங்குதல். (உ-ம்.)"சாபஞ்சாத்தியகணை துஞ்சுவியனகர்" (பெரும்பாணு கஉக.) 6. நிலைபெறுதல். (3, 6-சூ. நிக. கக: ஞகரவெ. க.)

துஞ்சை—ஐம்பாலினுள் ஒருவகை. (சிந்தா.)

துட்கல்— } அச்சக்குறிப்பு. (உ-ம்.)"துட்கக்கடற்றுட்கப்பொரும் வேலா" (திருப்பு. சஉஉ.)
துட்குதல்— }

துட்கெனல்-துணுக்கெனல்,அச்சக்குறிப்பு. (சிந்தா.)

துட்டகம்—பொல்லாங்கு.

துட்டகன் — துட்டன். (உ-ம்.) "அவலத் துட்டகனதிதுயருற" (அருணகிரி. அருந்தவ. ககூசு.)

துட்டசதுர்த்தர்—மகாபாரதத்தில் கொடுமையிற்சிறந்த நால்வராகிய கன்னன், சகுநி, துச்சாதநன், துரியோதனன் என்பவர். (திரௌபதிமாலையிட்டசரு. கoo.)

துட்டத்தனம்—தீக்குணம்.

துட்டம்-1. அடங்காமை. 2. மரகதக்குற்றத்தொன்று. அது நீலோற்பலநிறம். (திருவிளை. மாணிக்கம்வி. சுஅ.)

துட்டரி—தொடரி, புலிதொடக்கி. (வைத்தியபரிபா.)

துட்டவி—ஒருசெடி. (வைத்தியபரிபா.)

துட்டன்—1. தீயன். (உ-ம்.) "மறையோர் வேடங்கொண்டவர்க்கும்வஞ்சஞ்செய் துட்டனான்" (சிவரக. கத்தரிப்பூ. உஉ.) 2. தேள். (சூ. நிக. கூ: எஎ.)

துட்டு—ஒரு நாணயம். (தெலுங்கு.)

துட்டை—தொழுத்தை. (சூ. நிக. உ: சுரு.)

துட்பதம் — தீமையானவியாசம். (உ-ம்.) "கொட்பனற்சுடவிறந்தமைகேட்டலுங் குருக்கடுட்பதத்துடனழுதிடுஞ்சுயோதநன்"(பாரத. வாரணுவதச். ககூரு.)

துடக்கறுப்பான்—மூடக்கொற்றான். (மலையக.)

துடக்கு—1. ஆசூசம். 2. பந்திப்பு. (உ-ம்.) "மாயாடன்வயிற்றிவற்றுற்றுடக்குண்டு" (சி.சி. உ: சுகூ.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. மகளிர் சூதகம். (உ-ம்.) "மாயவலைப்பட்டிலைத்துடக்

நழல்" (திருப்பு. ருகக.)
துடக்குதல்—பந்தித்தல்.
துடங்கணம்—வெண்காரம். (வைத்தியபரிபா.)
துடவை—1. உழவுகொல்லை. (உ-ம்.) "தனி நகருமாளிகையும்பாழ்ந்துடவைப்படும்" (சேதுபு. இராம. ரு: கசo.) சோலை. (சூ. நிக. ச: ருச.) 3. தோட்டம். (உ-ம்.) "சுனையுடைப்பலவாசினிபூகமாந்துடவை" (கந்தபு.ஆற்று.கஎ.) 4. மயில். (வைத்தியபரிபா.)
துடி — 1. அகில். (வைத்தியபரிபா.) 2. இசங்கு. (மலையக.) 3. உடுக்கை. (உ-ம்.) "துடிமருங்கிற்கொடிச்சியர்" (அரிச்சந். நாட்டு. கரு.) 4. ஏலம். 5. காலநுட்பம். அஃது தற்பரையொன்றின் நூற்றிலொருபங்கு. (சித்தாந்தசிரோமணி. கணிதாத்தியாயம். கசு.) 6. குமரனுடல். (உ-ம்.) "சூர்திரக்கடந்தோனுடியதுடியும்" (சிலப். கடலாடு. ருக.) 7. குறிஞ்சிப்பறை. (பிங்கல. ருஉஉ.) 8. கூதாளிச்செடி. (உ-ம்.) "துடித்தலைப்படர்சந்தனக்குங்குமத்தொகுதி" (தணிகை.நாட்.ருச.) 9. சத்தகந்நிகைகளாடல். 10. தெரிநிலைவினைப்பகுதி. 11. பாலைநிலப்பறை. (4, 5, 9, 11-பிங்கல. ருகுருo.)
துடிக்கல் — துடித்தல். (உ-ம்.) "துடிக்கலுற்றதுபுருவம்" (கந்தபு.சூரதண்டஞ்செய்.கு.)
துடிக்குறடு—உடுக்கைவடிவாகச்செய்த மரக்கட்டை. (உ-ம்.) "துடிக்குறடுருட்டியோடி" (பெரியபு. கண்ணப்ப. உச.)
துடிகம்—தும்பை. (வைத்தியபரிபா.)
துடிசம்—தும்பை. (மலையக.)
துடித்தல் — 1. அசைதல். 2. குதித்தல். (உ-ம்.) "துள்ளியதிரையிலாடுமீன்கண்டுதுடித்துவீழ" (திருவிளை. கான்மா. அ.) 3. கோபம் முதலியவைகாரணமாக வாய்முதலியவற்றிலுண்டாகுங்கம்பிதம். (உ-ம்) "செவ்வாய்துடிக்க" (திருக்கோ. ருகுசு.) 4. துள்ளுதல. பொற்பந்துபோலத்துடித்தது. (திருவிளை. மேருவைச். உசு.) 5. பதறல். (உ-ம்.) (சிவரகசி. சிவதன்மா. கஉ.)
துடிதர்—சாக்குடமநுவந்தரத்திலுள்ள அதிதிபுத்திராகிய பன்னிருவர். (உ-ம்.) "சாக்குடமந்வந்தரத்தினிற்றுடிதப்பெயரொடும்" (கூர்மபு. தக்கன். வமி. கரு.)
துடிதலோகம்—(பௌத்த)தெய்வலோகங்களாறினுள்நான்காவது. (மணிமேகலை. புத்தசரித்திரம்.)
துடிதுடிக்குதல்—திட்டத்தனம்பண்ணல். 2. துடிக்குதல். (1, 2- வழக்.)
துடிதுடிப்பு—துட்டத்தனம். (வழக்.)

துடிநூல்—சீராங்கத்துடிப்பினால்வரும்நயநட்டஞ்சொல்லுமொருசாத்திரம்.
துடிப்பு—அசைவு.
துடியடி—யானைக்கன்று. (பிங்கல. உசகசு.)
துடியன்—1. துட்டன். (வழக்.) 2. துடிகொட்டும் புலையன். சிலப்பதி. வேட்டுவரி.
துடியாஞ்சி—இசங்கு. (வைத்தியபரிபா.)
துடுக்கன்—துட்டன். (வழக்.)
துடுக்கு—1. தீக்குணம். 2. விரைவு. (1, 2-வழக்.)
துடுப்பாற்றி—ஒரு மீன். (பரதர்வழக்கு.)
துடுப்பு—1. துடுப்புப்போலுமுகை. (உ-ம்.) "களிபட்டாநிலையேபோற்றடவுபுதுடுப்பீன்று" (கலி. கoக.) 2. நெய்த்துடுப்புமுதலியன. (சூ. நிக. எ: ருச.) 3. வலிதண்டு. (உ-ம்.) "நாவாயிருக்கையுமெயினர்தாண்டத்துயல்வனதுடுப்புவீசுந்துவலைகள்" (இராமா. அயோ. குக. ருசு.)
துடுப்புக்கீரை—ஒரு கீரை. (வழக்கு.)
துடுமெனல்— ஓர் ஒலிக்குறிப்பு. நன்னூ. இடையிய உ. உரை.)
துடுமை—ஒருவகைத்தோற்றக்கருவி. (உ-ம்.) "நிசாளந்துடுமைசிறுபறையடக்கம்" (சிலப் அரங்கேற்று. உஎ உரை.)
துடுவை—நெய்த்துடுப்பு. (உ-ம்.) "துடுவைபூரித்தாகுதி" (திருவிளை. குண்டோதர. கசு.)
துடை — 1. அரசமரம் 2. விஷமூங்கில். (1, 2-வைத்தியபரிபா. 3. தெரிநிலைவினைப்பகுதி.
துடைக்குதல்—துடைத்தல்.
துடைத்தல் — 1. சுவறச்செய்தல். (உ-ம்.) "படக்கடறுடைக்குஞ்சுடர்ப்படைத்திகிரி" (கூர்மபு. தக்கன்வமி. உக.) 2. தடவுதல். (புறநானூ.) 3. நீக்குதல். (உ-ம்.) "பழியைத்துடைத்து" (இராமா. ஆரணிய. சூர்ப்ப. ககூரு.)
துடைப்பம் — மூதேவியின் படைக்கலம். (உ-ம்.) "முதலில்மூகடிதோன்றினள். அவளை வேதசிவாகம ஒழுக்கமில்லாத பாஷண்டகளிடத்தும் பாதகரிடத்தும் மற்றையசுத்தமுள்ள இடங்களிலுமமர்வாயென. அவள் கழுதையிலேறிக் காகக்கொடிபிடித்துத் துடைப்பமாகிய படைதாங்கித் துப்பிரபன் என்னுங் கலிபுருடனைக் கணவனாகக்கொண்டு சொல்லியவாறுற்றனள்" (கூர்மபு. இந்திரத்துய. கஉ. உரை.) வாருகோல் என்பதுமிது. (பிங்கல. ககூஅஅ.)
துடைப்பு—துடைத்தல். (உ-ம்.) "துடைப்புற்றோவா" (சேதுபு. தூராசா. உஅ.)
துடையரசு—விசமூங்கில். (வைத்தியமூ. அக.)

**துடையூஉ** — துடைத்து. (உ-ம்.) "நிலம் புடைப்பன்னவார்ப்பொடுவிசும்பு துடையூஉ" (பதிற்று. சச.)

**துண்டகேரி**—1. கோவைக்கொடி. 2. பருத்திச்செடி. (1, 2-வைத்தியபரிபா.)

**துண்டம்**—அலகு. (உ-ம்) "துண்டவெம் படையிற்குற்றுத்தி" கூர்மபு. தக்கன்வழி. சச.) 2. சாரைப்பாம்பு. (பிங்கல. உசுOக.) 3. துண்டித்தல். 4. துண்டு. (உ-ம்.) "துண்டமாக்கினர் மூக்கெனச்சொல்லினுள்" (இராம.கரன்வதை. எ.) 5. பங்கு. (உ-ம்.) "சுடுவார்பொடிநீறும் நல்லதுண்டப்பிறைக்கீளும்" (தேவார. திருக்கேதீச். சுந்தர. உ.) 6. மூகம். (பிங்கல.கOகச.) 7. மூக்கு. (உ-ம்.) "கவ்வைசெய்முகனுறுதுண்டமுயிர்ப்பெழு" (சேதுபு. தேவிபுர. கூஉ.)

**துண்டர்**—பாவிகள்.

**துண்டரிக்கம்**—குரூரம். [தெலுங்கு.]

**துண்டன்** — கொலைசெய்வோன். (உ-ம்.) "தண்டனுகியதுட்பண்ணியன்" (சேதுபு. அக்கினிதீ. சச.)

**துண்டி** — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. துண்டிவிநாயகன். (உ-ம்.) "துதிக்கைபெறுந் துண்டிகேள்" (சிவரக. கணபதியுடன்கட. சு)

**துண்டித்தல்** — அறுத்தல். 2. தறித்தல். (உ-ம்.) "இருபதமுமழுவாற்றண்டித்து" சேதுபு. கடவுள்வா. கஉ.)

**துண்டிப்பு**—துண்டித்தல்.

**துண்டிவிநாயகன்** — காசியில் விநாயகன். துண்டிபார்.

**துண்டீரபுரம்** — காஞ்சி. (உ-ம்.) "காஞ்சி துண்டீரபுரமெனப்புகலநின்றதவே" (கந்தபு. திருநகர. எக.)

**துண்டீரன்** —காஞ்சியரசனைவன். (உ-ம்.) "அரியசோர்கயிலைக்கணங்களிலொருவனுனதுண்டீரன்" (கந்தபு. திருநகர. எக)

**துண்டு**—1. துண்டம். 2. பங்கு துண்டம் பார்.

**துண்ணிடுதல்**—திடுக்கிடுதல்.

**துண்ணெனல்**—1. அச்சக்குறிப்பு. (உ-ம்.) "தண்டகுதிரள்புயந்துளங்கத்துண்ணென்று" (இராமா. அயோத்தி. நகர்நீங். கருரு.) 2. விரைவுப்பொருடருமோர்குறிப்பிடைச்சொல். (உ-ம்) "துண்ணென்றுடலம்வெருக்கொள்ள" (கூர்மபு. தக்கன்வேள்வியழி. சஅ.)

**துணங்கல்**—கூத்து. (பிங்கல. கசசச.)

**துணங்கறல்** — 1. இருள். 2. திருவிழா. (1, 2-பிங்கல. கூசுருக.)

**துணங்கை**—1. ஒருவகைக்கூத்து. இஃது இருகையுமுடக்கிப்பழுப்புடையொத்தியாடல். (உ-ம்.) "பழுப்புடையிருகைமுடக்கியடிக்கத் துடக்கியநடையது துணங்கையாகும்" (திருமுரு. கூசு. உரை.) [இதனைச்சிங்கியென்பாருமுளர்.] இதை மறுவரக்காஞ்சியில் மகளிராடுங் கூத்தென்பர். சூடாமணிநிகண்டில் பேய்க்கூத்தென்பர். 2. திருவாதிரை. 3. திருவிழா. (2, 3-சூ. நிக. கக: ணகரவெ. கஉ.)

**துணர்**—1. பழக்குலை.(உ-ம்.)"சாரற்பலவின் கொழுந்துணர்நறும்பழம்" (ஐங்குறு. உகச.) 2 பூங்கொத்து. (சூ. நிக. ரு: சக.) 3. மலர். 4. மலர்த்தாது. (பிங்கல. உஅOஅ, உஅOக.)

**துணர்த்தல்**—முகைத்தல்.

**துணரிய**—குலைகொண்ட. (உ-ம்.) "பைம் பாகற்பழந்துணரிய" (பொருந. கககு)

**துணவு** — நுணாமரம். (வைத்தியபரிபா.)

**துணி**—1. ஒளி. (பிங்கல ககசுஎ.) 2. சல்லி. (சூ. நிக. சு: கூச.) 3. சீலைத்துணி. (உ-ம்.) "வநமெலாந்துணிகள்" (அரிச்சமாயா. கஅ) 4. சோதிநாள். 5. துண்டு. (உ-ம்.) "உடுத்தபாயைத்துணிபடக்கிழித்து" (திருவிளை. யானையெ. கூஎ.) 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "மாறைவெற்பாதுணி" (வாண. ககூO.) 7. தெளிவு. (உ-ம்.) "துணிமழைதவழுந்" (சிறுபாணு. உசுரு.) 8. மரவுரி. (4, 8-பிங்கல. கூசுருஉ.)

**துணிக்கை**—துணித்தல்.

**துணிகரம்**—துணிவு.

**துணிகை**—துணிவு.

**துணித்தல்**—1. அறுத்தல். 2. துண்டுசெய்தல். (உ-ம்.) "வெங்கண்வாளரவைத்துணித்து விளித்தவாறும்" (திருவிளை. நாகமெய். க.) 3. துமித்தல், வெட்டல் (உ-ம்.) "சுடராழுளாவிருணீங்கச் சோதியினித்தான் றுணியாயே" (திருவாச. பிரார்த்தனை. எ.) (பிங்கல.உகசசு.)

**துணிதல்**—1. தெளிதல். (உ-ம்.) "துகளறத் துணிந்த" (மலைபடுகடா. உஅக.) 2. நிச்சயித்தல். (பெரியபு. திருவாரூர். சக.) 4. முயலல். (உ-ம்.) "சோதனையுளகப்படாச்சோதியுனைச் சோதிக்கத்துணிந்தேனந்தோ" (திருவிளை. நான்மாடக்கூட. உஉ.) 5. வெட்டுதல். (உ-ம்.) "துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லையுலகரசாளத்துணிவதல்லால்" (பாரத. கிருட்டி. ககூ.)

**துணிந்த**— கிழிந்த. (உ-ம்.) "ஆடையுந் துணிந்தசீரையாகி" (திருவாத. மண். உக.) 2. தெளிந்த (உ-ம்.) "துகளறத்துணிந்த" (மலைபடுக. உருO.)

**துணிபு**—துணிவு. (உ-ம்.) "வீரத்துணிபினை வியந்துபோற்றி" (சேதுபு. வேதாளா. ருசு.) தெளிவு.

துணியல்—துணிகள், துண்டங்கள். (உ-ம்) "கொழுமீன்குறைஇயதுடிகட்டுணியல்" (மதுரை. கூஉ0.)

துணிவானி— தன்பொருணிற்கப்பிறர்சொலுக்கிசைதல். (உ-ம்.)"தன்பொருணிற்கப்பிறர்சொலுக்கிசைதறுணிவானியென்பது" (த. நி. போ. கூ0ச)

துணிவிரோதம்—தன்சொற்பொருளையழிவுறக்கொடுத்தல். (த. நி. போ. கூ0ச.)

துணிவினந்தரம்—முன்சொன்ன பொருளையொழித்தொருபொருளை மொழிந்திடல். (த. நி. போ. கூ0ச.)

துணிவு—1. ஆண்மை. (உ-ம்.)"தூங்காமை கல்வி துணிவுடைமையிம்மூன்றம்" (வள். கூஅக.) [ஒன்றனையும்பாராது கடிதிற்செய்வதாகலின் உபசாரவழக்காற்றுணிவெனப் பட்டது.] 2. தெளிவு. (உ-ம்.) "தன்னல்போகிய துணிவினோனென" (புறநா.உக.) 3. நிச்சயம். 4. மாகங்கலங்காமை. (உ-ம்) "தன்பமுறவரினுஞ்செய்கதுணிவாற்றி - யின்பம்பயக்கும்வினை" (வள். சுசுக.)

துணிவுத்தூக்கு — இசைத்தமிழ்நூலிற்கூறியஎழுவகைத்தூக்கினுளொன்று. இது மூன்று சீரையுடையது. (மணிமே.)

துணுக்கம்—1. அச்சம். (உ-ம்) "தோன்றினன்யாவருந்துணுக்கமெய்தவே" (இராமா. ஆரணியகா. கரன்வதை. ருஉ.) 2. நடுக்கம். (உ-ம்.) "யானைநின்றநிலைகெடத்துணுக்கங்கொள்ள" (திருவிளை. நான்மா. எ.)

துணுக்கிடுதல்—திடுக்கிடுதல், பயப்படுதல்.

துணுக்கு—1. துண்டு. (வழக்கு.) 2. பயமுறல்.

துணுக்கெனல்—1. அச்சக்குறிப்பு. 2. குலைதல். (பிங்கல சஅருகூ.)

துணுங்குதல்—வெருவுதல்.

துணை—1. அளவு. (ஐங்குறு.) 2. ஆதரவு. (உ-ம்.) "வாய்த்தல்"பார். 3. இரண்டு. (உ-ம்.) "துணையடிக்கண்வைகினர்" (திருவிளை.வளை. கூசு.) 4. ஒப்பு. (உ-ம்.) "தென்காவினுடன் கவரிகால்வீசிடவேதுணையிலாதார்" (சிவாக. கணபதிகுமரன். கக.) 5. கணவன். (உ-ம்.) "தாழ்துணை துறந்தோர்தனித்துயரெய்த"(சிலப். அந்திமாலை. கூ.) 6. சகாயம். (பிங்கல. சுளகரு.) 7. துணைவன். (உ-ம்.) "நின்றுணை குன்புரிந்தனன துகேள்" (சிவரக.தாருக.கக.) 8. துணைவி. (உ-ம்.) "செவியுறவாங்குகணை துணையா மானமர்நோக்கியர்நோக்கென" (திருக்கோ. உளச.)

துணைக்கருவி—துணைக்காரணம்.

துணைக்காரணம் — முதற்காரணங்காரிமாய் முடியுமளவும் அதற்குத்துணையாயுடனிகழ்வது. (நன். ருஅ. உரை.)

துணைசெயல்விலக்கு—விலக்கலங்கார வகையுள் ஒன்று அது துணைசெயல்போலக் கூறி விலக்குவது. (தண்டி. கச. உரை.)

துணைத்தல்—பிணைத்தல். (உ-ம்.) "தண்ணறுங்கழுநீர்துணைப்பவிழைபுனையூஉ" (மதுரைக்கா. ருருக.)

துணைப்படை — அறுவகைச் சேனைகளுளொன்று (வள் எகூஉ. உரை.)

துணைமை— உதவி. (உ-ம்.)"தோட்டுணைத்துணைவரோடுந்தளபமாறுணைமைசெய்ய"(சேதுபு. இலக்குமி. உரு.)

துணையினோர்—சகோதரர். (உ-ம்.) "சுற்றுறுதுணையினோரை" (கந்தபு. தருமகோபன்வ. சுஎ.)

துணைவர்—1. சகோதரர். துணைவன்பார். 2. தோழர். (உ-ம்.) "மித்திரரானமன்னர்விறலுடைத்துணைவரோடும்" (பாரத. படையெழுச்சி. கரு.) 3. மந்திரிகள். (சூ. நிக. உ: உக. சவியிலே தேர்ச்சித்துணைவரென்றூர்.)

துணைவன்—1. உதவிக்காரன். 2. சகோதரன். (உ-ம்.) "கரியின்முகத்துணைவன்னெனவொருசார்வரும்" (கந்தபு.சூரபன்.வதை.சகச.) 3. தலைவன். 4. தோழன். (சூ. நிக. உ: சஉ.) 5. மணவாளன். (உரிச்சொல்நி உ: எ.) 6. மந்திரி. துணைவர் பார்.

துணைவி—1. சகோதரி. 2. தோழி. (பிங்கல. கூகூ.) 3. மனைவி. (உ-ம்.) "தன்றுணைவியின்னலநுகர்ந்து" (பிரமோத். பஞ்சா. சக.)

துத்தநாகம்—இது சயமும்ரசமுந்தொந்திப்பானதென்பர். (வைத்தியபரிபா.) நவலோகத்தொன்று. (பிங்கல. கஉகூ.)

துத்தபாடாணம்—ஒரு பாஷாணம்.

துத்தம் — 1. ஏழிசையினொன்று. அது: நாவினுற்பிறக்குமிசை. (சூ நிக. க0: கூசு.) 2. ஒருவகைக்கல். 3. கண்மருந்து. (உ-ம்.) "கண்ணோய்குந்தந்தொலையும்- வாசமிகு துத்தத்தால் வாழ்த்து" (பதார்த்தகுண.) 4. சமனிசை. (பிங்கல. கசஉ0.) 5. தீ. 6. நான்முகப்புல். 7. நாணற்புல். 8. நாய். (சூ. நிக. கக: தகரவெ) 9. நாய்ப்பாகல். 10. நீர்முள்ளி. 11. பால். (உ-ம்.) "துத்தமிசைந்திடும்வானின்முளைத்தபிறைத் - துண்டங்கடுத்தநுதலிமயாசலத்துய்ய பச்சைப் - பிண்டங்கடுத்தது" (மறைசை.எக) 12. யாழினோர்நரம்பு. (சிலப்.) 13. வயிறு. (6, 7, 9, 10-வைத்தியமூ. அக.) 11, 12-பிங்கல. கூருச.)

துத்தமனு—மூயற்புல். (மலையக.)

துத்தரி — ஒருவகைக் கொட்டுவாத்தியம். (உ-ம்.) "கொம்புதுத்தரிகொட்டுமுறைமையன்" (இராமா. அயோத்தி. கங்கைப். ௩௦.)

துத்தல்—உண்ணல். (உ-ம்.) "மூற்றுத்துந் துத்தினை" (நாலடி. ௧௧. அதி.)

துத்தி—1. ஒரு செடி. அது: எலிச்செவித் துத்தி, ஐயிதழ்த் துத்தி, ஒட்டுத்துத்தி, ஒரிலைத் துத்தி, (கண்டுதுத்தி) காட்டுத்துத்தி, கொடித் துத்தி, சிறுதுத்தி, (செந்துத்தி) நாமத்துத்தி, நிலத்துத்தி, பணிகாரத்துத்தி, (பெருந்துத்தி) பெட்டகத்துத்தி, இரட்டகத்துத்தி, (வயற் றுத்தி) வட்டத்துத்தியெனப் பலதிறப்படும். (உ-ம்.) "இப்படியிற்றுத்தியிலையை"(பதார்த்த குண.) 2. தேமல். (பிங்கல.௩௬௫.) 3. பாம் பின்படப்பொறி. (உ-ம்.) "துத்திநாகநாரியிற் றுவக்கிவெற்பலைத்தநாள்" (சேதுபு. இராம னுத. ௧.)

துத்தியம் — துதி. (உ-ம்.) "மூன்விழுந்தடி வணங்கித்துத்தியஞ்செய்து" (சிவரக. வரலா. ௧௧.)

துத்து—உணவு. (உ-ம்.) "மூற்றுத்துந்துத் தினை" (நாலடி. ௧௧.)

துத்துநாகம்—துத்தநாகம். (உ-ம்.)"பயித்தி யத்தைப்போக்குமரியதுத்துநாகமது"(பதார்த்த குண.)

துத்தூரம்—ஊமத்தை. (மலையக.)

துதி—1. தூத்தி. (சிந்தா.) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. தோத்திரம். (பெரியபு. பா யிரம். ௪.) 4. நுதி. (உ-ம்.) "துதிக்காலன்னந் துணைசெத துமிதிக்கும்" (ஐங்குறு. ௬௦௬.)

துதிக்கை — 1. துதிக்குதல். 2. யானைத் துதிக்கை. (சூ. நிக. ௩: அ.)

துதித்தல்—தோத்திரஞ்செய்தல். (பிங்கல. ௨௦௦எ.)

துதிப்பு—துதித்தல்.

துதியம்—சவரிலோத்திரம். (வைத்தியபரி பா.)

துதியரிசி—அட்சதை. (உ-ம்.) "துதியரிசி குங்குமமூத்திரையுஞ்சாத்தி" (தைல.தைலவ.)

துதியை — இரண்டாந்திதி.

துதியாதற்புருடன் — இரண்டாம் வேற்று மைத்தொகை. (பி. வி. ௨௧. உரை.)

துதை — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. செறிவு.) (உ-ம்.) "பொன்றுதையம்புயத்திண் காலன்" (மறைசையந்.)

துதைத்தல்—நெருக்கல்.

துதைதல்—1. செறிவு. (பிங்கல. ௨௨௩௬.) 2. பூசப்படுதல். (உ-ம்.) "குங்குமந்துதைந்து பிறைவடங்கிடந்தகுவிமூலை" (கூர்ம.தமோகு. ௪.)

துந்தி—வயிறு. (உ-ம்.) "துந்திரோசகங்கா மாலை" (தைல. தைலவ. ௬எ.)

துந்திரோகம்—மகோதரம். (உ-ம்.) "துந்தி ரோகங்காமாலையுண்மாதம்" (தைல. தைலவ. ௬எ.)

துந்துயம்—கடுகு. (வைத்தியபரிபா.)

துந்துபி — 1. ஒரு தைத்தியன். (இராமா. கிட்கிந்தா. துந்துபிப். ௧.) 2. கன்மேந்திரிய பஞ்சகத்திலிருக்கும் ஐந்துருத்திரரிலொருவர். (வி-ணி. ௨எ௨.) 3. பேரிகை. (உ-ம்.) "சேனை மாமூகிலேழுமொத்ததிர்ந்தன துந்துபிக்குலம்" (பாரத. படையெ. அ.)

துந்துமாரி — முதல்வள்ளலெழுவரிலொரு வன். (பிங்கல. எ௫௫.)

துந்துமி—வியாழவட்டமாகிய அறுபது வரு டத்தின் ஐம்பத்தாறுவதாண்டு. (வருஷாதி நூல்.)

துப்பட்டி—ஒருசீலை. [இந்துஸ்.]

துப்பல்—துப்புதல்.

துப்பாக்கி—துப்பாக்கி.(உ-ம்.)"ஆணிவரை யுறலால்.........துப்பாக்கிஒலைச்சுருள்" (காள மேகம்.) [இந்துஸ்தானிச்சொல் என்பர்.]

துப்பிரபன்—கலிபுருடன். இவன்மூதேவி கணவன். (உ-ம்.) "துடைப்பம்"பார்.

துப்பு — 1. அநுபவம். (உ-ம்.) "சொல்லு மிம்மூன்றுஞ்செய்தாற்றுப்புத்துப்பாக்கி" (சே துபு. சர்த்தியா. ௧௧.) 2. அரக்கு. (உ-ம்.) "துப்பு பலநிரியாசம்" (தைலவ.) 3. அறிவு. 4. ஆயுதப் பொது. சிலப்பதிகாரத்திற் கருவி யென்றார். (பிங்கல. ௧௬௦௫.) 5. ஆராய்ச்சி. 6. உணவு. (உ-ம்.) "துப்பார்க்குத்துப்பாயதுப்பாக்கி" (வள். ௧௨.) 7. கறை. (வழக்.) 8. குற்றம். 9. சிவப்பு. (உ-ம்.) "துப்புடையாதைச்சொல்லு கேன்" (இராமா.சூர்ப்பநகை.௨௧.) 10. சுத்தம். (உ-ம்.) "துப்புடைமணலிற்றுகி" (இராமா. எதிர்கோட். ௨.) 11. துணை. 12. துணைக்கார ணம். (சூ. நிக. ௬: ௩௩.) 13. தெரிநிலைவினைப் பகுதி. 14. நன்மை. (வள். ௧௨.) 15. நெய். 16. பகை. (உ-ம்.) "திருகுசீற்றவெந்துப்பின" (கூர்மபு தக்கவே. ௬எ.) 17. பவளம். (உ-ம்.) "துப்பார்திருமேனித்தும்பிக்கையான்பாதம்" (வாக்குண்டாம்.) 18. பற்றுக்கோடு. (வள். ௧௦௬) 19. பொலிவு. 20. மேன்மை. 21. வலிமை. (உ-ம்.) "ஆளியின்றுப்பினாய்" (இரா மா. கரன். ௬௩.) (11, 15, 19, 20-பிங்கல. ௩௬௫௬)

துப்புதல்—உமிழ்தல்.

**துப்புரவு**—1. அநுபவிப்பன. (உ-ம்.) "துப் புரவில்லார்" (வள்.கoடுo.) 2. ஐம்பொறிநுகர்ச்சி. (சூ. நிக. கூ: உஎ.) 3. சுத்தம். (வழக்.)

**தும்**—உளப்பாட்டுத்தன்மைப்பன்மைவினை விகுதியிடைச்சொல். (உ-ம்.) "நடத்தும்" (நன் னூ. வினையி. கரு.)

**தும்பகா**—தும்பை (மலையக.)

**தும்பரம்**—அத்தி. (மலையக.)

**தும்பராஷ்டம்**—1. அரத்தை. (தைல. தை லவ. ருஅ. உரை.) 2. பேரரத்தை. (மலையக.)

**தும்பன்**—தட்டன். (வழக்.)

**தும்பாரகம்**-பேரரத்தை. (வைத்தியபரிபா)

**தும்பால்**—சூரை. (வைத்தியபரிபா)

**தும்பாலை**—சுரை. (மலையக.)

**தும்பி**—1. ஒரு மீன். (பரதர் வழக்கு.) 2 கொடிக்கொத்தான். (வைத்தியபரிபா.) 3. சுரை. (பிங்கல. உகூகூ) 4. தட்டை. (வழக்.) 5. தும்பிமரம். (உ-ம்.) "கிஞ்சுகி" பார். 6 யானை. (பிங்கல. கூசுடுஎ.) 7. வண்டிஞண். (பிங்கல. உகூஅக.) 8 வண்டு. (உ-ம்) "தும்பிசேர்ந் தசர்க்குந்தொங்கசற்சுரிகுழலுடையாய்போற்றி" (சிவரக. தேவி. மேருவ.சo.) (பிங்கல. கூசுடுஎ.)

**தும்பிலி**—ஒரு மரம்.

**தும்பினி**—மின்மினிப்பூச்சி. (வைத்தியபரி பா.)

**தும்பு**—1. ஈயம். 2. கரும்பு. 3. சிம்பு. (சிந்தா.) 4. நார். 5. நெருஞ்சில். 6. பனைமுத லியவற்றினேடு. (சூ. நிக. கக: மகரவெ. கூ.) (2, 4, 5-மலையக.)

**தும்புரீயம்** — இராகதாள லக்கணங்களைக் குறித்துத் தும்புருசெய்த ஒருநூல். (அபிதா.)

•**தும்புரு**—1. நாரதர்போல யாழ்வாசித்தலில் வல்லஒரிருடி. (உ-ம்.) "வாரத்தேயிசைத்தும்புரு நாரதர்வந்துபாடினரன்றே" (சிவரக. தேவி யிமய உச.)

**தும்பை**—1. ஒருபூடு (மலையக.) 2. பொரு தல்செய்வோர்க்குரியமாலை. (சூ. நிக. கஉ: கூஉ.) 3. போர். (பரிபாடல்.) 4. வெற்றிலை. (மலையக.)

**தும்பைமாலை**—1. ஒரு பிரபந்தம்; அஃது தும்பைப்பூமாலைசூடியாற்றுரோடு பொருவதை க்கூறுவது. (தொன்னூல். உஅகூ. உரை.) 2. போர்செய்வோர்க்குமாலை. (சூ. நிக. கஉ: கூஉ.)

**தும்மல்**—1. தும்முதல். 2. மூச்சு. (சூ. நிக. கூ: சுஎ.) 3. விடுதல்.

**தும்மிசகரோகம்**—வாயினூற் கோழைகோ ழையாகக்கக்கல், வார்த்தைகேட்க அசங்கிதப் படுதல், நெஞ்சுலரல், அதிகநித்திரை, சோம் பல் என்னுமிக்குணங்களையுண்டாக்குமொரு கைரோகம். (சீவரட். எக.) [தேகத்தைச் சீக்கிரத்தில் நாசம்பண்ணுவதாலிப்பெயர் பெற் றது.]

**தும்மிட்டி**—1. சிறுகொமட்டி. 2. பேரீந்து. (1, 2-மலையக.)

**தும்மு**—1. கொசுகு. 2. தும்மல். (உ-ம்.) "தும்முச்செறுப்பவழுதாள்" (வள். கருகஅ.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

**தும்முதல்**—காலுதல். (உ-ம்.) "நிழல்" பார்.

**துமர்த்தம்**–தும் என்பதின் அர்த்தமாய்வந்த சதுர்த்தி. (பி-வி. அ. உo.)

**துமி** — 1. சிறுதிவலை. (பிங்கல. சுகூ) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. மழைத்துளி.

**துமித்தல்**—அறுத்தல், துணித்தல். (உ-ம்.) "சோறுவாய்த்தொழிந்தோருள்ளியுந் தோறு மிபு" (முல்லைப்பா. எஉ.) (பிங்கல. உகசச.) [பாட்டில் துணித்தலென்பர்.] 2. துளித்தல். 3 விலக்கல். (உ-ம்.) "தொடீஇயசெல்வார்த் துமித்தெதிர்மண்டும்" (கலி. ககசு.) 4. வெட்டு தல். (உ-ம்.) "இராவணன்மணியுடைமருடத் தலைதுமித்தற்குநாட்கொண்ட தொத்ததோர்த ன்மை" (இராமா. சூர்ப்பனகை. கூடு.)

**துமிதம்**-1. நீர்த்துளி. (உ-ம்.) "திரைக்கட றுமிதமூர்புக" (இராமா. யுத்தகா. சேதுபந். சஉ.) 2. மழைத்துவலை. (பிங்கல சுகூ.)

**துமிதல்**—1. துணிதல். (திருமுரு. கூoஎ. அடி. உரை.) 2. வெட்டுண்ணல்.

**துமிர்து**—அற்று. (பதிற்றுப்பத்து)

**துமிப்பு**—துமித்தல்.

**துமிபு**—அறுத்து. (பத்துப்பா. அரும்பத.)

**துமிரம்**—1. கருமை. 2. மிகச்சிவப்பு.

**துமிலம்**—பேரொலி. (உ-ம்.) "துமிலமுற விருப்பாணியழலறைவர்துயருறவே" (சிவதரு. சுவர்க்கநர. கஎo.)

**துழலம்**—குழப்பம்.

**துமன்**—செய்ய என்னும் வாய்பாட்டுவினை யெச்சம். (பி-வி. டுகூ. பக்.)

**துய்**—1. உணவு. 2. சிம்பு. (சிந்தா.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. நூற்கும்பஞ்சிற் ருடர்நுனி. (உ-ம்.) "துய்யைச்சுடுவெங்கன லிற்சுடுவான்றுணிந்தேன்" (இராமா. நகர்நீங்கு. கஉஎ.) 5. பஞ்சு. 6. மென்மை. (பத்துப்பா. அருந்தொ.)

**துய்ச்சி** — துய்த்தல். சி, தொழிற்பெயர் விகுதி.

**துயக்கல்**—உண்ணல். (வைத்தியபரிபா)

**துய்த்தல்**—1. அநுபவித்தல். (நாலடி. உஅ. அதி. கூ.) 2. உண்ணல். (உ-ம்.) "ஊமத்தம் பயன்றுய்த்தார்போ லுன்மத்தனுகியுற் ருன்" (கந்தபு. வள்ளி. உஉ.)

துய்ப்பு—1. அநுபவம். 2. புசிப்பு.
துய்மை — மென்மை. (உ-ம்.) "துய்ம்மயி ரடக்கியசெக்கையன்ன" (மலைபடு. சகஅ.)
துய்யம்—சுத்தம்.
துய்யன்—1. பரிசுத்தன். 2. வெள்ளிமணல். (வைத்தியபரிபா.)
துய்யாள்—சரசுவதி. (பிங்கல. கருஅ.)
துய்யான்துறுமணல்— வெள்ளிமணல். (வைத்தியபரிபா.)
துயக்கம்— துயக்கல்— துயக்கு— 1. சோர்வு, தளர்வு. (உ-ம்.) "தூரநடக்குந் துயக்கதனுல்" (சேதுபு. வேதாள. உகூ.) 2. தடை. (உ-ம்.) "துக்கமுஞ்சுகமுந் துயக்கற வறிந்து" (மணிமே. உஎ. கக.)
துயங்கல்— துயங்குதல்— சோர்தல்.
துயம்—இரண்டு. [துவயம்என்பதன்றிரிபு.]
துயர்—1. கிலேசம். (உ-ம்.) "ஞானமுந்துய ருந்தம்முண்மலையெனநலிந்தவன்றே"(இராமா ஆரணிய. அயோமுகி.உ.) 2. தெரிநிலைவினைப் பகுதி 3. துன்பம்.(உ-ம்.)"துயரிலங்குமுலகிற் பலவூழிகடோன்றும்பொழுதெல்லாம்" (தேவா ர. பிரமபுர. அ. சம்பந்த.)
துயர்தல்—துன்பப்படுதல். (உ-ம்.) "புலோ மசைகொழுநன்றன்னுளந்துயர" (கூர்மபு. தக்கன்வமி. உகூ.)
துயரம் — துன்பம். (உ-ம்.) "இம்மூன்று- மருந்துயரங்காட்டுநெறி" (திரிகடு. ரு.)
துயரி—யாழ்நரம்பு. (சிந்தா.)
துயலல்—நாலல். (புறப்-வெ.)
துயல்வரல்—அசைதல். (திருமுரு. உ0எ. அடி உரை.)
துயலுதல்—அசைதல். (புதிற்று.)
துயவு—அறிவின்றிரிபு.
துயில்—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நித்திரை. (உ-ம்.) "வைகறைத்துயிலெழு"(ஆத்தி சூடி.) (பிங்கல. உ0கூக.) 3. மரணம். (புறப். வெண்.)
துயில்வு— துயிலல்— நித்திரைசெய்தல்.
துயிலார்—தேவர்.
துயிலி—ஓர் கீரை. (வைத்தியபரிபா.) தொயிலி என்பர் வழக்கில்.
துயிலுணர்தல்—விழித்தல். (உ-ம்.) "துயி லுணர்ந்திருந்த" (திருவிளை. நரிபரி. கஎ.)
துயிலுதல்—நித்திரைசெய்தல்.
துயிலேடை—துயிலெழும்பல்.
துயிலெடைநிலை—ஒரு பிரபந்தம்; அஃது மாக்கவர்ச்சியின்றிப்பாசறைக்கட்டுயின்ற அர சர்க்குப் புகழ்கொடுத்தலைக்கருதிய சூதர் துயி லெழுப்புவதாகப்பாடப்படுவது. (தொன்னூல். உஅகூ. உரை.)
துயிலோழிதல்—சாகரம் (பிங்கல.உ0சகூ.)
துயிற்சி — நித்திரை. (உ-ம்) "கயக்கமிறு யிற்சிக்கும்பகருணையைக்கண்ணிற் கண்டான்" (இராமா. ஊர்தேடு. கஉக.)
துயிற்றுதல்—நித்திரையாக்கல். (பெரியபு. கண்ணப்ப. உஎ.)
துயிறல்—1. தங்குதல். (சிந்தா.) 2. நித்தி ரைசெய்தல். (ஐங்குறு. அரும்பத.)
துயின்மடித்தல் — உறங்குதல். (உ-ம்.) "துயின்மடிந்தன்ன" (புறநா. கஉகூ.)
துயுலி — தொய்யில், ஒருகீரை. (உ-ம்.) "துயுலியிலைக்கறிக்குஞ்சொல்" (பதார்த்தகு)
துர் — தீதப்பொருடருமோர் உபசருக்கம். துர்க்குணன் என்பதும்போலு மொழிகளிற் காண்க.
துர்க்கசதுட்டயம்—சலதுர்க்கம்,வநதுர்க்கம், கிரிதுர்க்கம், இரத்திகாவநதுர்க்கம் என்னும் நால்வகைத்துர்க்கம். (வி-ணி. உஉச.)
துர்க்கை—1. கொற்றவை. (பிங்கல. கஉச.) 2. பூரநட்சத்திரம். (சூ நிக. க; எக)
துர்க்கையாடல் —மரக்கால், என்றுபெயர். (சூ. நிக. கூ: ருக.)
துர்ச்சனன்—துஷ்டன்.
துர்த்தூரம்—அருத்தூரம், ஊமத்தை.(வைத் தியபரிபா.)
துர்த்துலம்—கீர்முள்ளி. (வைத்தியபரிபா.)
துர்ப்பரிசம்—சிறுகாஞ்சொறி. (வைத்திய பரிபா.)
துர்ப்பிட்சம்—பஞ்சம்.
துர்மதி—1. துர்புத்தி. 2. துன்மதிவருடம்.
துர்லபம்—பெறுதற்கரிது.
துர்வாசர்—ஓரிருடி. (திருவிளையா. வெள்ளை யானைசா. உ.)
துரககதி—குதிரைநடை. அது மல்லகதி, மயூரகதி, வானரகதி, விடபகதி, வியாக்கிரகதி என ஐவகையென்றும், விக்கிதம், வற்கிதம், வெல்லுமுபகண்டம்-மத்திமஞ், சாரியோடைந் து, என ஐவகையென்றும் பேதப்படப்பேசுவர். (சூ. நிக. கஉ: சக.)
துரகதம்—1. தத்தூரி. (வைத்தியபரிபா.) 2. குதிரை. (உ-ம்.) "சூழிவெங்கசரததுரகத நிருபரை"(பாரத.ஆறும்போர்.கூ)2. குதிரைப் பற்பாஷாணம்.
துரகதழலம்—கீர்முள்ளி.(வைத்தியபரிபா.)
துரகம் — 1. குதிரை. (பிங்கல. உசசகூ.) 2. குதிரைப்பற்பாஷாணம். 3. குதிரைமரம்.

இது அணைகட்டுவதற்குநிறுத்துமரம். (உ-ம்.) "துரகங்கொடுதர்க்குவார்" (அரிச்.நாட்டு.கூo.)

**துரகர்**—ஞானேந்திரிய தத்துவத்திலிருக்கும் பஞ்சபுவனபதிகளிலொருவர். (வி-ணி உஎஉ.)

**துரகாம்**—கத்தூரி. (வைத்தியபரிபா.)

**துரங்கப்பிரியம்**—சோதுமை. (வைத்தியபரிபா.)

**துரங்கம்**—குதிரை. (உ-ம்.) "துரங்கமூர்தறநடந்தவே"(அரிச்ச. வேட்டஞ். உo.)

**துரங்கமம்**—குதிரை.

**துரங்கவதநர்** — கந்தருவர், பரிமுகத்துடனிருப்பவர்.

**துரட்டன்**—துன்மார்க்கன். (வழக்கு.)

**துரத்தல்** — 1. அகற்றுகை, எறிதலுமாம். (உ-ம்.) "தூயகடனீரடிசிலுண்டது துரந்தான்" (இராமா. அகத்திய. கூஅ.) 2. செலுத்துகை. (உ - ம்). "அரும்பொருள்வேட்கையினுள்ளந்துரப்ப" (கலி. கஅ.) 5. போதல். (பிங்கல. உஉoரு.)

**துரத்துதல்** —1. ஓட்டுதல். (உ-ம்.) "அகத்தைவிடத்துரத்தினர்கள்" (திருவிளை.விருத்த. கூக.) 2. செலுத்தல். 3. தொடர்தல்.

**துரந்த**—எறிந்த (புறப்-வெ.)

**துரந்தரம்**—வல்லபம்.

**துரந்தரன்**—1. பாரந்தாங்குவோன். 2. வல்லோன்.

**துரந்தரி**—பாரந்தாங்குபவள். (உ-ம்.)"துரைராசதுரந்தரிமூன்" (சிவரக. நந்திசண. அ.)

**துரந்து**—செலுத்தி. (புறநானூ.)

**துரப்பணம்**—கம்மாளர் கருவியிலொன்று. (ஓர் குழூஉக்குறி.)

**துரப்பு** -1. துரத்துதல். 2. முடுக்குதல். (உ-ம்) "துளைவாய்தூர்ந்ததுரப்பமையாணி" (பொருந. கo.)

**துரம்**—சுமை.

**துரம்**—1. தூதுளை. 2. தொடரி. (1, 2-மலையக.)

**துரவு**—1. ஒருவகை நீர்நிலை. (உ-ம்.) "அவளொருநாடுரவோரத்திளைப்பாய்த்தூங்குமந்தணனையதனுள்விழத்தள்ளி" (பஞ்சதந். அர்த்தநாச. கூச.)

**துராகதம்**—துர்நடை.

**துராகிருதம்**—தீத்தொழில்.

**துராய்** — அருகம்புற்கயிறு. (உ-ம்.) "துராஅய்துற்றியதுருவையம்புழுக்கின்" (பொருநாற். கoரு.)

**துராரோகம்**—பனை. (மலையக.)

**துரால்**—1. செத்தை. (சிந்தா.) 2. துக்கம். (பிங்கல. கஅஅஉ.)

**துராலபம்**—சிறுகாஞ்சொறி. (மலையக.)

**துராலோபம்**—சிறுகாஞ்சொறி.(வைத்தியமூ. அக.)

**துரி**—1. சுமை. (உ-ம்.) "துரிபெறச்சரிபொழிற்கனவயற்கழகுள" (திருப்பு. ருoஎ.) 2. நாடா. (தர்க்கபா.) 3. நூற்பாத்திருத்தும்படைமயிர்.

**துரிகாரம்**—பொரிகாரம்.(வைத்தியபரிபா.)

**துரிசிக்தரு**—நவட்சாரம்.(வைத்தியபரிபா.)

**துரிசு** — 1. குற்றம். (உ-ம்.) "துரிசறுத்துநின்றியற்றியவருந்தவச்சுத" (உபதேசகா. கைலைமான். கஉ.) 2. துருசி. 3. துன்பம் (பிங்கல. கஅஅஉ.)

**துரிஞ்சில்**—சிக்கிரிமரம். (பிங்கல. உஎசசு.) இதனை உசிலமரமென்றுங்கூறுவர்.

**துரிதம்**—1. ஒரு தாளம். 2. கலக்கம். (பிங்கல.கஅருரு.) 3. காலதசப்பிரமாணத்தொன்று; அது: துடி இரண்டுகொண்டது. 4. சீக்கிரம். (உ-ம்.) "துரிதமான்றேரிற்போன்னன்"(இராமா. தைலமாட்டு.ருச.) 5.பாவம். (பிங்கல.கஅகூஅ.)

**துரியகாமி** — ஏழாம் ஞானபூமி; இது: அறிவுருவான அத்துவிதபதத்தில் வெளியில் வெறுங்கடம்போல் உள்ளும்புறமுஞ்சூனியமாயிருப்பது. (உ-ம்.) "உண்டிலையென்னுமலசங்கிருதிகிரங்கிருதியுருமலறி வுருவாயவத்துவிதபதத்துட்- கணடதொருவறுங்குடம்போலுட்புறஞ்சூனியமாங்கதி துரியகாமியாம்" (வேதா. சூ. கசஅ.)

**துரியசந்தி** – கன்மயாகக்கிரியையிலொன்று. (சி. சி. அ: உகூ. சிவாக்.)

**துரியசொரூபம்**—(வேதாந்தம்.) உபாதிதேகம் அவத்தைமுதலிய துரிசெல்லாம்விட்டுச்சுத்தமெதாம்பதார்த்தமாய் விளங்கிக்கொண்டிருக்கும் ஆத்துமசொரூபம். (ஞானக்கட்டளை. தொம்பதமகநம்.)

**துரியஞானம்** — ஒருவகைஞானம். (உ - ம்.) "மித்தையெனுமாயாகாரியவுடம்பாதிகளின் வேருமுயதுரியஞானத்தின்மேலாக - வைத்ததொருபோகபோத்திருக்களிலாமையினன்" (வேதாசூ. கருகூ.)

**துரியத்தாநம்**—நாபி; இதிலே பிராணவாயு விளங்கும். (சி. சி. சு: கூஉ. மறை.)

**துரியம்** — 1. ஐந்து அவத்தையில் நான்காவது;அது: ஆன்மாப்பிராணவாயுவோடும் புருடதத்துவத்தோடும் நாபித்தாநத்தில் நின்ற வவசரம். (சி. சி. சு: கூகூ. நிரம்ப.) 2. சுத்தநிலை. 3. பொதியெருது. (சூ. நிக. கூ: கரு.) 4. மேலானபொருள்; பரமான்மா. (உ-ம்.) "காண்பா

னுங்காட்சியுமாயவைகடந்த துரியமுமாய் நின்ருய்" திருவிளை. கல்லானை. உஅ.)

**துரியர்**—1. கடவுள். 2. சுத்தநிலையிற்சலநமற்றிருப்போர்.

**துரியன்**—1. கூடத்தனது பரியாயநாமங்களுளொன்று. (உ-ம்.) "தாவரும்பாரமார்த்திகன்றுரியன்" (வேதா. சூ. ருஉ.) 2. மேலான பொருளையடைந்தோன். (உ-ம்.) "சுத்தன்றுரியனவதாதன்றுறவிசிவயோகி" (ஒழிவிலொ. அருளவத்தை. சo.)

**துரியாதீதத்தாநம்**—மூலாதாரம்.

**துரியாதீதம்**—1. ஐந்தவத்தைகளில் ஐந்தாவது; அது: ஆன்மாப்புருடதத்தவத்தோடுமூலாதாரத்திநின்றவவசரம் (சி:சி.ச:கூகூ.சிவாக்.) 2. யசுர்வேதவுபநிடதத்தொன்று.(கந்.நவ.சஅ.)

**துரியாதீதர்**—சந்நியாசவாச்சிரமத்தார் அறுவருள் ஒருவர். (கூர்மபு. வருண. சo. உரை.)

**துரியோதநன்**—துரியோதநன் இவன் திருதராட்டிரன்மகன். (உ-ம்.) "துரியோதநன்மகனும் பொருதுச்சாதநன்மகனும்" (பாரத. பதின்மூன்று. கoஅ.)

**துரீ**—நெய்வார்கருவியினென்று.

**துரீயம்** — 1. சாற்பங்கு. 2. நான்காவது நிலைமை. 3. பொதியெருது, நிகண்டில் துரியமென்பர்.

**துரீயன்**—வாக்குமனம் விருத்தி ஞானங்கட்கெட்டாமனின்றசிவன். (சி. சி. அ:உக.சிவாக். உரை.)

**துரு**—1. உபாயம். 2. கறை.

**துருக்கம்**—1. ஒக்கவழி. 2. கத்தூரி. (பிங்கல. உருஉச.) 3. கத்தூரிமிருகம். 4. கலக்கம். 5. காடு. 6. குங்குமமரம். (உ-ம.) "வாசத்துருக்கமுமாமாறும்" (சேதுபு. திருநாட். எசு) 7 சுந்துருக்கம். 8. சேரல் உரிச்சொல்நிகண்டிற் சேரற்கரியவிடமென்ருர் (5, 6-பிங்கல. கூசுருஅ.)

**துருக்கர்**—ஒரு பாஷடக்காரர்.

**துருக்கல்**—கிச்சுக்கிட்டம்.

**துருக்கி**—துருக்கிதேசம்.

**துருக்கு**—துலுக்கப்பாடை.

**துருசி**—மயிற்றுத்தம். (உ-ம்.) "காந்திசருக்துருசிகாண்" (பதார்த்தகுணம்.) நற்பச்சையென்பர் வைத்தியபரிபாடையில்.

**துருசிக்குரு**—நவச்சாரம். (வைத்தியபரிபா.)

**துருசு**—சீக்கிரம் (வழக்.)

**துருஞ்சில்**—வாவல். (பிங்கல. உகூஅo.)

**துருத்தி**—1. ஆற்றிடைக்குறை. (திருமுரு. உஉகூ. அடி உரை.) 2. ஊதுந்துருத்தி. 3. ஒருதிருப்பதி. (உ-ம்.) "துருத்திதன்னிலருத்தியோடிருந்தாய்" (திருவாச. கீர்த். அசு.) 4. சடம். (உ-ம்.) "பீர்றற்றருத்தியை" (பட்டணத்தடி.) 5. தோல். (பிங்கல. கூசுருகூ.) 6. நீர்த்துருத்தி. (உ-ம்.) "செம்பொன்செய்துருத்திதூம்புசெய்குழல்" (திருவிளை. உக்கிரபா. திருவவ. உச.)

**துருத்திரபிரணவன்** — கன்மேந்திரியபஞ்சகத்திலிருக்கும் ஐந்து ருத்திரரிலொருவன். (வி·ணி.)

**துருத்துாரம்**—ஊமத்தை. (மலையக.)

**துருதுருத்தல்** — 1. விரைதல். 2. விரைவு. (1, 2-வழக்.)

**துருதுருப்பு**—விரைவு. (வழக்.)

**துருதுரெனல்**—விரைவின்குறிப்பு.(வழக்.)

**துருப்பிடித்தல்**—கறைபிடித்தல். (வழக்.)

**துருபதன்** — திரெளபதைதந்தை. (உ-ம்.) "துங்கவேற்றுருபதன்ருன்" (பாரதம். திரெளபதிமா. க.)

**துரும்பர்** — 1. ஈநர். 2. பறையர்முதலானோர்க்கு வண்ணார்.

**துரும்பு**—திரணம். (உ-ம்.) "துரும்பெனக்கனன்றுசொன்ஞள்" (இராமா. நிந்தனைப். கூக.) பத்துப்பாட்டு அரும்பதவுரையிற் கூளமென்ருர்.

**துருமசிரேட்டம்**—பனை. (மலையக.)

**துருமநகம்**—முள். (வைத்தியபரிபா.)

**துருமம்**—1. குங்குமமரம். 2. மரக்கலக்கம். 3. மரப்பொது. (பிங்கல. உஎகூக.) (உ-ம்.) "கடலூட்டப்பட்டுத்துருமத்தடைவாக" (திருப்பு. சஉச.)

**துருமவருணி**—காட்டாமணக்கு. (மலையக.)

**துருமவியாதி**—கொம்பரக்கு.(உ-ம்.) "துருமவியாதியெண்குடும்பம்" (தைல. தைலவ. ருக.)

**துருயோற்பலம்**—கோங்குமரம். (பிங்கல. உகூஅகூ.)

**துருவங்கட்டுதல்** — 1. உபாயந்தேடல். 2. கிரகணமுதலியன அறிதருகருவியாக்கல்.

**துருவசக்கரம்**—நவக்கிரகமண்டலம். (உ-ம்.) "துருவசக்கரம்போற்கொங்கை" (திருவிளை. திருமணப்ப. கசுக.) துருவத்திற்கு இருபத்துமூன்றரைப்பாகையளவில் நிற்பது.)

**துருவதாளம்**—சவதாளத்தொன்று. (பிங்கல. சகூக)

**துருவம்**—1. அசையாநிலை. 2. உபாயம். (வழக்.) 3 ஒப்பு. (உ-ம்.) "செங்கண்மாறெழிக்கப்பட்டவலம்புரித்துருவங்கொண்ட சங்குவாய்வைத்து" (சிந். காந்தரு. கூகஎ) 4. கிரகநடையின்மண்டலம்.) 5. சத்ததாளத்தொன்று. (சூ. நிக. கஉ: கoக.) 6. துருவநட்சத்திரம்.

துநவல்—1. ஆராய்தல். 2. கடைதல். (பிங்கல. உகஉஉ.) 3. துளைத்தல். 4. தேடுதல். (உ-ம்.) "துருவினங்குங்காணன்" (திருவிளை. இந்திரன்ப. எ.)

துநவலகு—துருவுமணை. (வழக்.)

துநவவருடம் — சத்தவிருடிகள் வருடம் பத்துக்கொண்டது. (கூர்மபு.விருஞ.கூ.உரை.)

துநவன் — 1. அட்டவசுக்களிலொருவன். (பிங்கல. கஅக.) 2. உத்தானபாதனுக்குச்சுநீதியிடத்திற்பிறந்தவன். (உ-ம்.) "வலங்கொழுதோ ளுத்தானபாதனியர் றுருவனையுண் மகிழவீன் ருன்" (கூர்மபு.தக்க.சபித். க.)இவன்சுவாயம்பு மநுவின் பேரன். 3. மாயாதத்துவத்திலிருக்கு மோருருத்திரர். (வி-ணி.)

துநவாசம்— உபபுராணம் பதினெட்டி னென்று. (பிங்கல. சசரு.)

துநவாசன்— அத்திரிபுத்திரருளொருவன். (உ-ம்.) "நாளுமலக்கணறுமத்திரிகல்லநசூயை யவ்வயிற்றினலங்குசோமன் - கலசகமிநத்தாத் திரயன்றுருவாசனெனுமிவரைக்களிப்பிற் றந்தான்" (கூர்மபு. அபிதாந.) [கருப்பவாசந்துருவாசமெனப் புட்பாஞ்சலியில்வந்த காரணம்பற றித் துருவாசனெனப் பெயர்வந்தது.]

துநவாட்டி—சிற்றேலம். (மலையக.)

துநவாடு—செம்மறியாடு.(பிங்கல.உசஅக.)

துநவாதி—காட்டாமணக்கு. (மலையக.)

துநவு—1. துருவல், தேடல். (சூ. நிக. கூ: கூசு.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. துளை.

துநவுதல்—1. கடைதல். 2. துளைத்தல். 3. தேடுதல். (வள். கூஉகூ.) 4. தொடர்தல்.

துநவுமணை—தேங்காய்துருவுமொரு சருவி.

துநவை—1. கீதவுறுப்புளொன்று. (சிலப். அரங்கே. கரு௦. உரை.) 2. செம்மறியாட்டுக் கிடாய். (பொருந. க௦கூ. உரை.)

துநளக்கம்—குந்துருக்கம்.(வைத்தியபரிபா.)

துரை—1. சுமை. (உ-ம்.) "துரைமாண்ட வாபாடித்தோணேக்கமாடாமோ" (திருவாச. திருத்தோணே. கச.) 2. மிகுதிப்பாடு. (உ-ம்.) "தண்டத்துரைசெய்துதீர்ப்பன்" (சி.சி.உ: கூஉ: சிவஞா.) 3. மேன்மகனுக்கு மிகுதியையுடைமையாற்கூறுவர். (வழக்.)

துரைச்சி—துரைப்பெண்.

துரோகம்-1.கொடும்பாவம்.(உ-ம்.)"சிவத்துரோகங்கள்"(சிவரக.சிவதன்மா.சு.) 2. தப்பிதம்.

துரோகி—கொடும்பாவி.

துரோணதும்பம்—பதக்கென்னுமளவுகொண்ட நீர்நிறைந்த கும்பம். (உ-ம்.) "சுரததாது வீழ்ந்ததுரோணகும்பந்தன்னில்" (பாரத. வாரணா. கூஉ.)

துரோணை—வெண்ணொச்சி.(வைத்தியபரிபா.)

துரோணம் — 1. எண்காற்புள். 2. கவிழ் தும்பை. (மலையக.) 3. காக்கை. (வைத்தியபரிபா.) 4. சத்தமுகிலினொன்று; அது மண்பொழிவது. (பிங்கல. எக.) 5. தநுவிராசி. (சூ.நிக.க: சுசு.) 6. தும்பைச்செடி. 7. பதக்கு என்னுமோரளவு. (உ-ம்.) "பெய்திடுந்துரோணந்தேன்" (சேதுபு. சங்கரபா. எரு.) 8. வில். (1, 3, 6, 8-பிங்கல கூசுசு௦.)

துரோணன்— } குருகுலத்தரசர்
துரோணுசாரியன்— } குருவாகிய வாசாரியன்; இவன் பரத்துவாசமுனிவர்புத்திரன். (பாரதவாரணா. கூஉ.)

துரோணி—ஆடகம் நாலுகூடினது.

துரோணிகை—ஆவிரை. (வைத்தியபரிபா.)

துரோணிதலம்—தாழை. (வைத்தியபரிபா.)

துல்லபம்—அருமை. (வழக்.)

துல்லம்—பேரொலி.

துல்லாசிநி—விசுத்திக்குரிய பத்மதளமொன்றிலிருக்கும் ஐ என்னும் அட்சரத்தின் அதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

துல்லிமை—மேன்மை.

துல்லியம் — 1. அப்பிரகம். (உ-ம்.) "அசிதளம்".பார். 2. உவமை. (பிங்கல. உஉஅக.)

துல்லியயோகிதாலங்காரம் — ஒப்புமைக்கூட்டவணி; அது பலவர்ணியப்பொருள்களுக்கேனும் பலவவர்ணியப் பொருள்களுக்கேனும் ஒப்பானதருமத்தினுல் முடிவுகூறுவது.(குவல. கச.)

துலக்கம்—பிரகாசம். (சூ. நிக. க௦: உஅ.)

துலக்கல்—விளக்கல் (உ-ம்.) "திருவாசற்றிண்ணைகளுந்துலக்குவீரால்" (சிவரக.சுகமுநி. கங.)

துலக்கு—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பிரகாசம்.

துலக்குதல்—பிரகாசிப்பித்தல்.

துலங்கல்—1. துலங்குதல். 2. துளங்கல். (திருக்கோ. உச. உரை.)

துலங்கு — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. தொழுமரம்.

துலங்குதல்—1. நடுங்குதல். (உ-ம்.)"துலங்குகின்றேனடியேனுடையாயென் ருெழுகுலமே"(திருவாச. நீத்தல். உஅ.) 2. பிரகாசித்தல்.

துலங்கூர்தி — தூங்குகட்டில். (கலி. ககூ. உரை.)

துலத்தாது—நிலப்பனை. (வைத்தியபரிபா.)

துலம்-1.இலவு.2.கோரை. 3.துலாநிறை. 4. நீர்முள்ளி. 5.பருத்தி.(1,2,4,5-வைத்தியபரிபா.)

துலவம்—பஞ்சு.

துலா—1. கைமரம். 2. துலாராசி. (சூ. நிக. க: சுரு.) 3. நிறைகோல். 4. நீரிறைக்குந்துலா.

துலாக்கட்டை — மேலிடுகிற பாக்கட்டை (இராமா. பால. நகரப். ௩௦.)

துலாக்கோடி—பட்டைக்கொடி. (வைத்திய பரிபா.)

துலாக்கோல் — தராசுக்கோல். (திருவள். ௧௨. அதி. அ. உரை.)

துலாதானம் — துலாபுருடதானம். (உ-ம்.) "சாற்றருந்துலாதானஞ்சோடசமகா தானம்" (சிவரக. தேவர்முறை ௧௧.)

துலாதாரம்—துலாக்கோல்

துலாநி — இலவமரம். (வைத்தியபரிபா.)

துலாபாரதானம் — துலாபுருடதானம்.

துலாபுருடதானம் — துலாபாரதானம்.

துலாபுருடம் — துலாபுருடதானம்; அஃது: ஒருபுருடன் தன் தேகத்தையொத்த பாரத்தை யுடைய பொன் அல்லது பணிகள் அல்லது வேறு விலைபெற்றஉடைமைகளைத்தானம்பண் ணுதல். (சி. சி. அ: உரு. மறை.)

துலாம் — 1. ஏற்றமரம். 2. ஐந்துவீசை கொண்டநிறை. (வேதா. சூ. ௧௧.) 3. ஒரிராசி. (பிங்கல. உ௭௦) 4. நிறைகோலிற்கும் பெயர் கூறுவர்.

துலாம்பரம்—விளக்கம். (வழக்.)

துலாவிடுவம்—துலாராசியிற் சூரியன்வருங் காலம். ஐப்பசிமாதம். [விஷுவம்-விடுவமென் றுயிற்று.]

துலி—பெண்ணாமை. தமிழ்நிகண்டிற்றுளி யெனக்கூறுவர்.

துலிநி—இலவமரம். (வைத்திய. அக.)

துலியாசநம்—செம்முருங்கை. (மலையக.)

துலுக்கச்சி —துலுக்கப்பெண்.

துலுக்கர்—துருக்கர்.

துலுக்காணம் —ஒரு தேயம்.

துலுக்கு —1. அசைப்பு. 2. ஒருதேசம். 3. ஒரு பாடை. 4. தெரிநிலைவினைப்பகுதி.

துலுக்குதல்—குலுக்குதல்.

துலை—1. ஒப்பு. 2. துலாக்கோல். (உ-ம்.) "தென்பாறுலைபெறநிறுத்தகளைகணே யென் று" (திருவிளை. புராணவர. ௨௧.) 3. துலா ராசி. (சூ. நிக. க: சுரு.) 4. தூரம். (வழக்.) 5. நீரிறைக்குந்துலை. 6. நூறுபலம். (உ-ம்.) "சரண்" பார்.

துல்லாபம்—கருஞ்சுண்டி. (வைத்தியமூ. அக.)

துவ்வல் — 1. அநுபவித்தல். 2. புசித்தல், உண்டல். (பிங்கல. ௧௧௧அ.)

துவ்வாதவர்—
துவ்வாதார்—
துவ்வார்— } வறியர். (உ-ம்.) "துறந்தார்க்குந்துவ்வாதவர்க்கும்" (வள். ௪௨.)

துவ்வாமை—1. தரித்திரம். 2. நுகராமை யாகிய தீவினை. (உ-ம்.) "தொடர்கூரத்துவ்வா மைவந்தக்கடை" (கலி. ௨௨.) 3. வெறுப்பு.

துவ்வான்—வலியிலன். (உ-ம்.) "அன்பில னான்றதுணையிலன்றுவ்வா - னென்பரியுமேதி லான்றுப்பு" (வள். அகஉ.)

துவ்வு—1. அநுபவம். (உ-ம்.) "பொருளி னைத்துவ்வான்புதைத்துவைப்பான்" (திரிகடு. அக.) 2. (இகழ்ச்சி. சூ. நிக. அ: ருக.) 3. உணவு. (திருவள். உ: உ.) 4. ஐம்பொறிநுகர்ச்சி. (சூ. நிக. க: உஅ) 5. தெரிநிலைவினைப்பகுதி.

துவ்வுதல்—நுகர்தல். (வள். ௧௦௦௬.)

துவக்கம்—ஆரம்பம்.

துவக்கல் — 1. கட்டல். (உ - ம்.) "மூலை மேற்றனிக்காறைதனிற்றுவக்கி" (கோயிற்பு. பதஞ்சலி. ௧௪.) 2. தொடங்கல்.

துவக்கவிவரம்—செவ்வலரிசி. (வைத்திய பரிபா.)

துவக்கு—1. கட்டு. (உ-ம்.) "துவக்குசங்கிலி யெறிந்து" (திருவிளை. நகரப். ௨௭.) 2. சங்கிலி. (சூ. நிக. எ: கரு.) 3. சம்பந்தம். 4. தெரிநிலை வினைப்பகுதி. 5. தேகத்திலே வாயு இடமாக நின்று பரிசத்தையறியு மிந்திரியம். (உ - ம்.) "நற்செவி துவக்குக்கண்ணாசி யைந்தினை யு நல்லோர் - புத்தியிந்திரியமென் றுபுகன்றனர்" (சி. சி. உ: ௬௧.) 6. தோல். (உ-ம்.) "பறக்கும் பருந்துவக்குங்கழியூண்முடைப்பற்றுளதா-மிற க்கும்பருந்துவக்காக்கையைநீக்கி" (மறைசை. அஅ.) 7. பிணக்கு. (பிங்கல. ௯௬௬.)

துவக்குதல்—துவக்கல்.

துவக்குநோய் —தோற்புரைவியாதி. (உ-ம்.) "கற்புமன்புஞ் சோதித்தலுன்னித்தணியாததுவக்குநோயன்" (பாரத. திரௌ. ௭௪.)

துவங்கல்—
துவங்குதல்— } தொடங்கல்.

துவசம்—கொடி. (உ-ம்.) "விடைத்துவசன்" (சிவரக. கத்தரி. ௧௬.)

துவசர்—கள்விற்போர். (சூ. நி. உ: ௬௫.)

துவட்சி—1. அசைவு. (உ-ம்.) "துவட்சியிலா- மிக்கநிலையாநிலைபோக்கி" (ஞானவா. உபசாந்திப் பிர. ௬௨.) 2. வறட்சி. (வழக்.)

துவட்டர் —கம்மாளர்.

துவட்டல்—1. துடைத்தல். 2. துவட்டற்கறி. (1, 2-வழக்.)

துவட்டன் — துவாதசாதித்தரிலொருவன்.

துவட்டா—கண்ணாளர். (சூ. நிக. உ: உஅ.)

துவட்டாநாள் — சித்திரைநாள். (பிங்கல. உருஉ.)

துவட்டு—தெரிநிலைவினைப்பகுதி.

துவட்டுதல்—துடைத்தல்.

துவதியை—கோரோசனை. (வைத்தியபரி.)

துவந்தநை—1. பந்தம். (உ-ம்.) "பெருந்துவந்தனைப்பிறப்பையும்" (பாரத. கிருட். எஎ.) 2. இரட்டித்திருப்பது. 3. தடை.

துவந்தம்—1. இரட்டித்தது. 2. சொந்தம்.

துவந்தித்தல் — 1. ஒன்றற்கொன்று தொடர்ந்திருத்தல். 2. சேருதல். (சி. சி. உ: கூரு. சிவாக்.)

துவந்துவசமாசம் — உம்மைத்தொகை. (உ-ம்.) "வடநூலாரும்மைத்தொகையைத்துவந்துவசமாசமென்பர்" (நன். ஙகூஅ. உரை.)

துவந்துவம் — 1. இரண்டு. (வி-ணி) 2. ஒன்றற்கொன்றுதொடர்ந்திருப்பது. 3. பற்று. (உ-ம.) "தன்பங்களைந்து துவந்துவங்கடியேமை செய்து" (திருவாச. குலாப். கூ.) 4. புணர்ச்சி.

துவந்துவன்—உம்மைத்தொகை. (பி. வி. உ0. உரை.)

துவரி—ஒலி.

துவம்—1. அசையாநிலை, நிலைபேறு. (உ-ம்.) "தோமிலாமூன்றுநூலுந்துவமென வு தித் த வன்றே" (சூ. நிக. சிறப்பு.) 2. இரண்டு. (தைலவ. அரும்பதவகராதி.) 4. தன்மை. (தருக்க சங்கிரகத்திலறிக.)

துவயம்—இரண்டுதன்மை. (உ-ம்.) "துவய சமானதர்மதரிசனத்தினாலே" (சி. சி. உ: உ. சிவாக்.)

துவர் — 1. சிவப்பு. (உ-ம்.) "முத்தவெண்முறுவற்கனிபடுதுவர்வாய்" (கூர்மபு. அரியய. கூ.) 2. துவர்ப்பு. (உ-ம்.) "துவர்மருவப்புளிப்பேற்றி" (தைல. பாயிர. கச.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பவளம். (உ-ம்) "வளைவளர்கையன்விழிவளர்பாற்கடல்வார்துவரின்-இளைவளர்காட்சியசேயரிக்கண்" (தணிகை. களவு. உ0கூ.) 5. பாக்கு. (உ-ம்.) "அங்கொருகுசமாய்மிளகுதுவர்பனைதெனங்கனிபோலவேபலகனியின் வயிறுகி" (திருப்பு. உஉ0.) 6. விறகு. (பிங்கல. கஎஉ0.) 7. இனித்துவர் பத்தென்பர். (சூ. நிக. கஉ: க0ரு.) இக்கவியில் முப்பலைஎன்பதைமுப்பழம் எனப் பிழையாக அச்சிட்டனர்.

துவர்க்கட்டி — காய்ச்சுக்கட்டி. பாக்குமுதலியவற்றின் சாரங்களைக்காச்சியகட்டி. (வழக்.)

துவர்க்கண்டல் — செந்தாழை. (உ-ம்.) "துவர்க்கண்டலரச்கு" (தைல. தைலவ. கஙரு)

துவர்க்காய்-பாக்கு. (உ-ம்.) "தின்றிடலாகாதுதுவர்க்காயென" (ஏகாதசி. உருக்குமா. கூ0.)

துவர்ச்சிகை — 1. கடுக்காய்ப்பிஞ்சு. 2. கூகைநீர். (1, 2-மலையக.)

துவர்த்தல்—துவர்ப்புக்கொள்ளுதல், அறுவகைச் சுவையினொன்று. (பிங்கல. ௬0கூ.)

துவர்தல்—வகிர்தல். (பிங்கல. சூ. நிக. கூ: உஅ.)

துவர்ப்பு—1. அறுசுவையினொன்று. அது துவர்ப்பு (பிங்கல. ககசுஎ.) 2. பத்து. (உ-ம்.) "தொண்டிசாயிருவேர்செய்தவொட்டி நாரியுந் துவர்ப்பாம்" (தைல. தைலவ. கூஎ.)

துவர்ப்புஆறு—ஆசியமுதலியன. (சிந்தா.) உரைக்கிடையிற்காண்க. ஆசியம்-சிரித்தல்.

துவர்வீழி — சிந்தவிழுதி. (உ-ம்.) "சாணி துவர்வீழி" (தைல. தைலவ. கஉரு.)

துவர — 1. மிக. (உ-ம்.) "துவரப்பசித்து" (வள். கூசஎ.) 2. முற்ற. (உ-ம்.) "தப்புரவில்லார்துவரத்துறவாமை-யுப்பிற்குங்காடிக்குங்கூற்று" (வள். க0ரு0.)

துவரம்—துவர்ப்பு.

துவரி—1. புலர்த்தி. (உ-ம்.) "பின்னிருங்கூந்தல்பிழிவனந்துவரி" (கு-பா. சு0.) 2. கஷாயம். (வைத்தியபரிபா.)

துவரை—1. ஒரு பயறு; அது: கருந்துவரை, காட்டுத்துவரை, காலியாந்துவரை, மலைத்துவரை எனப் பலவகைப்படும். 2. துவாரகை. (உ-ம்.) "வண்டுவரையரணுகைவடமதுரைகைவிட்ட" (பாரத. கிருட். சஎ.)

துவரைக்கோமான்—இடைச்சங்கப்புலவருளொருவன். (சிலப்.)

துவரைமல்லி — புஷ்பராகத்தரிப்பு. (ஒருகுழூஉக்குறி.)

துவல்—தெரிநிலைவினைப்பகுதி.

துவலம்—பவளம். (வைத்தியபரிபா.)

துவலல்— } துளிவிடல்.
துவலுதல்— }

துவலை—1. துளி. (உ-ம்.) "தூதனிட்டமலையின்றுவலையால்" (இராமா. சேதுபந். ஙஎ.) 2. மழைத்துவலை. (பிங்கல. சுக.)

துவள் — தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "துவடனிமருங்குற்கஞ்சத்தோகைபால்" (சேதுபு. சேதுமா. கூகூ.)

துவள்வு—துவட்சி. (உ-ம்.) "தோலாக்கரிவென்றதற்குந்துவள்விற்கும்" (திருக்கோ. கக0.)

துவளல்—துவளுதல்.

துவளுதல்—1 அசைதல். (சூ. நிக. கூ: உஉ.) 2. கசங்கல். (வழக்.) 3. கலங்கல். (உ-ம்.) "அங்கவனின்சொற்கொண்டுதுவண்டு" (கோயிற்பு. நடரா. சுகூ.) 4. துடித்தல். (உ-ம்.) "சிறமீன்

றுவண்டாங்கு" (திருவாச. நீத்தல். உசு.) 5. செளிதல். 6. மெல்லியதாயிருத்தல். (வழக்.)

**துவற்றல்**—தாவுதல். (உ-ம்.) "கார்மழைத் தொழுதிதூஉயன்னதுவலைதுவற்றலில்" (மலை படு. கூகூகூ.)

**துவறல்**—துவலைவிடுதல்.

**துவன்**—வட்டத்திருப்பி. (மலையக.)

**துவன்றல்**—1. குவிதல். (உ-ம்.) "அகன் கட்பாறைத்துவன்றிக்கல்லெனா" (மலைபடு உஎசு.) 2. சாதல், மரணம். (பிங்கல.ககூ0எ.) 3. நிறைதல். (உ-ம்.)"இளையருமுதியருங்கிளை யுடன்றுவன்றி"(பெரும்பா.உசுஅ.) 4. நெருங் கல். (உ-ம்.) "தொங்கல்"பார்.

**துவன்றிய**—நிறைந்த. (பத்துப்பா.)

**துவா**—இரண்டு.

**துவாட்சரி**—இருவருச்கவெழுத்தான் முடி யுமோர்கவி.

**துவாதசகலை**—பன்னிரண்டு பிரசாதகலை கள். (சி-சி. கிரி.எ.) [இவற்றின்விரிவை "அர்க் கமம்சு" என்பதிற்காண்க.]

**துவாதசசத்துவம்**—பன்னிரண்டு சத்துவங் கள்; அவை: தேவசத்துவம், யக்ஷசத்துவம், கந்திருவசத்துவம், நாகசத்துவம், வானரசத்து வம், முநிசத்துவம், பிசாசசத்துவம், ராக்ஷச சத்துவம் முதலியன. (வி-ணி.)

**துவாதசநிதானங்கள்**—பன்னிரண்டு கார ணங்கள்; அவை பேதைமுதலியன (மணிமே.)

**துவாதசம்**—பன்னிரண்டு.(உ-ம்.)"இன்ன தாந்துவாதசாந்தம்" (திருவிளை. வெள்ளிய.சு.)

**துவாதசமலம்**—தேகத்திலுண்டாகும் பன் னிரு மலங்கள்; அவை சர்மவியர்வு, மலமூத் திரம் முதலியன. (வி-ணி.)

**துவாதசமுக்கியகணுக்கிரகண்ணியர்**—சிவ லோகத்திற்பச்சிமதிசை யோலக்கஞ்சேவிக்கும் பன்னிரு கணுக்கிரகண்ணியர்; அவர்: தண்ட தரர், தண்டமாதர் முதலியோர். (வி-ணி.)

**துவாதசமுக்கியதேவதைகள்**—சிவலோகத் தில் உத்தரதிசையோலக்கஞ்சேவிக்கும் பன் னிருதேவதைகள்; அவர்: நாராயணன், திக்குப் பாலகர் முதலியோர். (வி-ணி.)

**துவாதசவாநந்தங்கள்**—(வேதாந்தம்) பன் னிரண்டுவகையான ஆநந்தங்கள்; அவை: மநு ஷாநந்தம், மநுஷகந்தருவாநந்தம், தேவகந்தரு வாநந்தம், பிதிராநந்தம், ஆசானசதேவாநந்தம், கருமதேவாநந்தம்,தேவாநந்தம்,இந்திராநந்தம், பிரகஸ்பதியாநந்தம், பிரசாபதியாநந்தம்,விராட் டாநந்தம், இரணியகர்ப்பாநந்தம், என்பன. (வேதா. சூ. கடுடு உரை.)

**துவாதசவாலிங்கநம்**—ஸ்திரீபுருஷர்க் குரிய பன்னிருவகை ஆலிங்கநம்; அவை: புஷ் கரம், விவிதகதிருஷ்டகபீடநம், விருட்சாரோ கணம், லதாவேஷ்டநம், திலதண்டுலாக்கியம், க்ஷீரநீரம், ரூபகட்டம், சகநோபகட்டம், ஸ்தா பக்திலேசலலாடிகம் முதலியன. (வி-ணி.)

**துவாதசாங்கிசம்**—இராசியைப்பன்னிரண் டாய்ப் பகிர்தல்.

**துவாதசாதித்தர்**—பன்னிருசூரியர்; அவர்: தாத்துரு, சக்கரன், அரியம்பன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவாச்சுவரன், பூடன், சவித்துரு, துவட்டன் என்பவர். [பிங்கலநிகண்டில் வைகத்தன், விவச் சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப்பிரகாசன், உலோகசாட்சி, திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன், அங் கிசமாலியென்பர். கஎக.]

**துவாதசாந்தகமலம்**—துவாதசாந்தத்தாநத் திருக்கும்பதுமம்; அஃது: ஆயிரமிதழுள்ளதா யும், வாமாதி நவசத்திகளாகிற கேசரங்களோடு கூடியதாயும், சூரியசோமாக்கிநிகளுடைய அதி பதிகளோடுகூடிய மண்டலங்களை யடைந்ததா யுமிருக்கும். (சி-வி. யோக. பா. கூ.)

**துவாதசாந்தம்**—பிரமரந்திரத்துக்குமேல் பன்னிரண்டங்குலவரை நிகழுந்தாநம். இதில் சத்தி வியாபிநி சுமனை உன்மனை ஆகிய கலை கள் நான்கிற்குந்தாநம். (சி-வி. கிரி. க0.)

**துவாதசாவத்தை**—(உயிர்வேதனை பன்னி ரண்டு பார்.)

**துவாதசி**—பன்னிரண்டாந்திதி.

**துவாந்தம்**—1. இருள். (பிங்கல. கூக.) 2. நரகம். (பிங்கல. சடுடு.)

**துவாப்பிரத்தியயம்**—துவாவாகிய பிரத் தியம். (பி-வி. கூக. உரை.)

**துவாபரம்**— } மூன்றும்யுகம். எட்டு
**துவாபரயுகம்**— } லக்கத்து அறுபத்து நா லாயிரம் வருடம். (வருஷாதிநூ.)

**துவாரகாசக்கரம்**—ஒரு சக்கரம். (உ-ம்.) "ஆசைகூர்துவாரகாசக்கரத்தையும்" (சேதுபு. சேதுபல. கஉசு.)

**துவாரகாபுரி**—துவாரகை.

**துவாரகை**—சத்தபுரியினொன்று. ஆங்காங் கே யனேக துவாரங்களையுடைய கோட்டை யையுடையதாதலால் இப்பெயர் பெற்றதென் பர்.]

**துவாரபாலகரேழவர்**—கணபதி, சரசுவதி, இலக்குமி, நந்தி, கங்கை, மகாகாளர், யமுனை என்பவர். (சைவச. பொதுவி. சகூஅ. உரை.)

**துவாரபாலகன்**—கடைகாப்போன்.

துவாரம்—1. துளை. 2. வழி. (உ-ம்.) "பிலத் துவாரம்" (கோயிற்பு. பதஞ்சலி. எடு. உரை.) 3. வாயில். (சூ. நிக. ரு: ருக.)

துவாரா —வழி. (சி. சி. க. அளவை. சிவாக்.)

துவாலை—1. உதிரப்பெருக்கு, தீட்டு.(வழக்.) 2. பூச்சு. (உ-ம்.) "சடத்திலுறுமாவர்த்தவாதமெலாந்துவாலையாற்றங்கா" (தைல. தைலவ. உ.)

துவாலையிடல்— } பூசுதல்.(உ-ம்.) "இறுத் துவாலையிடுதல்— } தல்" பார்.

துவி—இரண்டு. தருக்கசங்கிரகத்திற்காண்க.

துவிகபா—வட்டத்திருப்பி. (வைத்திய பரிபா.)

துவிகன்மகத்துருப்பிரயோகம் — செயப்படுபொருளிரண்டுடை வினைமுதலின்முடிவு. (பிரயோகவி.)

துவிகன்மகன்மணிப்பிரயோகம் — செயப்படுபொருளிரண்டுடைச்செயப்படுபொருளின்முடிபு. (பிரயோகவி.)

துவிகாயாசின்—செம்முருங்கை.(வைத்திய பரிபா.)

துவிகு—எண்ணொடுபொருள்புணர்ந்த எண்டொகை. (உ-ம்.) "தற்புருடன்றுவிகு" (பி வி. உo.)

துவிகுச்சமாசன்—உம்மைத்தொகை. (பி. வி. உக. உரை.)

துவிகுணம்—இரட்டிப்பு. (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

துவிகுத்துரு —தண்ணீர்மிட்டான். (வைத்திய பரிபா.)

துவிசம்—1. பல். 2. முட்டையிற்பிறப்பன. இருபிறப்புள்ளன என்பது.

துவிசர்—இருபிறப்பாளர். உபநயனத்திற்கு முன்னொருபிறப்பும் பின்னொரு பிறப்புமுள்ளோர்.

துவிசாதி—இருபிறப்புள்ளசாதி, முட்டைமுதலாகியவற்றிற் பிறப்பன.

துவிநத்தரு — தேவதாரம், சரளதேவதாரமென்னு மிருவகைத்தரு. (உ-ம்.) "நீடம்பின் மூலம்பிசந்துவிதத்தரு"(தைல. தைலவ. உரு.)

துவிதம்—இரண்டு.

துவிதவாதம்—சிவனுஞ்சீவனும்வேறெனக் கொள்ளுஞ்சமயம்.

துவிதா—இரண்டுவகை. (உ-ம்) "கரையிலருட்பரன்றுவிதாசத்திநிபாதத்தாற்கழிப்பன்" (சி. சி. அ: உ.)

துவிதாகதி—நண்டு. (வைத்தியபரிபா.)

துவிதாத்துமகம்—சாதிக்காய். (வைத்திய பரிபா.)

துவிதியை—கோரோசனை.(வைத்தியபரிபா)

துவிதீயன்—புத்திரன்.

துவிபதவேதவிரிகி—எழுவகைவெகுவிரிகிளுளொன்று; அஃது: இருமொழியிடத்தவருமன்மொழித்தொகை. (பி-வி. உச உரை.)

துவிபுத்துரு—தண்ணீர்விட்டான்.(மலையக.)

துற்றல்— } உண்ணல். (பிங்கல.கககஅ.
துறுயல்— }

துற்று— } செறிவு. (பிங்கல. உஉருச.)
துறுதல்— }

துவியணுகம்—இரண்டணு. (சி.சி. க: சச. (சிவாக்.)

துவிரண்டம் — தன்மாத்திரா தத்துவத்திலிருக்கும் ஐந்து புவனங்களுளொன்று. (சி. சி. அ: எ மறை.)

துவிரம்—தேனீ. (வைத்தியபரிபா.)

துவிரேபாரி—சண்பகமரம். (வைத்தியபரிபா.)

துவேடம்—ஒருவனபகாரஞ்செய்தால் அவனுக்குப் பிரதிக்கிரியை செய்யவேண்டுமென்கிற சித்தவிருத்தியாயவெறுப்பு.

துவை—1. இறைச்சி. (உ-ம்.) "குய்கொள் கொழுந்துவைநெய்யுடையடிசில்" (புறநா. கசுo.) 2. ஒலி. 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. துளசி.(மலையக.) 5. பருகுதற்குரியன. (சூ.நிக. சு: கூக.) 6. பிண்ணாக்கு. 7. புளிங்கறி. (பிங்கல. கக௨கூ.) (2, 6-சூ. நிக. கக: ரகரவெ. கூo.)

துவைத்த—புகழ்ந்துசொல்லப்பட்ட. (உ-ம்.) "துவைத்த தும்பை" (பதிற்று. அஅ.)

துவைத்தல்—1. ஒலித்தல். (உ-ம்) "முரசு கடிப்பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்" புறநா. கரு௮.) 2. துவைக்குதல். 3. பாநம்பண்ணுதல். 4. மிதித்தல். (உ-ம்.) "ஒருபக்கந் துவைத்து" (தைல. மட்கலவிலக். கரு.)

துவைதம் — 1. சீவாத்துமா, பரமாத்துமா எனஇரண்டும் வேறென்றும், சீவாத்துமா பஞ்சபேதஞானத்தால் மோட்சம்புகுமென்றும் பிரதிபாதிக்கும் ஒருமதம். (அபிதாந.) 2. துவிதம்.

துவைதல்—துவைக்கப்படுதல்.

துவைப்பு—1. ஒலித்தல். 2. துவைக்குதல். 3. துவையல்.

துவையல் — 1. துவைக்கப்பட்டவை. 2. தோய்த்தல்.

துழத்தல்—1. அளைதல். 2. கலத்தல்.

துழந்த—துழாவிய. (பதிற்றுப் )

துழந்து—துழாவி. (உ-ம்.) "இட்டுந்தொட்டுங்கௌவியுந்துழந்தும்" (புறநா. கஅஅ.)

துழவுதல்—துழாவுதல் (பதிற்றுப்.)

துழவும்—சூழ்வரும். (புறநானூ.)

துழவை—துழாவியட்டகூழ். (பத்துப்பா.)

துழனி—1. ஒலி. (உ-ம்.) "நீரிலெருமைபாய் துழனி" (இராமா. நாட். கூ.) 2. பறவைக்கூட்டத்தொலி. (பிங்கல. உசா0சா)

துழா—1. மூதனிலைத்தொழிற்பெயர், துழாவுதல். (உ-ம்.) "துழாதுடுப்பெனும்" (இராமா. குகப்பட. சுசா.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

துழாய் — 1. துழாவி (சிந்தா.) 2. துளசி. (உ-ம்.) "சூடுகின்றதுழாய்முடியோன்" (பாரத. கிருட். க.)

துழாவல் — 1. அளவளாவுதல். (பிங்கல. ககஎஉ.) 2. வெட்டல். (பிங்கல.உகசகூ.)

துழாவு—1. துழாவுதல். 2. தெரிநிலைவினைப் பகுதி.

துழாவுதல்—1. ஆராய்தல். 2. கலக்குதல். 3. தோணியில், தண்டுவலித்தல். 4. பரவுதல். (வழக்.)

துழ்—வெட்டுப்பள்ளம். (உ-ம்) "நார்த்தொடுத்தீர்க்கினென்னாய்ந்சடைக்கிலென் - பார்த்துழிப்பெய்யிலென்" (நாலடி.யாக்கைநிலை சு)

துழூஇ—துழாவி. (மலைபடு. சஅக.)

துள்ளம்—துளி

துள்ளல் — 1. ஆடு. (பிங்கல. உசாஎகூ) 2. கலிப்பாவிேசை. (உ-ம்.) "திண்பாமலிசெப்பல்சீர்சாலகவல்சென்றேங்குதுள்ளல்" (யா-காரிகை. செய்யு க.) 3. குதித்தல். துள்ளியாடுவன. (திருவிளை.நகரப்.உகூ.) 4. சலசொதுகு. (பிங்கல. உகூகக.) 5. சோருதல். (உ-ம்.) "கலையுஞ்சங்குந் துள்ளவைங்கணையான்வாளிதுளைப்ப" (திருவிளை. வளையல். கச.) 6. விரைந்து பாடுமிசை. இது (பாடற்றொழிற்குற்றம். திருவிளை. விறகுவி. கூ0.)

துள்ளலோசை—கலிப்பாவிேசை. (யா-காரிகை.செய்யு.க.உரை.) [துள்ளுதலையுடைய ஓசையென்பதுபொருள். நச்சினார்க்கினியர், "வழக்கியலாற்சொல்லாதுமுரற்கைப் படுமாற்றாற்றுள்ளச்சொல்லுமோசை" என்பர்.]

துள்ளி—1. பெண்ணுமை. (உ-ம்.) "துள்ளிகொள்வன. (இராமா. நாட்டுப்ப. கூகூ) துலியென்பது துளியென்றாய்த் துள்ளியென விரிந்து நின்றதென்பர். 2. திவலை. (உ-ம்.) "துள்ளியோங்குசெந்தாமரைநயனங்கள். (இராமா. ஆரணிய. சடாயுவதை. கஅ0.)

துள்ளு—1. குதிப்பு. 2. தெரிநிலைவினைப் பகுதி.

துள்ளுதல் —1. குதித்தல். (உ-ம்.) "பமதுதர்துள்ளினால்" (சிவரக. சிவதன்மா. கூகூ.) 2. பதைத்தல். (உ-ம்.) "துள்ளுநர்க்காண்மார்" (கலித். ச.)

துள்ளுபூச்சு—தெள்குளென்னுமொருபூச்சி.

துளக்கம்—1. அச்சம். (உ-ம்.) "துளக்கில் பேரொலியால்" (பெரியபு. திருவாரூ. கூ.) 2. அசைவு. 3. ஒலி. 4. ஒளி. 5. கலக்கம். 6. சோதிநாள். (பிங்கல. உ0கூ.)

துளக்கல்—1. அசைத்தல். (உ-ம்.) "பின்னலஞ்சடைநெடுமுடிதுளக்கினனுவகையிற்பெரிதுற்றான்" (உபதேச. சூராதி. உ.) 2. ஒளிசெய்தல்.

துளக்கு — 1. அசைவு. (உ-ம்.) "துளக்கறயார்மாட்டோடுங்கும்" (கூர்மபு. பிரகிருதி.உ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வருத்தம். (சிந்தாமணி.)

துளக்குதல்—துளக்கல்.

துளங்கல் — / துளங்குதல்— 1. அச்சப்படுதல். 2. அசைதல். (சிறுபா.உசுஉ.உரை.) 3. ஒளிசெய்தல். (உ-ம்.) "துளங்குவாள்போலுமிஞ்சி" (சேதுபு. திருநாட். அசு.) (பிங்கல. சகூகூ.) 4. நடுங்கல். (உ-ம்.) "வட்டவாய்க்கமலத்தண்ணன்மணிமுடிதுளங்க வோச்சி" (சணிகை.நாட்.டு.க.) 5. நிலைகலங்குதல்.(உ-ம்.) துளங்கியகாவும். (புறநா. உகூ.) 6. வருந்தல். (உ-ம்.) "துளங்கினுந்-தன்குடிமைகுன்றாத் தகைமையும்" (திரிகடு. சக.) 7. வெளிப்படல்.

துளங்கொளி — கேட்டைநாள். (பிங்கல. உ0சு.)

துளசி—ஒருபூச்செடி; அது: கரியமால்துளசி, கருந்துளசி, கற்பூரத்துளசி, செந்துளசி, காட்டுத்துளசி, சிவதுளசி, சிறுதுளசி, நாய்த்துளசி, நிலத்துளசி, பெருந்துளசி எனப் பலவகைப்படும். (வைத்தியமூ. அக.)

துளபம்—துளசி (உ-ம்.) "முருகவிழ்க்கும் பசுந்துளபமுடியோனே" (பாரத. கிருட்டி. கூஉ.)

துளம்பிக்கிரி—ஆதொண்டை. (வைத்திய பரிபா.)

துளர்—களைக்கொட்டு. (பத்துப்பா.)

துளவம்—துளசி.

துளவன்—1. சோரபாடாணம். 2. திருமால்.

துளவி—திப்பிலி. (மலையக.)

துளவு—துளவம். (உ-ம்.) "கானுலவுதண்டுளவிணையடிகள்கைதொழுதே" (கந்தபு. பிரமயாசப். ச0.)

துளவை—மூங்கில். (வைத்திய பரிபா.)

துளரி—செய்வார்கருவியிலொன்று. (ஒருகுழூஉக்குறி.)

துளி — 1. திவலை. (சூ. நிக. க: கூ0) 2. துளித்தல். 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பெண்ணாமை. 5. மழை. (உ-ம்.) "துளியின்மைஞாலத்திற்கெற்றற்றேவேந்த னளியி

ண்மைவாழுமுயிர்க்கு" (வள்.நுநுஏ.) 6. மழைத் துளி. (உ-ம்.) "விசும்பிற்றுளிவீழினல்லான்" (வள். கக.) (2, 4-பிங்கல. ௬௬௬உ.)

துளித்தல்—1. துளியாய்விழுதல். (உ-ம்.) "கண்டுவிழுந்தெழுந் துவிழிதுளிப்ப" (திருவிளை. இந்திர பழி. ஏக.) 2. மழைபெய்தல்.

துளிப்பு—துளித்தல்.

துளிர்—1. தளிர். 2. தெரிநிலைவினைப்பகுதி.

துளுப்பிடுதல்—கலக்குதல். (சிந்தா.)

துளும்ப — 1. இளக. 2. வருந்த. (1, 2-சிந்தா.)

துளும்பல் —1. அலைதல். 2. இளகல். 3. எழும்பல். (சிந்தா.) 4. ஒளிசெய்தல். 5. திமிர்தல். 6 துள்ளுதல். 7. வருந்தல். (2, 7-சிந்தா.)

துளும்புதல் — 1. அசைதல். (சிந்தா.) 2. ததும்புதல். (உ-ம்.) "மைக்கணீர்துளும்ப"(திருவிளை. விருத்த. உ௮.)

துளுவம்—1. தேயமைம்பத்தாறினொன்று. (உ-ம்.) "துளுவமிக்குதிரை" (திருவிளை. நரிபரி. ௧௦௪.) 2. பதினெண்பாடையினொன்று.

துளை—1 உட்டுளை. (உ-ம்.) "துளையெயிற்றகல்வாய்ப்பாம்பணைப்புறத்தினறிதுயிலமர்ந்திடுந்தோன்றல்" (கூர்மபு. தக்கன். வமி. உ௭.) 2. துவாரம். (உ-ம்) துளையிடுங்கருவியாகும். (திருவிளை.மாணிக்க.௬௯.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. மூங்கில். (சூ.நிக.௪:௧௬.)

துளைக்கருவி — பஞ்சகருவிகளிலொன்று; அது: சிந்நமுதலிய துளையுடைவாத்தியம். (உ-ம்) "கானத்தின்மேவுதுளைக்கருவிக்குழல்" பெரியபு. ஆனாயநாய. ௩உ.)

துளைக்கை — 1. துளைத்தல். 2. யானைத்துதிக்கை.

துளைத்தல்—1. ஊடுருவல். (உ-ம்.) "குன்றந்துளைத்தவேல்" (திருமுருகா. வெண்பா.) 2. துவாரஞ்செய்தல். துளைபார்.

துளைதல்—1. அநுபவித்தல். 2. அமிழ்ந்தல். (உ-ம்.) "தடுபுனற்கட்டுளைந்துகிடந்திடர்ப்படுபுமாழ்குஞ்சமீரணன்பாலனை" (சேதுபு. இராமனரு. ௧௬௫.) 3. கலத்தல்.

துளைப்பு—துளைத்தல்.

துற்கதம்—உபத்திரம்.

துற்றல்—1. உண்டல். (பிங்கல. ௧௧௧௮.) 2. குற்றல். (பிங்கல ௧௮௬உ.) 3. தின்னல். (பொருந. ௧௦௬. உரை.) 4. நிறைதல். 5. நெருங்கல்.

துற்றவை — உண்ணப்படுபவை. (உ-ம்.) "துற்றவைதுறந்தவெற்றுயிர்யாக்கை" (திருவாச. திருவண்ட. க௬௭.)

துற்றி — உணவு. (உ-ம்.) "பசியினுற்றன்முகம்பார்த்துத்-துற்றிவேண்டுசொற்றயப்பதற்கு" (சேதுபு. மங்கல. ௬௬.)

துற்றிய—தின்ற (உ-ம்.) "துராஅய்துற்றிய துருவையம்புழக்கின்" (பொருந. ௧௦௩.)

துற்று—1 உணவு. (நாலடி. பெருமை. ௧௦.) 2. சோறு. பிங்கல. ௧௧௦உ.) 3. கூட்டம். (பிங்கல. உஉ௬௫.) 4. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "சுந்தரமாளிகைகுளிகைதெற்றிகடுற்றுசுடர்" (சிவரக. தேவிமேருகயிலை. ௧உ.) 5. செறிவு. (பிங்கல. உஉ௬௪.)

துற்றுதல்—1. அநுபவித்தல். (உ-ம்.) "துற்றுவர்போகவிதம்" (சிவதரு. சுவர்க்கநரக. ௪.) 2. நிறைதல். 3. நெருங்கல். 4. தின்றல். (பத்துப்பா.)

துறக்கம்—தேவருலகம். (உ-ம்.) "துறக்க நண்ணினன்விண்ணவர்நாதன்" (திருவிளை. இந்திரன்பழி. ௬௬)

துறட்டி—யானைத்தோட்டி. (வழக்.)

துறட்டிச்செடி—ஒரு பூண்டென்றுர் வைத்தியமூலிகையகராதியில்; முட்செடி யென்றுர் அநுபந்தத்தில்.

துறட்டு—தொந்தரை. (வழக்.)

துறட்டுமுள்—செடில், ஓர் கருவி.

துறத்தல்—1. இறத்தல். (உ-ம்.)"துறக்கும் பருந்துதித்தற்கரிதாமுச்சித்தொல்சதவே" (மறைசை.அ௮.) துறக்க-திறப்பேன். 2. துறவு. (உ-ம்.) "வேண்டினுண்டாகத்துறக்க துறந்தபின்ஈண்டியற்பாலபல" (வள். ௬௪உ.) 3. நீக்கல். (உ-ம்) "தோழியையீத்தென்னைமுன்னேதுறந்துறன்றுர்கண்முன்னே" (திருக்கோ. ௬௬௦.). 4 வெறுத்துவிடுதல். (உ-ம்.)"அண்டர்தம்பதம்யாவையுமடைந்தவைதுறந்து" (பிரமோத்.பஞ்சாட்சர. ௭௦)

துறந்தார்—துறந்தோர். (உ-ம்.) "துறந்தார் பெருமைதுணைக்கூறின்" (வள். உஉ.)

துறந்தெனை—நீங்க. (ஐங்குறு.)

துறப்பது—நீக்குவது. (ஐங்குறு.)

துறப்பு—1. துறவு. 2. திறவுகோல். 3. பூட்டு. (பிங்கல. ௬௮௪.) 4. விடுகை.

துறம்—துறவு. (உ-ம்.) "துறஞ்சிறந்தமடபதிகளும்" (சேக்கிழார்புராணம்.௫உ.)[திரிபு.]

துறவர்—முனிவர். (சூ. நிக. உ: உ.)

துறவறம்—இல்லறந்துறத்தல்; அது: நாலாச்சிரமத்தொன்று. (உ-ம்.) "பாயிரநானிலறமிருபான்பன்மூன்றே- தூயதுறவறமொன்றாக" (வள்ளுவமாலை. உ௫.)

துறவி—1. துறத்தல். (உ-ம்.) "துறவியுள்ளந்தோன்றித்தொடரும்" (மணிமே. உ௬, ௫௪

அடி.) 2. நீத்தோன். துறவிக்குவேந்தன்று ரும்பு. ஒளவைபாடல்.

துறவு—1. புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகியயாக்கையின்கண்ணும், உளதாயபற்றினை அவற்றது நிலையாமைநோக்கிவிடுதல். (வள். ௩௫. அதி.) பிங்கலத்தில் நிவிர்த்தி என்பர். (பிங்கல. ௪௮௦௩.)

துறவோர்—நீத்தோர். (உ-ம்.) "துறவோர்கள்புத்திபுகட்டவே" (அரிச்ச. மயான. ௨௬.)

துறு — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நெருக்கம். (உ-ம்.) "துறுமயிர்க்குறுந்தாள்" (கூர்ம பு. பதிக. ௬)

துறுக்கல்— } திணித்தல்.
துறுத்தல்—

துறுகல்—1. குண்டுக்கல். (உ-ம்.) "துறுகலயிக்கத்துத்துணையொடுவதியும்" (ஐங்குறு. ௨௬௨.) 2. சலதாரைமுதலியவடைக்குங்கல். 3. நெருங்கினமலை. (உ-ம்.) "துறுகற்பிடிசெத்துத்தழூஉநின்-குன்றுகெழுநன்னாட்டுச் சென்றபிற்றை" (ஐங்குறு. ௨௩௩.) 4. பொறை. (பிங்கல. ௫௦௦.)

துறுகாரம்— கத்தூரி. (வைத்தியபரிபா.)

துறுட்டி—சிற்றேலம். (வைத்தியபரிபா.)

துறுத்தல்—1. அமுக்கல். 2. நுழைத்தல். (உ-ம்.) "தோன்றுமளவாய்த்தாளைத்துந்திவைத்துத்துறுத்து" (தைல. பாயிர. ௬௬.) 3. நெருக்குதல்.

துறுதல்—1. செறிதல். (உ-ம்.) "தோடகையத்துறுமலர்த்தாரிசலரக்கர்" (இராமா. சூர்ப்பந. ௧௩௫.) 2. புசித்தல்.

துறுப்பு—துறுத்தல்.

துறுமல்—துறுமுதல், நெருங்கல். (சூ. நிக. அ: ௪௪)

துறுமுதல்—நெருங்கல். (உ-ம்.)"துறுமுதின் காம்பினத்தூணமெங்கணும்" (சேதுபு.கந்தமா. ௨௨.)

துறுவல்—1 உண்டல். (பிங்கல. ௧௩௩௮.) 2. நெருங்கல்.

துறுவு — 1. உணவு. 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நெருக்கம்.

துறுவுதல்—1. உண்ணல். 2. நெருங்குதல்.

துறை—1. அகப்பொருட்டுறை. 2. ஆறு, நதி. (உ-ம்.) "ஒங்குதுறை-யந்தொளையோர் சோடசம்பெய்" (தைல. தைலவ. ௧௩௫.) 3. இடம். (திருக்கோ. ௩௪௦.) 4. இறங்குதுறை. 5. எல்லை. 6 கடல். (திருக்கோ.௩௪௦.உரை.) 7. காரியம், வரலாறு. (உ-ம்.) "துறையெனக்கியாதெனச்சொல்லுசொல்லென்றுன்" (இராமா.மீட்சி. ௨௫௫.) 8. நீர்த்துறை. (உ-ம்.) "புலிப்போத்தும்புல்வாயுமொருதுறையினீருண்ணவுலகாண்டோனுளனொருவன்"(இராமா. குலமு. ௫.) 9. நூல். 10. பாவினத்தொன்று. (யாப். காரிகை க. உரை.)

துறைக்குறை—ஆற்றிடைக்குறை. (உ-ம்.) "வண்டுறைக்குறைசேர்ந்தான்"(பாரத. சம்பவ. ௬.)

துறைபோதல் — 1. துறைபோகுதல். 2. முடிவுபோதல். (உ-ம்.)"பிறைபுரையேர்நுதாருமெண்ணியவையெல்லாந் - துறைபோதலொல்லுமோ" (கலி. ௬௭.)

துறைபோய்—முற்றக்கற்ற. (சிந்தா.)

துறைமாலை — பகைத்திறச்செய்கைக்குரிய மாலை.

துறைமுகம்—ஏற்றமிறக்கஞ்செய்யுந்துறை.

துறைவன் — நெய்தனிலத்தலைவன். (உ-ம்.) "தண்ணந்துறைவன்கண்டிகு - மம்மர்நோயுந்துயரே" (ஐங்குறு. ௧௫௮.)

துன்—1. சேர்தல். 2.தெரிநிலைவினைப்பகுதி. 3. நெருக்கம். (1, 2-சூ. நிக. ௧௧: மகரவெ. ௧௦.)

துன்பம்—வருத்தம். (உ-ம்.) "துன்பத்திற்கிடங்கொடேல்" (ஆத்திசூடி.)

துன்பிலி—கடவுள்.

துன்பு—துன்பம். (உ-ம்.) "எம்மைத்தொடர்ந்தொறுந்துன்பென்பதே" (திருக்கோ. ௨௫௩.)

துன்புறுதல் —வருந்துதல்.

துன்மதி—1. அவமதி. 2. வியாழவட்டமாகிய அறுபதுவருடத்தினைம்பத்தைந்தாவதாண்டு.

துன்முகி—வியாழவட்டமாகிய அறுபதுவருடத்தின் முப்பதாவதுவருடம்.(வருஷாதிநூல்.)

துன்றல்— } 1. நெருங்குதல். (உ-ம்.) "உவளகவகவையினன்றுதுன்றலின்" (சேதுபு-துத்தம. ௨௦.) 2. மிகுதல். (உ-ம்) "துன்றுமன்புபெற்றேசுகமுற்றுளேன்" (சிவரக. மேரு. ௪௪.)
துன்றுதல்—

துன்னகாரர்—தையற்காரர். (உ-ம்.) "துன்னகாரருந்தோலின்றுன்னரும்" (சிலப் இந்திரவி. ௩௨.)

துன்னம்—1. கிழிவு. 2. தைத்தல். (பிங்கல ௨௩௦௨.)

துன்னர்—தையற்காரர். (சூ. நிக. ௧: ௩௩.)

துன்னல்—1. கிட்டல். (உ-ம்.) "துன்னிவளைத்தநந்தோன்றற்கு" (திருக்கோ. ௩௬௭.) 2. செய்தல். (உ-ம்.) "துன்னற்கதீவினைப்பால்" (வள். ௨௦௧.) 3. தைத்தல். (உ-ம்.) "வேரொடுநனைந்துவேற்றிழைநுழைந்த - துன்னற்சிதாஅர்துவரநீக்கி"(பொருந. ௮௧.)4.வருதல்.(உ-ம்.) "இத்துரிசுதுன்னுமை" (திருக்கோ. ௮௧.)

துன்னலம்—சேரம். (ஐங்குறு.)

துன்னலர்—பகைவர். (உ-ம்.) "துன்றின ரின்னவெய்தத்துன்னலராகித்தம்மி-லொன்றி னர்செறினும்" (பாரத. அருச்சுநன்றவ. உகூ)

துன்னூர் — பகைவர். (உ-ம்.) "துறத்தல்" பார்.

துன்னூமை—மேவாமை. (வள். ககூசு)

துன்னியார்—அடுத்தோர், சிநேகிதர். (உ-ம்.) "துன்னியார்குற்றமும்" (வள். சஅஅ.)

துன்னு—தெரிநிலைவினைப்பகுதி, சேர்தல். (பெரியபு. திருவாரூர். கூ.)

துன்னுதல்—துன்னல்.

துன்னுநர்—1. அந்தோர். 2. துன்னர், தையற்காரர்.

துன்னூசி—தையலூசி. (உ-ம்.) "கொற்சேரி நண்டுளோத்துன்னூசிவிற்பாரின்" (ஐந்திணை. மருதம. க.)

துனுவி—திப்பிலி (வைத்தியபரிபா.)

துனி—1. அச்சம். (உ-ம்.) "துனியிருந்தவன் மநத்தினள்" (இராமா. சூர்ப்பநகிப். கூஉ.) 2. கோபம். 3. துன்பம். (உ-ம்.) "துனிவருநீர்மை யிதென்னென்றுதூநீர்தெளித்தளிப்ப" (திருக் கோ. கூகூஉ.) 4. நோய். 5 புலவி. (வள். கஉகூச.) 6. யாறு. 7. வெறுப்பு. (உ-ம்.) "துனி யில்காட்சிமுநிவர்" (திருமுரு. க்கூஎ.) 8. முதிர்ந்தகலாம். (வள். கஙூ0சு.)

துனித்து—வெறுத்து (சிந்தா.)

துனை—துனைபு, விரைவு. (உ-ம்.) (முல்லைப் பாட்டு. க0உ. அடியுரை.)

துனைபு—துனைவு. (உ-ம்.) "துனைபொழி வேங்கையுங்காட்டிற்" (தணிகை. களவுப். கூஎஎ.)

துனைவு—விரைவு. (உ-ம்.) "தக்கன்முத லோரைத்துனைவினோக்கி" (கூர்மபு. வருணை. சக.)

## தூ.

தூ — 1. ஒரிகழ்ச்சிக்குறிப்பு. 2. சுத்தம். (உ-ம்.) "அன்பருந்தூநீராடி" (திருவாத. திருப் பெ. சகூ.) 3. தசை. (உ-ம்.) "தூநின்றசுடர் வேலாய்" (இராமா. குலமுறை. கூ.) 4. முத னிலைத்தொழிற்பெயர். 5. பகை. (பிங்கல. கூசுசுச.) 6. பற்றுக்கோடு. (உ-ம்.) "மாசுதூய் மைசெய்வினைதாய்மையிரண்டு-மினந்தூய்மை தூவாவரும்" (வள். சருரு.) 7. வலிமை. (உ-ம்) "சுற்றமொடுதூவறுத்தலில்" (மதுரை. கஅஅ.) 8. வெண்மை. (உ-ம்.) "தூமதிவாக்கியகிரணம்" (காஞ்சிப்பு. நாட்டுப். கூசு.)

தூக்கணங்குருவி — ஒரு குருவி. (பிங்கல. உகூசு0)

தூக்கணம்— 1. உறி. 2. தூக்கணங்குருவி. (உ-ம்.) "நங்தேறம்புதூக்கணம்புட்காக்கை." (ஆசாரக்கோ. கூசு.) 3. தொங்கல்.

தூக்கம்—1. அயர்ச்சி. அம் தொழிற்பெயர் விகுதி. 2. ஆபரணத்தொங்கல். (பிங்கல. சுசுகூசு.) 3. தூக்கணம், இது பலவிதமுண்டு. அவற்றுள்ஒன்றிற்கு தாரணம் "சட்டமாகிறைத் திடுமின்கண்ணடிதூக்கங்கள்சந்திராதித்தர்" (சிவரக. சுசமுகி. கூ.) 4 நித்திரை. (உ-ம்.) "வெருவுறக்கட்டித்தூக்கங் - கொண்டனன்" (பஞ்சதந். க: ருஅ.) 5. மந்தம். (வள். சுசு: அ.)

தூக்கல்—1. தூக்குதல். 2. வரையறுத்தல்) (வள். ககஅ.)

தூக்கி — 1. ஆராய்ந்து. (இருபாவிரு. சு: உரை.) 2. தூக்குவோன்.

தூக்கிரி—ஊர்காவற்காரன். [இந்துஸ்.]

தூக்கு—1. ஆராய்வு. 2. உயர்ச்சி. 3. உறி. 4. ஒருவகைச்சொல். (சூ. நிக. அ: எஅ.) 5. கனம. (வழக்.) 6. கூத்து. 7. செய்யுட்குறுப் பென்று தொலகாப்பியத்துட்கூறப்பட்ட முப் பத்துநான்கனுளொன்று; அது: பாக்களைத் துணித்துநிறுத்தல். (தொல். பொரு. கூகூ.) 8. தாளங்கள் நாலுவகையிலொன்று; அது: இரண்டுமாத்திரையும் உகரவடிவும் தாக்கித் தூக்குதலாகிய தொழிலுடையதாய் வருவது. (சிலப். ஊர்காண். கருo. உரை.) 9. தாளங்க ளின் வழிவருந்தூக்குக்கள்; அவை: செந்தூக்கு, மதலைசதூக்கு, ஙோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கு என்பன. (சிலப். ஊர்காண். கரு. உரை.) 10. துலாம். 11. துலாராசி. (பிங்கல. உஉருச.) 12. தூக்கங்கள். 13. தெரிநிலைவினைப்பகுதி. 14. நிறைகோல். (வழக்.) 15 பாட்டு. (உ-ம்.) "மன்னுடைமன் றத்தோலைத்தூக்கினும்" (நன். ருகூ.) (2, 3, 6, 10-பிங்கல. கூகூசுரு.)

தூக்குக்கோல்—நிறைகோல். (பிங்கல. ககூஎரு.)

தூக்குணி—தழுக்குணி, ரோசமில்லாதான். (உ-ம்.) "பண்புநீதியறியாததூக்கிணிப்பள்ளன் செய்கருமங்களைகேளும்" (பறாளைவிநாயகர் பள்ளு.)

தூக்குதல்—1. ஆராய்தல். (உ-ம்.) "தூக்கி வினைசெய்" (ஆத்திசூடி.) 2. உயர்த்துதல். 3. எடுத்துவிடல். 4. சிந்தித்தல். (உ-ம்.) "சிறிய தோர்பயனைத்தூக்கி" (கந்தபு. கயமுகனு. சுச.) 5. தொங்கக்கட்டுதல். (உ-ம்.) "மூத்துநற்றுமம் பூமாலைதூக்கி" (திருவாச. திருப்பொற். க.) 6.

நிறக்குதல். (உ-ம்) "செம்பொன்றாக்கிக்-கைம் மறியில்வணிருச் நவிலேசெகடிப்பான்" (திரு விளை. மாணிக்க. அச.)

நூக்குநூல் —நேரறிகயிறு. (வழக்.)

தூக்குபு—தூக்கி. (உ-ம்.) "வார்குழைவில் விடமாமுடிதூக்குபு- கார்கெழுகுன்றனையான்" (சிக். நாமக. ககநு.)

தூகல்—துடைடப்பசத்தால்விளக்கல். (உ-ம்.) "கோமானின்றிருக்கோயி றூகேன்" (திருவாச திருச்ச. கச.)

தூகை—பாளை. (வைத்தியபரிபா.)

தூங்க — ஆட. (உ-ம்.) "கிணர்தின்வாயடு ணங்கைதூங்க" (திருமுரு. நிகூ.)

தூங்கணம்—1. தூக்கணங்குருவி. (உ-ம்.) "தூங்கணங்குரீஇயின்மஞ்சத்தலந்தொறுந்தூங் குகின்ற" (பாரத. திரௌபதி. உஉ.) 2. தூக்கு.

தூங்கணி—ஒராபரணம், அது தொங்கலணி.

தூங்கமுட்டு—கோரைக்கிழங்கு. (வைத்திய பரிபா.)

தூங்கல் — 1. அழுந்தல். (உ-ம்.) "மாநகராணுவின்பந்தூங்கின" (திருவிளை. மா யப். உஉ.) [சிந்தாமணியில் செறிதலென்பர்.] 2. அனந்தர், அது கள்ளின்செருக்கு. (உ-ம்.) "துகின்முடிதூங்கலோங்குநடைப் - பெருமூதா ளர்" (முல்லை. நிக.) 3. உறங்கல். (உ-ம்.) "தூங்கி-மீளமொய்ம்பரினிவுளிவீழ்கின் றன" (இராமா. கரன்வ. எக.) 4. ஆடுதல். (உ-ம்.) "குரவைதூங்க" (பெரியபு.கண்ண. கக.) (சிறுபா. ககூஉ. அடி. உரை.) 5. ஒலித்தல். (உ-ம்.) "தூங்கருவி - மலையாசலத்தமிழ்தேர்வா ணன்மாறைநம்மன்னவரே" (வாண. கசஎ.) 6. ஒரிசை. (திருவிளை. விறகுவிற். கூஉ.) 7. கூத்து. 8. சோம்பல். (பிங்கல. கஅகக.) 9. சோம்பி. (வழக்.) 10. தராசு. 11. தாழ்தல். 12. நாலுதல். (உ-ம்.) "தூங்குசிறைவாவல்" (சிந்தா. காந்தருவ. சு.) 13. நிரம்பாத்தூக்கம். (பிங்கல. கூகூகூ.) 14. யானை. 15. வஞ்சிப் பாவிேைச. [தூங்குதலையுடையது என்பது பொருள். நச்சினர்க்கினியார் அடியிற் றூங்காது சீர்தொறுந்தூங்குமோசை என்பர்.] (7, 8, 10, 11, 14-சூ. நிக. கக: ஙகரவெ. கூ.)

தூங்கல்வண்ணம்— வஞ்சியின்றுவருவது. (உ-ம்.) "தூங்கல்வண்ணம்வஞ்சியயிலும்"(தொ ல். பொரு. நிசக.)

தூங்கலன்—சோம்பன்.

தூங்காமை — விரைவுடைமை. (உ-ம்.) "தூங்காமைகல்விதுணிவுடைமையிம்மூன்று - நீங்கநிலனாள்பவற்கு" (வள். கூஅக.)

தூங்கலோசை — வஞ்சிப்பாவிேைச. (யாப்-காரிகை. செய்யுளி. க. உரை.)

தூங்கிசைச்செப்பல் — இயற்சீர்வெண்ட ளையான்வரும் வெண்பா. (உ-ம்.) இயற்சீர்வெ ண்டளையான்வரும்யாப்பைத்-தூங்கிசைச்செப் பலென்மனர்புலவர்" (காரிகை. செய்யுளி. க. உரை.)

தூங்கிசையகவல்— நிரைநிரையியற்றளை யான்வருமகவல். (காரிகை. செய்யு. க. உரை.)

தூங்கிருள் —செறிந்தவிருள். (உ-ம்.) "வாற் பாற்றன்றதூங்கிருளே" (திருக்கோ. களசு.)

தூங்குதல்—1. அசைதல். 2. சொரிதல். (உ-ம்.) "மழைதூங்குநள்ளிரவில்" (திருவிளை. பலகையிட்டப. க.) 3. சோம்பாயிருத்தல். (சூ. நிக. அ: கூஎ.) 4. சோர்தல். 5. தங்குதல். (புறப்பொ-வெண்.) 6. தலைசாய்த்தல். 7. துயிலுதல். 8. நாலுதல். (உ-ம்.) "மஞ்சத் தலந்தொறந்தூங்குகின்ற"(பாரத.திரௌபதி. உஉ.) 9. நீட்டித்தல். (உ-ம்.) "தூங்குகதூங்கிச் செயற்பாலதூங்க" (வள். கூஎஉ.)

தூங்குமஞ்சம்—ஆடுமஞ்சம்.

தூசங்கொளல்—சித்திரகவிகளிலொன்று; அஃது: ஒருவன் ஒரு வெண்பாச்சொன்னல் அதனீறேமுதலெழுத்தாக மற்றொரு வெண் பாப்பாடுவது.

தூசம்—யானைக்கயிறு. (உ-ம்.) "வேய்முதற் றூசங்கொண்டேறினன்" (சிங். கநக. சகூ.)

தூசர்—வண்ணார். (பிங்கல. அ௦உ.)

தூசறுத்தல்-ஒருசிறிதுமில்லாமற்செய்தல். (பார. வெ.)

தூசி—1. குதிரை. (பிங்கல. உசசக.) 2. கொடிப்படை. (உ-ம்.) துன்றியசெருவிற்றூசி பிளந்தே" (பாரத. பதினன். க௦௦.) 3. படை யுறுப்பு. (பிங்கல கநுசஎ.) 4. புழுதி. (வழக்.)

தூசிகம்—புளியாரை. (வைத்தியபரிபா.)

தூசிதாங்கி — அழுக்குத்தாங்க உடையின் மேற்கட்டுந் துண்டுப்புடவை. (வழக்.)

தூசிப்படை—கொடிப்படை.

தூசியம்—கூடாரம். (ஒரு குழூஉக்குறி.)

தூசு—1. சித்திரைநாள். (சூ. நிக. க: எங.) 2. சீலை. (உ-ம்) "எல்லாருந்தூசுநீக்கி" (இரா மா. யுத்த. இந்திரசித்து. வதை. நிகூ.) 3. யானைப்புரசைக்கயிறு. (பிங்கல. ககூகஉ.)

தூசுதாங்கி—தூசிதாங்கி.

தூசுப்பு—தண்ணீர்விட்டான். (வைத்திய பரிபா.

தூட்டி—சீலை. (வைத்தியபரிபா.)

தூட்டிகம்—தும்பை. (வைத்தியபரிபா.)

**தூடணம்**—நிந்தை. (சைவதூடணபரிகாரம்.)

**தூடணன்** — இராவணன்தம்பிமாரிலொருவன். (உ-ம்.) "நிருதரோடினர்தூடணன்விலக்கவுநில்லார்" (இராமா. கரன்வதை. கருரு.)

**தூடணித்தல்**—நிந்தித்தல்.

**தூடணை**—தூடணம்.

**தூடித்தல்**—நிந்தித்தல்.

**தூடிப்பு**—நிந்திப்பு.

**தூண்**—தம்பம். (உ-ம்.) "இந்நடுவேநின்றுனென்றுனெறழ்வயிரத்தூணேபோல்" (கந்தபு. வள்ளி. ககரு.)

**தூண்டல்**—தூண்டுதல். (உ-ம்.) "தூண்டல் செய்யாமணிவிளக்கே" (திருக்கருவைப்பதி.எ.)

**தூண்டாவிளக்கு**—தானேயெரியும்விளக்கு. (உ-ம்.) "தூண்டாவிளக்கின்சுடரனையாய்" (திருவாச. பிரார். ச)

**தூண்டில்**—மீன்பிடிக்குங்கருவியினொன்று. (உ-ம்.)"மீன்கவர்தூண்டிலென்னவிண்ணிடைவிளங்கிற்றன்றே" (நைடதம். சுயம். ௬0.)

**தூண்டிவிடுதல்**—உந்துதல்.

**தூண்டு** — தூண்டுதல். தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "தூண்டுவெம்பரித்தேர்த்துரியோதனன்" (பாரத. படையெழுச். ௬௬.)

**தூண்டுதல்** — 1. ஏவுதல். (வழக்.) 2. செலுத்தல். (உ-ம்.) "ஐங்கதி"பார். 3. விளக்குத்தூண்டல்.

**தூணம்** — 1. செவ்வாய்நின்றநாண்முதல் மூலமிறுதியாக எண்ணிக்கண்ட தொகையை மூலமுதலாகக்கழிக்கஉறுநாள். (உ-ம்.) "சுடரவன்செயவனின்றநாளாதிமூலாந்தத்தொகையடைவுறமூலாதிநாட்கண்டகந்தூணம்" (விதான. குணதண. ௬எ.) 2. தூண் (உ-ம்.) "தூறுமுதல்"பார்.

**தூணி**—1. அம்புக்கூடு. (உ-ம்.) "கொலையெடுத்தசமனுறைவதற்தரியகூடெனத்தகையதூணியில்" (அரிச்ச. வேட்டஞ். அ.) 2. நாலுமரக்காலளவு. (உ-ம்.) "தூணிநான்கினொன்றுய்ப் - பிறகிறுத்தெட்டயிலுமிருப்படி பெய்" (தைல. தைலவ. ௬.)

**தூணியங்கம்**—அத்திப்பிசின். (வைத்தியபரிபா.)

**தூத்தியம்**—தூதன்மொழி.

**தூத்திரகூர்ச்சம்**—ஆண்தருப்பை. (தைலவ. அருப்பத.)

**தூத்துக்குடி**—தெற்குள்ள ஒரு பட்டினம்

**தூதகம்**—திருசு (வைத்தியபரிபா.)

**தூதகன்**—தூதன்.

**தூதநம்**—மூங்கில். (வைத்தியபரிபா.)

**தூதம்**—நிந்தை.

**தூதர்**—காரியமுறைப்போர். (உ-ம்.) "வெய்யகாலன்-மாதூதர்மநங்களிக்கப்பொருமதனினும்பெறுவன்" (பாரத. கிருட்டிண. கபு.)

**தூதல்**—தாவுதல்.

**தூதன்**—1. செய்தியறிவிப்போன். 2. புதன். (பிங்கல. உருக.)

**தூதாயி**—ஒருவிதப்பூண்டு.

**தூதி**—1. தூதுசொல்பவள். (உ-ம்.) "நாடியதூதியானநாவிசன்றேவி" (பஞ்சதந். க: ருசு.) 2. பாம்பினச்சுப்பல்நாலினொன்று. (சித்திராரூடத்திற்காண்க.)

**தூதிகை**—தூதி.

**தூது**—1. ஒரு பிரபந்தம்; அது: பாணன் முதலாகப் பாங்கனீருகவிடுக்கும் உயர்திணையிருபாலினையுங்கேளா மரபினவற்றைக் கேட்பனவாகக் கூறிவிடுக்கும் அன்னமுங்கிளியும் வண்டும் மயிலுங்குயிலும் முதலாயின அஃறிணைப்பொருளையும் இவையகலாம் புதியகலாம் இவற்றின் துனிநீங்கற்கு வாயிலாகவிடுத்தலைக் கலிவெண்பாவாகக்கூறுவது. (உ-ம்.) "பயிறருங்கலிவெண்பாவினாலே-யுயர்திணைப்பொருளையுமஃறிணைப்பொருளையுஞ் - சந்தியின்விடுத்தன் முந்துறதூதெனப்-பாட்டியர்புலவர்நாட்டினர் தெளிந்தே" (இலக்கணவி. அஎச.) 2. ஒருவருமேழையாருவரது மாற்றங்கொண்டுசெக வுரைக்குந்தன்மை; (உ-ம்.) "வேதமாந்தர்வேந்தரென்றிருவர்க்குந்-தூதுபோதற்குரிழிவுரித்தாகும்" (அகப்பொ. அகத். எரு.) 3. காரியம். (சிந்தா.) 4. ஒருவித பருக்கங்கல். (உ-ம்.)"தூதுணம்புறவொடு" (பட்டினப்பாலை. ருஅ.) 5. தூதன். ஆகுபெயரென்க.

**தூதுணம்**—புறவின் பொதுட்பெயர். (சூ. நிக. ௬: சுக.)

**தூதுளி**—ஒருவகைப்புறு. அது, பருக்கங்கற்களைத்தின்னும்புறு.

**தூதுவளை** — ஒரு கொடி. (உ-ம்.) "முடக்கர்றுன்றூதுவளைபருங்குறிஞ்சி" (தைல. தைலவ. எசு.)

**தூதுவன்**—தூதன். (உ-ம்.) "தூதவனொருவன்றன்னை. (இராமா. யுத்தகா. அங்கதன்றூ. உ.)

**தூதுனை**—தூதுவளை. (வைத்தியபரிபா.)

**தூதை**—1. சிறுமட்கலம். (உ-ம்) "மண்டூதையாக்கியசோறு" (மலைறசையந்தா. உரு) 2. பாலை. (வைத்தியபரிபா)

**தூப்பு**—தலாரம். (உ-ம்.)"தூப்புச்சைவரைசூழ்படபேருவில்" (திருவிளை. வினடயி. சக.) [ஒவித்தல்]

தூபக்கால் — ஒரு தூபக்கருவி. (உ-ம்.) "பெறுந்தகையதூபக்கால" (திருவிளை. மூர்த்திவி. உஅ.)

தூபம் — 1. புகை, நறும்புகை (உ-ம்.) "அருக்கியதூபதீபங்கொடுத்து" (சிவரக. பசாசு. க.) 2. நீர்க்கடம்பு. (பிங்கல. ருசுசுஅ)

தூபமணி—கைம்மணி. (பிங்கல. கஉசுரு.)

தூபழட்டி — இந்தனம். (சிந்தா.) மணிமேகலையில் புகைக்கலையமென்பர்.

தூபயோகம்—1. செவ்வாயினங்கிசாதிபதிக்கும் சந்திரலக்கிநாதிபதிக்கும் ஐந்து ஒன்பதில் குருசுக்கிரனிருக்கப் பத்தாமிடத்தில் சனியுச்சமாயிருந்தால் வரும்யோகம் (சோதிடக்கட. ) 2. லக்கிநாதிபதிநின்ற அங்கிசாதிபதி ஐந்தாமிடத்திலிருக்கப் பஞ்சமஸ்தாநத்தைச்சுக்கிரன் பார்க்கில்வரும்யோகம். (சோதிடக்கட.)

தூபி—
தூபிகை— } கோவின்முதலியவற்றின்முடி.

தூபிதம் — சுடுதல். (சூ. நிக. க: சுo.)

தூம்பல்—சுரை. (வைத்தியபரிபா.)

தூம்பா— தும்பை. (வைத்தியபரிபா.)

தூம்பிரகருப்பம்—தித்தபாடாணம். (வைத்தியபரிபா.)

தூம்பிராஷ்டகம்—ஒரு குளிகை.

தூம்பு—1. ஈயம். (வைத்தியபரிபா.) 2. உட்டுளை. (உ-ம்.) "தூம்புடையெயிற்றுவாளராத்தீண்ட" (பிரமோ.காண்.உமாமகே.எ.) 3. எரிமதகு. (சிலதேசவழக்கு.) 4. சலதாரை (உ-ம்.) "தூம்பெனத்தெரிந்தமூக்கினள்" (இராமா. கரன். க.) 5. நெடுவங்கியம். (உ-ம்) "கண்ணிடைவிடுத்தகளிற்றுயிர்த்தூம்பின்" (மலைபடு. ரு) 6. பெருவங்கியம். (உ-ம்) "கழைவளர்தூம்பின்கண்ணிடமிமிர" (மலைபடு. ருகூ.) 7. மரக்கால். (பிங்கல. ருசுசுகூ.) 8. மூங்கில். (பிங்கல. உஎருக.) 9. வாயில் (பிங்கல. ருசுசுகூ.)

தூமகாரம்—சூதபாடாணம். (வைத்தியபரிபா.)

தூமகேது — 1. அக்கினி. (பிங்கல. சச.) 2. அக்கினிதேவன். 3. வால்நட்சத்திரம்.

தூமத்துவசன் — தீ.

தூமதேவன் — அக்கினிதேவன். (உ-ம்.) "தூமதேவனும்புனிதநற்றவினர்" (பிரமோ. காண். கரு: ரு )

தூமபுடம் — ஆதித்தியன் சுத்தபுடத்தை வைத்து அதிலே நாலுராசியும் பதின்மூன்று பாகையுங்கூட்டிநின்றநிலை. (விதாந. குணகு. ருச. உரை.)

தூமம் —1. ஒரு சோள். (உ-ம்.) "மைமீன் புகையினுந்தூமந்தோன்றினும்" (புறநா.ககஎ.) 2. சலஞ்சடுஞ்சூளை. 3. தூமபுடம். (உ-ம்.) "வெங்கதிர்மேனுண்கிராசியன்மூன்றுவிளங்குபாகந்தங்கிடத்தூமம்" (விதாந. குணகுண. ருச.) 4. புகை. (சிந்தா.) 5. புளிநறளை. (வைத்தியபரிபா.)

தூமம்போக்கி—புகைக்கூண்டு. (தைலவ.)

தூமன் — சதருத்திரர்களுளொருவனுகிய நிருதிதிக்கிலிருப்பவன். (வி-ணி. உஎ0.)

தூமாட்சி—ஓர் யோகினி. (வி-ணி. உசக.)

தூமாதீமார்க்கம் — பிதிர்கன்மங்களைத் தவறுதுசெய்தவர்கள் பிதிர்லோகஞ்செல்லும் மார்க்கம. (அபிதா.)

தூமை—1. தூய்மை. 2.மகளிர்சூதகம்.(வழக்.)

தூய்—தூவி. (உ-ம்.) "மன்றருழ்மலர்தூய் வலம்வந்தனநிற்ப" (கூர்மபு. அட்டமூர்த்த. உஉ.)

தூய்தன்மை—அசுத்தம்.

தூய்தாக்கல்— சீத்தல், சுத்தமாக்குதல். (சூ. நிக. கூ: கஉ.)

தூய்து—தூய்மை. (உ-ம்.) "தூய்தாகமன்னும பூபவகைப்படியோதநவர்க்கங்கள்" (சிவரக. தேவிமயம். கூ.)

தூய்மை—சுத்தம். (உ-ம்.) "தூய்மைசெய்வதுநீரலாற்சொல்லின்வேறுளதோ" (அரிச்சந்திர. மயாந. கஉஎ.)

தூய்மைசெய்தல் — உவளித்தல். (பிங்கல. கஅஉக.)

தூயது—களங்கமில்லாதது. (உ-ம்.) "தூயதேற்பற்றிக்கோடும்" (இராமா. ஆரணியகா. மாரீசன்வதைப். உகூஉ.)

தூயவர்—சுத்தமுள்ளவர். (உ-ம்.) "தூயவரல்லர்சொல்லில்" (இராமா. ஆரணிய. சடாயுவதை. ருச.)

தூயன்—சுத்தன்.

தூயாள்—1. சரசுவதி. பிங்கலத்திற்றய்யாளென்றார். 2. சுத்தமுடையவள்.

தூயினர்—சொரிந்தனர். (உ-ம்.) "விண்டுவைமுதலதேவர்தூயினர்மலர்கள்" (கூர்மபு. திருக்கல். சுகூ.)

தூர் —1. அடிப்பக்கம். (உ-ம்.) "நுனிநீக்கித்தூரித்தின்றன்னதகைத்து" (நாலடி.சல்வி.அ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வேர். (பிங்கல. உஅகஅ)

தூர்க்கை—1. தூர்த்தல். 2. பூராநாள். (பிங்கல. உசக)

தூர்ஞகர்—கன்மேந்திரியபஞ்சகத்திலிருக்குமைந்துருத்திரரிலொருவர். (வி-ணி.உஎஉ.)

தூர்த்தத்தநம்—சாமுகத்தன்மை.

**தூர்த்தம்**—1. ஊமத்தை. (வைத்தியபரிபா.) 2. தூர்த்தத்தனம்.

**தூர்த்தர்**—காமுகர். (பிங்கல. அசுஎ.)

**தூர்த்தல்**-1. உட்செலுத்தல். (உ-ம்.) "பழுக்கும்பழத்தைத்தூர்த்து" (தைல. தைலவ. கஙச.) 2. நிரப்புதல். (உ-ம்.) "யானைக்கவுட்குழிதூர்த்த வன்றே" (நைடத. சுயம்வர. ௩.)

**தூர்த்தை**—தூர்த்தைக்குணமுள்ளவள்.

**தூர்தல்**—1. அழிதல். (உ-ம்.) "தூர்ந்தொழியும்பொய்பிறந்தபோழ்தே" (நான்மணி. எச.) 2. நிறைதல். (உ-ம்.) "தோளாமரச்செவித்தூரா வயிற்றுச்சுமடர்க்கெல்லாம்" (திருநூற்.௯0.)

**தூர்ப்பு**—நிரப்புதல்.

**தூர்மம்**-தேட்கொடுக்கி. (வைத்தியபரிபா.)

**தூர்வகம்**—1. சுமத்தல். 2. பொதியெருது. (பிங்கல. உசஎ௩.)

**தூர்வம்**—நாபி. (வைத்தியபரிபா.)

**தூர்வாசி**—ஒரிருடி. அவர் அத்திரிமகாமுநியின் புத்திரர். இவரைத்துருவாசரென்பர். (அபிதான.)

**தூர்வு**—தூர்ப்பு. (வழக்.)

**தூர்வை**—1. அரக்கு. (வைத்தியபரிபா.) 2. அறுகம்புல். (பிங்கல. உகூகூசு.) 3. கிணற்றடைசேறு. (வழக்.)

**தூர்வைத்தைலம்**-ஒருவகைத்தைலம், அதனிலக்கணம். (உ-ம்.) "கணபதியணிமூலந்-தூர்வைத்தைலமீதே" என்னும் (தைல. தைலவ. ககூஉ-ம் செய்யுளிற்காண்க.)

**தூர்ஞு**—முசற்புல். (வைத்தியபரிபா.)

**தூரகாரியவேது** — ஓரலங்காரம். தூரத்திலேநிகழுங்காரியத்தினையுடையவேது, காரியமொருவழியுங் காரணமொருவழியுமாய் நிகழ்வது என்பதுகருத்து. (உ-ம்.) "வேறொருமாதர் மேல்வேந்தனகநுதியால் - ஊறுதரவிமமாதுயிர்வாடும்" (தண்டியல. பொருளணி. சுஉ. உரை.)

**தூரதூலை**—ஒழுகுகுலை. (வைத்தியபரிபா.)

**தூரணம்**—சீக்கிரம்.

**தூரத்தான்**—அந்நியன். (வழக்.)

**தூரதரிசி**—பண்டிதன்.

**தூரதிட்டி**—1. அஞ்சநபாஷாணம். (வைத்தியபரிபா.) 2. தூரபார்வை.

**தூரதிட்டிக்கண்ணாடி** — தூரத்திற் பொருளைச் சமீபமாகக்காட்டுமோர் கருவி.

**தூரம்** — 1. ஊமத்தை. (வைத்தியபரிபா.) 2. சேய்மை. (உ-ம்.) "சிவயோகியர்தாந்தூரத்தேயெதிர்ந்தாரென்றூல்" (சிவரக. நந்திகேசுரர். நமனுக்கு. கஉ.) 3. புறம்பு-தூரமாயிருக்கிறுள். (வழக்.) 4. நீளம். (பிங்கல. உஉகக.)

**தூரமம்**-தேட்கொடுக்கி. (வைத்தியபரிபா.)

**தூரல்**—1. தூருதல். 2. மறைதல். (உ-ம்.) "அம்மணல்-வடுத்தூரவரிப்போல்" (கலி. சக.)

**தூராகி**—எலிச்செவிக்கள்ளி. (உ-ம்.) "தூராகி சங்கட்சமார்க்கவம்" (தைல. தைலவ. கஉ௫.)

**தூராதூரம்**—வெகுதூரம். (வழக்.)

**தூராந்வயச்சொல்**—ஆற்றொழுக்குமடிமறிமாற்றுமல்லாத "சுரையாழவம்மிமிதப்ப" நல்லபடாஅபறை முதலிய எழுவகைப்பொருள்கோளிலக்கணம்பெற்ற செய்யட்கள். (பி-வி. உ௫.)

**தூரி** — 1. ஊஞ்சல். (பிங்கல. ககூஎ0.) 2. எருது. அம்கெட்டுநின்றதென்பர். 3. ஒருவாத்தியம். (உ-ம்.) "கணுவை" பார். 4. தூரிக்கோல். 5. பலகறை.

**தூரிக்கோல்**— }
**தூரிகை**— } எழுதுகோல். (வழக்.)
**தூரிகைக்கோல்**— }
**தூரியக்கோல்**— }

**தூரியம்** — 1. இசைக்கருவி. 2. உவகைப்பறை. 3. எருது, பேரெருது. 4. எழுதுகோல். 5. எறிபடைப்பொது. 6. தூரம். (கலி கக0. உரை.) 7. நல்லாடை. 8. பேரிகைமுதலிய வாத்தியப்பொது. (உ-ம்.) "நெருங்குதூரியங்களேங்க" (பெரியபு. தடுத்தா. உ௩.) 9. பொதியெருது. (பிங்கல. உசஎ௩.) (2, 3, 7-பிங்கல. ௩சுஎ0.)

**தூரியன்**—1. கடவுள். (உ-ம்.) "தூரியனுஞ் சிவந்தோன்றும்" (சி. சி. அ: ௬அ.) [வாக்குமனாதீதகோசரனென்பதுபொருள்.] 2. தூரத்திலேயுள்ளவன்.

**தூரு** — அடி. (உ-ம்.) "தூருகனத்தோடேயெத்தொழிற்கும்" (தைல. பாயிர. க௫.)

**தூருதல்**—மேவப்படுதல். (வழக்.)

**தூரேத்தி**-கம்பந்திராய். (வைத்தியமூ. அக.)

**தூரேந்தம்**—துளசி. (வைத்தியபரிபா.)

**தூரோணம்**—கவிழ்தும்பை. (வைத்தியமூ. அக.)

**தூலகம்**—பருத்தி. (வைத்தியமூ. அக.)

**தூலகன்மம்** — மநம் வாக்குக் காயங்களாற் செய்யப்படுங்கன்மம். (சி. சி. உ: க௩. மறை.)

**தூலகாலம்**—லௌகிககாலம். (வி-ணி.)

**தூலசகளதத்துவம்** — வித்தியாதத்துவம். (சி. சி. க: சு௫. ஞானப்.)

**தூலசர்க்கரை**-1. உப்பு. 2. பருத்திவிரை. (வைத்தியபரிபா.)

**தூலசரீரசமட்டியபிமாநி**-விராட்புருடன். (த. நி. போ. ௯0௩.)

**தூலசரீரம்**-சாதி, குலம், பிறப்புமுதலியவைகளால் அபிமாநஞ்செய்தற்கிடனாய்ப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னு மைந்து

பூதமுங்கூடிப் பரிணமித்த வுருவுடம்பு. (சைவவி.)

**தூலசரீரவியட்டியபிமாநி**—விசுவன். (த. நி. போ. ௪0௧கூ.)

**தூலசித்து**—உயிர். (சி-சி. எ: கூ. சிவஞாந.)

**தூலசிருட்டி** — தநுகரண புவநபோகங்கள். (சி பி. சை.)

**தூலசிவதத்துவம்**—தூலமாகிய சிவதத்துவம். (சி-சி. அ: கூ0. ஞாநப்.)

**தூலதரம்** — ஒன்றற்கொன்றேற்றமான தூலத்தன்மையுடையனபல ற்றுள்ளும மற்றவற்றுக்கேற்றமான தூலத்தன்மை. (உ - ம்.) "நிவிர்த்திகலையுட்பட்ட புவநவாசிகட்குத் தூலதமமாயும்" (சி. சி. க: உ௪. சிவஞாந.)

**தூலதரம்**—அதிகதூலம். (உ-ம்)"நிவிர்த்திகலாகற்பபுவநவாசிகளுக்குத்தூலதரமாயும்" (சி. சி. க: உ௪. ஞாநப்.)

**தூலதேகம்**—தூலசரீரம். (சைவவி.)

**தூலப்பிரவர்த்தன்**—உருத்திரன். (சி-சி. க: கூரு. இராமலி.)

**தூலப்பிரவிர்த்திதத்துவம்**—வித்தியா தத்துவம். (சி-சி. க: கூரு. ஞாநப்.)

**தூலபஞ்சகிருத்தியம்**— தூலமாகிய பஞ்சகிருத்தியம். (சி-சி. க: கஅ. ஞாநப்.)

**தூலபஞ்சவிஞ்சதி** — சுரோத்திராதி வாக்காதித்தாநம் பத்தும்,அவஸ்தாதாநமைந்தும்,பிருதிவியின் கூறென்னும் மயிர், தோல், எலும்பு, நரம்பு, மாமிசமாகிய ஐந்தும், அப்புவின் கூறென்னுஞ் சோரிமுதலைந்தும் ஆகிய இருபத்தைந்து தூலம். (த. நி. போ. ௪0௧.) பஞ்சவிஞ்சதி-இருபத்தைந்து.

**தூலபஞ்சாக்கரம்**—பஞ்சாக்கர பேதத்தொன்று. மெய்கண்டசாத்திரத்திற்கூறப்படும்.

**தூலபிசு**—பஞ்சு. (வைத்தியபரியா.)

**தூலபூதம்**—புறப்பூதமாகிய ஆகாயமுதலியவைகள். (சிவப்பிர. உ: உ. உரை)

**தூலம்** — 1. ஆகாயம். 2. இலவமரம். 3. கோரை. 4. சிவதேகமூன்றினொன்று. 5. நஞ்சு. 6. நீர்முள்ளி. 7. பஞ்சு. 8. பருத்தி. 9. பருமை. (சி. சி. ஞாநப்.) (2, 3, 5, 6, 7, 8-வைத்தியபரிபா.)

**தூலலிங்கம்**—கோபுரம். (சைவச. மாணு. எ. உரை.)

**தூலினி**—இலவு. (வைத்தியபரிபா.)

**தூலவீசுரதத்துவம்** — சிவசதாநந்மேநி யைகுறை து இச்சாசத்திரூபியாயிருந்தள்ளனவிற்பெறும் பெயர். (சி. சி. க: கூரு. ஞாநப்.)

**தூலாதிகாரதத்துவம்**-தூலவீசுரதத்துவம். (சி-சி. க: கூரு. ஞாநப்.)

**தூலாராட்சி** — மணிபூரகதாநத்தினிற்கு மோரதிதேவதை. (சி-சி. அ: உக. மறை.)

**தூலாருந்ததிநியாயம்**—மீமாஞ்சை நூலிற் சொல்லப்பட்ட சகஸ்திரஞாயங்களுளொன்று; அஃது: அருகியவடிவுடைத்தாகிய அருந்ததியைக் காட்டவேண்டின் அதற்கணித்தாயுள்ள தூலநக்ஷத்திரமொன்றைக்காட்டிக்காட்டுமாறு போல நுண்ணியவிடயத்தை எளிதினுணரத் தக்கவோர் விடயங்கொண்டு சோபாநமுறைப்படி யுணர்த்துமொரு நெறி. (சி. சி. க: உ0. சிவாக்.)

**தூலி** — 1. எழுதுகோல. (சூ. நிகண்டில், தூலிகையென்பர் 2. பருத்தவள்.

**தூலிகை**—1. எழுதுகோல். (சூ.நிக.எ:௪௬.) 2. மெத்தை. 3. விளக்குத்திரி.

**தூலித்தல்**—தூளித்தல். (வழக்.)

**தூலிநி**—இலவு. (வைத்தியபரிபா.)

**தூலிப்பு**—தூளிப்பு.

**தூலேச்சுவரன்**—தாணுவாஷ்டகரிலொருவன். (வி-ண.)

**தூலேசுரம்**—பிரதிட்டாகலையில்அகங்காரதத்துவத்திலிருக்குமொருபுவனம். (சி-லி. கிரி. உக. உரை.)

**தூலேயம்** — சிறுகாஞ்சொறி. (வைத்தியபரிபா.)

**தூலை**—பருத்தி (வைத்தியபரிபா.)

**தூவத்த**—வாள். (பிங்கல. கருருரு)

**தூவரம்**—துவர்ப்பு. (பிங்கலத்தில் துவரம் என்பர்.)

**தூவரன்**—அண்ணகன்.

**தூவல்**—1. அழிதல். (சிந்தா.) 2. இறகு. (வழக். கோழித்தூவல் கொண்டுவா.) 3. ஒழிதல். (சிந்தா.) 4. சிந்தல். (சூ. நிக. கூ: உக.) 5. தூரியக்கோல். 6 நீர்த்துளி (சூ.நிக.க:கூ0.) 7. மழை (உ-ம்.) "தூவற்கலித்த" (மலைபடு. ௪௬கூ.) 8. மழைத்தூவலை. (பிங்கல. கூக.)

**தூவழி** — ஒரு பண். (உ-ம்.) "தும்பிவண்டொடுதூவழியாழ்செய்ய" (சிந்தா. குண. ௬.)

**தூவாத**—வெய்யசொற்கள். (உ-ம்.) "தொகச்சொல்லித்தூவாதநீக்கி" (வள். கூஅரு.)

**தூவாமை**—1. உண்ணாமை. (உ-ம்.) "தாயிறூவாக்குழவித்துயர்" (மணிமே. கஈ: கக.) 2. இன்னாமை. (வள். கூஅரு.)

**தூவானம்** — காற்றினாற்சிதறப்படு மழைத்திவலை. (வழக்.)

**தூவி** — 1. அன்னச்சிறகு. (பிங்கல.உகககூ.) 2. அன்னம். (உ-ம்.) "தூவிகள்நற்குஞ்சாலிவளைக்குஞ்சோலைசிறசகும்புலியூரே" (திருப்பு. ருஅஅ.) 3. இறகு. (சூ. நிக. கூ: ௬க.) 4. சூட்டு.

(உ-ம்.) "அன்னத்தூவிறத்தூவி" (நெடுநல். கஙஉ.) மயிலின்கூட்டுமாம். 5. மயிலிறகு. (உ-ம்.) "தூவியயமுந்திரிகை" (தைல. தைலவ. சு.) 6. சொரிந்தது. (சிந்தா.)

தூவிப்பொன் — கிளிச்சிறை, நால்வகைப் பொருளினென்று. (உ-ம்.) "தூவிப்பொன்மாடமூதூர்ச்சுபத்திரனென்னைக்கண்டே" (சிந்தா. கனக உ00.)

தூவு—1. ஊன். (பிங்கல. கஎரு.) 2. தூவுதல். 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பகை. (பிங்கல. கஅஎ0.)

தூவுதல்—1. சிந்துதல். (தனிகைப். குமரேசப். கக.) 2. தெளித்தல். (வழக்.)

தூள்—1. சூரணம். (உ-ம்.) "சிங்கித்தூளசை சர்க்கரை" (தைல. தைலவ. கககூ.) 2. துகள். (உ-ம்.) "தடித்துநீர்பொழிநீலமஞ்சுகூடாமுமிஞ்சிகளேதாய்" (ஏகாதசி. உருக்கு. ரு.) 3. பூந்தாது. (வைத்தியபரிபா.) 4. பொடி. (பிங்கல. சுகரு.)

தூளநம்—உத்தூளம். (உ-ம்.) "சொல்லரிய ஞானசத்திவடிவாகீறு தூளநஞ்செய்திடின் மயிர்த்துவாரமெல்லாம்" (சிவரக. சிவதன்மா. உகூ.)

தூளம்—தூள். அம் சாரியை.

தூளாடல்—தூளாதல். (உ-ம்.) "சேடன்முடியுங்கதிர்கொள்சென்னிவரையுந்தூளாடவடியிட்டு" (திருவிளை. மாயப் சு.)

தூளி—1. தெரிநிலைவினைப்பகுதி 2. பராகம். (உ-ம்.) "அம்பலத்தாடிகுரைகழற்கீழ்த்தூளிநிரைத்தசுடர்முடியோய்" (திருக்கோ. கருக.) 3. புழுதி. (உ-ம்.) "தூளியின்படலைவந்துதொடர்வுற" (இராமா. கரன். ருக.)

தூளிநச்சம்—சதம்பப்பொடி. (வைத்தியபரிபா.)

தூளித்தல்-1. தூளநஞ்செய்தல். 2. பருத்தல்.

தூளித்துவசம்—காற்று.

தூளிதம் - தூள்.

தூற்றல்—1. சிதறுதல், சிந்துதல். (வழக்.) 2. தூற்றுதல். (உ-ம்.) "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" (பழமொழி.) 3. பழிகூறல். (உ-ம்.) "தூற்றுதே தூரவிடல்" (நாலடி. 4. மழைத்தூற்றல்.

தூற்றரி—ஆராதூரி. (வழக்.)

தூற்றரித்தனம்—தூர்த்தத்தனம். (வழக்.)

தூற்றி — பழிகூறுபவன், பழிகூறுபவள். (வழக்.)

தூற்று-1. தூற்றுதல். 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பழிப்பு.

தூற்றுதல் — 1. சிதறல். 2. நென்முதலிய வற்றைத்தூற்றுதல். (உ-ம்.) "வைதெரிந்தகற்றியாற்றிமழைபெயன்மானத்தூற்றி" (பெரியபு. நாட்டு. உரு.) 3. பலருமறியப்பரப்புதல், பழிகூறல். (உ-ம்.) "தன்னியார்குற்றமுந்தூற்றுமரபினர்" (வள். கஅஅ.)

தூற்றுமைக்கோற்றன்—ஒருகொடி. (வைத்தியபரிபா.)

தூற்றுவாய்க்கோற்றன்—தூற்றுமைக் கொற்றன். (வைத்தியபரிபா.)

தூறல் — 1. பழிசொல்லல். 2. மழை. (சூ. நிக. க: கo.) 3. மழைவிடல். (பிங்கல. எ0.)

தூறவம்—நாவல். (மலையக.)

தூறன்—தூறுசொல்பவன். (வழக்.)

தூறு—1. இறம்பு. (பிங்கல. உஅருரு.) 2. கூட்டம்-நெருங்குதல். (திருக்கோ. கஉகூ. உரை.) 3. சிலும்பல். 4. சிறுசெடி. 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. திராய். (வைத்தியமூல அக.) 7. தீங்கு. (உ-ம்.) "தூறுஞற்றிடு தட்பண்ணியன்றனை" (சேதுபு. அக்கினிதீர். சுக.) 8. பழிச்சொல். 9. பற்றைக்காடு. (உ-ம்.) "தூளியின்படலைவந்துதொடர்வுறமாமுந்தூறுந் தாளிடையொடியுமோசை" (இராமா. கரன். ருக.) 10. மஞ்சள். (வைத்தியமூ. அக.)

தூறுதுணம்—கடம்பு. (வைத்தியமூ. அக.)

தூறுட்டி—சிற்றேலம். (வைத்தியபரிபா.)

தூறுதல்—தூறல்.

தூறுதலையன்—1. பிராய் (வைத்தியபரிபா.) 2. சிலும்பியமயிர்த்தலையன். (வழக்.)

தூறுபுட்பம்—1. சிவந்தி. 2. சீந்தில் (வைத்தியபரிபா.)

தூறுபுரம்-சிலந்திநாயகம். (வைத்தியபரி.)

தூறுவாதி—தீம்பாலை. (வைத்தியபரிபா.)

## தெ.

தெக்கணகைலாயம்—திருக்காளத்தி. (சீகாளத்திப். தென்கை. க.)

தெக்கணம்—தக்கணம்.

தெக்கணயநம் — தக்கணயநம், (பொருட்டொகைநிகண்டிற் காண்க.)

தெக்கிணம்—தெற்கு. (உ-ம்.) "தெக்கிண திக்கின்மூங்கீர்த்திரத்தில்" (சேதுபு. சக்கரதீர். ரு.) [தக்கணந்தெக்கிணம் என மருவிற்று.]

தெகிடி - ஒரு விளையாட்டு (ஒரு குழூஉக் குறி.)

தெகிழ்தல் - வாய்விடுதல். (உ-ம். "தெகிழ்யத்தணிமலர்தெகிழ்ந்தநாறறமும" (சிந்தா. கேம. உக.)

தெகிள்—ஒருகொடி. (வைத்தியபரிபா.)

தெதுட்டல்—தெவிட்டல் என்பதன் மரூஉ என்பர்.

தெதுட்டி— } தேட்கொடுக்கி. (வைத்திய
தெதுட்டிகை— } பரிபா.)

தெதுளம்—நிறைவு.

தெதுளல்— } நிறைவு. (பிங்கல. ௨௨௨அ.)
தெதுளுதல்— }

தெங்கங்காய்—தேங்காய். (உ-ம்.) "தெங்கங்காய்போலத்திரண்டுருண்ட" (நன். பொது வி. சுஎ. உரை.)

தெங்கணம்—தேயமைம்பத்தாறினொன்று. [தெலுங்கு.]

தெங்கநாடு — குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்குமிடையிலுள்ள நாடு. (சிலப்பதி.)

தெங்கந்தீவு— } 1. சத்ததீவினொன்று. (சூ.
தெங்கு— } நிக. கஉ: சுக.) 2. தென்னமரம். (உ-ம்.) "காய்மாண்டதெங்கின்பழம்வீழ" (சிந்தா. நாமகள். உ.)

தெசலம்—தேமா. (வைத்தியபரிபா.)

தெசலன்—வீராகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ. கருக.)

தெசவம்—மா. (வைத்தியபரிபா.)

தெசனி—1. பெருங்குரும்பை. 2. மஞ்சள். (வைத்தியபரிபா.)

தெசாகம் — இறந்த பத்தாநாள். (உ-ம்.) "காரிகையாய்தெசாகத்துண்டாமிந்த காணினன்றன்று" (செகராசசேகரமென்னுஞ்சோதிடநூல். பலவினை. சுரு (அபிதானகோ.)

தெட்ட—தெளிவான. (உ-ம்.) "திசைகட்டியமால்கரிதெட்டமதப் - பசைகட்டின" (இராமா. சரபங். அ.)

தெட்டல் — 1. அபகரித்தல். 2. எத்தல். (1, 2-வழக்.)

தெட்டவர்—தெளித்தவர். (உ-ம்.) "உணர்வில்லார்தெட்டவரென" (இரகு. தேநு. சு.)

தெட்டு—1. எத்து. (உ-ம்.) "தெட்டிவந்து புலியூரின்மன்றுள்வளர்பெருமாளே" (திருப்பு. ருருஅ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்) "மற்றவையாவுநூற்றெட்டே" (அழகர்கலம்பகம். உ0.)

தெட்டுதல்—வஞ்சித்தல். (வழக்.)

தெட்பம்—தெளிவு. (உ-ம்.) "தெட்பமார் சுமதி" (சேதுபு. பாவநா. உரு.)

தெண்டகன்—சத்திரியன் சூத்திரமாதைப் புணரப் பிறந்தபிள்ளை. (உ-ம்.) "பகர்ந்தவரையன்சூத்திரர்தம்பாவைதன்னைப்பகர்விதியா—லுகந்துபுணரவுற்பவித்தான்பெயர்தெண்டகன்" (அருணகிரிபு. வலம்புரி. கஎ.)

தெண்டபங்கி—ஒருவகைநியாசம், இது சிவபூசையிற்செய்வது. (உ-ம்.) நித்தியகன்மநெறியிற் காண்க.

தெண்டம்—அபராதம். }
தெண்டன்—வணக்கம். } (வழக்.)
தெண்டனை—தண்டனை. }

தெண்டி — 1. தண்டியாசிரியர். 2. தெரிநிலைவினைப்பகுதி.

தெண்டித்தல்—ஒறுத்தல். "தெண்டித்தார்க்கன்றெசெயம்" (விவேகசிந்தாமணி.)

தெண்டிப்பு—கண்டிப்பு.

தெண்டிரை—சமுத்திரம். (உ-ம்.) "தெண்டிரையுடுத்தவங்கண்மாநிலம்" (நைட. அரசா. க.)

தெண்டு—1. தண்டு. 2. தநுஇரண்டுகொண்டது. (வி-ணி.)

தெண்டுதல்—1. நரம்புவலித்தல். 2. மிண்டுதல். (வழக்.)

தெண்மை—தெளிவுத்தன்மை.

தெத்தநாள்—பாபக்கிரகங்கணின்று கழிந்த நாள். (விதாந. குணகுண. கசு. உரை.)

தெத்நவியத்தியாகுதி—அறிவு விளங்கும்படி கொடுக்கிறவாகுதி.

தெத்து—எத்து. (வழக்.)

தெந்தனு—தாளக்குறிப்பு.

தெந்தி—நேர்வாளம். (வைத்தியபரிபா.)

தெப்பம்—புணை. (சூ. நிக. எ: ருஉ.)

தெம்பாங்கு—ஒருவகைச்சந்தம். (வழக்.)

தெம்மாடி—அறிவீநன். (வழக்.)

தெம்முனை—1. இரணகளம். 2. பகைமுகம். (உ-ம்.) "மன்னவன்றெம்முனைமேற்செல்லுமாயினும்" (திருக்கோ. ௬0சு.)

தெய்—1. கொல்லல். 2. தெய்வம். (1, 2-பிங்கல. ௬சுஎஉ.)

தெய்ய—ஓரசைநிலையிடைச்சொல். (உ-ம்.) "பாலரேதெய்யவெம்மறையாதீமே" (ஐங்குறு. கசு.) [இது தெய்யோஎனவுந்திரிந்துவரும்.]

தெய்வகளை—தெய்வம். (வழக்.)

தெய்வசுரபி—காமதேநு.

தெய்வத்தச்சன்—மயன். (மணிமே.)

தெய்வத்தரு—தேவதாரு. (உ-ம்.) "சசிபலைதெய்வத்தருசித்திரகம்" (தைல. தைலவ. கசு.)

தெய்வத்தியன்—இப் பிரமமே நீயெனச் சீடனுக்கு ஆசிரியர் உபதேசிக்குமுபதேசமே தனக்குபதேசமாகப் பிரமமே தானெனத் தெளிந்தவன். (வே-தா-சூ. ௬௬.)

தெய்வத்துவம்—தெய்வத்தன்மை. (வழக்.)

தெய்வதம் — தெய்வம். (உ-ம்.) "தெய்வதமடந்தையர்" (கந்தபு. தெய்வயா. கஅரு.)

தெய்வதயானை — 1. ஐராவதயானை. 2. தெய்வயானையம்மை. (உ-ம்.) "தெய்வதயானை கேடையகுருயிர்வவ்வியவேலினன்மனைவி யாத லால்" (கந்தபு. தெய்வயா. கஎக.)

தெய்வநாநம்—வெயிலெறிக்க மழைபெய்த லாற் கிழக்குநோக்கி இரண்டு கையையுங் குவி த்து மேலேநீட்டிக் கிழக்கே யேழடி இதயமந் திரத்தாலேபோய்ப் பிறகாலே இம்மந்திரத்தால் ஏழடிமீளல். (த-பி.)

தெய்வநாயகன்—சிவன். (உ-ம்.) "தெய்வ நாயகன்மருவுமேருகயிலாயத்திற் சேர்க்தான்" (சிவரக. தேவர்முனி. கO.)

தெய்வநாயகி — உமை. (உ-ம்.) "சென்ம கோடியிற்செய்தபுண்ணியத்தினுற்றெய்வநாய கிசேரும் - பொன்மயந்தருவிமாநசேவையும்பெ ற்றோம்" (சிவரக. தேவியிமய. உகூ.)

தெய்வப்பசு—காமதேநு.(பிங்கல.உசருக.)

தெய்வப்பாவை — தெய்வத்தாற்செய்த கொல்லிப்பாவை. (உ-ம்.) "சிலைத்தொழிற்சிறு நுதற்றெய்வப்பாவை" (சிந்தா. காந். கசுரு.)

தெய்வப்பெண்—அணங்கு.(பிங்கல.கஅசு.)

தெய்வம்—1. ஊழ். (உ-ம்.) "ஈந்துளார்க்கு மிறச்செயலாகுமோ-தேய்ந்திடாமுறைதெய்வ முளாரையே" (சேதுபு. அக்கினிதீர். சகூ.) 2. ஐவகையாகத்தொன்று. (பிங்கல. கூகூரு.) 3. கடவுள். (உ-ம்.) "தெய்வந்தொழாஅள்" (வள். ருரு.) 4. தெய்வமணம். (உ-ம்.) "அறநிலை யொப்பேபொருள்கோடெய்வம்" (இக்கணவி. சஅரு.உரை.) 5 வருடம். (உ-ம்.) "சில்லியிட் டொருதெய்வஞ்சென்றமுகிற்பெயர் கொணெ ல்விட்டு" (தைல. தைலவ. கஙரு.)

தெய்வமணம்—1. எண்வகைமணத்தினொ ன்று; அது: வேள்வியாசாரியனுக்குக் கந்நியை யலங்கரித்துத்தீமுன்னர்க்கொடுப்பது. (உ-ம்.) "நீளினெடுகர்..............தெய்வமணத்தார் திறம்" (இலக்கணவி. சஅரு. உரை.) 2. திவ் வியவாசனை.

தெய்வமணி— குதிரைகளினற்சுளியிலொ ன்று. (உ-ம்.) "அணிகிளர்கழுத்தில்வலஞ்சுழித் திருந்தாலதிந்தவரதனையேதெய்வ- மணியென விசைப்பர்" (திருவிளை. பரிநரி. ககக.)

தெய்வமந்திரி—வியாழன். (சூ.நிக.க:சுஉ.)

தெய்வயாகம்—பஞ்சமகா யஞ்ஞத்தொன்று; அஃது: ஓமம்வளர்த்தல். (வள். தென்புலத்தார் என்னுங்குறளுரையிலறிக.)

தெய்வயா நி—சுக்கிரன்மகளாகிய ஒருபெண். (உ-ம்.) "பார்க்கவன்பயந்ததெய்வயாநிக்குப்பதி யாயுள்ளோன்" (இராமா. இலவணன்வதை. கூஉ.)

தெய்வயானை—1. ஐராவதயானை. 2. தெய்வ யானையம்மையர். (உ-ம்.) "கொற்றவேற்படை க்குமரற்கிந்திரன்-றெற்றெனத்தருந்தெய்வயா னையை" (கந்தபு. தெய்வயா. ருஉ.)

தெய்வயானைகாந்தன்—குமரன். (சூ. நிக. க: உச.)

தெய்வவிரதன்-வீடுமாசாரி.(பிங்கல.எகூஎ.)

தெய்வவுணவு—அமுது. (பிங்கல. கூகO.)

தெய்வவுத்தி – சீதேவியென்னுந்தலைக்கோ லம். (உ - ம்.) "தெய்வவுத்தியொடுவலம்புரி" (திருமுருகாற். உரு.)

தெய்வாதீநம்—தெய்வசுதந்தரம். ஆதீனம்- சுதந்திரம். (சி. சி க: அ. மறை.)

தெய்விகம்—1. தெய்வச்செயல். 2. தெய் வத்தன்மை. (உ - ம்.) "சென்றசென்றவெஞ் சேனைகளிளைப்பறத்தெய்விகந்தனில்வந்த"(பா ரத. பதினன். சுஅ.)

தெய்வீகம் — தெய்வத்தன்மை. (உ - ம்.) "தெய்வீகமாகநீர்தா - மித்திசையில்வந்ததரன ருளதன்றே" (சிவரக. சிவடுண்டிவந. சச.)

தெரிக்கல் — விரித்துச்சொல்லல். (உ-ம்.) "சைவத்திறத்தினைத்தெரிக்கலுற்றும்" (சி. சி. பாயிர. உ.)

தெரிகாரம்-பொரிகாரம்.(வைத்தியபரிபா.)

தெரிகோல்—பொருள்களையாராயுந்துலாக் கோல். (புறநானூறு.)

தெரிசநம்—தரிசநம். (உ-ம்.) "தேடிராம நாதனெந்தைதெரிசநத்தினலரோ" (சேதுபு. இராம. ச.)

தெரிசநவேதி—கண்டமாத்திரத்திலே செம் பைப்பொன்னுக்குமோரிரதகுளிகை. (உ - ம்.) "தெரிசநவேதிகண்டசீருணம்போல"(சேதுபு. வேதாள. எக.)

தெரிசனை—தரிசநம். (வழக்.)

தெரிசித்தல்—தரிசித்தல். (திருவிளை. அன் னக்குழி. கக.)

தெரித்தல்—1. எழுதல். (பிங்கல. உகஉச.) 2. கொழித்தல். 3. சொல்லல். (சூ.நிக.கO:ரு.) 4. தெரிவித்தல். (உ-ம்.) "உறும்பொருளைவற் றையுந்தெரித்து" (தணிகை. கடவுள். க.)

தெரிதல்—அறிதல்.

தெரிதருதேற்றவுவமையணி — உவமை யணிகளுளொன்று; அஃது: ஐயுற்றதனைத்தெ ரிந்து துணிவது. [வ-று.] "தாமரைநாண்மல ருந்தண்மதியால்வீறழியுங் - காமர்மதியுங்கறை விரவு - மாமிதனுற் - பொன்னைமயக்கும்புனைசு ணங்கினூர்முகமே-யென்னைமயக்குமிது"(தண் டி. கூக. உரை.)

**தெரிதல்**—1. அறிதல். 2. ஆராய்தல். (உ-ம்.) "தெரிந்துதெளிதல்" (வள். ருக. அதி. பார்.) 3. காணல். (உ-ம்) "இன்னதோர்தன்மைக ளெல்லாந்தெரிந்து" (கந்தபு. சூரபன். வதை. எக) 4. தென்னுதல். (பிங்கல. ௪அகரு.) 5. விசாரித்தல். (புறப்-வெண்)

**தெரிந்து**—ஆராய்ந்து. (வள். ருக. அதி.)

**தெரிநிலை**—விளங்கிநிற்பது.

**தெரிநிலைவினை**—கருத்தாவும் காரணமும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொரு ளுமாகிய அறுவகைப்பொருளையுந்தரும்வினை. (நன். ௩௨௦. உரை.)

**தெரிநிலைவினைப்பெயரெச்சம்**—காலமுஞ் செயலுந்தோன்றி வினைமுற்றுதற் குரியபா லொன்றுந்தோன்றாது அப்பாலுடனே செய்ப வன் கருவி நிலம் செயல் காலம் செயப்படு பொருள் என்னும் அறுவகைப்பொருட்பெயர் களும் எஞ்சிநிற்கும் வினை. (நன். ௩௪௦.உரை.)

**தெரிநிலைவினைமுற்று**—பால்காட்டும் விகு தியை யிறுதியிற்பெற்று வெளிப்படையாகக் காலத்தைக்கொண்டுமுடியும்வினை.(நன். ௩௨௩. உரை.)

**தெரிநிலைவினைவினையெச்சம்**—தொழிலுங் காலமுந்தோன்றி வினைமுற்றுதற்குவேண்டும் பாலொன்றுந்தோன்றாது அப்பாலுடனேவினை யெஞ்சநிற்கும்வினை. (நன். ௩௪௨ உரை.)

**தெரிப்பு**—1. அறிவிப்பு. 2. ஆராய்வு. 3. எழுதுதல். 4. கொழிப்பு. 5. சொல்லுதல். (தெரித்தல் தெரிப்பு, இரண்டுமொக்கும்.)

**தெரிபடுதல்**—1. தெரிந்தெடுக்கப்படுதல். 2. தோன்றுதல். (வழக்.)

**தெரியல்**—1. ஆராய்தல். 2. காணல். 3. பூமாலை. (உ-ம்.) "கல்விறகரிந்தவென்றித்தெரி யலன்" (திருவிளை.உக்கிரபாண்டியன்திரு.உசு)

**தெரியலர்**—அறிவீநர்.

**தெரியவருதல்**—அறிதல். (வழக்.)

**தெரியற்றார்**-தெரிதலையுடையமாலை.(சிந்தா)

**தெரியாத்தனம்**—1. அறியாமை. 2. தோன் றாமை. (1, 2-வழக்.)

**தெரியாநிலைவினை**—குறிப்புவினை.

**தெரியாமை**—அறியாமை. (வழக்.)

**தெரிவிடல்**—1. ஆராய்தல். 2. தெரிந்தெ டுத்தல்.

**தெரிவித்தல்**—1. அறிவித்தல். 2. வெளிப் படுத்தல். (உ-ம்.) "சிங்கவருமன்றனக்குத்தெரி வித்து" (கோயிற்பு. பாயிர. உ௬.)

**தெரிவினை**—தெரிநிலைவினை.

**தெரிவு**—1. அறிவு. (உ-ம்.)"தெரிவுறநீடும் புலிமுனியோனும்" (கோயிற்பு. நடரா. ௩ரு.) 2. ஆராய்வு. 3. தெரிதல். 4. தெரிந்தெடுக்கப் பட்டது; ஆகுபெயர்.

**தெரிவை**—1. இருபத்தாறுமுதல் முப்பத் தொருவயதிற்பெண். (சூ. நிக. உ: ருஅ.) 2. கன்னிராசி. (பிங்கல. ௩௬எ௩.) 3. பெண். (உ-ம்.) "தெரிவைநீர்மூழ்க" (அரிச்ச. விவா. உஎஉ.)

**தெரு**—1. வழி. (உ-ம்.) "நஞ்சிறார்த்தெரு விடைப்போதுவனே" (திருக்கோ. எ௬.) 2. வீதி. (உ-ம்.)"தாயிலாப்பிள்ளைமுகந்தனைநோக் கித்தெருவினிடைத்தளர்வான்" (திருவிளை. விருத்த. ௩உ.)

**தெருட்சி**—1. அறிவு. (பிங்கல. கஎ௬௬.) 2. இருதுவாதல். (உ-ம்.) "தெருட்சிப்படலம்" (விநாந.) 3. தெளிவு. (உ-ம்.) "தெருட்சிசேர வைத்திசைமுகன்சபித்தநாள்" (சேதுபு.விதாம. எக)

**தெருட்டல்**—1. இசைக்கரணங்களெட்டினு ளொன்று. (உ-ம்.) "தெருட்டலென்பதுசெப் புங்காலை யுருட்டிவருவதொன்றேமற்ற - வொ ன்றன்பாட்டுமடையொன்ற நோக்கின்- வல் லோராய்ந்தநூலேயாயினும் - வல்லோர்பயிற்று ங்கட்டுரையாயினும் - பாட்டொழிந் துலகினி னொழிந்தசெய்கையும்-வேட்டதுகொண்டுவிதி யுடனுடி" (கூர்மபு. தேவி. க. உரை.) 2. தெ ளியச்செய்தல். (ஐங்குறு.)

**தெருட்டு**—1. அறிவிப்பு. 2. இருது. தெருட் டுக்கலியாணம். (வழக்.) 3. தெருட்சி. 4. தெரி நிலைவினைப்பகுதி.

**தெருட்டுதல்**—1. அறிவுறுத்தல். (உ-ம்.) "வார்தங்குகொங்கைதெருட்டி" (தணிகை. களவு. ௩௦௪.) 2 மநதைத்தெளிவித்தல்.

**தெருமால்**—1. சுழலல். (பிங்கல. உகஅ௪.) 2. மநக்கவற்சி. (உ-ம்.) "செய்யார்தேஎந்தெரு மரல்கலிப்ப" (பொருந. க௩௪.)

**தெருமருதல்**—தெருமரல். (உ-ம்.) "வெளி யின்மேனியும்மெய்ப்படுகோலமுந்- தெளிகிலா துதெருமருவார்சிலர்" (கந்தபு. ததீசியுத். சு௪.)

**தெருவிலழகி**—குப்பைமேனி. (வைத்திய பரிபா)

**தெருவு**—தெரு. (உ-ம்.) "தெருவுதோறல றிலைசெய்வதொன்றறியேனே" (திருவாச. திருச்சதக. ௩௧.)

**தெருள்**—அறிவு. (உ-ம்.) "தெருடன்றன் குணமதாகிச்சித்தெனநிற்குஞ்சீவன்" (சி.சி.உ: அரு) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. தெளிவு. (உ-ம்.) "தெருட்டருமறைகடேறு" (திருவிளை. மெய்க்கா. உக.)

**தெருளல்**—1. இருதுவாதல். 2. தெளிதல்.

தெருளாது—ஞானமில்லாமல். (உ-ம்.) "தெருட்டவுந்தெருளாதாடலொடுதுயல்வோர்" (மணிமே. எ: ருஉ.)

தெருளுதல்—தெருளல். (உ-ம்.) "தெருளுந்தாநம்" (அரிச்ச. நகர. உக.)

தெல்—தெல்லு, ஒரு கொடிவித்து. இதனை மூலைக்குவமானமாகக்கூறுவர். (உ-ம்.) "தெல்லுக்கரகங்கோங்கரும்பு" (உவமானசங்கி. கக.)

தெல்லுப்பு—வளையலுப்பு. (வைத்திய பரிபா.)

தெலுகு—1. ஒரு தேசம். 2. ஒரு பாஷை. அது: ஆந்தரதேயத்துமொழி. வடமொழி தென்மொழியிரண்டுங்கலந்துண்டாயது. அதனை ஆதியிலே இலக்கணஞ்செய்து செம்மைசெய்தவர் கண்ணுவமுநிவரென்ப. (அபிதா.)

தெலுங்கம்—ஒரு தேசம். (உ-ம்.) "தெலுங்கங்கலிங்கம்வங்கம்" (நன்னூல். பெயரி. கசு. உரை.)

தெலுங்கு-தெலுகு-ஆந்திரதேசத்துமொழி; அது: வடமொழி தென்மொழி யிரண்டுங்கலந்துண்டாய மொழி. (அபிதாந.)

தெவ்—1. கொள்ளுதல். (பிங்கல. ருகூஎச.) 2. சத்துரு. (உ-ம்.) "தெம்முன்மழுத் திருபபாங்கயத்தன்" (மருதி. க) 3. பகை. (பிங்கல. ருகூஎச.) 4. போர். (சூ. நிக. கக: வகரவெ. கசு.)

தெவ்வம்—தெவ்வு. (உ-ம்.) "திறைவழுங்காத்தெவ்வம்பணியச்சென்றுழுய" (திருக்கோ. ருOச) [விகாரம்]

தெவ்வர் — பகைவர். (உ-ம்.) "சிறந்தனை யென்றுனைக்கொண்டேதெவ்வரை வென்றுலகாளச்சிந்தித்தேன்யான்" (பாரத. பதின்மூன். கருஅ.)

தெவ்விய—பகைத்த. (உ-ம்.) "தெவ்வியவுணர்க்காய்ந்து" (தணிகை நாட்டு எச.)

தெவ்வு — 1. கொள்ளுதல். (மதுரைக்கா. அரு. அடி உரை.) 2. சத்துரு. பகைவரையுணர்த்தலாகுபெயர். 3. பகை. (உ-ம்.) "தெவ்வுப்புலம்" (தொல். சொல். ருசுசு. சேநா.) 4. போர். உகரச்சாரியைபெற்றது.

தெவ்வுதல்—கொள்ளுதல். (உ-ம்.) "விழைவெல்லாம் - பாங்குபெறத்தெவ்வுதி யென்று" (தணிகை. அகத்தி. கூO.)

தெவம்—மாமரம். (வைத்தியமூ. அக.)

தெவிட்ட—1. ஒலிக்க. (உ-ம்.) "அவலுறந்தேரைதெவிட்டமிசைதொறும்" (ஐங்குறு. சருக.) 2. அடைக்க. (உ-ம்.) "பணைநிலைப்புரவி புல்லுண்ணுதெவிட்ட" (மதுரைக்கா. கூகூO.) 3. திரள. (உ-ம்.) "மரமுதற்றெவிட்ட" (கு-பா. கஎ.)

தெவிட்டல்—1. அடைத்தல். 2. உமிழ்தல். 3. தங்குதல். (பிங்கல. ககசுருக.) 4. நிறைதல். 5. ஒலித்தல். (1, 2, 4, 5-சூ. நிக. கக. வகரவெ. அ.)

தெவிட்டு—தெரிநிலைவினைப்பகுதி.

தெவிட்டுதல்—1. உமிழ்தல். (சூ. நிக. கக. வகரவெ. அ.) தெவிட்டல், தெவிட்டுதல் இரண்டுமொக்கும். 2. ஒலித்தல். (ஐங்குறு. சருக.) 3. தேக்கிடுதல். (உ-ம்.) "தெவிட்டிவந்ததுபாலையுட்கொண்டிடுசெருக்கால்" (கந்தபு. ஆற்று. கசு) 4. நிறைதல். (உ-ம்.) "தோள்களாலவாரி வாரியுண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க் கடைகடோறொழுகிப்பாயும்" (இராமா. ஊர்தேடு. உகக.) 5. வெறுத்தல். (உ-ம்.) "கீதவமுதஞ்செவிநிறையத்தேக்கியிருந்துந்தெவிட்டாதால்" (சேதுபு. வேதாள. க.)

தெவிட்டும்—அசையிடும். (புறநானூறு.)

தெவிள—திரள. (உ-ம்.) "நுண்ணீர்தெவிள வீங்கிப்புடைதிரண்டு" (நெடுநல். உரு.)

தெவிளல்— } திரள்ல். (நெடுநலவா. உரு. தெவிளுதல் } அடி. உரை.)

தெவு—கொள்ளுதல். (உ-ம்.) "நீர்தெவு நிரைத்தொழுவர்" (தொல். சொல். ருசுரு. சேநா.)

தெழி—முழக்கம். (உ-ம்.) "தெழிபட்டகைக் கயத்தின்செவி" (திருவிளை. யானையெய். உக.)

தெழித்தல் — 1. உரப்புதல், அதட்டல். (உ-ம்.) "எருமைப்போத்திரண்மாடுறத்தெழித்து" (சிந்தா. நாம. ருO) 2. சினத்தல். (சிந்தா.) 3. துவைத்தல். (உ-ம்.) "நீனிறக்கரும்பகட்டிஞற்றெழித்தலைமீத்த" (நைடத. நாட்டு. சO.) 4. நீக்குதல். (உ-ம்.) "கன்மவொப்பிற்றெழித்திடன்மலங்களெல்லாம்" (சி-சி. க: ருஎ. சிவாக்.) சிலப்பதிகாரத்தில் பிரித்தல் என்று கூறிக்குடநாட்டு வழக்கு என்பர். 5. பேரொலி செய்தல். (உ-ம்.) "மள்ளர்தெழித்திமொர்ப்பும்" (திருவிளை. மெய்க்கா. உஎ.) பிங்கலத்தில் கிரட்டோசையென்பர். (கசசரு.)

தெழித்தான்—கோபித்தான். (சிந்தா.)

தெழித்து—1. உரப்பி. 2. கோபித்து. (1,2-சிந்தா.)

தெழிப்பு—தெழித்தல். (உ-ம்.) "பூதர்தந்தெழிப்புவிண்ணுமொழிந்திடுதிசையும்பாருமுற்றன" (கந்தபு. எமகூட. உO.)

தெள்—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. தெளிவு. (உ-ம்.) "தெள்ளாரசலதிமுறைகுதலும்" (சேதுபு. சேதுவந். ருஎ.)

தெள்கு-1. ஒருபூச்சி. (உ-ம்.) "சிறியதெள்கு துள்ளிக்-கருடனார்க்குப்பறவைகற்பிப்பதென"

களுள்ளும் ஒரே பொதுத்தருமத்தைச்சொல்லு தல்.

**தொடர்மொழி**—அவாய்நிலையானுந் தகுதி யானு மண்மையானு மியைந்து பொருள்விளக் குந் தனிமொழியீட்டம்; அது: இருமொழித் தொடர் பன்மொழித்தொடரென விருவகைப் படும்.

**தொடர்வு**—தொடர்பு.

**தொடரி**–1. ஒருசெடி; அது: புலிதொடக்கி. (வைத்தியபரிபா.) [முன்றொடரி பின்றொடரி யென விருவகைப்படுமென்பாரு முளர்.] 2. தொடுத்து. (உ-ம்.) "புதன்மிசைநறுமலர்கவின் பெறத்தொடரி" (ஐங்குறு. சகூ.)

**தொடரூஉ**—தொடர்ந்து. (பரிபாடல்.)

**தொடரெழுத்து** — நிலைமொழியீற்றையும் வருமொழிமுதலையும் தழுவிநிற்குமெழுத்து.

**தொடல்**—1. தீண்டல், பரிசித்தல். (உ-ம்.) "சென்றுமெய்தொடலும்" (கூர்மபு. அந்தகா. உ0.) தோண்டல். (உ-ம்.) "தொடத்தொடப் பொறுக்குந்திண்மைத்தொன்னிலமனையான்" (திருவிளை.அங்கம்வெ.எ.) 3. பிடித்தல். (உ-ம்.) "குழையிணையிற்கரந்தொட்டு" (கந்தபு.கயமுக னுற். உ0ச.)

**தொடலி**—தொடரி.

**தொடலை**—1. தூக்கு. (உ-ம்.) "தொடலை வாளர்தொடுதோலடியர்" (மதுரை. கூகூகூ.) 2. மகளிர்விளையாட்டு. (உ-ம்.) "தாமணிவெண்ண ணையுமையாடொடலைசெய்வாள்" (சிவரக. உருத்திரா. அ.) 3. மாலை. (உ-ம்.) "சூடின ளிருந்தனடொடலையாற்றியே" (கந்தபு. மார்க் கண்டேய. அ0.)

**தொடாஅ**—தொட்டு. (பரிபாடல்.)

**தொடி** — 1. ஒரு பலம். (உ-ம்.) "தொடிப் புழுதிகஃசாவுணக்கின்" (வள். க0கூஎ.) 2. கங் கணம். (பிங்கல.கூகூஅரு.) 3. கைவளை, சூடகம். (உ-ம்.) "விரும்பியகுழைதொடிமின்செய்கண் டிகை" (திருவிளை. வளைய. உச.) 4. பூண். (உ-ம்.) "பெருங்கையானைக்கொடுந்தொடிபடுக் குங்-கருங்கைக்கொல்லன்" (பெரும்பா.சகூகூ.) (புறநானூறு.) 5. வளையல்கழலாதிருத்தற்கு முன்கையிலணிவது. (சிந்தா.கோவிந்தை.கூக. உரை.) 6. வீரவளை. (உ-ம்.) "வலிகெழுதடக் கைத்தொடியொடுசுடர்வர" (மதுரை. எஉ0.)

**தொடித்தலைவிழுத்தண்டினர்**—சங்கப் புல வருளொருவர்.(திருவள்ளுவமாலையிற்காண்க.)

**தொடு**–1. தெரிநிலைவினைப்பகுதி. 2. தோ ண்டல். (உ - ம்.) "தொடுவேலைப்புவியாக்கி" (சிவரக.கத்திரிப்பூ.கச.) 3. தோட்டம். 4. மருத நிலம்; 5. வஞ்சகம். (3, 4, 5-பிங்கல.கூஅக.)

**தொடுக்கம்**—பொன். (பிங்கல. கஉகூஉ.)

**தொடுக்குவர்** — வளைத்துக்கொள்வர். (புற நானூறு.)

**தொடுகை**—1. தோண்டுகை. 2. பரிசம்.

**தொடுத்த**-கட்டின. (உ-ம்.) "திதிபன்னுன் கினிடையுவாவின்றுகென்றுதொடுத்தநூன்மு னிவரோடுஞ்சொல்லினன்" (பாரத. களப்பலியூ. உ.)

**தொடுத்தல்**–1. அணிதல். (உ-ம்.) "தொடுக் கோபணியீரணியீர்மலர்நஞ்சுரிகுழற்கே" (திரு க்கோ. கூகூ.) 2. எய்தல். (உ-ம்.) "நூறம்புதொ டுத்துநூறு. (திருவிளை. சுந்தரப். உஅ.) 3. கட் டல். (உ-ம்.) "சிறுதாம்புதொடுத்தபசலைக்கன் றின்" (முல்லை. கஉ.) (பிங்கல. கஉசக.) 4. கோத்தல். 5. செலுத்தல். 6. பற்றல். (உ-ம்.) "பர்சடைதொடுத்தபடலைப்பழுமரத்தின்" (கந் தபு. கயமுகனு. கஅகூ.) 7. பாத்தொடுத்தல். (உ-ம்.) "புலவோருரையெலாந்தொடுத்துரைப் பினும்" (பாரத. கிருட்டிண. கூச.) 8. பிணைத் தல். 9. பொருத்தல். 10. வழக்குத்தொடுத்தல். (உ-ம்.) "பெண்டீர்தொடுத்தாண்டவைப்போர் புகலும்" (திரிகடு. எக.) 11. வளைத்தல். (சூ. நிக. கச: லகரவெ. கரு.)

**தொடுதல்**–1. அணிதல், வளைகாப்புத்தொடு தல். (வழக்.) 2. இணைந்திருத்தல். செறித்தல் என்பர் (பரிபாடலில்.) 3. உண்ணல். 4. எய் தல். (உ - ம்.) "கடுங்கணைகடம்மைத்தொட்ட னன்" (கந்தபு. சூரபன்மன்வதை. கககக.) 5. செலுத்தல். (உ-ம்.) "சுடராழிதொட்டார்க்கு" (மறைசையந். ) 6. தீண்டல், தொடுத்தல். (பிங்கல. உககூகூ.) 7. தொடங்கல். (உ - ம்.) "அன்றுதொட்டிறைவனைநினைக்கிலன்" (கந்த பு. திருமண. ருரு.) 8. தோண்டல். (உ-ம்.) "காவோடறக்குளந்தொட்டானும்" (திரிகடு. எ0.)

**தொடுதோல்**—செருப்பு. (மதுரைக்கா. கூகூகூ. அடி. உரை.)

**தொடுப்பு**—1. கட்டு. 2. கலப்பை. (சூ. நிக. எ: சஅ.) 3. கோவை. 4. சங்கிலி. 5. சேர்க்கை. 6. தொடர்ச்சி. 7. விதைப்பு. (உ-ம்.) "தொடுப்பி னாயிரம்வித்தியதுவிளைய" (மதுரை. கக.) 8. வெறும்புறங்கூறல். (சூ.நிக.க0:க.) 4,5-வழக்.)

**தொடுமின்**—பிழிமின். (புறநானூறு.)

**தொடேல்**—தீண்டாதேகொள். (சிந்தா.)

**தொடை** — 1. அம்பு. (சூ. நிக. எ: ரு.) 2. கட்டு. (உ - ம்.) "மென்றொடைவன்கிழாஅர்" (மதுரை. கூகூ.) 3. சரமாகத்தொடுத்தமாலை. (உ-ம்.) "இண்டைநிரைத்தொடைதொங்கலொ [illegible]

(திருவிளை. தருமிக்கு. ௬.) 4. சரீரவுறுப்பினு ளொன்று; அது: முழந்தாளுக்கும் அரைக்கு மிடையிலுள்ள வோருறுப்பு. (உ-ம்.) "உடை தொடைமேலுறவுடுத்தான்" (கோயிற்பு.பதஞ் சலி. ௩௨.) 5. செய்யுட்டொடை; அஃது: அடி களிலுஞ்சீர்களிலுமுள்ள எழுத்துக்களிசையத் தொடுப்பது. அவை, மோனைதொடை, இயை புத்தொடை, எதுகைத்தொடை, முரண்டொ டை, அளபெடைத்தொடை, அந்தாதித்தொ டை, இரட்டைத்தொடை, செந்தொடைஎனப் பலவகைப்படும். (இலக்கணசிந்.) 6. செய்யுள். 7. தாறு. (சிந்தா.) 8. தொடுத்திருத்தல், தொ டர்ச்சி. (உ-ம்.) "தொடையுடைவாளிமாரிசோ னையம்புயலிற்பெய்தார்" (பாரத. பதினேராம். எ.) 9. நாணி. (பிங்கல. ௧௨௩௭.) 10. பூமாலை. (உ-ம்.) "நறையிதழித்தொடையும்" (பிரமோ. சோமவாரவி. ௬.) 11. மாலை. (உ-ம்.) "சுரும் புற்றநறையிதழித்தொடைமுடியோன்" (கோ யிற்பு. பாயிர. ௧௧.) 12. வடம். (பரிபாடல்.) 13. விதி. (உ-ம்.) "தொன்மநுநூற்றொடைமநு வாற்றுடைப்புண்டது" (பெரியபு. திருவாரூர். ௩௭.) 14. வீணைமுதலியவற்றின்நரம்பு. (புற நானூறு.)

தொடையல்—1. தேன்கூடு. (உ-ம்.) "தே னமர்தொடையறாங்குஞ்செய்கையால்" (கந்த பு. வள். ௬.) 2. தொடர்ச்சி. (உ-ம்.) "கேள்வி போகியநீள்விசித்தொடையல்" (பொருந.௧அ.) 3. பூமாலை. (உ-ம்.) "கொன்றையங்கொடை யலலையும்புயன்" (ம-தி. எ.)

தொடைவாழை—ஒரு நோய்.

தொண்டகப்பறை—ஆகோட்பறை. (உ-ம்.) "தொண்டகப்பறைதுடியொடார்த்தெழ" (சிந் தா. கோவிந்தை. ௪௦.)

தொண்டகம் — 1. குறிஞ்சிநிலத்திற்குரிய சிறுபறை. (உ-ம்.) "தொண்டகமுரசங்கொம் பும்" (பெரியபு.கண்ணப்ப.௩௮.) 2. தொண்டு பூண்ட இருதயம். (உ-ம்.) "அன்பர்-தொண்ட கமலரசின்றசோதி.(திருவிளை.சான்மாறி.௧௧.)

தொண்டர்—வழிபடுகின்ற அடியவர்.(உ-ம்.) "வந்துதிகழ்தொண்டர்புடைசூழ" (திருவாத. திருப்பெரு. ௪எ.)

தொண்டரடிப்பொடியாழ்வார்—ஒரு வை ணவர். (அபிதாந.)

தொண்டலம்—யானைத்துதிக்கை. (பிங்கல. ௨௪௧௮.)

தொண்டன் — அடியான். (பெரியபு. தடுத் தாட். எ௬.)

தொண்டி—1. அடியவள். 2. ஒரு பட்டினம்; அது: சேரநாட்டிற்கடற்கரையிலுள்ளது. (உ-ம்.) "தொண்டியுட்டந்து" (பதிற்று. ௬௦.) 3. கள். (பிங்கல.௧௧௪௬.) 4. கலைப்பைக்கிழங்கு. (தைலவ.) 5. தோன்றிக்கிழங்கு (உ-ம்.) "தொ ண்டிசாயிருவேர்நெய்தல்" (தைல. தைலவ. ௬௪.)

தொண்டிக்கள்—நெல்லாலாக்கியகள். (உ-ம்.) "தோழயாம்பெரிதுமுண்டுதொண்டிக் களிதனையென்றான்" (சிந்தா. பதுமை. ௬அ.) [நெல்லரிசியாலாக்கியகள்ளென்க.]

தொண்டிச்சி—அடியாள்.

தொண்டியோர்—சோழகுலத்தோர். (உ-ம்.) "வங்கவீட்டத்துத்தொண்டியோரிட்ட" (சிலப். ஊர்காண். ௧௦எ.)

தொண்டு—1. அடிமை. (உ-ம்.) "நாரதனுதி யர்கலந்தேதொண்டுசேர்தரு நந்திதனேவலாற் சூழ்ந்தார்" (சிவரக. மேரு. ௨௨.) (பிங்கல. அ௭௪.) 2. ஒன்பது. (உ-ம்.) "அம்பட்டை" பார். 3. பழமை. 4. வழிபாடு. (3, 4-சூ.நிக.௧௧: ணகரவெ. ௬.)

தொண்டை — 1. ஆதொண்டைச்செடி. (பிங்கல. ௨அ௬அ.) 2. ஆதொண்டைவேர். (உ-ம்.) "அமுக்கிரி"பார். 3. கொவ்வை.(உ-ம்.) "தொண்டைக்கனிவாய்துடிப்ப" (இராமா. மா யாசனக. அஅ.) 4. தொண்டைக்குழி. (பிங் கல. ௧௦௫௬.) 5. தொண்டைமண்டலம். 6. மிடறு. 7. யானைத்துதிக்கை.(பிங்கல.௩௬௬அ௭.)

தொண்டைநாடு—தொண்டைமண்டலநாடு. (உ-ம்.) "ஒலிகெழுவிளையுளோடுமுடையது தொண்டைநாடு" (தணிகை. திருநாட்டு. ௬.)

தொண்டைப்புற்று—ஒரு நோய்.

தொண்டைமண்டலம்—காஞ்சித்திருப்பதி யை தன்னகத்துக்கொண்டிருக்கும் ஒரு நாடு. (உ-ம்.) "வந்தபுராணமரங்கேற்றினர்தொண் டைமண்டலமே"(தொண்டைமண்டலசதகம்.)

தொண்டைமான் — ஓரரசன். (காஞ்சிப்பு. நாட்டுப். ௬௩.)

தொண்டையோர் — தொண்டையைச்சூடி னோர். (உ-ம்.) "கொண்டியுண்டித்தொண்டை யோர்மருக" (பெரும்பா. ௩௫௪.)

தொண்ணூறு—ஒரெண், எண்பதின்மேற் பத்துச்சேர்ந்தது. (நன்னூ. ௧௧௪. உரை.)

தொத்தல் — 1. ஒட்டுதல். (உ-ம்.) "சுடர் வெண்கோட்டுமெண்டொத்தநிமிராண்கேழலா யினும்" (இராமா. அக்ஷயகுமா. வதை. ௫.) 2. தொந்தித்தல். (உ-ம்.) "அவித்தைதொத்தா நயர்த்ததொல்சுடர்" (சங்கற்ப. மாயா. எ.)

தொத்தன்—அடிமைக்காரன்.

தொத்திடல் — திரளுண்டாதல். (உ-ம்.) "மின்றொத்திகெழல்" (திருக்கோ. ௨௪௬.)

தொத்திரம்—தோத்திரம். (உ-ம்.) "மருவு மலர்புனைதொத்திரசொற்கொடுவளர்கைகுழை பிடிதொப்பணகுட்டொடு" (திருப்பு. விநாயக. ரு.) [இது குறுக்கல்விகாரம்.]

தொத்து—1. அடிமை. (பிங்கல. கூகூஅஅ.) 2. ஒட்டு, கட்டு. (திருவருட்பயன். உயிரவை நிலை. கூ. உரை.) 3. சார்பு. 4. பூங்கொத்து. (உ - ம்.) "தொத்தின்மலர்ப்பொழிற் றில்லைத் தோல்லோனருளென்னமுன்னி" (திருக்கோ. கஉக.)

தொத்துதல்—1. ஒட்டுதல். 2. படர்தல். (வழக்.)

தொதி—பப்பரப்புளிமரம். (வைத்தியபரிபா.)

தொந்தத்தசி—நீயதுவாகுய் எனப் பொருள் படு மொரு வடமொழிவாக்கியம். (ஞானக்கட். தொம்பதசிரவணம்.)

தொந்தம் — 1 அடங்கியிருத்தல். (உ-ம்.) "வித்தினிடைத்-தொந்தத்தருப்போல்" (ஞானவா. ஞானவிண். கக.) 2. அந்நியோந்நியம். 3. இரட்டித்தது. 4. தொடர்பு. 'தொந்தயுத்தம்' பார்.

தொந்தமுற —ஒன்றுபட. (உ-ம்.) "வெந்த மூத்தங்கான்றிடுநெய்வெண்ணிரைநெப் மையந் தைந்தாந்தொந்தமுறச்சேர்" (நைல. நைலவ. கஙரு.)

தொந்தயுத்தம்—தொடர்ந்தபோர். (உ-ம்.) "ஒருவரோடுமொருவர்தொந்தயுத்தநின்றுஞற் றினர்" (சேதுபு. சீதைகுண்ட. கஉ.)

தொந்தரவு—தொந்தரை. (வழக்.)

தொந்தரை—வருத்தம். (வழக்.)

தொந்தரோகம்—தொந்தித்தரோகம்.

தொந்தனை—தொடர்ச்சி. (உ-ம்.) "கர்ப்பாசயத்திற்றொந்தனை அநாதியேயொழியாமல்" (சி. சி. க: ருரு. நிரம்ப.)

தொந்தி — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. வயிறு. (உ-ம்.) "அன்றுதொந்தித்தந்தியதிந்து" (சிவரக. கணபதிவந்தனை. கூ)

தொந்தித்தல்—1. இரட்டித்தல். 2. தொடர்தல். 3. பற்றுதல். (வழக்.)

தொந்திப்பு—1. இரட்டிப்பு. 2. தொடர்பு.

தொநிபதி — சதாசிவதத்துவத்திலிருக்கு மொருபுவநம். (வி-ணி. உஎஅ.)

தொப்பணம் — தோப்புக்கரணம். (உ-ம்.) "வளர்கைகுழைபிடிதொப்பண குட்டொடு" (திருப்பு. விநாயகர் துதி. ரு.)

தொப்பி — 1. கள். (பிங்கல. ககசகூ.) 2. தலைத்தொப்பி. (உ-ம்.) "தொப்பியுமுகத்திடை தூலக்கழுளாராகி" (திருவாத. குதிரை. ககூ.) 3. நெல்லாற்சமைத்தகள். (உ - ம்.) "இல்லடுகள் ளின்றொப்பிபருகி" (பெரும்பா. கசo)

தொப்புள்—கொப்பூழ். (வழக்.)

தொப்பை - இண்மையில்லாமற்பருத்திருத்தல். (வழக்.)

தொம்—ஓரநுகரணவோசை. (உ-ம்.) "தொம் மெனப்பன்முகத்த - குடமுழவெழுமுழக்கம்" (கோயிற்பு. நடராச. எ.)

தொம்பதசிரவணம் — (வேதாந்தம்.) சீவனது யதார்த்தத்தன்மையைக் குரு உபதேசிக்கத் திடமுறக்கேட்டல். (ஞானக்கட். தொம்பதசிரவண.)

தொம்பதநிதித்தியாசநம் — (வேதாந்தம்.) குருவினுலுபதேசிக்கப்பட்ட ஆத்மபோதம் நன்ருக விளங்கிய விளக்கம். (ஞானக்கட். தொம்பதநிதித்தியாசநம்.) [நிதித்தியாசநம்-தெளிதல்.]

தொம்பதம்—தவமென்னும் பதம். (உ-ம்.) "தற்பதந்தொம்பதத்தாமாயவப்பதம்" (பாடு துறை. அன்னைப். எ.)

தொம்பதமநநம்—(வேதாந்தம்.) யதார்த்தமாகிய ஆத்துமசொரூபத்தை குரு உபதேசிக்கக் கேட்டபின் அதை மநதிற்றிடமாக தரித்துக் கொள்வது. (ஞானக்கட். தொம்பதமநநம்.)

தொம்பம்—கம்பக்கூத்திலொன்று. (வழக்.)

தொம்பர்—கழைக்கூத்தர். (வழக்.)

தொம்பறை-களஞ்சியம். (ஒருகுழூஉக்குறி.)

தொம்பை— தானியங்களைச் சேமித்துவைக் குங் குதிர். (உ-ம்.) "மௌனவவன்காணுமுனங்கவனைத்தொம்பைமேவுவித்தங்கவனுடனே மேவுங்காலை" (பஞ்சதந். க-வது. கஅகூ.)

தொம்பைக்கூடு—தொம்பை.

தொய்—குற்றம். (உ-ம்.) "சுண்ணந்தொய் யறப்பெய்தநீர்த்தொடுகடற்பவளச்செப்பும்" (சிந்தா. இலக்கணை. கஎ.)

தொய்தம் — இரண்டாயிருக்குந்தன்மை. (உபநிடதம்.)

தொய்தல்—1. இளகல். 2. தளர்தல். (1, 2- வழக்.)

தொய்தன்—துவிதன். (வாசுதே. கoஅ.)

தொய்யகம் — தலைப்பாளையென்னு மணி யென்பர்நிகண்டில். பூரப்பாளையென்னுஞ் சிவந்த தலைக்கோலம். (உ-ம்.) "தொய்யகம்புல்லகந் தொடர்ந்ததலைக்கண்" (சிலப். கடலாடு. கoஎ.)

தொய்யல்—1. அகமகிழ்ச்சி. 2 இளைத்தல். (வழக்.) 3. இன்பம். (உ-ம்.) "தொய்யற்சிர்தை யாம்யாவரையாதென்றுதுதிப்பாம்" (இராமா. ஊர்தேடு. கஅ.) 4. உழவு. 5. சேறு. 6. சோர்தல். (உ-ம்.) "நமதுகுற்றேவலாலழுங்கித்-தொய் யலுன்னமோடிந்திரன்கரந்தனன்" (கந்தபு. சூரன்றண்டஞ்செய். உகூ.) 7. துன்பம். (1, 4, 5, 7- சூ. நிக. கக: யகரவெ. ரு.)

தொய்யா — கெடாத. (உ-ம்.) "தொய்யா வெறுக்கையொடுதுவன்றுபுகுழீஇச்" (பெரும்பா. ௪௩௪.)

தொய்யாது—கெடாது.

தொய்யில் — 1. உழுநிலம். 2. எழுதுங் குழம்பு, மாதர்முலையுந்தோளுமேழுதுங்குழம்பென்க. 3. ஒரு கீரை. (வைத்தியபரிபா.) 4. சாந்திலெழுதுங்கோலம். (உ-ம்.) "ததியேது மின்றிநீரிற்பிரித்ததொய்யிற்குளம் பதலவோ" (மதுரைக். ௯௯.) 5. தொய்யிற்கொடி. (உ-ம்.) "துணிநீர்மெல்லவற்றொய்யிலொடுமலர" (மதுரை.௨௮௩) 6. பத்திக்கீற்று. (சிலப். அரும்பத.)

தொய்வு—1. இளைப்பு. 2. தொய்தல். (1, 2-வழக்.)

தொல் — பழமை. (உ-ம்.) "தொல்பகீரதி மைந்தனும்" (பாரத. கிருட்டிண. ௭௪.)

தொல்காப்பியக்குடி—மதுரைக்கருகிலொருபட்டினம், பழையகாப்பியக்குடி என்பர்.

தொல்காப்பியம் — ஓரியற்றமிழிலக்கண நூல்; இது தொல்காப்பியனாராற் செய்யப்பட்டது. இதனுரையாசிரியர்கள் கல்லாடர், இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என ஐவர். (அபிதாந.)

தொல்காப்பியன்—அகத்தியமுனிவர்மாணாக்கருளொருவரும், சமதக்கினிமுனிவர் புத்திரருளொருவருமாகிய திரணதூமாக்கினி என்பவர். (அபிதாந.)

தொல்படை — அரசனது முன்னோரைத் தொடங்கிவரும் படை. (உ-ம்.) "உடலைவிடத் துறஞ்சாவன்கண்டொலைவிடத்துத் — தொல்படைக்கல்லாலரிது" (வள். ௭௬௨.)

தொல்லியல்—1. பழயஉழுவலன்பு. (உ-ம்.) "தொல்லியல்வழாவளந்துய்ப்ப" (கந்தபு. வள். ௮௮.)

தொல்லெழில் — இயற்கைநலன். (உ-ம்.) "தொல்லெழிலேய்ந்தார்தொலையினவரினும்" (கலி. ௪௦.)

தொல்லை — 1. தொந்தரவு. (வழக்.) 2. பழமை. (உ-ம்) "தொல்லைநீர்கொண்டவண்டத்தும்" (அரிச்ச. ௯.) 3. பழயவுரிமை. (உ-ம்.) "தொல்லைக்கணின்றார்தொடர்பு" (வள். ௮௦௫.)

தொல்வரவு—பழயகுடிவரவு. (உ-ம்.) "தொல்வரவுந்தோலுங்கெடுக்குந்தொகையாக" (வள். ௧௦௪௩.)

தொல்வினை—பழவினை. (உ-ம்.) "தொல்வினைதொடர்ந்துதருசூழ்பிறவியென்னும் வல்வினைதொடர்ந்து" (பிரமோத். பஞ்சா. ௯௮.)

தொலி—1. உமி. 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பழத்தோல். (வழக்.)

தொலித்தல்—உமிபோக்குதல். (வழக்.)

தொலியல்—1. உமிபோக்கியஅரிசி. (வழக்.) 2. தொலித்தல்.

தொலியாகரம்பை—நத்தைச்சூரி. (வைத்தியபரிபா.)

தொலைஇ—அழித்து. (உ-ம்.) "விலங்கலன்னபோர்முதற்றொலைஇ" (மலைபடு. ௪௬௪.)

தொலை—1. தூரம். 2. தொல்லை. (உ-ம்.) "தொலைப்பருஞ்சுற்றத்தாரோ" (சிந்தா. முத்தியா. ௩௭.) [விகாரம்.] 3. தெரிநிலைவினைப்பகுதி.

தொலைச்சி — 1. கொன்று. ஐங்குறு.) 2. போக்கி. (உ-ம்.) "நாளாதந்துநறவுநொடைதொலைச்சி" (பெரும்பா. ௧௪௧.)

தொலைச்சிய—தொலைத்த. (புறநானூறு.)

தொலைத்தல் — 1. சொல்லல். (பிங்கல. உ௧௨௬.) 2. தோற்கச்செய்தல். (உ-ம்.) "செப்புங்கோங்கரும்புந்தொலைத்தென்னையுமாட்கொண்டகொங்கைகளே" (திருக்கோ. ௪௬.) 3. முடித்தல். (வழக்.)

தொலைதல் — 1. அழிதல். (உ-ம்.) "வாளவுணர்தொலைதல்காண" (கூர்மபு. அந்தகா. ௯௪.) 2. கெடுதல். 3. தோற்குதல். (பிங்கல. ௧௮௬௪.) 4. நீங்குதல். (உ-ம்.) "துதித்திடுவோர்தங்கள்பவந்தொலையுந்தானே" (ஏகாதசி. காலநிர்ணய. ௬௧.) 5. முடிதல். (உ-ம்.) "தொலையாவழி" (சிவரக. கணபதிவந்தனை. ௫.)

தொலைபு — 1. கெடுதல். (உ-ம்.) "படைதொலைபறியாமைந்துமலிபெரும்புகழ்க் — கடைகால்யாத்தபல்குடிகெழீஇக்" (பெரும்பா. ௯௯௮.) 2. தொலைந்து. (பரிபாடல்.)

தொலைஇயோன்—தொலைவித்தோன். (புறநானூறு.)

தொலையாச்செல்வர்— திருச்சோற்றுத்துறைச்கோவிலிலெழுந்தருளியசிவன். (பெரியபு. திருஞான. ௩௫௫. உரை.)

தொலைவு—1. அழிவு. (உ-ம்.) "தொலைவில்யாவர்க்குந்தோற்றருமங்கலம்"(அரிச்ச.மயான. ௪௪.) 2. கழிவு. (உ-ம்.) "பிராரத்தத்தொலைவிலே" (சி.சி.௧௧:௧.நிரம்ப.) 3. தூரம். 4. தோல்வி. (திருக்குறள். படைமாட்சி. ௨.) 5. மனச்சோர்வு. (உ-ம்.) "தொலைவிலாமுதல்வனார்க்கும்" (அரிச்ச. காசி. ௩௯.)

தொழல்—வணங்கல். (உ-ம்.) "இறுதியில்லவனைத்தொழற்கு" (திருவிளை. விடையி. ௬௦.)

தொழிக்க—சிறக்க. (திருவானைக். கௌதமப். ௮௪.)

தொழித்தல்—1. ஆரவாரித்தல். 2. சோபித்தல். 3. சிதறல். (உ-ம்.) "தொழித்தளிமுரலு

நந்தனவனமும்"(தணிகை.புராண.எச.) (1, 2-சிந்தா.)

**தொழிந்து**—தொழித்து, சிதறி. (சிந்தா.)

**தொழில்**—1. கிரியாசத்தி. (உ-ம்.) "பரையாதிரஙசயறிவுதொழிலேந்தும்வாயிலர" (சேதுபு. சேதுபல. ருசு.) 2. செயல். (உ-ம்)"தூயமுனிவன்மகத்தழலின்ருெழிலுக்குதவ" (சேதுபு. வேதாள. சு.) 3. தந்திரம். (சிந்தா.) 4. பொருளினதுபுடைபெயர்ச்சி. (தொல். சொல். உ00. உரை.) 5. வினைச்சொல். 6. வேலை. (உ-ம்.) "சிறப்பிலாவச்சிறுதொழில்செய்தனெம்" (கந்தபு. சயமுகனு. உ0ரு.)

**தொழில்செய்வோர்** — கம்மியர். (பிங்கல. அஅச.)

**தொழிலாளி**—வேலைக்காரன். (வழக்.)

**தொழிலி**—தொழிலையுடையவள். (உ-ம்.) "தொழிலிஇஇகாற்றுப்போல்வந்தகதழ்விடைக்காரியை" (கலி. க0ரு.)

**தொழிலுவமம்** — இருபொருளின்ருெழிலொப்புமையானத்தொழிற்பொருளை யுவமானோபமேயமாகக் கூறுவது. (தண்டி. பொருள். ரு0.)

**தொழிலோர்**—தொழிலாளர்.

**தொழிற்குறிப்பு**—வினைக்குறிப்பு. (உ-ம்.) "சொல்லிடும்பெயரேயெனத்தொழிற்குறிப்பிரண்டினுள்ளும்" (சேதுபு. கந்தமா. க0க.)

**தொழிற்றுறைவிசேடம்**—ஓரலங்காரம்; அது: காரணமாகிய தொழில்குறைந்து அதனலாகிய காரியம் விசேடித்திருத்தல். (தண்டி. எஎ. உரை.)

**தொழிற்கை** — (பரதம்.) தொழில்பெறக்காட்டுங்கை; இஃது: அகக்கூத்திற்குரியது. (உ-ம்.) "பிண்டியும்பிணையலுமெழிற்கையுந்தொழிற்கையும்" (சிலப். அரங்கே சஅ.)

**தொழிற்படுதல்**—காரியப்படுதல்.

**தொழிற்பண்பு**—தொழிலையுணர்த்தும்பண்புச்சொல். (நன்னூ. பெயரி. ருஅ. வி-உரை.)

**தொழிற்பாடு**—வேலை. (வழக்.)

**தொழிற்பெயர்**—தொழிலானய பெயர்

**தொழிற்றன்மையணி**—தன்மையணியினொருவகை; அது: தொழிலின்கணுள்ள பலவிதமான தன்மைகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது. [வ-று.] "சூழ்ந்துமுரன்றணவிவாசந்துதைந்தாடித் - தாழ்ந்துமதுநுகர்ந்துதாதருந்தும் - வீழ்ந்தபெரும்-பாசத்தார்நீங்காப்பரஞ்சுடரின்பைங்கொன்றை - வாசத்தார்நீங்காதவண்டு" (தண்டி. உஅ. உரை.)

**தொழிற்று** — தொழிலையுடையது. (உ-ம்.) "இறப்பேபுரிந்ததொழிற்றும்" (வள். கஎஎ.)

**தொழிற்றுறை**—வியாபாரத்துறை. (வழக்.)

**தொழின்முதனிலை**—காரியத்திற்கு முன்னிற்குங் காரணம். (உ-ம்.) "எட்டென்பதொழின்முதனிலையே" (தொல். சொல். கசஉ.)

**தொழினுட்பம்**-நுட்பவணியிரண்டனுளொன்று; அது: தொழிலினலநுமித்து அரிதாக அறியத்தக்கசெய்கைத்திறமுடையது. [வ-று.] " பாடல்பயிலும்பணிமொழிதன்பணைத்தோள்-கூடவவாவாற்குறிப்புணர்த்து-மாடவற்கு - மென்றிந்தொடையாழின்மெல்லவேதைவந்தா-ளின்றீங்குறிஞ்சியிசை" (தண்டி. சுரு. உரை.)

**தொழு** — 1. இரேவதி. (பிங்கல. ருசுக0.) 2. குஷ்டநோய். (உ-ம்.) "துக்கத்தொழுநோயெழுபவே" (நாலடி. பழவி.) 3. தொழுமரம். (சூ. நிக. கக: ழகரவெ. ரு.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. பசுக்கொட்டில். (உ-ம்.) "தொழுத்திறந்துகன்றாட்டநந்துங்கறவை" (நான்மணி. சு0.) 6. பட்டி. (பிங்கல. சுஅஅ.)

**தொழுகண்ணி**—அரவாட்டிப்பச்சை; இது: வெட்டினதசையைக்கூட்டுமென்பர். (வைத்தியபரிபா.)

**தொழுகல்லீர்** — தொழமாட்டாதீர். (பரிபாடல்.)

**தொழுகுலம்** — மறையவர்குலம். (உ-ம்.) "மதிக்கோவேந்தன் - றொழுகுலச்சிறுவனெனத்தான்" (திருவிளை. யானையெய். ருஉ.)

**தொழுகை**—தொழுதல்.

**தொழுத்தை** — வசவி, குறளைக்கூறுவாள். (சூ. நிக. உ: சுரு.)

**தொழுதக**—1. நன்குமதிப்ப. 2. விரும்ப. (1, 2-சிந்தா.)

**தொழுதல்**—வணங்குதல். (உ-ம்.) "அவர்பதம்புல்லித்தொழுதல்செய்வாம்" (சேதுபு. கடவுள். க0)

**தொழுதி** — 1. இனம். (உ-ம்.) "தொழுதிபோகவலிந்தகப்பட்ட-மடநடையாமான்"(மலைபடு. சககக.) 2. கூட்டம் (உ-ம்.) "இழையணிந்தெழுசுரும்பல்களிற்றுத்தொழுதியொடு" (பதிற்று.சுஉ.) 3. திரள். (உ-ம்.) "கைதோய்வன்னகார்மழைத்தொழுதி" (மலைபடு. ருசுஉ.) 4. தொழுகிருய்எனப் பொருள்படும் ஒரு முற்றுவினை. 5. பறவைக்கூட்டத்தொலி. (சூ. நிக. கக: ழகரவெ. க0.) 6. புட்கூட்டம். (பிங்கல. உசஎ.)

**தொழுந்தகை**—தொழத்தக்கவன்.

**தொழுநோய்**-குட்டநோய். (உ-ம்.) "துக்கத்தொழுநோயெழுபவே" (நாலடி. கரு: ரு.)

**தொழுப்பு**— உழுமதொழில் வளப்பு.

**தொழும்பர்**—அடிமைகள். தொழும்பு-அடிமையாதலில், தொழும்பரென்றார். (பிங்கல. அஎரு.)

**தொழும்பாளர்**—தொண்டர்கள். (உ-ம்.) "துணையாளனே தொழும்பாளரெய்ப்பினில்" (திருவாச. திருச்சதக. கஅ.)

**தொழும்பு**—1. அடிமை. (உ-ம்.) "பெற்றவடொழும்புநிலைபெற்றபிழையின்றே - யற்றதென" (சேதுபு. கத்திரு. அக.) 2. அடிமைவேலை. (உ-ம்.) "தொழும்புசெய்யாரென்செய்வார்யமதூதருக்கே" (கந்தரல. ருரு.)

**தொழுவம்** — 1. தொழுவோம். தன்மைப் பன்மை. 2. பசுக்கொட்டில். (அம் சாரியை.)

**தொழுவர்**—1. தொழில்செய்வோர். 2. மருதநில மாக்கள். (உ-ம்.) "நெய்தலங்கழனிநெல்லரிதொழுவர்" (புறநா. உ0க.)

**தொழுவு**—தோழம். (பிங்கல. ககூஉ.)

**தொழுவை**—மடு. (உ-ம்.) "துயிலின் றியாநீந்தத்தொழுவையம்புனலாடி" (கலி. ௬0)

**தொழுனை**—யமுனையாறு. (சிலப். அரும்பத.)

**தொள்கு**—1. குழி. (உ-ம்.) "தொள்கொடுங்கிடந்த" (இரா. வாலிவதைப். எஙூ.) 2. வலை. (உ-ம்.) "தொள்கின்றலையெய்தியமானென" (இராமா. சடாயுவுயிர். கஙூ0.)

**தொள்ளம்**—சேறு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**தொள்ளல்**—துளைத்தல். (சூ. நிக. கூ: ௬க.)

**தொள்ளாமணி**—தொளைக்காதமுழுமணி.

**தொள்ளாயிரம்**-ஒன்பதுநூறு (நன்னூல், ஒன்பானொடுபத்தும். என்னுஞ் சூத்திரத்திலறிக.

**தொள்ளி**—குழைசேறு. (பிங்கல. ௬0௬.)

**தொள்ளுதல்**—துளைத்தல்.

**தொள்ளை**—1. துளை. (உ-ம்.) "மின்னுறழ்தொள்ளையாக்கைகவிடுநிலைவிடுசேர்வார்" (சேதுபு. இராமனருச். உக௬.) 2. துளையுடைப்பொருள். 3. மரக்கால். (உ-ம்.) "அரையரைத்தொள்ளையடிறுத்து" (தைல. தைலவ. கக௯.) 4. வெளிற்றறிவு. (உ-ம்.) "தொள்ளைபூத்தலர்ந்த நெஞ்சிற்றக்கனீகேட்டி" (கூர்மபு. தக்கவே. ௬.)

**தொளதொளத்தல்**—தளர்தல். (வழக்.)

**தொளதொளப்பு**—நெகிழ்வு. (வழக்.)

**தொளதொளெனல்**—நெகிழ்தல். (வழக்.)

**தொளாயிரம்**—தொள்ளாயிரம்.

**தொளி**—1. சேறு. (உ-ம்.) "உழாஅநுண்டொளியுள்புக்கழுந்திய" (சிலப். நாடுகாண். க௨0.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**தொளுக்குதல்**—நகைத்துக்கட்டல், தளர்ச்சியாக்கட்டல். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**தொளுதொளுத்தல்**—நகைதல், தளர்தல்.

**தொளை** — 1. உட்டுளை. 2. துளை. (உ-ம்.) "கைம்மான்"பார். 3. மரக்கால். (உ-ம்.) "ஓங்குதுறையந்தொளையோர்சோடசம்பெய்" (தைல. தைலவ. க௬௫.) [தொள்ளையின் விகாரம்.] 4. மூங்கில் (பிங்கல. உஎ௬0.)

**தொளைத்தல்**—தொள்சல். (பிங்கல. உகருஉ.)

**தொற்று**—1. ஏறுதல். 2. ஒட்டு. 3. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "தொற்றுவியாதி" 4. பற்று. 5. பொருத்து தொற்றுவைத்துக் கட்டு. (1, 2, 3, 4, 5 வழக்.)

**தொற்றுவியாதி** — ஒருவரிலிருந்து மற்றவருக்குவரும் வியாதி. (வழக்.)

**தொறு**—1. அடிமை. (பிங்கல. அஎச.) 2. இடைச்சாதி. (சிந்தா.) 3. கூட்டம். 4. தொழிற்பயில்வு, உம்பெற்றுவரும். (உ-ம்.) "சொறிதொறும்" (வள்ளுவ. புணர்ச்சிமகிழ்தல். கப.) 5. தொழுவம். 6. பசுக்கூட்டம். (உ-ம்.) "தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்குரன்" (பாரத. அருச்சுனன்றீர்த்த. ௬.) (3, 5-பிங்கல. ௬ககக.)

**தொறுத்தி**—இடைச்சி. ஒருமைப்பால்.

**தொறுத்தியர்**—இடைச்சியர். (உ-ம்.) "செய்தனர்சிறுபுன்கோலந்தொறுத்தியர்திகைத்துநின்றார்" (சிந்தா. கோவி. ௫0) (பிங்கல. ருசஙூ.)

**தொறும்**—இடப்பன்மைப்பொருளையும் காலப்பன்மைப் பொருளையும் தொழில்பயில்வுப் பொருளையும் தருமோரிடைச்சொல். (உ-ம்.) "இடந்தொறுஞ்செறியேனற்புனமெலாம்" (கந்தபு. வள். உஎ.) [இடம்.] ஏனையன இலக்கணச்சுருக்கத்திற்காண்க.

**தொறுவர்** — இடையர். (உ-ம்.) "திளைபடு துளைவழிவிரல்விடுதொறுவர்கள்கீதக்குழலொலியும்" (திருப்போரூர். சிறுபறை. ௭.)

**தொறுவன்**—இடையன். (உ-ம்.) "தொறுவனைப்போனின்றுகேள்" (ஒழிவி. சத்தி. எ.)

**தொறுவி**—இடைச்சி. (சூ. நிக. உ: ௭0.)

**தொறுவியர்**—இடைச்சியர்.

**தொறுவு** — அடிமை. (பிங்கல. அஎச.) (உகரம் சாரியை.)

**தொன்மரம்**—ஆலமரம். (உ-ம்.) "விருப்பினனைப்பிடித்தேறுதொன்மரத்துச்சியினேற்றினான்" (உபதேச. அயமுகி. ௬௯.)

**தொன்மை**—1. பழமை. (உ-ம்.) "தொன்மையநாமம்பெற்றது" (கோயிற்பு. நடராச. சஉ.)

**தொன்மைக்காட்சியநுமானம்**—பூர்வகாட்சியநுமானம், ஓரளவை; அஃது: ஒருபூவைக்காணுதிருக்க வதன்மணத்தால் இன்னபூவென்றறிதல். (சி. சி. அளவை. கஉ. உரை.)

**தோன்று**—1. ஊழ். (உ-ம்.) "தொன்றுசுண்ணத்திற்றோன்றியவேறுபாடு" ஆகுபெயர். (சிந்தா. குணமாலை. ருக.) 2. பழமை. (உ-ம்.) "தொன்றுமொழிந்துதொழில்கேட்ப" (மதுரை. ௬௨௪.)

**தோன்னலம்** — இயற்கைநலம். (உ-ம்.) "தொன்னலந்தொலைபீங்கியாந்துயருழப்பத்துறந்துள்ளார்" (கலி. ௧௬.)

**தோன்னீர்**—கடல். (பிங்கல. ருஅ௪.)

**தோன்னூல்விளக்கம்**—ஓரிலக்கணநூல்.

**தோன்னை** — இலைமுதலியவற்றாற்செய்த பாத்திரம். (உ-ம்.) "தொன்னையாலுண்டியாக்கினவற்கியாந்தூயோன்" (சிவரக. சதானந்த. உ.)

**தோனி**—1. ஒலி. (உ-ம்.) "துன்னருங்கானகத்திலொருமுனிவன்கூவுந்தொனியதனை வினவி" (சிவரக. சிவதன்மா. ௧௪.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

**தோனித்தல்**—ஒலித்தல். (வழக்.)

**தோனிப்பு**—ஒலி. (வழக்.)

**தோனு**—உக்காரம், உக்கிரசத்தம். (வழக்.)

## தோ.

**தோ**—நாயைக்கூப்பிடுமோரொலிக்குறிப்பு. (வழக்.)

**தோக்குளம்**—பருத்தி. (வைத்தியபரிபா.)

**தோக்கை**—கொய்சகம். (உ-ம்.) "தோக்கையந்துகிலினுடன் றூணைமூலைபொருதுசேர்ந்த" (சிந்தா. இலக்கணை. ௬௭௫.)

**தோகசம்**—பால். (வைத்தியபரிபா.)

**தோகம்**—சிறுமை. (சூ. நிக. அ: ௧௧.)

**தோகல்**—சோளைப்புல். (வைத்தியபரிபா.)

**தோகை** — 1. இறகு. (பிங்கல. உ௬௬௪.) 2. கொய்சகம். (உ-ம்.) "தூசுலாய்நெடுந்தோகையினல்ல ..." (சிந்தா. பதுமை. ௧௫௫.) 3. பெண். (உ-ம்.) "உள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள்" (இராமா. உலாவியல். ௧௬.) [ஆகுபெயர்.] 4. மயில். (உ-ம்.) "தோகைகளோகையோடு-மாடுதழைக்கி" (பாரத. திரௌபதி. ௧௫.) 5. மயிற்றோகை. (சூ. நிக. ௬: ௫௧.) 6. முன்றானை. (பிங்கல. ௧௨அ௬.) 7. வால். (உ-ம்.) "பொறியயப்புலியின்-றழைத்ததோகையால்" (சேதுபு. சங்கர. ௭.) 8. பிங்கலத்தில்-குதிரைவாலுக்குங் கூறுவர். உ௪௫௭.) 9. பெருங்கொடி. (சூ. நிக. ௭: ௭௪.)

**தோகைகுழல்** — முதியார்கூந்தல். (வைத்தியபரிபா.)

**தோகைமுகபூடணம்** — மஞ்சள்; அது: மஞ்சள், மரமஞ்சள், கஸ்தூரிமஞ்சள் என மூன்றுவகைப்படும். (உ-ம்.) "தோகைமுகபூடணம்மூன்று" (தைல. தைலவ. ௮௨.)

**தோகையர்**—பெண்கள். (உ-ம்.) "தருத்திநீரிருதோகையர்வீசினர்" (அரிச்ச. விவாக. ௨௩௬.)

**தோசம்**—குற்றம். (உ-ம்.) "தோசமறத்துதிகொண்மனத்தோதித்தொழுதிருந்தாள்" (சிந்தா. ௧௩௧. ௨௨அ.)

**தோசி**—தோஷமுள்ளவன். (வழக்.)

**தோசை**—அப்பவருக்கத்திலொன்று. (சூ. நிக. ௯: ௨௫.)

**தோட்கப்படாத**—துளைக்கப்படாத. (உ-ம்.) "கேள்வியால்தோட்கப்படாதசெவி" (வள். ௪௧அ.)

**தோட்கோப்பு** — கட்டுச்சோறு. (உ-ம்.) "தோட்கோப்புக்காலத்தாற்கொண்டுய்ம்மின்" (நாலடி. இளமைநிலையா. ௧௦.)

**தோட்ட**—1. துளைக்கப்பட்ட. (உ-ம்.) "தோட்டசெவியைநீயாகுவையாயெனில்" (மணிமே. உதையகுமரன் அம்பலம்புக்ககாதை. ௬௩.) 2. வாங்கிய. (திருக்கோ. அ. உரை.)

**தோட்டம்**—1. சொல்லை. (உ-ம்.) "உழுதுணைத்தோட்டம்புகுந்தான்" (சிவரக. சுத்தரிப்பூ. ௨௪.) 2. படப்பை. (பிங்கல. ௭௦௧.)

**தோட்டா**—வெடிமருந்துச்சுருள். [இந்துஸ்]

**தோட்டி**—1. அட்டமங்கலத்தொன்று. (பிங்கல. ௫௬௧.) 2. அழகு. (பிங்கல. ௧௩௬௪.) 3. கணிச்சி. (பிங்கல. ௧௫௭௧.) 4. கதவு. (உ-ம்.) "நாடுடைநல்லெயிலணங்குடைத் தோட்டி" (மதுரை. ௬௯௩.) 5. செங்காந்தள். 6. நெல்லி. 7. யானையின் அங்குசம். (உ-ம்.) "உரனென்னுந்தோட்டியானோரைந்துங்காப்பான்" (வள். ௨௪.) 8. வாயில். (பிங்கல. ௬௮௧.) 9. வெட்டியான். (வழக்.) (5, 6-வைத்தியபரிபா.) பரிபாடலில் தோட்டியென்பது ஆணையென்பர்.

**தோட்டிச்சி**—பறைச்சி. (வழக்.)

**தோட்டிமை** — 1. ஒற்றுமை. (சிந்தா.) 2. வெட்டியான்வேலை.)

**தோடகம்**—தாமரை. (வைத்தியபரிபா.)

**தோடத்திரயம்** — முப்பிணி; அவை: வாத பித்த சிலேட்டுமம்.

**தோடம்** — 1. குற்றம். 2. பாவம். (உ-ம்.) "சத்திரத்தானஞ்சதனுற்கொண்டதோடந்தனையடைந்து" (ஏகாதசி. காலநிர்ணய. ௬௬.)

**தோடமூர்ச்சிதம்**— மரகதரத்தினக்குற்றத்திலொன்று; அது: புல்லினிறம். (உ-ம்.) "புல்லினிறந்தோடமூர்ச்சிதம்" (திருவிளை. மாணிக்கம். ௬௮.)

**தோடலேசம்**—மரகத இரத்திநக்குற்றத்தி லொன்று; அது: தாமரைநிறம். (உ-ம்.) "முளரி தோடலேசம்" (திருவிளை. மாணிக்கம். சஅ.)

**தோடலேசாஞ்சிதம்** — மரகதரத்திநக் குற்றத்திலொன்று; அஃது: எலுமிச்சையிலை நிறம். (திருவிளை. மாணிக். சஅ.)

**தோடர**—கைவளை. (வழக்.)

**தோடாபவாதம்** — வழுக்காத்தல். (உ-ம்.) "தோடாபவாதம்வழுமைப்பே" (பி-வி. சச.)

**தோடாழ்குளம்**—கையைமேலேகூப்பி முழுகி நீர்நிலைகாட்டுங்காலத்துக் கையமிழ்ந்துங் குளம். (உ-ம்.) "தோடாழ்குளத்தகோடுகாத்திருக்கும்" (பெரும்பா. உள௩)

**தோடி**—ஓர்ராகம். (சிலப். வேனிற். ௩௫. உரை.)

**தோடு**-1. ஓலை. (உ-ம்.) "இரும்பனம்போந்தைத்தோடும்" (பொருந. கசங.) 2 காதணி. (உ-ம்.)"தோடுடையசெவியன்" (தேவார.பிரமபுர. க. சம்பந்த.) 3. கூட்டம், தொகுதி.(உ-ம்.) "பாடுகளமகளிருந்தோடுகொண்மருங்கில்"(சிலப். கடலாடு. கருஅ.) 4. பழத்தின்றோலி 5. பனைமடல். (சிந்தா) 6. பூவிதழ். (உ-ம்.) "பொன்னந்-தோட்டலர்தாமரைமுளைத்த" (திருவிளை. தலவிசேட. ச.) 7. வளையம்.

**தோடை**-1. ஆடாதோடை. (வைத்தியபரிபா.) 2. ஒருமரம்; அது: கச்சற்றோடை, தேன்றோடை, புளித்தோடையெனப் பலவகைப்படும். 3. சலாபக்குளியிலோர்குழூஉக்குறி.

**தோடயம்**—நாடகச்சிறப்புப்பாயிரக்கவி.

**தோண்டல்**-1. அகழ்தல். (பிங்கல.உகருரு.) 2. முகத்தல். (பிங்கல. உகசசு.) 3. முதலை. (வைத்தியபரிபா.)

**தோண்டாது**—பறியாமல். (புறநானூறு.)

**தோண்டி**—1. கரந்தை. (வைத்தியபரிபா.) 2. தண்ணீரிறைக்குஞ் சிறுபாத்திரம். 3 முகந்துகொண்டு. 4. வறட்சுண்டி.(வைத்தியபரிபா.)

**தோண்டுதல்** — 1. அகழ்தல். (சூ. நிக. கூ: உசு.) 2. முகத்தல். (உ-ம்.) "தோண்டல்பார் இரண்டுமொன்றே"

**தோண்மகரம்**—ஓரணி. (சிந்தா.)

**தோண்மேல்** — பிடரி, நிகலம். (பிங்கல. க0உள.)

**தோணுழகம்**—சூழ்கழியிருக்கை. (பிங்கல. ருகக.)

**தோணி** — 1. அம்பு. 2. இரேவதிநாள். 3. சிறுவழுதுணை. (தைலவ.) 4. சேறு. (சூ. நிக. ரு: உஅ.) 5. மதிலுறுப்பு. 6. மரக்கலம். (உ-ம்.) "புனலின்வீழ்ந்தவர்க்குத்தோணியாய்"(சிவரக. கணபதிவந்தனை. கக.) 6. மரக்கலத்தினமாகத் திமில் என்றுங்கூறுவர். (சூ. நிக. எ: ருஉ.) 1, 2, 5, 6-பிங்கல. ௩சுகச.)

**தோணிபுரம்**—சீகாழி. (உ-ம்.) "தோணி புரத்திறையவனுர்சொன்ன"(திருவாவடு. கோவை. கரு௩.)

**தோணியோகம்**—பஞ்சமாதிபதி மறைந்து குடும்பத்தானத்தில் லாபாதிபதி சந்திரனைக் கூடிநிற்க வரும்யோகம். (சோதிடக்கடல்.)

**தோணோக்கம்** — மகளிர் விளையாட்டினொன்று. (உ-ம்.) "கூத்தாவுன்சேவடிக்கேகூடும் வண்ணந்தோணோக்கம்" (திருவாச.திருத்தோணோ. க.)

**தோத்திரம்**—1. துதி. (உ-ம்.) "தோத்திரமொழிவோர்மாதர்தூதரென்றிவரைச் சொல்லில்" (பாரத. கிருட்டிண. கள௩.) 2. தொட்டி பாஷாணம்.

**தோத்திரித்தல்**—துதித்தல்.

**தோதகத்தி**—1. நூக்கமரம்.(வைத்தியபரிபா) 2. மரியாதையற்றவள். (வழக்.)

**தோதகம்**—1. மரியாதையின்மை. (வழக்.) 2. வஞ்சகம். (உ-ம்.) "சிந்தனைசிறிதின்றித்-தோதகத்துடனென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான்" (பாரத.சூது.சுள.) 3. வருத்தம்.(உ-ம்.)"தோதகமாக்கெவ்குஞ்சுண்ணமேற்சொரிந்து" (சிந்தா. கோவிந்தை. ருரு.)

**தோதகன்**—வஞ்சகன். (வழக்.)

**தோதகி**-1. சவுட்டுமண். (வைத்தியபரிபா.) 2. வஞ்சகி. (வழக்.)

**தோதிப்பிரியம்** — இலவங்கம். (வைத்தியபரிபா.)

**தோதிபேலா**—பேராமுட்டி.(வைத்தியபரிபா.)

**தோப்பு** — (செய்குன்றுசேர்ந்த) சோலை. (பிங்கல. உஅசச.)

**தோப்புக்கண்டம்** — இருகைமாறிச் செவியைப்பிடித் திருகான்முடிக்கியிருந்திருந் தெழும்பல். பள்ளிக்கூடங்களிலே சிறுவரைத்தண்டிக்குமொருசிறு தண்டனை. (வழக்.)

**தோம்**—குற்றம்.(உ-ம்.)"தோமிலாமூன்றுநா லுந்துவமெனவுதித்தவன்றே"(சூ. நிக. பாயிர.)

**தோமரம்** — 1. இருப்புலக்கை. (உ-ம்.) "ஞாலமெலாம்பொருதோமரம்வாங்கின" (பாரத. கிருட்டிண. உசு.) 2. எறிபடை. (உ-ம்.) "இலை"பார். 3. கைவேல். (பிங்கல. கருக0.) 4. தண்டாயுதம். (உ-ம்.) "தோமரவலத்தர்" (பதிற்று. ருச.) 5. பெருஞ்சவளம். (பிங்கல. கருஅ௩.)

**தோய்**-1.ஒருவமவாசகம்.(உ-ம்.)"பரந்திடன் கொடுக்கும்விசும்புதோயுள்ளமொடு" (மலைபடு.

௫௩அ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "நிலனண்டந்தோயுடலினன்" (திருவிளை.நாக. அ.)

**தோய்ச்சல்**—தோய்வு.

**தோய்த்தல்**—1. ஆயுதங்களைக்காய்ச்சிநனைத்தல். (ஓர் குழூக்குறி.) 2. துவைத்தல். (வழக்.)

**தோய்தல்** — 1. அகப்பட்டுக்கொள்ளல். 2. அணிதல். (உ-ம்.) "ஐயரிபரந்துமைதோய்ந்தம் பலைத்திகழும்வேற்கட்-டையல்" (நைடத. சுயம் வர. ௧௪.) 3. இரும்பைக்காய்ச்சிநனைத்தல். 4. உறைதல். 5. கலங்கல். 6. கலத்தல். (பிங்கல. ௧௩௭௧.) 7. குறிக்கப்படல். 8. தீண்டுதல். (திருக்கோ.௩.உரை.) 9. துவைச்சலிடல். 10 நனைத்தல். 11. ஸ்நாநஞ்செய்தல், குளித்தல். (பிங்கல. ௧௧௩௨.) 12. நிலத்திற்படிதல். (உ-ம்.) "அடியிணைபடியிற்றோயத்-திருவிங்குவருவாள் கொல்லோ" (இராமா. சூர்ப்ப. ௫௩.) 13. புணரல். (உ-ம்.) "பொருட்பெண்டிர்த்தோய்தல்" (திரிகடு. ௩௩.) 14. பொருந்துதல். (புறநானூறு.) 15. முகத்தல். (உ-ம்.) "கருங்கலந்தோய் விலாக்காமர்பூந்துறை." (சிந்தா. நாமக. ௩௮.) உதாரணங்காட்டாதவை வழக்கிலறிக.

**தோய்ந்த**—செறிந்த. (சிந்தா.)

**தோய்ப்பு**—தோய்த்தல்.

**தோய்பிழி**—செறிந்தமது. (சிந்தா.)

**தோய்வு**—1. கலப்பு. 2. சார்பு. 3. தோய்தல்.

**தோயசம்**—தாமரை. தோயம்-நீர். சம்-உற்பத்தி.

**தோயதிப்பிரியம்**—இலுவங்கம். (வைத்திய பரிபா.)

**தோயபாணம்**—பொடுதலை. (உ-ம்.) "தோயபாணமிவ்வேழிரதத்தொ" (தைல.தைலவ. ௩௩)

**தோயம்**—1. சமுத்திரம். (உ-ம்) "ஆடற்சூர்கெட்டோடத்தோயத்தாரைச்சீறி" (திருப்பு. ௩௫௩.) 2. சலம். (உ-ம்.) "துரிசெற்றுங்கம் பைநதிதோயத்திருடொறுமுப்போதுந் தோய்ந்து" (அருணகிரிபு. அருந்தவ. ௭௪.)

**தோயமாபுரம்**— நிவாதகவசரெனு மவுணரது நகரம். (உ-ம்.) "செம்பொற்புரிசைசூழ்-தோயமாபுரந்தன்னிற்றலைதந்த" (பாரத. நிவாத. ௪௪.)

**தோயல்**—1. ஆயுதங்களைக்காய்ச்சித்தோய்த்தல். 2. கலத்தல். 3. குளித்தல். 4. தயிர். (உ-ம்.) "சுண்டர்தோயலைவாரி" (அரிச்ச. நாட்டு. ௨௦.) 5. துவையல். (வழக்.)

**தோயி**—ஒரு நதி. (வி-ணி)

**தோரணகம்பம்** — வெளிவாய்தற் றம்பம். (உ-ம்.) "தோரணகம்பத்தெஞ்ஞான்றும்-வீற்றிருக்கும்பெருமானை" (தணிகை. காப்பு. ௨.)

**தோரணம்** — 1. தோரணங்கட்டுங்கம்பம். (இராமா. சுந்தரகா. சம்புமாலிவதை. ௧௬.) 2. மகரிகை. (உ-ம்.) "தேசுபெறுவாசலுறுதீபநிரை தோரணமுடுத்திரடனில்" (சிவரக. சிலாதரர். ௪.)

**தோரணி**— } ஒழுங்கு. (வழக்.)
**தோரணை**—

**தோரியமடந்தையர்**—ஆடிமுதிர்ந்த பெண்கள். (சிலப். அரங். ௧௩௪. உரை.)

**தோரை**—1. குளநெல். (உ-ம்.) "நீர்விளைகேழலுந்தோரையும்" (சிந்தா. கேமசரி. ௧௧.) 2. கையிறை. (சூ. நிக. ௧௧: ரகரவெ. ௧௩.) 3. பீலிக்குடை. (உ-ம்.) "போர்தருசாமரைதோரைகணீள்குடைபொற்பீடம்" (கோயிற்பு.திருவிழா.௧௧.) 4. மணிக்கோவைக்குஞ்சம். (உ-ம்.) "தோரைப்பெருங்குடைமிடைந்து செல்ல" (பெரியபு. தடுத்தா. ௨௬.) 5. மூங்கில். (உ-ம்.) "அவற்பதங்கொண்டனவம்பொதித்தோரை" (மலைபடு. ௧௨௧.) 6. மூங்கிலரிசி. (பிங்கல. ௨௭௬௪.)

**தோல்**—1. அபசயம், தோல்வி. 2. உடம்பு. (உ-ம்.)"தோல்வற்றிச்சாயினும்" (திரிகடு.௨௭.) 3. ஒருவகைவனப்பு; அது: விழுமியபொருளைத்தரும் மெல்லென்றசொல். (உ-ம்.) "தொல்வரவுந்தோலுங்கெடுக்கும்" (வள்.௪௦௪௬.) 4. கேடகம், தோற்பரிசை. (உ-ம்.) "அல்லிருள்வட்டத்தோல்" (திருவிளை.தண்ணீர்.௨௧.) 5. சருமம். (உ-ம்.) "ஈர்த்ததோலிணையீர்த்தலும்" (கந்தபு. ததீசி உத்தர. ௧௪௭.) 6. துருத்தி. (உ-ம்.) "மென்றோன்மதியுலைக்கொல்லன்" (பெரும்பா. ௨௦௫.) 7. தெரிநிலைவினைப்பகுதி. 8. பக்கரை, குதிரைக்கல்லணை. (உ-ம்.) "தோறுமிப்பு-வைந்நுனைப்பகழிமூழ்கலிற்செவிசாய்த்-தண்ணுதயங்குமாசிந்தித்தும்" (நல்லை.௭௨.) 9. மூங்கில். (வைத்தியபரிபா.) 10. யானை.(உ-ம். "தேர்கள் தோலரிபரிகள்" (திருப்பு. ௨௨௦.) 11. விதையின்மேற்றோல், மரப்பட்டைக்குங்கூறுவர்.

**தோல்வி**—தோற்றல். (பிங்கல. ௩௮௩௪.)

**தோல்வித்தாநம்** —யாதேனுமொருவிஷயத்திலே ஒருவர்கொள்கைக்கு மற்றொருவர்கொள்கை மாறுபட்டுழி மெய்யுணர்வுகைவருதல் காரணமாக நியாயசபையிலேவாதியும் பிரதிவாதியுமாகிநின்று பிரமாணஙிகளோடும் வாதிக்குந்தருக்கவாதத்திலே தமொறிக் கூறுதலினாலாவது, வேறொன்றாகக்கூறுதலினாலாவது ஒருவர் தோல்விக்கிடனாதல்; அது: மயங்கப்பேசுதலும் வாளாவிருத்தலுமென்று இருவகைப்பட்டு; தானெடுத்துக்கொண்ட மேற்கோளை சாதிக்கமாட்டாமல் அதற்குக்கேடுவரப்பேசுதலும்,

பிறிதொரு மேற்கோளைக்கூறுதலும், மேற்கோளுக்கு மறுதலைப்படப்பேசுதலும், மேற்கோளை விட்டுவிடுதலும், தான்கூறிய எதுவுக்குக் குற்றம்வந்துழி வேறோராற்றான் எதுக்கூறுதலும், தனக்குவருந்தோல்வியைப் பிறிதொன்றுபேசி மறைத்தலும், பயனுபடாதன பேசுதலும், பொருளினிது விளங்காதசொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதலும், அவாய்நிலை தகுதி யண்மையில்லனவாப் பேசுதலும், மேற்கோண்முதலியவைவந்நிலையும் முறைபிறழப்பேசுதலும், அவற்றுட்சில குறையப்பேசுதலும், ஒன்றற்குப்பலகூறுதலும், சொல்லையிரட்டித்துச் சொல்லுதலும், பொருளையிரட்டித்துச்சொல்லுதலும், பிறன்கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமையும், பிறன்கூறியபொருளையறிந்தும் அறியான்போன்று வினுதலும், விடைசொல்லத்தெரியாது வேறொருகருத்துடையன்போன் றிருத்தலும், வாதத்தைவிட்டுப் பிறிதொன்றனைச்சொல்லிப் பொழுதுபோக்கலும், சுபக்கத்துக்குச்சொல்லிய குற்றத்தைப் பரிகரியாதுடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம்பேசுதலும், தோல்வித்தானமெய்தியோனைத் தோல்வித்தானமெய்தினுனென்றறிந்து கூறாதிருத்தலும், தோல்வித்தானமெய்தாதானையெய்தினுனென்று கூறுதலும், தன் சித்தாந்தத்திற்கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ்சாதித்தலும் என விரியான் இருபத்திரண்டாம். (சி. சி. அளவை. ௧௩.)

**தோல்விலைஞர்**—பரம்பர். (பிங்கல. ௮௧௦.)

**தோல்வு**—தோல்வி. (பிங்கல. ௧௮௩௪.)

**தோலடிப்பறவை**—தோற்காற்பட்சி; அது: தாராமுதலியன.

**தோலம்**—இலவு. (வைத்தியபரிபா.)

**தோலா**—1. தோல்வியடையாத. (உ-ம்.) "தோலாக்கரிவென்றதற்கும் (திருக்கோ. ௧௧௦.) 2. ரூபாவிடை. [இந்துஸ்.]

**தோலாமை** — கெடாமை, தோல்வியில்லாமை.

**தோலிகை**—காது. (வைத்தியபரிபா.)

**தோழ்**—தொழுவம். (சிந்தா.)

**தோழநெறி**—சகமார்க்கம். (சி. சி. அ: ௧௮. சிவாக்.)

**தோழம்**—தொழுவம். (உ-ம்.)"தன்றிரிநிறைந் தளகுழலுடன்பலதோழங்கள். (பெரியபு. ஆனாய. ௧௧.)

**தோழமை**—1. நட்பு. (உ-ம்.) "தொடர்ந்த தோழமை-நல்லியலருங்கடன் கழித்தநம்பியை" (இராமா. சடாயு உயிர்நீத்த. ௧௩௩.) 2. நாலாமிடம். (உ-ம்.) "உதயந்தனமுடனேபிறப்பொண்டோழமைமகவு-சிதையும்பகை" (விதான. மரபியல். ௮.)

**தோழன்**—1. நண்பன். (உ-ம்.) "யானேதந்தைதோழன் இவரென்மகளிர்" (புறநா. ௨௦௧.) 2. பாங்கன். (பிங்கல. ௯௨௭.)

**தோழன்முன்னிலை**—எடா.(பிங்கல.௯௨௪.)

**தோழி**—சிநேகிதி, பாங்கி. (உ-ம்.) "என்றோழிபரிசேலோரெம்பாவாய்" (திருவாச. திருவெ. ௧.) இச்செய்யுளிலே ஏல், ஓர்-என்பன இடைச்சொற்கள்.

**தோழிமுன்னிலை**—ஏடி. (பிங்கல. ௯௩௪.)

**தோள்**—1. கை. (உ-ம்.) "தோளுந்-றொர் தெய்வந்துணை பாய்த்துயர்தீர்த்தவாறும்" (சிந்தா. பதிக. ௫) 2. தோண்டுதல், முதனிலைத் தொழிற்பெயர். 3. புயம். (உ-ம்.)"குன்றனருவத்தோளார்" (பாரத. பதினோரா. ௩.)

**தோள்கொடுத்தல்**—உதவுதல். (வழக்.)

**தோள்முத்தம்**—ஓரணி. (சிந்தா.)

**தோள்வளை**—வாகுவலயம்.(உ-ம்.)"இம்பரிப் பெரியதோள்வளையொடுங்கிளரவே" (இராமா. விராதன்வதை. ௧௨.)

**தோளணி**—1. கேயூரம். (பிங்கல. ௧௧௭௨.) 2. வாகுவலயம்.

**தோளல்**—துளைவிடல். (உ-ம்.) "தோளர் மரச்செவித்தூராவயிற்றுச்சுமடர்க்கெல்லாம்" (திருநூற். ௬௦.)

**தோளா**—துளைக்கப்படாத. (உ-ம்.) "தோளாமுத்து" (திருவாச. புணர்ச். ௧.)

**தோளாமணி**—துளைக்கப்படாத மாணிக்கம். (உ-ம்.) "தோளாமணியேபிணையேபலசொல்லியென்னை" (திருக்கோ. ௭௭.)

**தோளி** — 1. அரக்கு. 2. அவுரி. (1, 2-வைத்தியபரிபா.)

**தோளுதல்**—துளைத்தல்.

**தோளோச்சி**—தோளையெடுத்து. (உ-ம்.) "சிலைநவிலெறுழ்த்தோளோச்சி" (பெரும்பா. ௧௭௫.)

**தோற்க** — 1. இழக்க. 2. மெலிய. (1, 2-ஐங்குறு.)

**தோற்கடது**—தோற்கேடகம். (பதிற்று. ௭௫. உரை.)

**தோற்கடித்தல்**— தோற்றோடப்பண்ணல். [தோற்க; அடித்தல்.]

**தோற்கருவி**—தோலான்மூடப்பட்ட வாச்சியம்; இது: ஐவகை வாச்சியத்தொன்று.

**தோற்கருவியாளர்**-இயவர்.(பிங்கல.௭௯௩.)

**தோற்பரம்**-கிடுகு, கேடகம்.(உ-ம்.) "போர்மயிற்கேடகம்புளகத்தோற்பரம்" (சிந்தா. இலணை. ௧௧௭.)

**தோற்பலகை** — தோற்பரம். (பிங்கல. ௧௬௧௧.)

**தோற்பாம்**—சருமம், தோற்றவிசு. (சூ.நிக. ௭: ௫௫.)

**தோற்பாவை** — தோலினாற்செய்தபாவை. (உ-ம்.) "தோற்பாவைக்கூத்தும்" (சி.சி.௪:௨௪.)

**தோற்பாவைக்கூத்து** — அறுவகைவிநோதக் கூத்தினுளொன்று; அது: தோலாற்பாவை செய்தாட்டுவது. (உ-ம்.) "தோற்பாவைக்கூத்துந்தொல்லைமரப்பாவையியக்கமும்" (சி. சி. ௪: ௨௪.)

**தோற்பு**-தோல்.வி. [பு-ஒருதொழிற்பெயர் விகுதி.]

**தோற்பை**—உடம்பு.(உ-ம்.)"தோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டும்" (நாலடி. ௩: ௩.)

**தோற்றம்**—1. உதயம். 2. உயர்ச்சி. (வள். ௧௨௪.) 3. உற்பத்தி. (உ-ம்.)"தோற்றமுநிலையுமீறுமாயையின்றொழிலதென்றே" (சி.சி.௧:௧௪.) 4. எண்ணம். 5. காட்சி. 6. சொன்மாலை. (பிங்கல. ௨௦௫௪.) 7. பிரகாசங் (வெளிப்படல் என்பர் பரிபாடலில்.) 8. புகழ். 9. வலிமை. 10. விட்சேபசத்தி. (உ-ம்.)"விவிதமாங்தோற்றமென்றும்" (கைவல். தத்துவ. ௩௫.) (5, 9-பிங்கல. ௩௬௩௭.)

**தோற்றரவு**—தோற்றுதல். (உ-ம்.) "கீழாலவத்தையைச்சொல்லிமத்தியாலவத்தையைச் சொல்லாநின்று சுத்தாவத்தைத்தோற்றரவுமுரைக்கின்றார்" (சி. சி. ௪: ௩௫. ஞானப்.) அரவு தொழிற்பெயர்விகுதி.

**தோற்றல்**—1. தோல்வி. (பிங்கல. ௪௮௩௪.) 2. தோன்றல். 3. பிறத்தல். (2, 3-சூ. நிக. ௧௧: தகரவெ. ௫.)

**தோற்றன்**—தூரிசி. (வைத்தியபரிபா.)

**தோற்றமை**—வெளிப்படாமை.

**தோற்றுதல்**–1. உண்டாதல். 2. உதித்தல். 3. பிறப்பித்தல். (பிங்கல. ௪௮௨௨.)

**தோற்றுநந்தி**—உடம்பு. (சிந்தா.)

**தோற்றுவாய்** — தோன்றச்செய்யுமிடம், ஆரம்பம். (உ-ம்.) "மேல்–தாங்காமைகல்வியெனத்தோற்றுவாய்செய்தமாட்சியைவிரித்துக்கூறுகின்றமையின்" (வள். ௪௦. அதி.)

**தோற்றுவித்தல்** — 1. உண்டாக்கல். 2. பிறப்பித்தல்.

**தோற்றுன்னர்**—செம்மார். (சூ.நிக.௨: ௩௩.)

**தோன்றல்** — 1. உயர்ச்சி. (உ-ம்.) "வரைகண்டன்னதோன்றல்" (நெடுநல். ௬௦-௮.) 2. எப்பொருட்குந்தலைவன். (பிங்கல. ௮௩௮.) 3. தலைமை. (உ-ம்.) "பூவினிற்பிறந்ததோன்றற்புண்ணியனனையரம்பி" (சிந்தா. நாமக.௨௮௭.) 4. தலைவன். (பிங்கல. ௩௬௩௮.) (புறநானூறு) 5. தோற்றம். (உ-ம்.) "வரைமருளுநுயர்தோன்றல்" (மதுரை. ௪௬.) 6. புணர்ச்சிவிகாரமூன்றனுளொன்று; அது: முன்னில்லாத எழுத்தாயினுஞ் சாரியையாயினுந்தோன்றுதல். (உ-ம்.) "தோன்றறிரிதல்கெடுதல்விகாரம்" (நன்.௧௫௪.) 7. பெருமையிற்சிறந்தோன். (சூ. நிக. ௨: ௩.) 8. மகன். (பிங்கல. ௩௨௦.) 9. முல்லைநிலத்தலைவன். (உ-ம்.) "நெடுமால்குறும்பொறைநாடன்றோன்றல்" (இலக்கணவி. ௩௦.) 10. மூத்தோன். (பிங்கல.௩௪௦.) 11. விளக்கம். (சிந்தா.) 12. வெளியாதல்.

**தோன்றல்விகாரம்** —எழுத்தாயினுஞ் சாரியையாயினுந்தோன்றல். (நன்னூ. உயிரீற்று. ௪)

**தோன்றலர்** — தோற்றத்தையுடையவர். (உ-ம்.) "மின்பூத்தன்னதோன்றலர்" (திருமுரு. ௧௬௧.)

**தோன்றலியாது** — தோன்றாமல். (உ-ம்.) "தோன்றலியாதுதம்பழியூர்குனர்" (பதிற்று. ௭௧.)

**தோன்றலை** — தோன்றாநிலையுடையாய். (உ-ம்.) "புத்தசுற்றமொடுபொலிந்துதோன்றலை" (பதிற்று. ௩௦.)

**தோன்றாத்துணை**—அந்தரங்கத்துணை. (உ-ம்.) "தோன்றாத்துணையாயிருந்தனன்" (திருப்பாதிரிப்புலியூர்த்தேவாரம். திருநாவுக்.)

**தோன்றாவெழுவாய்**-குறிப்பாய்நிற்குமெழுவாய்.

**தோன்றி**—1. செங்காந்தள். (உ-ம்.) "தேம்படுகாயாமலர்த்தோன்றியொடு" (ஐங்குறு. ௩௨௦.) 2. தோன்றிப்பூ. (உ-ம்.) "சுடர்ப்பூந்தோன்றி" (குறிஞ்சி. ௩௦.)

**தோன்றுதல்**—1. உதித்தல். 2. பிறத்தல். 3. விளங்குதல். 4. வெளிப்படல். (1, 2, 3, 4-வழக்.)

## தௌ.

**தௌத்தியம்**–1. தூத்தியம். 2. தூதனிலைமை.

**தௌட்டிரிகன்** — சதஉருத்திரரில் நிருதிதிக்கிலிருக்குந்தசருத்திரரிலொருவன். (வி-ணி. ௨௭௦.)

**தௌதிகம்**—முத்து. (வைத்தியபரிபா.)

**தௌமியன்**—பாண்டவர் புரோகிதன். (அபிதா.)

**தௌர்வாசம்** — தூர்வாசப்புரோக்தமாகிய ஒரு புராணம். (அபிதா.)

**தௌரிதகம்**-குதிரையின் மெல்லியநடை. (சிலப்.)

தௌரிதம்—குதிரைநடை. (சிந்தா.)
தௌவல்—1. கெடுதல். 2. தாவுதல்.
தௌவாரிகன்—துவாரபாலகன். (கூர்மபு. திருக்கல். க. உரை.)
ம்தௌவுதல்—1. கெடுதல். 2. தத்துதல்.
தௌவை—1. அக்காள். (பிங்கல. கசக௩.) 2. தாய். (சூ. நிக. கக: வகரவெ. கச.) 3. மூதேவி. (பிங்கல. கஅள.) [தவ்வை எனவும் வரும்.]

## ந.

ந—1. ஓர் இடைநிலை. (உ-ம்.) "வருநர்" 2. இன்மை எதிர்மறைபிறிது என்னும் பொருள்களிலும், நன்மைப்பொருளிலும், ஒப்புப்பொருளிலும் வருமோருபசர்க்கம். [நக்கீரர் என்பதில் நகரம் சிறப்புப்பொருளில்வந்தது.] (சிந்தா.) 3. பஞ்சாட்சரத்தினுளெழுத்தாகிய நகாரத்தினாற் குறிக்கப்படும் திரோதானசத்தி. (உ-ம்.) "நமமேலொழித்தருளோங்கும்மீள" (சிவப். க௦: கஉ. உரை.)
நக்க — 1. கெடுத்த. (சிந்தா.) 2. சுடுக. (புறநா.)
நக்கத்திரசீவகன்—அரசமகளிர் பிராமணனைச் சோரத்தாற்கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "மன்னவர்மகளிர்சோரமறையவர்க்கீன்றசேய்க்கு—கன்னிலத்தவர்சொல்வார்நக்கத்திரசீவகப்பேர்" (சூத. சிவமான். கஉ: க.)
நக்கல்—1. கெடுத்தல். (உ-ம்.) "பானக்கதீஞ்சொற்பவளம்புரைபாவை" (சிந்தா. கநக. ௬க௦.) 2. சிரித்தல். (உ-ம்.) "நன்றுநன்றென்னநக்கு" (நைடத. போர். சு.) 3. தீண்டல். (உ-ம்.) "வானக்கினின்று" (சிந்தா. கநக. ௬க௦.) 4. நக்குதல்; இது: நால்வகையுணவினொன்று. (சூ. நிக. கஉ: கக.) 5. மலர்தல். (திருக்கோ. கரு௬. உரை.)
நக்கவரி—வறட்சுண்டி. (வைத்தியபரிபா.)
நக்கவாரி — குள்ளமானது, இது ஒரு தென்னை மூன்றுவருடத்திலே காயுண்டாவது.
நக்கநம்—நிருவாணம்.
நக்கன்—1. அருகன். (சூ. நிக. கக: கஉ.) 2. சிவன். (உ-ம்.) "நக்கனுந்தனையன்னார்கண்ணிடைக்கண்டு" (திருவிளை. வளைய. கக.) 3. நிருவாணி. (உ-ம்.) "நராரியினுரிவைநீத்துநக்கனேயாகி" (கந்தபு. ததீசி. யுத். ௬எ.)
நக்காரி—வறட்சுண்டி. (வைத்தியபரிபா.)
நக்கி—1. தீண்டி. (சிந்தா.) 2. நக்குவோன்.
நக்கிதம்—இரண்டு. (வைத்தியபரிபா.)
நக்கிநம்—நிருவாணம். (உ-ம்.) "மூலமுதிரநாணமுதிர்ந்தடங்கிமுடிக்- கலவியிலேநக்கிநத்தைக்காட்டல்" (ஒழிவிலொ. சத்திநிபாதம். ச.)
நக்கிநன்—நிருவாணமுடையோன். (சைவச. க௦௫)
நக்கினை—ஆடையில்லாதவள்.
நக்கிப்பூ-ஓர் பூவென்ப. (வைத்தியபரிபா.)
நக்கிரை— } தேட்கொடுக்கி. (வைத்தியபரிபா.)
நக்கிரா— }
நக்கீரன்—நற்கீரன். (திருவிளை. கீரனைக் கரையே. கக.) நகரம் சிறப்புப்பொருடந்தது.
நக்கு—1. நக்குதல். (உ-ம்.) "நக்குநாயினுங்கடையெனப்புகலுநான்மறையே" (திருநா. தேவாரம். பொ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பிணிவிட்டு. (பரிபாடல்.)
நக்குதல்—நக்கல். (வழக்.)
நக—மகிழுமாறு. (உ-ம்.) "பகச்சொலிக்கேளிர்ப்பிரிப்பர்நகச்சொல்லி" (வள். கஅஎ.)
நகச்சூற்று—நகக்கண்ணில்வருமொருநோய்.
நகசிரிதம்—குன்றி. (வைத்தியபரிபா.)
நகட்டுதல்—அரைத்தல். (வழக்.)
நகத்தயிர் — பூச்சருக்கரைக்கிழங்கு. (உ-ம்.) "நகத்தயிரனந்தைகுப்பி" (தைல. தைலவ. கஉ௫.)
நகத்துரோணம்—தும்பை. (வைத்தியபரிபா)
நகநோகரம்—மஞ்சிட்டி. (வைத்தியபரிபா.)
நகதிபீசம் புலிதொடக்கி. (வைத்தியபரிபா)
நகநோக்கி — வேலிப்பருத்தி. (வைத்தியபரிபா.)
நகம்—1. உகிர். (உ-ம்.) "வடுப்போனகந்தைமணிமூலைநின்குறைமற்றிலையே" (மறைசை. அக.) 2. (பரிமளமாகிய) நாகணம். (உ-ம்.) "கடிநகந்தேவதாபம்முதலிய விரைகளிட்டு" (தைல. தைலவ. சரு.) 3. தந்தரசம். (வைத்தியபரிபா.) 4. பூமி. (தைலவ.) 5. மரம். (சூ. நிக. கக: ககரவெ. ௬.) 6. மலை. (உ-ம்.) "அகனகத்தானத்தடிவீழ்ந்தலற" (ம-ரு. தி.)
நகர்—1. இடம். (சிந்தா.) 2. ஊர். (உ-ம்.) "களிமலைச்சிலம்பினன்னகர்வாழ்த்தி" (திருமுரு. உ௬அ.) 3. கோயில். (உ-ம்.) "கயிலையினடுவணுள்ளசடவுண்மாநகரிலெய்தி" (கந்தபு. பிரமயாகப். ச.) 4. தெரிநிலைவினைப் பகுதி. 5. மனைவி. (உ-ம்.) "விருந்தோம்பித்தன்னகர்விழையக்கூடி" (கலி. எ.) [ஆகுபெயர்.] 6 வீடு. (உ-ம்.) "அந்தணரருங்கலருங்கடிவியனகர்" (சிறுபா. கஅஎ.)
நகர்த்துதல்—நகரச்செய்தல். (வழக்.)
நகர்தல்—ஊர்தல், நகருதல். (வழக்.)
நகர்துரோணம்—தும்பை. (மலையக.)
நகர்ப்புறம்-புறநகர்-மருதம். (உ-ம்.) "நாளைவாவருதுநாமுநகர்ப்புறத்தொரு சாரென்றான்" (திருவிளை. அங்கம். கக.)

நகர்படுதிரவியம் — நகரிலுண்டாகுந் திரவியம்; அவை: அரசன், கண்ணாடி, பித்தன், மந்தி, யானையென்பன ஐந்து. (சூ.நிக.கஉ: சஎ.)

நகர்வு—நகர்தல். 2. தொழிற்பெயர்விகுதி.

நகரசம்—யானை. (வைத்தியபரிபா.)

நகரப்பட்டினி-ஒருவகைப்பட்டினி.(உ-ம்.) "மேவருடங்குயர்நகரப்பட்டினியும்பாரணமும் விதியினாற்றி" (சேதுபு. அகத்திய. கக)

நகரம்—1. இராசதானி. (சூ.நிக.ரு: கூகூ.) 2. ஊர். (சூ. நிக. ரு: கூரு.) 3. ஒரெழுத்து. 4. கோயில். (உ-ம்.) "கயங்கண்டன்னவயங்குடை நகரத்து" (மதுரை. சஅச.) 5. மருதநிலத்தூர். (சூ. நிக ரு: சo.)

நகரவியக்கி—இண்டு. (வைத்தியபரிபா.)

நகரவிரம்—மயில். (வைத்தியபரிபா.)

நகராணம்—விந்து. (வைத்தியபரிபா.)

நகரா—ஒரு பறை. (வழக்.)

நகராழுசி—ஈரல். (வைத்தியபரிபா.)

நகரி—1. பட்டினம். (சூ.நிக.கஉ:கூரு.) 2. வறட்சுண்டி. (வைத்தியபரிபா)

நகரிபகம்—காகம். (வைத்தியபரிபா.)

நகருதல்—நகர்தல். (வழக்.)

நகருடம்—மூக்கு. (வைத்தியபரிபா.)

நகரை—ஒருமீன்.(பரதர்வழக்குப்போலும்.)

நகரோளடதி - வாழை. (வைத்தியபரிபா.)

நகல் --மகிழ்தல். (வள். அகூo. உரை)

நகலம்-பிரதிட்டாகலையில் வாயுதத்துவத்தி லிருக்கும் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

நகவியாக்கிரம்—புலிதொடக்கி.(வைத்தியபரிபா.)

நகவுளி-ஒருளி.(கம்மியர்வழக்குப்போலும்.)

நகாஅர் —எயிறு. (உ-ம்.) "நகாஅரன்ன நளி நீர்முத்தம்" (சிறுபா. ருஎ.)

நகாஅல்—நகுவேன் றிலேன். (உ-ம்.) "நகாஅலெனவந்தமாறே" (புறநா. உருக.)

நகிர்—தேட்கொடுக்கி. (வைத்தியபரிபா.)

நகில்—நகிலம். (உ-ம்.) "கலங்குழைதரநகின் முகத்தினேவுண்டு" (இராமா. மிதிலை. சரு.)

நகிலம்—முலை. (உ-ம்.) "மெய்வியர்வடையவுநகிலம்விம்மவும்" (கந்தபு. வள்ளி கஉச.)

நகு—தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "நகுகதிர்பரப்புமச்சயிலம்" (தணிகை. புராண. உ.)

நகுகம்—சிரிப்பேம். (ஐங்குறுநூ.)

நகுடன்—அகத்தியமுநிவரர் சாபத்தாற் சிலகாட் பாம்பாயிருந்த ஒரு சந்திரகுலத்தரசன். (உ-ம்.) "நகுடநாமவேனராதிபன்" (பாரத. குருகுல. கச.)

நகுத்தம்—புன்குமரம். (வைத்தியபரிபா.)

நகுதக்கனர்—சிரிக்கத்தக்கார். (உ-ம்.) "நகுதக்கனரேநாடுமீக்கூறுனர்" (புறநா. எஉ.)

நகுநயமறைத்தல் — பொது மெய்ப்பாட்டிலொன்று.(உ-ம்.)"புகுமுகம்புரிநகுநயமறைத்தலாதியபொதுமெய்ப்பாடு" (கூர்மபு. கடவு. உ. உரை.)

நகும்—பாடாநிற்கும். (புறப்பொ.)

நகுலம்—கீரி. (உ-ம்.) "வெருவாகளையரவம் மதுநகுலத்தொடுவிரவும்" (அருணகிரி. அருந்தவ. கo.)

நகுலன்—பஞ்சபாண்டவர்களி லொருவன். (உ - ம்.) "சசிகுலநகுலனென்றுந்தம்பிசாதேவனென்றும்" (பாரத. சம்பவ. அஎ.)

நகுலி—பட்டுப்பருத்தி. (வைத்தியபரிபா.)

நகுலேட்டை—ஒருபூடு. (உ-ம்.) வந்துழிக் காண்க.

நகேசிறு—புல்லூரி. (வைத்தியபரிபா.)

நகை—1. ஆபரணம். (வழக்.) 2. இன்பம். (சூ. நிக. எ: கூஅ.) 3. எயிறு. (பிங்கல.கoசo.) 4. எள்ளற்பொருட்டானசிரிப்பு.(உ-ம்.)"நிறையினார்குணத்தோர்க்கெல்லாநகையினைநிறுத்துமன்றே" (சி. சி. பாயிர. ச.) நகை நான்குவிதமாம்—எள்ளலிளமைபேதைமை மடனென்றுள்ளப்பட்டநகைநான்கென்ப. (திருக்கோ. உஉ. உரை.) 5. சிரிப்பு. (உ-ம்.) "நகையாமென்றுரையாமால்" (கோயிற்பு.பாயிர. உஎ.) 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. பூமொட்டு. (வைத்தியபரிபா.) 8. மகிழ்ச்சிதோன்றக்கூறுமோரலங்காரம். (தண்டியல. சுகூ. உரை) 9. முத்தம். (சிந்தா.) 10. மலர். (பரிபாடல்.) 11. விளக்கம். (உ-ம்.) "நகைமலரிட்டரிச்சித்து" (திருவிளை. விருத்த. உச.) 12. விளையாட்டு. (உ-ம்.) "நகையுள்ளுமின்னாது" (வள். பண்புடைமை. ரு.)

நகைத்தல்—சிரித்தல். (வழக்.)

நகைத்திறச்சுவை — ஒருவகை விநோதக்கூத்து; அது: விதூடகக்கூத்து. (சிலப். அரங்கே. கஉ. உரை.)

நகைநோக்கம்-மஞ்சள். (வைத்தியபரிபா.)

நகைப்பு—சிரிப்பு. (வழக்.)

நகையாடல்—சிரித்தல். (உ-ம்.)"அதுபற்றி அவன்வெகுளாதுஇவரியல்பிதுவெனநகையாடியொழிந்துவிடும்" (சிவஞானபா. ரு.)

நகையால் — பகன்றைச்செடி. (வைத்தியபரிபா.)

நகைவர்—நட்பினர். (பதிற்றுப்.)

நகைவேளம்பர்—சாரமாணிகள், சிரிக்கும் பரியாசகருமாம். (சிந்தா.)

நங்கு-பரிகாசம்.(வழக்குமுண்டு.)[தெலுகு.)

நங்கூரம்—நங்கூரம். (கடலர் வழக்கு.)

நங்கூரம்—மரக்கலத்தைத்தரிப்பிக்கும் ஒரு கருவி. (வழக்.)

நங்கேந்தாகம்-அரிதாரம்.(வைத்தியபரிபா)

நங்கை—1. சிறியாணங்கை. 2. பெண்ணிற் சிறந்தாள். (உ-ம்.)"நங்கைமகிழ்ந்திட"(சிவரக. தேவி இமயம். ௪.) (சூ. நிக. உ: ருஎ.) 3. பெரியாணங்கை. (1, 3-வைத்தியபரிபா.)

நச்சம்பசிசை—நாவி. (வைத்தியபரிபா.)

நச்சப்பு—நஞ்சூட்டியபாணம்.

நச்சமனூர்—கடைச்சங்கப்புலவருளொருவர். (வள்-மாலை. ௬௫. மூகம்.)

நச்சறுப்பான் — கழுதைப்பாலை. ஓர் பூடு என்றூர் வைத்தியபரிபாடை அகராதியில்.

நச்சினார்க்கினியார் — தமிழுரையாசிரியர்களுள்ஒருவர்; இவர்: மதுரையிற் பிராமணகுலத்திற் பாரத்துவாசகோத்திரத்திற் பிறந்தவர் தொல்காப்பியத்திற்கும், பத்துப்பாட்டிற்கும், சீவகசிந்தாமணிக்கும், வேறுஞ் சிலவற்றிற்கும் இவராலுரைசெய்யப்பட்டுள்ளன.

நச்சிளி—சேவரகு. (வைத்தியப. சருப்பொ.)

நச்சினி—நாலாமாதம். (வைத்தியபரிபா )

நச்சு — 1. ஆசை. (சூ. நிக. அ: எரு.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நஞ்சு. (உ-ம்.) "நச்சுநீர்குடித்துயிர்நீத்தநால்வரில்" (பாரத. நச்சுப்பொய். ௬௦.)

நச்சுக்கத்தி — நஞ்சுபாய்ச்சியகத்தி. (திருவிளை. வாதவூரடிக, ருறு.)

நச்சுக்கொடி—கொப்பூழ்க்கொடி. (வைத்தியபரிபா.)

நச்சுத்தாநம்—(கொக்கோகம்.) அமுதநிலைக்கேழாமிடம். (உ-ம்) "அமுதநின்ற-சாருந்தானத்துக்கேழாந்தானத்திலொன்றுஞ்செய்யேல் என்பதாலறிக."

நச்சுதல்—விரும்பல். (உ-ம்.)"உம்பர்நாயகன் பதங்கணச்சி" (பாரத. அரிச்சுநன்றவநி. ௬உ.)

நச்சுப்பல்—நஞ்சுப்பல்; அவை: காளி, காளாத்திரி, யமன், யமதூதி என நால்வகைப்பல் பாம்புகளுக்குள்ளன (சித்தராரூடத்திலறிக.)

நச்சுப்பால்—கள்ளி. (வைத்தியபரிபா.)

நச்சுப்பொய்கை — நச்சுநீர்த் தடாகம். (உ-ம்) "நச்சுப்பொய்கைச்சருக்கம்" (பாரதம்.)

நச்சுமரம் — 1. எட்டி. (வைத்தியபரிபா.) 2. நஞ்சுள்ள மரம். (உ-ம்.) "நச்சுமரமானாலும் வைச்சவன்வெட்டுவானோ" (வழக்.)

நச்சுமனூர்—கடைச்சங்கப்புலவருளொருவர். (அபிதானசி.)

நச்சுவிறகு — நஞ்சுச்சார்முள்ள விறகு; அஃது: எருக்கு, கள்ளி, எட்டிமுதலியனவாம். (வைத்தியபரிபா.)

நச்சுறுவித்தல்—ஆசையுண்டாக்குதல்.

நச்செழுத்து — (இலக்கணம்.) செய்யுளில் முதற்சீருக்குந்தசாங்கத்தயலுக்கும்விலக்காயுள்ள எழுத்துக்கள்; அவை: யா, ரா, லா, யோ, ரோ, லோ, ய், ர், ல், ஃ. என்பனவும் இருவகை யளபெடையும் மகரக்குறுக்கமும் ஆய்தக் குறுக்கமுமாம். இதனைத் "தெரிந்தயரலமேற் சேர்ந்தவாவோவும், புரிந்தவற்றொற்றாய்தப் புள்ளி-விரிந்த. அளபெடைகான்மாத்திரையுமா மென்றறிந்தோர், உளவென்றார்நஞ்சென்றொழி" என்னும்வெண்பாப்பாட்டியல் முதல்மொழியியல் ௬-ஆம் செய்யுளிற்காண்க.

நச்செள்ளையார் — ஒரு புலமையர்; இவர்: பெண்பாலார். (சிந்தா.)

நச்சோலம்—நாவி. (வைத்தியபரிபா.)

நசலை — செம்மணியின் குற்றத்தொன்று. [தெலுகு.] திருவிளையாடற்புராணத்திலேயிதனைக் கூறவில்லை.

நசாரி—காஞ்சிரை. (வைத்தியபரிபா.)

நசித்தல்—அழித்தல். (வழக்.)

நசிதல்—அழிதல். (வழக்.)

நசிப்பு—அழிவு. (வழக்.)

நசியம் — மருந்து மூக்கிலிடுதல். (உ-ம்.) "நாசி — தனினசியம்புரிந்திடினேமீநசமுந்தலை நோயுந்தரியா" (தைல தைலவ. உ.)

நசியாரி—குப்பைமேனி. (வைத்தியபரிபா.)

நசியல்—நசிந்தது. (வழக்.)

நசிவு—கெடுகை. 2. தொழிற்பெயர்விகுதி.

நசுகது—1. நசித்தல். 2. தெரிநிலைவினைப் பகுதி.

நசுக்குணி — அவரைமுதலிய படர்கொடிகளிற் பற்றியிருக்கிற செந்துக்கள். (வழக்.)

நசுக்குதல்—நசியச்செய்தல்.

நசுங்கடித்தல்—நொறுக்கல் (வழக்.)

நசுங்கல் – நசுக்குப்படல். (வழக்.)

நசுங்குதல்—நசுங்கல். (வழக்.)

நசுநசுப்பு—ஈரம். (வழக்.)

நசுநசெனல்-ஈரங்கொண்டிருத்தல்.(வழக்.)

நசுவல்—லோபி. (வழக்.)

நசை—1. அன்பு. (உ-ம்.) "நண்பிலார்மாட்டு நசைக்கிழமைசெய்வானும்" (திரிகடு. ௬௪.) 2. ஆசை. (உ-ம்.) "நசைதரவந்தோர்நசைபிறக் கொழிய" (புறநா. ௧௫.)

நசைதுநர்—நண்பர். (வழக்.)

நசைதல்—1. அன்புறல். 2. விரும்பல்.

நசைநர்—1. சிநேகிதர். 2. விரும்பினோர்.

நசையுநர்—1. சிநேகிதர். 2. நச்சிவந்தவர். (உ-ம்.) "நசையுநர்க்கார்த்துமிசைபோழா" (திருமுரு. உஎ௦.)

நஞ்சம்—நஞ்சு. (உ-ம்.) "கறையிருணஞ்சம்" (திருவிளை. நாக. கஎ.)

நஞ்சரப்பாய்ந்தான்—கொடிப்பாலை. (மலையக.) (வைத்தியபரிபா.)

நஞ்சறுப்பான்—1 ஓர் பூண்டு. 2. கொண்டைசாணிக்கிழங்கு. 3. கொடிப்பாலை. 4. குன்றி. (வைத்தியபரி. கருப்பொ.)

நஞ்சி — குன்றுமணி, கொண்டைச்சாணிக்கிழங்கென்றுங்கூறுவர். (வைத்தியபரிபா.)

நஞ்சு—விடம். (உ-ம்.) "மீண்டல்"பார்.

நஞ்சுக்கொடி—கொப்பூழ்க்கொடி. (வைத்தியபரிபா.)

நஞ்சுண்டபட்டை—நச்சுப்பாலைப் பட்டை. (வைத்தியபரிபா.)

நஞ்செழுத்து—நச்செழுத்துப்பார்.

நஞ்ஞு—இன்மை, அன்மை, எதிர்மறையென்பனவற்றைக்காட்டவருவது.(பி-வி.உக.உரை.)

நஞ்ஞுதற்புருடன்—தற்புருடசமாச மெட்டனுளொன்று; அஃது: அன்மைமுதலாக மூன்றும். (பி-வி. உக. உரை.)

நட்கப்படுவோர்— நட்புக்கொள்ளப்படுவோர். (வள். ௯கசு. பரி.)

நட்சந்திரகண்டகி—அநாசிச்செடி. (வைத்தியபரிபா.)

நட்சந்திராகிருதி — வெண்சோளம். (வைத்தியபரிபா.)

நட்சத்திரசீரகம்—ஒரு சீரகம். (வைத்தியபரிபா.)

நட்சத்திரதீபம்—ஒரு விளக்கு. (வழக்)

நட்சத்திரம்—1. தாரகைப்பொது. 2. நாண்மீன்; அவை: அச்சுவினிமுதலாக ரேபதியிறுதியாகவுள்ளவற்றிற்கும் பெயர்கூறுவர்.

நட்சத்திரமாதம்—இருபத்தேழுநட்சத்திரத்தினுலுண்டாகிய மாதம். (விநாக. குணகுண. அ௦. உரை.)

நட்சத்திரமாலை—ஒரு சோதிடநூல்.

நட்டசந்திரன்—ஆவணிமாசத்துப் பூர்வபக்கச்சதுர்த்திப்பிறை.

நட்டணை—1. ஆகடியம், பரிகாசம். 2. வெறுப்பு. (1, 2 வழக்.)

நட்டபாடை — ஒரு பண். (திருஞானசம். தேவார. தோடுடையசெவியன்.)

நட்டம்—1. கலைஞாந மறுபத்துநான்கினுளொன்று; அது: களவுபோனபொருளைக்குறித்துச்சொல்வது. (சிநேந்திரமாலை.) 2. கூத்து. (உ-ம்.) "இருகைகொட்டிமுன்னர்வட்டமிட்டுநட்டமாடினன்" (சிவரக. ஞானவாலன்வயிரா. ௫.) 3. கேடு. (உ-ம்.)"நட்டம்புரிந்துழலுநல்குரவினன்மெலிவான்" (சிவரக. கத்திரிப்பூ.௩உ.)

நட்டல்—1. சிநேகித்தல். (உ-ம்.) "நாடாது நட்டலிற்கேடில்லைநட்டபின்—வீடில்லை நட்பாள்பவர்க்கு" (வள். ௭௯௧.) 2. நடுதல், நாற்று நட்டல். (வழக்.)

நட்டவர்—சிநேகிதர். (உ-ம்.)"நட்டவரிகலின்றித்தம்மின்-மல்லும்வெஞ்சமரிழைப்பவும்" (திருவிளை. எல்லாம். கக.)

நட்டவாளன்—நட்டவாளி. (வழக்.)

நட்டாமுட்டிசிந்தநை— ஒரு நூல்.

நட்டார்—1. உறவோர். (உ-ம்.) "நட்டாருடையான் பகையாண்மைமுன்னினிதே"(இனியவை. கக.) 2. சிநேகிதர். (உ-ம்.) "மெய்ம்மையே பட்டாங்கறமுரைக்கும்பண்புடையாளரே-நட்டாரெனப்படுவர்" (அறநெறி.)

நட்டி—நட்டம். (வழக்.)

நட்டு—சிநேகித்தெனப் பொருள்படுமொரு வினையெச்சம். (உ-ம்.) "உறினட்டறினொரூஉமொப்பிலார்கேண்மை - பெறினுமிழப்பினுமென்" (வள். அகஉ.)

நட்டுவக்காலி— நட்டுவாய்க்காலி, ஒருவிஷசெந்து. (உ-ம்.) "கரிபவிருச்சிகஞ்செய்யவிருச்சிகட்டுமெய்க்காலிசடித்தேகொட்ட-வெவரியுமிருப்புக் குகையில்வீழ்ந்துருகிப்பிண்டிபாலங்களெற்ற" (சிவரக. நதிகள்வர. ௩௩.)

நட்டுவம்—நாட்டியம்பழகுந்தொழில்.

நட்டுவன் — நடனமாட்டுவோன். (உ-ம்.) "எல்லா-மாட்டுமொருநட்டுவனெம்மண்ணலெனவெண்ணுய்" (திருவாத. புத்தரை. ௭௫.)

நட்டுவிழுதல்—தலைகீழாய்விழுதல். [மெய் அவத்தை ஐந்திலொன்று.] (சூ. நிக. கஉ: ௬௫.)

நட்டோர்— 1. உறவோர். (சூ. நிக. உ: ௫௩.) 2. சிநேகர்.

நட்பாடல்—நட்பையாளுதல். (உ-ம்.)"பகச்சொல்விக்கேளிர்ப்பிரிப்பர்நகச்சொல்லி—நட்பாடறேற்றுதவர்" (வள். க௮எ.)

நட்பு—1. உறவு. (உ-ம்.) "பாற்கடலரசமுதங்கெழுமித்தழைத்துநட்பாற்புகுந்தாலென வந்தவர்வேலைநண்ணி" (அரிச்ச. நாட்டு. உ.) 2. சிநேகம். (உ-ம்.)"நட்டல்"பார். 3. (யாழின்) நாலாநரம்பு. (சிலப். அரும்பத.) 4. புணர்தல். (பரிபாடல்.)

நடக்கல்—நடக்குதல். (வழக்.)

நடக்கீதம்—கௌரிபாஷாணம். (வைத்தியபரிபா.)

நடக்கை—1. ஒழுக்கம். (வழக்.) 2. நடத்தல்.

நடத்தல்—1. இயற்றுதல். 2. செல்லுதல். 3. சொல்லுதல். (உ-ம்.) "நன்னுட்டணியான் சிலவல்லநடத்தலுற்றேன்" (அரிச்ச.நாட்டு.க.)

**நடத்துதல்**—1. இயற்றுதல். 2. செலுத்துதல். 3. நடப்பித்தல். (வழக்.)

**நடத்தை**—ஒழுக்கம். (வழக்.)

**நடந்தாரைத்தொடர்ந்தான்** — தெட்டங்காய்ச்செடி. (வைத்தியபரிபா.)

**நடந்தேறுதல்**—நிறைவேறுதல். (வழக்.)

**நடநம்**—கூத்து. (சூ. நிக. கூ: ௬௮.)

**நடநமூன்று** —தேசிகம், வடுகு, சிங்களமென்பன. (உ-ம்.)"திரம்பயினடநமூன்றும்"(கந்தபு. பட்டாபி. ௧௬.)

**நடநாயகன்**—1. கருடபச்சைக்கல். (வைத்தியபரிபா.) 2. சிவன்.

**நடப்ப**—பரப்ப (புறப்பொ.)

**நடப்பன**—இயங்குமுயிர்வர்க்கம்.

**நடப்பித்தல்**—நடத்துதல். (வழக்.)

**நடப்பு**—நடக்கை. பு-தொழிற்பெயர்விகுதி.

**நடபத்திரிகை**—சேம்பு. (மலையக.)

**நடம்**—கூத்து. (உ-ம்.) "நடமுயலும்பொழுது" (கோயிற்பு. பதஞ்ச. பி. ௬௮.)

**நடயண்டநம்**—அரிதாரம். (வைத்தியபரிபா.)

**நடர்**—கூத்தர். (சூ. நிக. உ: ௬௮.)

**நடராசன்**—சிவன். (உ-ம்.) "நடராசனறும்பியாடலியார்நடாத்திறனுடு" (சிவரக. நந்திகணம். ௬௪.)

**நடல்**—நடுதல். (வழக்.)

**நடலம்பண்ணுதல்** —நாகரீகம்பண்ணுதல.

**நடலை**—1. துன்பம். (உ-ம்.)"நடலைக்கடலிற்படியேனே" (அருணகிரிபு. அருணைசலேதய. ௮) 2 நடுக்கம், அசைவு. (உ-ம்.) "நரகந்திவிடர்ப்படோம்நடலையில்லோம்" (தேவார. திருநாவு. ) 3. பொய். 4. வஞ்சனை. 5. வருத்தம். (சிந்தா.) (3, 4-சூ. நிக. ௧௧: டகரவெ. ௩.)

**நடவு** — 1. நடவுதல். 2. தெரிநிலைவினைப்பகுதி. 4. நடுகை. (உ-ம்.) "நாறுசெய்குநரும் போர்த்துநடவுசெய்குநரும்" (திருவிளை. நாட்டுப். ௨௦.)

**நடவுதல்**—1. செலுத்தல். (உ-ம்.) "தாநவர் சேனையினடவும்" (கூர்மபு. தக்கவமி. ௬௯.) 2. நடத்துதல்.

**நடவை**—1. கடவுமரம். 2. தணக்குமரம். 3. நடப்பட்டது. 4. வழி. (உ-ம்.) "பாரவாரந்தனைப்பணிவன்படருநடவைபணியாதேல்" (சேதுபு. சேதுவந்த. ௨௯.) (1, 2-வைத்தியபரிபா.)

**நடன்**—1. கூத்தன். 2. சிவன். (உ-ம்.)"நடனும்வணங்குந்தொல்லோன்" (திருக்கோ.௭௭.) 3. மல்லனுக்குமகன். (உ-ம்.) "மல்லனைப்புணர்ந்துவிச்சிலைமாதுவயிறுவாய்த்தவ னடனும்" (சூத. சிவமா. ௯௨: ௬௯.)

**நடாத்துதல்**—நடத்துதல்.

**நடாவல்**—செலுத்தல். (சூ. நிக. க: ௬௪.)

**நடாவுதல்**—நடவுதல்.

**நடி**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நாடககணிகை.

**நடித்தல்**—1. கூத்தாடுதல். 2. பாவனைகாட்டல். (உ-ம்.) "நாடகத்தாலுன்னடியார்போனடித்து" (திருவாச. திருச்சத. ௧௧.)

**நடிப்பு** — 1. கூத்து. 2. பாவனைகாட்டல். (வழக்.)

**நடு**—1. அரையென்னுமுறுப்பு. 2. இடை. (உ-ம்.) "ஆசுரர்சேனைநடுச்-சுக்கிரனார்நிகரென்ன" (பாரத. பதினொரா. ௬.) 3. திதி. (உ-ம்.) "ஆதிநடுவந்தமிலாவளவில்சோதி.(சி.சி.பாயிர. உ. ஞானப்.) [ஆகுபெயர்] 4. நடுவுநிலைமை. (உ-ம்.)"நடுவொரீஇயல்லசெயின்" (வள்.௧௧௬.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. பூமி. (பிங்கல. ௬௪௮.) பரிபாடலில்- அந்தரியாமியென்றூர்.

**நடுக்கம்**—1. அச்சம். (உ-ம்.) "அணங்குறுசேவகராமிகவுநடுக்கமுற்றாய்நார்" (சிவரக. தேவர்மறை.௫.) 2. நடுங்கல். (உ-ம்.)"நடுக்கம்பாவமுழ்குண்டுமெழ்கி" (திருவிளை.யானையெ.௬௮.)

**நடுக்கல்**—அசைவு. (வழக்.)

**நடுக்கல்வாதம்**—ஒருநோய். (வழக்.).

**நடுக்கு**—1. குளிர்ச்சி. (உ-ம்) "கோட்டமேலம்நடுக்குறுசந்தம்" (இராமா. ஆறுறு. ௧௬.) 2. நடுக்கம். (உ-ம்.) "நடுக்கின்றிநீலியரோ" (புறநா. ௨.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

**நடுக்குதல்**—நடுங்கச்செய்தல். (வழக்.)

**நடுகை**—நடுதல். (வழக்.)

**நடுங்க**— தலையசைத்துக்கொண்டாட. (புறநா.)

**நடுங்கநாட்டம்**—அகப்பொருட்கிளவியிலொன்று; அது: தோழிதலைவியைநடுங்கநாடுதல். (வாண. ௬௮. முகம்.)

**நடுங்கல்** — 1. அஞ்சல். (பத்துப்பா.) 2. நடுங்குதல்.

**நடுங்குதல்**—1. அசைதல். (உ-ம்.) "பெருங்காலெறியநடுங்குங்கொடியினிற்–திருக்கருவையந்தாதியிற்காண்க. 2. பதறுதல். (உ-ம்.)"நாந்தகத்தடக்கைநடுங்கிவாங்கினன்"(பிர.காண்.பஞ்சாட். ௨௭.) 3. பயப்படல். (உ-ம்.) "பருந்துபட. வொன்னுத்தெவ்வர்நடுங்கவோச்சி" (பெரும்பா. ௧௧௮.)

**நடுத்தாயவம்**—ஓரளவை; அது: வெண்கடுகாறுகொண்டது. (மிருச. ௫௮.)

**நடுத்துஞ்சல்**—அவமிருத்து. (உ-ம்.) "நடுத்துஞ்சுந்தொழிறஞ்செனை" (கோயிற்பு. வியாக். ௨௫.)

**நடுதல்** — 1. தாபித்தல். 2. நாற்றுநடல். (வழக்.)

**நடுநடுங்கல்— நடுநடுங்குதல்-** } பயத்தால்மிகக்கலங்குதல். (உ-ம்.) "நடுநடுங்கினானு யர" (கோயிற்பு. பதஞ்சலி. கூஅ) (சிந்தா.)

**நடுநாடி**—சுழுமுனைநாடி. (உ-ம்.) "பக்கவளி தனையடைத்துநடுநாடியுறப்பயிற்றி" (காஞ்சிப் பு. தழுவக்குழை. டுஎ.)

**நடுநாள்**—1. இடையாமம். (உ-ம்.) "நாநடு நாளிடைநீந்துதுமே" (வாரண. உகரு.) (புறப் பொ.) 2. சித்திரை. (சூ. நிக. க: எரு.)

**நடுநிலைத்தீபகம்** — தீபகவணியுளொன்று; அது: நடுநின்றசொல் பலவிடத்துஞ் சென்று பொருளைவிளக்குவது. (சி. சி. கoː டு. மறை.)

**நடுப்பகல்**—மத்தியாநம். (சூ. நிக. க: அக.)

**நடுவறுத்நான்**—மூக்கறுத்தான், மூக்குரட் டைக்கொடி. (வைத்தியபரிபா.)

**நடுவன்** — 1. இயமன். (உ-ம்.) "பணிந்து பூசைபண்ணுவார்புந்திமாழ்குபுன்கணேடுநடுவ னூர்புகுந்திடார்" (சேதுபு. இராமநாத. கூ.) 2. நியாதிபதி.

**நடுவனுள்**—பரணி. (உ-ம்.) "நடுவனுட்சித்தி ரைத்திங்கணைகைபம்புவியின்வளர்பக்கம் — தொ டுமூங்காவில்" (வேதாரணியபு. விசுவாமித்திரர் மோகை. கூஅ.)

**நடுவிரல்**—மத்திமையென்றுபெயர். சைவ சமயநெறியிற் காண்க.

**நடுவு**—1. நடுவுநிலைமை. (உ-ம்.) "நடுவிகந் தொரீஇ" (கலி. அ.) 2. மாதரிடை. (திருக்கோ. கூக.)

**நடுவுப்பு**—கல்லுப்பு. (வைத்தியபரிபா.)

**நடுவுநிலைத்திணை**—பாலைத்திணை. (உ-ம்.) "நடுவுநிலைத்திணையேநண்பகல்வேனிலொடு" (தொல். பொரு. கூ.) இதன் விவரத்தைச் சூத் திரவிருத்தியில் நன்குகாண்க.

**நடுவுநிலைமை**—நியாயம்; அது: பகை அயல் நண்பு என்னும் அறத்தின்வழுவாது ஒப்பநிற் கும் நிலைமை. (வள். கஉ-ம் அதி.)

**நடேசமூர்த்தி** — சிவமூர்த்திகளெல்லாவற் றுள்ளு மிக மேலாகிய சிவமூர்த்தி. (கோயிற்பு புராணத்திற்காண்க.)

**நடை**—1. ஒழுக்கம். (திருமுரு. உoடு. உரை.) 2. கூத்து. (சூ நிக. கூ: சஅ.) 3. செல்லுகை. (பிங்கல. கூஎoக.) 4. செல்வம். 5. முறை. (உ-ம்.) "துன்பப்பாட்டினைநீக்கியாளு-நடையி னையாகி" (திருவிளை. நான்மாட. கரு.) 6 வழக் கம். (வழக்.) 7. வழி. (4, 7-சூ. நிக. கக: டகர வெ. உரு.)

**நடைத்தேர்**—சிறுதேர். (புறப்பொ.)

**நடைப்படாம்**—நடைப்பாவாடை. (உ-ம்.) "பையரவுரியினன்னநடைப்படாம்பரப்பி" (திருவிளை. திருமண. சசஎ.)

**நடைப்பரிகாரம்**— 1. நடத்துதற்குவேண் டும் பொருள். (உ-ம்.) "நட்டோருவப்பநடைப் பரிகாரம்" (சிறுபா. கoச.)

**நடைப்பாவாடை**—நடைப்படாம்.

**நடைபெருக்கல்** — போக்குவரவுசெய்தல். (உ-ம்.) "பின்னுமதன்மாடுசிலநாணடைபெருக் கிச்-சென்னெறியின்" (கோயிற்பு. இரணியவன் மச. ரும.)

**நடையன்**—1. கழுதை. ஒரு குழூஉக்குறி. (ஏகாலியர் வழக்கு.) 2. நடக்கிறவன்.

**நண்டு**—1. கற்கடகவிராசி. (உ-ம்.) "சாடி" பார். 2. ஞெண்டு. (உ-ம்.) "நண்டுசெப்பிவேய் கதலி" (மூதுரை.)

**நண்டுகண்ணுக்கினி**—எலுமிச்சை. (வைத் தியபரிபா.)

**நண்டுக்காற்கீரை**—ஒரு கீரை. (வைத்திய பரிபா.)

**நண்டுக்காற்புல்**—ஒரு புல். (வழக்.)

**நண்ணல்** — கிட்டல். (உ-ம்.) "மாதுலன்" பார்.

**நண்ணலர்**—பகைவர். (பிங்கல. கூசஎ.)

**நண்ணார்**—பகைவர். (உ-ம்.) "நண்ணார்நாண நாம்டாறுந்தலைச்சென்று" (புறநா. உரு.)

**நண்ணுதல்**—1. கிட்டுதல். (சூ. நிக. ௬ சரு.) 2. கிடைத்தல். (உ-ம்.) "போதுசெய்யாநடங் காணநண்ணுமூடலிதுவன்றோ" (கோயிற்பு. பாயிர. கசு.) 3. பொருந்தல். (உ-ம்.) "அத்தனு மித்தலநண்ணி" (கோயிற்பு. வியாக்கிரபாத. எ.)

**நண்ணுநர்**—மித்திரர். (பிங்கல. கூசசு.)

**நண்பகல்**—மத்தியாநம். (சூ நிக. க: அக.)

**நண்பன்**—1. கணவன். (சிந்தா.) 2. சணல். (வைத்தியபரிபா.) 3. தோழன். (சூ. நிக. உ: சஉ.)

**நண்பாலம்**—வெட்பாலை. (வைத்தியபரிபா.)

**நண்பு**—1. நட்பு. (வள். பண்புடைமை. அ.) 2. நண்பன். (உ-ம்.) "கவிதனக்குரைகெழு நண்பா-மன்னவன்" (பாரத. குருகுல. கஅ.) [ஆகுபெயர்.]

**நணந்தம்** — 1. சணல். 2. புன்கு. (1, 2- வைத்தியபரிபா.)

**நணி**—அணிமை. (உ-ம்.) "திரைபொருமுந் நீர்க்கரைநணிச்செலினும்" (புறநா. கடுச.)

**நணிநணித்து**—மிகவணித்து (பரிபாடல்.)

**நணித்து**—கிட்டியிருக்குந் தன்மைத்து. (உ-ம்.) "வாழ்க்கை-தவலுங்கெடலுநணித்து" (வள். அடுசு)

**நணிது**—அணியது. (சிந்தா.)

நணிய—அண்ணிய. (ஐங்குறு.)
நணியது—கிட்டியது. (உ-ம்.) "வையத்தின் வானநணியதுடைத்து" (வள். ௩௫௩.)
நணுகல்—1. கிட்டல். 2. சேர்தல். (திருக்கோ. ௬௭. உரை.)
நணுகலர்— } பகைவர். நண்ணலர் என்பதன் பொருளாம்.
நணுகார்— }
நணுதல்—1. கிட்டல். 2. சார்தல்.
நணுதுவித்தல்—பொருந்துவித்தல். (உ-ம்.) "நாதனடிக்கமலங்கணணுகுவிக்குந்தானே" (சி. சி. அ: உ௬.)
நத்தத்தனார்—சங்கப்புலவரிலொருவர். (வள். மாலையிற்காண்க.)
நத்தப்பலர்—எருக்கு. (வைத்தியபரிபா.)
நத்தம்— 1. ஆக்கம். (உ-ம்.) "நத்தம்போற் கேடுமுளதாகும்" (வள். உ௩௫.) [நந்தென்னுந் தொழிற்பெயர்விகாரத்தால் நத்தென்றாய்ப், பின் அம்என்னும்பகுதிப்பொருள் விகுதிபெற்று நத்தம் என்றாயிற்று.] 2. இராத்திரி (உ-ம்.) "விருத்தர்பாலரானவர்கணத்தபோசனங்கள் பண்ண" (ஏகாதசி. காலநிர்ணய. ௪௩.) 3. இருள். 4. ஊர். 5. எருக்கு. 6. சங்கு. 7. நத்தை. 8. புன்கமரம். 9. மூக்கு. 10. வாழை. (3, 4, 7-சூ. நிக. ௧௧: தகரவெ. ௧௧.) (5, 6, 8, 9, 10-வைத்தியபரிபா.)
நத்தமாலம்—புன்கமரம். (வைத்தியபரிபா.) (பிங்கல. ௨௭௪௨)
நத்திரி—மூட்டை. (வைத்தியபரிபா.)
நத்து — 1. ஓர் பறவை. (வைத்தியபரிபா.) 2. சங்கு. (உ-ம்.) "நத்தளித்தவெண்டேயவனித் தலத்தண்வயல்" (ம-தி. ௩௭.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. மூக்கணி. (வழக்.)
நத்துதல்—விரும்பல். (வழக்.)
நத்துளி—அத்திப்பால். (வைத்தியபரிபா.)
நத்தை—1. ஒரு பூண்டு; அது: கடைச்சாரணையென்றும், நாரத்தை என்றுங்கூறுவர். (வைத்தியபரிபா.) 2. கடுகு. (மலையக.) 3. கருநத்தை. (பிங்கல. ௨௬௪௨.)
நத்தைச்சுண்டி—நத்தைச்சூரி. (வைத்திய பரிபா.)
நத்தைச்சூரி—ஓர்பூண்டு. (வைத்தியபரிபா.)
நதம்—மேற்கேஓடுகிற ஆறு. [இதனை ஆண் ஆறு என்பர்.] (உ-ம்.) "நதிநதமுதலியநாரமியாவும்" (மாயூரப்.)
நதி—கிழக்கோடுமாறு. [இதனைப்பெண்ணாறு என்பர்] (மாயூரப். )
நதிகாந்தை—திப்பிலிமூலம். (உ-ம்.) "இலதைவனி" பார்.

நதிசங்கமம்—1. இரண்டியாறுசந்தித்த விடம். 2. யாறுங்கடலுங்கூடினவிடம். (சைவவி.)
நதிசரம் — ஆற்றுச்சார்பிற்பிறந்த யானை. (பாரதம். சூதுபோ. ௭௩. உரை.)
நதிபதி—1. கடல். (உ-ம்.) "திருநதிபதியாய்மேவும்" (சேதுபு. சேதுயா. ௩௯.) 2. வருணன்.
நதீசம்—தாமரை. (வைத்தியபரிபா.)
நதீவடம்—காராலமரம். (வைத்தியபரிபா.)
நதீவாம்—தகரம். (வைத்தியபரிபா.)
நதுத்தல்—1. அவித்தல். (சூ. நிக. ௯: உ௧.) 2. கெடுத்தல். (உ-ம்.) "நாற்கடலுமேவினுநதுப்பரியவூழிக்-காற்கநலினேதை" (கந்தபு. சதமுகன். ௪.)
நந்த—1. பெருக. (பரிபாடல்.) 2. விளங்க. (பதிற்று.)
நந்தகி—திப்பிலி. (வைத்தியபரிபா.)
நந்தகோபன்—கண்ணனைவளர்த்த தந்தை. (உ-ம்.) "மருவுறுநந்தகோபன்மனையினுய்த்து" (கூர்மபு. கண்ணனவ. ௨௯.)
நந்தந—வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களிலே இருபத்தாறும் வருடம். (வருஷாதிநூல்.)
நந்தநதிவசம்— செயதிவசத்தின்பின் நாற்பதுநாள்; அது: "நலிவுறுநாற்பதுநந்தநம்" என்பதனாற் பெறப்படும். (விதாந.குணகுண. ௭௯.)
நந்தநம்—1. இருபத்தாறுவதாண்டு. 2. பூந்தோட்டம். (உ-ம்.) "சந்தநமரவ...நந்தநத்து" (திருவிளை. மலய. ௨.)
நந்தநவநம்—பூந்தோட்டம். (உ-ம்.) "தண்மலர்கடந்திடுநந்தநவநங்க - ளிடையூறொன்றில்லாமல்வைத்துவளர்த்திடுதல்" (ஏகாதசி. உருக்கு. ௩.) சூடாமணிநிகண்டில். ௭-ஆவது தொகுதியிலே சோலையென்றார்.
நந்தநன்—மகன். (சூ. நிக. ௨: ௮௦.)
நந்தநி— } மகள் (வழக்.)
நந்தனை— }
நந்தம்—1. எருக்கு. 2. கஸ்தூரி. 3. சங்கு. (உ-ம்.) "நந்தம்படைத்தலைச்சால்வழியூர்ந்திடும்" (மறைசை. ௫௨.) 4. புன்கு. 5. வாழை. (1, 2, 4, 5-வைத்தியபரிபா.)
நந்தம்பாடி—ஒரு திருப்பதி. (உ-ம்.) "நந்தம்பாடியினுன்மறையோய்" (திருவாச.கீர்த்தி. ௨௧.)
நந்தமாலம்—புன்கு. (வைத்தியபரிபா.)
நந்தல்— 1. ஆக்கம். (சூ. நிக. ௧௧. ௭.) 2. கெடுதல். (உ-ம்.) "நந்தலிலாவிலையிலதேலவைகளெல்லாநலமுறுவென்றுரைக்கு நான்கு வேதம்" (சிவரக. சிலாதரன்சமுக. ௨௩.) 3. மிகு

தல். (உ-ம்.) "நந்தியவீயலுண்டி" (பெரியபு. கண்ணப்ப.கூரு.) தழைத்தல்என்பர்.(ஐங்குறு.)

**நந்தவநம்**—நந்தநவநம். (உ-ம்.) "மெய்யன்ப னொருவனுளனவனுண்டாக்குநந்தவந மொன் றுளது" (சிவரக. அபுத்திபூ. கரு.)

**நந்தன்** — 1. அரசாண்ட ஒரு சக்கிலியன். 2. சீர்பந்தபாஷாணம். 3. நந்தகோபன், கண்ணனை வளர்த்த தந்தை.

**நந்தனம்**—1. நத்தை. 2. நாரத்தை (1, 2- வைத்தியபரிபா.)

**நந்தாமணி** — உத்தாமணி, வேலிப்பருத்தி. (வைத்தியபரிபா.)

**நந்தி** — 1. எருது. (உ-ம்.) "நந்திவாகனர்" (சிவரக. தேவியுடன். கo.) 2. ஒரு நதி. (சூ. நி. போ. ௩௩௦) 3. ஒரு மலை. (காஞ்சிப்பு. திருநாட்டுப். கரு.) 4. ஓரரசன். 5 சிவன். (உ-ம்.) "அணியவனந்திமருதூரனென்று" (ம. தி. ௪௪.) (திருக்கோ. கஙக.) 6. சிறுபறை. (உ-ம்.) "குணிலுடைநந்திதட்டை" (சேதுபு. இராம நாத. ௬ரு.) 7. செக்கான். (சூ. நிக. உ: ௩௫) 8. நந்திதேவன். (உ-ம்.) "நமபன்கணத்துக்கு நாதனருணந்திபதம்" (சைவ. ச. பாயிர. ௫.) 9. நந்தியாவட்டம். (உ-ம்.) "நந்திநறவநறும் புன்னாகம்" (குறிஞ்சி. கக.)

**நந்திகேச்சுரன்**—நந்திகேசன்.

**நந்திகேச்சுவரர்**—ஏகாதச முக்கியகணாசாரி லொருவர். (வி-ணி.)

**நந்திகேசரம்**—நந்தியாவட்டம் (வைத்திய பரிபா)

**நந்திகேசன்**—நந்திகேசுரன்.

**நந்திகேசுரன்**—திருநந்திதேவன்.

**நந்திநண்பன்**—சிவன். (ஆசிரிய. நி. க: உ.)

**நந்திநி** — 1. ஒரு பாலாரிட்ட தேவதை. 2. சுத்த மயாதத்துவத்திலிருக்குமோர் புவநம். (1, 2-வி-ணி.)

**நந்திப்பூசனி**—சாம்பற்பூசனி. (மலையக.)

**நந்திபத்திரி**—நந்தியாவட்டம். (மலையக.)

**நந்திமலை**—ஒரு மலை. (காஞ்சிப்பு. திருநாட்டுப். கஙு.)

**நந்திமுகி**—கோதுமை. (வைத்தியபரிபா)

**நந்திய**—தழைத்த.(உ-ம்.)"காலநந்தியசெந் நிலப்பெருவழி" (முல்லை. கள.)

**நந்தியாவட்டம்**—நந்தியாவர்த்தம். (சிந்தா.)

**நந்தியாவர்த்தத்தாமன்** — சூரியோதயன் (சூ. நிக. உ: கரு)

**நந்தியாவர்த்தம்** — ஒரு பூச்செடி. (உ-ம்.) "பெட்புமிகுங்கூவிளைசெவ்வந்திநந்தியா வர்த் தம்பிச்சிகொன்றை" (ஏகாதசி. உருக்கு. சச.)

**நந்திவிருக்கம்**-சின்னிமரம்.(வைத்தியபரிபா)

**நந்தினி** — வசிட்டர் காமதேனுவின் கன்று. (அபிதானசி.)

**நந்தீச்சுரன்**—நந்தீசுவரன்.

**நந்தீசுவரன்**—திருநந்திதேவன். (காஞ்சிப்பு. கடவுள்வா. அ.)

**நந்து**—1. சங்கு. (உ-ம்.)"நந்தாருப்புனனாட் டின்றிறம்வேண்டு"(பாரத.கிருட்டிணன் றூது. கக.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நத்தை. (சூ. நிக. கக:நகரவெ. எ.) 4. பறவை. (பிங்கல. ௩எ0௩.)

**நந்துக**—பெருக. (ஐங்குறுநூ.)

**நந்துதல்**—1. கெடுதல். (உ-ம்.) "ஈடற்கரிய நலத்தாதநந்தாத்தேனை"(திருவாச.திருப்பொற் சுண்ண. கரு.) 2. விரித்தியாதல்.

**நந்தை** — 1. ஐவகைப்பசுக்களிலொன்று; அது: கபிலநிறமுடையது. (பாலபாடம்.) 2. கொத்தான்கொடி. (வைத்தியபரிபா.) 3. பிரதமையும் சட்டியும் ஏகாதசியும்வரும் பக்கம். (சூ. நிக. ௯: அ௩.)

**நந்நான்கு**— நான்குநான்கு. (நன்னூல்.உயி ரீற்றுப். ஒன்பதொழித்த. என்னுஞ்சூத்திரத் திற் காண்க.)

**நப்பாலந்தனார்** — சங்கப்புலவரிலொருவர். (வள். மாலை. சஎ. முகம்.)

**நப்பிரிந்து** — நம்மைப்பிரிந்து. (ஐங்குறு.) இவ்வாறே நம்மறந்து- நம்மைமறந்து. என்பர்.

**நப்பின்னை** — கண்ணன் மனைவிகளிலொருத்தி. பாகவதத்திற்காண்க. (சிந்தா.)

**நபநம்** — ஸ்நாநஞ்செய்தல். (திருவானைக் காப்பு. கோச்செங்க. சo )

**நபம்**—1. ஆகாயம். (சூ. நிக. ௪: ௪௩.) 2. நிவிர்த்திகலையிற்பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களுளொன்று. (ச-வி.கி-பி. உக. உரை.)

**நபாதி**—தோன்றாது. (உ-ம்.) "இருந்தாற் றோன்றுமென்கின்றநபாதியும்" (வேதா. சூ கக௧. உரை.)

**நபாபு**—துலுக்கராசன். (வழக்.)

**நபி** — இஸ்லாமார்க்கத்துத் தீர்க்கதரிசி. [இந்துஸ்.]

**நபுஞ்சகம்**—பேடு.

**நபுஞ்சகலிங்கம்**—அலிப்பால். (பி-வி.)

**நபுஞ்சகன்**—பேடன். (உ-ம்.) "பொன்னனீரிவனபுஞ்சகன்புறம்புகுவோமென் றன்னி" (சிவர. வீரசித்துவிரத்த. ௯௩.)

**நம்**—1. ஒரு சாரியை. (உ-ம்.) "எல்லார்நம்மையும்" (நன்னூ. உருபுபு எல்லாருமென்னுஞ் சூத்திரத்திலரிக.) 2. நமது. (உ-ம்.) "பொருது

சிறைமீட்டானக்குலத்துமுதல்வ னன்றே" (பாரத. கிருட்டிண. உஅ.)

**நம்பகன்**—சீர்பந்தபாஷாணம். (வைத்தியபரிபா.)

**நம்பன்**—1. சிவன். (உ-ம்.) "நந்தி"அ.பார். 2. விரும்பத்தக்கவன். நம்பு-விருப்பம்.

**நம்பாதி**—நம்பாதிரு.(உ-ம்.)"நம்பாதியந்தகர் பொல்லாச்சமயக்கணன்றெனவே" (மறைச. ருக.)

**நம்பி** — 1. அகப்பொருளிலக்கணஞ்செய்த ஓராசிரியர். (உ-ம்.) "நம்பியகப்பொருள்" 2. அரசமாதைப்பார்ப்பானிராக்கதமணஞ்செய்யப் பிறந்து விட்டுணுவையருச்சிப்போன். 3. ஒரு வேடுவராசன். [இவன் வள்ளியம்மையாரைத் தனக்குமகளாகைக்கொண்டவன்.] 4. புருடரிற் சிறந்தோன். (சூ. நிக. க: ருஎ.) 5. விஷ்ணுசமயச்சில குருமாருக்குள்ளபட்டப்பெயர். (வைணவர் வழக்கு. 6. விரும்பி. (உ-ம்.) "வாயாரநின்னிசைநம்பி" (புறநா. கஙகூ,)

**நம்பிக்கை**—1. சத்தியம். 2. நிசம். (வழக்.)

**நம்பியாண்டார்நம்பி** — திருத்தொண்டர் திருவந்தாதி செய்தருளியவர். (திருவானைக். கடவுள். கக.)

**நம்பியார்**—திருக்கோவிலிலே சிவபிரானைப் பூசிக்கு மாதிசைவர்க்குரிய பட்டப்பெயர். நால்வகை வருணத்தாடவர்க்குமேலாச் சிறந்தவராதலால் இப்பெயர் பெற்றாரென்க.

**நம்பு**—1. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "நம்புபாவினிலோடியேதிரிகுழல்" (சிவரக. சுகமுநி. உஎ.) 2. நாவல். (வைத்தியபரிபா.) 3. விருப்பம். (சூ. நிக. அ: எரு.)

**நம்புண்டல்**—நம்புதலைச்செய்தல். (உ-ம்.) "நம்புண்டல்யார்க்குமிங்கரிதாயின்" (கலி.சஎ.)

**நம்புதல்**—விரும்பல். (வழக்.)

**நம்பூரி**—மலையாளப்பார்ப்பாரிலுயர்ந்தோர். (அவர் வழக்கு.)

**நம்பெரும்**—வித்துரசம். (வைத்தியபரிபா.)

**நம்மவன்**—நம்மைச்சேர்ந்தவன். (வழக்.)

**நம்மாழ்வார்**—தாம்பிரவந்நி நதிக்கருகிலிருந்த ஒரு வேளாள வைணவாசாரியர். (திருவாய்மொழி. சூ. பாடல்செய்தவரிவரே.)

**நம**—1. மந்திரங்களின் முடிவிலொருறுப்பு. 2. வணக்கம. (உ-ம்.) "கந்தநமவைந்துமுகர்தந்த முருகேசநம" (கந்தபு.திருவிளையாட்டுப்படலம். அஉ.)

**நமக்காரம்**—நமஸ்காரம். (வழக்.)

**நமக்காரி** — 1. புழுக்கொல்லி. 2. வறட்சுண்டி. (1, 2-வைத்தியபரிபா.)

**நமசிவாயர்**—சிவன். (உ-ம்.) "பரிநமசிவாயருக்குதீர்த்தநதிகரைபெருக்காம் பகவனுர்க்கே" (சிவரக. கணபதிவந்த. கஅ.)

**நமத்தம்**—சடாமாஞ்சி. (வைத்தியபரிபா.)

**நமர்**—நம்மவர்கள். (உ-ம்.)"நண்ணியவபீட்டமெல்லாநமர்கள்பாற்பெறலாமன்றே" (சிவரக. வரலா. கO.) நன்னூல், பெயரியல், கிளந்த கிளைமுதல் என்னுஞ்சூத்திரவுரையிற் கிளைப் பெயர்க்குதாரணமாகக் காட்டினர். (புறப்பொ.)

**நமரங்கள்**—நம்மவர். அம்-அசை. (சிந்தா.)

**நமவாரிதி**—தொனட. (வைத்தியபரிபா.)

**நமள்**—நம்மவள்; ். து: கிளைப்பெயர். (நன்னூல் பெயரியல், கிளைமுதலாகவென்னுஞ் சூத்திரவுரையிற் காண்க.)

**நமன்**—1. இயமன். (உ-ம்) "நமனத்தியானநஞ்சென்னக்கொதித்து" (மரு-தி. ச.) 2. நம்மவன்; இதனை: நன்னூல்-பெயரியல், கிளையெண்குழூஉ முதல் என்னுஞ்சூத்திரவுரையிற் கிளைப்பெயர்க்குதாரணமாகக் காட்டினர்.

**நமிநந்தியடிகள்**-அறபத்தமூவரிலொருவர். (உ-ம்.) "பெரியபு. நமிநந்தியடிகள்புராணம்.

**நமுறு**—மாதிரி. [பார்சி.]

**நமேரு**—புன்னைமரம். (வைத்தியபரிபா)

**நமை**—1. ஒரு மரம். (உ-ம்.) "வஞ்சிகாஞ்சி குங்குமநமையொடுவாண். (சாஞ்சிப்பு. சனற்குமார. சு.) 2. தினவு. (வழக்.) 3. கத்தரி. (உ-ம்.) "பத்தியங்கண்டேர்கூரமாங்கா - யலகினமைக்காய்கொத்தவரை" (தைல. பாயிர. ருஅ.) 4. தெரிநிலைவினைப்பகுதி.

**நமைக்காய்** — கத்திரிக்காய். (உ-ம்.)"நமை" பார்.

**நமைச்சல்**—தினவு. (உ-ம்.) "சோபை"பார்.

**நமைத்த**—சூடிய. (சிந்தா.)

**நமைத்தல்** — 1. சொறிதல். 2. தின்றல். (1, 2-வழக்.)

**நமைப்பு**—சொறிவு. (வழக்.)

**நமோ**—வணக்கம். (உ-ம்.) "நாவாருமறைப்பொருளேநமோநமோவெனுநாமநவிற்று வானுல்" (சிவரக. கணபதிவந்தனை. கஉ.)

**நயக்க**—விரும்ப. (ஐங்குறு.)

**நயக்கு**—செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும்விகுதி தொகைநிற்கப்பெறும் வினையாலணையும்பெயர். (வள். ரு: க. குறிப்பு.)

**நயச்சொல்**—முகமன்வார்த்தை. (பிங்கல. உOகக.)

**நயத்தக**—விரும்ப. (ஐங்குறு.)

**நயத்தல்**-1. அன்பாற்சிறத்தல் (பரிபாடல்.) 2. ஆசைப்படல். நயப்பு என்பது ஆசை ஆதலால் நயத்தலென்றார். 3. இன்பமுறல்.

4. நன்மைப்படல். 5. பயன்படல். 6. மகிழ்ச்சியுறல். நயமென்ப மகிழ்ச்சியின்ப நன்மை நற்பயனுற்பேரேயென்பது நிகண்டு ஆதலால் நயத்தல்எனத் தொழிற்பெயராக்கி யிங்ஙனம் பொருள்கூறினர்)

நயந்தன்று— நயந்தது. (புறப்பொ.)

நயந்தனிர்—விரும்பினிர். (பத்துப்பா.)

நயந்து—விரும்பி. (பத்துப்பா.) 2. மகிழ்ந்து. (புறநா.)

நயந்தோர்—1. கணவர். 2. சிநேகிதர் (பிங்கல. ௬௭௦௪.) (நயந்தார் எனினும் நயந்தோர் எனினுமொக்கும்.

நயநதீக்கை—மீன் தனது சினையைக் கண்ணாற் பார்த்தன்யாத்திரத்தால் இரட்சிப்பது போல ஆசாரியன் நயனத்தாற் கடாட்சித்தனுக்கிரகிப்பது. (சி. சி. அ: ௯. மறை.)

நயநப்பத்து—கண்ணினைப் பத்துச்செய்யுளாற்கூறுமோர் பிரபந்தம். (தொன். ௨அ௯. உரை.)

நயநபத்திரி—வட்டச்சாரணை. (வைத்தியபரிபா.)

நயநம்—கண். (உ-ம்.) "சிறப்பெலா - நனிகண்டேமகிழ்கூரநயநமும்"(சிவரக.மேரு.௨௫.)

நயப்பாடு—மிக்கபலன். (உ-ம்) "உடலடைந்தநயப்பாடெல்லாம். (திருவிளை.தலவி. ௨௨.)

நயப்பித்தல்— 1. இன்புறவித்தல். 2. சந்தோஷப்படுத்தல்.3.நன்மைப்படுத்தல். 4.பயன்படுத்தல். நயமென்பதனடியாகப் பிறவினையாக்கிகூறியதென்க.

நயப்பு — 1. ஆசை. (பிங்கல. ௪அ௯௯.) 2. மகிழ்ச்சி. 3 விநோதம். (உ-ம்.) "நாயகன் கண்ணயப்பாஞயகிபுதைப்ப" (சி. சி. க. ௫௨.)

நயப்புணர்வு — கண்ணோட்டம். (சூ. நிக. அ:௪௦.)

நயம்—1. இன்பம். (உ-ம்.) "நயநடனுந்தகுமங்கவர்" (கோயிற்பு. பதஞ்சலி ௪௯.) 2 இனிமை. (உ-ம்.) "நயந்தெரிபாலை" (சிறுபா.௯௯.) 3. ஈரம். (ஐங்குறு.) 4 உபசாரம். (சூ நிக. ௧௦: ௧௧.) 5. நன்மை. (பரிபாடல்.) 6. நீதி. (உ-ம்.) "நட்பினயநீர்மைநீங்கல்" (திரிகடு. அ௬.) 7. பயன். 8. மகிழ்ச்சி. 9. விருப்பம். (உ-ம்.) "நயம் வந்துவழங்கலில்" (மதுரை. ௬௫௦.) (5, 7, 8- சூ. நிக. ௧௧. யகரவெ. ௧௯.)

நயமாலி—மநோசிலை. (வைத்தியபரிபா.)

நயவ—நியாயத்தையுடையன. (உ-ம்.)"நல்ல போலவுநயவபோலவு" (புறநா. ௫அ.)

நயவர்—1. சிநேகிதர். (பிங்கல. ௬௫௫.) 2. விரும்பிவந்தவர். (உ-ம்.) "நயவர்பாணர்புன்கண்டீர்த்தபின்" (சிறுபா. ௨௪அ.)

நயவர—விருப்பம்வர. (ஐங்குறு.)

நயவரும்—விருப்பம்வரும். (ஐங்குறு.)

நயவான்—1. நயப்புள்ளோன். 2. விரும்பினோன்.

நயன்—1.அருள்.(உ-ம்.)"நயனில்லான்வினைவாங்க" (கலி.அ.) 2. இன்பம். 3. ஈரம். (உ-ம்.) "நயனுடைநெஞ்சின்" (திருமுரு. ௧௪௧.) 4. நன்மை. 5. நீதி. (வள்.௬௭.) 6. பலன். 7. மகிழ்ச்சி. நயம் நயன் எனப்போலியானதாலிவ்வளவு பொருளாயிற்று.

நயிமிசன் — குய்யர்ட்டகரிலொருவன். (வி-ணி.)

நயினர்—நாயனர். (உ-ம்.) "தொண்டர்கணயினர்கோயின்முன்பாய்" (திருநெல். தீர்த்த. ௨௪.) நாயனர் என்பதன்மரூஉ. சைநர்களுக்கு ஒரு பட்டப்பெயராகக்கூறுவதுமுண்டு.

நர்த்தகன் — 1. அம்பட்டமாதைச்சவனன் கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "சொன்னவம்பட்டமாதின்றோளிணைசவன்னன்புல்ல-நன்னயத்துடனுதித்தோனர்த்தகனென்னும் பேரான்" (சூத. சிவமா. ௧௨: ௨௯.)

நர்மதை — நருமதை. (உ-ம்.) "நர்மதைத்திரையேறுகரைமேவுசிவயோகி" (சிவரக. மாநதபூ. ௨.)

நரகங்களிருபத்தேட்டு — கோரம், கோரதரம், பயாநகம், சண்டம், சண்டதரம், வீமம், விகரளம், ஐங்கோணம், ஏழுநிலம், கவினகோரம், அதிகோரம், கோரரூபம், காளராத்திரி, மகாசண்டம், சரோருகம், வீமவீடணம், குலிசம், தீர்க்கதரம், எட்டுநிலம், தரளதரம், பயோற்கடம், சண்டகோலாலம், சலவதி, கரளம், மூக்கோணம், பரிவர்த்துளம், தீர்க்கவெளி, மாயையென்பன. (கூர்மபு.தமோ.௧௨.உரை.) இதன் விரிவை அபிதாநசிந்தாமணியிற் காண்க.

நரகத்தர்—நரகத்திலிருக்கிறவர்கள்.(உ-ம்.) "புரியட்டகரூபத்திலுண்டானயாதனுசரீரத்தையுடையநரகத்தருக்கும்" (சி. சி. ௨: ௯௦. சிவாக்.)

நரகம் — பாவலோகம், வேதாகமங்களின் மொழிவழிநடவாதாரைத்தண்டித்தற்பொருட்டுக் கடவுளாலமைக்கப்பட்ட சிறைக்களம். (சி. சி. ௨: ௯௦. சிவஞா.) இது ஏழுவிதம். சூ. நிக. ௧௨: ஏ௯.)

நரகர்-பாவமிகுதியால்நரகலோகத்தவராய்ப் பிறப்பவர்.(உ-ம்.)"மக்கடேவர்நரகருயர்திணை" நன்னூ. பெயரியல். )

நரகல்—மலம். (வழக்.)

நரகவட்டம்—நரகச்சுற்று. இது ஏழுவகை. (சூ. நிக. ௧௨: ஏ௧.)

**நரகன்** — 1. ஓரசுரன். இவனைத்திருமால் கொன்றார். 2. நரகத்திலுள்ளோன்.

**நரகனுதி**—தேட்கொடுக்கி. (வைத்தியபரிபா.)

**நரகாசுரன்**—ஓரசுரன்; இவன் திருமால் தன்னைக்கொன்றதினத்தில் எல்லாருமங்களங் கொண்டாடவேண்டுமெனக்கேட்டுக்கொண்ட படி கொண்டாடுந்தினமே நரகசதுர்த்தசியெனப்படும். (அதனைத் தீபாவளிப்பண்டிகை என்பர் பிற்காலத்தில்.)

**நரகாரி**—விட்டுணு.

**நரது**—நரகம். (உ-ம்.) "அறத்தைவேர்கல்லு மருநரகிற்சேர்க்கும்" (நளவெண்பா. ௬௪.)

**நரதுலன்** — 1. குய்யாட்டகரிலொருவன். (வி-ணி.) 2. சிவலோகத்துத்தரதிசையோலக் கஞ்சேவிக்கும் துவாதசமுக்கிய தேவதைகளிலொருவர். (வி-ணி.)

**நரந்துதல்** — தேய்ந்துதேய்ந்து கெடுதல். (வழக்.)

**நரசிங்கம்** — நரசம்பந்தமுடைய சிங்கம். (உ-ம்.) "முரணினவெய்யநரசிங்கமாகி" (கூர்ம பு. தக்கவழி. ௬௨.) [இது திருமால் தசாவதாரத் தொன்று.]

**நரசிம்மதாபநி**—அதர்வணவேத உபநிடத் தொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. உரை)

**நரசிம்மன்** — தேவி சோமனிடத்தில் பார மேசுராகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ.)

**நரத்துவம்** — மாநிடத்தன்மை. (உ-ம்) "கங்கைமுதலவற்றளொழிப்பதனுக்கிசைவர் நரத்துவம்" (வேதசூ. ௭௮.)

**நரந்தம்**—1. கத்தூரி. (உ-ம்.) "நரந்தமரைப்ப நறுஞ்சாந்துமறுக" (மதுரைக். ௫௫௩.) 2. நரந் தப்புல் (உ-ம்.) "நறைநரந்தமுமகிலுமாரமும்" (பொருந. ௨௩௮.) 3. நாரத்தை. (உ-ம்.) "நாளி சேரஞ்செருந்திநறுமலர்நரந்தமெங்கும்" (பெரி யபு. நாட்டு. ௨அ.)

**நரந்தை**—சொற்றுன். (வைத்தியபரிபா.)

**நரப்புக்கருவி**—வீணைமுதலியவாத்தியம்.

**நரபதி**—அரசன். (உ-ம்.) "நாடெலாமதிக் கக்கேட்டுநரபதிவெகுண்டு" (அரிச்ச. சூழ். ௨அ.)

**நரபுடம்**—ஐம்பதெருப்புடம். (வைத்திய பரிபா.)

**நரம்பு** — 1. தந்தி. (உ-ம்.) "ஒளவியமதர் வேற்கண்ணரைத்தளிர்விரனடாததுந் - திவ்விய நரம்பும்" (திருவிளை. ௩௩. அ௨.) 2. நாடி. 3. நாணி. (பிங்கல. ௪௫௩௭.) 4. நார். 5. வீணை. (உ-ம்) "பாடனரம்பினேசையும்" (திருவிளை. திருக்கைலா. ௩.) [ஆகுபெயர்.]

**நரம்புக்காய்** — முருங்கைக்காய். (வைத்திய பரிபா.)

**நரம்புச்சிலந்தி**—ஒரு புண், இதில் நரம்பும் வெளிவரும். (வழக்.)

**நரம்புறுதாநம்**— தந்திரிதாநம். (பெரியபு. ஆநாயநாய. ௩௩. உரை.)

**நரமேதம்**— ஒருயாகம். [அது நரபலியிட்டுச் செய்வது.] (இராமா. மிதிலைக்கா. ௪௨௦.)

**நரர்** — மனிதர். (வழக்.)

**நரல்வு**—ஓசை. உ-சாரியை. வகரந்தோன் றல்.

**நரலல்**—ஒலித்தல். (திருக்கோ. ௧௧௧.)

**நரலுதல்** — ஒலித்தல். (உ-ம்.) "ஆடுகழை நரலும்" (புறநா. ௪௨௦.)

**நரலை**—கடல். (உ-ம்.) "வண்ணவெண்சுதை மெய்யுடைவரநதிகேள்வ - னண்ணுதொல்லுல காகியோநரலையுற்றென்ன" (கந்தபு. சூரம்புகு. ௪.)

**நரவாகநம்**— சிவிகை. (உ-ம்.) "வாமாவ்யர் நரவாகநமதமாவொடுதிண்டேர்" (மதுரைப் பதிற்று. அக.)

**நரவாகநன்**— குபேரன். (பிங்கல. ௧௧௫.)

**நரளி**—கடலை. (வைத்தியபரிபா.)

**நரன்**—1. அருச்சுநன். (உ-ம்.) "நாற்றிசை யுமவளர்த்தத்தழற்கடவுளந்நரனுடலங் குளிர் விக்குநாமம்போன்றுன்" (பாரத. அருச்சுநன் றவ. ௩௧.) 2. மனிதன்.

**நராதிபன்**—அரசன். (வழக்.)

**நராந்தகன்** இராவணன்மக்களிலொருவன். இவனைக்கொன்றவன் அங்கதன். (அபிதாநசி.)

**நரி** — ஓரி. (உ-ம்.) "மடங்கலேறொன்றும் பைங்கணரியொன்றுமலைந்தாலென்ன" (திரு விளை. அங்கம். ௪௯.)

**நரிகாரம்**— பொரிகாரம். (வைத்தியபரிபா.)

**நரிக்கொன்றை**— ஒருமரம். (வைத்திய பரிபா.)

**நரித்தல்**—நிந்தித்தல். (வழக்.)

**நரித்தலையின்வாய்வு** — நரித்தலைவாதம். (உ-ம்.) "வளியதட்புநரித்தலையின்வாய்வு"(தை லவ. தைலவ. ௪௨௭.)

**நரிப்பயறு**—ஒரு புன்பயறு, மின்னிப்பயறு. (வைத்தியபரிபா.)

**நரிப்பாகல்**—காட்டுப்பாகல். (வைத்திய பரிபா.)

**நரிப்பு**—இகழ்வு. (உ-ம்.) "நரிப்பாய்நாயே னிருட்பேனே" (திருவாச. கோயின்மூத்த. ௬.)

**நரிப்புறம்**—மிருகசீரிடம். (சூ. நிக. க: ௬௬.)

**நரிமருட்டி**—கிலுகிலுப்பை. (வைத்திய பரிபா.)

**நரியுருந்து** — ஓர் பூடு. (வைத்தியமூலிகை யகராதியில் இதனைச் சயம்போகுமென்றார்.)

**நரியனெல்**— ஒருவகை நெல். (வழக்.)

நரியிலந்தை—ஒருவகையிலந்தை. (வைத்தியமூல. ஆக.)

நரியுடை — மொசுமொசுக்கை. (வைத்தியபரிபா.)

நரியுப்பு—கறியுப்பு. (வைத்தியபரிபா.)

நரிவாற்புல்—ஒரு புல். (வழக்.)

நரிவிளா — நிலவிளா. (வழக்.) இதனைச் சிறுவிளாவென்பர்.

நரிவெண்காயம்—ஒருவெண்காயம்.(வைத்தியபரிபா.)

நரிவெருத்தலையார் — ஒரு சங்கப்புலவர். (அபிதாநசி.)

நருக்கல்—நொருக்கல். (வழக்.)

நருக்கு—1. நருக்குதல். 2. தெரிநிலைவினைப் பகுதி.

நருக்குதல்—நொருக்குதல். (உ-ம்) "நகத்தினுலுயர்நகங்களைநருக்குமாபோல்" (பாரத. நிரைமீட்சி. கஎ.)

நருக்கெனல்—ஒரொலிக்குறிப்பு. (வழக்.)

நருங்குதல்—நொருங்குதல் (வழக்.)

நருநருத்தல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.(வழக்.)

நருநரெனல்—நருநருத்தல். (வழக்.)

நருமதை — விந்தியபருவதத்திலிக்கும் இரு நதிகளிலொன்று. (உ-ம்.) "சீலமிகுநருமதைமாநதிதனைக்காணவும்பெற்றேன்" (சிவரக. நதிகள்வர. கூஎ.) [இது சத்தநதிகளிலொன்று]

நருளிகை—சத்திசாரம். (வைத்தியபரிபா.)

நரேந்திரன்—அரசன், நரர்களுக்குமேலானவன்.

நரை — 1. இடபம். (சூ. நிக. க: கச.) 2. சரை, நரைமயிர். 3. சாமரை. 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. நாரை. 6. பெருமை. (உ-ம்.) "மரந்தின்னூஉவரையுதிர்க்கு - நரையுருமினேறனையை"(மதுரைக்காஞ்.சுகூ.) 7. வெண்மை.(உ-ம்.)"நரைவிடையூரிராமநாதனைநண்ணினேனே" (சேதுபு. சங்கரபா. அகூ.) (2, 3, 5-பிங்கல. கூஎ0எ.)

நரைக்கொள்ளு—சீர்க்கோழிப்பூடு. (வைத்தியமூலி. அக.)

நரைக்கொம்பு—எலும்பு. (வைத்தியபரிபா.)

நரைத்தல்—மயிர்முதலியவெளுத்தல்.

நரைமை—வெண்மை. (உ-ம்.) "நரைமையிற்றிரைதோற்றகையின்ருயது" (மணிமே. உ0. சச.)

நரையல்லி-வெள்ளாம்பல்.(வைத்தியபரிபா)

நரையுந்திரையுமில்லான்—காக்கை. (வைத்தியபரிபா.)

நல்—1. நன்மைஎன்னும் பண்படி. 2. வறுமை. (உ-ம்.)"கல்குயின் றன்னவெனல்கூர்வளிமறை" (புறநா. ககூசு.) [நல்குரவென்பது நல்லெனக்குறைந்து நின்றது.]

நல்கல்—1. ஈதல். (உ-ம்.) "எவையுநல்குஞ் செல்வரும்" (கந்தபு. ததீசிஉத். கஙரு.) 2. உண்டுபண்ணல். (உ-ம்.) "சிந்தையாலோர்வில்லுங்கணைகள்பலவும்விரைவொடுநல்கி"(கந்தபு. திருவி. சகூ.) 3. பயன்படல். (உ-ம்.) "அயற்றேவர்நல்கார்" (திருநூற். அகூ.) 4. பெறுதல். (உ-ம்.) "நல்கியதாதையைக்கொலைசெய்ததநயன்" (திருவிளை. மாபாத. க.) 5. மகிழ்தல். (புறநானூறு. அ0.)

நல்கி—கொடுத்து. (புறநா.)

நல்கினும்—உவப்பினும். (புறநா.)

நல்குதல்—நல்கல்.

நல்குரவு—தரித்திரம், நுகரப்படுவனயாவுமில்லாமை. (உ-ம்.) "நல்குரவென்னுநசை" (வள். க0சுக.)

நல்கூர்தல்—தரித்திரப்படல். (உ-ம்) "நயனுடையானல்கூர்ந்தானுதல்" (வள். உககூ.)

நல்கூர்ந்தோன்—தரித்திரன். (சூ. நிக. உ: சகூ.)

நல்கூர்வேள்வியார் – சங்கப்புலவரிலொருவர். (அபிதாநசி.)

நல்லசாரம்—அத்திப்பிசின். (வைத்தியபரிபா.)

நல்லது — நன்மையானது; அது: அறம். (பரிபாடல்.)

நல்லபாம்பு—நாகப்பாம்பு. (வழக்.)

நல்லம்—கறுப்பு. (சூ. நிக. அ: உஉ.)

நல்லம்மான்பச்சரிசி—ஒருபூண்டு. (வைத்தியபரிபா.)

நல்லமிளகு—கருமிளகு. (வைத்தியபரிபா.)

நல்லரிவஞ்சம் – போகபூமியாறிலொன்று. (கூர்மபு. வருணைச். உசு. உரை.)

நல்லவர் — 1. அறிஞர். நல்லவர் எனினும் நல்லோர்எனினுமொக்குமென்க.(சூ.நிக.உ:எ.) 2. உத்தமர். (உ-ம்.) "நல்லவன்வியாதனெங்கோன்"(சிவரக. வரலா. கக.)விகுதியொருமை கருதற்க. 3. சிநேகிதர். (சூ. நிக. உ: ருஉ.) 4. மடவார். (உ-ம்.) "நல்லவர்க்கரணங்காகியமார்பு" (புறநா. கச.)

நல்லவேளை—1. நல்வேளைப்பூடு. (வைத்தியபரிபா.) 2. நற்சமயம், காலம்.

நல்லவை — 1. நற்சவை. மிகுதி, ஒப்புத்தாழ்வு என்று மூன்றனுள் முன்னிரண்டுமோம். வகையறிந்துயர்ந்தோ ரொத்தவர் தாழ்ந்தோர் மருவுமூன்றவையு மாராய்ந்து என விநாயகபு. அரசியற். ககரு. கவியிலறிக. 2. மேன்மையுள்ளவை.

**நல்லன்**—நல்லவன். (வழக்.)

**நல்லாதனர்** – திரிகடுகமென்னுநூல்செய்த ஒராசிரியர். (அபிதாகசி.)

**நல்லாபிள்ளை** — பாரதம்பாடினோர். (அபிதாக.)

**நல்லார்**—1. அறிஞர். (சூ. நிக. உ: எ.) 2. உத்தமர். (உ-ம்) "நல்லாரைக்காண்பதுவுநன்றே" (வாக்குண். அ.) 3. மாதர். (திருவிளை. திருமணப்ப. கககூ.)

**நல்லாள்**—1. நலமுடையவள். 2. பெண். (உ-ம்.) "மெல்லிநல்லாடோழ்சேர்" (ஆத்திசூடி.

**நல்லி**—நல்லாள். (வழக்.)

**நல்லேறு**—எருமையேறு. (உ-ம்) "நல்லேறு பொருஉங்கல்லென்கம்பலை" (மலைபடு.கூகூரு.)

**நல்லோர்** — 1. அறிஞர். (உ-ம்.) "நவை பொறுக்க-நல்லோரையிரந்தேமேல்" (கோயிற்பு. பாயிர.உஎ.) 2.உத்தமர். 3.மகளிர்.(ஐங்குறு.)

**நல்வழி** — 1. ஔவையார்செய்த ஒருநூல். (அபிதாகசி. 2. சன்மார்க்கம்.

**நல்வினை**—புண்ணியம். (உ-ம்.) "நல்வினை யுழந்து" (பிரமோத். பஞ்சா. கூஅ.)

**நலக்குதல்**—கசங்கச்செய்தல், அல்லது வருத்தச்செய்தல் எனினுமாம்.

**நலங்கல்**—1. முடங்கல். (உ-ம்.) "மலைமாவினலங்கவளைத்தவர்" (ம-தி. ௬00.) 2. வருந்தல். (உ-ம்.) "இலங்கையிற்றனலங்கவிட்ட" (இராமா. ஆரணிய. மாரீசன்வதை. ரு.)

**நலங்கு**—தெரிநிலைவினைப்பகுதி.

**நலங்குதல்**—வருந்தல். உ-ம்.)"உயிர்வருந்த-நலங்கிவந்து" (அரிச்சந்திரபு. வேட்டஞ். ௬0.) (இராமா. ஆரணிய. மாரீசன்வ. ரு.)

**நலத்தகு** — 1. விரும்பப்படுகின்ற. (உ-ம்.) "நலத்தகுநாகநின்றிடிக்கும்" (சிந்தா. நாமக. ௬கூ.) 2. அழகுதக்க. (ஐங்குறு.)

**நலத்தல்**—நயத்தல்.

**நலத்தம்**—சடாமாஞ்சி. (வைத்தியபரிபா.)

**நலதம்**—வெள்வெட்டிவேர். (வைத்திய பரிபா.

**நலதம்பு**—வேப்பமரம். (வைத்தியபரிபா.)

**நலதை**—சடாமாஞ்சி. (வைத்தியபரிபா.)

**நலநாறி**—சிவகரந்தை. (வைத்தியபரிபா.)

**நலப்பாடு**—மிகுநன்மை.

**நலப்பு**—நன்மை. பு-பண்புப்பெயர்விகுதி.

**நலபிரதி**—பொட்டிலுப்பு.(வைத்தியபரிபா.)

**நலம்**-1. அழகு. (சூ.நிக.அ:உச.) 2. அன்பு. (சிந்தா.) 3. இன்பம், நன்மை. (உ-ம்.) "நலத்துடன்வன்மனைநண்ணுமெல்லையில்" (பாரத. குருகுல. ௬கூ.) 4. உபகாரம். 5. சுகம். 6. செம்மைநிறம். (உ-ம்.) "நலம்பெறுகலிங்கத்துக்குறங்கின்மிசை" (திருமுரு.௧0௯.) 7. நிறம்.(உ-ம்.) "எழினலமந்நலம்" (கலி. கரு.) 8. பயன். 9. மேம்பாடு (உ-ம்) "நலமருவுமிலிங்கபூசனையின்மேன்மை" (சிவரக. அபுத்திபூருவ. கூ) 10. மேம்பாடுடையவன். (உ-ம்.) "நலத்தின்கணாரின்மைதோன்றினவனைக்-குலத்தின் கண்ணையப்படும்" (வள். கூ௬அ.) [ஆகுபெயர்.] 11. விருச்சிகராசி. (4, 5, 11-பிங்கல. கூஎ0அ.)

**நலம்பாராட்டுதல்**—தெய்வப்புணர்ச்சியின் பின்னிகழ்வது. (அகப்பொ. களவிய. கூ.) புனைந்து அழகுசெய்தல் என்றார் சிலப்பதிகாரவுரையில்.

**நலமாலை**—அத்திப்பிசின். (வைத்தியபரிபா.)

**நலவல்**—நாவல். (வைத்தியபரிபா.)

**நலவு**—நன்மை. (வழக்.)

**நலன்**—நலம். இறுதிபோலியாயினிது.

**நலி**—தெரிநிலைவினைப்பகுதி.

**நலித்தல்**—நலிவித்தல்.

**நலிதல்** — 1. அழிதல். (சிந்தா. அரும்பதவுரை.) 2. நெருக்கல் (புறப்பொ.) 3. மெலிதல். 4. வருந்தல். (உ-ம்.) "நாளுநாள்"பார்.

**நலிநீநகம்** — தாமரைத்தண்டு. (வைத்தியபரிபா.)

**நலிவு**—1. அழிவு. 2. நருக்குதல். (புறப்பொ.) 3. மெலிவு. 4. வருத்தம்.

**நலை**—கங்கையிற்சங்கமிக்கு மொருநதி. (அபிதானகோ.) நளையென்றும் பெயருண்டு.

**நவ்வல்**—நாவல் மரூஉ.

**நவ்வி** — 1. அத்தநாள். (சூ. நிக. க: எஉ.) 2. அழகு. (சூ. நிக. அ: உச.) 3. இளமை. (சூ. நிக. அ: உஎ.) 4. தோணி. (சூ. நிக. கக: வகரவெ. கச.) 5. மான். (உ-ம்.) "நவ்விவிழிச்சேயிழைமாட்டெய்தி" (பிரமோத். கூ: உ0.)

**நவக்கிரகம்**—ஆதித்தன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சநி, இராகு, கேது என்பன. (உ-ம்.) "பின்னுமுளதேவர் நவக்கிரகமுடுவின்கூட்டம்" (சிவரக. சத்தியவிரத. சகூ.)

**நவக்கிரகவாதிமதம்**— நவக்கிரகங்களாலே சிருட்டிமுதலிய கிருத்தியமுண்டாமென்று வாதிப்பவன் மதம். (த. நி. போ. உஅரு.)

**நவகண்டம்**—ஒன்பதுகண்டம்; அவை: கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம். (சூ. நிக. கஉ: கூகூ.) குருவருடம், இரணியவருடம், இரமியவருடம், இளாவிரதவருடம், கேதுமால்வருடம், பத்திரவருடம், அரிவருடம், கிம்புருடவருடம், பாரதவருடம். (உ-ம்.) "நவகண்

டவெல்லையறிவன்மாதோ" (கந்தபு. அண்ட கோச உரை. ௩௫.)

**நவகோடிசித்தபுரம்** — திருவாவடுதுறை. துறைசையந்தாதியில் நவகோடிசித்த என்னு முதற்குறிப்புள்ள செய்யுளிற்காண்க.

**நவகோணத்தாள்** — உமாதேவி. (உ-ம்.) "நவகோணத்தாட்கிறைவ" (சிவரக. தேவர் முனிவர். க.)

**நவச்சாரம்**—ஒருமருந்து. (வைத்தியபரிபா.)

**நவச்சி**—எவட்சாரம். (வைத்தியபரிபா.)

**நவசிராத்தம்**—முதலாம் மூன்றாம் ஐந்தாம் ஏழாம் ஒன்பதாம் பதினொராநாளிற்செய்யுஞ் சிராத்தம்.

**நவசாரத்தான்**—பொன்மணல். (வைத்திய பரிபா.)

**நவசாரம்**—நவச்சாரம்.

**நவஞ்சம்**—அசமதாகம். (மலையக.)

**நவட்ஃராரம்**—நவச்சாரம்.

**நவட்சி** —எவட்சாரம். (வைத்தியபரிபா.)

**நவத்துவாரம்** — ஒன்பதுவாயில்; அவை: கண்ணிரண்டு, மூக்கிரண்டு, செவியிரண்டு, வாயொன்று குதமொன்று குறியொன்று.(கூர் மபு. அரியயன். சு. உரை)

**நவதளம்** — தாமரைத்தளிர். (வைத்திய பரிபா.)

**நவதாநியம்** — ஒன்பதுதாநியம்; அவை: உழுந்து, எள்ளு, கடலை, கொள்ளு, கோதுமை, அவரை, துவரை, நெல்லு, பயறு என்பன. அவரை என்பது கருமொச்சை. பயறு என்பது பாசிப்பயறை (இதனைப் பொருட்டுகைநிகண்டி லறிக.

**நவதாரணை** — ஒன்பது தாரணை; அவை: சதுரங்கதாரணை, சத்ததாரணை, சித்திரதார ணை, நாமதாரணை, செய்யுட்டாரணை, பொ ருட்குறைநிறைதாரணை, மாயாதாரணை, வச் சிரதாரணை, வத்துத்தாரணை என்பன. (சூ. நிக. கஉ: ௪௦௦.) பிங்கலநிகண்டிற் சிலபெயர் வேறுகூறுவர்.

**நவதாளம்**—ஒன்பதுவகைத்தாளம்; அவை: அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருவதாளம், நிவிர்த்ததாளம், படிமதாளம், விடதாளம் என்பன.(சூ. நிக. கஉ. ௪௦உ.) பிங்கலநிகண்டில் சிலபெயர் வேறு கூறு வர்.

**நவதி**—1. தொண்ணூறு. 2. பொடுதலை. (வைத்தியபரிபா.)

**நவதீர்த்தம்** — நவநதி, ஒன்பதுதீர்த்தம்; அவை: கங்கை யமுனை சரசுவதி நருமதை சிந்து காவேரி கோதாவரி சோணநதி துங்க பத்திரை என்பன. (உ-ம்.) "கங்கைநதியாதி நவதீர்த்தக்கரைநாட்டுள்"(சைவச.ஆசாரிய.உ.)

**நவநாகம்** — 1. அசமதாகம். (மலையக.) 2. ஒன்பதுநாகம்; அவை: அநந்தன் ஆதிசேடன் கார்க்கோடகன் குளிகன் சங்கபாலன் தக்கன் பதுமன் மகாபதுமன் வாசுகி யென்பன. ஆதி சேடனை நீக்கி எட்டுநாகத்திற்கு (சூ. நிக. கஉ: எஅ.) கவிபார், ஆதிசேடனாகிய அரசைச்சேர் த்து நவநாகமென்பர்.

**நவநாதசித்தர்**—சத்தியநாதர் சதோகநாதர் ஆதிநாதர் அநாதிநாதர் வகுளிதநாதர் மதங்க நாதர் மச்சேந்திரநாதர் கடேந்திரநாதர் கோ ரக்கநாதர் என்னு மொன்பது சித்தர். (வேதா சூ. கசு. உரை.)

**நவநீ**—மணிபூரகத்திற்குரிய பத்மதளங்கள் பத்தில் ஒன்றிலுள்ள அதிதேவதை. (சி. சி. அ. உக. மறை.)

**நவநீதம்**—வெண்ணெய். (சூ. நிக. சு: உஎ.)

**நவப்பிரசாபதிகள்**—காசிபர் முதலான ஒன் பதின்மர்.

**நவப்பிரமர்**—மரீசி, பிருகு, அங்கிரா, இருது, புலகன், புலத்தியன், தக்கன், வசிட்டன், அத் திரி என்னும் ஒன்பது முனிவர். (உ-ம்.) "செகு வரை தவிர்ந்தநவப்பிரமரெனச்செப்புவர்"(சூத. சிவமான். ௪௦: கக.) [இவர்களை பிரமாவின் மநத்தினின்று சிருட்டிக்கப்பட்டவராதலால் மாநசபுத்திரரென்று சொல்லப்படுவரென்றும் பிரமாவைப்போலப் படைக்குந்தொழிலுடைய வராதலால் நவப்பிரமரென்றுஞ் சொல்லப்படு வர்.]

**நவப்பிரீதி**—பொட்டிலுப்பு. (வைத்திய பரிபா.)

**நவபண்டம்**—நவதாநியம். (உ-ம்.) "எல்லை தீர்நவபண்டமுமெடுத்துவாய்மடுத்தான்" (திரு விளை. குண்டோ. கரு.)

**நவபுண்ணியம்** — ஒன்பது புண்ணியம்; நீத்தவர்க்குச்செய்வன, அவை: அமுதமேந்தல், அருச்சித்தல், ஆசநத்திருத்தல், எதிர்கொளல், தாள்கழுவுதல், தீபங்காட்டல், தூபங்கொடுத் தல், பணிதல், புகழ்தல் என்பன. (சூ. நிக. கஉ: கூஅ.)

**நவபேதம்**—சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் எனச் சுத்தமாயையிலே சிவன் கொள் ளப்பட்ட ஒன்பதுவர்க்கமாகிய திருமேனிகள். (சி. சி. உ: எச. ஞானப்.)

**நவம்**—1. ஒன்பது. 2. கார்காலம். 3. கேண் மை. 4. சாரணை. (மலையக.) 5. பாம்பு. (வைத் தியபரிபா.) 6. புதுமை. (உ-ம்.) "நன்னயங்

கொள்சங்கீதப்ரசங்கமுநவநவம்பெறுநாட்டியப் புக்கமும்" (சி வ ர க. தேவிநாட்டியம். உக.) (1, 2, 3-சூ. நிக. கஉ. வகரவெ. க.)

நவமணி — ஒன்பது இரத்தினம்; அவை: கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வயிடூரியம் என்பன. (உ-ம்.) "அம்பொன் நவமணிக்கலன் பொன்னுடைநல்கினுன்" (திருவிளை. மெய்க்காட். ௩௬.) (சூ. நிக. கஉ: ௧௦௩.)

நவமணிமாலை—1. ஒன்பதுவகைமணிமாலை. 2. வெண்பாமுதலாக வேறுபட்டபாவும் பாவினமும் ஒன்பதுற அந்தாதியாகப்பாடுமோர் பிரபந்தம். (உ-ம்.) "வெண்பாமுதலா வேருரொன் பது-நண்பாக்கூறனவமணிமாலை" (இலக்கண வி. அ௩.)

நவமாலி—மனோசிலை. (வைத்தியபரிபா.)

நவமி—ஒன்பதாந்திதி. (உ-ம்.) "சத்தமி" பார்.

நவரசம்—ஒன்பதுசுவை; அவை: அற்புதம், இரௌத்திரம், கருணை, குற்சை, சாந்தம், சிங்காரம், பயம், பெருநகை, வீரியம் என்பன. (சூ. நிக. கஉ: ௧௦௪.)

நவரத்திநம்—நவமணி. (வழக்.)

நவர்தம்—நவரசம். (வழக்.)

நவராத்திரி—கன்னிமாதத்தில் இலக்குமி சரசுவதி துர்க்கையாகிய சத்திகளைப்பூசிக்கும் ஒன்பது தினம். (அபிதாநசி.) பூசித்தோர் சத்துரு செயம் போகம் ஞானம் பெறுவர்.

நவரோசு — ஓரிராகம். இதனைக்காந்தாரமென்னும் பண்ணேடுதம்போதுசேர்த்துஞ் சொல்வர்.

நவலோகம்—ஒன்பதுவகைலோகம். (வழக்.)

நவலோகாங்கம்—காந்தம்.(வைத்தியபரிபா)

நவவிதபிரபஞ்சம்—பஞ்சமகாபூத முதலாகிய நவவித சமுசாரம். (வாசுதேவ. ௧௪௩.)

நவவியாகரணம் —கிரந்தவிலக்கணமாகிய ஒன்பது வியாகரணம்.

நவவியூகம்—காலவியூகம், குவ்வியூகம், நாமவியூகம், ஞானவியூகம், சித்தவியூகம், நாதவியூகம், விந்துவியூகம், கலாவியூகம், சிவவியூகம்.

நவவிலாசசபை — அதிதூதர், சத்துவகர், ஞானாதிக்கர், தூதர், நாதகிருத்தியர், பத்திச்சுவாலகர், பத்திராசனர், பலவத்தர், பிராதமிகர் என்னுமொன்பதுவகைச் சுத்தான்மாக்கள் கூடிய தேவசபை.

நவனுகம்—ஓமம். (வைத்தியபரிபா.)

நவாங்கிசம்—1. இராசியையொன்பதாய்ப் பகிர்தல். (வருஷாதிநூல் பார்.) 2. ஒன்பது பங்கு.

நவித்தல் —அவித்தல். (சூ. நிக. க: உக.)

நவியம்—1. கோடாலி. (உ-ம்.) "வடநவினவியம்" (புறநா. உ௩.) 2. புதியது. 3. மழு. (சூ. நிக. எ: உ.)

நவியம்பாய்தல்—வெட்டுதல். (புறநா.)

நவிர்—1. ஆண்மயிர். 2. மருதயாழ்த்திறம். 3. வாள். (1, 2, 3- சூ. நிக. கக. வகரவெ. ௧௦.)

நவிரம்—1. ஆண்மயிர். 2. உச்சி. 3. ஒருமலை. (உ-ம்.) "பேரிசைநவிரமேஎவுறையும்" (மலைபடு. அஉ.) 4. தலை. (உ-ம்.) "நனையுலாவனசத்தலர்வேதனூர்நவிரம்வேறுபடுத்தது" (சேதுபு.காயத்திரி.௩எ.) 5. புன்மை. 6. மயில். 7. மலை. 8. வாள். அம் சாரியை. (1, 2, 3, 6, 7-பிங்கல. ௩எகக.)

நவிரேழசங்கு—முட்சங்கு. (வைத்தியபரிபா.)

நவில் — தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "கொன்னவில்குறவர்" (கந்தபு. வள்ளி.ககஎ.)

நவிலல்—1. கூறியடிப்படுதல். (உ-ம்.)"நல்லோர்குழீஇயநாநவிலவையத்து" (மலைபடு. எஎ.) 2. செய்தல். (உ-ம்.) "கொன்னவில்குறவர்மாதர்குயிற்றியகோலநீங்கி" (கந்தபு.வள்ளி. ககஎ.) 3. சொல்லல். (உ-ம்.) "நவிலலுற்றதெனன்னையே" (சிவரக. தேவியுடன். ௬.) பயிலுதலெலன்பர். (புறநா.) 4. பழகுதல். (புறப்பொ.)

நவிலுதல்—நவிலல்பார்.

நவிற்சி—நவிற்றல்.

நவிற்றல்—நவிறல்.

நவிற்றுதல் — 1. ஆராய்தல். (பரிபாடல்.) 2. சொல்லல்.

நவிற்றும்—தலைப்படும். (பரிபாடல்.)

நவிறல்—சொல்லல்.

நவின்றதை—நவின்றது. ஐ சாரியை. (பரிபாடல்.)

நவின்று — 1. பயின்று. (பத்துப்பா.) 2. மிக்கு. (பரிபாடல்.)

நவின்றோர்—பயின்றோர். (பரிபாடல்.)

நவின்றோர்க்கினிமை — நூலின் பத்தழகினொன்று; அது: கற்போனுக்குத்திருத்திப்படித்துகை. (நன். ௧௩.)

நவீநம்—புதிது.

நவை—குற்றம். (உ-ம்.) "நாடுங்காற்றோன்றுநவை" (இன்னிசை. ௧௬: உ)

நவோத்திருதம்—வெண்ணெய். (வைத்தியபரிபா.)

நழக்கம்—மழுங்கல். (வழக்.)

நழுக்கு—1. நழுக்கம். 2. தெரிநிலைவினைப் பகுதி.

**நழுக்குதல்**—மழுங்கல். (வழக்.)

**நழுங்கல்**—மழுங்கல். (வழக்.)

**நழுவல்**—1. வழுவுதல். (உ-ம்.) "சிகையவிழவுடைநழுவ" (கோயிற்பு. பதஞ்சலி. ௨௭.) 2. விலகல். (வழக்.)

**நழுவுதல்**—1. வழுவுதல். 2. விலகல். (1, 2- வழக்.)

**நள்**—1. உச்சிப்பொழுது; இது நடு என்பது ஆகுபெயராயுச்சிப்பொழுதை யுணர்த்தியது. 2. செறிவு. (மணிமே.) 3. நடு. (உ-ம்.) "ஆதி நள்ளந்தம்மில்லாவரும்பெருஞ் சோதியான்" (அருணகிரிபு. அருணைசலோதய. ௨௯.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. நள்ளென்னுமோசை. (புறநா.) 6. மிகுதிப்பொருடருமோரிடைச்சொல்.

**நள்ளல்**—நட்பாகப்பொருந்துதல். (உ-ம்.) "பண்பின்மகளிர்நயன்றூக்கிநள்ளாவிடல்" (வள். ௧௧௨.)

**நள்ளலர்** — நள்ளார், நள்ளலர் எனினும் நள்ளலார் எனினுமொக்கும்.

**நள்ளார்**—பகைவர். (உ-ம்.) "நள்ளார்சமர்த்தொழில்கடந்ததண்டகனும்" (கந்தபு. திருநகரப். ௮௭.)

**நள்ளாறு**—ஒரு சிவஸ்தலம். (உ-ம்.) "கடஞைநள்ளாறுகாறாயில்கோளரியூர்" (கந்தபு. கந்தவிரத. ௧௧௮.)

**நள்ளி**—1. கடையெழுவள்ளலிலொருவன். (உ-ம்.) "கொள்ளாரோட்டியநள்ளியும்" (புறநா. ௧௫௮.) 3. கற்கடகவிராசி. (சூ. நிக. ௯: ௬௪.) 4. நண்டு. (சூ. நிக. ௬: ௭௭.)

**நள்ளிருணாறி**—இருவாட்சிப்பூ (உ-ம்.) "நரந்தநாகநள்ளிருணாறி" (குறிஞ்சி. ௯௪.)

**நள்ளிருள்**—1. செறிந்தவிருள். (உ-ம்.) "நள்ளிருள்செய்க்குஞ்செய்யநகைமணிக்கொடிஞ்சித்தேரும்" (நைடத. சுயம்வர. ௬.) (புறப்பொ.) 2. நடுவிரா.

**நள்ளு**—நடு. உகரஞ்சாரியை.

**நள்ளுதல்**—நட்புக்கொள்ளுதல்.

**நள்ளுநர்**—சிநேகிதர். (சூ. நிக. ௨: ௫௨.)

**நள்ளென்யாமம்**—நள்ளென்னுமோசையையுடைய யாமம். (உ-ம்) "நள்ளென்யாமத்துப்பள்ளிகொள்ளான்" (நெடுநெல். ௧௮௬.)

**நள்ளென்னுமோசை**—அநுகரணவோசை. நிகண்டிற்கூறிய அநுகரணவோசைகள்போல் இதுவுமொன்றென்க.

**நள**—வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களிலே ஐம்பதாவதாண்டு. (வருஷாதிநூல்.)

**நளகூபரன்**—குபேரன்மகன். (அபிதாநசி.)

**நளத்தம்**—சடாமாஞ்சி. (மலையக.)

**நளம்**—1. சிற்பநூன்முப்பத்திரண்டி னொன்று. தாமரை. (வைத்தியபரிபா.)

**நளப்பால்**—வெட்பாலை. (வைத்தியபரிபா.)

**நளபள்**—சணல். (வைத்தியபரிபா.)

**நளல்**—நண்டு. (வைத்தியபரிபா.)

**நளன்** — 1. இராமர்முதலானவர்கள் இலங்கைக்குப்போவதற்குச் சேதுவிலணைகட்டிய ஒரு குரங்கு. (இராமா. சேதுபந்தனப். ௯.) 2. நிடதநாட்டையரசாண்டவோரரசன்; இவன் அறுவகைச்சக்கிரவர்த்திகளிலும் முதலெழுவள்ளர்களிலும் ஒருவன். நைடதம்பார்.

**நளி**—1. குளிர்ச்சி. (உ-ம்.) "மரம்பிறங்கிய நளிச்சிலம்பு" (புறநா. ௧௩௯.) 2. கூட்டம். (உ-ம்.) "ஒளிதிகழ்திருந்துமணிநளியிருளகற்றும்" (புறநா. ௧௭௨.) 3. செறிவு. (உ-ம்.) "நளியிருமுன்னீர்" (புறநா. ௬௬.) 4. தேள். (வைத்தியபரிபா.) 5. பெருமை. (உ-ம்.) "நளிகடல்" (புறநா. ௪௨௬.) 6. வெண்சாறடை. (உ-ம்.) "ஒலிவேலைநளிசங்கு" (தைல. தைலவ. ௭௨.)

**நளிகை**—மூங்கிற்குழாய். (உ-ம்.) "நளிகைக் கழுக்குவந்தநாசமெனநாடி" (ஒளிவில். துறவு. ௭.)

**நளிதல்**—செறிதல். (பதிற்றுப்.)

**நளிந்து**—செறிந்து. (உ-ம்.) "நளிந்துபலர் வழங்காச்செப்பம்" (மலைபடு. ௧௯௭.)

**நளிநம்**—1. இங்கிதம். (வழக்.) 2. தாமரை. (உ-ம்.) "நாளங்கொள்நளிநப்பள்ளி" (இராமா. சூர்ப்பணகை. ௬.) 3. பரிகாசம் (உ-ம்.) "பயிலுமானவர்பேசநளினமே" (சேதுபு. நாட்டு. ௧௧௫.)

**நளிநி**—1. இலக்குமி, சரஸ்வதி. 2. ஒரு பாலாரிட்டதேவதை. (வி-ணி. ௨௩௮.) 3. தாமரை வாவி. மீனாட்சிபிள்ளைத்தமிழ் முப்பத்துமுக்கோடிதேவர் துதியிற்காண்க.

**நளிநை**—இலக்குமி, சரஸ்வதி.

**நளிர்**—1. குளிர். 2. நண்டு. 3. நெருக்கம். 4. பெருமை. (உ-ம்.) "நளிர்புனன்மதுரை மூதூர்" (திருவிளை. நான்மா. ௫.) (1, 2, 3, 4- சூ. நிக. ௧௧: ௭கரவெ. ௯)

**நளுங்கு**—ஒருகிளிஞ்சில். (வழக்குப்போலும்.

**நளை**—1. ஏலத்தோல். (வைத்தியபரிபா.) 2. கங்கையில்சங்கமிக்குமொருநதி. (அபிதாநசி.)

**நற்கீரன்**—நக்கீரன்.

**நற்கு**—நன்கு. (உ-ம்.) "அதுநற்கறிந்தனையாயின்" (புறநா. ௩௫.) [விகாரம்.]

**நற்குணம்பத்து**—மெய்யுரைத்தல், நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படுசொல், என்கின்ற வாக்கின்குணம்நாலும், பள்ளிவலம்வருதல், தவம்புரிதல், தாநஞ்செய்தல், என்கின்ற

காயத்தின்குணம் மூன்றும், அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்கின்ற மநதின் குணமூன்றுமாம். (சி. சி. அ: ௧௨. நிரம்ப.)

நற்சங்கலிதம் — ஒன்றுதொடுத்து முறையே தாளங்களேறிநிற்பது.

நற்சாங்கம்—சாலம்பபாஷாணம். (வைத்தியபரிபா.

நற்சாந்து—1. சந்தநம். 2. சுண்ணச்சாந்து.

நற்சாரி—நவச்சாரம். (வைத்தியபரிபா.)

நற்சீந்தில் — பலவகைச்சீந்திற்கொடியிலே ஒருவகைச்சீந்திற்கொடி.

நற்சீரகம் — கறிச்சீரகம். (உ-ம்.) "சுக்கு வசம்பு நற்சீரகம். (தைல. தைலவ ௯௯.)

நற்செங்கல்—மஞ்சட்காவிக்கல்.(வைத்தியபரிபா.)

நற்பரங்தன்றி—சிந்துலவணம். (வைத்தியபரிபா.)

நற்பலம்—வெட்பாலை. (மலையக.)

நற்பிரியம்—1. பற்படாகம். (மலையக.) 2. மிகுபக்ஷம். (வழக்.)

நற்போர் — அறத்தாற்பொருகின்றபோர். (உ-ம்.) "மூக்கோலசைநிலைகடுப்பநற்போர்" (முல்லை. ௬௮.)

நற்றாய்—பெற்றதாய். (உ-ம்.) "செவிலிநற்றாய்தோழியாகி"(அகப்பொ.அகத்திணை.௧௧௧.)

நற்றிணை—ஒரு நூல்.

நற்றுடி—1. நாகமரம். 2. வேர். (1, 2-பிங்கல. ௬௭௧௫.)

நற்றுளி—1. அத்திப்பிசின். 2. அத்திமரம். (1, 2-வைத்தியபரிபா.)

நற்றூபம்—சாம்பிராணி. (உ-ம்.) "நாரொடு மூக்குந்திருக்கநற்றூபம்" (தைலவ. தைலவ. ௧௯௫.)

நறம்பநுப்பு—இஞ்சி. (வைத்தியபரிபா.)

நறவம்—1. அரத்தை. (உ-ம்) "நறவந்திரி கடுசிவனிமதரஞ்சசிவசை" (தைல. தைலவ. ௬௭.) 2. அனிச்சமரம். (உ-ம்.) "தண்டளிர்நறவமெங்கும்" (பெரியபு.திருநாட்.௨௬.) 3. கள். (இராமா. நாட்டுப். அ.) 4 குங்குமமரம். (மலையக. 5. ஞாழல். (மலையக.) 6. தேள். (வைத்தியபரிபா.) 7. நாறைக்கொடி. (உ-ம்.) "நந்தி நறவநறும்புன்னாகம்" (குறிஞ்சி. ௯௧.)

நறவு—1. கள். (உ-ம்.)"குறைவின்றுபருகி நரவுமகிழ்ந்து" (மலைபடு. ௪௭௨.) 2. குங்குமமரம். (மலையக.) 3. தேன். (உ-ம்.) "நறவார் மந்தாரவரும்பு" (கோயிற்பு. வியாக்கிர. ௨௧) 4. தேனாற்சமைத்தமைத்தது.(கலி.௪௭௭.உரை) 5. மலரினொருவகை. (பதிற்றுப்.)

நறளை—ஒரு பூடு; இது: சிறுநறளை, பெருநறளை, புளிநறளை என மூவகைப்படும். (வைத்தியபரிபா.)

நற—1. கள். (உ-ம்.) "நனையிஞனந்துநறு" (நான்மணிக். ௭௭.) 2. தேன். 3. நறவம்பூ. (பரிபாடல்.) 4. வாசனை.(2,4-வைத்தியபரிபா.)

நறஅ—நறவு. (உ-ம்.) "நறு அவவிழ்ந்தன்ன வென்மெல்விரற்போதுகொண்டு" (கலி. ௭௫.)

நறியது—நல்லது.

நறிவிளா—நிலவிளா. (வைத்தியபரிபா.)

நறு—நறுமை. மை விகுதியின்றி வந்தது.

நறுக்கு—1. துண்டு. (வழக்.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

நறுக்கத்திப்பிலி — தேசாவரம் என்னுஞ் சரக்கு. (வைத்தியபரிபா.)

நறுக்குதல்—தண்டித்தல் (வழக்.)

நறுக்குமூலம்—1 திப்பிலிக் கொட்டை. (தைலவ.) 2. வெட்டிவேர். (வைத்தியபரிபா.)

நறுங்கடி—நறியவூறுகாய். (உ-ம்.) "மாங்காய்நறுங்கடிகூட்டுவேம்" (கலி. ௧0௯.)

நறுங்கரந்தை—ஒருகரந்தை. நாறுகரந்தையென்பர்.

நறுஞ்சுதை—நல்லபசும்பால். (தைலவ.)

நறுந்தாளி—பசுந்தாளி.ஓர்கொடியென்றும், வாசனைத்தாளியென்றுங்கூறுவர். (வைத்தியபரிபா.)

நறுந்தொகை — அதிவீரராமபாண்டியன் செய்த ஒரு சிறிய நீதிநூல். (அபிதானசி)

நறுநீலது—நறுந்தாளி (வைத்தியபரிபா.)

நறுநறெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.

நறுநாற்றம்—சுகந்தம். (வழக்.)

நறுநெய்—பசுநெய். (வைத்தியபரிபா.)

நறும்பலா—ஈரப்பலா. (வைத்தியபரிபா.)

நறும்பிசின் — சாதிசம் என்னும் பிசின். (வைத்தியபரிபா.)

நறும்புல்—ஒருவகைப்புல். (உ-ம்.) "நரந்தை நறும்புன்மேய்ந்தகவரி" (புறநா. ௧௩௨.)

நறும்புனல்—பத்துத்துவரிலும் ஐந்துவிரையிலும் முப்பத்திருவகை ஓமாலிகையிலும் ஊறியநீர். (கந்தபு. குமாரபுரி. ௬௬. உரை.)

நறுமநப்பு—இஞ்சி. (வைத்தியபரிபா.)

நறுமாதுலம் — தித்திப்புமாதுளை. (உ-ம்.) "கொளுஞ்சிநறுமாதுலமுட்சங்கு" (தைல. தைலவ. ௧௯௫)

நறுமுதல்—பற்கடித்தல். (வழக்.)

நறுமுறுத்தல்—உறுமுதல். (வழக்.) பொறுமையுறுதலென்றுங்கூறுவர்.

நறுமுறெனல்—நறுமுறுத்தல். (வழக்.)

**நறுமை** — 1. நன்மணம். (ஐங்குறு.) 2. நன்மை. (சூ. நி. அ: ௬௯.)

**நறுவியது**—நல்லது. (வழக்.)

**நறுவிலி**-ஒரு மரம். (உ-ம்.) "பாசிலைமென் கொடியின்வடம்பயிலநறுவிலிபுரிந்து" (பெரிய பு. ஆனாய். ௧௫.)

**நறை**—1. இனிமை. (உ-ம்.) "நறைகொள் யாழ்தழீத்தும்புருநாரதர்பாட" (திருவிளை. வர குண. ௫௦.) 2. கள். (பிங்கல. ௧௧௪௬.) 3. குற்றம். (பிங்கல. ௧௮௬௧.) 4. சந்தனம். (பரி பாடல்) 5. தேன். (உ-ம்.) "பூவைநறைவீ போல்" (திருவிளை. மாயப். ஏ.) 6. நறுநாற்றம். (திருமுரு. ௧௧௦. அடி. உரை.) 7. நறும்புகை. (சூ. நி. க: ௫௧.) 8. நறைக்கொடி. (உ-ம்.) "நறை கார்த்தொடுத்தவேங்கையங்கண்ணி" (புறநா. ௧௬௮.) 9. புகை. (உ-ம்.) "நறையொடுதுக ளென" (கலி. ௪௦௧)

**நறைக்காய்** — சாதிக்காய். (உ-ம்.) "பைங் கொடிநறைக்காய்" (திருமுரு. ௧௯௦.) [நறு நாற்றத்தையுடையகாய் என்பது பொருள்.]

**நன்கனம்**—நன்றாக. (பரிபாடல்.)

**நன்காடு**—இடுகாடு. (நன். ௨௬௭. உரை.) [இது மங்கலம்.]

**நன்கு** — 1. அழகு. (சூ. நி. அ: ௨௪.) 2. நன்மை. (உ-ம்.) "கற்புடையாடன்மணாளரை விட்டிங்குறைகின்றதுநன்குறுமோ" (சிவரக. தேவியிமையம். ௪) 3. மிகுதி. (உ-ம்.) "உப தேசித்தல்"பார். (பரிபாடலில். மிக என்பர்.)

**நன்செய்**—நெல்விளைநிலம். (வழக்.)

**நன்பகல்**—1. அடியொத்தகாலம். (உ-ம்.) "வளைவாய்க்கூகைநன்பகற்குழறவும்" (பட்டி ன. ௨௬௮.) 2. உச்சிக்காலம். (உ-ம்.) "நன்பகல வணீத்து" (கலி. எ௪.) 3. எப்பொருளும்நுகர் தற்குநன்றாகிய பகல். (உ-ம்.) "என்பெழுந்தி யங்குமியாக்கையர்நன்பகல்" (திருமுரு.௧௩௦.)

**நன்பகலந்தி** — நன்றான உச்சிக்காலமான சந்தி. (உ-ம்.) "நன்பகலந்திநடையிடைவிலங்க லில்" (பொருந. ௬௬.)

**நன்பன்**—சணல். (மலையக.)

**நன்பால்**—நல்லொழுக்கம். (சித்தா.)

**நன்மை**—நன்கு. (உ-ம்.) "இம்மூன்று-நன் மைபயத்தலில்" (திரிகடு. ௪௦.) 2. மிகுதி. (உ-ம்.) "நல்லமழை-நல்லவெயில்என்பவற்றிற் போல" உலகவழக்கிற்காண்க.

**நன்மைகடைப்பிடித்தல்** — தயாவிருத்தி யெட்டினொன்று.

**நன்மொழி**—தேவபாணி. (உ-ம்.) "சீருடை நன்மொழிநீரொடுசிதறி" (பொருந. ௨௪.)

**நன்றி**—1. செய்நன்றி. (உ-ம்.) "நன்றிமறப் பதுநன்றன்று" 2. தருமம். (வள். ௧௭.) 3. நன்மை. (உ-ம்.) "நன்றிசூழ்தருமமுதமாங்கித் தரங்கத்தில்" (சிவரக. மேரு. ௧௧.)

**நன்றியில்செல்வம்**—சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாதசெல்வம். (திருக் குறள். நன்றியில்செல்வமென்னும் அதிகார வுரையிற்காண்க.)

**நன்று** — 1. நல்லது. 2. நல்வினை, அறம். (உ-ம்.) "சான்றோர்செய்தநன்றுண்டாயின்" (புறநா. ௩௪.) 3. நன்மை. (சூ. நி. அ: ௬௯.) 4. பெரிது. (உ-ம்.) "செய்யசந்தநந்தீம்பழமாதி யானைவாரிநடந்ததுநன்றரோ" (சிந்தா. நா மக. அ.)

**நன்னர்**—நன்மை. (சூ. நி. அ: ௬௯.)

**நன்னன்**-மலைபடுகடாமென்னும் பாட்டின் றலைவனதும் அவன்றந்தையினதும் நாமம். (உ-ம்.) "நன்னன்சேய்நன்னற்படர்ந்தகொள் கையொடு" (மலைபடு. ௬௪.)

**நன்னாரி**—1. ஒரு பாற்கொடி. 2. நன்னாரி. (1, 2-வைத்தியபரிபா.)

**நன்னாரியுபயம்** — சிறுநன்னாரி, பெருநன் னாரியென்னு மிருவகை நன்னாரி. (உ-ம்.) "கண்டுபோரங்கி"பார்.

**நன்னூல்**—1. நல்லநூல். 2. பவணந்திமுனி வர்செய்த இலக்கணநூல்.

**நன்னெறி** — 1. சிவப்பிரகாசராற் செய்யப் பட்ட ஒரு நீதிநூல். 2. நல்வழி.

**நனந்தம்**—புன்கு. (மலையக.)

**நனந்தலை** — 1. அகற்சியையுடைத்தாகிய இடம். (உ-ம்.) "கழைபயினனந்தலைக்கறிவளா ரடுக்கம்" (புறநா. ௧௬௮.) 2. நடு. (உ-ம்.) "நாற் றடந்தயிர்கடனனந்தலைநிலங்கீண்டு" (திருவி ளை. அருச்சுழி. ௩.)

**நனம்**—அகற்சி. (உ-ம்.) "கல்லுயர்நனஞ்சா ரற்கலந்தியலுநாடகேள்" (கலி. ௫௨.)

**நனவிற்சுழுத்தி**—சாக்கிரசுழுத்தி. (வழக்.)

**நனவு** — 1. சாக்கிரம், தெளிவு (உ-ம்.) "நனவூடொருபொருளாயிருநயநங்களு நின்றான்" (மதுரைப்பதிற்று. அ௪.) 2. பகல் (உ-ம.) "நனவினுணலம்வாட" (கலி. ௫௨.) 3. மெய்ம்மை. (உ-ம்.) "நனவிற்பாடியநல்லிசை" (பதிற்று. அ௫.)

**நனி**—1. பெருமை. (பிங்கல. ௨௨௨௫.) 2. மிகுதி. (பிங்கல. ௨௩௩௩.)

**நனை**—1. கள். (சூ. நி. ௬: ௩௦.) 2. தேன். (உ-ம்.) "நனைவழிவேம்பன்றேரிற்றண்டிக்கு நம்மையென்னா"(திருவிளை.மாமனுக்கவ்.௩௩.) 3. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "வழுது

ணங்காய்நனைபாணி" (சிவரக. அத்திப்பூ.உரு.) 6. பூமொட்டு. (உ-ம்.) "வேப்புநனையன்ன நெடுங்கட்கள்வன்" (ஐங்குறு. கூ௦.)

நனைத்தல்—ஈரமாக்கல். (உ-ம்.) "புலி"பார்.

நனைதல்—ஈரமாதல். (வழக்.)

நனைப்பு—ஈரமாக்குகை. (வழக்.)

நனைய—அரும்ப. (ஐங்குறு.)

நனையாவிறட்டி — ஆகாசத்தாமரையென்றும், கொட்டைப்பால்என்றுங் கூறுவர். (வைத்தியபரிபா.)

நனைவு—1. ஈரம். 2. நனைதல். (1, 2-வழக்.)

## நா.

நா—1. மணிமுதலியவற்றிணுக்கு. (உ-ம்.) "பணிநாவசைக்கும்படியென்னக்கழுத்தில்வீரமணிநாவசைப்ப" (திருவிளை. மாயப். கசு.) 2. நடு. (சூ. நிக. ரு: ஈசு.) 3. நாக்கு. (உ-ம்.) "தீயினாற்சுட்டபுண்ணுள்ளாறுமாறாதே — நாவினாற் சுட்டவடு" (வள். கஉக.) 4. வார்த்தை. (உ-ம்.) "நம்பிநாவினுலகமெல்லாம்" (சிந்தா. நாமக. உஅஎ.) [ஆகுபெயர்.]

நாக்கப்பூச்சி—நாங்கூழ். இதற்குப்பூநாகம் என்றும் பெயருண்டு. (வழக்.)

நாக்கனிடுங்கூர்மை — கெந்தகலவணம். (வைத்தியபரிபா.)

நாக்கு—நா. (உ-ம்.) "கொடுநாக்கெறிந்து" (திருவிளை. மாயப். கக.)

நாக்குப்புற்று—ஒரு நோய். (வழக்.)

நாக்குழக்கு—1. நடுவெறுத்தான். 2. மூக்கிரட்டை. (1, 2-வைத்தியபரிபா.)

நாக்குழறல்—வாய்வெருவல். (உ-ம்.) "நாக்குழறிப்-பாடினுர்" (பாரத. இராசசூய. கசக.)

நாக்குழிஞ்சான்—ஒரு செடி. (வழக்.)

நாககந்நி— } நாகலோகத்துப் பெண்.
நாககன்னிகை— } (வழக்.)

நாககர்ணம்—செவ்வாமணக்கு. (வைத்தியபரிபா.)

நாககற்பம்—செவ்வீயம். (வைத்தியபரிபா.)

நாககேந்நி—1. கேர்வாளம். 2. வஞ்சிக்கொடி. (1, 2-வைத்தியபரிபா.)

நாககேசரம்—சிறுநாகப்பூ. (வைத்தியபரிபா)

நாககேனி—பெருமருந்து. (வைத்தியபரிபா.)

நாகசந்திரன் — சைநசமயத்திற் சொல்லப்படும் இருபத்துநான்கு தீர்த்தகருளொருவன். (த. நி. பொ. உஎசு.)

நாகசம்—1. சிந்தூரம். 2. வங்கம். (1, 2-வைத்தியபரிபா.)

நாகசம்பவம்—செவ்வரம். (வைத்தியபரி.)

நாகசிருவிகை—சிவந்தபாஷாணம். (வைத்தியபரிபா.)

நாகசிந்நம்—ஒருகுழல். (வழக்.)

நாகசீவநம்—துத்தநாகம். (வைத்தியபரிபா.)

நாகணம்—1. ஒருபரிமளத்திரவ்யம். (தைல. தைலவ. சஉ: உரை.) 2. நகம். 3. கேர்வாளம். (1, 2-வைத்தியபரிபா.)

நாகணவாய்—நாகணவாய்ப்புள். (சூ. நிக. கூ: ருசு.)

நாகணை—சர்ப்பசயநம். (உ-ம்.) "நாகணைமீதுகண்டுயிலும்" (கூர்ம. தக்கவமி. உரு.) [நாகம். அ-ம் கடைக்குறை.]

நாகதகநி—ஓர் மரம். (வைத்தியபரிபா.)

நாகநந்தி—ஒரு மரம். (வைத்தியவகராதிகளிலில்லை.)

நாகதாளி—ஒரு மரம். (வைத்தியபரிபா.)

நாகதாளிக்கள்ளி—ஒரு மரம். (வைத்தியபரிபா.)

நாகதீபம்—ஐந்தலைவிளக்கு. (வழக்.)

நாகதேந்தி—கேர்வாளம். (வைத்தியபரிபா.)

நாகதெய்வம்—இந்துப்பு. (வைத்தியபரிபா.)

நாகதேனி—பெருமருந்து. (மலையக.)

நாகந்தி—நாகணம். (இது கேர்வாளம்.)

நாகநகர்—பவணலோகம். சைநர் வழக்கு. (சிந்தா.)

நாகணம்—சங்கு. (வைத்தியபரிபா.)

நாகப்பசீலை—ஓரிரத்திநம்.

நாகப்பூ—சிறுநாகப்பூ. (வைத்தியபரிபா.)

நாகபூச்சி—நாங்கூழ்ப்பூச்சி. (வைத்தியபரிபா.)

நாகபட்டினம்—ஓரூர். (இது கடலருகிலுள்ளது.)

நாகபடம்—1. ஒரு காதணி, மாதரணிவது. 2. பாம்பின்படம். (வழக்.)

நாகபந்தம் — ஒருவகைச்சித்திரகவி; அது: இரண்டு பாம்புகள்புணர்ந்து விளையாடுவன போலத் தோன்றும்படி உபதேசமுறைப்படி சித்திரித்த அறைகளிலே எழுத்துக்களைத்தொகையிற்சுருங்கிப் பொதுவாகநிற்கும்படி அமைத்துப்பாடப்படுவது. (தண்டி. கூரு) [நாகம்-பாம்பு. பந்தம் சிறை, ஒடுக்கம்.] அட்டநாகபந்தமுமுண்டு.

நாகபந்து—அரசமரம். (வைத்தியபரிபா.)

நாகபலை—நாகமல்லி. (உ-ம்.) "ஆமலகி"பார். (தைல. தைலவ. கூ௦.)

நாகபாசம் — 1. ஒரு முடிச்சு. (சைவச. பொது. கசரு. உரை.) 2. பாம்புருவானவோர் படைக்கலம். (உ-ம்.) "நாகபாசப்படலம்" (இராமா.)

நாகபாடாணம்—ஒரு பாடாணம்.

நாகம் — 1. ஆகாயம். (சூ. நிக. கக. ககர வெ. ச.) 2. கஞ்சாங்கோரை. 3. காரீயம். (சூ. நிக. சு: கூ.) 4. குரங்கு. (உ-ம்.) "நாகத்தை நாகம்பிடித்துக்கொண்டேயொரு நாண் முழுதும்" 5. சுரபுன்னை.(உ-ம்.)"நாகநறுமலருதிர" (திருமுரு. ௩0௨.) 6. ஞாழல். 7. துத்தநாகம். 8. தேவலோகம். 9. நஞ்சு. (உ-ம்.) "ஆனைத்தீயமுதங்கண்ட-பையணைகம்போல" (சிந்தா. நாமக. ௩௯௪.) [ஆகுபெயர்.] 10. நற்புடவை. (உ-ம்.) "கூலம்"பார். 11. நாகப்பச்சை. [ஆகுபெயர்.] 12. நாகப்பூ. (உ-ம்.) "நரந்தநாகநள்ளிருணறி" (கு-பா. கூச.) 13. நாகபாடாணம். 14. நாகலோகம். 15. பாம்பு. (உ-ம்.) "படத்திறற்பெரியநாகங்கடிப்பது" (அரிச்ச.மயாந. எ.) 16. புன்னைமரம். (உ-ம்.) "தண்டலை"பார். 17. மலை. (உ-ம்.) "நாகத்தனியொருவில்லியை" (இராமா. கரன்வதை. கூஎ.) 18. யானை. (உ-ம்.) "நாகத்தைநாகமணுகக்கண்டு" 19. விலாமிச்சவேர். (2, 6, 7, 19-வைத்தியபரிபா.) (4, 18-தனிப்பா. 2-ம் பாக. சஞ0)

நாகமல்லி—நாகமல்லிகை.

நாகமல்லிகை—ஒருமல்லிகை; இது: அனிச்சமென்பர். (வைத்தியபரிபா.)

நாகமம்—சுக்கு. (வைத்தியபரிபா.)

நாகமர்தா—துளசி. (வைத்தியபரிபா.)

நாகர்—1. சர்ப்பசாதிகள். 2. தேவர். (உ-ம்.) "நாகம்வேட்டுறைநாகரை" (சேதுபு. சேதுச். சக.)

நாகரகம்— } தேன்முரடை (வைத்தியபரிபா.) (மலையக.)
நாகரங்கம்— }

நாககாணம்—செவ்வாமணக்கு. (வைத்தியபரிபா.)

நாகாத்திநம்—நாகமணி. (வழக்.)

நாகரம் — 1. ஒரு பாடை. 2. ஒருவண்டு. (சூ. நிக. ௩: எசு.) 3. தேன்முரடை. 4. சுக்கு. (3, 4-வைத்தியபரிபா.)

நாகரன்—நகரத்தான்.

நாகராகம் — ஒரு பண். (சிலப். வேனிற். ௩௫. உரை.)

நாகராதித்தைலம்—சுக்குத்தைலம். (உ-ம்.) "கடத்திலிடுநாகராதித்தைலம்" (தைல. தைலவ. உ.)

நாகரி—1. குருக்கத்தி. (சூ. நிக. ச: ரு.) 2. தவசிமுருங்கை. (வைத்தியபரிபா.) இதனை, நாகரிசம் என்றுங்கூறுவர்.)

நாகரிகம்-கண்ணோட்டம்.(உ-ம்.)"நயத்தக்க நாகரிகம்வேண்டுபவர்"(வள்.ருஅ0.)[நாகரீகத்திற்கு உள்ளபொருளெல்லாம் இதற்கும் வரும்.]

நாகரிகர்—நகரமுடையோர். (உ-ம்.)"காஞ்சிநாகரிகராலிவர்" (திருவிளை. மெய்க்கா. ௩௩.) நகரவாசிகள் என்பது கருத்து.

நாகரீகசெம்பு—தண்டு.(வைத்தியபரிபா.)

நாரீகம்—1.கண்ணோட்டம்.(சூ.நிக.அ:ச0.) 2. சாதுரியம். (உ-ம்.)"வாகுசேர்தருவடிவினிற்குணத்தினின்மதியி—ஞகரீகமாமைந்தரைப்பயந்திடுநலத்தில" (சிவரக. தாருக. கூ) 3. விநோதம். (உ-ம்.) "நாகரீகந்துன்றுதுகில்வர்க்கமெல்லாம்" (சிவரக. சுகமுநி. ரு.)

நாகரீகர் — 1. சதுரர். (சூ. நிக. உ: சரு.) 2. நகரத்தார்.

நாகநு—குருக்கத்தி. (வைத்தியபரிபா.)

நாகநுசம்—தேன்முரடை. (வைத்தியபரி.)

நாகரேணு—செவியம். (வைத்தியபரிபா.)

நாகன்ரை—ஒரு பூடு. (வைத்தியபரிபா.)

நாகல்—நாவன்மரம். (வைத்தியபரிபா.)

நாகலண்டன் — குய்யாட்டகரிலொருவன். (வி-மணி. உஎக.)

நாகலதை—ஆண்குறி. (வைத்தியபரிபா.)

நாகலம் — பிரதிட்டாகலையில் வாயுதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. உக.)

நாகலோகம் — 1. கீழேழுலகிலொன்று (உ-ம்.) "நீநாகலோகந்தருவழியேசார்க" (கோயிற்பு. பதஞ்சலி. எரு.) 2. தேவலோகம்.

நாகவம்—திரகரணம் நான்கனுளொன்று; அது: அமாவாசையின்பிற்கூறு.(விதாந.பஞ்சா. உக. உரை.)

நாகவல்லி—1. ஒரிதழ்த்தாமரை. (வைத்தியபரிபா.) 2. வெற்றிலை. (உ-ம்.) "மாதவத்தாலித்தைலமமையிஞகவல்லியிற்றோய்த் தருந்து" (தைல. தைலவ. ௯க.)

நாகவள்ளி—1. வள்ளிக்கிழங்கு. (வைத்திய. கருப்பொ.) 2. வெற்றிலைக்கொடி. (வைத்தியபரிபா.)

நாகவாயு—தசவாயுக்களிலொன்று; அது: விக்கல்முதலியவற்றை யுண்டாக்கும். (தத்துவவிளக்கம்.)

நாகவீதியர்—சுவர்க்கலோகத்திற்குச் செல்லும் வழியிலேயுள்ள ஒருவகைத்தேவசாதியார். (உ-ம்.) "மருந்தினுமினியநாகவீதியரென்றுரைப்பர்" (கூர்மபு.தக்கவமி.எ.) [நாகம்-சுவர்க்கலோகம்.]

நாகன் — நாகவாயு; இது: தசவாயுவிலொன்று. (பிங்கல. ௩௮.)

நாகாதிபன்—1. இந்திரன். (உ-ம்.) "நாகாதிபன்மகன்" 2. இமயமலை. (உ-ம்.) "நாகாதிபன் வண்சாரலின்" 3. ஐராவதம். (உ-ம்.) "நாகாதி

பன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான்" 4. சேடன். (உ-ம்.) "நாகாதிபன்மகண்மைந்தனலங்கண்டு" 5. மலையரசன். (1, 2, 3, 4-பாரத. அருச். தீர்த். கo.)

**நாகினி**—1. வஞ்சிக்கொடி. 2. வெற்றிலை. (1, 2-வைத்தியபரிபா.)

**நாகு** — 1. இளமை. (சூ. நிக. அ: உஎ.) 2. எருமைமரைபெற்றம் நந்து என்னுமிவற்றின் பெண். (உ-ம்.) "எருமையுமரையும்பெற்றமுநாகே"நீர்வாழ்சாதியுணந்துநாகே"(தொல்.பொரு. கூகஅ; கூகக.) 3. சங்கு. (உ-ம்.) "தண்டலைநாகங்கணைகழுநீர்முகைசற்றுவிண்ட"(ம-தி.சுo.) 4. நத்தை. (சூ. நிக. கூ: எரு.) 5. புற்று. (உ-ம்.) "எண்கெதிர்நாகுழைசெல்லாமால்" (தைல. தைலவ. கஉo.)

**நாகுலாவி**—நாகதாளி. (வைத்தியபரிபா.)

**நாகுலி**—1. அரத்தை. 2. கிரிபுரண்டான் பூடு. (1, 2-வைத்தியபரிபா.)

**நாகூர்**—ஓரூர். (வழக்.)

**நாகேசுரம்**-1. கும்பகோணத்தருகில் திருநாகேசுரம் என்னும் ஓரூர். 2. சிறுநாகப்பூ. (வைத்தியபரிபா.)

**நாகை**—1. நாகபட்டினம். (நாகைப்புராணத்திற்காண்க.) 2. வெற்றிலைக்கொடி. (வைத்தியபரிபா.)

**நாங்கள்**—நாம். (உ-ம்.) "இந்தக்கிழிவிலைத்துணைப்பொன்னெடுத்துவழங்குக்கொறு நாங்கள்" (திருவிளை. உலவா. கரு.) கள் பகுதிப்பொருள்விகுதி. (சிந்தா.)

**நாங்கூழ்**—நாகப்பூச்சி.(உ-ம்.)"எறும்பிடைநாங்கூழென" (திருவாச. கீத்தல்வி. உரு.)

**நாசகாரி**—கேடுசெய்வோன். (வழக்.)

**நாசகாலம்**—அழிவுகாலம். (உ-ம்.) "நாசகாலம்வரும்பொழுதாண்மையுஞானமுங்கெடுமோ" (பாரத. கீசக. கரு.)

**நாசநட்சத்திரம்** – சுக்கிரன்நின்றநாளுக்குப் பத்தாநாள். (விதாந. குணகுண. சக. உரை.)

**நாசநம்**—நாசம். (வழக்.)

**நாசநன்** — நாசஞ்செய்கிறவன். (உ - ம்.) "திமிரநாசநன்செய்யமேனியன்" (பாரத.சூது. கசக.)

**நாசபோசநி**—ஒருயோகினி.(வி-ணி.உசக.)

**நாசம்**—1. அழிவு. (உ-ம்.) "நம்புபுண்ணியமியாவையுநாசமாம்" (சிவரக. நந்திகேசுரநம.எ.) 2. நாசநட்சத்திரம். (உ-ம்.) "பத்தாஞ்சிதனிலை நாசம்" (விதாந. குணகுண. சக.)

**நாசயோகம்**-மரணயோகம்.(வருஷாதிநூ.)

**நாசி** — 1. மூக்கு. (உ-ம்.) "கைநாசியிற்சேர்த்தி" (அரிச்ச. வேட்டஞ்செய். சகூ.) 2. மேல்வாய்தற்படி. (உ-ம்.) "கொடிசெறிந்திடுசூளிகைதன்னுடனவுணர்தங்குழாங்கொண்டமுடிசிதைந்தனநாசிநீடலையெலாமுடிந்தன" (கந்தபு. சதமுகன்வதை. கசு.) சிந்தாமணியில் வீட்டிறப்பென்பர்.

**நாசிரோகநாசத்தைலம்**—ஒருவகைத் தைலம்; அது: நல்லெண்ணெய் பசுப்பால் இளநீர் முதலியவற்றிலிருந்து வடித்தெடுப்பது. [இதனிலக்கணம். தைல. தைலவ. ருகூ-ம் கவியிற் காண்க.]

**நாசுகம்**—பீர்க்கு. (வைத்தியபரிபா.)

**நாஞ்சிநாடு**—மலையாளம்.

**நாஞ்சில்**—1. கலப்பை. (உ-ம்.) "நாஞ்சிலொப்பநிலமிசைப்புரள்" (புறநா. சகூ.) 2. மதிலுறுப்பு. (உ-ம்.) "மகரதோரணவாயிலுநாஞ்சிலும்" (அரிச்ச. நகர. க.)

**நாட்கால்** — மங்கலப்பந்தரில் முதனாட்டுநடுங்கால். (வழக்.)

**நாட்கூலி**— அற்றைக்கூலி. (வழக்.)

**நாட்கொள்ளுதல்**—முகூர்த்தநாட் கொள்ளுதல். (உ-ம்.) "துமித்தல்"பார்.

**நாட்டம்**-1. அழகு. (சிந்தா.) 2. ஆராய்ச்சி. (உ-ம்.)"அறம்புரிந்தன்னசெங்கோனாட்டத்து" (புறநா. ரு.) 3. ஒரு பண். 4. கண். (உ-ம்.) " வயவர்தோளுநாட்டமுமிடந்துடிக்கின்றன " (இராமா. கரன்வ. எக.) 5. சோதிடநூல். (உ-ம்.) "சொற்பெயர்நாட்டங்கேள்வி" (பதிற்று. உக.) 6. வாள். (3, 6- சூ. நிக. கக. டகரவெ. கரு.)

**நாட்டமைதி** — நாட்டுச்சிறப்பிற்குடையன ஆறு; அவை: குறும்பின்மை, செங்கோல், செல்வம், செழிப்பு, நோயின்மை, விளைவு என்பன. (சூ. நிக. கஉ: சுo.)

**நாட்டல்**—நாட்டுதல். (வழக்.)

**நாட்டவன்**—நாட்டான். (வழக்.)

**நாட்டாண்மை**—ஊரதிகாரம். (வழக்.)

**நாட்டார்**—ஊரார். (உ-ம்.) "நாட்டார்நகையாமனுமேலைவீடெய்த" (திருவாசக. அம்மா.)

**நாட்டியம்** —1. குறிப்பு. (சூ. நிக. அ: கூசு.) 2. கூத்து. (உ-ம்.) "நான்றவார்குழலரம்பையர் நாட்டியங்கண்டான்" (சேதுபு. விதூம. கரு.) 3. புறநடம். (உ-ம்.) "தாண்டவம்நிருத்தம்நாட்டியமென்னும்" (சிலப். அரங். கருஅ. உரை.)

**நாட்டிலமிர்து**-நாட்டிலுண்டாகியஅமிர்து; அவை: செந்நெல், சிறுபயறு, சேதாநறுநெய், கன்னல், கதலி என்பன. (சிந். மண்மக. கூ. உரை.) சேதாவைநீக்கி இளநீரைக்கூட்டி ஐந்தாகக்கூறுவர். (சூ. நிக. கஉ: சஎ.)

நாட்டு–1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நிலை. (சிந்தா.)

நாட்டுக்குற்றம்–ஊருக்குள்ளதீங்கு; அவை: கள்வர், கிள்ளை, தொட்டியர், பன்றி அவமழை, யானை, விட்டில் என்பன. (சூ. நிக. கஉ: எச.)

நாட்டுதல்–நிறுத்தல். (உ-ம்.) "நாட்டினன் குறித்துப்பாயநண்ணுமுன்" (திருவிளை. கான் மாறி. உக.)

நாட்டுப்படை— அறுவகைச் சேனைகளி லொன்று.) (வள். எகூஉ. பரி.)

நாட்டுவலை — வைராசன் என்னும் பிரசா பதியின்புத்திரி. (உ-ம்.)"பொலங்கொடியனைய நாட்டுவலைதனையினிதின்வதுவைசெய் தான்" (கூர்மபு. தக்க. சபித். ௬.)

நாட்டுவெள்ளரி — ஒருவெள்ளரி. (வழக்.)

நாட்டை — ஓர்ராகம்; சூத்திரசாதி: இதன் மனைவிமார் தேசாக்ஷரி, காந்தாரம், சாரங்கம். அதிதேவதை தும்புருவன். (வி-ணி. உகக.) 2. நாட்டையுடையாய். (உ-ம்.) "ஆடுகளங்கடுக் குமகனாட்டையே" (புறநா. உஅ.)

நாட்பறை—நாழிகைப்பறை. (சிலப். அரங். உஎ. உரை.)

நாட்பு—1. போர். 2. போர்க்களம். (உ-ம்.) "விழுமியோர்துவன்றியவன்கணாட்பின்" (பதிற்றுப். சரு.)

நாட்பொருத்தம் — விவாகப்பொருத்தத்து ளொன்றாகிய நட்சத்திரப்பொருத்தம். [இது பெண்ணினுடைய ஜென்மநாளாதியாக 2, 4, 6, 8, 9, 11, 13, 15, 18, 20, 24, 26-ம் நாட்கள் புருஷநாளாகவரில் நட்டத்திரப்பொருத்த முண்டாமென்றறிவது.]

நாடகசாலை—கூத்துப்பயிலுமிடம்.(வழக்.)

நாடகத்தமிழ்—நாடகவழக்குத்தமிழ்; அது: முத்தமிழினொன்று.(நன்னூ.சிறப்புப்.உரை.)

நாடகத்தி—கூத்துவிளையாடும்பெண்.

நாடகம்–1. கதைதழுவிவருங்கூத்து; இது: சாந்திக்கூத்தின் நால்வகைகளுளொன்று.(சிலப். அரங்கேற்று.கஉ.உரை.) 2. கலைஞானமறுபத்து நான்கினொன்று.

நாடகம்பத்து—பத்துவகைநாடகம்; அவை: வாரம், யாமிருகம், அரட்டு, சமுஸ்காரம், பாணம், வீதி, சல்லாபம், உத்திரட்டாக்கம், விராகணம், வியாயோகம் என்பன. [தண்டியலங் காரவுரைகாரர் நாடகம், பிரகரணம், பானம், பிரகசனம், டிமம், வியாயோகம், சமாவாகாரம், வீதி, அங்கம், ஹீயாமிருகம் என்னுமிவையே பத்துவகைப்பட்ட நாடகசாதியென்பர்.]

நாடகர்—கூத்தர் (சூ. நிக. உ: கஅ.)

நாடகவழக்கு — மூவகை வழக்கினொன்று; அஃது: இல்பொருளாய்ப் புகழ்ச்சியிடத்துப் புனைந்துரையாய்த் தோன்றுவது. (தண்டி. கஉஉ. உரை.)

நாடகாங்கம்—அவிநயம். (வழக்.)

நாடகியார்—நாடகியர். (உ-ம்.)"நடராசன்" பார்.

நாடகீயர்—கூத்தர். (வழக்.)

நாடல்—ஆராய்தல். (உ-ம்.) "நாடல்சான்ற மைந்தினோய்" (புறநா. கரு.)

நாடன்—1. குறிஞ்சிநிலமுடையான். (புறநா.) 2. நாடுடையவன்.

நாடன்பநத்தி—ஒரு செடி. (வைத்தியபரி.)

நாடனை — நாட்டையுடையாய். (உ-ம்.) "கானகநாடனைநீயோ" (புறநா. ௫.)

நாடா—நூனுழி. (சூ. நிக. எ: ௫௭.)

நாடார்—சான்றார்க்குரிய ஒரு பட்டப் பெயர். (வழக்.)

நாடி—1. ஆராய்ந்து. (புறநா.) 2. இருபத்து நாலுநிமிடங்கொண்டது, நாழிகை. 3. தாது. வாத பித்த சிலேட்டுமமென்னு மூவகைத் தாதுகளாம். 4. நரம்பு. (சூ. நிக. கக: டகரவெ. எ.) 5. மூக்கு. (உ-ம்.) "நுதல்விழிநாடிவள்ளடிநாக் களங்களினும்" (தைல. தைலவ. கூஎ.) (சிந்தா.) 5. வீட்டினுறுப்பு. (சிந்தா.)

நாடிக்கிரந்தம் — அவை பதினன்குவகை யுள்ளன. (அபிதாநசி.)

நாடிகள்பதினன்கு—பதினன்குவகை நாடிகள்; அவை: சுழிமுனை, பிங்கலை, இடை, சரச்சுவதி, பூடை, வருணை, அத்திசிகுவை, யச்சுவிநி, அலம்புடை, குகு, விசுவோதரை, பயச்சுவிநி, சங்கினி, காந்தாரை என்பன. (உ-ம்.) "மலிதருநாடிபலவுளுஞ்சிறந்து மன்னு நாடிகள்பதினன்கு-பொலிசுழிமுனைபிங்கலையிடை சரச்சுவதிபுரைபூடையேவருணை-மெலிவுறு மத்திசிகுவையயச்சுவிநிவிழையலம்புடைகுகுவே-வலிகெழுவிசுவோதரைபயச்சுவிநிசங்கினியங்குகாந்தாரை" (சூத.ஞாந.கக:௬.) இவற்றுள்ளேபத்துச் சிறந்ததாகச் சித்தாந்தக்கட்டளைகள்கூறும்.

நாடிகேர்ப்பம்—மரமஞ்சள். (வைத்தியபரிபா.)

நாடிபத்து — பததுவகைநாடிகள்; அவை: சுழிமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி என்பன. (தத்துவக்கட்டளைபார்.)

நாடிமூன்று — மூன்றுவகையான நாடிகள்; அவை: சுழிமுனை, இடை, பிங்கலை.

நாடியுப்பு—விளையலுப்பு. (வைத்தியபரிபா.)

நாடு—1. இராச்சியம். பலவூர்களின் கூட்டமென்பர் மணிமேகலையில். (பவத்திற. ௧௧௧. உரை.) 2. உலகின்பொது. (பிங்கல. ௫௫௮.) 3. கண்டம். (உ-ம்.) "அவற்றிடைநாடும்"(கோயிற்பு. வியாக். ௬.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. நானிலத்துக்கும் பொதுப்பெயர். (உ-ம்.) "நாட்டிடம்பரந்துபோகிநாடுதூங்கவென்னு" (சிங். ௧௩௧. ௯௫.) 6. மென்புலம். (பரிபாடல்.)

நாடுதல்—1. தேடுதல். (உ-ம்.) "நாடினுள் கழுகும்பேயும்" (அரிச்ச.மயாந.௧௧.) 2. நினைத்தல். (உ-ம்.) "பரசிவனைக்காட்டு-நன்மார்க்கஞானத்தைநாடி" (சி. சி. அ: ௨௨.) 3. விசாரித்தல். (உண்மைவி. ௨௬. உரை.)

நாடுபடுதிரவியம்—நாட்டிலுண்டாகுந் திரவியம்; அவை: கரும்பு, சிறுபயறு, செந்நெல், செவ்விளநீர், வாழைஎன்பன. (சூ.நிக.௧௨:௬௭.)

நாடுரி — நாவுரி. (நன். ௧௫௪. உரை.) [நாழி-உரி.] மருஉ.

நாண் — 1. இழிதொழில்களின்மநஞ்செல்லாமை. (உ-ம்.) "குடிப்பிறந்துகுற்றத்தினீங்கிவடுப்பரியு-நாணுடையான்கட்டே தெளிவு" (வள். ௫௦௨.) 2. கயிறு. (சூ. நிக. ௭: ௬௦.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பொன்ஞாண்; இஃது ஒரு அணிவிசேடம். (உ-ம்.) "கனநாணணிந்துபொற்கச்சறவீசி" (வாண. ௨௯.) 5. மேகலை. (உ-ம்.) "கருத்துநாணன் றிக்காசுசெய்யும்பொன்மருங்குஞாணுமிழப்பர்" (திருவிளை. வளைய. ௫.) 6. வின்ஞாண். (உ-ம்.) "ஆத்தநாணினருவரைவாங்கினான்" (இராமா. கரன்வ. ௧௭.) 7. வெட்கம். (உ-ம்.) "மண்கொள்ளாநாண்மடமச்சம்பயிர்ப்பைவலிந்தெழலும்" (பெரியபு. தடுத்தா. ௧௪௬.)

நாண்மகிழிருக்கை — நாளோலக்கம். (உ-ம்.) "வீயாதுசுரக்குமவனாண்மகிழிருக்கையும்"(மலைபடு. ௭௬.)

நாண்மலர்—புதுமலர். (உ-ம்.)"விரைநாண்மலர்க்காவகத்தே" (வாண. ௧௭.)

நாண்மீன் — அசுபதிமுதலிய நட்சத்திரம். (தொல். பொரு. அகத். ௧ உரை.)

நாண்முழவு—எழுவகைமுழவுகளுளொன்று; அது: நாட்பறை. (சிலப். அரங்கே. ௨௭. உரை.)

நாணம் — வெட்கம்; இது: மகளிர்க்குணநான்கினொன்று. (சூ. நிக. ௧௨: ௬௭.)

நாணயம்—வாக்குப்பிசகாமை. (வழக்.)

நாணயவான்—உண்மைதவறுதவன்.(வழக்.)

நாணல்—1. ஒருபுல். (பிங்கல. ௨௧௧௧) 2. நாணுதல். (உ-ம்.) "பிறர்தனைப்பேணுங்காணுணலும்" (திரிகடு. ௬.) 3. வளைதல். (உ-ம்.) "கருங்காலிக்கட்டைக்குவாய்நாணுக்கோடாலி" (தனிப். ஔவைபாடல்.)

நாணுள் — நாளுக்குநாள். (உ-ம்.) "நாணுளாயரியபணுர்நாகங்கீழிடைத்தேடிநலிந் தேகண்ணுற்றகாணுதகாரணனை"(சிவரக. கந்திகண. ௧.) நாடோறும் என்பர் பரிபாடலில்.

நாணி—1. நாணமுடையாள். 2. வின்ஞாண். (சூ. நிக. ௭: ௪.)

நாணுகம்—குதிரை. (வைத்தியபரிபா.)

நாணுதல்—வெட்குதல். (திருக்குறள். நாணுடைமை. ௧.)

நாணயம்—நாணயம். (வழக்.)

நாத்தநலை—ஒருவகைக்கூத்து. (சிந்தா.)

நாத்தழும்பேறுதல்-நாவில்வடுவுண்டாதல். (உ-ம்.) "நாத்தழும்பேறவாழ்த்தி" (திருவாச. திருப்பொற். ௩௫.)

நாத்தனூர்—கணவன் சகோதரி. (வழக்.)

நாத்தாங்கி—இலைக்கள்ளி.(வைத்தியபரிபா.)

நாத்தி—1. இன்மை. (உ-ம்.) "அத்திநாத்தியென்றெழுதி" (பெரியபு. திருஞான. ௮௧௪.) 2. கணவன்சகோதரி. (வழக்.)

நாத்திகம்—கடவுளில்லையென்னுங் கொள்கை. (உ-ம்.) "நாத்திகம்பேசிநாத்தழும்பேறினார்" (திருவாச. போற்றி. ௧௧௭.)

நாத்திகமதம்—சூநியவாதம். (வழக்.)

நாத்திகர்—கடவுளும் புண்ணியமும் பாவமும் சுவர்க்கநரகமுமில்லையென்போர். (உ-ம்.) "பொன்னுலகம்வெந்நரகம்புண்ணியபாவம் புரிவார்-நின்மலனுமுண்டேன்றுநிச்சயித்தா - ரிந்நிலைமை, யாத்திகரேயார்கண்டாரம்மைப்பலமென்பார்-நாத்திகரென்றேயுளத்துணடு"(சைவச. பொது. ௪௬௮. உரை.)

நாத்திகன்—சூநியவாதி. (வழக்.)

நாத்திவேடம்—அரோசகம். (உ-ம்.) "விந்துநாசங்காசந்தாகநாத்திவேடம்" (தைல.தைலவ. ௧௪௦.)

நாத்தூண்—மைத்துனி, கணவனுடன்பிறந்தவள். (உ-ம்.) "தாரணியையலங்கரிப்பாடலையவனைத்தூணு-நாரணிதான்.(சேதுபு.தேவிபுர. ௫.) (சிலப்பதி.)

நாதகம் — வேதமோதலின்முடிவில் பிரமராச்சியபட்டாபிடேகம்போல்வதொன்று; அது: வித்தியாஸ்நாதகம் விரதஸ்நாதகம் வித்தியாவிதஸ்நாதகம் என மூன்றுவகைப்படும். வேதத்தைமாத்திரம்முடிப்பது முதலாவதுவிரதத்தைமாத்திரம் முடிப்பது இரண்டாவது இரண்டினையுமுடிப்பது மூன்றாவது. (பராச. ௫௧.)

நாதகலாபுவநம்—நாதகலையிற் சிவதத்துவத்திலிருக்கின்ற புவநங்கள்; அவை: இந்திகை,

தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை என ஐந்தாம். (சி-வி. ஞாந. கஉ.)

நாதகீதன்—சிவன். (உ-ம்.) "நாதகீதனென் னுதன்முக்கட்பிரான்" (தாயு.பொன்னை: ருo.)

நாதசாரம்—சிவசாரம். (வைத்தியபரிபா.)

நாதநத்தியன் — பரிமருத்துவரிருவரிலொருவன். (கூர்மபு. தக்க. வேள்விய. ஙகூ. உரை.) பரிமருத்துவர்-அசுவினிதேவர்.

நாதத்திரயம்—அட்சராத்மகநாதம், அநக்ஷராத்மகநாதம், நிசசப்தம் என்பன. (வி-ணி. கசுஎ.)

நாததத்துவம்—மாயைக்குமேற்பட்டவோர் தத்துவம். (சி. சி. அ: உரு. மறை.) [சில வாகமங்களிலே நாததத்துவம் லயமென்று கூறப்படும் என்பர்.]

*நாதநாமக்கிரியை—ஓரிராகம். (வழக்.)

நாதபநனி—மலம். (வைத்திய. கருப்பொ.)

நாதம்—1. இந்திரியம். (வைத்திய நூல் வழக்கு.) 2. இரசம். 3. மகாரசிங்கி. 4. உமை. (சௌந்த.) அளிவிளைந்தசளிப்பெருநாதமே. 5. உயிர் முயற்சியாலெழுகின்ற உதானவாயுவாலாவது. (வள். க. உரை. 6. ஒலி. (உண்மைவி. சுரு. உரை.) 7. சத்தியிலாயிரத்தொரு கூற்றிலே அநாதிமலமுத்தன் தோற்றுவித்துத் தாங்கொண்ட அருவத்திருமேனி. (சி. சி. உ: எச. மறை.) 8. சிவன். (சி. சி. உ: எச. சிவாக்.) [மூர்த்தி மூர்த்திமான்களுடைய அபேதோபசாரத்தால் வந்தபெயர்.] 9. சத்ததத்துவமைந்தனுளொன்றாகிய சிவதத்துவம். (ப. வி.) 10. துவனி; அது: இரண்டு கட்டைவிரல்களாலும் இரண்டுகாதுகளையும் மூடிக்கொண்டாற் கேட்குமோசை. (சி-வி. ஞாந. கஉ. உரை.) 11. நிரோதிகலைக்குமேல் நாதாந்த கலைக்குக்கீழ் மூன்றங்குலம் வியாபித்துநிற்குங்கலை. (சி-சி. கிரி.க. உரை.) 12. பிரணவமாகிய ஐந்தெழுத்துக்களுளொன்று; இது: புருடனை அதிட்டித்து நின்றுசெலுத்தும். (சி-வி. சு: ங மறை.) 13. மாயை. (உ-ம்.) "நாதத்தினுபாதியென்றே" (கைவல்.சாங்தே.கஅo.) (2, 3-வைத்தியபரிபா.)

நாதயம்—இந்துப்பு. (வைத்தியபரிபா.)

நாதரவி—சீரக்கொழுப்பு.(வைத்தியபரிபா.)

நாதவடியுப்பு—கறியுப்பு (வைத்தியபரிபா.)

நாதவத்தம்—பெருநெருஞ்சில். (வைத்தியபரிபா.)

நாதவிந்து—1. இருக்குவேத உபநிடதங்களுளொன்று. (கந். நவ. கஎ.) 2. சிவந்தபூமியிலுள்ள சுத்தசலம். (வைத்தியபரிபா.)

நாதன் — 1. அருகன். (சூ. நிக. க: ச.) 2. எப்பொருட்குமிறைவன். (சூ. நிக. உ: கo.) 3. கடவுள், சிவன். (உ-ம்.) "நாதன்றன்னடிமாத் துட்கொண்டு" (பெரியபு. தடுத். கக.) (பிங்கல. கூச.)

நாதா—சிவன். (கூர்மபு.இருக்கல்.க.உரை.) [இது ஞானசத்திமானாய் நிற்கும்பொழுது பெறும் பெயர்.]

நாதாக்கள் — சுத்தவான்கள், பெரியோர். (சி. சி. உ: சுங. நிரம்ப.)

நாதாங்கி — கதவுநிலைச்சங்கிலி. (உ-ம்.) (திருமந்திரம். ரா. சுப்பிரமணியக்கவிராயரெழுதிய நூறுபாட்டுக்குரை. நாதாங்கியில்லாமல் என்பதாலறிக.)

நாதாந்தம்—நாதகலைக்குமேல் பிரமரந்திரமட்டாகமூன்றங்குலம் வியாபித்துநிற்குங்கலை. வலப்புறத்தில்மாத்திரம் விந்துவையுடைய கலப்பைவடிவுள்ளது. (சி-வி. கிரி. க.)

நாதாந்தகன்—சிவன். (வழக்.)

நாதாந்தி — பொன்னிமிளை. (வைத்திய பரிபா.)

நாதி—1. உருத்திரனிடத்தில் விஜயாகமங் கேட்ட ஒருவன். (த. நி. போ. கருக.) 2. ஞாதி. போலி. (வழக்.)

நாதேயம்—1. இந்துப்பு. (வைத்தியபரிபா.) 2. நீலாஞ்சநம். (உ-ம்.) "தக்கோலநாதேயம்" (தைல. தைலவ. ஙரு.)

நாதேணி—மணத்தக்காளி. (வைத்தியபரிபா)

நாந்தகம் — வாள். (உ-ம்.) "நாந்தகமனைய வுண்கண்" (கந்தபு. வள்ளி. எo.)

நாந்தீ—1. ஒருவனைப்புகழ்ந்துபாடியகவி. 2. சந்தோடம். (பி-வி.) 3. நூன்முதலிலே செய்யப்படும் பிரார்த்தனை. 4. பாயிரம். (உ-ம்.) "பாயிரநாந்திபதிகமென்ப" (பி-வி. ங. உரை.)

நாந்திகந்தந — மரமஞ்சள். (வைத்திய பரிபா.)

நாந்தோனி—ஓர்பூடு. (வைத்தியபரிபா.)

நாநம்—1. அறிவு. ஞகரநகரங்கள்போலி. 2. கவரிமா. 3. சுண்ணம். (உ-ம்.) "நலத்தகுநாநநின்றிடிக்குநல்லவர்" (சிந்தா. நாமக. சுங.) [ஆகுபெயர்.] 4. தூவியெரிக்கும்புழுகு.(உ-ம்.) "நறையுநாநமுநறும்புகைவிறகின்" (சிந். நாமக. கoஉ.) 5. நீராடல்; அஃது எட்டுவகைப்படும் அவை: மலநாநம், சலநாநம், ஆக்கிநேயநாநம், தெய்வநாநம், வாயவியநாநம், மந்திரநாநம், மாநதநாநம், தியாநநாநம் என்பன. 6. பூசுவன. 7. நெய். (சிலப். அரும்பத.) 8. மான் மதம், கத்தூரி. (உ-ம்.) "நாநக்குழலியை" (வாண.கஎ.) 9. முழுகல். (வழக்.) 10. வாசனை. (உ-ம்.) "நாநவார்குழலினார்" (திருவிளை. சங்கப். ச.) (1, 2, 6, 9-பிங்கல. ஙஎஉச.)

நாநலம் — நாவாலுளதாகிய நலம்; அது: சொல்வன்மை. (உ-ம்.) "நாநலமென்னுநலனு டைமை" (வள். சஅக.)

நாநா—பலவகை. (உ-ம்.) "மூன்றூன்மன் றன்மூத-ஞநாவாஞ்சிறுவேள்" (திருவிளை. மெய்க்கா. கo.)

நாநாரத்திநதாரி—சதருத்திரரிலே குபேர திசையில் தசருத்திரரிலொருவர். (வி - ணி. உஎo.)

நாநாவிதம்—பலவிதம். (உ-ம்.) "நாநாவித மாய்வழிபாடுநயந்துசெய்வாய்" (பிர-காண். சிமங். சுஉ.)

நாப்பண்—1. தேர்நடு. 2. நடு. (உ-ம்.) "வார்திரையளக்கர்நாப்பண்" (கந்தபு. ஏம. க.) 3. யாழினுறுப்பு. (1, 3-சூ.நிக.கக.பகரவெ.க.)

நாப்புற்று—நாவறளே. (வழக்.)

நாபம்—நாபி. பத்மநாபன், என்பதிற்காண்க.

நாபி–1. ஒருவிடமூலிகை; அது: வற்சநாபி, பச்சைநாபி, வசம்பு, அந்தணநாபி, பிரமநாபி, சத்திரியநாபி, அரசநாபி, வைசியநாபி, சூத்திர நாபி எனப் பலவகைப்படும். [அந்தணநாபி-வெண்மை; சத்திரியநாபி-சிவப்பு; வைசியநாபி-நீலம்; சூத்திரநாபி-கறுப்பு.] 2. கொப்பூழ். (சூ. நிக. உ: அக.)

நாபிதன் — அந்தணர்மாதையேனும் அரச மாதையேனும் நிடாதன்கூடிப் பெற்றபிள்ளை. (உ-ம்.) "அந்தணர்மாதையேனுமரசர்தம்மாதை யேனு-மைந்துறுநிடாதன்கூடவருசேய்நாபித னேயாவன்" (சூத. சிவமான். கஉ: உசு.) சவுரகன். தவுடியந்தப்பெண்ணுக்கும் மறை யோனுக்குமுதித்தபிள்ளை. (உ-ம்.) "பேரெழிற் றவுடியந்தப்பெண்ணுக்குமறையோனுக்கு - நா ருறவுதித்தபிள்ளைநாபிதனென்னும் பேரான்" (சூத. சிவமான். கஉ: கஉ.)

நாபிரம்—விந்து. (வைத்தியபரிபா.)

நாம்—1. அச்சம். (உ-ம்.) "நாமநல்லமர் செய்ய" (புறநா. கசு.) உரிச்சொல்லென்பர். (சிலப்பதி.) 2. தன்மையில்வரும் ஒரிருதிணை யிருகூற்றுப்பன்மைப்பெயர். (நன். உஅஏ.) [சிறுபான்மை "நாமரையாமத்தென்னேவந்து வைகிநயந்ததுவே" என முன்னிலையிலும் வரும்.] (திருக்கோவையார்.)

நாம்பல்—இளைத்தல். (சூ. நிக. க: சுக.)

நாம்பு–1. தெரிநிலைவினைப்பகுதி. 2. மெலிவு. நரம்பல் சுறுவிகாரமாயினது.

நாம்புதல்—நாம்பல், மெலிதல். (வழக்.)

நாமகரணம்—பெயரிடுதல். (உ-ம்.) "அந்நப் பிரசநம்"பார்.

நாமகள்—சரச்சுவதி. (உ-ம்.) "நலமிகுநை மிசந்தாஞநாமகட்பொருவுமாதோ" (மச்சபு. நைமிசா. கடு.)

நாமசங்கிதை—சிற்பநூன்முப்பத்திரண்டி னொன்று. (வழக்.)

நாமத்துவாராவத்தியாசம்—நான் இருட்டி னன் இராமன், என்றற்றொடக்கத்தனபோல நாமம் வாயிலாகவருமத்தியாசம். (வாசுதே. எஅ.) இப்பியை வெள்ளியென்பது அத்தி யாசம்.

நாமதாது — பெயரடியாகப்பிறந்த வினை. (பி-வி. கடு. உரை.)

நாமதாரணை—நவதாரணையினென்று; அது; பூரணமாய்க்கடவுளைத்தியானித்தற்குகற் பித்த நாமதியானத்தினலக்கடவுளை யெல்லைப் படுத்தல்.

நாமதேயம்—பெயர். (வழக்.)

நாமப்பொருத்தம் — பெயர்ப்பொருத்தம். வெண்பாப்பாட்டியலில், குறிலைந்தும் என்னும் வெண்பாவிலறிக.

நாமம்—1. அச்சம். (உ-ம்.) "நாமம்மார்தரு சீய" (சி. சி. பர. உலோகாயதன்மறு. கo. உரை.) 2. இணக்கம் ஐயம் கோபம் நிச்சயம் நிந்தை நினைப்பு மாய்மாலமிவைகளைக்காட்டுஞ் சொல். என்பர் உதாரணமில்லை. 3. கீர்த்தி. (உ-ம்.)"எழுதியர்நாமம்"(வாணை.எ.) 4. தும்பை. (வைத்தியபரிபா.) 5. நாரத்தை. 6. நிறைவு. (பரிபாடல்.) 7. பாசி. 8. புகழ். (சிலப்பதி.) 9. பெயர். (உ-ம்.) "புகல்வதெல்லாமவனுமங்கிமித் தம்" (சிவரக.நந்தி.நமனு. கசு.) 10. வைட்டிண வரிடுநாமம். (உ - ம்.) "நுதலினமைந்தான்றீட்டு வைட்டிணவர்" (ஏகாதசி. காலநிர். உஉ.) (5, 7-வைத்தியபரிபா.)

நாமமாலை — அகவலடியுங் கலியடியும்வந்து மயங்கிய வஞ்சிப்பாவால் ஆண்மகனைப்புகழ்ந்து பாடுமோர் பிரபந்தம். (உ-ம்.) "மயக்கவடிபெறு வஞ்சிப்பாவால்-வியத்தகுநல்லாரவிழுச்சீ ருரை த்தல்—புகழ்ச்சிமாலைபுருடர்க்குரைப்பி - னமமா லையாமெனநவில்வர்" (இலக்கணவி. அகசுசு.)

நாமவந்தம்—நெரிஞ்சில். (வைத்தியபரிபா.)

நாமவேதுண்டம்— நாமவைகுண்டம்.

நாமவைதண்டம்—தும்பை. (வைத்திய பரிபா)

நாய்—1. சூதாடுகருவி. (உ-ம்.) "பளிக்கு நாய்சிவப்பத்தொட்டு" (இராமா. மிதிலை. கஎ.) (புறநா.) 2. ஞமலி. (உ-ம்.) "யாவரினுங்கடைய ஞ-நாயினேனுதலையும்" (திருவாச. திருச்சத. உரு.) 3. தென்மேற்றிசைப்பாலன்குறி. (சூ. நிக. கஉ: அo.)

நாய்க்கடுகு—நாய்வேளை.(வைத்தியபரிபா)

நாய்க்காந்தை—துன்றி.(வைத்தியபரிபா.)

நாய்க்குட்டிச்செடி—ஒருசெடி. (வைத்திய பரிபா.)

நாய்க்குநுவி—இலைக்கள்ளி. (வைத்திய பரிபா.)

நாய்க்கொட்டி-நீரிலுண்டாகுமொருவகைக் கொட்டி. (உ-ம்.) "வாவியுணுப்க்கொட்டி" (தைல. தைலவ. கஙரு.)

நாய்கர்—செட்டிகள். (உ-ம்.) "நல்வளை தெரிந்திடுமென்றுநாய்கர்மூன்" (திருவிளை. வினைய. உரு.)

நாய்கன்—செட்டி., (உ-ம்.) "கண்டநாய் கனக்கடுங்கொலைக்கிராதனேடு" (சேதுபு. விஅம. ககக.)

நாயங்கியிலை —கள்ளி. (வைத்தியபரிபா.)

நாய்ச்சிமார்—நாய்ச்சியார். (வழக்.)

நாய்ச்சியார்—எசமாட்டிகள். (வழக்.)

நாய்ச்சீரகம்-ஒருசீரகம். (வைத்தியபரிபா.)

நாய்த்தயிர்வேளை—ஒரு செடி. (வைத்திய பரிபா.)

நாய்த்துளசி—1. ஓர் துளசி. 2. சஞ்சாங் கோரை. (வைத்தியபரிபா.)

நாய்நாக்கி—நாய்நாக்கு. (வைத்தியபரிபா.)

நாய்நாக்கு-இலைக்கள்ளி. (வைத்தியபரிபா.)

நாய்ப்பயறு—ஒருபூடு.(வைத்தியபரிபா.)

நாய்ப்பாகல்—ஒரு பாகல். (வழக்.)

நாய்ப்புடுக்கன்—ஒருமரம். (வழக்.)

நாய்ப்புடோல்—ஒருகொடி. (வழக்.)

நாய்முள்ளி—ஒருமுள்ளி.(வைத்தியபரிபா.)

நாய்விட்டைக்கல்-ஒருவகைச்சுண்ணாம்புக் கல். (வழக்.)

நாய்வெள்ளை—நாய்த்தயிர்வேளை. (வைத் தியபரிபா.)

நாய்வேம்பு-நாய்வேளை.(வைத்தியபரிபா.)

நாய்வேளை — ஒருபூடு. (வைத்தியபரிபா.)

நாயக்கர் — தெலுங்கருளொர்வகையார்க் குரிய பட்டப்பெயர்.) (வழக்.)

நாயகச்சி—நாயகத்தி. (வழக்.)

நாயகத்தி—தலைவி. (வழக்.)

நாயகம்—1. கிரந்திநாயகம். 2. சன்னிநாய கம். 3. சிரேட்டமானது, தலைமை. (உ-ம்.) "மிக்கசுடர்க்கெல்லாம்நாயகமனையதோர்மாலை கல்கிஞன்" (இராமா. மந்தரை. ருஉ.) 4. நாயக மணி. (உ-ம்.) "நாயகத்தைத்தொட்டுகவில்க" (சைவச.பொது.கஙக.) (1,2-வைத்தியபரிபா.)

நாயகன்—1. அரசன். (உ-ம்.) "நம்நாயக னுங்களைத்-தேடிஞனென்றுசெப்பலும்" (அரிச்ச. வேட்டஞ். ரு.) 2. எசமான். (உ-ம்.)"நங்க ளுயகபுகலுதியென்ன" (சிவரக. ஆயுதசேவ. கூ.) 3. எப்பொருட்குமிறைவன். (சிவரகசி. காயத்திரி. கூ.) 4. நடத்துவோன், தலைவன். (வழக்.) 5. புருடன், கணவன். (உ-ம்.) "என் ஞயகன்றன்மணிமார்பு" (அரிச்ச. மயாந. கூ0.)

நாயகி—எசமாட்டி. 2. பெருமையிற்சிறந்த வள். 3. மனைவி. (1, 2, 3-வழக்.)(3-சூ. நிக. உ: எக.)

நாயரஞ்சி—நாயுருவி. (வைத்தியபரிபா.)

நாயன்—1. எசமான், ஆண்டான். (பெரிய பு. ஏயர்கோன்கலி. கூஅரு.) 2. கடவுள். 3. பெருமையிற்சிறந்தோன்.

நாயன்மார்—1. ஆண்டவர். 2. தலைவர். 3. பெருமையிற்சிறந்தோர். (வழக்.)

நாயனர்–1. தந்தையர்.(சிந்தா.) 2. நாதனர்.

நாயில்—ஞாயில், மதிலுறுப்பு. (சிந்தா.)

நாயிலை—இலைக்கள்ளி. (வைத்தியபரிபா.)

நாயிறுவணங்கி — கொழிஞ்சி. (வைத்திய பரிபா.)

நாயுநுவி—ஒருசெடி; அது: செந்நாயுருவி வெண்ணயுருவியென இருவகைப்படும்.(உ-ம்.) "திண்ணயுருவிசிவந்திபரி,புண்ணற்றுஞ்-சிந்த மந்தாரமெட்டும்" (தைல. தைலவ. க0உ.)

நார்—1. அன்பு. (உ-ம்.) "நாரின்மை" (வள். கருஅ.) 2. கயிறு. (உ-ம்.) "நாருளதந்வுளாய் நானுஞ்சீதையும்" (இராமா. நகர்நீங்கு. கருசு.) 3 கலநார். (உ-ம்.) "சத்துநாரிவைபுடப்பொடி" (தைல. தைலவ. கஉரு.) 4. தும்பு. (உ-ம்.) "தந்தி"பார். 5. பன்னடை. (புறநா.) 6. பனை மட்டை முதலியவற்றின் வெளிப்பக்கத்தைப் போர்த்திருக்குங்கடினமான தோல். (உ-ம்.) "இலைபழம்பூதேனர்வைரங்கருத்தரும்" (மெய் கண்ட. மாயாவதி. சங்கற்ப. கஅ.)

நார்ச்சீலை — 1. மரவுரியாகிய ஆடை. 2. வலைக்கோணி. (உ-ம்.) "கண்ணிருக்கும்புத் தாடைகம்பளநார்ச்சீலைகட்சி" (தைல. தைலவ. கூரு.)

நாரகர் — நரகத்தில் விழுகிறவர்கள். (சிவ தரு. க0: கூக.)

நாரகீகள்—சைநசமயத்திற் சொல்லப்படும் நாலுபுருஷர் மூவகையரிலொருவகையர்.(த.நி. போ. கக.)

நாரங்கம்—1. தேன்ருடை. (வைத்திய பரிபா.) 2. நாரத்தை. (சூ. நிக. ச: ச.)

நாரசிங்கம் — 1. அட்டாதச வுபபுராணத் தொன்று. 2. உபநிடதமுப்பத்திரண்டிஞென் று. 3. நரசிங்கம். (வழக்.)

நாரசிங்கன்—விட்டுணு. (சூ. நிக. க: தகூ.)

நாரசிம்மம்—1. காமிகத்தின் மூவகைப்பேதங்களினொன்று. (த. நி. போ. ௯௫௧.) 2. சர்வோத்தமமென்னு மாகமம். (சி-லி. சரி. ௨.) [சோமதேவரிடத்தில் நாரசிம்மன் உபதேசம் பெற்றதால்வந்தபெயர்.] 3. நரசிங்கம். (சி. சி. ௨: ௬௪. சிவாக்.)

நாரணன் — விட்டுணு. (உ-ம்.) "கள்ளகந்தளித்தமலர்த்தலைச்சேக்குங்கடவு ணா ர ண ன் முதலானோர்" (தணிகை. நந்தி. ௬.)

நாரணி—துர்க்கை. (உ-ம்.) "நாத்துணி"பார்.

நாரணியவன்—சிவன் (உ-ம்.)"அந்திவண்ண கொண்டமேனியனுநந்தனு-ரணியவன்" (ம-,தி. ௬௪.) [உமாதேவியையுடையவனென்றபடி.]

நாரத்தகச்சல் — பேரசனகத்தாரி. (வைத்தியபரிபா.)

நாரத்தம்–1. சடாமாஞ்சி. 2. வசம்பு. (1, 2-வைத்தியபரிபா.)

நாரத்தம்புல்—ஒரு புல். (வழக்.)

நாரத்தை—நரந்தம். (சூ. நிக. ௪: ௪.)

நாரதப்பிரியம்— தணிகை. (உ-ம்.) "மகதியாழ்முனிக்குறுபிரியம்- விரவியசிறப்பானாரதப்பிரியம்" (தணிகை. புராணவா. ௬௦.)

நாரதபரிவிராசகம்—அதர்வவேத உபநிடத முப்பத்தொன்றனுளொன்று. (சங். நவ. ௧௮.)

நாரதம்—விட்டுணுபுராணம் நான்கனுளொன்று. (உ-ம்.) "காருடம்"பார்.

நாரதன்—ஒரு தேவவிருடி; இவர்: பஞ்சபாரதியம் என்னுமிசைத்தமிழ் நூலாசிரியர். (உ - ம்.) "வாரியும்வடித்துந்தியும்வரிசையாலுறழ்ந்துஞ்-சீரியாழ்வல்லநாரதன்புவிதனிற்சேர்ந்தான்" (கந்தபு. வள்ளி. ௫௬.) இவர் சரிதம், அபிதானகோசத்திற்காண்க.

நாரதீயம்—1. அட்டாதச வுபபுராணத்தொன்று 2. பதினெண்புராணத்தொன்று. (1, 2-அபிதானகோ.)

நாரம்—1. அன்பு. அம்சாரியையெனக். 2. நாரத்தை. (உ-ம்) "சாலவிருட்சோதகமூலந்தந்தசடநாரம்" (தைல. தைலவ. ௮௫.) 3. நீர். (உ-ம்.) "கண்கணாரம்பாய" (சிவரக. கணபதிவந்தனை. ௧௧.) 4. பாசி. (மலையக.)

நாராங்கி—நாதாங்கி. (வழக்.)

நாராசம் — 1. இருப்புச்சலாகை. (உ-ம்.) "உள்ளநெறியென்பதுநாராசத்திரிவிற்- கொள்ளத்தகுவது" (மணிமே. ௨௭: ௫௫.) 2. எழுத்தாணி. (வழக்.) 3. ஓரம்பு. 4. சலாகை. (சூ. நிக. ௧௧. லகரவெ. ௧௪.)

நாராசழத்திரை — பூசாமுத்திரை வகையினொன்று. சைவவினாவிடைபார்.

நாராயணகவுளம்— ஒரு பண். (வழக்.)

நாராயணப்பிரியன்—சிவன்.

நாராயணன்பூண்டு—சவரிக்கொத்து. (வைத்தியபரிபா.)

நாராயணம் — 1. அரசமரம். (மலையக.) 2. யசுர்வேதஉபநிடதமைம்பத்தொன்றனுளொன்று. (சங். நவ. ௧௮.) 3. மீன்முதலிய செலசரங்கள்.

நாராயணன்—1. வருணன். 2. விட்டுணு. [நீரையிடமாகவுடையவனென்றபடி, நாராயண: நாரம் நீர். அயந-இடம். இனிச்சிவபிரானுக்குப்பெயரென்றும், அதற்கு நரர்தொகுதியை யொத்து நடப்பவன் என்பது பொருளென்றும் சிவஞானபோதப்பாஷியத்திற் கூறுவர்.

நாராயணாத்திரம்—ஒரு பாணம். (வழக்.)

நாராயணி—1. ஓரிராகம். 2. கங்காதேவி. நீரையிடமாகவுடையவளென்க. 3. சத்தமாதர்களிலொருத்தி, நாராயணனையுடையவள். 4. தண்ணீர்விட்டான்கிழங்கு. (உ-ம்.) "அதிபலைகோரைநாராயணி" (தைல. தைலவ. ௬௮.) 5. துர்க்கை, உமாதேவி. நாராயணன் என்பது சிவபிரான்திருநாமங்களுளொன்றாதலால் அவனையுடையவளுக்கு நாராயணியென்று பெயருண்டு.(சிவஞானபோதப்பாஷ்யத்திற்காண்க.)

நாராயணிதம்—கௌரிபாஷாணம். (வைத்தியபரிபா.)

நாராயணோபநிடத்து— ஒரு நூல். (த. நி. போ. (வைத்தியபரிபா.)

நாராயம்—நாராசமென்னுமத்திரம்.(உ-ம்.) "நறநரிக்குநல்லநாராயங்கொளல்"(பழமொழி. ௮௦.)

நாரி—1. கள். (பிங்கல. ௬௭௨௧.) 2. தேன். 3. நன்னாரி. (உ-ம்.) "இரேணுகை"பார். 4. நாணி. (உ-ம்.) "மெய்த்துக்கண்விசித்ததுநாரியோ" (சேதுபு.இராமதீர்.௫௦.) 5. பன்னாடை. (பிங்கல.௨௭௫௧.) 6. பார்வதி. (சூ.நிக.௪:௬௨.) 7. பெண். (உ-ம்.) "நாரியர்தஞ்சுகத்தினையுஞ்சுடச்சொல்வாரே" (சிவரக.ஞானவால.கலி. ௯.) (2-வைத்தியபரிபா.)

நாரிகேளம்—தென்னை. (மலையக.)

நாரிகை—பெண். (பரிபாடல்.)

நாரிதூடணம் — பதிவிரதாவிரதத்திற்குத் தப்பானது; அஃது: அந்நியக்கிருகசயநம், அந்நியக்கிருகப் பிரவேசம், அந்நியக்கிருகாசநம், கணவனைப்பிரிந்திருத்தல், துர்க்கூட்டம், மதுபாநம் என்பன.

நாரியங்கம்—தேன்றொடை. (மலையக.)

நாரின்மை—முறிந்த சொற்செயலுடைமை. (உ-ம்)"நாணமைநாடாமைநாரின்மையாதொன்றும்-பேணாமைபேதைதொழில்" (வள். ௮௩௩.)

நாரை—1. ஒரு புள்; அது: கருநாரை செங்கானாரை நத்தைகுத்திநாரை வெண்ணாரை பெருநாரை சாம்பனாரை கொய்யடிநாரை யெனப் பலவகைப்படும். (உ-ம்.) "தூவியன்னமுந் துன்னியநாரையும்" (அரிச்ச. நாட்டு. ௨௨.) 2. நீர்நாரை. (உ-ம்.) "நாரைசிறுசின்னிபற்படாம் வெள்ளறுகுவல்லாரை" (தைல.தைலவ.௧௩௫.)

நால்—தெரிநிலைவினைப்பகுதி.

நால்கு—நான்கு. (உ-ம்.) "பால்புரைபுரவி நால்குடன்பூட்டி" (பொருந. ௧௬௫.) (சிந்தா.) [பெயர்த்திரிசொல்.]

நால்வகைக்கேள்வி — அறமுதலியநான்குங்கேட்டல். (சூ. நிக. ௧௨: ௧௯.) பிங்கலத்தில் வேறுகூறுவர்; அது: பொருந்தாமைகாண்க.

நால்வகைச்சத்தி—பார்ப்பதி, துர்க்கை, காடுகிழாள், விட்டுணு என்பவர். இது, "நால்வகைப்படநண்ணியசத்தியுண் — மாலுமாதவின்" என்னும். (கந்தபு. மகாசாத்தா. ௨அ-ம் செய்யுளாற் பெறப்படும்.)

நால்வகைச்சமயம்—புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்பன. (உ-ம்.) "சித்தியார், அறுவகைச்சமையத்தோர்" என்னுஞ்செய்யுளுரையிற் காண்க.

நால்வகைச்சரணம்—அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணமென்பன. (சிந். பதிக. ௧ உரை.) (சைநர் வழக்கு.)

நால்வகைச்சாந்து—கலவை, பீதம், புலி, வட்டிகையென்பன. (சூ. நிக. ௬: ௧௩.)

நால்வகைச்சொல்—பெயர் வினை இடை உரியென்பன. (உ-ம்.) "பழுதகன்றநால்வகைச் சொன்மலரெடுத்து" (திருவிளை. பாயிர. ௧௯.)

நால்வகைச்சேனை — யானை, தேர், பரி, காலாள். (பிங்கல. ௬எ௩.)

நால்வகைத்தேவர்-(அருக) பவண, வியந்தர, சோதிட, கற்பவாசியர். (உ-ம்.) "மூவுலகத்துள்ளநால்வகைத்தேவருமூன்னுவரே" (திருநூற். ௧௧. சைநர் வழக்கு.)

நால்வகைத்தோற்றம்—நான்குவகைப் பிறப்பு; அவை: அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம்என்பன. (உ-ம்.) "சிவஞானசி, அண்டசஞ் சுவேதசங்கள் என்னு மூதற்குறிப்புள்ள செய்யுளிற்காண்க.

நால்வகைநடம்—தாண்டம், இலாச்சியம், அகம், புறவரியென்பன. (சிவதரு.)

நால்வகைநிலை — சரம்விடுநிலை நான்கு. (பிங்கல. ௬எ௧.)

நால்வகைப்பக்கப்போலி — துணியும் பொருட்கிடனாகாதனூஉம், துணியும் பொருட்கொருமருங்கிடனாகாதனூஉம், துணிந்தபொருட்கிடனுவனூஉம், துணிந்தபொருட்கொருமருங்கிடனுவனூஉம் என்பன. (சி. சி. அள. ௧௩. சிவஞா.)

நால்வகைப்புலமையர்—கவி, கமகன், வாதி, வாக்கி. (பிங்கல. ௬௯௧.)

நால்வகைப்பொருள் — அறம், பொருள், இன்பம், வீடு என்பன. (சூ. நிக. ௧௨. ௧௯.)

நால்வகைப்பொன்-நான்குவகைப்பொன். (பிங்கல. ௬எ௪.)

நால்வகைமருந்து—சல்லியகரணி, சந்தானகரணி, சமனியகரணி, மிருதசஞ்சீவினி. (பிங்கல. ௨எஅ௨.)

நால்வகைமலர்—கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்னும் நால்வகைப்பூக்கள். (திருவிளை. பாயிர. ௧௯. குறிப்பு.)

நால்வகைமாயை — தநுகரணபுவநபோகமென்னும் நால்வகை மாயாகாரியங்கள். (உ-ம்.) "நால்வகைமாயையுநடத்தி" (கோயிற்பு. இரணிய. ௧.)

நால்வகையரண்—மலை, காடு, மதில், நீர். (பிங்கல. எ௨௨.)

நால்வகையாழ் — பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன. (உ-ம்.) "குன்றாதநால்வகையாழுக்குநன்னரம்பு" (சிந். காந்தரு. ௧௧௯. உரை.)

நால்வகையிழிச்சொல்—நான்குவகை யிழிச்சொல். (பிங்கல. ௬௫௬.)

நால்வகையுணவு—உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. (பிங்கல. ௬எ௬.)

நால்வகையுபாயம் — சாமம், பேதம், தானம், தண்டம். (பிங்கல. ௬எஅ.)

நால்வகையூறுபாடு — குத்தல், வெட்டல், எய்தல், எறிதல். (பிங்கல. ௬எஎ.)

நால்வகையெழுத்து—வடிவெழுத்து, பெயரெழுத்து, தன்மையெழுத்து, முடிவெழுத்து. (பிங்கல. ௨0அஎ.)

நால்வகையொடுக்கம்—நித்தியப்பிரளயம், நைமித்திகப்பிரளயம், பிராகிருதப்பிரளயம், ஆத்தியந்தப்பிரளயம் என்பன. (உ-ம்.) "நால்வகையொடுக்கத்துள்ளபகுதிகணவின்றவாறும்" (கூர்மபு. பதிக. ௬௩.)

நால்வர்—1. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகசுவாமிகள் என்பவர். (உ-ம்.) "நாவலர்இயேசுமததாரதம்மியம்" 2. நான்குபேர்.

நால்வாய்—யானை. (உ-ம்.) "மூழவதிர்சும் மையுநால்வாய்-வரம்பிலோதையும்" (திருவிளை. திருக்கைலா. ௬.)

நால்விதப்பண்—பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி. (பிங்கல. ௧௩௭௬.)

நால்விதப்புண்ணியம்—தானம், கல்வி, தவம், ஒழுக்கம். (பிங்கல. ௩௫௧.)

நால்வேதம் — தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமவேதம். (கலி. க.) இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்பனவுமாம். (உ-ம்.) "நால்வேதமாறங்கமானாய்போற்றி" (தேவார. திருநாவு.)

நாலடி—நாலடியார். (வழக்.)

நாலடியார்—ஒரு நூல்; இது பதினெண்கீழ்க்கணக்கினுள்முதலாவது சைநமுநிவர்களாலியற்றப்பட்டது, கடவுள்வாழ்த்துள்பட நானூற்றொருவெண்பாக்களையுடையது பதுமனரென்பவர் திருக்குறளிற்போல இதன் பொருளை அறம் பொருள் இன்பம் என்னும் முப்பாற்படுத்தி ஒவ்வொருபொருளை வற்புறுத்துவனவாகிய பப்பத்துப்பாடல்கள்களைத்தனித்தனியே தொகுத்து நாற்பது அதிகாரமாகப் பகுத்தனர் இதற்கு அப் பதுமனாரும் வேறுசிலரும் உரைசெய்திருக்கின்றனர்.

நாலல்—தொங்குதல். நாலுதல்பார்.

நாலாம்பாதகன்—கொலைபாதகன். (உ-ம்.) "நன்றெனவுவந்து-நாலாம்பாதகனதற்குநேர்ந்தான்" (திருவிளை. அங்க. ௧௨.)

நாலாம்பொய்யுகம் — கலியுகம். (உ-ம்.) "செம்பொன்மேனிவேறுகிநாலாம்-பொய்யுகத்தவர்க்குத்தக்கபொருந்துருவாகிமன்னும்" (திருவிளை. இரச. ௩௦.)

நாலாம்வருணம்— } சதுர்த்தசாதி, சதுர்த்
நாலாம்வருணர்— } தவருணம். (வழக்.)

நாலாயிரப்பிரபந்தம்—ஆழ்வார்கள் பாடிய வைணவப்பிரபந்தம்.

நாலி—கார்த்திகைப்பூ. (வைத்தியபரிபா.)

நாலிகம்—1. எருமை. 2. காகம். 3. தாமரை. (1, 2, 3-வைத்தியபரிபா.)

நாலிகை—மூங்கில். (வைத்தியபரிபா.)

நாலு—நான்கு. (உ-ம்.) "நாலுமறைகளுமறியா" (சிவரக. கணப. குமர. ௫.)

நாலுதல்—தொங்குதல். (உ-ம்.) "இளமேதிகளின்கடைவாயெலாம்மூத்துமாலைகளாலுமே" (அரிச்ச. நாட்டு. ௪௪.)

நாலைங்கள்ளி — இலைக்கள்ளி. (வைத்தியபரிபா.)

நாவரசர் — 1. சிவதொண்டர் அறுபத்துமூவரிலொருவரான திருநாவுக்கரசநாயனார். 2. புலவர்.

நாவரணை — நாப்புற்றாகிய ஒரு வியாதி. (வழக்.)

நாவரளை—நாவரணை. (வழக்.)

நாவரையர்—திருநாவுக்கரசநாயனார். (உ-ம்.) "தமிழின்செய்யுள்பாடி-நாவரையர்புகழ்மொழிகள்" (சேதுபு. கடவுள்வா. க.)

நாவல்—1. இரக்கக்குறிப்பு. (உ-ம்.) "மாவலிக்குமடங்கலொப்பான்றனிக் - காவலிக்குத்துயர்வந்தகன்னிமீர்-நாவலிக்கணநண்ணுதிரென்றுகூய்" (கந்தபு. பாநுகோப. வதை. ௧௩௨.) 2. ஒருமரம்; அது: குழிநாவல் சிறுநாவல் சம்புநாவல் நிழனாவல் பெருநாவல் எனப் பலவகைப்படும். (உ-ம்.) "கருங்கனிநாவலிருந்துகொய்துண்ணும்" (புறநா. ௧௭௭.) 3. சத்ததீவினொன்று. (உ-ம்.) "நாவலம்பூதலத்தரசர்" (பாரத. கிருட்டி. ௨௭.)

நாவலந்தீவு—சத்ததீவினொன்று. (வழக்.)

நாவலர்—கற்றவர், புலவர். (உ-ம்.) "நல்லியநூறெறிநாவலர்பாட" (அரிச்ச.விவாக. ௨௫.)

நாவலோ — நெற்போரதெழிக்கும் பகட்டினங்களைத்துரப்பதோர்சொல்" (நன். ௧௦௧. உரை.)

நாவழி—நாக்குவழிக்குங்கருவி. (சிங். காந்தரு. ௩௧௦. உரை.)

நாவாய்—1. இரேபதிநாள். (உ-ம்.) "இருவகைப்பூசமூன்றுத்திரநாவாய்" (விதாந. குணகுண. ௧௦.) 2. மரக்கலம். (உ-ம்.) "இருதுறைநெறியில்வருநரைநாவாயேற்றுவலெந்தையேவலின்" (பாரத. குருகுல. ௩௨.) தோணிமுதலாயுள்ள சலசரங்களென்பர். (சிலப்பதி.) ஓடம் என்பர். (புறப்-வெ.)

நாவாள்—சரச்சுவதி. (உ-ம்.) "நாவாளுடனீயெனநான்முகனே-மாவாளுடனீயெனமாதவனே" (சேதுபு. சிவதீர். ௪௬.)

நாவி—1. ஊமத்தை. (வைத்தியபரிபா.) 2. ஒரு மருந்து. 3. ஒருவகைமரக்கலம். (உ-ம்.) "வங்கநாவியினதன்வடக்கிழிந்தி" (மணிமே. ௨௬: ௮௫.) 4. கத்தூரி. (உ-ம்.) "சிறியதேக்குயர்நாவியிந்தைநிலவணம்" (தைல.தைலவ. ௭௪.) 5. கத்தூரிமிருகம். (வைத்தியபரிபா.)

நாவிகன்—கப்பற்காரன். (வழக்.).

நாவித்தண்டை—1. எருமுட்டை. (வைத்தியபரிபா.) 2. பீநாறி. (மலையக.)

நாவிதச்சி—அம்பட்டத்தி. (வழக்.)

நாவிதர்—அம்பட்டர். (சூ. நிக. ௧௨: ௧௩௪.)

நாவிதன் — 1. கார்த்திகைநாள். 2. நாய்கர் மகளிர்பார்ப்பாரைக் கரவிற்கூடிப் பெற்றபிள்ளை. (உ-ம்.) "ஏயுமம்மாதர்பார்ப்பாற்கியைதருகரவினீன்ற — சேய்பெயர்கும்பகாரன்சேருநாவிதனென்பேரும்" (சூத. சிவமான். ௧௨: ௧௦.) 3. பூரநாள். (1, 3-சூ. நிக. ௧௦: வகரவெ. ௧௨.)

**நாவிநெய்**—மயிர்ச்சாந்து. (வழக்.)
**நாவிப்பிள்ளை**—ஒரு மிருகம். (வழக்.)
**நாவியம்**—கார்த்திகைப்பூ. (வைத்தியபரிபா.)
**நாவினுக்கரையன்** — நாவரசர். (உ-ம்.) "சரணம்"பார்.
**நாவு**—நா. உகரச்சாரியை.
**நாவுதல்**—நேம்புதல். (வழக்.)
**நாவுரி** — நாழியும் உரியும். (நன். கஎச. உரை.) [நாடுரியெண்பது இக்காலத்து நாவுரி யென மரீஇயிற்று.]
**நாவுழலை**—விடாய். (வழக்.)
**நாவூறு**—நாவேறு. (வழக்.)
**நாவேறு**—நாத்தோடம்.
**நாழி**—1. அம்பறுத்தூணி. (பரிபாடல்.) 2. உட்டுளைப்பொருள். (சூ. நிக. ௯: ௬.) 3. ஒரு படி. (உ-ம்.) "உண்பதுநாழியுடுப்பதுநான்கு முழம்" (நல்வழி.) 4. ஒருமுகத்தளவுகருவி. (உ-ம்.) "தோற்றஞ்சான்ஞாயிறுநாழியாவைக லுங்-கூற்றமளந்துநுங்நாளுண்ணும்" (நாலடி. செல்வநிலை.எ.) 5.நாழிகை.(சிந்தா.) 6.நாஞழி. 7. பூரட்டாதிநாள். (சூ. நிக. கக. ழகரவெ. உ.)
**நாழிகை**—1. நாடா. (உ-ம்.) "நெய்கைநுண் ணூனுழிகையினிரம்பாநின்றுசுழல்வாரே" (சிந் தா. முத்தி. கஎஉ.) 2. விநாடியறுபதுகொண்ட காலம். (உ-ம்.) "எண்ணிறைமீனநோக்கிநாழி கையெண்ணி" (திருவிளை. மெய்க்கா. உ௦.)
**நாழிகைக்கணக்கர்** — 1. கடிகையார். (சிலப். அரும்பத.) 2. நாழிகைவட்டிலிடுவோர். (சிலப். அரும்பத.)
**நாழிகைப்பறை** — நாழிகையறியவடிக்கும் ஒருவகைத்தோற்கருவி.சிலப்.அரங்.உஎ.உரை)
**நாழிகைவட்டில்** — நாழிகையறிவிக்கும் வட்டில். (சிலப். அரும்பத.)
**நாழிகைவெண்பா** — அரசர்க்கு நாழிகை தோறுஞ்சொல்லும்வெண்பா. அக்காலவழக்குப் போலும்.
**நாள்**—1. ஓரிரவும் பகலுங்கொண்டதினம். (உ-ம்.) "ஒருநாளுணவை"(நல்வழி.) 2. காலம். (உ-ம்.) "நாழி"பார். 3. காலை, விடியற்காலம். (உ-ம்.) "நாண்மோர்மாறும்" பெரும்பா. க௬௦.)
**நானகம்**—இலாமிச்சு. (வைத்தியபரிபா.)
**நாளம்**—1. உட்டுளை. (உ-ம்.) "கழுநீர்நாளத் தாளினுலொருத்தியுண்டாள்" (இராமா. உண் டாட்.கக.) 2. பூந்தண்டு. 3. பொன்னரிதாரம். (2, 3-வைத்தியபரிபா.)
**நானரம்**—இலாமிச்சை. (வைத்தியபரிபா.)
**நாளவை**—நாளோலக்கம். (உ-ம்.) "செம்ம ஞளவையண்ணுந்துபுகுதல்" (புறநா. ௫ச.) ஒலக்கம்-சபை.

**நாளாய்ந்தோர்**—வைத்தியர். (உ-ம்.) "நா ளாய்ந்தோர்-தீரனிவனென்பார்சிலரிந் நூலைப் பழிச்சுத்-தேரனிவனென்பார்சிரித்து" (தைல. கடவுள்வாழ்த். ௬.)
**நாளி**—கள். (வைத்தியபரிபா.),
**நாளிகம்** — 1. தாமரை. 2. வள்ளிக்கீரை. 3.வுள்ளை.க்கொடி. (1, 2, 3-வைத்தியபரிபா.)
**நாளிகேரபாகம்**—செய்யுட்பாகம் நான்கனு ளொன்று. (கம்பரந். கூகூ. உரை.)
**நாளிகேரம்**—தென்னை. (சூ. நிக. ச: கஉ.)
**நாளிருக்கை**—நாளோலக்கவிருக்கை. (உ-ம்.) "பெருநாளிருக்கைவிழுமியோர்குழீஇ" (மது ரைக்காஞ்சி. ௫உ௫.)
**நாளினி**—புளிமா. (வைத்தியபரிபா.)
**நாளும்**—எப்பொழுதும். (இராமா.அயோத் தியா. மந்தரை. சூழ்ச்சிப். கச.)
**நாளை**—மற்றைநாள். (உ-ம்.) "நாளைநாளை யென்பீராயின்" (கபிலரகவல்.)
**நாளைக்கு**—இன்றைக்குஅடுத்தநாள். (உ-ம்.) "இருமடங்கு"பார்.
**நாளைநின்று** — நாளைவிட்டு மற்றைநாள். (வழக்.)
**நாளோலக்கம்**—காலை ஓலக்கவிருப்பு. (பதிற்று.)
**நாளோலை**—சாதகம். 2. முகூர்த்தவோலை. (உ-ம்.) "குறித்தநாளோலைவிட்டார்" (பெரிய பு. தடுத்தாட். க.)
**நாற்கடவுளர்** — மநுக்கள் பதினல்வருள் எழாவது வைவைச்சுதமநுவின் ஆட்சியாகிய இக்காலத்து ஆதித்தியர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர் என நான்கு வகுப்பினராயிருப் பவர்; இவர்: முறையே பன்னிருகோடியர் பதி னெருகோடியர் எண்கோடியர் இருகோடியர் என முப்பத்துமுக்கோடி தேவராவர் இவ்வா றும் மற்ற மநுவந்தரங்களிலேயும் பற்பல நாம வகுப்பினராயும் பற்பல தொகையினராயும் வகுத்து எண்ணப்படுவார்கள். (தி-கு. )
**நாற்கணம்**—உயிர்க்கணம், வன்கணம், மென் கணம், இடைக்கணம் என்பன. (நன். க௫க. உரை.)
**நாற்கதி**—தேவர், நரகர், மனிசர், விலங்கு என்பன. (சூ. நிக. கஉ: கச.)
**நாற்கவி**—நாலுவிதக்கவி; அவை: ஆசு, சித் திரம், மதுரம், வித்தாரம் என்பன. (சூ. நிக. கஉ: உக.)
**நாற்கவிராசநம்பி** — புளியங்குடியில் நாற் கவிகளையும் பாடவல்லராகிய அகப்பொருளி லக்கணம்பாடிய ஒரு சமணப்புலவர். (உ-ம்.) "புவிராசர்போற்றும்புலவர்களுலிற் - றவிராச

கற்றித்தமிழ்நாற் - கவிராச, நம்பியகப்பொருள் விளக்கவுரைநாட்டமுக்கட்-டும்பிமுகன்றனை" (அகப்பொ-பா-காப்பு.)

நாற்காலி — 1. ஒருவகையாசநம். 2. நாற்கான்மிருகம். (வழக்.)

நாற்குணங்கள் — சிவகாருண்ணியம், ஈசுர பத்தி பாசவைராக்கியம் பிரமஞானம் என்னுங் குணங்கள். (உபதேசக்கட்டளை. ௬௦.)

நாற்குணம்—ஆடூஉக்குணம்நான்கு; அவை: அறிவு, ஓர்ப்பு, கடைப்பிடி, நிறைவு என்பன. (சூ. நிக. கஉ: கசு.) மகடூஉக்குணம் நான்கு; அவை: நாணம், மடம், அச்சம், பயிர்புஎன்பன. (சூ.நிக.கஉ: கசு. கஎ.)பயிர்ப்பு-பயிலாதபொருட் கண்ணருவருப்பு )

நாற்கோணம்—நாலுமூலை (வழக்.)

நாற்சந்தி—நாற்புறருக்கூடுமிடம். (உ-ம்.) "ஆவணம்"பார்.

நாற்பது—1. ஒரு பிரபந்தம்; அது: காலமுமிடமும் பொருளுமாகியவிவற்றுளொன்றனை. நாற்பதுவெண்பாவாற்கூறுவது. (உ-ம்.) "நாற்பது" (இலக்கணவி. அறுக.) 2. நான்குபத்து. (நன்னூ. நான்கன்மெய்யே.) என்னுஞ்சூத்திரவுரையிற்பார்.

நாற்பான்—நாற்பது. (உ-ம்.) "நானூற்பது" பார்.

நாற்பொருள் — அறம் பொருள் இன்பம் வீடு எனப்படும் பொருள்கள். (உ-ம்.) "நாற்பொருட்பயத்தோடெழுமதந்தழுவி" (நன். ௬.)

நாற்பொன்—ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதமென்னு நால்வகைப்பொன். (சூ.நிக. கஉ: கஅ.)

நாற்றம்—1. கந்தகம். (உ-ம்.) "வேந்தனேடு நாற்றங்காதம்"(வைரா. ௬௬.) 2. கள் (பிங்கல. ககசசு.) 3. தோன்றுதல். 4. புழுகுமுதலியன. (உ-ம்.)"ஒருஉச்,கொடியியனல்லார்குரனூற்றத் துற்ற-முடியுதிர்பூந்தாது" (கலி. அஅ.) [ஆகுபெயர்.] 5. மணத்தல். 6. வசம்பு. (வைத்தியபரிபா.) 7. வாசனை (உ-ம்.) "நாற்றநாட்டத் தறுகாற்பறவை" (புறநா. ௭௦.) (3, 5-சூ. நிக. கக: நகரவெ. கூ.)

நாற்றி—1. நான்மடங்காக்கி. (உ-ம்.) "எட்டெட்டனைநாற்றியிரட்டியவிவைமற்றெறிதிலைரப் பெரும்புனற்கங்கை" (தணிகை. புராணவரலா. ௬அ.) 2. நான்மடங்கு. (உ-ம்.) "நாற்புடையநாற்றியே" (சிந்தா. காந்தரு. எ௫.)

நாற்றிசை—நான்குதிக்குகள்; அவை: கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்பன. (உ-ம்.) "மௌவல்-வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படர. (காஞ்சிப். நாட்டுப். கசச.)

நாற்றிய—கவித்த. (பரிபாடல்.)

நாற்று—மூளை பயிர். (வழக்.)

நாற்றுதல்—தூக்குதல். (உ-ம்.)"மலையருவி வீழ்வதுபோனூற்றுவீரால்" (சிவரக. சிவமுநி. கஉ.)

நாறனு—சடைச்சிச்செடி. (வைத்தியபரிபா.)

நாறல்—1. நாறுதல். (உ-ம்.) "நாற்றப்பாழ்த் துணி" (அரிச்ச. சூழ்வினை. கக.)

நாறி—1. கற்றாழை. 2. நன்னாரி. 3. மோர்ந்து. (சிந்தா.) (1, 2-வைத்தியபரிபா.)

நாறிய—பரந்த. (பரிபாடல்.)

நாறு—1. நாற்று. (உ-ம்.) "நறவுபாய்ந்திட நாறுவளர்ந்தவே" (அரிச்ச.நாட்டு. ௬௯.)(சிந்தா.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நாறுகட்டி—பெருங்காயம்.(வைத்தியபரிபா.)

நாறுகரந்தை—சிவகரந்தையென்பர். (உ-ம்.) "நாறுகரந்தையணிகருவைக்காபாலி" (திருக் கருவைவெண்பாவந்தாதியிற் காண்க.)

நாறுதல்—1. தோற்றுதல். (உ-ம்.) "நாறும் வடக்கயிறுவெண்ணரம்பாவென்பு" (தாயு.சச்சிதாநந்த. உ.) 2. மணத்தல். 3. மூளைத்தல். (உ-ம்.) "நல்வித்துநாறுமையின்று" (இன்னா. உஎ.) (2, 3-சூ. நிக. கக: நகரவெ. எ.)

நாறுபு—நாறி. (பரிபாடல்.)

நாறுமதம்—புழுகு. (சிந்தா.)

நான்—இருதிணையிருகூற்றுத் தன்மையொருமையில்வரும் ஒருபெயர். (உ-ம்.)"நானுமொன் னுள்ளமார்" (திருவாசகம். கோத்தும்பி. உ.)

நான்காம்வேதம்—அதர்வம். (சூ. நிக. க௦. உ௯.)

நான்கு—நாலு. (உ-ம்.) "நான்குதோ-ளுந்தியி னுலகளித்தாற்கென்றுன்னுவாள்" (இராமா. சூர்ப்பணகை. கஉ.)

நான்குவகைப்பெண்கள்—பத்மினி,சித்திநி, சங்கிநி, அத்திநியென்னும் நால்வகைப் பெண்கள். (உ - ம்) "காமநூல்சாற்றுநான்குவகை நலார்" (திருவிளை. நாட். உ௬.)

நான்மணிமாலை — வெண்பாவுங் கலித்துறையும் விருத்தமும் அகவலுமாக அந்தாதித் தொடையாநூற்பது பாடப்படும் ஓர் பிரபந்தம். (உ-ம்.) "வெண்பாக்கலித்துறைவிருத்தமகவல்-பின்பேசுமந்தாதியினூற்பதுபெறி- னு ன் ம ணி மாலையாமெனநவில்வர்" (இலக்கணவி. அஉக.)

நான்மருப்பியானையூர்தி—இந்திரன். (சூ. நிக. க: கக.)

நான்மாடக்கூடல்—மதுரை. (உ-ம்.) "வன்றிறல்வருணன்விட்டவாரியைவிலக் க வீ ச ன் - மின்றிகழ்சடையினின் றுநீங்கியமேகநான்குங்-குன்றுபோனிவந்துநான்குகூடமாக்கூடலாலே

யன்றுநான்மாடக்கூடலானதான் மதுரைமூதூர்" (திருவிளை. நான்மாட. உசு. [நச்சினார்க்கினியார் நான்மாடக்கூடலென்பதற்கு நான்கு மாடங்கூடலின் நான்மாடக்கூடலாயிற்றென்றும்; அவை: திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்றும், அல்லது கன்னி கரியமால் காளி ஆலவாய் என்றுங் கூறுவர். கலி. கஉ.]

**நான்முகப்புல்**—ஒருபுல். (வைத்தியபரிபா.)

**நான்முகன்**—1. அருகன். (நன்னூல். எழுத்தியல். க.) 2. பிரமன். (உ-ம்.) "அரிநான்முகன் வணங்கு" (அரிச்ச. பாயிர. கூ.)

**நான்முகன்றேவி** — 1. சரசுபதி. 2 மனோசிலை. (1, 2-வைத்தியபரிபா.)

**நானம்**—1. அறிவு. 2. நெய். (சிலப்.) 3. புழுகு. 4. பூசுவன. 5. முழுகுதல். 6. வாசனை. (1, 3-சிந்தா.) (4, 5, 6-பிங்கல. கூஉஉச.)

**நானமாலி**—கெவுரி. (வைத்தியபரிபா.)

**நானுங்கள்ளி**—இலைக்கள்ளி. (மலையக.)

**நானிலம்** — 1. நால்வகைநிலம்; அவை: குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தலென்பன. இப் பகுப்புப்பற்றிப் பூமிக்கு நானிலமெனப் பெயர்கூறுவர். (சூ. நிக. கஉ: கச.)

## நி.

நி—இன்மை, உறுதி, எதிர்மறை, ஐயம், சமீபம், நிச்சயம், நிலை, பேறு, பூரணம், மிகுதி என்னுமிவைகளைக்காட்டுமோருபசர்க்கம். (உ-ம்.) "நிமலன்-இன்மைகுறித்து வந்தது; ஏனைய வந்துழிக்காண்க.

**நிக்கந்தன்**—அருகன். (உ-ம்.) "நிக்கந்தன் கோட்டம்நிலாக்கோட்டம்புக்கெங்கும்" (சிலப். கனாத்தி. கரு.)

**நிக்கிரகத்தன்**—அழிப்பவன். (வழக்.)

**நிக்கிரகத்தாநம்** — தருக்கவாதத்தின்கட் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தாநம். (சி. சி. அளவை. கங. சிவஞா.)

**நிக்கிரகம்**—1. கீழ்ப்படுத்தல். 2. தண்டம், தண்டனை. (உ-ம்.) "அங்கியர்காரியமறிந்தேயநுக்கிரகநிக்கிரகமமைக்கின்றூர்க்கே" (சிவரக. கணபதிவந்த. கஎ.)

**நிக்கிரகித்தல்**—தண்டித்தல். (சிவஞானபோ. க. பாண்டி.)

**நிக்துரோதம்**—காட்டாமணக்கு. (வைத்தியபரிபா.)

**நிகட்டம்**—சமீபம். (காஞ்சிப். இரண்டாங் காண்டம். காப்பு.)

**நிகண்டம்**—உடையின்மை. (சி. சி. பரபட். நிகண்டவா. உ.) [நி-எதிர்மறை; கண்டம்-உடை.]

**நிகண்டவாதம்**—ஒரு சமயம். (வழக்.)

**நிகண்டவாதி** — சமணரில் ஒருவகையான்; இவன்: ஆன்மாச்சரீரமெங்கும் வியாபித்தறியுமென்றும், எட்டு, பதினேழு, ஆறுகுணங்களைவிடுகிறதே முத்தியென்றுஞ்சொல்வன். (சி.சி. ச: கஎ. முகம். சி. சி. அ: கஉ. நிரம்ப.)

**நிகண்டவாதிமதநூல்** — காலம் உயிர் தன்மை தரம் அறம்முதலிய பத்தும் ஒருவராற் படைக்கப்படாத அநாதியுள்ளனவென்றசொல்லுமதநூல். (த. நி. போ. உஎச.)

**நிகண்டு** — 1. சொற்பயன்விளக்கு நூல். (இடுகுறிப்பெயர். நன்னூல். பாயிர. முதனூல். கருத்தன் என்னுஞ்சூத்திரவுரையிற் காண்க. 2 தொகுதி. கூட்டம்எனினுமாம். 3. வேதாங்கமாறினொன்று. (சூ. நிக. கஉ: ருசு.)

**நிகமநம்** — உறுதிப்படுத்தி முடிவுகூறல். தருக்கசங்கிரகத்திற் காண்க.

**நிகமம்**—1. கடைவீதி. (உ-ம்.) "நீண்டவங் நிகமம்புக்கநிமலன்மேலார்வம்வைத்து" (கந்தபு. ததீசியுத். அகூ.) 2. நகரம். (உ-ம்.) "தமதுநிகமங்கடல்போன்மருங்குவரக் - கடங்கள்கடந்து" (பிர. காண்ட. ச: கூக.) 3. வேதம். (உ-ம்.) "நிகமமெனிலொன்றுமற்றுநாடொறு" (திருப்பு. கசரு.) நியமமாகவுணர்தற்கருவி என்க.

**நிகர்**—1. உவமையுருபுகளிலொன்று. (நன்னூல். போலப்புரைய என்னுஞ்சூத்திரத்திற் காண்க. 2. சமானம். (உ-ம்.) "நிகருமேலுமின்றியேயமர்தருநிமலன்" (கந்தபு. ததீசியுத். கரும) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பிரகாசம். (உ-ம்.) "நிகர்மலர்நெல்லொடுதூஉய்ப்பகன் மாய்ந்த" (சிலப். கனாத். உ.) 5. போர். (உ-ம்.) "கோதையர்"பார்.

**நிகர்க்தும்**—மாறுபடும். (ஐங்குறு.)

**நிகர்த்தல்**—1. ஒப்பாதல். 2. மாறுபடுதல். (உ-ம்.) "பல்விதழ்நீலமொடுநெய்தனிகர்க்கும்" (ஐங்குறு. உ.)

**நிகர்தல்**—ஒப்பாயிருத்தல். (வழக்.)

**நிகர்ப்பு**—ஒப்பு. (வழக்.)

**நிகர்பக்கம்**—சபக்கம். (உ-ம்.) "நிகரில்பக்கம்"பார்.

**நிகர்வம்**—எண்மானத்திற்பன்னிரண்டாந் தாநம். (சி-லி. ஞாந. உரு.)

**நிகர்வு**—ஒப்பு. (வழக்.)

**நிகர**—ஒருவமச்சொல். (உ-ம்.) "நேரநிகரவன்னவின்ன - வென்பவும்பிறவுமுவமத்திருபே" (நன். கூசுஎ.)

நிகரம்—1. கூட்டம். (உ-ம்.) "பொடிபடப் படவுடைப்பனபுகர்முகக்கரிநிகரமே" (பாரத. அணிவகு. சு.) 2. நி என்னு மெழுத்து.

நிகரா — பகையாத. (உ-ம்.) "தன்னொடு நிகராவென்னொடுநிக" (ஐங்குறு. கூஎ.)

நிகராட்சி — விசுத்தியென்னுமாதாரத்திற் குரிய சுவேதபத்மதளம் பதினாறனுளொன்றில் நிற்கும் ஏ யென்னு மக்கரத்தினதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

நிகரி—பகைத்து. (உ-ம்.) "நிகரா"பார்.

நிகரிடுதல்—ஒப்பிடுதல். (வழக்.)

நிகரில்பக்கம்—விபக்கம். (உ-ம்.) "மூன்று பக்கம்பக்கநிகர்பக்கநிகரில்பக்கமெனத் - தோன் றும்பக்கந்துணிபொருளுக்கிடமாமுவமை நிகர் பக்க - மான்றபொருள்சென்றடையாதவிடமா நிகரில்பக்கமுத-லேன்றவிரண்டும்பொருளுண் மைக்கிடமாமொன்றுபொருளின்றும்" (சி. சி. அளவை. கூ.)

நிகலம்--தோண்மேல். (சூ. நிக. உ: கூஉ.)

நிகழ் — தெரிநிலைவினைப்பகுதி. (உ - ம்.) "ஈங்ஙனமிவ்வாறுநிகழ்தன்மையெல்லாம்" (சிவ ரக. அபுத்திபூ. கச.)

நிகழ்காலம்—வர்த்தமானகாலம். (உ - ம்.) "நின்றிடுநிகழ்காலத்தினிமலனுக்கன் பு செய் வார்" (சிவரக. பாயிர. கரு.)

நிகழ் காலவிலக்கு— நிகழ்காலம்பற்றிவரும் முன்னவிலக்கென்னுமணி.(தண்டி.சஉ.உரை)

நிகழ்காலவினையெச்சம்-செயவென் வாய் பாட்டுவினையெச்சம்.

நிகழ்ச்சி—1. ஒளி. 2. ஒழுக்கம்.(பரிபாடல்.) 3. சம்பவம். (உ - ம்.) "பெறுவரெனுநிகழ்ச்சி பொய்யோ"(பாரத.கிருட்.உசு.)4.மனக்கிளர்ச்சி. (உ-ம்.) "நிகழ்ச்சியின்மைந்தர்ண்டிநீண்முனை சாத்தினார்கள்"(பெரியபு.தடுத்தா.கக.)5.வர்த்த மானகாலம். 6. விருத்தி. (சைவப்பி. உரு.)

நிகழ்த்தல்—1. செய்தல். (உ-ம்.) "அந்த ணனடமேதினைந்தொழினிகழ்த்த லாகும்" (திருவாத. திருவம். சு.) 2. சொல்லுதல். (உ-ம்.) "நீபடைத்திடுகெனநிகழ்த்தி"(கூர்மபு. அட்டமூர். கரு.)

நிகழ்த்துதல் — 1. சொல்லுதல். (உ - ம்.) "எறிகடற்சேதுவினிராமநாதனை - நிறுவியகா தையைநிகழ்த்துகென்னவே" (சேதுபு. அவை ய. க.) 2. நடப்பித்தல்.

நிகழ்தல் — 1. ஒளிசெய்தல், விளங்குதல். (பிங்கல. ககூகூ.) (பதிற்றுப்.) 2. நடத்தல்.

நிகழ்வு — 1. சம்பவிப்பு. 2. நிகழ்காலம். (உ-ம்.) "இறப்பெதிர்வுநிகழ்வெனக்காலமூன் றே" (நன். கூஅகூ.)

நிகளம்—1. சங்கிலி. (உ-ம்.) "நிகழங்கால் விட்டநினைவு" (தனிப்பாடற்றிரட்டு.) 2. நீர்க் கடம்பு. (வைத்தியபரிபா.) 3. மலம். (உ-ம்.) "நிகளமறுக்குமிந்தமயம்" (அருணகிரிபு. அருந் தவ. சுக.) 4. விலங்கு. (சூ. நிக. எ: உக.)

நிகற்பம் — ஒரெண்; அது: கற்பம் பத்து. (பிங்கல. உஉஎகூ.)

நிகற்புதம்—அற்புதம் பத்துக்கொண்டது. (பிங்கல. உஉகூக.)

நிகாதம்—வஞ்சகம் (உ-ம்.) "நிகாதன்"பார்.

நிகாதன்—வஞ்சகன். (பிங்கல. அஎஅ.)

நிகாயம்—1. கூட்டம். (சூ. நிக. அ: ச.) 2. மருதஞ்சார்ந்தவூர். (சூ. நிக. ரு: ச0.)

நிகாயன்—கடவுள், காயமில்லாதவன்.

நிகாரணம்—காரணமற்றது. (வழக்.)

நிகாரம்—பனி. குறுக்கல்விகாரம். (பிங்கல. எகூ.)

நிகவா—பிரமிஎன்னுமோர்பூடு. (வைத்திய பரிபா.)

நிகிதகுரு-வசியமுதலிய அட்டகருமங்களால் இம்மையிலின்பமும் மறுமையிற் றுன்பமுங் கொடுப்பவன். (உ-ம்.) "நல்வசியாதியாவிம்மை யின்பம்வெந்துயரங்குதவுமவனிகிதகுரு" (வே தா. சூ. ககூ.)

நிகிதம்—இதமின்மை. (உ-ம்.) "விகிதமான இதத்தைநீக்கலானிகிதமாயிற்று" (வேதா. சூ. ககூ. உரை.)

நிகிருட்டம்—நீசம். (உ-ம்.) "நிகிருட்டவிட யத்திலேதனக்குத்தானேயொப்பா யி ருக் கி ற சித்தமானது" (உபநிடதம். க. உரை.)

நிகிலம்-எல்லாம். நிகலநிகமாகமம் என்பது வழக்குரையதிக.

நிகு —மஞ்சள். (வைத்தியபரிபா.)

நிகுஞ்சம்—குகை. (சூ. நிக. ரு: கச.)

நிகும்பம்—நேர்வாளம். (வைத்தியபரிபா.)

நிகும்பலை—இலங்கையில் இந்திரசித்து யா கம்பண்ணின இடம். (இராமா. யுத்தகா. நிகும் பலைப்படலம்.)

நிகும்பன்—கும்பகன்னன்மகன். (இராமா. யுத்தகா. )

நிகேசரம்—ஒரு மரம். (வழக்.)

நிகேதநம் — 1. தேவர்கோயில். (உ - ம்.) "வெள்ளியானிகேதநத்தைதவிருப்பினுல் விதித் தோன்" (சேதுபு. இராமநா. சச.) 2. வீடு. (உ-ம்.) "நிதிநிகேதநங்களெங்கும்" (பெரியபு. திருநாட். கூகூ.)

நிச்சந்தேகம்—சந்தேகமின்மை. (சி. சி. க உ0. சிவாக்.)

நிச்சம்—நித்தம். (உ-ம்.) "நிச்சலுமீசனன் பர்" (திருவிளை. நாட்டுப். ருக.)

நிச்சயம்—1. உறுதி. (உ-ம்.) "நிச்சயம்மெ னுங்கவசந்தான்" (இராமா. ஆரணிய. கரன் வதைப். கசஎ.) 2. மெய். (பிங்கல. க௲0க.)

நிச்சயித்தல்—உறுதிப்படுத்தல். (வழக்.)

நிச்சயிப்பு—நிச்சயித்தல். (வழக்.)

நிச்சலம்—1. அசையாத இலக்கு. (உ-ம்.) "சலம்"பார். (பாரத. வாரணாவத. ருசு.) 2. அசைவின்மை.

நிச்சலன்—1. அசைவற்றவன். 2. கடவுள்.

நிச்சல்—நித்தமும். (உ-ம்.) "நிச்சலுமீர்த் தாட்கொள்வோன்வாழ்க" (திருவாச.திருவண். கூக.) [நித்தல்-நிச்சல் என்றாயிற்று.]

நிச்சலை — 1. சலனமற்றசத்தி. (சி. சி. உ: ஞானப்.) 2. பூமி. (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிச்சன்—தாளி. (மலையக.)

நிச்சாயகம்—நிச்சயிப்பது. (சி. சி. உ: சுo. சிவாக்.)

நிச்சித்தம்—1. மனோலயம். 2. விசாரமின்மை.

நிச்சித்தல்—நிச்சயித்தல். (வழக்.)

நிச்சிதம்—நிச்சயிக்கப்பட்டது. (சி. சி. ச: உஎ. ஞானப்.)

நிச்சிந்தன் — 1. அருகன். (சூ. நிக. க: க.) 2. எண்ணமற்றவன். (வழக்.)

நிச்சியம்—, நிச்சிரம்— } உள்ளி.(வைத்தியபரிபா.)

நிச்சுவாசம் — 1. சதாசிவமூர்த்தியுடைய அகோரமுகத்தினின்றுற்பவித்த ஜர்தாகமங்க ளுளொன்று; இதற்குக் கிரந்தசங்கியைகோடி. (சைவச. பொது. ஙகஎ. உரை.) 2. சுவாச மின்மை, மூச்சடக்குகை.(சி. சி. ச:|அ. ஞானப்.)

நிச்சேட்டை – சேட்டையொழித்திருத்தல். (சி. சி. ச: அ. சிவாக்.)

நிச்சேடம்—சேடமின்மை. (சி. சி. உ: ருசு. சிவாக்.)

நிசக்கல்லு-சீதாங்கபாஷாணம்.(வைத்திய பரிபா.)

நிசம்—மெய். (வழக்.)

நிசயம்—1. திரட்சியாகியவுண்டை. (பெரி யபு. மூழுநீறுபூ. உ.) 2. வியூகவிரி மூப்பது ளொன்று. (வள். எசுஎ. பரி. குறி.)

நிசவான்—மெய்யன். (வழக்.)

நிசா—இரவு. (பிங்கல. உஉக.)

நிசாகசம்—வெள்ளாம்பல்.(வைத்தியபரிபா.)

நிசாகம்—மஞ்சள். (வைத்தியபரிபா.)

நிசாகரன்—1. சந்திரன். (பிங்கல. உஉரு.) 2. சேவல். (வைத்தியபரிபா. கருப்பொ.)

நிசாசரம்-1.இரவில்நடமாடுவன. 2.கூகை. 3. பாம்பு.

நிசாசரர்—1. அசுரர். 2. இராக்கதர். (1,2-சூ. நிக. க: சங, சச.)

நிசாசரி—1.இராட்சதத்திரி.(உ-ம்.)"நீடிருஞ் சாபம்பெற்றநிசாசரிவனமீதாமால்" (கூர்மபு. இராமன. கஅ.) 2. கூகை. (பிங்கல. உஙஙக.)

நிசாடு—மஞ்சள். (வைத்தியபரிபா.)

நிசாநந்தம்— மனோலயமான யோகாப்பியா சத்தினுலுண்டாகு மாநந்தம். (உ-ம்.) "மனோ லயயோகத்தினில்வந்துதித்த—லேதமறுநிசாநந் தம்" (வேதா-சூ. ஙச.) [யோகத்திற்காட்சியா கியகுறியைக் காண்பானுகிய மனஞ்சேர்ந்தொ டுங்கினவிடத்து அவ் விரண்டுமின்றி வரும் பயன் நிசத்தைமுன்னிட்டுவருதலால் நிசாநந் தம் என்றாயிற்று.] (வேதா-சூ. ஙரு. உரை.)

நிசாபதி—1. கர்ப்பூரம். (வைத்தியபரிபா.) 2. சந்திரன். (சூ. நிக. க: ருஅ.)

நிசாபிசா—மரமஞ்சள். (வைத்தியபரிபா.)

நிசாபுட்பம் — 1. செவ்வாம்பல். 2. பனி. 3. வெள்ளாம்பல். (1, 2, 3-வைத்தியபரிபா.)

நிசாளம்—ஒரு கட்பறை. (உ-ம்.) "நிசாளந் துடுமைசிறுபறையடக்கம்" (சிலப். அரங்கேற். உஎ. உரை.) [சதுரஅகராதிகாரர் நிசானம் என எழுதுவது, பொருந்தாது.]

நிசி—1. இரா. (உ-ம்.) "சிவநிசிப்பீடுஞ்சொல் வேன்"(பிர. காண். பஞ்சாட். சஉ.) 2. இருள். (சூ. நிக. க: அஉ.) 3. கத்தூரிமஞ்சள். (உ-ம்.) "ஆரநிசிபுட்கரம்" (தைல. தைலவ. ருக) 4. பொன். 5. மஞ்சள். (4, 5-சூ. நிக. கக. சகா வெ. ங.)

நிசித்தண்ணீர்—நீராகாரம். (வைத்திய பரிபா.)

நிசிசரர்—1. அசுரர். 2. இராக்கதர். இரவிற் சஞ்சரிப்பவர்.

நிசிதம்—1. இகழ்ச்சி. (வழக்.) 2. கூர்மை. (சூ. நிக. எ: கசு.)

நிசிதர் — 1. அசுரர், இரவிற்சஞ்சரிப்பவர். 2. ஈனர். (1, 2-வழக்கு.)

நிசுலம்—அலரி. (வைத்தியபரிபா.)

நிசுவாசம்—நிச்சுவாசம், கீழ்விடுகிறசுவாசம்.

நிசுளம்—நிசுநம்.

நிசுநம்—நீர்க்கடம்பு. (மலையக.)

நிசேதம்—நிடேதம். (உ-ம்.) "நிசேதமில யன்மாலீசன்" (மச்சபு. பிரமுக. சு.)

நிசை—இரவு. (உ-ம்.) "திசையடைந்து கதிரிரவியென்னும்வகைசீறிமாறுபொரு தெவ் வரா—நிசையழிந்துவெளியாக" (பாரத. இராய சூய. சரு.)

நிட்கம்—1. இருபதுகுன்றியெடைகொண்ட பொன். (மிருச.டுக.) 2. வராகனிடை. (உ-ம்.) "கற்பூரமிவையாதின்பொடியிறைத்தோரைந் துநிட்கம்" (தைல. தைலவ. கஙடு.)

நிட்களசிவம்—அவயவமிலாத ரூபமாயிருக் கிற சிவம்.

நிட்களசிவன்—இலயசிவன். (பௌட்.கஅ.)

நிட்களதத்துவம்—சிவதத்துவம். (சி. சி. க: சுடு. ஞாநப்.)

நிட்களம்—வடிவில்லாதது. (சி. சி. உ: எச. மறை.) [கலையில்லாதமையாற்பெற்றபெயர்.]

நிட்களர்—சிவன். (சி-வி. ஞாந. ச. உரை.)

நிட்களன்—இலயசிவன். (சி.சி.க:சுடு.ஞாநப்.)

நிட்காமியம்—1. சொர்க்காதிபோக இச்சை யின்றித்தன்னிடத்திலமைந்துநிற்றல். (உ-ம்.) "நிட்காமியதவஞாநத்தினுக்கென் றறியே" (வேதா-சூ. கஎக.) 2. விருப்பின்மை.

நிட்காரணம்—காரணமின்மை. (சி. சி. ச: சஎ. மறை.)

நிட்கிராமணம்—குழந்தையை வெளிக்கொண்டுபோதல்; இது: நாலாமாசத்துட்செய்ய வேண்டுங்கிரியை. (பராசர. உக, உஉ. திருவாளைக். கோச்செங். அச.)

நிட்குடி — ஏலம். (உ-ம்.) "நிட்குடிசாதிய விராநெய்" (தைல. பாயிர. டுஎ.)

நிட்சேபம்—புதையல். (மகாபாரதம். பாயிரம். ௬. உரை.)

நிட்டம்—இருத்தல். (சி. சி. உ: டுசு.சிவாக்.)

நிட்டுரைமுத்திரை—இருகையும் முட்டியாக மூடிக்கொண்டு அந்தமுட்டிகளையே அங்குட்டங்களை யுள்ளடக்கிப்பிடித்தல். (சி-வி. கிரி: உ௬. உரை.)

நிட்டூரம்—கொடுமை. (உ-ம்.) "நிட்டூரநிராகுலகிர்ப்பயனே" (கந்தனலங்.)

நிட்டூரன்—கொடியவன். (வழக்.)

நிட்டை — 1. அசையாமை. 2. அழிவு. 3. இக்கட்டு. 4. உறுதி. 5. சமாதி. 6. சரித்திர முடிவு. 7. சாதகம். 8. நம்பிக்கை. 9. நன்னடை. 10. நிலைபரம். 11. முடிவு. 12. மோட்சம். 13. வாழ்நாள். 14. விரதம். (5, 12-சி. சி. அ: உச. ஞாநப்.) ஏனையவற்றிற்குதாரணம் வந்துழிக்காண்க.

நிட்பவம்—1. அவரை. 2. மொச்சைப்பயறு. (1, 2-வைத்தியபரிபா.)

நிட்பாவம் — 1. அவரைப்பிஞ்சு. (உ-ம்.) "மணப்புளிநிட்பாவத்தோடுச்சிதமுருங்கையா குமூரையிச்சாப்பத்தியமென்றே" (தைல. தைலவ. டுடு.) 2. மொச்சைக்கொட்டை. (வைத்தியபரிபா.)

நிட்பிரபஞ்சம்—பிரபஞ்சமல்லாதது. (உ-ம்.) "நித்தநிர்மலசகிதநிட்பிரபஞ்சப்பொருளை" (தாயு. பரசிவவணக்கம். ௬.)

நிட்பிரமாணம்—பிரமாணமல்லாதது. (சி.சி. சு: க. ஞாநப்.)

நிட்பிரயோசநம் — பிரயோசநமல்லாதது. (சி. சி. சு: க. ஞாநப்.)

நிடதம்—1. அட்டமலையினொன்று. (சூ. நிக. கஉ: எஎ.) 2. இணைக்கைபதினைந்துவகையு ளொன்று; அது: முட்டியாகவிரண்டுகையுஞ் சமஞ்செய்வது. (உ-ம்.) "நிடதமென்பதுகெறிப் படக்கிளட்பின்—முட்டியிரண்டுகையுஞ் சமமாகக்கட்டிநிற்குங்காட்சித்தென்ப" (சிலப். அரங்கே. கஅ. உரை.) 3. தேயமைம்பத்தாறினொன்று. (நைடதத்திற்காண்க.)

நிடதர்கோன் — நளன். (உ-ம்.) "நிடதர் கோன்புகழ்ச்சரிதை" (நைடத. பாயிர.)

நிடாடம்—ஆந்தை. (வைத்திய: கருப்பொ.)

நிடாதன்—சூத்திரப்பெண் சோரமார்க்கமாகப் பிராமணனைக்கூடிப் பெற்றபிள்ளை. (உ-ம்.) "சந்தவம்மடவார்சோரந்தனின்மறையோனைக் கூடி — நந்திடவுயிர்த்தமைந்தனிடாதனென்று ரைப்பர்நல்லோர்" (சூத. சிவமா. கஉ: கக.)

நிடாதா—ஒருவகைச்சாதி. (உ-ம்.) "வேனனென்பவன் மாதாமகனுன மிருத்துவின்றோடத்தால் தானம் தவம் யாகமுதலிய புண்ணியச் செய்கைகளை ஒருவருஞ் செய்யக்கூடாதென்று ஆஞ்ஞாபித்தனன். அதனையறிந்த விருடிகள் பற்பல புத்திகளைச்சொல்லியுங் கேளாமையால் அவர்க்குக்கோபமூண்டு தருப்பையினு லடித்தனர். அதனாலரசனுயிர்துறக்கச்சனங்க ளொருவரையொருவர்வருத்திப் பொருளை யபகரிக்கத் தொடங்கினர். அதுகண்டவிருடிகள் அரசனில்லாமையாலன்றோ இத்தீங்குகள் நேர்ந்தனவென்று வருத்தமூற்று அரசுசெயவோர்புத்திர நிமித்தம் வேனனின் தொடையைக்கடைந்தனர். அதிலிருந்து கருநிறமும், விகாரமுகமும், குறுத்தசரீரமுங்கொண்டு ஒரு மனுடன்றோன்றி, நானென்னசெய்யவேண்டுமென்று முனிவரைவினவ, அவர்கள் (நிஷீத) உட்காரு என்றனர். அதனால் அவன் நிஷாதன் என்னும் பெயர் பெற்றனன். அன்றுமுதல் நிடாதா என்னு மொருவகைச்சாதி யுலகத்திலுண்டாயிற்று" (கூர்மபு. தக்கனைச்சபித். சு. உரை.)

நிடாலம்—நெற்றி. (வைத்தியப. கருப்பொ.)

நிடேகம்—1. கருத்தரித்தல். (குமாரசாமி.) 2. தெளித்தல். (பரா. மிரு. உக.)

நிடேததிரவியங்கள்—விலக்கப்பட்டதிரவியங்கள்; அவை: மதுபலாண்டு முதலியவை.

(வேதாரு.உச.உரை.)பலாண்டு-ஈரவெங்காயம்.

நிடேதம்—விலக்கு. (பராமி. சசு.)

நிடேதித்தல்—1. மணவாளனும் மணவாட்டியும் முதற்கூடுதல். 2. விலக்கல். (சி-வி. ஞாந. அ. உரை.)

நிண்ணம்—உறுதி. (வழக்.)

நிணக்கும்—கட்டும். (புறநா.)

நிணத்தல்—1. கொழுத்தல் 2. முடைதல். (சூ. நிக. க: உஅ.)

நிணந்து—பிணித்து. (உ-ம்.) "நிணந்தெனெஞ்சநிறைகொண்டகள்வனே" (சிந்தா. பதுமை. கசசு.)

நிணம்—கொழுப்பு. (உ-ம்.) "நிணங்கருகிச் சுறுநாறுமுடையினும்" (அரிச்ச.மயான. ருடு.)

நித்தம்—1. அநவரதம். (திருவிளை. தீர்த்தவி. உஅ.) 2. நிருத்தம். (பரிபாடல்.) 3. நிலையுடைமை. (உ-ம்.) "அநித்தநித்தமோர்ந்து" (திருவிளை. திருமண. கககூ.)

நித்தல்—நித்தம். (உ-ம்.) "அம்புயன்மாலவணித்தலத்தனென்ரறற்றும்" (மரு-தி. ருஎ.)

நித்தலம்—முத்து. (உ-ம்.) "நத்தளித்தவெண்டே-யவனித்தலத்தண்வயன்மருதூரன்" (மரு-தி. ருஎ.)

நித்தன் — 1. அருகன். (சூ. நிக. க: ரு.) 2. ஆத்துமா. 3. எப்போதுமுள்ளவன். (உ-ம்.) "அறிவிலனமூர்த்தனித்தனராகாதி குணங்களோடும்" (சி. சி. சு: ருஅ.) 3. சிவன். (உ-ம்.) 'நித்தனுகமவேதங்கணிகழத்திடுங்கல்விச்சாலே' (சிவரக. நைமிச. உ0.)

நித்தியகருமம்—சட்கருமங்கள். (நித்தியகன்மவிதி என்னுநூலிற்காண்க.)

நித்தியகலியாணி—1. பார்வதி, அழியாத மங்களத்தையுடையவள் என்றபடி. 2. வாடாமல்லிகை. (வைத்தியபரிபா.)

நித்தியசகலம்—இருவகைச்சகலாவத்தையுளொன்று. (சி. சி. சு: ருகூ. சிவாக்.)

நித்தியசிராத்தம் – எப்பொழுதுஞ்செய்யுஞ்சிராத்தம். (நித்தியமேயெனநிகழ்சிராத்தமும்" என்னுஞ் சேதுபு. சேதுபல. கருசு-ம் செய்யுளாற் பெறப்படும்.

நித்தியசிலேட்டுமரோகம்—ஒருவகைச் சிலேட்டுமரோகம்; அது: வெள்ளோக்காளம், சுரம், இருமல், தேகஞ்சுட்கித்தல், எரிச்சல், கிறுகிறுத்துக்கீழேவிழுதல், குரற்கம்மல், வார்த்தையின்மை என்னுமிக்குணங்களை யுண்டாக்கும். (சீவரட். ககச.) [நித்தியம்-கெடாமை.]

நித்தியப்பிரளயம்—1. சமஸ்தபிராணிகளுடைச் சுழுத்தி. 2. நால்வகையொடுக்கத்துளொன்று. (கூர்மபு. பதிக. ருரு. உரை.)

நித்தியம்—1. அழியாமை. (உ-ம்.) "நித்தியகல்யாணி"பார். (சிவரகசி. தேவிநாட்டி. சு.) 2. எப்போதும். (உ-ம்.) "நித்தியசிரார்த்தம்" பார்.)

நித்தியமுத்தி—மீளாதகதி. (வழக்.)

நித்தியமோட்சம்—நித்தியமுத்தி. (வழக்.)

நித்தியயோகம்—திநயோகம்; அவை: அதிகண்டம், அரிடணம், ஆயுஷ்மான், ஐந்திரம், கண்டம், சாத்தியம், சித்தம், சித்தி, சிவம், சுகர்மம், சுபம், சுப்பிரம், சூலம், சோபநம், சௌபாக்கியம், திருதி, துருவம், பரிகம், பிரமம், பிரீதி, வச்சிரம், வரியான், விட்கம்பம், விதிபாதம், வியாகாதம், விருத்தி, வைதிருதி என்பன. (பஞ்சாங்கத்திலறிக.)

நித்தியர்—என்றுமுள்ளவர். (சைவவி. க.)

நித்தியவிநோதம் — அருகன் முக்குடையி னொன்று. (சிலப்பதிகாரம். காடுகாண்காதை.க. அடியிற்காண்க.)

நித்தியன் — 1. கடவுள். 2. சிவன். (உ-ம்.) "நீலகந்தரநித்தியநிர்க்குணநின்மலா வருள்வாயே" (சிவரக. தேவிநாட்டியம். சு.)

நித்தியாங்கங்கள் — நித்தியத்துக்கு உரிய அங்கங்கள்; அவை: நித்தியகர்மலோபம் வந்தபோது அதற்குப் பரிகாரஞ்செய்தலும், அட்டபந்தனசலநம்வந்தால் மீளவுமவ்வட்டபந்தனஞ்சாத்தலும், மார்கழிமாதத்திற் கிருதாபிஷேகமுதலாகப் பன்னிரண்டுமாசத்திலும் மாதபூசை பண்ணுதலும், சம்வற்சரிகப்பிராயச்சித்தமாகப் பவித்திரஞ்சாத்தலு முதலாயின. (சைவச. பொதுவி. உஉ. உரை.)

நித்தியாநந்தம்—மோட்சம். (வழக்.)

நித்தியாநந்தன்—கடவுள். (வழக்.)

நித்திரம்-கண்டங்கத்தரி.(வைத்தியபரிபா.)

நித்திராலு-நித்திரைகொள்வோன். (உ-ம்.) "நீளரவினங்களானித்திராலுவை-மீளவுங்கொல்லுவான்" (பாரத. வாரணவத. அ.)

நித்திரை-கண்படை; அது: மாயையாக்கை பதினெண் குற்றத்தொன்று. (உ-ம்.) "மெத்தையிற்படுத்தல்நித்திரைக்கழகு" (கொன்றைவேந்தன்.)

நித்தில்—நொச்சி. (வைத்தியபரிபா.)

நித்திலம்—முத்து. (உ-ம்.) "நீலம்வைரம் வைரேரியநித்திலஞ்செங்- கோலந்திகழுந்துகிர்" (அரிச்ச. நாட்டு. சுo.)

நித்திறம்-கண்டங்கத்தரி.(வைத்தியபரிபா.)

நிதகம்—நீர்முள்ளி. (வைத்தியபரிபா.)

நிதநம்—1. அழிவு. 2. பிறந்தநாளுக்கேழாநாள்.

நிதம்பம்—1. அல்குல். 2. கற்பரிபாஷாணம். (வைத்தியபரிபா.) 3. மலைப்பக்கம். (1, 3- சூ. நிக. கக: தகரவெ. ரு.)

நிதரிசநம்—1. சாட்சியணி; அஃது: ஒரு பிரகாரம் நிகழ்வதாகிய ஒரு பொருளுக்குரிய பிரயோசநமானது பிறிதொருபொருளுக்கு நன்மையாவது தீமையாவது புலப்படநிகழ்வதாகச் சொல்லப்படுமது. (உ-ம்.) "ஒருவகைநிகழ்வதற் கொத்தபயன்பிறிதிற்குப்—புகழ்மைதீமையென் றிவைபுலப்பட — நிகழ்வதாயினிதரிசநமதுவே" (தண்டி.அரு.) [குவலயாநந்தகாரர். ஒருபொருள் தன்செய்கையால் மற்றொருபொருளுக்கு நற்பயனுவது தீப்பயனுவதுகாட்டுவது நிதரிசநமென்பர்.] 2. காணப்படாமை.

நிதலம் — கீழேழுலகினென்று. (சூ. நிக. கஉ: எக.)

நிதாநம்—1. இடம். (திருவிளை. வேதத்துக் குப்பொரு. உஅ.) 2. உத்தேசம். 3. கடவுண்மணி. (சூ. நிக. சு: ஃ.) 4. திரவியம். (சூ. நிக. சு:௩.) 5. நிச்சயம். 6. படை. (பிங்கல.கரு0உ.) (2, 5-வழக்.)

நிதாநித்தல் — 1. உத்தேசித்தல். 2. நிச்சயித்தல். (1, 2-வழக்.)

நிதாநிப்பு—மதிப்பு. (வழக்.)

நிதி—1. சங்கநிதிபதுமநிதிகள். 2. திரவியம். (உ-ம்.) "நிகரிலதுவினவினேர்தமக்குமுத்தி நிதிகுடங்கைதனில்வந்ததாகுமன்றே" (சிவரக. சிவுண்டி. சக.) 3. திரள், பெரும்பொருள். (உ-ம்.) "நிலம்பொறுக்கலாதசெம்பொனீண்டு" (சிந்தா. நாம. ௩௭௩.) 4. நிறைவு. 5. பொன். (உ-ம்.) "நிதியிழந்தனம்" (அரிச்ச.மயாந.சு௩.)

நிதிக்கிழவன்—குபேரன். (பிங்கல. கக௫.)

நித்தியாசநம்—வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்த்தற்குள்ள உபாயம் மூன்றனுளொன்றுகிய தெளிதல். (வள். ௩௫சு. குறிப்பு.)

நித்தியாசநயோகபஞ்சகம் — மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகமென்பன. (வி-ணி. ௫எ.)

நித்திகம்—கண்டங்கத்தரி. (வைத்தியபரிபா.)

நிதிப்போதி — கிழிக்கட்டு. (சூ. நிக. கக: ழகரவெ. க.)

நிதியம்—1. திரவியம். (உ-ம்.) "உற்றுண்டாகியநிதியம்" (அரிச்ச. சூழ்வினை. க0உ.) 2. பொருட்டிரள். (உ-ம்.) "நிலந்தினக்கிடந்தநிதியமோடனைத்தும்" (மலைபடு. ருஎரு.)

நிதியின்கிழவன்—சங்கப்புலவருளொருவன். (சிலப்பதி.)

நிந்தகன்—பழிசொல்வோன். (வழக்.)

நிந்திகம்—கண்டங்கத்தரி. (வைத்தியபரிபா.)

நிந்தனம்—நிந்தனை. (வழக்.)

நிந்தனை—நிந்தை. (உ-ம்.) "நிந்தனைசெய் தொழுகுவார்" (திருவிளை. விருத்தா. கரு.)

நிந்தித்தல்—இகழ்தல். (வழக்.)

நிந்திதம்—இகழ்ச்சி. (வழக்.)

நிந்திதன்—பழிக்கப்பட்டவன். (வழக்.)

நிந்திப்பு—இகழ்ச்சி. (வழக்.)

நிந்தை—நிந்திப்பு. (வழக்.)

நிந்தையுவமை—உவமையையிகழ்ந்துவமிப்பது. (வரலாறு.) "மறுவுடைத்திங்களையொப் பெனின்முகஞ்சிறப்புடைத்து" (தண்டியல.)

நிபதேசம்—கோரோசனை.(வைத்தியபரிபா.)

நிபந்தப்பத்திரம் — அரசனுக்கினையாலே வாணிகஞ்செய்பவர்முதலானவர்களால், தேவர்கட்கேனும், அந்தணர்முதலோர்கட்கேனும், மாதந்தோறும் அல்லது வருடந்தோறும் இவ்வளவுபொருள் கொடுக்கத்தக்கதென்று எழுதப் பட்டுக் கொடுக்கப்படுவது. (மிருச. ௩க.)

நிபந்தம்—கட்டளை, நியதி. (உ-ம்.) "பூசனைக் கங்கண்வேண்டுநிபந்தமாராய்ந்துளான்" (பெரியபு. திருவாரூர். கசு.)

நிபந்தநம் — கட்டுதல். நி-உபசருக்கம். 2. வீணையின்வலிக்கட்டு.

நிபந்தனை—ஏற்பாடு. (வழக்.)

நிபம்—1. காரணம். (இராமா. பாலகா. பரசுராமப். கரு.) 2. நீர்ச்சாடி. 3. வேம்பு. (2, 3- வைத்தியபரிபா.)

நிபாகம்—சமைத்தல். (வழக்.)

நிபாதம்—1. பதித்தல். (உ-ம்.) "நிராதாரமாகிக் — கரையிலருட்பரன்றுவிதாசத் திநிபாதத்தாற்கழிப்பன்மலம்" 2. விடுகை. (சி. சி. உ: ருசு. சிவாக்.) 3. விழுதல். (1, 3-சி. சி. அ: உ. உரை.) நி-உபசருக்கம்.

நிபிடம்—1. நெருக்கம். (உ-ம்.) "தண்டுசெத்ரசாமர-நிபிடமிடவந்து" (திருப்பு. ௬௭௫.) 2. மிகுதி. (சி. சி. உ: அ0. சிவாக்.)

நிபுணத்துவம்—விவேகம். (வழக்.)

நிபுணதை—சாமர்த்தியம். (சி. சி. உ: ருஎ. சிவாக்.)

நிபுணர்—கல்வியறிவினர். (வழக்.)

நிம்பகம்—வேம்பு. (வைத்தியபரிபா.)

நிம்பசேதம்—முடக்கொற்றுன். (வைத்தியபரிபா.)

நிம்பத்தின்சளி — வேப்பம்பிசின். (உ-ம்.) "சருளிகாட்டுள்ளிநிம்பத்தின்சளி" (தைலவ. தைலவ. க௩௫.)

நிம்பம் — 1. எலுமிச்சம்பழம். (வைத்திய பரிபா.) 2. வேம்பு. (உ-ம்.) "அங்குநின்றவர் நிம்பவலங்கலானைவணங்கியே" (திருவாத. குதிரை. ச.)

நிம்பிரிந்து—கோபித்து. (உ-ம்.) "அலர்ந்த வந்தாமரையல்லிப்பாயைப்புலர்ந்துகண் சிவந்த னபோன்றுநிம்பிரிந்து" (சிந்தா.இலக். ௬௪௮.)

நிமம்—நியமம். (உ-ம்.) "நிமமுடனித்த முத்தியென்றிட" (த. நி. போ. உ௬௧.)

நிமலம்—அழுக்கின்மை. (உ-ம்.) "அமலத் தொல்பெயராயிரத்தாழியா - னிமலப்பாதம்" (இராமா. கர. ௪௫.)

நிமலர் — 1. காலதத்துவத்திருக்குமோரு ருத்திரர். (வி-ணி. உ௭௪.) 2. சுத்தர்.

நிமலன்—1. கடவுள். (உ-ம்.) "நிகமம்"பார். 2. சுத்தன்.

நிமி-சூரியகுலத்தரசரிலொருவன்,நிமிச்சக்ர வர்த்தி.(இராமா.பாலகாண்ட.திருவவதா. ௬௦.)

நிமிட்டல்—கிள்ளல். (வழக்.)

நிமிடம்—ஓர் காலநுட்பம். (உ-ம்.) "நாடொறுதைநிமிடமொன்றின்" (சேதுபு.இராமநா. ௪.)

நிமிண்டுதல்—கிள்ளல். (வழக்.)

நிமித்தகாரணம் — 1. கர்த்துருத்துவவேது வாயிருப்பது. 2. யாதொன்றுசமவாயிகாரண மும் அசமவாயிகாரணமுமன்றாய் மற்றுங்கார ணமாமது என்பர். (தர்க்கபரி. ௬.)

நிமித்தகாரணன்—ஏதுக்கர்த்தா. (வி-ணி.)

நிமித்திகன் — வருங்காரியஞ்சொல்வோன். (சூ. நிக. உ: உஉ.)

நிமித்தசூடாமணி—ஒருசகுநநூல். (வழக்.)

நிமித்தத்துவம்—ஏது.

நிமித்தம்—1. காரணம். (உ ம்.) "எந்தை யோர்வினையாடலினிமித்தமாங் கெழுந்தே" (சிவரக. மேரு. உ௧.) 2. சகுநம். (சிந்தா.) 3. நிமித்தகாரணம். 4. பல்விழுதலியவற்றின்குறி. (உ-ம்.) "இனிதுற்றநிமித்தமுமெய்திலதால்" (சிவரக. கணபதிவக். ௭.) 5. பொருட்டு; இது: நான்காம்வேற்றுமைப்பொருளில்வரும்.

நிமித்திகப்புலவன்—அரசர்க்குறுதிச்சுற்றத் தொருவன், புரோகிதன்.

நிமித்திகன்—சகுநஞ்சொல்வோன்.(சிந்தா.)

நிமித்தியம்—நிமித்தம். (சி.சி. ௧: ௧. நிரம்ப.)

நிமித்தீகரித்தல்—நிமித்தமாகக்கொள்ளுதல். (சி. சி. அ: ௧௬. ஞானப்.)

நிமிர்—தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.)"நிமிர் சுடர்" (நான்மணி. ௬௭.)

நிமிர்ச்சி—1. உயர்ச்சி. 2. நிமிர்வு. 3. நீட்சி.

நிமிர்த்தல்—நிமிர்த்துதல். (வழக்.)

நிமிர்த்துதல்—1. உயர்த்துதல். 2. நீட்டல். (உ-ம்.) "இக்கோணைஞானவெரியால்வெதுப்பி நிமிர்த்து" (சி. சி. ௪௦: உ. ஞானப்.) 3. பிரித்தல். (உ-ம்.) "முடங்கலைநிமிர்த்துவாசித்து" (திருவிளை. யானையெய். அ.)

நிமிர்தல் — 1. உயர்தல். (உ-ம்.) "நிமிரச் சமையக்கொட்டியவாலரிப்புழுக்கலும்" (திருவிளை. குண்டோ. ௬.) 2. ஓடல். (சூ. நிக. ௬: ௪உ.) 3. நீளல். (உ-ம்.) "அற்புதமாய்ச்சிவந்து நிமிர்ந்தகன்றவயில்விழிக்கணைகள்"(கோயிற்பு. பதஞ்சலி. உ௬.) 4. நுடங்குதல். (பத்துப்பா.) 5. வளர்தல். 6. விளைவுமாறல்.

நிமிர்ந்து—இடையிட்டு. (பரிபாடல்.)

நிமிர்ப்பு—நிமிர்ச்சி. (வழக்.)

நிமிர்வு—<br>நிமிரல்— } நிமிர்தல். (வழக்.)

நிமிரின்—நடப்பின். (புறப்பொ.)

நிமிளை—அஃது: இரசிதநிமிளை, வெள்ளி நிமிளை, கருமாநிமிளை, காகநிமிளை, பொன் னிமிளை, சத்திநாதலோகநிமிளை, துரைச்சநி நிமிளை, வெண்கலமிளை, லோகநிமிளைஎனப் பலவகைப்படும். (வைத்தியபரிபா.)

நியக்ரோதம்—ஆலமரம். (சூ. நிக. ௪: ௧௪.)

நியச்சந்தேகம் — வைதரணி மேருவைச் சேர்ந்து பெற்றமகள். (கூர்மபு. தக்க.சபி. உ௪. உரை.)

நியசித்தல்—வைத்தல், பதித்தல். (சி.சி.௬: அ. மறை.)

நியத்துவம்—வைத்தல். (வழக்.)

நியதம்-இன்றியமையாமை.(தருக்கசங்.௪௦.)

நியதி—1. ஊழ். (சூ. நி. அ: ௬௧.) 2. நித்திய கருமம். (உ-ம்.) "மாநுடர்புனலின்மூழ்கிவாய்க் கவேங்கியதிமுற்றி" (அருணகிரிபு. வலம்புரி.௫.) 3. முறைமை. (பிங்கல. உஉ௦௬.) 4. வித்தியா தத்துவமேழினொன்றாய் மாயையிலே நின்று காலதத்துவத்துக்குப்பின்றோன்றி ஆன்மாக்கள் அவரவர் செய்தகன்மம் அவரவரே யேறுது குறையாது நுகருமாறு நியமிக்குமோரு தத்து வம். (உ-ம்.)"நியதிபின்றோன்றிக்கன்மநிச்சயம் பண்ணிநிற்கும்" (சி. சி. உ: ௫௫.)

நியதித்தல்—நியதிசெய்தல். (வழக்.)

நியதிதத்துவம்-வித்தியாதத்துவமேழினொ ன்று. (நியதி. ௪. பார்.)

நியந்தா—ஆளுகிறவன். (சி.சி.௧:௪அ.சிவாக்.)

நியமகம்—நியமம். (த. நி. போ. ௧௧௬.)

நியமச்சிலேடை—சிலேடையணியுளொன் று; அது: பலபொருள்களுக்கியையுமாறு சிலே டித்ததைத் தேற்றேகாரம்புணர்த்தி ஒன்றற்கு நியமமாக்குவது. (தண்டி. ௭௬. உ லர.)

**நியமச்செயல்** — நித்தியதத்துவம். (உ-ம்.) "தேரினடக்குங்கதிர்மறையச்செய்யுநியமச்செயல்ர்ற்றி" (சேதுபு. வேதாள. உரு.)

**நியமத்தர்**—நியமக்காரர். (வழக்.)

**நியமநம்** — 1. அடக்குதல். (சி. சி. ரு: க. சிவாக்.) 2. ஏற்பாடு. (சி. சி. உ: ருரு. சிவாக்.) 3. முறை. 4. வகைப்படுத்தல். (உ-ம்.) "விளக்குறவுணர்வினியமனஞ்செய்வானெவன்" (கூர்மபு.பிரகிருதி.உ.) 5. வேம்பு. (வைத்தியபரிபா.)

**நியமம்** — 1. அட்டாங்கயோகத்தொன்று; அது: தவம், மநமுவந்திருத்தல், கடவுளுண்டென்னும் விசுவாசம், பாவத்திற்குபயந்து தேடியபொருளைச் சற்பாத்திரருக்குக்கொடுத்தல், தன்னின்மூத்தோரை வழிபடல், உயிர்க்குறுதி பயக்கும் உண்மைநூல்களைக் கேட்டல், குலம், செல்வம், அதிகாரம் முதலியவைகளினலே கொ்வமின்றியடங்கி யொழுகுதல், தக்கனவுந் தகாதனவும் பகுத்தறிதல், செபம், விரதம் என்னும் பத்துமாம். (சைவவி. உக.) 2. இடம். (பிங்கல. எகக.) 3. கடைவீதி. (உ-ம்.) "வாணிகருறையுள்சூழ்நியமம்" (திருவிளை. நகர. சுக.) 4. கோயில் 5. தெரு. 6. நிச்சயம். 7. நியதி. 8. நெடுங்தெரு. (சூ. நிக. ரு: சஎ.) 9. மருதநிலத்தூர், நகரம். (சிந்தா.) (4, 5, 6, 7, 9-பிங்கல. ருஎஉஎ.)

**நியமவிலக்குச்சிலேடை**– சிலேடையணியுளொன்று; அது: நியமஞ்செய்துகூடிய சிலேடையை வேறொன்றிற்குங்கூறி அந்நியமத்தை விலக்குவது. (தண்டி. எசு. உரை.)

**நியமவுவமை**—இதற்கிதுவே யொப்பெனவேகாரம் புணர்த்துரைப்பது. (வ-று.) "வேயேகரமொப்பது"

**நியமித்தல்** — 1. ஏற்படுத்தல். (வழக்.) 2. தொழிற்படுத்தல். (உ-ம்.) "எவ்வாறுநியமிக்கப்படும்" (கூர்மபு. பிரகிருதி. உ.) 6. பிறப்பித்தல். (சூ. நிக: க: உ.)

**நியமிப்பு**—நியமித்தல். (வழக்.)

**நியர்க்கியம்**–பொரியரிசி. (வைத்தியபரிபா.)

**நியாசம்**–ஒருவன் திருடர்முதலியவர்களால் அபாயப்படுமென்னுமச்சத்தால் தன்னுடைய எருதுமுதலிய காலிகள் வெண்கலப்பாத்திரம் முதலானவைகளை நம்பத்தக்க ஒருவன் அயலூருக்குப்போகும்போது அவன் வந்தபின்னர் அவனிடத்திலொப்பிவிக்கவேணுமென்று சொல்லி அவனுடைய வீட்டாரிடத்திற் கொடுப்பது. (மிருச. கககூ.) 2. வேம்பு. (மலையக.) 3. வைப்பு. (சைவ. பொது. ருஉரு. உரை.)

**நியாதம்**—1. நியாசம். (உ-ம்.) "பண்ணிநியாதம்பரசிவன்றன்பாதமுண்ணினைக தேசிகன்றுளும்" (சைவச. பொதுவி. ருஉரு.) 2. வேம்பு. (வைத்தியபரிபா.)

**நியாமகசத்தி**—போகத்திற்குரிய சீவர்களை நியமப்பட ரட்சிக்குஞ்சத்தி. (வேதா. சூ. ருo. உரை.)

**நியாமகம்**–ஏற்பாடு. (சி. சி. உ: ருரு. சிவாக்.)

**நியாமகன்**—கட்டளையிடுவோன். (வி-ணி.)

**நியாமிகை**—இச்சாசத்தி. (சி. சி. சுரு. ஞாநப்.) [நியமம்பண்ணுதலாற்பெற்றபெயர்.]

**நியாயசூடாமணி** — தருக்கநூலிலொன்று. (வழக்.)

**நியாயசூத்திரம்** — அட்சபாதராற் செய்யப்பட்ட ஒரு சாத்திரம். (மச்சபு. முகவுரை.)

**நியாயபோதநி** — தர்க்கசாத்திரங்களிலொன்று. (வழக்.)

**நியாயம்** — 1. நீதி. (சூ. நிக. அ: சச.) 2. பரதத்தின்பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (உ-ம்.) "அங்ககாரம்"பார். 3. வேதப்பொருளை நிச்சயித்தற்கு அநுகூலமாகிய பிரமாணமுதலியவ்வைகளை அறிவிப்பது. (சைவவி. உக.) இவ்வாறன்றி, வைதீகசாத்திரங்கள் மூன்றிலொன்று; தருக்கம். இந்நூல்: பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசகம், திட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிர்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏதுவாபாசம், சலம், சாதி, நிக்கிரகத்தாநம் ஆகப் பதினறு பதார்த்தங்களுள்ளனவென்றும், இதிற்பதார்த்தலக்கணங்களும் முத்தியிலக்கணமும் வைசேடிகநூலிற் கூறியவாறே கூறப்படும். ஈசுரன் செய்விப்பனென்றுங் கூறும். இதனைச்செய்தவர் அக்கபாதர். (சி. பி. கை. அக.)

**நியாயமலைவு** — தருக்கசாத்திரவழுவிலொன்று; அது: தீர்ப்புவிளங்காமல் மயங்கப்பேசுதல்.

**நியாயவாதி**—நியாயவாதங்கூறுவோன்.

**நியாயவான்**—நீதிமான். (வழக்.)

**நியுத்தர்** — அரசனல் பொருள்கொடுத்தன் முதலான உபகாரங்கள் செய்யப்பட்டவராகி விவகாரவிசாரணை செய்தற்பொருட்டுச்சபையிலிருக்கும் பண்டிதர். (மிருச. எo.)

**நியுதம்**—இலட்சம். திவாகரம் கஉ-ஆவதிற் காண்க.

**நியூநம்**—1. குறைவு. (உ-ம்.) "நியூநாதிகங்கள்" (சி. சி. உ: உஅ.) 2. தோல்வித்தாநம் இருபத்திரண்டில் பதினோராவது; அது: தன்னற் சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையைநிலைபெறுத்து முறுப்புக்களை முற்றக்கூருது சிலவுறுப்புக்கள் குறைவுபடக்கூறுதல். (சி. சி. அளவை.)

நியோகதுற்றம்—எதிரியின் மேல்வித்தன மறியாமை. (உ-ம்.) "எதிரிதன்மேல்வித்தன மறியாமை-யிசைப்பருநியோககுற் ற ந் த ா ன்" (த. நி. போ. ௩௦௪.)

நியோகம்—செலுத்தல். (பரா. மி. ௭௦.)

நியோகித்தல் — ஏவுதல். (சி. சி. உ: ௭௪. சிவாக்.)

நிர் — எதிர்மறையல்லது அ ப ா வ த் தை நிச்சயத்தைக்கருதுமோ ருபசர்க்கம்.

நிர்க்குண்டி—வெண்ணொச்சி. (சூ. நிக. ௪: ௨௫.)

நிர்க்குணம் – 1. குணமின்மை. 2. மாயை யோடுகூடாத பிரமம். (த. நி. போ. ௧௧.)

நிர்க்குணன்—கடவுள். (உ-ம்.) "சோதிநிர்க் குணநிரஞ்சநன்" (சிவ ர க. காயத்திரி. ௬.) சாத்துவிகம், இ ர ா ச த ம், தாமதமென்னுங் குணங்களைநீங்கிநிற்பவன். (சிவஞானபோத விருத்தி. ௧: ௬.)

நிர்ச்சரம்—சைநத்திற்சொல்லப்படும் சத்த பதார்த்தங்களுளொன்று. (த. நி. போ. ௧௬.)

நிர்ச்சலம்—அசைவின்மை. (சி. சி. அ: ௨௨. ஞாநப்.)

நிர்ச்சலயோகி—யோகசந்நியாசி, சர்வகரு மங்களையும்விடுத்துச் சலநமில்லாத சமாதியை யுற்று எவன்நிர்ச்சலமாயிருக்கின்றானோ அவன். (கூர்மபு. வருண. ௪௦. உரை.)

நிர்ச்சலை—சலநமற்றசத்தி. (சி. சி. ௧: ௪௭. ஞாநப்.)

நிர்ச்சீவன் — சைநத்திற் சொல்லப்படுஞ் சத்தபதார்த்தங்களிலொன்று. (த.நி.போ.௧௬.)

நிர்ணயம்—1. நிச்சயம். (வி-ணி.) 2. நியாய நூலிற்சொல்லப்பட்ட பிரமேயம்முதலிய பதி னாறு பதார்த்தங்களுளொன்று; அஃது: அவ தாரணஞாநம். (சி. பி. கை.)

நிர்ணயித்தல்—தீர்மானித்தல். (வழக்.)

நிர்த்தத்துவன்—தத்துவாதீதன். (சங்கற்பநி. மாயாவா. ௬.)

நிர்த்தாரணம்—ஆதாரமற்றது. (பி-வி.)

நிர்த்துகம்—கஷாயம். (உ-ம்.) "மருதநிலத்தா ற்றுநீர்நிர்த்துகத்திற்காம். (தைல.பாயிர.௨௬.)

நிர்த்தேசம்—1. காண்பித்தல். (உ-ம்.) "வாழ்த் துவணக்கொடுவத்துநிர்த்தேசமென மூ ன் று" (வேதா. சூ. அ.) 2. விரித்துக்கூறல்.

நிர்த்தேசித்தல்—நிர்த்தேசம்பண்ணல். (வே தா. சூ. அ: உரை.)

நிர்நாமம் — அருகர்கூறுமட்ட குணத்தொ ன்று. (த. நி. போ. ௨௭௨.)

நிர்ப்பீசதீட்சை— மலபரிபாகமுடையவராய வழியும் தீட்சைக்குப்பின் ஒருதலையான் வழு வின்றி அநுட்டிக்கக்கடவனவாகிய சமயாசாரங் களை யநுட்டிக்கும் ஆற்றலுமறிவுமிலராயினு ருக்கு மற்றைக்கருமங்களோடுகூடச் சமயாசா ரத்தையும் ஆகுதியாற் சுத்திசெய்தொழித்து நித்தியகருமமாத்திரையில் இயன்றமட்டும்அதி காரமுடையராகச் செய்யுந்தீட்சை. இதுசமயம் விசேடம் நிருவாணமென மூன்றுவகைப்படும்; அவற்றுள்: சமயமும் விசேடமும் ஓரோவொன் றேயாம் ஏனை நிருவாணதீட்சை தேகாந்தத் தின் முத்தியைப்பயக்கு மசத்தியோநிருவாண மெனவும் அப்பொழுதே முத்தியைப்பயக்குஞ் சத்தியோநிருவாணமெனவும் இருவகைப்படும். [சமயாசாரசுத்தியோடு செய்யப்படும்நிருவாண தீக்கையும் அதற்கங்கமாயுஞ் சுதந்தர ம ா யு ஞ் செய்யப்படுஞ் சமயவிசேடங்களும் நி.ர் ப் பீ ச தீட்சையெனவறிக.] சி. சி. அ: ௪. சிவஞா.)

நிர்ப்பீசபாவனை— மகேச்சுரிய பா வ னை. (கூர்மபு. வருண. ௪௬. உரை.)

நிர்ப்பீசம்—நிர்ப்பீசதீட்சை. (உ-ம்.) "பால ரொடுவாலீசர்விருத்தர்பனிமொழியார் பலபோ கத்தவர்வியாதிப்பட்டவர்க்குப்பண்ணுஞ் – சில மதுநிர்ப்பீசஞ்சமயாசாரந்திகழ்சுத்திசயயிபுத்தி ரர்க்குநித்தத் – தேலுமதிகாரத்தையியற்றித்தா னுமெழினிரதிகாரையெனநின்றிரண்டாய்வி ளங்குஞ் – சாலநிகழ்தேகபாதத்தினோடுசத்திய நிருவாணமெனச்சாற்றுங்காலே" (சி.சி.அ:௪.)

நிர்ப்பீசை—நிர்ப்பீசதீட்சை. (சி. சி. அ: ௪. ஞாநப்.)

நிர்ப்புதம்- அற்புதம்பதின்மடங்கு கொண் டது. (உ-ம்.) "அயுதஞ்சகமொருகோடிஅற்புத நிர்ப்புதமனந்தம்" (சிவரக. விசையை. ௧௨.)

நிரம்பாத்தூக்கம்—தூங்கல். (சூ.நிக.௩:௭.)

நிரம்பாமென்சொல்—மழலை. (சூ.நிக.௧௦:௩.)

நிர்மிதம்—சிருட்டிக்கப்பட்டது. (த.நி.போ. ௧௧௫.)

நிர்மலம்—களங்கமின்மை. (உ-ம்.) "கரு மருவுகாயத்தைநிர்மலமதாகவே" (த ா யு. தே சோ. ௧.)

நிர்மலதை — மலரகிதமாயிருக்குந்தன்மை. (சி. சி. உ: ௧. சிவாக்.) மலம்-அழுக்கு.

நிர்மாணம்—செய்கை. (வழக்.)

நிர்மாலியம்—நிருமாலியம். (வி-ணி.)

நிர்மிதம்—நிருமிதம். (வழக்.)

நிர்மூலம்—நிருமூலம். (வழக்.)

நிர்வசநம்—பேசாதிருத்தல். (வழக்.)

நிர்வத்தியம்—இயற்றப்படுவது. (பி-வி. ௧௨. உரை.)

நிர்வாகம்—நிருவாகம். (வழக்.)

நிர்வாணம்—1. நிருவாணம். 2. மோட்சம். (சைவச. ஆசாரிய. சுசு. உரை.)
நிர்வாணி—நிருவாணி. (வழக்.)
நிர்விக்கிநம்—இடையூறில்லாமை. (உ-ம்.) "நிர்விக்கிநபரிசமாத்தி" (சி.சி. பாயிர. க. சிவாக்.)
நிர்விகற்பக்காட்சி — சாமானியமாக ஒரு வஸ்துவைக்காண்பது. (சி.சி. அளவை. க. சிவாக்.)
நிர்விகற்பகம்—விகற்பமில்லாதது. (சி.சி. அளவை. க. சிவாக்.)
நிர்விகற்பம்—வேறுபாடின்மை. (வி-ணி.)
நிரக்கம்—சுட்டறிவின்மை. (உ-ம்.) "நிரக்கம்பெருகி" (கோயிற்பு. நடராச. கசு.)
நிரகங்கிருதி — புறவிகாரம். (வேதா. சூ. கசஅ. உரை.)
நிரங்கிருதி—நிரகங்கிருதி. (உ-ம்.) "உண்டிலையென்னுமலகங்கிருதிநிரங்கிருதி யு ரு மல்" (வேதா. சூ. கசஅ.)
நிரங்குசம் —கட்டுப்படாமை. (வி-ணி.)
நிரஞ்சநம்—1. இரசகர்ப்பூரம். (வைத்திய பரி.) 2. நிறைவு. 3. மயக்கமின்மை. (திருவிளை. தீர்த்தவி. எ.) 4. மோக்கம். 5. வெளி. (2, 3, 5-பிங்கல. ௬௭௨அ.)
நிரஞ்சநன்—1. அருகன். (சூ. நிக. க: ரு.) 2. மறைப்பில்லாதவன், கடவுள். (உ-ம்.) "நிர்விகற்பன்நிர்த்தத்துவன்நிரஞ்சநன்" (சங்கற்ப நி. மாயாவா. ௬. அடி.)
நிரஞ்சநி— பார்வதி, மயக்கமில்லாதவள். (வழக்.)
நிரத்தம்—கூடாமை. (சி. சி. அளவை. க. சிவாக்.)
நிரத்தல் — 1. கூடியொழுகுதல். (உ-ம்.) "நேராநிரந்தவர்நட்பு" (வள். அ௨க.) 2. நிரல் படக்கோத்தல். (உ-ம்.) "நிரந்தினிதுசொல்லு தல்" (வள். சுசுஅ.) கலத்தலுமாம்-நிரந்தரிக்குஞ் சடையார். புகலூரந்தாதியிற்காண்க. 3. நிறை தல். (உ-ம்.) "துறுமுதிண்காம்பினத்துணைமெங் கணும்-நிறைகிரிமுழுவதுநிரந்த நீ ண் மு கி ல்" (சேதுபு. கந்தமா. உ௨.) 4. பரத்தல். (சிந்தா.)
நிரத்தி—நிறைவித்து. (உ-ம்.) "பள்ளமேடு நிரத்திப்படாமழை" (சேதுபு. அக்கினிதீர். க௨.)
நிரதம்—எப்போதும். (உ-ம்.) "வரதனைநிரத மேத்தெடுப்பாம்" (சூதை. ஞாந. க: ரு.)
நிரதிகரணதீட்சை — ஒருவகைத்தீட்சை. (சி. சி. பாயி. ௬: ஞாநப்.)
நிரதிகரணம்-ஆதாரமின்மை. (சி.பி. கை. எ.)
நிரதிகரணன் — ஆதாரம்வேண்டாது நிற் கிறவன். (சி. சி. அ: உ. ஞாநப்.)
நிரதிகாரதீக்கை—நிர்ப்பீசதீட்சை. (சி. சி. அ: ௪. மறை.)
நிரதிகாரம்—நிரதிகாரதீட்சை. (சி. சி. அ: ௪. சிவாக்.)
நிரதிகாரன்—பக்குவமற்றவன். (வழக்.)
நிரதிகாரி—பரமகர்த்தா. (உ-ம்.) "மூன்கூறிய நிரதிகாரியாகியபரமகர்த்தாவுக்கு" (சி. சி. க: ௬அ. மறை.)
நிரதிகாரை—ஒருதீட்சை; இது: சமயிக்குப் பூசையாதியில் அதிகாரங்கொடாததும் புத்திர கனுக்குப் பிரதிட்டைமுதலிய தன்மஞ்செய் தற்கு அதிகாரங்கொடாததுமான தீக்கை. (உ-ம்.) "எழினிரதிகாரையெனநின்றிரண் டாய்விளங்கும்" (சி. சி. அ: ௪.)
நிரந்தம்—குரங்கு. (உ-ம்.) "கோசலேசனி ரந்தவினங்கொடுகோதிலாநெறிகொண்டகுரம் பினில்" (சேதுபு. சேதுவந். சசு.)
நிரந்தரம்—எப்பொழுதும். (உ-ம்.) "பொன் னிரந்தரம்வைகுமார்பிறைபுரிவுகொண்டு" (சே துபு. கவிதீர்த்த. ௪.)
நிரந்தரன்—கடவுள். (வழக்.)
நிரந்தரி—பார்வதி. (வழக்.)
நிரந்தரித்தல்—நிறைதல்.
நிரந்தரியன்—பூரணவியாபகி. (வா சு தே. ககசு.)
நிரந்திரம்—துவாரமின்மை. (வழக்.)
நிரந்து—1. ஒழுங்குபட்டு. (ஐங்குறு.) 2. பரந்துநின்று. (பரிபாடல்.)
நிரநுயோச்சியம்-உடன்படாமைக்குரியது. (உ-ம்.) "நிரநுயோச்சியாநுயோகம்" (சி. சி. அளவை. கச. மறைஞா.)
நிரம்பம்—ஒத்தல். (உ-ம்.) "நிரம்பயில்யாக் கை" (கலி. கூச.)
நிரப்பு-1. சரித்திரம். (உ-ம்.) "நெருநலுங் கொன்றதுபோலுநிரப்பு" (வள். க0சஅ.) 2. தெரிநிலைவினைப்பகுதி.
நிரப்புதல்—நிறைத்தல். (வழக்.)
நிரபி—மஞ்சள். (வைத்தியபரிபா.)
நிரம்பரன்—1. அருகன். (சூ. நிக. க: ௪.) 2. சிவன். நக்கன் என்னும் பெயராற்கொள்க. 3. வத்திரமில்லாதவன்.
நிரம்பல் — நிறைவு. (உ-ம்.) "நிருத்தன் சடைமேனிரம்பாமதியன்" (திருவதிகைவீரட் டம். தேவாரம்.
நிரம்பவழகியர்-சேதுபுராணஞ்செய்தஒரு நூலாசிரியர்.
நிரம்பாச்சொல்—நிரம்பாமென்சொல்.
நிரம்பாத்தூக்கம்—தூங்கல். (சூ. நிக. கூ: எ.)
நிரம்பாமென்சொல்—மழலைமொழி. (சூ. நிக. க0: க.)

நிரம்பியபுட்டம்— } வாழை. (வைத்திய
நிரம்பியம்— } பரிபா.)

நிரம்புதல்—நிறைதல். (உ-ம்.) "நிரம்பல்" பார்.

நிரயம்—நரகம். (உ-ம்.) "வெவ்வாய்நிரயத்து வீழ்த்துமால்" (இன்னிசை. கசு: சு.)

நிரல்—வரிசை, ஒழுங்கு. (உ-ம்.) "நேரின மணியைநிரல்படவைத்தாங்கு" (நன். பொதுப் பா. கசு.)

நிரவதி—எல்லையின்மை.

நிரவயன்—கடவுள். (வழக்.)

நிரவல்—நிரவுதல். (வழக்.)

நிரவுதல்—நிரம்புதல். (வழக்.)

நிரனிறை—1. ஒழுங்காகநிறுத்தல். (வழக்.) 2. நிரனிறையணி. (உ-ம்.) "ஏதுநுட்பமிலேசு நிரனிறை" (தண்டி. உசு.)

நிரனிறையணி — முன்னர் வைக்கப்பட்ட சொற்பொருள்களோடு பின்னர்வைக்கப்படுஞ் சொற்பொருள்கள் முறையேசேர்ந்து பொருள் படுமாறு வரிசையாகநிறுத்திப் பாடப்படுமணி. (தண்டி. சுசு.)

நிரனிறைவழு — செய்யுள்வழுவினொன்று; அது: நிரன்முறை பிறழவைப்பது. (தண்டி. சொல்லணி. கoசு.)

நிராகரணம்— } மறுத்தல். (சி. சி. அ: கச.
நிராகரித்தல்— } நிரம்ப.) மூன்றுமொன்
நிராகரிப்பு— } றே.

நிராகாரத்தியாநசமாதி — வடிவறுதியாகச் செய்யப்படு மொருவகைச்சமாதி. (சி. சி. அ: கூச. ஞாநப்.)

நிராகாரபாவனை — மகேச்சுரியபாவனை. (கூர்மபு. வருண. சங. உரை.)

நிராகாரம்—1. உபவாசம். 2. நிராகரிப்பு. 3. வடிவமில்லாதது. (த. நி. போ. உoரு.)

நிராகாரன்—1. கடவுள். 2. சூக்குமசரீரன். (1, 2-வழக்.)

நிராசம் — 1. எதிரிடை. 2. நம்பிக்கை யின்மை. 3. விடுதல். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிராதாரசமாதி—ஆதாரமற்றசமாதி. (சி. சி. ச: கூசு. மறை.)

நிராதாரசிவயோகம்—ஒருவகைச்சிவயோகம். (சி. சி. அ: கூ. சிவாக்.)

நிராதாரதீக்கை — விஞ்ஞானகலர் பிரளயா கலர்களுக்குச்சிவன் குருவடிவின் மறைந்து நில்லாது நேரேசெய்யுந்தீக்கை. (சி. சி. அ: உ: சுப்.)

நிராதாரம்—1. அந்நுவயவெதிரேகங்களால் நேதிநேதிசெய்து அறிவித்தல் வேறுபடுத்தல் நித்தியமாக்கல் சொரூபநிச்சயம்பண்ணல் இவ ற்முற்றத்துவங்களை வெருக்கிச் சமாதிபொருந் திக் குருவாற் றன்னைக்கண்டு தானுந்தனக்குயி ராயிருக்க அருளைக்கூடுவது. (உ-ம்.) "ஓதாரு நிரா-ஆதாரநிராதாரமீதாகமெனமூன்றுமுயிர்க ளிறைவனடியடையுநெறி" (சிவப்.) 2. ஆதார வின்மை.

நிராதாரன்—1. ஆதாரமற்றவன். 2. கடவுள். (1, 2-வழக்.)

நிராமயம்—நோயின்மை. (உ-ம்.) "நிராமய பரமாநந்தநிருத்த" (திருவிளை. வரகுண. உஉ.)

நிராமயன்—1. சிவன். (உ-ம்.) "ஆகமம்"பார். 2. நோயில்லாதவன்.

நிராமாலு—விளாமரம். (வைத்தியபரிபா.)

நிராயுதன்—1. அருகன். (சூ. நிக. க: கூ.) 2. ஆயுதமில்லான்.

நிராலம்பசாலம்பம்—சிவத்தியானம். (சி.சி. க: ருச. ஞாநப்.)

நிராலம்பம்—1. ஆதாரம்வேண்டாதது. 2. யசுர்வேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

நிராலம்பன்—கடவுள், பற்றுக்கோடில்லான்.

நிராலம்பசிவத்தியாநம்—ஞாநம். (சி.சி.அ: சஅ. ஞாநப்.)

நிராலம்பித்தல்— பற்றுக்கோடின்மைகாட் டல். (சி. சி. அ: கூo. ஞாநப்.)

நிரியாசம்—பிசின்; அது: குங்குலியமுதலி யன. (உ-ம்.) "தப்புபலநிரியாசம்" (வைத லைபாயிர. உஅ.) (சிந்தா.)

நிரியாணம்—1. சாவு. 2. யானைக்கடைக் கண். (சூ. நிக. கூ: எ.)

நிரீக்கணம் — நீரீட்சணம் அட்டசுத்தியி னொன்று, ஆதித்தன், அக்கினி, சந்திரன்என்னு மூவரும் முறையே வலக்கண்ணும் நெற்றிக் கண்ணும் இடக்கண்ணுமா வாராதலால், வலக் கண்ணினாலே அதனை உலர்த்தினதாகவும் நெற்றிக்கண்ணினாலே தகித்ததாகவும், இடக் கண்ணினாலே அமுதங்கொண்டு நனைப்பதாக வும் பாவிப்பது. (சைவச. பொதுவி. கூருரு. உரை.)

நிரீச்சுவரசாங்கியம்—சூனியவாதம். (வழக்.)

நிரீச்சுவரசாங்கியன்—புருடன்சந்நிதியிலே மாயைதானே தநுகரணபுவநபோகமாய்த் தோ ன்றுமென்று சொல்லுபவன். (சி-பி. )

நிரீச்சுவரவாதம்—நிரீச்சுவரசாங்கியம்.

நிரீச்சுவரவாதி — சிருட்டிகர்த்தா வில்லை யென்று சாதிக்கிறவன். (சி. சி. க: க. சிவாக்.)

நிரீட்சணசுத்தி—கண்ணூறுகழிப்பு.

நிரீட்சணம்—1. பார்வை. 2. பார்வையின் மை. 3. மதிப்பு. (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிரீட்சமாணம்—1. நம்பிக்கை. 2. பார்த்தல். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிரீட்சித்தல்—பார்வை பார்த்தல். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிரீட்சிதம்—காணப்பட்டது. (வழக்.)

நிரீட்சிதர்—1. அருளடைந்தவர். 2. பார்க்கப்பட்டவர்.

நிருகேதுகம் — ஏதுவில்லாதது, யாதொரு ஏதுவுமில்லாமல் வருவது. (சி.சி.அ:உ.சிவாக்.)

நிருச்சுவாசம்—சுவாசமடக்குதல். (சிவதரு. எ: கசஅ.)

நிருசன் — வாதராயணனுக்கும் அகுந்தரிக்கும்பிறந்த ஒரு மகன். (த. நி. போ. கருக.)

நிருணயம்—1. ஆராய்வு. 2. தீர்ப்பு. 3. நிச்சயம். 4. நியமிப்பு. (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நிருணுமன்—1. அருகன். 2. கடவுள்.

நிருணித்தல்—நிர்ணயம்பண்ணல். (வழக்.)

நிருத்தம்—1. கூத்து; அது: கலைஞானமறுபத்துநான்கினொன்று. (உ-ம்.) "எந்தை-யந்தமிலாவானந்தநிருத்தமளித்தருளொன்று" (கோயிற்பு. பதஞ்சலி. க.) 2. பதம்பிரித்தல். 3. பற்றில்லாமை. (சிவதரு. அ: கூசு.) 4. வேதங்களின் சொற்களுடைய பொருளை யறிவிக்குமொரு வேதாங்கம். (சைவவி. உo.)

நிருத்தமாது—நாடகக்கணிகை. (சூ. நிக. உ: கூசு.)

நிருத்தன்—1. சிவன். (உ-ம்.) "ஆகமம்"பார். 2. நடிப்போன்.

நிருத்தாநுபூம் — கூத்துவிகற்பங்களுக்கமைந்த வாச்சியக்கூறுகளுளொன்று; அது: நிருத்தத்துக்குவாசித்தல். (சிலப். அரங்கே.கச.உரை.)

நிருத்தி—1. அர்த்தம்பண்ணுதல். (பி-வி.சுக.) 2. பதச்சேதம்பண்ணிவிளக்குதல்.

நிருத்தியலங்காரம்—பிரிநிலை நவிற்சியணி. (குவலயா.)

நிருதர் — இராட்சதர். (உ-ம்.) "நிருதர்ச் செற்றோய்" (கூர்மபு. சுவேதவரா. ரு.) [நிருதிகுலத்திற்பிறந்தவர்களென்பது.]

நிருதி—1. இராக்கதத்தி. (இராமா. ஆரணியகா. சூர்ப்பந. கூஎ) 2. தென்மேற்றிசைப்பாலன். (சூ. நிக. கஉ: எக.) 3. நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) 4. பகலினிகழும் பன்னிரண்டாமுகூர்த்தம். (விதாந. குணகுண. எகூ. உரை.) 5. மூதலெழுவள்ளலிலொருவன். (சூ. நிக. உ: உகூ.) 6. மூலம். (விதாந. குணகுண. எகூ. உரை.)

நிருபசரிதம்—உபசாரமில்லாதது. (சி.சி. க: சுஅ. ஞாநப்.)

நிருபம்—1. கட்டளை. (வழக்.)

நிருபன்—அரசன். (சூ. நிக. உ: கஉ.)

நிருபாதநவாதி— மூதற்காரணத்தினின்றும் பிரபஞ்சந்தோன்றவில்லையென்னுமவன். (சி. சி. க: ரு. ஞாநப்.)

நிருபாதாநம்—மூதற்காரணமில்லாதது. (சி. சி. வரலாறு. எ-ஆம் பக்.)

நிருபாதிகம்-உபாதியற்றது, தடையற்றது. (சி. சி. பாயிரம்.)

நிருமலன்—1. அருகன். (உ-ம்.) "நிருமலனுண்மூலங்கழிதல்செய்யாதுய் மி னென் னினும்" (திருநூற். ருசு.) 2. சிவன். (சூ. நிக. க: எ.) 3. மலத்துடக்கற்றவன். (உ-ம்.) "நிருமல ரஞ்சனைசேய்பணிமாலத்தர்" (மறைசை. ருஎ.)

நிருமாணம்—நிருமிப்பு. (வழக்.)

நிருமாலியம் — பூசித்துக்கழித்தபொருள். (வழக்.)

நிருமித்தல்—1. ஆராய்தல். (பிங்கல.ௐஎௐo.) 2. உண்டாக்குதல். (உ-ம்.) "மயன்நிருமித்துதவியவவ்விமானஞ்சாத்தி"(திருவிளை. இந்திரன் பழி. அரு.)

நிருமிதம்—1. நியமிப்பு. (வழக்.)

நிருமிதி—சிருட்டி. (உ-ம்.) "இலதுகாத்தனிருமிதியிச்சைசெய்திநிகழ்நடமாகுமன்றே" (கோயிற்பு. பதஞ்சலி. சுசு.)

நிருவகித்தல் —1. தாங்குதல். 2. நிலைப்படுத்தல். (1, 2-வழக்.)

நிருவாகம்—1.காரியத்தையியற்றப்போதிய சத்தியுடைமை. 2. காரியப்படுத்துதல், நிறைவேற்றுதல். (1, 2-வழக்.)

நிருவாகி— காரியமுடிக்குஞ் சமர்த்தன். (வழக்.)

நிருவாகித்தல்—நிருவகித்தல். (வழக்.)

நிருவாணதீட்சிதர்-சமயதீட்சை நிருவாணதீட்சை விசேஷதீட்சை யென்னும் மூன்றும் பெற்றுக்கொண்டு சந்தியாவந்தனம் சிவலிங்கபூசையென்னு மிரண்டனோடு ஞானபூசையுமநுட்டிப்பவர். (சைவவி. கூஉ.)

நிருவாணதீட்சை—மூவகைச்சிவதீட்சைகளிலொன்று; அஃது: ஆறு அத்துவாவைச் சோதித்துநீக்கி ஆன்மாவைத் திருவடியிலேகூட்டுந் தீட்சை. இத்தீட்சை அசத்தியோநிருவாணமெனவுஞ் சத்தியோநிருவாணமெனவு மிருவகைப்படும். அவற்றுட் சத்தியோநிருவாணதீட்சைபெற்றோர் பெற்றபொழுதே சரீரம்நீங்கி முத்தியைப்பெறுவர். அசத்தியோநிருவாணதீட்சைபெற்றோர் தீட்சையிற் சஞ்சிதமும் ஆகாமியமுஞ்சோதித்துச் சரீரம்நிற்பதற்கேதுவாய்ப் புசிக்கப்படும் பிராரத்தகன்மஞ் சோதிக்

கப்படாமையால் ஆயுள்முடிவில் சரீரம்நீங்கி முத்தியையடைவர். (சைவச. ஆசாரி. ௬௨. உரை. (சித். பிர.)

நிருவாணம்—1. இருக்குவேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு.அட்டமூ. ௨௬. உரை.) 2. உடையின்மை. 3. நிருவாணதீட்சை. (சைவச. ஆசாரி. ௬௨. உரை.) 4. பிறப்பொழிவு.

நிருவாணி—1. அருகன். 2. ஆறத்துவாவையுங்கடந்தஞானி. (ஒழிவி. அருள. ௩௦. (சி. சி. அ: ௫. ஞானப்.) 3. சிவன். (1, 3-நக்கன்பார்)

நிருவிகற்பக்காட்சி—பெயர்முதலியவற்றூற் பகுத்தறிதலின்றி இஃது ஒன்றுதோன்றுகின்றதெனப் பொருளின் உண்மைமாத்திரையே யறியுஞானசத்தி. (சி. சி. அளவை. ௩. சிவஞா.)

நிருவிகற்பசமாதி—ஒரு யோகநிலை. (சி.சி. ௧௦: ௪. ஞானப்.) [விகற்பமில்லாதசமாதியென்பது பொருள்.]

நிருவிகற்பப்பிரமிதி — விசேடணத்தோடு கூடுதலின்றிப் பொருண்மைமாத்திரத்திற்றேய்ந்து இஃதொன்றெனத்தோன்றுமறிவு. (சைவப்பி. ௬.)

நிருவிகற்பம்—நிருவிகற்பக்காட்சி. (சி. சி. அளவை. ௩. சிவஞா.)

நிருவிடயாநந்தம் — விடயாநந்தம்போலத் தோற்றுதெதிரீடற்ற விடத்திற்றேன்றுமாநந்தம். (உ-ம்.) "கூடரர்-நிருவிடயாநந்தசுகம்" (ஒழிவி. அருள. ௩௩.)

நிருடபசுபந்தம்—யாகமிருபத்தொன்றினொன்று. (அபிதாநசி. யாகங்கள்பார்.)

நிருபணம்—சொல்லுதல். (சி. சி. ௬: எ. சிவாக்.)

நிருபாதிகம்—உபாதியற்றது. (சி. சி. ௬:எ. சிவாக்.)

நிருபித்தல் — நிச்சயித்தல். (சி. சி. ௪: ௫. சிவாக்.)

நிருபிதம்—நிச்சயிக்கப்பட்டது. (சி.சி.௪:௫. சிவாக்.)

நிரேதுகம்—ஏதுவின்றிவருதல். (சி. சி. ௧: ௧. சிவாக்.)

நிரை—1. ஒழுங்கு. (உ-ம்.) "திரைநிரைவணங்குந்தில்லை" (கோயிற்பு. பதஞ்சலி.அ௫.) 2. நிரையசை.(உ-ம்.)"நிரையதுமூன்றுதானே யிலக்கணம்" (சூ. நிக. ௧௨: ௬௬.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. பசு. (சூ. நிக. ௩: ௧௨.) 5. பசுக்கூட்டம். (உ-ம்.) "தொறுக்கொண்டவருயிந்தொறுநிரையுங்கவர்குரன்" (பாரத. அருச்சுனன்றீர். ௬.) 7. வரிசை. (உ-ம்.) "நிரைமணி மோலிசூடிநேரலர்வணங்கியேத்த" (கூர்மபு. அந்தக. அ.)

நிரைகவர்தல் — சத்துருக்கள், காலிகளைக் கவர்தல்; அது: புறப்பொருட்டுறையினொன்று. வெட்சிமாலைசூடிச்செல்வோர்செய்வது. (சூ. நிக. ௧௨: ௯௨.)

நிரைகிளம்பி—சூலாடு. (வைத்திய. கருப்பொ.)

நிரைதல்—மறைப்பு. (வழக்.)

நிரைத்த—இடைவிடாத. (சிந்தா.)

நிரைத்தல்—1. ஒழுங்காய்நிறுத்தல்.(உ-ம்.) "முட்டநித்திலநிரைத்தபந்தரினகைத்தசிரரிமுகத்தகால்" (பாரத. கிருட்டிண.) 2. கோத்தல். (திருமுரு. ௧௬. அடி. உரை.)

நிரைதல்—ஒழுங்குறநிரவுதல். (வழக்.)

நிரைநிறை—நிரனிறை. (வழக்.)

நிரைபு—குற்றுகரமுற்றுகரங்களோடு நிரையசை ஒருசொல்விழுக்காடுபட விசைந்துவருவது. (உ-ம்.) "இருவகையுகரமோடியைந்தவை வரினேநேர்புநிரைபுமாகுமெனப" (தொல். பொருள். ௩௧௬.)

நிரையணி—அவுரி. (வைத்தியபரிபா.)

நிரைமீட்டல் — பகைவர்கள்கவர்ந்த காலிகளைத் திரும்பக்கவர்தல். (பாரத. நிரைமீட்சிச்சருக்கம்பார்.)

நிரையசை — குறிலிணைந்துங் குறினெடிலிணைந்துங் குறிலிணையொற்றடுத்துங் குறினெடிலொற்றடுத்தும் வருமசை. (உ-ம்.)"குறிலிணைகுறினெடிற்றனித்துமொற்றடுத்து - நெறிவருநிரையசைநான்குமாகும்" (இலக்கணவி. ௭௧௪.)

நிரையம்—நரகம். (உ-ம்.)"அந்தமற்றநிரையத்தழுத்தென்பாண்" (சிவரக. நந்திகேசுரர்நமனுக்கு. ௬.)

நிரையொன்றசிரியத்தளை—நிரையீற்று இயற்சீர்முன்நிரைமுதலியற்சீர்வந்தொன்றுவது. (யா. காரிகை. உறுப். எ. உரை.)

நிரோட்டம்—மிறைக்கவியினொன்று; அது: இதழ்முயற்சியாற் பிறக்குமுயிரும் மெய்யும் உயிர்மெய்யுமின்றிவரப் பாடப்படுவது. (உ-ம்.) "சித்திரப்பா"பார். [நிர் - இன்மை. ஒட்டம் - உதடு.]

நிரோதகம் — மறைப்பு. (சி. சி. ௨: ௮௪. சிவாக்.)

நிரோதநம்—அழுதலின்மை.

நிரோதம்—ஆணவமலம். (சி. பி. சை. சிவப்பிர. ௨: ௨. உரை.)

நிரோதித்தல் — தகைதல், தடைப்படல். (வி-ணி. ௨அ௫.)

நிரோதிநி—புன்னிரண்டுகலைகளிலேழாவது; அது: அர்த்தசந்திரகலைக்குமேல் மூன்றங்குலம்

வியாபகம். வடிவு-திரிகோணம். தேவதை-சதாசிவன். தத்துவம் சாதாக்கியம். (சி-லி. கிரி. க-ஆம். உரை.)

**நில்**—தெரிநிலைவினைப்பகுதி.

**நில்லாதநிலை**—நிலையாதநிலை. (உ-ம்.) "நில்லாதநிலையிது" (சேதுபு. கடவுள்வாழ்)

**நில்லாமை**—அநித்தியம். (இராமா. ஆரணிய. மாரீச, உஉஉ.)

**நில்லிகா**—நிற்க. (பரிபாடல்.)

**நிலக்கடம்பு**—ஒருபூடு. (வைத்தியபரிபா.)

**நிலக்கடலை**—வேர்க்கடலை. (வழக்.)

**நிலக்கணம்**—செய்யுட்பொருத்தத்தில்வருங்கணப்பொருத்தத்துளொன்று; அது: மூற்றும் நிரையாய்வருவது. (இலக்கணவி. அ00.உரை.)

**நிலக்கரி**—பூமியிலிருந்தெடுக்கப்படுமொருகரி. (வழக்.)

**நிலக்கறையான்**—ஒருகறையான். (வழக்.)

**நிலக்காரை**—ஒரு முட்செடி. (வழக்.)

**நிலக்காளான்**—ஒரு காளான். (வழக்.)

**நிலக்கிழங்கு**—நிலப்பனைக்கிழங்கு. (வைத்தியபரிபா.)

**நிலக்கும்பு**—ஒரு செடி. (வழக்.)

**நிலக்கூந்தல்**—எலிச்செவிப்பூடு. (வைத்தியபரிபா.)

**நிலக்கோட்டை**—ஒருபூடு. (வைத்தியபரி.)

**நிலத்தாமரை**—முட்செவ்வந்தி. (வழக்.)

**நிலத்துத்தி**—ஒரு துத்தி. (வழக்.)

**நிலத்துளசி**—ஒரு துளசி. (வைத்தியபரி.)

**நிலநெல்லி**—ஒரு நெல்லி. (வழக்.)

**நிலப்பயிர்**—பெண். (வைத்தியபரி. கருப்பொ.)

**நிலப்பலா**—வேர்ப்பலா. (வைத்தியபரி.)

**நிலப்பனை**—ஒருபூடு, நிலப்பனைக்கிழங்கு. (வைத்தியபரிபா.)

**நிலப்பாகல்**—
**நிலப்பாகை**— } ஒருபூடு. (வைத்தியபரி.)
**நிலப்பாலை**—

**நிலப்பாளை**—அம்மான்பச்சரிசி. (வைத்தியபரிபா.)

**நிலப்பிளப்பு**—கமர். (புகலூரந்தாதி. கஉ.)

**நிலப்புழு**—ஒரு புழு. (வழக்.)

**நிலப்பூ**—நால்வகைப்பூவினொன்று. (உ-ம்.) "கொடிப்பூ"பார்.

**நிலப்பொட்டு**—1. ஒருவகைக்காளான். 2. மண்ணைத்தேய்த்திடுந்திலதம். குழவிகட்கு முழுக்காட்டினவுடனிடுவது. (வழக்.)

**நிலம்**—1. இடம்; அது: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால்வகைப்படும். (சூ. நிக. கஉ: கச.) 2. கன்னி. (மலையக.) 3. பூமி. (உ-ம்.) "அடியிட்டுநிலங்கிளைத்து" (திருவிளை. மாயப். கஎ.)

**நிலம்பி**—கொசுகு. (வைத்தியபரிபா.)

**நிலம்பு**—தாளி. (வைத்தியபரிபா.)

**நிலமகன்**—செவ்வாய். (சூ. நிக. க: சு0.)

**நிலயம்**—நிலையம். (வழக்.)

**நிலவடலி**—சிறுபனை. (வழக்.)

**நிலவல்**—ஒளிசெய்தல். (உ-ம்.) "நிலவவாண்டினுக்" (பெரியபு. திருக்குறிப்பு. எஉ.)

**நிலவறை**—கீழ்நிலை. (பிங்கல. சுசு0.)

**நிலவாகை**—1. நில ஆவிரை. 2. நிலப்பாகல். (1, 2-வைத்தியபரிபா.)

**நிலவாழை**—ஒரு பூடு. (வழக்.)

**நிலவி**—நிலைபெற்று. (சிந்தா.)

**நிலவிந்தை**—ஒரு பூடு. (வழக்.)

**நிலவிழுது**—நிலப்பனை. (வைத்தியபரிபா.)

**நிலவிளா**—நிலவிளாத்தி. (வழக்.)

**நிலவிளாத்தி**—ஒரு மரம். (வழக்.)

**நிலவீரியம்**—பூநீறு. (வைத்தியபரிபா.)

**நிலவு**—1. ஒளி. 2. சந்திரப்பிரபை. (உ-ம்.) "நிலவுகாலுநெடுங்குடைமன்னவன்" (அரிச்ச. வேட்டஞ். க.) 3. சந்திரன். (உ-ம்.) "நிலவைப்புனைந்தசெஞ்சடைநின்மலன்" (கந்தபு. ததீசிஉத். உஎ.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. நிலைபெறுதல். (உ-ம்.) "நீரொலித்தன்னநிலவுவேற்றானையொடு" (மதுரைக். ருசுக.) (புறநா.)

**நிலவுதல்**—1. ஒளிசெய்தல். 2. மன்னுதல். (புறப்பொ.) 3. விளங்குதல். (உ-ம்.) "மாவாணிலவுநிலமங்கைவார்குழல்" (வாண. உச0.)

**நிலவுமரி**—நிலவுமரிப்பூடு. (வைத்தியபரி.)

**நிலவேம்பு**-கிரியாத்துச்செடி. (வைத்யபரி.)

**நிலவேர்**—பூநாகம். (வைத்தியபரிபா.)

**நிலன்**—நிலம். (உ-ம்.) "கன்னலுஞ்செந்நெலும்புல்லுமாநிலனுங்கழிந்துபுறங்கிடக்கநடந்துபோய்" (திருவிளை. விடையி. க.) போலி.

**நிலா**—1. ஒளி. (சிலப்பதி.) 2. நிலவு. (உ-ம்.) "புன்-முறுவலென்னமுகிழ்த்ததுவெண்ணிலா" (பெரியபு. தடுத்தாட். கசு0.)

**நிலாமணக்கு**—ஒரு பூண்டு. (உ-ம்.) "சுகபலைநிலாமணக்காயில்" (தைல. தைலவ. ககக.)

**நிலாமணி**—சந்திரகாந்தம். மணி-கல்.

**நிலாமுகி**—நிலாமுகிப்புள். (வழக்.)

**நிலாமுகிப்புள்**—சகோரம். (பிங்கல. உருரு0.)

**நிலாவிரை**—ஓராவிரை. (வைத்தியபரிபா.)

**நிலாவுதல்**—நிலவுதல். (வழக்.)

**நிலியர்**—நிற்பாயாக. (புறநா.)

**நிலீயர்**—நிலைபெறுவாயாக. (புறநா.)

**நிலுமாகன்**—ஏராக இந்திரிய தத்துவத்திருக்கும் பஞ்சருத்திரரிலொருவன். (வி-ணி. உஙஉ.)

**நிலை**—1. இடம். (பிங்கல. எகக.) 2. கதவு நிலை. (உ-ம்.) "வன்னிலைக்கதவநூக்கி" (திருவிளை. அங்க. அ.) 3. சரியைமுதலிய நான்கு பாதம். 4. தன்மை. (உ-ம்.) "கொழுஞ்சுட்டருந்தியதிருந்துநிலையாரத்து" (பெரும்பா. சசு.) 5. நிச்சயம். (வழக்.) 6. நிற்றல். (புறநா.) (ஐங்குறு.) 7. நிலைபரம். (உ-ம்.) "நிலையிலாவுலகினிடைநிற்பனவும்" (இராமா. மாரீசன்வதை. உ.) 8. நிலைமை. (உ-ம்.) "நிலைமையுறுமற்றையதாய்நின்றவடவேங்கடத்தின்" (சேதுபு. திருநாட்டு. க.) 9. தெரிநிலைவினைப்பகுதி. 10. பூமி. (பிங்கல. சசஅ.) 11. பொழுது. (உ-ம்.) "அந்நிலையடுபோர்காண்பாரனைவருங்கேட்க" (திருவிளை. அங்க. கஅ.) 12. யுத்தநிலை; அவை: பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம்என நால்வகைப்படும். (சூ. நிக. கஉ: ககக.) நிலை என்பதனைச் சிந்தாமணியில் ஒருவகையிசைப்பாட்டென்பர். (சிந்தா.)

**நிலைகலங்குதல்**—தடுமாறல். (வழக்.)

**நிலைஇ**—நிலைபெற்று. (பத்துப்பா.)

**நிலைஇய**—நிலைபெற்றன. (சிலப்பதி.)

**நிலைஇயர்**—நிலைபெறுவதாக. (பத்துப்பா.)

**நிலைத்தலைமை** — நிலைத்திருக்குந் தன்மை. (உ-ம்.) "அசுநிலைத்தலைமைபுறத்தினுந்தெரிக்குயாறனைய" (சேதுபு. நைமிசா. கச.)

**நிலைத்திணை**—நடையில்லது. (தொல். மொழி மரபு. கங.)

**நிலைத்தல்**—1. உறுதிகொள்ளல். 2. நிலைபெறுதல். 3. நிற்றல். (1, 2, 3-வழக்.)

**நிலைத்தேர்**—அலங்காரத்துக்குச் செய்து தெருவில் ஓரிடத்தே நிறுத்தப்பட்டிருக்குந் தேர். (திருவிளை. திருமணப். சுஉ.)

**நிலைதல்**—நிலைப்படல். (வழக்.)

**நிலைதளம்பல்**—நிலைதளரல். (வழக்.)

**நிலைநிற்றல்**—நிலைபெறுதல். (வழக்.)

**நிலைநிறுத்துதல்**—நிலைப்படுத்துதல். (வழக்)

**நிலைநீங்காமை** — ஆறுமை. (சூ. நிக. க. அ: சஎ.)

**நிலைநீர்**—நீர்நிலை. (உ-ம்.) "கூவனீணிலைநீர்களும்" (திருவிளை. அங்கக். எ.) [இலக்கணப் போலி.]

**நிலைப்படச்செய்தல்**—தாபித்தல். (சூ. நிக. கூ: உஅ.)

**நிலைப்படுதல்**—நிலைநிற்றல். (வழக்.)

**நிலைப்பாடு**—உறுதிப்பாடு. (வழக்.)

**நிலைப்பித்தல்**—உறுதிப்படுத்தல். (வழக்.)

**நிலைப்பு** — திரங்கொள்ளுதல். 2. நிலை. (1, 2-வழக்.)

**நிலைபரம்**—நிலைமை. (உ-ம்.) "இன்பமுறு பாக்கியங்கணிலைபரமென்றுன்னுகின்ற நெஞ்சன்வஞ்சன்" (சிவரக. சிவதன்மா. ச.)

**நிலைபெறுத்தல்** — நிலைநிறுத்துதல், நிலைபெறச்செய்தல். (சி. சி. க: ச சிவஞாந.)

**நிலைபெறுத்துதல்**—நிலைபெறுத்தல்.

**நிலைபெறுதல்**—திரங்கொள்ளுதல்.

**நிலைபேறு**—அசையாமை. (வழக்.)

**நிலைமண்டலவாசிரியப்பா** — ஒருவகையாசிரியப்பா; அஃது: எல்லா அடியுமளவொத்து நாற்சீரடியாகவருது. (யா-காரிகை. செய்யு. கஉ. உரை.) [நிலைமண்டலம் - நின்றவாறுநிற்றலையுடைய மண்டலம். மண்டலம் - நாற்சீரடியொத்துவருவது.]

**நிலைமாறுதல்**—1. இடமாறுதல். 2. எழுத்துமுதலிய மாறிநிற்றல். (வர - று.) "வைகாசி" "வைசாகி"

**நிலைமை**—1. இயல்பு. 2. நிலை. 3. புகழ். (உ-ம்.) "நில்லாவுலகத்துநிலைமைதூக்கி" (பொருந உஎசு.) [நிலைபெருந்தன்மையுடைத்தாகலின் புகழை நிலைமையென்றார்; இது: ஆகுபெயர்.] 4. மெய். (பிங்கல. கஅ0க.)

**நிலைமொழி**—புணருமிருமொழிகளுள் முதலினிற்கு மொழி. (நன். கஙக. உரை.)

**நிலையங்கி**—உடன்முற்றுமூடுகிற சட்டை. (வழக்.)

**நிலையம்**—இருப்பிடம். (வழக்.) 2. தேவர் கோயில். (சூ. நிக. ரு: ரு0.) 3. மருதநிலத்தூர். (சூ. நிக. ரு: ச0.)

**நிலைமைப்பத்திரம்** — வித்துவான்கள் முதலானவர்களுக் குரிமையேற்படுத்தி யவ்வுரிமை சித்திப்பதற்காக எழுதப்படுவதாம். (மிரு. ச. கங.)

**நிலையல்** — நிலைபெற்றுநிற்றல். (உ-ம்) "நிகழ்ந்ததுகூறிநிலையலுந்திணையே" (தொல். பொருள். சச.)

**நிலையாமை**—அநித்தியம். (உ-ம்.) "நிலைநிலையாமைநோக்கி" (திருவிளை. நகரப். க0ரு.)

**நிலையியற்பொருள்** — ஓரிடத்தே நிற்குந் தன்மையையுடையபொருள். (சி. சி. க: ருச. சிவஞாந.) அசரம்.

**நிலையிற்படுமவத்தை**—சாக்கிரத்தாநமாகிய லலாடத்தாநத்தே நிகழுமைந்தவத்தை; அது: ஒருபண்டத்தைமறந்தவன் அந்தப்பண்டங் காணுதபொழுது பிராணவாயுவுமியங்காமல் மூர்ச்சித்திருந்த அதைரநிலையிற்படு மவத்தையில் சாக்கிரதுரியாதிதமும், அந்தப் பிராணவாயு இயங்கத்தக்கதாகப் பெருமூச்செறிந்து விசாரித்தறிவோமென்றுநின்ற அவதரநிலையிற்

படிமவத்தையிற் சாக்கிரதுரியமும், அவ்விடத்தி லன்றோ போயினேனென்று நினைவெழுந்திருந்த அவதரநிலையிற் படிமவத்தையிற் சாக்கிர சுழுத்தியும், இன்ன இடத்தன்றோ பண்டம் வைத்தோமென்று விசாரப்பட்டதிந்த அவதர நிலையிற்படிமவத்தையிற் சாக்கிர சொப்பனமும் அந்தப்பண்டம்வைத்த இடத்திற்சென்று கண்டது நிலையிற்படிமவத்தையிற் சாக்கிரசாக்கிரமுமாம். இந்தநிலையிற்படிமவத்தைக்குக் கருவிகள் சுத்ததத்துவங்கள். (சிவப்பிர. வியாக்.)

நிலையுடைமை—எண். என்றுபெயர். (சூ. நிக. அ: சo.)

நிவசதி—வீடு. (வைத்தியபரிபா.)

நிவசநம் — புடவை. (வைத்தியபரி. கருப்பொ.)

நிவக்கும்—ஓங்கும். (ஐங்குறு.)

நிவத்தல்—உயர்தல். (திருக்கோ. கரு. உரை.)

நிவந்த—1. மேலான. (உ-ம்.) "ஒளிறிலஞ்சியடைநிவந்த" (மதுரை. உசஅ.) 2. வளர்ந்த. (உ-ம்.) "நறுநீர்ப்பொய்கையடைகரைநிவந்த" (சிறுபா. கூஅ.)

நிவந்தது—எறிற்று. (பரிபாடல்.)

நிவந்து—1. எறி.(சிந்தா.) 2. ஓங்கி.(புறநா.)

நிவப்பு—1. உயர்வு. (உ-ம்.) "உருத்திர பாகந்தன்னைநிவப்புடனுரைத்ததில்லை" (கூர்ம பு. தக்கவே. எ.) 2. ஒக்கம். (உ-ம்.) "நிரைசெலனிவப்பிற்கொண்மூமயங்கி" (சூ. பா. ருo.) 3. மேடு. (உ-ம்.) "நிவப்புமண்" (அரிச்ச.நாட்டு. ௬o.) 4. வளர்ச்சி. (உ-ம்.) "மால்வரைநிவந்த சேணுயர்வெற்பில்" (திருமுரு. கஉ.)

நிவர்த்தகன்—வேதமோதுஞ்சாதியரிருவரிலொருவன்; இவன்: சங்கரனுபதேசிகன். (த. நி. போ. க௬ரு.)

நிவர்த்தநம்—1. இருநூறுமுழ நீளமகலங்கொண்டது. 2. திரும்புதல். (உ-ம்) "வந்துழிக்காண்க"

நிவர்த்தித்தல்—மறுத்தல். (சி. சி. சு: க. சிவாக்.)

நிவர்தல் — உயர்தல். (உ-ம்.) "பொன்னிவரம்பலவா" (ம-தி. ௬௬.)

நிவறல்—கூடுதல்.(உ-ம்.)"வந்துழிக்காண்க"

நிவறுதல்—நிவறல்.

நிவாசம்—இருப்பிடம். நி-உபசருக்கம்.

நிவாதகவசர்—தோயமாபுரத்தசுரர். (மகாபாரதம். நிவாதகவசகால. கரு: உஉ.)

நிவாதம்—காற்றின்மை. (வழக்.)

நிவாரணம்—1. பிராயச்சித்தம். 2. போக்குதல். (சி. சி. உ: அச. சிவாக்.)

நிவி—மாமரம். (வைத்தியபரிபா.)

நிவிர்த்தி—1. இல்லாமை. (சி. சி. அளவை. க. சிவாக்.) 2. சாந்தியாதீதகலையிற் சத்திதத்துவத்திலிருக்கும் ஐந்து புவனங்களுளொன்று. (சி-கிரி. உக. உரை.) 3. திரும்புதல். 4. துறவு. 5. நிவிர்த்திகலை. (3, 5-சி. சி, உ: எச. ஞானப்.) [தன்னிடத்தடைந்த பக்குவர்க்குச் சங்கற்பங்களை விடுவித்துத் திருப்புவிக்கையால் இப்பெயர்பெற்றது.]

நிவிர்த்திகலை — பஞ்சகலைகளுளொன்று; அது: மூலாதாரந்தொடங்கி உந்திக்குமேல் எண்விரலளவுநிற்பது. அதற்கு மண்டலம், அக்கினி, ஆதாரம், மூலாதாரமுஞ்சுவாதிட்டானமும், பிரகாசம் சொரிதழற்கொழுந்து, மலம் மாயாமலம். அவத்தை சாக்கிரம். மாத்திரை மூன்று. மந்திரம் இருதயமுஞ் சத்தியோசாதமும். பதம் ஓமோ முதல் மாதேவாந்தமாக இருபத்தெட்டு. வந்நம் க்ஷகாரம். புவநம் காலாக்கினி முதல் வீரபத்திரர்முடிவாகநூற்றெட்டு. தத்துவம் பிருதிவி. தெய்வம் பிரமா. தொழில் சிருட்டி. (சிவப்பி. வியாக். பொது. உக. ககo.)

நிவிர்ததாளம் — நவதாளத்தொன்று. (சூ. நிக. கஉ: சoஉ.)

நிவேசனம்—1. இடம். (தைல. தைலவ.) 2. ஊர். (சூ. நிக. ரு: ௬ரு.)

நிவேதநம்—தேவர்க்குச்சமாப்பிக்கு நைவேத்தியம். (வழக்.)

நிவேதித்தல்—நைவேத்தியஞ் செய்தல். (திருவிளை. மூர்த்திவி. உஎ.)

நிழந்த—சுருக்க, சுருங்க. (பரிபாடல்.)

நிழத்தல்—1. இல்லையாக்கல். (உ-ம்.) "அருவிமாமலைநிழத்தவும்" (பொருந. உ௬ரு.) 2. உள்ளதன்நுணுக்கம்.(தொல்.சொல். ௬௬o. உரை.) 3. ஒய்தல். (மதுரைக். ௬o௬.) 4. நோக்குதல். (பத்துப்பா.)

நிழல்—1. அருள். (பத்துப்) 2. ஒளி. (பிங்கல. கக௬எ.) 3. குளிர்ச்சி. (ஐங்குறு.) 4. சாயை 5. செல்வம். 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. விம்பம். (உ-ம்.) "நிழன்மேவியிருவென்று" (கோயிற்பு. இரணியவன்.) (2, 3, 4-சூ. நிக. கக: ஞகரவெ. உ.)

நிழலல்—நிழலுதல்.

நிழலவை—நிழலையுடைய. (பரிபாடல்.)

நிழலுதல்—நிழல்செய்தல்.

நிழற்றல்-1.ஒளிவிடல். சிந்தா.)2.நிழற்றுதல்

நிழற்றுதல்—1. சொல்லுதல். 2. நிழல்செய்தல், ஒளிசெய்தல். (உ-ம்.) "பொன்னுநன்மணியுமுத்தும்புனைந்தமுக்குடைநிழற்ற" (சூ. நிக. காப்பு.) (ஐங்குறு.)

**நிழன்ற**—நிழல்செய்த. (பத்துப்பா.)
**நிழனவல்**—ஒரு நாவல். (வழக்.)
**நிற்கல்**—நிற்குதல். (வழக்.)
**நிற்து**—நிற்பேன். (புறப்பொ.)
**நிற்கை**—நிற்குதல். (பழமலையந்தாதி. உற்கைக்குமாறு என்னு முதற்குறிப்புள்ளகவியிற் காண்க.)
**நிற்பன** — அசரம்; அது: மரமுதலியன. (உ - ம்.) "உலகினிடைநிற்பனவுநடப்பனவு நெறியினீந்த" (இராமா. மாரீசன்வதை. உ.)
**நிற்பின்**—நின்றால். (புறநா.)
**நிற்பு**—நிற்றல். பு-தொழிற்பெயர்விகுதி.
**நிற்றர**—நிற்றலைச்செய்ய. (பத்துப்பா.)
**நிற்றல்**—1. ஒழிதல். நெருநலளவும்வருத்திய பிணிஇன்றுநின்றது என்பது வழக்கு. நன்னூல். உருபுபுண. இயல்பின் விகாரமுமென்னுஞ்சூத்திரவுரையிலறிக. 2. நிலைநிற்குதல். (உ - ம்.) "என்றுமழுக்காறிகந்தானுமிம்மூவர்-நின்றபுகழுடையார்" (திரிகடுக.) 3. நிற்குதல்.
**நிறத்தல்**—நிறங்கொள்ளுதல். (வழக்.)
**நிறம்**—1. ஒளி, இயல்பு. (திருக்கோ. ருஅ. உரை.) 2. குணம். (சூ நிக. அ: எக.) 3. சரீரம். (உ - ம்.) "செல்வங்கல்வி-நிறங்கலவாவீடு தரும்" (சேதுபு. அகத்தி. தீர். சு.) 5. மார்பு. (காஞ்சிப்பு. காப்பு.)6 வண்ணம். (உ-ம்.)"நிறந்தருங்குழலரிவையைநிறுத்திவாளவுணர்" (பாரத. குருகுல. கஉ.) (சூ. நிக. அ: உசு.)
**நிறீஇ**—நிறுத்தி. (பத்துப்பா.)
**நிறூஉம்**—நிறுத்தும். (ஐங்குறு.)
**நிறுத்தம்**—நிறுத்துதல். (பத்துப்பா.)
**நிறுத்தமை**—பிரதிட்டைசெய்தல். (உ·ம்.) "இராகவனீடிலிங்கம் – பிறியாமைநிறுத்தமை பேசுவனென்றுபேசும்" (சேதுபு. இராமனருச். ரு.)
**நிறுத்தல்**—1. தாபித்தல். 2. நிறக்குதல், துலைநிறுக்குதல். 3. நிறுத்தல்.(உ-ம்.)"வந்தழிக் காண்க.
**நிறுப்பான்**—1. தராசு. (பிங்கல. சசஎரு.) 2. துலாராசி. (சூ. நிக. க: சுரு.) 3. நிறுப்பவன். (வழக்.)
**நிறுப்பு**—1. தாபிப்பு. 2. நிறுத்தல்.
**நிறுவல்**—1. நிலைபெறுதல். (உ-ம்.) "பூண்ட பெரும்புகழ்நிறுவி" (இராமா.சடாயுகாண்.கூக.)
**நிறுவுதல்**—1. நாட்டல். 2. நிறுத்தல்.
**நிறை** — 1. ஆடேக்குணம் நான்கினொன்று. (சூ. நிக. கஉ: கசு.) 2. கற்பு. (திருவள். வாழ்க்கைத்துணை. எ.) 3. சால்பு. (உ-ம்.) "நிறையுடைமைநீங்காமைவேண்டின்" (வள். கருச.) 4. தராசு. (பிங்கல. கசுஎரு.) 5. துலாராசி. (சூ. நிக. க: சுரு.) 6. நிறுத்தலளவு.(மணிமே.) 7. தெரிநிலைவினைப்பகுதி. 8. நிறைவு. (உ-ம்.) "நிறைமொழிமாந்தர்"(வள்.உஅ.) 9. நீர்ச்சால். (சூ.நிக.எ:சுச.) 10. நூறுபலம்.(சூ.நிக.எ:அக.)
**நிறைகுடம்**—அட்டமங்கலத்தொன்று; அது: பூரணகும்பம். (திருவிளை. திருமணப். சுஎ.)
**நிறைத்தல்**—நிறையச்செய்தல். (வழக்.)
**நிறைதருதூறு**—சீந்தில். (வைத்தியபரிபா.)
**நிறைதல்**—1. திருத்தியாதல். 2. பூரணப்படுதல். (சூ. நிக. அ: கரு.) 3. பெருகுதல். (உ-ம்.)"நிறைதலோடுகுறைதலாய" (சிவரக.க. கணபதிவந். கக.)
**நிறைந்திடல்**—நிறைதல். (சூ. நிக. அ: கரு.)
**நிறைமொழி** — 1. அருளிக்கூறினும் வெகுண்டுகூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடுமொழி. (உ-ம்.) "வள். 28" 2. மந்திரம்.
**நிறையறிகருவி**—தராசு. (வழக்.)
**நிறைவு**—1. செறிவு. 2. பூரணம். (பிங்கல. உஅ.) 3. மிகுதி. (வழக்.)
**நிறைவேறல்**—சபலம். (சூ. நிக. ருக: ).
**நின்மலசாக்கிரம்** — ஆசாரியராலே ஞானதீட்சைபெற்றுத் திரிபதார்த்தஉண்மையறிந்து சிந்தித்துத்தெளிந்து கருவிகள்நீங்க விசாரித்து நிற்பது. (சித்தா. கட். கருஎ.) இருதயத்திலே மனம், அகங்காரம், புத்தி, சித்தம், உள்ளம் என்னுமைந்துடனுங்கூடிநின்ற பாகியகரணங்களினாலே காணப்பட்ட சத்தாதி பிரபஞ்சத்தையெல்லாஞ் சிவாகாரமாகவும் விஷயசுகங்களைச் சிவாநந்தமாகவுங்கண்டு நிற்பது. (சி. சி. ச: கூச. சிவாக்.) பிரபஞ்சமநித்தியமெனத் தோன்றி ஆசாரியானுக் கிரகத்தினாலே பற்றறுகப்புகுந்து பொறிபுலன்மேலிட்ட பசுகரணங்கள் சிவகரணங்களாயிருக்கை. (சிவப். கட். ச.)
**நின்மலசிவம்** — மலத்துடன்கூடாதசிவம். (சதாசிவரூபாம். க.)
**நின்மலசிற்சத்தி**—மலத்துடன்கூடாத ஞானசத்தி. (சி. சி. ரு: ரு. ஞானப் )
**நின்மலசுழுத்தி** — தத்துவநீங்கி மேலானகேவலந் தானாய்நிற்பது. (சித்தா. கட். கருஎ.)
**நின்மலசொப்பநம்** — கருவிகள் நீங்கியும் நீங்காமலும் நடுவேசற்றுப் பதைப்புண்டாவது. (சித்தா. கட். கருஎ.)
**நின்மலதுரியம்** —கேவலம்நீங்கி அருளினாலே தன்னையுங்கண்டு அருளையுங்கண்டு அவ்வசத்தாய் நிற்பது. (சித்தா. கட். கருஎ.)
**நின்மலதுரியாதீதம்**—சிவத்தைத்தரிசித்துச் சிவாநந்தத்திலழுந்தல் (சித்தா. கட். கருஅ.)
**நின்மலம்**—அழுக்கின்மை. (சிவப்பிரகாசம். க: க. உரை.)

நின்மலன்—1. அருகன். (உ-ம்.) "நீடுமலர்ப் பிண்டிநின்மல" (திருநூற். ருரு.) 2. சிவன். (உ - ம்.) "நின்மலனென்றிக்கண்ணினெருப் பெழ" (மச்சபு.ஆதிசிருட்.க.) 3. மலமற்றவன். (உ-ம்.) "நின்மலாபோற்றிபோற்றி" (திருவாச. திருச்சத. சுக.) [நிர்என்னும் வடமொழியின் சிதைவு.]

நின்மலாதீதாவத்தை—சுத்தாவத்தை. (சி. சி. சு: ருஎ. சிவாக்.)

நின்மலாவத்தை—சுத்தாவத்தையின் காரிய மாகிய வோரவத்தை. (சித்தா. கட். கருஎ.) கேவலாவத்தை; கேவலாவத்தை சகலாவத்தை களிரண்டையுங் கீழ்முறைமையில்விட்டுச் சுத் தாவத்தையை மேன்முறைமையிற்றீண்டி முத்தி சிவத்துவாபி வியத்திமுறைமையி லுண்டாம் பொருட்டு, இதயத்தினின்றும் புருவமத்திய நுனிமட்டில் கண்டத்தினின்றும் பிரமாந்திர நுனிமட்டில் புருவமத்தியினின்றும் துவாத சாந்த நுனிமட்டில் ஒரொட்டாக இதயத்தி னின்றும் துவாதசாந்தநுனிமட்டிற்றுன்இவை களிற்போய்த்தங்குவது. இது சதேகை விதே கையென விருவகைப்படும். அவற்றுள் சதே கை சீவன்முத்தித்தன்மையின் நிட்டையைப் பொருந்தியிருத்தல். விதேகை முத்தியடைந்த காலத்துச் சுவாநுபூதியைத் தியாகித் திருத்தல். (சி. சி. சு: ருரு. மறை.)

நின்மாலியம்—நிருமாலியம். (உ-ம்.) "நவமா நின்மாலியந்தீர்த்தம்புசியாதிருந்துமி லோம்" (சிவரக. தேவர்முறை. கஉ.)

நின்றவிடந்தீஞ்சான் — குருவிச்சி; அது: புல்லூரி என்பர். (வைத்தியபரிபா.)

நின்றன்று—நின்றது. (பரிபாடல்.)

நின்றீயல்—நிற்றல். (உ-ம்.) "உறையொடு நின்றீயல்வேண்டுமொருங்கே" (கலி. கசரு.) [தொழிற்பெயர்த்திரிசொல்.].

நின்று—1. ஓரசைச்சொல். (உ-ம்.) "சொல்லி நின்றான்" சொன்னன் என்பது பொருள். 2. எப்பொழுதும். (பரிபாடல்.) 3. நின்றது. (ஐங்குறு.)

நின்றுசிணுங்கி — சிறியாணங்கை. (வைத் தியபரிபா.)

நின்றுபயனின்மை — நூற்குற்றம் பத்தி னென்று. (நன்னூல். பாயிர. குன்றக்கூறல் என்னுஞ்சூத்திரம்பார்.)

நின்றும்—ஐந்தாம்வேற்றுமையினீக்கவுருபு களினென்று. (உ-ம்.) "ஊர்தியினின்றுமிழ்ந் தான்"

நின்றுவற்றல்—ஒருசொல் எழுவாய்முதலிய வைபெறுநிற்றல்.(தொல்.சொல்.உரு.சேனா)

நினவ—நின்னுடையன. (புறநா.)

நினைஇ—நினைந்து. (மணிமேக.)

நினைத்தல்—1. ஆலோசித்தல். 2. தியானித் தல். (1, 2-வழக்.)

நினைப்பணி— ஒருபொருளைக்கண்டவுடன் ஒப்புமையான் மற்றொரு பொருளினைவுண்டா வதைக்காட்டுமணி. (குவல. அ.)

நினைப்பு—நினைக்குதல்; அது: உடற்குற்றம் பதினெட்டினென்று. (சூ. நிக. கஉ: ககஅ.)

நினையல்—நினையாதேகொள். (சிந்தா.)

நினைவு — 1. எண்ணம். (உ ம்.) "செய்வா ராவினமுகளுந்திருநாடுபெறநினைவோ" (பாரத. கிருட்டிண. ரு) 2. கருத்து. (உ-ம்.) "நினை வுவேறற்று" (சிவரக.வரலா.ருஎ.) 3. நினைப்பு. உ - தொழிற்பெயர்விகுதி. 4. வருத்தம். (சிந்தா.)

## நீ.

நீ — 1. ஒருமுன்னிலை ஒருமைப் பெயர். (உ ம்.) "நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனி ருக்க" (பாரத. கிருட்டிண. கருரு.) 2. தெரி நிலைவினைப்பகுதி. 3 விடு (பரிபாடல்)

நீக்கப்பொருள்- ஐந்தாம்வேற்றுமைப் பொ ருள்களினென்று; அது: மலையினின்று நீங்கி ஞன் என்பதிற்போலவரும் (நன்.உககஉ.உரை.) [பிரிவையுண்டாக்குந்தொழிலின்றிப் பிரிவை மாத்திரந் தன்னிடத்துடைய பொருளென் பது.]

நீக்கம்—1. நீக்கல். 2. நீங்குகை. 3. பிரிப்பு. (சிவஞானபோத. க. சூத்திரம். )

நீக்கல் — 1. அகற்றல். (உ-ம்.) "தாக்கு" பார். 2. கொல்லல். (வள். கொல்லாமை.கo.) 3. தள்ளல். 4 நீக்கம், பிரிவுஎன்க. 5. மாற்றல். 6. விடல். (3, 5, 6-வழக்.)

நீக்கவுருபு — நீக்கப்பொருளைத்தருமுருபு; அஃது: ஐந்தாமுருபு.

நீக்கு—1. நீக்கல். (சூ. நிக. அ: சுசு. மூலம் பார்.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நீக்குதல்—1. அகற்றுதல். 2. கொல்லல். (உ-ம்.) "நீக்கல்" பார். 3. விடுதலையாக்குதல். (1, 3-வழக்.)

நீகம்—தவளை. (சூ. நிக. ரு: எஎ.)

நீகாரம்—1. ஆணவமலம். (சி-வி.ஞாந.சு.) 2. பனி. (உ-ம்.) "நீகாரமழைபொழிய" (பாரத. காண்டவ கக.)

நீகான்—மாலுமி. (உ-ம்.) "உடங்கமர்தலைவ னீகானெருத்துளவூர்களெங்கும்" (சேதுபு. திரு நாட். கஉ.)

நீங்கல்—நீங்குதல், பிரிதல். (உ-ம்.) "ஒங்குலகத்துயர்நீங்க" (கோயிற்பு. வியாக். க.)

நீங்கள்—ஒருமுன்னிலைப்பன்மைப்பெயர். (உ-ம்.) "நீங்களுரைசெய்வதெவன்" (திருவிளை. அங்க. உஉ.)

நீங்காமை—பிரியாமை. (வள். பொறையுடைமை. ச.)

நீங்கியினுர் —நீங்கினுர். (சிந்தா.) இ-அசை.

நீந்துதல்—நீங்குதல். (வழக்.)

நீச்சத்தானி—இரசம். (வைத்தியபரிபா.)

நீச்சு-நீந்துதல். (உ-ம்.) "நீச்சினினிலைத்து நிற்குநீலமென்கொடிபோனின்ருர்" (அரிச்ச. சூழ்வினை. ச.)

நீச்சுப்பிரமேகம்—ஒருவகைப் பிரமேக ரோகம்; அது: கள்ளைஒத்த நீரிறங்குதல் வெளுத்தசீழ்வடிதல்முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். ௯உ௦)

நீசக்கிரகம்—1. இராகு கேது. 2. உச்சத்திற்கேழாமிடக்கிரகம்.

நீசசாதி—கீழ்சாதி. நீசம்-தாழ்வு.

நீசத்தாநம்—1. இழிந்த இடம். 2. உச்சத்திற் கேழாமிடம்.

நீசபங்கராசயோகம் — (சோதிட.) ஒரு யோகம். (வழக்.)

நீசம்—1. ஈனம், இழிவு. (உ-ம்.) "நீசமுயர்வாம்நோக்கங்கணேர்ந்தால்" (ஞானவா. தேவபூ. ருஉ.) 2. உச்சத்திற்கேழாமிடம். 3. மஞ்சள். (வைத்தியபரிபா.)

நீசர்—கீழ்மக்கள். (சூ. நிக. உ: ருச.)

நீசன்—ஈனன். (இராமா. மிதிலைக்காட். ௧0௯.)

நீஞ்சுதல்—நீந்துதல். (வழக்.)

நீட்சி—நீளம். (வழக்.)

நீட்சிமை—நெடுமை. (வழக்.)

நீட்டம்—நீளம். (உ-ம்.) "நீட்டமிக்கதோர் சிலையினன்" (கந்தபு. சூரபன்ம. அரு.)

நீட்டல்—1. ஈதல். (உ-ம்.) "நெடியவன் குறியகைநீரினீட்டினுன்" (இராமா. பாலகா. வேள்விப். ௯௯.) 2. நீட்டுதல்.

நீட்டலளவு— } நான்களவையுளொன்று;
நீட்டலளவை- } அது:கோல்முதலியவற்ருளத்தல். (நன்னூல் எண்ணலெடுத்தலென்னுஞ்சூத்திரத்திற் காண்க.)

நீட்டலளவையாகுபெயர்—நீட்டியளத்தற்குரிய கருவியின்பெயர். அதனுனளக்கப்படுவதற்கு வழங்கப்படுவது. (வ-று.) தடி. (நன். உ௯௦. உரை.)

நீட்டித்தல்—1. தாமதித்தல். 2. நெடும்பொழுதுசெல்லல். (1, 2-வழக்.)

நீட்டினவிரல்நறித்தான் — கிரந்திநாயகம். (வைத்தியபரிபா.)

நீட்டு—1. நீட்டுதல். 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. நீளம். (1, 2-வழக்.)

நீட்டுதல்—1. ஈதல். (உ-ம்.) "நீட்டல்" பார். 2. நீளமாச்செய்தல். (வழக்.)

நீடம்—பறவைக்கூடு. (இராமா. ஆரணிய. கார்கால. ககக.)

நீடல்—நீளல். (வழக்.)

நீடாணம்—கதி. (சூ. நிக. ௬: உ௬.)

நீடிக்கை—நீடிப்பு. (வழக்.)

நீடித்தல்—நெடுகுதல். (வழக்.)

நீடிப்பு—நீடித்தல். (வழக்.)

நீட்டின்று—கொடுத்தது. (புறப்பொ.)

நீடு—நீடித்தல். (உ-ம்.) "நெடுஞ்செல்வநீடின்றியாங்கேகெடும்" (வள். ருசு௬.) [முதனிலைத்தொழிற்பெயர்.] நெடுநேரம் என்பர். (சிந்தா.)

நீடுதல்—1. நிலைத்திருத்தல். 2. நீளுதல். 3. நெடுங்காலத்திற்கிருத்தல். (உ-ம்.) "நீடிதவில்லையின்றேநிருபதிசன்னிமன்றல்- கூடுதலிவர்க்குண்டாகும்" (பாரத. திரௌபதி. ) (1, 2-வழக்.)

நீடுநினைந்திரங்கல்—அகப்பொருட்டுறையினென்று; அது: தலைவன்கூட்டம்வாயாது காலம் நெடிதாகத்தலைவியைநோக்கி நினைந்திரங்கல். (வாண. கரு. முகம்.)

நீடூரம்—பாஷாணம். (வைத்தியபரிபா.)

நீண்டது—நெடியது. (வழக்.)

நீண்முடி—அரசன். (உ-ம்.) "நின்றமாமன்னர்க்கெலாநீண்முடியிலக்கமானுன்" (சிந்தா. நாமக. உருஅ.) ஆகுபெயர்.

நீத்தம்—1. ஆழம். (பரிபாடல்.) 2. தண்ணீர்விட்டான். (வைத்தியபரிபா.) 3. வெள்ளம். (உ-ம்.) "நிலையுடைக்கவிநீத்தமநீத்தமே" (இராமா. ஆற்று. ௬.)

நீத்தல்—1. துறத்தல். (வள். நீர்த்தர்பெருமை. 2. நீக்கல். (உ-ம்.) "தோழியைநீத்தென்னைமுன்னேதுறந்து" (திருக்கோ. உ௯௦.)

நீத்தவன் — 1. அருகன். (சூ. நிக. க: ௯.) 2. துறந்தோன். (வழக்.)

நீத்தார் — முற்றத்துறந்தமுனிவர். (உ-ம்.) "ஒழுக்கத்துநீத்தார்பெருமை" (வள். உக.)

நீத்திட—பெருக்கிட. (சிந்தா.)

நீத்திநுணி—காமப்பால். (வைத்திய. கருப்.)

நீத்து — 1. நீந்துதல். (உ-ம்.) "யானைக்கு நீத்துமுயற்குநிலை" (யாப். காரிகை. செய். ரு. உரை. 2. பெருக்கம். (ஐங்குறு.) (பத்துப்.)

நீதச்சிலேச்சூதம்—நீலாஞ்சனம். (வைத்திய பரிபா.)

நீதகம்—நீர்வள்ளி. (வைத்தியபரிபா.)

நீதபரிமளம்—சிதாங்கபாடாணம். (வைத்தியபரிபா.)

நீதம்—நன்னெறி. (உ-ம்.)"நீதம்பெறுமறை யோனிமையவர்மானபணிமுடியா" (சிவரக. வேதபாத. சு.) 2. நீதி. (உ-ம்.) "பொல்லாத சேயெனிற்றாய்தள்ளனீதமோ" (தாயு. சுக வாரி ரு.)

நீதவான்—நீதமுள்ளவன். (வழக்.)

நீதன்—நீதிமான். (உ-ம்.)"நீதன்வஞ்சநெறி மைதன்னினீடு" (சேதுபு. சீதைகுண்ட. க.)

நீதி—1. நன்னெறி. 2. நியாயம், பலருஞ் சுகமடையநடத்துமுறை. (சைவப்பி. சுக.) 3. முறைமை. (உ-ம்.) "நீதியிஞனித்தியநைமித் திககாமியத்தினிறுத்தி" (சி. சி. அ: ரு: நிரம்ப.) (சிந்தா.) (1-வழக்.)

நீதிசாத்திரம்—கலைஞானமறுபத்துநான்கனு ளொன்று. (வழக்.)

நீதிசாரம்—1. ஒரு நூல். 2. பிருதுவிதத்து வத்தில் குபேரதிக்கிலுள்ள பத்துபுவநங்களு ளொன்று. (சி. சி. அ: எ. மறை.)

நீதிசாநுபன்—சதருத்திரரிலே குபேரதிசை யிலிருக்கும் தசருத்திரரிலொருவர். (வி-ணி. உ௬௦.)

நீதிநூல்—நீதிகளையுணர்த்துநூல். (உ-ம்.) "யாப்பின்மன்னியாநந்திதன்னைவிடுத்த தீமை யிதற்குயிர் - நீப்பதேபரிகாரமென்றிடுநீதிநூல ருடாதைதாய்" (சேதுபு. சங்கதீ. உ௦.)

நீதிநெறி—1. ஒரு நூல். 2. சன்மார்க்கம்.

நீதிநெறிவிளக்கம் — குமரகுருபரசுவாமிக ளாற் செய்யப்பட்டவோர்நூல்.

நீதிமான்—நீதியுள்ளவன். (வழக்.)

நீந்தல்—நீந்துதல். (சூ. நிக. ரு: உசு.மூலம்.)

நீந்தின—மிதந்தன. (புறப்பொ.)

நீந்துதல்— 1. கடத்தல். (உ-ம்.) "பிறவிப் பெருங்கடனீந்துவர்நீந்தா — ரிறைவனடிசேரா தார்" (வள். க௦.) தாற்பரியம். 2. நீந்தல்.

நீப்பு—1. துறவு. 2. பிரிவு. (1, 2-வழக்.)

நீபம்—1. உத்திரட்டாதிநாள். 2. கடம்பு. (உ-ம்.)"அமைச்சரோடமெர்நீபமாவனம்புகுந்து" (திருவிளை. திருநக. கண்ட. உ௦.) 3. காரணம். (பிங்கல. ருளருஉ.) 4. வெண்கடம்பு. (வைத்தியபரிபா.)

நீம்—நீவிர். (உ-ம்.) "நீமெம்வென்றிக்களிற் றுனுகூழ" (சிந்தா. விம. சச.) [திசைச்சொல் லென்பர்.

நீம்பல்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

நீமம்—ஒளி. (சூ. நிக. அ: உஉ.)

நீயல்—நீங்கற்பாலையல்லை. (பரிபாடல்.)

நீயா—விடாத. (பரிபாடல்.)

நீயிர்—நீவிர். (உ-ம்.) "நீயிர்கள்வாய்மையை நிகழ்த்துமென்னவே"(கந்தபு.சூரனகர்புரி.கஅ)

நீயேன்—விடேன். (உ-ம்.) "நீயேனென்ற தெவன்கொலன்னாய்" (ஐங்குறு. உஉ.)

நீர் — 1. ஒரு முன்னிலைப்பெயர். (உ-ம்.) "முழுமதிமுகத்திறைமுனிந்துநீர்பட்ட மங் கைப் - பழுமரமுதலஞ்ஞானப்பாறையாக்கிடமி னென்ன" (திருவிளை.அட்டமா.க.) 2. கடல். (உ-ம்.)"நீரழுங்கும்பண்டத்தால்" (நான்மணி. அரு.) 3. கழியிடம். (உ-ம்.)"பௌவநீர்ச்சாய்க் கொழுதி" (கலி.எசு.) 4. குணம். (உ-ம்.) "நீர கத்தேதமைநினையுமன்பிஞேர்" (கந்தபு. கட வுள். ) 5. தண்ணீர். (உ-ம்.) "நீர்பகற்றுயிலா தவம்" (தைல.பாயிர.ருஅ.) 6. தன்மை.(உ-ம்.) "செந்நீர்பசும்பொன்" (புறநா.க.) 7. தெரிநிலை வினைப்பகுதி. 8. பூராடநாள். (சூ.நிக.க: எசு.)

நீர்க்கடம்பு—ஒருமரம். (சூ. நிக. கக. வகர வெ. உ.)

நீர்க்கடன் — திலதர்ப்பணம். (உ-ம்.) "போர்க்களத்தில்யான்பொருதுபொன்றிற லெம்பியரா-னீர்க்கடனுந்தீக்கடனுஞ்செய்விப் பீர்"(பாரதவெண்பா.) உதகக்கிரியையென்பர். (சிந்தா.)

நீர்க்கண்டகி—நீர்முள்ளி. (உ-ம்.) "கூவிள நீர்க்-கண்டகியிரண்டுடைமுக்கண்டகி துவஞ் சூரி" (தைல. தைலவ. கஙரு.)

நீர்க்கணம்—செய்யுட்பொருத்தத்துளொன் றாகிய கணப்பொருத்தத்துளொன்று; அஃது: ஆதிநேராய் வருவது. (இலக்கணவி. ௲௦௦. உரை.)

நீர்க்கம்மல்— ஒரு நோய். (உ-ம்.) "அமரம்" பார்.

நீர்க்கமல்லி — ஒரு நீர்ப்பூண்டு, அல்லி. (வைத்தியபரிபா.)

நீர்க்காக்கை—நீர்க்காகம். (சூ.நிக.ங: சுஙு.)

நீர்க்காசம்—ஒரு நோய். (வழக்.)

நீர்க்கால்சலாகை—சந்திரகாந்தக்கல். (சூ. நிக. சு: கக.)

நீர்க்கிழவன்—வருணன். (உ-ம்.) "தொன் னகர்மேனீர்க்கிழவன்வரவிடுத்தகடல்சுவறத் தொலைத்தவாறும்" (திருவிளை. பதிகம். சஃ.)

நீர்க்கீழ்—உதயத்திற்குநாலாமிராசி. (உ-ம்.) "வந்துழிக்காண்க".

நீர்க்குடம்—பூரணகும்பம்; இஃது: அட்டமங் கலத்தொன்று. (திருவிளை. திருமணப். கசஙு.)

நீர்க்குண்டி-வெண்ணொச்சி.(வைத்தியபரி.)

நீர்க்தும்பி—நீர்முள்ளி. (மலையக.)

நீர்க்குமிழ்—நீர்மொக்குள். (சூ. நிக. ரு: உரு.)

நீர்க்குமிழம் — வெள்விழியில் சங்கம்பழம் போல் கொப்புளத்தையுண்டாக்கும் ஒருவகைக் குமிழ்ரோகம். (சீவரட். உசுசு.)

நீர்க்குளரி—கல்லாரச்செடி. (பெரியபு. தடுத்தா. களகூ. உரை.)

நீர்க்குறிஞ்சா—ஒருசெடி.(வைத்தியபரிபா.)

நீர்க்குன்று—நத்தை. (வைத்தியபரிபா.)

நீர்க்கோழி—ஒருவகை நீர்வாழுங்கோழி.

நீர்க்கோன்—வருணன். (உ-ம்.) "நீர்க்கோனெல்லைதாழ்ந்து" (திருவிளை. நான்மாட.உக.)

நீர்கள்—நீர். கள்-அசை. (சிந்தா.)

நீர்ச்சங்கு—சங்கு. (மலையக.)

நீர்ச்சால்-தண்ணீர்பூரிக்குஞ்சால். (சூ. நிக. எ: சுச.)

நீர்ச்சித்திரம்—நீரடிமுத்து. (உ-ம்.) "நீர்ச்சித்திரம்போகியரணந்தங்கிபீசம்" (தைல. தைலவ. ககசு.)

நீர்ச்சின்னி—ஒரு பூண்டு. (வைத்தியபரி.)

நீர்ச்சுண்டி—கொடிநெட்டிச்செடி. (வைத்தியபரிபா.)

நீர்ச்சுறுக்கு—நீர்க்கடுப்பு, ஒரு பிணி.

நீர்ச்சூலை—அண்டவாயு. (வைத்தியபரி.)

நீர்ச்சேம்பு—ஒரு பூடு. (வழக்.)

நீர்த்தல்-நீராதல். (உ-ம்.) "எட்டொன்றாய் நீர்க்கவடி" (தைல. தைலவ. கூஉ.)

நீர்த்து—தன்மையுடையது. (புறநா.)

நீர்த்தகைகதவு — ஒ என்று பெயர். (பிங்கல. சுஎக.)

நீர்நாய்—நாய்மீன். (உ - ம்.) "நீர்நாய்கௌவியநெடும்புறவாளை" (சிலப். நாடுகாண். எகூ.)

நீர்நாள்—பூராடம். (சூ. நிக. க: எசு.)

நீர்நிலை—1. குளம். (சூ. நிக. ரு: உகூ.) 2. நீர்நிலையாயுள்ளதடாகமுதலியன. (உ-ம்.) "நீங்குநீளுயிர்பிலனுடல்புரண்டனனீர்வேட்- டாங்குநீர்நிலைதேடுவானுயினனெழுந்தான்" (திருவிளை. அங்கக்குழி. சு.)

நீர்நெட்டி—ஒரு பூடு. (வழக்.)

நீர்நெருப்பு—கல்லுருவி. (வைத்தியபரி.)

நீர்நொச்சி—ஒரு நொச்சி. (வைத்தியபரி.)

நீர்ப்பகண்டை—ஒரு பூடு. (வைத்தியபரி.)

நீர்ப்பஞ்சு—கடற்காளான். (வைத்தியபரி.)

நீர்ப்பத்தர்—அம்பணம். (சூ. நிக. எ: ருஅ.)

நீர்ப்படுவன்—ஒரு நோய். (வழக்.)

நீர்ப்படை-புறப்பொருட்டுறையினென்று; அது: கண்டுகோல்கொண்டகல்லினை நீர்ப்படுத்துத்தூய்மைசெய்தலும்,பின்னப்பெயரும்பீடும் எழுதிநாட்டியவழிநீராட்டுதலுமாம். (தொல். பொரு. சுo. உரை.)

நீர்ப்பதுமம்— இமைரோகபேதத்தொன்று; அது: இமையிற்றடிப்பையும் அதிக நீர்ச்சுரப்பையுமுண்டாக்கும். (சீவரட். உசுஅ.)

நீர்ப்பரிசை—ஆமை. (வைத்தியபரிபா.)

நீர்ப்பறவை—நீரில்வாழும் பட்சி; அவை: இன்னரப்புள் முதலியன. (பிங்கல. கூஙஎச.)

நீர்ப்பனை—புல்லாமணக்கு.(வைத்தியபரி.)

நீர்ப்பாசி — வைப்புப்பாடாண முப்பத்திரண்டிெனொன்று.

நீர்ப்பாம்பு—நீர்க்கோத்தை. (உ-ம்.) "அஞ்சாப்புறங்கிடக்குநீர்ப்பாம்பு" (மூதுரை.)

நீர்ப்பு—நீர்த்தல். பு-தொழிற்பெயர்விகுதி.

நீர்ப்புடையன்—ஒரு பாம்பு. (வழக்.)

நீர்ப்பூ — நால்வகைப்பூவினொன்று; அது: நீர்நிலைகளிலுண்டாகும்பூ. (உ-ம்.)"கொடிப்பூ"

நீர்ப்பூண்டு—நீர்முள்ளி. (வைத்தியபரி.)

நீர்ப்பூல்—நீர்பபூலா. (வழக்.)

நீர்மட்டம் —சரிமட்டம்பார்க்குங்கருவி.

நீர்மாங்காய் — மாங்காயடைகாய். (வைத்தியபரிபா.)

நீர்மாடம்—பள்ளிஓடம். (உ-ம்.) "ஓங்குநீர்மாடமொடுநாவாயியக்கி"(சிலப்.ஊர்காண்.எச.)

நீர்மீட்டான்—தண்ணீர்மிட்டான். (வைத்தியபரிபா.)

நீர்முகம்—இறங்குதுறை. (உ-ம்.) "நீர்முகந்திகழ்நீரிது" (சேதுபு. கோடி. ரு.)

நீர்முள்ளி—ஒருமுள்ளி. (உ-ம்.) "ஐங்கோலநீர்முள்ளி" (தைல. தைலவ. கங்ரு.)

நீர்மேனெருப்பு—கொட்டைப்பாசி. (மலையக.)

நீர்மை—1. இயல்பு, தன்மை. (உ-ம்.) "நெடுங்கடலுந்தன்னீர்மைகுன்றும்" (வள். கஅ.) 2. ஒளி. (உ - ம்.) "நெடுநீர்வார்குழைகளைந்தென" (நெடுநெல். கங்க.) 3. குணம். (திருக்கோ. கஎ. உரை.)

நீர்வண்டு—நீரில்வாழ் வண்டு. (வழக்.)

நீர்வல்லி—1. நீர்வள்ளி. (வைத்தியபரிபா.) 2. வெற்றிலைக்கொடி. (உ-ம்.) "மூடக்கற்றான்காகக்கரிப்பனீர்வல்லியங்க – மவிழிலைச்சுரதந்திங்களாம்படிவகைக்கிறுத்து" (தைல.தைலவ. கூச.)

நீர்வலயம்—பூமி. (உ-ம்.)"எரிமணிச்சுட்டாநெற்றி-மருவுநீர்வலயமுதலியவுலகமனைத்தையும்" (கூர்மபு. கக்கவமி. உசு.)

நீர்வழுக்கை—ஒரு நீர்ப்பூடு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

நீர்வள்ளி — வெற்றிலைக்கொடி. (உ - ம்.) "நெய்த-லல்லிமூலகநீர்வள்ளி" (தைல. தைலவ. ௬௪.)

நீர்வாத்து—ஒரு பறவை. (வழக்.)

நீர்வாரம் — 1. தினையரிசி. 2. நீர்வஞ்சி (1, 2-வைத்தியபரி.)

நீர்வாழ்வன – எழுவகைப்பிறப்பினுளொன்று; அது: மீன்முதலிய நீர்தும்பிராணி.

நீர்விட்டான்—தண்ணீர்விட்டான். (வைத்தியபரிபா.)

நீர்விளைவமை –உப்பு. (சிந்தா.)

நீரசம்—1. தாமரை. 2. மாதுளை. (1, 2-(வைத்தியபரிபா.)

நீரடி—நீரடிமுத்து (வைத்தியபரிபா.)

நீரடிமுத்தம்—நீரடிமுத்துப்பருப்பு. (உ-ம்.) "நீரடிமுத்தமொலிபோகு" (தைல. தைலவ. ௧௧௨.)

நீரணிமாடம்—நீர்மாடம். (உ-ம்.) "நீரணிமாடத்துநெடுநிலைதுறைபோகி"(சிலப்.நாடுகாண். உ௧௫)

நீரத்தி—ஒரு மரம். (வழக்.)

நீரதம் – நீரின்மை. (உ-ம்.) "நீரதநெறியில் வாவிநிறைந்தநீரென்னநின்றான்" (பாரத. திரௌபதி. ௫.)

நீரம்—1. தீர்த்தம். (உ-ம்.)"அறுநாலுகுளிர் நீரமுறைகூறிநோம்" (சேதுபு.பாலோடை. க.) 2. நீர். அம்-சாரியை.

நீரரண்—அகழ்; அது: நான்கரணிளொன்று. நான்காவன:—நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண். (வள். அரண். உ.)

நீரரமகளிர் — நீரில்வாழுந் தெய்வப்பெண்கள். (உ - ம்.) "நீதியிற்புகல்பகலெலா-நீரரமகளிர்" (பாரத. கிருட்டிண. அஅ.)

நீரலரி—ஒருவகைச்செடி. (வைத்தியபரி.)

நீரவர்—அறிவுடையார். (உ-ம்.) "நிறைநீர நீரவர்கேண்மைபிறைமதிப் – பின்னீரபேதையார்நட்பு" (வள். எஅஉ.)

நீரழிவு—ஒரு நோய். (வழக்.)

நீரர்காரம் — பழஞ்சோற்றுநீர். (பதார்த்தகுணசி.)

நீராசநம் — நீராஞ்சநம். (திருவிளை. நகரப். ௪௦.)

நீராஞ்சநம்—ஆலாத்தி. (உ-ம்.) "எஞ்சவிலாத்தீபநீராஞ்சநத்தட்டியேந்தி"(சிவரக.பசாசுமோசந. ௧௩.)

நீராமம்—ஒரு நோய். (வழக்.)

நீராமை — 1. கடலாமை. 2. சலக்கூர்மரோகம். (சீவரட். ௩உ௦.)

நீரிது—நீர்மை. (சிந்தா.)

நீரிழிநோய் — நீரிழிவு. (உ-ம்.) "நோய்க்குட்டம்"பார்.

நீரிழிவு—நீர்ப்பாடு, மூத்தரரோகம். (உ-ம்.) "மூக்கடைப்புட்காந்திநீரிழிவுகுன்மம்" (தைல. தைலவ. ௧௪௦.)

நீருடும்பு—ஒருடும்பு. (வழக்.)

நீருதிபாசம்—கடற்பாசி. (வைத்தியபரி.)

நீருபம்—1. ஆகாயம். 2. உருவமற்றது. 3. காற்று. (1, 2, 3-வழக்குண்டுபோலும்.)

நீருமரி—ஒரு பூடு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

நீருள்ளி—வெண்காயம். (வைத்தியபரிபா.)

நீருளாரை—ஓர் பூடு, நீராரை. (வைத்தியபரிபா.)

நீருறுமிர்தம்—புளிங்கறி. (உ-ம்.) "அன்பன்னீரூற்றமிர்தந் - தாம்பாலவரைநாட்டித்தர் துட்டயர்வார்" (சிந்தா. குணமா. எ௬.)

நீரோட்டி—ஒரு மரம். வழக்குண்டு.

நீரோலி—ஒரொலி. (வழக்.)

நீரேற்றம்—சலதோடம். (உ - ம்.) "அதிதூர்ப்பலம்"பார்.

நீரோட்டி—நீராரை. (வைத்தியபரிபா.)

நீரோம்பல் — 1. பேய்க்கடுக்காய். 2 நீர்க்கடம்பு. (1, 2-வைத்தியபரிபா.)

நீரோருகம்—தாமரை. (வைத்தியபரிபா.)

நீல்—1. நீலம். (உ-ம்.) "நிரந்தநீன்முகில். (சேதுபு. கந்தமா. உ௨.) விகாரம். 2. வாதம். (உ-ம்.) "நோக்குமிவைமூன்றுநீலாதிமூன்று" (தைல. பாயிர. ௪உ.)

நீலக்கடிப்பிணை — குதம்பைபோல்வதோர் பணி. (சிந்தா. நாமக. உ௬௬. உரை.)

நீலக்கத்தரி—ஒரு வழுதுணை. (வழக்.)

நீலக்கல்—நீலரத்தினம். (வழக்.)

நீலக்காரம்—துருசு. (வைத்தியபரிபா.)

நீலக்காலி—அவுரி. (வைத்தியபரிபா.)

நீலக்கிராந்தை—விஷ்ணுகிராந்தை.

நீலக்கொண்டி–புல்லாமணக்கு. (வைத்தியபரிபா.)

நீலகண்டசிவாசாரியர் — வேதாந்தசூத்திரத்திற்குப் பாடியஞ்செய்தவர். (அபிதானகோ.)

நீலகண்டன்—1. சிவன். (உ-ம்.) "தொலையாதசெல்வநீலகண்டனை" (சிவரக. கத்தரிப்பூ. ௧௩.) 2. துருசி. 3. முருங்கை. (2, 3-வைத்தியபரிபா.)

நீலகந்தி — ஒருவகை மாணிக்கம். (சிலப். அரும்பத.)

நீலகம்–1. கருப்பு. 2. துருசு. (1, 2-வைத்தியபரிபா.)

நீலகமலம்—நீலோற்பலம். (வைத்தியபரி.)

நீலகாசம்—கண்ணோயுளொன்று. (வழக்.)

நீலகிரி — அட்டமலையினொன்று. (சூ. நிக. ௧௨. ௭௭.)

நீலதரு—தெங்கு. (வைத்தியபரிபா.)

நீலநிதி—குபேரனவநிதிகளினொன்று. அமரநிகண்டிற்காண்க.

நீலப்பைங்குடம்—பச்சைக்குப்பி. (உ-ம்.) "நீலப்பைங்குடந்தொலைச்சி" (பெரும்பா. ௩௮௨.)

நீலபத்திரம்—கருங்குவளை. (வைத்தியபரி.)

நீலபதுமம்—நீலோற்பலம். (வைத்தியபரி.)

நீலபம்—1. தேனீ. 2. முகில். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நீலபாடாணம்—ஒரு பாடாணம். (வழக்.)

நீலபுட்பம் — 1. அவுரி. 2. எட்டிமரம். 3. விட்டுணுக்கரந்தை. (1, 2, 3-வைத்தியபரி.)

நீலம்—1. ஒருநிறம். (உ-ம்.) "நீலச்சிகண்டியிலேறும்பிரான்" (கந்தரல. ௨௬.) 2. கருங்குவளை. (பிங்கல. ௩௦௧௫.) 3. கறுப்பு. (சூ. நிக. ௮: ௨௨.) 4. காற்று. (பிங்கல. ௨௪.) அம் - சாரியை.) 5. செங்கழுநீர்க்கிழங்கு. (உ-ம்.) "சாந்து" பார். (தைல. தைலவ. ௪௬.) 6. துத்தம். 7. நஞ்சு. (பிங்கல. ௨௬௦௮.) 8. நவமணியினொன்று. (உ-ம்.) "காரொளிபரப்புநீலம்" (திருவிளை. நான்மாட. ௧௦.) 9. நீலக்கட்டி. (வழக்.) 10. நீலப்பட்டு. (கலி. ௭௨.)

நீலம்பாரித்தல் — விடமுதலியவற்றால் சரீரம் நீலவண்ணமாதல். (வழக்.)

நீலமண்டலம்—சிற்றீச்சமரம். (வைத்தியபரி)

நீலமணி—1. கண்ணிற்கருமணி. (வழக்.) 2. நீலரத்தினம். (சூ. நிக. ௬: ௬.) 3. பனைமரம். (வைத்தியபரிபா.)

நீலமருந்து —அவுரி. (வைத்தியபரிபா)

நீலமாதகம்—கையாந்தகரை. (வைத்தியபரி)

நீலமார்க்கம்—கையாந்தகரை. (வைத்தியபரிபா.)

நீலலோகிதம் — கருமையுஞ் செம்மையுங் கலந்தவடிவம். (உ-ம்.) "சோதியு-ணீலலோகித நிலவுமேருவைப் - போலுமிக்கதோர்புருடனிற்பதே" (சேதுபு. சிவதீர். ௭௪.)

நீலலோகிதன் — 1. சிவலோகத்தில் மகாதேவனரண்மனையில் மேற்குவாயிற்காவலன். (வி-ணி.) 2. சிவன். (உ-ம்.) "அன்பினீலலோகிதாவுலகநாதா-செய்யசீரிராமநாதா" (சேதுபு. இராமநாத. ௩௧.) 3. நியதிதத்துவத்திருக்குமோருருத்திரர். (வி-ணி. ௨௭௪.)

நீலவருணம்—1. சத்தமுகிலினொன்று; அது தீப்பொழிவது. 2. நீலநிறம்.

நீலவழுதலை—நீலக்கத்தரி. (வழக்.)

நீலன் — 1. ஒரு வானரப்படைத்தலைவன். (இராமா. சேதுபந்த. ௩௮.) 2. சநி. (சூ. நி. ௧: ௬௩.)

நீலா — அவுரி. (வைத்தியபரிபா.)

நீலாங்கம்—மலைத்தேள். (வைத்தியபரி.)

நீலாங்கு— புழு. (வைத்தியபரிபா.)

நீலாஞ்சநம்—1. ஒரு கற்கதிரவியம். (உ-ம்.) "கற்பூரம்" பார். 2. கல்லீயம். 3. துருசு. 4. கறுப்புக்கல். (2, 3, 4-வைத்தியபரிபா.)

நீலாம்பரன்—பலபத்திரன். (சூ. நிக. ௧௧: ௧௦.)

நீலாம்புசம்—கருங்குவளை. (வைத்தியபரி.)

நீலாம்புரி—ஓரிராகம். (வழக்.)

நீலாராட்சி—மணிபூரகத்தானமாகிய நாபிக்குரிய பத்மதளங்கள் பத்தினுள் ஒன்றினிற்குமட்சரத்தினதிதேவதை. (சி. சி. அ: ௨௧. மறை.)

நீலி — 1. அவுரி. (தைல. தைலவ. ௩௧.) 2. கருநொச்சி. (வைத்தியபரிபா.) 3. கறுப்பு. (பிங்கல. ௩௭௩௪.) 4. காளி. (உ-ம்.) "அந்தரி" பார். 5. துர்க்கை. (சூ. நிக. ௧: ௪௦.) 6. பழையனூர் வணிகன் மனைவி. இவள்சரிதம், (அபிதானகோசத்திற்பார்.) 7. பார்வதி. (உ-ம்.) "நீதழைந்தது யோகமம்பிகைநீலியென்பதுபாவமே" (சௌந்தரி.) 8. மேகவண்ணப்பூவுளமருதோன்றிமரம். (வைத்தியபரிபா.)

நீலிகை—அவுரி. (வைத்தியபரிபா.)

நீலிதம்—நீலநிறம். (உ-ம்.) "நீலிதவுடையாடையுடுத்தாள்" (பாரத. அருச்சுனன்றவநிலை. ௧௫௮.)

நீலிநி—அவுரி. (வைத்தியபரிபா.)

நீலோற்பலம்—கருங்குவளை. (உ-ம்.) "படர்பூங்குவளைநாண்மலரோநீலோற்பலமோ" (இராமா. மிதிலைக். ௬௫.)

நீவரம்—நாடு. (பிங்கல. ௪௫௭.)

நீவல்—நீவுதல். (உ-ம்.) "நிறஞ்செய்கோசிகனுண்டேசுநீவிநீவாதவல்குல்" (இராமா. கோலங்காண். ௧௩.)

நீவாரம்—குளநெல். (சூ. நிக. ௪: ௪௦.)

நீவி—1. ஒருதெரிநிலைவினையெச்சம். (உ-ம்.) "மாசறுசுடர்நுதனீவி" (கு. பா. ௧௮௨.) 2. கொய்சகம். (உ-ம்.) "நீவிநிதம்பவுழத்தியர்" (பெரியபு. ஆனாயநாய. ௨.) 4. சீலை. (உ-ம்.) "நீவியின்றியினெற்றியங்கண்ணுதல்" (கந்தபு. ததீசியுத். ௫௬.) 5. தடைத்து. (பத்துப்பா.) 6. வஸ்திரமுடிச்சு. (சி. சி. அ: ௧௨. சிவாக்.) 7. நீங்கி. (பதிற்றுப்.)

நீவியம்—சீலை. (சூ. நிக. ௭: ௬௮.)

நீவிர் — ஒரு முன்னிலைப்பெயர். (உ-ம்.) "நீவிரிவண்வந்துபுகலும்" (சிவரக. தாருக. ௨௮.)

**நீவுதல்**—1. உருவிவிடுதல். (தணிகைப்பு. நாட்டுப். ௧௧௫.) 2. கழுவுதல். (உ-ம்.) "நீவிநித் திலம்பரத்தியருணக்குவசெய்தல்" (பெரியபு. திருக்குறி. ௬.) 3. தடவுதல். (உ-ம்.) "நீவிப் பூசும்-வெய்யபிடித்தைலாதிகளுக்கு" (தைல. பாயிர. ௨௪.) 4. துடைத்தல், நீங்குதல். "நீவல்" பார்.

**நீழல்** — நிழல். (உ-ம்.) "வடத்தினீழல்" (அரிச்ச. மயா. ௫.)

**நீள்**—1. உயரம். 2. நீளம். 3. தெரிநிலை வினைப்பகுதி. (உ-ம்.) "நீள்பரணி" (விதான. குணகுண. ௭.) (1, 2-விகாரம்.)

**நீள்சடையோன்**—கொன்றை. (வைத்திய பரிபா.)

**நீளம்** —நெடுமை. (உ-ம்.) "பேசத்திருவார்த் தையிற்பெருநீளம்பெருங்கண்களே" (திருக் கோ. ௧௦௧ )

**நீளல்**—1. உயர்தல். (உ-ம்.) "நீளுங்குடி" (வள். ௧௦௨௨.) 2. ஓடுதல். (பிங்கல. ௨௯௦.) 3. நீளுதல். (திருவிளை. திருநகரங். ௧௬.)

**நீளி**–1. நீளத்தையுடையது. (உ-ம்.) "நெடுங் தருநீளிகள்" (கந்தபு. அக்கினிமுகா. ௧௦௪.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நெடியன். இ-விகுதி.

**நீளிடை**—சேய்மை. (சூ. நிக. அ: ௧௨.)

**நீளித்தல்** —1. தாமதித்தல். 2. நீளுதல்.

**நீளிப்பு**—நீடிப்பு. (வழக்.)

**நீளியது**—நெடியது. (வழக்.)

**நீளியன்**—நெட்டையன். (வழக்.)

**நீளுதல்**-நீளலின்பொருளெல்லாங்கொள்க.

**நீற்றல்**— } எரியிட்டு நீறச்செய்தல்.
**நீற்றுதல்**— } (வழக்.)

**நீற்றுப்பூசனி**— ஒரு கொடி.

**நீறடுதல்**—வீபூதியுத்தூளனமாகப்பூசுதல்.

**நீறு**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. புழுதி. (உ-ம்.) 'நீறடங்குதெருவினவன்சாறயர்மூதூர்' (சிறுபாண்.௨௦௧.) 3. விபூதி. (உ-ம்.) "மந்திரமா வதுநீறு" (தேவார. திருநூற்றுப்பதிகம்.) [தீவி னையை நீறச்செய்தலாலிப்பெயர் பெற்றது.]

**நீறுதல்**—நீருதல். (வழக்.)

**நீறுபடுதல்**—1. அழிதல். 2. நீறுகுதல்.

**நீறுபூத்தல்**—சாம்பற்பொடித்தல். (வழக்.)

**நீன்மை**— நீலம். (உ-ம்.) "நீன்மைமேனிய னேமியந்தடத்துறைநிறைநீர்" (சேதுபு. விதாம. ௧.)

**நீனிறவியலகம்**—கடல். (ஐங்குறு.)

## நு.

**நுக்குடம்**—காஞ்சிரை. (மலையக.)

**நுகம்**—1. கணையமரம். (உ-ம்.) "கொடு நுகந்தழீஇயபுதவின்" (பெரும்பா. ௧௨௭.) 2. நுகத்தடி. (உ-ம்.) "பளிக்குநுகம்பிணைத்து" (இராமா. பாலகா. கார்முக. ௧௬.) 3. பாரம். (உ-ம்.) "எழுவர்பூண்டவீகைச்செந்நுகம்"(சிறு பாண். ௧௧௫.) (சிந்தா.) 4. வலி. (உ-ம்.) "தெவ்வர்தேஎடநுகம்படக்கிடந்துநுழிலாட் டி" (மலைபடு. ௮௭.)

**நுகர்கு**–நுகர்வேன். (உ-ம்.)"அஞ்சலோம்பு நின்னணிநலநுகர்கென" (கு. பா. ௧௮௧.) கு-தன்மையொருமைவிகுதி.

**நுகர்ச்சி**—1. அநுபவம். (உ-ம்.) "தொய்யா வுலகத்துநுகர்ச்சியில்லெனின்" (புறநா. ௨௧௪.) உண்ணுதல் முதலியவநுபவம் என்பர். 2. நுகர்தல், உண்ணல். (ஐங்குறு.)

**நுகர்ச்சியின்மையணி**—ஒருபொருளினநு பவத்திற்குவராமையை அதனின்மைக்கு ஆதா ரமாகக்கூறுமணி. (குவல. ௧௧௫.)

**நுகர்ச்சியிலுலகம்**—வீடு. (உ-ம்.)"நோற்ற வன்வலையைநீங்கிநுகர்ச்சியிலுலகநோக்கி- யாற் றுறப்போதநேற்றுமழிய மோ பெரியமோ காண்" (சிந்தா. நாமக- ௩௪௭.)

**நுகர்தல்**—1. அநுபவித்தல். (உ-ம்.) "தண டந்தரு-மினிமைநுகர்ந்தமடந்தையும்" (கோ யிற்பு. பதஞ்சலி. ௪௨.) 2. புசித்தல். (உ-ம்.) "அம்பிகையோடுநுகர்ந்துகளித்தனன்" (சிவரக. தேவிமேருமயிலை. ௧௦.)

**நுகர்பு**—நுகர்ந்து. (பரிபாடல்.)

**நுகர்வு**—நுகர்ச்சி. (வழக்.)

**நுதம்பு** —நொங்கு. (உ-ம்.) "பனைநுகும்பன் னசினைமுதிர்வராலோடு" (புறநா. ௨௪௧.)

**நுகை**—சிவதைவேர். (வைத்தியபரிபா.)

**நுகைத்தல்** —1. இளக்குதல். 2. தளர்த்தல்.

**நுகைதல்**—1. இளகுதல். 2. தளர்தல்.

**நுகைப்பு**—நுகைத்தல். (உ-ம்.) "வந்துழிக் காண்க"

**நுகைவு** — 1. இளக்கமானது. 2. தளர்வு. (உ-ம்.) "வந்துழிக்காண்க"

**நுங்கல்**—விழுங்கல். (உ-ம்.) "பாயும்வெம் புகைநுங்கான்" (சேதுபு. சேதுச. ௩௨.)

**நுங்கள்**—உங்கள். (உ-ம்.) "உமைத்தொ டுத்தசாபத் — துப்பறநோக்கிநுங்கடொல்லுரு நல்கி" (திருவிளை. அட்ட. ௧௦.)

**நுங்கு**–1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பனையி னிளங்காய். (உ-ம்.) "தோட்டநுங்கிற்றுளை யுறமூக்கினை" (இராமா. கரன். ௮.)

**நுங்குதல்**—விழுங்குதல். (உ-ம்.)"இந்தாஞ் சேர்கானகத்தைநுங்குமெரிபோல்"(பிர.காண். ௧௫; ௨௦.)

நுங்கை—1. உன்றங்கை. (உ-ம்.) "நங்கைகையிழந்ததென்மாயமோ" (கந்தபு. சூரன்றண்ட. உரு.) 2. உன்ருய். (உ-ம்.) "நங்கையுமேருவினிருந்தாள்" (கந்தபு. சயந்தன்கன. கூ.)

நுசுப்பு — இடை. (உ-ம்.) "முற்ருமுகிழ்முலைப்பான்முற்றிமுகங்கறுப்பப் – பற்ருநுசுப்பாள்கருப்பம்படைத்தனளே" (பிரமோ.காண். கூ: க0.)

நுசை—சிவதை. (உ-ம்.) "கொள்ளிரவு தோணிபுளிகண்ணிநுசை" (தைலவ. க0கூ.)

நுட்பம்—1. கரந்துறைகோள்களுளொன்று. (சிலப்.நாடுகாண்.க0உ. உரை.) 2. நுட்பவணி. (உ-ம்.) "தெரிவுவேறுகிளவாதுகுறிப் பினுந் தொழிலினுந் – அரிதுணர்வினைத்திறநுட்பமாகும்" (தண்டி. சுகூ.) 3. நுண்மை. (சூ. நிக. அ: கக.)

நுட்பவணி — தெரிந்துவேருகச்சொல்லப்படாமல் குறிப்பிலுலாவது தொழிலினுலாவது அநுமித்து அரிதாக அறியத்தக்க செய்கைத்திறமுடைய அணி; அது: குறிப்புநுட்பம், தொழில்நுட்பமென விருவகைப்படும். (தண்டி. சுகூ. உரை.)

நுடக்கம்—அசைவு. (ஐங்குறு.)

நுடக்கி—ஒன்ருகக்கரைத்து. (சிந்தா.)

நுடக்கிய—கழுவின: (உ-ம்.) "கள்ளடிமகளிர்வள்ளநுடக்கிய" (பெரும்பா. கூகூக.)

நுடக்கு—முடக்கு, நுடக்கம். (வழக்.) (பரிபாடல்.)

நுடக்குதல்—மாய்த்தல். (உ-ம்.) "பொங்குபிசிர்நுடக்கிய" (பதிற்று. எஉ.)

நுடங்கல் — அசைந்துவருதல். (உ-ம்.) "சூசிமுகத்தினி- னேக்கிற்சந்திற்செருகநுடங்கலான்" (சேதுபு. சேதுச. கூகூ.)

நுடங்கி—அசைந்து. (பத்துப்பா.)

நுடங்கு—1. நுடக்கம். 2. தெரிநிலைவினைப்பகுதி.

நுடங்குதல்—1. ஆடல், அசைதல். (உ-ம்.) "மின்னினன்னமருங்குல்போல்நுடங்கிநின்ருள்" (இராமா. உலாவியல். க.) 2. துவளல். (உ-ம்.) "நுடங்கித்தயங்குமே" (அரிச்ச. நகர. க0.) 3. முடங்கல், வளைதல். (ஞானமிர்தம்.)

நுண்ணரிமை—நுட்பம். (வழக்.)

நுண்ணியது—நுண்மையானது. (வழக்.)

நுண்ணியம்—நுண்ணறிவுடையேம்.(உ-ம்.) "நுண்ணியமென்பாரளக்குங்கோல்" (வள். எக0.)

நுண்மணல் — மெல்லியமணல். (உ-ம்.) "மீதேநுண்மணலிறைத்து" (திருவாத. மண்சுமந்த. கூ.) ஈண்டுநுண்மை-மென்மைகுறித்துநின்றது.

நுண்மை—1.கூர்மை,நுண்ணறிவு.என்பதிற்காண்க. 2. நுட்பம், சிறுமை. (உ-ம்.) "நுண்டுளிகண்டருமருவி" (கோயிற்பு. பதஞ்சலி. சச.)

நுணக்கம்—நுணங்கல். (வழக்.)

நுணகம்—பொன். (வைத்தியபரிபா.)

நுணங்கல்—1. நுட்பமாதல். (உ-ம்.) "நுணங்கியகேள்விமேலோர்" (பெரியபு. தடுத்தாட். கச.) 2. நுண்மையாதல்.

நுணங்கியோர்—அறிவுடையோர். (உ-ம்.) "யாப்பும்பாட்டுந்தூக்குந்தொடர்புஞ்செய்யுளைநோக்கிற்றென்பநுணங்கியோரே" (யாப். காரிகை. )

நுணங்கு—1. நுண்மை. (ஐங்குறு.) (புறநா.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நுணங்குதல்—1. நுண்மையாதல். 2. மெலிதல். (உ-ம்.) "நுணங்குவாலுமறுப்புண்டு" (விவேகசிந்தாமணி.)

நுணல்—தவளை. (உ-ம்.) "நுணலுந்தன் வாயாற்கெடும்" (பழமொழி.) நுணலையெனவும் வழங்குவர். (ஐங்குறு.)

நுணலை—தவளை. (சூ. நிக. கூ: எஎ.)

நுணவம்—நுணா. (உ-ம்.) "நறவுவாயுறைக்கு நாகுமுதிர்நுணவம்" (சிறுபா. டுக.)

நுணவு—1. தணக்கு. 2. நுணா. (சிறுபா. டுக. உரை.) ஆக்குறுக்கம். உகரம்-சாரியை.

நுணவை—1. எண்ணெய்லை. 2. மா. (1, 2-சூ. நிக. கக: ணகரவெ. உக.)

நுணா—தணக்கு. (சூ. நிக. ச: உச.)

நுணாசுதல்—தடவுதல்.(வழக்குப்போலும்.)

நுணாப்பூக்கிரந்தி—ஒருவகைநோய்.(உ-ம்.) "தொக்கண்ணியெழும்புநுணாப்பூக்கிரந்திமுதனோய்தொலையும்" (தைல. தைலவ. க0சு.)

நுணாமஞ்சள்—ஆத்தி. (வைத்தியபரிபா.)

நுணாவுதல்—தடவித்தெரிதல். (வழக்குப்போலும்.)

நுணுக்கம் — 1. கூர்மை. 2. நுண்மை. (பிங்கல. உஉஉசு.)

நுணுக்கல் — நுண்மையாக்கல். (உ-ம்.) "திரிகடு" சு0. பார்.

நுணுக்கி—கூரிதாக்கி. (சிந்தா.)

நுணுக்கு—1. அற்பம். (வழக்.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நுணுக்குதல்—நுணுக்கல். (உ-ம்.) "நூறுகொட்டிநுண்மணல்விராய்நுணக்குநொருபால்" (திருவானைக்கா. திருநீற்றுத்திரு. கச.)

நுணுகி—மெலிந்து. (உ-ம்.) "தோணுணுகி" (புறநா. கூசு.)

நுணுகு—1. நுண்மை. (பிங்கல. உஉஉ௬.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நுணுகுதல்—1. கூர்மையாதல். 2. நுண்மையாதல். (1, 2-வழக்.)

நுணுங்கல்—நுண்மையாதல். (வழக்.)

நுணுங்கு—1. நுண்மை. (சூ. நிக. அ: கக.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நுதம்புதல்—நனைந்தழுக்காதல். (வழக்குப் போலும்.)

நுதல்—1. சென்னி. (உ-ம்.) "குடுமிகளைந்த நுதல். (புறநா. எஎ.) 2. சொல். 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. நெற்றி. "சிந்தூரம்"பார். 5. புருவம். (சூ. நிக. உ: கஎ.)

நுதலணி—இலம்பகம். (பிங்கல. கஉ௦௦.)

நுதலல்—1. குறித்தல். (சூ. நிக. அ: ௬௫.) 2. சொல்லல். (உ-ம்.) "வந்தழிக்காண்க"

நுதலிப்புகுதல் — தந்திரயுத்தி முப்பத்திரண்டனுளொன்று; அஃது: இதுசெய்யின் இப்படியாகுமென்று கருதிப்புகுதல். (உ-ம்.) "நுதலிப்புகுதலோத்துமுறைவைப்பே" (நன். பாயிர. கச.)

நுதலுதல்—நுதலல். (வழக்.)

நுதி—1. தலை. (கலி. க௦௪. உரை.) 2. நுனி. (உ-ம்.)"திருக்கரத்தினகநுதியால்"(கோயிற்பு. பதஞ்சலி. ௬உ.) 3. முன்பு. (திருக்கோ. ௬௬௦. உரை.) (சிந்தா.)

நுதுத்தல்—அவித்தல். (உ-ம்.) "நெய்யாலெரிநுதுப்போமென்றற்றாற்கௌவையாற் காமநுதுப்போமெனல்" (வள். ககசஅ.)

நுதுப்பு—நுதுத்தல். (வழக்.)

நுந்த—செலுத்த. (ஞானமிர்தம்.)

நுந்தல்—பொழிதல். (உ-ம்.) "கட்புனன் மிகநுந்த" (கோயிற்பு. நடராச. சஎ.)

நுந்துதல்—1. தள்ளுதல். (உ-ம்.) "பிடர்பிடித்துநுந்துகின்றதவைகேட்ப" (சேதுபு. கத்துரு. உ.) (திருவாச. கோத்தும்பி. க௦.) 2. தூண்டுதல். (உ-ம்.) "நுந்தாவொண்சுடரே" (திருநாவு. தேவாரம்.)

நுந்தை—உன்றந்தை. (உ-ம்.) "எம்மைக் காக்குந்தலைவனே நுந்தையன்றோ"(தாயு.தேன்முக. க௦.) (ஐங்குறு.)

நுபம்—எருக்கு. (வைத்தியபரிபா.)

நுபுவநுத்தி—ஆமையோடு. (வைத்தியபரி. கருப்.)

நும்—1. ஒரு சாரியை. (உ-ம்.) "நிரலேதம் நும்சார" (நன். உ௪௬.) 2. விரவுத்திணைமுன்னிலைப்பன்மையில்வருமோர் விகாரப்பெயர்.

நும்பி—உம்பி.

நும்பியர்—உந்தம்பியர். (உ-ம்.) "நும்பியரிறப்பினையொழிப்பதற்கேதுவுண்டெனு" (பார்த. நச்சுப்பொ. ருக.)

நும்மோர்—உம்மவர். (வழக்.)

நுமர்—உம்மவர். (உ-ம்.) "அம்மலர்வாட்கணல்லாயெல்லிவாய்நுமராவெதே" (திருக்கோ. கருரு.)

நுமன்—உம்மவன். (நன்னூல். பெயரியல்.) கிளைமுதலாகஎன்னுஞ் சூத்திரவுரையிற் காண்க.

நுமையனர்—நுந்தையைனார். (சிந்தா.)

நுரை—1. நீர்முதலியவற்றினுரை. (உ-ம்.) "துண்டம்"பார். 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வெண்ணெய். (உ-ம்.)"திந்துயிர்கலக்கிநுரை தெரிந்து" (பெரும்பாணு. கருரு.)

நுரைத்தல்—நுரைக்குதல். (வழக்.)

நுரைப்பீர்க்கு—ஒரு பீர்க்கு. (வழக்.)

நுரையாம்பூச்சி—ஒரு பூச்சி. (த. நி. போ. ககக.)

நுரையீரல்—ஈரலினோர்வகை. (வழக்.)

நுவணம்—நுவணை.

நுவணை—1. கல்விநூல். (சூ. நிக. கக: வகரவெ. உ. 2. தினைப்பிண்டி, தினைமா. (உ-ம்.) "உண்ணுநர்த்தடுத்தவிடிநுண்ணுவணை"(மலைபடு. சசரு.) 3. நட்பம். (சூ. நிக. கக. வகரவெ. உ.) 4. மா. (பிங்கல. ககஎ.)

நுவல்-1. சொல். 2.தெரிநிலைவினைப்பகுதி.

நுவல்கை—சொல்லுதல். (வழக்.)

நுவலல்—1. சொல்லுதல். (உ-ம்.) "ஈகை நுவல" (புறநா. உ௪.) 2. விரும்பல்.(ஞானமி.)

நுவலாச்சொல்—நுவலாநுவற்சி. (உ-ம்.) "மாறியிகழ்மொழிவண்புகழாய்நுவலாச்சொல் வரும்" (வீரசோ. அலங்கா. ௬உ.)

நுவலாநுவற்சி—புகழாப் புகழ்ச்சியென்னு மணி; அஃது: ஒருபொருளைப் பழித்தாற்போலப் புகழ்வது. (தண்டியல்.பொருளணியி. அஉ.)

நுவலுதல்—நுவலல். (உ-ம்.) "வெய்திலைழயேலெனநுவலா (இராமா. ஆரணிய. சூர்ப்பநகிப். க௬.)

நுவலுழித்தோற்றம் — பாடிவீட்டுள்ளோர் மகிழ்ந்துரைத்தற்குக்காரணமான நிரைகொண்டோர்வரவும் ஊரிலுள்ளோர்கண்டு மகிழ்ந்துரைத்தற்குக் காரணமான நிரைமீட்டோர்வரவும். (தொல். பொரு. ருஅ.)

நுவற்சி—சொல்லுகை. (வழக்.)

நுவறல்—சொல்லல். (உ-ம்.) "நோக்குநெடும்பாரவர்க்குநோன்புலைவான்றலையவர்க்குநுவறல்கேட்டா-மீக்கணிலைவிழியளவா" (சேதுபு. காயத். ௪.)

**நுவறிய**—அராவின. (உ-ம்.) "நுணங்கற நுவறியநுண்ணீர்மாமை" (மலைபடு. ௯௫.)

**நுழல்**-கொற்றுகம்,ஓர்பூண்டு.(வைத்தியபரி)

**நுழுதல்**—கோதுதல். (உ-ம்.) "மயிர்நுழுதி மருங்குயர்த்த" (பெரியபு. ஆனாய. ௧௫.)

**நுழுந்துதல்**—நழுவுதல். (வழக்.)

**நுழுவல்**—நழுவல். (வழக்.)

**நுழுவு**—தெரிநிலைவினைப்பகுதி.

**நுழுவுதல்**—நழுவுதல். (வழக்.)

**நுழை**—1. சிறியவழி. (உ-ம்.) "பின்னியன்னபிணங்கரினுழைதொறும்" (மலைபடு. ௯௭௧.) 2. துவாரம். (தைல. தைலவ.) 3. நுண்மை. (சூ. நிக. அ: ௧௧.) 4. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "மழைநுழைவரையென" (திருவிளை. நாக. அ.) 5. பலகணி, சாளரம். (பிங்கல. ௬௮௦.)

**நுழைச்சல்**—நுழைத்தல். (வழக்.)

**நுழைகல்லா**—நுழையாத. (புறநா.)

**நுழைத்தல்**—நுழைவித்தல். (வழக்.)

**நுழைதல்**—1. கழிதல். (உ-ம்.) "வடபெருங்கோட்டுமலர்ப்பொழினுழைந்து" (சிலப். நாடுகாண். ௯௫.) 2. செல்லுதல். (உ-ம்.) "பார்த்தகண்நுழையாவாகபரந்திருள்சான்றவன்றே" (திருவிளை. நான்மா. ௯.)

**நுழைவு**—1. கூரியபுத்தி. 2. நுண்மை. (உ-ம்.) "நொசிவுநுழைவுநுணங்குநுண்மை" (தொல். சொல். ௯௭௪.)

**நுளம்பு**—ஓர் பறவை. (பிங்கல. ௨௯௯௯.)

**நுளம்புதல்**—அசட்டைபண்ணல். (வழக்குப்போலும்.) நுளுப்புதலென்றுங்கூறுவர்.

**நுளை**—1. ஈநம். (வழக்.) 2. நுளைச்சாதி. (சிறுபாண். ௫௮. உரை.)

**நுளைச்சி**—நெய்தனிலப்பெண். (சூ. நிக. உ: ௭௨.)

**நுளைச்சியர்**—நெய்தனிலத்துத் தாழ்ந்த பெண்டிர். (உ-ம்.) "தழுவுசீர்நுளைச்சியர்தசும்பிற்சேலுடன் - விழிநிழலெண்ணியே விற்க" (சேதுபு. கந்தமா. ௮௭.)

**நுளைத்தியர்**—பரத்தியர். (தொல். பொரு. ௨௦. உரை.)

**நுளைமகள்**—நுளைச்சாதியிற்பிறந்தமகள். (உ-ம்.) "நுதிவேனோக்கினுளைமகளரித்த" (சிறுபா. ௫௮.)

**நுளையர்**—நெய்தநிலத்துத்தாழ்ந்த ஆடவர். (உ-ம்.) "நுளையர்நுளைச்சியர்பரதர்பரத்தியர்" (அகப்பொ. அகத்தி. ௨௪.)

**நுன்**—உனது. (உ-ம்.) "நம்பநின்பெருமை நுன்னிடையொடுங்க" (கருவூர்த்தேவர் திருவிசைப்பா.) (சிந்தா.)

**நுனி**—1. நுண்மை. (உ-ம்.) "நூலோடு போனநுனிகூர்நோலாருஞானமுநிவீர்" (சேதுபு. பாலோடை. ௪௬.) 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. முனை. (வள். வலியறிதல். ௬.)

**நுனித்தல்**—1. உற்றுராய்தல். (உ-ம்.) "நூன்மையாவையுநுனித்துநாடி" (கந்தபு. இந்திராணி. ௧௦.) 2. கூராக்கல்.

**நுனித்தவன்**—கூரிதாகக்கற்றவன். (சிந்தா.)

**நுனித்து**—கூர்த்து. (சிந்தா.)

**நுனை**—முனை, நுனி. (உ-ம்.) "கூர்நுனை வேல்" (புறநா. ௪௨.)

## நூ.

**நூக்கம்**—நூக்கு. (வழக்கு.)

**நூக்கல்**—1. காலங்கழித்தல். (உ-ம்.) "வானுடைத்திருநீக்கியேமண்மிசைநூக்க" (சேதுபு. விதூம. ௨௯.) 2. செலுத்தல். (உ-ம்.) "மாணிக்கமாலைவிற்றுவநூக்கி" (சிவரக. சுகமுநி. ௧௨.) 3. தள்ளல். (உ-ம்.) "நூக்குவான்செல்ல வேங்கி" (அரிச்ச. சூழ். ௯௯.) 4. நெய்வார் கருவியிலொன்று. (ஒரு குழூஉக்குறி.)

**நூக்கி**—1. சாத்தி. (உ-ம்.) "தாழக்கோல்" பார். 2. செலுத்தி. (உ-ம்.) "ஆறுமேழுமறுபதுமைம்பதும்நூறுமாயிரமுங்கணைநூக்கி" (இராமா. நாகபாச ௧௬௦.) 3. தள்ளி. (உ-ம்.) "நூக்கியெறிபொறியும்" (சிந்தா. நாமக. ௭௨.) 4. முறித்து. (பரிபாடல்.)

**நூக்கு**—1. தள்ளு. 2. தெரிநிலைவினைப் பகுதி.

**நூக்குதல்**—1. செலுத்துதல். 2. தள்ளுதல். (1, 2-வழக்.)

**நூது**—ஒரு நதி. (வி-ணி. ௧௯௭.)

**நூங்கு**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பெருமை. 3. மிகுதி. (2, 3-உதாரணம் வந்துழிக் காண்க.

**நூங்குதல்**—1. பெருமையாயிருத்தல். 2. மிகுதியாயிருத்தல்.

**நூடி**—சிற்றேலம். (வைத்தியபரிபா.)

**நூத்தல்**—நொதுத்தல், அவித்தல். (சூ.நிக. ௯: ௨௯.)

**நூதநத்துவம்**—புதுமை. (வழக்.)

**நூதநம்**—புதுமை. (வழக்.)

**நூதநன்**—புதியன். (வழக்.)

**நூநம்**—1. குறைவு. (உ-ம்.) "கவுரிதனை வணங்கிடாநூநத்தாலே" (அருணகிரிபு. அருந்தவ. ௯௮.) 2. நிச்சயம். (சூ. நிக. ௧௧: டகரவெ. ௭.)

**நூப்பு**—தணிப்பு. (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நூபுரம்—1. காற்சிலம்பு. (உ-ம்.)"மறையே நமதுநூபுரமாம்" (திருவிளை. உவவா. க.) 2. பாதகிண்கிணி. (சூ. நிக. எ: உரு.)

நூர்த்தல் — 1. அணைத்தல். 2. ஆற்றல். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நூரல்—1. அவிதல். 2. ஆறல். 3. பதனழிதல். (உ-ம்.) "வந்துழிக்காண்க"

நூல்—1. அரிகயிறு. (உ-ம்.) "குரங்குபொருதகரிஞெடுகூர்ந்தரிவநுண்ணூல்"(சிந்தா.நாம. எரு.) 2. இலக்கணமுதவியநூல், இருவகைப் பாயிரமுடையதாய் மூவகை நூலிலொன்றாகி நான்கு பொருட்பிரயோசநத்தோடு எழுவகை மதந்தழுவிப் பத்துக்குற்றமுமகற்றிப் பத்தழகுடனே முப்பத்திரண்டு யுத்தியைக்கொண்டு இயல்முதலிய வுறுப்புக்களைஉடைத்தாகிச் சூத்திரம், காண்டிகை, விருத்தியாகும் விகற்பநடை பெறுவது. (நன். பாயிர. ச.) 3. இழை. (சூ. நிக. வகரவெ. உ.) 4. எண்ணுமெண்ணம். (உ-ம்.) "ஏதிலார்நூல்" (வள். சசo.) ஆகுபெயர். 5. கயிறு. (உ-ம்.) "பிடியமைநூலொடு மெய்ம்மணிகட்டி" (கலி. கசo.)

நூல்வழக்கு—செய்யுள்வழக்கு. (நன்.பெயரியல். உ.)

நூலாக்கலிங்கம் — பட்டாடை. (உ-ம்.) "நூலாக்கலிங்கம்வாலரைக்கொளீஇ" (பதிற்று. கஉ.)

நூலாசிரியன்—நூலாக்கியோன். (வழக்.)

நூலாம்படை—ஒட்டடை. (வழக்.)

நூலாம்பூச்சி—சிலந்திப்பூச்சி. (வழக்.)

நூலிதொடக்கி—முக்கருவு. (வைத்தியகருப்.)

நூலியாப்பு—நூலினிடத்தி யாப்பமைக்கும் விதம்; அது: தொகுத்தல், விரித்தல் தொகைவிரி, மொழிபெயர்ப்பு, என நால்வகைப்படும். (நன்னூல். பாயிர. ருo.)

நூலிழந்தாள்—அமங்கலி. (வழக்.)

நூலிழைத்தல்—நூனூற்குதல். (வழக்.)

நூலுத்தி—தந்திரவுத்தி. (நன்னூல். பாயி. நுதலிப்புகுதல் என்னுஞ்சூத்திரத்திற் காண்க.

நூலேணி—கயிற்றேணி. (வழக்.)

நூலோடுதல்—பாவோடுதல். (ஒருகுழூஉக்குறி.)

நூலோர்—1. அறிஞர். 2. பார்ப்பார். 3. மந்திரிகள். (1, 2, 3- சூ. நிக. கக: லகரவெ. உஉ.)

நூவு—எள்ளு. (உ-ம்.) "திரியட்சி"பார்.

நூழல்—நூறல், அழித்தல்.

நூழில்—1. கரந்துசெல்வழி. (உ-ம்.)"ஈண்டியோடின நூழில்புக்கேகினசிலவே"(திருவிளை. பரிநரி. கக.) 2. கொடிக்கொத்தான், ஒருவகை வாசனைக்கொடியென்பர். (புறப்பொ.) 3. கொலை. 4. கொன்றுகுவித்தல், கொன்றுகுவிக்குமிடமுமாம். (பத்துப்பா.) (உ-ம்) "ஒள்வாள்வீசியநூழிலும்" (தொல். பொருள். எஉ.) 5. தன்மெய்ப்புதைந்த படையைப்பறித்துநிற்கை. 6 படர்கொடி. (உ-ம்.) "மண்ணறுநூழிலான்மருங்குமீப்படர் - தண்ணடைகோடிலாத்தருக்கடோன்றுமால்" (சேதுபு. கந்தமா. கூரு.) 7. யானை. 8. மிடைந்தபோர். (பரிபாடல்.) (2, 3, 7-சூ. நிக. கக: ழகரவெ. க.)

நூழிலாட்டல்—கொன்றுகுவித்தல். (சிந்தா.)

நூழிலாட்டு— / நூழிலாட்டுதல்— பகைவரோடத் தன்மார்பிற் புதைந்து கிடந்த ஆயுதம் பிடுங்கியெறிவது. (உ-ம்.) "நூழிலாட்டென்பதுகளங்கழுமியபடையிரிய-வுளங்கழிந்தவேல்பறித்தோச்சின்று" (புறப்பொருள்.)

நூழை—1. சிறுவாயில். (புறப்பொ.) நுழைவாயில் என்பர். (பிங்கல. எகஉ.) 2. துவாரம். (தாயு. சச்சி. சு.) 3. நுண்மை. (சூ.நிக.எ:கக.)

நூற்கழி—நூற்பந்து. (வழக்.)

நூற்குச்சு—நூற்குச்சம். (வழக்.)

நூற்குதல்—நூற்றல். (சூ. நிக. சு: உக.)

நூற்குற்றம்பத்து—பத்துவகைநூற்குற்றங்கள்; அவை: குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியதுகூறல், மாறுகொளக்கூறல், வழூஉச்சொற்புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத்தொடுத்தல், மற்றொன்றுவிரித்தல், சென்றுதேய்ந்திறுதல், நின்றுபயனின்மைஎன்பன. (நன்னூ. பாயிரம். கஉ.)

நூற்பயன்— நூலாலெய்தும் பிரயோசநம். (உ-ம்.) "அறம்பொருளின்பம்வீடடைதனூற்பயனே" (நன். கo.)

நூற்பா — 1. சிலவகையெழுத்துக்களாகிய சொற்றொடராய்ப் பலவகைப் பொருள்களை விளக்கித் திட்பநுட்ப மமைந்துவருவது. (சூ. நிக. கo: உரு.) 2. தழியிற்பிணைக்கும்பா. (ஒருகுழூஉக்குறி.)

நூற்றந்தாதி—நூறு வெண்பாவினாலேனும் நூறு கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுமொரு பிரபந்தம். (தொன். உஅரு. உரை.)

நூற்றல்—1. நூலாக்குதல். (உ-ம்.) "நிலவுநூற்றன்னகவரி" (கூர்மபு. தக்கவமி. கூசு.) 2. கெரித்தருட்டல். (கூர்மபு.பதிக.கூக.உரை.)

நூற்றுவரைக்கொல்லி—சதபொதி. (உ-ம்.) "மாற்றவர்மறப்படைமலைந்துமதில்பற்றி - நூற்றுவரைக்கொல்லியொடுநூக்கியெறிபொறியும்" (சிந்தா. நாமக. எஉ.) ஒருபடை. (சிந்தா.)

நூறல்—அழித்தல். (உ-ம்.) "சேனைவேடர் மேலடர்ந்துசீறியம்புநூறினர்" (பெரியபு. கண்ண. எஅ.)

நூறி—1. அறைந்துகொண்டு. (உ-ம்.) "மூலை பொலியாகமுருப்பநூறி" (புறநா. உரு.) 2. வெட்டி. (உ-ம்.) "அருஞ்சமந்ததைபநூறி" (புறநா. கூகூ.)

நூறு—1. ஒரெண், சதம் (சூ. நிக. அ: அக.) 2. சுண்ணம்பு. (உ-ம்.) "கோடுசுடுநூற்றினர்" (மதுரைக். சoக.) 3. நீறு. (உ-ம்.) "நூறெரடு குழீஇயின" (மலைபடு. கூள.) 4. தெரிநிலை வினைப்பகுதி.

நூறுகோடி — 1. சதகோடி, ஒரெண். 2. வச்சிராயுதம். (உ-ம்.)"திண்களிற்றின்மத்தகத்தேறிநூறுகோடியங்கையேந்தி" (சேதுபு. சீதைகுண். உஉ.)

நூறுதல் — அழித்தல். (உ-ம்.) "தேவரை வென்றவன்-நந்தநந்தமுறைமுறை நூறிஞன்" (இராமா. நாகபாச. கருகூ.)

நூறை—1. நூற்றைக்கிழங்கு. (உ-ம்.) "கா அய்க்கொண்டநுகமருஹூறை" 2. மலங்கு மீன். (1, 2-மலைபடு. ருகரு.)

நூன்முகம்—பாயிரம். (உ-ம்.) "முகவுரை பதிகமணிந்துரை நூன்முகம்- புறவுரைந்துரை புனைந்துரைபாயிரம்" (நன். க.)

நூன்முடிபு—நூன்முடிவு, படலம். (சூ.நிக. கo: உரு.)

நூனுழி—நாடா. (பிங்கல. கசுகூக.)

நூனுழிகை — நெய்தற்றொழிற்குரியதோர் கருவி. (சிந்தா.)

## நெ

நெக்கல்—உருக்கல். (உ-ம்.) "நெக்குநெக்கு நினைப்பவர்நெஞ்சுளே"(திருநாவுக்.தேவாரம்.)

நெக்கது—கெட்டது. (சிந்தா.)

நெக்கு—தெரிநிலைவினைப்பகுதி.

நெக்குடைதல்—நெகிழ்ந்துருகுதல். (வழக்.)

நெக்குதல்—உருகுதல். (வழக்.)

நெக்குரோதம்—ஆல். (வைத்தியபரிபா.)

நெக்குவிடுதல் — விண்டுடைதல். (உ-ம்.) "நெட்டிருப்புப்-பாரைக்குநெக்குவிடாப்பாறை பசுமரத்தின்வேருக்குநெக்குவிடும்" (நல்வழி. கூகூ.)

நெகல்—1. உடைத்தல். (திருக்கோ. கூக. உரை.) 2. நெகிழ்தல். (சிவதரு.)

நெகிழ்ச்சி—இளக்கம். (வழக்.)

நெகிழ்த்தல்—1. அவிழ்த்தல், கழலச்செய்தல். 2. உருக்கல். 3. நிலைகுலையச்செய்தல். 4. பிரமித்தல். (உ-ம்.) "மும்மலங்களென்னும் - வல்லியமாமனெகிழ்த்து" (ம-தி.கக.) 5. மலர்த்தல். (1, 3-ஐங்குறு.)

நெகிழ்த்துதல்—நெகிழ்த்தல். (வழக்.)

நெகிழ்தல்—1. இளகுதல். (உ-ம்.)"சேவடி நோக்கி-விரும்பியுண்ணெகிழ" (கூர்மபு. அரியய. கசு) 2. உருகல். 3. பிரிதல். (திருவாசகம். திருச்சதகம். க.) 4. மலர்தல். (சூ. நிக. ௭: ருo.)

நெகிழ்ப்பு—நெகிழ்தல். (வழக்.)

நெகிழ்பு—1. நிலைகுலையச்செய்தல். (உ-ம்.) "நாளினுநெகிழ்போடுநலனுடனிலையுமோ" (கலி. கள.) 2. நெகிழ்ந்து. (ஐங்குறு.)

நெகிழ்வு—1. பிரிவு. 2. மலர்தல்.

நெகிழ—மெலிய. (உ-ம்.) "மென்றோணெகிழவிடல்" (கலி. அசு.)

நெகிழம்—பாதச்சிலம்பு. (வழக்.)

நெகிழி—1. நெருப்புறுவிறகு. 2. ஞெகிழி. (1, 2-சூ. நிக. கக: ககரவெ. ரு.)

நெகிழிசை — வல்லெழுத்துவாராது மற்றினவெழுத்தி ஞென்ருன்முடியுஞ் செய்யுள். (தண்டி. பொ. கரு. உரை.)

நெகிழுதல்—நெகிழ்தல். (வழக்.)

நெதுதல்—1. உருகுதல். (உ-ம்)"நெகுமன்பில்லை" (திருவாச. திருச்சதக. சுo.) 2. கரைதல். (இராமா. அயோத்தியா. நகர்நீங். சுo.)

நெச்சடி—
நெச்சி— } கடுக்காய். (வைத்தியபரிபா.)

நெசவு—நெய்குதல். (வழக்.)

நெசவுகாரர்—நெய்வார். (வழக்.)

நெஞ்சம் — 1. மனம். (உ-ம்.) "ஒருநெஞ்சமொழியுருவமற்றும்" (சேதுபு. நைமிசா.உக.) 2. மார்பு. (சூ நிக. கக: ஞகரவெ. உ.) அம்சாரியை.

நெஞ்சறிவிளக்கம்—ஒரு நூல். (வழக்.)

நெஞ்சு—1. நடு. (உ-ம்.) "இஞ்சிமாகநெஞ்சு போழ்ந்து" (சிந்தா. நாம. ககச.) 2. மனம். (உ-ம்.)"நெஞ்சுறத்தந்தைபானிறுத்தி" (பாரத. குருகுல.எo.) 3.மார்பு.(சூ.நிக.கக:ஞகரவெ.உ.)

நெஞ்சுவிடுதூது — கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியராற்செய்யப்பட்ட ஒரு சித்தாந்தசாத்திரம்.

நெஞ்செரித்தல்—ஓர் நோய். (வழக்.)

நெஞ்செரிப்பு—நெஞ்செரித்தல். (வழக்.)

நெட்டம்—மிளகு. (வைத்தியபரிபா.)

நெட்டி—1. ஒரு புல்; இது: நறுக்குநெட்டி, கொடிநெட்டி, பூநெட்டி, நெரிநெட்டி, பெருநெட்டி, வயல்நெட்டியெனப் பலவகைப்படும். 2. இடை. (சூ. நிக. கக: டகரவெ. உச.) 3. நெட்டு. 4. நெட்டை; அது: யாக்கைக்குற்றத்தொன்று. (சூ. நிக. கஉ: சரு.)

நெட்டிக்கோதை—ஒரு புல். (வழக்.)
நெட்டிடை-தூரவிடம். (உ-ம்.) "நெட்டிடை நெறிகளுநிகரில்கானமும்" (சிங். பதுமை. ருக.)
நெட்டிப்பூ-கிடைச்சியிற்செய்தபூ. இதனை மாலையாக்குதலுமுண்டு.
நெட்டிமாலை—கிடைச்சுமாலை.
நெட்டில்—1. மூங்கில். (வைத்தியபரிபா.) 2. மேல்வீடு. (உ-ம்.) "அட்டிலுமிழுந்தனபுகையகிற்புகைநெட்டிலுமிழ்ந்தன" (இராமா. நகர் நீங்கு. உ0ச.)
நெட்டிலிங்க — அசோகு. (வழக்.) (வைத்தியபரிபா.)
நெட்டு—1. காம்பு. தேங்காய்நெட்டுவிட்டது. (வழக்.) 2. தள்ளுதல். 3. தெரிநிலை வினைப்பகுதி.
நெட்டுதல்—தள்ளுதல். (உ-ம்.) "வந்துழிக் காண்க"
நெட்டுயிர் — உயிர்நெட்டெழுத்து. (நன்னூல். எழுத்தியல். நெட்டுயிர்காரமும்.)
நெட்டுயிர்த்தல்-பெருமூச்சுவிடுதல். (வழக்)
நெட்டுயிர்ப்பு—பெருமூச்சு. (உ-ம்.) "கட்டுரைகூறிற்செவிக்கொளாகண்விழியா — நெட்டுயிர்ப்போடுற்றபிணம்" (நீதிநெறி. எஅ.)
நெட்டுநுப்பண்ணல்—மனத்தாலும் வாயாலும் பாட முருவேற்றல். (வழக்.)
நெட்டுரம்—நிட்டுரம். (உ-ம்.) "நெட்டுரனின்பமுறுபாக்கியங்கணிலவரமென்று" (சிவரக. சிவதன்மா. ௬.)
நெட்டெழுத்து — நெடிலெழுத்து. (வழக்.)
நெட்டை—நெடுமை. (உ-ம்.) "ஓட்டல்வாய் நெட்டைப்பேய்கள்" (திருவிளை. இந்திரன்பழி. ௬௩.)
நெடநெடெனல் — ஈரடுக்கொலிக்குறிப்பு. (சூ. நிக. ௧0: ௬௪.) உபயவோசையென்பர்.
நெடி—1. சின்வண்டு. (உ-ம்.) "நெடிக்கடிய வெங்கானடுங்கிட" (வேதாரணியபு. சோரச்சரு. அ.) [நெடில் எனவும் பாடபேதமுண்டு.] 2. வினைப்பகுதி.
நெடிசு—நெடிது. (வழக்.)
நெடித்தல்—தாமதித்தல். (ஐங்குறு. அரு. உரை.)
நெடித்து—தாமதித்து. (ஐங்குறு.)
நெடிது—நெடுங்காலம். (உ-ம்.) "உடம்புபெற்றுநெடிதுய்க்குமாறு" (வள். ௯௪௩.)
நெடிப்பு-காலநீட்சி. (உ-ம்.) "அவர்நெடிப்புறச்சானமுற்றிருந்து" (சேதுபு.பராவசு.௩எ.)
நெடியவட்டம்—பரிசை. (சூ. நிக. எ: ௧அ.)
நெடியவன்—1. நெட்டையன். 2. விட்டுணு. (உ-ம்.) "நெடியவன்கேழலாகி" (திருவாத. )

நெடியன் — 1. நெடியான். 2. விட்டுணு. (உ-ம்.) "நெடியனுன்முகனும்" (திருவிளை. அங்க. உரு.)
நெடியான்—நெட்டையன். (வழக்.)
நெடியோர்—பெரியோர். (வை. நீ. ௯௪௬.)
நெடியோன் — 1. திரிவிக்கிரமனை விட்டுணு. (உ-ம்.) "தாருவனம்"பார். 2. துளசி. 3. மூக்கிரட்டை. 4. வடிம்பலம்பநின்றபாண்டியன். (உ-ம்.) "பொலந்தார்மார்பினெடியோனும்பல்" (மதுரைக். ௬௧.) (2, 3-மலையக.)
நெடில்—1. நீளம். (சூ. நிக. அ: ௧௩.) 2. நெட்டெழுத்து. (யாப்.காரி.குறிலேநெடிலே.) 3. மூங்கில். (மலையக.)
நெடிலடி-ஐஞ்சீரடுத்துநிற்பது. யாப்-காரி. குறளிருசீரடி என்னு முதற்குறிப்புள்ளபாவிற் காண்க.
நெடிலி—ஓர் புல். (வைத்தியபரிபா.)
நெடிலெதுகை— அடிதோறுநெடிலெழுத்தெதுகையாய்வருவது. (யாப். காரி. எழுவாயெழுத்துஎன்னு முதற்குறிப்புள்ளசெய்யுளிற் காண்க.
நெடிற்றொடர்— நெட்டெழுத்தை யீற்றுக்கயலெழுத்தாகத்தொடர்ந்துவருங்குற்றுகரவீற்றுமொழி. (நன்னூ. எழுத்திய. ௯௧.)
நெடின்மோனை—அடிதோறு முதலெழுத்து வருவது. யாப். காரி. எழுவாயெழுத்துஎன்னு முதற்குறிப்புள்ளசெய்யுளிற் காண்க.
நெடு—நெடுமை. (வழக்.)
நெடுக்கு—நீட்சி. (வழக்.)
நெடுகல்— } 1.உயர்தல். 2.நீளல்.(உ-ம்.)
நெடுகுதல்— } "உம்பர்பொதிர்த்திட நெடுகுமூக்கமானும்" (தணிகை. திருநாட். ௧௧௬.)
நெடுங்கணக்கு — 1. அரிச்சுவடி. (உ-ம்.) "ஒவறுநெடுங்கணக்கோதிடுஞ்சிறுர்" (சேதுபு. கந்தமா. எரு.) 2. பெருந்தொகை.
நெடுங்கழுத்தல் — ஒட்டகம். (பிங்கல. உ௬௧௧.)
நெடுங்காழ்க்கண்டம் — நெடிய குத்துக்காலுடனேபண்ணின பலநிறத்தார்கூறுபட்ட மதிட்டிரை. (உ-ம்.) "நெடுங்காழ்க்கண்டங்கோலி. (மு-பா. ௬௪.)
நெடுங்கிள்ளி — ஒரு சோழகுலத்தவன். (புறநா.)
நெடுங்கோணி—ஒட்டகம். (வழக்.)
நெடுஞ்செழியன் — ஒரு பாண்டியன். (சிலப்பதி.)
நெடுத்தல்—நீளுதல். (வழக்குப்போலும்.)
நெடுந்தகை — பெருங்குணத்தையுடையவன். (உ-ம்.) "நீறுபட்டேயொளிகாட்டும்பொன்

மேனிநெடுந்தகையே" (திருவாச. நீத்தல் விண். ௧௧.)

**நெடுநல்வாடை**—ஒரு நூல். (பத்துப்பா.)

**நெடுநீர்**—1. தாமதம், விரைந்துசெய்வதனை நீட்டித்துச்செய்யுமியல்பு. (உ-ம்.) "நெடுநீர் மறவிமடிதுயிலொன்குங்-கெடுநீரார்காமக்கலன்" (வள். ௬0௫.) 2. நெடியகடல்.

**நெடுப்பம்**—நீளம். (வழக்.)

**நெடுப்பினை** — வங்கமணல். (வைத்திய பரிபா.)

**நெடுப்பு**—நீளிப்பு. (வழக்.)

**நெடும்பா**—ஆடாதோடை. (வைத்தியபரி.)

**நெடுமாறநாயனர்**—அறுபத்துமூவரி லொருவர். (பெரியபு.)

**நெடுமி** — 1. நீண்டது. 2. நீளியபெண்.

**நெடுமை** — 1. உயரம். (வழக்.) 2. நீளம். (சூ. நிக. அ: ௧௬.) 3 பெருமை. (உ-ம்.) "நெடுங்குவலையமுங்கைக்கொண்டு" (கோயிற்பு. இரணிய. ௧௬.) (சிந்தா.)

**நெடுமொழி**—1. தன்மேம்பாட்டுரை, வஞ்சினம். (உ-ம்.) "நெடுமொழிமறந்தசிறுபேராளர்" (புறநா. ௪௭அ.) 2. புகழ்ச்சி. (புறப்பொ. வெ.)

**நெடுமொழிவஞ்சி**—பகைவர்முன்னே தன் னாண்மைசொல்வது. (வள். ௭௭௧. பரி.)

**நெடுவல்**—நீட்சி. (வழக்.)

**நெடுவாய்**—உள்ளான்மீன். (வழக்.)

**நெடுவாலூடகம்**—ஒரு மீன். (உ-ம்.) "ஊடகத்துடன்கூடைசேனபவியுற்றநெடு வாலூடகம்" (பறுளைப்பள். ௭௪.)

**நெடுவாற்றிறல்**—ஒருமீன். ஒரு குழூஉக் குறி.

**நெடுவிரல்** — 1. ஆடாதோடை. 2. நாய்ப் பாகல். (1, 2-வைத்தியபரிபா.)

**நெடுவேர்**—சாயவேர். (வைத்தியபரிபா.)

**நெண்டல்**—நொளிதல், இளைத்தல். நொண்டலென்பது நெண்டல் என வந்ததென்பர்.

**நேத்தப்பலகை** — வல்லுப்பலகை. (கலி. ௯௪. உரை.)

**நேத்தமண்டலி**—ஒருவகைத்தேள், இரத்த வேர்வையுண்டாக்கிவருத்துவது. (வைத்திய பரிபா.)

**நெத்திலி**—ஒருவகைமீன். (வழக்கு.)

**நெம்புதல்**—கிளப்புதல். (வழக்.)

**நெமிசந்தனு**—திமிசு, வேங்கை. (வைத்திய பரிபா.)

**நெய்** — 1. சித்திரைநாள். (சூ. நிக. ௧: ௭௬.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. தேன். (உ-ம்.) "வரைமிசைமேற்றொடுத்தநெய்க்கணி றூஅல்" (கலி. ௪௨.) 4. நறுநெய்; இது: பஞ்சகௌவியத்தொன்று. (உ-ம்.) "பாலொடுநெய் யுமுண்டியுநிற்றலுமுண்டு" (கந்தபு. ததீசியுத். ௬௯.) 5. நிணம். (உ-ம்.) "நெய்திகழ்வேல்" (கூர்மபு. தக்கனைச்சபித். ௪.) 6. புழுகு. (உ-ம்.) "நெய்யிடைநீவி" (கலி. ௨௨.) புழுகுநெய்; அது: கூந்தற்கணிவது என்பர். (சிலப்பதி.)

**நெய்க்கடல்** — சத்தசமுத்திரத்தொன்று. (உ-ம்.) "சிற்றெறும்பு"பார்.

**நெய்க்கூராணி** — ஐங்கோலம். (வைத்தியப. கருப்.)

**நெய்க்குறி**—தேரையர்செய்தவொரு நூல். (அபிதானகோ.)

**நெய்க்கொட்டான்** — பூவந்திமரம். (வைத்தியபரிபா.)

**நெய்கை**—நெய்தல். (சிந்தா.)

**நெய்ச்சட்டி**—1. ஒரு கீரை. (வைத்தியமூ. அக.) 2. செங்கழுநீர். 3. பவளக்குன்றிமணி. (2, 3-வைத்தியபரிபா.)

**நெய்ச்சிட்டி**—சிற்றிலைச்செடி. (வைத்திய பரிபா.)

**நெய்த்தல்** — 1. கொழுத்தல். 2. நேயப் பசையுடனிருத்தல்.

**நெய்த்துடுப்பு**—ஆகுதிவிடுந்துடுவை. (சூ. நிக. ௭: ௬௪.)

**நெய்த்தோர்**—1. இரத்தம். (உ-ம்.) "நெய்த் தோரிடையருதொழுகுங்கோட்டுச்"(நைடதம். போர்புரி. ௨௧.) 2. ஒதியமரம். (வைத்தியபரி.)

**நெய்தல்** — 1. ஆடைமுதலியநெய்தல். 2. இரங்கலாகிய உரிப்பொருள். (மதுரைக். ௬௨௫. உரை.) 3. ஐந்நிலத்தொன்று; அது: கடலுங்கடல்சார்ந்த இடமும். (சூ. நிக. ௧௧: யகரவெ. ௧0.) 4. ஒரு பூண்டு. (உ-ம்.) "கொட்டியுமாம்பலுநெய்தலும்போலவே" (வாக்குண்டாம். ௧௭.) 5. குவளை. (பத்துப்பா.) 6. சாப் பறை. (உ-ம்.) "ஓரிநெய்தல்கறங்க" (புறநா. ௧௧௪.) 7. செங்கழுநீர்க்கிழங்கு. (உ-ம்.)"அமிர்தை"பார். 8. பேரெண்ணிலொன்று.(பரிபாட.)

**நெய்தலுரிப்பொருள்** — இரங்கல், இரங்க னிமித்தம். (நம்பியக அகத்தி. ௨௫.)

**நெய்தற்கருப்பொருள்** — நெய்தநிலவிளை பொருள். (நம்பியக. அகத்திணை. ௨௪.)

**நெய்தற்கடவுள்** — வருணன். (பிங்கல. ௬0௬.)

**நெய்தன்முதற்பொருள்** — கடலுங் கடல் சார்ந்தவிடமுஞ் சிறுபொழுதாயவெற்பாடும்பெரும் பொழுதாறும். (நம்பியகப். அகத்திணை. ௬, ௧௭, ௧௮.)

நெய்தனிலத்தலைவன் — சேர்ப்பன். (பிங்கல. சுOஉ.)

நெய்தனிலத்தியாழ்—விளரியாழ். (நம்பியக.)

நெய்தனிலத்தீனீர்—உவர்நீர். (நம்பியக.)

நெய்தனிலத்தூர்—பாக்கம். (பிங்கல. ருகூஅ.)

நெய்தனிலப்பறவை — கடற்காக்கை. (நம்பியக.)

நெய்தனிலப்பறை — சாப்பறை. (பிங்கல. ருககூ.)

நெய்தனிலப்பெண்— அளத்தி, நுளைச்சி, பரத்தி. (பிங்கல. சுOச.)

நெய்தனிலம்—ஐந்நிலத்தொன்று.

நெய்தனிலமரம் — அடம்பு, தாழை, புன்னை, முள்ளி. (வைத்தியபரிபா. நம்பியக.)

நெய்தனிலமாக்கடொழில் — கடலாடல், மீன் உப்புப்படுத்தன் முதலியன.

நெய்தனிலமாக்கள் — அளவர், நுளையர், பரதவர். நெய்தற்றலைவன்முதலாகநெய்தநிலப் பெண்ணீறாகக்கூறியனவற்றிற்குதாரணம். (நம்பியக. அகத்திணை. உச.)

நெய்நெட்டி—சம்பம்புல். (வழக்.)

நெய்ப்பீர்க்கு—நுரைப்பீர்க்கு. (வைத்தியபரிபா.)

நெய்ப்பு—1. கொழுப்பு. 2. புல்லாமணக்கு. (வைத்தியபரிபா.)

நெய்ப்புச்சுவரி—மான்செவிக்கள்ளி. (வைத்தியபரிபா.)

நெய்பால்பெருதந்துறை — பெண்ணைநதி; இது: "உருகுங்கமழ்நெய்பாவிருபாலுங்கரையொத்துப்-பெருதந்துறை" என்னும், (பாரத. அருச்சுனன்றீர்த். கக-ம்செய்யுளாற் பெறப்படும். துறை-நதி.

நெய்ம்மிதி—நெய்யால்மிதித்துத் திரட்டப்பட்ட கவளம். (உ-ம்.) "நெல்லுடைக்கவளமொடுநெய்ம்மிதிபெறாஅ" (புறநா. சச.)

நெய்மீன்—வெள்ளிறால்மீன். (வழக்.)

நெய்யரி—பன்னாடை. (உ-ம்.) "அன்னமாவேமண்ணொடுகிளியே-யில்லிக்குடமாடெருமைநெய்யரி-அன்னர்" (நன். கூஅ.)

நெய்யல்—நெய்குதல். (வழக்.)

நெய்யாடுதல்— நெய்பூசிமுழுகுதல்; இது: பிள்ளைப்பேற்றுச்சடங்குளொன்று. (உ-ம்.) "மையாடியதடங்கண்ணளொருநன்மகவுயிர்த்து-நெய்யாடினள்" (வெங்கைக்கோவை. கூகO.)

நெய்வார்—நெசவுகாரர், காருகர். (சூ. நிக. உ: கூஉ.)

நெய்விழா—நெய்யாடுதல். (திருவிளை. தடாதகைப்பிரா. கூO.)

நெய்வு—நெசவு. (வழக்.)

நெரி—1. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "நெரிகொடும்புருவம்" (கூர்மபு. தக்கன்வமி. சுO.) 2. நெரிவு. 3. புடைவைமூரிப்பு, மடிப்புமாம்.

நெரிசல்—நெரிவு. (வழக்.)

நெரிஞ்சி—நெரிஞ்சில். (வழக்.)

நெரிஞ்சில் — ஒரு முட்பூண்டு; இது: தசமூலத்தொன்று. (வழக்.)

நெரித்தல்—1. நசுக்குதல். (உ-ம்.) "வளைக்கரநெரித்து" (திருவிளை. விருத்த. உசு.) 2. நொறுக்குதல். (வழக்.) 3. வருத்தல். (சூ. நிக. க: கூச.)

நெரிதால்—நெரிதல். (வழக்.)

நெரிதல் — 1. சாய்தல். (சூ. நிக. க: உக.) 2. தகர்தல். (வழக்.) 3. நசுங்கல். (உ-ம்.) "செழும்பரம்புதோறும்படிந்துநெரிந்தவே" (அரிச்ச. நாட்டுச். கூச.) 4. நொறுங்குதல்.

நெரிநெட்டி—சம்பம்புல். (வைத்தியபரிபா.)

நெரிப்பு—நெரிதல். (வழக்.)

நெரிபிடித்தல் — புடவைகொய்துசேர்த்தல். (வழக்.)

நெரிவு—நெரிதல். (வழக்.)

நெருக்கடி—இக்கட்டு. (வழக்.)

நெருக்கம் — 1. இடைஞ்சல். (வழக்.) 2. நெருங்குதல். அம்-தொழிற்பெயர்விகுதி.

நெருக்கல் — நெருக்குதல். (உ-ம்.) "நேரடர்ந்துநெருக்கலின்" (அரிச்ச. நகரச். கூ.)

நெருக்கிடை—இடைவெளியின்மை. (வழக்.)

நெருக்கு — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நெருக்கம். (வழக்.)

நெருக்குதல்—1. அடரச்செய்தல். 2. ஒடுக்குதல். 3. நசுக்கல். (1, 2, 3-வழக்.)

நெருங்கல்— } செறிவு. (சூ. நிக. அ: கச.)
நெருங்குதல்— }

நெருஞ்சி—நெருஞ்சில். (வழக்.)

நெருஞ்சின்முள்—1. ஓர்கருவி. இதற்குக் கப்பணமென்று பெயராம். (சூ. நிக. கக. பகரவெ. க.) 2. நெருஞ்சிலின்முள்.

நெருஞ்சில்—நெரிஞ்சில்; அது: கொடிநெருஞ்சில், செப்புநெருஞ்சில், பெருநெருஞ்சில், யானைநெருஞ்சில்எனப்பலவகைப்படும். (உ-ம்.) "அமுக்கிரி"பார். (தைல. தைலவ. சஉ.)

நெருடல்—1. இழைபொருத்தல். 2. நிமிண்டல். (1, 2-வழக்.)

நெருடு—1. இழையின்பொருத்து. 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நிமிண்டுகை. (வழக்.)

நெருடுதல்—நெருடல். (வழக்.)

நெருநல்— முன்னைநாள். (உ-ம்.) "நெருநலுளனொருவனின்றில்லையெனும் - பெருமையுடைத்திவ்வுலகு" (வள். கூகூசு.)

நெருநை—நெருநல், நேற்று. (உ-ம்.) "நெருநையி-னின்றுநன்றெனையன்" (கலி. கூக.)(ஐங்குறு.)

நெருப்பு—1. அக்கினி. (உ-ம்.) "நெருப்பெழும்படிபிசைந்து" (கூர்மபு தக்கன் வேள். ௬௯.) 2. குற்றம் (சிந்தா.)

நெருப்புக்கல் — காடிக்காரம், ஒருசரக்கு. 2. தீத்தட்டிக்கல். நெருப்புப்பெட்டிவருவதற்கு முன் இதனைச் சனங்களுபயோகமாகச் செய்தார்கள்.

நெருப்புக்கோழி—தீக்கோழி; இது: மலையாளதேசத்திலே மிகுதியாயுண்டென்பர்.

நெருப்புமழை—அக்கினிமழை சத்தமேகங்களி லொன்று பொழியுமென்பர். (பிங்கல. எக, எஉ.)

நெரேலெனல்—ஒலிக்குறிப்பு.(சூ.நிக. க0: சஅ.)

நெல்—1. ஒரு தானியம்; அஃது: யவைமுதல் செந்நெல் ஈறாயுள்ள பதினேழு வகைப்படும். (சிவதரு.) [இதன் உமியைக் கழற்றுதற்கு முன்னே நெல்லென்றும் கழற்றியபின் நெல்லரிசியென்றும் சொல்லுவார்; இது: தென்னிந்தியா, இலங்கைமுதலாமிடங்களில் வசிப்பவருக்குப்பிரதான போசனத்துக்கானது.] 2. நெல்வாகை. (மலைப.).

நெல்லி—ஒரு மரம். (சூ. நிக. ச: உசு.)

நெல்லிக்கந்தகம்— } ஒரு கந்தம்.
நெல்லிக்காய்க்கந்தகம்— } (வைத்தியபரி)

நெல்லிமுளி—நெல்லிக்காய்வற்றல். (வைத்தியபரிபா.)

நெல்லினூர்—சாலியூர். (உ-ம்.) "சீர்சான்றவுயர்நெல்லி – னூர்கொண்டவுயர்கொற்றவ" (மதுரை. அஎ, அஅ.)

நெல்லு—சாலி. உகரம்-சாரியை.

நெளி—1. ஒருவகைமோதிரம்; இது: மாதர் கைவிரலிலிடுவது.(வழக்.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நெளிதல்.(உ-ம்.)"கூர்வார்நெளிதர" (திருவிளை. நாகமெ. கஎ.)

நெளிசல்—வளைதல். (வழக்.)

நெளித்தல்—வளைத்தல். (வழக்.)

நெளிதம்—இசை. (வழக்.)

நெளிதல்—1. புரளுதல். (உ-ம்.) "நெளியராக்குருளை" (திருவிளை.இந்திரன்பழிதீ.எகூ.). 2. வளைதல். (வழக்.)

நெளிப்பு—நெளித்தல். (வழக்.)

நெளிய—வருந்த. (புறநா.)

நெளியல்—வளைவு. (வழக்.)

நெளிர்— } எடுத்தலோசை. (சூ. நிக. க0:
நெளிர்தல்— } சரு.)

நெளிவு—வளைவு. (வழக்.)

நெற்குறி — நெற்கொண்டுசொல்லுமொரு சோசியம்; இது: குறத்தியர்கள்சொல்வர்.(திருக்கோவை. குயிலிதன்றே என்னு முதற்குறிப்புள்ளசெய்யுளிற் காண்க.)

நெற்கூடு — நெல்லைப் பொதிந்துவைத்த கூடு. (பெரியபு. திருக்குறிப்பு. உஅ.)

நெற்சப்பி— ஒரு புல்; இது: நெற்பயிரைக் கெடுப்பதென்பர். (வழக்.)

நெற்பயிர்—நெல்விளையும் பயிர். (வழக்.)

நெற்போர்—நெற்குவை. (சூ. நிக. ச: ௬௯.)

நெற்றி—1. உச்சி. (உ-ம்.) "நீளுறுமேருவினெற்றிமுற்றிய" (இராமா. சடாயுகாண். எ.) (சிந்தா.) 2. தலை. (உ-ம்.) "மூகிற்றழீஇயசும்பருதநெற்றிய" (சிந்தா. நாமக. எக.) 3. நுதல். (உ-ம்.) "நமதுநெற்றியுறுநாட்டவனல்கேட்டழிகுவான்" (சிவரக. தாருக. உஉ.) 4. படைவகுப்பு, முன்னணி. (உ-ம்.). "ரனியநெற்றியிற்சார்வலென்றனன்" (கந்தபு. அசுரர்யா. ௬.) 5. முகம். (உ-ம்.)"சோலைநெற்றியிற்றொடுத்த" (கூர்மபு. அட்டமூ. கஅ.)

நெற்றிக்குறி—திலகம். (சூ. நிக. சு: கசு.)

நெற்றிச்சுட்டி—ஓராபரணம். இதனை நிகண்டிற் சுடிகையென்பர்.

நெற்றிச்சுட்டு—மகளிரணிதற்குரியதொன்று. (சிந்தா.)

நெற்றிப்பட்டம்—ஓராபரணம். (உ-ம்.) "முன்னேனெடுந்துளைக்கைபிடித்தேறிநெற்றிப்பட்டத்-தலைவி" (சேதுபு. கடவுள்வா. ரு.)

நெற்றிமாலை—ஒருவிதமாலை. (சிந்தா.)

நெற்றியிற்கல்லுவைத்தல் — ஓராக்கினை. (திருவிளை. பரிநரியாக்கிய. சஎ.)

நெற்று—1. உலர்ந்தபழம். (உ-ம்.) "நெற்றுப்பசுங்கதிர்ச்செவ்வேனல்காக்கின்ற" (கந்தரல. ருஅ.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

நெற்றுதல்—இடறுதல். (வழக்.)

நெறநெறெனல் — ஈரடுக்கொலிக்குறிப்பு. (சூ நிக. க0: சக.)

நெறி—1. அறல். (உ-ம்.) "நெறிமருப்பெருமை". (சிந்தா. நாமக. கரு.) கருமணல்வரி. 2. ஆணை. (உ-ம்.) "குடபுலவரசர்கணெறிசெய்து" (திருவிளை. அங்கச்சுழி. உ0.) 3. ஒழுங்கு. (உ-ம்.) "நெறியேமுடித்தலை" (வாண. சு.) 4. நீதி. (சூ. நிக. கக: றகரவெதுகை.) 5. முடக்கம். (உ-ம்.) "நெறிகொள்வரிக்குடர்" (புறநா. கசு0.) 6. முறை. (உ-ம்.) "நெறிவிண்டபுலைமகளாய்" (பிரமோத். ௬: உஉ.) 7. வழி. (உ-ம்.) "நின்றிடைவிடாதுநெறிசென்றுறநெருக்கி" (இராமா.மந்திரப்.ருரு.)

நெறிக்கல்—சுக்கான்கல். (வைத்தியபரி.)
நெறிக்கோரை — ஒரு புல். (வழக்குப்போலும்.)
நெறித்தல் — 1. நெளித்தல். (வழக்.) 2. மயிர்சுருளல். (உ-ம்.) "நெறிசுரிபூங்குழல்" (யாப். காரிகை. செய். ௬.) 3. முறிப்புக்கொள்ளல்.
நெறிநீர்—கடல். (சிந்தா.)
நெறிநெட்டிக்கோரை—நெறிக்கோரை.
நெறிப்பு—நெறித்தல். (வழக்.)
நெறிமை—நீதி. (உ-ம்.) "நெறிமையினுன்காய் வருநிரையசையே. (யாப். காரிகை. உறுப். உ. உரை.)
நெறியறுவகை—ஆறத்துவா. (சி. சி. ௯: ௬.)
நெறியிலார்—1. கீழ்மக்கள். 2. திகேடர்.
நெறுக்கிடுதல்—நெறுக்கெனல். (வழக்.)
நெறுக்கெனல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)
நெறுநெறுத்தல்—நெறுநெறுப்பு (வழக்.)
நெறுநெறுப்பு — ஈரடுக்கொலிக்குறிப்பு. (வழக்.)
நெறுநெறெனல் — ஈரடுக்கொலிக்குறிப்பு. (உ-ம்.) "நெறுநெறெனக்கொடுமிலவழையிற்புக" (பாரத. திருட்டி. ௧௧௧.)
நென்னல்—நேற்று. (உ-ம்.) "மதுகைவாளமர்க்குநென்னல்வந்தழைகூவிப்போன" (திருவிளை. அங்கம். ௧௫.)

## நே.

நே — அன்பு. (உ-ம்.) "நேஎநெஞ்சின்" (புறநா. ௬.)
நேசநாயனர்—அறுபத்துமூவரிலொருவர். (பெரியபு.)
நேசம் — 1. அன்பு. (உ-ம்.) "நேசர்" பார். 2. விருப்பம். (உ-ம்.) "நேசமும்வைத்தனையோ" (திருவாச. திருவெ. உ.)
நேசர் — அன்புடையவர். (உ-ம்.) "செய்யசிவநேசர்தாம்வைகறையிலெழுந்து" (சிவரக. நந்திமனு. ௧௫.)
நேசி — 1. அன்புள்ளான், அன்புள்ளவள். 2. தெரிநிலைவினைப்பகுதி.
நேசித்தல்—அன்புவைத்தல். (உ-ம்.) "நேசித்தருநூன்முறை" (சேதுபு. சங்கர. ௪௬.)
நேசிப்பு—நேசித்தல். (வழக்.)
நேடல்—நேடுதல். (சூ. நிக. ௧: ௬௬.)
நேடு—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. நேடுதல். (உ-ம்.) "நேடருமுன்னில்வேறுநேயத்தால்" (சேதுபு. இராமநாத. ௧௯.)
நேடுதல்—தேடல். (உ-ம்.) "சினகரமொருவிப்போகுவான்வழிகநேடினேன்" (பிரமோத். ௭: ௧௧.)
நேத்திரகாரன்—சிவலோகத்திலேதக்ஷணதிசையோலக்கஞ்சேவிக்கும் பதினெட்டுக்கணேசரிலொருவன். (வி-ணி.)
நேத்திரகரி—மணிபூரகத்திற்குரிய பத்துப்பதுமதளங்களிலொன்றிலிருக்கு மதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)
நேத்திரகாசம்—ஒருநோய். (வைத்தியமூ. அச.)
நேத்திரபடலம் — கண்ணோயினொன்று. (வழக்.)
நேத்திரம்— 1. கண். (உ-ம்.) "எரிநேத்திரமிந்துவெழுங்கதிர்நோக்கமென்னுந்திரிநேத்திர" (சேதுபு. அமுததீ. ௧௭.) 2. பட்டாடை. (உ-ம்.) "நேத்திரமொருமூன்றவற்றாலுறுநேத்திரமடவார்" (சிவரக. தேவிகாட்டிய. ௧௪.) 3. (சிவாகமங்களிற்கூறியபடி.) பன்னிரண்டாவது மந்திரம். (சி. சி. அ: ௯. மறை.)
நேத்திரவாயு—ஒருவாயு. (வழக்.)
நேத்திராரி — கள்ளிமரம். (வைத்தியபரிபா.)
நேதா — நடத்துபவன். (உ-ம்.) "நினைந்தளித்துயிரியற்றுநேதாவாகி" (வேதாரணிய. பிரவர. ௬.)
நேதி — 1. இதுவன்றெனல், இப்படியன்றெனல். (சி. சி. ஞா. ) 2. நியதி. (உ-ம்.) "இலவிதழ்கோதிநேதிமதகலையாரவார" (திருப்பு. ௬௧௬.)
நேதித்தல் — அல்லவென்றுதள்ளுதல். (த. நி. போ.)
நேபாலிகை—ஒரு பாஷாணம். (வைத்தியபரிபா.)
நேபாளம்— 1. ஒரு நச்சுமரம், நேர்வாளம் என்பர். (வைத்தியபரிபா.) 2. தேயமைம்பத்தாறினொன்று. (வழக்.)
நேம்பல்—அரிசிமுதலியவற்றைப்புடைத்துகல்லாய்தல். (வழக்.)
நேயகம்—நியமம். (வழக்.)
நேமநம் – நியமநம். (வழக்.)
நேமம்—1. நியமம். 2. வேர். (வைத்தியபரி.)
நேமி—1. கடல். 2. காலசக்கரம். (உ-ம்.) "அகில்கொண்டகொள்ளிவட்டமாருயிர்மேயுநேமி" (சிந்தா. காந்த. ௬0௬.) 3. சக்கரம். (பத்துப்பா.) 4. சக்கரவாகப்புள். 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. தேருருள். (உ-ம்.) "நேர்கொணெடுவரைநேமியிற்றொடுத்த" (மலைபடு. உ௯௭.) 7. பூமி. 8. மூங்கில். (சூ. நிக. ௭: ௧௬.) 9. வட்டம். (1,3,4,7,9-சூ.நிக.௧௧.மகரவெ. ௭.)

நேமிசந்தனு—வேங்கை. (மலையக.)

நேமிசந்திரன்—சைநத்திற் சொல்லப்படும் இருபத்துநான்கு தீர்த்தகரிலொருவன். (த. நி. போ. கரு.)

நேமித்தல்—நியமித்தல். (வழக்.)

நேமிநாதம் — ஓரிலக்கணநூல். (உ - ம்.) "தொல்காப்பியக்கடலிற்சொற்றீபச்சுற்றளக் கப்-பல்காற்கொண்டோடும்படவென் பட-பல் கோட்டுக் - கோமிகாமற்புலனைவெல்லுங்குண வீர-நேமிநாதத்தினெறி" (நேமிநாதத்திறுதி யிற்காண்க.

நேமிநாதன்—1. அருகன். (சூ. நிக. க: ௬௦.) 2. திருமால். (சூ. நிக. க: கஉ.)

நேமிப்புள்—சக்கரவாகப்புள். (சூ. நிக. கக. மகரவெ. எ.)

நேமிவநம்—நைமிசாரணியம். (உ ம்.) "பராசரனுர்செல்வனருட்பெறுதனேமிவநத்தவர்க் கருள்செய்வானே" (சிவரக. விசையை. ௬௬.)

நேயம்—1. அன்பு (உ - ம்.) "நன்னேயமூடன்பூசிப்போர்" (சிவரக. நந்திநமனு. கச.) 2. எண்ணெய். (உ - ம்.) "ஆமலகி"பார். 3. நிலப்பனை. (வைத்தியபரிபா.) 4. நெய். (சூ. நிக. கக: யகரவெ. க.)

நேர்—1. உடன்பாடு. (திருவிளை. வெள்ளியம்பலத். உரு.) 2. உவமை. (உ-ம்.) "தன்னேரில்லாதசிவன்றனை" (சிவரக. நந்திகேசரநமனுக்கு. கச.) 3. எதிர். (திருவிளை. மூர்த்திவி. கச.) 4. ஒழுங்கு. (வழக்.) 5. நீளம். நேர்பு என்பதில் பு-விகுதிதொக்குநின்றது. (சூ. நிக. அ: க௬.) 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. நேரசை. (உ-ம்.) "குறிலேநெடிலே......நேர்நிரையென்றறி"(யாப்.காரிகை. உறுப்.உ.) 8. பாதி. (வழக்.) 9. முன். (உ-ம்.) "நேரேவுதலும்" (கோயிற்பு. பதஞ்சலி. ௬உ.)

நேர்கட்டி—களபக்கூட்டாறினென்று.(சிந்தாம. காந்தருவத. சஉ.)

நேர்கல்லேன்—ஒவ்வேன். (ஐங்குறு.)

நேர்ச்சி — 1. சிநேகம். (நன்னூல். பெயரியல். நான்காம்வேற்றுமைச் சூத்திரவுரையிற் காண்க.) 2. நேர். (வழக்.)

நேர்ச்சை—நேர்ச்சி.

நேர்த்தி—1.சிறப்பு.2.நேருதல்.(1, 2-வழக்.)

நேர்தல்—1. அங்கீகரித்தல், உடன்படல். (உ - ம்.) "மகிழ்வுடனுங்கவைநேரா" (கூர்மபு. அரியய.அ.) 2. ஈதல்; இது: சாமிக்குநேர்ந்தது. 3. எதிர்வரல். (உ - ம்.) "எங்குந்தேடி, நின்றனைக்காணுதிங்குநேர்ந்தனம்யாங்களென்றுர்" (திருவிளை. அங்கம். உக.) 4. ஒப்பாதல். (இராமா. திருவவதார. எக.) 5. கிடைத்தல். (உ-ம்.) "நிலையிலாநீர்மையாக்கநேர்ந்துழி" (சேதுபு. திருநாட். உக.) 6. சந்தித்தல், நீண்டுதலுமாம். (பத்துப்பா.) 7. வேண்டல். 8. சம்பவித்தல். (2, 6, 7, 8-வழக்.)

நேர்திறம் — 1. பாலையாழ்த்திறம் ஐந்தனுளொன்று. (சிலப்பதி.) 2. முல்லையாழ்த்திறம். (1, 2-சூ. நிக. க௦. ௬௬, ௬ச.) துக்கராகம்என்பர். பிங்கலத்தில். க௬௪௬.)

நேர்ந்தும்—நிச்சயித்தும். (புறப்பொ.)

நேர்நந்து—கல்மதம். (வழக்.)

நேர்நேட்டி—ஒரு பூடு. (வழக்.)

நேர்ப்பு—ஒத்து. (பரிபாடல்.)

நேர்படல் — 1. உடன்படல். (வழக்.) 2. கிடைத்தல். (உ - ம்.) "இல்லார்க்குக்கிழியீடு நேர்பட்டாலெனு" (திருவிளை. விருத்த. கச.)

நேர்படுதல் — 1. இணங்குதல். 2. சந்தித்தல். (1, 2-வழக்.)

நேர்பாடு—1. நீதி. (உ-ம்.) "கோனைநேர்பாடாயிருந்தான்" 2. நேர். (1, பாரத. சூது. உஉஎ.) (2. வழக்.)

நேர்பு—1. ஒன்றிப்பு. 2. குற்றுகர முற்றுகரங்களோடு நேரசை ஒருசொல்விழுக்காடுபடவிசைந்துவருவது. (உ-ம்.) "நிரைபு"பார். 3. நீளம். (சூ. நிக. அ: க௬.)

நேர்மை-1.இணக்கம்.(உ-ம்.)அவனுக்குமிவனுக்கு நேர்மையில்லை. 2. செவ்வை. 3. நுண்மை. (ஐங்குறு.) (1, 2, 3-வழக்.)

நேர்வாய்க்கட்டளை—மாடத்தின்கட் சாலேகம். (உ - ம்.) "நேர்வாய்க்கட்டளை திரியாது" (நெடுநல். சுஉ.)

நேர்வாளம்—நேர்வாளக்கொட்டை. (வைத்தியபரிபா.)

நேர்வான்—சித்திரைநாள்.(பிங்கல. உருஉ.)

நேர்வித்தல்—உடன்படுவித்தல். (ஐங்குறு.)

நேர்வு — 1. உடன்பாடு. 2. எதிர்தல். 3. கூடுதல். 4. சம்பவிப்பு. (1, 2, 3, 4-நேர்தற்குரியபொருளை இதற்குரைக்க.)

நேரா—ஒருவமைச்சொல். (நன்னூ. பொதுவிய. கசு.)

நேரசை—குற்றெழுத்தேனு நெட்டெழுத்தேனுந்தனித்தும் ஒற்றடுத்தும்வருவது.(உ-ம்.) "நெடில்குறிறனியேநின்றுமொற்றடுத்தும்-நடைபெறுநேரசைநால்வகையானே" (யாப். காரி. சு.)

நேரசைக்கலித்துறை—நேரசையாய்த் தொடங்குங் கலித்துறை.

நேரடி—அளவடி. (உ - ம்.) "நாலொருசீர்-அறைதருகாலையளவொடுநேரடி" (யாப். காரிகை. உறுப். க.)

**நேரம்**—காலம். 2. சமயம். (உ-ம்.) "ஆண்டொருபத்துடனாறுநிரம்பியதந்நேரம்" (சேதுபு. தீர்த்தம். கஅ.)

**நேரல்**—1. உடன்பாடு. (சூ. நிக. க: ருகூ.) 2. நேர்தல், ஒத்தலென்பதுபொருள்.

**நேரலர்**-பகைவர். (உ-ம்.) "நேரலர்வணங்கியேத்த" (கூர்மபு. அந்தகா. அ.)

**நேரார்**—பகைவர். (உ-ம்.) "நேரார்தம்மைக் கொலைகண்டுமெகிழாமல்" (பாரத. கிருட்டிணன்றூ. உக.)

**நேராளி**—நேருள்ளவன். (வழக்.)

**நேரி**-சோழதேயத்தோர்மலை. (உ-ம்.) "நேரிவெற்பன்" (சூ. நிக. உ: கக.)

**நேரிசைச்சிந்தியல்வெண்பா** — நேரிசைவெண்பாப்போலஇரண்டாமடியினிறுதிதனிச்சொற்பெற்றுநடந்து மூன்றாமடியினால் முடிவது; (உ-ம்.) "நேரிசையின்னிசைபோலநடந்தடிமூன்றின்வந்தால் நேரிசையின்னிசைச்சிந்தியலாகும்"(யா.காரிகைசெய்யு.எ.)

**நேரிசையாசிரியப்பா**—இறுதியடிக்கு அயலிலுள்ள அடியானது மூன்றுசீருடையதாக வருவது. (யா. காரிகை. செய்யு. கஉ. உரை.)

**நேரிசையோத்தாழிசைக்கலிப்பா**— தரவு ஒன்றும், தாழிசைமூன்றும், தனிச்சொல்லுஞ் சுரிதகமுமாக முறையே பொருந்திவருவது. (யா. காரிகை. செய்யு. கங. உரை.)

**நேரிசைவெண்பா**—முன்னொன்றும் பின்னொன்றுமாக இரண்டு குறள்வெண்பாவாய், நடுவே முதலுக்குஒத்த எதுகையுடைய தனிச்சொல்லிற்றல் அடிநிரம்பிச்செப்பலோசை வழுவாது இரு விகற்பமாகவும் ஒரு விகற்பமாகவும் வருவது; இது: இருகுறணேரிசைவெண்பா இருவகைப்படும். (யா. காரிகை. செய்யு. கூ. உரை.)

**நேரிடுதல்**—1. எதிர்த்தல். 2. சம்பவித்தல். (1, 2-வழக்.)

**நேரியது**—நேரானது. (உ-ம்.) "நெல்லுக்கு நேரியதபுல்" (வழக்.)

**நேரியல்** — மிளகு. (பெரும்பாண. எஅ. உரை.)

**நேரியன்**—1. அணுவோரண்டமாம்படி அதிசூக்குமமாயுள்ளவன். (சிவஞானசி. அ: உஅ. உரை.) 2. சோழன், நேரிமலையுடையவன். (சூ. நிக. உ: கக.)

**நேரேடம்**—நாவல். (வைத்தியபரிபா.)

**நேரேடு**—நாவன்மரம். (சூ. நிக. ச: கஎ.)

**நேரொன்றாசிரியத்தளை** — நேரீற்று இயற்சீர்முன் நேர்வந்து ஒன்றுவது. (யாப். காரிகை. உறுப். எ. உரை.)

**நேரோடல்**-நேராயோடுதல், வீதியென்றுகூறுவர்; இது: நாககதியுமாமென்பர். (சூ.நிக. கூ: சஉ.)

**நேளி**—தாமரை. (மலையக.)

**நேற்று**—முன்னைநாள். (உ-ம்.) "நேற்றைப் பொழுது" (நன்னூல்.உயிரீற்றுப்.ஙரு.உரை.)

## நை.

**நை**—1. ஒரிகழ்ச்சிக்குறிப்பு (வழக்.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**நைகரம்**—துன்பம், நைகுதல்.(உ-ம்.) "நைகரமில்லாவன்பின் னங்கை" (பெரியபு. அரிவாட். கஉ.)

**நைச்சியம்**—தாழ்வு, அடக்கம். (சி. சி. தஉ: உ. சிவாக்.)

**நைசியம்**—நாசியிற்புகுத்துமருந்து.(வழக்.)

**நைஞ்சு** — நைந்து, வருந்தி (உ-ம்.) "நைஞ்சழுது" (கொயிற்பு. வியாக்கிர. உரு.)

**நைட்டிகதீட்சை**—முத்தியையவிரும்பினர்க்குச் செய்யப்படுந்தீக்கை; இது: சத்தியோநிருவாணதீக்கையெனப்படும்.(சி.சி. அ: ச. ஞானப்.)

**நைட்டிகப்பிரமசாரி**—மரணாந்தம் விரதம் நியமித்துத் துறவியாயிருப்பவன். (சைவச. ஆசாரி. சO. உரை.)

**நைட்டிகம்** — ஒருவகைவிரதம். (சி. சி. அ: கூஉ. சிவாக்.)

**நைட்டிகர்**—நைட்டிகப்பிரமசாரிகள். (சி. சி. அ: ரு ஞானப்.)

**நைட்டிகன்** — நிட்டைசெய்பவன் (வழக்.)

**நைட்டிகாசிரியன்**—அக்கினிகாரியாதி கன்மங்களின்றிச் சர்வமும் ஞானத்தாலேபண்ணுமாசாரியன். (சி. சி. அ: ரு. சிவாக்.)

**நைடதம்** — தமிழிலும், வடமொழியிலுமுள்ள ஒரு காவியம். நிடதசம்பந்தமானது. (அபிதானகோ.)

**நைத்தல்**—1. அழித்தல். (உ-ம்.) "நாடுநைத்தலின்" (புறநா. கஎ.) 2. வருத்தல். (வழக்.)

**நைத்தியம்**—நித்தியசம்பந்தம். (வழக்.)

**நைதல்** — 1. தளர்தல். (உ-ம்.) "சிலம்பாவிடைநைவதுகண்டு" (திருக்கோ. கஙச.) 2. வருந்தல். (உ-ம்.) "நினைந்துருகுமடியாரை நையவைத்தார்" (தேவார. திருநல்லூர். க: திருநாவு.) ஈண்டுநைதல் ஈண்டுக்கருவிக ளொடுங்கவெ ன்க. அன்றி, நைய என்பதற்கு அவசமாக என்றுமாம். (சிந்தா.)

**நைதிகை**—முல்லை. (வைத்தியபரிபா.)

**நைந்திகை**-முல்லைக்கொடி.(வைத்தியபரி.)

**நைநையெனல்**—இதழ்ச்சிக்குறிப்பு.(வழக்)

நைபாளி—அடுக்குமல்லிகை. (வைத்திய பரிபா.)

நைமிசம்—நைமிசாரணியம். (உ-ம்.) "சேடாத்திரிநைமிசமருணை"(சேதுபு.சேதுபல. சு)

நைமிசர்—சிவலோகத்திலுத்தரதிசை யோலக்கஞ்சேவிக்குந் துவாதசமுக்கிய தேவதைகளிலொருவர். (வி-ணி.)

நைமிசாரணியம்—பிரமதேவரால்விடுக்கப்பட்ட சக்கரமோய்ந்தகாடு. (உ-ம்.) "நைமிசாரணியத்தருள்கூர்சூதமுநியடைந்தான்" (கூர்மபு. இந்திரத். உ.) [நைமிசம் - நேமிசம்பந்தம். ஆரணியம் - காடு.]

நைமித்திகசிராத்தம் — நைமித்திகமாகிய சிராத்தம்; இதனை: (உ-ம்.) "மீதுறுகாமநைமித்திகநித்தமாதிசிராத்தமளித்தறியேனல்" (சேதுபு. மங்கலதீர். சசு-ம் செய்யுளிற்காண்க.)

நைமித்திகப்பிரளயம் — நால்வகைப்பிரளயத்தொன்று; அது: பிரமதேவனது பகன்முடிவிலே யுண்டாகும் பிரளயம். அதனால் இருபத்தெட்டுக்கோடி தேவர்களிறப்பர். (கூர்மபு. பிரமா. அ. உரை.)

நைமித்திகம் — நிமித்தத்தாலானது; அது: நைமித்திககன்மம்.(சி. சி. அ: ௪. சிவாக்.)அது, வேதசிவாகமங்களில் விதித்த மூவகைவழிபாடுகளில் சிவதீக்கைக்குருகரல்லாதவர் விடர் இழிகுலத்வர், அபக்குவர் சைவாசாரநிந்தகர் பாவிகள் இவர்களுய்யும்பொருட்டுச்செய்யும் வழிபாடு. அஃதுற்சவம். [நித்தியத்தின்முழ்வுதீரச் செய்யப்படுவதாகலினிப் பெயர்த்து.]

நைமித்திகாதிகாரம்—தீக்ஷை பிரதிட்டை. சிவாகம .போதகம் முதலியவற்றிலதிகாரம்.(சி. சி. அ: ரு. ஞாநப்.)

நைமித்தியம்—நைமித்திகம். (வழக்.)

நைய—அவசமாக. (சிந்தா.)

நையல்—1. துன்பம். (வழக்குப்போலும்.) 2. நையாதேகொள். (சிந்தா.)

நையாயிகம்—நியாயநூலார்மதம். (வழக்.)

நையாயிகமதம்—உருபமாயிருக்கிற பரமாணுவே யுலகிற்கு காரணமென்றும் அந்தக்கரணமே ஆன்மாவென்றும் வாதிக்குமதம். (சி. சி. உ: ரு௬. சிவாக்.)

நையாயிகர்—நியாயநூல்கற்றோர். (உ-ம்.) "வையாகரணர்களையாயிகர்மறைவல்லோர் மறைமுடிசொல்லாய்வோர்" (திருவிளை. உலவா. கக.) கௌதமகணுதமதவாதிகளென்பர், இவர்கொள்கையை அபிதானகோசம்பார்.

நையாயிகன்—1. ஆத்மா வியாபியென்றும் புத்திகுணமென்றும், ஈசுவரனும் கன்மமும் ஆத்மாவைப்பாசபந்தப்படுத்துமென்றும்,சிவன் நித்தியனும் எல்லாவியாபாரத்துக்குங் கர்த்தனையிருப்பானென்றுஞ்சொல்லுகிறவன். (த. நி. போ. க௬உ.) 2. நியாயசாத்திரி.

நைருதம்—பகலில்வரும் பன்னிரண்டா முகூர்த்தம். (கூர்மபு. பிரம. ௬. விசேட.)

நைருதன் — நிருதிதிக்கினிருக்கும் தசருத்திரரி லொருவன். (வி-ணி.)

நைருதி—நிருதிதிசை, நிருதிசம்பந்தம்.

நைவர—இரங்க. (புறநா.)

நைவளம் — 1. குறிஞ்சியாழ்த்திறம். (சூ. நிக. கo: ௬௬.) 2. நட்டபாடை. (உ-ம்.) "நைவளம்பழுநிய" (சிறுபா. ௬௬.) 3. நட்டராகம். (உ-ம்.) "நைவளம்பழுநியபாலைவல்லோன்" (குறிஞ்சி. கசசு.)

நைவு — 1. நைதல். உ - தொழுநூபெயர விகுதி. 2. வியாதி. (உ-ம்.) "நாளுநைவகன்ற தீரம்" (தைல. பாயிர. க.)

நைவேத்தியம்—தேவர்க்குச் சமர்ப்பிப்பது. (உ-ம்.) "வானெய்தமின்னமுதேயெனநைவேத்தியம்வகுப்பார்" (சிவரக. நைமிச. உஎ.)

நைவேதநம்—நிவேதநம். (உ-ம்.) "மதுரவர்க்கமோடேசனித்தொகைமணமிகுந்த நைவேதநம்" (சிவரக. சுகமுநி. உச.)

நைவேதித்தல்—நிவேதித்தல். (உ-ம்.) "பொற்கிண்ணத்-துற்றளவினை வேதித்து" (தைல. தைலவ. சருஎ.)

## நொ.

நொ—1. துன்பம். (நன்னூல். பதவிய. உ: உரை.) 2. செரிநிலைவினைப்பகுதி.

நொச்சி—1. ஒருசெடி; அது: கருநொச்சி, நீர்நொச்சி, வெண்ணொச்சி எனப் பலவகைப்படும். (உ-ம்.) "குடம்"பார். 2. சிற்றூர். 3. மதில். (2, 3-சூ. நிக. கக: சகரவெ. கக.)

நொச்சிமாலை—மதில்காப்போர் சூடுமாலை. (புறப்பொரு. நொச்சிப்படலம்.) (உ-ம்.) "புறத்தூன்றியமாற்றார்க்கோடலின்றிநொச்சிப்பூ மாலைசூடித்தன்மதில்காக்குந்திறங்கூறு மொரு பிரபந்தம்" (தொன்னூல். உ௮௬. உரை.)

நொசி—நொசித்தல். (வழக்.)

நொசித்த—வருத்தின. (சிந்தா.)

நொசித்தல்—வருத்தல். (உ-ம்.)"நொசித்த வெம்மூலை" (சிந்தா. காந்தரு. க௬௬.)

நொசிதல்-1. நுண்ணிதாதல். (மணிமேக.) 2. நொசிவு, வருத்தல்.

நொசிப்பு—சமாதி, மனத்தினையொருவழிச் செலுத்தல். (பரிபாடல்.)

**நோசிவு**—1. துவள்வு. (பதிற்றுப்.) 2. நுண்மை. 3. வருத்தம் (2,3-சூ.நிக.அ:கக,கச.)

**நொடி** — 1. ஒரு கால அளவை; அது: கைவிரல் நொடித்தற்றொழிலிற்பிறந்த ஓசையது தோற்றக்கேட்டில் நிகழுங்காலம். (தொன்னூன்மரபு. எ.) இது ஆகுபெயர். 2. கைகொடி. (நன்னூ.எழுத்தியல்.சரு.) 3. சொல். (சூ. நிக. கO: உ.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. பள்ளம். 6. விடுகதை.(உ-ம்.)"பொருளோடு புணர்ந்தநகைமொழியென்பர். (மணிமேக.) (5, 6-வழக்.)

**நொடித்தல்**—1. அழித்தல். (உ-ம்.) "நொடித்தான்மலையுத்தமனே" (சுந்தரமூர்த்தி. தேவாரம். ) 2. கையால்நொடிக்குதல். (உ-ம்.) "நொடித்தருளுமருக்கியபூசனைபுரிந்துதாநசுத்திநோக்கிச்செய்தே" (சிவரக.பசாசுமோசந.எ.) 3. சொல்லல். (சூ. நிக. கO: கரு.)

**நொடிப்பு** — 1. ஒரு கணம். (சிந்தா.) 2. நொடித்தல்.

**நொடுநொடுத்தல்**— } துடுக்காயிருத்தல்.
**நொடுநொடுப்பு**— } (வழக்.)

**நொடை**—1. பலபண்டம். (உ-ம்.)"நொடைநவின்மகடூஉக்கடைதொறுவிளக்கமும்" (சிலப். கடலாடு. கருஅ.) 2. விலை. (உ-ம்.) "நறவுநொடைதொலைச்சி" (பெரும்பா. கசO.)

**நொடைமை**—விலை. (பதிற்றுப்.)

**நொண்டல்**–1. நொண்டுதல். 2. முகத்தல். (சிந்தா.) 3. விழுங்குதல். (சூ. நிக. கூ: சு.)

**நொண்டி**–கான்முடவன். 2. முடம்.(வழக்.)

**நொண்டுதல்**— கால்முடக்கப்பட்டுக் குந்திநடத்தல் (வழக்.)

**நொத்தல்**—வருத்தல். (வழக்.)

**நொத்து**—தெரிநிலைவினைப்பகுதி.

**நொதி** — 1. அருவருத்தசோறு. (சூ. நிக. கு: உஅ.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**நொதித்தல்**— } கொதித்தல், பொங்கல்.
**நொதிப்பு**— } (வழக்.)

**நொதுக்கல்**—கொதுத்தல். (வழக்.)

**நொதுத்தல்** —அவித்தல். (சூ. நிக. கூ: உக.)

**நொதுநொதுத்தல்**– இளக்கக்குறிப்பு. (வழக்.)

**நொதுநொதுப்பு** — கொதுகொதுத்தல். (வழக்.)

**நொதுப்பு**—இளக்கம். (வழக்.)

**நொதுமல்**—அயல். (வள். எச். பரி.)

**நொதுமலர்**—அயலோர். (பிங்கல. அருசு.)

**நொதுமலாளர்**—1. அயலவர். (ஐங்குறு.) 2. குறளைக்கூறுவோர். (உ-ம்.)"நொதுமலாளர் பொதுமொழிகொள்ளாது" (புறநா. கூரு.)

**நொந்தகைமை** — நொந்திருக்குந்தன்மை. (வழக்.)

**நொந்தலை**—நொந்தகைமை. (வழக்.)

**நொந்தார்**—பகைவர். (உ-ம்.) "நொந்தார் குடிச்செல்வர்நோன்மைநுகம்பூண்டார்" (சிந்தா. சீவகன்றுறவு. கசங.)

**நொந்தீவார்**—வெறுப்பார். (உ-ம்.) "நோதக்காயெனநின்னைநொந்தீவாரில்வழி" (கலி.எங.)

**நொப்பு**–ஆட்டின்மூலையிற்சுற்றிய கட்டியதடை. ஒரு குழைக்குறி.

**நொய்** — 1. இலேசு. (சூ. நிக. அ: கசு,) மை-விகுதிகெட்டு நின்றது. 2. குறுணல், நொறுங்கு. (சூ நிக. எ: சுஉ.)

**நொய்து**-1. மெல்லிது. (உ-ம்.) "நொய்தரக் திரணத்தின்நொய்தாகும்வெண்பஞ்சு - நொய்தாமிரப்போனுவலுங்கால்" (நீதிவெண்பா.) 2. விரைவு. (உ-ம்.)"கொடியவேதாளமெல்லா-நொய்தினிற்செற்றான்" (சேதுபு. வேதாள. சுஅ.)

**நொய்தேனல்**—1. மெல்லிதாதல். 2. விரைவின்குறிப்பு. (பிங்கல. உகசுக.)

**நொய்மை**—1. இலேசு. (உ-ம்.)"அனிச்சப்போதினதிகழுநொய்ய" (இராமா. பாலகா. கோலங். கச.) 2. இழிவு. (வழக்.) 3. எண்வகையூறினொன்று. (நன்னூல்.உயிரியல். கங. உரை.) 4. சிறுகியிருத்தல். (உ-ம்.) "யாக்கைநொய்மை" (வள். கூசஉ.) 5. மிருது.

**நொய்யபூதம்**—சூக்குமபூதம்,(கைவல்.உக.)

**நொய்யரிசி** — குறுணல் (உ-ம்) "நொய்யரிசிகொதிபொறுது" (வழக்.)

**நொய்யவன்**—1. எளியவன். 2. பலவீனன். (1, 2-வழக்.)

**நொய்யார்**—கீழோர். (உ-ம்.) "குலந்தனில்நொய்யார்சைவதீக்கைகொண்டிடினும்" (அருணகிரிபு. வலம்புரி. எஉ.)

**நொய்யெனல்**—நுண்மைக்குறிப்பு.

**நொய்வு**—நொய்மை. (உ-ம்.) "சிறியரென்றிகழ்ந்துநொய்வுசெய்வனசெய்யல்" (இராமா. கிட்கிந். அரசிய. கூஉ.)

**நொருக்கல்**—நொருக்குதல். (வழக்.)

**நொருக்காய்**—குருக்குக்காய், குருக்கு. ஓர்செடி. (வைத்தியபரிபா.)

**நொருக்கு**–1. நெரிவு. (வழக்.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**நொருக்குதல்**–1. அடித்தல். 2. நெரித்தல். (1, 2-வழக்.)

**நொருங்குதல்**—நெரிதல். (வழக்.)

**நொலை**— } அப்பவருக்கம்.(சூ.நிக.சு:
**நொலையல்**— } உரு.) (பிங்கல. கககஅ.)

நோவ்வு—1. நொய்மை. (சூ. நிக. அ: கக.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வருத்தம். (உ-ம்.) "நொவ்விடக்குயிலே" (இராமா. சுந்தரகா. சிந்தனைப். உச.)

நோவ்வுதல் — 1. நொய்தால். 2. வருந்துதல். (உ-ம்.) "நொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினன்" (இராமா. காட்சி. ருச.)

நொள்ளல்—நளம்பு, ஒருசெந்து. (பிங்கல. உககஉ.)

நொள்ளை—1. குருடு. (திருவிளை. பரிநரிபா. கச.) (நொள்ளைக்கண்ணன் என்பது வழக்கு.) 2. நாகரவண்டு. (சூ. நிக. ந: எக.)

நொறில்—1. அடக்கம். (பிங்கல. கககுரு.) 2. விரைவு. (உ-ம்.) "நொறில்பரித்தடந்தேரும்" (நைடத. போர்புரி. ந.)

நொறுக்கு— } 1. அடிக்கை. 2. பொடி
நொறுக்குதல்— } யாக்கல். (1, 2-வழக்.)

நொறுக்குநொறுக்கெனல்- ஈரடுக்கொலிக்குறிப்பு. (வழக்.)

நொறுங்கல்—1. நொறுக்குதல். 2. நொருங்கினது. (1, 2-வழக்.)

நொறுங்கு — நொய், குறுணல். (சூ. நி. எ: சுஉ.) 4. தெரிநிலைவினைப்பகுதி.

நொறுங்குதல்—பொடியாதல். (வழக்.)

நொன்றி—மான். (வைத்தியபரிபா.)

## நோ

நோ—1. துக்கமுறல். (உ-ம்.) "அருளிலோரெனநோதகாதென" (கோயிற்பு. இரண்யவன்ம. கஎ.) 2. துன்பம். (உ-ம்.) "நோவஞ்சாதாரோடு" (திரிகடு. கருக.) (வள். கருஎ.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

நோக்க—நினைக்க. (பரிபாடல்.)

நோக்கப்பிரமி — செய்வினை. (வைத்தியபரி. கருப்பொ.)

நோக்கம்—1. அழகு. 2. எண்ணம். (வழக்.) 3. கண். (சூ. நிக. உ:. ககு.) 4. நோக்குதல். அம்-தொழிற்பெயர்விகுதி.

நோக்கல்—காணல். (உ-ம்.) "பக்கநோக்கிப்பலிப்பறித்து" (அரிச்ச. நாட். நூஅ.) 2. காத்தல். (உ-ம்.) "பேசரியவுயிரையெல்லாம்பெற்றுநோக்கி" (சி. சி. பாயிரம்.) 3 தேடுதல். (உ-ம்.) "காதலிநோக்கியுள்ளகைப்பொருள்" (கோயிற்பு. பதஞ்சலி. அஉ.)

நோக்கலை-நோக்குதலையுடையாய். (பதிற்றுப்.)

நோக்காடு—நோதல், காடு-தொழிற்பெயர் விகுதி.

நோக்கின்று—நோக்கியது. (புறநா.)

நோக்கு — 1. அழகு. (உ-ம்.) "யாவர்க்குநோக்கலாப்-பெண்ணினேக்குடையாள்"(இராமா கர. சு.) 2. அறிவு. (உ-ம்.) "நுண்ணிதினுணர்தனுமைந்தநோக்கில்"(மதுரைக்.ருகஎ.) 3. எண்ணம். (வழக்.) 4. கண். [இது முதனிலைத்தொழிலாகுபெயர். கருவிப்பொருண்மையதாகிய அம் விகுதிபுணர்ந்துகெட்ட தொழிலடியாகப்பிறந்த பெயரெனினுமாம்.] 5. இரகசிலைகளினேழாமிடம். 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. பார்வை. (உ-ம்.) "தேசிகர்நோக்காற்றிமிரந்தீருமுயிர்க்கு" (சைவச. பாயிர. உச.) 8. விநோதக்கூத்தனுளொன்று. (சிலப். அரும்பத.)

நோக்குதல்—1. கருதுதல். (உ-ம்.) "ஒன்றுநோக்கலருன்வலியோங்கற-னின்று நோக்கிநிறுத்துநினைப்பினர்" (இராமா. கரன். ரு.) (ஐங்குறு.) 2. காத்தல். (சி. சி. பாயிரம்.) 3. பார்த்தல். (உ-ம்.) "மன்னவன்மாதைநோக்கி" (பிரமோத். பஞ்சாட். உஅ.)

நோகு—நோவேன். (புறநா.)

நோஞ்சல்—மெலிதல். (வழக்.)

நோஞ்சி—மெலிந்தவன் (வழக்.)

நோட்டம்—கண்ணேடியறிதல். (வழக்.)

நோண்டல்—நோண்டுதல். (வழக்.)

நோண்டுதல் — 1. கிளறுதல். (பிங்கல. உகசக.) 2. தோண்டல். 3. முகத்தல். (சூ.நிக. க: ஙஉ.)

நோதக்க — வெறுக்கத்தக்கன. (உ-ம்.) "நோதக்கநட்டார்செயின்" (வள். அ0ரு.)

நோதல்—1. துன்புறல். 2. நொந்துசொல்லுதல். "நோவற்க" என்பதிற்பார்.

நோம்—நோகும். (ஐங்குறு.)

நோய்—1. அச்சம். (பரிபாடல்.) 2. குற்றம். (புறப்பொ. வெ.) 3. பிணி. (உ-ம்.) "மழவுநோயற்றகாயபலங்களும்" (சிவரக. தேவி நாட்டிய. உஉ.) 4. வருத்தம். (உ-ம்.) "தாவுறமுஞ்சிலைகொளிஇநோய்மிக்" (குறிஞ். கருஅ.)

நோய்ச்சல்—நோய்கொள்ளுதல். (வழக்.)

நோய்ஞ்சல்—நோயுறுதல். (வழக்.)

நோய்ஞ்சலன் —மெலிந்தவன். (வழக்.)

நோய்ஞ்சி — வியாதிகொண்டு மெலிந்தது, மெலிந்தவள், மெலிந்தவன். (வழக்.)

நோய்ஞ்சியன்—நோய்ஞ்சலன். (வழக்.)

நோய்த்தல்—நோய்ச்சல். (வழக்.)

நோய்தீர்க்குமருந்து—உறையென்றுபெயர். (பிங்கல. உஎஅஅ.)

நோய்ப்பாலஃது — நோயின்பகுதியது. (ஐங்குறு.)

நோய்மூகன்—சநி. (சூ. நிக. க: சுகூ.)

நோயணுகாவிதி–தேரையர்செய்த ஆரோக்கியநூல். (அபிதானகோ.)

நோயுற்றெழுந்தோன்—உல்லாபன் என்றுபெயர். (சூ. நிக. உ: சுசு.)

நோல்—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. வலிமை. (உ - ம்.) "நோக்கியெ திருநறின்றநோலாரும்படைவியந்தே" (அருணகிரிபு. அருந்தவ. கஉரு.)

நோலாதவர்—தவஞ்செய்யாதவர். (உ-ம்.) "இலர்பலராகியகாரணநோற்பார் - சிலர் பலர் நோலாதவர்" (வள். உஎ௦.)

நோலாதார்—தவஞ்செய்யாதவர். (வழக்.)

நோலாமை—தவமின்மை.

நோலார்—நோலாதவர். (வழக்.)

நோலுதல்—நோற்றல் (உ - ம்.) "புரையற வேண்டினர்நோலாதொளிகவென" (ஏகாதசி. கர்லநிர்ணய கூ.)

நோலை—எட்கசி. (உ-ம்.)"புழுக்கலுநோலையும்விழுக்குடைமடையும்" (சிலப். இந்திர. கூஅ.) [சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் எள்ளுருண்டையென்பர்.]

நோவற்க — நோவுசொல்லற்க. (உ - ம்.) "நோவற்கநொந்ததறியார்க்கு" (வள். அஎஎ.) [நோவென்னும்முதனிலைத் தொழிற் பெயர் ஈண்டு அதுசொல்லுதற்கண்வந்தது.]

நோவாளி—நோவுள்ளான். (வழக்.)

நோவு — 1. நோய் (வழக்.) 2. மஞ்சள். (வைத்தியபரிபா.) 3. வருத்தம். (சூ.நிக.அ:கூச.)

நோற்கிற்பவர்— தவஞ்செய்ய வல்லார். (உ-ம்.) "சுடச்சுடரும்பொன்போலொளிவிடுந் துன்பஞ்-சுடச்சுடநோற்கிற்பவர்" (வள்.உசுஎ.)

நோற்பாள்—கௌந்தி என்றுபெயர். (சூ. நிக. உ: சுஉ.)

நோற்பு—, நோற்றல்— 1. தவம்செய்தல். (வள்.உஎ. அதி. கூ.) 2 பொறுத்தல். 3. விரதமுறல். (திருவிளை. வேதத்துக். கரு.)

நோன்—வலி. (மணிமேக.)

நோன்பு — 1. தவம். (சூ. நிக அ: ௬௦.) 2. விரதம். (உ-ம்.)"பூவநந்தடம்வகுத்துநோன்புமுறைபோற்றி" (சேதுபு. பாவநா. நக.)

நோன்புணை—தொப்பதெப்பம். (சிந்தா.)

நோன்மார்—நோற்கைக்கு. (உ-ம்.) "ஆன்றடங்கறிஞர்செறிந்தனர்நோன்மார்" (மதுரை. சஅக.)

நோன்மினம் — நோன்மின். இதில் அம் அசை. (சிந்தா.)

நோன்மை — தவம். (உ-ம்) "விரதநோன்மைகுலைந்தனர்" (கந்தபு. ததிசியுத். ௬௦.) 2. பொறுமை. (வள். சஅ.) (சிந்தா.) 3. வலி. (சூ. நிக. அ: உஅ.)

நோன்றல்—1. தன்னல். (பிங்கல. உகஎஎ.) 2. பொறுத்தல். (உ - ம்.) "உற்றநோய்நோன்றல்" (வள். உசுக. (புறநா.)

நோனது —பொறுது. (உ-ம்.) "சிறுமைநோனுது" (குறிஞ்சி. கருஎ.)

நோனமை—1. தவமின்மை. 2. பொறுத்தலில்லாமை. (வள். நாணுத்துற. உ.)

நோனர் — 1. தவமில்லார். 2. பகைவர். (பிங்கல. கசஎ.) 3. பொறார். (சிந்தா.)

நோனன் —பொறான். (புறப்பொ.)

நோனுதல்—1. தவஞ்செய்தல். 2. பொறுத்தல். (1, 2-நோனுமைக்குமறையாகிய தொழிற்பெயர்.

## ப.

ப—1. இருபதில்ஓர்பாகத்தைக்காட்டுமொருகீழ்வாயிலக்கக்குறி. 2. காவல்செய்தல். (உ-ம்.) "துவாரபன்" துவாரம்-வாயில். 3. குடித்தல். (உ - ம்.) "பாதபம்" நீரைக்காலாற்குடிப்பது. 4. வினைச்சொல் வினகத்து எதிர்காலப்பொருளில்வருமோ ரிடைநிலை. (நன். கசச.) இது: நடப்பான் என்பவற்றிற்றொடக்கத்தனபோலச் சந்தியாயும்வரும்.]

பஃறழிசைக்கொச்சைக்கலிப்பா — பலதாழிசைகளோடு மற்றையுறுப்புக்களையும்பெற்றுவருங் கொச்சகக்கலிப்பா. (யாப். காரிகை. செய்யுள். உ௦. உரை.)

பஃறி—1. இரேபதி. (பிங்கல. உசுரு.) 2. ஓடம். 3. மரக்கலம். (சூ. நிக. எ: ருக, ருஉ.) படகு என்பர் பட்டினப்பாலையில்.

பஃறுளி—வடிம்பலம்பநின்ற பாண்டியனுலுண்டாக்கப்பட்டதோராறு. (உ - ம்.) "முன்னீர்விழ வி னெடியோன் - நன்னீர்ப்பஃறுளி" (புறநா. க.)

பஃறொடை—பஃறொடைவெண்பா. (உ-ம்.) 'அடிபலவாய்ச்சென்றுநிகழ்வபஃறொடையாம்' (யாப். காரிகை. ரு.)

பஃறொடைவெண்பா— நான்கடியின்மிக்க பலவடிகளைப்பெற்றுவரும் வெண்பா. (யாப். காரிகை. செய்யு. ரு. உரை.) [பல்-தொடை.]

பக்கச்சித்திரை — பூர்வபக்கம், அமரபக்கமென்னு மிருபக்கங்களிலும்வரும் சதுர்த்தி, நவமி, சட்டி, அட்டமி, துவாதசி, சதுர்த்தசியென்னுந் திதிகள். (உ - ம்) "அளவுறுநான்கொன்பதாறெட்டீராறீரேழானபக்கம் - விழைவுறுதீப்பக்கச்சித்திரை" (விதாந.பஞ்சாங்க.க.)

பக்கச்சொல்—துணைச்சொல். (வழக்.)

பக்கசூலை — பக்கத்திலேவருமொரு சூலைநோய். (வழக்.)

பக்கணம்—1. ஊர். 2. வேடர்வீதி. (சூ. நிக. பு: கூகு, சக.)

பக்கத்தம்—குட்டுதல். (கொக்கோ.)

பக்கத்தார்—1. அயலவர். (நாலடி. பேதைமை. கo.) 2. இனத்தவர், பட்சமுள்ளவர். (வழக்.)

பக்கபகந்திரம்—குறியின்பக்கத்தில்வருஞ் சிலந்தி. (வழக்.)

பக்கப்பிளவை—முதுகந்தண்டருகிற் பிளவை. (வழக்.)

பக்கப்போலி—துணிபொருட்கிடனுதலாகிய பக்கலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபுடையொத்துப் பக்கம்போலத் தோன்றுவது; அது: துணியும்பொருட்கிடனுகாதனஉம், துணியும்பொருட்கு ஒருமருங்கிடனுகாதனஉம், துணிந்தபொருட்கிடனுவனஉம், துணிந்த பொருட்கொருமருங்கிடனுவனஉம் எனநான்கு வகைப்படும். (உ-ம்.) "ஈண்டுப்பக்கப்போலி நான்கு" (சி. சி. அளவை. கச. சிவஞா.)

பக்கபாதம்—ஒருபட்சத்திருத்தல். (வழக்.)

பக்கம் — 1. அருகு. 2. இடம். (உ-ம்.) "அரிவையையளித்தோன்பக்கமதடைந்தான்" (பாரத. குருகுல. கஉ.) 3. இறகு (உ-ம்.) "நின் பக்கமாதியொப்பில்சிரங்கமெல்லாம்" (சேதுபு. பாலோடை. உக.) 4. ஐயுற்றுத்துணியற் பாலதாகிய பொருளிருக்குமிடம். (உ-ம்.) "பக்கம், சபக்கம், விபக்கமென்பன" (சி. சி. அளவை. க. சிவஞா.) 5. கூறு. (பரிபாடல்.) 6. சந்திரனுள். (உ-ம்.) "முன்பக்கமிசையிற்பாலும்பின் பக்கமாவினறுங்கோமயரசமுமாகாரங் கொண் டிடலுமாம்" (சூத. வான. அ.) 7. சமீபம். 8. நட்பு. 9. பிரதமைமுதற் பதினைந்துநாட்கொண்டகாலம். 10. புறம். (7, 10-வழக்.) (1, 3, 7, 8-சூ. நிக. கக: கசுரவெ. கஉ.)

பக்கரசம்—மது. (வைத்தியபரிபா.)

பக்கரை—1. அங்கவடி. (உ-ம்). "கலனை" பார். 2. கலனை. (உ-ம்.) "பட்டிலகுபக்கரை பணிக்கவரியெட்டும்" (திருவாத. குதிரைவிட்ட. கஎ)

பக்கல்—பக்கம். (பெரியபு. இயற்பகை. எ.)

பக்கவாதம்—பாரிசவாதம். (வழக்.)

பக்கவாயு—பக்கத்திலிருக்கும்வாயு.

பக்காசித்தம்—பட்சமின்மையான் முடியாதது. (சைவப்பி. கசு.)

பக்கி—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பறவை. (உ-ம்.) "பாலுணும்புள்ளிப்பிமீன்பக்கி" (ஒளிவி. சத்திரி. கச.)

பக்கிடுதல்—1. திடுக்கிடுதல். 2. வெடித்தல். (1, 2-வழக்.)

பக்கிணி—ஒன்றரைநாள். (உ-ம்.) "ஞாயிர்க்கும்பக்கிணிமேல்" (ஆசௌச. கடு.)

பக்கித்தல்—பட்சித்தல். (வழக்.)

பக்கிராசன் — கலுழன், பறவைவேந்தன் என்பதாம்.

பக்கு—1. பிளவு. 2. பொருக்கு. 3. பை. (ஐங்குறு. உஎக.) (1, 2, 3-வழக்.)

பக்குபக்கெனல்—அச்சக்குறிப்பு. (வழக்.)

பக்குவம்—1. தகுதி. 2. பருவம். (ஞானமிர். கூச. உரை.)

பக்குவமாக்குதல்—தகுதியாக்குதல். (வழக்.)

பக்குவமாதல்—1. தகுதியாதல். பெண்கள் ருதுவாதல். (வழக்.)

பக்குவர் — மோக்கபக்குவர்; அவர்: கருமகாண்டிகர், ஞானகாண்டிகர், பத்திகாண்டிகர்.

பக்குவரசம்—சாராயம். (வைத்தியபரி.)

பக்குவாசயம்-பஞ்சாசயத்தொன்று; இது: நாபிக்குமேலுள்ளது. ஞானமிர்தம். அ: உரை.) அன்னம் பக்குவமாகுமிடம்.

பக்குவி—1. பக்குவப்பட்டபெண். 2. பரிபாகி. (1, 2-வழக்.)

பக்குவிடுதல்—பிளத்தல். (உ-ம்.) "கரவென் னும்-பார்தாக்கப்பக்குவிடும்" (வள். கoசுஅ.)

பக்கெனல் — 1. அச்சக்குறிப்பு. 2. ஒலிக்குறிப்பு. (1, 2-வழக.)

பக — 1. ஐம்பத்தோருருத்திரரிலொருவர். (வி-ணி. உஎஎ.) 2. விட்டுநீங்க. (உ-ம்.) "பகச் சொல்லிக்கேளிர்ப்பிரிப்பர்" (வள். கஅஎ.) 3. பிளக்குமாறு. (உ-ம்.) "மண்பகவடித்து"(கூர்மபு. தக்கவழி. எக.)

பகட்டு—1. தந்திரம். 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. மயக்கம். (1, 3-வழக்.)

பகட்டுதல் — 1. மயக்கல். 2. வஞ்சித்தல். (1, 2-வழக்.)

பகட்டுக்காரன் — 1. எத்தன். 2. தந்திரி. (1, 2-வழக்.)

பகடம்—தந்திரம். (வழக்.)

பகடி—1. விகடம். (வழக்.) 2. விணை. (உ-ம்.) "பற்பதமேபகடிப்பகைவா" (திருநா. கூ.)

பகடு—1. ஆண்யானை. (உ-ம்.) "பகடுதேர் புரவிகாலாள்பலவகைப்பட்டசேனை - சகடமா வியூகமாகவகுத்தனன்" (பாரத. பதினோரா. சு.) 2. எருது. (உ-ம்.) "பகடுநடந்தகூழ்பல்லாரோ டுண்க" (நாலடி. ) 3. எருமைக்கடா. (உ-ம்.) "பெருமிதப்பகட்டுக்குத்துறையுமுண்டோ" (புறநா. கo.) 4. ஓடம். 5. தெப்பம். (4, 5-சூ.

நிக. எ: ருஉ.) 6. பெருமை. (உ-ம்.) "பகட்டா வீன்றகொடுநடைக்குழவி"(பெரும்பா. உசக.)

**பகடை** — 1. சக்கிலிச்சாதி. 2. சூதுதாயங் களிலொன்று. (1, 2-வழக்.)

**பகண்டை**—சில்லையென்னுமொருபறவை. (சூ. நிக. ரு: சுo.)

**பகதத்தன்**—நாகாசுரன்மகன்.(உ-ம்.)"ஒழுகு வெங்கடத்தொருத்தலின்மேல்வருபகதத்தன்" (பாரத. பதினேழா. கரு.)

**பகந்தரம்**—ஓர் குதநோய். (உ-ம்.) "இரு மன்மூலம்பகந்தரம்" (தைல. தைலவ. கஎ.)

**பகபகெனல்** — 1. ஈரடுக்கொலிக்குறிப்பு. 2. வேகக்குறிப்பு. (1, 2-வழக்.)

**பகம்**—1. ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னு மறுகுணங்கள். (வள். க. குறிப்பு.) 2. காக்கட்டான்கொடி. (தைலவ. 3. காந்தி. 4. சொக்கு. (சூ. நிக. ரு: சுரு.) 5. கொக்குமந்தாரை. (வைத்தியபரிபா.) 6. பெண்குறி. (சூ. நிக. உ: அக.)

**பகர்**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பர்கம் பாளை. (வைத்தியபரிபா.)

**பகர்ச்சி**—சொல். (உ-ம்.) "பகர்ச்சிமடவார் பயில" (ந-தி.)

**பகர்தல்**—1. சொல்லல். (உ-ம்)"மங்களம்" பார். 2. விற்றல். (உ-ம்.) "கொம்மைமுலைபகர் வார்கொண்டாட்டம்" (நல்வழி. உo.)

**பகர்நர்**—விற்குநர். (மதுரைக்கா.)

**பகர்பு**—விளைந்து. (உ-ம்.) "பல்வளம்பகர் பூட்டும்பயனிலம்பைதற" (கலி. உo.)

**பகர்வு**—பகர்தல். (வழக்.)

**பகரம்**—1. அலங்காரம். (உ-ம்.) "பகரமா மயில்மிலைசவரநினைவதுமொருநாளே" (திருப் பு. உருஅ.) 2. ஓரெழுத்து. 3. மினுக்கம். (வழக்.)

**பகரிப்பு**—மினுக்கு. (வழக்.)

**பகல்** — 1. அரையாமம். (உ-ம்.) "அரை யிருள்யாமத்தும்பகலுந்துஞ்சார்" (சிலப்.அந்தி மாலை. அக.) 2. ஒளி, இளவெயில் என்பர் பரி பாடலில். 3. கூடாமை. (உ-ம்.) "இகலென்ப வெல்லாவுயிர்க்கும்பகலென்னும்- பண்பின்மை பாரிக்கு நோய்" (வள். அருக.) 4. சூரியன். (உ-ம்.) "வெயில்காலும்பகன்மதிவெருவுற" (திருவிளை. நாக. கo.) 5. தினம். (உ-ம்.) "ஓர் பகலேயிவனிறந்தனன்"(சிவரக.சுத்தரிப்பூ. க.) 5. நடு. 7. நடுவுநிலைமை. (உ-ம்.) "படுவதுண்டு பகலாற்றி" (புறநா. கஎ.) 8. பகற்போது. (உ-ம்.) "கலைகாட்டையாயுமுகூர்த்தம்பகல்கங் குல்" (கூர்மபு. பல்வகை. கசு.) 9. பகுத்தல். (திருமுருகா.கசுசு.) 10. பிரிதல். (உ-ம்.)"பகச் சொல்லிக்கேளிர்ப்பிரிப்பர்" (வள். கஅஎ.) 11. பிளத்தல். 12. மத்தியாணி, நுகத்திற்சிராணி யென்பர். (உ-ம்.) "மூரிவெம்பிடர்நுகப்பகற் றலைக்கொளீஇ" (இரகு நாட்டு. சஉ.) 13. முகூர்த்தம். (2, 6, 11, 13-பிங்கல. உசுகக.)

**பகல்வர்த்தி**—ஒரு விநோதவிளக்கு. (வழக்.)

**பகல்வாயில்**—கீழ்த்திசை. (உ-ம்) "புகர் வெள்ளைநாகர்தங்கோட்டம்பகல்வாயில்"(சிலப். கனுத்திறம். கo.) [பகற்றோற்றுகிறவாயில் என்றபடி.]

**பகலவன்**—1. சூரியன். (உ-ம்) "பகலவன் பைம்பொற்றேரரோ" (இராமா. கரன். ருஉ.) 2. பரணிநாள். (சூ. நிக. ச: சுஎ.)

**பகலோன்**—பகலவன். (வழக்.)

**பகவதி** — 1. தருமதேவதை. (சூ. நிக. க: கூக.) 2. துற்கை. (உ-ம்.) "அகிலதலம்விதிர் விதிர்ப்பவருமடற்கேசரிமேற் – பகவதிங்கயயடி வணங்கி" (சேதுபு. சேவிபுர.உரு.) 3. பார்வதி. (உ-ம்.) "பகவதி" (திருப்பா. காப்பு.)

**பகவதிநாள்**—பூரநாள். (சூ. நிக. க: எக)

**பகவற்கீதை** — கிருட்டிணரால் அருச்சுன னுக்கு உபதேசிக்கப்பட்ட ஓர் யோகநூல். (அபிதா)

**பகவன்** — 1. அரன். (உ-ம்.) "பகன்றன் புரமதெய்தல்புதுமைபசோ" (சிவரக. வரலா. சo.) 2. அரி. 3. அருகன். 4. சூரியன். (பிங் கல உகo.) 5. பிரமன். (உ-ம்.) "கங்கைச் சுமையாதவம்பகவன்செயச்சென்னிதுளக்கா னே" (மறைசை. சுரு.) 6. புத்தன். (2, 3, 5, 6-சூ. நிக. க: கரவெ. க.)

**பகவான்**—1. சிவன். (சூ. நிக. க: க.) 2. துவாதசாதித்தரிலொருவன்.

**பகவிநுக்கம்**—நிலக்கடம்பு.(வைத்தியபரி.)

**பகவு**—1. பங்கு. (வழக்.) 2. பிளப்பு. (உ-ம்.) "எட்பகவன்னசிறுமைத்தேயாயினு- முட்பகையுள்ளதாங்கேடு" (வள். அஅரு.) 3. வெடிப்பு. (வைத்தியபரிபா.)

**பகழி**—1. அம்பிற்குதை. (பிங்கல. சருசச) 2. அம்பு. (உ-ம்) "பொங்கழற்பகழி"(பிரமோ. சிவதாக. உ.)

**பகற்குருடு**—கூகை. (வழக்.)

**பகற்குறி**—களவுப்புணர்ச்சியிற் பகற்காலஞ் சந்திக்க நியமிக்குமிடம். (நம்பிஅக. அகத்தி. ருஎ.)

**பகற்பண்**—பகலில்லைபாடப்படுந் தேவாரப் பண்கள்; அவை: புறநீர்மை, காந்தாரம், கவுசி கம், இந்தளம், தக்கேசி, நட்டபாடை, நட்டரா கம், பழம்பஞ்சுரம், காந்தாரபஞ்சமம், பஞ்சமம் ஆகிய பத்துமாம். (உ-ம்.)"புறநீர்மைகாந்தாரங்

கௌசிகமிந்தள்மே — புகழ்பெறுதக்கேசிகட்ட ராகநட்டப்பாடை - நறியபழம்பஞ்சுரங்காந்தார பஞ்சமஞ்சீர்நன்மைதருபஞ்சமச்சீசாதலைரந் தும்பகற்பண் — ணுறைதக்கராகமொடுபழந்தக்க ராகமுணர்சீகாமரங்கொல்லிவியாழ குறிஞ்சியு மே - சிறியவந்தாளியுமேசகுறிஞ்சிகுறிஞ்சியும் ராச்செல்வழிசெந்திருத்திதாண்டகம்பொது பண்செப்பீப" என்னுஞ்செய்யுளறிக இக்கவி திருவாவடுதுறையாதீனத்திலே தெரிந்தேன்.

பகன் — 1. ஒரு சூரியன்; இவன்: பதினொ ராயிரங் கிரணங்களையுடையவன். (உ-ம்.) "பகவன்விழித்துணைபறித்ததொருகை"(கூர்ம பு. தக்கன்வேள். கூஅ.) 2. பகாசுரன், பக னென்னுமோரசுரன். வீமனாலிறந்தவன். கொக்குவடிவமாகிய ஓரசுரன் சிவபிரானை யெ திர்த்திறந்தவன், கஞ்சனாலனுப்பப்பட்ட கொ க்குவடிவமானவோரசுரன் கண்ணனாலிறந்த வன். (அபிதாநசி.)

பகன்றை—1. கிலுகிலுப்பை. (உ-ம்.) "பகன் றைக்கண்ணிப்பல்லான்கோவலர்" (ஐங்குறு. அஎ.) 2. சிவதை. 3. சீந்தில். 4. பெருங்கையா லென்னுங்கொடி. (சிலப். அரும்பத.) (2, 3-வைத்தியபரிபா.)

பகா—தூதவளை. (வைத்தியபரிபா.)

பகாங்கம் —பெண்குறி. (சி. சி. ௪: கூ. சிவஞா.)

பகாசுரன்—ஓரசுரன். (பகன்பார்.)

பகாப்பதம் — பகுப்பிற்பயன்படாப்பதம். (நன்னூ. பதவிய. உ.)

பகாப்பொருள் — கடவுள். பிரிக்கப்படாப் பொருள். நுண்ணுணர்வால நிக)

பகாரம்—1. அலங்காரம் (உ-ம்) "விகார மூறுசூரன்பகாரமுயிர்வாழ்வும்விநாசமுறவே வலங்கொடிவோனே" (திருப்பு. கஅசு.) 2. பகரம்.

பகாவின்பம்—வீட்டின்பம் (சிவதரு.)

பகி—பகலில்வரும் பதினைந்தாமுகூர்த்தம். (கூர்மபு. பிரமயு. கூ: உரை.) [விதானமாலை யுரைகாரர் பாக்கியமென்பர்.]

பகிடி — 1. பரிகாசம். 2. விகடம். (1, 2-வழக்.)

பகிர்—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பகுப்பு. (இராமா. பாலகா. திருவவதார. அஅ.) 3. பிளப்பு. (உ-ம்.) "திங்களின்பகிர்புரைநஞ்சம்" (திருவிளை. நாக. கரு.) 4. வெடியுப்பு. (வைத் தியபரிபா.)

பகிர்ச்சி—பகுப்பு. (தொழிற்பெயர்.)

பகிர்தல் — பங்கிடல். (உ-ம்.) "பாழுக்கு யான்வளர்த்தேன்கிளிளையைப்பழம்பால்பகிர்ந் தே" (தனிப்பா. உ-ம். கூஎசு.)

பகிர்விடல்—பிளவாதல். (வழக்.)

பகிரங்கம்—1. மறைப்பின்மை. 2. வெளி.

பகிரண்டம்—1. அடத்தின்வெளி. 2. பே ரண்டம். (உ-ம்.) "ஆதியாயண்டபகிரண்டத் தும்புறத்தும்" (அரிச்ச. பாயிர. ரு.)

பகிரதன்—சூரியகுலஓரரசன்,கங்கையைவர வழைத்தவன். (இராமா.பால.அகலிகைப்.சரு.)

பகீரதி—கங்கை. (உ-ம்) "பாருவகையினு லாளுதற்கிருந்தான்பகீரதிமகன்" (பாரத. குரு குல கூச.) பகீரதன்பொருட்டுப்பூமியில்வந்தத னாற் பகீரதியென்றானது.

பகீரெனல்—அச்சக்குறிப்பு. (வழக்.)

பகு—தெரிநிலைவினைப்பகுதி.

பகுத்தல்—1. ஈதல். (உ-ம்.) "நைவேத்தியம்" பார். 2. பங்கிடல்; இது: வணிகரெண்குணத் தொன்று. (உ-ம்.) "செழுங்கோள்வாழையக விலைப்பகுப்பும்" (புறநா. கசுஅ.) 3. வெட்டல். (சூ. நிக. க: உச.)

பகுதல்—1. கிளைத்தல். 2. பிரிதல்.

பகுதி—1. இயல்பு. [பிரகிருதியென்பதின் விகாரம்.] 2. ஒருவகைச்சந்தம்; அஃது: அடி யொன்று ஒன்பதெழுத்தாய்வருவது. (வீரசோ. யாப். கூக உரை. 3. சொன்முதனிலை. (நன் னூ. பதவிய ௪.) 4. பங்கு, பிரிவு. (வழக்.) 5 படை. (பிங்கல. கஙoக.) 6. வேறு. (ஞானமி.)

பகுதிக்கிளவி—பக்கச்சொல். (உ-ம்.) "தகுதி யும்வழக்குந்தழீஇயினவொழுகும், பகுதிக்கி ளவிவரைநிலையிலவே" (தொல். சொல். கஎ. சேநா.)

பகுதிகட்டுதல் — 1. இறைகொடுத்தல். 2. பாகிடுதல்.

பகுப்பு—1. பகுத்தல். 2. பகுதி. 3. பிரிவு. (1, 2, 3-வழக்.)

பகுபதம் — பகுக்கப்படுமியல்புடையபதம். (உ-ம்.) "பகாப்பதமேழும்பகுபதமொன்பதும் - எழுத்தீறுகத்தொடருமென்ப" (நன். கஙo.)

பகுவபஞ்சம் — உபநிடத முப்பத்திரண்டி னொன்று. (வழக்.)

பகுவாய் — 1. தாழி. 2. பிழா. 3. பிளந்த வாய். (உ-ம்.)"பல்பொறிப்பகுவாய்ப்படம்புடை பரப்பிப்" (திருவிளை. நாக. கரு.)

பகுளம் — கிருட்டிணபக்கம். (வழக்குண்டு போலும்.)

பகூதகம் — உலகிலெவ்விடத்துமடைந்து நடக்கப் பலமுள்ளவர்களுக்கு நியமிக்கப்பட்ட சந்நியாசம். (கைவல். கசஅ.)

பகை—1. ஆறுநரம்பு, மூன்றுநரம்பென்பர். (சிலப்பதி.) 2. சத்துருத்தானம்; அஃது: ஆறு

மிடம். (விதாந. மரபியல். ச. உரை.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 5. பகைவன். (உ-ம்.) "பகைமுன்னர்வாழ்க்கைசெயலும்" (திரிகடு. ச.) 6. விரோதம். (உ - ம்.) "எக்காலம்பகைமுடித்துத்திரௌபதியுங்குழல்முடிக்கவிருக்கின்றாளே" (பாரத. கிருட்டிண. உஉ.)

பகைஞர்—சத்துருக்கள். (இராமா. பாலகா. நகரப். கக.)

பகைத்தல்—பகைகொள்ளல். (வழக்.)

பகைத்தானம்—ஆறுமிடம். (விதாநமா.)

பகைத்தொடை—முரண்டொடை. (யாப். காரி. உறுப். கசு.)

பகைநரம்பு—நரம்பிசையாற்பிறந்த பொல்லமை; அவை: அதிர்வு, ஆர்ப்பு, கூடம், செம்பகை யெனநான்கு. (சிலப். வேனிற். உஎ, உக.)

பகைநாள்—செய்யுட்பொருத்தம்பொருந்தாநாள். (உ-ம்.) "சொல்லியநாண்மூவொன்பதாகத்துணிந்தொன்று - புல்லியமூன்றைந் தேழ் பொருந்தாவாம்" (வெண்பாப் பாட்டியலிற் காண்க.) இவ்வாறன்றி, ஆதிரைபரணியாரலாயிலியமுப்பூரங்கேட்டைதீதுறுவிசாகஞ்சோதிசித்திரை மகமீராறும். சுபகாரியத்துக்காகா என்பர்.

பகைப்படல்—விரோதமாதல். (வழக்.)

பகைப்பு—பகைத்தல். (வழக்.)

பகைமுன்னேதீநுன்றல்—பகைவர்க்கு முன்னெதிர்த்தல்; அஃது: எண்வகை வெற்றியிலொன்று. இதற்குக்காஞ்சிவேய்தலுண்டு. (சூ. நிக. கஉ: கூஉ.)

பகைமேற்செல்லல்—மாற்றாரைப்பொரப்போதல்; அஃது: எண்வகைவெற்றியிலொன்று. (சூ. நிக. கஉ: கூஉ.)

பகைமை—பகைத்தனம். (வழக்.)

பகையாளி—பகைஞன். (வழக்.)

பகைவர்—சத்துருக்கள். (உ-ம்.) "பரிதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலில்" (பாரத. கிருட்டின. அசு.)

பகைவர்க்கம்—காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்களாறும். (வள். சச. அதி.)

பகோளம்—வானஉண்டை, வானவட்டம்.

பங்ககிரீடம்—பன்றி. (வைத்தியபரிபா.)

பங்கசாதம்—தாமரை. (உ-ம்.) "பங்கசாதபரிமளங்கொள்பாநுராசசூநுவே" (பாரத. வாரணைவதச். சுக.) பங்கம்-சேறு. சாதம்-உற்பத்தி.

பங்கசை — ஒரு பாலாரிட்ட தேவகை. (வி-ணி. உகூஅ.)

பங்கணி—பங்கம்பாளை. (வைத்தியபரி.)

பங்கப்பிரபை— ஏழுநரகங்களுளொன்று. (சிந்தா. முத்தி.)

பங்கம்—1. அழிவு. (உ-ம்.) "அறபங்கமுறவருமருகனன்" (இராமா. சடாயுகாண். அ.) 2. குற்றம். (உ-ம்) "பங்கமில்சிரமுண்மூவிக்குப்" (கோயிற்பு. பாயி. உசு.) 3 சேறு. (உ-ம்.) "பங்கமுகந்தலைமோத" (ம-தி. சுரு.) 4. தோல்வி. (உ-ம்.) "சொற்பங்கமுறநிமிரிசையின்சும்மையை" (இராமா. சடாயு. அ.) 5. பின்னம். 6. மூடம். அம்-சாரியையென்க 7. வத்திரம். 8. வெட்கம். (திருவிளை. தருமிக்குப். அஉ.) (5, 7, 8 சூ. நிக. கக: வகரவெ. ச.)

பங்கம்பாலை—பங்கம்பாளை.

பங்கம்பாளை — 1. ஆடுதின்னாப்பாலை 2. வட்டத்திருப்பி. (1, 2-வைத்தியபரிபா.)

பங்கயம் — 1. தாமரை. (உ-ம்.) "உனையுமடர்த்தபங்கயம்" (ம-தி. ருக.) 2. தாமரைவடிவினதாகிய ஒருவகை ஆயுதம். (உ-ம்.) "மணிமலர்ப்பங்கயந்தண்டம்" (கந்தபு. விடைபெறு. ருக.)

பங்கயன்— பிரமன். (உ - ம்.) "பங்கயன்முகுந்தனும்பரமென்றுன்னியே" (கந்தபு கடவுள்வாழ். ரு.)

பங்கயநாள்—உரோகணி. (உ-ம்.) "சத்தமிபஞ்சமிபங்கயநாள்" (விதாந. குணகுண. ௬.)

பங்காரம் — பொன். [தெலுகு.] வங்காரமெனவும் வரும்.

பங்காளம் — 1. ஒரு தேயம். வங்காளம் எனவும் வரும். 2. ஒரு புருஷராகம்; இதன்: மனைவிகள். தந்நியாசி, காம்போதி, கௌளி, அதிதேவதை. விநாயகர். (வி-ணி. உகக.)

பங்காளன்—பங்காளி. (வழக்.)

பங்கி—1. ஆண்மயிர். (உ-ம்.) "விந்தாசலத்தின் மிகைபெற்றிலங்கமிளிர்பங்கிவெங்க தமிகும்-கொந்தாரழற்கு" (ஏகாதசி. உருக்குமாங். சஉ.) 2. கஞ்சா. (உ-ம்.) "பங்கிச்சாற்றுட்டி" (தைல. தைலவ. க0ரு.) சடைக்கஞ்சாவுக்கும் பெயர்கூறுவர். 3. சாதிலிங்கம். (வைத்தியபரிபா.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. பிறமயிர். (சூ. நிக. உ: க0க.)

பங்கிகவாசம்—நண்டு. (வைத்தியபரிபா.)

பங்கிடுதல்—<br>
பங்கித்தல்— } பகிர்தல் செய்தல். (வழக்.)

பங்கிவிதை—கஞ்சாவிதை. (வைத்தியபரி.)

பங்கீடு—பங்குசெய்தல். (வழக்.)

பங்கு—1. கூறு. 2. சனி. (உ-ம்.) "சகட்டினைப்போழ்ந்து-பங்குவேறிலும்" (பிரமோ. க: உ.) 3. பாகம். (உ-ம்.) "பங்குலவுகோதையுந் தானும்" (திருவாச. திருப்பொன். க.) 4. பாதி.

5. மூடம். (4, 5-பிங்கல. ௬௭௪௪.)

பங்குசம்—தலைக்கோலம். (பிங்கல.௧௨௦௨.)

பங்குநன்—அருச்சுநன். (உ-ம்.) "பங்குநன் பெருந்தீர்த்தநீர்படிவதற்காக" (பாரத. அருச்சுனன்றீர். ௬௭.)

பங்குநி—1. உத்திரநட்சத்திரம். (உ-ம்.) "உலக்கையதனொடுபெங்குநியத்தத்திற்கு"(விதான. குணகுண. ௨௧.) 2. ஒரு மாதம், பங்குந என்னுமாரியபதம் தமிழிலே பங்குநியென வழங்கும் என்பர்.

பங்குபடுதல்—பின்னப்படல். (வழக்.)

பங்குரை—அதிவிடயம். "சுசி"பார்.

பங்கூரம்—1. அதிவிடயம். 2. மரமஞ்சள். 1, 2-வைத்தியபரிபா.)

பங்கேசம்—தாமரை.

பங்கேருகம் — தாமரை. (உ-ம்.) "பங்கேருகத்துமலர்" (அரிச்ச. மயா. ௨௪.)

பச்சடி—ஒரு கறி. (பிங்கல. ௧௬௨௫.)

பச்சரிசி — 1. அம்மான்பச்சரிசி. (உ-ம்.) "பிரமிவிளாபச்சரிசிபீளைசங்குலேளை" (தைல. தைலவ. ௧௬௫.) 2. அவியாமற்குத்தினவரிசி. (உ-ம்.) "பச்சரிசிப்பொங்கல்" (வழக்.)

பச்சன்னியம்—மரமஞ்சள். (வைத்தியபரி.)

பச்சாதாபம் — 1. இரக்கம். (வழக்.) 2. செய்தகுற்றத்திற்கு மனஸ்தாபம். (உ-ம்.) "கூறுமறையருட்கூடலென்றதற்கேபச்சாத்தாபமெய்தி" (சிவரக. பாக்கிய. ௬.)

பச்சிமம்—1. பின். 2 மேற்கு. (உ-ம்.) "பச்சிமத்தடைந்தபரிதி" (சிவரா.உற்பவ.௨௬.)

பச்சிலை — 1. ஒரு மரம். (உ-ம்.) "பச்சிலை மதுரஞ்சடை" (தைல.தைலவ.௫௬.) 2. பச்சையிலை. (திருவிளை. இசைவாதுவெ. ௬௪.)

பச்சிலைப்பாம்பு—ஒரு பாம்பு. (வழக்.)

பச்சிலையோனன்—பச்சோந்தி. (வழக்.)

பச்சிறைச்சி—பச்சையிறைச்சி, வேவா விறைச்சி. (வழக்.)

பச்சேனல்—பச்சையாயிருத்தல். (வழக்.)

பச்சேனவு—ஈரம். (வழக்.)

பச்சை—1. அவியாதது. 2. இளமை, பச்சைப்பிள்ளை. 3. ஈரம். 4. உடம்பிற்குத்தும் பச்சைக்கோலம். 5. ஒருநிறம், பசுமை. (உ-ம்.) (உ-ம்.) "பச்சையாவிலையோ" (பாரத.இருட்டி. ௮௦.) 6. ஒருபுதர்; அது: வாசனைப்புதர். 7. தோல். (உ-ம்.) "பச்சைநல்யாழ்"(புறநா.௧௧௪.) 8. பச்சைக்கற்பூரம். (தைல. தைலவ. ௧௪.) 9. பண்டம். (சிந்தா. காந்தருவ. ௬௩௦. உரை.) 10. புதன். 11. மரகதம். (உ-ம்.) "பைஞ்சுடரெறிக்கும்பச்சை" (திருவிளை. நான்மா. ௧௦.) 12. வங்காளப்பச்சை. (தைல.தைலவ.௬௭௫.) 13. விட்டுணு. (1, 2, 3, 4-வழக்.) (6, 10, 13-பிங்கல. ௬௭௫.)

பச்சைக்கருப்பூரம்—ஒருவகைக்கருப்பூரம். (வழக்.

பச்சைக்குதிரை — சூரியனுடைய பசுங்குதிரை. (உ-ம்.)"ஞாலங்காவலுடையவனொருநாட்பச்சைக்கோட்டகங்கரப்ப" (சேதுபு. வேதாள. ௪௫.)

பச்சைக்கொம்பு—இஞ்சி.(வைத்தியபரி.)

பச்சைநாடன்—ஒருவிதவாழை. (வழக்.)

பச்சைநாபி—ஒரு மருந்து. (வழக்.)

பச்சைநிறநிற்களன்—துருசி. (வைத்தியபரிபா.)

பச்சைப்பசேலெனல்— மிகு பசுமையாயிருத்தல். (வழக்.)

பச்சைப்பயறு —பசும்பயறு, பாசிப்பயறு. (வழக்.)

பச்சைப்பாம்பு—பச்சிலைப்பாம்பு. (வழக்.)

பச்சைப்பாலன்—இளங்குழந்தை.(வழக்.)

பச்சைப்புழு—ஒருபுழு. (வழக்.)

பச்சையன்—திருமால். (வழக்.)

பச்சைவில்—1. இந்திரதநு, 2. மன்மதன் வில். (1, 2-வழக்.)

பச்சோந்தி—கோம்பி. (பிங்கல. ௨௫௪.)

பசத்தல் — 1. காமமுதலியவற்றாற் பொன்னிறப் புள்ளியுண்டாதல். (உ-ம்.) "உங்களாங்கம்பித்தியைப்போற்பசப்பதுரைசெய்யுமே" (புகலூரந்தாதி. நங்களங்கமென்ற முதற்குறிப்புக்கவியிலறிக.) 2. பசுமையாதல்.

பசந்து — 1. பச்சைவண்ணமாய். (உ-ம்.) "ஒளிநிறம்பசந்துதோன்றி" (திருவிளை. யானையெய். ௨௭.) 2. பொன்னிறங்கொண்டு. (சிலப்பதி.)

பசப்பல்—பசப்புதல். (வழக்.)

பசப்பு—1. பச்சைநிறம். 2. பசலை. (திருவள். பசப்புறுபருவரல். ௧௦.)

பசப்புதல்—மயக்கல். (வழக்.)

பசபசத்தல்—தினவெடுத்தல். (வழக்.)

பசபசப்பு— } பசபசத்தல். (வழக்.)
பசபசேனல்— }

பசமநுத்திரம்—மரமஞ்சள்.(வைத்தியபரி.)

பசலை — 1. காமமுதலியவற்றானுண்டாம் பசப்பு. (உ-ம்.) "விரறங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்ம" (இராமா. உலாவியல். ௬௬.) 2. கொடிவயலைக்கீரை. (பதார்த். சிந்தா. ௬௫௪.) [வயலை-பசலையென மருவிற்று.] 3. பொன்னிறம். (உ-ம்.)"பாழூர்நெருஞ்சிப்பசலைவான்பூ" 4. வருத்தம். (முல்லைப்பாட்டு.)

பசவ்வியம்—புல். (வைத்தியபரிபா.)

பசள்—பல்மரம். (வைத்தியபரிபா.)

பசளி—ஒரு கீரை. (வழக்.) வழுவழுப்பும் புளிப்புமுள்ளது.

பசளை — வசளைக்கொடி; அது: கொடிப் பசளை அல்லது வெள்ளைப்பசளை, சிவப்புப் பசளை, துலுக்கப்பசளை அல்லது கோழிக்கீரை, பேய்ப்பசளை, வழுக்கைப்பசளை எனப் பல வகைப்படும். (வைத்தியபரிபா.)

பசறை—சிறுபசளைக்கீரை.(பதார்த்த.சிந்தா. கூருரு. உரை.)

பசாசம் —1. இணையாவினைக்கைமுப்பத்து மூன்றுவகைகளுளொன்று; அது: பெருவிரலுஞ்சுட்டுவிரலுமன்றி ஒழிந்த மூன்றுவிரலும் தம்மிற்பொலிந்துநிற்பது; அஃது: ஆகுநிலைப் பசாசம், முகநிலைப்பசாசம், உகிர்நிலைப்பசாசமென மூன்றுவகைப்படும். (சிலப். அரங்கேற்று. 18. உரை) 2. இரும்பு. (உ-ம்) "காந்தங் கண்டபசாசத்தவையே" (சிவஞானபோ. ரு.) 3. பேய். (உ-ம்.) "மயானம்"பார்.)

பசாசன்—பேயன். (வழக்.)

பசாசு—பேய். (சூ. நிக. க: சரு.)

பசாநம்—ஒருநெல. (வழக்.)

பசார்—சந்தை. [பார்சி.]

பசி —1 உணவைத்தகிக்கும் அக்கினி. 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பசித்தல். (உ-ம்) "பலகோடியாண்டுத்தினிலும்பசிப்பிணியாரிடருழந்து" (சிவரக. பசாசுமோசனை. கஅ.)

பசித்தல்—பசிகொள்ளல். (வழக்.)

பசிதம் — திருநீறு. (சைவவி. கூள.) [சிவத்துவக்கதைவிளக்கலாற் பெற்றபெயர்.]

பசிப்பாழி—உடம்பு (உ-ம்.) "பசிப்பாழி மூலமறுப்பார்" (சைவச. பொது. சஉக.)

பசிப்பு—பசித்தல். (மணிமேக.)

பசிரி—ஓர்பூடு; அது: குதிரைப்பசிரி, பெரும்பசிரி, வரட்பசிரி எனப் பலவகைப்படும். (சூ. நிக. ச: கூரு)-ல் பாவிரியென்றுபெயர்கூறுவர்.

பசு— 1. அநாதிபாசபந்தமுடைய ஆன்மா. (சைவப்பி. ருகூ.) [பச்-பந்தித்தல். உ-செயப்படுபொருள் விகுதி.] 2. ஆன். (சூ.நிக.கூ:கூ.) 4. யாகத்துக்குரிய ஆடு. (உ-ம்.) "சாகபசுநியாயம்"பார்.

பசுகாயத்திரி — பலியிடப்படு மிருகத்துக் குபதேசிக்கு மந்திரம்.

பசுங்கதிர்த்தே—சந்திரன்.(சூ.நிக.க:ருக.)

பசுங்கரந்தை — பச்சைக்கரந்தை, ஒரு பூண்டு. (வழக்.)

பசுங்குழவி—இளம்பிள்ளை. (உ-ம்.) "ஒருவாதபசுங்குழவியுடனிருத்தி" (திருவிளை. பழிபஞ். எ.)

பசுங்கோடி—அறுகு. (வைத்தியபரிபா.)

பசுங்கோற்றன்—ஒருகொற்றன், ஓர் பூடு.

பசுங்கோரை— ஒருபுல். (வழக்.)

பசுஞானம் — மனமுதலிய நான்குங் கண்ணுக்கு விளக்குப்போல உயிர்க்குக்கருவியாய் வேறுநிற்பனவென்றறிந்து நீங்கிநின்று இவற்றைக்கொண்டறியுங் கருத்தாவினுண்மை மயரராய்ந்தார்க்கு இனிதுவிளங்குவதாகிய ஆன்மசொரூபஞானம். (சி. சி. )

பசுண்டி—சீரகம். (வைத்தியபரிபா.)

பசுத்துவம்—ஆன்மதத்துவம்.

பசுதரிசநம்—ஆன்மதரிசநம்.(சித்தா வழக்.)

பசுதருமம்—1. இட்டிமுதலியதருமம.(காஞ்சிப்பு. சத்ததானப். எ.) 2. முப்பத்திரண்டறம். (காஞ்சிப்பு.கழுவாய்ப். உகூஅ-ஆவதுகவிமுதல், உசுகூ-ஆவது கவிவரை காண்க.)

பசுதன்மம் — ஆன்மபுண்ணியம், இட்டிமுதலிய தருமம் (உ-ம்.) "ஒருபாவன்மேனுள்-முன்னர்செய்தபசுதன் மந்தன்னில்" (சிவரக. பசாசு. உo.)

பசுந்தினை செவ்வித்தினை. (உ - ம்.) "பசுந்தினைமூரல்பாலொடு பெறுகுவீர்" (பெரும்பா. கசுஅ.)

பசுநா—பராய்மரம். (சூ. நிக. ச: உo.)

பசுநீகாரம்—ஆணவமலம். (ஞானமிர்தக் கட்டளையிற் காண்க.)

பசுபதி—சிவன். (உ-ம்.) "பர்லலோசநன்" பார்.

பசுபந்தம்—ஒரு யாகம். (வழக்.)

பசுபுண்ணியம்—ஆன்மாக்கட்குச்செய்யுந் தருமம். இட்டியாதிதருமங்களும், முப்பத்திரண்டு தருமங்களுமாம். முறையே (காஞ்சிப்பு. சத்ததானப். எ-ஆவது கவியிலும், கழுவாய்ப்பட. உகூஅ-ஆவது முதல், உசுகூ-ஆவது கவிவரையிலுங்காண்க.

பசுபோகம்—விடயவிம்பிதமாகிப் போகரூபமாகிய புத்தியின் சாயையின் சம்பந்தத்திலே பசுவின் சிற்சத்தியிலாகின்ற உணர்ச்சி விளக்கம், அப்போகஞ் சுகமுந் துக்கமுமென விருவகைப்படும். (சைவப்பி. கூகூ.)

பசும்பதம் — விளைந்தநெல்லும் பதிக்குங் காய்களும்; இதற்கு அரிசியும் கறியுமென்று பெயர். (உ-ம்.) "பண்ணியமட்டியும்பசும்பதங் கொடுத்தும்" (பட்டின. உoகூ. உரை.)

பசும்பயறு—பாசிப்பயறு. (வழக்.) (வைத்தியபரிபா.)

பசும்பிடி—பச்சிலைமரம். (சூ. நிக. ச: கூக.)

பசும்புற்றரை—சாட்டுவலம் என்றுபெயர். (சூ. நிக. ரு: உக.)

பசும்பொன்—1. ஓட்டற்றபொன், மாற்றுயர்ந்தபொன். (உ-ம்.) "பாணன்சூடியபசும்பொற்றாமரை" (புறநா. கசக.) 2. கிளிச்சிறையென்னும் பொன். (மதுரைக். சகo.)

பசுமம் — திருநீறு. (சைவப்பி. கூஅ.) [பாவங்களைநீறுக்கலால்.]

பசுமாந்தகம்—நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவனங்களுளொன்று. (சி-லி. கிரி. உக. உரை.) [இது அக்கினிதிக்கிலுள்ள பத்துப்புவனங்களுளொன்றென்று விளங்குகின்றது. (சி.சி. அ: எ. மறை.)

பசுமெழுக்கு—புதுமெழுக்கு. (உ-ம்.) "பாகுகுத்தபசுமெழுக்கில்" (பட்டினப்பாலை. கஅஅ.)

பசுமை — 1. செவ்வி. (உ - ம்.) "பசுந்தாமரைத்தாள்" (திருநூற். உரு.) 2. பச்சை. (சூ. நிக. அ: உக.) "பசுந்தாட்பாம்பினூற்புரிநூல்" என்னும், (திருவிளை. திருவால. உo-ம் செய்யுட்பாகத்திலுள்ள பசுமையென்பதற்கு இளமையென்று பொருள்கூறுவர்.

பசுமைவெளியுப்பு—விளையலுப்பு. (வைத்தியபரிபா.)

பசுவம்—கோரோசனை. (வைத்தியபரிபா.)

பசுவின்றக்காளி—ஒருபூண்டு. (வைத்தியபரிபா.)

பசேரெனல்—பச்சைநிறமாயிருத்தல். (வழக்.)

பசை—1. ஒட்டும்பசை. (வழக்.) 2. செந்தளிப்பு. (உ-ம்.) "ஈராண்டுமழையின்றிப்பசையில்கருப்புவுரத்தளர்வான்" (சேதுபு. வேதாள. உo.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பற்று. (திருவிளை. அன்னக்குழியும். எ.)

பசைக்காரம்—காரங்கூட்டியபசை. தட்டார் குழூஉக்குறி.

பசைதல்—அன்புகொள்ளல். (உ-ம்.) "பசைதல்பரியாதாமேல். நாலடி.)

பசைந்தார்—சிநேகிதர். (சூ. நிக. உ: குஉ.)

பசையாப்பு—பற்றுகியதொடர்ச்சி. (உ-ம்.) "உன்பாதகமலந்தொழுவேங்கள்பசையாப்பவிழ்ப்பணியாயே" (சிந். பதுமை. எஎ.)

பசைவு—1. அன்பு. 2. நட்பு. (1,2-வழக்.)

பஞ்சக்கிலேசம் — ஐவகைக் குற்றங்கள்; அவை: அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பன. (வள். கூஅ. பரி.) [பஞ்சம்-ஐந்து. கிலேசம் குற்றம்.]

பஞ்சக்கிலேசி — அசுமிதம் - அகங்காரம், அவித்தை, அவா, இராகம், துவேஷம் என்னுமைந்து கிலேசத்தையுடைய புருடன். (சி. சி. உ: குகூ. ஞானப்.)

பஞ்சக்குரோசவெல்லை—காசியிலோரிடம். (உ-ம்.) "தேவதேவவிசுவேசசெகமேழினுங்குருநாத—பாவநாசமாகாசிப்பதிநாயக நின்றிருவையிறைல்-ஒவ்வரியபாதகங்களொழிப்பான்பஞ்சக்குரோசத்தை - ஆவபிரதக்கணஞ்செய்தே வருமாவேலைகேட்டிபேற்கே" (காசிரகசியம். பஞ்சக்குரோசபிரதட்சணவத்தியாயம்.)

பஞ்சகச்சம்—பிராமணர்முதலோர் உடையில்வரும் ஐந்துவகைமடிப்பு. கச்சம் - உடையினுனி. (வழக்.)

பஞ்சகசாயம்—தேன், நெய், பால், வாழைக்கனி, சர்க்கரை. (வைத்தியபரிபா.)

பஞ்சகஞ்சுகம்—காலம், கலை, நியதி, வித்தை, இராகம் என்னும் மைவகைப்போர்வை. (உ-ம்.) "பஞ்சகஞ்சுகன்"பார்.

பஞ்சகஞ்சுகன் — இராகம், காலம், கலை, நியதி, வித்தையாகிய ஐந்து கஞ்சுகத்தையுடைய புருடன். (சி. சி. உ: குகூ. ஞானப்.)

பஞ்சகதி—மயூரகதி, மல்லகதி, வாநரகதி, விட்டகதி, வியாக்கிரகதியென்று குதிரைகளுக்குச்சொல்லப்பட்ட ஐவகைக்கதிகள். (சூ. நிக. கஉ : சஎ.)

பஞ்சகந்தக்கொத்து — ஞானசத்தியாகிய விஞ்ஞானகந்தம், வாசனாசமூகமாகிய சமஸ்காரகந்தம், சுகபுத்தி, துக்கபுத்தி உபேட்சாபுத்திகளாகிய வேதநாகந்தம், சத்தசமூகமாகிய சம்ஞாகந்தம், மூர்த்தபூத சமூகமாகிய ரூபகந்தமென்னுமித்தொகுதி. இவை நாற்பத்துமூன்றுவகைப்படும் (சி. சி. ச: கு. ஞானப்.)

பஞ்சகந்தம் — பௌத்தமதத்தார் கொள்ளுமைந்துகந்தங்கள்; அவை: விஞ்ஞானம், சமஸ்காரம், வேதனை, சம்ஞைரூபம் என்னுமைவகைக் கந்தங்கள். (சி. சி. ச: கு. ஞானப். பெரியபுரா. திருஞானசம்பந்த. கககக.) சமஸ்காரம்-செய்கை. சம்ஞை-குறிப்பு. என்றறிக. கந்தம்-கொத்து அல்லது கூட்டம்.

பஞ்சகந்நிகள்—அகலிகை, சீதை, தாரை, திரௌபதி, மண்டோதரி என்னும் ஐந்து கந்நியர். (அபிதாநசி. வழக்.) வேறுகூறுவர்சிலர்.

பஞ்சகம்—ஐந்தின்கூட்டம். (வழக்.)

பஞ்சகம்மாளர்—கன்னார், கொல்லர், சிற்பர், தச்சர், தட்டாரென்பவர். (சிற்பர் - கல்வினையர் (பிங்கல. எகஅ.)

பஞ்சகர்த்தாக்கள்—அயன், அரி உருத்திரன், சதாசிவன், மகேசன் என்னுமைவகைக் கருத்தாக்கள். (வழக்.)

பஞ்சகமம்—ஆடாதோடை, சீந்தில், கண்டங்கத்தரி, கையாந்தகரை, பெரும்பலா. (வைத்தியபரிபா.)

பஞ்சகருவி-தோல், துளை, நரம்பு கஞ்சம், மிடறு என்னுங்கருவிகள். (பிங்கல. கூகச.)

பஞ்சகலியாணம்—(அருகச) சுவாக்காவதரணம், மந்திராபிடேகம், மகாப்பிரஸ்தாநம், கேவலோற்பத்தி, பரிநிர்வாணம் என்னுமைவகைக் கலியாணங்கள். (திருநூற். சு. உரை.)

பஞ்சகலாசுத்தி — பஞ்சகலைகளாலாகுஞ் சுத்தி. (சி. சி. அ: ரு. ஞாநப்.)

பஞ்சகலாபிமாநிகள் — பஞ்சகலைகளை அபிமாநிக்கும் பஞ்சசத்திகள். (சி. சி. அ: சு. சிவாச்.)

பஞ்சகலியாணி — ஒருவகைக் குதிரை. (உ-ம்.) "தலைவால்வியனுரமென்றவிம்மூன்று — மொருவியவுறுப்போரைந்தினும்வெள்ளையுள்ளதுபஞ்சகலியாணி" முன்னடிகளிற்கூறிய வெட்டனுள் மூன்றெண்க. (திருவிளை. நரிபரியா. ககo.)

பஞ்சகலை—ஐவகைக்கலை; அவை: நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை, யென்பன. (சிவஞானசித்திபார். அ-ஆம் சூ. எ, அ, க கவிகளிலறிக.)

பஞ்சகவ்வியம்—விதிப்படி கூட்டியமைக்கப்பட்ட கோசலம், கோமயம், தயிர், நெய், பாலென்பவைகளின் தொகுதி (உ-ம்.) "பாறயிரானநெய்யாநற்பஞ்சகவ்விபத்தாலீசற்கு" (சேது பு. இராமநாத. சஅ)

பஞ்சகற்பம் — கடுக்காய்த்தோல், கத்தூரி மஞ்சள், நெல்லிப்பருப்பு, மிளகு, வேப்பம் வித்து. (வைத்தியபரிபா.)

பஞ்சகாசம்—ஐந்துவகைக்காசரோகங்கள். (தைலவ.)

பஞ்சகாயம்—திரிபலையும், வெங்காயமுங் காயமும். (வைத்திபரிபா.)

பஞ்சகாலம் — கருப்புக்காலம், அஃதவிலை குறைந்தகாலம். (வழக்.)

பஞ்சகாரகம்—காயம், வெள்ளுள்ளி, வெங்காயம், கடுகு, வெந்தயம். (வைத்தியபரிபா.)

பஞ்சகாரம்—நவட்சாரம், எவட்சாரம், சத்திசாரம், அவச்சாரம், கதலிச்சாரம்; (வைத்தியபரிபா.

பஞ்சகாவியம்—ஐவகைக்காவியம்; அவை: சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி. (வழக்.)

பஞ்சகிருத்தியம் —சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னுமைந்தொழில்கள். இவ்வைந்தொழிலும் ஒவ்வொன்றுக் கைவைந்தாய் இருபத்தைந்தாபேதமாம். சிருட்டி; சத்திகள்படைப்பு, உயிர்ப்படைப்பு, பாசங்களின்படைப்பு, எண்பத்துநான்குநூறாயிரயோனிபேதங்கள் நாடோறுஞ்செய்யும்படைப்பு என ஐந்தாம். திதியும், சங்காரமும்; முன்சொன்ன ஐவகையும், வளர்ப்பதுவும், ஒடுக்குவதுமாம். திரோபவம்; பிரபஞ்சம் மெய்யாகவும் சிவன் பொய்யாகவுஞ்செய்தல், தத்துவங்களிலே செலுத்தல், தத்துவங்களோடேகூடியறியச்செய்தே யறிவிக்கும்பொருளைக் காட்டாதுவிடல், கன்மமேயுருசிப்பித்தல் என ஐந்தாம். அநுக்கிரகம்; தன்னையுணர்த்து முறைமை, மானும் மழுவும் சதுர்ப்புயமும் திரிநேத்திரமுமாகிய தன்வடிவுகொண்டு முன்னின்று இரட்சித்துவிடுதல், தன் வடிவுகரந்து மாணிடனாக வெளிப்பட்டு இரட்சித்தல், மாணுடர்முதலாயினோர்க்குப் பக்குவமிகுதியாலே வேடம் மாறித்தோன்றி மெய்யறிவித்தல், மந்திர முதலியவற்றிலே அநுக்கிரகித்தல் என ஐந்தாம். (த-பிர. உசு.)

பஞ்சகுய்பாட்டகாதநம்—அபர முத்தித் தாநத்தொன்றாகிய உருத்திரர்பதம். (சிவதரு.)

பஞ்சகூடம் — ஆமை. (வைத்தியபரிபா.)

பஞ்சகோசக்தகை — தேகம்; அது: பஞ்சகோசத்தாலானது. (கைவல்.)

பஞ்சகோசதாதான்மியம் — அந்நமயம், ஆநந்தமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞாநமயம் ஆகிய இவ்வைந்தையுந் தானெனல்; இவற்றுள்: அந்நமயகோசதாதான்மியம் - நான் பருத்தேன் இளைத்தேனென்பது. ஆநந்தமயகோசதாதான்மியம் - நானறியேனென்பது. பிராணமயகோசதாதான்மியம் - எனக்குப்பசிக்கிறது தாகிக்கிறது என்பது. மநோமயகோசதாதான்மியம்—நான் சங்கற்பித்தேன் விகற்பித்தேன் என்பது. விஞ்ஞாநமயகோசதாதான்மியம்-நான்கர்த்தா போக்தாஎன்பது. (உபநி. கஎ.)

பஞ்சகோசம் — அந்நமயம், ஆநந்தமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞாநமயம் ஆகிய பஞ்சகோசம் என்பன. (வாசுதே. எரு.) [கோசம் போல ஆத்மாவையறியவொட்டாமல் மறைத்தலாற் பெற்றபெயர்.] (சிவஞானசித். சு. சூத். உசு.) கோசம்-உறை.

பஞ்சகோமாதாக்கள்— நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்பனவாகிய தெய்வப்பசுக்கள். (கோயிற்பு. இரண்யவன்ம. சு. உரை.)

பஞ்சகோலம்—சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், திப்பிலி, திப்பிலிமூலம் என்பன. (வைத்தியபரிபா.)

பஞ்சகௌடம் — கௌடதேயத்தினைந்து பகுதி; அஃது: உற்கலம், கானுகோபிஜம், சாரசந்து, சுத்தகௌடம், மாந்தலை என்பன. (அபிதாநசிந்தாமணி.)

பஞ்சகௌவியம்—பஞ்சதிரவியம். (உ-ம்.) "பாங்கினுறற்பஞ்சகௌவியமஞ்செனும்மிர்தம்" (சிவரக. நாரத. சு.)

**பஞ்சசத்தி**—பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னுமைவகைச் சத்திகள்; அவற்றுள்: பராசத்தி, பரசிவத்திலாயிரத்தொருகூறுன நிட்கள சிவனுடனேகூடிக் கிருத்தியத்தைத் திருவுள்ளத்திலடக்குஞ்சத்தி. ஆதிசத்தி; பராசத்தியிலாயிரத்தொருகூறு வலிமையையுடைத்தாய்ப் பெத்தமுத்திகளில் வியாபிக்குஞ்சத்தி. இச்சாசத்தி; ஆதிசத்தியில் ஆயிரத்தொருகூறு வலிமையையுடைத்தாய் வடிவைப்பிரேரிக்குஞ்சத்தி. ஞானசத்தி; இச்சாசத்தியிலாயிரத்தொருகூறு வலிமையையுடைத்தாய் அறிவைவிளக்குஞ்சத்தி. கிரியாசத்தி; ஞானசத்தியிலாயிரத்தொருகூறு வலிமையையுடைத்தாய்ப் பஞ்சகிருத்தியத்தை நடத்துஞ்சத்தி. (சதாசிவரூபம். கூ. உரை.)

**பஞ்சசயநம்**—அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர் இவைகளினுற் செய்யப்படுஞ்சயநம். (சூ. நிக. கஉ: சூ0.)

**பஞ்சசன்** — ஓரசுரன். இவனைத் திருமால் கொன்று அவனெலும்பைக்கடைந்து பாஞ்சசந்நியமென்னுஞ் சங்கமாகக்கொண்டார்.(அபிதாநகோ.)

**பஞ்சசாதநம்**—ஆசநமும், யோகபட்டமும், தண்டும், கமண்டலமும், செபமாலையுமாகிய ஐந்து சாதநங்கள். (சி. சி. பர. மாயா. கரு.)

**பஞ்சசாதாக்கியங்கள்**—நிட்களமான பஞ்சசத்திகளிடத்திலும் சர்வான்மாக்களுக்கும் நியாநபூசைநிமித்தமாகச் சிருட்டிக்கப்பட்ட ஐந்துசாதாக்கியங்கள்; அவை: சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்துரு சாதாக்கியம், கன்மசாதாக்கியம் என ஐந்துவகைப்படும்; அவற்றுள்: சிவசாதாக்கியம் முதல் நான்கு சாதாக்கியமும் இலிங்காகாரமாகவே யிருக்கும். கன்மசாதாக்கியம் ஒன்றுமே சிவலிங்கமும் பீடமுமாயிருக்கும். (சி. சி. உ: எஎ. மறை.)

**பஞ்சசாந்தி**—ஒருமந்திரம். (உ-ம்.) "பண்ணமர்பவமானத்தைப்பஞ்சசாந்தியை" (சேது பு. இராமநாத. சஎ.)

**பஞ்சசிகம்**—நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று; இது: வாயுதிக்கிலுள்ள பத்துப் புவநங்களுளொன்றென்பர். (சி-வி. கிரி. உக: அ. உரைகாரர்.)

**பஞ்சசிகி** — சத உருத்திரரிலே வாயுதிக்கினிருக்கும் சத உருத்திரரிலொருவர். (வி-ணி. உஎ0.)

**பஞ்சசிகை**—சௌளம்பண்ணுதுவிடுமைந்திடம். (வழக்.)

**பஞ்சசுத்தி** — பூதசுத்தி, தாநசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்னுமைவகைச்சுத்திகள்; அவற்றுள்: பூதசுத்தி, பூதபரிணமைதேகத்தைச்சுத்திசெய்தல் - அஃதாவது, பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களாகிய வித்துடையதும், படைத்தல் காத்தல்களைச்செய்யும் பிரமவிஷ்ணுக்களால் உண்டாக்கப்பட்ட மூளையுடையதும், விருப்புவெறுப்புச் சோதிட்டோமயாகமுதலிய தருமம் பிரமகத்திமுதலிய அதர்மம், அநித்தம், அசுத்தம், துக்கமென்னுமிவற்றிற்குக் காரணமாகிய மோகமென்னும் இவைகளாகிய வேருடையதும், சத்தகோடி மகாமந்திரங்களாலும் போஷிக்கப்படுவதும், கலைமுதலிய தத்துவங்களாகிய நிலையுடையதும், காரணதன்மாத்திரைகளாகிய மகாசாகைகளும் ஞானேந்திரிய கன்மேந்திரங்களாகிய உபசாகைகளுமுடையதும், காரியதன்மாத்திரையாகிய சத்தாதிவிடயங்களைப்பற்றும் வடிவாகிய வியாபாரங்களைத் தளிராகவுடையதும், புத்திகுணங்களாகிய தன்மம் ஞானமுதலிய எட்டின் விகாரங்களாகிய முன்னூறுபாவங்களின் கூட்டத்தைப் பூவாகவுடையதும், புத்திதத்துவத்திற் றேன்றும் சித்தத்தால் அவதானிக்கப்படும் பொருள்களையே பழமாகவுடையதும், புருடனாகிய பறவையினாலே அநுபவிக்கப்படுவதும், போகவிடயமாகிய சரீரத்தையும், போகக்கிரியையின் கர்த்தாவாகிய ஆன்மாவையும் இரசமாகவுடையதும், மேனேக்கும் வேருடையதும், கீழ்நோக்குங் கொம்பருடையதுமாகிய சரீர ஆலமரரூபத்தைத்தியாநித்து—கும்பகம், பூரகம், இரேசகமென்னுமிவற்றின் பகுப்புகளாற் பஞ்சகலாமந்திரங்களைப் பிருதிவிமுதலிய தத்துவங்களோடிருக்குங் கந்தமுதலிய குணங்களினிலையோடு முறைப்படி சேர உச்சரித்து, பத்திரமுதலியன ஒழிந்த பாவனையினாலும், உலர்ந்தபாவனையினாலுந் தகித்து நீருக்கி, ஒழிந்தபாவனையினாலும், சுத்தாகாச சொரூபபாவனையினாலும், சத்தியானனக்கப்பட்ட மந்திரமயமான வேறு சரீரமுடையவனுகித் தன்னிருதயத்திலே துவாதசாந்தத்தினின்றுஞ் சோதிலிங்கமாவாகித்துப் பாவனையினால்வந்த மலர்முதலியவற்றுற் புறம்புபோலருச்சித்து, நாபிகுண்டத்தக்கினியின் ஞானாக்கினியைவைத் தோமஞ்செய்து சிவார்ப்பணம்பண்ணி அச்சிவனைப் புறத்தேவந்து பூசனைகொண்டருள அநுமதி கோடலாம். [இதுவேறு பிரகாரமாகவுங்கூறப்படும். [illegible]] தாநசுத்தி: அஸ்திரமந்திரங்களினாலே தாளத்திரயஞ்செய்து அங்குநின்றுமிடையூறகற்றி அஸ்[illegible]

திரமந்திரத்தால் எம்மருங்குஞ் சொலிக்கும் அக்கினிவண்ணமாகிய மதிலையும், கவசமந்திரத்தால் அகழையுஞ்செய்து, சத்திமந்திரத்தான் மேலுங்கீழுஞ் சத்திகளினிறைவாகப் பாவித்துச் சிவலிங்கத்துக்குமுன் மண்டலமிட்டுப் பூமிதேவியைச் சகலாபரணசகிதையாகத் தியானித்த, இருதயமந்திரத்தாற் கந்தமுதலியவற்றைக்கொண் டருச்சித்து அஸ்திரமந்திரத்தினாலே திக்குபந்தநஞ்செய்தலாம். திரவிய சுத்தி: சுவர்ணமுதலியவற்றானியற்றிய அருக்கிய முதலிய பாத்திரங்களை அஸ்திரமந்திரத்தாற்கழுவி விந்தமிர்தமாகிய நீரை வௌஷடந்த இருதயமந்திரத்தானிறைத்துத் திரவியங்களிட்டுப் பஞ்சப்பிரமமுதலிய மந்திரங்களான் முறைப்படிபூசித்துச் சங்கிதாமந்திரத்தாலபிமந்திரித்துத் திக்குபந்தநமும் அவகுண்டநமுஞ்செய்து தேநுமுத்திரைகொடுத்து அருக்கியசலத்தாலே தன்னையும் பூசோபகரணங்களையும் புரோட்சித்து, கவசத்தா லப்பியுக்கணமும் இருதயத்தால் அபிமந்திரித்தலும் கவசத்தால் அவகுண்டநமும் தேநு முத்திரையால் அமிர்தீகரணமுஞ்செய்து, புஷ்பத்தாலருக்கிய நீரெடுத்துத் திருமஞ்சநகுடத்தின் கணிட்டுத் தேநுமுத்திரை கொடுத்தலாம். மந்திரசுத்தி: தன்னாசநத்திற் சிவாசநமும் மார்பிற்சிவமூர்த்தியும் நியசித்துச் சந்தநதிலகமிட்டு மூலத்தாற் சிரசிலே புட்பமிட்டு ஆன்மபூசைசெய்து, குறில், நெடில், அளபெடையென்னும் மாத்திரைகளின் முறைப்படி பிரணவவாதியாகவும் நமோந்தமாகவும் மந்திரங்களை யுச்சரித்தலாம். இலிங்கசுத்தி: ஸ்நாநவேதிகையில் விரித்த வஸ்திரத்தினாலே சடுத்தாசநங்கற்பித்து இலிங்கத்தை யெழுந்தருளப்பண்ணி அந்த ஸ்நாந வேதிகையில்வைத்து விதிப்படி பூசித்து, நின்மாலியங்கழித்து, இலிங்கத்தையும் ஆவுடையாரையும் அலம்பிச் சாமாநியார்க்கியத்தாலுஞ் சுத்தோதகத்தாலும் அபிஷேகஞ்செய்து, தைலமுதல்அருக்கியசலமீறாகமுறைப்படி யபிஷேகஞ்செய்து, திருவொற்றாடைசாத்திப் பீடத்திலெழுந்தருளப்பண்ணி ஓர்புஷ்பஞ் சாத்துதலாம். (இப்பஞ்சசுத்தி புறப்பூசையின்கட் பஞ்சசுத்தி.) இனி அகப்பூசையின்கட் பஞ்சசுத்திகளாவன: பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தியென்பனவாம். அவற்றுள்; பூதசுத்தியாவது: பூதம்-சூக்குமபூதம் என்பது முப்பத்தாறுதத்துவங்கள் நாமமல்ல, அவையனைத்துஞ்சடம், அவையுந்தாமாகக் காரியப்படமாட்டாவென்றறிதலாம். ஆன்மசுத்தியாவது: அப்படியறிதல் திருவருளானன்றி ஆன்மபோதத்தாலன்றென்றறிதலாம். திரவியசுத்தியாவது: ஆன்மபோதத்தாற் றானேயறிதற்குச் சேட்டையில்லையென்று கண்டதுகொண்டே ஆன்மாவுக்கறிவில்லையென்றறிந்து, கண்டு கேட்டுண்டுயிர்த்துற் றறிவதெல்லாம் திருவருளென்றறிதலாம். மந்திரசுத்தியாவது: ஐந்தெழுத்தைச் சிகாரமுதலாகமாறி அதனுண்மையை விசாரித்தறிதலாம் இலிங்கசுத்தியாவது: பதியெங்கும் பூரணமாய்ப் பசுபாசங்களிரண்டினும் பிரிவறநின்று அவற்றைச் சேட்டிப்பித்துநின்ற தன்மையறிந்து, அத்தகைய சிவம் இலிங்கத்தினுமெழுந்தருளியிருக்குமென் றறிதலாம். (திருவாத. திருப்பெருந்துறை. ஏ௦ உரை.) புறப்பூசையிலேசெய்கிற தானசுத்திக்குப் பதிலாக அகப்பூசையிலே ஆன்மசுத்தியென்றார்; அகப்பூசைக்கு ஆன்மா தானமாதலில்.

பஞ்சஞாநன் – புத்தன். (வழக்.)

பஞ்சணை—பஞ்சாலாயமெத்தை. (உ-ம்.) "பத்திமண்டபத்திற்போவார்பஞ்சணை மிசையேபோவார்" (சிவரக. விசையை. உச.)

பஞ்சதசகம்—பதினைந்து. (வழக்.)

பஞ்சதசசிராத்தம் — அந்தியேட்டிமுதலிய கிரியைகளுளொன்று. (சைவச. பொது வி. உகக. உரை.)

பஞ்சதசம்—பதினைந்து. (வழக்.)

பஞ்சதசாட்சரி— பதினைந்தட்சரத்தாலாய ஒரு மந்திரம். (சி. சி. பாயிர. ஞானப்.)

பஞ்சதசி–அமாவாசி, பௌர்ணிமை.(உ-ம்.) "பதினைன்கிருநான்குபஞ்சதசிதையின்முதனாள்" (சைவச. பொதுவி. சஉ.)

பஞ்சதந்திரம்—1. ஒரு நூல்; அஃது: அசம்பிரேட்சியகாரித்துவம், அர்த்தநாசம், சந்திவிக்கிரகம், சுகிர்லாபம், மித்திரபேதம் என்னுமைவகைத் தந்திரங்களையுடையது. 2. பரீட்சாதந்திரம், பேததந்திரம், மித்திரகாரியதந்திரம், வஞ்சநாததந்திரம், விசுவாசதந்திரம். (வி-ஞானி. உகட.)

பஞ்சதரு — பஞ்சதாரு, கற்பகமுதலியன. (சூ. நிக. ச: உ.)

பஞ்சதன்மாத்திரை–சத்த ஸ்பரிச ரூப ரச கந்தமென்னுமைந்து தன்மாத்திரைகள்;இவை: பூதாதிகவாங்காரத்திற் றோன்றுவன. (சிவஞானசி. உ. சூத். சச.)

பஞ்சதாரை—சருக்கரை. (வைத்தியபரி.)

பஞ்சதாளம் — ஐவகைத்தாளம்; அவை: சச்சற்புடம், சாசற்புடம், சட்பிதாபுத்திரிகம், சம்பத்துவேட்டம், உற்கடிதம் என்பன. (சங்கீதநூலிற்காண்க.) பொருட். நிகண்டிலறிக.

**பஞ்சதிரவியம்**— 1. கோசலம், கோமயம், தயிர், பால், நெய் என்பன. (வழக்.) 2. மலைபடுதிரவியம், காடுபடுதிரவியம், நாடுபடுதிரவியம், நகர்படுதிரவியம், கடல்படுதிரவியம் என்பன; இவற்றுள் மலைபடுதிரவியமாவது: மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம். காடுபடுதிரவியமாவது: தேன்கூடு, தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி. நாடுபடுதிரவியமாவது: செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விழநீர். நகர்படுதிரவியமாவது: அரசன், பித்தன், கருங்குரங்கு, யானை, கண்ணடி. கடல்படுதிரவியமாவது: உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை. (சூ. நிக. கஉ: சக, சஎ, சஅ.) காடுபடுதிரவியத்தில் தேன்கூடு ஒன்றென்றுர். பிங்கலத்தில் அதனைநீக்கிச் சூடாமணியில் இறடியென்றுர். இறடி-கருந்தினை. 3 சீரகம், சண்பகப்பூ, கோட்டம், அதிமதுரம், ஏலம் (வைத்தியபரிபா.)

**பஞ்சதிராவிடம்**—திராவிடம், கர்நடம், கூர்ச்சரம், மகாராட்டிரம், தெலுங்கமென்பன. கர்நடம்-தமிழ்தெலுங்குதேசங்கட்கிடையிலுள்ளது. (அபிதாநசி.)

**பஞ்சதீர்த்தங்கள்** — ஐவகைத்தீர்த்தங்கள்; அவை: ஆரிடதீர்த்தம், தேவதீர்த்தம், பிதிர்தீர்த்தம், மானிடதீர்த்தமென்பன. (சைவச. பொதுவி. சுசு. உரை.)

**பஞ்சதுந்துபி**—கஞ்சக்கருவி, கண்டக்கருவி, துளைக்கரு, தோற்கருவி, நரம்புக்கருவி, என்னுமைவகை வாத்தியம். (கோயிற்பு. நடராச. அ: உரை.)

**பஞ்சதூபம்** — அகில், கருஞ்சீதாரி, குந்துருக்கம், குக்குலு, சூடன்கர்ப்பூரம. (சிவதரு.)

**பஞ்சநகம்**—1. ஆமை. 2. புலி. 3. யானை. (வைத்தியபரிபா.)

**பஞ்சநகி**—உடும்பு. (வைத்தியபரிபா.)

**பஞ்சநதி**—திருவையாறு. (பெரியபு. திருநாவுக். ௬௬௬.)

**பஞ்சநமக்காரம்**—(அருக) ஓர் நமக்காரம். (சிந்தா. பதுமை. கஉச. உரை.)

**பஞ்சநிம்பம்**—1. ஐவகைவேம்பு. நல்வேம்பு, மலைவேம்பு, நிலவேம்பு, கருவேம்பு, சிவனர்வேம்புஎன்பன. 2. வெப்பிலை, பட்டை, பழம், பூ, வேர் என்றுங்கூறுவர். (வைத்தியபரிபா.)

**பஞ்சப்பள்ளி**—ஒரு திருப்பதி. (திருவாச. கீர்த்தி. கரு.)

**பஞ்சப்பிரமசடங்கமூர்த்தி** — சதாசிவன். (சி. சி. க: அ. சிவாக்.)

**பஞ்சப்பிரணவகலைகள்**—அகார, உகார, மகார, விந்துநாதங்கள். (சி. சி. ச: ௬. ஞானப்.)

**பஞ்சப்பிரமசடங்கதேவர்** — பதினெருமந்திரதேவர். சைவச.பொதுவி. ருஉஅ உரை.)

**பஞ்சபிரமசடங்கம்** — பதினெருமந்திரம். (சைவவி. ககஉ.)

**பஞ்சப்பிரமம்**—1. சத்தியோசாதம்,வாமம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் மந்திரங்கள். (வி-ணி. ககக.) 2. யசுர்வேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு.உரை.)

**பஞ்சப்பிரமமந்திரசரீரி** — சதாசிவன். (கூர்மபு. வருணா. கஉ. உரை.)

**பஞ்சப்பிரமவடிவு** — பஞ்சப்பிரமமந்திரவடிவு. (சி. சி. க: ருக. சிவஞா.)

**பஞ்சப்பிரமை** — பேதப்பிரமை, கர்த்தவ்வியப்பிரமை, சங்கப்பிரமை, விகாரப்பிரமை, ஜகப்பிரமைஎன்பன; இவற்றுள் பேதப்பிரமை: பிரமமும் பரமேசுவரனும் வேறென்பது. கர்த்தவ்வியப்பிரமை: கர்த்திருத்துவாதீகம் வாஸ்தவமென்பது. சங்கப்பிரமை: சரீரத்திரயவிச்சின்னனாகிய ஆத்மாவைச் சங்கனாய்க் காணப்படுகிறது. விகாரப்பிரமை: சகத்துக்குக் காரணமாகிய பிரமத்தை விகாரியென்பது. ஜகப்பிரமை: காரணமானபிரமமன்றி இந்தச் சகத்துச் சத்தியமென்பது. (வாசுதே.கஎக.)

**பஞ்சப்பிராணன்**—பஞ்சபூதங்களின்சேர்க்கையான இரசோகுண முதலியவற்றினின்றும் பிறந்து கிரியாதாநபேதங்களிறுல் ஐந்துவகைப்பட்டிருக்கும் பிராணவாயு; இஃது: இருதயத்தாநத்திலேநின்று பசிதாகங்களை உண்டாக்கும்போது பிராணனென்றும், குதத்திலேநின்று மலசலவிசர்ச்சநஞ்செய்யும்போது அபாநனென்றும், நாபியிலேநின்று அந்நபாநாதிகளைப் பசநமாக்கும்போது சமானனென்றும், கண்டத்திலேநின்று மூச்சுவிடும்போது உதாநனென்றும், சரீரமெங்குநின்று உணவுகளைச் சகல நாடிகளிலுமிழுக்கும்போதுவியாநனென்றும் பெயர்பெறும். (விசார. கஎசு.)

**பஞ்சபசு**—ஐவகைப்பசுக்கள்; அவை: நந்தை பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்பனவாம். (சிவதருமோத். கோபுரவி. கஉஉ.)

**பஞ்சபட்சி**— 1. எழுத்துப்பொருத்தமறியும் ஐந்துபட்சி; அவை: வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்பன. அவைகட்குமுறையே எழுத்துக்கள் அ, இ, உ, எ, ஒ என்பன. (சூ. நிக. கஉ: ௬உ.) 2. வைப்புப்பாஷாணமுப்பத்திரண்டினென்று.

**பஞ்சபட்சிக்காதல்**—ஒருசாத்திரம். (வழக்.)

**பஞ்சபலோதகங்கள்** — எலுமிச்சம்பழச்சாறு, குழஞ்சிப்பழச்சாறு, தமரத்தம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, மாதுளம்பழச்சாறுஎன்பன.

(சைவச. பொது. ருகச. உரை.)

பஞ்சபாடாணம்—ஐவகைப் பாடாணம் (வைத்தியபரிபா.)

பஞ்சபாண்டவர்—பாண்டுவினைந்து புத்திரர்; அவர் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்பவர். "பாரதம்"பார்"

பஞ்சபாணம்–மன்மதாத்திரமைந்து; அவை: முல்லை, அசோகு, வகுளம், சூதம், நீலம் என்பன. அவை முறையே தைக்குமிடம் உச்சி, நெற்றி, நெஞ்சு, முலை. குய்யம் என்பன. (உ-ம்) "பஞ்சவரினடிப்பிறந்தோன்பஞ்சவன் பேரவையெய்திப்பஞ்சபாண-வஞ்சகன்செய்" (பாரத. அருச்சுனன்றீர். ௬௬.)

பஞ்சபாணன்—மன்மதன். (உ-ம்.) "பாதியிரவினிற்பஞ்சபாணனூர்தம்பகைவனூர்க்கமைத்தநந்தவநத்திற்புக்கான்" (சிவரக. அபுத்திபூ. கக.)

பஞ்சபாணவத்தை — மன்மதாத்திரத்திலுண்டாமைந்துபாதி; அவை: சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பன. (சூ. நிக. கஉ: ருo.)

பஞ்சபாதகம் — ஐந்து துரோகம்; அவை: களவு, கள்ளுண், குருநிந்தை, கொலை, பொய் என்பன. (உ-ம்.) "பஞ்சபாதகன்" (சூ. நிக. கஉ: ௬௬.)

பஞ்சபாதகன் – பஞ்சபாதகஞ்செய்வோன். (வழக்.)

பஞ்சபூதச்சரக்கு–தாழகம், வீரம், கௌரி, வெள்ளை, லிங்கம். (வைத்தியபரிபா.)

பஞ்சபூதம்—ஐந்துபூதம்; அவை: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். (சூ.நிக.கஉ:சஉ.)

பஞ்சபேதி— அன்னபேதி, மாங்கிசபேதி, சத்திரபேதி, பரிசபேதி, தூமபேதி.(வைத்தியபரிபா.)

பஞ்சம்—1. ஐந்து. 2. கருப்புக்காலம், சிறுவிலைக்காலம். (1, 2-சூ. நிக. கஉ: ஞகரவெ. ச.)

பஞ்சமகாயக்கியங்கள்— பஞ்சமகாயாகம், அக்கினிகருமம், தேவபூஜை, பிதிர்பூஜை, விருந்தோம்பல், வேதாத்தியயநம். (கூர்மபு. வருணை. ககூ. உரை.)

பஞ்சமந்திரதநு — சாதகருடைய தியாநபூசைகள்நிமித்தமாக உபசாரமாய்ச்சிவனுக்குக் கற்பிக்கப்பட்ட ஐந்துமந்திரமாகிய தேகம். (சி. சி. க: ருகூ. சிவாக்.)

பஞ்சமந்திரம்—ஐந்துமந்திரங்கள். (உ-ம்.) "பஞ்சமந்திரதநு"

பஞ்சமம்—ஒரு பண்; அது: தேவாரப்பண்களிலே, பகல் லேயோதும்பண்பத்திலொன்று. 2. கந்தருவமத்திமத்துளைக்கு அடுத்ததுளை (பெரியபு. ஆனாய. உச. உரை.) ப. சத்ததாளத்தொன்று.

பஞ்சமர்—ஐந்தாஞ்சாதிக்காரர். (வழக்.)

பஞ்சமலம் — ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாநசத்தி என்னுமைந்து மலங்கள். (சி. சி. உ: அஎ. ஞாநப்.)

பஞ்சமி–1. அவிட்டமுதலைந்துநாள், அவிட்டபஞ்சமியாம். 2. ஐந்தாந்திதி.

பஞ்சமிலேவவாதம்–சிற்றுமணக்கு.(வைத்தியபரிபா.)

பஞ்சமுகன்—சிவன். (சூ. நிக. க: எ.)

பஞ்சமுத்திரைகள்–1. ஆசாரியர்களுக்குரிய ஐந்து சின்னங்கள்; அவை: திருநீறு, உருத்திராக்கமாலை, பூணூல், உத்தரீயம், உட்டினிடம் என்பன. (சைவச. ஆசாரிய. சரு. உரை.) 2. பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டமென்னும் ரேகைரூபமான முத்திரைகள். (உ-ம்.) "திருவடிவிற்றிருப்பஞ்சமுத்திரையுந்திகழ்ந்திலங்க" (பெரியபு. மானக்கஞ். உச, மாவிரதச் சமைத்தோர்மேனியிற்றரிக்குமடையாளமாகியமுத்திரை )

பஞ்சமூர்த்திகள்—சதாசிவன், மகேசுவரன், ருத்திரன், விட்டுணு, பிரமன்என்பவர். (சி. சி. க: சுo. சிவாக்.)

பஞ்சமூலம் — ஐவகைமூலம்; அவை: சிறுபஞ்சமூலம், பெரும்பஞ்சமூலம்என விருவகைப்படும். 1. சிறுபஞ்சமூலம்- திப்பிலிமூலம், சித்திரமூலம், செவ்வியம, சுக்கு, பேரரத்தை என்பன. 2. பெரும்பஞ்சமூலம்—தழுதாழை, பாதிரி, பெருங்குமிழ், வாகை, வில்வம்என்பன. (வைத்தியபரிபா.)

பஞ்சமூலி—வெள்ளெருக்கு, மாவிலிங்கம், சித்திரமூலம், புனல், முருங்கை என்பன. (வைத்தியபரிபா.) புனல்என்பது வாலுளுவையென்றுர்.

பஞ்சயாகம்—1. கன்மயாகம், செபயாகம், ஞானயாகம், தபோயாகம், தியானயாகம்என்பன. (சிவதரு.) 2. தெய்வவேள்வி, பிரமவேள்வி, பூதவேள்வி, மானிடவேள்வி, தென்புலத்தார் வேள்வி என்பன. (பிங்கல. ௬கரு.)

பஞ்சயோகம்—அபாவயோகம், பரிசயோகம், பாவயோகம், மகாயோகம், மந்திரயோகம் என்பன. (வேதா. சூ. உஉஅ.)

பஞ்சரத்திநம்—ஐவகையிரத்திநம். (உ-ம்.) "மைந்துறுசெம்மணிமுத்துவாள் வைரம் பச்சையொளிவழங்குநீலமைந்து" (திருவிளை.மாணிக்கம்வி. எச.)

பஞ்சரம்—1. கூடு. 2. செருந்திமரம்.(1,2-சூ. நிக. கக: ஞகரவெ. க.)

**பஞ்சராத்திரம்** — வைணவமதத்தொன்று; அது: சோமுகாசுரன் வேதங்களைக் கவர்ந்தகாலத்துத் திருமாலினுலேந்திரவிலருளப்பட்டநூல். (உ-ம்.) "மாசில்பஞ்சராத்திரத்தின்வழி நடப்போர்" (ஏகாதசி. கால்நிர்ணய. கஅ.) பாஞ்சராத்திரம் எனவும் வழக்குண்டு.

**பஞ்சரிடிகோத்திரம்**—அகத்தியர், காசிபர், கௌசிகர், கௌதமர், பாரத்துவாசர் என்பவர் கோத்திரம். (சைவச.பொதுவி. சஈரு. உரை.)

**பஞ்சரித்தல்**—1.கெஞ்சிக்கேட்டல்.(உ-ம்.) "பஞ்சரித்துத்தாவனமேயென" (திருப்பு. ருஎச.) 2. விரிவாய்ப்பேசல். (வழக்.)

**பஞ்சரிப்பு**—பஞ்சரித்தல். (வழக்.)

**பஞ்சருத்திரம்** — அதர்வசிகோபநிடதம், அதர்வசிரோபநிடதம், காலாக்கிநிருத்திரோபநிடதம், கைவல்லியோபநிடதம், சுவேதாச்சுவதரோபநிடதம் என்னுமைந்துபநிடதங்கள். (கந். நவ. கஅ.)

**பஞ்சலக்கணம்** — 1. இலக்கணமைந்து; அவை: எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன. 2. புராணபஞ்சலக்கணம்; அவை: "மணித்திரள்படுகடன்மாநிலவரைப்பிற்-றணிப்பில்பல்லுலகமுற்றத்துவவகையும்-மன்னமுன்னுள்வகுத்தவிர்த்தாந்தமும், அன்னவையொடுங்குறுமடைவுமங்வந்தரத் — தியற்கையும்புலவரிருடியர்மரபும் மயக்கறமிக் விருவகையினர்சரிதமும் என்னும் புராணவிலக்கணமைந்தே" (கூர்மபு. பாயிரம். உரை.)

**பஞ்சலவணம்** — ஐவகையுப்பு; கல்லுப்பு, இந்துப்பு, பொட்டிலுப்பு, வளையலுப்பு, கெந்தப்பொடியுப்பு. (வைத்தியபரிபா.)

**பஞ்சலாங்கலதாநம்**—ஐந்து கலப்பைகளைக் கொடுக்குந்தாநம். (உ-ம்.) "பஞ்சலாங்கலதாநத்தின்பகுதியைச்சுருக்கிச்சொன்னேம்" (கூர்மபு. தாந. முறை. சுச.)

**பஞ்சலிங்கம்** — சுயம்புலிங்கம், காணலிங்கம், தெய்விகலிங்கம், ஆரிடலிங்கம், மானிடலிங்கம் என்பன. (சிவாலயதரிசனவிதியிற் காண்க.)

**பஞ்சலீலை**—ஆலிங்கநம், சும்பநம், தாடநம், மைதுநம், நகவர்ணனை. (த. நி. போ. உருக.)

**பஞ்சலோகம்**—1. ஐந்துலோகம்; அவை: இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி. (பிங்கல. கஉசச.) திரிகடுகு, செவ்வியம், கொடிவேலி யென்று வைத்தியபரிபாடை அகராதியிற்கூறுவர்.

**பஞ்சவடி**—1. ஒருதலம்; அது: கோதாவரிக்கரையில் நாசிகாத்திரியம்பகத்துக் கணித்தாயுள்ள ஒருஇடம்.(உ-ம்.) "குன்றின்-பாங்கருளதாலுறையுள்பஞ்சவடிமைஞ்ச" (இராமா. அகத்தி.ருஎ.) [பஞ்சவடம்-ஐந்துஆலமரங்கள்.] வடத்தையுடையதுவடி. 2. மயிர்ப்பூணூல். (பெரியபு. மானக்கஞ்ச. உக.)

**பஞ்சவர்** — 1. பாண்டியர். (உ-ம்.) "செருமான்பஞ்சவரேறே" (புறநா.ருஅ.)"பஞ்சவன்" பார். 2. பாண்டுமக்கள். (உ-ம்.) "பஞ்சபாணம்" பார்.

**பஞ்சவர்தூதன்**—கிருட்டிணன்.

**பஞ்சவலக்கம்**—அத்தி, அரசு, ஆல், பூவரசு, வேல் என்பனவற்றின் பட்டை. (வைத்தியபரிபா.)

**பஞ்சவன்**—பாண்டியன். (உ-ம்.) "பஞ்சவனிட்டதமணரேவிவிட்டமதயானைவிழ" (திருவிளை யானையெய். க.) பஞ்சதிராவிடத்தையுமுடையவனென்பர்.

**பஞ்சவன்னக்கிளி** — ஒரினக்கிளி; அஃது: ஐந்து வன்னமுடையது. (வழக்.)

**பஞ்சவன்னம்** — ஐந்துவன்னம்; அவை: கருமை, செம்மை, பச்சை, மஞ்சள், வெண்மை, என்பன (சி. சி. க-ஆம் சூத். உஉ. உரை.)

**பஞ்சவாசம்** — ஐவகைவாசம்; அவை: இலவங்கம, ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்பன. (உ-ம்.) "பன்னலங்கொள்கனிபலபண்டமும்பஞ்சவாசம்பரிமளகந்தமும்-மின்னலங்கொள்காளாஞ்சிபொற்பள்ளயம்"(சிவரக. தேவிநாடடியம். கரு.) (சூ. நிக. கஉ: ரு.)

**பஞ்சவாதநம்** —அநந்தாசநம், கூர்மாசநம், சிங்காசநம், பத்மாசநம், யோகாசநம் என்பன. (சி. சி. பர. மாயா. கரு.)

**பஞ்சவாயுக்கள்** — கிருகரன், கூர்மன், தநஞ்சயன், தேவதத்தன், நாகன் என்பன. (சி. சி. பர. மாயா. கரு.) அபாநன், உதாநன், சமாநன், பிராணன், வியாநன் என்பன. (சைவச. பொதுவி. உகரு. உரை.)

**பஞ்சவிஞ்சதி**—இருபத்தைந்து. (ஞானமிர்தம்.)

**பஞ்சவிடயம்** — பஞ்சப்பொறியினலறியப்படுவன; அவை: இரசம், உருபம், கந்தம், சத்தம், பரிசம் என்பன. (வழக்.)

**பஞ்சவிதசாத்திரம்**—லௌகீக, வைதீக, ஆதியாத்மீக, ஆதிமார்க்கீக, மாந்திரிகமென்பன. (த. நி. போ. கச.)

**பஞ்சவிதவட்டகர்கள்**—அதிகுய்யாஷ்டகர், குய்யாகுய்யாஷ்டகர், குய்யாஷ்டகர், பௌத்திராஷ்டகர், லோகபாலாஷ்டகரென்னுமிவர். (வி-ணி.)

**பஞ்சவில்வம்**— நித்தியகன்மநெறியிற் காண்க.

**பஞ்சா**—மகமதியருடையவிழாக்களிற்கொண்டாடுமொருசிந்நம். (வழக்.)

**பஞ்சாக்கரம்** — 1. ஐந்தெழுத்து. 2. பஞ்சாக்கரம்; அது: ஐந்தெழுத்தாலாய ஒரு மந்திரம். [பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத்து முதலியனவும் பஞ்சாக்கரமெனவும் வழங்கப்படும்.] கொடிக்கவியிற்காண்க. (சிவஞானசித்தியார் சுபக்கம்.காப்பு.சிவஞா. உரை.)

**பஞ்சாக்கிநி**—1. உதராக்கிநி, சூரியதாபாக்கிநி, தவாக்கிநி, நிதாககாலாக்கிநி, இரவிகாந்தாக்கிநிகள். (வி-ணி. ௧௫௬.) 2. தவஞ்செய்வோர் நிற்குமைந்தக்கிநி; அது: நாற்றிசைக்கும் நான்குதீக்குண்டம் மேலே சூரியன். (சி. சி. அ: ௧௧. மறை.) நிதாகம்-முதிர்வேனில்.

**பஞ்சாக்கிநிக்கோடி** — வேலிப்பிரண்டை, காட்டுக்கருணை, மரள், புளிநறளை, நறளைக்கிழங்கு. (வைத்தியநூல்களிலறிக.)

**பஞ்சாங்கக்கூர்மை** — ஆமை. (வைத்தியபரிபா.)

**பஞ்சாங்கநமஸ்காரம்**— கால்கைதலையென்னும் பஞ்சாங்கமும் பூமியிற்படிய வணங்கல். (சிவால்ய. ௧௦.)

**பஞ்சாங்கபலன்** — பஞ்சாங்கநிருமிதத்திற் கண்டபலன். (வழக்.)

**பஞ்சாங்கம்**—1 ஐந்துறுப்புக்கள். (உ-ம்.) "அட்டாங்கபஞ்சாங்கத்திறத்தினொடு நன்று பணிந்தெழுந்து"(சிவரக.கணபதிவந்தனை.௧௧.) 2. காலத்திறங்களாகிய வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் என்னுமைந்து. (சூ. நிக. ௧௨: ௯௧.)

**பஞ்சாங்கி** — பஞ்சாங்கஞ்சொல்வோன். (வழக்.)

**பஞ்சாங்குலம்**—ஆமணக்கு. (வைத்தியபரி.)

**பஞ்சாசது** — ஐம்பது. (சி. சி. ௨: ௫௭. சிவாக்.)

**பஞ்சாசயம்** — ஆமாசயம், இரத்தாசயம், கர்ப்பாசயம், சலாசயம், மலாசயம் என்பன.

**பஞ்சாசற்பாவம்**—ஐம்பதுபாவம்; அவை: காரணமாயுள்ளது பதின்மூன்று, காரியமாயுள்ளது பத்து, இந்திரியபந்தம் பதினொன்று, ஆங்காரம் எட்டு, புத்தி எட்டு. இவைபோகத்துக்குத்தாரகமாகிய புத்திதத்துவத்திலே அந்தப் போகத்திற்கேற்க உண்டான பாவத்தை உண்டாக்குங்குணம்; அவற்றுள் காரணம் பதின்மூன்றாவன: ஞானேந்திரிய கன்மேந்திரியமாகிய புறக்கரணம் பத்தும், மனம்புத்தி அகங்காரமாகிய மூன்றந்தக்கரணமும். காரியம் பத்தாவன—பஞ்சபூதமும் பஞ்சதன்மாத்திரைகளும். இந்திரியம் பதினொன்றாவன—ஞானேந்திரியகன்மேந்திரியங்களும் மனமும். அகங்காரமெட்டாவன—தைசதம், வைகாரிகம், பூதாதி, தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரம். புத்திஎட்டாவன -தன்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைஸ்வரியம். (சதாசிவ.)

**பஞ்சாசியம்** — சிங்கம். (வைத்தியபரிபா.) பஞ்சம் விரிவு. அசியம்-வாய், முகமுமாம்.

**பஞ்சாக்கரி** — ஒரு மந்திரம். (த. நி. போ. ௨௧௫.)

**பஞ்சாடித்திருக்கை**—ஒரு மீன். (ஒருகுழூஉக்குறி.)

**பஞ்சாணியம்**—மரமஞ்சள்.(வைத்தியபரி.) பஞ்சாநியமென்றுங்கூறுவர். (வேறொரு வைத்திய அகராதியில்.)

**பஞ்சாத்திகாயம்**—ஐந்துவகையான அத்திகாயங்கள்; அவை: சீவாத்திகாயம், அசீவாத்திகாயம், தர்மாத்திகாயம், அதர்மாத்திகாயம், ஆகாசாத்திகாயம் என்பன. (த.நி.போ.௨௭௬.)

**பஞ்சாஸ்திரமந்திரங்கள்** — அகோராஸ்திரம், சிவாஸ்திரம், சுரிகாஸ்திரம், பாசுபதாஸ்திரம், வியோமாஸ்திரம் என்பன.(வி-ணி.௯௧.)

**பஞ்சாதாரம்**—ஐந்தாதாரம். (சி. சி. அ: ௯௦. ஞானப்.)

**பஞ்சாந்தகன்**—சதருத்திரரிலே வாயுதிக்கினிருக்கும் சதருத்திரரிலொருவர். (வி-ணி. ௨௭௦.)

**பஞ்சாநநம்**—சிங்கம் பஞ்சம்-விரிவு. ஆநநம்-முகம். (சூ. நிக. ௯: ௨.)

**பஞ்சாமிர்தம்**—ரசபஞ்சாமிர்தம். (சிவரகசி. பலிபீட. ௯.) பலபஞ்சாமிர்தம் சைவவினாவிடையிலறிக.

**பஞ்சாமிலம்** — இலந்தை, எலுமிச்சை, நெல்லி, புளியாரை, மாதுளை சேர்ந்தது. ஆமிலம்-புளிப்பு.

**பஞ்சாமுதம்**—பஞ்சாமிருதம். (வழக்.)

**பஞ்சாய்**—திரட்கோரை.(பிங்கல.௨௯௧௪.)

**பஞ்சாயம்** — 1. ஐந்துபேர்கூடிய நியாயசங்கம். 2. மூத்தக்காசு. (வைத்தியபரி.)(வழக்.)

**பஞ்சாயுதன்**—விட்டுணு. (உ-ம்.) "திண்ணிய நேமிவலம்புரிவாள்கதைசிலையுடைநாயகனும்" (பாரத. பதின்மூன்றாம்போர். ௨௪.)

**பஞ்சார்ககம்**—ஐந்தருக்கம்; அவை: இந்திரவில், தூமம், பரிவேடம், விதிபாதம் என்பன. இவற்றானவருந்தோடத்தைப் பஞ்சார்க்கதோடமென்பர்.

**பஞ்சாருடபத்திரம்** — தன்கைப்பத்திரமுதலிய பத்திரங்களில் கொடுத்தவன் வாங்கின

வன் சான்றின்றிருவர்வரைபவன் ஆகிய இவ்வைவரு மேவரையப்பட்டிருக்கும் பத்திரம். (மிருச. ௯௫.)

பஞ்சாலம்—ஒரு தேயம். (பாரதம்.திரௌபதிமா. ௯௨.)

பஞ்சாவத்தை—ஐந்தவத்தை; அவை: சாக்கிரம், சுழுத்தி, சொப்பனம், துரியம், துரியாதீதம். (சிவஞானசித். ௪-ஆம் சூத். ௯௨, ௯௯.)

பஞ்சாவயவம்—மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு, உபநயம், நிகமனம் என்பன. (சி. சி. அளவை. ௧௧. சிவாக்.)

பஞ்சாவரணபூசை — பஞ்சப்பிரமசடங்கதேவர் பதினொருவரையும், வித்தியேசுரர்எண்மரையும், கணேசுரர் எண்மரையும், உலோகபாலர் பதின்மரையும், அவர்களுடைய ஆயுதங்கள் பத்தையும் பூசித்தல்; அது: பிரமாங்கங்களைத் தளங்களிலும், வித்தியேசுரர் களைத் தளாக்கிரங்களிலும், கணேசுரர்களைப் பீடத்தின்கண்டத்திலும், உலோகபாலர்களைக் கீழ்ப்பீடத்திலும், தசாயுதங்களை ஆதாரசிலையின் மேலும் பூசித்தலாம். இவற்றுள் வித்தியேசுரர் எண்மராவார்: அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி. கணேசுரர் எண்மராவர்: நந்தி, மாகாளர், பிருங்கி, கணபதி, இடபம், கந்தர், பார்வதி, சண்டர். உலோகபாலர்பதின்மராவார்: இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரமா, விட்டுணு. உலோகபாலராயுதம் பத்தாவன: வச்சிரம், சத்தி, தண்டம், கட்கம், பாசம், அங்குசம், கதை, சூலம், பதுமம், சக்கரம். (சைவச. பொதுவி. ௫௨௮, ௫௨௧. உரை.)

பஞ்சான்மா — அந்தரான்மா, சிவான்மா, தத்துவான்மா, பூதான்மா, மந்திரான்மா என்பன. [திராவிடமகாபாஷியத்தில் அத்துவிதச்சொற்குப் பொருளுரைவிடத்திலே நன்கு காணலாம், ஈண்டுறைப்பின் விரியுமென்க. யான் அச்சிட்டிருக்கிற அத்துவிதவாக்கியத்தெளிவுரையிலுங்காண்க.]

பஞ்சி—1. சோம்பு. 2. தூறு. 3. பஞ்சபூதம். (த. நி. போ. ௧௧௮.) 4. பஞ்சு. (உ-ம்.) "மருங்குலாரடி-பஞ்சிதேய்ப்புண்டன" (கந்தபு திருநாட்டு. ௫௦.) 5. வெண்டுகில் (உ-ம்.) "அவிர்பஞ்சி" (சிந்தா. இலக். ௯௮௭.) (1, 2-வைத்தியபரிபா.)

பஞ்சிகை — 1. கணக்கு. 2. பஞ்சாங்கம். (1, 2-வழக்.)

பஞ்சிநாண்—உபவீதம். (உ-ம்.) "பஞ்சிநாண் கலைதோன்மார்பும்" (திருவிளை. நகர. அ௯.)

பஞ்சிற்றேடர்—தூனனி. (சூ.நிக.சு:உக.)

பஞ்சீகரணக்கிரமம் — ஒரு பூதரூபத்தை இரண்டாக்கி ஒரு பாதி அந்தப்பூதமாகவேயிருக்க நின்றபாதி நாலாகி எஞ்சிநின்ற நாலு பூதங்களிலும் அந்நியோந்யம் வியாபித்திருக்கை. (சி. சி. உ: ௬௫. சிவாக்.)

பஞ்சீகரணம் — பஞ்சபூதவமிசகூட்டம், பஞ்சபூதங்களாலுண்டான தேகஸ்திதி.

பஞ்சீகிருததூலபூதங்கள்—ஆகாயமுதலிய தூலபூதங்கள் ஒவ்வொன்று இரண்டுபாகமாய் அதில் ஒருபாகம் நிற்க மற்றையொருபாகமும் ஒவ்வொன்று நான்காகி அவ்வப் பாகங்களின் நிசாம்சத்தைவிட்டு இதரபூதங்களுடனே கூடுவது; இந்த ஸ்தூலபூதங்களிடத்தில் ஈசுவர வீட்சண்யத்தால் தூலபிரபஞ்சமுண்டாயிற்று. (வாசுதே அ.)

பஞ்சீக்ருதபூதம் — பஞ்சீகிருததூலபூதம். (உ-ம்) "உரைத்திடுபூதங்களோரொன்றுதன்னிலோர்பாதிகொண்டுகதாகி — விரித்திடுபூதங்களொருநான்கினுள்ளுமேவுமதைமெய்ம்மை வேதம்- தெரித்திடுமாறுநிவர்பஞ்சீகிருதமெனவிரித்தறிவார்" (கூர்மபு. பிரகிருதி. ௧௫. உரை.)

பஞ்சு — 1. சூதாடுவோர்வசிக்குங் குழூஉக்குறியிடனொன்று. (உ-ம்.) "பஞ்செனவுரைசெய்வர்பாலையென்பர்" (கந்தபு. கயமுகனுற்பத்தி. ௧௬௭.) 2. பருத்திப்பஞ்சுமுதலியன. (உ-ம்.) "சந்திரகாந்தங்களைச்சூழ்பஞ்சுதனில்"(சைவச. பொது. ௧௧௬.)

பஞ்சு[illegible]லப்பாணி—துருசி. (வழக்.)

பஞ்சுரம்—1. ஒருபண், பகற்பண்களிலொன்று, தேவாரத்திற்காண்க. 2. குறிஞ்சியாழ்த்திறம். (பிங்கல. ௧௩௭௭.)

பஞ்சுருத்தான்—ஒரு குருவி. வழக்குப்போலும்.

பஞ்சேந்திரியம்—ஐம்பொறி; அவை: மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. (உ-ம்.) "பஞ்சேந்திரியங்களிவற்றினுமம் - பன்னுகாதுடல்கண்ணுக்குப்பகர்ந்திடுமூக்கென்றுகு - மன்னவைகட்கேனோநேந்திரியப்பேரமையுமாதோ" (மச்சபு. பிரமமுக. ௪௦)

பஞ்சை — 1. இரப்போன். 2. பலவீனன். (1, 2-வழக்.)

பஞ்சைக்கியம் — ஐந்துவித ஐக்கியங்கள்; அது: ஈசுவரனுடைய தூலசரீரமாகிய விராட்டைப்பார்த்தால், சீவனுடையதூலசரீரம்விராட்டிலே அடங்கினபடியால் இவனுக்குத்தூலசரீரமில்லையென்பதும், ஈசுவரனுடைய சூக்கும சரீரமாகிய இரணியகர்ப்பத்தைப்பார்த்தால் இவனுடைய சூக்குமசரீரமதி லடங்கினபடி

யால் இவனுக்குச்சூக்குமசரீரமில்லையென்பதும், ஈசுவரனுடைய காரணசரீரமாகிய மாயையைப்பார்த்தாலிவனுடைய காரணசரீரம் அதிலடங்குகிறபடியால் இவனுக்குக் காரணசரீரமில்லையென்பதும், ஈசுவரனைப்பார்த்தால் இவனுமவனிடததிலடங்குகிறபடியால் இவன் வேறில்லையென்பதும், ஈசுவரசாட்சியாகிய பிரமத்தைப்பார்த்தால் இவன்சாட்சி அதிலடங்குகிறபடியால் அது வேறில்லை என்பதுமாம். (உபநிடதம்.)

பஞ்சையன்—1. எளியவன். 2. பலவீனன். (1, 2-வழக்.)

பஞ்சோபசாரம்—உற்சவாதிகளிலே செய்யப்படும் மூவித உபசார வகைகளுளொன்று; அவை: மண்சம்பந்தமான கந்தமூலபலன்கள், சுகந்தபுட்பாதிகள், பணிகாரம், அன்னம், அடைகாயாதிகளென்னும் பார்த்திவோபசாரமும், சலசம்பந்தமான நீர், பால், தயிர், வஸ்திராதிகளென்னும் ஆப்பியோபசாரமும், அக்கினிசம்பந்தமான உலோகாதி ஆபரணங்கள், தீபங்கள் கண்ணாடியென்னுந் தைசசோபசாரமும், வாயுசம்பந்தமான தூபம், சாமரம், மயில்விசிறியாதிகளென்னும் வாய்வோபசாரமும், ஆகாசசம்பந்தமான மணியோசை, மந்திராதிகள் என்னும் வைகாய சோபசாரமுமாம். (சிவதரு. க: ௯௮. உரை.)

பஞ்ஞீல்—மக்கட்பரப்பு. (சூ. நிக. உ: அச.) பிங்கலத்திற் பஞ்ஞீலியென்பர்.

பஞ்ஞீலி — திருப்பஞ்ஞீலி என்னுமொரு சிவதலம். (தேவாரத்திற்பார்.)

பஞீலம்—தொகுதி. (உ-ம்.) "பன்னூறடுக்கியவேறுபடுபஞிலம்" (புறநா. சுஉ.) மக்கட்டொகுதியென்பர் பதிற்றுப்பத்தில். பஞ்ஞிலம் என்றுங்கூறுவர்.

பட்கை—பாம்பின் மேல்வாயிலோர்பல்; அது: காளி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பட்சகன்—பேருண்டியன். (வழக்.)

பட்சணம்—தின்பண்டம். (வழக்.)

பட்சணி — 1. உண்போன். 2. தெரிநிலை வினைப்பகுதி. (1-வழக்.)

பட்சணித்தல்—உண்டல். (வழக்.)

பட்சணீயம்—உண்ணத்தகுபொருள். (வழக்.)

பட்சணை—இரை. (வழக்.)

பட்சதாபம்—பரிதாபம். (வழக்.)

பட்சநிர்த்தேசம் — இடத்தைக்குறித்தல். (சி. சி. டு: க. சிவாக்.)

பட்சபாதம்—ஓரம். (வழக்.)

பட்சபாதி-பட்சபாதஞ்செய்கிறவன்.(வழக்)

பட்சம்—1. பக்கம். 2. பதினைந்தாளெனக் கருதப்படுமொருகுறிப்புமொழி. (உ-ம்.) "அமிர்தக்குமரி"பார். [பிரதமைமுதல் பதினைந்துநாளென்பதுபற்றிவந்தகுறிப்பு. 3. பிரியம்.(வழக்.)

பட்சவாதம்—பாரிசவாதம். (வழக்.)

பட்சவாதி—ஓரவாரஞ்செய்பவன். (வழக்.)

பட்சி — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பறவை. இறகையுடையது.

பட்சிசாத்திரம் — பஞ்சபட்சியைக்குறித்தறியுநூல். (வழக்.)

பட்சித்தல்—உண்ணல். (வழக்.)

பட்சிப்பு—பட்சித்தல். (வழக்.)

பட்சியிராசன்— பறவைவேந்தனுகிய கலுழன். (வழக்.)

பட்டகம் — 1. ஆடுதின்னுப்பாளை. 2. புழுக்கொல்லிச்செடி. (1, 2-வைத்தியபரிபா.)

பட்டங்கட்டி—பட்டவர்த்தனன். (வழக்.)

பட்டங்கட்டுதல்—பட்டமணிதல். (வழக்.)

பட்டசாலை— பட்டத்திற்குவைக்கிற மாளிகை. சாலை-மாளிகை.

பட்டஞ்சூட்டுதல்—1. அரசரைக்குரவரைப் பட்டாபிடேகம்பண்ணி முடிசூட்டல். 2. பட்டப்பேர்கொடுத்தல். (1, 2-வழக்.)

பட்டஞ்சூடுதல் — 1. அபிஷேகமடைதல். 2. பட்டமடைதல். (வழக்.)

பட்டடை—1.அடைகுறடு.(பிங்கல.கக௩௬௪.) 2. இசைக்கரணங்களொட்டிஞென்று. (பெரிய பு. ஆனாய. உடு) 3. தானியவுறைவிடம். (வழக்.)

பட்டத்துரை—பட்டவர்த்தன். (வழக்.)

பட்டத்தேவி—அரசி. (வழக்.)

பட்டப்பேர்—1. குலமுறைப்பேர். 2. பட்டஞ்சூட்டப்பட்டபேர். (1, 2-வழக்.)

பட்டம்—1. கவரிமா. 2. காற்றூடிப்பட்டம். 3. குளம். (உ-ம்.) "பாவநாசமெனவுண்மொருமபட்டமொன்று" (சேதுபு. பாவநாச. க.) 4. சதுக்கமுதலியபட்டம். தூண் முதலியவற்றிற்காண்க. 5. சீலை. தைல. தைலவை. 6. நெற்றிப்பட்டம். (உ-ம்.) "பட்டப்போதகம்தேர்பரியாளெனும்படையுடைப்பாஞ்சாலர்" (பாரத. படையெழுச்சி. ௯.) 7. பதவி. 8. பெருங்கொடி. (வைத்தியபரிபா.) 9. பொன். 10. மரக்கலவகை. 11. வழி. 12. வாள். (சூ. நிக. கக: டகரவெ. க௯.) 13. விலங்கின்படுக்கை. (1, 7, 8, 9, 10, 11, 12-பிங்கல. ௯௭௬௦.) (1, 4-வழக்.)

பட்டமங்கை — ஒருதிருப்பதி. (திருவாச. கீர்த்தி. சுஉ.)

பட்டமணிந்தாள்-பட்டந்தரித்தாள்.(சிந்தா)

**பட்டயம்** — செப்புத்தகடுமுதலிய தகட்டி லெழுதிக்கொடுக்கிற சாசனம். (வழக்.)

**பட்டர்** — ஆதிசைவர்க்குரியவொருபெயர். (வழக்.)

**பட்டவர்த்தனர்** — பட்டந்தரித்த வரசர். (உ-ம்.) "மகுடவர்த்தனருடன் பட்டவர்த்தனருடனுள்ளார்" (பாரத. படையெழுச்சி. எ.)

**பட்டன்** — 1. ஆதிசைவனுக்குரியபெயர். 2. சிவபிரான். (உ-ம்.) "பட்டனுக்கென்னைத் தன்பாற்படுத்தானுக்கேபல்லாண்டுகூறுதுமே" (திருப்பல். .)

**பட்டன்று**—பட்டது. (புறநா.)

**பட்டனம்** — கடற்கரையிற் பலதீவிற் பண்டம் விற்குமூர். (சூ. நிக. ரு: ௬எ.)

**பட்டா**—1. பட்டயம். 2. பாட்டமதமுரைத்த ஓராசிரியன். (வேதா. சூ. ச. உரை.) 3. வண்டிற்சில்லுகளுக்குப்போடப்படுமோரிரும்புவளையம். 4. வாள. [இந்துஸ்.] (1, 3-வழக்.)

**பட்டாங்கு**—1. இயல்பு. (உ-ம்.) "பட்டாங்கிலுள்ளபடி" (நல்வழி.) 2. உண்மை. (பிங்கல. கசுOக.)

**பட்டாசிரியன்**—ஒருசமையவாசிரியன், பாட்டமதவாசிரியன்.

**பட்டாணி** — 1. ஒரு குருவி. 2. ஒரு சாதியான். [இந்துஸ்.] 3 ஒருவகைப்பயறு, பட்டாணிப்பயறு. (1, 3-வழக்.)

**பட்டாதார்**—நிலத்துக்குரியவர். (வழக்.)

**பட்டாபிடேகம்** — பட்டந்தரித்தற்குரிய வபிடேகம். (வழக்)

**பட்டாரகர்**—1. கடவுளர். (உ-ம்.) "அருத்தருமத்தரையாதிபட்டாரகராம்பரிசே" (திருநூற். கரு.) 2. குருக்கள். (சைவவி.)

**பட்டாரகன்** — 1. அரசன். 2. கடவுள். (திருநூற். கரு.) 3. குரு. (சைவவி.)

**பட்டாளம்**-படைவகுப்பு (ஓர்குழூஉக்குறி.)

**பட்டி** — 1. அட்டவணை. வியாபாரிகள் வழக்கு. 2. இடம். 3. பூச்செடி. (சோழதேசத்திற் சிலவிடங்களின் மிகுதியாகவுண்டு.) 4 ஒருவிதசிகிச்சை. (தைலவ.) 5. களவு. (சூ.நிக. க: ருஅ.) 6. சிற்றூர். 7. சீலை. (பிங்கல.கஎ௬.) 8. நாய். 9. பசுக்கொட்டில். (பிங்கல. சுஅஅ.) 10. படல். 11. வாலையென்னுமோர்கருவி. (தைல.தைலவ.) 12. விக்கிரமாதித்தன்மந்திரி. (2,8,9-பிங்கல.௬அஎ.) (3,6,8,10,12-வழக்.)

**பட்டிக்காடு**—காட்டுக்குள்ளூர். (வழக்.)

**பட்டிகட்டல்**—மெல்லியசீலையைத்தக்கபடி பாளமாகக்கிழித்துத் தைலத்தில்நனைத்து அவயவங்களிற் சுற்றப்படுவது. (தைல. தைலவ. கஉஅ.)

**பட்டிகர்**—திருடர். (பிங்கல. அஎசு.)

**பட்டிகள்**—பட்டிகர். (வழக்.)

**பட்டிகை**—1. அரைநாண். 2. ஏடு. (உ-ம்.) "பாறுமப்பொருண்மேற்கொண்ட பட்டிகை" (பெரியபு. திருஞான. அகரு.) 3. சுவர்த்தலத்தின்சித்திரக்கம்பி. (வழக்.) 4. தெப்பம். 5. தோழிலிடும்யோகபட்டம். (உ-ம்.) "தோழிலிடும்பட்டிகையும்" (பெரியபு. மானக்க. உ௬.) 6. மூலைக்கச்சு. (1, 4, 6-சூ. நிக. கக: ட்கரவெ. உஉ.)

**பட்டிசம்**—ஒரு ஆயுதம். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**பட்டினப்பிரவேசம்** — நகரிவலம்வருதல். (வழக்.)

**பட்டிடை**—நந்தியாவட்டம்.(வைத்தியபரி.)

**பட்டிநி**—உணவற்றிருத்தல். (உ-ம்.) "பட்டிநிகொண்டு" (சேதுபு. மங்கல. சச.)

**பட்டிமண்டபம்** — வித்தியா மண்டபம். (உ-ம்.) "மகதநன்னாட்டுவாள்வாய்வேந்தன்-பகைப்புறத்துக்கொடுத்த பட்டிமண்டபமும்" (சிலப். இந்திரன்விழ.கOக,கOஉ.) கம்பருங்கலைதெரிபட்டிமண்டபம் என்றார்.

**பட்டிமாடு** — கொண்டிமாடு, பயிரழிக்கும் மாடு. (வழக்.)

**பட்டிமை**—1. களவுத்தன்மை. 2. வஞ்சம். (உ-ம்.) "பட்டிமையுருக்கள்கொடுபாறலரிது" (கந்தபு. சதமுகன். எ.) மை-விகுதி.

**பட்டியல்**—திண்ணைவிளிம்புக்கல். (வழக்.)

**பட்டினம்**—1. ஊர். (சூ. நிக. ரு: ௬ச.) 2. கடற்றுறையையடுத்த நகரம். (உ-ம்.) "பொன்மலர்க்கைதைவேலிசூழ்வேலைப்புறத்தொருபட்டினத்துள்ளான்" (திருவிளை. வன்னியுங் கிணறு. உ) 3. நெய்தநிலத்தூர். (சூ. நிக. ரு: ௬௬.)

**பட்டினவர்**—நெய்தநிலமாக்கள்.

**பட்டீச்சுரம்** — ஒரு தலம். (உ-ம்.) "பழையாற்றுபட்டீச்சுரத்தாய்போற்றி" (தேவார. திருவீரட்டான. சு. திருதாவு.)

**பட்டு**—1. ஒரு பருத்தி. 2. சிற்றூர். (பிங்கல. சஎசு.) 3. பட்டுப்புடவை. (உ-ம்.) "பட்டிசைந்தவல்குனங்கை" (திருவிளை.வளைய.௬ச.) 4. துகில். (சூ. நிக. எ: சுக.)

**பட்டுக்கள்**—வேதார்த்தத்தின் மகிமையைத் துதிப்பவர்கள். (வேதா. சூ. ௬. உரை.)

**பட்டுநூற்காரர்** — ஒரு சாதியார். மதுரையின் மிகுதியுள்ளார். (வழக்.)

**பட்டுநூற்பூச்சி**—ஒரு சிலம்பி. (வழக்.)

**பட்டுப்பருத்தி** — ஒருவகைப்பருத்தி, செம்பருத்தி. (வழக்.)

பட்டுப்பூச்சி—ஒரு சிலம்பி. (வழக்.)
பட்டை—மரத்தோல். (வழக்.)
பட்டைக்காறை—மாதருடைய ஒரு கழுத்தணி. (வழக்.)
பட்டைச்சாராயம்—வெள்வேலம் பட்டையைக்காய்ச்சி யிறக்குமோர்பாகம். (வழக்.)
பட்டைப்பெல்லி—பட்டைப்பிடி.
பட்டையம்—1. பட்டயம். ஐகாரம்போலி. 2. வாள்.
பட்டோலிகா — எழுதப்பட்ட ஒருவகைச்சீட்டு.
பட்டோலை — 1. அட்டவணை. (வழக்.) 2. அரசர்விடுத்திருமுகம். [இது பட்டோலிகா வென்னுஞ்சொல்லில் இக என்னுமெழுத்துக் கள்கெட்டும் ஆ ஐயாகத்திரிந்தும் வந்தது என்பர்.] 3. காரியக்குறிப்பெழுதுமோலை. (உ-ம்.) "பண்ணியபாவமெங்கள்பட்டோலைக் குட்படுமோ" (சிவரக. கத்திரிப்பூ. ருக.)
பட—ஒருவமவுருபு. (உ-ம்.)"மலைபடவரிந்து" (சிந்தா. நாமக. உஎ.) 2. மொய்ப்ப. (புறநா.)
படக்குப்படக்கெனல்—1. அச்சக்குறிப்பு. 2. சரடுக்கொலிக்குறிப்பு. (1, 2-வழக்.)
படகம் — 1. ஒரு வாச்சியம், இரணபேரியென்பர். (உ-ம்.) "படகமாகுளிமுன்னுரும்" (சேதுபு. இராமன். சுரு.) (சூ. நிக. எ: ருக) 2. கவரிமா. (சூ. நிக. ரு: உக) 3. தம்பட்டம். (உ-ம்.) "சாதிவங்கமிரதிகளாற்படகமிரண்டகமிணையும்"(தைல. பாயிர. உஉ.) 4 திரைச்சீலை. (வழக்.) 5. பற்படகம். 6. விஷ்ணு கரந்தை. (5, 6-வைத்தியபரிபா.)
படகாரன்—1. ஓவியன். 2. நெய்வோன். (1, 2-வழக்.)
படகு—ஒருவகை மரக்கலம். (உ-ம்.)"சோங்கு"பார்.
படகுடி—கூடாரம். (வழக்.)
படங்கன்—ஒருமீன். (வழக்.)
படங்கு—1. கூடாரம். (வழக்.) 2. பதங்கம். (தைல. தைலவ. கக.) 3. பெருங்கொடி. (சூ. நிக. கக: டகரவெ. ரு.) 4. மேற்கட்டி. (உ-ம்.) "மண்டுகொண்டற்படங்குமழைமலர்"(சிவரக. சுகமுனி. கரு.)
படங்குந்திநிற்றல் — குஞ்சித்தல், காலிற் பெருவிரன்முதலிய விரலூன்றிநிற்றல். (சூ. நிக. கூ: ருரு.)
படநம்—படித்தல். (வழக்.)
படப்பு—வைக்கோற்போர். (வழக்.)
படப்பை — 1. கொல்லை. 2. தோட்டம். (உ-ம்.) "மனைப்படப்பையினிற்புக்கு" (பெரிய பு. அரிவாட்ட. கஉ.) 3. பக்கம். (சிலப்பதி.) 4. பூந்தோட்டம். (உ-ம்.) "மஞ்சண்முன்றின் மணநாறுபடப்பை" (பெரும்பா. ருடுசு.) 5. மருதநிலத்தூர். (உ-ம்.) "அன்னமுங்குயிலும் பயிலுநீழ்படப்பையத்திருபுரியைமீண்டடைந்தான்" (பாரத. குருகுல. கடு)
படப்பொறி — துத்தி, பாம்பின்படத்திலுள்ள புள்ளிகள். (சூ. நிக. ரு: சக.)
படபடத்தல்— } 1. துடிதுடித்தல். 2.
படபடப்பு— } விரைதல். (1, 2-வழக்.)
படபடெனல் — 1. சரடுக்கொலிக்குறிப்பு. (சூ. நிக. கஂ: சக ) 2. விரைவுக்குறிப்பு.(வழக்.)
படம் - 1. எழுதும்படம். 2. காலின்படம். (சூ நிக. க: ருக.) 3. காற்சேட்டி. 4. சீலை (பிங்கல. சஉஎரு ) 5. திரைச்சீலை. பிரசன்னபடம் என்பதிலே படம்-திரை. 6. பாம்பின் படம் (உ-ம்.) "நாகத்தின்படமென்றுநடுங்கியே" (அரிச்ச. நாட்டு. ருஉ.) 7. யானைமுகப்படாம். (பிங்கல. கசுகரு.) (1, 2, 3, 5-வழக்.)
படமக்கி—தாழை. (வைத்தியபரிபா.)
படமஞ்சரி—ஒருபுருடராகம்; இஃது: அரசசாதி. இதன்மனைவிகள், தேசில்லிதை, தோடி. அதிதேவதை, இலக்குமி. (வி-ணி. உககு.)
படமடக்கி—தாழை. (வைத்தியபரிபா.)
படமரம் - நெய்வார்கருவியிலொன்று. (ஒருகுழூஉக்குறி)
படமாடம் — கூடாரம். (இராமா. பாலகா. வரைக்காட. கஎ.)
படமாளிகை—படங்குவீடு. (உ-ம்.) "எகுநெறிக்கிடையேபடமாளிகை" (சிவரக. தேவியிமைய. கஉ.) [படம்-சீலை.]
படமெடுத்தல்-பாம்புபடம்விரித்தல்.(வழக்.)
படர்—1. ஏவல்செய்வோர், நயன்படர். (வழக்.) 2. செலவு, நடை. (உ-ம்.) "வெயிற்கதிர்மழுங்கியபடர்கூர்ஞாயிற்றுச் – செக்கரன்ன" (மதுரை. சகக.) 3. துன்பம். (உ-ம்.) "காலபடர்"பார். 4 நினைவாலுண்டாகியநோய். (உ-ம்.) "அரும்படர்களேமே" (புறநா. கசரு.) 5 நினைவு. (உ-ம்.) "மூட்கரந்துறையுமுய்யா வரும்படர" (கு. பா. கக.) 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "காட்டுத்தீ"பார். 7. படைவீரர். 8. வழி. (7,8-சூ. நிக. கக: டகரவெ. க.)
படர்க்கை—மூவிடங்களிலொன்று; அது: சொல்வானுங்கேட்பானுமாகிய விருவர் கூட்டத்துப்பிறந்து அவ்விருவரிடத்தும் நில்லாது அயலானிடத்திற்படர்வது. (உ-ம்.) "தன்மைமுன்னிலைபடர்க்கைமூவிடனே" (நன். உசுசு. உரை.)
படர்கொடி — 1. பயிர்க்கொடி. (வழக்.) 2. பீர்க்கு. (வைத்தியபரிபா.)

படர்ச்சி — 1. நடை. சி-தொழிற்பெயர் விகுதி படர்தல். 2. பரந்தவடிவு. (சூ. நிக. அ: ரு.)

படர்தல்—1. அகலம். (உ-ம்.) "பணைமருப் பிணிணையொடியப்படர்ந்தபொற்றேன்"(இரா மா. மாரீசன்வதை. ரு.) 2. செல்லுதல். (உ-ம்.) 'அந்தகன்றாதெனவன்னள்பிற்படர்வாரெனவாயினார்" (இராமா. கர. கச.) 3. நினைத்தல். (சூ. நிக. அ: ௯௯.) 4. பரவுதல். (உ-ம்.) "பாசடை"பார்.

படர்தாமரை — ஒருகரப்பனோய். (வைத்திய பரிபா.)

படர்தி—போகின்றாய். (புறநா.)

படர்தேமல்—படர்தாமரை, ஒரு கரப்பன்.

படர்ந்து—நினைத்து. (புறநா.)

படர்மல்லிகை—ஒருபூண்டு.(வைத்தியபரி.)

படர்வு—படர்ச்சி. உ-தொழிற்பெயர்விகுதி.

படரும் — வருந்தும். (உ-ம்.) "பண்டிமையோர்களாற்படருந்தாநவர்.(கந்தபு.எதிர்கொள். க.) [இது படர்என்னும் பெயரடியாகத்தோன்றிய பெயரெச்சம்.]

படருக்கி—செந்நாயுருவி. (வைத்தியபரி.)

படரை—ஆவிரை. (வைத்தியபரிபா.)

படல்—1. அகப்படுத்தல். 2. உண்டாதல். 3. ஒன்றுடனேதோய்தல், பொருந்தல். (வள். கக௮. அதி. ரு.) 4. சாதல், இல்லையாதல். 5. தட்டி. (1, 2, 3, 4, 5-வழக்.)

படலம்—1 ஆணவமலம். (சி. பி. கை.) 2. இரத்திநக்குற்றம். 3. இலக்கியச்செய்யுட்கூறுபாடு. (பிங்கல. உக௮.) நன்னூரலில், ஒருநெறியின்றி விரவியபொருளாற் பொதுமொழிதொடரவருவதென்பர். 4. நேத்திரபடலம் 5. படல். (2, 4, 5-வழக்.)

படலி— வீட்டின்மேற்கூரை. (வழக்.)

படலிகை—1. கைமணி. 2. படலம்.(உ-ம்.) "மறப்பயின்றிடுங்கண்ணினர்படலிகைவயங்கியநோக்கத்தார்" (கந்தபு. மார்க்கண்டே. ௬௮.) 3. பூந்தட்டு. 4. பெரும்பீர்க்கு. (சூ. நிக. ௪: ௯ரு.) 5. வட்டவடிவு. (1, 3, 5-சூ. நிக. கக: டகரவெ. உ௮.)

படலை—1. இலைத்தொடை. (உ-ம்.)"பைந்தளிப்படலைப்பரூஉக்காழாரம்" (சிலப். அந்தி. சக.) 2. கட்டும் படற்கதவு. (வழக்.) 3. கிண்கிணிமாலை. 4. தாழை. (உ-ம்.) "படலைக்கண்ணிப்பரேரெறுழ்த்திணிதோள்.(நெடுநல்.௯க.) 5. திரள். (உ-ம்.) "விரவுபன்மணிகள்கான்றவிரிகதிர்ப்படலைபொங்க'(பெரியபு.கண்ணப்ப. கக௦.) 6. பரந்தவடிவு. (உ-ம்.) "பரந்ததோரனேககோடிபரிதியிற்படலைகான்று"(சூ.நிக.கக: டகரவெ. உ௮.) 7. மாலை. (கூர்மபு. பிரகிருதி. க. "கண்ணி"பார். 8. முடிமாலை. (பிங்கல. ௬௭ருரு)

படலைக்கண்ணி—1. கலம்பகமாகியமாலை. (உ-ம்.) "பல்பூமிடைந்தபடலைக்கண்ணி" (பெரும்பா. கஎச.) 2. தழைவிரவினமாலை. (உ-ம்.) "படலைக்கண்ணிப்பரேரெறுழ்த்திணிதோள்" (பெரும்பா. ௬௦.)

படவு—படகு. (வழக்.)

படவை—1.செருப்படியென்கிறவேர்பூடு. (வைத்தியபரிபா.)

படற்கள்ளி—ஒரு பூண்டு. (வைத்தியபரி.)

படாஅ—பட்டு. (புறநா.)

படாகி—புளுகுகிறவன். [இந்துஸ்.]

படாகை—1. கிராமம். (வழக்.) 2. பெருங்கொடி. (உ-ம்.) "பசுங்கொடிப்படாகைப்பந்தர்நீழல்" (சிலப். ஊர்காண். உகசு.)

படாசீசாரம்—சத்திசாரம். (வைத்தியபரி.)

படாந்தரம்—முழுப்பொய். (வழக்.)

படாப்பழி—இல்லாப்பெரும்பழி. (வழக்.)

படாம் — 1. கூடாரம். (உ-ம்.) "சித்திரப்படாத்துப்புக்கான்" (அரிச்ச. வேட்டஞ். அஎ.) 2. சீலை. (தைல.தைலவ. ௯க.) 3. திரைச்சீலை. (வழக்.) 4. பெருங்கொடி. (சூ. நிக. எ. எச.)

படார்—சிறுதூறுகள். (உ-ம்.) "அதிரல்பூத்த வாடுகொடிப்படாஅர்" (முல்லை. ருக.)

படார்படாரெனல் — ஒரொலிக் குறிப்பு. (வழக்.)

படாழக்கி—வெண்ணாயுருவி. (வைத்திய பரிபா.)

படாரன்—பிடாரன். (வழக்.)

படாரெனல்—படாரிடுதல். ஒலிக்குறிப்பு. (வழக்.)

படி—1. ஒப்பு. (உ-ம்.) "படிதவிர்பூதவெள்ளம்படர்தலும்" (கந்தபு. ஏமகூட. உரு., 2. ஓரளவு, ஒருநாழி. 3. ஒருவமவுருபு. 4. குணம். (சூ. நிக. அ: எக.) 5. குதிரையங்கவடி.(உ-ம்.) "கட்டுபடிமீதின்மணி" (திருவாத. குதிரையிட்ட. கஎ.) 5. சம்பளம். (உ-ம்.) "படியாகவெனக்குத்தந்த" (அரிச்ச. மயான. ௬௦.) 7. சோபாநம். 8. தரம். (வழக்.) 9. தெரிநிலைவினைப்பகுதி. 10 நாழி. 11. நிறையறிபடி. 12. பகை. 13. படித்தரம். (உ-ம்.) "இரணியவருமாமுற்சீரார்தரவருதிருநாள்படி முதல்" (கோயிற்பு. திருவிழா. ருo.) 14. பிரதி. (பரிபாடல்.) 15. பூமி. (உ-ம்.)"படிவிசும்பும்பகைத்தாலென" (அரிச்ச. நாட்டு. ௯) (பிருதிவிதத்துவம் என்பர் ஞானசித்தத்தில். 16. வாயிற்படி. 17. விதம். (உ-ம்.) "பூசனைபுரியும்படி

யெலாம்" (பிரமோ. பிரதோ. க.) (3, 7, 12-சூ. நிக. கக: டகரவெ. உச.) (8, 10, 11, 16-வழக்.) வைத்தியபரிபாடையில், சிறுசிறுப் படிக்குங்கூறுவர். சீவகசிந்தாமணியில், உருவம் என்றுங்கூறினர்.

படிக்கட்டளை — கோயின்முதவியவற்றிற் குள்ள நித்தியவிருத்திச்செலவு. (வழக்.)

படிக்கம் — துப்பற்பாத்திரம். (பிங்கல. கஉ௫௫.) (வழக்.)

படிக்காசு—1. இராமநாதபுரம் இரகுநாத சேதுபதியின் சமஸ்தானத்திலிருந்த ஒரு புலவர், என்பர். 2. படிகொடுக்கும்பணம். (வழக்.)

படிக்காரம்—சீனக்காரம்.(கம்மாளர்வழக்கு.)

படிக்காரர்—படிவரக்குவோர். (வழக்.)

படிக்கால்— ஏணி. (சிந்தா.)

படிகம்—1. படிகலிங்கம். (உ-ம்.)"பண்ணும் படிகத்தின்" (சைவச. பொது. ௫௬0.) 2. பளிங்கு. (உ-ம்.) "செழும்படிகநிறத்தானை" (அரிச்ச. பாயிர. ௯0.) 3. பிச்சை. (பிங்கல. உகஙங.) 4. வெள்ளிலோத்திரம். (வைத்திய பரிபா.)

படிகமணி—படிகக்கல்லினாற்கடைந்த மணி வடம். (சிவதரு.)

படிகாரம்—சீனக்காரம். (வைத்தியபரிபா.)

படிகை — 1. நந்தியாவட்டம். (வைத்திய பரிபா.) 2. படிவு. கை-தொழிற்பெயர்விகுதி.

படித்தரம்—நிபந்தனை. (வழக்.)

படித்தல் — 1. கற்றல். இவன்படிக்கிறான். (வழக்.) 2. வாசித்தல். (உ-ம்) "பண்ணுதல்" பார்.

படித்து — தன்மைத்து. (பெரியபு. திருநாளைப். கக.)

படித்துறை—படிக்கரை. (வழக்.)

படிதம்—1. ஒருவகைச்சாதி மாணிக்கம். (உ-ம்.) "பதுமநீலமும்விந்தமும்படிதமும்-விதி முறைபிழையாவிளங்கியசாதியும்" (சிலப். ஊர் காண். க௮௬, க௮எ.) 2. கூத்து. (சூ. நிக. கூ: ௪௮.)

படிதல் — 1. அமைதல். 2. இறங்கல். 3. கலத்தல். (பிங்கல. ககஎக.) 4. குழித்தல். (உ-ம்.) "பொற்றண்மலர்வாவிபடிந்து" (கோயிற்பு. வியாக்கிர. உஉ.) 5. தாழ்தல். (திருமுருகாற்றுப்படை. ௮0-ஆம் அடி.) 6. திருந்துதல். (உ-ம்.) "இசைபடியும்படிபாடிலர்" (கோயிற்பு. பதஞ்சலி. ௬௬.) 7. பழகல். (உ-ம்.) "பாழியங் குடுமிப்பொலங்கிரிகுழைத்துப் படிந்தபின்" (கூர்மபு. கடவுள்வாழ். கூ.) (1, 2-வழக்.)

படிந்து—முகந்து. (பரிபாடல்.)

படிநம்—பக்குவம். (வழக்.)

படிப்பனை — படிப்பு. (வழக்.)

படிப்பாளி—கற்றோன். (வழக்.)

படிப்பித்தல்—1. கற்பித்தல். 2. பழக்குதல். (1, 2-வழக்.)

படிப்பு— 1. படித்தல், வாசித்தல். பு-தொழிற்பெயர் விகுதி 2. பழக்கம். (வழக்.)

படிப்போன்—மாணக்கன். (வழக்.)

படிமக்கலம்—கண்ணாடி. (பிங்கல.கஉ௫ங.)

படிமத்தாள் — தேவராட்டி, சந்தநக்காரி. (உ-ம்)"குறக்கோலப்படிமத்தாளைநேர்நோக்கி" (பெரியபு. கண்ணப்ப. ௪௬.)

படிமத்தான்—தேவராளன். (பெரியபு.கண்ணப்ப. ௪௮. உரை.) படிமம் - வெறியாட்டென்பர்.

படிமதாளம்—நவதாளத்தொன்று.(சூ.நிக. கஉ: ௪உ0)

படிமம் — 1. கண்ணாடி. 2. சுத்தம். 3. பாவை. (சிந்தா.) 4. வெண்மை. 5. வெறியாட்டு. (பெரியபு. கண்ணப். ௪௮. உரை.) (1, 2, 4, 5, (உ-ம்.) வந்துழிக்காண்க.

படிவுண்டி—நோற்றுப்பட்டினிவிட்டுண்ணு முணவு. (உ-ம்.) "பார்ப்பனமுதுமகன்படிமவுண்டியன்" (மணிமே. மணிமேகலா. ௩௩.)

படிமா—ஒப்பு. (உ-ம்.) "மன்றருமென்றங் கதுபடிமாவாமலிவித்தார்" (கோயிற்பு.நடராச. ௬௬.) [பிரதிமாவென்னும் வடசொல்படிமாவென்றாயிற்று.]

படிமாநம்—1. கீழ்ப்படிதல். 2. திருத்தம். (1, 2-வழக்.)

படிமை—1. தவவேடம். (உ-ம்.) "பல்புகழ் நிறுத்தபடிமையோனே (தொல். சிறப்பு.) 2. தன்மை. (உ-ம்.) "அமுதின்படிமையளாம்" (சேதுபு. பிரமகத்தி. உக.) 3. தெய்வவடிவு. (சிலப்பதி.)

படியகம்—படிக்கம். (பிங்கல. கஉ௫௫.)

படியச்சு—1. ஒருகருவி. (ஒருகுழூஉக்குறி.) 2. ஒருபொருளிருந்தவண்ண மயங்காதுகாட்டுதல்; அவை: எடுத்துக்காட்டுமுதாரணம்.(பி-வி. ௬௬.)

படியர்— படிவத்தையுடையோர். (சிந்தா.)

படியரம்— ஒரரம். (ஒருகுழூஉக்குறி.)

படியவைத்தல்—படியச்செய்தல். (வழக்.)

படியளந்தோன் — விட்டுணு. (சூ. நிக. க: கஙு.)

படியாள்—படிக்காரன். (வழக்.)

படியினை—படிவித்தனை. (புறநா.)

படியீஇயர்—படுக. (ஐங்குறு. கசஉ.)

படியோர்—தன்னைவணங்காதார். (உ-ம்.) "படியோர்த்தேய்த்த" (மலைபடு. ௪உங.)

படியோலை—பிரதியோலை. (உ-ம்.) "மூட்சி" பார்.

படிலன் — 1. வீரன். 2. வேலைக்காரன். (1, 2-வழக்.)

படிவம்—1. தான்வழிபடுதெய்வம். (உ-ம்.) "பைஞ்சேறுமெழுகியபடிவநன்னகர்" (பெரும்பா. உகூஅ.) 2. வடிவு, உடல். (உ-ம்.) "மாந்தர் படிவங்கொடுநெடுந்தார்" (திருவாத.திருப்பெரு. கசு.) 3. விரதம். (உ-ம்.) "கற்றோய்த்துடுத்த படிவப்பார்ப்பான்" (முல்லை. கூஎ)

படிவர்—1. சடைமுடியோர். (சூ. நிக. உ: ச.) 2. முனிவர். (உ-ம்.) "பாதங்களைக்கழிந்திடும்படி வரப்படிவர்" (சிவரா. உற்பவ. அ.)

படிவு—1. அழுந்துகை. உ-தொழிற்பெயர் விகுதி. 2. உருவம். (உ-ம்.) "சித்தர்மேனியும் படிவெழிற்செல்வமு நோக்கி" (திருவிளை. இரச. கசு.) [படிவம் என்பதினிறுதிகெட்டு நின்றது என்பர்.] 3. படிதல், குளித்தல். 4. தாழ்தல். (படிதல்பார்.)

படிறர்—1. திருடர், படிறு களவு. 2. தூர்த்தர். (சூ. நிக. உ: சடு.) 3. பொய்யர். (உ-ம்.) "படிறனினோர்க்குப்பகரார்நூலே" (நன். கூக) 4. வஞ்சகர், படிறு-வஞ்சனை.

படிறு—1. களவு. 2. பொய். 3. வஞ்சனை. (உ-ம்.) "பாவமெனவடிவெடுத்தபடிற்றமணர்" (திருவிளை. மெய்க்கா. க.) (1, 2-சூ. நிக. கக. ட்கரவெ. சு.)

படீரம்—1. சந்தநம். (உ-ம்.) "இதிற்படீரங் கஞ்சவளையமிருவேர்" (தைல. தைலவ. ருகூ.) 2. சிவப்பு. (பிங்கல. கககூகூ.)

படீரெனல் — படீரிடுதல். ஒலிக்குறிப்பு. (வழக்.)

படு—1. உப்பு. (தைல. தைலவ.) 2. கள்ளு. (உ-ம்.) "படுவைவாயாலுண்ணுமலுண்ணவருந் தீவினையும்" (சேதுபு.துராசார. சO.) 3. குலை. (சூ. நிக. ச: ருஉ.) 4. குளம். (உ-ம்.) "பனிநீர்ப் படுவிற்பட்டினம்" (சிறுபா.கருகூ.) [மடுவுமாம்.] 5. செயப்படுபொருளையுணர்த்துமொருவிகுதி. (உ-ம்.) "அடிக்கப்பட்டான்" (நன்னூலுரை.) 6. நன்மை. (சூ. நிக. கக: டகரவெ. அ.) 7. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "படுபறைபல வியம்ப" (கலி. க.) 8. பேரறிவு. (பிங்கல. கூஎருஅ.) 9. மிகுதிக்குறிப்பு. (உ-ம்.) "படு பொய்" (வழக்.)

படுக்காளி—பொய்யன். (வழக்.)

படுக்கும்—உண்டாக்கும். (புறநா.)

படுக்கை — 1. அடிப்பட்டடை. (வழக்.) 2. படுத்தல். கை-தொழிற்பெயர்விகுதி. 3. மக்கட்படுக்கை; இவை: மூன்றென்பர், இருவருந்தனித்தனிப்படுத்தற்கிரண்டும், இருவரும் கூடிப்போகநுகர்தற்கொன்றுமாம்.(சிந்தா.) 4. விலங்கின்படுக்கை. (3, 4-வழக்.)

படுகர் — . இழிந்தேறும் வழி. (வழக்.) (பிங்கல. சஅஉ.) 2. குளம். 3. பள்ளம். (2, 3-சூ. நிக. ரு: உகூ, சுக.)

படுகள்ளன்—வலுகள்ளன். (வழக்.)

படுகளம்—போர்க்களம். (பிங்கல. சுஉஉ.)

படுகாடு—சுடுகாடு. (சூ. நிக. ரு: ருகூ.)

படுகாரம்—பொரிகாரம். (வைத்தியபரி.)

படுகி—சீனக்காரம். (வைத்தியபரி.)

படுகிடங்கு—பொறிக்கிடங்கு. (வழக்.)

படுகுழி—யானைமுதலியபடுகிடங்கு.(உ-ம்.) "மூவிருசமயமாகியபடுகுழியினூடிழிகின்றாய்" (வைராக். சதக. கச. (சூ. நிக. கூ: க.)

படுகை — ஆற்றங்கரையையடுத்தநிலம். (வழக்.)

படுத்த— வீழ்த்த. (புறநா.)

படுத்தல்—1. அகப்படுத்தல். (உ-ம்.) "கேவேடராகிக்கெளிறதுபடுத்தும்"(திருவாச. கீர்த்தி. கஎ.) 2. அமைத்தல். (சி.சி.சு: கூ. சிவஞா.) (திருவிளை. திருநகரங்க. சடு) 3. கொலைசெய்தல். (உ-ம்.) "படுக்கும்பாணம்" (சிவரக. கண. கச.) 4. சயனித்தல். 5. சிதைத்தல். (உ-ம்.) "கறித்துமிழ்ந்து - படுத்தனன்" (திருவிளை. நாட். கசு.) 6. தளவரிசைசெய்தல். (உ-ம்.) "கற்படுத்தான்" 7. தாழ்த்திக்கூறுதல். (உ-ம்.) "எடுத்தல்படுத்தல்நலிதல்" (நன். அஅ.) (4, 6-வழக்.)

படுத்தலோசை — தாழ்த்திக்கூறுமிசை. (நன்னூல். பதவிய. கO-ஆம் சூத்திரவுரை.)

படுத்து — 1. கொட்டப்பண்ணி. (புறப்பொருள்வெ. .) 2. செய்து. (புறநா.)

படுத்துதல்—படுத்தல். (வழக்.)

படுத்துருமம்—வெள்வேலமரம். (வைத்தியபரிபா.)

படுதல்—1. அகப்படுதல். (உ-ம்.) "பட்டமான்போல்" (அரிச்ச. மயான. சுகூ.) 2. இல்லாமை, அஸ்தமித்தல். (உ-ம்.) "வெங்கதிர்படுமுன்" (திருவிளை. மெய்க்கா. கரு.) 3. உண்டாதல். 4. ஒலித்தல். (உ-ம்.) "படுகண்முரசங் காலையியம்ப" (மதுரைக். உகூஉ.) 5. சகித்தல். (வழக்.) 6. சாதல். (உ-ம்.) "சயத்திரதன்கொடுங்கணையாற்றுன்படுதலுறுதியெனச்சாற்றுவாயே" (பாரத. பதின்மூன். உகூO.) 7. தாழ்தல். (உ-ம்.) "படுமணியிரட்டுமருங்கில்" (திருமுரு.அO.) 8. பூத்தல். 9. விளித்தல். (புறநா.) (3, 8-சூ. நிக. கக: டகரவெ. அ.)

படுதா—திரைச்சீலை. [இந்துஸ்.]

படுதாமரை—படர்தாமரை. (வைத்தியபரி.)
படுநிலம்—பாலைநிலம், நீரில்லாநிலம். (சூ. நிக. ௫: ௯௦.)
படுபயன்—பெரும்பயன். (உ-ம்.) "படுபயனும்பார்த்துச்செயல்" (வள். ௬௭௬.)
படுபழி—மிகுபழி. (வழக்.)
படுபாக்கு — உண்டாதல். (உ-ம்.) "இழுக்காற்றினேதம்படுபாக்கறிந்து" (வள். ௧௬௪.) பாக்கு-தொழிற்பெயர்விகுதி
படுபு — 1. தோன்றுதல். (உ-ம்.) "படுபறியலனேபல்கதிர்ச்செல்வன்" (புறநா. ௯௪.) 2. பட்டு. 3. படுதல். (2, 3-ஐங்குறு.)
படுபோய்—முழுப்பொய். (வழக்.)
படுபொழுது—மாலைநேரம். (வழக.)
படுமலை—1. ஒருவகைப்பாலைப்பண். (உ-ம்.) "படுமலைநின்றபயங்கெழுசீறியாழ்" (புறநா. ௧௩௫.) 2. குறிஞ்சியாழ்த்திறம். பிங்கல. ௧௩௭௭.)
படுமலைப்பாலை — துத்தமேகுரலாகிற்படுமலைப்பாலை; இது: எழுவகைப்பாலையினொன்று. (பிங்கல. ௧௪௦௪.)
படுவநாயகி—படுவநாயகி. பாற்சோற்றி. (வைத்தியபரி.)
படுவர்—கள்விற்போர். (சூ. நிக. ௨: ௯௫.)
படுவன்—ஒருசிலந்தி. (வழக்.)
படுவான்-அழிவான். படுதல்-இல்லையாதல்.
படுவி — 1. கள்விற்பாள். 2 குறியவள். (சிந்தா.) 3. தொழுத்தை. (1, 2-சூ. நிக. ௧௧: டகரவெ. ௧௭.)
படுவை—தெப்பம். (சூ. நிக. ௭: ௫௨.)
படூ—படுத்தி. (ஐங்குறு.)
படை — 1. அடிமை. (உ-ம்.) "மன்னுயிர்ப்படைபின்றொடர்ந்து" (கோயிற்பு. இரணியவன்ம. ௧௦.) 2. அடுக்கு; இது: மதிலினடுக்கு. (பெரியபு. பூசல்நா. ௭.) 3. எய்வன எறிவன குத்துவன வெட்டுவன என்னுந் தொடக்கத்தனவற்றிற்குப்பொதுப்பெயர். (தொல்.சொல். ௪௬.சேநா.) 4. கல்லணை. (உ-ம்.) "பொற்படைபொலிந்த" (சிந்தா. இலக். ௫௬.) 5. கலப்பை. 6. செறுப்படை. (வைத்தியபரி.) 7. தானை. 8. நித்திரைக்குரியபடுக்கை. 9. படுக்கையில்சிறுபூளை செம்பஞ்சுமுதலியவற்றால் பதம்படுத்தல். (உ-ம்.) "படையமைசேக்கையுட்பாயலினறியாய்நீ" (கலி.௪௦.) 10. தெரிநிலைவினைப்பகுதி. 11. போர். (உ-ம்.) "தேசிவன்படைக்குமேலவை" (சேதுபு.வேதாள.௪௧.)(5,6,7-பிங்கல.௯௭௫௧.)
படைக்கலம் — ஆயுதம். (உ-ம்.) "படைக்கலக்குரவன்மீண்டு-போதருமளவில்" (திருவிளை. அங்கம். ௧௨.)

படைச்சால்—உழவுசால். (படை-கலப்பை.)
படைத்தல்—1. ஆன்மாக்களுக்குத் தநுகரண புவநபோகங்களை முதற்காரணத்தினின்றுந் தோற்றுவித்தல். (சைவவி. ௧.) 2. உடைத்தாதல். 3. சம்பாதித்தல். 4. சோறுமுதலியவுண் கலத்திடுதல். 5. நிவேதிக்கவிடுதல். (2, 3, 4, 5-வழக்.)
படைத்தலைவன்—சேநாபதி; இவன்: அரசர்க்குத்துணையாகிய ஐவகைக்குழுவி லொருவன். (சூ. நிக. ௧௨: ௯௭.)
படைத்திசினோர்—படைத்தவர். (புறநா.)
படைத்தோன்—சிருட்டிகர்த்தா. (சூ. நிக. ௧: ௬௫.)
படைப்பு—1. சம்பாத்தியம். (உ-ம்.) "படைப்புப்பலபடைத்துப்பலரோடுண்ணும்" (புறநா. ௧௮௮.) 2. சாதம்முதலியபடைத்தல். 3. சிருட்டி. (சி. சி. ௧: சூ. ௫௪.) 4. சிருட்டிக்கப்பட்டது. 5. செல்வம். (புறநா.) (2, 4-வழக்.)
படைபயிற்றல்— ஆயுதவித்தைகற்பித்தல். (சூ. நிக. ௧௨: ௫௨.)
படைமடம் — வீரரல்லாதார்மேலும, முதுகிட்டார்மேலும், புண்பட்டார்மேலும், மூத்தாரிளையார்மேலும் போர்செய்தற்குச்செல்லுதல். (உ-ம்.) "படைமடம்படானபிறர்படைமயக்குறினே" (புறநா. ௧௪௨.)
படைமரம்—நெய்வார்கருவியினொன்று. (ஒரு குழூஉக்குறி.)
படைமூன்று — இரத்நத்திரயம்; அவை: சம்மியற்கஞானம், சம்மியற்கதரிசநம், சம்மியற்கசாரித்திரம். (உ-ம்.) "வலங்கொண்டலர்தூயடியேத்துமவையமூன்றும்படைமூன்றும்" (சிந்தா. சீவக. ௧௬௨.) சைநவ.
படையறுவகை—மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படையென்பன. (சூ. நிக. ௧௨. ௫௭.)
படையன்—அடிமை. (வழக்.)
படையாச்சி — ஒருசாதி. (சோழநாட்டுவழக்கு.)
படையாளர்—ஆயுதவீரர். (வழக்.)
படையியங்கரவம்—வெட்சித்திணைக்குரிய துறைகளுளொன்று; அது: நிரைகோடற்கு எழுந்தபடைபாடிப்புறத்துப் பொருந்துமரவம். நிரைமீட்டற்கு எழுந்தபடை விரைந்துசெல்லுமரவம். (உ-ம்.) "படையியங்கரவம்பாக்கத்துவிருச்சி" (தொல். பொரு. ௫௮.)
படையிராசன்—வெடியுப்பு. (வழக்.)
படையிறங்குதல் — பாளையம்போடுதல். (உ-ம்.) "பயிலும்வேண்முநிவர்மேற்படையிறங்கியவெயிலுறுபாசறை" (சேதுபு.கந்தமா.௯௭.)

படையுறுப்பு—படையணி. (சூ. க.உ:அகூ.)
படையுறை—ஆயுதவுறை. (சூ. கி.எ:ககூ.)
படைவகுப்பு—படையணி,வியூ ; அஃது: எழுவகையுறுப்புக்களையுடையதாய் வகையால் நான்காய் விரியால் முப்பதாம். (ள். படையாட்சி. குறிப்பு.)
படைவாள்—1. கலப்பை. (சூ. க. எ:சஅ.)
படோல்— } பேய்ப்புடல். (-ம்.)"அதி
படோல்ராசி— } பலை"பார். (வை த்தியபரி.)
படோகம்—சிப்பி. (வைத்திய .)
படோலம்–1. முள்ளுவெள்ள 2. யானை கட்டுந்தறி. (1, 2-வைத்தியபரி.)
படோலிகை—புடல். (வைத் பபரி.)
பண்—1. அமைவு. (வழக்.) 2 இசை. 3. இசைப்பாட்டு. (பிங்கல. கூஎகூஎ.) குதிரைக் கல்லணை. 5. கூத்து. 6. நெஞ்சுமு வியபெருந் தானமெட்டினும் எடுத்தல்முதலி கிரியைக ளெட்டானும் பண்ணப்படுவது. -ம்.) "பெருந்தானமெட்டினும் பாவா-யெடு ன்முதலாயிருநான்கும்பண்ணிப் - படுத்தா யாற் பண்ணென்றுபார்" (இசைநூல்.)(சில அரங்கே. உசு. உரை.) 7. தெரிநிலைவினை பகுதி. 8 வாகனங்களின்மேற்றவிசு, அலா ரமுமாம். (இராமா. அயோத்தியா. மந்திரப். .) (4, 5-சூ. ிக. கக. ணகரவெ. கக.)
பண்செய்தல்—பண்படுத்தல். வழக்.)
பண்டகசாலை—களஞ்சியம். [ தலுங்கு.]
பண்டகன்–பொக்கிஷசாலைக்க ன்.(உ-ம்.) "நீங்கலரியபண்டகனேர்நின்றுவிட வ".(சேதுபு. அநும. கக.)
பண்டகி—பெருந்திப்பிலி. (வை த்தியபரி.)
பண்கோடி—பிரம்பு. (வைத்தி பரி.)
பண்டசாலை—1. அணிகலன்மு வியவைக்கும் வீடு. 2 பண்டகசாலை. (1, 2- ழக் )
பண்டபதார்த்தம்—இரசநிரச ஸ்துக்கள். (வழக்.)
பண்டம்—1. அறிவு. (உ-ம்.) " ாதம்பணிவார்கள்பெறுபண்டம்மதுபணியா" (தேவாரம். திருவெண்ணைநல்லூர். நி. சுந்தர 2. உடல் (உ-ம்.) "பண்டம்பொய்க்கூறை" (திருமந்திரம். யாக்கைநிலையா. உ.) 3. உணவு பொருள். (வழக்.) 4. சரக்கு. (உ-ம்.) "பெ ன்மலிந்த விழுப்பண்டநாடார" (மதுரைக் அஉ.) 5. பண்ணிகாரம். 6. பொருள். (உ-ம். "விரிவுற்றிடுபலபண்டநிறைந்திடுவியலிடமு ."(சிவரக. தேவிமேருகயிலை. கக.) 7. பழம். சிந்தாம.) 8. பொன். (4, 5-பிங்கல. கூஎசுஅ.
பண்டமண்டலி–வெள்ளைச்சார ை.(வைத்தியபரி.)

பண்டமாற்று — பொருள்மாற்றுதல். (கன்னூ. ஆவியுமொற்றும் என்னுஞ்சூத்திரத்திற் காண்க.)
பண்டர்—பாடற்கீழ்மக்கள். (உ-ம்.)"இசைவலானடுத்ததன்பண்டர்-குழுக் க ளு ங் கு லை குலைந்திட" (திருவிளை. விறகுவிற். சஅ.)
பண்டரங்கம்—பாண்டரங்கம் என் னு ங் கூத்து. (உ-ம்.) "பண்டரங்கமாடுங்காற்பணையெழிலணைமென்றோள்" (கலி. க.) [விகாரம்.]
பண்டறிசுட்டு—முன்னறியப்பட்ட தொன்றைக்கருதுஞ் சுட்டுச்சொல். (உ-ம்.) "கல்லாடம்" (உடலக்கண்ணன். இந்திரன். அகரம். பண்டறிசுட்டு.)
பண்டன்—ஆண்டன்மையில்லாதவன்.
பண்டகி—பெருந்திப்பிலி. (வைத்தியபரி.)
பண்டாகி—சேம்பு. (வைத்தியபரி.)
பண்டாரச்சந்நிதி — சைவாதீனங்களிலே யுபதேசிக்கிற ஆசாரியர்க்குரியவொரு பட்டப்பெயர். (வழக்.)
பண்டாரத்தி — இரப்பாண்டியின் மனைவி. (வழக்.)
பண்டாரம்—1. இரப்பாண்டி. 2. பலபண்டம். (சூ. நிக. சு: கஉ.) 3. பொக்கசம். (உ-ம்.) "ஆகமபண்டாரமும்பாங்குறவிளங்கும்" (அருணகிரிபு. திருநக. சுடு.) [தெலுகு.] 4. பொக்கிஷசாலை, நிதியறையென்பர் பரிபாடலில். (உ-ம்.) "பல்லாருங்கொள்கவெனப்பண்டாரந் தனைத்திறந்து" (திருவிளை. தடாதகைப். உக.) 5. மடாதீனங்களிலே அபிஷேகம்பெற்றுபதேசிக்கு மாசிரியர்க்கும், இல்லறத்திலே அபிடேகம்பெற்றிருந்து சீடருக்குபதேசித்துப் பூர்வ அபரக்கிரியைகளைச்செய்திருக்குமாசிரியர்க்கும் பெயர். (1, 5-வழக்.)
பண்டாரி—பொக்கிஷக்காரன். (வழக்.)
பண்டி—1. உரோகிணிநாள். (உ-ம்.)"பணைபூசமந்தம்பண்டி" (விதான. குணகுண. கக.) 2. வண்டி. (இராமா. நாட்டுப். ருச.) 3. வயிறு. (உ-ம்.)"கண்டதுகான்மூளைகண்புனல்சோரப்-பண்டிகொழுந்துபசித்தழலோடும்" (சேதுபு. மங்கல. ருசு.)
பண்டிகை—1. திருவிழா. [தெலுகு.] 2. பெருநாள்; இது: துலுக்கர்கொண்டாடுந் திருநாள். (1, 2-வழக்.)
பண்டிதபார்ப்பார் — பார்ப்பாரில் மருத்துவர். (வழக்.)
பண்டிதம் — 1. வித்தையறிவு. 2. வைத்தியம். (வழக் )
பண்டிதர்–அறிவுடையார். (உ-ம்.) "பண்டிதர்பொற்பாதங்களைப்பாம்" (சைவச.பாயிர.கசு.)

பண்டிதவாய்—கடுக்காய். (தைல. தைலவ. க.)

பண்டிதன் — 1. புதன். (சூ. நிக. க: கூக.) 2. புலவன். பண்டிதம்-வித்தையறிவு. 3. வைத்தியன். (வழக்.)

பண்டு—சுருள்ளி. (வைத்தியபரி.) 2. பழமை. (சூ. நிக. அ: சரு.)

பண்டுகம்—1. அசமதாகம், ஓமம். 2. செவ்வகத்தி. (1, 2-வைத்தியபரி.)

பண்டை—1. அநாதி. (உ-ம்.) "பண்டைய விருள்பறியும்படி" (கோயிற்பு. பதஞ்சலி. சச.) 2. பண்டு. ஐ-சாரியை. 3. முன். (உ - ம்.) "பண்டையிற்பெரிதே" (புறநா. கo.)

பண்டையர்— } முன்னோர். (வழக்.)
பண்டையோர்- }

பண்ணமைத்தல் — சமைத்தல் (உ - ம்.) "போர்ப்பண்ணமைத்து நுகம்பூட்டி" (சிந்தா. கோவிந். ருசு.)

பண்ணமைமுழவு — எழுவகைமுழவுகளுளொன்று; அது: முரசு, நிசாளம், துடுமை, திமிலை என நான்குவகைப்பட்ட வீரமுழவு. (சிலப். அரங்கே. உஎ. உரை.) [பன்மைமுழவெனவும் பிரதிபேதமுண்டு.]

பண்ணல் — 1. கலைத்தொழிலெட்டிலொன்று; அது: பாடநினைத்தபண்ணுக்கு இணை, கிளை, பகை நட்பான நரம்புகள்பெயருந் தன்மாத்திரையறிந்துவீக்குதல். (கூர்மபு. அட்டமூ. க. உரை.) 2. செய்தல். (உ-ம்.) "பண்ணியபாவங்கள்பகரொணாதவே" (சிவரக. சிவனடியார். கஅ.)

பண்ணவர்—1. குருமார். 2. திண்ணியர். 3. தேவர். (சூ. நிக. க: சஉ.) 4. பாடகர். பண்-பாட்டு. 5. முனிவர். (சூ. நிக. உ: உ) (1,2-பண்ணவன் என்பதில் ஒருமைவிகுதிபோலப் பண்ணவர் என்பதிலே பன்மைவிகுதி பெற்றது.)

பண்ணவன் — 1. அருகன். (உ-ம்.) "பண்ணவனெண்குணன்பரத்தில்பழம் பொருள்" (சிலப். நாடுகாண். கஅஅ.) 2. குரு. 3 திண்ணியன். (பிங்கல. ருஎசுக.) 4. தேவன். 5. பாடகன். (பண்-பாட்டு.) 6. முனிவன். (2, 4, 6-சூ. நிக. கக. ணகரவெ. கஎ)

பண்ணுந்த — நால்வகைப்பண்; அவை: பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி யென்பன. (சூ. நிக. கo: ருஉ.)

பண்ணிகாரம்—1. அப்பவருக்கம். (உ-ம்.) "பண்ணிகாரம்பெய்பண்டிகள் தம்மொடும்" (கூர்மபு. கன்னனவ. சரு.) [தெலுகு.] 2. பலபண்டம். (சூ. நிக. சு: கஉ.)

பண்ணியசாலை—1. சந்தை. 2. பலகாரச்சாலை. பண்ணியம்-சிற்றுண்டி. 3. வியாபாரவீடு. (1, 2, 3-பண்ணியம் பலபண்டத்திற்குப் பெயராதலில் சந்தைக்கும், வியாபாரவீட்டிற்கும் பெயராயின.)

பண்ணியம்—1. அப்பவர்க்கங்கள். (உ-ம்.) "பண்ணியம்வைத்தானைமுகன்பாதம்பணிந்து" (சிலப். அரங்கே. கo. உரை.) 2. பலபண்டம். (சூ. நிக. கூ: சஉ.) 3. பாம்பு. (வைத்தியபரி.)

பண்ணிருபத்தோன்று-இராப்பண்எட்டும், பகற்பண்பத்தும், பொதுப்பண் மூன்றுமாகிய இருபத்தொருபண். (தேவாரத்திற்காண்க.)

பண்ணுதல் — 1. அலங்கரித்தல். (பாரத வெண்பா.) (இராமா. அயோத்தி. மந்திர. உ.). 2. உண்டாக்கிக்காரியப்படுத்தல். (உ-ம்.) "பலந்தருமொருவனிங்குப்பண்ணிடவேண்டாவென்னில்" (சி. சி. க: ச. மறை.) 3. கரசரணாதிகளசைத்தல். (சி. சி. உ: எo. ஞானப்.)

பண்ணுரை—புனைந்துரை. (உ-ம்.) "பண்ணுரையாற் பரவித்துயர்தீர்த்தான்" (சிந்தா. நாமக. ககக)

பண்ணுவார் —குதிரைப்பாகர். (சூ. நிக. உ. ருசு.)

பண்ணுறல்—பூட்டல். (உ-ம்.) "செறிமருப்பேற்றினஞ்சிலம்பப்பண்ணுறீஇ" (சிந். நாமக. கரு.)

பண்ணுறுத்தல்—அலங்கரித்தல். (உ - ம்.) "கொய்யுளைப்புரவிபண்ணுறுத்தி" (கூர்மபு. தக்க. வமி. சக.)

பண்ணை—1. ஒரு கீரை. (உ-ம்.) "பண்ணையிளங்கீரையதுபற்றுமலமிளக்கு" (பதார்த்தகு. சுருகூ.) 2. சபை. 3. சமுசாரம். (வழக்.) 4. நீர்நிலை. 5. தோட்டம். (சிலப். அரும்பத.) 6. பண். (பரிபாடல்.) 7. பண்ணைச்செடி; அது: சிறுபண்ணை, செம்பண்ணை, சேவற்பண்ணை, புற்பண்ணையெனப்பலவகைப்படும். 8. மகளிர் கூட்டம். 9. மகளிர் விளையாட்டு. 10. மருதநிலம். 11. வயல். (உ-ம்.) "பண்ணைசூழ்ந்திலகுந்திருமுனைப்பாடிப்பழையநாடனைத்தையும்" (பாரத. பாயிர. சு.) 12. விலங்கின்படுக்கை. (4, 7, 8,9, 12-பிங்கல. ருஎஎo.)

பண்ணைக்காரர் — வயற்செய்கைக்காரர். (வழக்.)

பண்ணையாள்-வயல்வேலைக்காரன். (வழக்.)

பண்ணைவீடு—வயல்வளமுடையவீடு. (வழக்.)

பண்பாடி—பண்புப்பகுதி, செம்மைமுதலிய பண்புச்சொற்களின்பகுதி.

பண்படுத்தல்—சீர்ப்படுத்தல். (வழக்.)

**பண்படுதல்**—சீர்திருந்தல். (சூ. நிக. உ: எரு.)

**பண்பாகுபெயர்**—குணவாகுபெயர். (உ-ம்.) "நீலஞ்சூடினாள்" என்பதுபோல வரும். (நன்னூல். பெயரி. ருரு. உரை.)

**பண்பி**—பண்புடையது. (நன். ருகூரு. உரை.)

**பண்பு**—1. அறம். (பரிபாடல்.) 2. குணம். (சூ. நிக. அ: எரு.) 3. பாடறிந்தொழுகல். (உ-ம்.) "பண்பெனப்படுவதுபாடறிந்தொழுகல்" (கலி. கருரு.) 4. பொறியாலுணரப்படுங் குணம். (தொல். சொல். உகஎ. சேனா.)

**பண்புச்சொல்**—உரிச்சொல். (நன்னூ. உரியியல். க.)

**பண்புத்தொகை**—குணத்தொடு குணிக்கு உண்டாகிய ஒற்றுமைநயத்தைவிளக்கும் ஆகிய என்னும் பண்புருபுதொக்க தொகை. (நன். ருகூரு. மூகம்.) [ஒருபொருளுக்குவரும் பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமாகிய அவ்விருபெயர்நடுவில் ஆகியவென்னும் உருபு தொக்கு நிற்பதுமது.]

**பண்புப்பெயர்**—உரிப்பெயர். (வழக்.)

**பண்புமறிநிலை** — ஓரலங்காரம்; அஃது: ஒன்றன்குணம் மற்றொன்றற்குரைப்பது. (தொன்னூல். ருOச. உரை.)

**பண்புரிச்சொல்**—பொறிகளாலறியப்படுங் குணச்சொல். (பண்புபார்.)

**பண்புருபு** — ஆகிய என்பது. (பண்புத்தொகைபார்.)

**பண்புரைப்பார்**—தூதர். (சூ. நிக. உ: சக.)

**பண்புவமை**—ஒன்றன்பண்பை மற்றொன்றற்கொப்பிடுவது. (உ-ம்.) "பவளம்போற்செந்துவர்வாய். (தண்டியல. பொருளணியி. உக.)

**பணக்காரன்**—பணமுள்ளவன். (வழக்.)

**பணத்தலைவர்**— 1. படத்தையுடைய நாகராசாக்கள். (உ-ம்.) "அலைபணத்தலைவயாமுனறிந்தவாகேட்டியாயின்" (கோயிற்பு. பதஞ்சலி. அரு.) 2. பணத்துக்குத்தலைவர். (வழக்.)

**பணதரம்** — பாம்பு. பணம்-படம் தரம்-தரித்தது.

**பணதரர்**—(அருக.) பவணர்; இவர்: நால்வகைத்தேவருளொருவகையர். (உ-ம்.) "பணதரரேமுதனாற்சுரரே" (திருநூற். ருக.)

**பணதி**—கற்பனை. (உ-ம.) "உளத்திலோர் பணதிபோல-நிற்றலுந்தோன்றும்" (ஞானவா. வில்வபல. கூ.)

**பணபரம்** — உதயத்துக்கு இரண்டாமைந்தாம், எட்டாம், பதினோராமிடம். (சோதிடக் கட. சுரு.)

**பணம்**—1. காசு. 2. சூதாடுபந்தயம். (உ-ம்.) "பொருளனைத்தையும்பணத்திடைமாய்த்தே" (வேதாரணி. பலபத். ச.) 3. பாம்பின்படம். 4. பாம்பு. (உ-ம்.) "பணத்துறையுலகமுழுவதும்புகழும்படி" (பிரமோத். சோம. உO.) ஆகுபெயர். (1, 3, 4-சூ. நிக. கக: ணகரவெ. உக.)

**பணமணி**—நாகமணி. (வழக்.)

**பணயம்**–1. அடகு. 2. பணம். (1,2-வழக்.)

**பணவம்**—தம்பட்டம். (உ-ம்.) "கணுவை" பார்.

**பணவன்**—பணிசெய்மகன். (வழக்.)

**பணவிடை** — வராகனிலொன்பதிலொரு பங்கு. (வழக்.)

**பணவை**—1. அட்டாலை. (வழக்.) 2. தாங்கு பலகை, பரண். (உ-ம்.) "பச்சைவேய்ப்பணவைகொச்சைவேட்டுவர்பதிச்சி" (திருப்பு. உசO.) 3. பேய். (2, 3-சூ. நிக. கக: ணகரவெ. உக.)

**பணாகரம்**—பாம்பு. (வழக்.)

**பணாதரம்** — பாம்பு. பணத்தைத்தரிப்பது. (சாஞ்சிப்பு. பணாதரிச் சரப்படலம்)

**பணாமணி**—நாகரத்தினம். (வழக்.)

**பணி**—1. அருளல். (உ-ம்.) "அருள்ஞானம் பணியென்றென்று" (கோயிற்பு. நடராச. உO.) 2 ஆபரணம். (உ-ம்.) "பணியெலாம்பணியதாகி" (கந்தபு. ததீசி. கOகூ.) 3. ஊழியம். 4. ஏவல். 5. கட்டளை. (உ-ம்.) "பாந்தளங்கெழுந்தீயோர்பணியினால்" (கந்தபு. ததீசியுத். கOரு.) 6. செய்கை, வேலை. 7. சொல். 8. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "பதப்பதுமந்தொடுத்தமுதின்படிமையளாம்பணிமொழியை" (சேதுபு. பிரமகத்தி. உக.) 9. தோற்கருவி. 10. பாம்பு. (7, 8, 9, 10-சூ. நிக. கக. ணகரவெ. கரு.) (3,4-வழக்.) சீவகசிந்தாமணியில், பரத்தலென்பர்.

**பணிக்கம்**—திருத்தம். (வழக்.)

**பணிக்களரி**–தொழில்செய்யுமிடம். (சிலப். அரும்பத.)

**பணிக்கன்**—1. உபாத்தியாயன். (சூ. நிக. உ: எ.) 2. கொற்றர்தலைவன். (வழக்.) 3. சாராயங்காய்ச்சுகிறவன்; இவன்: ஈழுவன். (உ-ம்.) சாணருங்கள்ளுக்குடியர்களீழுவர்தாமுமூணரர்" ஓர் விடுகவி.

**பணிக்குதல்**—பணித்தல். (வழக்.)

**பணிக்கை** — 1. நேர்த்தியாயிருக்கை. 2. பணித்தல். (1, 2-வழக்.)

**பணிகை**—வணங்கல். கை-தொழிற்பெயர் விகுதி.

**பணிகொள்ளல்** — தொண்டுகொள்ளல். (உ-ம்.) "கூறருமன்புகொடுத்தடிமைப்பணி கொள்கொண்டான்" (கோயிற்பு திருவிழா. அ.)

பணிச்சக்கரம்- வேளாண்மை,நாட் பொருத் தம்பார்க்குமோர் சக்கரம்.

பணிசாரகன்—வேலேயாள். (வழக்.)

பணித்தட்டார்—பொற்கொல்லர், சலந்தரு நர் என்றும் பெயர். (சூ. நிக. உ: ௯௦.)

பணிதம்—சூதாடற்கு ஒட்டியவை. (புறப் பொருள் வெ.)

பணித்தல்—1. ஏவுதல். (உ-ம்.) "பாயொ ளிப்பருதிவெம்படைபணித்தனரோ" (கூர்மபு. தக்கன்வேள்வி.௬௨.) 2. கட்டிளையிடல்.(வழக்.) அருளிச்செய்தல் என்பர் சிலப்பதிகாரத்தில். 3. கொடுத்தல். (உ-ம்.) "புலவர்செஞ்சொற்பாக் கொண்டுமுத்திபணிக்கவல்லானை" (திருநூற். க.) 4. சொல்லல். (சூ. நிக. ௧௦: ௫.) 5. தரிசிப் பித்தல். (உ-ம்.) "பாவகமிறந்தநாதன்பரதமுன் பணிக்கவந்தான்" (கோயிற்பு. இரணியவன். ௭௧.) 6. தாழ்த்தல். (உ-ம்.) "பவநகுமாரனை மலர்க்கைபணித்துநோக்கி" (பாரத. கிருட்டி. ௧௭.) 7. மிதித்தல். (சிந்தா.)

பணிதல் — 1. இறங்கல். 2. குறைதல். 3 தாழ்தல். 4.பெருமிதமின்றியடங்குதல்.(உ-ம்.) "எல்லார்க்குநன்றாம்பணிதல்" (வள். ௧௨௫.) 5. வணங்கல். (உ - ம்.) "பாதபங்கயம்பணிந்த னன்பணிதலும்" (இராமா. மந்திர. ௫௯.) 6. வளைதல். (1, 2, 3, 6-வழக்.)

பணிதி—ஆபரணம். (வழக்.)

பணிப்படுத்துதல்— 1. அலங்கரித்தல். 2. செப்பமிடுதல். (1, 2-வழக்.)

பணிப்பு — பணி தல். பு-தொழிற்பெயர் விகுதி.

பணிப்பெண்—குற்றேவற்காரி. (வழக்.)

பணிபு—பணிதல். (பரிபாடல்.)

பணிமாறுதல்—1. இரட்டல். (உ-ம்.) "சித் திரப்பாவைகள்சத்திரசாமரைவிசிறிகளும்- பத் தியினின்றுவிசித்திரமாம்வகைபணி மா று ம்" (சிவரக. தேவிமேருக்கயிலை. ௧௪.) 2. ஊதுதல். (உ-ம்.) "பணிமாறுந்தனிக்காளத்தெழுந்தவோ சை" (பெரியபு. திருஞான. ௯௧௧. உரை.) [இது குழூஉக்குறியென்பர்.].

பணிமொழி — மெல்லியமொழி. (உ - ம்.) "மாடகமெழாலேயன்னபணிமொழிமகளிர் மை ந்தர்" (கந்தபு. மேரு. ௨௨.)

பணியல்—வணங்கல். அல்-தொழிற்பெயர் விகுதி.

பணியார்—பகைவர். (வழக்.)

பணியாரத்துத்தி—ஒருதுத்தி. (வைத்திய பரிபா.)

பணியிணுக்கு — தண்ணீர்விட்டான் பூடு. (வைத்தியபரி.)

பணிலம் — 1. சங்கு. (சூ. நிக. ௧௧: ணகர வெ. ௧௯.) 2. சலஞ்சலம் என்னுஞ்சங்கு. (சூ. நிக. ௯: ௭௨.)

பணிவிடை—1. கட்டளை. 2. குற்றேவல். (உ - ம்.) "பணிவிடைசெய்வார்க்கருள்கூர்பவ னே" (மதுரைப்பதிற்று. ௫௦.)

பணிவு—1. தாழ்வு. 2. பதிவு. 3. பதுங்கு கை. 4. வணக்கம். (உ-ம்.) "சிங்க-மிகரிலணை தனைப்பணிவார்" (சேதுபு. தேவிபுர. ௮௪.) (1, 2, 3-வழக்.)

பணீசன் — பதஞ்சலிமகாமுனிவர். (உ-ம்.) "நீள்-வன்பணீசனெடெய்த" (கோயிற்பு. இர ணியவன். ௧௫.)

பணீந்திரம் — நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவ ந ங் க ளு ளொன்று. (சிவி. கிரி. உக. உரை.) [இது அண்டகடாகத்துக்குக்கீழாயிருக்கும் ப த் து ப் புவநங்களுளொன்று என்று விளங்குகிறது.]

பணை—1. அரசமரம். (உ-ம்.) "வேய்கர்ப் பூரம்பணையோடுபெரண்டிட"(அரிச்ச.நாட்.அ.) 2. உயரம். (உ - ம்.) "பணையடுப்பிற்றயிலாதி பருவமுற்றுறு" (தைல. பாயிர. ௧அ.) 3. கிளை. (பிங்கல. ௨௧௫.) 4. குதிரைப்பந்தி. 5. தோள். (உ - ம்.) "பழுத்தசெவ்வாயிற்பணையி லுந்தித்தடத்தில்" (கந்தரல. ௨௯.) 6. பருமை. (உ-ம்.)"பணைமுலைபாகனுக்குந்தீபற"(திருவா. திருவுந். அ.) 7. பறைப்பொது. (உ-ம்.) "சதி யெனைப்பலவெனமுழக்கினசதவி த ப் ப ணை" (பாரத. அணிவ. ௧௯. 8. பெருமை. 9. மரக் கொம்பு. (உ-ம்.)"செறிவு"பார். 10. மருதநிலப் பறை. (பிங்கல. ௫௭௦.) 11. மருதநிலம். (சூ. நிக. ௫: ௯௪.) 12. முரசின்விசேடம். (உ-ம்.) "பணையொலியிரலேயோதைபம்பையின் முழக் கம்" (கந்தபு. ஆற்று. ௯௪.) 13. மூங்கில். 14. வயல். 15. விலங்கின்படுக்கை. (சூ.நிக.௭௦அ.) (1, 7, 8, 13, 14-சூ. நிக. ௧௧: ௫.)

பணைத்தல் — 1. கிளைத்தல். (வழக்.) 2. பருத்தல்.(உ-ம்.) "கொங்கையுமிகப்பணைக்கும்" (சேதுபு. நாட்டு. ௪௦௦.) 3. பிழைத்தல்.(வழக்.)

பணைத்திராய்—ஒரு பூடு. (வைத்தியபரி.)

பணைத்து—இடங்கொண்டு. (உ-ம்.)"பணைத் தேந்திளமுலையமுதமூற"(மதுரைக். ௬௦௧.)

பணைப்பு—1. கிளைப்பு. 2. பருமை. (1,2- வழக்.)

பணையம்—பணயம். (வழக்.)

பத்தகேசரி—கருப்பூரம். (வைத்தியபரி.)

பத்தங்கம் — 1. செஞ்சந்தநம். (வைத்திய பரி.) 2. தசாங்கம்.

**பத்தசநம்**—தொண்டர். (உ-ம்.) "பத்தசநங் களைக்காக்கத்தசங்கட்டி" (குற்றாலக்குறவஞ்சி.)

**பத்தசாரம்**—காடிச்சலம். (உ-ம்.) "தூணி பத்தசாரத்தட்டநீரிருபடி" (தைல. தைலவ. கூஅ.)

**பத்ததி**—1. ஆகமங்களைப்பிரயோகிக்குநெறி காட்டுநூல்கள்; அவை: சோமசம்புபத்ததி, அகோரசிவாசாரியபத்ததி, திரிலோசநசிவாசாரியபத்ததி முதலியவாகப்பலதிறப்படும். (மச்சபு. முகவுரை.) 2. ஒழுங்கு. (வழக்.)

**பத்தநம்**—பட்டணம். (உ-ம்.) "பசிநோய் முதலாம்-புத்திக்கிலேசங்கணீங்கிப்புக்கார்க் கென்றும்போதலில்லாச் - சித்திப்பெயர்ப்பத்த நம்புகுவார்கட்குச்செவ்வழியே" (திருநூற். சo.)

**பத்தம்**—உண்மை. (வழக்.)

**பத்தர்** — 1. அன்பர். (உ-ம்.) "அவர்க்கத் தொடர்ச்சிக்கும்பத்திரபத்தர்சித்தப்பணியா" (ம-தி.எo.) 2. தட்டாரிலொருவகையர். (வழக்.) 3. யாழிணுறுப்பு. (உ-ம்.) "பழையதோர் பொல்லம்பொத்தியபத்தர்யாழ்க்கோல்" (திருவிளை. விறகுவிற். கங.)

**பத்தநபி**—கருப்பூரம். (வைத்தியபரி.)

**பத்தல்**—1. ஒருதொட்டி. 2. நீரிறைக்குஞ் சால். 3. பள்ளம். (ஐங்குறு. கoச.) 4. யாழிணுறுப்பு. (உ-ம்.) "குளப்புவழியன்னகவடு படுபத்தல்" (பொருந. ச.) (1, 2-வழக்.)

**பத்தரா** — முசுமுசுக்கை. (வைத்தியபரி.)

**பத்தன்** — 1. அன்புடையோன். 2. தட்டான், கம்மாளரிலொருவகையன்.

**பத்தா**—கணவன். (சூ. நிக. உ: எஅ.)

**பத்தாயம்**—தானியமுதலியகொள்ளும் பெரும் பெட்டகம். (வழக்.)

**பத்தி**—1. அன்பு. (உ-ம்.) "சென்றகாலத் திற்பத்திசெய்துமுத்தியினைச்சேர்ந்தோர்" (சிவரக. பாயிர. கங.) 2. ஒழுக்கம். 3. ஒழுங்கு. 4. தூணினிடைவெளி. 5. நம்பிக்கை. 6. முறைமை. 7. வரிசை. (உ-ம்.) "பத்தியாய் மணிக்காம்புறுசாமரைபயில" (சிவரக. மேரு. கஅ.) 8. வழிபாடு. 9. விசுவாசம். (உ-ம்.) "பொருவில்பத்திபூண்டதவராசரேறே" (சிவரக. சிவடுண்டிவனபாலன். சo.) (2, 6, 8-சூ. நிக. கக: தகரவெ. கச.) (3,4,5-வழக்.) சீவகசிந்தாமணியில்-யானைநடைவிசேடம் என்பர்.

**பத்திகாண்டிகர்**—மூவகைப்பக்குவரி லொருவர்; அவர்: நேசப்பெருக்கமுடையோர்.

**பத்திநி**—1. இல்லாள். (உ-ம்.) "ஆவியெவைக் குமருள் - பெறும்பத்திநிபங்கனேமறைக்கானப் பெருஞ்சுடரே" (மறைசை. எடு.) 2. கற்புடையாள். (வழக்.)

**பத்திமான்**—பத்தியுடையோன். மான்-ஆண்பால் விகுதி.

**பத்திமை**—1. அன்புடைமை. (உ-ம்.) "முநிவர்கள்பணிந்துபோற்றிப்பத்திமையுரைத்தவாறும்" (கூர்மபு. பதிக. உo.) 2. ஒழுக்கமுடைமை. (உ-ம்.) "பத்திமைநெறியொடுபெயிற்றிமாதவம்" (கந்தபு. காசிபனுபதேச. உo.)

**பத்தியகாரி**—சிறுகீரை. (வைத்தியமூலி.)

**பத்தியம்**—1. ஆரியம் தெலுங்கு இவற்றின் செய்யுள். 2. இணக்கமாயேற்றபோசநம். (வழக்.) 3. கடுக்காய். (வைத்தியபரி.)

**பத்தியாபத்தியம்**—நோயாளருக்கு ஏற்றவும் ஏற்காதனவுமாகியவைகள். (வழக்.)

**பத்திராங்கம்**—செஞ்சந்தனம். (வைத்தியபரி)

**பத்திரகம்** — 1. இலை. 2. இறகு. 3. சந்தனம். (வைத்தியபரி.) (1, 2-பத்திரம்பார்.) கப்பிரத்தியமாய் வந்ததென்பர்.

**பத்திரகர்ண**—பிரதிட்டாகலையி லாகாயதத் துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (சிலி. கிரியா. உக. உரை.)

**பத்திரகாளி** — ஐம்பத்தோருருத்திரசத்திகளிலொருத்தி. (வி-ணி.)

**பத்திரகாளிபுவநம்**—நிவிர்த்திகலையிற்பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சிலி. கிரியா. உக. உரை.)

**பத்திரகும்பம்**—முடிசூட்டுக்குச் சலம்பூரித்த கும்பம். (வழக்.)

**பத்திராங்கம்**—செஞ்சந்தநம். (வைத்தியபரி)

**பத்திரசிரேட்டம்**—வில்வமரம். (வைத்தியபரி.) (வழக்.)

**பத்திரதாருகம்**—தேவதாரம். (உ-ம்.) "வில்வவேர்பத்திரதாருகம்" (தைல. தைலவ. உஉ.)

**பத்திரதாலி**—சாதிமல்லிகை. (வைத்தியபரி.)

**பத்திரபதி**—சிற்றுமுட்டி. (உ-ம்.) "பத்திரபதிமூலமொருவீசையிடையுரலிலிடு" (தைல. தைலவ. உரு.)

**பத்திரபாணி**—பூசனி (வைத்தியபரி.)

**பத்திரம்**—1. அம்பிறகு. 2. அம்பு. (உ-ம்.) "பத்திரங்கட்கயங்காரியொப்புங்குழல்கள்" (திருப்பு. ருசச.) 3. அழகு. 4. இலை. 5. இறகு. 6. உடைவாள். (பெரியபு. மெய்ப்பொரு. கரு.) 7. உறுதிப்பத்திரம். (வழக்.) 8. சாக்கிரதை. (உ-ம்.) "பத்திரமாகப்பூசைபலவுபசாரஞ்செய்தே" (சிவரக. நைமிச. சகூ.) 9. நன்மை. 10. படை. 11. பத்திரவாகரணம். பஞ்சாங்கத்திலறிக. 12. மலை. பிங்கல. சகூரு.) (3, 4, 5, 9, 10-சூ. நிக. கக. தகரவெ. கசு.)

**பத்திரவம்**—பத்திரவாகரணம். (வழக்.)

பத்திரவாகரணம்—விட்டிக்கரணம். (பஞ் சாங்கத் திலநிக.)

பத்ச்ராவீரியகம் — 1. கோணூசங்கில். 2. பிரப்பஞ்செடி. (1, 2 வைத்தியபரி.)

பத்திரன்—வீரபத்திரன். (வழக்.)

பத்திராக்கியம் — தாளிசபத்திரி. (வைத் தியபரி.)

பத்திராங்கம் — 1. ஊமத்தை. 2. செஞ் சந்தனம். (1, 2-வைத்தியபரி.)

பத்திராசநம்—அட்டாங்கயோகத்தோ ராச நம். (திருமந்திரம். ஆதனம். ௩.)

பத்திராசநர்—வானோர்நவகணத்தொருவர்.

பத்திராசிராயம்-சந்தநமரம்.(வைத்தியபரி)

பத்திராசுவம் —நவகண்டத்தொன்று.

பத்திராட்சம்—ஒருகொட்டை. (ருத்திராக் கம்போலிருக்கும்.)

பத்திராத்தியம் — திப்பிலிமூலம். (வைத் தியபரி.)

பத்திராதநம்—பத்திராசநம். (வழக்.)

பத்திரி — 1. அம்பு. 2. இலை. 3. காளி. 4. குதிரை. 5. பறவை. (1, 2, 3, 4, 5-சூ. நிக ௧௧: தகரவெ. ௨௩.) 6. லவங்கப்பத்திரி, சாதிப் பத்திரி, தாழிசபத்திரி இம்மூன்றுக்கும் பொ துப்பெயர் (வைத்தியபரி.)

பத்திரிகை—1. இலை. 2. திருமுகம். (1, 2- வழக்.)

பத்திரை — 1. அவுரி. 2. இரண்டாமேழாம் பன்னிரண்டாந்திதி. (சூ.நிக.௧:அ௬.)3.ஒருநதி. (வி-ணி.) 4. காளி. (பிங்கல ௩ளஎஎ.) 5. கிரி புரண்டான்பூடு. (வைத்தியபரிபா.) 6. நற்பசு. (சூ. நிக. ௧: க௩.)

பத்திரைகேள்வன் — வீரபத்திரன். (சூ. நிக. ௧: ௨௨.)

பத்தினைராக்கியம்--தெய்வபத்தியிற் பிடி வாதம். (வழக்.)

பத்து—1. ஓரெண். 2. தேவபத்தி. (உ-ம்.) "பத்துடையீர்" (திருவா. திருவெம். ௩.)

பத்துக்காலோன்—நண்டு. (வழக்.)

பத்துமுகன்—இராவணன். (உ-ம்.) "பதும மகள்"பாா.

பத்தூரத்தைலம் — பொன்னூங்காணிமுத லிய சாற்றோடுபிறவுஞ்சேர்த்து வடிக்கப்படு மொருதைலம். (தைல. தைலவ. ௬௬. முகம்.)

பத்தூரம்—பொன்னூங்காணி. (உ-ம்.)"பத் தூரமுறுதைலமே" (தைல. தைலவ. ௬௬.)

பத்மணி— சுவாதிட்டானத்திற்குரிய பத்ம தளங்களிலொன்றிலநிற்கும். "ர" என்னுமட்ச ரத்தி னதிதேவதை. (சி. சி. அ: ௨௧. மறை.)

பத்மயோகி — சுவாதிட்டானத்திற்குரிய பத்மதளங்களிலொன்றில்நிற்கும் ல என்னு மட்சரத்தினதிதேவதை. (சி.சி.அ:௨௧.மறை.)

பத்மராகம் — பதுமராகம், மாணிக்கம். (உ - ம்.) "சோலைத்திகழ்ந்துகிர்கோமளப்பத்மரா கம்" (அரிச்ச. நாட்டு. ௪௦.)

பத்மாசநம் — பதுமாசநம் (உ-ம்.)"ஓரிணைப் பதமூருவின்மேலேறிட்- டாரவலித்ததன்மேல் வைத்தழகுற —சீர்திகழ்கைகளதனைத்தன்மேல் வைக்கப் - பார்திகழ்பத்மாசநமென லாகுமே" (திருமந். ஆதனம். ௨.)

பதக்கம்—மார்பணியினென்று, ஆரம்.

பதக்கிரமம்—நடநநடைக்கிரமம். (வழக்.)

பதக்கு—இரண்டுமரக்கால்கொண்ட அளவு. (எண்சுவடியிலநிக.)

பதக்கேடுதல் — 1. தைரியங்கெடல். 2. பதனழிதல். (1, 2-வழக்.)

பதகம்—ஒரு பறவை. (சூ. நிக. ௩: ௬அ.)

பதகளிப்பு —பதறுகை. (வழக்.)

பதகன்—கொல்வோன். (திருவிளை. இந்தி ரன்பழி. ௬௩.)

பதங்கம் —1. சந்தநஞ்சாம்பிராணி முதலிய வற்றினின் றெடுக்கும் பதங்கம். (வைத்தியநூலி லநிக.) 2 பறவைப்பொது. (சூ. நிக. ௩: ௬அ.) 3. பாதரசம். 4. விட்டில். (உ-ம்.)"சுடரில்விழு பதங்கமெனத்தளர்ந்தார்" (சிவரக. கணபதி யுடன். ௧, ௩.)

பதங்கமம் — 1. பறவைப்பொது. 2. விட் டில். (வழக்.)

பதங்கன் — சூரியன். (உ-ம்.) "எற்பதங் கன்றுவளர்சோமனங்கியிவர்செய் கையாய்" (மறைசை ௬அ.)

பதங்கு—குழி. (வழக்.)

பதச்சேதம்—பதத்தைப்பிரித்தல். (வழக்.)

பதசாலம் —பாதசாலம். (உ-ம்.) "பன்னிய கைவிரலாழிசிலம்பொடுபெதசாலம்" (சிவரக. தேவிமயம். எ.)

பதஞ்சல்லியம்—அத்தியான்மிகநூல்மூன் றினொன்று; இந்நூல்செய்தவன் பதஞ்சலிபக வான். இந்நூல் பிரகிருதியும் பிராகிருதங்க ளும் ஆன்மாக்களும் பெத்தமுத்திகளுஞ் சாங்கியநூலிற் கூறியவாறேயென்றும் விவேகஞானம்போல யோகமும் யோகாங்கமும் முத்திக்குக்காரணமென்றும் இருபத்தாருந் தத்துவம் ஈசுவரனொருவனுளனென்றும் அவன் எல்லாவற்றையும் அதிட்டித்துநின்று செய்வோனுதலானும் ஆன்மாக்களுக்கு வே றென்றுங்கூறும். (சி. கை. ௪௦.)

பதஞ்சலி—ஒரு முனிவர். (உ-ம்.) "பத்தியா விறைஞ்சக்கண்டுபெதஞ்சலியவரைநீங்க" (கோயிற்பு. பதஞ்சலி. அச.) [அஞ்சலியினின்றும் விழுந்தமைபற்றியிப் பெயராயிற்று.] பதம் - விழுதல், பதிதல்.

பதஞ்சலியம்—பதஞ்சலிசெய்தநூல்.(வழக்.)

பதஞ்செய்தல்—இளகப்பண்ணுதல். (உ-ம்.) "நிரந்தரங்குளிர்ந்துநின்றுபதஞ் செய் யு நீர்" (சி. சி. உ: சுசு.)

பதட்டம்—பதற்றம். (வழக்.)

பதடி—1. பதர். (உ-ம்.) "மக்கட்பதடியெனல்" (வள். கககசு.) 2. வில்லு. (ஆசரிய. நிக. எ: உ.)

பதணம் — மதிலுண்மேடை. (சூ. நிக. ரு: சச.)

பதநகேந்திரம்—உதயத்திலிருந்து நாலாம் ஏழாம் பத்தாமிடம். (சோதிடக.)

பதநம் — 1. இறக்கம். (வழக்.) 2. உதயத்துக்கு ஆறும் எட்டாம் பன்னிரண்டாந்தானங்கள். (குமாரசாமியம்.இராசிசரித்திர.உ.உரை.) 3. களைதல். 4. தாழ்தல். 5. பத்திரம். (உ-ம்.) "பருவத்தெடுத்ததைலமதைப்பதநம்பண்ணி" (தைல. தைலவ. கரு.) 6. போதல். 7. வியோமாட்சரேகை. 8. விழுகை. (வி·ணி. சி. சி. அ: ச. சிவாக்.)

பதநீர் — பனைநீர். பதம் - பக்குவம். (வைத்தியபரி.)

பதப்படுத்துதல்—பக்குவப் படுத்து தல். (வழக்.)

பதப்படுதல்—பக்குவமாதல். (வழக்.)

பதப்பலம்—காற்பலம். (உ-ம்.) "பதப்பலமெண்ணெயிலிட்டு" (தைல. தைலவ. க.)

பதப்பாடு—மதிலுறுப்பு. (பிங்கல. சுகூo.)

பதப்புணர்ச்சி — நிலைமொழியீறும் வருமொழிமுதலும் இயல்பாயேனும் விகாரமாயேனும் புணர்தல். (நன்னூல், உயிரீற். க.)

பதப்பொருட்காட்சியணி — ஓரலங்காரம்; அது: உபமானோபமேயங்களாயிருக்கும் இரண்டுசொற்பொருள்களுக்கு ஒற்றுமையாரோபித்தலாம். (குவல. கக.)

பதப்பொருள் — பதவுரை; அஃது: உரையிலக்கணமைந்தினொன்று.(நன்னூல்.பொதுப் பா. உஉ.)

பதபதேனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு. (சூ. நிக. கo: சக.)

பதம்—1. அடையாளம். 2. அளவை. (உ-ம்.) "சொற்பதங்கடந்துநின்றசுந்தரன்"(திருவிளை. மாபாத. கூக.) 3. அறுகம்புல். (வைத்தியபரி.) 4. இருக்குமிடம்.(உ-ம்.)"ஆரணங்கண்முடிந்த பதத்து" (கோயிற்பு. பாயிர. உ.) 5. இன்பம். 6. ஈரம். 7. உண்டல். 8. எழுத்தானயபதம். 9. ஒருவஸ்து. 10. ஒளி. (உ-ம்.) "பொற்பதப் பொதுவார்புகழ்" (கோயிற்பு. காப்பு.) 11. கால். (உ-ம்.) "கிண்கிணியிலங்கியபதம்பெறுவெனே" (அரிச்ச. பாயிர. க.) 12. காலம், சமயம். (உ-ம்.) "குறைகொள்வானவர்பதங்கிடையாதிறைகொள்ள" (திருவிளை. வரகு. ருo.) 13. கூர்மை. (உ-ம்.) "பறகுபறகென்றேசொரியப் பதமாயிருந்தபாக்குவெட்டி" (விகவி.) 14. சிந்து. 15. செல்வம். (உ-ம்.) "விண்ணோர்பதந் தந்து" (திருநூற்றந். கரு.) 16. சோறு. 17. நிச்சயம். 18. நெகிழ்ந்தகுணம். (உ-ம்.) "வாரிகுளிர்ந்தேபதமாம்" (உண்மைவிளக்கம்.) 19. பக்குவம். 20. பதவி. (உ-ம்.) "அண்டர்தம் பதம்யாவையுமடைந்து" (பிரமோத். பஞ்சா. சo.) 21. பூரட்டாதி. (உ-ம்.) "விளங்குபதங் கேட்டையாங்குநல்ல"(விதான.குணகுண. கக.) 22. பொருள். (உ-ம்.)"தற்பரமாய்ப்பரபதமாய்" (கோயிற்பு. பாயிர. கூ.) 23. மந்திரம். (சிந்தா.) 24. வரிசை. 25. வழி. 26. வேதத்திரோருறுப்பு. (1, 4, 9, 17-சி. சி. அ: கஉ. சிவாக்.) (5, 8, 16-சூ. நிக. கக. தகரவெ. கஅ.) (7, 19, 24, 25, 26-பிங்கல. கூஎஎஉ. (6, 14-வழக்.)

பதமஞ்சரி— ஒரு நூல். (பி·வி. வழக்.)

பதமுத்தி—அபரமுத்தி; அது: காலாந்தரத்திலே புநருற்பவமுள்ளது. சாலோக்கியமாதியாயுள்ள மூன்றினையும் பதமுத்தியென்று பெரியோர்கள் சொல்லாநிற்பார்கள். (சி. சி. அ: கஅ. நிரம்.)

பதமை — 1. அமைதி. 2. இணக்கம். 3. தாழ்மை. (1, 2, 3-வழக்.)

பதர்—1. அறிவீனன். (உ-ம்.) "மருந்தரிதாற் பெற்றும்வயிற்றுட்பெய்யாது—பரிந்தளற்றுட் பெய்தபதர்" (இன்னிசை. கச: பொரு. கo.) 2. பதடி. (உ-ம்.) "பதர்கொள்வார்நெல்லோடுற்ருல்" (அரிச்ச. பாயிர. கக.)

பதரி—இலந்தை. (வைத்தியபரி.)

பதலை—1. ஒருகட்பகுவாய்ப்பறை. 2. தாழி. 3. மலை. (1, 2, 3-சூ. நிக. கக: தகரவெ. க.)

பதவம்—அறுகு. (உ-ம்.) "போதுசென்று பெரும்பதப்புன்மாந்தி" (கலி. கoக.)

பதவாயுதம்—கோழி. (உ-ம்.) "பதவாயுதக் கொடிவேடாதை-கீர்த்தியைப் பாடு தற்கு" (மறைசை. அக.)

பதவி—1. இடம். 2. நிலை. 3. முத்தி.(உ-ம்.) "பதவியையார்க்குநல்கும்பண்ணவன்"(இராமாவாலி. கஙசு.) (1, 2-வழக்.)

பதவிபது—மிருதுவானது. (வழக்.)

**பதவியல்**-பதத்திலக்கணங்கூறுமோரியல். (நன்னூ.)

**பதவியன்**--சாதுவானவன். (வழக்.) இவன் பதவியன்.

**பதவு**—புல். (பெரியபு. சண்டேசுரநா. உசு.) செங்கோலறுகென்பர் புறப்பொருள்வெண்பா மாலையில். 2. மெத்தனவு. உகரஞ்சாரியை.

**பதவுரை**—சொற்றோறுமுரைக்கும் பொருள். (வழக்.)

**பதவை**—வழி. (சூ. நிக. ௫: சுஉ.)

**பதற்றம்**—பதறல். (வழக்.)

**பதறல்**—திடுக்கிடல். (வழக்.)

**பதறுதல்**—பதறல். (வழக்.)

**பதறை**—வேங்தோன்றி, ஓர் பூடு. (வைத்தியபரி.)

**பதன்**—பக்குவம். (ஈற்றெழுத்துப்போலி.)

**பதன்படுதல்**—1. பக்குவமாதல். 2. பதமையாதல். (1, 2-வழக்.)

**பதனழிதல்**—ஊழ்த்தல். (சூ. நிக. கக: தகரவெ. கரு.)

**பதனழிவு**—ஊழ்ப்பு

**பதனிடுதல்**—1. பக்குவமாக்கல். (வழக்.)

**பதாகன்**—பதாகையுடையோன். (உ - ம்.) "உரகபாதகன்" (துரியோதனன். பாரதம்.)

**பதாகிநி**—படை. (உ-ம்) "ஒங்குநீள்கொடிப் பதாகினி" (பாரத. படையெழுச்சி. எ.)

**பதாகை**—1. [பரதம்] கரகரணமுப்பத்து மூன்று வகையுளொன்று; அது: பெருவிரல் வளைந்து ஏனைவிரல் நான்கு நிமிர்ந்துநிற்கப் பிடிக்குந்தன்மை (உ-ம்.) "பதாகையென்பது பகருங்காலை - பெருவிரல்குஞ்சித்தல்லா நான்கும்-மருவிநிமிருமரபினதென்ப" (திருவி. கான்மா. கo. உரை.) 2. பெருங்கொடி. (உ - ம்.) "தாழை"பார்.

**பதாசநம்**—பாதபீடிகை. (வழக்.)

**பதாத்துவா** — சடத்துவாக்களிலொன்று. (சி. கை.)

**பதாதி** — 1. காலாள். (சூ. நிக. உ: சசு.) 2. சேனைகள். (உ - ம்.) "பரசியபதாதிதத்தம் பதிபுகச்செலுத்துகென்றான்" (திருவி. மெய்க்கா. கூஅ.) 3. சேனைத்தொகை பத்திலொன்று; அஃது: ஒருதேரும், ஓர்யானையும், மூன்றுபரியும், ஐந்து காலாளுங்கொண்டது. (சூ. நிக. கஉ: ககரு.)

**பதாயுதம்**—கோழி. (உ-ம்.) "வனபதாயுத மொக்குமெனும்படி" (திருப்பு. கூoஅ.)

**பதார்த்தகுணசிந்தாமணி** — பதார்த்தங்களின் குணங்களைக்கூறு நூல். (வழக்.)

**பதார்த்தசாரம்** — வைத்தியசாத்திரத்துளொன்று; அது: பதார்த்தங்களின்குணத்தைச் சொல்லுவது. (வழக்.)

**பதார்த்தத்திரயம்** — பசு, பதி, பாசம் என்னும் திரிபதார்த்தம். (சி. சி. க: க. சிவாக்.)

**பதார்த்தம்**—1. கறிகள். (வழக்.) 2. பதப்பொருள். 3. பொருள். (உ-ம்.) "பரமன்பூசனைக்குரியபதார்த்தமெல்லாஞ்சாரமாச்சேகரித்து" (சிவரக. சிவதன்மா. ௬௪.)

**பதார்த்தமாறு** — 1. நிர்க்கதமானஞானம், பிரத்தியாதிபதார்த்தசரூபஞேயம், லிங்கார்ச்சனை இலட்சணம், அநுஷ்டியபஸ்மாதாரணைகம், அதிகிருதமானசிவமந்திரரூபசாதநம், சிவசமாநதாமுத்திரூபசாத்தியம் என்பன. (த. நி. தீபா. கருக.)

**பதார்த்தமூன்று**—தொம்பதார்த்தம்=சீவன், தத்பதார்த்தம்=ஈசுவரன், அசிபதார்த்தம்=ஐக்கம் என்னு மூப்பதார்த்தங்கள். (வாசுதே. உகஅ.)

**பதார்த்தவிர்த்திநிதரிசனை** – பதப்பொருட்காட்சியணி. (குவல. கக.)

**பதார்த்தாபிவியஞ்சகம்**—பெயர்களை விளக்குவது. (சி. சி. அளவை. க. சிவாக்.)

**பதி**—1. அரசன். (பிங்கல. எகூகூ.) 2. இடம். (உ-ம்.) "நின்பதியுறப்பெற்றேன்" (சிவரக. தேவிநாட்டியம். எ.) 3. உறைவிடம். (உ - ம்.) "பந்தனை"பார். 4. ஊர். 5. எப்பொருட்கு மிறைவன். 6. காக்கிறவன். (சைவப்பி. சுo.) [ப - காத்தல்.|தி - வினைமுதற்பொருள்விகுதி.] 7. கொழுநன். (உ - ம்.) "கண்டவர்பதியைவட்கென்றகட்டுரை". (அரிச்ச. விவாக. உகக.) 8. கோயில். (சி-கை.) 9. தெரிநிலைவினைப் பகுதி. 10. பரிபூரணமாய், ஒன்றாய், அறிவுக்கறிவாய், நின்மலமாய், உயிருக்குயிராயிருக்கின்ற சிவம். (உ-ம்.) "பதிபசுபாசத்தை" (பஞ்சாக்கரதேசிகரந்தாதி. க) 11. பூமி. (தைலவ.) 12. மருதநிலத்தூர். (சூ. நிக. ௫: சo.) 13. வீடு. (பிங்கல சுகூசு.) (4, 5, 6-சூ. நிக. கக: தகரவெ. சு.)

**பதிகம்**—1. ஐந்துபொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப்பொருளையுந் தொகுத்துச்சொல்வது. (உ-ம்.) "முகவுரைபதிகமணிந்துரை நூன்முகம்" (நன். க.) 2. பத்துச்செய்யுளான் முற்றுப்பெறுமோர் பிரபந்தம். 3. பாசி. (உ - ம்.) "பதிகம்பரிக்குங்குழன்மாதராயப்பரவை" (மறைசை. கஏ.)

**பதிகன்**–வழிச்செல்வோன். (உ-ம்.) "மொய்ம்பாயுணர்த்தவந்தப் – பதிகன்றானும்போனான்" (ஞானவா. மந. கக.)

**பதிகி**—வழிச்செல்வான். (வழக்.)

**பதிச்சம்**—வாலுளுவை. (வைத்தியபரி.)

**பதிஞாநம்** — ஒருவரறிவியாமல் சர்வத்தையும் ஒருகாலத்திலேதானறிகை, ஆன்மாவிற் சாட்சாத் சிவசத்தியால்விளங்கிய சிற்சத்தி விர்த்தி. (சி. சி. க: உ. மறை.)

**பதிட்டை**—பிரதிட்டை. (உ-ம்.) "பழகிய பரனையானுப்பரிவினுற் பதிட்டை செய்து" (திருவிளை. இரசவா. உக.)

**பதித்தல்**—1. அடக்கல். (வழக்.) 2. அழுத்தல். (காஞ்சிப்பு. திருநகரப். சுறு.) 3. தாழ்த்தல். (பிறவினைத்தொழிற்பெயர்.) 4. பதிவைத்தல். (வழக்.)

**பதிதம்** — தவறு, வருணச்சிரமந்தவறுகை. (வழக்.)

**பதிதல்** — 1. அழுந்துதல். 2. ஆழ்தல். 3. ஊன்றல். 4. எழுதுதல். 5. ஒடுங்குதல். 6. கீழ்ப்படுதல். 7. தங்குதல். 8. தாழ்தல். 9. பள்ளமாதல். (1—9-வழக்.)

**பதிதன்** — குலஞ்சமயமுதலிய வொழுக்கத்திற்றவறினேன். (உ-ம்.) "விதிமரபுமாசிரமமெய்ந்நெறியும்விடுத்தழிந்த-பதிதனைநீவிடுதி" (சேதுபு. கவிசம்பு. சுo.)

**பதிநூல்** — கடவுளதுதன்மையைவிளக்கு நூல்; இதுவே வீட்டுநூலென்பது.

**பதிப்பு**—பதித்தல். (வழக்.)

**பதிபசுபாசந்தேரித்தல்** — பதிபசுபாசமாகிய மூன்றுபொருளேயுந் தடத்தலக்கணத்தின் வைத்து வகுத்துணர்த்தல். (உ-ம்.) "பன்மார்க்கப்பொருள்பலவுங்கீழாகமேலாம்பதிபசு பாசந்தெரித்து" (சி. சி. அ: உஉ.)

**பதிபடை**—ஒளித்திருக்கும்படை. (வழக்.)

**பதிபந்தம்**—பிரதிபந்தம். (உ-ம்.) "உயிருண்மையுருமற்போக்கியிடறணைப்பூதப் பதிபந்தமென்பர்" (வேதா. சூ. கசo.)

**பதிமினுக்கி**—விளக்குமாறு. (உ-ம்.) "பதிமினுக்கியாதிதுணைக்கருவிகளுமமைமணவைப்பாங்கிற்றுனே" (தைல. பாயிர. கச.)

**பதிமை**—பிரதிமை. (வழக்.)

**பதியம்**—பதிக்கப்பட்டநாற்று. (வழக்.)

**பதியவத்தாத்திரயம்**—சத்தர் உத்தியுக்தர் பிரவிருத்தர் எனப்படும் பதியின்மூன்றவத்தைகள். (சி. சி. அளவை. ரு. சிவாக்.)

**பதிரன்** — இதமாகியவசநமும் அகிதமாகிய வசநமும் சுரோத்திரத்துக்கேட்சப்படினும் அவைகளிலிதாகிதங்களில்லாமலிருக்கிறவன். (வாசுதே. கஎo.)

**பதில்**—வதில். (வழக்.)

**பதிவத்திநி**—மங்கலே. (வழக்.)

**பதிவிடை**—ஒளித்திருக்குமிடம். இடை-இடம்.

**பதிவிரதம்**—கற்புத்தவமுமை. (வழக்.)

**பதிவிரதாதருமம்**—கற்புநெறி. (வழக்.)

**பதிவிரதி**— } கற்புடையாள். (வழக்.)
**பதிவிரதை**— }

**பதிவிருத்தல்** — ஒளியில் மறைந்திருத்தல் (வழக்.)

**பதிவு** — 1. அழுந்துகை. 2. ஊன்றுகை. 3. தாழ்வு. 4. புத்தகத்திலே பேர்முதலிய பதிதல். (உ-ம்.) "சேவகம்"யார்.

**பதிவைத்தல்**—நாற்றுமுதலியன பதித்தல். (வழக்.)

**பதிற்றுந்தாதி**—பத்துவெண்பா பத்துக்கலித்துறை பொருட்டன்மைதோன்றப் பாடப்படுமோர் பிரபந்தம். (உ-ம்.) "வெண்பாப்பத்துக் கலித்துறைப்பத்துப் - பண்புறமொழிதல்பதிற்றந்தாதி" (இலக்கணவி. அசூக.)

**பதிற்றுப்பத்தந்தாதி** — பத்துப்பத்து ஒரு சந்தமாக நூறுசெய்யுட்கொண்ட ஒரு பிரபந்தம்; அது: ஒவ்வொருபத்தும் அந்தாதித்துப் பாடுவது. (திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதியைப்பார்.)

**பதிற்றுப்பத்து** — 1. ஒருநூல். 2. நூறு. (1, 2-வழக்.)

**பதிற்றேன்பான்**—தொண்ணூறு. (வழக்.)

**பதினுயிரம்**—பத்தாயிரம். (வழக்.)

**பதினுலுலகம்**—கீழேழுலகு மேலேழுலகு; அவை: அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம் இவையேழுங் கீழுலகு. பூலோகம், புவலோகம், சுவலோகம், சநலோகம், தபோலோகம், சத்தியலோகம், மகலோகம் இவையேழும மேலுலகு. (சூ. நிக. கஉ: எo, எக.)

**பதனுறுகோணம்** — எட்டுத்திசையு மதிலுள்ளந்தராளமெட்டும். (வழக்.)

**பதினன்கிந்திரர்**—அரி, விபச்சித்து, சுசாந்தி, சிவி, விபு, மநோசவன், புரந்தரன், மாவலி, அற்புதன், சாந்தி, விருடன், இருததாமன், திவற்பதி, சுசி என்பவர். (கூர்மபு.பிரமாயு எ. உரை.) [விபுவை-வசு இரவியெனவும் புரந்தரனை ஒசஸ்வியெனவும் பாடமுண்டு.]

**பதினன்குமநுக்கள்**—சுவாயம்பு, சுவாரோசிடன், உத்தமன், தாமசன், இரைவதன், சாக்குடன், வைவைச்சுதன், சூரியசாவர்ணி, தக்கசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, உருத்திரசாவர்ணி, இரௌச்சியன், பௌதியன் என்பவர். (கூர்மபு. பிரமாயுஞ. எ. உரை.)

**பதினெண்கணம்** — பதினெண்கூட்டம்; அவர்: ஆகாசர், உரகர், சித்தர், காந்தருவர், விஞ்சையர், பசாசர், தாரகை, போகபூமியோர், கின்னரர், கிம்புருடர், சுரர், அசுரர், பூதர், முனிவர், கருடர், இராக்கதர், இயக்கர், சாரணர் எனவுங்கொள்கவென்றார் அடியார்க்குநல்லார்.

**பதினெண்கீழ்க்கணக்கு** — நாலடியார்முதலிய நூல்கள்; இதனை: "நாலடிநான்மணிநானாற்பதைந்தொகைமுப் — பால்கடுகங்கோவை பழமொழி - மாமூலம் - மெய்ந்நிலையகாஞ்சியோடேலாதியென்பவே-கைந்நிலையவாங்கீழ்க்கணக்கு" என்னும் வெண்பாவாலறிக. கைந்நிலை-ஓர் நூல்.

**பதினெண்குடிமை** — ஓடாவி, கன்னார், குயவர், சொல்லர், கோவியர், சிவியார், தச்சர், தட்டார், நாவிதர், பள்ளர், பாணர், மாலைக்காரர், மூவாணியர், வண்ணார், வலையர், வெட்டியான் என்னும் பதினெட்டுவகைக்குடிமைகள். (பொருட்டொகைநிகண்டிற் காண்க.)

**பதினெண்ணுபபுராணம்** — பதினெண் புராணத்தை யெடுத்து ஆக்கியோர்பெயராய் வழங்குஞ்சார்புநூல்; அவை: பிரமாண்டம், அவுசுநம், காபிலம், காளிகம், சநற்குமாரம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், துருவாசம், நந்தி, நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்க்கவம், மாரீசம், மாநவம், வாசிட்டலைங்கம், வாருணம் என்பன. (பிங்கல. சசரு.)

**பதினெண்பாடை** — பதினெண் தேசத்தார்க்குரியபாஷை; அவை: குடகம், கன்னடம், கலிங்கம், தெலுங்கம், கொங்கணம், தொல்லம், சோனகம், சாவகம், சிங்களம், குசலம், சீனம், கங்கம், திராவிடம், அருணம், கௌடம், மகதம், கடாரம், வங்கம் என்பன. (நன்னூல். பெயரியல். கசு.) திராவிடம் - தமிழ். சிந்தாமணியுரையில் பதினெட்டுப் பாடையென்றே கூறி வகையெழுதாதுவிட்டார்.

**பதினெண்புராணம்** — சிவபுராணம்பத்தும், விட்டுணுபுராணநான்கும், பிரமபுராணமிரண்டும், அக்கினிபுராணமொன்றும், சூரியபுராணமொன்றுமாம்; இவைமுறையே: இலிங்கம், காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமநம், காருடம், நாரதீயம், பாகவதம், வைணவம், பதுமம், பிரமம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம் என்பன. (பிங்கல. சசச.)

**பதினெண்முக்கியகணேசர்** — பிரம்மமுநிகள், காலாக்கினிருத்திரர், வீரபத்திரர், பிநாகி, காலகண்டர், அங்கிரிதராளர், கசகராளர், முக்கராளர், நேத்திரகராளர், சோத்திரகராளர், சண்டர், மாலாதரர், திரிசூலி, விசுவமாலாதி, அண்டாதிநாதர், காலாந்தகர், லகுலீசர், மயூராந்நர் என்னும் பதினெட்டு முக்கியகணேசர் என்பவர். (வி-ணி. உசுச.)

**பதினெண்மூலம்** — சித்திரமூலம், எருக்கு, நெருஞ்சி, முருங்கை, முள்ளி, மாவிலிங்கு, சங்கங்குப்பி, தழுதாளை, குவளை, கண்டங்கத்தரி, பாதிரி, வில்வம், இராசவேகமுத்து, இருமல்லி, தாதுவளை, சிற்றுமல்லி, சுக்கு, கரந்தை என்பன. (வைத்தியபரி.)

**பதினெண்யாகங்கள்** — சோதிட்டோமம், அங்கிட்டோமம், உத்தியம், சோடசீ, வாசபேயம், அதிராத்திரம், சோமயாகம், சாதுர்மாசியம், பௌத்திரமேதம், சௌத்திராமணி, புண்டரீகம், அங்கிசயன், இராசசூயம், அச்சுவமேதம், விச்சுவசித்து, பிரமமேதம், பிரணவமேதம், பசுபந்தம் என்னும் பதினெட்டு யாகங்கள். (கூர்மபு. வருணைச்சி. கக. உரை.) (பிங்கல. சசகூ.)

**பதினொராடல்** — புறக்கூத்திலொருவகைக்கூத்து. (சிலப்பதி.) கொட்டியென்பது முதல் பதினொன்று கூறுவர் (பிங்கல. கசசக-முதற் காண்க.)

**பதுக்கம்** — 1. ஒதுக்கம். 2. ஒளிப்பு. 3. பதுங்குந்தன்மை. (1, 2, 3-வழக்.)

**பதுக்குதல்** — மறைத்தல். (வழக்.)

**பதுக்கை** — 1. இலைக்குவை. (உ-ம்.) "தேய்த்தார்பதுக்கைநிரைத்த-கடுநவையாராற்றுசுனைமுற்றி" (கலி. கஉ.) 2. கற்குவியல். (ஐங்குறு. கூசுஉ.) 3. சிறுதிடர். (சூ. நிக. ரு: கச.) 4. சிறுதூறு. (சூ. நிக. கக: தகரவெ. சு.) 5. பாறை (உ-ம்.) "அம்புவிடவீழ்ந்தோர்வம்பப் பதுக்கை" (புறநா. கூ) 6. பாலைமரம். (வைத்தியபரி.)

**பதுகரை** — பழமுண்ணிப்பாலை. (வைத்தியபரி.) (மலையக.)

**பதுங்கல்** — 1. ஒடுக்கம். (சூ. நிக. கூ: கசு.) 2. ஒளித்தல். 3. பின்னிற்றல். (2, 3-வழக்.)

**பதுங்கலன்** — பதுங்கி. (வழக்.)

**பதுங்கி** — பின்னிற்பவன். (வழக்.)

**பதுங்குதல்** — பதுங்கல். (வழக்.)

**பதுமகேசரம்** — புன்னைமரம். (வைத்தியபரி)

**பதுமகோசிகம்** — இணையாவினைக்கை முப்பத்துமூன்றுவகையுளொன்று; இதனை: "பதுமகோசிகம்பகருங்காலை, யொப்பக்கைவளைத்தைந்துவிரலு, மெய்ப்படவகன்றவிதியிற்றுகும்" என்பதனாற்காண்க. (சிலப். அரங்கே. கஅ. உரை.)

**பதுமநாபன்** — பதுமநாபி. (சூ. நிக. க: கக.)

பதுமநாபி—விட்டுணு. (வழக்.)

பதுமநாளம்—1. தாமரைவளையம். (தைல. தைல. ௧௧௬.) 2. தாமரைத்தண்டு. நாளம்-தண்டு.

பதுமநிதி—தாமரையுருவாய்க்கிடக்குமொரு வகை நிதி. (உ-ம்.) "சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்து"(தேவார.திருநாவு.)(சூ. நிக. ௬: அ.) இது குபேரனுக்குரிய நவநிதிகளுளொன்று.

பதுமபந்தம் — ஓரலங்காரம். கமலபந்தம் என்பதுமிது. தண்டியலங்காரத்திலில்லை வழக்கத்திலிருக்கிறது.

பதுமபந்து—தேனீ. (வைத்தியபரி.)

பதுமபாணி — சூரியன். தாமரைமலரைக் கையிற்பிடித்திருப்பதனுலிப்பெயர் வந்தது.

பதுமமணி—தாமரைக்கொட்டை. (வைத்தியபரிபாடை.)

பதுமம் — 1. ஒருவகைமாணிக்கம். (சிலப். அரும்பத.) 2. ஓரிரேகை. (பாரத. குருகுல. ௧௧௪. உரை.) 3. கோடாகோடி, நூறுகோடி. (சி-வி. ஞாந. ௨௫-ஆம் சுலோ.) 4. தாமரை. (உ-ம்)"அவன்முட்செம்பதுமம்"(மரு-தி.௭௦.) 5. பதுமாசநம். 6. பிரமபுராணங்கள் இரண்டனிலொன்று. (உ-ம்.)"பதுமமேலவன்புராணமாம்பிரமமேபதுமம்" (கந்தபு. பாயிர. ௫௪.) 7. மூடியுறுப்பைந்தினென்று. (சூ. நிக. ௭: ௨௨.)

பதுமமகள்—இலக்குமி.(உ-ம்.)"பதுமமகளைக்கொடுபோகும்பத்துமுகன்போற்பாறுதலும்" (சேதுபு. வேதாளவர. ௧௪.) மகள்-பெண்.

பதுமராகம் — ஓர் இரத்திநம், மாணிக்கம். (திருவிளை. மாணிக்கம். ௫௨.)

பதுமரேகை—கைரேகையினொன்று. (வழக்.)

பதுமரோகம்—கண்ணிமைக்குள் சிவப்புச் சதைவளர்ச்சி. (வைத்தியபரி.)

பதுமவண்டம் — பிரமவண்டம். (உ - ம்.) "பதுமவண்டத்தைநீக்கிவேறண்டத்திற்பருப்பதநகர்புக்கார்" (ஞாநவா. லீலிகதை. ௪௫.)

பதுமன்—1. அட்டநாகத்தொன்று.(சூ.நிக. ௬௨: ௭௮.) 2. பிரமன். (பிங்கல. ௧௫௬.)

பதுமனார் — ஓராசிரியர்; இவர் நாலடியாரைத் திருக்குறளிற்போல அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாற்படுத்து ஒவ்வொரு பொருளை வற்புறுத்துவனவாகிய பத்துப்பாக்களைத் தனித்தனியேதொகுத்து நாற்பது அதிகாரமாகப்பகுத்து உரையெழுதியவர். எழுதினுந்திருக்குறட்பகுப்புப்போற் சிறப்பின்றென்பர்.

பதுமாசநம் — 1. அட்டாங்கயோகாசநத்தொன்று; அது இடதுபாதத்தை வலதுதொடையிலும் வலதுபாதத்தை இடதுதொடையிலும்வைத்து உட்கார்ந்து வலக்கையால் வலதுபெருவிரலையும் இடக்கையால் இடதுபெருவிரலையும் முதுகிற் கைமாற்றிப் பிடித்துக்கொண்டு முகவாய்க்கட்டையை மார்பின்மேலூன்றி நாசிநுனியில் நாட்டம்வைத்திருத்தல். (உ-ம்.) "பத்திப்பொலிவொடுபூசையிற்பதுமாசநத்திருப்பார்" (சிவரக. நைமிச. ௨௮.) 2. தாமரைவடிவாகச்செய்யப்பட்டவாசநம்.

பதுமாசநன்—பிரமன். (திருவிளை. இந்திரன்பழி. ௯.)

பதுமாதநம்—பதுமாசநம். (சைவச.பொது. ௫௨௧. உரை.)

பதுமார்க்கம்-கௌதும்பை.(வைத்தியபரி)

பதுமாவதி—ஒரு நதி. (வழக்.)

பதுமினி— நால்வகைப்பெண்களிலொருத்தி. (உ - ம்.) "பதுமினிசித்தினிபகர்ந்தசங்கினி-யிதமுறுமத்தினியென்னுநால்வருள்" (கொக்கோகநூலிலறிக.)

பதுமினிகாந்தன்—சூரியன். (வழக்.)

பதுமுகம்—ஓரிருக்கை. (உ - ம்.) "பதுமுகமுற்கட்டிதமேயொப்படி, யிருக்கைசம்புடமயமுகஞ்சுவத்திகந் - தனிப்புடமண்டிலமேகபாதமுளப்படவொன்பதுமாகுந், திரிதரவில்லாவிருக்கையென்ப" (சிலப். வேனிற்கா. ௨௬. உரை.)

பதுமை—1 இலக்குமி. (உ - ம்.) "பாகைமொழிப்பதுமைகோன்" (சேதுபு. சேதுபல. ௨௦.) 2. ஓரிதழ்த்தாமரை.(தைல.தைலவ.௯௬.) 3. காளி. (பிங்கல. ௯௧௩.)

பதை—1. பதைத்தல். (உ-ம்.) "பதைபடுமணர்காலபடரெனப்பட்டிறப்பட்டார்" (திருவிளை.யானையெ.௩௦.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

பதைத்தல்—1. அஞ்சல். (வழக்.) 2. அவத்தைப்படல், துடித்தல். (உ-ம்.) "பாவியேமகனேயென்பள்பதைப்பள்" (அரிச்ச.மயாந.௬௭.)

பதைப்பு—பதறுதல். (வழக்.)

பதைப்ப—அசைய. (ஐங்குறு. ௧௫௬.)

பதைபதைத்தல்—பதைபதைப்பு. (உ-ம்.) "பதைபதைத்துப்பைந்தொடியாள்பதறி வீழ்ந்தாள்" (அரிச்ச. மயாந. ௫௨.)

பந்தகம் — கட்டு. (பிங்கல. ௯௭௭௮.) கப்பிரத்தியமென்பர்.

பந்ததயிலம் — பந்தமெரித்திறக்குமெண்ணெய். (வழக்)

பந்தநம்—கட்டு.(உ-ம்)"இரக்ஷாபந்தனம்" (வழக்.)

பந்தனை—1. கட்டு. 2. பந்தித்தல். (உ-ம்.) "பந்தனைசேர்பிரபஞ்சப்பற்றினைவிட்டோரு

ளத்திற்பதியாதனே" (சிவரக. கணபதியுடன் கடவு. க.) 3. மகள். (சூ. நிக. உ: அக.)

பந்தம் — 1. அழகு. (பிங்கல. ககசுக.) 2. உண்டை, திரள். (பிங்கல. உஉகூசு.) 3. உறவு, சுற்றம். (பிங்கல. கூ௦௦.) 4. ஏற்பாடு, நியமம். 5. கட்டு. (உ-ம்.) "மாயபந்தமாவினையைமாள" (இராமா. கரன். ருசு.) 6. கயிறு. ஆகுபெயர் போலும். 7. சம்பந்தம். (உ-ம்.) "உன்னலருஞ் சுருதிசம்பந்தமூத்திசம்பந்தமூலோகபந்த - மெ ன்னவருஞானங்கள்" (வேதா-சூ. ருஅ.) 8. தளை; இஃது: யாப்புறப்பெட்டிஞெளான்று. (உ-ம்.) "பந்தமடிதொடைபாவினங்கூறுவன்" (யாப்பருங்கலக்காரிகை. தற்சிறப். க.) 9. தீக் கொளுத்தும்பந்து. 10. தொடர். 11. மதில். (பிங்கல. சுஉக.) 12. மயிர்முடி, ஆண்பான் மயிர்முடி. (பிங்கல. க௦எகூ.) 13. மலம். (சி சி. அ: உ. சிவஞா.) 14. விலங்கு. (4,9,10-வழக்.)

பந்தயம்—ஒட்டம், சூதாடவைக்கும் பொருள். (வழக்.)

பந்தர்—1. ஒரு பட்டினம். 2. நீழல். (உ-ம்) 'பன்மலரடுக்கியநன்மரப்பந்தரிலவந்திகையின்' (சிலப். நாடுகாண். கூ௦.) 3. பந்தல். (உ-ம்.) "கமைதருபுட்பவிதானப்பந்தர்" (சிவரக. தேவி யிமய. கக.) 4. பாசத்துக்குள்ளானவர்கள்.

பந்தரம் — கரண்டகபாடாணம். (வைத்தியபரி.)

பந்தரி—பிடாலவணம். (வைத்தியபரி.)

பந்தல்—பந்தர். (வழக்.)

பந்தவரிசை—குதிரைப்பற்பாடாணம். (வழக்.)

பந்தன்—1. ஒரு வாணிகன்; இவன்பேரில் ஔவை பந்தனந்தாதியென்னுநூல் பாடினாள். (தனிப்பாடலிற் பார்.) 2. சீர்பந்தபாடாணம். (வைத்தியபரி.)

பந்தி—1. ஒருசந்தம்; அஃது: அடியொன்று ஞ்தெழுத்துக்கொண்டு வருவது. (வீரசோ. யாப்பு. கூகூ. உரை) 2. ஒழுங்கு. (உ-ம்.) "பந் தித்திக்கும்பெறத்தோன்றியவேதப்பதியன்" (மறைசை. அசு.) 3. குதிரையானைமுதலிய நிற்குஞ்சாலை. (உ-ம்.) "பாடலங்கரிவைகியபந்தி யும்" (அரிச்ச. ககர். கூ.) 4. கூட்டம். (வழக்.) (இராமா. எழுச்சிப். ருரு.) 5. வரிசை. (சூ. நிக. சு: கூசு.) 6. தெரிநிலைவினைப்பகுதி.

பந்தித்தல்—1. கட்டல். (பிறவினைத்தொழிற்பெயர்.) 2. பொருந்தல். (உ-ம்.) "அந்தத் திசையாகநம்பூருவதிக்கிற்-பந்திக்குமென்று ளாத்திற்பார்" (சைவச. பொது. சசஉ.)

பந்து — 1. உறவு. (பிங்கல. கூ௦௦.) அம்-கடைக்குறை. 2. எறியும்பந்து. (உ-ம்.) "பந்தணை விரலாள்" (திருவாசகம்.) 3. திரட்சி. (பிங்கல. உஉகூசு.) (அம் - கடைக்குறை.) 4. மட்டத் துருத்தி (உ-ம்.) "சிவிறி" பார்.

பந்துத்துவம்-பந்துக்களின்றன்மை. (வழக்.)

பந்துவராளி- ஓரிராகம். (வழக்.)

பந்தையம்—பந்தயம். அ, ஐ-போலி.

பந்நகம்—1. சீதரங்கபாடாணம். 2. பாம்பு. (உ-ம்.) "பந்நகாபரணு" (திருவிசைப்பா.)

பந்நகவைரி—கருடன். (சூ. நிக. கூ: ருஉ.)

பநசம்—பலாமரம். (உ - ம்.) "பள்ளமேற் பநசக்கனியூறல்" (அரிச்ச நாட்டு. ருக.)

பநசயித்தி—அரசு. (வைத்தியபரி.)

பநையன் — 1. ஒருநோய். 2. ஒரு பாம்பு. 3. ஒரு மீன். (வழக்குப்போலும்.)

பநிலம் — வாதரோகம். (உ-ம்.) "பநிலவர்க்க மிலை" (தைல தைலவ. கஎ)

பப்பரப்புளி-பெருக்கமரம். (வைத்தியபரி.)

பப்பரம்—தேயமைம்பத்தாறினொன்று. (இராமா. எழுச்சிப். கூஅ.)

பப்பரர்— பப்பரதேயத்தார். (உ - ம்.) "பப் பரர்நெருங்கிச்சீறி" (அரிச்ச. சூழ்வி. கூக.)

பப்பளி—பப்பாளிமரம். (வைத்தியபரி.)

பப்பளிச்சேலை—ஒருவகை வன்னச்சேலை. (வழக்.)

பப்பளிப்பால் —ஒரு பால். (வைத்தியபரி.)

பப்பாதி—பாதிபாதி. (உ-ம்.) "பயந்தார்வடி விற்பப்பாதி" (பாரதம். இராயசூய. கூசு.)

பப்பாளி—பப்பளி. (வைத்தியபரி.)

பப்பு—1. ஒப்பு. (சூ. நிக. கக: சகரவெ. கஉ.) 2. பரப்பு. (உ - ம்.) "பப்பறவீட்டிருந்து" (திரு வாச. திருப்பள்ளியெழு. சு.)

பப்புருவாகநன்— அருச்சுநனுக்குச் சித்தி ராங்கதையிடத்திற்பிறந்த பிள்ளை. (உ - ம்.) "பன்னுளினெடும்போகம்பயின்றபின்னர்ப் பப் புருவாகனனென்னும்பைதற்றிங்களன்னோனே" (பாரத. அருச்சு. தீர்த். சகூ.)

பப்புவர்—புகழ்வோர். (பிங்கல. அசுசு.)

பப்ரு—நிவிர்த்திகலையிற் பிருதுவிதத்துவத் திலுள்ள நூற்றெட்டுப்புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

பம் —விண்மீன். (சூ. நிக. க: எக.)

பம்பத்திகாயம் —பஞ்சாஸ்திகாயம். (உ-ம்.) "குணிப்பின்றியைந்தாம்- பம்பத்திகாயம்பணித் தபிரான்" (திருநூற். உகூ.)

பம்பம்—திராய். (வைத்தியபரி.)

பம்பரம்—ஒரு விளையாட்டுக்கருவி. (பிரபு லிங்கலீலை. விமலைகதி. சக.)

பம்பல்—1. தளி. (உ - ம்.) "பானந்தனை யொத்துவிழுந்ததுமாரிப்பம்பல்" (அரிச்ச.

நாட்டு. ச.) 2. பரந்தவடிவு. (சூ. நிக. அ: ரு.)

**பம்பா**—தட்சணத்தில் ஒரு பொய்கை, பம்பை. (இராமா. சவரிபிறப்புநீங்குப. க.)

**பம்பிகை**—பீர்க்கு. (வைத்தியபரி.)

**பம்பு**—1. ஒலித்தல். (உ-ம்.) "பம்புசில்லரி பரிபுரத்தாட்டுணைபரித்தாள்"(ஏகாதசி.உருக்குமாங். சுரு.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வேடிக்கை. (உ-ம்.) "நம்பனடியவர்குநல்காத் திரவியங்கள்-பம்புக்காம்பேய்க்காம்" (ஔவை பாடல்.)

**பம்புதல்** — 1. ஆரவாரித்தல். (பம்புபார்.) 2. எழுச்சி. (சூ. நிக. க: கூஅ.) 3. நெருங்கல். (உ-ம்.) "பாசமுதனீடுதெருப்பம்புநகைமிசத்தில்" (மச்சபு. பிரமமுக. க.) 4. பரந்தவடிவு. (சூ. நிக. அ: ரு.)

**பம்பை**—1. ஒருவாச்சியப்பொது. (சூ.நிக. எ: சகூ.) 2. சுருண்டுகீழ்விழாமல் தூராயிருக்கின்ற தலைமயிர். (உ-ம்.) "நெடுஞ்சடைகரந்திட நெறித்தபம்பையும்" (பெரியபு. திருநீல. கஉ.) 3. பம்பா என்னும் பொய்கை. (உ-ம்.) "பம்பையின்கரைகண்டனன்" (சேதுபு.சேதுவந்த.[ச.) இது சுக்கிரீவனிருந்தமலைக்கு சமீபத்துள்ளது. (இராமா..சரிப்பிறப்பு. க.) 4. முரலைநிலப் பறை. (சூ. நிக. எ: சக.)

**பம்மல்**—1. செம்முதல். (உ-ம்.) "பறந்தன ரமரரஞ்சிப்பல்பெரும்பிணத்தின்பம்மல்"(இராமா. கும்பகருணன்வதை. களகூ.) 2. மந்தாரம். 3. மந்திப்பு. (2, 3 வழக்.)

**பம்முதல்**—பம்மல். (வழக்.)

**பய்யன்**—பையன். (போலி.)

**பய**—பைய, மெல்ல. (உ-ம்.) "பண்கோடே மொழியாற்பயக்கூறினள்" (சிந்தா.குணமாலை. ருக.) போலி.

**பயங்கரம்**—அச்சம். (உ-ம்.) "ஆனவதிபயங் கரங்கூர்பெருநாகிலடுங்கூற்றினுணை தன்னால்" (சேதுபு. ததுக்கோ. கரு.)

**பயங்கரி** — ஒரு யோகினி, காளியென்பர். (வி-ணி. உசக.)

**பயங்கொளி**—பயங்கொள்பவன். (வழக்.)

**பயசி**—திருநாமப்பாலை. (வைத்தியபரி.)

**பயசு**—1. நீர். (சூ. நிக. க: ருச.) 2. பால். (உ-ம்.) "ஊற்றும்பயசாலிழை"(தைல. தைலவ. ருக.)

**பயணம்**—பிரயாணம். (உ-ம்.) "வல்லவலத் திசையாகிற்பொருளேசேரும்வருபயணம் போதலுறும்" (துடிநூல். கஉ.)

**பயத்தல்** — 1. கொடுத்தல். (உ-ம்.) "இம் மூன்று-நன்மைபயத்தலில" (திரிகடு. கO.) 2. சித்தித்தல், கிடைத்தல். (சூ. நிக. கO. சுச.) 3. படைத்தல். (உ-ம்.) "புயுந்திடுருத்தியாதி" (சி. சி. க: சுO. சிவஞா.) 4. பயனுளதல். (வழக்.)

**பயதம்**—வண்டு. (வைத்தியபரி.)

**பயந்தன்று**—கொடுத்தது. (ஐங்குறு.)

**பயந்தாள்**—தாய். (சூ. நிக. உ: எசு.)

**பயந்தோர்ப்பழிச்சல்**—தலைவியைப்பெற்றாரைத்தலைவன்வாழ்த்தல். (வாண.கூஉ.முகம்.)

**பயந்தோன்**-பிதா.(நம்பியகப்.ஒழிபியல்.சு.)

**பயப்படல்**—அச்சமுறல். (வழக்.)

**பயப்பாடு**—அச்சம். (உ-ம்.) "தக்கனுனவன் மநத்துப்பயப்பாடில்லாமல்" (கூர்மபு. தக்க. வேள். கச. உரை.)

**பயப்பு** — 1. நிறம். (பிங்கல. கக௬௪.) 2. பசப்பு. ய-போலி. 3. பயன். (உ-ம்.) "பயவாக் களரனையர்" (தொல். சொல். கூOஉ. உரை.)

**பயம்**—1. அச்சம். (உ-ம்.) "பயமுணர்த்த" (அரிச்ச. மயாந. ச.) 2. இன்பம். (பரிபாடல்.) 3. குளம். (சூ.நிக.ரு:உகூ.) 4. குறி. (உ-ம்.) "சத்திபதிங் - தாம்பயத்தின்பேதமாராய்ந்து" (சைவச. ஆசாரிய உச.) 5. சுதை. 6. நீர். 7. பயன். (உ-ம்.) "முன்னையூழ்வினைப்பயத்தினும்" (இராமா.மந்திர.சுரு.) 8. பழம். (புறப்பொருள்வெ.) 9. பால். (5, 6, 8 சூ. நிக. கக: யகரவெ. கூ.)

**பயம்பு**—1. குழி. (உ-ம்.) "கரந்துபாம்பொதுங்கும்பயம்புமாருளவே" (மலைபடு. கககூ.) 2. பள்ளம். (சூ நிக. ரு: சுக.) 3. மட்டுக்குழி. (உ-ம்.) "குழ்பயம்பினகத்தொளித்தொடுங்கி" (பெரும்பாணு. சுOஅ.) 4. யானைபடுகுழி. (சூ. நிக. கூ: க.)

**பயநதி**—திருநாமப்பாலை. (வைத்தியபரி.)

**பயல்**—1. சரிபாதி. (உ-ம்.) "பயல்செய் மேனிப்பெருந்தகை" (சூத. ஞாந. கங: க.) 2. பள்ளம். (சூ. நிக. கக: ரகரவெ. உச.) 3. பையல், சிறுவன். (உ-ம்.) "பையலோடிணங்கேல்" (கொன்றைவேந்தன்.)

**பயலைமை**—பசலைத்தன்மை. (உ-ம்.)"நோயும்பயலைமையுமீதூரவெம்போல்" (நாலாயிர. இரண்டா. வாயுங். க.)

**பயளி**—பசளி. (வழக்.)

**பயனை**—பசலைக்கீரை. (வழக்.)

**பயற்றங்காய்**—ஒரு காய். (வழக்.)

**பயறு**—1. ஒரு தாநியம்; அது: எலிப்பயறு, கறுப்புப்பயறு, சடைப்பயறு, சிறுபயறு, தட்டைப்பயறு, துலுக்கப்பயறு, நரிப்பயறு, நன்னிப்பயறு, மின்னிப்பயறு, பெரும்பயறுஎனப் பலவகைப்படும். (வைத்தியபரி.) 2. (சித்திரை நாள். (சூ. நிக. க: எகூ.)

**பயன்**—1. உரைவகைபதினுன்கினொன்று. (நன்னூ. பொதுப். உக.) 2. நீர். பிங்கல. ருஎ.

(இறுதி-போலி.) 3. நெஞ்சினடுத்ததோர்மெய்ப்பாடு காரணமாகத் தன்வயினிகழ்ந்த சொல்லானெய்வது. (திருக்கோ. க. உரை.) 4. பலன். (உ-ம்.) "பிறங்குகங்கை-யாறுதனின்மூழ்குபயனடைந்திடுவர்" (ஏகாதசி. உருக்குமா. கஉ.) 6. பால். (வைத்தியபரி.)

**பயன்படுதல்**—பிரயோசநமாதல். (வழக்.)

**பயனிலசொல்லல்** — பிரயோசநமில்லாத பேச்சுப்பேசல். (உ-ம்.) "பல்லார்முனியப்பயனிலசொல்லுவான்" (வள். ககூக)

**பயனிலாள்**—வேசி. (சூ. நிக. உ: சுஉ.)

**பயனிலி**—வீணன். (வழக்.)

**பயனிலை**—பயன்முடிவு. (வழக்.)

**பயனுரைத்தல்**—உரைசொல்லல்.

**பயனுவமம்** — பயனைப்பற்றிவருமுவமை; அது: கற்பகவள்ளல் என்றாற்போல்வது. (நன். உகூசு. உரை.)

**பயனுவமை**—பயனுவமம். (வழக்.)

**பயபனை**-சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர். (உ-ம்.) "ஆமலகம"பார். (தைல. தைலவ. கூ0.)

**பயாநகம்**—நிவர்த்திகலையிற்பிருதுவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப்புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

**பயாநகன்** — சதருத்திரரி னிருதிதிக்கினிருக்கும்தசருத்திரரிலொருவன். (வி-ணி உஎ0.)

**பயிக்கம்**—பிச்சை. (உ-ம்.) "பாவியேனறியாதேபாழூரிற்பயிக்கம்புக்கெய்த்தவாறே" (தேவார. திருவாரூர்ப்பழமொழி. அ. திருநாவு.)

**பயித்தியம்**—பைத்தியம், அறிவுப்பிறழ்ச்சி. (வழக்.)

**பயிந்தரி**—ஏகம்பபாடணம். (வைத்தியபரி.)

**பயிர்** — 1. அருவருப்பு. (உ-ம்.) "பயிரிலாநரம்பின்கீதம்பாடியதொடங்கினாளே" (சிந்தா. சுரமஞ். நூச.) 2. அழைப்பு. பத்துப்பா. (குறிஞ்சி.) 3. இடும்பயிர். (உ-ம்.) "பருவத்தேபயிர்செய்" (ஆத்திசூடி.) 4. ஒலி. (உ-ம்.) "பயிரொன்றுகலையுஞ்சங்கும்" (இராமா. உலாவியற். அ.) 5. தெரிநிலைவினைப்பகுதி (உ-ம்.) "ஆன்கணங்கன்றுபயிர்குரல" (கு-பா. உகஅ.) 6. பயில். 7. பறவைக்குரல். 8. மிருகங்களுள் ஒன்றைமற்றொன்று அழைக்குமோரோசை. (உ-ம்.) "சுடமானல்லேறுமடமானைக்குபிணைபயிர வழைப்பின்" (புறநா. கஉஎ.) யானைக்குரியபரிபாடை என்பர் (சிந்தாமணியில்.) (5, 6, 7-சூ. நிக. கக: யகரவெ. ச.)

**பயிர்த்தல்**-ஒலித்தல். (பிறவினைத்தொழிற்பெயர்.

**பயிர்தல்**—அழைத்தல். (உ-ம்.) "கடுவன்-றுய்த்தலைமந்தியைக்கையிடேப்பயிரும்" (புறநா. கஅ.)

**பயிர்ப்பு** — 1. பயிலாதபொருளில்வருமருவருப்பு; இது: மகடூஉக்குணம் நான்கினொன்று. (உ-ம்.) "நாண்மடமச்சம்பயிர்ப்பென்னுமிவைநழுவ" (கோயிற்பு. பதஞ்சலி. கஅ.) இதற்கு மனங்கொளாத்தன்மையென்றார் சிந்தாமணியில். 2. பிசின். (உ-ம்.) "பல்வின்பயிர்ப்புறுதீங்கனி" (கலி. ருo.)

**பயிரவி** — 1. பைரவி, உமை. (உ-ம்.) "தநம் பார். (ம-தி, எச.) 2. மூடக்கொத்தான். (வைத்தியபரி.)

**பயிரி**—ஒரு கீரை. (வழக்.)

**பயிருகம்**—பழம்பாசி. (வைத்தியபரி.)

**பயிரும்**—அழைக்கும். (சிந்தா.)

**பயில்** —1. சைகை, குழூஉக்குறி. (வழக்.) 2. சொல். 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பழக்கம். (பெரியபு. கண்ணப்பநா. கசரு.)

**பயில்வித்தல்**—பழகுவித்தல். பிறவினைத்தொழிற்பெயர்.

**பயில்வு**—1. செய்கை. 2. பயிற்சி. (1, 2-வழக்.)

**பயிலல்** — 1. சொல்லுதல். 2. நடத்தல். 3. நிகழ்தல். 4. நெருங்கல். (உ-ம்.) "மந்தியுமறியாமரண்பயிலடுக்கத்து" (திருமுரு. சஉ.) 5. பழகல். (1,2,3,5 (உ-ம்.) "வந்தழிக்காண்க.)

**பயிலியம்**—குப்பைமேனி. (வைத்தியபரி.)

**பயிலுதல்**—1. செல்லுதல். (உ-ம்.) "பாய்வாள்விழியருவிபரவசராயெதிர் பயில்வார்" (கோயிற்பு. பதஞ்சலி. கக.) 2. செறிதல். (புறநா.) 3. சேவித்தல். (உ-ம்.) "ஆரிடமாம்பரிசநம்பயில" (கோயிற்பு. பதஞ்சலி. கூ0.) 4. பயிலல். (உ-ம்.) "சோலையிற்பயிலுங்குயிலையும்" (பாரத. இந்திரப். உ0.) 5. விளைதல். (உ-ம்.) "உலகம்பயில்புகழ்போற்சிலம்பாமாமதியூர்கொண்டதே" (வாண. உகூச.)

**பயிர்ச்சி**—பழக்கம். (வழக்.)

**பயிற்றல்**—கற்பித்தல். (உ-ம்.) "யாக்கை-மூத்தவனொருவன்வைகிமூனையவான் பயிற்றிவாழ்வான்" (திருவிளை. அங்கம். உ.)

**பயிற்றி**— பலகாற்செய்தல். (ஐங்குறு.) பலகாற்கூறி என்பர் புறநானூற்றில்.

**பயிற்றுதல்**—1. படிப்பித்தல். பயிற்றல்பார். 2. பழக்குதல். (பெரியபு. தடுத்தாட். கஅஎ.)

**பயிறல்** — 1. எடுத்தலோசை. (பிங்கல. உக0க.) 2. சொல்லுதல். 3. பயிலுதல். (2, 3-(உ-ம்.) வந்தழிக்காண்க.)

**பயின்**—1. பிசின். (உ-ம்.) "கப்பிணர்மரத்திற்காலும்பயினதாய்" (திருவிளை. இந்திரன்பழி. கரு.) 2. சிதையப்புகுமரக்கலத்தைத்திருத்

தஞ்செய்யுங்கருவிகள்; அல்லது திருத்தஞ்செய் தைகள். (பரிபாடல்.)

பயிளர் — பயிலுதலுள்ளவர். (உ-ம்.) "பலசமயத்தின்கண்ணும்பயினர்செய் வணக்கமெல்லாம்" (காரோ. திருநாட். உள.)

பயினன் — சேடன். (உ-ம்.) "பயினன்மேல் வருகல்லென" (பாரத. சம்பவ. கககூ.[போலி] பையினன்-அழகியசூரியனுமாம்.

பயினி — இணக்கம். (சூ. நிக. அ: கூ.) 2. பயினிப்பூ. (பத்துப்பா. குறிஞ்சி.)

பயை — அதர்மத்தின்புத்திரர் மூவரிலொருவன். (வி-ணி. உருஎ.)

பயோகநம் — ஆலாங்கட்டி. (வைத்தியபரி.)

பயோட்டிணி — விருட்சபர்வதத்துதித்த இரு நதிகளிளொன்று. (வி-ணி. உஉகூ.)

பயோதரப்பத்து — ஒரு பிரபந்தம்; அது: முலையினைப்பத்துச்செய்யுளாற் கூறுவது. (இலக்கணவி. அருஉ. உரை.)

பயோதரம் — 1. முலை. (உ-ம்.) "பயோதரவேசையர்" (அரிச்ச. நகர. கூ.) 2. மேகம். (சூ. நிக. க: கக.)

பயோதிகம் — கடனுரை. (வைத்தியபரி.)

பயோவிரதம் — ஒருமாதம்வரை பசுக்கோட்டத்துறைந்து பால்மாத்திரமுண்டுசெய்யுமோர் விரதம். (வழக்.)

பர்க்கம் — 1. ஒளி. 2. வீரியம்.

பர்க்கன் — 1. சிவன். (உ-ம்.) "வணங்குமன் பர்க்குப்பிறவியாமுளைவித்தைவறுத்தே-யணங்குருவகைசெய்வதாற்பர்க்கராமொருபே-ரிணங்கிநின்றதங்கவர்க்கு" (சிவரக. காயத்திரி. கூ.) 2. சூரியன். (பிங்கல. உசா.)

பர்ணசாலை — இலைகளாலும் புற்களாலும் வேயப்பட்டகுடிசை. (கோயிற்பு. வியாக். கச. உரை.)

பர்ணி — 1. முருக்கமரம். (வைத்தியபரி.) 2. வல்லாரை. (தைல. தைலவ. சுசு.)

பர்த்தா — பத்தா. (சி.சி. அ: கூசு. சிவாக்கிர.)

பர்பணம் — பாவட்டை (தைல.தைலவ.கூகூ.)

பர்வஸ்வரி — பிரியவிரதன்குமாரரெழுவருளொருவன். (த-நி. போ. கூகூ௦.)

பர்வதராசன் — மலையரசன். (கூர்மபு.திருக்கல். கங. உரை.)

பர்வதீர்க்கம் — மத்திமவிரனவொன இறை. (த-நி. போ. கூஉசு.)

பர்வம் — பருவம். பக்குவத்திற்கும் பொழுதிற்கும் பெயர். (பிங்கல. கூஎகஉ.)

பரக்கழிவு — பழி, அபகீர்த்தி. (உ-ம்.) "பரக்கழிவிதுநீபூண்டாற்புகழையார் பரிக்கற்பாலார்" (இராமா. வாலிவதை. எகூ.) புரக்கழிவிதுநீ. என்றும்பாடம். புரக்கழிவு-அபகீர்த்தி.

பரக்தம் — பரவும். (புறநா.)

பரகதி — மோட்சம். (உ-ம்.) "பத்தியாய் நினைந்துபரவுவார்தமக்குப்பரகதிகொடுத்தருள் செய்யும்" (திருவாச. அருட்பத். அ.) [பர-மேல்; கதி-அடைதற்குரியவிடம்.]

பரகாயப்பிரவேசம் — யோகசித்தர்கள்தங்கள் தேகத்தைவிட்டு அந்நியதேகத்திற்செல்லுதல். (சி. சி. அ: கூஉ. சிவாக்.)

பரகாயம் — பிறகாயம் (உ-ம்.) "பரகாயத்தினண்ணுதல்வான் – புலத்தினியங்கவிச் சித்தபோகமனைத்துந்தானிருக்கும்-தலத்தினினைந்தபடிவருசல்பிராகாமியமாந்தவக்கொடியீர்" (திருவிளை. அட்டமா. உரு)

பரகீயம் — பிறர்குரியது. (வள். ஈசக. பரி.)

பரகீயை — பிறர்க்குரியவள். (வழக்.)

பரங்கி — 1. இலவங்கம். 2. கண்டுபாரங்கி. (1, 2-வைத்தியபரி.)

பரங்குன்று — திருப்பரங்குன்று. (உ-ம்.) "திருவாவிநன்குடிவாஞர்பரங்குன்று" (கந்தரந். க.)

பரஸ்பரவிரோதம் — ஒன்றற்கொன்று விரோதம். (சைவப்பி. ௪௦.) பரற்பரவிரோதம் எனவும் வழங்கும்.

பரசம்பந்தம் — அறுவகையாகம சம்பந்தங்களுளொன்று; அஃது: அநந்தேசுரர்க்குஞ் சதாசிவர்க்குமுண்டான வாகமசம்பந்தம். (சி-வி. சரி. உ.)

பரசம்வித்து — அந்நியத்தையறிதல். (சி.சி. அ: கூச. ஞானப்.)

பரசமயகோளரி — திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர். (உ-ம்.) "பார்குலவுதனிக்காளஞ்சிந்நமெல்லாம்பரசமயகோளரிவந்தானென் றூத" (பெரியபு. ஞாந. க௦ச.)

பரசமயம் — பிறசமயம். (உ-ம்.) "அல்லாத பரசமயவலகைத்தேர்விண்டகல" (சேதுபு. கடவுள்வா. ககூ.)

பரசரீரம் — ஆன்மாக்களின்மூவகைச்சரீரங்களுளொன்று; அஃது: அநந்ததேவராற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரமும் கலாதிகளாகிய கஞ்சுகசரீரமும் முக்குணங்களாகிய குணசரீரமும் என மூவகைப்படும். (சி. சி. ௪: உக. சிவாக்.)

பரசாதி — அந்நியசாதி. தருக்கசங்கிரகத்தி லறிக.

பரசாரணம் — நீட்டுதல். (சி.சி.உ:ருகூ.சிவாக்.)

பரசிராமன் — மழுவுடையிராமன்; இவன்: சமதக்கினியும் இரேணுகையும் தந்தைதாயாகத் திருமாலவதாரம். (காஞ்சிப்பு. இரேணுகை. உ.)

**பரசிவதத்துவம்**—பராநாதம். (சி. சி. உ: எ௪. ஞாநப்.)

**பரசிவம்** — சத்தியொடுங்கிறதற்கிடமாய் நின்றதத்துவம்; இது: தத்துவமெலாங்கடந்த முடிவிலேநின்றது. (உ-ம்.) "ஒடுங்குநாளினில யனரியுருத்திரன்மகேசன் — னெடுஞ்சதாசிவன் விந்துநாதஞ்சத்திநெறியே-யடங்கிடம்பரசிவத் தினிற்பரசிவமினைத்துங்- கடந்ததத்துவமுடிவி லேநின்றதுசுருதி" (அருணைசலபு.திருமலை.௫.)

**பரசிவமூர்த்தி**—சதாசிவம். (சி-வி. ஞாந. ௯.)

**பரசு**—1. கோடாலி, மழுப்படை. (சூ. நிக. எ: உ.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**பரசுகம்**—மோக்ஷாநுபவம். (வழக்.)

**பரசுதல்**—துதித்தல். (உ-ம்.) "சண்டேசன் முன்பிரசமலரிறைத்திறைஞ்சிப்பரசு வா மே ம" (சேதுபு. கடவுள்வா. க௨.)

**பரசுபாணி** — 1. சிவன். (சூ. நிக. ௪: எ.) 2. பரசுராமன். பரசு-மழு.

**பரசுராமன்**— திருமாலவதாரத்திலொன்று. (பரசிராமன்பார்.)

**பரசுவம்**—பிறர்பொருள். (வழக்.)

**பரசோப்பநம்**—(வேதாந்தம்) சர்வசிருட்டி, சர்வதிதி, சர்வசங்காரம்என்னு மூன்று உபாதி யுடன்சம்பந்தித்த காலபரம். (ஞாநக்கட்டளை. தற்பதமநநம்.)

**பரசோநுபம்**—பரசாக்கிரம், பரசொப்புநம், பரசுழுத்தியென்னு மூன்றவத்தையுங் கண்டு கழன்று மேலாய்நின்று விளங்கிய சுத்தஅறிவு. (ஞாநக்கட்டளை. தற்பதமநநம்.)

**பரசோமசித்தாந்திகள்** — வித்தியாபுவநப் பேற்றினையே முத்தியென்பவர். (கூர்ம. பல வகை. க௯. உரை.)

**பரஞ்சுடர்**—சுயம்பிரகாசக்கடவுள். (உ-ம்.) "பரஞ்சுடர்முக்கட்பரமன்"என்னு முதற்குறிப் புக்கவி. (திருக்கருவைக்கவித்துறையந்தாதி.)

**பரஞ்சை**—காகளமுதலியவற்றின்தொனி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பரஞ்சோதி**—1. கடவுள். 2. சிவன்.(உ-ம்.) 'பவமாயங்காத்தென்னையாண்டுகொண்டபரஞ் சோதி' [பரம் - மேலான, சோதி-ஒளி.]

**பரஞ்சோதிமகாமுநிவர்**— சத்தியஞாநதரிசி கள் மாணாக்கர். (கோயிற்பு. சந்தாநகுரவர் வரலாறு.)

**பரஞாநம்** — பதிஞாநம். (சி. சி. க௨: எ. நிரம்ப.) இதுவே மெய்ஞ்ஞாநமென்பது.

**பரடு**—கரடு. (பிங்கல. ௧௧அ. அது, காலி னுள்ளது.)

**பரண்**—1. இதணம். (பிங்கல. எக௯.) 2. மேற்றட்டு. (வழக்.)

**பரணம்** — பரண். (அம்-சாரியை.)

**பரணர்**—ஒரு சங்கப்புலவர். (பதிற்றுப் பத்து. ௫௦.)

**பரணி** — 1. அடுப்பு. (உ-ம்.) "தரணிசசி வேள்வித்தீசாற்றும்பரணிகளிலிட்ட ... வ டெ ய டாமுன்" (தைல. பாயிர. உ௫.) 2. ஒருநாள். (உ - ம்.) "பூராடமுத்திராடம்பூசகீள்பரணி" (விதாந. குணகுண. எ.) 3. ஒரு பிரபந்தம்; அஃது: ஆயிரங்களிற்றைக்கொன்றவீரனைத் தலைமகனாகக்கொண்டு கடவுள்வாழ்த்துங்கடை திறப்பும் பாலைநிலமுங் காளிகோவிலும் பேய்க ளோடு காளியும் காளியோடுபேய்களுஞ் சொல் லக்கருதியதலைவன் சீர்த்திவிளங்கலும் அவன் வழியாகப் புறப்பொருடோன்ற வெம்போர் வழங்கவிரும்பலு மென்றிவையெல்லா மிருசீ ரடியொழித்தொழிந்த மற்றையடிகளானீரடிப் பஃறொழிசையாற்பாடப்படுவது.(உ-ம்.)"கடவுள் வாழ்த்துக்கடைதிறப்புரைத்தல்............. வுளமகிழ்பரணியுரைக்கப்படுமே" (இலக்கண வி. அ௩௯.) 4. கோய், ஒருபாத்திரம். (சூ. நிக. எ: ௩௬.) 5. முருக்கமரம். (வைத்தியபரி.)

**பரணை**—தண்ணீர்விட்டான்கிழங்கு.(உ-ம்.) "அமுக்கிரி"பார். (தைல. (தைலவ. ச௨.)

**பரத்தந்து**—பரக்க. (பரிபா.)

**பரத்தமை**—பரத்தையைநுகர்பவன்றன்மை. (மணிமே.)

**பரத்தர்**—தூர்த்தர். (உ-ம்.) "வறுமொழியா ளரொடுவம்பப்பரத்தரொடு" (சிலப். கொலைக் களே. ௯௩.)

**பரத்தல்**—1. சப்பையாதல். (உ-ம்.) "பரியவு தடன்பரியபல்லன்பரந்து – முருவழிந்தமூக்கு டையானும்" (சைவச. ஆசாரிய. க௨.) 2. பரவு தல். (உ-ம்.) "தண்ணீர்பரக்கவிட்டு" (தைல. பாயிர. ௩௧.)

**பரத்தன்**-பரத்தையைநுகர்பவன்.(சிலப்பதி)

**பரத்தி**—1. நெய்தனிலப்பெண். (சூ. நிக. உ: எ௨.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**பரத்தியர்**—நெய்தனிலத்துப் பெண்டிர். (உ-ம்.) "துளையர்நுளைச்சியர்பரதர்பரத்தியரள வரளத்தியர்" (அகப்பொ. அகத்திணை. உ௪.)

**பரத்திரீ**—வேற்றுப்பெண். (வழக்.)

**பரத்துவம்**—1. கடவுட்டன்மை. 2. முன் மை. (தருக்கசங்கிரகத்திலறிக.)

**பரத்துவன்**—பரத்துவாசன். (உ-ம்.) "பரத் துவனுறைவிடத்தளவும்" (இராமா. மீட்சி. உ௬௪.)

**பரத்துவாசன்**—1. சத்தவிருடிகளி லொரு வன். (உ - ம்.) "பரதநாதவேதகீதபரத்துவாச னென்பான்" (பாரத. வாரணா. ௩௨.)

பரத்தை — 1. ஒரு செடி. (வைத்தியபரி.) 2. வேசி. (சூ. நிக. க: கூச)

பரத்தையிற்பிரிவு — தலைமகன் பரத்தையிடத்துப்பிரிதல்; அது: வாயில்வேண்டல் வாயின் மறுத்தல், வாயினேர்வித்சல், வாயினேர்தல் என நான்கு வகைப்படும். (அகப்பொ. சற்பியல். ரு. உரை.)

பரதகண்டம்—நவகண்டத்தொன்று.(மணிமே. பதிக. உஉ.)

பரதகன்— சதருத்திரரி லக்கினிதிக்கிலிருக்குந் தசருத்திரரிலொருவர். (வி-ணி.)

பரதசாத்திரம்— நடநூல். (வழக்.)

பரதத்துவப்பொருள்—பரததத்துவமாயுள்ள பொருள். (உ-ம்.) "அத்தனேபரதத்துவப்பொருளென்று. (திருவிளை. விடையி. ரு.)

பரதத்துவம் — அதிசூக்குமத்துவம்; அது: "தத்துவந்தூலசூக்கபரங்களுமாகிநிற்கும்" என்பதனுற் பெறப்படும். (சி. சி. உ: எக.)

பரதத்துவன் — தத்துவங்களைக்கடந்த சிவபிரான். (உ-ம்.) "அத்தன்பரதத்துவன்" (கோயிற்பு. வியாக்கி. உக.)

பரதந்திரம்— சுதந்திரமின்மை, மற்ருருவரைச்சார்ந்திருப்பது. (சி. சி. க: ருகூ சிவஞா )

பரதந்திரியம்—பரதந்திரம். (சி. சி. பாயிர. ரு. ஞானப்.)

பரதநூல்—பரதசாத்திரம். (உ-ம்.)"தென்னரேறனையாயதுபசதநூனெறிநிலையெனச் சொன்னான்" (திருவிளை. கான்மா. ரு.)

பரதம்—1. இலட்சங்கோடி கோடாகோடி. 2. கூத்து. (உ-ம்.) "பணித்தல்"பார். 3. நவகண்டத்தொன்று. (உ - ம்.) "பாடல்சால்சிறப்பிற்பரதத்தோங்கிய" (மணிமே. பதிக. உஉ.) 4. பரதநூல். (உ - ம்.) "பாவமோடராகந்தாளமிம்மூன்றும்பகர்ந்திடுமுறையாற்பரதம்" (திருவிளை. கான்மாறி. அ.)

பரதர் — 1. நெய்தநிலமாக்கள். (உ - ம்.) "குணுங்கர்"பார். 2. செட்டிகள். (மதுரைக்காஞ்சி. ருகஎ.) 3. வைசியர். (உ-ம்.) "அரசகுமாரும்பரதகுமரரும்" (சிலப். இந்திரவிழ. கருஅ.)

பரதவர்—நெய்தனிலத்துத்தாழ்ந்த ஆடவர். (உ-ம்.) "பரதவர்நெய்தலே" (அரிச்ச. நாட்டு. ருஅ.) பட்டினவர் என்பர் சிலப்பதிகாரத்தில்.

பரதவருடம்— பாரதவருடம், பரதகண்டம். (திருவிளை. மேருவைச். உ0.)

பரதவன்— நுழையன். (பதிற்றுப்பத்து.)

பரதவித்தல்—பரிதபித்தல். (உ-ம்.)"பாலன் வந்திலனென்றேங்கிப்பரதவித் திருகண்டாரை-காலநொந்துருகி" (அரிச்ச. மயாந. க.)

பரதன்—1. இராமன்றம்பி. (உ-ம்:) "பரதனெனப்பெயர்பன்னினனன்றே". (இராமா. திருவவ. கஉக.) 2. சந்திரகுலத்தோரரசன். (உ-ம்.)"பரதனென்றொருபார்த்திவன்"(பாரத. குருகுல. உகூ.) 3. நடநம்பயின்ருேன்.(வழக்.)

பரதன்மம்—1. அந்நியாசாரம். 2. பரோபகாரம் (1, 2-வழக்.)

பரதாபம்—பரிதாபம். (வழக்.)

பரதாரம்—பிறர்மனை. (உ-ம்.) "ஆசில்பரதாரம்" (இராமா. .)

பரதி—நாடகி. (வழக்.)

பரதுக்கதுக்கன்—பிறவுயிருக்குநேருந்துன்பத்தைத் தனக்குநேர்ந்ததுபோற் கொண்டிரங்குகிறவன். (உ-ம்.) "பழுதிலாவருளினாலே பரதுக்கதுக்கனாகி" (சி. சி. பர. சௌத்திராந். உ.)

பரதேகம்— சூக்குமசரீரத்துக்குள்ளிருக்கும் ஒரு வடிவாகிய சிவத்துவபஞ்சகரூபம். (சி. சி. சு: க0. ஞானப்.)

பரதேசம்—பிறதேயம், அந்நியதேசம். (பிரபுலிங்கலீலை. பிரபுதே. கக.)

பரதேசி—1. ஓரிடத்துநிலையில்லாமற் சஞ்சரிப்பவன். 2. களைகணில்லாதவர். (உ - ம்.) "இவர்பரதேசிகாவலரென்றடிவீழ்ந் தேத்தி" (திருவிளை. அங்கம்வெட். உஎ.) 3. பிறதேசத்தான்.

பரதேவதை—அந்தரியாமியாகிய கடவுள். (த. நி. பே. கக0.)

பரதோவர்—வேறொன்றுகொண்டுவருமோ. (சி. சி. அள. க. சிவாக்.)

பரந்தவட்டம் — பரந்தவட்டிகை, சேமக்கலம். (வழக்.)

பரந்தாமம்—வைகுந்தம். பரந்தாமன்பார்.

பரந்தாமன்—திருமால். (உ-ம்.) "பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப்பரந்தாமன்றனைநினைந்தான்பார்த்தனுக" (பாரத. அருச். தீர். ருஉ.)

பரந்து—மிக்கு. (பரிபாடல்.)

பரந்துகெடுதல்—எங்குஞ்சுழன்றுகெடுதல். (உ - ம்.) "இரந்துமுயிர்வாழ்தல்வேண்டிற்பரந்து-கெடுகவுலகியற்றியான்" (வள். க0சுஉ.)

பரநாதம் — 1. அநதிக்கிராந்தவிந்துசுபரசிவம். (கந். நவ. சுரு.) 2. நிட்களமான ஒரு தத்துவம்; இது: சிவதத்துவத்திலடங்கும். (சி. பி. கை.)

பரநாமத்திலை — மாவிலிங்கிலை. (தைலவ. தைலவ. ருஅ.)

பரப்பல் — 1. பரம்பச்செய்தல். 2. பரவுதல். (1, 2-வழக்.)

**பரப்பாழ்** — பரமாகிய சூநியப்பொருள். (உ-ம்.) "முப்பாழும்பாழாய்முடிவிலொருசூநியமாய்" (பழங்கவி.)

**பரப்பிரணவம்**—வாச்சியமான சத்தியஞானாதியிலட்சணம். (த. நி. போ. உகஎ.)

**பரப்பிரமசந்நிதி** — சிவசந்நிதி. (உ-ம்.) "பார்முழுதும்பரப்பிரம-சந்நிதி" (கோயிற்பு. வியாக்கி. ரு.)

**பரப்பிரமம்**—1. அதர்வணவேத உபநிடதம் முப்பத்தொன்றனுளொன்று. (கந். நவ. கஅ.) 2. கடவுள். 3. சிதம்பரம். (உ-ம்.) "சித்தம்பர முத்திப்பரப்பிரமம்" (கோயிற்பு. வியாக். உக.) [மகாமாயைக்குமேலாதலில்.] 4. சுத்தப்பிரமந் தன்னிடத்திலுள்ளதாகிய சத்தி விசரும்பித்துத்தன்னைவியாபிக்க அவ்வியாபகத்துக்குள்ளிருந்தபோதுபெறும் பெயர். (நாநாசீவவாதக்கட்டளை. முதலாவது.) 5. தற்பதவிலக்கியார்த்தமான பிரமத்தின் சட்டுவிதபரியாயநாமங்களு ளொன்று. (உ-ம்.) "ஈசஞென்றிடுமூவகையதிட்டானனியம்பருமொருபரப்பிரமம்"(வேதாசூ. ருக.)

**பரப்பிரமவிந்து**—வாலரசம்.(வைத்தியபரி.)

**பரப்பு** — 1. கடல். (உ-ம்.) "சேதுக்கதை வடசொற்பரப்பை" (சேதுபு. அவையட. ச.) 2. திரள். (உ-ம்.) "பின்தாழ்படர்சடைப்பரப்பும்" (கோயிற்பு.நடராச. கக.) 3. பூமி.(உ-ம்.) "பரப்பினடுப்படுவதொரு-மேருகிரியும்" (கோயிற்பு. வியாக்கி. சு.) 4. விசாலம். (உ-ம்.) "பழுது"பார்.

**பரப்புதல்** — 1. பரம்பச்செய்தல். (உ-ம்.) "எங்கும்பாயிருள்பரப்பும்" (நைடத. சுயம்வர. க.) 2. பரவுதல்.

**பரபக்கம்** —பிறர்மதம்.(சி.சி.காப்பு.மறை.)

**பரபத்தி**—சிவபத்தி. (வழக்.)

**பரபதம்** — 1. மேலாகியபொருள். (உ-ம்.) "தற்பரம்"பார். 2. மோட்சம். (உ-ம்.)"மழுவாற்றுண்டித்திகழ்தவனைப்பரபதத்துளிருத்தித் தானும்" (சேதுபு. கடவுள்வா. கஉ.)

**பரபரத்தல்**—1. தினவு. (வழக்.) 2. தீவிரப்படல். (உ-ம்.) "பஞ்சாக்கரத்தைப் - பரபரப்பவெண்ணுதபாவம்" (அருணகிரியந்தாதி.)

**பரபரப்பு**—பரபரத்தல். (வழக்.)

**பரபரேனல்**—சீக்கிரக்குறிப்பு (வழக்.)

**பரபாகம்**—பிறர்சமைத்தது. (வழக்.)

**பரபாவனைபுரிதல்**— பிரமகிட்டைகூடுதல். (கூர்மபு. வருணைச். உo. உரை.)

**பரபுட்டம்**—குயில். (சூ. நிக. ௬: ருசு.)

**பரபுருடார்த்தம்** — முத்தி. (மகாவாக்கியவுரை. பாயிர. க.)

**பரபோகம்** — 1. சிவபோகம், பேரின்பம் (உ-ம்.)"பரபோகம்பெறலாமெனப்பகர்ந்தான்" (கோயிற்பு. வியாக். ச.) 2. சுத்தமாயா காரியமாகிய சுத்ததத்துவபுவனங்களில் வித்தியேசுரர் முதலாயினோர் புசித்திருக்கும்போகம். (உ-ம்.) "பவமாய்க்கடலிலழுந்தாதவகையெடுத்துப்பரபோகந்துய்ப்பித்து" (சி. சி. அ: உசு. மறை.)

**பரம்**—1. அத்திமரம். 2. உடல். 3. கடவுள். (உ-ம்.)"பந்தமறவந்தமில்பரங்குழைகவென்றே" (திருவாத. திருப்பெரு. உச.) 4. கவசம். 5. குதிரைக்கல்லணை. 6. சிதம்பரம். (உ-ம்.) "சுத்தம்"பார். [எல்லாப்பொருட்கு மேலாதலில்.] 7. சுத்தசிவன். (உ-ம்.) "பரம்பிரமமிவனென்றம்" (சி. சி. கஉ: எ. ஞாநப்.) 8. நிட்களம். (சி. சி. க: ருரு. மறை.) 9. பரசம்பந்தம்.(சி-லி. சரி. உ.) 10. பரமாநந்தவெல்லைக்குக் கீழ்ப்பட்டதோரியல்பு. (தத்துவப். பதி. ச. உரை.) 11. பாரம். 12. பிரமாயுட்காலம்; அது: பிரம வருடம்நூறுகொண்டது. (உ-ம்.) "பரார்த்தம்" பார். 13. பிரயோசநம். (உ-ம்.) "சைவத்-தாநம் பலவுந்தொழுந்தற்பரமாகிவந்தேம்'(திருவிளை. கல்லானை. அ.) 14. மறுமை. (சௌந். ௬.) 15. முன்பு. 16. மேலானது, சிரேட்டமானது. 17. மோக்கம். (2,4,5,11,15-பிங்கல. ௬எஅஎ.)

**பரம்பரம்**—வமிசபாரம்பரை. (வழக்.)

**பரம்பரன்**—கடவுள், சிவன். (உ-ம்.) "அடியேற்கெம்பரம்பரனே" (திருவாச. திருச்சத. ரு.) [மேலோர்க்கும்மேலோன் என்றபடி.]

**பரம்பராகரணம்**—ஒருகாரியம் பிறத்தற்குக் காரணமாயிருக்குமொன்றைப் பிறப்பிக்கக்காரணமாய் முன்னிற்குங்காரணம். (சி. சி. ரு: க. சிவாக்.)

**பரம்பராசாதநம்** — உடனுபயோகமாகாத கருவி. (வாசுதேவ. கoஅ.) [பசித்தவர்களுடைய பசியைப்போக்கித்திருத்தியாக்குவதற்கு உழவுமுதலியபயிர்களிவ்வகைச்சாதநமாம்.]

**பரம்பராதீனத்துவம்**— ஒன்றையொன்று சார்ந்துவருதல்.(சி. சி. அள. கக. சிவாக்.)

**பரம்பரை** — ஒன்றின்பினென்றாகத் தொடர்ந்துவருதல். (உ-ம்.) "நீண்மகவின்பரம்பரையுநிவந்தோங்குந்திதிய தனிநிகழ்த்திடானேல்" (சேதுபு. தூமசார. ௬எ.)

**பரம்பிரமம்**-சொரூபசிவம். (சி. சி. கஉ: எ. (சிவஞா.)

**பரம்பு**—1. கழனிதிருத்தும்பலகை (உ-ம்.) "எங்கணும்பரம்படிப்பவர்பற்பலகோடியே" (அரிச்ச. நாட்டு. ௬௬.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. விசாலம். (வழக்.)

**பரம்புதல்**— விசாலித்தல். (வழக்.)

**பரம்பொருள்**—மேலானவஸ்து. (உ-ம்.) "எங்குமாம்பரம்பொருளையாழும் வணங்குது மே" (மகாவாக்கியம். பாயிரம். க.)

**பரமகஞ்சபரிவிராசகம்**-அதர்வவேதஉபநி டதமுப்பத்தொன்றனுளொன்று.(கந்.நவ.கஅ.)

**பரமகஞ்சம்** — 1. நால்வகைச்சந்நியாசங்க ளுள்மேலாயது; அது: நிட்டைபுரியும்பக்குவர்க் குடையது.(உ-ம்.)"குலவுறுசந்நியாசங்குடீசகம் பகூதகஞ்ச, நலமிகுபரமகஞ்சமேயென்னநா ன்கதாம்" (சூத. ஞாந. சு: உ.) 2. யசுர்வேத உபநிடதமைம்பத்தொன்றனுளொன்று. (கந். நவ. கஅ.)

**பரமகஞ்சர்**—சந்நியாசஆச்சிரமத்தார் அறு வகையருளொருவர். (கூர்மபு. வருணச். சo. உரை.) [நாரதபரிவிராசகோபநிடதப்படி சந்நி யாசம் அறுவகையாகக்கொள்ளப்படும் ]

**பரமகதி**—மோக்கம். (வழக்.)

**பரமகர்த்தா**-சர்வஞ்ஞத்துவசர்வகர்த்திருத் துவ சர்வாநுக்கிரகமாகிய மூன்றுகுணங்களை யொருவராற்றருதலின்றித் தனக்கியல்பாக வுடையவன். (சி. சி. அ: கஎ. மறை )

**பரமகருத்தன்**—பரமகர்த்தா. (வழக்.)

**பரமகாட்டை**—பதினைந்துநிமிடமாகிய காட் டையென்னுங் காலவளவையினுஞ் சிறியது. (உ-ம்.) "அணிமா"பார்.

**பரமகாரணம்** — முதற்காரணம். (உ-ம்.) "ஈண்டுக்கூறியமுதற்காரணமேயாம்; அது: பரமகாரணம், உபாதாநகாரணம், சமவாயிகார ணம்எனவும் பெயர்பெறும். (கூர்மபு.திருக்கல். அ. உரை.)

**பரமகாரியம்** — 1. தேவகாரியம். 2. மகா காரியம். (1, 2-வழக்.)

**பரமசாநித்யலிங்கம்**— சிவஞ்சாநித்தியமா கும் லிங்கம். (உ-ம்.) "படியினிற்புண்ணியதீர்த் தம்பரமசாநித்தியலிங்கம்" (சிவரக. வரலா. ரு.)

**பரமசித்தி**—முத்தி. (வழக்.)

**பரமசிவம்**—துவாதசாந்தத்துக்கப்பால் தத் துவங்களைக் கடந்திருப்பவர். (சி-வி. கிரி. கூ.)

**பரமசிவன்**—இலயபோக வதிகாரமென்று மூன்றவத்தையினும் முறையே அருவம், அரு வுருவம், உருவம் என்னு மூன்று திருமேனி கொண்டு சத்தன், உத்தியுத்தன், பிரவிருத் தன் எனவும் சிவன், சதாசிவன், மகேசன் எனவும் பெயர்பெற்று நிற்பவர்; இவர்: சுத்த மாயாபுவநாந்தஞ்சங்கரிப்பர். இவர்க்கு மகேசுர மூர்த்திபிறவாயுள்ளதிருமேனிசுதந்தரவடிவம் இவர் சுத்தமாயையின் ஏகதேசத்தைக்கலக்கிச் சுத்ததத்துவங்களைத்தோற்றுவிப்பர். (சிவஞாந பா. உo.)

**பரமசுந்தரி**—தருமதேவதை. (சூ.நிக.க:கூக.)

**பரமஞாநம்**—ஒருசிவநாமம். (உ-ம்.) "பெய ரெமக்குப்-பரபதம்பரமஞாநம்பராற்பரம்" (கோ யிற்பு. பதஞ்சலி. சுசு.)

**பரமண்டலம்**—மோட்சதானம். (கிறிஸ்த்த வர் வழக்கு.)

**பரமதநிராகரணம்** — இராமநாதாசாரியர் செய்த ஒருநூல். (சி. சி. பாயிர. க. மறை.).

**பரமப்பிரயோசநம்**— } மோட்சம்.(சி. சி.
**பரமபதம்**— } பாயிர.க.சிவாக்.)

**பரமபந்தம்**—பெரியபந்தம். (உ-ம்.)"எனவே இவ்வாக்குக்கள்பரமபந்தமென்பதாயிற்று" (சி. சி. க: உசு. சிவஞா.)

**பரமபாகவதன்**—வைட்டிணவ சந்நியாசி. (வழ.)

**பரமபிரகிருதி**—(வேதாந்தம்) பிரமம். (சி.சி. உ: எரு. மறை.) பிரகிருதி-ஈண்டு இயல்பு.

**பரமபுருடன்**—ஈசுவரன். (த. நி. போ. கக.)

**பரமம்** — 1. ஆத்மா. (உ-ம்.) "அகிலசத்தி யுடைத்தாய்நந்தமானபரமம்" (ஞாநவா. மநத் தின். ரூ.) 2. பரப்பிரமம். 3. மகாமேன்மை. 4. மிகமேலாகியது. (உ-ம்.) "தீர்த்தங்களெ வைக்குமேலாய்- மன்னலாற்பரமதீர்த்தமெனப் பெயர்வழங்கலாகும்" (திருவிளை. தீர்த்த. கக.) 5. அத்திமரம். (வைத்தியபரி.)

**பரமமுதற்காரணம்**—அசுத்தமாயை.(சி.சி. உ: ருo. சிவஞா.)

**பரமரகசியம்**—1. அந்தரங்கவுண்மை. 2. ஒரு நூல். (1, 2-வழக்.)

**பரமலோகம்**—சிவலோகம். (வழக்.)

**பரமவங்கிசகம்** — ஒருவகைச் சந்நியாசம். (சி. சி. அ: கக. மறை.)

**பரமவிராசன்**— ஏகாதிபதி. (வழக்.)

**பரமன்**—1. அந்தரியாமி. (த.நி.போ.ககo.) 2. சிவன். (உ-ம்.) "பரமனைமதித்திடாப்பங்க யாசநன்" (கந்தபு. கடவுள்வா. க) 3. சீர்பந்த பாடாணம். (வைத்தியபரி.)

**பரமாகாயம்**—துவாதசாந்தப் பெருவெளி. (திருவிளை. வேதத்துக்குப். ரூக.)

**பரமாங்கிசம்** — உபநிடதமுப்பத்திரண்டி னொன்று. (வழ.)

**பரமாணு**—அதிசூக்குமவணு (உ-ம்.) "முன்னுபரமாணுவத்தனையதிற்புனைகுவாரம லனுவார்" (சேதுபு. பிரமகுண்ட. எ.)

**பரமாத்துமர்**— காலதத்துவத்திருக்குமோரு ருத்திரர். (வி-ணி. உஎச.)

**பரமாத்துமா**—1. ஈசுவரன். (த. நி. போ. கக.) 2. சுழுத்திக்குச்சாட்சியாயிருக்கும் பிரம சைதந்நியம். (நாநாசீவவாததக்கட்டளை.)

பரமாத்மன்—பிரமம். (த. நி. போ. ககக.)
பரமாநந்நம்—பாயசம். (வி-ணி. வழக்.)
பரமாநந்தகூபம் — சிதம்பர தசதீர்த்தத் தொன்று; இது: கனகசபைக்குக்கிழக்கே யுள்ளது. (கோயிற்பு.. )
பரமாநந்தம் — சிவபோகம், பேரின்பம். (உ-ம்.) "அற்புத-வெள்ளமும்பரமாநந்தவெள்ளமும்" (திருவிளை. விடையில. உஅ.)
பரமாநந்தவாழ்வு—சிவம். (உ-ம்.) "மாநதிகளுக்கெட்டாதபரமாநந்தவாழ்வினையங் கோரிலிங்கமணலாற்கூப்பி"(சேதுபு.கடவுள்வா. கஉ)
பரமாநந்தன்—1. ஆநந்தரூபசத்தியுடனே சர்வாநந்தசுழுத்தியையடையும் பிரமம். (நாநாசிவவாதக்கட்டளை.) 2. சிவன்.
பரமாநம்—பரமாந்நம். (வழக்.)
பரமாநுபவம் — மேலானவநுபவம்; அது: அசிபதசோதனையென்க.
பரமார்த்தம் — 1. சிரேட்டமானகருத்து. 2. செல்வத்திற்சிரேட்டமானது.
பரமார்த்தவித்து — உண்மையறிந்தவன். (சி. சி. ச: கூரு. சிவாக்.)
பரமார்த்தன்—சதருத்திரரில் இந்திரதிக்கிலிருக்குந் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உசுக.)
பரமார்த்திகம் — 1. உண்மை. (சி. சி. உ: கூரு.சிவாக்.)2.பரமார்த்தமுடையது.(சைவவி.)
பரமான்மா-இதரபதார்த்தவச்சிந்நவான்மா. (தருக்கசங்கிரகத்திலதிக.
பரமுகவுப்பு—கறியுப்பு. (வைத்தியபரி.)
பரமுத்தர்—தநுவாதிகளைநீக்கி நேயத்தழுந்திஞோர். (ஒழிவி. அருளவ. கஎ. உரை.)
பரமுத்தி—சாயுச்சியமுத்தி. (சி. சி. க: உசு. சிவஞா.)
பரமேச்சுரன்—பரமேச்சுவரன். (வழக்.)
பரமேச்சுரி–பரமேசுவரி, பார்வதி. (வழக்.)
பரமேச்சுவரன்–1. நியதிதத்துவத்திருக்குமோருருத்திரன்.(வி-ணி.உஎச.) 2. பரமேசன்.
பரமேச்சுவரி—1. ஒரு யோகினி. (வி-ணி. உசக.) 2. பரமேச்சுவரி.
பரமேசன்—பரமேசுவரன். (வழக்.)
பரமேசுவரன்–சிவன்.ஈச்சுரனாமஞ்சிவனுக்கென்பதைப் பிங்கலநிகண்டு கசுல் காண்க.
பரமேசுவரி—பார்வதி. (சி. சி. உ: உரு. நிரம்ப.)
பரமேட்டி—1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. சிவன். (உ-ம்.)"பண்ணியனுன்மறைவிரித்த பரமேட்டி" (திருவிளை. மெய்க். அ.) மேலான இடத்திருப்பவனென்பதுபொருள். 3. பிரமன். (பிங்கல. ௧ரு௬.)

பரமோபதாநம்—மேலானமுதற்காரணம். (சி. சி. க: ருஎ. சிவாக்.) [பரம-உபதாநம்.]
பரர் —1. அன்னியர். (வழக்.) 2. பகைவர். (சூ. நிக. உ: ருச.)
பரல்—1. பருக்கைக்கல். (உ-ம்.) "கைத்தலம் புடைத்துநகக்குக்கல்லுமவெம்பரலும்வாரி"(திருவிளை. பன்றி. மூலே. கூ.) சுக்கான்கல்லென்பர் (பத்துப்-பொருநரா.
பரலோகம்–1. மறுலோகம். (சி.சி.ஞாநப்.) 2. மோக்ஷம். (உ-ம்.) "பரனையேத்தவலார்களே பரலோகமேபதியாவரே" (சிவரக. தேவியுடன் கடு.)
பரவசம்—1. தன்வசமாயிருத்தல். (உ-ம்.) "ஆநந்தபரவசனுய்-வாழ்ந்து" (கோயிற்பு.பதஞ்சலி. ரு.) 2. மூர்ச்சை. (வழக்.)
பரவசவிலக்கு—ஓரணி; அது: தன்வசமல்லாமற் காதலியவசமாநிற்றல் கூறிவிலக்குவது. (தண்டிய. பொருளணி. சக. உரை.)
பரவணி—வமிசம். இஃதோர் வழக்குண்டு போலும்.
பரவணிகாரன் —தலைமுறைதலைமுறையாயுரித்துக்காரன். (வழக்குண்டுபோலும்)
பரவணிப்பட்டம்—தலைமுறைப்பட்டவரிசைப்பெயர்.
பரவர்—வலைஞர். (வழக்.)
பரவல்—1. சொல்லுதல்.(பிங்கல. உ௦௦உ.) 2. பரவுதல். (சூ. நிக. ரு: சo.) 3. பல்லாண்டு கூறல். (பரிபாடல்.) 4. புகழ்தல். (உ-ம்.) "பரவலருங்கொடைக்குநின்றன் பணிக்குடைக்கும்" (இராமா. சடாயுகாண். உக.)
பரவாகீசுவரர்—ஒருசிவபேதம். (சி. சி. உ: எஎ. ஞாநப்.)
பரவாகீசுவரி—ஒருசத்திபேதம். (சி. சி. உ: எஎ. ஞாநப்.)
பரவாசுதேவன் — ஆதிவிட்டுணு. (த. நி. போ. கசச.)
பரவாதி–புறச்சமயி. (உ-ம்.) "பறந்துபுக்குப் பரவாதிகளென்னும்படுநரகு" (திருநூற். ருக.)
பரவாமை—சொல்லமுடியாமை. (உ - ம்.) "தாவரிரும்படிபரவாச்சாபங்கள்பலவிட்டார்" (கோயிற்பு. பதஞ்சலி. உக.)
பரவித்தை — உபநிடதவித்தை. (உ - ம்.) "அபரவித்தை"பார்.
பரவிந்து—உன்மநாகலாதிகாரியப்பிரபஞ்சமொரு பிரதேசத்து உண்டாயொடுங்கின மகாமாயையினதோரிடம். (சி. சி. உ: எச. ஞாநப்.)
பரவிப்பார்த்தல் — புடைபடவொற்றியாராய்தல். (சி. சி. உ: கக. சிவஞாந.)

பரவு—பரவல், வணங்கல். (உ - தொழிற் பெயர் விகுதி.

பரவுக்கடன்—நேர்கடன்; அது: தெய்வத்தை வழிபட்டுக்கொடுக்கும்பலி. (வழக்.)

பரவுடம்பு — புரியட்டகதேகததுள் அதி சூக்குமவுருவாய்நிற்குங்கலையாதிமண்ணந்தமாயுள்ள உடம்பு. (சி. சி. ௨: ௧௦ சிவஞா.)

பரவுதல்—1. சொல்லுதல். (உ-ம்.) "பரவரு மணிகள்விளங்கிய" (திருவாத. திருப்பெரு. ௬.) 2. துதித்தல். (உ - ம்.) "கைதொழுதிரந்து வேண்டிப்பரவிமீண்டு" (திருவிளை. மெய்க்கா. ௨௧.) 3. விலாசமாயிருத்தல். (உ - ம்) "சிற்பரவுஞ்சாக்கிரத்தில்" (உபநி. ௧௧.)

பரவுதும்—வேண்டுதும். (பரிபாடல்.)

பரவெளி—பரமாகாயம். (காஞ்சிப்பு. சனற்குமார. ௨௬.) மகாசூனியமென்றுங்கூறுவர்.

பரவையமுது—உப்பு. (வைத்தியபரி.)

பரவை — 1. இலக்குமிகூத்து. 2. உப்பு. 3. கடல். (உ-ம்.) "உம்பர்நாயகன்-பரவையிற் செறித்தென" (பாரத. வாரணவத. ௬.) 4. சுந்தரர்மனைவி. (உ-ம்.) "பேர்பரவை" (பெரிய பு. தடுத்தாட் ௧௭௮.) 5. பரத்தல். (உ - ம்.) "பரவைவெங்கதிர்ச்செல்வன்" (சிந்தா. நாமக. ௧௬.) 6. பிரபலம். (வழக்.) (1, 2-பிங்கல. ௬௭௮௮.)

பரவையாழ்—பேரியாழ். (சிந்தாம.)

பரற்பரவிரோதம் ஒன்றற்கொன்றுவிரோதம் (வழக்.)

பரன்—1. அந்தரியாமி. (த. நி. யோ. ௧௦.) 2. உயர்வுடையோன். (சைவப்பி. ௨௧.) 3. சிவன். (உ - ம்.) "வெந்தசாம்பருஞ்பூசுமோபரனெனுமேலோன்" (ஈந்தபு. ததீசியுத். ௧.)

பராக்கியை—ஒருவடமொழிநூல்.

பராக்கிரதம்—தள்ளப்பட்டது. (வழக்.)

பராக்கிரமசாலி—வீரமிக்கோன். (வழக்.)

பராக்கிரமம்—வீரம். (சூ. நிக. ௮: ௨௬.)

பராக்கிரமன்—வீரன். (வழக்.)

பராக்கிரமி—1. பராக்கிரமன். 2. தெரிநிலை வினைப்பகுதி.

பராக்கிரமித்தல்—வீரங்காட்டல். (வழக்.)

பராக்கு—அசட்டையாயிருத்தல், வேறுபுலனுற்றிருத்தல். (திருவிளை. மண்சும. ௬௦.)

பராக்குருபி—எதிர்முகசிற்சத்தி. (சி. சி. ௮: ௬௮. ஞாநப்.)

பராகண்டம்—அசட்டை, பராமுகம். (வழக்குண்டுபோலும்.)

பராகம் — 1. நாய்த்துளசி. 2. சந்தநம். 3. புழுதி. (உ-ம்.) "எழுதருஞ்சேநாபராகம்விண்படர்ந்து" (கூர்மபு. தக்கன்வமி. ௪௦.) 4. பூந்தாது. (சூ. நிக. ௧௧: ரகரவெ. ௭.) (1, 2-வைத்தியபரிபா.)

பராகரணம்—1. தள்ளுதல். 2. நிந்தித்தல்.

பராகரித்தல் — தள்ளுதல், நிந்தித்தல். (வழக்.)

பராசத்தி—ஆன்மாவினிடத்திலே சிவனுக்கு ஒப்பாக முத்திசித்திக்கும்பொருட்டு மலநீங்குமுன் தடைபட்டிருந்தபேரறிவு பெருந்தொழிலாகிய சிவதத்துவவிருத்தி விளக்கமென்னுமநுக்கிரகத்தைப்பண்ணுஞ்சத்தி; இது: இச்சாஞாநக் கிரியையெனமூன்றாய்ச் சிவனுக்குச் சமவேதசத்தியெனப்படும். (சி. சி. ௧: ௬௨. சிவஞா.)

பராசத்திதத்துவம்—பரவிந்து. (சி. சி. ௨: ௭௪. ஞாநப்.)

பராசநம்—கொலை. (வழக்குண்டுபோலும்.)

பராசநன்—கொலைசெய்வோன். (வழக்.)

பராசயம்—தோல்வி. (வழக்.)

பராசரம் — உபபுராணம் பதினெட்டினென்று. 2. தருமநூல் பதினெட்டினென்று. (பிங்கல. ௪௬௫, ௪௬௬.)

பராசரன்—ஓரிருடி; இவர்: சத்திமாமுநிக்குப்புங்கனூர் புலைச்சிவயிற்றிற்பிறந்தபுத்திரர். (வி-ணி. ௨௫.)

பராசிதம்—சிவன் கைவாள். (உ - ம்.) வந்துழிக்காண்க.

பராசியம்—பலரறிந்தது. (வழக்.)

பராத்தம்—பரார்த்தம். (வழக்.)

பராதீநம்—சுதந்தரமற்றது. (வழக்.)

பராதீநர் — சுதந்தரமில்லாதவர். (உ - ம்.) "மிக்கபராதீநர்களேயுலகமெலாம்" (உபநி. ௫.)

பராந்நம் — 1. பகலிற்பூர்வாந்நத்தின் பின்வரும் ஆறுநாழிகை. (வருஷாதி. ) 2. பிறர் கொடுத்தபோசநம்.

பராநுகூலம்—பிறர்க்கநுகூலம். (வழக்.)

பராநுகூலி—பிறர்க்குபகாரி. (வழக்.)

பராபத்தியம்—பாரபத்தியம். (வழக்.)

பராபரம்—1. சகளநிட்களம். (சி. சி. ௧: ௫௫. மறை.) 2. சிவம், பராபரவஸ்து. (உ-ம்.) "பகலிரவென்றறியாதபராபரமாய்" (அரிச்ச. பாயிர. ௪.) 3. நடுத்தரம். முன்பினுயிருப்பதுஎன்றபடியாம். மேல்கீழ். (சி. சி. ௮: ௨. சிவாக்.)

பராபரவஸ்து — மேல்கீழாயிருக்கும் பொருள்; அது: கடவுள்.

பராபரன்—1. உயர்வுந்தாழ்வுமுடையோன். (சைவப்பி. ௨௬.) 2. பரமேசுவரன், பராசத்திக்குமேலானவன். (உ-ம்.) "பராவுதேவர்பராவுதூயபராபரனடிபற்றி" (சி. சி. பர. உலோகாயதமதமறு. ௨௬. உரை.)

பராபரி—ஒழுங்கு. (இந்துஸ்.)

பராபரித்தல்— } ஒழுங்குபடுத்தல். (வழக்.)
பராபரிப்பு— }

பராபரை—ஒரு சிவசத்தி; இது: ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தியெனமூத்திறப்படும். (சைவச. பொது. எசு. உரை.)

பராபவ—வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களில் நாற்பதாவதாண்டு. (வழக்.)

பராபவம் — அவமானம். (சி. சி. உ: உகூ. சிவாக்.)

பராபூதி—1. குய்யாட்டகரிலொருவர். (வி-ணி. உஎக.) 2. ஐம்பத்தோருருத்திரரிலொருவர். (வி-ணி. உஎசு.) 3. பிரதிட்டாகலையில் அப்புதத்துவத்திலிருக்கும் எட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.)

பராபேட்சம்—பரசிவஅபேட்சையுள்ளது. (சி-வி. ஞாந. கூ.)

பராமர்சம் — பராமரிசம். (சி. சி. க: எ௦. சிவாக்.)

பராமரிசம்— ஆராய்ச்சி. (தர்க்கசங்கிரகத்திலறிக.)

பராமரிசித்தல்—ஆராய்தல். (வழக்.)

பராமரித்தல் — 1. ஆதரித்தல். 2. ஆராய்தல். (1, 2-வழக்குண்டு.)

பராமரிப்பு—விசாரிப்பு. (வழக்.)

பராமாங்கிசம்—உபநிடத முப்பத்திரண்டினொன்று. பரமாங்கிசமெனவும் வழங்கும். (பொருட்டொகை. நிகண்டு.)

பராமுகம்—1. அசட்டை. (வழக்.) 3. எதிர் நோக்காதது. (சி. சி. உ: சுரு. சிவாக்.)

பராய்—ஓர் மரம். (பிங்கல. உஎஎசு.)

பராய்த்துறை — ஒரு திருப்பதி. (உ - ம்.) "தென்பராய்த்துறையாய்சிவலோகா" (திருவாச. செத்திலா. ச.)

பராயணம்—பற்று. (உ-ம்.) "பராநந்தபராயணனாய்" (கோயிற்பு. பதஞ்சலி. கூ.)

பராயணர் — 1. பாராயணர், குறிக்கொள்வோர். (சூ. நிக. உ: சா.) 2. வேதாத்தியயநர்.

பரார்த்ததேவப்பிரார்த்திகம்—பிறர்க்காகத் தேவாராதனைசெய்தல்; இது: தயாவிருத்திபதினொன்கினொன்று.

பரார்த்தம் — 1. ஆயிரங்கோடாகோடி. 2. பிறர்க்காகத்தக்கது, பிறர்பொருட்டு.(சைவப்பி. கக.) 3. வேதனது ஆயுட்காலமாகிய ஒருபாதி; அஃது, அவனுடைய ஐம்பதுவருடங்கொண்ட காலம். (உ-ம்.) "உரைத்தவிருபரார்த்தமுமே மலரயனுக்காயுள்ளவுரைக்குங்காலம், விரைக்கமலத்தவன்மானத்தாங்கவையும்விளம்பிய வாண்டொருநூற்றென்ப,வரைத்தபரமிகுதிதனினொருபாதிபரார்த்தமெனவகுட்பரிண்டு, நிறைத்தவருசாலங்கள்பிறழாமலுரைப்பனென நிகழ்தலுற்றான்" (கூர்மபு. பிரமாயு. உ)

பரார்த்தலிங்கம்—சிவன்சங்காரகாலம்வரையுஞ் சாந்நித்தியராயிருந்து ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்கப்பெறும் இலிங்கம்; அது: சுவாயம்புவலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மாநுடலிங்கம் என ஐவகைப்படும். (சைவச. பொது. சகூக. உரை.) சுவாயம்புவம்-சுயம்பு.

பரார்த்தவநுமாநம்— } பிறர்பொருட்டா
பரார்த்தாநுமாநனம்— } மநுமாநம்; அது: தானொன்றையநுமித்துணர்ந்து பிறரையுணர்த்துதற்குப் பிரயோகிக்கும் அநுமாநவாக்கியம். (சைவப்பி. கக.)

பராரை—பருத்த அரை. (உ-ம்.) "பராரையாலஃதிழன்மருங்குமறைமுதல்" (திருவிளை. அட்டமா. உ.)

பராவதம்— வாலுளுவை (வைத்தியபரி.)

பராவுசிவர்—சஞ்சரிக்கிற சிவன். (உ-ம்.) "உயிரின்பற்றறுத்துப்பரத்தையடைபராவுசிவரன்றோ" (சி. சி. அ: கூரு. சுப்பிர.)

பராவுதல்—1. சஞ்சரித்தல். "பராவுசிவர்" பார். 2. சொல்லுதல். 3. துதித்தல். (2,3-பரவுதல் பராவுதலென வந்ததென்க.

பராம்பரநாதம்—உன்மனை. (சி. சி. உ: எசு. ஞாநப்.)

பராற்பரம்—ஒரு சிவநாமம். (உ-ம்.) "பரமஞாநம்"பார்.

பராற்பரவிந்து — சமனை. (சி. சி. உ: எசு. ஞாநப்.)

பரி—1. அச்சுவினி. (உ-ம்.) "சகடம்"பார். 2. அன்பு. (சூ.நிக.அ: கூகூ.)இதில் உகரஞ்சாரியை. 3. உயர்ச்சி. (சூ. நிக அ: அ.) 4. கருமை. (தைல. தைலவ. கசுசு.) 5. குதிரை. (உ-ம்.) "வாம்பரி" (அரிச்ச. நகர. ரு.) 6. குதிரைநடை. (உ-ம்.) "கதழ்பரியகலிமாவும்" (புறநா. ருரு.) 7. சுமத்தல். 8. செலவு. (உ-ம்.) "நிமிர்பரியமாதாங்கவும்" (புறநா. கசு.) 9. தெரிநிலைவினைப்பகுதி. 10. பருத்தி. (தைல. தைலவ. க௦உ.) 11. பாதுகாத்தல். 12. பெருமை. (பிங்கல. உஉஉரு.) 13. மாயம். (பிங்கல. கூஎஅக.) 14. மிகுதி. (உ - ம்.) "பக்கநீங்கினர்பரிபுலம்பினரென" (சிலப். நாடுகாண். உஉசு.) 15. வருத்தம். 16. விரைவு. (7, 11, 15, 16-சூ. நிக. கக: ரகரவெ. அ.)

பரிக்கந்தி — அமுக்கிராக்கிழங்கு. (தைல. தைலவ. எகூ.)

பரிக்காரர்—1. குதிரைக்காரர். 2. யானைக்

காரர். (உ-ம்.) "இடறுதல்"பார். (பெரியபு. திருநாவு. கசo.)

**பரிக்கிரகசத்தி**—1. ஒன்றையுண்டாக்குதற் கண்கருத்தனுக்குவேண்டியிருக்குஞ் சத்திகளு ளொன்று. (சி. சி. க: ருகூ. சிவாக்.) மாயை யென்பர். பரிக்கிரகம் - அங்கீகரித்தல்.

**பரிக்கிரகம்** — 1. அங்கீகரித்தல். (உ-ம்.) "பரிக்கிரகசத்தி"பார். 2. எடுத்துக்கொள்ளு தல். (சி. சி. ஞாநப்.)

**பரிக்கிரகித்தல்**—கைக்கொள்ளல். (வழக்.)

**பரிக்தும்**—தாங்கும். (புறநா.)

**பரிக்கை**—பரீட்சை. (வழக்.)

**பரிகசித்தல்**—சிரித்தல். (திருவாச. நீத்தல் விண். சஅ.)

**பரிகம்** — 1. அகழ். 2. ஆசிவிஷமென்று சொல்லப்படும் ஏழு யோகத்தொன்று; அது: ஆதித்தனுஞ்சந்திரனுங்கூடினநாளான அமா வாசைக்கு ஒன்பதாம்நாள். (உ-ம்.) "வெய் யோன்மதியுடன்சேர்நாட்கிரண்டு விரோத மொன்பான்-செய்யபரிகம்"(விதாந.குணா தண. கூச.) 3. நித்தியயோகத்தொன்று. (விதாந. பஞ்சாங். உச.உரை.) 4. மதிலுண்மேடை. 5. வளைதடி.(பிங்கல. கூளகo.)(1,4.சூ.நிக.ரு:சச.)

**பரிகரம்** —நாற்புறத்துந்தொழில்செய்வோர் தொகுதி. (சிந்தாம.)

**பரிகாரங்குராலங்காரம்**-கருத்துடையடை கொளியணி. (குவல. உரு.)

**பரிகாலங்காரம்**— கருத்துடையணி. (குவல. உச.)

**பரிகரித்தல்** —நீக்குதல். (உ-ம்.) "சோசக் காய்நீரைப்பரிகரித்து" (தைல.தைலவ.ககூச.) 2. பிராயச்சித்தம்பண்ணல். (வழக்.)

**பரிகரிப்பு**—விலக்கல். (வழக்.)

**பரிகலசேடம்** — பெரியோருண்கலத்தின் மிச்சில். (வழக்.)

**பரிகலம்**—உண்கலம். (உ-ம்.) "நல்லபரி கலந்திருத்தி" (திருவிளை. விருத்த. உச.)

**பரிகாசகம்**—பரிகாசம். (உ-ம்.) "பண்போ விஃதோர்பரிகாசகமே" (சேதுபு.சிவதீர்த்.கூகூ.)

**பரிகாசம்**—விளையாட்டு. (வழக்.)

**பரிகாமுத்திரை**—ஆகாரத்தால்வந்த குற்றத் தைப்போக்கும் முத்திரை; அது: வலக்கைப் பெருவிரல் மூக்கைத்தொட அதன் சிறுவிரல் இடக்கைப்பெருவிரலைச் சாணளப்பதுபோலத் தொட அவ்விடக்கைச்சிறுவிரலுனியை நாபி யில் வைத்தல். (சைவச.பொது.கூஉஉ.உரை.)

**பரிகாரநிகண்டு**—வைத்தியநிகண்டு.(வழக்.)

**பரிகாரம்** — 1. பரிகரித்தல், நீக்குதை. 2. பிராயச்சித்தம்.(உ-ம்.)"பரிகாரமயுதஞ்செயினு மாகா-தென்றனன்" (சேதுபு. கந்தரு. 3. வைத்தியம். (1, 3-வழக்.)

**பரிகாரி**—1. நாவிதன். (வழக்.) 2. வைத்தி யன். (உ-ம்.) "வண்டுறைசோலைமலைப்பரிகாரி வந்தால்" (தனிப்பா. உ: ருகஉ.)

**பரிகை**—1. அகழியையடுத்த வாரியுள்ளுயர் நிலம். (பிங்கல. சுகூஉ.) 2. அன்பு. 3. பரிகா முத்திரை. (உ-ம்.) "பரிகையெனுமுத்திரை யைப்பண்ணிடுக" (சைவச. கூஉ.)

**பரிச்சதம்**—மூடி. (வைத்தியபரி.)

**பரிச்சாத்தினர்**—குதிரைராவுத்தர். (உ-ம்.) "குலாவுவாம்பரிச்சாத்தினர்வரும்பெருந்தன் மைகூறுவாம்" (திருவாத. குதிரை. சo.)

**பரிச்சித்து** — அருச்சுநன் பௌத்திரனும், அபிமன்புத்திரனுமாகியவோரரசன். (பாரதத் திற்காண்க.)

**பரிச்சிந்நம்**—கண்டிக்கப்பட்டிருக்குந் தன் மை, கண்டிப்பு. (சி. சி. ச: கஅ. சிவாக்.)

**பரிச்சேதகம்**—அளவிடுகை. (உ-ம்.) வக் ஷழிக்காண்க.

**பரிச்சேதத்திரயம்**—காலபரிச்சேதம்,தேச பரிச்சேதம், வஸ்துபரிச்சேதம் என்பன; அவற் றுள்: காலபரிச்சேதம் ஒருகாலத்துண்டு ஒரு காலத்தில்லையென்பது, தேசபரிச்சேதம் ஒரு தேசத்துண்டு ஒருதேசத்தில்லையென்பது, வஸ் துப்பரிச்சேதம், ஒருவஸ்து இதுவாகும் ஒரு வஸ்து இதுவன்று என்பது. (த.நி.போ.கoஎ.)

**பரிச்சேதநம்** — இலக்கியச்செய்யுட் கூறு பாடு.

**பரிச்சேதம்**—1.நிசார்த்தமானபகுத்தறிவு, பகுத்தறிகை.(வழக்.) 2. நூற்கூறுபாடு, அத்தி யாயம். (பிங்கல. உoசுஅ.) 3. பரிச்சேதத் திரயம்.

**பரிச்சேதித்தல்** — 1. அளவிடுதல். (சி. சி. உ: ருகூ. சிவாக்.) 2. சேர்ந்தறிதல். (உ-ம்.) "ஆன்மசிற்சத்தியானதுபுத்தியின்விருத்தியோ டேகூடிவிஷயத்தைப்பரிச்சேதிக்கிறபோது பிரமையாம்" (சி. சி. அளவை. க. சிவாக்.)

**பரிசக்குன்று**—நாகபச்சை. (வைத்தியபரி.)

**பரிசதன்மாத்திரை**-பரிசவுணர்வின்மூலம். "வாயுவின்பரிசதன்மாத்திரையினின் வழியே நின்றுக் - தேயுமுக்குணங்களோடுஞ்செனித்தி டும்" (மச்சபு. பிரமமுக. கரு.)

**பரிசதீட்சை** — ஒருவகைத்தீட்சை; அது: பரிசநவேதியினாலே தாமிராதி லோகங்களைப் பரிசித்துக் களிம்பைநீக்கிப் பொன்னாக்குவது போல ஆசாரியர் தமதுகையைச் சிவன்கையா கப்பாவித்து அங்ஙனமே யருச்சனைசெய்து அதனைச்சீடனது தலையில்வைத்து எங்கும் பரி

சித்து அவனதுபாசத்திரயத்தைநீக்கி அவனைச் சிவனாக்குதல். (சைவச. ஆசாரிய. சுரு. உரை.)

**பரிசந்நியம்**—மேருகிரி, பொன்மலை. (சூ. நிக. ரு: கூ.)

**பரிசநம்** — 1. அடிமை. (உ-ம்.) "திருந்து பணிப் பரிசநமுமிகநெருங்க" (கோயிற்பு. பதஞ் சலி. கூ.) 2. உறவு, சுற்றம். (சூ. நிக. உ: ருகூ.) 3. தொடுதல். (சூ. நிக. க: கூசு.) 4. பரிவாரம். (உ-ம்.) "பரிசநம்பின்புசெல்ல" (சி. சி. உ: கரு. சுப்ர.) ஏவல்செய்வோர்.

**பரிசநர்**—ஏவல்செய்வோர். (உ-ம்.) "பல்லவர்"பார்.

**பரிசநவேதி** — இழிந்தலோகங்களைப்பொன்னாக்கு மருந்து. (உ - ம்.) "பரிசதீட்சை"பார். (வைத்தியபரி.)

**பரிசநன்**—காற்று. (உ-ம்.) "உலவிநண்டி னிற்பரிசநன்மதலையும்" (பாரத. பதின்மூன. கஉசு.)

**பரிசநை**—பழக்கம். (வழக்.)

**பரிசம்**—1. கற்பாஷாணம். (உ-ம்.) வந்து ழிக்காண்க. 2. தொடுதல். (பிங்கல. உகாகூ.) இது: பஞ்சதன்மாத்திரைகளிலொன்று. பெண் ணின்பிதா மாதாக்களுக்குக்கொடுக்கிற வெகுமானம். (வழக்.)

**பரிசமைந்து** — உஷ்ணம், கடிநம், சீதம், சீதோட்டணம்,மிருதுஎன்பன.(வாசுதே ருரு.)

**பரிசயம்**—பழக்கம். (சி. சி. உ: சுய. ஞாநப்.)

**பரிசவேதி** — பரிசநவேதி. (சி. சி. அ: கூ. சிவாக்.)

**பரிசாரகம்** — ஏவல்வேலை. (உ-ம்.) "சாற் றநுகூலமினார்பரிசாரகஞ்சார்வுற்றால்" (சிவரக. ஞாநவாலன் கலியாண. கூ.)

**பரிசாரகன்**— ஏவல்செய்வோன். (வழக்.)

**பரிசாரகி**—தாதி. இ-பெண்பால்விகுதி.

**பரிசாரம்**—பரிவாரம். (வழக்.)

**பரிசித்தல்**—தீண்டல். (உ-ம்.) "செம்பிற் காணலுறுங்களிம்பிரதகுளிகைபரிசிக்கக்கழி யும்" (சி. சி. கக: ரு.)

**பரிசிப்பு**—பரிசித்தல். (வழக்.)

**பரிசில்** — 1. ஈகை, பிறர்கையிலேற்றபொருள். (பத்துப்பா. சிறுபாணாற்.) 2. வெகுமதி. (உ-ம்.) "ஒதிமந்தருபரிசினேருறுநடையாளை" (சேதுபு. விதூம. அஉ.)

**பரிசிலர்**—இரந்துவந்தோர். (உ-ம்.) "பரி சிலர்க்கருங்கலநல்கவும்" (புறநா. கச.)

**பரிசிலாளர்**—இரப்போர். (உ-ம்.) "எத்திய பரிசிலாளர்க்கெண்ணியவனைத்துநல்கும்"(அரிச்ச. சூழ். கூஉ.)

**பரிசின்மாக்கள்**—பரிசிலர். (புறநானூ.)

**பரிசீலநம்**—அப்பியாசம். (சைவப்பி. சுo.)

**பரிசு** — 1. ஈகை. 2. நற்குணம். (உ - ம்.) "பத்திமையும்பரிசுமிலா" (திருவாச. கண்ட. எ.) 3. விதம். (உ - ம்.) "கண்டபரிசுரைப்பே னென்ன" (பிரம-காண். சிவராத்திரிமகி. சு.) 4. வெகுமதி. (உ - ம்.) "கையிலென்சிலப்பரிசு கொண்டெதிர்காணுவேன்" (சிவரக. தேவி யுடன். கூ.)

**பரிசுத்தம்** — 1. தூய்மை. (உ-ம்.) "இனி தருத்தப்பெற்றோர்பரிசுத்தராயின்பவீட் டினி லெய்துவரால்" (சிவரக. தேவிநாட்டி. கசு.)

**பரிசுத்தர்**—சுத்தர். (வழக்.)

**பரிசுத்தவான்**—பரிசுத்தன். (வழக்.)

**பரிசுத்தன்**—சுத்தமுள்ளோன். (வழக்.)

**பரிசுத்தாவி**—சுத்தமான ஆவி. [கிறீஸ்து.]

**பரிசுத்தி**—பரிசுத்தம். (சி. சி. அ: ரு. ஞாநப்.)

**பரிசுத்தை**—பரிசுத்தமுள்ளவள். (வழக்.)

**பரிசேடம்**—ஒழிவு. (சி. சி. எ: ச. சிவாக்.)

**பரிசேடித்தல்**—சேடமாகநிற்றல். (சி. சி. அ: கo. ஞாநப்.)

**பரிசை**—சேடத்திலொருபேதம். (சூ. நிக. எ: கஅ.)

**பரிசோதகர்**—முற்றுஞ்சோதிப்பவர். பரி- உபசருக்கம். சோதகர்-சோதிப்பவர். (காஞ்சிப் பு. திருநெறிக். ச.)

**பரிசோதநை**—பூரணசோதநை. (வழக்.)

**பரிசோதித்தல்**—முற்றுஞ்சோதித்தல். (வழக்.)

**பரிசோபித்தல்** — அலங்காரமாயிருத்தல். (வி-ணி. உசுகூ.) பரி-உபசர்க்கம்.

**பரிசோபை**—அலங்காரம். (வி-ணி.)

**பரிட்சித்தல்**—ஆராய்தல். (வழக்.)

**பரிணதம்**—உருத்திரிதல். (சி. சி. ச: உச. சிவாக்.)

**பரிணதவேதாந்தி**—பிரமந்தானேபிரபஞ்ச மாய்ப் பரிணமித்துத் தானுயிருக்குமென்னும் வேதாந்தி; இவன்: பிரகிருதிப்புவனப்பேற்றி னையே முத்தியென்பன். (சி.சி.ச:உக.சிவாக்.)

**பரிணதி**—திரிதல். (சி. சி. உ: க. ஞாநப்.)

**பரிணதை**—விவாகஞ்செய்தவள். (வழக்.)

**பரிணமித்தல்**—வேறுபடுதல். (வி-ணி.)

**பரிணயம்** — கலியாணம். (வழக்குண்டு போலும்.)

**பரிணமசரீரம்** — ஒன்றுதிரிந்துண்டான சரீரம்.

**பரிணமம்**—திரிபு, வேறுபாடு; அது: பால் தயிராவதுபோல்வது. (உ-ம்.) "செயல்பரிணம மன்று" (சி. சி. க: உச.)

பரிணமவாதசைவன்—உயிர்கெட்டுக்கூடி அரனடியிலொன்ருய்ப்போமென்பவன். (கந்த பு. சவ. ரு.)

பரிணமவாதி — சீவான்மாக்களெல்லாம் பிரமப்பொருளின் பரிணமமாய்த்தோன்றி அவிச்சைசெயல்களையடைந்து தீயுஞ்சூடும்போலப் பேதாபேதமாகிய குணகுணித்தன்மையுற்றுப் பலவேறுவகைப்பட்டுநிற்குமென்று வாதிக்கிறவன். (சி. சி. ச: சு. சிவஞான.) முத்தியில் உயிர்கெட்டுநிற்கக்கூடிய அரனடியில் ஒன்ருய்ப்போமென்னுமதத்தன். (சி. சி. கக. கூ. ஞானப்.)

பரிணமாலங்காரம்—ஆரோபிக்கப்படும் உபமானம் பிரகிருதகாரியத்திற்கு உபயோகமாக நிவந்தனைசெய்யப்பட்டு, இயல்பிற்றனக்கு அக்காரியத்தில் உபயோகிக்கப்படுந் தன்மையில்லாமையால் உபமேயமாகத்திரிந்து அக்காரியத்திலுபயோகப்படுவது. (குவல. சு.)

பரித்தல் — 1. அடக்குதல். (உ-ம்.) "பண்படுதுறவைமேற்கொண்டிந்தியம்பரித் தவின்றேல்" (வேதாரணியபு. விசுவாமித்திரர் மோககை. கூஅ.) 2. ஏந்துதல், தாங்குதல். (உ-ம்.) "படைமூவாறும்பரித்தசெங் கையர்"(திருவிளை மெய்க்கா. உச.) 3. சுமத்தல். (உ-ம்.) "பாரகர் பரிக்க" (சி. சி. உ: கரு.) 4. தரித்தல். (உ-ம்.) "சனகர்"பார்.

பரித்தவை—ஓடியவை. (சிந்தா.)

பரித்தியாகம்—முற்றும்விடுத்தல். (வழக்.)

பரிதபி—தெரிநிலைவினைப்பகுதி.

பரிதபித்தல்—துக்கித்தல். (வழக்.)

பரிதபிப்பு—பரிதபித்தல்.

பரிதல்—1. அறுத்தல். (உ-ம்.) "செந்தறித் தங்கியவென்மதத்தனியானைதலைபரிந்து" (திருநூற். ருஅ.) 2. அன்பு. 3. இரங்கல், வருந்துதல் என்பர். பரிபாடலில். 4. ஓடிதல். (சூ. நிக. க: உக.) 5. ஓடுதல். (புறநா.) 6. வருந்திக்காத்தல். (உ-ம்.) "பரியினுமாகாவாம்" (வள். கூஎசு.) 7. வெட்டல். (சூ. நிக. க. உச.) (2,3-சூ. நிக. கக: ரகரவெ. அ.)

பரிதானம்—கைக்கூலி. (வழக்.)

பரிதாபப்படுதல்—பரிதாபித்தல். (வழக்.)

பரிதாபம்—1. இரக்கம். (உ-ம்.)"பரிதாபத்தோ-டெம்பியரென்செய்தாரென்றிறை வனுயினைந்துசோர்ந்தான்" (பாரத. நச்சுப்பொய். உரு.) 2. வெப்பம். (பாரத. வசந்தகால. க.)

பரிதாபி — 1. துயருறுவோன். (வழக்.) 2. வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களிலே நாற்பத்தாறும் வருடம். (வருஷாதிநூல்.)

பரிதி—1. சக்கராயுதம். (அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ். க.) 2. சூரியன். (உ-ம்.) "பரிதி நன்மரபில்வருபார்த்திபன்" (அரிச்ச. காப்பு.உ.) 3. தேர்ச்சில். 4. பரிவேடம். 5. யாகமேடை, அல்லது யூபத்தறி. (கந்தபு. வேள்விப். க.) 6. வட்டம். (உ-ம்) "இளங்கதிர்ப்பரிதிசூட்டி யியர்றியதென்னலாமே" (சிந்தா.காந்த.கூரு.) (3, 4, 6-பிங்கல. கூஎகக.)

பரிதியங்குடிஞை—சக்கரவாகப்புள். (உ-ம்.) "கோட்டகம்பரிதியங்குடிஞ்குகூடுமே"(இரகு. நாட்டு. சo.)

பரிது — பரியது, எனினும்பரிது எனினுமொக்கும். (வள். கo-ஆம் அதி. கூ.)

பரிந்த—அருத்த. (பத்துப். மதுரைக். கூஅo-ஆம் அடி.)

பரிந்து—1. ஏற்றுக்கொண்டு. (பரிபாடல்.) 2. துணிந்து. (புறநா.)

பரிநிவிர்த்தி—தேகத்தினின்று ஆன்மா முற்றத்துறந்து இனிப் பிறவாதிருத்தல்.

பரிப்பு — 1. இயக்கம். (உ-ம்) "அஞ்ஞாயிற்றுப்பரிப்பும் (புறநா. கூo.) 2. பரித்தல். சுமத்தல் பு-தொழிற்பெயர்விகுதி.

பரிபக்குவம்—ஏற்றபக்குவம். (சி. சி. எகூ. ஞானப்.)

பரிபக்குவமலபிரளயாகலர்—சிவாநுக்கிரகம்பெற்றுப் பதி பதார்த்தங்களாய் ஆதிமுத்தசிவன்களாயும் ஸ்ரீகண்டவீரபத்திரர் முதலிய அபர மந்திரேசுவரர்கள் புவனவாசிகளென்னும் அபரமுத்த சிவன்களாயும்போயிருப்பவர். (சி. சி. ஞானப்.)

பரிபக்குவவிஞ்ஞாநகலர்— சிவாநுக்கிரகம் பெற்றுப் பதி பதார்த்தங்களாய் ஆதிமுத்த சிவன்களாயும் அணுசதாசிவர் அநந்தாதிகள் மந்திரர்கள் புவனவாசிகளென்னும் பரமுத்த சிவன்களாயும்போயிருப்பவர்கள்.(சி.சி.ஞானப்.)

பரிபவம்—1. எளிமை. (சூ. நிக அ: ருஎ.) 2. அவமானம். உ-ம்.) "தம்பியரன்றுணர்வறியாமையினைவைக்கணுரைத்தமாற்றம் - பரிபவமோ" (பாரத. கிருட்டிண. கஅ.) 3. துன்பம். (உ-ம்.) "இன்னம்பரிபவவிளைவுபாரான்" (திருவிளை. இந்திரன்பழி. ருஎ.)

பரிபாகம் — 1. அடுத்தல், சமைத்தல். 2. ஏற்றபக்குவம்.

பரிபாகி—ஏற்றபக்குவன். (வழக்.)

பரிபாடல்—எட்டுத்தொகையுள் ஐந்தாவது தொகையாகிய ஒருநூல்; இது: கடைச்சங்கப் புலவர்களாலியற்றப்பட்ட எழுபது பரிபாடல்களையுடையது. [ஒருவகைப்பாவின்பெயராகிய பரிபாடலென்பது அப்பாவாலாகிய நூலுக்குப் பெயராயிற்று.]

பரிபாடை—சங்கேதம். குழூஉக்குறி. (உ-ம்.)

"பேர்கொண்டசைவபரிபாலடைசேக்கிழார்" (பிள்ளைத்தமிழ். காப்பு. ரு.)

**பரிபாலகன்**—காப்போன். (வழக்.)

**பரிபாலநம்**—பரிபாலம். (வழக்.)

**பரிபாலநன்**—காப்போன். (வழக்.)

**பரிபாலம்**—காவல். (வழக்.)

**பரிபாலன்**—காப்போன். (வழக்.)

**பரிபாலி**—1. காப்போன். இ-விகுதி. 2. தெரிநிலைவினைப்பகுதி.

**பரிபாலித்தல்**—காத்தல். (வழக்.)

**பரிவாதம்**—பழிச்சொல். (பிங்கல. உ௦எ.)

**பரிபுடம்**—நூறெருப்புடம். (வைத்தியபரி.)

**பரிபுரம்**—பாதகிண்கிணி. (சூ. நிக. எ: உரு.)

**பரிபூதம்**—பரிசுத்தம். பூதம்-புனிதம்.

**பரிபூர்த்தி**—நிறைவு. (வழக்.)

**பரிபூரணத்துவம்**-பூரணத்தன்மை.(வழக்.)

**பரிபூரணதை**—திருத்தி. (வழக்.)

**பரிபூரணம்**—1. எங்குநிறைதல். (சி. சி. சு: க. மறை.) 2. திருத்தி. (வழக்.)

**பரிபூரணன்**—எங்குநிறைந்தோன். (மகாவாக்கியம். சு. உரை.) 2. பரமாநந்தன். சிற்ரூப சத்தியுடனேகூடிச் சர்வப்பிரகாசமென்னுஞ் சொப்பகாவஸ்தையை அடையும்போதுபெறும் பெயர். (நாநா. கட்.) 3. மிகுதிருத்தியுடையவன். (சைவப்பி. உ௮)

**பரிபூரணி**—பார்ப்பதி. (வழக்.)

**பரிபூரணித்தல்**—பரிபூரணமாதல். (ஞானக் கட்டளை. அசிபதமகநம்.)

**பரிமகம்**—அசுவமேதம். (உ-ம்) "பரிமகஞ் செய்வான்வேண்டி" (திருவிளை. புராணவரலா. கஎ.)

**பரிமணி**—கரந்தை. (வைத்தியபரி.)

**பரிமளகந்தி**—வியாசதன்றாய். (பாரதத்திற் காண்க.)

**பரிமளச்சேறு**—பரிமளக்குழம்பு. (வழக்.)

**பரிமளம்**-மிகுமணம்; இது அட்டபோகத் தொன்று. (உ-ம்.) "புரிவிட்டம்பெறுபரிமளகளபம்புகுசாலை" (சிவரக. தேவிமேருகயி. ககூ.)

**பரிமளி**—கரந்தை. (வைத்தியபரி.)

**பரிமளித்தல்**— } 1. சமாளித்தல். (வழக்.)
**பரிமளிப்பு**— } 2. மிகமணத்தல்.

**பரிமா**—குதிரை. (வைத்தியபரி.)

**பரிமாணம்**—அளவு. (தருக்கசங்கிரகத்திற் காண்க.)

**பரிமாவடிப்போர்**—குதிரைப்பாகர். (சூ. நிக. கக: தகரவெ. உக.)

**பரிமாறுதல்**—1. இடுதல். (சைவச.பொது. கூ௦உ. உரை.) 2. கொடுத்துமாறுதல். (வழக்.)

**பரிமிதம்**—அளவுபட்டது. (சி. சி. க: கூச. ஞாநப்.)

**பரிமுகவம்பி**-குதிரைமுகவோடம். (உ-ம்.) "பரிமுகவம்பியுங்கரிமுகவம்பியும்"(சிலப்.புறஞ்சேரி. கஎசு.)

**பரிமேதம்**—அசுவமேதயாகம். (உ-ம்.) "சயம்பெருகும்பரிமேதந்தரும்பேறுதருமிந்நீர்" (சேதுபு. பலதீர்த். கச.)

**பரிமேலழகர்**—திருவள்ளுவர் குறளுக்கு உரைசெய்தவோரந்தணக்கவிஞர். (வழக்.)

**பரிமோகநம்**—மயக்கு. (வழக்கு.)

**பரிய**—1. பெரிய. (திருவிளை. திருநகர. கூஎ.) 2. வருந்த. (பரிபாடல்.)

**பரியகம்**—1. காற்சரி. 2. கைச்சரி. 3. பாதகிண்கிணி. (உ-ம்.)"பரியகநூபுரம்பாடகஞ்சதங்கை"(சிலப்.கடலாடு.அச.) (1,2-சூ.நிக.எ:உரு.)

**பரியங்கம்**—கட்டில். (உ-ம்.) "அத்தனுமம்பிகையு-மூர்த்தமபரியங்கத்தணைமீதினிலுறைபோதில்" (சிவரக. தேவிமேருகயிலை. கச.)

**பரியந்தம்**—எல்லை. (சூ. நிக. அ: க்கூ.)

**பரியநுயோச்சியோபேட்சணம்**—தோல்வித்தானம் இருபத்திரண்டனுளொன்று; அது: மறுத்துரைத்தற்குத்தக்கதாகப் பிரதிவாதி கூறிய வாக்கியந்தோன்றுதலையறிந்தாவது அறியாமலாவது மறுத்துரையாதுவிடுதல். (சி. சி. அளவை. கச. மறை) [பரியநுயோச்சியம் - உடன்படாதற்குரியது; உபேட்சணம் - விருப்பின்மை.]

**பரியம்**—பரிசம். (சிந்தா.)

**பரியல்**—இரங்குதல். (உ-ம்.) "பரியல்வேண்டா" (புறநா. கஎஉ.)

**பரியவாசநம்**—முடிவு. (சி. சி. உ: ௬௦. சிவாக்.)

**பரியவசிதம்**—நிச்சயம்பண்ணுகிறது. (சி. சி. உ: க. ஞாநப்.)

**பரியன்**—மகத்துக்குமகத்தானவன். (உ-ம்.) "நேரியனாய்ப்பரியனுமாயுயிர்க்குயிராய்" (சி. சி. அ: உ௮. மறை.)

**பரியாசம்**—1. ஓமம். (வைத்தியபரி.) 2. பரிகாசம். (வழக்.)

**பரியாநம்**-சேணம்.(உ-ம்.) வந்துழிக்காண்க.

**பரியாப்தம்**—போதுமானது. (சி. சி. கக: கூ. சிவாக்.)

**பரியாபிதம்**—போதுமெனல்.

**பரியாமல்**—அறியாமல்.(புறப்பொருள்வெ.)

**பரியாமை**—பற்றுச்செய்யாமை.(புறப்பொருள்வெ.)

**பரியாயச்சொல்**—கருதியவொருபொருள் குறித்தமறுசொல். (உ-ம்.) "பரியாயம்"பார்.

**பரியாயசந்தேகம்**—அற்பசந்தேகம். (வழக்.)
**பரியாயநாமம்**—வேறுபெயர். (வி-ணி.)
**பரியாயம்** — 1. ஒன்றற்குரியன. (உ-ம்.) "பொருகணைப்பரியாயப்பே- ரத்திரமென்பதா விக்கழிவுசெய்திடுதலாலே"(சேதுபு. சங்கரபா. சக.) 2. பரியாயவணி. (உ-ம்.) "கருதியகிளவா தப்பொருடோன்றப் – பிறிதொன்றுரைப்பது பரியாயம்மே" (தண்டி. எ0)
**பரியாயவணி**—பரியாயம்பார்.
**பரியாபோக்தம்** — பிறிதினவிற்சியணி. (குவல. உக.)
**பரியாலோசநம்**— } பெரியவாலோசலை.
**பரியாலோசனை**— } (சி. சி. அ: ரு. ஞானப்.)
**பரியாளம்**—பரிவாரம். (உ-ம்.) "விரசையந் தனம்போர்வேழம்வெம்பரியாளங்க – டரையிட மின்றியீண்ட" (சேதுபு. சங்கரபா. அங.)
**பரியும்**—அழியும். (சிந்தாம.)
**பரியூ**—பரிந்து. (பரிபாடல்.)
**பரிவட்டணை**— எண்வகைக் கலைத்தொழில் களிலொன்று; அது: வீக்கினநரம்பை அவ்விர லாலும் புறவிரலாலுங்கரணஞ்செய்து தடவிப் பார்த்தல். (கூர்மபு அட்டமூ. க. உரை.)
**பரிவட்டம்**—1. ஆடை. (பிங்கல. கஉஎங.) 2. விக்கிரகத்தினுடை. (உ-ம்.) "பரிவட்டத் தொகைதிருவாபரணம்பயிலறைகள்" (சிவரக. தேவி. மேருமயிலை. கசு.) மரபு-வழக்கு.
**பரிவநுத்தநம்**—மாற்றுதல். (உ-ம்.) "பார்க வர்முறையிற்கொள்ளும்பரிவருத்தநம்பேறற்பா டுங்-கார்கெழுசுரும்பினீட்டம்" (சேதுபு. திரு நாட்டு. எக.)
**பரிவநுத்தனை** — 1. பருவருத்தநம். 2. பரி வருத்தனையணி. (உ-ம்.) "பொருள்பரிமாறுதல் பரிவருத்தனையே" (தண்டி. அடு.)
**பரிவநுத்தனையணி**-ஓரலங்காரம். (தண்டி. அடு. உரை.)
**பரிவாசம்**—தங்குதல். (வழக்.)
**பரிவாதகன்**—வழக்காளி. (வழக்.)
**பரிவாதம்**—பழிச்சொல். (சூ. நிக. க0: ச.)
**பரிவாதிநி**—வீணைகளினிருபத்திரண்டுபே தத்தொன்று. (வி-ணி. உஉ0.)
**பரிவாரதேவதை**—ஏவற்றேவர். (வழக் குண்டு.) பரிவாரம் பார்.
**பரிவாரம்**-1. சூழ்ந்திருக்குந்தேவர். (உ-ம்.) "மற்றைப்பரிவாரத்தார்மாவியந்தானும்" (சைவ ச. பொது. சசுக.) 2. சூழ்வோர். (பிங்கல. அசடு.)
**பரிவிந்தகன்** — முன்னோன் மணமுடியா திருக்க முடித்தபின்னோன்.

**பரிவிநுத்தி** — ஒருபொருள்கொடுத் தொரு பொருள் வாங்குதல். (வழக்.)
**பரிவு**-1. அன்பு. (உ-ம்.)"பாகனையசொல்லி யொடுதம்பிபரிவிற்பின்போக" (இராமா. அகத். ருசு.) 2. இன்பம். (உ-ம்.) "பரிவுபொங்கவங் கெடுத்தணைத்து" (பாரத. சம்பவ. க.) 3. துன் பம். (சூ. நிக. கக: ரகரவெ. கூசு.)
**பரிவேட்டித்து**—சுற்றி. (வி-ணி.)
**பரிவேட்பு**—வட்டம். (பதிற்றுப்பத்து.)
**பரிவேடணம்**—சூழுதல். (வழக்.)
**பரிவேடபுடம்**—விதிபாதபுடத்துக்கு ஆறு ராசிகூட்டிநின்ற நிலை. (விதாந. குணகுண. ருச. உரை.)
**பரிவேடம்**-1.சந்திரசூரியரைச்சூழத்தோன் றும் வட்டம். (சூ. நிக. க: கூங) 2. சூழ்தல். 3. பரிவேடபுடம். (உ-ம்.) "விதிபாதமாறுரைசே ரப்பரிவேடமாம்" (விதாந. குணகுண. ருச.)
**பரிவேடிப்பு**—பரிவேடம். (சிந்தா.)
**பரிவை** – நந்தியாவட்டம். (வைத்தியபரி.)
**பரீஇ**—விழுந்து. (உ-ம்.) "கழிந்ததெங்கி னுண்பழம்பரீஇ" (திருவிளை. நாட்டு. ச0.)
**பரீக்கை** —தான்விவகரிக்கும்பொருளினிவ் விலக்கணமுண்டோவின்றெனப் பார்த்தல்; அது: போதப்பிரகாரம் மூன்றினொன்று. உத் தேசம், இலக்கணம், சோதனை என்பனவாம். (திருவிளை. தடாதகைப். ருச.)
**பரீகம்**—பரிகம், நித்தியயோகத்தொன்று. (விதாநமாலை. பஞ்சாங்க. உச-உரை.)
**பரீகாசம்**—பரிகாசம். (வழக்.)
**பரீட்சகர்**—பரீட்சிக்கிறவர்.(சைவப்பி.ஙக.)
**பரீட்சணம்**--சோதனை. (வழக்.)
**பரீட்சித்தல்**—ஆராய்தல், சோதனை. (வழக்.)
**பரீட்சை** — இலக்கியத்திற்கு இலக்கணம் பொருந்துமோ பொருந்தாதோவென் றாராய் தல். (தர்க்கபாஷை.) சோதனை என்பது மிதுவே
**பரு**-1. சிலந்தி. (வழக்.) 2. பருமை. (உ-ம்.) "பருச்சுழியின்மிதக்குமதகரி"(சேதுபு. நாட்டு. கஉ.) 3. தெரிநிலைவினைப்பகுதி.
**பருக்கல்**— } பருத்தல். (வழக்.)
**பருக்குதல்**— }
**பருக்கை** — 1. சோறு. (உ-ம்.) "பருக்கை யிலாக்கூழுக்கிலைக்கறியில்லையென்பார்க் கும்" (ஒரு தனிக்கவி.) 2. பருக்கைக்கல். (சூ. நி. ஙி: கஙி) 3. பளிங்கு. (சூ. நிக. சு: கஉ.)
**பருக்கைக்கல்**—பருக்கைபார். (வழக்.)
**பருகல்** — 1. குடித்தல்; அது: நால்வகை யுணவினொன்று. (சூ. நிக. கஉ: கக.) 2. விழுங் கல். (பத்துப். பொருநா. க0ச.)

பருகுதல்—பருகல். (சூ. நிக. சு: ௬௧.)
பருங்காயம்—பெருங்காயம். (உ-ம்.) "பருங்காயங்குட்டிலவங்கஞ்சாதிக்காய்" (தைல. தைலவ. ௭௭.)
பருங்குறிஞ்சி — பெருங்குறிஞ்சி. (உ-ம்.) "மூடக்கற்றூன் றாதுவளைபருங்குறிஞ்சி" (தைல. தைலவ. ௭௧.)
பருஞ்சாய்—சடாமாஞ்சில். (உ-ம்.) "பருஞ்சாய்கோரைகாவிசம்பங்கிகுட்டம்" (தைல. தைலவ. ௬௮.)
பருணிதர்-புலவர். (இராமா. மிதிலைக்கா. ௪௦௬.)
பருத்தல் — 1. அதிகரித்தல். 2. தடித்தல். (உ-ம்.) "பாவனைமனத்தாலேபருத்தெழுமனமதாகும்" (ஞானவா. ஞானவின். அ.) 3. பெருத்தல்.
பருத்தவள்ளிகை—மல்லிகை. (வைத்திய பரிபா.)
பருத்தி—ஓர் செடி; அது: காட்டுப்பருத்தி, செம்பருத்தி, தாளிப்பருத்தி, பட்டுப்பருத்தி, பூப்பருத்தி, பேய்ப்பருத்தி, மலைப்பருத்தி, வெள்ளைப்பருத்தி, உப்பமபருத்தி, குப்பைப் பருத்தி, இலாடன்பருத்தி, நாடன்பருத்தியெனப் பலவகைப்படும். (உ-ம்.) "பருத்தியிலை மொட்டிரண்டைப்பாலிலரைத்துண்ண" (பதார்த்தகுணசி.)
பருத்திபன்னுதல்—பஞ்சுநூற்றல். (வழக்.)
பருந்தலை—1. பெரியதலை. 2. பெருமையிற் சிறந்தோன். (வழக்.)
பருந்தின்வீழ்வு-சூத்திரநிலை நான்கினொன்று; அஃது: ஓரிடத்துச்சூத்திரம் பின்பலவிடத்துச்சூத்திரத்தை யவாவிநிற்பது. (உ-ம்.) "ஆற்றொழுக்கரிமாநோக்கந்தவளைப்-பாய்த்துப்பருந்தின்வீழ்வன்னசூத்திரநிலை" (நன். பாயிர. ௧௧.)
பருந்து—ஒரு பறவை; அது: கரும்பருந்து அல்லது பறைப்பருந்து, குடுமிப்பருந்து, பெரும்பருந்து, செம்பருந்து, மூகவெள்ளைப் பருந்து எனப் பலவகைப்படும். (உ-ம்.) "பருந்தின்வீழ்வு"
பருந்தேக்கு—பெருந்தேக்கு. (உ-ம்.) "வாகைபுன்குசண்பகம்பருந்தேக்கு" (தைல. தைலவ. ௧௩௫.)
பருப்பதம்—1. ஸ்ரீசைலம். (உ-ம்.) "பருப்பதமிறைஞ்சிவிழிசோதிபயில்வித்து" (கோயிற் பு. இரணிய. ௧௭. 2. மலை. (உ-ம்.) "பலகோடி பருப்பதக்கோடொத்து" (அரிச்ச. நாட்டு. ௭.)
பருப்பம்—1. பருத்தல். 2. பருமை. (1, 2-வழக்.)
பருப்பித்தல்—பரிதாக்கல்.
பருப்பு—1. அதிகப்படல். பு-தொழிற் பெயர் விகுதி. 2. பயற்றம்பருப்பு. (உ-ம்.) "பருப்புப்பொருப்பைப்பிதிர்த்திட்டு" (சிவரக. யாகத. ௫.) துவரம்பருப்பு முதற்பலவகைப்படும்; 3. பருமை. (சிந்தா.)
பருப்புக்கீரை—ஒரு பூடு. (வழக்.)
பருப்பொருள் — நுண்மையற்றபொருள். (உ-ம்.) "தகடீர்புலவர்யான்மொழிந்தபருப்பொருடானும்விழுப்பொருளாம்" (யாப். காரிகை. அவையடக். உ.)
பருமட்டம்—பருமட்டு. (வழக்.)
பருமட்டு—செவ்வையின்மை, பரும்படி. (வழக்.)
பருமம்—1. ஒப்பனை. (உ-ம்.) "துமித்தல்" பார். 2. கவசம். (உ-ம்.) "கற்றைக்கதிர்போற் பருமம்புறங்கொளவிமின்ன" (திருவிளை. மாயப். ௧௪.) 3 குதிரைக்கலணை. (பிங்கல. ௧௬௧௧.) 4. பெருமை. (உ-ம்) "பாவடிப்பருமயானை" (கூர்மபு. அந்தகா. உ௪.) 5. மூவாறுகோவைமணி. (சூ. நிக. ௭: உ௭.)
பருமல்—கப்பற்பாய்கட்டுமரம். ஒரு குழூஉக்குறி.
பருமன்—பருத்தவன். (வழக்.)
பருமித்தல் — 1. அலங்கரித்தல். (உ-ம்.) "முத்தம்பரிமித்திடைதேய்த்து" (கூர்மபு. அந்தகாசு. ௫௬.) 3. சிரமஞ்செய்தல். (சூ. நிக. ௬: ௪௬.) 3. பண்ணுறுத்தல். (உ-ம்.) "பருமித்தகளிற்றிற்றனும்" (சிந்தா. சாந்தரு. ௨௦.)
பருமிதம் — 1. இறுமாப்பு. 2. சிரமம். 3. மகிழ்ச்சி. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பருமை — 1. பருப்பம். 2. பரும்படியான தன்மை. (1, 2-வழக்.)
பருவதம்—1. ஓர் மீன். (ஒரு குழூஉக்குறி போலும்.) 2. மலை. (உ-ம்) "பாவபருவதங்களெல்லாம்" (சிவரக. அபுத்திபூருவ. ௪.)
பருவதவர்த்தனி—பார்ப்பதி, இராமேசுரத்திலெழுந்தருளியிருக்கிற அம்பிகையின் பெயர்.
பருவதாசிரயம்—சரபப்பட்சி. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பருவந்து—வருந்தி. (உ-ம்.) "பருவந்துபாழ்படுதலின்று" (வள். அ௬.)
பருவநான்கு—வாலை, தருணி, பிரவிடை, விருத்தை (வைத்தியபரி.)
பருவம் — 1. அமாவாசி, பௌரணிமை. வழக்குண்டு. 2. இருது; அது: வசந்தருது, கிரீஷ்மருது, வருஷருது, சரருது, ஏமந்தருது, சசிருது என அறுவகைப்படும். (உ-ம்.) "பருவமாறியபருவத்தில்வையைநீர்பரந்துவருவதாகியும்" (திருவிளை. எல்லாம். ௪௨.) (பிங்கல. ௬௦௬.) 3. இளமை. (உ-ம்.) "பருவச்சோலைத்-தனியிடமதனைநண்ணி" (இராமா. சூர்ப்பநகை. ௭.)

4. நிலைமை. (வள். சகூ-ஆம் அதி. உ) (வழக்.) 5. பக்குவம். (உ-ம்.) "அரும்பருவமடைதலு மே" (சி. சி. அ: கo.) 6. பெருநாள். (மகமதியர் வழக்கு.) 7. வயது. (உ-ம்.) "பன்னிருபருவத் தென்றான்" (பிர-காண். சிவதாந. அ.) 8. விரல்களின் வரை. (வி-ணி.)

பருவமலைவு— ஒருகாலத்திற்குரியதை மற்றொருகாலத்துக்குரியனவாகக்கூறுவது. (தண்டியல. கஎஎ. உரை.)

பருவமாதல் — 1. இருதுவாதல் 2. தகுதியாதல். (வழக்.)

பருவமேழு— பேதைமுதலேழுபருவம். (சூ. நிக. உ: ருஅ.)

பருவயோனி—கரும்பு. (வைத்தியபரி.)

பருவரல்—துன்பம். (உ-ம்.) "விண்ணவர் பருவரலுழப்ப" (கூர்மபு. அட்டமூர். கக.)

பருவருதல்—துன்பப்படல். (வழக்.)

பருவல்—பருத்தது. (வழக்.)

பருவாகை-ஒருமரம் (உ-ம்.) "அழுக்கிரி" பார். (தைல. தைலவ. சஉ.)

பருவி—தில்லை. (வைத்தியபரி.

பருவு—பரு. உகரஞ்சாரியை (வழக்.)

பரூஉ — 1. பருமை. (சூ. நிக. அ: க.) 2. பறித்தல். (பிங்கல. உகஉக.)

பரூஉக்கை — வண்டியில் அச்சுமரத்தின் மேல் நெடியவாயிரண்டுபக்கத்து நெடுகக்கிடக்கும் பருமரங்கள். (பத்துப். பெரும்பா. சஅ.)

பரேச்சாப்பிராரத்தம் — ஒருவகைப் பிராரத்தம்; அது: ஒருவரொருகாரியஞ்செய்ய அதனாலவரை ஆக்கினை அபராதமென்று இராசாங்கத்தோர் சொல்ல அதற்கொருவர் வினைமுதலியவற்றாலுறுமிருபயனுமாம். (சி. சி. உ: கஉ. மறை.)

பரேரம்புழகு-மலையெருக்கம்பூ முதலியன. (பத்துப். குறிஞ்சி. ககூ.)

பரை — 1. ஆன்மபோதமடங்கினவிடத்து முற்றோன்றிய இச்சாஞானக்கிரியைகள் விரியாது நீங்கினவிடம். (ஒழிவி. சக.) 2. ஐந்துமரக்கால்கொண்ட ஓரளவு. (ஒரு வழக்குண்டு.) 3. ஐவகைச்சிவசத்திகளுளொன்று; அது: சுத்தான்மாக்களுக்கு அளவிறந்த தெய்வீகம் பொருந்திய ஞானத்தால் சிவனுடைய பரிபூரண முள்ளளவும் அறிந்து உபரதியைக்கொடுக்குந் தன்மையாகிய அநுக்கிரகம்பண்ணுவது. (சதாசிவ. கூo.) 4. நைட்டிகதீட்சை. (சி. சி. அ: ரு. ஞாநப்.) 5. மூவகைச்சிவசத்திகளுளொன்று; அஃது: இரத்தை, சுக்கிலை, அசிதை, கிருஷ்ணையென நான்குவிதப்படும். (சைவச பொதுவி. எச. உரை.)

பரைதெரிசநம் — சூரியப்பிரகாசத்தைக் கண்ட கண் புடைபெயர்ந்துநோக்காது அச்சூரியப்பிரகாசத்திலேகீபாவமாய்நிற்பதுபோல அருளென்றுந் தானென்றுஞ் சிறிதுந்தோன்றாது அவ்வருளே தானாய் நிற்பது.

பரைநாதம்—நெல்லிக்காய்க்கெந்தி. (தைல. தைலவ.)

பரையோகம்— தற்போதமொழிந்த சுத்த நிலை. (ஒழிவி. யோக. உo. உரை.)

பரோட்சஞாநம்—சற்காரிய பரிபாகத்தினால் சொற்காதி போகம்போலப் பிரமமொன்றுண்டென்னு மாப்தவாக்கிய நிச்சயபுத்தி. (உபநிடதம்.)

பரோட்சத்துவம்—காட்சியின்மை.(வழக்.)

பரோட்சம் — அதிரிசயமானவை, பிரத்தியட்சமாகாதது. (சைவப்பி. கூச.)

பரோட்சருபதெரிசநம்— பரோட்சரூபத்தைச் தரிசித்தல். (சி. சி. அ: கூo. ஞாநப்.)

பரோபகாரம்—பிறர்க்குபகாரம். (வழக்.)

பரோபகாரன்—பரோபகாரி. (வழக்.)

பரோபகாரி—பிறர்க்குபகாரி. (வழக்.)

பரோன்முகி — எதிர்முகசிற்சத்தி. (சி. சி. அளவை. க. சிவாக்.)

பல்—1. ஆயுதக்கருக்கு அரிவாட்பல்லெனக. 2. நங்கூரநாக்கு. (ஒரு குழூஉக்குறி.) 3. பல். (சூ. நிக. உ: கூக.) 4. பல.

பல்கணி—பலகணி. (சூ. நிக. ரு: ருச.)

பல்கல்—பெருகல். (திருவிளை. பாயிர. க.)

பல்கலை - பல அம்சங்கள். (உ-ம்.) "பத்திரட்டியினீரிரண்டொழிந்தபல்கலையோன்" (பாரத. குருகுல.) ரு. (கலை, அமிசம், கூறு, பங்கு என்பன ஒரு பொருளாம்.)

பல்காயனார் — ஒரு இலக்கண ஆசிரியர். (காரிகையுரையிற்காண்க.)

பல்கால்—அடிக்கடி. (திருவிளை.மூர்த்திவி. கூக.) பல்கால், பலகால் இரண்டுமொன்றேயாமெனக.

பல்காற்பறவை—வண்டு. (உ-ம்.) 'பல்காற் பறவைகிளைசெத்தோர்க்கும்'(பெரும்பா.சஅச.)

பல்குதல் — பலுகுதல். (உ-ம்.) "பல்கிய விரும்பினான்" (பிரமோத. சஞ்சா. உக.)

பல்சந்தமாலை—பத்துமுதலாக நூறுஈறாகப் பல்சந்தமுடையதாகி வருவதொரு பிரபந்தம்; இது: நேரிசைவெண்பா நூறு அந்தாதியாகவந்தால் வெண்பா அந்தாதியென்றும், கலித்துறை நூறு அந்தாதியாகவந்தாற் கலித்துறையந்தாதியென்றுஞ்சொல்லப்படும். (உ-ம்.)"பத்தந்தாதி நூறந்தம்பல்சந்தமாலையாம்" (வெண்பாப்.செய்யு. கூ.)

பல்பஞ்சாமிர்தம்-இரசபஞ்சாமிர்தத்தோடு கூட்டி அமைக்கப்பட்ட வாழைப்பழம், பலாப் பழம், மாம்பழமென்பவைகளின் தொகுதி. (சைவப்பி. கoo.)

பல்பல-பலபல. (நன்னூ.உயிரீற்றுப்.உ௦)

பல்லகி—சேங்கொட்டை. (வைத்தியபரி.)

பல்லக்கு-சிவிகை. (உ-ம்) "எழுவாப்பல்லக் காளாக்கினன்பல்கலைதேர்வேந்தனும்" (இன்னிசை. கசு.)

பல்லணம்—குதிரைக்கல்லணை (பிங்கல. கசுசக.)

பல்லதி—சேங்கொட்டை. (வைத்தியபரி.)

பல்லம்—1. அம்பு. (உ-ம்.) "வேடர்பல்ல முயிர்நிலைவாயிற்பட்டமான்" (அரிச்ச. மயாந. சஉ.) 2. ஓரெண். 3. கரடி. 4. குதிரைக்கல்லணை. 5. சேங்கொட்டைமரம். 6. சேமரம். (2, 3, 4-சூ. நிக. கக: லகரவெ. கஎ.) (5, 6-வைத்தியபரி.)

பல்லரணை—ஒரு நோய். (உ-ம்.) "மூரல்-இடத்திலடர்காலொடுபல்லரணையுங் கொப்பளிக்கவாறும்" (தைல. தைலவ. உ.)

பல்லவத்திரு—அசோகமரம்.(வைத்தியபரி.)

பல்லவம் — 1. தளிர். (சூ. நிக. சு: சஎ.) 2. தேயமைம்பத்தாறினொன்று. (திருவிளை. திருமணப். எச.) 3. பதத்தினோருறுப்பு; அது: முதலிலுள்ளது.

பல்லவர்—1. கீழ்மக்கள். (சூ. நிக. உ: ருச.) 2. தூர்த்தர். (சூ. நிக. உ: சரு.) 3. பலர். (உ-ம்.) "பல்லவராயராருநின்றபரிசனராங் கணங்கடமை" (சிவரக. நந்திகரை. கூ.)

பல்லவி—இசைப்பாட்டினோருறுப்பு. முதலிலுள்ளது. (வழக்.)

பல்லவை—1. பலசபை. 2. பலபொருள். (வழக்.)

பல்லாங்குழி—பலவாகுங்குழி; அது: ஒரு விளையாட்டுப் பலகையிலுள்ளன.

பல்லாண்டு —1. பலவருஷம். 2. வாழ்த்து. (உ-ம்.) "பாவையர்பல்லாண்டிசைப்ப" (இராமா. திருவவ. சுகூ.)

பல்லாண்டுகூறுதல்— இன்னும்பலவருடம் வாழ்கவென்று வாழ்த்துச்சொல்லுதல். (சூளாமணி. அரும்பத உரை.)

பல்லாதகம்—
பல்லாதம்—
பல்லாதகி— } சேமரம். (வைத்தியபரி.)

பல்லார்—பலர். (வள். பயனில். க)

பல்லி —கௌளி. (உ-ம்.) "சாகாட்டாரம் பொருந்தியசிறுபெண்பல்லிபோல" (புறநா. உருகூ.)

பல்லிக்கை—
பல்லிகி -
பல்லிகை — } சேங்கொட்டை. (வைத்தியபரி.)

பல்லிச்சாத்திரம்—கௌளிநூல். (வழக்.)

பல்லிப்பூடு— கொல்லைப்பல்லி யென்னுமோர்பூடு. (வைத்தியபரி.)

பல்லினம்—
பல்லினர்— } சதுரக்கள்ளி. (வைத்தியபரி)

பல்லுக்கிட்டுதல்—அலகுபூட்டுதல். (வழக்.)

பல்லுகம்—1. கரடி (சூ. நிக. கூ: உ௦.) 2. பெருவாகை. (வைத்தியபரி)

பல்லுங்கம்—மூங்கில் (வைத்தியபரி.)

பல்லுறுசெங்களை — குதிரைப்பற்பாஷாணம். (உ-ம்.) வந்துழிக்காண்க.)

பல்லூகம்—கரடி (சூ. நிக. கூ: உ௦.)

பல்வலம்—வாவி. (சூ. நிக. ரு: உகூ.)

பல—1. அநேகம். (உ-ம்.) "நல்வினையுழந்து பலநல்லுறவெடுத்தும்" (பிரமோத். பஞ்சா. கூஅ.) 2. சிவலோகத்திற் பச்சிமதிசையோலக் கஞ்சேவிக்கும் துவாதசமுக்கியகணத்திர கண்ணியரிலொருவன். (வி-ணி) 3. நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று; இது: வருணதிக்கிலுள்ள பத்துப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை)

பலகுடி—கவடி. (வைத்தியபரி.)

பலகணி—சாளரம். (சூ. நிக. ரு: ருச.)

பலகறை—கவடி. (உ-ம்.) "பணிலமொத்த பலகறை" (அரிச்ச. மயாந. கூ.)

பலகாரம்-யானைமேற்றவிசு.(சூ.நிக.எ:உ௦.)

பல்கேசரம்—தென்னை. (வைத்தியபரி.)

பலகை — 1. கேடகம். (சூ. நிக. எ: கஅ.) 2. தொட்டிப்பாடாணம். (வைத்தியபரி.) 3. மரமுதலியவற்றாலாயபலகை. (வழக்.)

பலகைக்கள்ளி—ஒருவகைக்கள்ளி. (வழக் குண்டுபோலும்.)

பலகைமரம் — நெய்வார்கருவிலொன்று. (ஒரு குழூஉக்குறி.)

பலகையுரு—விளையலுப்பு. (வைத்தியபரி.)

பலச்சரீடம்—குன்றி. (வைத்தியபரி.)

பலசந்தமாலை-பொருட். நிகண்டு. பப்பத்துச்செய்யுள் ஒவ்வொருசந்தமாகநூறுசெய்யுட் கூறுவது. பதிற்றுப்பத்தந்தாதி யெனினுமாம்.

பலசாடவம்—மாதளை. (வைத்தியபரி.)

பலசாலி—பலமுள்ளோன். (வழக்.)

பலசிரேட்டம்—மாமரம். (வைத்தியபரி.)

பலண்டு — 1. வெங்காயம். (தைலவ.) 2. வெள்ளைப்பூண்டு. (வி-ணி.)

**பலண்டுறுகபாடாணம்** – விளைவுபாஷாண மூப்பத்திரண்டினொன்று. (வைத்தியபரி.)

**பலண்டுறுகம்** — பலண்டுறுகபாஷாணம்.

**பலத்தல்**—வன்மையாதல். (வழக்.)

**பலத்தியம்**— **பலத்திரயம்**— } திரிபலை. (வைத்தியபரி.)

**பலதூசு**—புளியாரை. (வைத்தியபரி.)

**பலதேவன்** — பலபத்திரன். (உ-ம்.) "பலதேவன்-சுட்டியப்புனற்பழிச்சியேதுவாரகைத் தொல்பதியிடஞ்செல்வான்" (சேதுபு. இலக்குமி. உக.)

**பலப்படல்** — 1. சூலாதல். 2 திரப்படல். 3. பயன்படல். (1, 2, 3-வழக்.)

**பலப்பல** — பலபல. (நன்னூ. உயிரீற்று. உ0. உரை.)

**பலப்பித்தல்**—பலப்படுத்தல். (வழக்.)

**பலப்பிரமதநர்**—சூரியமூர்த்திக்கு ஈஸ்பரராகிய உக்கிரர் இவர்பாசத்தைநீக்கு மீஸ்பரர். (சி-வி. ஞானப். ச. உரை.)

**பலப்பிரமதநி** — 1. சாந்திகலையிற் சுத்தவித்தியாதத்துவத்திலிருக்கும் ஒன்பது புவநங்களுளொன்று. (சி-வி.கிரி.உக.உரை.) 2 பலப்பிரமதநருடையசத்தி. (சி-வி. ஞாந. ச.உரை.)

**பலப்பிரேதம்**—திப்பிலி. (வைத்தியபரி.)

**பலபடப்புனைவணி**—ஓரலங்காரம்; அஃது: ஒருபொருளிற்பலரும் பலதருமங்களால் பொருள்களை ஆரோபித்தலும் ஒருவரே ஒருபொருளில் விடயபேதங்களால் பல பொருள்களை யாரோபித்தலுமாம். [வ-று.] "ஆரணங்காணென்பர்-திருமகோ முகம்" எனவும், வில்லிற்குவிசயன்கல்விக்குச்சேடன்எனவும்வரும்" (வழக்.)

**பலபண்டம்**—1. பண்ணியம். (சூ. நிக. சு: சுஉ.) 2. பலபொருள்.

**பலபத்திரன்**—பலதேவன். (உ-ம்.) "காழுலக்கைகொள்கைப்பலபத்திரன்"(சேதுபு.இலக்குமி. ரு.)

**பலபந்தம்**—வலோற்காரம். (வழக்.)

**பலபல**—பற்பல. (நன்னூ. உரையீற்று. உ0. உரை.)

**பலபலெனல்**—ஒலிக்குறிப்பு. (வழக்.)

**பலபாண்டம்**—அரிதாரம். (வைத்தியபரி.)

**பலபூரகம்**— **பலபூரம்**— } மாதுளை. (வைத்தியபரி.)

**பலபெயர்த்திரிசொல்** – செந்தமிழ்நிலத்து மொழியாகிக் கற்றோர்க்குமாத்திரம் பொருள் விளக்கி யொருபொருளைக் குறித்துவரும் பலபெயர்ச்சொல். [வ-று.] "கிள்ளை,சுகம்,தத்தை என்பன, கிளி என்னும் ஒருபொருள் குறித்த பலபெயர்த்திரிசொல். (நன். உளஉ. உரை.)

**பலபொருட்சொற்றொடரணி** — ஓரலங்காரம்; அது: பலபொருள்களைத் தருதற்குரிய சொற்களைப் புணர்த்துக்கூறுதல்.

**பலபொருள்குறித்தஒருவினைத்திரிசொல்**—செந்தமிழ்நிலத்துமொழியாகிச் செய்யுட்கேயுரியதாய்க் கற்றோர்க்குமாத்திரம் பொருள்விளக்கிப்பலபொருட்குமொரு வினைச்சொல்.(வ-று.) "வரைந்தான்என்பதுநீக்கினான், கொண்டான் என்னும்பலபொருள்குறித்தஒரு வினைத் திரிசொல்" (நன். உளஉ. உரை.)

**பலபொருள்குறித்தஒரிடைத்திரிசொல்** — செந்தமிழ்நிலத்துமொழியாய்ச்செய்யுட்கேயுரியதாய்க்கற்றோர்க்குமாத்திரம்பொருள்விளக்கிப் பலபொருட்குமோரிடைச்சொல்.[வ-று.] "கொல்என்பது,ஐயமும்அசைநிலையுமாகியபல பொருள்குறித்த ஒரிடைத்திரிசொல்" (நன். உளஉ. உரை.)

**பலபொருள்குறித்தஒருரித்திரிசொல்**–அரிதுணர்பொருளாய்ப் பலபொருட்குமோருரிச்சொல். [வ-று.] "கடிஎன்பது, காப்பு, கூர்மை, அச்சம், கரிப்பு, விளக்கம், சிறப்பு, மணம் மூதலிய பலபொருள்குறித்த ஒருரித்திரிசொல்" (நன். உளஉ. உரை.)

**பலபொருளுவமை**—ஒருபொருட்குப் பலவுவமையையெடுத்துக்காட்டுவது. [வ-று.] "வேலுஞ்சேலும்போலும்விழி" (தண்டியல. ௩0. உரை.)

**பலபொருளொருசொல்** — பல அருத்தங்கொள்ளுஞ்சொல். (உ-ம்) "பகவனேயீசன்மாயோன்" (சூ. நிக. கக. சுகரவெ. க.)

**பலம்** — 1. ஆதாயம். (வழக்.) 2. காய். 3. கிழங்கு. 4. சேரங்கொட்டை. (வைத்தியபரி) 5. சேனை. 6. நிறையளவினொன்று. (பிங்கல. ௬ளசு௬) 7. பயன். (உ-ம்.) "பலமருந்தற்கங்கோரங்கமேயும்" (கொலைமறு. ச) 8. பழம். 9. வலிமை. 10. வெட்பாலை. (தைலதைலவ. ககஉ.) (2, 3, 5, 7, 8, 9-சூ. நிக. கக: லகரவெ. ச.)

**பலம்பலா**—சிற்றுமுட்டி. (வைத்தியபரி.)

**பலம்பழம்**—சேங்கொட்டை. (வைத்தியபரிபா.)

**பலமிலாமரம்** — அவகேசியென்று பெயர் கூறுவர். (சூடாமணிநிகண்டில்.)

**பலமை**—குன்றிமணி. (வைத்தியபரி.)

**பலர்பால்** — ஆண்பன்மையையும் பெண்பன்மையையுமாகிய இருவர்பாற்கும் பொதுப்பன்மையுங்காட்டிநிற்பது. (நன்னூ. வினையியல். எ: உரை.)

பலவறிசொல்—1. பெருஞ்சொல். (சூ.நிக. கo: க.) 2. உயர்திணைப்பன்மைச்சொல் (நன்னூ. வினையி. அ.) 3 பிரசித்தவார்த்தை. (வழக்.)

பலராமன்—பலபத்திரன். (வழக்.)

பலலோத்திரம்–வெள்ளிலோத்திரம். (வைத்தியபரி.)

பலலம்—பிண்ணாக்கு. (வைத்தியபரி.)

பலவத்தர்–பரிசமாத்திராதத்துவத்திருக்குமோருருத்திரர். (வி-ணி.)

பலவத்து—பலத்தையுடையது. (சி.சி.உo: சo. சிவாக்.)

பலவந்தம்—பலபந்தம். (வழக்.)

பலவயிற்போலியுவமை—ஒரு வாக்கியப்பொருளினாலே மற்றைவாக்கியப் பொருளுவமிக்கப்படுவதாய்ப் பலவிடங்களிலேயுவமவுருபு வெளிப்பட்டுநிற்கவருவது. (தண்டி. ௩o. உரை.)

பலவறிசொல்—அ, ஆ, வ-எனவரும்பிறுதியையுடைய அக்கூற்றாமூன்றுசொல். (உ-ம்.) "அ,ஆ,வ,எனவரூஉமிறுதி - யப்பான்மூன்றே பலவறிசொல்லே" (தொல். சொல். கூ.) [பலவற்றையறிதற்கு காரணமாகியசொல்என்பது.]

பலவன்—ஒருமருந்துப்பூண்டு; அது: வெடிபலவன், பேய்ப்பலவன் என இருவகைத்து. (வைத்தியபரி.)

பலவான்—பலசாலி (வழக்.)

பலவிகாரணர் — சந்திரமூர்த்திக்கு ஈஸ்வராகிய மகாதேவர். (சி-லி. ஞாந. ச. உரை.)

பலவிகரணி–1. சாந்திகலையிற் சுத்தவித்தியாதத்துவத்திருக்கும் ஒன்பது புவனங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.) 2. பலவிகரணரதுசத்தி. (ஞாந. ச. உரை.) [பலத்தைவிசேஷமாய்ச்செய்வது என்பது பொருள்.]

பலவிநச்சகம்–பலாமரம். (வைத்தியபரி.)

பலவின்கூட்டத்தற்கிழமை—பலைகளாதொகுதியென்றாற்போல்வரும் பலபொருட்கூட்டத்தற்கிழமை. (நன். ௩oo. உரை.)

பலவின்பால்—அஃறிணைப்பன்மைப்பால். (நன். உஅo. உரை.)

பலவினீட்டம்-பலபொருட்கூட்டம்.(உ-ம்.) "ஒன்றன்கூட்டம்பலவின் கூட்டம்" (நன். ௩oo.)

பலவினைச்சிலேடை — சிலேடையணியுளொன்று; அது: பலவினைபற்றிவருவது. (தண்டி. எசு. உரை.)

பலவினைத்திரிசொல் — செந்தமிழ்நிலத்துமொழியாய்க் கற்றோர்க்குமாத்திரம் பொருள் விளக்கி ஒருபொருள்குறித்த பலசொல்லாய் வரும்வினைச்சொல். [வ-று.]"படர்ந்தான்சென்றான்என்பனபோயினானென்னும் ஒருபொருள்குறித்தபலவினைத்திரிசொல்(நன்.உஎஉ.உரை)

பலவு—பலாமரம். (உ-ம்.) "பாடலநெடும்பலவுபைங்கமுகு" (திருவாத.திருப்பெரு.கஉ.)

பலவுறுதிருமணி—பலவிலைபெற்ற அழகிய மாணிக்கம். (மலைபடு. ருகசு.)

பலன்—1. இந்திரனாற்கொல்லப்பட்டவோரிராட்சதன். 2. இலாபம். (பிங்கல. களகூ௩.) 3. ஈரவெண்காயம். (வைத்தியபரி.) 4. சதருத்திரரிலே வருணதிக்கினிருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி.) 5. பலராமன். (உ-ம்.) "என்றப்பலற்குக்கடல்வண்ணனியம்பினனே" (பாரத. அருச்சுநன்றீர். அo.) 6. பழம்.(உ-ம்.) "செம்பொற்கிரியைத்தனிவலம்வரவரநந்தப்பலனைக்கரிமுகன்வசமருளும்பொற்பதனாலே" (திருப்பு. கருo.) [ணகரம்-போலி.] 7. பிரயோசநம். (வழக்.)

பலா—1. ஒருமரம்; அது: வருக்கைப்பலா, ஈரப்பலா, சிறுபலாவெனப் பலவகைப்படும். (உ-ம்.) "பலாமாவைப்பாதிரியைப்பார்"(தனிப்பா. .) 2. சிற்றாமுட்டி. (உ-ம்.) "அசுவகந்திபலாலாட்சை" (தைல. தைலவ. உசு.)

பலாகாரம்—பழமுதலியபோசநம். (வழக்.)

பலாங்கம்—ஒருமீன். ஒருகுழூஉக்குறிபோலும்.

பலாசம்—1. இலை. (பிங்கல. உஅoச.) 2. ஈரப்பலா. (பிங்கல. உoஎரு.) 3. பச்சைநிறம். அம்-சாரியை. (பிங்கல. ௩எகச.) 4. புரசு. (உ-ம்.) "பலாசக்கோல்கையுந்தாங்கி" (திருவிளை. நகர. அ௩.) 5. புனமுருக்கு. 6. முருங்கை. (5, 6-வைத்தியபரி.)

பலாசாக்கியம்—பெருங்காயம். (வைத்தியபரிபா.)

பலாசு—புனமுருக்கு (சூ. நிக. ச: உச.)

பலாண்டு—ஈரவெங்காயம். (வைத்தியபரி.)

பலாதம்— } பூனைக்காலி. (வைத்தியபரி.)
பலாதவம்– }

பலாதிக்கம்—அதிக்கமான பலனுடையது. (சி. சி. அ: கக. மறை.)

பலாநீதம்—மூங்கில். (வைத்தியபரி.)

பலாபலம்—நயநட்டம். (வழக்.)

பலாபலன்—பலாபலம். (வழக்.)

பலாமடக்குத்தைலம்—ஒருவகைத்தைலம். இதனிலக்கணம் (தைல. தைலவ. உரு, உசு-ஆம் கவிகளிற்பார்.)

பலார்கம்—பிரயோசநத்துக்குரியது.(சி.சி. அ: ரு. ஞாந.)

பலார்த்தம்–அரைப்பலம்.(தைல.தைலவ.)

பலார்த்தி—பலத்தில் விருப்பு. (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

பலாரேனல்—விடியற்குறிப்பு. (வழக்.)

பலாலம்—வைக்கோல். (உ-ம்.) "நெற்பத ரப்பலாலத்திற்பலன்றரும்" (சங்கற்ப. நிராகர ணம்.)

பலாற்காரம்—வலோற்காரம். (வழக்.)

பலி—1. காகம். 2. திருச்சமதமுநிவரின் கோபாக்கினியிற்றோன்றினவன்; இவன்: விநா யகப்பெருமானருளினாலே சுகிலம், சுபிலம், சுவிர்த்தியென்னும் பொன், வெள்ளி, இரும்பு என்பவற்றாலாய கோட்டைகளைப்பெற்றானென் றும், அவற்றுள் சுகிலத்தை, வச்சிரதமிட்டிரன் என்னுங்குமாரனுக்கும் சுபிலத்தை வீமகாயனென்னும் புத்திரனுக்கும் சுவிர்த்தியைக் காளகூடனென்னும் குமாரனுக்கும் கொடுத்துத் திரிலோகங்களிலும் முறையே வசிக்க வைத்தானென்றும் அவர்களம்மதில்களோடெழுந்துதிரிந்து பகைவரையழித்துவந்தனரென்றும் பார்க்கவபுராணஞ்சொல்லும். (கூர்மபு. தக்கன்வமி. சஅ. உரை.) 3. சாம்பல். (சூ. நிகண்டில் வெண்பலியென்றார். அடைமொழியை நீக்கினர்போலும். 4. பலிப்பது. 5 பிச்சை. (உ-ம்.) "துறவுடைந்தோர்க்கருந்துபலி" (திருவிளை. மெய்க்கா. கம.) 6. பூசை. (உ-ம்.) "பாரினடச்கும்பலிநடவாப்பழஞ்சேதிமத்தில்" (சேதுபு. வேதாளவர. உகூ.) 7. போசநம். (உ-ம்.) "சிஞ்சினி"பார். (1, 3 பிங்கல. கூஎகூடு.)

பலிகை—பிண்ணாக்கு. (வைத்தியபரி.)

பலிச்சக்கரவர்த்தி—மாவலியென்றுபெயர். (வழக்.)

பலிசை—இலாபம். (புறப்பொருள்வெ.)

பலித்தல்—1. இலாபம். (பிங்கல. கஎகூகூ.) 2. பலத்தைக்கொடுத்தல். (உ-ம்.) "வயலிடுந் தழையுந்தின்னுமருந்தும்பின்பலிக்குமாபோல்" (சி. சி. உ: கஎ.) 3. வாய்த்தல். (உ-ம்.) "யாண்டும்பலித்திடாப்பணியுமுண்டோ" (சேதுபு. வேதாள. ருக.)

பலிதம்—1. பலிப்பது. (வழக்குண்டு.) 2. மயிர்நரை. (உ-ம்.) "பலிதரோகலட்சணம்" (சீவரட். உகூச.)

பலிநம்-காய்த்திருக்குமரம். (சூ.நிக.ச:ருஉ.)

பலிப்பிரியம்—நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப் புவநங்களு ளொன்று; அது: ஈசான திக்கிலிருக்கும் பத்துப் புவநங்களுளொன்று. (சி-லி.கிரியா.உச.உ உரை.)

பலிப்பிரியன்—சதருத்திரரில் ஈசானதிக்கிலிருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ௦.)

பலிப்பு—பலித்தல். (உ-ம்.) "பக்கரோக்கிப் பலிப்பறிந்தெங்கணும் மிக்கசெந்நெலும்வெண்ணெலும் மீத்தினார்" (அரிச்ச. நாட்டு. கூஅ.)

பலிபீடம்—பலிசெலுத்தும்பீடம். (உ-ம்.) "பலிபீடத்தினுமைபாகனுண்டிகைக் கொண்டுண்பானன்றே" (சிவரக. பலிபூட. கக.)

பலிபுட்டம்—காக்கை. (பிங்கல. உசுகஎ.)

பலியரி—சிற்றாமுட்டி. (வைத்தியபரி.)

பலிநி—1. காய்த்திருக்குமரம். 2. கோங்கு. 3. ஞாழல். (பிங்கல. உசுஅஉ.) 4. நாணற்புது. (உ-ம்.) "கர்ப்பூரம்"பார். 5. மிளகு. (தைல. தைலவ.) (1, 2-வைத்தியபரி.)

பலுகல்—
பலுதுதல்— } பெருகுதல். உகாஞ்சாரியை.

பலை—1. சிற்றாமுட்டி. (உ-ம்.) "எமபுட்பி" பார். (தைல. பாயிர. உச.) 2. வெப்பம் பசிதாகத்தையோட்டுமென்றுசொல்லப்படு மொருமந்திரம்; இது: விசுவாமித்திரரால் தசரதராமருக்கு மிலக்குவற்கும் உபதேசிக்கப்பட்டுள்ளது. (உ-ம்.) "அதிபலையுஞ்சேர்த்துஇரண்டு முபதேசித்தாரென்பர்" (இராமா. தாடகைவதைப். கஅ.)

பலையுறுதைலம் — சிற்றாமுட்டித்தைலம்; இதனிலக்கணம்: (தைல. தைலவ. உஎ-ல் காண்க.)

பலோத்தமை—
பலோர்த்தனம்— } கொடிமுந்திரிப் பழம். (தைல. தைலவ.)

பலோநகம்—பாதிரி. (வைத்தியபரி.)

பலோற்காரம்—வலோற்காரம். (வழக்.)

பவ்வம் — பௌவம், கடல். (உ-ம்.) "பவ்வவுலகத்தவர்பழிக்கவுரையென்றான்" (பிரமோ: சீமந்தனி. ருச.) (போலி.)

பவ்வியம்—பக்குவம். (சிந்தா.)

பவ்வியை — யானைத்திப்பிலி. (வைத்தியபரி.)

பவ்வியன்—கோமேதகத்தீவுக்கதிபதி. (தணி. போ.)

பவ—வியாழவட்டமாகிய அறுபதவருடங்களிலே எட்டாம் வருடம். (வருஷாதிநூல்.)

பவணந்தி — நன்னூலென்னு மிலக்கணநூல்செய்த ஒராசிரியன். (உ-ம்.) "பவணந்தியென்னுநாமத்திருந்தவத்தோனே" (நன். சிறப்புப்பா.)

பவணம்—பவணலோகம். (உ-ம்.) "பத்தாம் பவணதோரெழுகோடியெண்ணெண் பாணிலக்கம்" (திருநூற். கூஉ.) [இது பத்தடுக்காயுள்ளதென்றும் எழுகோடியே எழுபத்திரண்டு நூறாயிரஞ் சினாலாயங்களிதிலுள்ளனவென்றுங்கூறுவர்.] சிந்தாமணியில் நாகலோகமென்றார்.

**பவணர்**—அருகசமையத்தவராற் சொல்லப் படும் ஒரு தேவர். (திருநூற். ருக. உரை.)

**பவணை**—கழுகு. (சூ. நிக. கூ: ருசு.)

**பவநம்**—1. அரசர்கோயில். (பிங்கல.சுருஉ) 2. இடம். (தைல. பாயிரம். கூ.) 3. இராசி. (உ-ம்.) "சங்கரனூர்திநாமந்தங்கியபவநந்தன னில்" (சேதுபு. இராமனரு. அஅ.) 4. காற்று. 5. நாகலோகம். (திவாகரம். ரு: கூ.) 6. பூனை. (பிங்கல. உருகஅ.) 7. பூமி. சூ. நிக. ரு: எ. 8. வாயு. (தைல. பாயிர. கூ.) 9. வீடு. (பிங்கல. சுகசு.)

**பவநவாய்**—பவநவாசல். (வழக்.)

**பவநன்**—காற்று. (உ-ம்.) "பன்னிருகரத்து வள்ளல்பவநனைக்குறிப்பானோக்கி" (கந்தபு.சூர பன்மன்வதை. சரு)

**பவநாசநம்**—பாம்பு. (உ-ம்.) "உருப்பவநா சநவாய்த்தேரை" (மறைசை. சுகூ.)

**பவநாசன்**—கடவுள். (வழக்.)

**பவபூதி**—ஒருவடமொழிப்புலவன். (வழக்.)

**பவம்**— 1. ஒரு கரணம்; இது: பூர்வபக்கப் பிரதமைப்பிற்கூறும் பூர்வபக்கபஞ்சமி முற்கூறும் பூர்வபக்க அட்டமிபிற்கூறும் பூர்வபக்கத் துவாதசிமுற்கூறும் பௌரணை முற்கூறும். அபரபக்கச்சதுர்த்தி முற்கூறும் அபரபக்கச்சத் தமி பிற்கூறும் அபரபக்க ஏகாதசிமுற்கூறும். (விதாந. பஞ்சாங்க. உக.) 2. பாவம். (உ-ம்.) "சொல்லரும்பவமலைதொலைந்தது" (சிவரக. மேரு. ரு.) 3. பிறப்பு. (உ-ம்.) "பவக்கருமங் குலத்தமெய்யன்பர்க்குவீடு" (ம-தி. சஅ.) 4. மேன்மை.

**பவமாநம்**—ஒருமந்திரம். (உ-ம்.) "நண்ணு சீருருத்திரத்தைநமகமார்சமகந்தன்னை பண்ண மர்பவமாநத்தைப்பஞ்சசாந்தியைமுன்னுகை-வெ ண்ணுமாமந்திரங்க்ளியம்புவானிரயமெய்தான்" (சேதுபு. இராமநாத. சஎ.)

**பவமாநன்** — 1. தீக்கடைகோலினின்றுந் தோன்றுமக்கினி. (உ-ம்.) "அரணிதனிற்பிறந்த வழல்பவமாநன்" (கூர்மபு.முநிவ. கo.) 2. வாயு. (உ-ம்.) "பவமாநநாட்டின்வரம்பிலாவரிசைமே வும்" (சேதுபு. இராமநாத. ருகூ.)

**பவர்**—1. அட்டமூர்த்திகளிலொருவர். (கந் தபு. கணங்கள்செல். கக.) 2. ஆர். (உ-ம்.) "பவரிற்செறியகிலராத்துருளும்"(பாரத.திரௌ பதி. சஎ.) 3. கொடி. (உ-ம்.) "நெடுங்கொடி யுழிஞைப்பவரொடுமிடைந்து" (புறநா. எசு.) 4. சலமூர்த்தியீஸ்வராகிய சேட்டர். (சி-வி. ஞாந. ச. உரை.)

**பவர்க்கம்**—நரகம். (உ-ம்.) "பவர்க்கமேவி லா" (சேதுபு. கவிதீர். கூ.)

**பவநு** — சூரியனது துவாதசராக்ஷதர்களா கிய மெய்காவலருள் ஒருவர். (வி-ணி. உசடு.)

**பவளக்காலி**—1. ஒரு புள். 2. ஒரு பூடு.

**பவளக்குண்டு**—கடுக்காய். (வைத்தியபரி.)

**பவளக்குறிஞ்சி**-ஒருபூண்டு.(வைத்தியபரி.)

**பவளச்சோளம்**—ஒரு சோளம். (வழக்.)

**பவளநீர்**—குருதி. (சிந். முத். அஎ.)

**பவளநெடுங்குறிஞ்சியோன்** — வயிரவன். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பவளப்புற்றுப்பாடாணம்**—ஓர்வகைப் பா டாணம். (வைத்தியபரி.)

**பவளப்பூண்டு**—ஒருபூண்டு.(வைத்தியபரி.)

**பவளப்பூல்** —பவளப்பூலா.

**பவளப்பூலா**—ஒருசெடி. (வைத்தியபரி.)

**பவளம்**-நவமணியிலொன்று (உ-ம்.)"பவள மால்வரையினிலவெறிப்பதுபோல்" (திருவாத. காப்பு.)

**பவளமநோசிலை**—ஒருசரக்கு. (வழக்.)

**பவளமல்லிகை** — ஒருமல்லிகை. (வைத் தியபரி.)

**பவளவங்காரவாச்சி**—ஒருபூண்டு. (வைத் தியபரி.)

**பவன்**—1. உருத்திரனுடைய வியூகர்மூவரி லொருவர். (சேதுபு. சங்கரதீர். கக: உரை.) 2. சிவன். (உ-ம்.) "பவன்பிரமசாரியாகும்" (சி.சி. உ: எஎ.) [உற்பத்திகளைப்பண்ணுவிக்கையால் வந்தபெயர்.] ?. மகேசுரனுடைய அழுகையி லுதித்த எழுவரிலொருவர். (கூர்மபு. அட்டமூ. கஉ,கூ. உரை.) [இவருக்குவடிவம்நீரென்ப.]

**பவனி**—உலாப்போதல். (உ-ம்.)"பள்ளி"பார்.

**பவனிக்காதல்** – பவனிவந்ததலைமகன்மேற் கொண்ட காமத்தாலவன் சிறப்பைப் பிறரோ டுரைத்துத்தலைவிவருந்துவதாகக் கூறுவதொரு பிரபந்தம். (தொல். உஅகூ. உரை.)

**பவாநி** — 1. காவிரியாற்றின் கிளைநதி. 2. கோயம்புத்தூர்க்கருகில் ஒரூர். 3. துர்க்கை. (உ-ம்.)'பவாநியடிசிந்தனையில்வந்தனைசெய்தே' (சிவரக. தாருக. கஉ.) 4. பார்வதி. (உ-ம்.) "பவாநிமுதலாப்புகலுந்தனிநாமங்கள்செப்பி" (சிவரக. கணபதியுடன்கடவு. எ.)

**பவி** —நீர். (வைத்தியபரி.)

**பவிடியம்**—1. எதிர்காலம். 2. சிவபுராணங் கள் பத்திலொன்று; அது: சம்ஸ்கிருதபாஷை யிலே முப்பத்தோராயிரங் கிரந்தமுடையதாய் ப்பிரமாவானவர் சூரியனுடைய மான்மியத்தை மநுவுக்குரைத்தபின்னர் அவர்மநுவுக்கு அகோ ரகர்ப்பத்திலே உலகமுளதாமுறைமையையும் சிருட்டிபேதமுதலியவைகளையும் உரைத்த தாக வுணர்த்துவது. (கந். நவ. உரு.)

**பவித்திரகம்**-1. அத்திமரம். 2. அரசமரம். 3. தருப்பைப்புல். 4. நெய். (1, 2, 3, 4-வைத்தியபரி.)

**பவித்திரம்** — 1. சிலசமயங்களில் நாலாம் விரலிலணிந்துகொள்ளுந்தருப்பைப்புல் மோதிரம் 2. சுத்தி. (உ-ம்.) "பழுதுபுகுந்தத்தீரப்பவித்திரஞ்செயல்புரிந்து" (பெரியபு. கண்ணப்ப. கருகூ.) 3. சுத்ததத்துவம். (சி. சி. உ: எ௦. ஞாநப்.) 4. தேன். 5. நெய். 6. பாவத்தைநீக்கிமோட்சத்தைத்தருவது. (உ-ம்.) "பன்னரும்புனிதமானபவித்திரமாகிநிற்கும்" (திருவிளை. தீர்த்தவி. உக.) 7. பூணூல். (உ - ம்.) "பவித்திரோற்சவம்" 8. யாகத்திலேபிரயோகிக்கப்படும் ஒரு புல்லு. (4,5,8-வைத்தியபரி.)

**பவித்திரமோதிரம்**—பவித்திரமுடிச்சாய்ச்செய்த மோதிரம். (வழக்.)

**பவித்திரவான்**— } சுத்தியுள்ளவன். (வழக்.)
**பவித்திரன்**— }

**பவித்திராபவித்திரம்**—சுத்தாசுத்தம். (சி. சி. உ: எ௦. ஞாந )

**பவித்திரி** — 1. சுத்தன். இ-விகுதி. 2. தருப்பை. (வைத்தியபரி.)

**பவித்திரிகணம்**—நெய். (வைத்தியபரி.)

**பவித்திரை**—தூய்மையுள்ளவள். (திருவிளை. மலயத்துவச. கஎ.)

**பவிதம்**—மிளகு. (வைத்தியபரி.)

**பவிதுர்மகதி**—இருக்கக்கூடும். (சி. சி. ௬: கூ. சிவாக்.)

**பவினி**—நாணல். (வைத்தியபரி.)

**பவுட்கரம்** — ஓராகமம். இதற்கு உமாபதி சிவாசாரியர் உரைசெய்திருக்கிறார் துறைசையாதீனத்திலிருக்கிறது.

**பவுசு**—வாழ்வு. (வழக்.)

**பவுண்டரம்** — வீமன்கையிற்சங்கு.(பாரதத்திற்காண்க.)

**பவுண்டரிகம்**—ஓர்யாகம். (உ-ம்.)"பரிமேதமாயிரத்தோடயுதபவுண்டரிகத்தாக்கம்" (சேதுபு. துராசார. கூஅ.)

**பவுத்திரன்**—பௌத்திரன். (உ-ம்.) "புத்திரன்சேயானமுறையாற்பவுத்திரனென்றமறையும்பெயருமடைந்துள்ளான்" (சேதுபு. முத்தீர்த்த. கசு.)

**பவுத்துவம்**—மரகதம். (வைத்தியபரி.

**பவுதிகப்பிரமசாரி**—கந்நிகா கல்யாணகாலமட்டும் விரதம்நியமித்துத் துறவியாயிருக்கிறவன். (சி. சி. அ: ரு. ஞாநப்.)

**பவுதிகம்**—பௌதிகம், பூதவிகாரம.

**பவுதிகீதீட்சை** — ஒரு தீட்சை. (சி. சி. அ: ௬. ஞாநப்.)

**பவுந்திரம்** — பகந்திரம்; அது: அண்டப்பவுந்திரம், கொடிப்பவுந்திரம், மூலப்பவுந்திரமெனப் பலவகை. (வைத்தியநூலிலறிக.)

**பவுர்ணிமி**—பவுரணை. (வழக்.)

**பவுரணை**—பௌரணை, உவா.

**பவுரம்**—பவுரணை. (உ-ம்.) "பவுரத்திற்பகனல்லகோள்மூர்த்தம்பெறவசந்தங்கொள்க" (விதாந. தெய்வ. எ.) [பவுரணைஎன்பது பவுரமென விகாரமாயிற்று.]

**பவுரி**—கூத்தின்விகற்பம். (உ-ம்.) "பதியாயிருந்ததேகப்பவுரிகுலையாமலே" (தாயு. சித்தர்க. ௬.)

**பவுரிசம்**--வேஷம். (வழக்.)

**பவேசம்** — வித்தியாகலையிற் புருடதத்துவத்திலிருக்கும் ஆறு புவநங்களுளொன்று. (சி வி. கிரியா. உக. உரை.)

**பவோற்பவன்**—பன்னோருருத்திரரிலொருவன். (வழக்.)

**பழக்கம்** — 1. அறிமுகமாதல். 2. பயிற்சி. பழக்கங்கொடியதுபார் என்பது ஒழிவிலொடுக்கம். 3. வழக்கம். (1, 3-வழக்.)

**பழக்குதல்**-1 பயிற்றல். 2. வழக்கஞ்செய்தல். (1, 2-வழக்.)

**பழகல்**—பழகுதல். (சூ. நிக. க: சக.)

**பழகுதல்**-1. பயிலல். 2. வழங்குதல்.(1, 2-வழக்.)

**பழங்கண்**—1. இளைப்பு. (சூ. நிக. க: சுக.) 2. ஒலி. (சூ. நிக. கக: றகரவெ. கச.) 3. துன்பம். (உ-ம்.)"முநிவரிமையவர்தம்பழங்கணீங்க" (சிவராத். கடவுள். அ.)

**பழங்குடி**—தொன்றுதொட்டுமேம்பட்டு வருகின்றகுடியின்கட்பிறந்தவர்.(உ-ம்.) "வழங்குவதுள்வீழ்ந்தக்கண்ணும்பழங்குடி—பண்பிற்றலைப்பிரிதலின்று" (வள். கூருரு.)

**பழஞ்சரக்கு** — 1. பழையமருந்துச்சரக்கு. (வழக்.) 2. பிராரத்தவினை. (உ - ம்.) "கூடற்பதியிலேபுகுந்தளவில்வறிதேதீயபழஞ்சரக்கும் புதுச்சரக்கும்பணியற்றேனே" (மதுரைப்பதிற்று. சகூ.) குறிப்பு.

**பழஞ்சொல்**—பழமொழி. (பிங்கல. எ: உ௦உரு.)

**பழப்பாசம்**—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)

**பழப்பேசி**—செப்புநெரிஞ்சில். (வைத்தியபரிபா.)

**பழம்**-1. கனி. (உ-ம்.)"பழச்சுவையெனவே" (திருவாச. திருப்போற். கரு.) 2. தேசிப்பழம். (வைத்தியபரி.)

**பழம்பஞ்சுரம்**—ஒருபண். (பிங்கல. கஙககக.)

**பழம்பாசம்**—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)

பழம்பாசி—ஒருபூடு. (வைத்தியபரி.)
பழம்பேசி — செப்புநெருஞ்சில். (வைத்தியபரி.)
பழம்பொருள் —1. கடவுள். (உ-ம்.) "மூப்பொருளாம்பழம்பொருள்" (சிவரக. கணபதி வந்தனை. உ௫.) 2. பழயபொருள். (வழக்.) 3. புதையல்.
பழமலை—விருத்தாசலம். (சிவரகசி. நந்திகே. கக.) விருத்தாசலபுராணத்திலுமறிக.
பழமுண்ணிப்பாலை—ஒரு மரம்.
பழமை — 1. பூருவம். (பிங்கல. உஉ0அ.) 2. மரபுபற்றிவருகை. (வழக்.)
பழமொழி — 1. அறிவாற்சிறந்து காலங்கண்டு பிரபஞ்சஇயற்கையைச் சாட்சாத்காரமாயுணர்ந்தபெரியோர்கூறிய ஞானம்நிறைந்தமுதுமொழிகள். (ப-மொ.) 2. ஒரு நீதிநூல்; இது: சங்கமருவியநூல்.
பழவினை—ஊழ்வினை. (நாலடி. தீவினையச். ௩.)
பழனம்—1. பொய்கை. (உ-ம்.) "மலங்குமிளிர்செறிவிற்றளம்புதடிந்திட்ட—பழனவாளைப்பரூஉக்கட்டுணியல்" (புறநா. ௬௧.) 2. மருதநிலம். (பிங்கல.௫கசக.) 3. வயல்.(உ-ம்.) "இச்சொற்பழனப்பாஞ்சாலர்க்கிறைவன்புதல்வனியம்புதல்கேட்டு"(பாரத.திரௌபதி. ௬உ.)
பழனி—திருவாவினன்குடி. (வழக்.)
பழி—1. குற்றம். (பிங்கல. கஅ௬க.) 2. தீவினை. (உ-ம்.) "ஒருவற்குபற்பாலதோரும்பழி" (வள். ௪0.) 3. நிந்தை. (உ-ம்.)"பாபமும்பழியும்பூண்டுபெடிக்கொருபொறையாய்நின்றூர்" (கந்தபு. ததீசியுத். ககஅ.) 4. தெரிநிலைவினைப்பகுதி.
பழிகாரன்—பழிவாங்குவோன். (வழக்.)
பழிகிடத்தல்—யாதொன்றுபெறுவதற்குப் பட்டினிகிடத்தல். (வழக்.)
பழிகூறல்—தூற்றல்; அது: மும்மொழியினொன்று. (சூ. நிக. க௨: எ.)
பழிச்சல்—
பழிச்சுதல்— } துதித்தல். (பிங்கல.உ00எ.)
பழிச்சொல்—பழிமொழி. (வழக்.)
பழிசை—பழித்தலையுடையது. (கலி. க0௬. உரை.)
பழித்தல்—நிந்தித்தல். (சூ. நிக. க0: ௪.)
பழிதாரா—பழிக்கப்படாத. (புறநானூ.)
பழிப்பு — 1. குற்றம். (புறப்பொருள்வெ.) 2. நிந்தை. (உ-ம்.) "பழிப்பருநலனும்பண்பும்" (இராமா. உலாவிய. அ.)
பழு—1. ஏணிப்பழு. (வழக்.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பிசாசு. (உ-ம்.) "பழுவும்பாந்தளுமுளப்படப்பிறவும்" (குறிஞ்சிப். உ௫௬.) 4. வ்லா. (சூ. நிக. ௬: ௫உ.) 5. விலாவெலும்பு. (திருவிளை. நாட்டு. ௨௬.)
பழுக்கச்சுடுதல்—பொன்னணியைப்பழுப்பாகக் காய்ச்சல். (ஒரு சூழூஉக்குறி.)
பழுக்காய்—பாக்கு. (திருவிளை. குண்டோதர. ௩.)
பழுத்தல்—1. அடிப்படல். (உ-ம்.) "கொற்பழுத்தெரியும்வேலார்" (சிந்தா. கோவிந்.உஎ.) 2. கனிதல். (உ-ம்.) "எட்டிப்பழுத்தாயினுமாமோவறை"(நல்வழி ) 3. சிவந்திருத்தல்.(உ-ம்.) "பழுக்குமந்தப்பாக்கியத்தோர்படியெடுத்து" (கைவல். .) 4. முதிர்தல். (உ-ம்.) "கொலைபழுத்தொழுகுநேமி" (கூர்மபு. அந்தகா. ரு.) 5. முற்றுப்பெறல். (உ-ம்.) "மற்பழுத்தகள்ளமார்பத்திடங்கொண்டுவைக" (சிந்தா. கோவிந். உஎ.)
பழுது—1. குற்றம். (உ-ம்.) "பழுதில்காவிரிநாட்டின்பரப்பெலாம்" (பெரியபு. திருநாட்டு. க௨.) 2. சிதைவு. (உ-ம்.) "பழுதுறற்கெளிதே" (இராமா. கரவ. அஅ.) 3. பதனழிவு. (வழக்.) 4. பொய். (பிங்கல. கஅஅக.) 5. மிடி. (உ-ம்.) "பழுதின் - நீற்றுவிருப்பிற்போற்றுபுகோக்கி" (பொருந. க௫0, க௫க.)
பழுதை—கயிறு. (பிங்கல. க௫௬க.)
பழுநிய—1. பருவமுதிர்ந்த. (உ-ம்.) "வண்டுபடப்பழுநியதேனார்ந்தாற்றத்து" (மதுரைக். ௬எ௫.) 2. முற்றுப்பெற்ற. (உ-ம்.) "நைவளம்பழுநியபாலைவல்லோன்" (குறிஞ்சி. கசசு.)
பழுப்பு—1. அரிதாரம். (சூ. நிக. ௬: கஅ.) 2. ஒருநிறம். (வழக்.) 3. எண்பு, பழு. (உ-ம்.) "பத்திகுயின்றிட்டபழுப்பேணியிற்பாதம்வைத்து" (கந்தபு. வள்ளியம்மை. ௫0.) 4. பழுத்தல். (பு-தொழிற்பெயர்விகுதி.)
பழுபாகல் — 1. ஒருபாகல். (வழக்.) 2. தும்பை. (மலையக.)
பழுமரம் — 1. ஆலமரம். (உ-ம்.) "இலைத்தலையபழுமரத்தின்மிசை" (திருவிளை. பழியஞ். அ.) 2. பழுத்தமரம். வினைத்தொகை.
பழுவம்—1. காடு. (உ-ம்.) "பழுவநாட்குவளைச்செவ்விக்கண்பனிபரந்து" (இராமா. சூர்ப்பநகை. ௩.) 2. சோலை. (உ-ம்.) "மிடைந்தபழுவத்தொடுவிலங்கலைமருப்பால்" (திருவிளை. மாயப். அ.)
பழைசு—பழையது. (வழக்.)
பழைமை—1. தொன்மை. (சூ.நிக.அ:௪௫.) 2. நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். (வள். அக. அதி.) [காரணப்பெயர் காரியத்திற்காயிற்று.]

**பழையது** — 1. பழமையுள்ளது. 2. பழஞ்சாதம். (1, 2-வழக்.)

**பழையர்**—1. கள்விற்பவர். (உ-ம்.) "பழையர் தம்மனையன்பழநறை" (இராமா. நாட்டுப். ௫௦.)

**பழையன்**—ஒருகுறுநிலமன்னன். (மதுரைக்காஞ்சி. ௫௦௮.)

**பழையோள்**—காடுகாள். (திருமுரு. ௨௫௯.)

**பள்**—1. ஒருசாதி. (வழக்.) 2. பள்ளென்னுமொருபிரபந்தம். முக்கூடற்பள்காண்க. இதனை உழத்திப்பாட்டென்பர்.

**பள்ளச்சி**—
**பள்ளத்தி**— } பட்பெண். (வழக்.)

**பள்ளம்** — 1. குழி. (பிங்கல. ௪௮௮.) 2. தாழ்ந்தநிலம். (உ-ம்.) "பள்ளங்கண்டுவருபுனல்போல்" (திருவிளை. வளையல். ௭.)

**பள்ளர்**—ஒருசாதியார். (வழக்.) இவர் மருதநிலமாக்கள்.)

**பள்ளாடு**—பள்ளையத்தாடு. (வைத்தியபரி.)

**பள்ளி** — 1. இடைச்சேரி. (உ-ம்.) "பண்ணுப்பெயர்த்தன்னகாவும்பள்ளியும்" (மலைபடு. ௪௫௯.) 2. இருப்பிடம். (உ-ம்.) "அறத்துறைவிளங்கியறவோர்பள்ளியும்" (சிலப். ஊர்காண். ௧௧.) 3. ஊர். 4. ஒருசாதி; இது: (சோழதேசவழக்கு.) 5. கோவில். 6. சாலை. (புறநா.) 7. சிற்றூர். 8. நித்திரை. (உ-ம்.) "பாற்கடலிற்பள்ளிகொள்வான்" (கோயிற்பு. பதஞ்சலி. ௨.) 9. பட்பெண். (வழக். உழத்திப்பாட்டிலறிக.) 10. பள்ளிக்கூடம். (பெரியபு. சிறுத்தொண். ௨௨.) 11. மக்கட்படுக்கை. 12. மருதநிலத்தூர். (சூ. நிக. ௫: ௪௪.) 13. முனிவர்வாசம். 14. விலங்குதுயிலிடம். (3, 5, 6, 7, 11, 12, 13, 14-பிங்கல. ௬௮௦௦.)

**பள்ளிக்கணக்கர்**— பள்ளிக்கூடத்தில் நெடுங்கணக்குக் கற்போர். (வழக்.)

**பள்ளிக்கூடம்** — சிறுவர் கல்விபயிலிடம். (வழக்.)

**பள்ளித்தாமம்**—திருப்பள்ளித்தாமம். (பெரியபு. கழற். ௫.) திருக்கோயிலிற்சாத்துமலர்க்குமாலைக்கும்பெயர். பள்ளி - கோயில். தாமம்- மலர், மாலை.

**பள்ளியறை**—சயனவறை. (தேவாலயத்திற்சுவாமி யம்பிகை சயனவறை. வழக்.)

**பள்ளியெழுச்சி** — 1. தெய்வத்தைத் துயிலெழுப்புகை யாகப்பாடும்பதிகம். (திருவாசகம், திருவாய்மொழியிற்காண்க.) 2. நித்திரைவிழித்தெழல்.

**பள்ளிவாசல்**—துலுக்கர்கோயில், ஒருகுழூஉக்குறி.

**பள்ளு**—உழத்திப்பாட்டாகியபிரபந்தம்.

**பள்ளை** — 1. ஆடு. (சூ. நிக. ௩: ௪௪.) 2. பள்ளைமாடு, ஒருசாதியாடு. (பிங்கல. ௨௪௮௭.)

**பள்ளையம்**—சிறுதெய்வங்கட்குப் படைக்கப்பட்ட பலி. (சிலதேசவழக்கு.)

**பளக்த்**—கொப்புளம். (சிவசரு. ௩: இயல். ௩௦.)

**பளகர்**—மூடர். (உ-ம்.) "பருந்திரைகொள்ளமெய்வீழ்வதுகாணும்பளகர்களே" (திருநூற. ௪௦.)

**பளகு**—குற்றம். (உ-ம்.) "பளகறுத்துடையான்கழல்பணிந்திலைபரகதிபுகுவானே" (திருவாச. திருச்சத. ௩௫.)

**பளபளத்தல்**—
**பளபளப்பு**— } ஒளிக்கொள்ளுதல். (வழக்.)

**பளபளெனல்**—ஒளிக்குறிப்பு. (உ-ம்.) "பளபளெனமெய்யையுரப்பாக்கும்" (பதார்த்த. ௧௨௦௨.)

**பளாபளா**—ஓரதிசயக்குறிப்பு. [இந்துஸ்.]

**பளிங்கறை** — பளிங்குப்பாறை. (உ-ம்.) "தண்டலைமருங்கும்பளிங்கறைசூழ் தலங்களினும்" (சேதுபு. திருநாட். ௬.)

**பளிங்கு**—1. கர்ப்பூரம் (சிந்தா.) 2. சுக்கிரன். (சூ. நிக. ௧: ௬௨.) 3. படிகம். (பிங்கல. ௧௨௨௬.)

**பளிச்சுப்பளிச்செனல்**—
**பளிச்செனல்** — } ஒளிக்குறிப்பு: (வழக்.)

**பளிதம்**—1. கருப்பூரம். (உ-ம்.) "மருமிகுந்திடுபளிதகுங்குமம்" (சிவரக. சுகமுனி. ௨௩.) 2. பல்லம்என்னுமோரெண். (சூ. நிக. ௧௧: ளகரவெ. ௭.)

**பளீர்பளீரெனல்**—ஒளிக்குறிப்பு. (வழக்.)

**பளீரிடுதல்**—பளிச்சிடுதல். (வழக்.)

**பளீரெனல்**—ஒளிக்குறிப்பு. (வழக்.)

**பளுவு**—பாரம். [தெலுகு.]

**பற்குநன்**—அருச்சுனன். (உ-ம்.) "பார்த்தனருச்சுனன்கரியோன்விசயன்பாகசாதனி சவ்வியசாசிபற்குனன்பா—ரேத்துதனஞ்சயன் கிரீடிசுவேதவாகனனெனனுநாமம்" (பாரத. அருச்சுனன் தீர். ௪௭.)

**பற்சீவி**—பல்விளக்கி. (சிந்தா.)

**பற்படகம்**—
**பற்படம்** —
**பற்படாகம்**— } ஒருமருந்துப்பூடு. (பதார்த்தகுணசி. ௩௩௭.)

**பற்பணம்**—ஒரு பலம். (தைலவ. அகராதி.)

**பற்பதம்**—மலை. (உ-ம்.) "கடல்போற்குணத்தெம்பற்பதமே" (திருநூற். ௩.)

**பற்பநாபன்**—விஷ்ணு. (சூ. நிக. ௧: ௧௨.)

**பற்பம்**—1. தாமரை. 2. தூள். 3. பதுமபுராணம். (சூ. நிக. ௧௨: ௧௧௩.) 4. விபூதி. (உ-ம்.) "பற்பந்திரிசூலம்" (திருப்பு. ௪௧௧.) (1, 2- சூ. நிக. ௧௧: றகரவெ. ௧௪.)

பற்பல—பலபல. (சூ. நிக. கஉ: ௬௬.)
பற்மராகம் — பதுமராகம். தகரவொற்று நகரவொற்றாக மருவியது.
பற்மாசநம் — பதுமாசநம். (திருமந்திரம். ஆதனம். க.)
பற்மீரகம்—நீருருகை. (வழக்.)
பற்மீகரித்தல்—பற்பமாக்கல். (வழக்.)
பற்றகற்றி — பாத்திரஞ்சுரண்டுங் கருவி. (தைலவ. அகராதி.)
பற்றம்—கற்றை. (சிந்தா.)
பற்றல் — 1. அடுத்தடுத்துச்செய்தல். (பரிபாடல்.) 2. தொடர்தல். (உ-ம்.) "பற்றியபழியினீங்கி" (திருவிளை. மாய. ௬௭.) 3. பிடித்தல். (பிங்கல. உகசுச.)
பற்றலர் — சத்துருக்கள். (உ-ம்.) "பற்றலரைக்கண்டாற்பணிவாரே" (வாக். சு.)
பற்றலியார்—பற்றுதொழிக. (புறநா.)
பற்றவைத்தல்—பொருந்தவைத்தல். (வழக்.) தீபமியற்றிவைத்தல் என்பர்.
பற்றற்றார்—முனிவர். (வழக்.)
பற்றற்றான்—கடவுள். (உ-ம்.) "பற்றுகபற்றற்றான்" (வள். ௬௫௦.) [எல்லாப்பொருளையும் பற்றிநின்றே பற்றற்றவனென்பது.]
பற்றுக்கை — அம்புகட்டுங்கயிறு. (சூ. நிக. எ: க.)
பற்றாசு—கம்மியர் வெள்ளி பொன்முதலிய வைகளை யிணைத்தற்கிடுவதொன்று. இதற்கு ஆசென்றும் பெயர். (நன்னூல்விருத்தியுரை. உயிரீற்று. கஉ: உரை.) (கம்மியர் வழக்கு.)
பற்றார்—பகைவர். (சூ. நிக. உ: ருக.)
பற்றாள்—அடியாள். (பரிபாடல்.)
பற்றாற்றல்—பற்றியவிடம் விடாது நிற்றல். (உ-ம்.) "பற்றாற்றிப்பற்றியார்வெல்வதரண்" (வள. எசஅ.)
பற்றி—1. குறித்து. (உ-ம்.) "அதைப்பற்றி யெனக்கென்னசொன்னான்" (வழக்.) 2. பற்றாசு.
பற்றிரும்பு—அள்ளு. (சூ. நிக. எ: கரு.)
பற்றினர்—உறவினர். (சூ. நிக. உ: ருகூ.)
பற்று—1. அறிதல். (உ-ம்.) "பற்றருசின் மயவம்பரமும்பர்" (கோயிற்பு. திருவிழா. கசு.) 2. அன்பு. (சூ. நிக. அ: ௬௬.) 3. ஆசை; அது: பெற்றதன்மேனிகழுமாசை. (உ-ம்.) "பற்றார் வஞ்செற்றமுதலாக" (சிந்தா. முத்தி. ககூஉ.) 4. இடம். (பரிபாடல்.) 5. ஒட்டு. உனக்கு மெனக்கும் பற்றில்லை. 6. செல்வம். (உ-ம்.) "பற்றற்றகண்ணும்" (வள். ருஉக.) 7. தெரிநிலை வினைப்பகுதி. 8. தொடக்குறுதல். (சி. சி. க: ௬க. ஞாந.) 9. தொடர்ச்சி. 10. பற்றாசு. ஒரு குழூஉக்குறி. 11. பற்றியவிடம். (உ-ம்.) "பற்றாற்றிப்பற்றியார்வெல்வதரண்" (வள். எசஅ.) [ஆகுபெயர்] 12. பற்றுக்கோடு. (உ-ம்.) "பரிந்தோம்பிப்பற்றற்றேமென்பர்" (வள். அஅ.) 12. பிடி. 13. வாரப்பாடல். (சிலப். ஊர்காண். கரு. உரை.) (5, 9, 12-வழக்.)
பற்றுக்கோடு—1. ஆதாரம். (உ-ம்.) "பற்றுக்கோடுநின்பதமன்றியிலை" (மதுரையந்தாதி) 2. பற்றுக்கோல் (வழக்.)
பற்றுக்கோல்—ஊன்றுகோல். (வழக்.)
பற்றுதல்—1. அன்புசெய்தல். (சூ. நிக. எ: ௬௬.) 2. பிடித்துக்கொள்ளுதல். (உ-ம்.) "உலக்கைபற்றி" (அரிச்ச. மயாந. உ.) 3 பொருந்துதல். 4. மனத்துக்கொள்ளுதல். (உ-ம்) "பற்றுகபற்றற்றான்பற்றினை" (வள். ௬௫௦.) 5. வாங்கல். (3, 5-வழக்.)
பற்றுப்பத்திரம்—கடன்வாங்கினவன் சில பொருள்கொடுத்தபோது தனிகன் அந்தப்பொருளைப்பற்றினதற்காக எழுதிக்கொடுக்கும் பத்திரம். (வழக்.)
பற்றை—1. காந்தள். (பிங்கல. உஅகஉ.) 2. சிறுதூறு.
பறக்கடித்தல்—துரத்துதல். (வழக்.)
பறக்குதல் — பறத்தல். (உ-ம்.) "பறக்கும் பருந்து. (மறைசையந். அஅ.)
பறங்கி—1. ஒருபாடை. 2. ஒருமேகவியாதி. 3. பூசனி. (வைத்தியபரி.) இஃதோர் கொடி.
பறங்கிக்கிழங்கு — சீனக்கிழங்கு. (வைத்தியபரி.)
பறங்கிக்கூர்மை—காசிச்சாரம். (வைத்தியபரிபா.)
பறங்கிச்சாம்பிராணி—ஒருமருந்து. (வைத்தியர் வழக்.)
பறங்கித்தழை—அன்னதாழை. (வைத்தியபரிபா.)
பறங்கிப்பட்டை—சீனக்கிழங்குப்பட்டை. (வைத்தியபரி.)
பறங்கிப்பாஷாணம் — ஒருபாடாணம். (வைத்தியர் வழக்கு.)
பறங்கிப்பேட்டை—ஓரூர். (வழக்.)
பறங்கியாமணக்கு — ஓராமணக்கு. (வழக்குப்போலும்.)
பறட்டை—தழைவற்றது, செழிப்பற்றது. (வழக்.)
பறட்டைக்கீரை—ஒருவிதக்கீரை. (வழக்.)
பறண்டுதல்—சுறண்டுதல். (வழக்.)
பறத்தல்—1. அவசரம்பண்ணல். 2. ஆகாயத்திற் சிறகினாற்செல்லுதல். (உ-ம்.) "அன்னமிரிந்துபறக்க" (அரிச்ச. காட்டு. ௫௦.) 3. துசி

முதலியகிளம்புதல். 4. விரைவாயோடல். (உ-ம்.) "பறந்துபுக்குப்பாரவாதிகடுன்னும்படி நரகு" (திருநூற். ருக.) (1, 3-வழக்.)

பறதி-பறத்தல். (தி-தொழிற்பெயர்விகுதி.)

பறதை—செங்கத்தரி. (வைத்தியபரி.)

பறந்தலை — 1. சுடுகாடு. (பிங்கல. சுஉகூ.) 2. பாசறை. (புறநா.) 3. பாழிடம். (உ-ம்.) "யாங்கணும்பரந்தவோங்கிரும்பறந்தலை" (மணிமே. சக்கரவாள. கசு.) 4. போர்க்களம். (பிங்கல. சுஉஉ.)

பறப்பன்—1. அவசரக்காரன். (வழக்.) 2. விருச்சிகம். (உ-ம்.) "போனன்பறப்பன்முள்ளூறுத்திப்புதல்வன்பதைப்பப்பொருராகி" (சேது பு. அநுமகுண். கச.)

பறப்பு—1. பறத்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

பறப்பை—பட்சிவடிவம். (உ-ம்.) "முற்று நாடியவிருத்திரனோரணியின்முறையா—லுற்ற வங்கியைவேதிகைப்பறப்பைமேலுய்த்து" (கந்தபு. வேள்விப். ரு.)

பறபறெனல்—1. ஓசைடுக்கொலிக்குறிப்பு. 2. விரைவுக்குறிப்பு. (1, 2-வழக்.)

பறம்பர்—தோல்வினைஞர். (பிங்கல அகoo.)

பறம்பு—1. மலை. (பிங்கல. சகரு) 2. முலை. (சூ.நிக.உ: கoo.) பாரியென்னும் வள்ளன்மலைக் குங்கூறுவர். (பத்துப். சிறுபாணாற்றுப்படையி லறிக.)

பறல்—பறத்தல். (உ-ம்.) "விரிசிறைப்பற வின்கடுமையாலெய்தி" (பாரத. இந்திரப். உக.)

பறவாதி — பேராசைக்காரன். (வழக்குப் போலும்.)

பறவை—1. அவிட்டநாள். (உ-ம்.) "பணிதரு பெண்ணைமரக்கால்பறவையும்பத் திரையும்" (விதான குணகுண. கசு.) 2. குக்குடசர்ப்பம். (உ-ம்.) "பறவைமாநாகம்வீழந்தபலவுடன்ப தைப்பபோன்றும்" (சிந்தா. பதுமை. ககஅ.) 3. பருந்து. (உ-ம்.) "திருமலிவித்துப்பறவை படுத்து" (கோயிற்பு. நடராச. ருசு.) 4. பறத்தல். (உ-ம்.) "சிறியதெள்குதுள்ளிக்-கருடனூர்க் குப்பறவைகற்பிப்பதென" (அரிச்ச. பாயிர. கஉ.) 5. புள். (உ-ம்.) "மிக்கநாரைப்பறவையும்" (சிவரக. நந்திகேசுர. க.)

பறவைவேந்தன்—கருடன். (சூ.நிக.கூ:ருஉ.)

பறழ் — 1. அணில், கீரி, எலி, நாவி, நரி, குரங்கு, நாய், புலி, முயல், வெருகு, பன்றி, ஆடு, மான் என்பனவற்றின்குட்டி. (சூ. நிக. கூ: கூஎ.) 2. பருப்பு. (தைலவ.)

பறளை—பரட்டை. (வழக்கு.)

பறஅக்குநுது—கொல்லன்உலைமூக்கு. (உ-ம்.) "பறூஅக்குருகினுயிர்த்தலுமுயிர்த்தனன்" (கலி. ருச.)

பறி—1. கொள்ளை. (வழக்.) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. பறித்தல். விகுதிகுறைந்தது. 4. பொன். (உ-ம்.) "பொற்கொல்லர்பொன்னைப்பறியென்றலும்" (சேநா. சொல். களஉரை.) 5. மீன்கொள்வாரியெடுப்பதாகியகூடை. (உ-ம்.) "குறியிறைக்குரம்பைப்பறியுடைமுன்றில்" (பெரும்பாண். உசுரு.)

பறிக்குதல் — 1. பறித்தல். 2. தோண்டல், குழிபறிக்கிறான். 3. வலாற்காரமாய்க்கவர்தல். (1, 2, 3-வழக்.)

பறிகுதல்—சடந்தோடுதல். (வழக்.)

பறித்தல்—1. கொய்தல். (திருவிளை. தருமிக்குப். கூச.) 2. பறிக்குதல். (சூ. நிக. க: உசு.) 3. பிடுங்கல். (உ-ம்.) "பகன்"பார். (பிங்கல. எ: உகருஎ.)

பறிதல்—1. ஓடிப்போதல், பறிந்திட்டான். (வழக்.) 2. ஒழுகுதல். (உ-ம்) "செம்புனல் பறிந்த" (திருவிளை. தண். உகூ.) 3 நீங்குதல். (திருவிளை. நகரப். கரு.) 4. போதல். (உ-ம்.) "எதிர்ப்பர்பின்பறிவர்நேர்போயெழுந்துவா னேறுபோல-வதிர்ப்பர்" (திருவிளை. அங்க. கக.) 5. வெளிப்படல், கதிர்பறிந்திருக்கிறது. (வழக்குண்டு.)

பறிதலையர் — சமணரிலோர் விகற்பிகள். (திருவிளை. பாண்டியன்சுர. கஉ.)

பறிப்பு—பறித்தல். பு-தொழிற்பெயர்விகுதி.

பறிமுறை—விழுந்துமுளைத்தன்முறைமை. (குறுந்தொகை.)

பறியல்-பறிப்பு. அல்-தொழிற்பெயர்விகுதி.

பறிவு—பறிதல். உ-தொழிற்பெயர்விகுதி.

பறிவை — 1. சீந்தில். 2. நந்தியாவட்டம். (வைத்தியபரி.)

பறுணி — 1. கொள்ளு 2. சீந்தில். 3. பெருங்குமிழ். 4. பெருங்குரும்பை. 5. வல்லாரை. (தைலவ.) (1, 2, 3, 4-வைத்தியபரி.)

பறை—1. இறகு. (உ-ம்.) "பறைவிரித்துருநனைத்தபோது" (சேது பு. பாவபாச. கூரு.) 3. ஓரளவு. (ஓர் தேசவழக்கு.) 4. ஓரளவுகருவி. (உ-ம்.) "நிறைக்கோற்றுலாத்தர்பறைக்கட்பராரையர்" (சிலப். ஊர்காண். உoஅ.) 5. சொல். (பிங்கல. கூஅoஉ.) 6. பறத்தல். (சிந்தா.) 7. வாச்சியப்பொது. (உ-ம்.) "நிறையோசைபெற்றபறையோசையற்று" (அரிச்ச. மயாந. உஉ.)

பறைச்சி—பறைப்பெண். (வழக்.

பறைசீவி—1. கொள். (வைத்தியபரி.) 2. சிறுகன்னரி. (மலையக.)

**பறைதல்** — 1. சொல்லல். (உ-ம்.) "பறையரைப்பறையரென்றுபறைந்திடு மனிதர்கேளீர் – பறையர்தம்மலத்தைத்தின்றபன்றியைப் புசிப்பதென்னே" (கொலைமறுத்தல். எ:உரை.) 2. தேய்தல். (உ-ம்.) "பார்வையாத்தபறைத்தாள்விளவின்" (பெரும்பா. கூரு.) 3. நீங்கல். (சிவதத்துவவிவேகம். பாயிரம்.)

**பறைந்தன** — 1. அழிந்தன. (சிந்தா.) 2. நீங்கின. (புறநா.)

**பறைப்பருந்து**—கரும்பருந்து. (வைத்தியபரி.)

**பறைப்பூச்சி**—ஒரு சிலந்திப்பூச்சி. (வழக்குண்டுபோலும்.)

**பறையர்**—ஒருசாதியார். (கொலைமறுத்தல். எ. உரை.)

**பறையலகு**—பலகறை. (சிந்தா.)

**பறைவு** — 1. சொல்லுதல். (உ-தொழிற்பெயர்விகுதி. 2. தெரித்தல். (உ-ம்.) "பிறங்கொளிவராசகற்பம்பறைவுறவரைந்தவாறும்" (கூர்மபு. பதி. ச.)

**பன்** - 1. ஒரு புல். (உ-ம்.) "பன்பாய்" (ஒருதேசவழக்கு.) 2. சொல்லல். (உ-ம்.) "பன்னருஞ்சிறப்பில்" (நன். பாயிரம்.) [முதனிலைத்தொழிற்பெயர்.] 3. தெரிநிலைவினைப்பகுதி.

**பன்பாய்**—ஒருவகைப்புற்பாய். (ஒரு தேசவழக்கு.)

**பன்மணிமாலை** — கலம்பகத்துச்சொல்லப்பட்டவுறுப்புக்களுள் ஒருபோகும், ஊசலும் அம்மானையுமின்றி யேனையுறுப்புக்களெல்லாம் வரப் பாடப்படுமொரு பிரபந்தம். (இலக்கணவி. அகசு.)

**பன்மாண்**—பலகாலும். (பரிபாடல்)

**பன்மை**-1. ஒன்றன்மை. (நன்னூல்.வினையிய. ரு.) 2. பலவாகியதன்மை. மை-பண்புப்பெயர்விகுதி.

**பன்மைப்பால்**—பலவின்பால். (நன்னூ. பெயரிய. அ.)

**பன்மைப்பொதுப்பெயர்**—பன்மைப்பால்கட்குரிய பொதுப்பெயர். [வ-று.] "கோதைகள்" (நன்னூ. பெயரிய. உஎ.)

**பன்மொழித்தொகைத்தொடர்**— பலமொழிகளைத்தொடர்ந்துநிற்குந் தொகைநிலை. (உ-ம்.) "செங்நிறக்குவளை" (நன்னூ. பொதுவிய. ௩ச.)

**பன்றி**—ஒரு மிருகம்; அஃது: ஊர்ப்பன்றி, காட்டுப்பன்றி, முட்பன்றியெனப் பலவகைப்படும். (சூ. நிக. ௩: கக.) கொடுந்தமிழ்நாட்டிலொன்று. (உ-ம்.) "பன்றியருவாவதன்வடக்கு" (நன்னூ. பெயரிய. கசு. உரை.)

**பன்றிக்கரணம்**—ஒரு கரணம். (வழக்.)

**பன்றிக்குறும்பு**-நிலப்பனை. (வைத்தியபரி.)

**பன்றிக்கோவ்வை** — ஒரு கொவ்வை. (வைத்தியபரி.)

**பன்றித்தகரை**—ஒருதகரை. (வைத்தியபரி.)

**பன்றிநெல்**—ஒரு நெல். (வழக்குண்டுபோலும்.)

**பன்றிப்பறை**—குடப்பறையென்று பெயர் கூறுவர். (பிங்கலத்தில்.)

**பன்றிப்புல்**— ஒருவகைப்புல். (வழக்குண்டுபோலும்.)

**பன்றிப்பொறி**—பன்றியெந்திரம். (சிந்தா.)

**பன்றிமொத்தை** — சிறுகுறிஞ்சா. (வைத்தியபரி.)

**பன்றிவாழை**—ஒரு வாழை. (சோழதேசத்துண்டு.)

**பன்மா**—பலபடி. (பதிற்றுப்.)

**பன்னகம்**–1. பாம்பு. 2. சீதரங்கபாடாணம். (வைத்தியபரி.)

**பன்னுகம்**—துளசி. (வைத்தியபரி.)

**பன்னகுடி**—பன்னசாலை. (உ-ம்.) "பாவைமைந்தரெனுடுபன்னகுடிமன்னினரே" (சிவரக. தாரு. கரு.)

**பன்னசாலை**—இலைவீடு. (உ-ம்.) "பன்னசாலைபழமைப்படவமைத்து" (சிவரக. தாருக. கக.)

**பன்னத்தண்டு**—நெய்வார்கருவியினொன்று. (வழக்.)

**பன்னம்**—இலை. (உ-ம்.) "விதங்கெழுமலர்நீர்பன்னமென்கனிவழங்குவாரை" (சேதுபு. இராமநாத. உரு.)

**பன்னல்** — 1. சொல். 2. நெருக்கம். 3. பருத்தி. (1, 2, 3-சூ. நிக கக: னகரவெ. கசு.)

**பன்னுகம்**—துளசி. (வைத்தியபரி.)

**பன்னுங்கு** — தண்டிகை மேல்விதானம். (வழக்கு.)

**பன்னுங்குழி**— பன்னுன்குகுழியுள்ளவோர் விளையாட்டுத்தட்டு. மரூஉமொழி. (வழக்கு.)

**பன்னுசி**—ஒரு துளசி. (வைத்தியபரி.)

**பன்னுடை**—நெய்யரி. (சூ. நிக. ச: கஉ.)

**பன்னி**— 1. சணல். (வைத்தியபரி.) 2. மனைவி. (உ-ம்.) "வேளாளன்பன்னியாய்" (பிரமோத். ௩: கரு.)

**பன்னிரண்டு**—ஓரெண். (வழக்.)

**பன்னீர்**—ஒரு வாசனைநீர். (வழக்.)

**பன்னீர்மரம்**—ஒரு பூமரம். (வழக்.)

**பன்னு**—நெற்கதிரறிவாளின் கொத்துவரி. (வழக்.) அரிவாட்குப் பன்னுவைத்துக்கொடு.

பன்னுதல்—1. சொல்லல். (உ-ம்.) 2. நெருங்கல். 3. பஞ்சுபன்னல். (வழக்.) (1, 2-"பன்னல்"பார். (உகரஞ்சாரியை.)

பன்னை — 1. ஒரு செடி. 2. கருப்பூரம். 3. சூடன். 4. தண்ணீர்விட்டான்கிழங்கு. (2,3,4-வைத்தியபரி.)

பன்னொன்று — பதினொன்று. உம்மைத்தொகை.

பனங்கட்டி–பனைவெல்லம். (வழக்.) (வைத்தியபரிபா.)

பனங்கீரை—ஒரு கீரை. (வழ.)

பனங்குடை — பனையோலையாற் செய்யப்பட்டவுண்கலம். (புறநா.)

பனங்கோரை—ஒருபுல். (வழக்.)

பனங்கோவை—ஒரு கோவை. (வைத்தியமூல. அகராதி.)

பனசம்—பலா. (சூ. நிக. ௬: ௧௧.)

பனசவித்தி—அரசு. (வைத்தியபரி.)

பனந்தாமன்–1. சேரன். (சூ. நிக. ௩: ௧௮.) 2. பலதேவன். (சூ. நிக. ௩: ௧௦.) இருவருக்கும் பனம்பூமாலையுண்டாதலாலிப்பெயரென்க.

பனந்தாழை —ஒருகற்றாழை. (வைத்தியபரி)

பனம்பாரனார்—அகத்தியர் மாணாக்கர் பன்னிருவரிலொருவர். (தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம் முகத்திற்காண்க.)

பனம்பிடுக்கு—பனம்பூ. (வைத்தியபரி.)

பனம்புடையல்—பனைமாலை. (பதிற்றுப்.)

பனம்பூ—ஆண்பனைப்பாளை. (வழக்.)

பனரை–நெய்க்கொட்டான். (வைத்தியபரி)

பனவம்—சிறுதம்பட்டம். வழக்குண்டுபோலும்.

பனவர்—பார்ப்பார். (உ-ம்.) "பவனர்கையிற்கனகக்குப்பைகணிறைவித்து" (திருவிளை. வரகுணனுக்கு. ௬.)

பனவி — பிராமணஸ்திரி. (உ-ம்.) "தூயவருந்ததிபெயர்கொள்பனவியாகி" (ஞானவா. லீலிகதை. ௨௫.)

பனாட்டு—பனையினதீங்கட்டி. (நன்னூ. உயிரீற்றுப். ௫௬.) ஆ-காண்டிகையுரை.

பனி — 1. அச்சம். 2. குளிர்ச்சி. (உ-ம்.) "நின்றன்பனிக்குடைக்கும்பொறைக்கும் — நெடும்பண்புதோற்ற" [இராமா. சடாயு. ௨௪.) 3. துக்கம். 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. நடுக்கம். 6. நீர். (உ-ம்.) "கண்பனியுகுப்பநின்றுரைப்பான்" (கூர்ம. தக்கன்வழி. ௨௬.) 7. நோய். 8. பெய்யும்பனி. (உ-ம்.) "பனியானனைந்துவெயிலானுலர்ந்து" (அரிச்ச. மயாநகா. ௨௪.) (1, 2, 3, 5-பிங்கல. ௬௮௦௬.)

பனிக்கஞ்சி—தாமரை. (வைத்தியபரி.)

பனிக்கதிர்—சந்திரன். (உ-ம்.)"வெம்பிணை பனிக்கதிரலைலீ" (கந்தபு. ஆற்று.௨௪.)

பனிக்காலம்—மார்கழிமுதலிய நான்கு மாசம். (சூ. நிக. ௪: அஎ:) முன்பனி, பின்பனியெனவிருவகைப்படும்.

பனிக்கும்—நடுங்கும். (புறநா.)

பனிக்கூர்மை — 1. இந்துப்பு. 2. சிந்துலவணம். (1, 2-வைத்தியபரி.)

பனிச்சா–கஞ்சாங்கோரை. (வைத்தியபரி.)

பனிச்சை — 1. கஞ்சாங்கோரை. 2. காட்டத்திமரம். 3. பின்னிமுடிக்கு மயிர்ச்சுருள்; அஃது: ஐம்பாலிலொன்று. (சீவகசிந்தாமணி.) (1, 2-வைத்தியபரி.

பனித்தல் — 1. இடைவிடாது மழைபெய்தல். (பிங்கல. ௬௪.) 2. துளித்தல். (உ-ம்.) "கண்பனிப்ப" (கூர்ம. திருக்கல். ௬௭.) 3. நடுங்கல். (உ-ம்.) "வரைக்குலம்பனிப்பவார்த்திட்டு" (கந்தபு. ஏம. ௧௬.) 4. துன்பம். (சூ.நிக. அ: ௭௪.)

பனித்து — பனிகொண்டு, பனிபெய்யப்பட்டு. (சிலப்பதி.)

பனித்துண்டம் — பனியையுடையதுண்டமாகிய பிறை. (உ-ம்.) "பனித்துண்டஞ்சூடும்படர்ச்சடையம்பலவன்" (திருக்கோ. ௧௬௨.)

பனிதாங்கி—ஒருபூடு. (வைத்தியநூ.)

பனிநந்தை—ஒருநத்தை. (வைத்தியநூ.)

பனிநீர்—ஒரு வாசனைநீர். (வழக்.)

பனிப்பகை—சூரியன். (சூ. நிக. ௩: ௫௫.)

பனிப்பயறு—ஒருபயறு. (பதார்த்தகுணசி.)

பனிப்பருவம்—பனிக்காலம் இருவகை. (உ-ம்.) "பனிக்காலம்"பார்.

பனிப்பு—1. நடுக்கம். (உ-ம்.) "தலைப்பனிப்பு" (திருவிளை. விருத்தகு. ௨௦) 2. பனித்தல். தொழிற்பெயர்விகுதி.

பனிப்புழு—பனியிலுண்டாகும்புழு.(வழக்.)

பனிப்பூடு—ஒரு பூண்டு. (வைத்தியநூ.)

பனிமலை — இமயமலை. (பிரபுலிங்கலீலை. கைலாயகதி. ௨௭.)

பனிமேகம்–பனியைப்பெய்யுமேகம். (காஞ்சிப்பு. கழுவாய்ப்படலம்.௬௪அ.)

பனியவரை—ஒரவரை. (வழக்.)

பனியெதிர்பருவம் — முன்பனி. (தொல். அகத். ௭.)

பனுக்குதல்—தெளித்தல். (வழக்.)

பனுவல்—1. இசைப்பாட்டு. (புறநா.) 2. கல்விநூல். (வள்.நீத்தார்பெ. ௧.) 3. ஆராய்ச்சி. (சிந்தா. கோ. ௫௬.) 4. சொல். 5. பஞ்சிநூல். (4, 5-சூ. நிக. ௧௨: னகரவெ. ௬.)

பனுவலாட்டி—பாரதி. (சூ. நிக. ௩: ௬௫.)

பனை — 1. அநுடநட்சத்திரம். (பிங்கல. உ௫௫.) 2. ஒரு மரம்; அது: அலகு, கூந்தற்பனை, தாழிப்பனை, நிலப்பனை எனப்பலவகைப்படும். (வைத்தியபரி.)

பனைக்கொடியோன்—1. பலபத்திரன். (பிங்கல. ௯௪௪.) 2. வீடுமன். (பாரத.)

பனைசதி—அரசு. (வைத்தியபரி.)

பனைமடல்—பனைமட்டை. (திருக்கோவை. ௭௪.)

பனைமீன்—யானைமீன். (பிங்கல. உ௬உ௦.)

பனையன்—1. ஒரு பாம்பு. இதனைப் பனையேறியென்றுங்கூறுவர். (வழக்.) 2. ஒரு மீன்; அது: பனைமீனென்பர்.

பனைவட்டு—பனைவெல்லம். (வழக்.)

## பா.

பா — 1. கப்பு. 2. தூய்மை. 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. நெசவுபா. (வழக்.) 5. பஞ்சிநூல் 6. பரப்பு 7. பரவுதல். 8. பருகுதல். 9. பாட்டு; அது: வெண்பாமுதலியனவாம். 10. பாம்பு. (பிங்கல. உ௦௧௬.) 11. பூனைக்காலி. (1, 2, 8-காஞ்சிப்பு. திருவேகமப்ப. ௪அ.) (6, 7, 9-சூ. நிக. ௧௪: வகரவெ. ௧௬.) (10,11-வைத்தியபரி.)

பாக்கம்—1. ஊர்ப்பொது. (பிங்கல. ௭௭௫.) 2. நெய்தநிலத்தூர். (பிங்கல. ௫௬அ.) 3. மருதநிலத்தூர். (சூ. நிக. ௫: ௪௦.)

பாக்கல்—பாவுகல். (வழக்.)

பாக்கழி—மருதயாழ்த்திறன்வகையிலொன்று. (பிங்கல. நிக. ௧௬அ௬.)

பாக்கன்—பூனை. (சூ. நிக. ௬: உ௬.)

பாக்காநூல்-பாவிஞூல்.(ஒருகுழூஉக்குறி.)

பாக்கி — வாங்கியதுபோக எஞ்சிநின்றது. [அராபி.]

பாக்கியத்தாநம் — செந்மத்துக்கொன்பதாமிடம். (சோதிட. வழக்.)

பாக்கியம்—1. காஷாயம். (வைத்தியபரி.) 2. செல்வம். (வழக்.) 3. புண்ணியம். (உ-ம்.) "பாக்கியம்புரிந்திலாப்பரதன்" (இராமா. மந்தரைசூ. ௫௬.)

பாக்கியலட்சுமி — அட்டலக்குமியிலொருத்தி; இவள்: செல்வந்தருபவள். (தமிழ்ச்சொல்லகராதி முதற்புத்தகத்திலதிக.

பாக்கியவதி—செல்வி. (வழக்.)

பாக்கியவான்—1. செல்வன். 2. புண்ணியவான். (1, 2-வழக்.)

பாக்கு — 1. எதிர்காலத்தைக்காட்டுமொரு தெரிநிலைவினையெச்சவிகுதி. (உ-ம்.) "வான்பான்பாக்கினவினையெச்சம்பிற" (நன். ௩௪௩.) 2. துவர்க்காய். (சூ. நிக. ௪: ௧௦.)

பாகஎக்கியம்—அஷ்டகம், பார்வணம், ஸ்பாலிபாகம், சிராத்தம், மாசிகம், சர்ப்பபலி, ஈசாநபலி, ஆக்கிரஹாயண முதலிய எக்கியங்கள். (அபிதானகோ.)

பாககம்—பிரிக்குந்தொகை. (வழக்.)

பாகசம்—ஒருவகையுப்பு. (வைத்தியநூ.)

பாகசாத்திரம்—மடைநூல்; அது: நளபாகம், வீமபாகமென இரண்டுபாகநூல் வழங்குகின்றவென்பர். (சிறுபாணாற்றுப்படை.)

பாகசாதநன்—இந்திரன். (சூ. நிக. ௧: ௧௬.) பாகனென்னு மசுரனைக்கொன்றவன்.

பாகசாதநி—பாகசாசநி. (உ-ம்.) "பார்த்தனருச்சுநன்கரியோன்விசயன்பாகசாதநி" (பாரத. அருச்சுநன்றீர். ௪௪.)

பாகசாலை—மடைப்பள்ளி.(சூ.நிக.௫: ௫௫.)

பாகதம்—எல்லாநாட்டுமொழி. (வழக்.)

பாகதாரி—சமையற்காரன். (வழக்.)

பாகப்படுத்தல்-1. சமைத்தல். 2. பக்குவப்படுத்தல். 3. பங்குசெய்தல்.

பாகப்படுதல்-1. சமைக்கப்படுதல். 2. பக்குவப்படுதல். 3. பங்குசெய்தல். (1, 2, 3-பாகம் பார்.

பாகம் — 1. ஒரு கணிதம். 2. ஒருவகைத்தோற்கருவி. (உ-ம்.) "தகுணிச்சம்"பார். 3. கற்கண்டு. (வைத்தியபரி.) 4. சமைத்தல். 5. நான்குமுழங்கொண்டவளவு. 6. பக்குவம். (உ-ம்.) "மூலமாயறிவுமுழுதினையுமறைக்கும்-பாகமாம்வகைநின்று" (சிவப்பிரகா. உ: உ.) 7. பங்கு. (உ-ம்) "நம்பாகமுங்கொடுவல்லேயிங்குநீவருகென்றலும்" (கந்தபு. பிரமயாகப். ௧௧.) 8. பாதி. (சூ. நிக. அ: ௧௫) 9. பிச்சை. (சூ. நிக. ௧௧: ௧௧ரவெ. ௧௬.) (4, 5-வழக்.)

பாகர் — யானை, குதிரை முதலியவற்றை நடத்துவோர். (உ-ம்.) "பாகனையரசன்குறிப்பிஞலேவ" (பாரத. குருகுல. ௬௬.)

பாகரம்—பிரபாகரம். (உ-ம்.) "சாறுவாகம் பாகரமுஞ்சாற்றும்பாஞ்சராத்திரநூன் – மாறு செய்யும்பாட்டமுள" (கூர்மபு. திருக்க. ௭௧.) பிரபாகரன்என்பவனுற்செய்யப்பட்டநூல் பிரபாகம். (சிவஞானபாடியத்திற் காண்க.)

பாகல்—1. ஒருவகைக்கொடி. (தைல. தைலவ. ௧அ.) அது: காட்டுப்பாகல், கொம்புப்பாகல், கொல்லம்பாகல், நரிப்பாகல், நாய்ப்பாகல், நிலப்பாகல், பழுபாகல், பேய்ப்பாகல், மிதிப்பாகலெனப் பலவகைப்படும். 2. பலா. (உ-ம்.)

"பரிமளப்பாகலிற்கனிகளைப்பீறிநற்படியி னிட் டேகுரக்கினமாடும்" (திருப்பு. கசுஅ.) 3. வெட் பாவட்டை. (வைத்தியபரி.)

பாகலம்—யானைநோய். (சூ. நிக. ௬: க.)

பாகவதம் — விஷ்ணுபுராண நான்கனு ளொன்று. (உ-ம்.) "காருடம்"பார்.

பாகவதர்—விட்டுணுசமயத்தவர். (சூ. நிக. உ: ௬.)

பாகன்–1. குதிரைமுதலியநடத்துவோன். (உ-ம்.) "பாகர்"பார். 2. புதன். (சூ நிக.க:சுக.) 3. விருத்திராசுரன் தம்பி; இவன்: இந்திரனுற் கொல்லப்பட்டவன். (அபிதானகோ.)

பாகனுடுசோல்லல்—தலைவன் றன்னைத் தேடிவந்தபாகனுெடுதலைவி செலவைக்காட்டிக் கூறல். (வாணன். உஅ. முகம்.)

பாகாரி—இந்திரன். (உ-ம்.) "படிகொள் பல்வரைப்பறையெலாமறிந்தபாகாரி" (சூ த. முத். க: க.)

பாகி—பக்குவன். (வழக்.)

பாகித்தல்—பங்கிடுதல். (வழக்.)

பாகியசௌசம்—புறச்சவுசம். (உ-ம்.) "உரைத்தசவுசமிருவகையாலுடம்பின்மண்ணு திகளிட்டு - வரைத்தவிதியின்படிநீரின்மண்ணு வதுபாகியசவுசம்" (சூத. ஞாந. கரு: க௬.)

பாகியதிரிசியாநுவித்தசவிகற்பசமாதி — கடாதிவிஷயமுகத்துள் ஒன்றனைக் குறித்து அதனுடையநாமரூபமான மயாங்கிசங்களிரண் டையும்பிரித்து அசனுள ஸ்திபாதிப் பிரிய மென்னுஞ் சச்சிதாநந்தப் பிர்மாங்கிசத்திரயங் களை யநுசந்தாநஞ்செய்வது. (வி-ணி)

பாகியபோகம்—வெளிப்போகம். (உ - ம்.) "அசுத்ததத்துவத்திலுண்டாகியபோகமானது (பாகியம்.) (சி-லி. ஞாந. உ௦. உரை.)

பாகியம்–1. பரைபூசையிலொன்று.(உ-ம்.) "அரும்பரைபூசைபாகியமாப்பியந்தரமெனவிர ண்டாகும்" (சூத. சிவமான். ரு: உ.) 2. புறம்பு. (உ-ம்.) "பாகியேந்திரியம்"

பாகிரி—ஐங்காயம். (வைத்தியபரி.)

பாகீரதி—கங்கை. (பாரத. தீர்த்தயா. எ.)

பாகு—1. கற்கண்டு. 2. குழம்பு. 3. சருக் கரை. 4. தலைப்பாக்கு. (வழக்.) 5. பங்கு. அம் கெட்டுநின்றது. 6. பால். 7. பாக்கு. (உ - ம்.) "தெளிந்தபையுட்பாகுசென்றவே" (சிந்தா. கேமசரி.சுஅ.)8.பாகன்.(உ-ம்.)"வினைத்தேரும் வயமாவும்வெம்பாகும்விழவெய்து" (பாரத. நிரைமீட்சி. கரு.) (1, 3-வைத்தியபரி.) (2. சூ. நிக. கக: ணகரவெ. அ.)

பாகுகசி—பதினான்காமன்வந்தரத்து ருஷி. (அபிதானசிந்.)

பாகுடம் — அரசிறை. (சூ. நிக. க: ருசு.) சிந்தாமணியிற் கையுறையென்பர்.)

பாகுதம்—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)

பாகுதாயன் — பிராமணத்தி சூத்திரனைக் கரவிற்கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "பந்தணி விரலார்செங்கைப்பார்ப்பனமான்பின்றோனை - யுந்துசோரத்திற்கூடவுதித்தவன்பாகுதாயன்" (சூத. சிவயான். கஉ: உ௦.)

பாகுபடுதல்—பகுக்கப்படுதல். (வழக்.)

பாகுபாடு—பகுப்பு. (உ - ம்.) "முன்னூற் பாற்படுபொருளுஞ்சைவப்பாகுபாடுணர்ந்து" (சிவரக. பாயிர. உக.)

பாகுவன் — மடையன். (பெரியபு. திருநா வுக்கர. வசனத்திலறிக.)

பாசேக்கியம்—பிதிர்பூசை. (வழக்.)

பாகை–1. இராசியளவு, ஒருராசிக்குபாகை. ௬௦.) 2. ஒரு கால அளவு. 3. தலைப்பா. [தெலுங்கு.] 4. வட்டத்தின் மூந்நூற்றறுபதி லொருபங்கு. (1, 2, 3-சோதிடக்களஞ்சியத்தி லறிக.

பாங்கம் — பலண்டுறுகபாடாணம். (வைத் தியபரி.)

பாங்கர்—1. இடம். (சூ. நிக. ரு: சுரு.) 2. ஓமை. (உ - ம்.) "பாங்கர்மராஅம்பல்பூந்தணக் கம்" (குறி-பா. அரு.) 3. கணவர். (சிந்தாமணி. எஉஅ.) 4. தோழர். (உ-ம்.) "பண்ணையுமாய முந்திரளும்பாங்கரும்"(இராமா.திருவவ.ககஅ) 5. பக்கம். (உ-ம்.)"ஈசன்பாங்கரந்தரியங்கில்லா மல்" (சிவரக. நந்திகண. ரு.) 6. பாங்கர்க் கொடி. (உ-ம்.) "பாங்கருமுல்லையும்" (கலி. கசக.) (பாங்கர்பூ. கலி. க௦௬.)

பாங்கற்கூட்டம் — பாங்கனுற்கூடுங் கூட் டம். (உ-ம்.)"இடந்தலைப்பாடுபொங்கற்கூட்டம்" (அகப்பொ. களவிய. எ.)

பாங்கன் — தோழன். (ஐங்குறுநூறு.) பக் கத்திற் பிரியாதிருப்பவன். உரிமையன் என்று பொருளாம்.

பாங்கன்றலைவனையுற்றதுவினுதல்— பாங் கன் றலைவனதுள்ளமுந்தோளும்வாடிய வேறு பாட்டைக்கண்டு நினக்கிவ்வேறுபாடுற்ற கார ணம் என்னையென்று வினுதல். (வாண. ச௦. முகம்.)

பாங்கன்றன்மநத்தழுங்கல்— பாங்கன்றன் னுள்ளே யழுங்கல். (வாண. சகூ. முகம்.)

பாங்கி–தோழி. (உ-ம்.) "பாங்கியர்மருங்கு சூழ" (பெரியபு. தடுத்தாட். கசுஎ.) [பக்கத்திற் பிரியாதிருப்பவள், உரிமையாள் என்றுபொரு ளாம்.]

பாங்கிமதியுடம்பாடு—பாங்கிதலைவி வேறுபாட்டைக்கண்டு புணர்ச்சியினுண்மையறிந்து ஆராய்ந்து தன்மதியுடம்படுதல்; அது: முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், இருவருமுள வழியவன்வரவுணர்தல் என மூவகைப்படும். (உ-ம்.) "முன்னுறவுணர்தல்குறையுறவுணர்தலிருவருமுளவழியவன்வரவுணர்தலென்-றொருமூன்றுவகைத்தேபாங்கிமதி யுடம்பாடு" (அகப்பொ. களா. உஉ.)

பாங்கிற்கூட்டல் — தலைவன் றலைவியை ஆயத்துச்செலுத்துதல். (வாண. கூஉ. மூகம்)

பாங்கு — 1. அழகு. (சூ. நிக. அ: உச.) 2. இடம். (பிங்கல. எகக.) 3. உரிமை, உரித்து. (சூ.நிக.ஃ:சஎ.) 4. உறவு. (சிந்தாமணி.சுடுக.) 5. நற்குணம் (உ-ம்.) "பாங்கினனீங்கலாகாப் பதஞ்சலியென்னுநாமந்தாங்கி" (கோயிற்பு. பதஞ்சலி. எடு.) 6. பக்கம். (உ-ம்.) "பாங்கோடிச்சிலைவளைத்து" (பெரியபு. தடுத்தா. கசசு.) 7. பாங்கன். (இறைய.) 8. யோக்கியம். (வழக்.)

பாங்குமம்—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)

பாச்சல்—எழுச்சி. (பிங்கல. உகஅஎ.)

பாச்சான்—கள்ளி. (வைத்தியபரி.)

பாச்சி—பால்; இது: மழலைப்பிள்ளை கூற்று. (வைத்தியபரிபாடையிற்கூறியுள்ளார்.)

பாச்சிகை — பாச்சிகை, சூதாடு கருவி. [தெலுகு.]

பாச்சுருட்டி—பாச்சுற்றி. (வழக்.)

பாச்சுற்றி—ததிமரம். (நெய்வார்வழக்கு.)

பாச்சை—ஒரு செந்து. (வழக்குண்டு.)

பாசகத்தம் — நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உச. உரை.)

பாசகம்—மடைத்தொழில். (வழக்.)

பாசகர்—மடையர். (சூ. நிக. உ: கஎ.) பாசசத்தைச்செய்பவர்.

பாசகர்ணன்—சுமாலியென்னும் அரக்கன் மகன். (அபிதானகோ.)

பாசகரன் — 1. நமன். 2. வருணன். 3. விநாயகன். (இம்மூவருக்கும்பாசத்தைக்கையிற் பிரிக்கலுடைமையால் வந்தபெயரென்க.

பாசகன்—சமையற்காரன். (வழக்.)

பாசதுசுமம்—இலவங்கம். (தைல. தைலவ. ஈச.)

பாசஞானம் — நால்வகைவாக்கின் பகுதியாகிய வேதம், சாத்திரம், மிருதி, புராணம், கலைஞானமாகிய சொற்பிரபஞ்சமும் நிலமுதல் நாதமீறாகிய பொருட்பிரபஞ்சமுமென்னு மிவையுற்றிநிகழு மேகதேசஞானம்; இது: பதிஞானம் விளக்குதற்கு ஏதுவாமுகத்தாற்பயனுடையது. (உ-ம்.) "வேதசாத்திரமிருதிபுராணகலைஞானம்விரும்பசபைவைகரியாதித்திறங்கண் மேலாநாதமுடிவானவெலாம்பாசஞானம்" (சி.சி.சு: உ. சிவஞா.)

பாசடம்—வெற்றிலை. (வைத்தியபரி.)

பாசண்டசாத்தன்-தொண்ணூற்றறுவகைச் சமையசாத்திரத்தருக்கக்கோலவயில் மிகப்பயின்ற ஐயனென்னுங்கடவுள். (சிலப். கனாத். தி. கடு.)

பாசண்டம்—பாசண்டமதம். (வழக்.)

பாசண்டமதம்—வேதத்தைப்பிரமாணமாகக் கொள்ளாத புறச்சமயிகள். (வழக்.)

பாசண்டர்— } பாசண்ட மதத்தினர்.
பாசண்டிகர்— } (வழக்.)

பாசத்தன் — சதருத்திரருள் வருணதிக்கினிருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ0.)

பாசத்திரயம்—ஆணவம், மாயை, கன்மமாகிய மும்மலம்.

பாசதரன் — 1. நமன். 2. வருணன். 3. விநாயகன். பாசகரன்பார்.

பாசதரிசநம்—பிரபஞ்சதரிசநம். (சி. சி. அ: உஅ. நிரம்ப.)

பாசநம்—1. உண்கலம். 2. உறவு. 3. பாத்திரம். (உ-ம்.) "வாசனையூட்டிமிக்கமலர்விரையடுத்ததூநீர்ப்பாசநத்தமைந்தபாங்கர்" (பெரியபு. தடுத்தா. கடு) (1, 2- பிங்கல. கூஅ0அ.)

பாசபஞ்சகம்—பஞ்சபாசம். (சி. சி. அள. ரு. சிவாக்.)

பாசம்—1. அவிச்சை. (உ-ம்.)"பின்றேய்ந்து பாசமடங்கினன்" (திருவிளை.நான்மாட. கஅ.) 2. அன்பு. 3. ஆணவமலம். (த-நி.போ.கஅஉ.) 4. ஊசித்துளை. 5. கயிறு. (உ-ம்.) "பற்றுவாங்கெடும்பாசத்தினென்குநர்" (இராமா. கரன். கசு.) 6. கவசம். (பிங்கல. கசு0எ.) 7. சீரகம். (வைத்தியபரி.) 8. நமனாயுதம். (உ-ம்) "சூலம் பிடித்தெமபாசஞ்சுழற்றித்தொடர்ந்து வருங்காலன்றனக்கு" (கந்தரலங்.) 9. பதிக்கும் பசுவுக்குமுள்ள தாரதம்மியங்களைச் சற்றுந்தெரியவொட்டாமல் மறைத்துநின்றமலம்; இஃது: ஆணவம், காமியம், மாயேயம், வைந்தவம், திரோதசத்தி என ஐவகைப்படும். (சி.பி.கை.) 9. பிசாசம். (சூ.நிக.க. சடு.) (2, 4, 9-பிங்கல. கூஅ0எ.)

பாசருகம்—அகில். (வைத்தியபரி.)

பாசவர்—இலையமுதிவோர். (உ-ம்.) "பாசவர்வாசவர்" (சிலப். இந்திர. உசு.) [கயிறு திரித்துவிற்பாரும் பச்சிறைச்சி சூட்டிறைச்சி

விற்பாருமாம் என்பர் சிலப்பதிகார உரையாசிரியர்.]

**பாசறை**—1. பசிய இலைகளால் வேயப்பட்ட சிறுவீடு. (உ-ம்.) "பாசறைமுழுதுமொருபெருங் கடவுட்பரிமளமொல்லெனப்பரப்பி" (பாரத. குருகுல. கூ௩.) 2. பாடிவீடு. (உ-ம்.) "பாசறையல்லதுநீயொல்லாயே" (புறநா. ௬௧.)

**பாசனபேதி** — செப்புநெருஞ்சில். (வைத்தியபரி.)

**பாசனம்**—புளிப்பு. (வைத்தியபரி.)

**பாசாங்கு**—மாரீசம். (வழக்.)

**பாசாங்குக்காரன்**—பாவனைக்காரன். (வழக்.)

**பாசாங்குசதரன்**—விநாயகன். (திவாகரம். தெய்வப்.)

**பாசானபேதி**—செப்புநெருஞ்சில். (வைத்தியபரி.)

**பாசி**—1. சற்சுவர்முதலியவற்றிலே ஈரத்தினாற் பச்சனவாய்த்தோன்றுவதொன்று. (வழக்.) 2. கிழக்கு. (உ-ம்.) "பாசிச்செல்லாது" (புறநா. ௨௨௯.) [பிராசி என்பது பாசி என்றாயிற்று.] 3. சடைச்சி. (சூ. நிக. ௪: ௬௯.) 4. நமன். பாசத்தையுடையவன் என்பது பொருளாம், வருணனுக்கும் விநாயகருக்குமாம். 5. நாய். (பிங்கல. ௨௫௧௧.) 6. நீர்ப்பாசி. 7. நெட்டி. 8. பசுமையுடையது. (ஐங்குறுநூறு.) 9. மீன். பாசிக்குத்தகையென வழக்குண்டு. (6,7-வைத்தியபரி.)

**பாசிதம்**—(கணிதம்.) (வழக்.)

**பாசிப்பயறு**—ஒருவகைப்பயறு. (வழக்.)

**பாசிப்பாசம்**—பச்சைக்கயிறு. (சிந்தாமணி. ௪அ௯.)

**பாசிபந்து**—ஒருகையணி. (வழக்.) [இந்துஸ்.]

**பாசிலை**—1. பச்சிலை. (பெரியபு. ஆனாயநா. ௧௫.) 2. வெற்றிலை. (உ-ம்.) "பாசிலைசுருட்டி மைந்தன்கொடுக்கியபரந்துமின்னுங் — தூசுலாவல்குநீண்டிததுயிற்கண்கள்விழித்த தோற்றம்" (சிந்தா. விமலே. ௬௬.)

**பாசு**—1. பசுமை. 2. மூங்கில். (1,2-சூ. நிக. ௧௧: சகரவெ. ௧உ.)

**பாசுபதசாத்திரம்** — அதிமார்க்கநூன்மூன்றினுளொன்று. (சி. சி. சி. உ: எ௯. மறை.)

**பாசுபதம்**—1. அதர்வணவேத உபநிடதமுப்பத்தொன்றனுளொன்று. (கந் நவ. ௧அ.) 2. அதிமார்க்கநூன்மூன்றினொன்று; இதில்: ஆன்மாகள்பலவாய் நித்தமாய் வியாபகமாய் காரண காரிய சையோகத்தாற்றேன்றும் ஞானத்தால் தனித்தனி வேறுபாடுடையவென்றும், இவ்வான்மாக்களுக்காணவமில்லையென்றும், மாயை கன்மங்கள் என்றிரண்டு பாசங்களுள்ளன வென்றும், பாசங்களாற் சுகதுக்கங்களை யநுபவிக்குமென்றும், வைராக்கியமுண்டாய்ச் சாத்திரத்திற்கூறுமுறையே தீட்சைபெற்ற ஆன்மாக்களிடத்தே பரமேசுவரனுடைய ஞானமுதலியகுணங்கள் சங்கிராந்தமாய்ப் பற்றுமென்றும், அப்பொழுது குடும்பபாரத்தைப் புத்திரரிடத்துவைத்துத் துறவறத்திற்செல்வார்போல ஈசுவரனும் தன்னதிகாரத்தொழிவு பெற்றிருப்பனென்றுங்கூறப்படும். (சி. பி. கை.) 3. ஒரு விரதம். (சி. சி. அ: ௬௨. சிவாக்.) 4. சைவத்திலுட்சமயங்கள் ஆறனுளொன்று. (சி. சி. உ: எ௬.ஞானப்.) 5. பசுபதியுடையபாணம். (உ-ம்.) "பைந்தொடிபாகன்பாசுபதமுனக்குதவுமென்றான்" (பாரத. அருச். தவ. எ௨.) பாசுபதாத்திரம்எனவும் வழங்குவர்.

**பாசுபதர்**—ஆறுவகைச்சைவசமயிகளிலொருவர்; இவர்: சிவனைத்திருநீறுஞ்சடையுந்தரித்தமூர்த்தியாய்க் கொள்பவர். (சி. சி. பரபிர. ௪. ஞானப்.)

**பாசுபதி**—மாயையேசெகத்து பாதாநகாரணமென்று வாதிப்பவன். (சி. சி. க: ௧௬. சிவாக்.)

**பாசுரம்**—1. பாட்டு. (சி. சி. க: ௪௪. சிவஞா.) 2. வாசகம். (சூ. நிக. ௧0: ௬.)

**பாசுரர்**—ரூபதன்மாத்திராதத்துவத் திருக்குமோர்புவநாதிபதி. (வி-ணி. ௨எ௨.)

**பாசுவசுரோணி**—காட்டாமணக்கு. (வைத்தியபரி.)

**பாஞ்சசந்நியம்** — 1. கிருட்டிணன்சங்கு. (பிங்கல. ௩௬அ.) 2. வலம்புரியாயிரஞ்சூழப்பட்டது. (சூ. நிக. ௬: எ௬.)

**பாஞ்சராத்திரம்**—விஷ்ணுசமயத்தினொரு பகுதி; இது: வாசுதேவனாற்செய்யப்பட்டது. இஃது: இருபத்துநான்காந்தத்துவம் வாசுதேவனென்ற்ரு பொருளுண்டென்றும், அந்தப்பரம்பொருளினின்றுகிருட்டிணனும், அநிருத்தனும், மகரத்துவசனும், ரௌகிணேயனும் என நான்கு வியூகர்கள் சகத்தைப்படைத்தற்பொருட்டுத்தோன்றினரென்றும், இந்நான்கு வகுப்பினுற் சடமுஞ்சித்துமாய வெல்லாவுலகமும் படைக்கப்பட்டனவென்றும், வேதாந்தவாதிகள் நால்வரிலே பரிணாமவாதிகள் சொல்வதுபோலே எல்லாம் வாசுதேவன் வடிவென்றும், வேதங்களினுறுதிப்பயனில்லை பாஞ்சராத்திரத்தி னுறுதிப்பயனுண்டென்றும், ஆகையால், பாஞ்சராத்திரத்தின் முறையே தீட்சைசெய்துகொண்டு வாசுதேவனை வழிபட்டு வாசுதேவன்வடிவில் இலயமாதலேமுத்தியென்றுங்கூறும். (சி. பி. கை.)

பாஞ்சராத்திரி — நாராயணர் தன்னைவழி பட்டவர்களுடைய பந்தத்தைநீக்கி அவர்களை விரசாநதியிலே மூழ்குவித்துச் சுத்தர்களாக்கி வைகுண்டத்திலே சாரூபத்தைக்கொடுப்பர் என்பன். (கந். நவ. ச.)

பாஞ்சராத்திரிகன் — பாஞ்சராத்திர மதத்தோன். (வழக்.)

பாஞ்சாலம்—தேயமைம்பத்தாறினொன்று. (உ-ம்.) "துளங்கில்பாஞ்சாலமிக்கனவட்டம்" (திருவிளை. நரிபரி. க0ச.)

பாஞ்சாலர்—பாஞ்சாலதேயத்தார். (பாரத. திரௌபதிமா. ௯உ.)

பாஞ்சாலி—திரௌபதி. (பாரத. சூதுபோர்ச். உ௯ச.)

பாட்சா—துருக்கத்தலைவன். [துலுக்கு.]

பாட்டம்—பாட்டாசாரியரால் வார்த்திக ரூபத்திற்செய்யப்பட்ட ஒரு மதம்; இந்தமதத்திலே வேதம் நித்தியமாய் அநாதியாய் சுயம்புவாய்த் தோற்றமுடிவின்றி ஒரியல்பாய் நாதப் பிரமமாய் அழிவில்லாததா யிருக்குமென்று சொல்லப்படும். (த. நி. போ. க௯ச.)

பாட்டன்—1. பாட்டமதத்தான். 2. மூதாதை. (பிங்கல. ௯கரு.)

பாட்டாசாரியம்—பாட்டாச்சாரியர் வேதமே தெய்வமென்று ஏற்படுத்திய கொள்கை. (பாகியமதம்.)

பாட்டாசாரியன்—கன்மத்துக்கீடாக யோநி மாறுமென்றும் அயோநியாகவே செநிக்குமதொழிந்து அச்சுமாறுதென்றும் எவ்விடத்தும் ஆன்மா வியர்த்தமாய்நின்றறியுமென்றும் எக்கியாதி கன்மங்களைச்செய்து மறுபிறப்பிலே சுவர்க்கத்தையடைவதே முத்தியென்றுஞ் சொல்லுவோன். (சி. சி. உ: சக. உரை.)

பாட்டாளி—1. பாடுவோன். 2. வேலைப்பிரயாசி. (1, 2-வழக்.)

பாட்டி—1. ஒருசார்விலங்கின்பெண் பொது. 2. நரி நாய் பன்றி யிவற்றின் பெண். 3. பாட்டன்மனைவி. (இராமா. அங்கதன்றூ. ௯உ.) 4. பாடுவாள். (வழக்.) (1, 2-சூ. நிக. ௯: ௯ச, ௯௬.)

பாட்டியம்—பாட்டியம், பிரதமை. (வழக்.)

பாட்டியர்—பாணிச்சியர். (உ-ம்.) "பாணர் வருகபாட்டியர்வருக" (மதுரைக். எசக.)

பாட்டியல்—ஒரு நூல். வெண்பாப்பாட்டியல் முதலியவை. அ-செய்யுட்பொருத்த விலக்கண முதலியவையுணர்த்தும்.

பாட்டு—1. இசைப்பாட்டு. (உ-ம்.) "வண்டு பாட்டயர" (கூர்மபு. தக்கன்வமி. உரு.) 2. செய்யுள். (சூ. நிக. க0: உக.) 3. சொல். (நன்னூல்விருத்தி. ௯ச0.) 4. பட்டு. (உ-ம்.) "பாட்டரும்பகடுவீழ்ந்த" (சிந்தா. கோவிந். உஅ.) [விகாரம்.]

பாட்டுக்காரன்—பாடுவோன். (வழக்.)

பாட்டுடைச்செய்யுள் — பலபாக்களோடு உரைப்பாட்டையும், இசைப்பாட்டையுமுடைய இயலிசைநாடகப் பொருட்டொடர் நிலைச் செய்யுள்.

பாட்டுடைத்தலைவன்—பாட்டுநாயகன். (இலக்கணவி. பொருளதி. பாட்டியல். ௯௬. உரை.)

பாட்டுநாயகன்—கவியுடைத்தலைவன்.

பாட்டை—வழி. (வழக்.)

பாடக்கிடம்—பங்கம்பாளை. (வைத்தியபரி.)

பாடகம்—1. காலணியினொன்று. (உ-ம்.) "பாடகச்செம்பதுமலர்ப்பாவையர்" (இராமா. திருவவ. சுஉ.) 2. தெரு. (பிங்கல. சுசய.) 3. பற்படகம். (வைத்தியபரி.)

பாடகர்—பாடுவோர். (வழக்.)

பாடசாலை—பள்ளிக்கூடம். (வழக்.)

பாடணம்—சம்பாடணை. (உ-ம்.) "நயவாய்மைப்பாடணமன்பருள்" (சேதுபு. பிரமகத்தி. எ௯.)

பாடநம்—பாடுதல். (வழக்.)

பாடம்—1. அழுத்தம். 2. இரத்தினமுதலிய வற்றினொளி. 3. ஒளி. (சிந்தாமணி. கஅ௯.) 4. சேரி. (பிங்கல. சுசரு.) 5. படித்தல். 6. மலைதாங்கி. (வைத்தியபரி.) 7. மூலவாக்கியம். (சிவஞானபாடி. .) (1, 2, 5-வழக்.)

பாடம்போற்றல்—மூலபாடங்களை மறவாமற் பாதுகாத்தல்; இது: நூல்கேட்போரியல்புளொன்று. (உ-ம்.) "பாடம்போற்றல்கேட்டவை நினைத்தல்" (நன். சக.)

பாடமாக்குதல்—பாடம்பண்ணுதல். (வழக்.)

பாடரி—மதுபானம் (வைத்தியபரி.)

பாடல்—1. சங்கீதம். (உ-ம்.) "கம்புபாடலாடலைநயந்துகண்ணினுள்கொலோ" (சிவாக. கணபதிமறு. சு.) 2. பாகல். (வைத்தியபரி.) 3. பாட்டு. (திருவிளை. தருமிக்குப். க௬.) 4. பாடுதல். (உ-ம்.) "மறைகலந்தவொலிபாடலொடாடலராகி" (தேவார. பிரமபுர. சு. சம்பந்த.) 5. பெருமை. (காஞ்சிப்பு. திருநகரப். கக.) அல்-சாரியைபோலும். 6. வாசித்தல். (பிங்கல. உ0க0.)

பாடல்பயிலிடம் — பட்டிமண்டபம். (பி. நிகண். சு௯௯.)

பாடலம்—1. குதிரை. (உ-ம்.) "பாடலங் கரிவைகியபந்தியும்" (அரிச்ச. நகர. உ.) 2. சோன்குதிரை. (பிங்கல. எசுச.) 3. பாதிரி

மரம். (உ-ம்.) "பாடலநெடும்பலவு" (திருவாத. திருப்பெரு. ௧௨.) 4. மழைக்காலத்துப்பழுக்கு நெல். 5. சிவப்பு. (சூ. நிக. ௧௧: டகரவெ. ௧௧.)

**பாடலாவதி**—ஓர்நதி; இது: இருக்ஷபர்வதத்திலுற்பத்தியாகிறது. (அபிதானகோ.)

**பாடலி** — 1. ஒரு நெல். (வழக்குண்டுபோலும்.) 2. கள். 3. பாதிரிமரம். (2, 3-வைத்தியபரிபா.)

**பாடலிபுத்திரம்**—ஓரூர். (பெரியபு. திருநாவுக். ௯௮.)

**பாடலை**—1. ஒரு மரம். 2. தூர்க்கை. 3. பாடலிபுரம். மரூஉ. (1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.)

**பாடவம்**—1. களிப்பு. (உ-ம்.) "பாடவநிலையினர்பலருஞ்சுற்றினர்" (இராமா. கரன். ௫௧.) 2. சமர்த்து. (உ-ம்.) "ஏடனீயென்செய்தாயாலித்திறமியம்புகின்றாய்-நாடுறுபழியு மொன் றூர் நகையையுநாணுயின்று - பாடவமுரைப்பது" (பெரியபு. இயற்ப. ௧௮.)

**பாடவன்**—பாடுபவன். (வழக்.)

**பாடவுரை** — உரையெழுதுமிடத்து எடுத்தெழுதிய மூலமும் தானெடுத்துக்கொண்ட பாடத்திற்குப்பிறர் வேறுவகையாகச்சொல்லுவரென்று காட்டலும். (நன். பொது. ௨௧. இராமா.)

**பாடவை**—மிதுனவிராசி. (பிங்கல. ௨௪௧.)

**பாடற்பயம்**—பாடலின்பம். (பரிபாடல்.)

**பாடற்றொழில்கள்** — யாழின்கண்வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடையென்னு மிசைக்கரணங்களெட்டும்; பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்குஎன்னுங் கலைத்தொழில்களெட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னு மைந்தும் பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணமுதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். (வள். ௫௭௩. பரி.)

**பாடன்மகள்** — பாடுவாள் பர்ணர்பெண். (வழக்.)

**பாடா**—பங்கம்பாளை. (வைத்தியபரி.)

**பாடாண்டிணை** — புறப்பொருட்டிணையி னொன்று; அஃது: எட்டுவகைப்படும். (தொல். பொரு. ௮௦. உரை.)

**பாடாணத்தாபநம்** — ஒருகல்லைத்தாபித்து இறந்துபோனவரினுன்மாவை யதின் மந்திரத்தால்வரித்துச்செய்யு மிறந்தோர்க்கானகிரியை. (சைவச. பொது. ௨௯௧. உரை.) பாடாணம்-கல்.

**பாடாணம்**—1. கல். (உ-ம்.) "ஊன்றுமெழிற் பாடாணம்" (ஆசௌ. ௧௫௪.) 2. நச்சுச்சரக்கு; அது: பிறவிப்பாடாணம், வைப்புப்பாடாணம் என விருவகை. (வைத்தியபரி.)

**பாடாணவாதசைவம்**—அகச்சமய மாறனுளொன்று; அஃது: ஆன்மா முத்தியிலும் சகசமலநீங்காது கல்லுப்போலக்கிடக்குமெனக்கூறுவது. (சி. சி. ௨: ௭௯. சிவஞா.)

**பாடாணவாதசைவன்** — ஆன்மாமுத்தியிலும் சகசமலநீங்காது கல்லுப்போலக்கிடக்கும் என்பன். (சங். நவ. ௫.)

**பாடாணவாதி**—பாடாணவாதசைவன். (சி. சி. அ: ௧௨. நிரம்ப.)

**பாடாந்தரம்**—1. பலபாடை. 2. பாடபேதம். (1, 2-வழக்.)

**பாடி** — 1. சேனை. (சூ. நிக. ௨: ௮௨.) 2. நகரம். (சிலப். உரைபெறுகட்டுரை. ௯.) 3. நாடு. 4. பாசறை. 5. பாடுபவள். இ-பெண்பால் விகுதி. 5. பாராட்டி. (பரிபாடல்.) 6. பூமி. (ஆசிரியநி. ௯: ௫.) 7. முல்லைநிலத் தூர் (3, 4, 7-சூ. நிக. ௧௧: டகரவெ. ௭.)

**பாடிகம்**—படிகலிங்கம். (கோயிற்பு. பதஞ்சலி. ௪௯. உரை.)

**பாடித்தல்**—சொல்லுதல். (உ-ம்.) "சேடித்தவந்தனஞ்சிவனுக்குமூலத்தைப்-பாடித்தேயாகுதியைப்பண்" (சைவச. பொது. ௨௯௫.)

**பாடிதம்** — சொல்லல்; அது: பிறர்கேட்கச்சொல்லல். (உ-ம்.) "மானதமுமந்தமும்பாடிதமுமெனமந்திரந்தான்மூன்றாமூன்று - மோநமுறமானதகத்தேவாயகத்தேபிறர்கேட்க மொழிதலாகும்" (தணிகைபு. அகத்தியனருள். ௱௪௪.)

**பாடியகாரர்**—1. பதஞ்சலிமுனிவர். (பி-வி.) 2. பேருரைகாரருமாம்.

**பாடியம்** — விருத்தியுரை. (சிவஞானபோதப்பாடியம்.)

**பாடிரம்** — 1. சந்தநம். 2. துத்தநாகம். 3. மூங்கிலரிசி. (1, 2, 3-வைத்தியபரி.)

**பாடிவீடு**-பகைமேற்சென்றோருறைவிடம். (சூ. நிக. ௫: ௯௯.)

**பாடினம்**—சித்திரமூலம். (வைத்தியபரி.)

**பாடினி**—பாடுவாள். (உ-ம்.) "பாடினியணியாள்" (புறநா. ௨௪௨.)

**பாடீகம்** — 1. சந்தநம். (வைத்தியபரி.) 2. துத்தநாகம். 3. முகில். 4. மூங்கிலரிசி. (2,3,4, (உ-ம்.) வந்துழிக்காண்க.)

**பாடீநம்**—சித்திரமூலம். (வைத்தியபரி.)

**பாடீரம்** — சந்தநம். (உ-ம்.) "இரத்தை" பார். (தைல. தைலவ. ௫௨.) [பாடிரத்திற் கூறியபொருளெல்லா மிதற்கும்வரும்.]

பாடு—1. அநுபவிக்கை. (சிவரக. நந்திகேசுரர்கமனு. ௪.) 2. இடம். (சூ. நிக. கக: டகரவெ. க.) 3. உண்டாகுகை. படு என்பதன் முன்னீண்டதென்பர். 4. உதயத்திற்கு ஏழாமிடம். (உ-ம்.) 'கொடியோருதயத்தும்பாட்டினுநிற்கிற்சேய்கூற்றுவன்பாற்கடிதேயணைவுறும்' (விதான. சாதக. ௯.) 5. ஓசை. (உ-ம்.) "அவலெறியுலக்கைப்பாடுவிறந்து" (பெரும்பா. உ௪௬.) 6. ஒரேழாம்வேற்றுமையுருபு. (உ-ம்.) "பின்பாடளைதேமுறைமைவழியுழியுளி" (நன். ௩௦௨.) 7. கேடு. (பிங்கல. ௬௮௪௦.) 8. சுயகாரியம், அவன்பாடுபார்ப்பான். (வழக்.) 9. தகுதி. (உ-ம்.) "பகையாகும்பாடறியாதானையிரவு" (நான்மணி. ௫௪.) 10. துயில். (உ-ம்.) "பாடின்றிப்பசந்தகண்பைதல்பனிமல்க,வாடுபு" (கலி. ௧௬.) 11. தெரிநிலைவினைப்பகுதி. 12. பக்கம். (உ-ம்.) "கூட"பார். 13. படுக்கை. (உ-ம்.) "பன்னூறாயினும்பாடுகிடப்பே" (மணிமே. உதயஅம்பல. கரு௮.) 14. பெருமை. (உ-ம்.) "பாட்டுள்ளும்பாடெய்தும்பாட்டேயுள" (நான்மணி. ௬௨.) 15. முறைமை. (உ-ம்.) "பாடறிந்தொழுகும்பண்பினோரே" (புறநா. ௧௧௭.) 16. வருத்தம். 17. வேலை. (வழக்.) ஐங்குறுநூற்றிலியலென்பர்.

பாடுகிடத்தல் — வரங்கிடத்தல். (உ-ம்.) "பாசண்டச்சாத்தற்குப்பாடுகிடந்தாளுக்கு" (சிலப். கனாத்திற. கரு.)

பாடுதல்—1. இராகம்பாடுதல். (திருவிளை. இசைவாது. ௬.) 2. கவிசெய்தல். (திருவிளை. சங்கப்பலகை. க.) 3. வாசித்தல். (உ-ம்.) "பாடுதலெனினும்பாடலெனினுமொக்கும்" (பிங்கல. உ௦௪௦.)

பாடுநர்—புலவர். (உ-ம்.) "பாணர்பாடுநர்பரிசிலர்" (புறநா. ௧௩௫)

பாடுவாள்—பாடுவிச்சி. (வழக்.)

பாடுவிச்சி—பாடன்மகள். (சூ.நிக.உ:௬௫.)

பாடை—1. ஆசந்தி. (உ-ம்.) "ஒவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேல்" (தேவார. திருப்பாண்டிக்கொடுமுடி. ௯. சுந்தர.) 2. சொல்லு. (ஆ-நி. ௪௦: க.) பதினெண்பாடைக்கும்பெயர். 3. பருத்தி. (வைத்தியபரி.) 4. வட்டத்திருப்பி. (தைல. தைலவ.)

பாடைதுலைத்தான்—பாகல். (வைத்தியபரி.)

பாண்—1. இசைப்பாட்டு. (திருவிளை. விறகுவிற்ற.௮.) 2. கள். (வைத்தியபரி.) 3. தாழ்ச்சி. (சிந்தா.) 4. பாணச்சாதி. (உ-ம்.) "பாணுவப்பப்பசிதீர்த்தனன்" (புறநா. உ௯௯.) (திருக்கோவையார். ௧௮௯.) 5. பாழ். (உ-ம்.) "திறந்தபாண்கோயிலெய்தி" (சேதுபு. வேதாள. ௯௭.)

பாண்டம்—1. பாத்திரம், கொள்கலம். (சூ. நிக. எ: ௬௭.) 2. மட்கலம். (வழக்.)

பாண்டரங்கம்—திரிபுரதகனத்திற்செல்லுங்காலையில் தேர்நடத்தியபிரமன் கலைமகள் பிரிவாற்றாது வருந்துதலைநோக்கி இறைவன் வெண்ணீறணிந்து அவன்முன்னின்றாடிய ஆட்டம்; இஃது: ஆறங்கமுடையது. (உ-ம்.) "ஏறமர்கடவுண்மூவெயிலெய்வுழிக்.......படிநிலைதிரியாப்பாண்டரங்கம்மே" (கலி.க.உரை.)

பாண்டரங்கன் — சிவன், பாண்டரங்கநடனத்தையுடையவன். (வழக்.)

பாண்டரம் — 1. செஞ்சுண்ணாம்பு. 2. மல்லிகை. (1, 2-வைத்தியபரி.)

பாண்டல்—பாழ்த்துப்போனது. (வழக்.)

பாண்டவர்—பாண்டுபுத்திரர். (உ-ம்.) "பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகியவதரித்து" (பாரத. இராசசூய. க.)

பாண்டவேயன்—பாண்டு வமிசத்தான். (வழக்.)

பாண்டி—1. ஒருதேயம். (உ-ம்.) "பாண்டிநாடென்றபின்னர்" (திருவாத. திருவம்பல.௬.) 2. ஒருவிளையாட்டு. 3. பன்னான்குகுழிப்பலகை. (வழக்.) 4. மூங்கில். (வைத்தியபரி.)

பாண்டிகன்—பள்ளியெழுச்சி பாடுவோன்.

பாண்டித்தியம்—கல்வியறிவின்திறம். (வழக்.) நமக்கு எந்நூலிலேபாண்டித்தியமுண்டு.

பாண்டிமண்டலம்—பாண்டியனாடு. (உ-ம்.) "வளம்படியும்வயற்பாண்டிமண்டலத்துண்டு" (சேதுபு. நாட்டுச். ௬.)

பாண்டியம் — 1. அறிவுடைமை. (வழக்.) 2. பாண்டியன்றேயம். (மரூஉ.)

பாண்டியர்தலின்பழையவிராஜதானி — கொற்கைநகரம். (மணிமே)

பாண்டியன்— தமிழ்நாட்டு மூவேந்தரிலொருவன். (உ-ம்.) "சேரன்"பார்.

பாண்டிரம்—ஆல். (வைத்தியபரி.)

பாண்டில் — 1. அகல். (சூ. நிக. எ: ௬௯.) 2. எருது. (உ-ம்.) "காலிரும்பகடுபோக்குங் கரும்பெரும்பாண்டிலீட்டம்" (பெரியபு.நாட்டு. உ௪.) 3. கஞ்சதாளம், கைத்தாளம். (உ-ம்.) "நுண்ணுருக்குற்றவிளங்கடர்ப்பாண்டில்" (மலைபடு. ௪.) 4. கட்டில். (பிங்கல. ௧௬௬௯.) 5. கண்ணடி. (புறப்.மாலை.) 6. கிண்ணி. (உ-ம்.) "கழற்பாண்டில்" (புறநா. ௯௭.) 7. தேர்வட்டை. (உ-ம்.) "வையமும்பாண்டிலும்" (சிலப். ஊர்காண். ௬௬௮.) 8. நரையெருது. (உ-ம்.) "வாண்முகப்பாண்டில்" (சிறுபாண. உ௬௦.) 9. பண்டி. (உ-ம்.) "மலகாயமெண்ணுஞ்சுத்தி

ப்பாண்டிலிறுமிறும்" (மறைசை. கூச.) 10. மூங்கில். 11. வட்டம். 12. வாகனம். 13. வாகை மரம். (10, 11-பிங்கல. எஅக.) (9, 12-வைத்தியபரி.)

**பாண்டில்விளக்கு**—கால்விளக்கு. (உ-ம்.) "பாண்டில்விளக்கிற்பரூஉச்சுடரழல" (நெடுநல். கஎரு.)

**பாண்டிற்காசு** — வட்டக்காசு. (ஐங்குறுநூறு.)

**பாண்டிற்பொலங்கலம்**—வட்டமாகச் செய்த பொன்னணி. (ஐங்குறுநூறு.)

**பாண்டிரம்**—ஆல். (வைத்தியபரி.)

**பாண்டு**—1. ஒரு நோய். (தைல. தைலவ.) 2. சிறுபூளை. (வைத்தியபரி.) 3. திருதராட்டிரனுக்குத்தம்பியும், ஐவர்களுக்குத்தந்தையுமான ஓரரசன். (உ-ம்.) "பாண்டுபுத்திரர்க்கோறுமென்றருளிலாப்பாவியர்துணிந்தாரே" (பாரத.நச். கூ.) 4. வெள்ளை. (உ-ம்.) "பாண்டுகம்பளந்துளக்கியதாதலின்" (மணிமே.பாத்திரமரபு. உகூ.)

**பாண்டுகம்**—காமாலை. (வைத்தியநூல்களிற் காண்க.)

**பாண்டுகம்பளம்**—இந்திரன் ஆசனம். இதன் அசைவால் இந்திரன் உலகச்செய்திகளை அறிவானென்ப. (அபிதாநசி.)

**பாண்டுரம்**—1. ஒரு நோய். 2. ஒரு மரம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பாண்டுரை**—பாதிரிமரம். (வைத்தியபரி.)

**பாண்டுரோகம்**—பாண்டுவியாதி. (வழக்.)

**பாண்டுலா**—கதிப்புடோல்.(வைத்தியபரி.)

**பாண்டூர்**—ஓரூர். (உ-ம்.) "பாண்டூர்தன்னிலீண்டவிருந்தும்" (திருவாச. கீர்த்தித். எ0.)

**பாண்டை**—ஊழ்த்தநாற்றம். (வழக்.)

**பாண்மகள்** — பாடுவாள். (திருவிளை. இசைவாதுவெ. கூச.)

**பாண்மகன்** — பாணனுகியமகன். (உ-ம்.) "நைவளம்பழுநியநயந்தெரிபாலை-கைவல்பாண்மகன்கடனறிந்தியக்க" (சிறுபாண. கஎ.)

**பாணச்சி**—பாணத்தி. (வழக்.)

**பாணத்தி**—பாணப்பெண். (வழக்.)

**பாணம்** — 1. அம்பு. (சூ. நிக. எ: ரு.) 2. திப்பிலி. (உ-ம்.) "பாணந்தன்மூலம்" (தைல. தைலவ. கச.) 3. நாடகவகைபத்தினென்று. 4. பட்டு. (சூ. நிக. கக: ணகரவெ. கூ.) 5. மழைவண்ணக்குறிஞ்சி. (சூ. நிக. ச: உக.)

**பாணம்பழை**—வண்ணக்குறிஞ்சா. (வைத்தியபரி.)

**பாணர்**—1. தையற்காரர். (வழக்.) 2. பாடுவோர்.(பிங்கல.அகரு.) 3. வைசியன்பிராமணப்பெண்ணைப்புணரப்பிறந்தவர். (அபிதாநசிக்.)

**பாணல்**—வெற்றிலை. (வைத்தியபரி.)

**பாணலிங்கம்**-பாணனென்னுமொரு அன்பனாலே பூசிக்கப்பட்டலிங்கம்; இது: கண்டகிநதியிலெடுக்கப்படும். (சைவப்பி. கக.)

**பாணன்** — 1. ஒரு சாதியான், யாழ்வாசித்தலையுடையவன். (ஐங்குறுநூறு.) 2. காட்டாமணக்கு. (வைத்தியபரி.) 3. பலியின்புத்திரன். (மணிமே.) 4. பாழாகியவன். (உ-ம்.)"ஓர்பார்ப்பெனப்-பாணனேன்" (திருவாச. திருச்சத. சச) [அம்பலவாணன், மன்றவாணன், குன்றவாணன் என்பவற்றில் வாழ்நன்என்பது வாணனென நின்றாற்போல பாழ்நன்என்றது பாணன் என நின்றது.]

**பாணு**—பருத்தசட்டி. (வழக்.)

**பாணுத்தடி**—சிலம்பக்கம்பு. (வழக்.)

**பாணி** — 1. அழகு. 2. அன்பு. 3. இசை. 4. இடுதலும் ஏற்றலுஞ்செய்வதாய்க் கையிடத்துள்ள இந்திரியம். (ஞாநாசி.) 5. இலைச்சாறு. 6. ஊர். 7. ஊர்சூழ் சோலை. 8. ஓசை. (உ-ம்.) "ஈர்ந்தண்முழவின்பாணிததும்ப" (புறநா.ககூச) 9. கரண்டகபாடாணம். 10. கள். 11. காடு. 12. காலம். 13. கூத்து. (பிங்கல.ககசசச.) 14. கை. (உ-ம்.) "பாலலோசநவாலபோசநபாலமானுறுபாணியாய்" (ஏகாதசி. உருக்கு. சசு.) 15. சருக்கரை. 16. சொல். (பிங்கல. உ00உ.) 17. தாமதம். (சிந்தா.விமலை. சக.) 18. தாளம். (உ-ம்.) "மண்ணமைமுழவின் பண்ணமைசீறியா - ழொண்ணுதல்விறலியர்பாணிதூங்க" (பொருந. கக0.) 19. தெரிநிலைப்பகுதி. 20. நாடு. 21. நீர். (உ-ம்.)"வழுதுணங்காய்நனைபாணியிலிங்கமீதுவார்ந்து" (சிவரக. அபுத்திபூ. உரு.) 22. பலபண்டம். 23. பழச்சாறு. 24. பற்று. 25. பாட்டு. (உ-ம்.) "மாயோன்பாணியும்" (சிலப். கடலாடு. கூரு.) 26. வாச்சியப்பொது. இன்னும்வைத்தியபரிபாடையிற்கரும்புக்குங்கூறுவர்.(2,3-பிங்கல.கூஅகஉ.) (5,9,10,15,23-வைத்தியபரிபா.) (6,7,8,11, 12,14,20,21,22,24-சூ.நிக.கக:ணகரவெ.கச.)

**பாணிக்கிரகணம்** — கைப்பற்றல், மணச்சடங்கு. (பராசர. மி. க0.)

**பாணிரம்**—தாமரை. (வைத்தியபரி.)

**பாணித்தல்** — 1. பாவித்தல். (வழக்.) 2. பொழுதுநீட்டித்தல். (உ-ம்.) "பரமருன்னிடத்தருள்சுரந்திடவுநீபாணித்தல்பயனன்றால்" (சிவரக. தேவிமேருக. உஉ.) 3. மதித்தல். (உ-ம்.) "பராசரன்மதலைகேட்டப்பான்மைபாணிப்ப" (சேதுபு. இராமதீர். அக.)

**பாணிதம்** — கருப்பஞ்சாறு, 2. கற்கண்டு. (1, 2-வைத்தியபரி.)

பாணிநி—ஒரு சமஸ்கிருத இலக்கணநூலாசிரியன். (உ-ம்.) "வடமொழியைப்பாணிநிக்கு வகுத்தருளி" (அபிதானகோ.)

பாணிநீயம்—ஒரு வடமொழி இலக்கணம். பாணிநிமுநிவராற்செய்யப்பட்டது. (அபிதானகோச.)

பாணிப்பல்லி—வலம்புரிக்கொடி. (வைத்தியபரி.)

பாணிப்பு-பாணித்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

பாணிப்பூ-இலுப்பைப்பூ. (வைத்தியபரி.)

பாணிமுகம்-கைமுகம்; அது: சுட்டுவிரலும் பெருவிரலும்நீங்கின இடம். (சிந்தா.)

பாணியம்—வலம்புரிக்கொட்டை. (வைத்தியபரி.)

பாணிருகம்—தாமரை. (வைத்தியபரி.)

பாத்தகம்—பேராமுட்டி. (வைத்தியபரி.)

பாத்தம்—மருது. (வைத்தியபரி.)

பாத்தல் — 1 கொடுத்தல். 2. பங்கிடுதல். (உ-ம்.) "பாத்தூண்" (வள். உகூ.)

பாத்தி–1. சிறுசெய். 2. பங்கு. 3. பாய்ச்சுநீரொருபாலுஞ்செல்லாது நிற்கக்கட்டுஞ் சிறு வரம்புகளையுடைய பள்ளம். (உ-ம்.) "பாத்தி படுவள்ளிப்படுகுழியில்வந்திடலால்" (கந்தபு. வள்ளி.சஉ.) 4. வீடு. (1,2,4-பிங்கல.௬அகரு.)

பாத்திப்படுத்தல்— வளருநிலத்திலே நிலைபெறச்செய்தல். (உ-ம்.)"பகைவரைப்,பாத்திப் படுப்பதோராறு" (வள். சகூரு.)

பாத்திபம்—புறாமுட்டி. (வைத்தியபரி.)

பாத்தியத்தன்—பாத்தியன். (வழக்.)

பாத்தியத்திரவியங்கள்—வெண்கடுகு,இலாமிச்சம்வேர், சந்தனம், அறுகு என்னு நான்குமாம். (சைவவி. கஎ.)

பாத்தியம்–1. உரிமை. 2. சம்பந்தம். 3. பகுக்கப்பட்டது. பாத்து-பகுப்பு. 4. பாதமலம் பக்கொடுக்குநீர். (உ - ம்.) "பார்த்திவன் றனைப்பார்த்தவன்பாத்தியமுதலாஞ்-சீர்த்தநல் லுபசாரமுஞ்செய்தபின்" (சேதுபு. விதூம. கஉக.) 5. பிணை. (2, 5-வழக்.)

பாத்தியல் — தண்ணீர்விட்டான். (வைத்தியபரி.)

பாத்தியன்–1. உரியவன். 2. பிணைகாரன். (1, 2-வழக்.)

பாத்திரச்சுரை—ஒரு சுரை. (வழக்.)

பாத்திரம் — 1. இரப்போர்கலம். (உ - ம்.) "பங்கயன்றலையாற்செய்தபாத்திரங்கையிலேக் தும்" (சேதுபு. இராமநாத. எ0.) 2. உண்கலமுதலியகலங்கள். (வழக்.) 3. சற்பாத்திரம். (உ - ம்.) "தரிக்கவினிப்பாத்திராபாத்திரந்தாராவோ-டுரைப்பாமதாதாவையும். (சைவச. பொது. ௬கஎ.) [பா-பாவக்கடலினழுந்தினோர். திரம்-சிவனது திருவடியாகிய கரையிலிருத்துவோன்.] 4. தகுதி. (உ-ம்.) "உன்னரும்பாதபூசைக்குரியபாத்திரமானேன்" (சிவரக. மாநத. கக.)

பாத்திரவதம்—கருங்காலி. (வைத்தியபரி.)

பாத்திரவான்—, பாத்திரன்— } தகுதியோன். (வழக்.)

பாத்து—1. கஞ்சி. 2. சோறு. (உ-ம்.)"அட்டேயிட்டுண்பாத்துநைவேத்தியமாக" (சிவரக. அபுத்திபூ. உரு.) 3. பகுத்திடல். (1,3-சூ.நிக. கக: தகரவெ. கரு.)

பாத்துதல்—பங்கிடுதல். (உ-ம்.)"பாத்துண்ணுந்-தன்மையிலாளரயலிருப்பும்"(திரிகடு.க0)

பாத்துற்றன—பிரிவுற்றன. (கலி. கஙக. உரை.)

பாத்மகற்பம் — பதுமகற்பம். (கோயிற்பு. இரணிய. ஙக. உரை.)

பாத்மம்—பாத்மகற்பம். (உ-ம்.) "பான்மைதருங்கற்பமிதுபாத்மமெனும்பரிசுணர்ந்து" (கோயிற்பு. இரணிய. ஙக.)

பாதக்காப்பு—செருப்பு. (சூ. நிக. எ: சுகூ.) பாதங்காப்பு என்றுங்கூறுவர்.)

பாதகடகம்—பாடகம். (சூ. நிக. எ: உசு.)

பாதகம்—1. தடுப்பது. (சைவப்பி. உ.) 2. துரோகம். (வழக்.)

பாதகன்—துரோகி. (வழக்.)

பாதகாணிக்கை— பாதத்தினடியில்வைத்து வணங்கப்பெறுந்தக்கிணை. (வழக்.)

பாதகி—துரோகி. (உ - ம்.) "பாதகியினைய மாற்றம்பகர்தலும்" (கந்தபு. மகாகா. உச.)

பாதகிண்கிணி — நூபுரம். (பிங்கல.நிக. ககஅஉ.)

பாதகுறடு—பாதுகை. (வழக்.)

பாதச்சநி—வாக்குத்தானத்துச்சநி. (விதான.)

பாதச்சாயை — மிதித்தவடிநிழல். (வருஷாதிநூல்பார்.)

பாதச்சிலை—தூண்டாங்குமடிக்கல். (இராமா. மயேந்திர. உக.)

பாதசத்துவரம்—1. அரசமரம். 2. ஆலங்கட்டி. (1, 2-வைத்தியபரி.)

பாதசத்துவம்—அரசு. (வைத்தியபரி.)

பாதசரம்—ஒரு காலணி. (வழக்.)

பாதசன்—நான்காம்வருணன். (உ-ம்.) "பாதசன்கவியிற்பாங்காம்" (ஆசௌ. கஅ.)

பாதசாரம்—கிரகமன்றன்றுநிற்குநிலை.

பாதசாலம்—காலணிப்பொது. (சூ. நிக. எ: உசு.)

**பாதஞ்சலம்** — இயமநியமாதி அட்டாங்க யோகத்தால் மனோநிச்சலசித்தியாமென்றுசொல்லுமொரு சாத்திரம்; இது: பதஞ்சலிபகவான் சொன்னது. (சி. சி. உ: எகூ. மறை.)

**பாதஞ்சலர்**-உயிர் ஆகாயம்போல அருவாய் அவிகாரியாய் நிற்குமென்பவர். (சி. சி. ச: கரு: நிரம்ப.)

**பாதஞ்சலிகர்** — பாதஞ்சலநெறிநிற்போர். (த. நி. போ. கரு.)

**பாதஞ்சலியம்**—பதஞ்சலி செய்த நூல். (வழக்.)

**பாததீட்சை** — பாதமுத்திரைகொடுத்தல்; இது: தீட்சைவகையிலொன்று. (வழக்.)

**பாதந்தனம்**—தொழுவம். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**பாதநம்**—1. இழிதல். 2. தூக்கத்தாற்றலை சாய்த்தல். 3. விழுதல்.(உ-ம்.)வந்துழிக்காண்க.

**பாதபம்**—மரம். (உ-ம்.) "ஒளிகூர்பலை யுடைப்பாதபங்களுமே" (பாரத. அருச்சுனன் றவ. ருகூ.) [பாதவத்திற்குள்ள பொருள்கள். இதற்கும்வரும்.] காலானீரைக்கிரகிப்பது.

**பாதபரிசம்**—சீதரங்கபாஷாணம். (வைத்தியபரி.)

**பாதம்** — 1. இராகு. (உ-ம்.) வந்துழிக் காண்க. 2. ஐந்தாம் ஆறும்மாதத்திற் கருவழிதல். (ஆசௌ.) 3. கால்; இது: கருமேந்திரிய மைந்திலொன்றுமாம். (உ-ம்.) "அவர்பாதம் வணங்கினற்கு" (ம-தி. கமுo) 4. காற்பங்கு. (உ-ம்.)"செய்கசெபமாலைநூற்றெட்டினுற்பாதியுறச்-செய்யலுமாம்பாதத்துஞ்செய்" (சைவச. பொது. கசச.) 5. சரியைமுதலிய நாலுநிலைக்கும் பொதுப் பெயர். (சிவஞானபோ. சிறப்புப்.) 6. செய்யுட்களினடி. (யாப். காரிகை. செய். அ) 7. தடை. (சைவப்பி. உரு.) 8. நீர். (உ-ம்.) "உறுபோரஞ்சிப்பாதத்தில்வீழ்வரோ" (பாரத. பதினெட். கருச.) 9. பாகம், பங்கு. 10. பூரட்டாதி. (உ-ம்.) "பாதம்புனல் பதத்தின்" (விதாந. குண. உகூ.) 11. வட்டத்தின்நான்கலொன்று. 12. வியதிபாதம். உ-ம்.) "சூலமதிபரிவிட்கம்பம்பாதமரவுகண்டம்"(விதாந. பஞ்சா. உஅ.) 13. விழுதல். (சிவஞானசி. அ: உக)

**பாதரசம்**—சுத்திசெய்தரசம்.(வைத்தியபரி.)

**பாதரட்சை**—பாதுகை. (வழக்.

**பாதரதம்**—பாதரசம். (வழக்.

**பாதரம்**—மலையத்தி. (வைத்தியபரி.)

**பாதரோகணம்**—அரசமரம்.(வைத்தியபரி.)

**பாதலத்தம்பி**—நிலக்காளான். (தைல. தைலவ. எஉ.)

**பாதலம்**—1. சூரியனிற்குமிராசிக்கு நாலாமிராசி. (சோதிட.) 2. பாதாளம். (பாரத. இராயசூய. உச.)

**பாதவம்**—மரம். (சூ. நிக. ச: சச.) 2. மலை. (சூ. நிக. ரு: கக.)

**பாதளம்**—பாதலம். (வழக்.)

**பாதாதி**—பதாதி. (வழக்.)

**பாதாதிகேசம்** — பாதந்தொட்டுக்கேசபரியந்தமாகக் கலிவெண்பாவாற்பாடுவது. (இலக்கணவி. அகூரு. உரை.)

**பாதார்த்தம்**—எட்டிலொன்று. பாதம்-கால். அர்த்தம்-பாதி.

**பாதாளகங்கை**—கீழுலககதி. (வழக்.)

**பாதாளகிரகணம்**—காணுக்கிரகணம்.(வழக்)

**பாதாளம்** — 1. கீழுலகம். 2. சூரியனிற்கு மிராசிக்கு நாலாமிராசி. 3. நரகம்.(சூ.நிக.ரு:ச.)

**பாதாளமூலம்**—1. ஆடுதின்னாப்பாளை. 2. கறையான். 3. கோரைக்கிழங்கு. 4. சிறுநெருஞ்சில். 5 சீந்திற்கொடி. (1, 2, 3, 4, 5-வைத்தியபரி.)

**பாதாளமூலி** — 1. நெருஞ்சில். 2. பாதாளமூலியென்னுமொருவகைச்செடி. (உ-ம்.) "பாதாளமூலிபடருமே" (நல்வழி. உகூ.) 3. புழுக்கொல்லி. (1, 3-வைத்தியபரி.)

**பாதாளயோகம்**—சுக்கிரன்வியாழத்திலிருக்கப் பன்னிரண்டுக்குடையவன் உச்சனாகிப் பாக்கியாதிபதியுடன்கூடிநின்முற் பிரதானயோகமாம்; இஃது: ஐம்பத்தேழுவயதுக்குமேற் பன்னிரண்டுவருடம் நல்லயோகமென்பர். (சோதிடக்கட.)

**பாதாளவஞ்சநம்** — பூமிக்குட்பொருளைத் தெரியக்காட்டும் மை. (வழக்.)

**பாதாளவிலாசநிகள்** — பாதாளத்திலிருக்கும் எட்டிலட்சங்கந்நிகள். (த.நி.போ. கூஉகூ.)

**பாதி**—1. அரை. (உ-ம்.) "பாதியிரவினில்" (சிவரக. அபுத்திபூ. கக.) 2. துண்டு. (உ-ம்.) "முறிப்பாதி" (அரிச்ச. மயாந. சக.) 3. பங்கு. (பிங்கல. உஉசo.) 4. பாதியாயிருக்கிறவன். (உ-ம்.)"மடந்தைபாதியே"(திருவாச. அருட்.க.)

**பாதிக்கப்படுதல்**—கெடுக்கப்படுதல். (சி. சி. அள. க. சிவாக்.)

**பாதிடுதல்** — 1. பங்கிடுதல். (உ-ம்.) "கண்டோர்யார்க்கும்பாதிடுமரவோர்போல்" (கோயிற்பு. பதஞ்சலி. அஉ.) 2. பாதீடு, செறித்தல்.

**பாதித்தல்**—கூறுசெய்தல். (சி. சி. உ: அஎ. சிவாக்.)

**பாதிதம்**—தடுக்கப்பட்டது.(சைவப்பி.உo.)

**பாதிரம்**—1. மலையாத்தி. 2. மூங்கில். (1, 2-வைத்தியபரி.)

பாதிரி—1. கிறீஸ்தவகுரு. ஒருகுழூஉக்குறி. 2. பாதிரிமரம். (உ-ம்.) "பலாமாவைப்பாதிரி யைப்பார்" (ஔவைபாடல்.) 3. மூங்கில். (சூ. நிக. சு: கங.)

பாதிரிக்கூட்டம்—பாதிரிவேர், வில்வவேர், குமிழவேர், தழுதாழைவேர். (உ-ம்.) "இருசிர கம்"பார்.

பாதிரியம்—ஒருநோய். (உ-ம்.) "இருநெறி யின்றெதிப்பு"பார். [அது செவிடுபோலும்.]

பாதீடு—1. காத்தல். 2. செறித்தல். (சூ. நிக. கூ: ௯௪.) 3. பகுத்திடல். (உ-ம்.) "தந்துநிறை பாதீண்டாண்டுக்கொடையென" (தொல். பொரு. ருஅ.)

பாதுகம் — 1. தொடுதோல், செருப்பு. 2. பாதுகை. (இராமா. கிளைகண்டுநீங்குப. கசO.)

பாதுகாசித்தி—அந்தரத்தில்நடத்தல். [நீர் மேல் மிதியடியில் நடத்தல் என்பர்.] (உ-ம்.) வந்துழிக்காண்க.

பாதுகாத்தல் —காத்தல். (சூ. நிக. கூ: ௯௯.)

பாதுகாப்பு—
பாதுகாவல்— } பாதுகாத்தல். (வழக்.)

பாதுகை—1. அறுபத்துநாலுகலைகளிலொன்று; அது: செருப்பைத்தொட்டு நினைக்கில் நினைத்த இடத்திற்சேர்ப்பது. (சௌந். ௯O. உரை.) 2. சிறுசெருப்படை. (தைல. தைலவ. கருரு.) 3. மிதியடி. (உ-ம்.) "பாதபங்கயமுப நிடப்பாதுகைசூட" (திருவிளை. எல்லாம். கூ.)

பாதேந்திரியம்—கமனாதிகிரியைகளைச் செய்யுமிந்திரியம். (வாசுதே.)

பாதை — 1. தடை. (சைவப்பி.) 2. மரக்கலம். (சூ. நிக. எ: ருக.) 3. வழி (சிவரக. தேவர்முறை. உO.)

பாதைக்கூலை—பாகல். (வைத்தியபரி.)

பாதோசம்—தாமரை. (வைத்தியபரி.)

பாதோத்தூதம் — மல்யுத்தத்திற்குரிய எண் வகைக் கரணங்களுளொன்று; அது: காலினுற் றாக்கு யெறிவது. (கூர்மபு. தமோ. கரு. உரை.)

பாதோதம் —தாமரை. (வைத்தியபரி.)

பாந்தநம்—அரவு. (வைத்தியபரி.)

பாந்தம்—1. ஒழுங்கு. (வழக்.) 2. பகரவீறு. (உ-ம்.) "பாந்தஞ்செலவொடுவரவும்" (நன். கசரு.)

பாந்தல்—பதுங்கல். (சூ. நிக. கூ: கக.)

பாந்தவம்—பாந்தவியம். (வழக்.)

பாந்தவியம்—பந்துத்துவம். (வழக்.)

பாந்தள் — 1. பாம்பு. (உ-ம்.) "பஃறலைப் பாந்தளேந்தி" (இராமா. கார்கால. உ.) 2. பெரும்பாம்பு. (உ-ம்.) "பழுவும்பாந்தளும்" (கு-பா. உருக.)

பாந்தன்—வழிச்செல்வோன். (உ-ம்.) "அபராந்தர்பாந்தராகி" (இரகு. திக்கு. உஉக.)

பாந்து — 1. அளை. (வழக்.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

பாந்துதல்—பதுங்குதல். (வழக்.)

பாநகம்-பருகுதற்குரியஒருவகைநீர். (வழக்.)

பாநசியர்—மடையர். (சூ. நிக. உ: ௯எ.)

பாநபாத்திரம்—1 அறுபத்துநாலு கலைகளி லொன்று; அஃது: ஒருகரகத்தில் நினைத்தபாந மெல்லாந்தருவது. (சௌந். ௯O. உரை.) 2. குடிக்கும்பாத்திரம்.

பாநம்—1. அமுதம். (உ-ம்.) "பம்பல்"பார். 2. கள். (சூ. நிக. சு: ௯O.) 3. குடித்தல் (உ-ம்.) "நாதன்பூசனையமிர்தபாநம்போலும்" (சிவரக. பாக்கி. கரு.)

பாநி—பருகுவோன். (வழக்.)

பாநிக்குருச்சி—சீநக்காரம். (வைத்தியபரி.)

பாநியம்—1. பாநீயம். (உ-ம்.) "அங்நாதிபா நியாந்தம்" (சைவச. பொது. சசஅ.) 2. பாற் சோறு. (உ-ம்.) "தீவினைப்பயனும்வாளராப் பருகுபாநியம்போல்" (மதுரைப்பதிற்று. கூஅ.)

பாநியவல்லி—வலம்புரிக்கெடி. (வைத்திய பரிபா.)

பாநியாமலகம்—நெல்லியினோர் பேதம். (வழக்குப்போலும்.)

பாநீயம்—1. ஏலம், சந்தநம், பச்சைக்கர்ப் பூரம், பாதிரிப்பூ, செங்கழுநீர்ப்பூ என்பவைக ளிடப்பெற்றசலம். (சைவவி.) 2. நீர். (உ-ம்.) "பாதாளபூமியாதாரமீனபாநீயமேலைவயலூர" (திருப்பு. ௯உக) 3. பருகுவன.

பாநு—1. ஒளி. 2. சிற்பநூன்முப்பத்திரண்டி னொன்று. (பொருட். நிகண்டு.) 3. சூரியன். (உ-ம்.) "பாநுவுங்கடலிற்புக்கான்" (அரிச்ச. மயாந. க.) 4. தக்கன்மகள். (அபிதாநசிந்.)

பாநுகம்பன்—ஆயிரமுகமும் ஈராயிரங்கை களுமுடையவனும் நூற்றைம்பது கணவீரர்க் கதிபனும்ச் சிவசந்நிதியிற் சங்கவாத்தியமூழக் குஞ் செல்வத்தைப்பெற்றவன். (கூர்மபு. திருக் கல். ருரு. உரை.)

பாநுபலை—வாழை. (வைத்தியபரி.)

பாநுமதி—விக்கிரமார்க்கன்மனைவி. அவன் சரித்திரத்திற் காண்க.

பாநுமாநு — ரூபதன்மாத்திராதத்துவத்தி ருக்குமோரு ருத்திரன். (வி-ணி. உஎஉ.)

பாநுமைந்தன் — 1. கன்னன். 2. சநி. 3. சுக்கிரீவன். 4. நமன். இந்நாலுவருஞ் சூரிய னுக்குப் பிறந்தவர்கள்.

பாப்பாச்சி-ஒருவகைத்தொடுநோல்.(வழக்)
பாப்பாயம்—கோட்டம். (வைத்தியபரி.)
பாப்பாரநாகம்—பறைநாகம். (வழக்.)
பாப்பு—பிராமணசாதி. (வழக்.)
பாப்புப்பகை—கருடன். (பரிபாடல்.)
பாபக்கினம்—எள். (வைத்தியபரி.)
பாபக்கிரகம்—அசுபக்கிரகம்; அவை: ஆதித்தனும், அபரபக்கச்சந்திரனும், இராகுவும், கேதுவும், சனியும், செவ்வாயும், ஆதித்தனுடன் கூடிநின்றபுதனுமாம். (விதானமாலை. மரபிய. உ.)
பாபகரை—ஒரு நதி. (வி-ணி. உ௬௦.)
பாபத்தி—வேட்டை. (சூ. நிக. க: ௬௫.)
பாபத்து—விஷயக்குறிப்பு. [அரபி.]
பாபநட்சத்திரம் — சுககாரியங்கள்செய்யலாகாத நட்சத்திரங்கள்; அவை: திருவாதிரை, கேட்டை, ஆயிலியம், பரணி, கார்த்திகை, பூரம், பூராடம், பூரட்டாதியென்பன. (விதான. பஞ்சாங்க. கரு. முகம்.)
பாபம்—பாவம். (உ-ம்.) "பழி"பார்.
பாபமூர்த்திகள்—வேடர். (சூ. நிக. உ: ௬அ.)
பாபராசி—அசுபராசி; அவை: மேடம், சிங்கம், விருச்சிகம், மகரம், கும்பம் என்பன. (விதானமாலை. பஞ்சாங்கம். கச.)
பாபரோகம்—ஊழால்வருநோய். (வழக்.)
பாபி—பாவி. (வழக்.)
பாபிட்டன்—பாவஞ்செய்வோன். (வழக்.)
பாபிட்டை—பாவஞ்செய்பவள். (வழக்.)
பாபு—மேன்மைப்பொருளில்வருமோர் பட்டப்பெயர். [தெலுகு.]
பாபை—ஒருநதி. (வி-ணி. உ௬௦.)
பாம்பரணை—ஒராணை. (வழக்.)
பாம்பாட்டி — அந்தணன் சூத்திரகன்னியைப்புணரப் பிறந்தவன். (அபிதானசிந்.)
பாம்பாட்டிச்சித்தர் — ஒரு சித்தர். (அபிதானகோ.)
பாம்பினச்சுப்பல்—இதற்குத்தட்டமென்றுபெயர். (சூ. நிக. ௬: சகூ.) இந்தப்பல் காளி, காளாத்திரி, இயமன், இயமதூதியென நான்குவகைப்படும்.
பாம்பு-1. அரவு. (உ-ம்.) "பருந்தின்சிறைநிழலுற்றதுபாம்பின்கணம்" (சிவரக. நைமிச. ௬௫.) 2. ஆயிலியம். (உ-ம்.) "ஐம்பாணழனற்பதிற்பாம்பொடரனமுதாம்" (விதான. குணகுண. உகூ.) 3. கரை. (சூ. நிக. கக: மகரவெ: கச.) 4. சர்ப்பமுகூர்த்தம். (உ-ம்.) "அரன்பாம்பநுடம்" (விதான குண. எகூ.) 5. நாகப்பூச்சி.
பாம்புக்கண்ணி — சங்கங்குப்பி. (தைல. தைலவ. கoசு.)
பாம்புக்கல்—பாம்பின்விடத்தையிழுக்குங்கல். (வழக்.)
பாம்புக்குத்தச்சன்—கறையான். (மயூரகிரிக்கோவையிலறிக.)
பாம்புகொல்லி-ஒருபூண்டு. (வைத்தியபரி)
பாம்புணிக்கருங்கல்-விடத்தைப் போக்குமொருவகைக்கல். (தொல். சொல். ௬௫. சேனா.)
பாம்புமோச்சை — ஒரு பூண்டு. (வைத்தியபரி.)
பாம்புரி — 1. அகழி. (சூ. நிக. ரு: சச.) 2. ஒருமதிலுறுப்பு; அது: கீழேபுறப்படப்படுத்தது. (உ-ம்.) "தாமரைப்-பன்மலர்க்கிடங்குசூழ்பசும்பொற்பாம்புரிக்-கன்னிமூதெயில்" (சிந். பது. அரு.) 3. பாம்புச்சட்டை. உரி-தோல்.
பாம்புவிரல்—நடுவிரல். (வழக்.)
பாமக்கிநம்—கந்தகம். (வைத்தியபரி.)
பாமகள்—சரச்சுவதி. (உ-ம்.) "பண்டுநான்பூசைசெய்தபாமகள்போலுநீயே" (ஞானவா. லீலை. எச.)
பாமதம்—வாலுளுவை. (வைத்தியபரி.)
பாமம்—1. ஒளி. (உ-ம்.) வந்துழிக்காண்க. (சூ. நிக. அ: உஉ-ல்.) வாமம்என்றும். 2. பரப்பு. (உ-ம்.) "பாமமாகடல்கிடங்காக" (இராமா. அரசிய. எ.)
பாமரம்—அறிவின்மை. (உ-ம்.) "பாமரமடவாரின்றோர்பசுநம்மவைபுகாமல்" (சிவரக. வில்வலன். கஎ.)
பாமரர் — அறிவீனர். (திருக்குற்றல. மந்தமாருத. ௬௬.)
பாமரன்—அறிவீனன். (உ-ம்.) "பாமரனுக்கிநிற்புத்திவாரா" (சிவரக. சிவதண்டிவநபால சஉ.)
பாமன்-சூரியன். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பாமா—சிரங்கு. (சீவரட். கரு௦.)
பாமாரி—கந்தகம். (வைத்தியபரி.)
பாமினி—பெண். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பாமை—1. சிரங்கு. (தைல. தைலவ. எக.) 2. விரணம். (தைல. தைலவ. கச௦.)
பாய் — 1. தெரிகிலைவினைப்பகுதி. (உ-ம்.) "பாயொளிப்பரிதியும்" (கூர்மபு. தக்கன்வேள். சஉ.) 2. படுக்கும்பாய். (உ-ம்.) "பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே" (பட்டணத்தடி பா.) 3. பரப்பு. முதனிலைத்தொழிற் பெயர். (பிங்கல. உஉகஅ.)
பாய்க்கோரை—ஒரு புல். (வழக்.)
பாய்ச்சல்—பாய்தல். (வழக்.)
பாய்ச்சி—பாய்ச்சிக்கை. (வழக்.)
பாய்ச்சிக்கை — சொக்கட்டான்முதலியவற்றின் கவறு. (வழக்.)

பாய்ச்சு—1. தெரிநிலைவினைப்பகுதி. (பிறவினைப்பகுதி.)

பாய்ச்சுதல்—1. உட்செலுத்துதல். (வழக்.) 2. பாயச்செய்தல். (1, 2-பிறவினைத்தொழிற்பெயர்.)

பாய்ச்சுவலை—ஒரு வலை. (வழக்.)

பாய்த்தல் — பாயச்செய்தல். (பிறவினைத்தொழிற்பெயர்.

பாய்த்தி—பாய்ச்சி. (உ-ம்.) "தேன்பாய்த்தி நிரம்பிய" (திருவாச. திருவண். கசக.)

பாய்த்து — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பாய்ச்சல். (உ-ம்.) "தவளைப்பாய்த்து" (நன். ௩௮.)

பாய்த்துதல்—பாய்ச்சுதல். (வழக்.)

பாய்தல்—1. குத்தியுருவுதல். (உ-ம்.) "அழுக்கடையாநெஞ்சுருகமும்மலங்கள்பாயும்" (திருவாச. திருத்தசா. எ.) 2. தாண்டல். (பிங்கல. உகஅசு.) 3. நீர்முதலியபாய்தல். (உ-ம்.) "உதிரம்பாய" அரிச்ச. மயா. உ.) 4. பரத்தல். (பரிபாடல்.) 5. முட்டல். (வழக் ) கடாக்கள்பாய்கின்றன.

பாய்ந்தென—பாய்ந்ததாக. (பத்துப்பாட்டு.)

பாய்பு—பாய்ந்து. (பரிபாடல்.)

பாய்மரம்—கப்பலிற் பாய்தூக்குமரம். (உ-ம்.) "பாய்மரக்கொடிபோல்" (மதுரையந்தாதி.)

பாய்மா — 1. குதிரை. (புறப். மாலை.) 2. புலி. (1, 2-சூ. நிக. கக: நகரவெ. கச.)

பாய்விரி—பசளை. (வைத்தியபரி.)

பாய—பரப்பிய. (சிந்தா.)

பாயசம்—1. பரமாந்நம். (பாலபாட.) 2. பால். 3. பாற்சோற்றிச்செடி. (2, 3-வைத்தியபரி.)

பாயசாந்நம்—வேண்டிய அரிசியும் அதிற்பாதிகொண்ட பயற்றம்பருப்பும் அரிசியின் இருமடங்கேனும் மும்மடங்கேனும் நான்மடங்கேனும்பாலுங்கூட்டிப்பாகம்பண்ணப்பட்டது. (சைவச. பொது. ருசச. உரை.)

பாயம் — 1. நீர். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. புணர்ச்சியைக்கருதுங்கருத்து. (உ-ம்.) "சுர்ஞ்சேருடிபவிரும்பல்குட்டிப்—பன் மயிர்ப் பிணவோபொயம்போகாது" (பெரும்பா. ௬சஉ.) 3. மநத்துக்குவிருப்பமானவை. (உ - ம்.) "பாயம்பாடி" (கு-பா. ருஅ.)

பாயரங்கம்—பகிரங்கம். (த.நி.போ.கசரு.)

பாயல் —1. துயில். (உ-ம்.) "பாயல்பெறேஎன்படர்கூர்ந்து" (கலி. ௬எ.) 2. மக்கட்படுக்கை. (உ-ம்.) "பங்காதிப்பாயலோ" (பாரத. கிருட்டி. அ0.)

பாயலுணர்த்தி—எழுப்பி. (ஐங்குறுநூறு.)

பாயிரம்—முகவுரை, வரலாறு. (நன். பொதுப். க. உரை.)

பாயிருக்கை—பரந்தவிருப்பு. (உ-ம்.) "இருந்துபுறஞ்சுற்றியபெரும்பாயிருக்கையும்" (சிலப். இந்திரவி. ருசு.)

பாயினர்—பரந்தார். (புறப். மாலை.)

பாயு — குதம்; இது மலசலாதிகளை வெளியே தள்ளுவது. (நாஞசீ.) கன்மேந்திரியமைந்தனுளொன்று. (ஞானுமி.)

பாயுடையவர்—சமணர். (உ-ம்.) "பாயுடையவர்விடவிடநாகப்படிவுகொணிசிசரன்" (திருவிளை. நாக. அ.)

பாயுரு—பாயு.

பார் — 1. உரோகிணிநாள். (திவாகர. முதலா.) 2. தேர்ப்பலகைப்பரப்பு. (உ-ம்.) "கால்பார்கோத்துஞாலத்தியங்கும்" (புறநா. கஅரு.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பாறை. (உ-ம்.) "பார்முதிர்பனிக்கடல்கலங்கவுள்புக்கு" (திருமுரு. சரு ) 5. பூமி. (உ-ம்.) "பாரிடக்கெடுத்த மாவனையபாழியாய்" (இராமா. கவந்த. உ௬.) 6. வண்டிப்பார். (வழக்.) 7. வன்னிலம். (உ-ம்.) "கரவென்னும்,பார்தாக்கப்பக்குவிடும்" (வள். க0சு அ.)

பார்க்கவம்—உபபுராணம் பதினெட்டினொன்று. (வழக்.)

பார்க்கவன்—சுக்கிரன். (உ-ம்.) "பார்க்கவனென்னுமாசான்" (கந்தபு. கந்தவிரத. ரு.)

பார்க்கவி—1. சிறுதேக்கு. 2. வெள்ளறுகு (1, 2-மலையக.)

பார்கஸ்பத்தியம்—இரவினிகழும்பதினைா முகூர்த்தம். (விதான.குணகுண.எகூ.உரை.)

பார்ச்சட்டம் — வண்டியச்சின் மேலிடுசட்டம். (வழக்.)

பார்சி—பாரசீகம். பாரிசதேசமென்பர்.

பார்த்தல் — 1. ஆராய்தல். 2. நோக்குதல். 3. வணங்கல். (சூ. நிக. கூ: கக.) 4. விசாரித்தல். (உ - ம்.) "பார்த்திடினருளேயெல்லாம்" (சி. சி. க. ௬எ.) (1, 2-வழக்.)

பார்த்தன்—அருச்சுனன். (உ-ம்.) "பாராளக்கன்னனிகற்பார்த்தனைமுன்கொன்று" (பாரத. கிரு. ௬ரு.) [பிரதைக்குப்புத்திரனென்றபடி.]

பார்த்திட்ட—பரந்த. (சிந்தா.)

பார்த்திபசித்தி—தூலனுதல், சூக்குமனுதல், பாலனுதல், யௌவனனுதல், விருத்தனுதல், நாநாசாதிரூபமெய்தல், பிருதிவிபுறமாக நான்கு பூதத்திற்றேகந்தரித்தல், நித்தியசுகந்தம் போகித்தல் ஆகிய இவ்வெட்டும். (வி-ணி.)

பார்த்திபம்—பார்த்திவம். (வழக்.)

பார்த்திவ — வியாழவட்டமாகிய அறுபது வருடங்களிற் பத்தொன்பதாவதாண்டு. (வழக்.)

பார்த்திவம் — 1. பிருதுவிசம்பந்தமானது.

(சி.சி.க: உஅ, சிவாக்.) 2. பூமி. (சூ.நிக.ரு:அ.)

**பார்த்திவலிங்கம்** — மண்ணாற்செய்யப்படு மிலிங்கம்; இது: க்ஷணிகலிங்கம் பன்னிரண்டு வகையினொன்று. க்ஷணிலிங்கம்-பூசித்தவுடன் விடப்படுமிலிங்கம். சைவவினாவிடையிற் சிவலிங்கவியலிற் காண்க.

**பார்த்திவன்** — 1. அரசன். (உ-ம்.) "பரிதி நன்மரபில்வருபார்த்திவன்"(அரிச்ச.பாயிர உ.) 2. பூமியில் வசிக்கிறவன்.

**பார்த்திவி**—சீதை. பூமியிற்பிறந்தவளென்பதாம். (வழக்.)

**பார்ப்பதி** — 1. பார்வதி. (திருவிளை. வரகுணனுக்குச். உஉ.) 2. பெருநெருஞ்சில். (வைத்தியபரி.)

**பார்ப்பனத்தி**—பிராமணத்தி. (வழக்.)

**பார்ப்பனமாக்கள்** — பார்ப்பார். (உ - ம்.) "வேதப் - பனுவலுக்குந்தவத்தினுக்குமுரிய வேள்விப்பார்ப்பனமாக்களினிடையேபாண்டு மைந்த - ரநுவுருக்கொண்டுருமாரியிருந்ததன்மையறிந்து" (பாரத. திரௌபதி. சகூ.)

**பார்ப்பனி** — பிராமணப்பெண். (உ - ம்.) "உயிரைப்புறங்கொடுத்த—பண்ணேரமழலைமொழிப்பார்ப்பனியைக்கண்ணுற்றான்"(திருவிளை. பழியஞ். சு0.)

**பார்ப்பார்**—பிராமணர். (உ-ம்.) "பார்ப்பார் தவரேசுமந்தார்பினிப்பட்டார்" [வேதாந்தத்தையேபொருளென்று மேற்கொண்டுபார்ப்பாரென்றவாறு.]

**பார்ப்பார்மூவகைக்கடன்**—தேவர், முனிவர், தென்புலத்தார் ஆகிய மூவர்க்கும் முறையே செய்யப்படும்வேள்வியும், வேதமோதுதலும், மகப்பெறுதலும். [வ-று.] "மூன்றுகடன்கழித்தபார்ப்பானும்" என்னும் (திரிகடு. கூச-ஆஞ் செய்யுளாற்பெறப்படும்.

**பார்ப்பாராறுதொழில்** — ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் என்பன. (காஞ்சிப். ஒழுக்கப்பட. கூரு.)

**பார்ப்பான்**—1. ஈசன். (பரிபாடல். 2. ஒரு பூடு. (வைத்தியபரி.) 3. பிராமணன். (உ-ம்.) "சாம்பியழியவதென்பார்ப்பானென்ன" (திருவிளை. மாபாத. உஅ.) 4. வியாழன். (உ-ம்.) "பார்ப்பானுறுகிற்பெருமழையாம்" (விதாந. உற்பாத. கச.)

**பார்ப்பான்பூண்டு** — ஒரு பூண்டு. (வைத்தியபரி.

**பார்ப்பினி**—பார்ப்பனி.(உ-ம்.) 'முனிவர்பார்ப்பினிகள்பலரீண்டி'(கோயிற்பு.பதஞ்சலி.கரு.)

**பார்ப்பு**—1. கோட்டில்வாழ்விலங்கின் பிள்ளை. 2. தவழ்சாதியின்பிள்ளை. 3. பறவைக்குஞ்சு. (உ-ம்.) "பரிசயப்படுதண்சததளப்பொகுட்டுப்பார்ப்புறைபள்ளிவிட்டகலா" (பாரத. ராசசூ. உக.) 4. பார்த்தல். பு-தொழிற்பெயர் விகுதி. 5. பிரமசாதி. (வழக்.) 6. பிராமணத்துவம். (உ-ம்.) "பார்ப்பாயவேடங்கட்டி"(சி.சி. ச: உச. மறை.) 7. விலங்கின்பிள்ளை. (1,2,7-சூ. நிக. ௬: ௬௭, ௬அ, ச0.)

**பார்பதி**—பெருநெருஞ்சில். (வைத்தியபரி.)

**பார்மகள்**—பூமிதேவி. (உ-ம்.) "நேரிந்து பார்மகள்முதுகிற" (இராமா. கரன். அசு.)

**பார்மகள்சாரி**—கர்ப்பூரம்.

**பார்மிசைநடந்தோன்**—புத்தன். (பிங்கல. ககூச.)

**பார்வணம்** — யாகமிருபத்தொன்றினொன்று.

**பார்வதம்**—வாலுளுவை. 2. வேம்பு. (1, 2-வைத்தியபரி.)

**பார்வதி** — 1. உமை. (கூர்மபு. திருக்கல். கரு.) [பர்வதராசன்புத்திரியென்பதுபொருள்.] 2. பெருநெருஞ்சில். (வைத்தியபரி.)

**பார்வதிலோசநம்**—புறத்திற்குரியநாற்பத்தொரு தாளங்களிலொன்று. (திருவிளை. கான்மாறி. அ. உரை.)

**பார்வதேயம்**---மலையிற்பிறப்பன. (வழக்.)

**பார்வல்**—1. குஞ்சு. 2. பார்த்தல். (உ-ம்.) "பார்வலிருக்கை" (புறநா. ௬)

**பார்வற்பாசறை**—காவற்பாசறை. (பரிபாடல்.)

**பார்வை**-1. ஆராய்வு. 2. கண். (சூ. நிக. உ. கூசு.) 3. பார்த்தல். (உ-ம்.) "பார்வைச்செயலங்குனவாம்" (சிவாக.நந்திகண. கஉ.) 4. பார்வைமிருகம்.(உ-ம்.)"பார்வையாத்தபறைத்தாள்விளவி-ணீழன்மூன்றினிலவுரற்பெய்து" (பெரும்பா. கூரு.) 5. மேல்விசாரிப்பு. (வழக்.)

**பார்வைக்காரர்** — நோய்தீர்க்க மந்திரங் கணித்துப்பார்ப்போர். (வழக்.)

**பார்வைத்தகடு** — துறப்புவாய்தற்றகடு. (வழக்.)

**பார்வைப்படல்**— கண்ணுக்குப்புலப்படல். (உ - ம்.) "பரர்பார்வைப்பட்டாற்பலியாசெபங்கள்" (சைவச. பொது. கசக.)

**பார்வைபார்த்தல்**— நோய்தீர்க்கமந்திரமுச்சரித்தல். (வழக்.)

**பாரகம்**—1. இடுதிரைச்சீலை. (பிங்கல. கஉகூச.) 2. தோணி. (சூ.நிகண்டில்,பாரமென்றார். பாரகம் எனவும் வழக்குண்டு.) 3. பூமியிடம்.

**பாரகர்**—1. கரைகண்டவர்.(உ-ம்.) (கோயிற்பு. நடராச. ௬௬.) 2. சுமப்பவர். (உ-ம்.) "பார

கர்பரிக்கக்கொட்ட"(சி. சி. உ: கரு.) 3. நாயகர். (உ-ம்.) "ஒப்புடையமநத்தினராய்ப்பாரகர்பாரியர்வாழுமுறையுளெங்கும்" (அருணகிரிபு. நகர. கசு.)

**பாரகன்**—1. இரட்சிக்கிறவன். (சிவதரு.) 2. தாங்குமவன். (சிவதரு.)

**பாரகிதை**—வாதுளாகமம். (சி-வி. சரி. உ.)

**பாரங்கம்**—இலவங்கப்பட்டை. (வைத்தியபரிபா.)

**பாரங்கி**—1. கண்டுபாரங்கி. (தைல. (தைலவ.) 2. சிறுதேக்கு. (வைத்தியபரி.)

**பாரங்கு**—1. காட்டுப்பருத்தி. 2. சிறுதேக்கு. (1, 2-வைத்தியபரி.)

**பாரசவம்**—ஆயுதப்பொது.

**பாரசவன்** — பார்ப்பானுக்குச் சூத்திரச்சி பெற்ற பிள்ளை. (உ-ம்.) "சூத்திரர்தங்கன்னிதனைச்சுருதிமறையவனலரைச்சூட்டித் தோயவாய்த்தவன்பேர்பாரசவன்" (அருணகிரிபு வலம்புரி. கா௫.)

**பாரசிகை**—பருந்து. (சூ. நிக. ஈ: ருச.)

**பாரசிகம்**—பாரிசதேயம். (உ-ம்.) "பலர்புகழுங்கோரக்கமக்ரஞ்சிங்களமலயம்பாரசீகம்" (திருவிளை. மாணிக்கம். எஅ.)

**பாரணம்**—1. உண்டல். (உ-ம்) "ஆழிப்புவிபாரணஞ்செமத்தவேணியைத்தாங்கிய பால் விடையே" (மறைசை. கஅ.) 2. உபவாசமிருந்துண்ணல். (உ-ம்.) "நியமமாற்றியினிதுபாரணம்புரிவதியல்பேயன்றே"(சிவரக. சிவடுண்டிவனபாலன். ௬௭.)

**பாரணை**—பாரணம். (வழக்.)

**பாரத்துவாசம்** — 1. வலியன். (பிங்கல. உ௬சச.) 2. ஒரு வடநூல்.

**பாரத்துவாசன்** — 1. துரோணசாரியன். (பிங்கல. எ௬உ.) 2. பரத்துவாசமுனி. (பாரத. வாரணவ. ௬உ.)

**பாரதந்திரியம்**—பராதீநம். (வழக்.)

**பாரதம்**—1. இரதம், பாதரசம். (வைத்தியபரி.) 2. பாரதராது சரித்திரத்தைக்குறித்துச் செய்யப்பட்டநூல். (உ-ம்.) "நாடாமுதனான்மறைநான்முகனுவிற் - பாடாவிடைப்பாரதம்பகர்ந்தேன்" (வள்-மா. உ.) [முநிவர்கள்சீர்தூக்கிப்பார்க்கையில் இந்நூல் வேதங்களினும் பெரியது பாரமுமுடையதாயிருத்தலால் மகா என்னுமடைமொழிகொடுத்து மகாபாரதமென்று சொல்லப்படும் என்று வேதவியாசர்சொல்லியபடி கொள்ளலுமாம்.] 3. பாரதவருடம்.(உ-ம்.) "பாரதத்துள்ளாரவனிகிளைத்துமற்றும்பஃறொழிலும்புரிந்து" (கந்தபு. அண்டகோ. சகூ.)

**பாரதர்**—குருகுலவேந்தர். (சூ.நிக.உ:கசு.) [பரதனென்னுஞ்சந்திரகுல அரசன் மரபிற் பிறந்தவர்களென்றபடி.]

**பாரதவருடம்**—பரதகண்டம். (உ-ம்.) "பாரதம்"பார்.

**பாரதன்** — 1. குருகுலவேந்தரிலொருவன். (உ-ம்.) "பாரதம்"பார். 2. கூத்தாடி, பரதசம்பந்தமுடையவன்.

**பாரதி** — 1. சரசுவதி. (உ-ம்.) "மாசில்கவியிற்பாரதிநீ" (கூர்மபு.திருக்கல்.௬௫.) [பாவிற்பிரியமுடையவள்.] 2. மரக்கலம். (சூ. நிக. எ: ருக.)

**பாரதிதீபம்**—ஒரு நிகண்டென்பர்.

**பாரப்பழி**—மிகுகுற்றம். (வழக்.)

**பாரபட்சம்**—ஒரவாரம். (வழக்.)

**பாரபத்தியம்**-1.மேல்விசாரணை.[தெலுகு]

**பாரம்**—1. இரதம். (வைத்தியபரி.) 2. கடமை. 3. கனம். (உ-ம்.) "பாரக்குடர்மிடைபாசடை"(இராமா.கரன்.கூச.) 4.கரைப்பொது. 5. கவசம். 6. சுமைப்பொருள். (ஞானாமிர்தம்.) 7. குதிரைச்சேணம். 8. சுமை. 9. செய்யத்தக்கது. (உ.-ம்.) "பாரமீசன்பணியலதொன்றிலார்"(பெரியபு. திருக்கூட். க ) 10. துலாமிருபத்தெட்டுக்கொண்டது, ஒருவகை நிறை. 11. தோணி. 12. பருத்திப்பூ. (உ-ம்.)"பாரம்பீரம்பைங்குருக்கத்தி"(கு-பா. கூஉ.) 13. பூமி. 14. பொறுமை. 15. வருத்தம். (4, 5, 6, 7, 11, 13, 14-சூ.நிக. கக: ரகரவெ. உக.) (2, 8, 15-வழக்.)

**பாரம்பரம்** — கிரமங்கிரமமாய் வருவது. (வழக்.)

**பாரம்பரியம்**— இடையிட்டல்லாதகிரமம். (சி. சி. க. சரு. ஞாநப்.)

**பாரம்பரை** —பாரம்பரியம். (வழக்.)

**பாரமர்**—மாமரம். (வைத்தியபரி.)

**பாரமார்த்திகசீவன்**—கூடத்தன். (நாநாசீ. கச.)

**பாரமார்த்திகம்** — பரமார்த்தமுடையது. (சைவவி.)

**பாரமார்த்திகன்**—கூடத்தனது பரியாயநாமங்களுளொன்று. (உ-ம்.) "தாவரும்பாரமார்த்திகன்றுரியன்" (வேதாசூ. ருஉ.)

**பாரமுகார்க்கியம்** — சிவபூசைமுடிவிலே சிவபிரானையெழுந்தருளச்செய்யும்போது கொடுக்குமர்க்கியம். பராமுகார்க்கியம் என்பதுமிதுவே. (பூசைவிதியிலறிக.)

**பாரமேசுபரிபாவனை** — பிராமிபாவனை. (கூர்மபு. வருண. சகூ. உரை.)

**பாரமேசுரம்**—சதாசிவமூர்த்தியுடையஈசானமுகத்தினின்றுற்பவித்த இருபத்தெட்டாகமங்

களுளொன்று, கிரந்தசங்கியை பன்னிரண்டி லட்சம்; இதனைக்கேட்டவர் சீதேவி, உசநர். (சைவச. பொது. ருகள. உரை.)

**பாரமேசுவரரூபம்**—விசுவரூபம். (கந்தபு. திருவிளை. அஅ. குறிப்பு.)

**பாரமேட்டிசந்நியாசம்**—இருவகைச் சந்நியாசங்களுளொன்று. (கூர்மபு. வருண. சО. உரை.)

**பாரமேட்டிசந்நியாசி** — புலன்களை யுள்ளடக்கி யோகத்தைச்செய்து முத்தியடைய விரும்புவோன். (கூர்மபு. வருண. சО. உரை.)

**பாரவதம்** — புறுப்பொது, விகாரம். கரும்புறு. (சூ. நிக. ரு: சுக.)

**பாரறு**—தட்டற. (உ-ம்.) "பாவீற்றிருந்த கலைபாரறச்சென்றகேள்விக் – கோவீற்றிருந்த குடிநாட்டணிகூறலுற்றேன்" (சிந். நாமக. க.)

**பாராகம்**—உபநிடதமுப்பத்திரண்டி னொன்று. (பொருட். நிகண்டு.)

**பாராசரி**—சுக்கிரன். (அபிதானகோ.)

**பாராசரியம்**—தருமநூல் பதினெட்டினொன்று. (பொருட். நிகண்டில், பாராசரமென்பர்.)

**பாராசாரி**—பெருங்குதிரை. [அரபி.]

**பாராட்டல்**—1. கொண்டாடுதல். (உ-ம்.) "பற்றற்றகண்ணும்பழமைபாராட்டுதல்" (வள். ருஉச.) 2. பலகாலுஞ்சொல்லுதல். (உ-ம்.) "பயனில்சொற்பாராட்டுவானை" (வள். கசுரு.) 3. மெச்சுதல். [பாராட்டுதலுக்குள்ளபொருள்கள் இதற்கும்வரும்.]

**பாராட்டின்று**— கொண்டாடியது. (புறப். மாலை.)

**பாராட்டு**—1. அணைக்கை. 2. ஆடம்பரம். 3. கொண்டாட்டம். (உ-ம்.) "புலவலைசுநிறைய த்தேக்கிப்பாராட்டுத்தர" (சிவராத். கடவுள். ச.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. புகழ்ச்சி. (1, 2, 5-வழக்.)

**பாராட்டுக்காரன்**—புகழ்வோன். (வழக்.)

**பாராட்டுதல்**—1. உபசரித்தல், சிறப்பித்தல். (வழக்.) 2. ஓராட்டுதல். (உ-ம்.) "மைந்தரைத் தாங்கித்தாயார்மகிழ்ந்துபாராட்டு மோசை" (அருணகிரிபு. திருநாட். கச.) 3. புகழ்தல். (உ-ம்.) "பரமனுக்கன்பரானவடியர்பாராட்டுவாரென்று" (சிவரக. பாயிர. உO.)

**பாராட்டுந்தாய்**-ஐவகைத்தாயரிலொருத்தி. (சூ. நிக. கஉ: சச.)

**பாராயணம்**—நியமமாகப்படித்தல். (உ-ம்.) "வேதபாராயணப்பனுவன்மூவர்செய்பனுவலதுபகரவோ" (தாயு. சச்சி. .)

**பாராயணர்**—குறிக்கொள்வோர். (சூ. நிக. உ: சО.) நியமமாகக்கற்றதையறிவின் கண்ணமையப்பழகுவோர் என்பது கருத்தாகக்கொள்க. (வழக்.)

**பாராயணி**—சரச்சுவதி. பாராயணஞ்செய்வோன். (வழக்.)

**பாராருகம்**—மலை. (வைத்தியபரி.)

**பாராவதம்**—1. கருங்காசி. (வைத்தியபரி.) 2. கரும்புறு. (சூ. நிக. ரு: சுக.)

**பாராவலையம்**—பாராவளையம். (வழக்.)

**பாராவளையம்**—வளைதடி. (வழக்.)

**பாராவாரம்**—1. கடல். (உ-ம்.) "பாராவாரந்தனைப்பணிவன்" (சேதுபு. சேதுவந். உசு.) 2. கரை. (1, 2-பிங்கல. ருஅகஅ.)

**பாரி**—1. உதயத்திற்கேழாமிடம். (விதாந. மரபி. ச உரை.) 2. ஒருவள்ளல்; இவன்: முல்லைக்கொடிக்குத்தேர்கொடுத்தோன். (உ-ம்.) "பிறங்குவெள்ளருவிவீழுஞ்சாரற்–பறம்பிற் கோமான்பாரியும்" (சிறுபாண. கக.) 3. கட்டில். 4. கடல். 5. கள். 6 கோட்டம். (மலையக.) 7. தெரிநிலைவினைப்பகுதி. 8. நல்லாடை. 9. பருத்தகூ. (வழக்.) 10. பூந்தாது. (வைத்தியபரி.) 11. பூமி. (பிங்கல. ருஅககூ.) 12. மனைவி. (உ-ம்.) "பாரகர்"பார். (3, 4, 5, 8, 12. சூ. நிக. கக: ரகரவெ. கO.)

**பாரிக்கை**—பாரிப்பு. கை-தொழிற்பெயர் விகுதி.

**பாரிகாரர்**—இராக்காவற்காரர். (சி. சி. ச: ருஉ. சிவாக்.)

**பாரிசநாதர்** — சைநமதத்தில்முத்திபெற்றவரிலொருவர். (த. நி. போ. உஎசு.)

**பாரிசம்**—பக்கம். (சூ. நிக. சு: சுசு.)

**பாரிசவாதம்**—பாரிசவாயு. (வழக்.)

**பாரிசவாயு**—ஒரு நோய். (வழக்.)

**பாரிசாதம்**—1. ஐந்தருவினொன்று. (சூ. நிக. ச: உ.) 2. பவளமல்லிகை. 3. முருக்கு. (2, 3-வைத்தியபரி.

**பாரிசேடநியாயம்** — மூவரில் இருவரல்லரென்றால் ஒழிந்த ஒருவனென்றறியுநியாயம். (வி-ணி.)

**பாரிசேடம்** — ஒழிபென்னுமளவை: அது: சகத்துக்குக்கர்த்தா மாயையும் கன்மமும் ஆன்மாவுமல்லவெனவே சிவனே கர்த்தாவென்றநுமித்தறிதல். (சி. சி. அளவை. க. மறை.) [இது அநுமானத்திலடங்குமென்பர்.]

**பாரிடம்**—1. பூதம். (உ-ம்.) "பாறுபாரிடங்கள்பைத்தகூளிமொய்த்தவே" (திருவிளை. தண்ணீ. உக.) 2. பூமியிடம். பார்-பூமி.

**பாரித்த**—எடுத்துச்சொல்லிய. (வி-ணி.)

**பாரித்தல்**—1. அதிகரித்தல். 2. உண்டாக்கல், உருவாக்கல். (சூ. நிக. கூ: உ.) 3. காத்தல்.

(உ - ம்.) "பாசமாம்பற்றறுத்துப்பாரிக்குமாரிய னே" (திருவாச. சிவபுரா. சுச.) 4. பரப்புதல். (பிங்கல. உகளக.) 5. பருத்தல். (உ.ம்.) "பாரிக்குமாரமுலையுமையாட்கும்" (மறைசையந்.) 6. பாரமாதல். 7. வளர்த்தல். (உ-ம்.) "பகலென் னும்பண்பின்மைபாரிக்குநோய்" (வள். அறுக.) 8. வெளிப்படுத்தல். (உ - ம்.) "தம்பதியென் றுரைபாரித்தான்" (கோயிற்பு. திருவிழா. உ.)

பாரித்திரம்—முருங்கை. (வைத்தியபரி.)

பாரித்துரைத்தல்—விரித்துரைத்தல். (உ-ம்.) "பயனில-பாரித்துரைக்குமுரை"(வள். கககூ.)

பாரித்தேன் — பரக்கக்கூறினேன். (சிந்தாமணி. சுக.)

பாரிநாதம்—பற்படாகம். (வைத்தியபரி.)

பாரிப்பு—1. அடியிடுதல். (திருக்கோ.கஙஉ.) 2. அதிகரிப்பு. 3. ஒருப்பாடு. (உ-ம்.) "கனித்தொண்டைவாய்ச்சிகதிர்முலைப்பாரிப்புக் கண்டு" (திருக்கோ. கஙஉ.) 4. பருத்தல். (உ-ம்.) "பாரிக்குமாரமுலையுமையாள்" (மறைசையந்.)

பாரிபந்திரம் — 1. முருக்கு. 2. வேம்பு. (1, 2-வைத்தியபரி.)

பாரிபாவியம்—கோட்டம். (தைல.தைலவ. சுகூ.)

பாரியம்—1. கடுக்காய். 2. முருக்கு. (1, 2-வைத்தியபரி.)

பாரியாத்திரம்—ஒரு மலை. (திருவிளை. மாணிக்கம்வி. எஎ.)

பாரியாள்—1. பருத்தவள். 2. மனையாள். (1, 2-வழக்.)

பாரிவர்ணம்—முள்ளங்கி. (வைத்தியபரி.)

பாரீஸ்வநாதன்—சைநமதத்திற் சொல்லப் படும் இருபத்துநான்கு தீர்த்தகரரிலொருவன். (த. நி. போ. கங.)

பாரு—மருந்து. (வைத்தியபரி.)

பாருடியம்—1. பாருஷியம், அகில். (வைத்தியபரி.) 2. கொடுமை. (உ-ம்.) "தண்டபாருடியம், வாக்குப்பாருடியம்" என்பது வழக்குண்டு போலும்.

பாரை — 1. இருப்புலக்கை. (தைல. பாயிர. உ௦.) 2. ஒருமீன், அஃது: ஒட்டாம்பாரை, கட்டாம்பாரை, கண்ணிப்பாரை, காசாம்பரை, செங்கண்ணிப்பாரை, தோற்பாரையெனப் பல வகைப்படும். (ஒருதுழூஉக்குறி.) 3. கடப்பாரை. (உ-ம்.) "பாரைக்குநெக்குவிடாப்பாறைபசுமரத் தின்-வேருக்குநெக்குவிடும்" (நல்வழி. கூகூ.)

பாரைக்கோல் — 1. மீன்குத்தி. (பி. நிக. கசுசா௦.) 2. வழக்கிற் கடப்பாரைக்குக்கூறுவர்.

பால் — 1. இடம். (உ-ம்.) "பால்கடோறும் பரந்து" (அரிச்ச. நாட். உச.) 2. இயல்பு. 3. எழனுருபு. (உ-ம்.) "உன்பாலடைந்தேனுலகு டையமாதாவே"(உலகம்மையந்தாதி.) 4. கள்ளி முதலியவற்றிலிருந்து வெண்ணிறமும் நீர்த் தன்மையுடையதாய்வருவதொன்று. (வழக்.) 5. குணம். 6. திக்கு. 7. நிலம். (உ-ம்.) "பால்வரைகிளவியும்" (தொல். சொல். கக௦.) [வன்பால் மென்பால் என்பவாகலின் நிலத்தைப் பாலென்றார்.] 8. பக்கம். 9. பகுதி (உ - ம்.) "ஆண்பால்" 10. பங்கு. (சூ. நிக. கக: லகர வெ. உரு.) 11. பசுமுதலியவற்றின்முலையி லிருந்து வெண்ணிறமும் நீர்த்தன்மையுஞ் சுவையுடையதுமாய் வருவதொன்று. (உ-ம்.) "ஆனிரும்பாலும்" (திருவாத. மந்திரி. அ.) 12. பழவினை. (ஐங்குறுநூறு.) 13. பாதி. 14. விதி. (உ-ம்.) "பாறரவந்தபழவிறற்றாயம்" (புறநா. எரு.) 15. வெண்மை. (உ-ம்.) "பால் கொண்டநிழல்" (திருவிளை. மாயப். கஅ.) (2, 5, 6, 8, 12-பிங்கல. கூஅஉஉ.)

பால்பகாவஃறிணைப்பெயர் — ஒருமைப் பன்மைகளைக்காட்டும் விகுதியில்லாத அஃறிணைப்பெயர். (உ-ம்.) "பால்பகாவஃறிணைப்பெயர்கள்பாற்பொதுமைய" (நன். பெய. உச.)

பால்புந்து—தட்டைப்புங்கு.)வைத்தியபரி.)

பால்மாரிக்கை — சோம்பு. (வைத்தியபரி.)

பால்யம்—பாலப்பருவம். (சி.சி.ச:கூ. சிவாக்.)

பால்யன்—பாலன். (சி. சி. உ: கரு. சுப்.)

பால்வரைதெய்வம்—எல்லார்க்கு மின்பத் திற்குக்காரணமாகிய இருவினையையும் வகுப் பது.(உ-ம்.) "பால்வரைதெய்வம்வினையேபூத-ஞாயிறுதிங்கள்" (தொல். சொல். நுஎ. சேநா.)

பால்வழு—ஒருபாற்சொல் அத்திணைக்கண் ஏனைப்பாற்சொல்லோடுமுடிவது. (தொல். சொல். கக. சேநா.)

பால்வற்றிப்பழுத்தான்—ஈசுரமூலி. (வைத்தியபரி.)

பாலகம்—1. எள்ளு. (தைல.) 2. கோட்டம். (வைத்தியபரி.)

பாலகன்—1.காப்போன்.(வழக்.)2.குழந்தை. (உ-ம்.) "பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிட" (திருப்பல்லாண்டு. 3. சதருத்திரரில் அதோமுகத்திருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ௦.) 4. புத்திரன். (உ-ம்.) "என்னேயிந்தப் பாலகனிறந்தானென்னு" (அரிச்ச.மயாந. அ.)

பாலகி—புத்திரி. (வழக்.)

பாலகில்லர்—ஒருமுநிவகூட்டத்தார்.(உ ம்.) "பண்டயன்பயந்தருள்பாலகில்லரும்"(இராமா. அகத்தி. கூ.)

**பாலடை**—1. ஒரு பூடு; அது: சித்திரப்பாலடையென்றும், பாலடைச்செடியென்றும் வைத்தியபரிபாடையிற் கூறினர். குழந்தைகளுக்குப் பாலூட்டுகிறசங்கு. 2. பாலகப்பை. 3. பாலுறட்டி. (2, 3-வழக்.)

**பாலத்தாபநம்** — பழுதுபட்ட கோயிலைத் திருத்தற்காக அதனுள்ளிருந்தசுவாமியை வேறோரிடத்துக்கொண்டுவந்து தாபித்தல்.(வழக்.)

**பாலதனயம்**—கருங்காலி. (மலையக.)

**பாலநம்** — 1. காத்தல். 2. பாற்சோறு. 3. வெள்ளையன்னம். (வழக்.)

**பாலநன்**—காப்போன். (வழக்.)

**பாலம்** — 1. ஆறுமுதலியவற்றின்மேலே போக்குவரவுசெய்வதற்காக அமைக்கப்பட்டிருக்கும் பாதை. (வழக்.) 2. நெற்றி. 3. பூமி. (பிங்கல சசஅ.) 4. மழு. (2, 4-சூ. நிக. க௩: லகரவெ. உஉ)

**பாலர்**—1. இடையர். 2 காப்பவர். 3. பாலப்பருவப்பிள்ளைகள். (வழக்.)

**பாலவம்**—பஞ்சாங்கத்திலொன்றாகிய ஒரு கரணம். (பஞ்சாங்கத்திலறிக.)

**பாலவரை**—ஓரவரை. (வழக்.)

**பாலவாயம்** — வைடூரியம், நிகண்டுகளில் வாலவாயம் என்று கூறினர்.

**பாலன்** — 1. இடையன். பாலர் என்னும் பன்மைப்போல இஃதொருமைப்பெயரெனக. 2. எழுவயதுக்குட்பட்டவன். (உ-ம்.) "பாலனுமழிவதாயும்" (சி. சி. உ: கூகூ.) 3. காப்போன். 4. செய்யுளுக்குரியதாகப்பொருத்த மைந்தனுளொன்று. (உ-ம்.) "இறைவன்பேர்-முன்னெழுத்துப்பாலன்" (வெண்பாப். ரு.)

**பாலனைக்காத்தாள்**— மணித்தக்காளி. (வைத்தியபரி.)

**பாலாசம்**—இரதம். (வைத்தியபரி.)

**பாலாரிட்டதேவதை**-பதினாறுவயதுவரையுள்ள பாலகரைப்பிடித்துத்தனது விகாரத்தைக்காட்டிப் பலிபூசைகொள்ளுந் தேவதை. (வி-ணி. உகூஅ.) சீவகசிந்தாமணி. நாமகளிலம்பகம். உஅ0-ஆங்கவியுரையில் பாலாரிட்டம் பன்னீராண்டளவுமுண்டெனவுரைத்தார்.

**பாலி**—1. ஆல். 2. ஒருபாடை. 3. ஓர்யாறு. (காஞ்சிப்.நாட்டு.கரு.) 4. கள். (பிங்கல. ககசரு.) 5. செம்பருத்தி. 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. பாற்பசு. இ-விகுதி. (1, 5-மலையக.)

**பாலிகம்**—பாலித்தல்.(வேதாரு.கூ. உரை.)

**பாலிகை**—1 அம்பு. (மலையக.) 2. உதடு. 3. கத்திப்பிடி. (சிந்தாமணி. கூசஉ.) 4. படைவாளின்முட்டி. (சூ. நிக. கக: லகரவெ. கூ.) 5. பெண்பிள்ளை. (வழக்.) 6. முளைப்பாலிகை. (திருவிளை. திருமணப். கூகூ.) 7. வட்டம். (2, 5, 7-பிங்கல. கூஅஉக.)

**பாலித்தல்** — 1. அருளுதல். 2. காத்தல். (1, 2-வழக்.)

**பாலிதம்**—பெருந்தேக்கு. (வைத்தியபரி.)

**பாலிதன்**—வளர்ப்புப்புத்திரன். (வழக்குண்டு போலும்.)

**பாலியம்**—1. இளமை. 2. எழுவயதுக்குட்பட்ட பருவம். (1, 2-வழக்.)

**பாலியர்**—எழுவயசுக்குட்பட்ட பிள்ளைகள். (வழக்.)

**பாலிரல்**—வெட்பாலை. (வைத்தியபரி.)

**பாலிறுவி**—முருக்கு. (வைத்தியபரி.)

**பாலுகம்**—கருப்பூரம். (வைத்தியபரி.)

**பாலுண்ணி** — சரீரத்திலுண்டாகிற குமிழ்வடிவு (வழக்.)

**பாலேயம்** — கழுதை. நிகண்டில் வாலேயமென்றார்.

**பாலை** — 1. ஒரு குருவி. (வழக்குண்டுபோலும்.) 2. ஒரு கொடி; அவை: கொடிப்பாலை, உசிப்பாலை, எழிலைப்பாலை, கறிப்பாலை, குடசப்பாலை, கடுக்காய்ப்பாலை, திருநாமப்பாலை, நிலப்பாலை, பூப்பாலை, விழுப்பாலை, வெட்பாலை, எனப் பலவகைப்படும். (வைத்தியபரி.) 3. ஒரு மரம். (சூடா. கக: லகரவெ. எ.) 4. பதினாறு வயசிற்கு மேற்படாதவளாகிய பெண். (கொக்கோ. ச: உ.) 5. பாலைத்தன்மை. (உ-ம்.) "பாலைநின்றபாலைநெடுவழி" 6 பாலைத்திணை. (சூடா. கஉ. கூரு.) 7. பாலைநிலம். (உ-ம்.) "பாலைநெடுவழி" 8. பாலைப்பண். (உ-ம்.) "இன்றீம்பாலைமுனையின்" (பெரும்பா. கஅ0.) 9. பாலைப்பூ. (உ-ம்.) "தில்லைபாலைகல்லிவர்முல்லை" (கு. பா. எஎ.) 10. பாலைமரப்பட்டை. (உ-ம்.) "அழுக்கிரி"பார். 11. பாலையாழ். (உ-ம்.) "வைகளம்பழுநியபாலைவல்லோன்" (கு-பா. கசகூ.) 12. புனர்பூசநாள். (வீமசேநர். உள்ள.) 13. பொருள்வயிற்பிரிதல். (மதுரைக். கூகசு.) 14. மிருகசீரிடநாள். (பிங்கல. உசகூ.) (5, 7-சிறுபா. கக.)

**பாலைக்கருப்பொருள்**-பாலைநிலத்திற்குரிய பொருள்; அது: கன்னியாகியதெய்வமும், விடலையும், காளையும், மீளியும், எயிற்றியுமாகிய உயர்ந்தோரும்: எயினரும், எயிற்றியரும், மறவரும், மறத்தியருமாகிய தாழ்ந்தோரும்: புறாவும், பருந்தும், எருவையும், கழுகுமாகியபுள்ளும்: செந்நாயாகிய விலங்கும், குறும்பாகிய ஊரும், குழியுங்கூவலுமாகிய நீரும், குராவும்,

மராவும், உழிஞையுமாகியபூவும், பாலையும், ஓமையும், இருப்பையுமாகியமரமும், வழிபறித்தனவும், பதியிற்கவர்ந்தனவுமாகிய உணவும், துடியாகியபறையும், பாலையாழாகிய யாழும், பஞ்சுரமாகியபண்ணும், போர்புரிதலுஞ் பகற்சூறையாடலுமாகிய தொழிலுமெனப் பதினான்குவகைப்படும். (உ-ம்.) "கன்னிவிடலை,...... ......பகற்சூறையாடல்பாலைக்கருப்பொருளே" (அகப். அகத்திணை. உக.)

**பாலைக்கிழத்தி**—துர்க்கை. (உ-ம்.) "நவமி தனிவிளைத்திடுமேனெடும்பாலைக்கிழத்தியருணயந்து" (சேதுபு. துராசார. உகூ.)

**பாலைசான்றசுரம்**—பிரிவாகிய உரிப்பொருளமைந்த அருநிலம். (உ-ம்.) "பாலைசான்றசுரஞ்சேர்ந்தொருசார்" (மதுரைக். கூசச.)

**பாலைத்திணை** — ஐந்திணைகளுளொன்று; அது: பாலைமுதற்பொருள், பாலைக்கருப்பொருள், பாலை உரிப்பொருளென மூன்றுவகைப்படும். (உ-ம்.) "குறிஞ்சிப்பாலைமுல்லைமருதநெய்தலைந்திணைக்கெய்தியபெயரே" என்பதனாற் பெறப்படும். (அகப். அகத்திணை. கூ.)

**பாலைநிலம்** — ஐந்நிலத்தொன்று; அது: நீரும் நிழலுமில்லாச் சுரமுஞ் சுரஞ்சார்ந்தவிடமும். (அகப். அகத்திணை. கூ.)

**பாலைப்புறம்**—சுரநடை, முதுபாலை என விருதுறையாம். இவ்விரண்டனையும், நம்பியகப்பொருள் ஒழிபியல் கூ௫-ஆவது சூத்திரத்தில் அகப்புறப்பெருந்திணையென்றார்.

**பாலைமுதற்பொருள்**—பாலைத்திணைக்குரிய முதற்பொருள்; அது: சுரமுஞ் சுரஞ்சார்ந்தவிடமுமாகிய நிலமும், வேனிலும் நண்பகலும் பின்பனியுமாகிய பொழுதும் என இருவகைப்படும். (அகப். அகத்திணை. உச. உரை.)

**பாலையாழ்** — பாலைநிலத்தியாழ். (அகப். அகத்திணை. உக.)

**பாலையுரிப்பொருள்**—பாலைத்திணைக்குரிய உரிப்பொருள்; அது: பிரிதலும் பிரிதல்நிமித்தமுமென இரண்டு வகைப்படும். (அகப். அகத்திணை. உ௫. உரை.)

**பாலோடுவை**—கொடிப்பாலை. (வைத்தியபரிபா.)

**பாவகச்சேர்க்கையணி**—ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்ற இரண்டு கருத்துக்களையங்கமாகக்கொண்டுவருமணி. (குவல. க0சு.)

**பாவகத்தோற்றவணி** — கருத்து தயமங்கமாகவிளங்குமணி. (குவல. க0௫.)

**பாவகம்**—1. தியானம். (உ-ம்.) "பாவகமிறந்தநாதன்"(கோயிற்பு. இரணியவன். எக.) 2. தோற்றம். (திருவிளை. நரிபரியா. உஎ.) 3. பாவனை, அபிநயம். (உ-ம்.) "பாவகம்பலபல காட்டியபரிசும்" (திருவாச. கீர்த்தி. அஉ.)

**பாவகன்** — 1. அக்கினி. (தைல. தைலவ. கஙு.) 2. அக்கினிதேவன். (உ-ம்.)"பாவகனஞ் சக்கரந்துணித்தாய்" (ம-தி. சுக) 3. மின்னலினின்றும்பிறக்குமக்கினி. (உ-ம்.) "அழன்றவீசுமின்னிடத்திற்பிறந்தவழல்பாவகன்" (கூர்மபு. முனிவ. அ)

**பாவகாரி**—பாவஞ்செய்வோன். ஒருமைப்பெயர். (மணிமே.)

**பாவகாரிகள்**—பாவஞ்செய்பவர்கள். (உ-ம்.) "இதுவேபுணர்ப்பென்றுசூழ்ந்திசைந்து - பாவகாரிகள்பண்டுபோற்பழித்தழல் வளர்த்தார்" (திருவிளை. மாயப். சு.)

**பாவகி** —முருகன். (பிங்கல. கச0.)

**பாவசந்தியலங்காரம்** — பாவகச்சேர்க்கையணி. (குவல. க0சு.)

**பாவசபளாலங்காரம்** — பலகருத்துக்கள் மேன்மேலாக உண்டாகுமணி. (குவல. க0எ.)

**பாவட்டம்**—பாதிரி. (வைத்தியபரி.)

**பாவட்டா**—ஒரு கொடி. [இந்துஸ்.]

**பாவட்டை**—1. ஆடாதோடை 2. கிரணைச்செடி; அது: கரணைப்பாவட்டை, வெட்பாவட்டையென விருவகைப்படும். (வைத்தியபரி.)

**பாவட்டைச்சக்களத்தி**—ஒருசெடி; இது: பாவட்டைபோன்றிருப்பதென்பர்.

**பாவண்ணம்** — நூற்பாவண்ணம். (உ-ம்.) "அவற்றுட், பாஅவண்ணஞ்சொற்சீர்த்தாகி நூற்பாற்பயிலும்" (தொல். பொரு. ௫உஎ.)

**பாவத்திரயம்**—ஞாநவிகிருதிபாவம், மோகநவிகிருதிபாவம், வர்த்தநவிகிருதிபாவமென்னு முப்பாவங்கள். (வி-ணி.)

**பாவதத்திதன்** — பண்பின் முதனிலையோடும், ஆண்பெண்முதலாகிய பெயரோடும் மகரவைகாரமும் சிறுபான்மையுகாரமும் பொருந்தி வருவது. (உ-ம்.) "மூட்டாதுகூறியபல்வகைப் பண்பின்முதனிலையுங்-கட்டானவாண் பெண் முதலியநாமமுங்கைகலந்து - மட்டார்மலர்க்குழலாய்தன்மைகாட்டியமையுகரங்-தட்டாமனிற்பதுவேபாவதத்திதன்றண்டமிழ்க்கே" (பி-வி. கூச.)

**பாவநம்**-1. உற்சவபேதநான்கனுளொன்று; அது: துவசாரோகணமின்றித்தொடங்கித்தீர்த்தவாரியளவுஞ்செய்யப்படுவது. 2. எண்ணம். 3. கருதநுமானம். 4. சுத்திசெய்தல். 5. தவம். 6. தியாநம். 7 தூபம். 8. தூய்மை. (உ-ம்.) "பாவநஞ்செய்வோருநினையில்"(துறைசையக.) வினையவற்றிற்குதாரணம் வந்துழிக்காண்க.

**பாவநாகந்தம்** – பஞ்சகந்தங்களுளொன்று; அது: அருள், அவாவின்மை, தவவிருப்பம், இனியவைகூறல், மெய்ம்மைகூறல், பயனுளகூறல், அறமுரைத்தல், வணக்கம், ஈகை, தவஞ்செய்தல் ஆகியநற்குணம்பத்தும்; தீயசிந்தனை, ஆசை, கோபம், கடுஞ்சொல், பொய்யுரை, பயனில்சொல், கோட்சொல், களவு, கொலை, வீண்செய்கை ஆகிய தீக்குணம் பத்துமாம். (சி. சி. பரபட்ச. ரு. உரை.)

**பாவநாசம்** — 1. ஒரு தலம்.; இது: திருக்குற்றாலத்திற்கு தெற்கேயுள்ளது. 2. பாவநீக்குதல்.

**பாவநாத்திரயம்** — சமுச்சயபாவனை, அசம்பாவனை, விபரீதபாவனை என்பன. (வாசுதே. கசுக.)

**பாவநி**–1. கங்கை. 2. துளசி. 3. பசு. (1, 2, 3-வைத்தியபரி.)

**பாவனை** — 1. அதர்வணவேத உபநிடதத்தொன்று. (கங். நவ. கஅ.) 2. சிந்தனை. (திருவிளை. அட்டமாசித்தி. உகூ.) 3. தியானம். (உ-ம்.) "தீர்த்தல்"பார். 4. தெளிதல். (நன்னூல்விருத்தி. பாயிரவுரை.) 5. பாவநாகந்தம். (உ-ம். "ஓங்குருவம்வேதனைநயுளக்குறிப்புப்பா (வனைமெய்–தாங்குணர்வென்றைந்தாங்கந்தம்" (மணிமே. பாவத்திற. கசுo. உரை.) 6. "ம" என்னு மக்கரத்தினதிதேவதை. (சி.சி.அ:உக. மறை)

**பாவனைபண்ணுதல்** — 1. பாசாங்குபண்ணல். 2. பாவித்தல். (1, 2-வழக்.)

**பாவபதம்** — பிராதிபதிகம். (பி. வி. சஉ உரை.)

**பாவம்**—1. அக்கிரமம். (உ-ம்.) "சொல்லரியபாவியிவற்சண்டபாவம்" (சிவரக. சிவதன்மா. க.) 2. (பரதங்)அவிநயம்; அவை: வெருண்டோனவிநயம், ஐயமுற்றோனவிநயம், சோம்பினோனவிநயம், களித்தோனவிநயம், வெயிற்றலைப்பட்டோனவிநயம், நஞ்சுண்டோனவிநயம், வெப்பினவிநயம், உவந்தோன விநயம், அழுக்காறுடையானவிநயம், இன்பமுற்றோனவிநயம், தெய்வமுற்றோனவிநயம், அஞ்ஞையுற்றோனவிநயம், உடன்பட்டோன விநயம், உறங்கினோனவிநயம், துயிலுணர்ந்தோனவிநயம், செத்தோனவிநயம், வருத்தமுற்றோனவிநயம், கண்ணோவுற்றோனவிநயம், தலைநோவுற்றோனவிநயம், அழற்றிறம்பட்டோனவிநயம், சீதமுற்றோனவிநயம், மழைபெய்யப்பட்டோனவிநயம், பனித்தலைப்பட்டோனவிநயம், என இருபத்துநான்கு வகைப்படும். (திருவிளை. மாநியாடின. அ. உரை.) 3. அறிவு. (உ-ம்.) "அகமினதுபாவாபாவங்கள்" (வேதா. சூ. கoஅ.) 4. ஐம்பது. (த. நி. போ. உகo.) 5. ஒன்றிலேயொன்றுண்டாகுகை, பிறத்தல். (சி. பி.) 6. சிவமாகியதத்துவமும் சதாசிவமாயமூர்த்தியுஞ்சேர்ந்தது. (சித்தா.சாரா. ஞாந. கூ.) 7. தியாநம். (சூ. நிக. கக: வகரவெ. கசு.) 8. நரகம். (பிங்கல. சருரு.) 9. நோக்கம், அபிப்பிராயம். (உ-ம்.)"என்னபாவமற்றென்னையின்றென்சொலாதுலகே" (பாரத. தற்சிறப்பு. ரு.) 10. பாவனை. (ஞானமி.) 11. மெய்ப்பாட்டுக்குறிப்பு. (தண்டியலங். எ-ஆம் சூத்.) இது, தொல்காப்பியத்தில் எண்வகைப்படுமென்றார். 12. விலக்கப்பட்டதீவினைவடிவமாய்த் துக்கசாதனமாயிருப்பது; அவை: ஈசுவரதூஷணம், சீவவிரோதம், துரோகம், காமம், உலோபம், கார்ப்பண்யம், மற்சரம், வஞ்சகம், மதம், அநாதரம், கோபம், அசூயை, பொய், குறளை, கடுஞ்சொல், கொலை, களவு, வியபிசாரம், நன்றிமறத்தல், புலாலுண்ணல், கள்ளருந்தல், ஆசௌசம், நித்தியகருமலோபம் முதலியன. (வி-ணி. உஉக)

**பாவம்பத்து**— மனத்திற் றோன்றுவன மூன்று, வாக்கிற்றோன்றுவனநான்கு, உடம்பிற்றோன்றுவனமூன்று. (மணிமே பௌ.உஉஉகூ.)

**பாவமூலம்**–ஆணவமலம். (த.நி.போ.கஅஉ.)

**பாவல்**–1. பரவுதல். 2. பாதகுறடு. (சூ.நிக. எ: சுஉ.)

**பாவலர்**—பாவில்வல்லவர். (உ-ம்.) "பாவலர்க்கொடன்றியும்" (சிவரக. கணபதிமறு. க.)

**பாவநபம்** — கன்மரூபம். (சி. சி. உ: கூகூ. சிவாக்.)

**பாவனைநான்கு**—மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷையென்பன; இவை: மகாபிரஹ்மாக்களாலநுட்டிக்கப்படுவதாதலின் பிரஹ்மவிகாரபாவனையென்று கூறப்படும். (பௌ.)

**பாவவாரம்**—ஞாயிறு, செவ்வாய், சநி என்னும் வாரங்கள். (விதாந.)

**பாவாகாரம்**—பரசிவம், சதாசிவம் என்னுமிரண்டுஞ்சேர்ந்த உருவம். (சி-வி. ஞாந. கூ.)

**பாவாடை**—1. ஆடாதோடை. 2. திரணைச்செடி. 3. நிலத்தில்விரிக்குஞ்சீலை. 4. பெண்களாடை. (1, 2-வைத்தியபரி.) (3, 4-வழக்.)

**பாவாடைப்பூ**—இலுப்பைப்பூ. (வைத்தியபரி.)

**பாவாடையழுது**–ஒருவகை நைவேத்தியம். (வழக்.)

**பாவாணர்**—புலவர். (உ-ம்.) "தமிழ்ப்பாவாணர்செவிநுகர்பேரமுதமாக" (சேதபு. அவையடக். கஉ.)

பாவாற்றி—நெய்வார்குச்சு.(சூ நிக.எ:ஙுள.)

பாவி—1. தீயோன். (உ-ம்.) "தாக்கு"பார். 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வரக்கடவது. (உ-ம்.) "ஆவியார்நிலைபெறுபவர்நீதிகூறரிய வான்புகழன்றிப் – பாவியானதங்கணுகுறுதொழியினும்" (பாரத. சூதுபோ. எசு.)

பாவிகம்—பாவிகாலங்காரம்; அது: கவிஞனுடையகருத்திலே காப்பியங்களிலே அமைந்துதோன்றுங்குணம். (உ-ம்.)"பாவிகமென்பது காப்பியப்பண்பே" (தண்டி. அக.)

பாவித்தல்—1. உளஞ்செய்தல். (உ-ம்.) "வேறுவேறுலோகமுமழுவுரைகரந்த – சித்த சாமிகணீற்றினைச்சிதறினர்பாவித்து" (திருவிளை. இரசவாத. உசு.) 2. தியாநித்தல். (சி. சி. சூ: எ. நிரம்ப.) 3. பாவனைசெய்தல், ஒன்றையொன்றாகப்பாவனைசெய்தல். 4. பொய்யாய் நடித்தல். (வழக்.)

பாவித்திரம்—மூன்றுலகம். (உ-ம்.)வந்துழிக் காண்க.

பாவிதம்—1. கலப்பு. 2. சங்கற்பித்தல். 3. பாவிப்பு. (1, 2, 3-வழக்.கண்டுபோலும்.)

பாவிதன்—பாவிக்கப்பட்டவன். (சி. சி. அ: கக. சிவாக்.)

பாவிப்பு—பாவனை. (வழக்.)

பாவியம்—அருகம். (உ-ம்.) "பாவியமல்லாததுரைப்பான்" (சைவச. ஆசாரிய. கஎ.)

பாவியர்—1. தீவினையாளர். 2. பாவகத்தையுடையார். (ஞாஞமி.)

பாவியாதல்—உண்டாதல், வருதல். (சி. சி. க: சுசு. சிவாக்.)

பாவிரி—பசளை. (வைத்தியபரி.) (சூ. நிக-ல். பசிரியென்பர்.)

பாவிநச்சர்—இருக்குவேதம் ஓதுகின்றவர்கள். (அபிதாநசிந்.)

பாவின்புணர்ப்பு — சித்திரக்கவிகளுளொன்று; அது: நால்வர்நான்கடிக்கு ஈற்றுரை சொன்னால் தான் அடிக்கு முதல் பாடிப்பொருண்முடிப்பது. (உ-ம்) "பாதமயக்கேபாவின் புணர்ப்பே" (யாப்பருங்கலம். செய்யு. கூசு.)

பாவினம் — நால்வகைப்பாக்களுக்கு இனமாகவரும் தாழிசைதுறைவிருத்தங்கள். (யாப். காரிகை.)

பாவு—தெரிநிலைவினைப்பகுதி.

பாவுதல்—1. தளவரிசைசெய்தல். 2. நாற்றுவிடல். 3. பரப்புதல். 4. விரித்தல். (1, 2, 3, 4-வழக்)

பாவை—1. அசுரர்கள் போர்க்கோலத்தையொழிந்துமோகிக்க இலக்குமி மோகினிவடிவங்கொண்டாடிய ஆட்டம்; இது: இரண்டங்கமுடையது. (உ-ம்.) "திருவின்செய்யோளாடிய பாவையும்" (சிலப். கடலாடு. சுக.) 2. கண்ணிற்பாவை. (உ-ம்.) "புரப்பேர்புன்கண்பாவை சோர" (புறநா. உகூடு.) 3. கொல்லியம்பாவை. (உ-ம்.) "ஒப்பரும்பாவைபோன்றுறையுமென்பவே" (சிந்தா. நாமக. கசுஅ.) 4. சித்திரப்பாவை. (நன்னூ. பொதுப். சo.) 5. பதிமை, பிரதிமை. 6. பெண், உவமை. (ஆகுபெயர்.)

பாவைக்கூத்து—பாவையாட்டுதல்.(உ-ம்.) "தோற்பாவைக்கூத்தும்" (சி. சி. சு: உசு.)

பாவோடல்— } நெய்வார்தொழிலினொன்று. (வழக்.)
பாவோடுதல்— }

பாவோதயம் — பாவகத்தோற்றமென்னுமணி. (குவல. சoடு.)

பாழ்—1. அழிவு. 2. கெடுதி. 3. சூநியம். (உ-ம்.) "வெறும்பாழ்விளைந்தசுகஞ்சொல்லில்" (ஒழிவிலொ. சத்திநி. உஎ.) 4. தெரிநிலைப்பகுதி. 5. நட்டம். 6. பாழ்நிலம். (சூ. நிக. டு: உக) 7. புருடன். (பரிபாடல்.) 8. வறுமை. (புறப்-மாலை.) (1, 2, 4, 5-வழக்.)

பாழ்க்குதல்—சூநியமாக்கல். (வழக்.)

பாழ்த்தல்—பாழாகுதல். (வழக்.)

பாழ்நிலம்—கரம்பு. (சூ. நிக. டு: உக.)

பாழ்படுதல்—அழிதல். (வழக்.)

பாழாக்கல்— } அழித்தல். (வழக்.)
பாழாக்குதல்— }

பாழாதல்—அழிதல். (வழக்.)

பாழி — 1. அகலம். (சூ. நிக. அ: கஉ.) 2. ஆகாயம். (உ-ம்) வந்துழிக்காண்க. 3. ஊர். (பிங்கல. சஎடு.) 4. சயநம். (சூ. நிக. டு: டுஅ.) 5. சிறுகுளம்; இது: திசைச்சொல். (நன்னூ. பெயரி. கசு. உரை.) 6. பகைவரூர். (சூ. நிக. கக: ழகரவெ. உ.) 7. பதம். (சூ. நிக. கo: கூ.) 8. பாழ். 9. பெருமை. (உ-ம்.) "பாழ்வெஞ்சிலையுவணமும்" (உபதேச. சூராதி. க.) 10. முனிவர்வாசம். (உ-ம்.) "எங்குமமணர்பாழிகளாய்" (பெரியபு. தண்டி. சு.) 11. முழைஞ்சு. (உ-ம்.) "பாழிமால்வரையெறிதிரை" (கந்தபு. நகர. க.) 12. வலி. 13. விலங்கின்படுக்கை. (8, 12, 13-பிங்கல. நிக. கூஅஉகூ.)

பாழுக்கிறைத்தல் — பயனற்ற நிலத்துக்கு நீரிறைத்தல். (உ-ம்.) "ஏழைத்தொழும்பனேனைத்தனையோகாலமெல்லாம் – பாழுக்கிறைத்தேன்" (திருவாச. திருத்தோ. கூ.)

பாளச்சீலை—மருந்துபூசிக்காயவைத்த புடவை. ஒரு குழூஉக்குறி.)

பாளம் — 1. உலோகக்கட்டி. 2. சிலையின் கிழிவு. 3. வெடிப்பு (வைத்தியபரி.) (1, 2-வழக்.)

பாளி—பாசறை. (பிங்கல. கூஉசு.)

**பாளித்தியம்**-ஒருநூல்.(யாப்.காரி.௧.முகவு.)

**பாளிதம்** — 1. கண்டசருக்கரை. 2. கருப்பூரம். (பிங்கல. ௩௯௦௪.) 3. குழம்பு. 4. சந்தநம். (தைல. தைலவ. ௧௩௪.) 5. சோறு. 6. பட்டுப்புடவை. (1, 3, 5, 6-சூ. நிக. ௧௧: ளகரவெ. ௫.)

**பாளீபாஷை** — வடமொழிப்பகுதியாகவுடைய பாஷைகளுள் முந்தியது. (மணிமே.)

**பாளை**—கமுகு, தெங்கு, பனைமுதலியவற்றில் வரும்பாளை. (உ-ம்.) "பாளையோதியொரு திங்கள்பார்த்தனள்" (சிவரக. மேரு. ௨௯.)

**பாளையகாரன்** — 1. அரசர்க்குக்கீழ்ச் சில சேனையோடும் ஒவ்வோர்புரங்கட் கதிகாரியாயிருப்போன். 2. படைத்தலைவன். பாளையம் - படை. (1, 2-வழக்.)

**பாளைப்பருவம்**-பாலப்பருவத்திற்குமுந்திய கருவிலொருபருவம். (பன்னூற்றிரட்டு. ௯௦௦.)

**பாளையம்**—1. படை. 2. பாசறை. (பிங்கல. ௬௨௪.) (1, 2-வழக்.)

**பாற்கடல்**— சத்தசமுத்திரத் தொன்று. "பாற்கடலாரமுதங்கெழுமித்தழைத்து" (அரிச்ச. நாட்டுப். ௨.)

**பாற்கடற்பிறந்தாள்**—இலக்குமி. (சூ. நிக. ௧: ௯௪.)

**பாற்கரம்** — உபநிடத முப்பத்திரண்டினொன்று. (பொருட்டொகை நிகண்டு.)

**பாற்கரன்**—ஆதித்தன். (சூடா. ௧: ௫௫.)

**பாற்கரியவாதம்** — ஏகான்மவாதம் நான்கு வகையுளொன்று; இது: பிரமமேசடமுஞ்சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது என்றும், அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினாற்பந்தமாயிற்றுஎன்றும்,பரமார்த்தத்திலொரு பொருளேயென்றும், வேதாந்த ஞானத்தான் உடம்பிற்குவேறாகிய ஆன்மரூபம் விளங்குமென்றும் வாதிக்குமவாதம். (சி.சி.பா.)

**பாற்கரியன்**—மாயையிற்பிரபஞ்சந் தோன்றுவதில்லைப் பிரமத்தினின் றுந்தோன்று மென்பவன். (சி. சி. ௧: ௨௮. முகம்.)

**பாற்கரியோன்**—தேவேந்திரன். (தைல. தைலவ. ௧௧.)

**பாற்குநம்**— } உத்திரநாள்.(பிங்கல.௨௫௦.)
**பாற்குநி**— }

**பாற்கெண்டை**-ஒருமீன். ஒருகுழூஉக்குறி.

**பாற்கோவ்வை**—ஒரு கொவ்வை. (வழக்.)

**பாற்சுண்டை**—ஒருவகைச்சுண்டை. (வழக்.)

**பாற்சுறு**—ஒரு சுறாமீன். ஒரு குழூஉக்குறி.

**பாற்சொற்றி**—1. பாற்சோற்றிச்செடி.(பிங்கல. ௨௮௧௧.) 2. பொற்றிக்கீரை. (1, 2-வைத்தியபரி.)

**பாற்பரியாயம்**—பாலின் நிலைமை. (மணிமேகலை.)

**பாற்பீர்க்கு**—வெள்ளைப்பீர்க்கு. (வைத்திய மூ. அகராதி.)

**பாற்புறண்டி**—சிறு அம்மான்பச்சரிசி.(வைத்தியபரி.)

**பாற்மகற்பம்**-பதுமகற்பம். (உ-ம்.) "நவின்றகற்பத்-தெடுத்தகலேழாங்கற்பம் பாற்மகற்பம்" கூர்மபு. பிரமா. ௧௧.) [பாத்மம் பாற்மம் என்றாயிற்று.]

**பாற்றல்**—நீக்குதல். (உ-ம்.) "ஆசமனமாகுமறலினொடுகூட்டுதலும் – பாசத்தைப்பாற்றும்பதிக்கு" (சைவச. ௫௩௯.)

**பாற்று**—உரியது. (உ-ம்.) "செல்வமொன்றுண்டாகவைக்கற்பாற்றன்று" (நாலடி. ௧: ௧.)

**பாற்றுத்தம்**—வெண்டுத்தம். (வழக்.)

**பாற்றுளி**—சுக்கிலம். (உ - ம்.) "பாற்றுளி பவளநீர்பருகி" (சிந்தா. முத்தி. ௮௭.)

**பாறு**—சிதர. (சிந்தாமணி. ௧௪௧.)

**பாறல்**—1. அடிப்பறிதல். (வழக்.) 2. இடப விராசி. (பிங்கல. ௨௭௦.) 3. எருது. (சூ.நிக.௩: ௧௪ ) 4. ஓடல். (உ-ம்.) "பட்டிமை"பார். 5. நீங்கல். (உ-ம்.) "பயிலுறுபாவங்கள்பாறப்பெற்றுளாய்" (சிவரக. சிவனடியார். ௨௩.)

**பாறு**—1. கழுகு. (உ-ம்.) "பாரிடங்கள்" பார். 2. பருந்தினொருபேதம். (பாரதம். பதினாறும். ௫௫.) 3. பாறல். (உ-ம்.) "பாறிலுயிர்" (வேதா. சூ. ௧௩௩.) [முதனிலைத்தொழிற்பெயர்.] 4. தெரிநிலைவினைப்பகுதி.

**பாறுதல்** — 1. அடிப்பறிதல். (வழக்.) 2. ஓடுதல். (உ-ம் ) "பதுமுகனைக்கொடுபோகும் பத்துமுகன்போற்பாறுதலும்" (சேதுபு. வேதாள. ௧௪.)

**பாறை** — 1. கற்பாறைமுதலியன. (உ-ம்.) "பாரைக்குநெக்குவிடாப்பாறைபழுமரத்தின்–வேருக்குநெக்குவிடும்" 2. ஓடுதல். ஐ-தொழிற்பெயர் விகுதி.

**பாறையுப்பு**—ஒருப்பு. (வைத்தியநூல்களிலறிக.)

**பான்**—1. ஒருதெரிநிலைவினையெச்சவிகுதி. (உ-ம்.) "உண்பான்வந்தான்" 2. பத்தினோர்திரிபு. (உ-ம்.) "ஒருபான்"

**பான்மயக்கம்** — ஒருபாற்குரியசொல் வேறொருபாற்குரிய சொல்லுடன் வழங்கல்.

**பான்முட்டான்**—ஒருமீன். ஒரு குழூஉக்குறி.

**பான்முடங்கி** — ஒரு பூடு; அது: வேலிப்பருத்தி. (வைத்தியபரி.)

**பான்மை**—1. ஊழின்றன்மை. (திருக்கோவை. இயற்கைப்புணர்ச்சியுரை.) 2. குணம்.

(சூ. நிக. அ. எக.) 3. தகுதி.(உ-ம்.)"ஆனபான் மையிலோர்தவிசிருத்தினன்" (கந்தபு. பிரம யாக. ௬௦.) 4. தன்மை. (உ-ம்.)"ஒன்றும்றியாத பான்மையறிவுயிர்க்குண்டோ" (இன்னிசை. ௬௫.)

**பான்மையிற்று**—பகுதியுடையது. (சிந்தா மணி. ௬௭௬.)

**பானம்**—1. கள். (பிங்கல. ௬௩௪௬.) 2. பருகுதல். (பிங்கல. ௬௫௩௭.)

**பானல்**—1. கருங்குவளை. (உ-ம்.) "பானல் பூத்தவெள்ளத்துப்பெரியகண்ணார்" (இராமா. உலாவிய. ௪.) 2. கள். 3. மருதநிலம். (சூ. நிக. ௫. ௬௨.) 4. வயல். (பிங்கல. ௫௭௧.) 5. வெற்றிலை. (2, 5-வைத்தியபரி.)

**பானுள்** — 1. நடுயாமம். (உ-ம்.) "குன்று குளிர்ப்பன்னகூதிற்பானுள்" (நெடுநல். ௬௨.) 2. பாதிநாள். (தைலவ.)

**பானிதம்**—சர்க்கரை. (வைத்தியபரி.)

**பானியவல்லி** — வலம்புரிக்கொடி. (வைத்தியபரி.)

**பானிறவண்ணன்**—பலபத்திரன். (உ-ம்.) "நீனிறவண்ணனென்றுநெடுந்துகில்கவர்ந்த தம்முன்-பானிறவண்ணனேக்கிற்பழியுடைத் தென்றுகண்டாய்" (சிந்தா. நாமக. ௧௫௦)

**பானுபலை**—வாழை. (வைத்தியபரி.)

**பானை**—மிடா. (சூ. நிக. எ: ௬௫.)

**பானைவெடிச்சான்**—பிளவைக்கொல்லி. (வைத்தியபரி.)

## பி.

**பிக்கம்**—இருவேலி. (வைத்தியபரி.)

**பிக்கு**—1. குழப்பம். (வழக்.) 2. பிசகு. (உ-ம்.) "பிக்குச்சொல்லாமலேகொக்குப்படுக்கவே" (திருக்குற்றாலக்குறவஞ்சி.)

**பிகபந்து**—மாமரம். (வைத்தியபரி.)

**பிகம்**—குயில். (பிங்கல. ௨௬௬௫.)

**பிகராகம்**— / **பிகவல்லபம்**— } மாமரம். (வைத்தியபரி.)

**பிகன்**—பசளை. (வைத்தியபரி.)

**பிகாங்கம்** — ஒரு புள். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**பிகாநந்தம்**—வசந்தகாலம், குயிலுக்கு ஆனந்தந்தருவதாகிய காலமென்க. (வழக்.)

**பிகி**—பெண்குயில். (வைத்தியபரி.)

**பிகு**—1. இறுக்கம். 2. பெலன். (1, 2-வழக்.)

**பிகுதல்**—தளர்ந்ததைவலிதாக்குதல். (வழக்.)

**பிதுப்பட்டை**—குதிரைமேற் சேணங்கட்டும் வார். (வழக்.)

**பிகுவு**—பிகு. (வழக்.)

**பிங்க**—வித்தியாகலையில் வித்தைதத்துவத்திலிருக்கும் இரண்டு புவனங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

**பிங்கம்**—பூனை. (வைத்தியபரி.)

**பிங்கல** — 1. பிங்களஎன்னும் வருடம். 2. வித்தியாதத்துவத்திருக்கு மாசாரியதசகரிலொருவன். (வி-ணி. உஎ௪)

**பிங்கலகேசி** — சுமாலிபுத்திரி, அக்கிரகேசன் தேவி. (அபிதானசிந்.)

**பிங்கலந்தை**—பிங்கலன் என்பவனாற்செய்யப்பட்ட நிகண்டு. (வழக்.)

**பிங்கலம்**—1. பிங்கலமென்னு நிகண்டு. (நன்னூல். உரியியல். ௧௬.) 2. பித்தளை.(வைத்தியபரி.) 3. பொன். (சூ.நிக.௧௧: நகரவெ. ௫.) 4. பொன்மைநிறம். (சூ.நிக.அ:௨௧.) 5. வடக்கு. (5-உதாரணம். வந்தழிக்காண்க.)

**பிங்கலலோகம்**—பித்தளை.(வைத்தியபரி)

**பிங்கலன்**—1. குபேரன். (உ-ம்.) "நிதிக்குப் பிங்கலன்பதத்துக்கிந்திரன்நிறத்திற்கந்தனென்றினைவோரை" (திருப்பு. ௬௬.) 2. சதருத்திரரில் அக்கினிதிக்கிலிருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ௦.) 3. பிங்கலந்தையென்னும் நிகண்டுசெய்த ஓராசிரியன். பிங்கலமுனிவர் என்றும் பெயருண்டு. (அபிதானகோ.)

**பிங்கலாட்சன்**—கன்மேந்திரியதத்துவபஞ்சகத்திலிருக்கும் பஞ்சபுவனபதிகளிலொருவர். (வி-ணி. உஎஉ.)

**பிங்கலை**—ஆந்தை. (சூ. நிக. ௬: ௬௦.) 2. ஒரு பாலாரிட்டதேவதை. (வி-ணி. உ௬௯.) 3. பத்துநாடிகளிலொன்று; இது: சுழிமுனையிலேதோன்றி யிடைநாடியோடு கத்திரிக்கோல் போலப் பக்கமாறி வீணதண்டுக்கு வில்லு நாணிட்டாற்போலக் கபாலத்தைச்சுற்றிக் குதிரைமுகமாய் நாசியளவும் நிற்கும். (த. வி.) 4. பார்வதி. பொன்னிறமுடையவள் என்றபடி. 5. பார்வதிதேவியின்றோழியரிலொருத்தி, கவரிவீசுபவள். (அபிதானசி.)

**பிங்கள**—1. நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்துள்ள நூற்றெட்டுப்புவனங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) இது: அக்கினிதிசையிலுள்ள பத்துப்புவனங்களு ளொன்றாக விளங்குகின்றது. (சி. சி. அ: மறை.) 2. வியாழ வட்டமாகிய அறுபதுவருடத்தில் ஐம்பத்தோராவதாண்டு.

**பிங்களம்**—களிம்பு. (வழக்.) (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிங்களர்** — கைலாசமேற்குவாயிற்காவலர். வாயுதிக்கிலிருப்பவர். (அபிதானசிந்.)

பிங்களன்—அயோகவப்பெண் பார்ப்பானைக் கூடிப்பெற்ற பிள்ளை. (உ-ம்.) "அயோகவப் பெண்பார்ப்பாற்கீன் றசேய் பிங்களன் பேர்" (சூத. சிவமா. கூ: கூ.)

பிங்களித்தல்—அருக்களித்தல், அருவருத் தல். (வழக்.)

பிங்களை—தென்திசையானைக்குப் பெண் யானை. (உ-ம்.) "அட்டதிக்கயங்களின்பிடிகள்" பார். (அபிதாநசி.)

பிங்காசி—அவுரி. (வைத்தியபரி.)

பிங்கி—வன்னிமரம். (வைத்தியபரி.)

பிங்குசம்—பின்குச்சம். (உ-ம்.) "கணிப் புதுமலர்ச்செஞ்சூட்டுநுதற்குளக்கநிமாதர்-மணிக்கருங்கதுப்பிள்காந்தட்பிங்குசம் வழுவ" (இரகு. நாட்டு. ருo.) [விகாரம்.]

பிச்சடம்—1. ஈயம். 2. துத்தநாகம். (1, 2-வைத்தியபரி.)

பிச்சம்—1. ஆண்மயிர். (சூ. நிக. கக: சகர வெ. சு.) 2. இரும்வேலி. (மலையக.) 3. இறகு. (உ-ம்.) "பிணிப்புறுகொடிகளிற்பிச்சமேமல் விரித்-தணிக்குலமஞ்ஞைகளகவியாலுவ" (சேதுபு. கந்தமா. ருசு.) 4. காஞ்சிரை. (வைத்திய பரி.) 5. பீலிக்குட்டை. (சூ. நிக. கக: சகரவெ. சு.) 6. வெண்குடை. (உ-ம்.) "பிச்சவெண் குடையார்பலர்" (திருவிளை. நரிபரி. ருஉ.)

பிச்சர்—பித்தர், மருளர். (வழக்.)

பிச்சாடநம்—இரக்குதல். (உ-ம்.) "பிச்சாடந நவமணிமாலை"

பிச்சாந்தேகி — மூன்றுவருணத்துப் பிரம சாரிகள் பிச்சையேற்கும்போது கூறும் வாக்கி யங்கள். இவ்வாக்கியங்களுடன் அந்தணர் பவ திச்சொல்லை முதலிலும், அரசர் பவதிச்சொல் லை யிடையிலும், வைசியர் பவதிச்சொல்லைக் கடையிலும் வைத்துக்கூறியேற்பது மரபு. (காஞ்சிபு. ஒழுக்க. கஉ.)

பிச்சி—1.ஒருமல்லிகை. சோழதேசத்திற் சா திப்பூவென்பர். 2.சிறுசண்பகம். (வைத்தியபரி.)

பிச்சிலம்—1. ஆணம். 2. ஈரம். 3. கஞ்சி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிச்சு—1. பித்து. (உ-ம்.) "பெரும்பிச்சுத் தரும்பெருமான். (திருவாச. அடைக்கல. ரு.) 2. மயல். (உ-ம்.) "பெரும்பிச்சையளித்தகல் வார்" (கோயிற்பு. பதஞ்சலி. உக.) 3. மூளை. (பி. நிக. கஎஎ.)

பிச்சை—1. இரப்பு. (உ-ம்.) "பின்பிச்சை கொண்டேவா" (கோயிற்பு. பதஞ்சலி. உக.) 2. வத்தருக்கொடி. 3. வாழை. (2,3-வைத்தியபரி.)

பிச்சைநாலுவகை — சாந்தாநிகபிச்சை, கணபிச்சை, மாதுகரிபிச்சை, அயாசகபிச்சை என்பனவாம். [வ-று.] "சாந்தாநிகபிச்சைதக்க கணமாதுகரி-யாய்ந்தார்க்கயாசகமுமாம்" என் னுஞ்செய்யுளாற்பெறப்படும். (சைவச. பொது. உருஎ.)

பிசக்து — 1. பிசகு. (வழக்.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

பிசக்குதல்—தடுத்தல்.

பிசகடி—தடை. (வழக்.)

பிசகம்—எட்டிக்கொட்டை. (வைத்தியபரி.)

பிசகு—1. ஆட்சேபம். 2. தப்பிதம். 3. தெரிநிலைவினைப்பகுதி. (1, 2-வழக்.)

பிசகுதல் — 1. தவறுதல். 2. விலகுதல். (1, 2-வழக்.)

பிசங்கம்—பொன்மைகலந்தசிவப்பு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிசங்கல்—நலங்கல், வருந்தல். (வழக்.)

பிசங்கு—தெரிநிலைவினைப்பகுதி.

பிசங்குதல்—நலங்கல். (வழக்.)

பிசண்டம் — மிருகத்தின்முதுகு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிசண்டிலன்—பெருவயிறுள்ளவன். (வழக்.)

பிசநம்—செஞ்சந்தநம். (மலையக.)

பிசம்—1. இறகு. 2. தாமரைவளையம். (உ-ம்.) "அமிர்தை" பார்.

பிசல்—எருத்துத்திமில். (உ-ம்.) வந்துழிக் காண்க.

பிசவ்வியம்—பருத்தி. (வைத்தியமூ. அக.)

பிசறல்—கலத்தல். (வழக்.)

பிசறுதல்—1. கலத்தல். 2. செறிவித்தல். (சி. சி. உ: ருஉ. ஞாநப்.)

பிசாச்சி—சடாமாஞ்சில். (வைத்தியபரி.)

பிசாசகை—ஓர்நதி; இது: இருக்ஷபர்வத்தி லுற்பத்தியாவது. (அபிதாநசி.)

பிசாசம்—1. பேய். (பிங்கல. உoக.) தூல தேகத்திற்குவிதித்த ஆயுளினளவை முடியு முன்றேகநீங்கி வாயுவினுருவடைந்து, கால வளவைநோக்கியிருக்கும் அந்தரான்மா என்பர். (அபிதாநசி.) 2. பேய்க்கரும்பு. (மலையக.)

பிசாசர்—ஒருவிதத் தேவவகுப்பினர். (அபி தாநசி.)

பிசாவப்பிரியம்—வேம்பு. (வைத்தியபரி.)

பிசாசன்—1.இராவணசேநாதிபதிகளுளொ ருவன்; இவன்: இலக்குமணராற் கொல்லப்பட் டவன். (இராமா. மந்திரப். சஉ.) 2. பேய்க் குணமுடையோன். (வழக்.)

பிசாசி — சடாமாஞ்சில். (தைல. தைலவ. ககக.)

பிசாசிகை-இணைற்றுப்பெண்தவளை. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிசாசு**—1. சடாமாஞ்சில். (தைல. தைலவ. கூஎ.) 2. பிசாசம். (பிங்கல. உ௦க.)

**பிசாரதம்** — நூதகம். (உ - ம்.) வந்துழிக் காண்க.

**பிசாரம்**—வேம்பு. (வைத்தியபரி.)

**பிசி**—1. அரும்பொருள். 2. சோறு. 3. நற்பொருள். (பிங்கல. நிக. உ௦ருஅ.) 4. பொய். 5. பொன். (சூ. நிக. சு: க.) (1, 2, 4-கக: சகரவெ. கூ.)

**பிசிதம்**—1. ஊன். (உ-ம்.) "பிறவியிற்பெரியநோக்கிற்பிசிதமுண்டுழலும்பெற்றி" (இராமா. நாகபாச. கூஎ.) 2. சதகுப்பை. 3. நீர். 4. வேம்பு. (3, 4-சூ. நிக. கக: ணகரவெ. கூ.) (2-வைத்தியபரி.)

**பிசிதர்**—அசுரர். (உ - ம்.) "பிசிதர்தம்வாய் நிணங்கக்க" (கந்தரல. அஅ.)

**பிசிதவூணர்**—பிசிதாசநர். பிசிதம்-ஊன்.

**பிசிதாசநர்**—இராக்கதர். (உ-ம்.) "அருமாதவர்பிசிதாசநராமுதா சநர்" (சேதுபு. இராமனரு. கருஎ.)

**பிசிர்**—1. ஊற்றுநீர். (பரிபாடல்.) 2. நிவலே. (உ-ம்.) "வரைமருள்புணரிவான்பிசிருடைய" (பதிற்றுப். உ: க.) 3. பாண்டிநாட்டிலுள்ள தோரூர். (உ-ம்.) "தென்னம்பொருப்பனன் னுன்னும்-பிசிரோனென்பவெனுயி ரோம்புநனே" (புறநா. உகரு.) 4. மழைத்துளி. (பதிற்றுப்பத்து.)

**பிசிர**—துளியாகச்சிதற. (பதிற்றுப்பத்து.)

**பிசிராந்தை**—ஒரு புலவன். (உ-ம்.) "இரும்பிசிராந்தையடியுறை" (புறநா. சுஎ.) கோப்பெருஞ்சோழனன்பனென்று கூறுவர். (அபிதாநசி.)

**பிசின்** — 1. சாம்பிராணி. 2. நீர்வஞ்சி. 3. பஞ்சிநூல். 4. மரப்பிசின். 5. வெட்டுக்குருத்து. (1, 2, 3, 4, 5-வைத்தியபரி.)

**பிசினி**—1. பசை. 2. கள். (வைத்தியபரி.)

**பிசினேறி**—ஒரு மரம். (வழக்.)

**பிசு**—பருத்தி. (மலேயக.)

**பிசுக்து**—1. விலைக்குரியபொருளைப்பெற்றபின், சிறிதுவாங்குதல். (வழக்.) 2. பீர்க்கு. (வைத்தியபரி.)

**பிசுகம்**—உத்தாமணி, வேலிப்பருத்தி. (தைல. தைலவ. உக.)

**பிசுகுதல்**—கொசறுதல். (வழக்.)

**பிசுநூலம்**—பருத்தி. (மலேயக.)

**பிசுநத்தநம்**—லோபத்தன்மை (வழக்.)

**பிசுநம்**—1. உலோபம். (வழக்.) 2. புறங்கூறல். (சூ. நிக. க௦: கூ.) 3. பருத்தி. 4. மஞ்சள். (3, 4-வைத்தியபரி.)

**பிசுநன்** — 1. உலோபன். 2. கோளன். 3. பொய்யன். (சூ. நிக. கக: சகரவெ. க௦.)

**பிசுநி**—பிசுநன்.

**பிசுபிசுத்தல்**— } பிசுபிசுப்பு. (வழக்.)
**பிசுபிசுப்பு**— }

**பிசுபிசெனல்**—பிசுபிசுப்புக்குறிப்பு. (வழக்.)

**பிசுமத்தம்**— } வேம்பு. (மலேயக.)
**பிசுமந்தம்**— }

**பிசுலம்**—1. நீர்க்காகம். 2. பிஞ்சு. (1, 2-வைத்தியபரி.)

**பிசுனம்** — பருத்தி. 2. மஞ்சள். (1, 2-வைத்தியபரி.)

**பிதுகம்**—வேலிப்பருத்தி. (மலேயக.)

**பிசைதல்**—குழைத்தல். (உ-ம்.) "குடர்மாலையிட்டுடல்பிசைந்ததே" (கூர்மபு. தக்கவமி. எகூ)

**பிசைவு**—சேர்த்துக்கலத்தல். (வழக்.)

**பிஞ்சகம்**—1. கொலை பிஞ்சம் பிஞ்சகமென வந்தது. 2. தலைக்கோலம். பிஞ்ஞகம் என்பது பிஞ்சகமென மருவினதாம்.

**பிஞ்சகன்** — 1. சொலைகாரன். 2. சிவன். (சூ. நிக. க: கூ.)

**பிஞ்சநம்** — பஞ்செஃகும்வில். எஃகுதல்-நொய்தாக்கல்.

**பிஞ்சம்**—1. இறகு. (பிங்கல. உகூகச.) 2. கொலை. 3. சத்திசாரணை. (வைத்தியபரி.)

**பிஞ்சரம்**—1. அரிதாரம். (வைத்தியபரி.) 2. கருமைகலந்தசிவப்பு. 3. பொன். 2, 3. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிஞ்சலம்**—தருப்பை. (வைத்தியபரி.)

**பிஞ்சாநம்** — பொன். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**பிஞ்சிதை**—கொட்டையின்பிஞ்சு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிஞ்சு**—இளங்காய். (உ-ம்.) "பிஞ்சுபூவுடன் கவர்ந்தான்" (சிவரக. கத்தரிப்பூ. உச.)

**பிஞ்சை**—1. பிஞ்சு. 2. மஞ்சள். (வைத்தியபரி.)

**பிஞ்சோலம்** — இலைமுதலியவற்றுனெழுமொலி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிஞ்ஞகம்**—தலைக்கோலம். (உ-ம்.) "கொன்றைகமழ்முடியோனும்பிஞ்ஞகத்தைப் பின்னல் படுகுஞ்சியாக்கி" (பாரத-அரிச்சுநன்றவ. அகூ.)

**பிஞ்ஞகன்** —சிவன். (உ-ம்.) "பெண்ணொருபாகம்வைத்தபிஞ்ஞகனுருவுகாட்டும்" (கூர்மபு. காப்பு.) [தலைக்கோலத்தையுடையவனென்றபடி.]

**பிஞ்ஞை**—பின்னை, நப்பின்னை. (சிலப்.)

**பிட்குதல்**—பிள்ளச்செய்தல். (வழக்.)

**பிட்சகர்**—யாசகர். (பராச.)

பிட்சு—யசுர்வேதஉபங்டதத்தொன்று.(கந். நவ. கஅ.)
பிட்சை — யாசகம். (வழக்குண்டு.)
பிட்டங்கொற்றன்—ஓர்வள்ளல்.(அபிதாநசி.)
பிட்டபேடணநியாயம்— சகத்திரநியாயங்களுளொன்று. (மீமாமிசையிலறிக.)
பிட்டம்—1. இடித்தமா. (தைலவ. பாயிரம். உஅ.) 2. சகநம். 3. மாவு. (சூ. நிக. சுः உடு.)
பிட்டர்—ஆடுதின்னுப்பாலை. (வைத்தியபரி.)
பிட்டல்—பிட்குதல். (உ-ம்.) "பிட்டெலிருபிளவெனவிழவுதிரமுநனிபெருக" (அருணகிரிபு. அருந்தவ. கஙஙு.)
பிட்டி—சாநபக்கம், வழக்கம.
பிட்டிமம்— } ஏலம். (மலையக.) (வைத்
பிட்டிலம்— } தியபரி.)
பிட்டு—ஒருவகைச்சிற்றுண்டி. (உ-ம்.) "பிட்டினைவிற்றுண்பேற்கு" (திருவாத. மண். உடு.)
பிட்டை—அண்டவாதம். (வழக்.)
பிடக்கு—வைத்தியன். (உ-ம்.) "பிணியர்க்குரியபிடக்குளத்தையொப்பர்" (தைல. பாயிர. ச.)
பிடகம்—1. ஆதிபுத்தனோடு தண்ணங்காரன்முதலிய இருபத்துநான்கு புத்தர்கள்மரபில் உபதேசக்கிரமத்தாற்செய்யப்பட்டநூல்; அது: விநயபிடகம், சூத்திரபிடகம், அபிதன்மபிடகம்என்னப் பலவகைப்படும். (த. நி. போ. கசுக.) [புத்ததன்மசங்கம் என்னும் மூன்றுமணிகளும் யாதோரிடையூறின்றி இருத்தற்கிடனாய்க் கூடைபோலுதலின் பிடகமாயிற்றென்பர்] (மணிமே. உசடு.) 2. கல்விநூல். (பிங்கல.நிக. உ0ரு௭.) 3. கூடை. (மணிமே.)
பிடகர்—வைத்தியர். (உ-ம்.) "பிடகர்சொல்வார்" (தைல. தைலவ. கங.)
பிடகன்—1. புத்தன். 2. வைத்தியன்.
பிடகை—கூடை. (உ-ம்.) "கொம்பனார்கள் பூம்பிடகைகொண்டணைய" (பெரியபு. திருக்குறிப்பு. ருக.) குடலையென்றுங்கூறுவர். பூந்தட்டு என்பர். (பத்துப். நெடுநல்வாடையில்.)
பிடங்கம்—பெருவெள்ளரி.(வைத்தியபரி.)
பிடங்கு—ஆயுதங்களின் பிற்பக்கம். (வழக்.)
பிடர் — புறங்கழுத்து. (உ-ம்.) "அடங்கு பிடர்க்குளமைந்தவுளைத்திரள்" (சிவரக. தேவியிமயம். கங.)
பிடர்த்தலை—பிடர். (பிங்கல. நிக. க0௩0.)
பிடரி—பிடர். (வழக்.)
பிடவம் — 1. ஒருசெடி, குட்டிப்பிடவம். (உ-ம்.) "பிடவமுமயிலையும்" (சிலப். புறஞ்-தை. கடுஅ.) 2. ஒரு மரம். பிடா என்பது பிடவம் என வந்ததென்பர்.

பிடவு—பிடவம். (சிலப்.) பிடாச்செடிஎன்றூர் பதிற்றுப்பத்தில்.
பிடவூர்—சோழநாட்டிலுள்ளதோரூர். (உ-ம்.) "நெடுங்கைவேண்மானருங்கடிப்பிடவூர்" (புறநா. ங௭டு.)
பிடா—ஓர்மரம். (உ-ம்.) "மருதுபோதிபிடாவெனுமை. (காஞ்சிப்பு. சனற்குமார. சு.)
பிடாரம்—வைத்தியவாகடம். (வழக்.)
பிடாரன்—பாம்புபிடிப்போன். (வழக்.)
பிடாரி—காளி. (வழக்.)
பிடி—1. ஏலம். (வைத்தியபரி.) 2. ஒட்டகம், யானை, கவரி இவற்றின்பெண். (சூ. நிக. ஙः ஙச.) 3. கிரகிப்பு. 4. கைப்பிடி. (உ-ம்.) "சிவனடியார்தமக்கொருபிடியாம்" (சிலப். பசாசுமோசந. ஙடு.) 5. நால்விரல்கொண்ட அளவு. 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "கைப்பிடிசூலம்பாசமுடையகாலன்" (சிவரக. சிவதன்மா. உகூ.)
பிடிகம்—பிள்ளைக்கைவளை. (சூ.நிக.எ:உச.)
பிடிதுநவி—வெற்றிலை. (வைத்தியபரி.)
பிடிச்சராவி — கம்மாளர்கருவியிலொன்று. ஒரு குழூஉக்குறி.
பிடிச்சீலை—கையிற்பிடிக்கிறதுணி. (தைல. தைலவ.)
பிடித்தபிடி—பற்றிக்கொண்டநிலை, விடாப்பிடி. (வழக்.)
பிடித்தம்—வேலைசெய்யாநாட்குப் பிடிக்கப்படுங்காசு. (வழக்.)
பிடித்தல் — 1. உட்கொள்ளல், மனத்துக்கிணங்கல். (வழக்.) 2. பற்றல். (உ-ம்.) "சூலம் பிடித்தவீரன்றன்னை" (சிவரக.கத்திரிப்பூ. கடு.)
பிடித்திராவி—பிடிச்சராவி. (வழக்.)
பிடித்து — கைப்பிடியிலுள்ளது. (உ - ம்.) "தொடிப்புழுதிகஃசாவுணக்கிற் பிடித்தெருவும்-வேண்டாதுசாலப்படும்" (வள். க0ங௭.)
பிடித்தோன்றைப்பேசுதல்—பிதற்றுதல். (பிங்கல. உ0௭அ.)
பிடிதம்—பிச்சை. (சூ. நிக. ஙः கக.)
பிடிப்பு—1. சுளுக்கு. 2. பிடித்தல். (1, 2-வழக்.)
பிடிபடுதல்—1. அகப்படுதல். 2. தெரிதல். (1, 2-வழக்.)
பிடிபாடு—அகப்படுதல். (வழக்.)
பிடிமானம்—1. அன்பானபற்று. 2. உலோபம். 3. கையிருப்பு. (1, 2-வழக்.)
பிடியல்—1. சீலை. (வைத்தியபரி.) 2. நல்லாடை. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிடியாள்—பலபந்தமாகப்பிடித்தஆள். (வழக்)
பிடிவாதக்காரன்—பிடிவாதி. (வழக்.)

பிடிவாதம்—கொண்டதுவிடாமை. (வழக்.)
பிடிவாதி— கொண்டதுவிடாதுநிற்போன். (வழக்.)
பிடுக்கு—பீசம். (வழக்.)
பிடுங்கல்—1. கவர்தல். (வழக்.) 2. பறித்தல். (பி. நிக. உகடுஎ.)
பிடுங்குகீரை—தண்டுக்கீரை. (வழக்.)
பிடுங்குதல்—பிடுங்கல். (பி. நிக. உசடுஎ.)
பிண்டக்காப்பு—காப்பதற்குரிய சோற்றுத்திரளை. (வழக்.)
பிண்டகருமம்-பிதிர்க்கிடும்பிண்டக்கிரியை. (வழக்.)
பிண்டகன்—பிதிர்பிண்டமிடுவோன்.(வழக்)
பிண்டகோசம்—வாசனைப்பிசின். (வைத்தியபரி.)
பிண்டசன்—யாசகன். (வழக்.)
பிண்டதன்—பிதிர்பிண்டமிடுவோன்.
பிண்டது—பிளந்தது. (உ-ம்.) "பிண்டது பாரும்" (திருவிளை. யானையெய். ௬௧.)
பிண்டப்பிரதானம் — பிதிர்க்குப் பிண்டத்தைத் தானஞ்செய்தல். (வழக்.)
பிண்டப்பொருள்—1. குவிக்கப்பட்ட பொருள், தொகுக்கப்பட்டபொருள். (நன்னூ. பெயரிய. ருக. உரை.) 2. சடப்பொருள்.
பிண்டபாகர்—தந்தைமுதல்மூவர். (பராமி. ௬௫.)
பிண்டபுட்பம்—1. அசோகு. 2. செவ்வந்தி (1, 2-வைத்தியமூ. அக.)
பிண்டம்—1. உடல். (பிங்கல. ௧௧௬.) 2. உண்டை. (பிங்கல. ௬அ௬௨.) 3. எண்வகையெச்சத்துளொன்று; அது: உறுப்பின்றிப்பிறப்பது. (உ-ம்.) "உறுப்பில்பிண்டமும்" (புறநா. உஅ.) 4. கருப்பம். 5. கவளம் 6. கற்கண்டு. 7. செவ்வந்தி. 8. சோறு. (சோற்றுத்திரளையென்றார் புறப்பொருள்வெண்பாமாலையுரையில்.) 9. தொகைச்சூத்திரத்துக்கு முன்புரைக்கும் பிண்டசூத்திரம். (நன்னூ. பாயிர. ௨௦.) 10. பலபொருட்டொகுதி. (தொ. சேனா. ௬௦.) 11. பிச்சை. (சூ. நிக. கக: தகரவெ. ௬.) 12. பிதிர்தேவரைக்குறித்துப்பிண்டித்திடுமுணவு. (உ-ம்.) "ஒன்றுகாதலொடுகெடுகுகொண்டதொருபிண்டநல்கில்" (சேதுபு. பாவநாச. அ.) இவ்வுணவு விளாங்கனிப்பிரமாண்மாகஇடுவதென்பர். 13. மாமிசம். 14. வெல்லம். (4, 5, 8-வழக்.) (6, 7, 13, 14-வைத்தியபரி.)
பிண்டரோபணம்—காரத்தை. (வைத்தியபரிபா.)
பிண்டவுரை—பொழிப்புரை. (யாப். காரி. க. உரை.)

பிண்டவிருத்தி — சரீரத்தை விருத்திசெய்தற்கிரியை (உ-ம்.) "அங்கப்பிராசநம்"பார்.
பிண்டாகழலம்—தாமரைக்களையர். (வைத்தியபரி.)
பிண்டாண்டம் — அண்டமும் பிண்டமும். பிண்டம்-சரீரம்.
பிண்டாப்பிரம்-ஆலங்கட்டி.(வைத்தியபரி.)
பிண்டாயசம்—உருக்கு. (வைத்தியபரி.)
பிண்டாரி—கொள்ளைக்காரன். [தெலுங்.]
பிண்டி—1. அசோகமரம். (உ-ம்.) "பொலம்பூம்பிண்டிநலங்கிளர்கொழுநிழல்" (சிலப். நாடுகாண். உக.) 2. ஒற்றைக்கை; இது: புறக்கூத்திற்குரியது. (சிலப். அரங்கே. கஅ.) 3. குவிக்கப்பட்டது, தொகுக்கப்பட்டது. 4. தினைமா. (சூ.நிக. ௬: உரு.) 5. நெல். 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. பிண்ணாக்கு. 8. புனர்பூசம். (சூ. நிக. க: எ௦.) 9. மா. (5, 7, 9-வைத்தியபரி)
பிண்டிகை—ஆசநம். (வழக்.)
பிண்டித்தல்—குவித்தல், தொகுத்தல்.
பிண்டித்து—திரண்டு. (சிந்தாமணி.)
பிண்டிதகம்— மருக்காரை. (வைத்தியபரி.)
பிண்டிதம்—காரைச்செடி. (வைத்தியபரி.)
பிண்டிபாலம்-எறியாயுதம். (உ-ம்.)"அடுத்தபிண்டிபாலந்தனைஎடுத்தடித்திடுவீர்"(சிவரக. நாரதஉபதேச. கச.) சீவகசிந்தாமணியில், தலையிலே பீலிகட்டப்பட்டு எறிவதோர் படையென்பர்.
பிண்டியான் — அருகன். (உ-ம்.) "உண்டுமில்லையுமௌனத்துமாற்றநூலுரைத்த-பிண்டியானுரைசொண்டு" (திருவிளை. மாயப். ரு.)
பிண்டிரம்—மாதுளை. (வைத்தியபரி.)
பிண்டிவாளகம்—குந்துருக்கம். (மலையக.)
பிண்டீகரணம் — உண்டையாக்கிடுதல். (வழக்.)
பிண்டீகரம்—தொகுப்பு. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிண்டீதகம் — மருக்கொழுந்து. (வைத்தியபரிபா.)
பிண்டீரம்—மாதுளை. (வைத்தியபரி.)
பிண்டோற்பத்தி—தந்தையின்றுதவுடனிருந்தவுயிர் தாயின் கருப்பையிற்புக்குக் குழவியாகிப் பின் பூமியிற்பிறப்பது. (அபிதாநசி.)
பிண்ணாக்கு-எள்ளுமுதலியவற்றினரைப்பு. (வழக்.)
பிண்ணாக்குக்கீரை—ஒருகீரை. (வைத்தியமூ. அக.)
பிண்ணாக்குப்பூண்டு—ஒரு பூண்டு. (வைத்தியமூ. அக.)

**பிண்ணியாக்கம்**—குந்துருக்கம். (மலையக.)
**பிணக்கம்**—பிணங்கல். (பிங்கல. கக௯௪௦.) அம்-சாரியை.
**பிணக்கன்**—மாறுபாடுடையவன். (உ-ம்.) "களிமடி.........பிணியனேழை" (நன் ௩௯.)
**பிணக்காடு**—சுடுகாடு. (சூ. நிக. ரு: ருக.)
**பிணக்கு**—1. ஊடல், ஆடவர்மாதர் கலவிக்கு முன்னிகழுங்கலகம். 2. ஒரு பொருளைப்பற்றி இருவர்க்குள்மாறுபாடு. (உ-ம்.) "பிணக்கறுக்கு-மூத்தோரையில்லாவவைக்களனும்" (திரிகடு. ௪௦.) 3. நெருக்கம் (உ-ம்.) வந்துழிக்காண்க. 4. தெரிநிலைவினைப்பகுதி.
**பிணக்குதல்**—கலகஞ்செய்தல். (வழக்.)
**பிணங்க**—நெருங்க. (உ-ம்.) "மாந்தர்பிணங்கவேட்டான்" (சிந்தா. குணமாலை. உக௩.)
**பிணங்கல்**—1. கலகித்தல். (சி. சி. ௮: எ. சிவாக்.) 2 குழம்புதல். 3. நெருங்கல். 4. பின்னல். 5. மாறுபடுதல். (2, 3, 4, 5 வழக்.)
**பிணங்கு**—தெரிநிலைவினைப்பகுதி.
**பிணங்குதல்**—1. குழம்புதல். 2. சண்டைசெய்தல். 3. நெருங்கல். 4. மாறுபடுதல். (உ-ம்.) "உலகிவில்லாநெறிகொண்டுபிணங்குகின்ற திருமறைமுனிவரே" (பெரியபு. தடுத்தாட். ௭௬.) 5. பின்னல். (1, 2, 3, 5 வழக்.)
**பிணப்பறை**—சாப்பறை. (உ-ம்.) "மணப்பறையும்பிணப்பறையாய்" (திருவிளை. பழியஞ்சு. ௭௦)
**பிணம்**—1. சவம். (உ-ம்.) "காக்கையுவக்கும் பிணம்" (மூதுரை.) 2. பேய். (பிங்கல. உ௦க.)
**பிணம்வீழ்களம்**—போர்க்களம். (சூ. நிக. ரு: ருக.)
**பிணர்** — 1. கோங்கு. (வைத்தியபரி.) 2. சருச்சரைவடிவு. (சூ. நிக. ௮: ௬.)
**பிணரம்**—சர்க்கரை. (வைத்தியபரி.)
**பிணவு**—கவரிமா, நாய், புல்வாய், பன்றியிவற்றின்பெண்பொது. (பிங்கல. நிக. உருஎ௬.) விலங்கின்பெண். (மணிமேகலை.)
**பிணவெடில்**—பிணநாற்றம். (பட்டணத்தா. பொது. ௩௩.)
**பிணா**—பிணவு. (சூ. நிக. ௩: ௩௪.)
**பிணாப்பிள்ளை** — பெண்பிள்ளை. (உ-ம்.) "ஊரழிற்பிணாப்பிள்ளைகாள்" (திருவாச. திருவெம்.௪௦.)
**பிணி**—1. தளை. (உ-ம்.) "விரகொடுவளை சங்கடதருவெம்பிணிகொடு" (திருப்பு. ருகூ௮. மதுரைக்காஞ்சியிலுங்காண்க. 2. துன்பம். (உ-ம்.) "சிந்தைவேறுயினர்பிணியிற்றேம்பினர்" (பிரபோ. பஞ்சா. உ௩.) 3. நோய். (உ-ம்.) "பாத்துணவில்லாகுழைச்சென்றுணவின்று -மூத்தவிடத்துப்பிணியின்று" (இன்னா. உக.) 4. பசிப்பிணி. (கலித்தொகை. உ௦.) 5. பந்தம். (உ-ம்.) "பல்லுயிர்க்கும்-பேதஞ்செய்யும்பிணியவிழ்த்து" (திருவிளை. உலவா. க௬.) 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "சிறுகிண்கிணி" பார்.
**பிணிக்குலம்**—விலங்கு. (உ-ம்.) "பிணிக்குலத்தகவயிற்பிறந்தநோய்கெடுத்-தணித்தகையுடம்பென" (சிந்தா. பதுமை. எ.)
**பிணித்தல்**—1. கட்டல். (உ-ம்.) "மணிக்கயிற்றுற்பிணித்திழுத்தார்" (சிவரக. சிவதன்மா. ரு.) 2. தொடுத்தல். (பரிபாடல்.)
**பிணித்தோர்**—நோயுற்றோர். (மணிமேகலை.)
**பிணிப்பு**—கட்டு. (உ-ம்.) "பிணிப்புறுகொடிகளில்" (சேதுபு. கந்தமா. ௩௪.)
**பிணிமார்**—சேர்த்தற்கு. (உ-ம்.) "தரவுச்சினந்தணித்துபெருவெளிற்பிணிமார்" (மலைபடு. ௩உக.)
**பிணிமீதித்தல்** — செய்வார்தொழிலினொன்று. (உ-ம்.) வந்துழிக்காண்க.
**பிணிமுகத்திறை**—கருடன். (உ-ம்.) "பிணிமுகத்திறையைநோக்கி" (சேதுபு. பாலோடை. உ௬.) பிணிமுகம்-பறவை.
**பிணிமுகம்**—1. அன்னம். (பிங்கல. உ௩கஉ.) 2. பறவைப்பொது. 3. மயில். 4. முருகக்கடவுளின்யானை. (பத்துப்பாட்டு.) (2, 3-சூ. நிக. கக: ணகரவெ. ௩.)
**பிணியகம்**—காவலிடம். (உ-ம்.) "பிறர்பிணியகத்திருந்துபீடுகாழ்முற்றி" (பட்டினை. உஉஉ.)
**பிணியன்**—நோயாளன். (உ-ம்.) "பிணியனேழை" (நன். ௩௯.)
**பிணியாளி**—நோயாளி. (வழக்.)
**பிணை**—1. ஆசை. 2. ஒட்டகம், கவரிமா, கழுதை, குதிரை, நாய், பன்றி, புல்வாய், யானை முதலியவற்றின் பெண். 3 கட்டு. முதனிலைத்தொழிற்பெயர். 4. பூமாலை. (உ-ம்.) "வெறிகொண்டமுல்லைப்பிணைமீது" (பெரியபு. கண்ணப்ப. ருஎ.) 5. மரக்கூட்டம். (பரிபாடல்.) 6. மான். (உ-ம்.) "பிணையனவிழியினார்" (அரிச். விவாக. க௭௦.) 7. பதிற்பொருள். (உ-ம்.) "நான்பிணையென்றுதாழ்ந்தான்" (திருவிளை. இந்திரன்முடி. ருஎ.) 8. முட்டுவாய். (புறப்பொ. வெ) (1, 2-சூ. நிக. கக: ணகரவெ. ரு.)
**பிணைக்காரன்**—பிணைகாரன். (வழக்.)
**பிணைத்தல்** — 1. இணைத்தல். 2. கட்டல். 3. தொடுத்தல். (1, 2, 3-வழக்.)
**பிணைதல்**—1. இணைத்தல். (உ-ம்.) "தண்கயமாடுமகளிரொடுகைபிணைந்து" (புறநா. உ௪௩.) 2. கலத்தல். (வழக்.) இருபறவையும் பிணைந்துகொண்டிருந்தன.

பிணைப்படுதல் — பதிலாயிருப்பதற்கு உத்தரவாதியாயுட்படல். (வழக்.)
பிணைப்பு—இணைப்பு. (வழக்.)
பிணைய—தழுவ. (புறப்பொ-வெ.)
பிணையல்—1. இரட்டைக்கை; அது: அஞ்சலிமுதலாகப் பதினோர்வகைப்படும். (உ-ம்.) "பிண்டியும்பிணையலும்"(சிலப்.அரங்கே.கஅ.) 2. இரட்டை. 3. கதவுமுதலியவற்றிலிடு மிணைப்புச்சலாகை. 4. மாலை; அது: மலர்களின் முளிரண்டையும் எதிரெதிரே ஒன்றன்மே லொன்றாகப் பிணைத்துவைத்துக் கட்டுகின்ற சரம். (பெரியபு. தடுத்தாட். கஅ. உரை.) (2,3-வழக்.)
பிணையன்மாலை — மலர்களின் முளிரண்டையும் ஒருங்குசேர்த்து பிணைக்குஞ் சரம். (உ-ம்.) "தாமலர்ப்பிணையன்மாலை" (பெரியபு. தடுத்தாட். கஅ. உரை.)
பிணையாளன்— } பதிலுத்தரவாதத்திற்குட்
பிணையாளி— } பட்டவன். (வழக்.)
பிணையூஉ— கைகோத்து. (உ-ம்.) "சீர்மிகு நெடுவேட்பேணித்தழூஉப்பிணையூஉ"(மதுரைக். கககூ.)
பிணைவு—1. இணைவு. 2. புணர்ச்சி. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பித்தக்கிராணி-ஒருநோய்.(உ-ம்.)"கிராணி" பார்.
பித்தக்கிறுகிறுப்பு — பித்தத்தினால்வருஞ் சுழற்சி. (வழக்.)
பித்தகம் — நவமணிக்குற்றத்திலொன்று; அது: கிளிநிறம். (திருவிளை. மாணிக்க. கஎ.)
பித்தகாசம்—ஒரு காசம். (உ-ம்.) "காசம்" பார்.
பித்தகாமாலை—ஒருநோய், பித்தத்தாலுண் டாகுங் காமாலை. (வழக்.)
பித்தகாலம்—பித்தத்தினதிகாரகாலம்,காலை நேரமென்பர்.
பித்தகுன்மம்—ஒருவகைக்குன்மம். (உ-ம்.) "அட்டகுன்மம்"பார்.
பித்தசாந்தி—பொன்னாங்காணி. (வைத்தியபரி.)
பித்தச்சுழற்றி—பித்தக்கிறுகிறுப்பு.(வழக்.)
பித்தசிலேட்டுமம்— } ஒருநோய், பித்தத்
பித்தசிலேற்பனம்- } தோடுகலந்த சிலேற்பனம். (வழக்.)
பித்தசுரம்—ஒரு சுரம். (வைத்தியமூ அக.)
பித்தசூலை—ஒரு சூலை. (உ-ம்.)"சூலை"பார்.
பித்தசோகை — ஒருவகைநோய், பித்தத் தால்வருங் காமாலையென்பர். (வழக்.)
பித்தநாடி—நடுவிரனாடி. (குருநாடி. கஎ.)
பித்தப்பிளப்பு—பித்தவெடிப்பு; இது: கால் களினுண்டாருவது. (வழக்.)
பித்தம்—1. நாயுருவி. 2. பிரம்பு. 3. மயக்கம். (சூ நிக. அ: கஈ.) 4. மும்பிணியிலொன்று; அஃது: அருசிப்பித்தம், இரத்தபித்தம், கரும் பித்தம், சயபித்தம், வறட்சிப்பித்தம் எனப் பல வகைப்படும். (வைத்தியமூ.அக.) (1, 2-வைத்தியபரி.)
பித்தரோசனம்—பூவரசமரம். (வைத்தியபரி.)
பித்தல்—வாய்பிதற்றல். (தைல. தைலவ. ககஎ.)
பித்தலாட்டம்—ஒன்றைமற்றொன்றாய்க்காட்டல். (வழக்.)
பித்தவாயு—ஒரு வாயு. (வழக்.)
பித்தளை — செம்பு நாகமுங்கலந்தது. இவ் விரண்டுங்கலந்திருப்பதனால், திருவிளையாடற் புராணம், இரசவாதஞ்செய்தபடலத்தில், உகூ-ஆவது கவியில், புணர்ப்பாற்றாயும்பித்தளை என்றார்.
பித்தன்—1. சிவன். (திருவாசகம். திருச்சாழல். கூ.) 2. பைத்தியக்காரன். (சிவப்பிர.பெரிய நாயகி சலித்துறை. உ.)
பித்தாதிசாரம்—ஒருநோய்; அது: உவாந்திப் பிராந்தி. (வழக்.)
பித்தாந்தம் — பித்தமுடிபு, பெரும்பித்தம். (சி. சி அ: ஏசு. சிவஞாந.)
பித்தி—1. பங்கு. 2. பின்புறம். (வழக்.)
பித்திகம் —1. பிச்சி. (உ-ம்.) 'செவ்வியரும் பின்னங்காற்பித்திகத்து" (நெடுநல். சo.) 2. செண்பகப்பூ. (வைத்தியபரி.)
பித்திகாயார்ச்சாலநியாயம்— ஒருவகை நியாயம். சுவரிலிருக்கும் பூனை எந்தப்பக்கங் குதிக்குமென்பது தெரியாது.
பித்திகை—1. கருநாகை. (வைத்தியபரி.) 2. சிறசண்பகம். (மலைய.க.) 3. சுவர்த்தலம். (உ-ம்.) "சாளரவெரமுக்கப்பித்திகைமாடம்" (திருவிளை. திருநகரங்கண்ட. ஙகூ.) அண்டச்சுவரென்றுங்கூறுவர். (பிங்கல. நிகண்டில்.)
பித்து—1. சரற்பித்து. 2. சுகதுக்கமோகங்கள். (உ-ம்.) "வருஞ்சுகதுக்கமோகப்பித்தினின் மயங்கி" (சி. சி. உ: ருஅ. சிவாஞா.) 3. பித்தம். அம்-கெட்டுகின்றது. 4. பைத்தியம். (உ-ம்.) "பித்துக்கொண்டார்போற்பிதற்றுகிறீர்".(கந்தபு. வள். கoஅ.) 5. மோகம். (உ-ம்.)"பித்தினில் லாட்சேர்ந்தபேதையுமேயாவன்" (சிவரக. வில்வலன். சo.)
பித்தை—1. ஆண்மயிர். (உ-ம்.) "பித்தை வயக்ரியம்" (திருவிளை. மாணிக்கம். கரு.) 2.

மயிர். (உ-ம்.) "நிலவுறு பிதரந்தவத்தகைடமத் தவர்" (கூர்மபு. பதிக. கக. பாட்.)

பிதரம் — நாணல். (வைத்தியபரி.)

பிதற்றல் — பலவாற்பேசல். (சூ.நிக.)

பிதற்று — 1. பிதற்றல். தெரிநிலைவினைப் பகுதி. 2. மயக்கவார்த்தை. (வழக்.)

பிதற்றுதல் — விடாதுபேசல். (சூ.நிக.)

பிதா — 1. சிவன். (பிங்கல. கூ.) 2. தந்தை. (சூ. நிக. உ: எரு.) 3. பிரமன். (உ-ம்.) "வாணி தன்னொடுந்திருமிகவிருந்தபிதாவெனும் பெரிய தேவன்" (சிவரக. நைமிச. கக.) 4. நாரை. (சூ. நிக. ரு: கூஉ.)

பிதாபிதா — பாட்டன். (வழக்குண்டு.)

பிதாமகன் — 1. பாட்டன். (சூ.நிக உ:எரு.) 2. பிரமன். (சூ. நிக. க: கரு.)

பிதிகம் — பெருங்குரும்பை. (மலையக.)

பிதிகாரம் — பதிற்செய்கை. பிரதிகாரம் பிதிகாரமென்றாயதென்பர். (திருநாவுக்.தேவா. பொது. தசபுராணத்தடைவு. க.)

பிதிர் — 1. கதை. 2. காலநுட்பம். (பிங்கல. ...) 3. சுணங்கு. (உ-ம்.) "பொற்பிதிர ணிந்தவீங்கும்புணர்முலை" (கூர்மபு. பதிகம்.) 4. தந்தைவழியின் பிதாமுதலோர். 5. திவலை. 6. பிதா. பிதிர்கருமஞ்செய்தான். 7. தெரிநிலை வினைப்பகுதி. (1, 2, 5-பிங்கல. ...) (4, 6-வழக்.)

பிதிர்காலம் — சிரார்த்தபுண்ணிய காலம்; அது: பதினெண்நாழிகைதொடங்கி யிருபத்து நாலு நாழிகைபரியந்தம்.

பிதிர்த்தல் — உதிர்த்தல். (உ-ம்.) "பருப்பு" பார்.

பிதிர்தருப்பணம் — பிதிரர்களைக் குறித்துச் சுட்டுவிரலடியினால் எள்ளுநீர் குசையுடன் தருப்பணஞ்செய்தல். தருப்பணம் - உவப்பித்தல்.

பிதிர்தல் — சிதறல். (உ-ம்.) "பிதிர்ந்தசெம் மணத்துயர்ப்பிறங்கல்" (இராமா. திருவவ. எக.)

பிதிர்திதி — } பிதிர்நாள், அமாவாசை.
பிதிர்தினம் — } (வழக்.)

பிதிர்தீர்த்தம் — தேவதீர்த்தமுதலிய பஞ்ச தீர்த்தங்களுளொன்று; அது: தர்ச்சநி, அங்குட்டங்களினடுவாகவிடுநீர். (சைவச. பொது. ... உரை.)

பிதிர்தேவர் — தென்புலத்தார். (வழக்குண்டு.)

பிதிர்நாள் — 1. பிதிர்த்தினம். 2. மகநாள். (பிங்கல. உசஅ.)

பிதிர்யாகம் — ஐம்பெருவேள்வியிலொன்று; அது: நீர்க்கடனாற்றல். (வள். அற. பரி.)

பிதிர்வதம் — சுடலை. (உ-ம்.) "வெந்திறற் பிதிர்வநத்தில்வேண்டியபொருளுமுண்டோ" (சேதுபு. வேதாளவர. ௩௦.) (சூ. நிக. ரு: ருக.)

பிதிரர் — ஒரு தெய்வச்சாதி; அவர்க்கிடம்: தென்றிசை. (வள். ... பரி.)

பிதிரார்ச்சிதம் - பிதிரர்வழிப்பட்டது. (வழக்.)

பிதிர்வு — பிதிர்தல்.

பிதிராட்சனை — பிதிரார்ச்சிதம்.

பிதுக்கம் — பிதுங்கல். (வழக்.)

பிதுக்கல் — பிதுங்கச்செய்தல். (வழக்.)

பிதுக்கு — தெரிநிலைவினைப்பகுதி.

பிதுக்குதல் — பிதுக்கல். (வழக்.)

பிதுகம் — நவமணிக்குற்றத்தொன்று; அது: தாமரைநிறம். (திருவிளை. மாணிக்கம்வி. கூஎ.)

பிதுங்கல் — உள்ளடங்காமற் புறப்படல்.

பிதுங்குதல் — பிதுங்கல். (வழக்.)

பிதுர் — பிதிர். (வழக்.)

பிதுர்யாநம் — சூரியனதுதெற்குவீதியாகிய தக்கிணாயநமார்க்கம். (கூர்மபு.பிரமா.ச.உரை.)

பிநுரம் — நடி. (உ-ம்) வந்தழிக்காண்க.

பிந்தல் — பிற்படல். (உ-ம்.) "ஏவல்பிந்த விகனறுமசனநேற்றமார்" (சேதுபு. தேவிபுர. சக.)

பிந்து — 1. சத்திதத்துவம். (சி. சி. உ: ௩௦. சிவாக்.) 2. சுத்தமாயை. (வி-ணி.உ.) 3. புள்ளி.

பிந்துசாகு — ஓர் பொய்கை; இது: கர்த்தமப் பிரஜாபதிக்கு வரந்தந்த விஷ்ணுமூர்த்தியின் கண்ணீர் அவ்விடத்தில்விழுந்தமையால் உண்டானது. (அபிதாநசி.)

பிந்துசாரம் — ஒரு வைத்தியநூல்.

பிந்துதல் — பிந்தல். (வழக்குண்டு.)

பிந்நகநம் — கீழ்வாயிலக்கத்தைச் சமமாக்கி அவ்விலக்கத்தாற்றுக்கிவந்த இலக்கத்தை மறு முறையும் பெருக்கல்.

பிந்நகம் — பேதம். (வழக்.)

பிந்நகநுத்தா — வேறுவினைமுதல்.

பிந்நதுணநம் — கீழ்வாயிலக்கத்தைப் பெருக்கல்.

பிந்நசங்கிலிதம் — கீழ்வாய்க்கூட்டல்.

பிந்நபதச்சிலேடை — பிரிமொழிச் சிலேடையணி (தண்டி. எரு. உரை.)

பிந்நபேதகம் — } விரோதம். (வழக்.)
பிந்நபோதநம் — }

பிந்நம் — 1. கீழ்வாயிலக்கம். 2. சிதைவு. 3. தடை. 4. தவறு. 5. பழுது. 6. வேறுபாடு. (சூ. நிக. ... ) (2, 3, 4, 5-வழக்.)

பிநாகபாணி — சிவன். (சூ. நிக. க: க.)

பிநாகம் — சிவன். வில். (அபிதாநசி.)

பிநாகி — 1 ஓர்நதி. (அபிதாநசி:) 2. சத ருத்திரரில் இந்திரதிக்கினிருக்கும் ...

ருவொருவர். (வி-ணி. உசுக.) 3. சிவன்.(உ-ம்.) " பிநாகிமுன்னெதிர்மறமாம்பிடகர்செல் வர் " (தைல. தைலவ. கக.) 4. நிவிர்த்திகலையில் பிருதிவிதத்தவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) [அது கிழக்கிலுள்ள பத்துப்புவநங்களுளொன்றென்று விளங்குகின்றது. (சி.சி.அ:எ. மறை.] 5. பிநாகினி என்னுமொரு நதியென்பர். (அபிதாநசி.) 6. புவர்லோகத்திலிருக்கு மகேச்சுவரரின் மாநசோற்பவரான ஏகாதசருத்திரரி லொருவர். (வி-ணி. உசஉ.)

பிநாகிநதி—பெண்ணையாறு. (அபிதாநசி.)

பிநாகிநி—பிநாகிநதி. (வழக்.)

பிநாகேகி—ஐம்பத்தோரு ருத்திரரிலொருவர். (வி-ணி. உசஎ.)

பிப்பலாசநம்—யானை. அரசிலையை அசனமாகவுடையது.

பிப்பலி-திப்பிலி.(உ-ம்.)"அம்பட்டை"பார்.

பிப்பலிகை—அரசமரம். (வைத்தியபரி.)

பிப்பலை—திப்பிலி. (வைத்தியபரி.)

பிப்பிகை—பல்லழுக்கு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிப்பிலம்—அரசு. (வைத்தியபரி.)

பிப்பிலாதநன்—ஒருமுனிவன்.(அபிதாநசி.)

பிப்பிலி-யானைநெருஞ்சில்.(வைத்தியபரி.)

பிப்பிலிமூத்தி-பெருநெருஞ்சில்.(மலையக.)

பிபாசிதன்—தாகங்கொண்டவன். (உ ம்.) வந்துழிக்காண்க.

பிபாசு—பிபாசிதன்.

பிபாசை—தாகம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிபாலிகை—அரசமரம். (வைத்தியபரி.)

பிபீலவாதம்—பரமாணுபிரபஞ்சத்துக் காரணமெனல். பைபீலவாதம் என்பர்.

பிபீலி—
பிபீலிகா— } எறும்பு. (வி-ணி. உஉக.)

பிபீலிகாநியாயம் — ஒருவகை நியாயத்தீர்ப்பு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிபீலிகாவாதம்—பிபீலவாதம்.

பிபீலிகை—பிபீலி. (பிங்கல. உருகஎ.)

பிம்பகம்-1. கோவைக்கனி.(வைத்தியபரி.)

பிம்பப்பிரதிவிம்பம்—பிம்பமும் பிரதிவிம்பமும். (வழக்.)

பிம்பம்—1. கோவைக்கனி.(வைத்தியபரி.) 2. பிரதிவிம்பத்திற்குமூலமாயுள்ள வடிவம்.

பிம்பி—கோவை. (தைல. தைலவ. எ0.)

பிம்பிகை—கோவைக்கனி.(வைத்தியபரி.)

பிய்த்தல்—
பியதல்— } 1. பிரித்தல். 2. பிள்ளுதல். (1, 2-வழக்குண்டுபோலும்.)

பிய்ப்பு—பிய்த்தல்.

பியல்—தோள். (உ-ம்.) "பிள்ளைபியலின் மேற்கொள்ள"(பெரியபு.சிறுத்தொண்ட.ருக.)

பியாகண்டை—ஓரிராகம். (வழக்.)

பியாரம் — ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரிபா.)

பியாலிகை—அரசமரம். (வைத்தியபரி.)

பியூன்—சேவகன். [அராபி.]

பிர்மவீணை — வீணைகளினிருபத்திரண்டுபேதத்தொன்று. (வி-ணி. உஉ0.)

பிர்மவுப்பு-கரியுப்பு. (வைத்தியபரி.)

பிர்மவேதாளி—சுத்தவித்தியா தத்துவத்திருக்குமொரு புவநம். (வி-ணி. உஎசு.)

பிர்மாண்டம்—பிரபஞ்சம். (உ-ம்.)"ருத்திரலோகத்தின்மேல்பிர்மாண்டம்ஊர்த்தகடாகம் ஒருயோசனையளவாயிருக்கும்" (வி-ணி.) [பிரமன் உதிக்கப்பெற்றமையால் இவ்வண்டம் பிர்மாண்டமெனப்படும். (கூர்மபு. பிரகிரு. உக. உரை.]

பிர்மார்ப்பணம் — பிரமத்தி லொப்பித்துவிடுதல். (த. நி. போ. ௩௫௬.)

பிர—தோற்றமிகுதிமேன்மைவிரைவு இவைகளைக்காட்டு முபசருக்கம்.

பிரக்கதம்—வலம்புரிக்காய்.(வைத்தியபரி.)

பிரக்ஞாமாநந்தம்—ஒருவர்சொன்ன அர்த்தம் புத்தியிற்பதியாமலிருக்கிறது. (வாசுவே. கசஅ.)

பிரக்கிநை—
பிரக்கியாதம்— } அறிவு. (வழக்.)

பிரக்கியாதி—கீர்த்தி. (வழக்.)

பிரக்கிரமம்—துவக்கம். (வழக்.)

பிரக்கிராகம்—1. தராசுக்கயிறு. 2. பிடித்தல். (1, 2-வழக்குண்டுபோலும்.)

பிரக்கிரீடிதம்—கிரீடை. (வழக்.)

பிரக்கேந்தம்—ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

பிரகசிதம்—பெருநகை. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிரகடநம்—வெளிப்படுத்தல். (வழக்.)

பிரகடம்—பகிரங்கம். (வழக்.)

பிரகடித்தல் — வெளிப்படையாய்த்தோற்றல். (வழக்.)

பிரகடிதம்—வெளிப்படல்,வெளிப்படுத்தல்.

பிரகத்தன்—சகதேவன்குமரன். (அபிதாநசி.)

பிரகதாரண்ணியம்—
பிரகதாரணியம்— } ஒரு உபநிடதம். (கந். நவ. கக.)

பிரகதி-1.கத்தரிச்செடி. 2. கண்டங்கத்தரிச்செடி. 3. சூரியனது துவாதசராக்ஷதர்களாகிய மெய்காவலரு ளொருவன். (வி-ணி. உசரு.)

4. வழுதுணைச்செடி. (1, 2, 4-வைத்தியபரி.)

பிரகந்நளை — அருச்சுனன் பேடியுருக் கொண்டு மச்சநாட்டிருந்தகாலத்து வைத்துக் கொண்டபெயர். (அபிதானசி.) (பாரத.நாடெகரக். கக-ஆங்கவியில், பிருகந்நளையென்றார்.

பிரகம்பிதம்—அசைவு. பிர-என்பது பசருக்க மென்பர்.

பிரகமநம்—செல்கை. பிர என்பது பசருக்க மென்பர்.

பிரகரணம்—அத்தியாயம். (வழக்.)

பிரகரம்—அடித்தல், கொல்லுதல். (இராம. ஆரணிய. மாரீசன்வதை கக.)

பிரகரிகம்—அகில். (வைத்தியபரி.)

பிரகரித்தல்—சங்கரித்தல். (சி-பி. கை. கச.)

பிரகலாதன்—இரணியன்மகன். (அபிதானசி)

பிரகலை—கீதவுறுப்புளொன்று. (சிலப்.)

பிரகற்பதி — 1. தருமநூல் பதினெட்டி னொன்று. (பொருட். நிகண்டிற்காண்க.) 2. தேவகுரு; இவன்: பிரமமானசபுத்திரருள் ஆங்கிரசன்மகனான வியாழன். (அபிதானகோ.)

பிரகாகி—நீர்முள்ளி. (வைத்தியபரி.)

பிரகாசகர் — ஞானேந்திரிய தத்துவத்திலிருக்கும் ருத்திரரிலொருவர். (வி-ணி. உகூஉ.)

பிரகாசம்—1. ஒளி. (தாயுமான.பாயிரம். க.) 2. விளக்கம். (வழக்.)

பிரகாசத்துவம்—பிரகாசமான தன்மை. (சி. சி. உ: ருஎ. சிவாக்.)

பிரகாசநம்—1. பிரகாசம். 2. வெளிப்படுத்தல். (1, 2-வழக்.)

பிரகாசருத்திரர்— பிருதிவிதத்துவத்திற்குபேரதிக்கிலுள்ள பத்துப்புவநங்களு ளொன்று. (சி. சி. அ: எ. மறை.)

பிரகாசி — 1. பிரகாசன். 2. பிரகாசத்தையுடையது. (சி. சி. உ: அஎ. சிவாக்.)

பிரகாசித்தல்—1. ஒளிசெய்தல். 2. பிரபலியமாதல். 3. விளங்குதல். (1, 2, 3-வழக்.)

பிரகாசிதம் — பிரகாசம். (சி. சி. க: கச. சிவாக்.)

பிரகாசியன்—பிரகாசமுடையவன். (சி.சி. வரலாறு.)

பிரகாண்டம்— } மரம். (வைத்தியபரி.)
பிரகாண்டரம்— }

பிரகாமியசித்தியோகம் — கழுத்துமுதற் கண்மட்டாக மேருத்துளைவழியாக அக்கினியை யேற்றி யாருண்டுநோக்கின்மண்ணிலெத்தனை காலம் புதைந்திருந்தாலுமிருக்கும்பிறப்புமறும். (த. நி. யோ. கூஉ.)

பிரகாமியம் — பிராகாமியம், ஒரு சித்தி. (உ-ம்.) "பராகாயம்" பார்.

பிரகாரம்—1. அடித்தல். (சி. சி. ச: கூரு. சிவாக்.) 2. கோயின்முதலியவற்றின்வீதி. 3. சுற்றுமதில். 4. விதம். (1, 2, 3, 4-வழக்.)

பிரகிருதபிரளயம் — உலகநாசப்பிரளயம். (வழக்.)

பிரகிருதம்—உண்டாக்கப்பட்டது. (வழக்.)

பிரகிருதி — 1. இயல்பு. (வழக்.) அவனுடையபிரகிருதி அவ்வளவு. 2 ஒருவகைச்சந்தம்; அஃது: அடியொன்று இருபத்தொரு அசையுடையதாய் நான்கடிகொண்டு வருவது. (வீரசோ. யாப்பு. கூகூ. உரை.) 3. பிரபஞ்சமூலமாயிருக்குமாய்ை; அது: மூன்றிஞென்று. (சி. சி. க: கக. உரை.)

பிரகிருதிதத்துவம்— குணதத்துவத்திற்கப்பால் நூறுயோசனைகொண்ட பதுமஸ்தாநம். (சித்தா. சாரா. ஞானபா. உகூ.)

பிரகிருதிநிலையசிரீகண்டர் — சிரீகண்டத்திரயத்துளொருவர்; இவர்: பிரகிருதியினது அக்கிரத்துநிலையர். (சி. சி. க: ருச. ஞானப்.)

பிரகிருதிமாயை — அசுத்தமாயை அதுதூலபரிணமைமாய்த்தோன்றுமாயை; இதினின்றுங் குணதத்துவமுதலிய போக்கியதத்துவம் இருபத்துநாலுந்தோன்றும். (சி. சி. க: கக. சிவஞா.)

பிரகிருதிவிகிருதிகள் — 1. பிரகிருதியினுடைய விகாரங்கள். 2. பகுதிவிகுதிகள். (நன்னூ. பதவி. சு. உரை.)

பிரகுஞ்சம்—ஒருபலம். (உ-ம்.) "பிரகுஞ்சமொன்றினுக்கொருபானிதற்கம்புபெய்" (தைல தைலவ. ச.)

பிரகுடி—காட்டுமல்லிகை. (வைத்தியபரி.)

பிரகுத்தம்—மான்கொம்பு. (வைத்தியபரி.)

பிரகோபம்—கோபம். பிர-என்பது பசருக்கம், அதிகமென்னும் பொருளாம்.

பிரச்சந்நகூபம்—கரப்புநீர்க்கேணி. (மணிமே. அரும்பத.)

பிரச்சநை—கேட்டல். (சி. சி. சிவாக்.உரை.) அவையடக்கத்தின்பின்வரலாற்றிற்காண்க.

பிரச்சிந்நம்—வினா. (வழக்.)

பிரச்சிநம் — அதர்வணவேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

பிரச்சிநை—பிரசினை.

பிரசகநம்—இலையுணமிருகம். (உ-ம்.) வக்துழிக்காண்க.

பிரசகம்—பிரசகநம்.

பிரசங்கம்—1. கலத்தல். பிர-உபசருக்கம்.) 2. விரித்துப்பொருளுரைக்கை. 3. வெளிப்படுத்தல், பிரபலியமாக்குதல். (1, 2-வழக்.)

பிரசங்கி — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. வியாக்கிபி. (வழக்.)

**பிரசங்கித்தல்**—1. விரித்துப்பொருளுரைத்தல். 2. பிரபலியப்படுத்தல். (1, 2-வழக்.)

**பிரசங்கை** — செய்யத்தக்கன. (உ - ம்) "வாரப்பிரசங்கை"(விதாந. பஞ்சா. ௬௦.முகம்.)

**பிரசண்டம்** — 1. வித்தியாகலையில் இராகதத்துவத்திலுள்ள ஐந்து புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) 2. வீரம். (வழக்.) 3. வேகம்.(உ-ம்.)"சண்டப்பிரசண்டவேகமுடன்" (பாரத. இராயசூயம். கஉஉ.)

**பிரசண்டர்**–1. இராகதத்துவத்திலிருக்கும் பன்னிரண்டு ருத்திரரிலொருவர். (வி-ணி. உ௪௪.) 2. சிவலோகபச்சிமதிசை யோலக்கஞ் சேவிக்குந் துவாதசமுக்கிய கணக்கிரசண்ணி யரிலொருவர். (வி-ணி. உகூ௪.)

**பிரசண்டவாயு**—பலத்தகாற்று. (வழக்.)

**பிரசண்டன்** — 1. வலியன். 2. வீரன். 3. வேகி. (1, 2, 3-வழக்.)

**பிரசத்தம்**—நித்தியம். (வழக்.)

**பிரசத்தன்**—பாலடை. (வைத்தியபரி.)

**பிரசத்தி** — 1. கிருபை. பிர என்பது உபசருக்கமென்பர். 2. சம்பந்தம். (சி. சி. சு: கூ. சிவாக்.) 3. வலி. (வழக்.)

**பிரசந்நம்**—1. காட்சி. 2. தெளிவு. 3. வெளிப்படுதல். (உ-ம்.) "பூசையிற்பிரசந்நமூர்த்தியானவீசாநராகும்" (சிவாக. நந்திகேசுர. கடு.) (1, 2-வழக்.)

**பிரசந்நன்**—வெளிப்படையாகத் தோற்றப்பட்டவன். (வழக்.)

**பிரசந்நை**–வெளிப்படுஞ்சத்தி.(சி-வி. ஞாந. சு. உரை.)

**பிரசம்** — 1. கள். (சூ. நிக. சு: உக.) 2. தேன். (உ-ம்.)"எம்மான்பிரசமலர்ப்பதமல்லாற் பிறிதொன்றுண்டோ" (சிவாக. சிவதன்மா. கக.) 3. தேனீ. (பிங்கல. உகூ௮௪.) 4. வண்டு. (சூ. நிக. கூ: ௬௪.) 5. வேங்கை.(வைத்தியபரி)

**பிரசயம்**—1. குவை, கூட்டல். (சி. சி. அ: சு. சிவாக். 2. வேதத்திற்குரியவிசைகளு ளொன்று; அது: விலங்கிச்சொல்வது. (பாரத: இந்திர. கூ௮: சடகோப. உரை.)

**பிரசவபந்தநம்**–பூந்தண்டு. (வைத்தியபரி.)

**பிரசவம்**—1. சந்ததி. 2. பிள்ளைப்பேறு. 3. பிறப்பித்தல். 4. பிறப்பு. (1, 2, 3, 4-வழக்.)

**பிரசவித்தல்**—பிறத்தல். (வழக்.)

**பிரசா**—பிரசை. (வழக்.)

**பிரசாசநம்** — ஆளுதல். (வழக்குண்டு போலும்.)

**பிரசாதக்கிருது** — சதருத்திரரிலே குபேரதிசையிலிருக்கும் தசருத்திரரிலொருவர். (வி-ணி. உ௭௦)

**பிரசாதகம்** — நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) [இது குபேரதிக்கிலுள்ள பத்துப்புவநங்களுளொன்றென விளங்குகின்றது.](சி. சி. அ: ௭. மறை.)

**பிரசாதம்** — 1. அநுக்கிரகம். (சி. சி. அ: கூ௮. சிவாக்.) 2. திவ்விய அமுது. (வழக்.) 3. நிவேதநப்பொருள். (உ - ம.) "அனையதெம்பெருமான்பிரசாதம்" (சிவாக.தேவிகாட்டியம். ககூ.) 4. பிரசாதம். (உ-ம்.) "அட்டகலாப்பிரசாதரூபம்" (சி. சி. பாயிர. க.)

**பிரசாதனம்**—கொக்கு. (வைத்தியபரி.)

**பிரசாந்தன்** — 1. காலதத்துவத்திலிருக்குமோருருத்திரர்.(வி-ணி. உ௭௪.) 2. விம்பாகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ. கடுக.)

**பிரசாந்தி**—அமரிக்கை, சாந்தம். (வழக்.)

**பிரசாபகன்**—அரசன். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிரசாபத்தியம்**—1. இரவில்நிகழுமெட்டாமுகூர்த்தம். 2. பகலில்நிகழுமொன்பதாமுகூர்த்தம். 3. பிரமசரியம் நான்குவகையுளொன்று. (சி. சி. அ: கக. மறை.) 4. பெண்கள்சுற்றமும் ஆண்கள்சுற்றமும் ஒத்துத்தீமுன்னர்க் கொடுக்குமணம்.. (1,2 விதாந.குணகுண.எகூ. உரை.)

**பிரசாபத்தியலோகம்** — பிரசாபதிகளினுடையலோகம். (சி. சி. உ: கூ௮. சிவாக்.)

**பிரசாபதி**—1. அரசன். பிரசைகட்குத்தலைவன். 2. ஆண்குறி. 3. ஆதிப்பிராமணனுக்குப் பிறந்தவன்; இவனுக்கு அட்டவசுக்கள் பிறந்தார்கள். (வி-ணி. உடுகூ.) 4. பிரமன். (2, 4-வழக்.)

**பிரசாமம்**—சமாதாநம், மநவமைதி.(வழக்.) பிர உபசர்க்கம்.

**பிரசாரணம்**—விசாரித்தல். (வழக்குண்டு போலும்.)

**பிரசாரணை**—பிரஸ்தாபம். (வழக்.)

**பிரசாரம்**–1. விஸ்திரிக்கப்பட்டது. (சி. சி. அளவை. கக. சிவாக்.) 2. வேங்கைமரம்.(வைத்தியமூ. அக.)

**பிரசாரி**—வாயுலோகம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிரசித்தம்** — 1. அறிவிப்பு. 2. கீர்த்தி. 3. விளக்கம். 4. வெளிப்படை. (1, 2, 3, 4-வழக்.)

**பிரசித்தன்**– வெளிப்படையாயிருக்கிறவன். (சி. சி. க: ௭. ஞாநப்.)

**பிரசித்தி**—1. புகழ்பரவல். 2. வழக்கம், பரந்துநிகழும்நிகழ்ச்சி. (சைவப்பி. ௬டு.)

**பிரசிநம்**—கேள்வி. (சி. சி. உ: ௪அ. சிவாக்.)

**பிரசினை**—வினா. (சி. சி. சு: டு. சிவாக்.)

பிரசுரம்—அறிவிப்பு. (வழக்.)
பிரசூரன்—சுக்கிரன். (பிங்கல. உ௯௯.)
பிரசூதம்—பிள்ளைபெறுதல். (வழக்.)
பிரசூதவாயு—கருப்பவாயு. (வழக்.)
பிரசூதி—1. உற்பத்தித்தாநம். (சி-வி. ஞாந. எ.உரை) 2. ஏகாதசப்பிரதிவிரதையருளொருத்தி. (வி-ணி. உ௯௯) 3. சுவாயம்புமநுவுக்குச் சதரூபையிடத்துப்பிறந்த பெண்; இவளிடத்தே: சிரத்தை, இலக்குமி, திருதி, துட்டி, புட்டி, மேதை, கிரியை, புத்தி, இலச்சை, வபுசு, சாந்தி, சித்தி, கீர்த்தி, கிரியாதி, சதி, சம்பூதி, மிருதி, பிரீதி, கமை, சந்நதி, அநசூயை, அருந்ததி, சுவாகை, வசுந்தை என இருபத்துநாலுபெண்கள் பிறந்தார்கள். (கூர்மபு. தமோ. சு. உரை.) 4. பிள்ளைபெறுகிறவள். (வழக்.)
பிரசூதிகாவாயு—கருப்பவாயு. (வழக்.)
பிரசூதிகை—பிள்ளைபெற்றிருக்கிறவள்.
பிரசூதை—பிள்ளைபெற்றிருப்பவள் (வழக்.)
பிரசூநம்—1. கனி. 2. புட்பம். (1, 2-வைத்தியபரி.)
பிரசேசர்—பிரமனாற்சிருட்டிக்கப்பட்ட ஒரு வகுப்பார். (சைவப்பி. ௫அ.)
பிரசேசன்—ஒருவாயு. (த. நி. போ. ௯௪உ.)
பிரசேநன்—ஒருவாயு. (வி-ணி. உ௯௫.)
பிரசை—1. குடிசநம். 2. பிள்ளை. 3. மெருகன்கிழங்கு. (தைலவ.) (1, 2-வழக்.)
பிரசோதிநி—கண்டங்கத்தரி (வைத்தியபரி.)
பிரசோற்பத்தி— } பிரசோற்பதி— } வியாழவட்டமாகிய அறுபதுவருடத்தின் ஐந்தாவதாண்டு. (பஞ்சாங்.)
பிரஞ்சம்—மாருட்டம். (உ-ம்.) "புத்திப்பிரஞ்சம்வாரமற்சிறிதொருவழிகாட்டுக" (சிவசமவாத வுரைமறுப்பு.)
பிரஞ்ஞத்துவம்—உணர்ச்சி. (வழக்.)
பிரஞ்ஞம்—அறிவு. (வழக்.)
பிரஞ்ஞன்—அறிஞன். (வழக்.)
பிரஞ்ஞா—அறிவு. பிரஞ்ஞாபங்கம்என்னும் வழக்குரையிற்காண்க.
பிரஞ்ஞாவான்—ஞாநமுடையவன். (சி. சி. அ: ௫. ஞாநப்.)
பிரஞ்ஞாநம்—சைதந்நியம் (வாசுதே. உகஅ.)
பிரஞ்ஞை—1. அறிவு. 2. மூற்காலத்திலுண்டாகிய வியாபாரத்தை யறியாநிற்குமறிவு. (சி. சி. சு: உஅ. மறை.)
பிரட்சாளநம் — சுத்திசெய்தல். (வி-ணி. சுஞரு.)
பிரட்சேபணம்—மல்யுத்தத்திற்குரிய எண்வகைக்கரணங்களுளொன்று; அது: இழுத்து வீழ்த்துவது. (கூர்மபு. தமோ. கக. உரை.)

பிரட்டம்—தள்ளுபடி. சாதிப்பிரட்டமானான் என்னும் வழக்குரையிற்காண்க.
பிரட்டன்—1. புரட்டுக்காரன். (வழக்.)
பிரட்டு—புரட்டு. (வழக்.)
பிரடை—மூறுக்காணி. [தெலுகு.]
பிரண்டாசம்—சுத்தரசம். (வைத்தியபரி.)
பிரண்டை—ஒருகொடி. (வைத்தியபரி.)
பிரணதன்—1. சமர்த்தன். 2. வணக்கமுள்ளவன். (1, 2-வி-ணி.)
பிரணம்—பழமை. (உ-ம்.) வந்துழிக்காண்க.)
பிரணயகலகம் — கலவியிற் பிணங்கல். (வழக்.)
பிரணயம்—கலவி. (வழக்.)
பிரணவகலைகளைந்து—நாத விந்து மகார உகார அகாரங்கள். (சி. சி க: ௧௯. ஞாநப்.)
பிரணவம் — அகர உகர மகர அபரவிந்து அபரநாதங்களாகிய பஞ்சாக்கிரம் (சி. சி. சு: ௯. மறை.) இப்பிரணவம்; சமட்டிப்பிரணவம், வியட்டிப்பிரணவமென விருவகைப்படும். சமட்டிப்பிரணவமாவது ஓம் என்பது; அது: தொகுத்துச்சொல்வது. "தோட்டம்" என்பதுபோல. வியட்டிப்பிரணவமாவது; அகார உகார மகாரமென நிற்பது; அது: பகுத்துச்சொல்வது. "வாழை, சமுகு" என்பதுபோல. (கந். நவ.) இப்பிரணவவரலாற்றை நன்குவிரித்து அபிதாநகோசத்திற் கூறியிருக்கின்றார். ஆண்டுக்காண்க.
பிரணவரூபம்—கடவுள். (வழக்.)
பிரணிதம்—சொல்லுதல். (சி. சி. அளவை: ௧௯. சிவா.)
பிரத்தம்—1. ஓரளவை; அது: குடுவம் நாலு கூடினது. (வேதா. சூ. ௯. உரை.) 2. விசாலமானவிடம். (பாரத. இந்திரப்பிர. கச.)
பிரத்தாநம்—பிரயாணம். (வழக்.)
பிரத்தாபநம்—நியமித்தல். (வழக்.)
பிரத்தாபநை—வெளிப்படுத்தல். (வழக்.)
பிரத்தாபம்—1. அறிவித்தல். 2. புகழ்ச்சி. 3. வெளிப்படுத்தல். (1, 2, 3-வழக்.)
பிரத்தாரம் — 1. தாளப்பிரமாணம் பத்தினொன்று. (பொருட்டொகைநிகண்டிற்காண்க) 2. வடிவு. (சி-வி. கிரி. கூ. உரை.)
பிரத்திகான்மா—கூடஸ்தன். (வேதா. சூ. ௫உ. உரை.)
பிரத்திட்சம்—பிரத்தியட்சம். (வழக்.)
பிரத்திதம்—கேட்கும்பொருள்.
பிரத்தியக்கதரிசநம்—கண்ணாற்கண்டகாட்சி. (வழக்.)
பிரத்தியக்கப்பிரமாணம் — பிரத்தியட்சப் பிரமாணம்.

பிரத்தியக்கம்—காட்சியளவை.

பிரத்தியக்கு—1. அந்தர்முகம். (சி.சி.௧:௬௪. ஞாந.) 2. மேற்கு. (பிங்கல. ௧௬.) 3. வேறு. (வழக்.)

பிரத்தியக்நுரூபம்—திரும்பியபார்வை. (சி. சி. ௧௧: ௧. ஞாநப்.)

பிரத்தியக்நுரூபி — திரும்பியமுகசிற்சத்தி. (சி. சி. அளவை. ௬. ஞாநப்.)

பிரத்தியங்கம்— 1. உடம்பின் அப்பிரதாநமானவுறுப்பு; அவை: மார்பும், கண்டமும், ஸ்தநங்களும், தோள்களும், நாபியும், மத்தகமும், பாதங்களும், அங்குலிகளும், ஊருக்களும், முழந்தாள்களும், கணைக்கால்களுமாம். (சி. சி. ௧: ௪௭. சிவாக்.) 2 பரதத்தின்பொதுவிலக்கணங்களுளொன்று. (திருவிளை. கான்மாறி. அ. உரை.)

பிரத்தியச்சேதநம்—பிரத்தியகாத்மஞானம். (உ-ம்.) "மநோலயத்தைமருவுபோதம்பங்கற்ற பிரத்தியச்சேதநமாகும் (ஞாநவா. உத்தாலக. ௬.)

பிரத்தியட்சப்பிரமாணம்— பிரத்தியட்சப் பிரமிதியின்கருவி. (சைவப்பி. ௬.)

பிரத்தியட்சப்பிரமிதி—இந்திரிய சம்பந்தத் தாற்றோன்றுமறிவு. (சைவப்பி. ௬.)

பிரத்தியட்சப்போலி — பித்தம், பலம், தூரம், இருள்முதலிய குற்றங்களோடுகூடிய இந்திரியம். (சைவப்பி. ௧.)

பிரத்தியட்சம்—காட்சிப்பிரமாணம்; அஃது: இந்திரியப்பிரத்தியட்சம், மாநதப்பிரத்தியட்சம், தன்வேதனைப்பிரத்தியட்சம், யோகப்பிரத்தியட்சம் என நான்கு வகைப்படும். (சைவப் பி. ௬.)

பிரத்தியபகாரம் — தீமைக்குத்தீமைசெய்தல். (வழக்.)

பிரத்தியபம் — 1. அறிவு. 2. ஆணை. 3. கீர்த்தி. 4. தியாநம். 5. நம்பிக்கை. 6. நிச்சயம். 7. நோக்கம். 8. வழக்கம். (1,2,3,4,5,6,7,8-(உ-ம்.) வந்துழிக்காண்க.)

பிரத்தியபிஞாநம் — மீண்டுணர்வு. (சி. சி. பரப. நிகண்ட. அ. உரை.)

பிரத்தியம்—1. குறுக்கு. 2. விகுதி. (உ-ம்.) வந்துழிக்காண்க.)

பிரத்தியயபஞ்சகம்—ஐந்து ஞானேந்திரியம்; அவை: சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்பன.

பிரத்தியயம் — 1. தூலரூபமாய்ப்பேசக்கிய தசையையடைந்த தர்மாதிகள்; அது: சித்திகள் எட்டு துஷ்டிகள் ஒன்பது அசத்திகள் இருபத்தெட்டு புத்திமாற்றங்கள் ஐந்து என ஐம்பதுவகைப்படும். (சி-வி. ஞாநபா. ௧௬. உரை.) 2. வடமொழிவிகுதி.

பிரத்தியாகாரம் — சிவவுபாதியைநீக்கிப் பிரபஞ்சவுபாதியைச் சிவசொரூபமாக நோக்கல்; இஃது: அட்டயோகத்தொன்று.(பி.நிக.௪௨௪.)

பிரத்தியாலீடம்— விற்றொடுத்து அம்பு எய்வார்க்குரிய நால்வகை நிலையிலொன்று; அது: வலக்கான் முன்வைத்து இடக்கான் மண்டலித்துநிற்கு நிலை. (திருவிளை. யானையெய். ௯௦. உரை.)

பிரத்தியான்மா —ஒவ்வோரான்மா. (சி. சி. ௧: ௨௯. சிவாக்.)

பிரத்தியுத்தரம்—, பிரத்தியுத்தாரம்— } மறுமொழி. (வழக்.)

பிரத்தியுதவி—, பிரத்தியுபகாரம்— } கைம்மாறு. (வழக்.)

பிரத்தியும்நன்-விட்டுணுவினுடைய வியூகர் மூவரிலொருவன். (சேதுபு. சக்கரதீர்த். ௧௧. குறிப்பு.) அபிதாநகோசத்தில், கண்ணனுக்கு ருக்குமணியிடத்திற்பிறந்த புத்திரனென்பர்.

பிரத்தியூடன்—அட்டவசுக்களிலொருவன். (உ-ம்.) "அட்டவசுக்கள்"பார். (அபிதாநகோ.)

பிரத்தியேகபந்தாந்நுவயம்—ஒருமைப்பெயரை வாக்கியபேதமாகத் தனித்தனி கூட்டி முடிப்பது. (வள். ௫௪௭. பரி. குறிப்பு.)

பிரத்தியேகம் — தனிமை. (வழக்.)

பிரத்தியேகமவத்தாநம் — தனித்தனியிருப்பு. (சி. சி. ௨: ௯௦. சிவாக்.)

பிரத்தியேகாத்துமன்—கூடஸ்தன். (த.வி. போ. ௧௧௧.)

பிரத்தியோகம்—மநவேற்றுமை. (வழக்.)

பிரத்துதம்—உபமேயம்.

பிரத்துதாங்குராலங்காரம்-வருணியமாகிய வோர் வரலாற்றை வருணிக்குங்காலையில், மற்றொரு வருணியமாகிய இட்டமான வரலாறு விளங்குமணி. (குவல. ௨௮.)

பிரத்துவஞ்சாபாவம்—, பிரத்துவமிசாபாவம்— } அழிவுபாட்டபாவம். (பி. வி. ௧௬. உரை.)

பிரத்யக்—அறிவு. (சி. சி. ௨: ௫௬. சிவாக்.)

பிரத்யாநம் — நினைவு (உ-ம்.) வந்துழிக்காண்க.)

பிரதக்—தனி. (சி. சி. அளவை. ௧.)

பிரதக்கணம்—பிரதக்கிணம்: (வழக்.)

பிரதக்கிணம் — வலம்வருதல். (சி. சி. ௧௦: ௫. மறை.)

பிரதக்கு—1. தனிமை. 2. வேறு. (சி. சி. ௭: ௪. சிவாக்.)

பிரதநம்—படையிலோர்தொகை; அது: வா கினிமூன்றுகொண்டது. இதனைப்பிராயமென் பர். (பிங்கல. கசுசுசு.)

பிரதநி—அநாகதத்திற்குரிய இதழ் பன்னி ரண்டில் இரண்டாமிதழிலுள்ள அக்கரத்தி னதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

பிரதநை—பிரதநம்.

பிரதமசிருட்டி—பூருவசிருட்டி. (வழக்.)

பிரதமம்—1. ஆரம்பம். (வி-ணி.) 2. முதன் மை. (1, 2-வழக்.)

பிரதமமகாப்பிரளயம்—ஐவகைச் சங்காரங் களினைந்தாவது; இது: சாந்தியதீதகலையிலடங் கிய தத்துவபுவநங்களின் சங்காரம். இச் சங்கா ரஞ்செய்பவர் சதாசிவன். (சி. சி. க. குறிப்பு.)

பிரதமமகாசிருட்டி—அநாதிமுத்த பரசிவன் சுத்தமாயையிலிருந்து பொருட்பிரபஞ்சமும் சொற்பிரபஞ்சமுமாயிருக்கின்ற சுத்ததத்துவ மைந்தையும் சுத்தபுவநங்களையும் சுத்தபோக் கியப்பொருள்களையும் சுத்த சுத்தாசுத்த அசுத் தாத்துவ வாசிகளெல்லாருக்கும் தனித்தனி வேண்டப்படுகின்ற நாதருபபரதேகங்களையும் சுத்தாத்துவாவிற்குரிய சூக்கும ஸ்தூலதேகங் களையும் சுத்தாத்துவவாசிகளாகிய அணுசதா சிவர் வித்தியேசர் மந்திரர் முதலிய தேகிகளை யும் வேதாகமங்களையும்படைப்பது. (சைவப்பி. டுஎ.)

பிரதமாவிபத்தி—முதலாம்வேற்றுமை.

பிரதமை — 1. கடுக்காய். (வைத்தியபரி.) 2. முதல். (வழக்.) 3 முதற்றிதி. (பஞ்சாங்.)

பிரதரிசிப்பித்தல்—1. செவ்வேகாட்டுதல். (சி. சி. ஞானப்.) 2. சொல்லுதல். (சி. சி. அள வை. க. சிவாக்.)

பிரதவேதநா—சூரியனது துவாதச ரக்ஷ கர்களாகிய மெய்காவலருளொருவர். (வி ணி. உச்டு.)

பிரதாநம் — 1. கடுக்காய். (வைத்தியபரி.) 2. தலைமைப்பொருள். (பி. வி. உக.) 3. பிரகிருதி. (சி. சி. உ: எக. சிவாக்.) 4. மூலம். (வழக்.)

பிரதாநன் — 1. முதன்மையாகிய தானவதி காரி. (வழக்.)

பிரதாநி—முக்கிய அதிகாரி. (வழக்.)

பிரதாநிகம்—அதிகாரம். (வழக்.)

பிரதாபதீ — பாண்டு, பிரதைக்குநாயகன். (பாரத. சம்பவ. உடு.)

பிரதாபம் — 1. பிரகாசம். (உ-ம்.) "திகழ் பிரதாபமௌலி" (சேதுபு. வேதாளவரத. சக.) 2. வீரம். 3. வெப்பம். (1, 2-வழக்.)

பிரதாபி—பிரகாசரூபி. (உ-ம்.) "சிவஞானந் தப்பிரதாபியாய்ஜொலித்து" (இவ்வுதாரணவிடம் விளங்கவில்லை.)

பிரதாரம்—கடத்தல். (வழக்.)

பிரதானம் — பிரகிருதிதத்துவம். (ஞானா மிர்தம்.)

பிரதி—வேறானது, எதிராயுள்ளது. (வழக்.)

பிரதிக்கிரகம்—1. உபகாரம். (வி-ணி.) 2. ஏற்றல். (த. நி. போ. உச.)

பிரதிக்கிரகிப்போர் — தானம்வாங்குவோர். (சி. சி. உ: கக. சிவாக்.)

பிரதிக்கினை—நேர்த்திக்கடன். (வழக்.)

பிரதிகம்—அவல். (வைத்தியபரி.)

பிரதிகாசம் — பரிகாசம். (வழக்குண்டு போலும்.)

பிரதிகாதம்—மோதுதல். (உ-ம்.) வந்துழிக் காண்க )

பிரதிகாலன் — சதருத்திரரிலே குபேர திசையிலிருக்குந் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உஎ0.)

பிரதிகிருதி—பதிற்செய்தல். (வழக்.)

பிரதிகூலம்—1. எதிர். 2. மாறுபாடு. (1, 2-வழக்.)

பிரதிகை — ஒரு வீணை; இது: தும்புருவுக் குரியது. (வி-ணி. உஉ0.)

பிரதிசங்கிதாக்கிரமம்— } ஒரு விடயத்தை
பிரதிசங்கிதைமுறை— } வேறுவேறு வகு த்துக்கூறுமுறை. (சிவஞானபோதப்பாஷ்ய முகவுரை.)

பிரதிசந்தாநம்—துதி. (வழக்.)

பிரதிசிதுவை—உண்ணா. சிறுநா-நா.

பிரதிஞ்ஞாகாரி—தோல்வித்தான மிருபத்தி ரண்டுவகையுள் முதலாவது; அது: பிரமாணம் முதலியவைகளாலே சாதிக்கத்தக்கதென்று தன்னால் விரும்பிச்சொல்லப்பட்ட பொருளைச் சாதித்துமுடியாது அப்பொருட்குக் கேடுறு மாறு மாறுபேசுதல், பிரதிவாதிகூற்றுக்களை அங்கீகரித்துக்கொண்டு தன் கொள்கைகளை விடுதல். (சி. சி. அளவை. மறைஞா. உரை.)

பிரதிஞ்ஞாசந்நியாசம் — தோல்வித்தானம் இருபத்திரண்டில் நாலாவது; அது: தன்னாலே கூறப்பட்டமேற்கோள் பிரதிவாதியாலேமறுக் கப்பட்டுழி, அதனைமுற்றும் விட்டுவிடுதல். (சி. சி. அளவை: மறைஞா. உரை.)

பிரதிஞ்ஞாந்தரம்—தோல்வித்தான மிருபத்தி ரண்டுவகையுளிரண்டாவது; அது: தன்னாலே முன்னர்க்கூறப்பட்ட பிரதிஞ்ஞை, பிரதிவாதி யாலே மறுத்துரைக்கப்பட்டுழி அதனைச்சாதி யாமல் வேறொரு பிரதிஞ்ஞையைக் கூறுதல் (சி. சி. அளவை: மறைஞா. உரை.)

**பிரதிஞ்ஞாவிரோதம்** — தோல்வித்தானம் இருபத்திரண்டுவகையுள் மூன்றாவது; அது: தன்னாலேசொல்லப்பட்ட மேற்கோளுக்குச்சம் பந்தமில்லாத வேறோரேதுவினைக் கூறுதல். (சி. சி. அளவை. மறைஞா. உரை.)

பிரதிஞ்ஞை—மேற்கோள். (அளவை. மறைஞா. உரை.) பக்கத்தைச் சாத்தியமுடையதாக வுணர்த்துவது என்பதாம்.

பிரதிட்டம்—1. தாபநம். (வி-ணி.) 2. வியூகத்தின் முப்பதுவிரியுளொன்று. (வன். எகூஎ. பரி. குறிப்பு.)

பிரதிட்டாகலை—பஞ்சகலையிலொன்று; அஃது: அப்புதத்துவமுதல் பிரகிருதியீறாக இருபத்துமூன்று தத்துவங்களை யுடையதாகியும், சீகண்டபுவநமுதல் அமரேசபுவநமீறாக ஐம்பத்தாறு புவநங்களையுடையதாகியும், விட்டுணுவை யதிதெய்வமாயுடையதாகியும், வாமதேவம் சிரசுஎன்னு மிரண்டுமெந்திரங்களையுடையதாகியும், மகேசுரனென்னும்பதமுதல் அருபின் அருபின் என்னும் பதமீறாக இருபத்தொரு பதங்களையுடையதாகியும், ளகாரமுதல் டகாரமீறாக இருபத்துநாலெழுத்துக்களையுடையதாகியும் இருப்பது. (உ-ம்.) "வந்திமெந்திரமிரண்டுபதங்கண்மூவேழ்வந்நங்களுலாறுபுரமைம் பத்தாறு-தந்திடுந்தத்துவங்க ளிருபத்துமூன்று தரும்பிரதிட்டாகலைமாலதிதெய்வந் தானும்" (சி. சி. அ: எ. மறை.)

பிரதிட்டேசுரன்—பிரதிட்டாசத்திக்குச் சத்திமானாயிருக்கிறசிவன். (சி. சி. அ: உ. சிவாக்.)

பிரதிட்டை—1. ஒரு சத்தி. 2. சாந்தியாதீதகலையில் சத்திதத்துவத்திலிருக்கும் ஐந்து புவநங்களுளொன்று. (சி-வி. இசி. உக. தாற்.) 3. சுவாதிட்டானத்திற்குரிய பத்மதளம் ஒன்றிவிருக்கும் வ என்னுமட்சரத்தினதிதேவதை. (சி.சி.அ:உரை.) 4. தாபநம். (வழக்.) 5. பஞ்சகலைகளுளொன்று. (சி. சி. அ: எ. மறை.) [தன்னையடைந்த ஆன்மாக்கட்குச் சங்கற்ப விகற்பங்களை விசேடித்து நிலைநிறுத்தலாற் பெற்றபெயர்.]

பிரதிதிநம்—நாடோறும். (வழக்.)

பிரதிநிதி—பதிலாகவேற்பட்டவன். (வழக்.)

பிரதிபதம்—பரியாச்சொல். (வழக்.)

பிரதிபந்தகம்—கட்டுப்பாடு. (வழக்.)

பிரதிபந்தத்திரயம்—பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தமென்பன. (வாசுதே. கஅசு.)

பிரதிபந்தம்—1. கட்டுப்பாடு. 2. பூர்வகாரியமும், இனிமேல்நடக்குங்காரியமும், இப்போது நடக்குங்காரியமும் பூர்வப்பழக்கம்வாராமல் சிந்தனைவருகிறது. (வாசுதே. சுoக.)

பிரதிபலித்தல் — சாயைதோன்றல். (கைவல். தத்துவவி. கூஉ. உரை.)

பிரதிபாத்தியம்—அறையப்படல். (வேதா.சூ. க. உரை.)

பிரதிபாத்தியர் — சித்தாந்தப்படுத்தப்பட்டவர். (சி. சி. பாயிர. உ. சிவாக்.)

பிரதிபாதகம் — காரியங்களைப்பிறப்பிக்குமது. (பௌட்.)

பிரதிபாதநம்—சொல்லுதல். (சி. சி. ரு: அ. சிவாக்.)

பிரதிபாதிகம்—அறையுந்தன்மை. (வேதா. சூ. க. உரை)

பிரதிபாதிதம்—சொல்லப்பட்டது. (சி. சி. ரு: அ. சிவாக்.)

பிரதிபாலிகசீவன்—தைசதன். (த.நி. போ. சoக.)

பிரதிபாவக்பாவம்—சொல்லுகிறது. (சி. சி. பாயிர. கூ. சிவாக்.)

பிரதிபிந்நம் — ஒவ்வொன்றும் வேறாயிருத்தல். (சி. சி. உ: அஎ. சிவாக்.)

பிரதிபிம்பம் — கண்ணாடிமுதலியவற்றிற்றோன்றுநிழல். (வி ணி.)

பிரதிபுருடபிந்நம் — ஒவ்வொரு புருடனுக்கும் வேறாயிருத்தல். (சி. சி. வரலாறு.)

பிரதிபேதநம்—பிரித்தல். (வழக்.)

பிரதிபை—முக்காலத்துமறிவுமிகுந்திருப்பதாகிய பிரஞ்ஞை. (சி. சி. ச: உஅ. மறை.)

பிரதிபோதம்—கற்பித்தல். (வழக்.)

பிரதிமாநம்—யானைக்கொம்பினடு. (சூ.நிக. கூ: எ.)

பிரதிமை—விக்கிரகம். (வழக்.)

பிரதியத்திநம் — 1. எதிரிடை. 2. சிறைப்படுத்தல். 3. பழிவாங்குதல். 4. விருப்பம். இவற்றிற்குதாரணம் வந்துழிக்காண்க.

பிரதியுபகாரம்—பிரத்தியுபகாரம். (வழக்.)

பிரதியோகம்—எதிரிடை. (வழக்.)

பிரதியோகி — 1. எதிர். (சி. சி. உ: ருஅ. சிவாக்.) 2. எதிரி. (சி. சி. கூ: ச. சிவாக்.)

பிரதிராத்திரம்—இராவுக்கிரா. (வழக்.)

பிரதிருபம்—பிரதிமை. (வழக்.)

பிரதிலோமகன்—பிரதிலோமன். (வழக்.)

பிரதிலோமர் — இழிந்தவருணத்தாடவன் உயர்ந்தவருணத்துப்பெண்ணைப்புணரப் பிறந்தவர்; இவர்: சூதன், மாகதன் வைதேககன், அயோகவன், க்ஷத்தா, சண்டாளன்என அறுவகையர். (சைவச. )

பிரதிலோமன்—நாற்குலத்தில் இழிகுலத்தானு முயர்குலப்பெண்ணுங்கூடிப் பெற்ற

பிள்ளை. (சூ. நிக. உ: கூ0.)

**பிரதிவாதி**—எதிர்வாதி. (வழக்.)

**பிரதிவிடயம்**—விடயந்தோறும். (சி. சி. உ: கூக. சிவாக்.)

**பிரதிவிம்பம்**—பிரதிபிம்பம், கண்ணாடிமுத லியவற்றிற்றோன்றும் வடிவம். (வழக்.)

**பிரதிவிம்பவாதி** — சூரியன் கடசலத்தில் பிரதிவிம்பம்போலப் பிரமமும் தேகோபாதிக ளாகியபேதத்தால் நாநாவாய்த்தோன்றிச் செக மாமென்று சொல்லுகிறவன். (த.நி.போ.கஎ.)

**பிரதிவிம்பித்தல்** — போலியுருத் தோற்று தல். (வழக்.)

**பிரதீதி**—அறிவு. (சி. சி. உ: ருசு. சிவாக்.)

**பிரதீபநிருவாணவாதி** — கந்தமைந்துமறக் கெடுகைமுத்தியென்பவன். (சி. சி. அ: கஉ. ஞாநப்.)

**பிரதீபாலங்காரம்**—எதிர்நிலையணி; அது: பிரசித்தமான உவமானத்துக்கு எதிராக உவ மேயத்தன்மை கூறுதல். (குவல. சு.)

**பிரதீரம்**—கரை. (வழக்.)

**பிரதேசம்** — 1. அந்நியதேசம். 2. இடம். 3. தேசம். (சி. சி. சு: ககூ. மறை.) (1,2-வழக்.)

**பிரதேசன்**—உபஸ்தமாகியகன்மேந்திரியத் தின் தேவதை. (த. நி. போ.)

**பிரதை**—குந்திதேவி. (பாரத. சம்பவ. உரு.)

**பிரதோடகாலம்**—திரயோதசிதிதியிற் பொ ழுதத்தமிக்குமுன்மூன்றேமுக்காநாழிகைதொ டங்கி அத்தமித்து மூன்றேமுக்காலுழிகைபரி யந்தமுள்ளநேரம். (பிரமோத். பிரதோடமகி மையிற் காண்க.)

**பிரதோடம்**—பிரதோடகாலம். (உ-ம்.) "பந் தந்தீர்பிரதோடத்தின்பூசையின்பலனும்" (பிர மோத். பஞ்சாட். ரு.)

**பிரப்பங்கோரை**—ஒருபுல். (வழக்குண்டு.)

**பிரப்பம்பாய்** — பிரம்பினுற்செய்த பாய். (சூ. நிக. எ: ருரு.)

**பிரப்பு** — 1. குறுணி ஒவ்வொன்றதாகக் கொள்கலத்திற் பல்லுணக்கள் பரப்பிவைப்பன வாம்.(சூ. நிக. கூ: கஅ.) 2. பெருண்டி. (சூ. நிக. கூ: உகூ.)

**பிரபஞ்சத்துவயம்**—சாஸ்திரப்பிரபஞ்சம், அசாஸ்திரப்பிரபஞ்சம் என்பன; அவற்றுள்: ஆத்துமப்பிரமவிசாரமே சாஸ்திரப் பிரபஞ்ச மாம். அது: ஞானாதிசாதநத்தால் ஆத்துமசா க்ஷாத்காரமானதற்கு மேல்விடத்தக்கது. அசா ஸ்திரப்பிரபஞ்சம் தீவிரமென்றும், மந்தம் என் றும் இருவகைப்படும். அவற்றுள் தீவிரப்பிர பஞ்சமாவது காமக்குரோதிகமாம். மந்தப்பிர பஞ்சமாவது மனோகற்பிதகமாம். (வி-ணி.)

**பிரபஞ்சதை**—பிரபஞ்சத்தன்மை. (சி. சி. க0: சு. சிவாக்.)

**பிரபஞ்சநன்**—காற்று. (சூ. நிக. க: சஎ.)

**பிரபஞ்சம்**—உலகம். (வழக்.)

**பிரபஞ்சமூலம்**—மூலப்பிரகிருதி.

**பிரபஞ்சவாதனை**—இலௌகிகாப்பியாசம். (வழக்.)

**பிரபஞ்சவாழ்வு** — இலௌகிக வாழ்க்கை. (வழக்.)

**பிரபஞ்சவியாபாரம்**—இலௌகிக காரியம். (வழக்.)

**பிரபஞ்சவிருத்தி** — மாயாகாரியவிருத்தி, உலகச்செய்கை.

**பிரபஞ்சன்**—மனமாதி அந்தக்கரணங்களைச் சேட்டிப்பிக்கிற சிவசம்பந்தவாயுக்கள் நான் கனுளொன்று. (த. நி. போ.)

**பிரபஞ்சி**—பிரபஞ்சத்தையுடையது. (சி. சி. உ: ரு0. ஞாநப்.)

**பிரபத்தி**—மார்ச்சாலசிசுவைப்போலத் தன் செயலறச்சிவன்வழித்தாநிற்கை. (சி. சி. க0: க, சிவாக்.)

**பிரபதநம்**— விழுதல். பிர-உபசருக்கம்.

**பிரபந்தங்கள்தொண்ணூற்றறு**—தொண் ணூற்றுறுவகைப் பிரபந்தங்கள்; அவை: சாத கம், பிள்ளைக்கவி, பரணி, கலம்பகம், அகப் பொருட்கோவை, ஐந்திணைச்செய்யுள், வருக் கக்கோவை, மும்மணிக்கோவை, அங்கமாலை, அட்டமங்கலம், அநுராகமாலை, இரட்டைமணி மாலை, இணைமணிமாலை, நவமணிமாலை, நான் மணிமாலை, நாமமாலை, பலசந்தமாலை, பன்மணி மாலை, மணிமாலை, புகழ்ச்சிமாலை, பெருமகிழ்ச் சிமாலை, வருக்கமாலை, மெய்க்கீர்த்திமாலை, காப்புமாலை, வேனின்மாலை, வசந்தமாலை, தா ரகைமாலை, உற்பவமாலை, தானைமாலை, மும் மணிமாலை, தண்டகமாலை, வீரவெட்சிமாலை, வெற்றிக்கரந்தைமஞ்சரி, போர்க்கெழுவஞ்சி, வரலாற்றுவஞ்சி, செருக்களவஞ்சி, காஞ்சி மாலை, நொச்சிமாலை, உழிஞைமாலை, தும்பை மாலை, வாகைமாலை, வாதோரணமஞ்சரி, எண் செய்யுள், தொகைநிலைச்செய்யுள், ஒலியலந் தாதி, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, உலா, உலாமடல், வளமடல், ஒருபாவொருபஃது, இருபாவிருபஃது, ஆற்றுப்படை, கண்படை நிலை, துயிலெடைநிலை, பெயரின்னிசை, ஊ ரின்னிசை, பெயர்நேரிசை, ஊர்நேரிசை, ஊர் வெண்பா, விளக்குநிலை, புறநிலை, கடைநிலை, கையறுநிலை, தசாங்கம்பத்து, தசாங்கத்தயல், அரசன்விருத்தம், நயநப்பத்து, பயோதரப் பத்து, பாதாதிகேசம், கேசாதிபாதம், அலங்

காரபஞ்சகம், கைக்கிளை, மங்கலவள்ளை, தூது, நாற்பது, குழமகன், தாண்டகம், பதிகம், சதகம், செவியறிவுறூஉ, வாயுறைவாழ்த்து, புறநிலைவாழ்த்து, பவனிக்காதல், குறத்திப்பாட்டு, உழத்திப்பாட்டு, ஊசல், எழுகூற்றிருக்கை, கடிகைவெண்பா, சின்னப்பூ, விருத்தவிலக்கணம், முதுகாஞ்சி, இயன்மொழிவாழ்த்து, பெருமங்கலம், பெருங்காப்பியம், காப்பியம் என்பனவாம். இத் தொண்ணூற்றாறு பிரபந்தங்களின் விவரத்தை அப்பெயர் முதலெழுத்தைக்கொண்டு அகராதிமுறையாகப்பார்க்கில், இத்தமிழ்ச்சொல்லகராதியிற் காணலாம்.

பிரபந்தம்—தொடர்பு.

பிரபல்லியம்—பிரபலம். (வழக்.)

பிரபலசுருதி—உபநிடதம். (சைவச. ஆசிரிய. உக. உரை.)

பிரபலம்—பிரசித்தம். (வழக்.)

பிரபலன்—பேருயர்ந்தவன். (வழக்.)

பிரபலியம்—பிரபல்லியம். (வழக்.)

பிரபவ—வியாழவட்டமாகிய அறுபது வருடங்களிலேமுதலாவதாண்டு. (வருஷாதிநூல்.)

பிரபவம்—ஆதாரம். (உ-ம்.) வந்துழிக் காண்க.)

பிரபா—1. சூரியன்றுவாதசகலையிளென்று. (வி-ணி.) 2. தண்ணீர்ப்பந்தல். (உ-ம்.) "பிரபா தடாகாதிக்கிரியாசம்ஸ்காரங்களும்" (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

பிரபாகரம் — 1. சைமினிசூத்திரங்கட்குச் சபரமுனிவராற்செய்யப்பட்ட பாடியமதம் பற்றிப் பாட்டாசாரிய மாணாக்கனுகிய பிரபாகரன் செய்தவழிநூல். (சிவஞான.பா.) 2. மீமாஞ்சை மதம் இருவகையுளொன்று; அது: கன்மநாசத்தின் அபூருவமென ஒன்று தோன்றிநின்று பயன்கொடுக்குமென்றும், வைசேடிகம்போலப் பாடாணம்போற்கிடப்பதே முத்தியென்றுங் கூறும். (சிவஞான. பா.) [பிரபாகரன் என்பவனாற் சொல்லப்பட்டமையின் பிரபாகரம் என்னும் பெயர்த்து.]

பிரபாகரன் — 1. ஒரு நூலாசிரியன். 2. சூரியன். ஒளிக்கு ஆதாரமாயிருப்பவன் என்பதாம். 3. வேதமே பிரமமென்றும், சமாதியில் மண் சிலைபோலிருக்கவேண்டுமென்றுஞ்சொல்லுகிறவன். (சி. சி. அ: கரு. மறை.)

பிரபாகீடம்—மின்மினி. (வைத்தியபரி.)

பிரபாசம் — பிரதிட்டாகலையி லப்புதத்துவத்திருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

பிரபாசன்—1. அட்டவசுக்களிலொருவன். (பொருட்டொகைநிகண்டிற்காண்க.) 2. விச்சுவகன்மன்றந்தையும் யோகசித்தியின் நாயகனுமானவன். (வி-ணி. அபிதாநசி.)

பிரபாநர்—வித்தியாதத்துவத்திருக்கு மாசாரிய தசகரிலொருவர். (வி-ணி.)

பிரபாவம் — 1. பிரகாசம். (வி-ணி.) 2. மகிமை. (சி. சி. உ: சுரு. சிவாக்.)

பிரபாவர் — சிவலோகத்துத்தரதிசை யோலக்கஞ்சேவிக்குந் துவாதசமுக்கிய தேவதைகளிலொருவர். (வி-ணி.)

பிரபு—பெருமையிற்சிறந்தோன், தலைவன்.

பிரபுகிரன்—நியதிதத்துவத்திலிருக்குமோருருத்திரன். (வி-ணி.)

பிரபுத்தர் — காலதத்துவத்திருக்குமோருருத்திரர். (வி-ணி.)

பிரபுத்தனம்—மேம்பாடு. (வழக்.)

பிரபுத்துவம்—பிரபுத்தன்மை. (வழக்.)

பிரபுலிங்கலீலை—ஒரு நூல்; இது: சிவப்பிரகாசரென்பவராற் செய்யப்பட்டது.

பிரபூதி — சதருத்திரரி லிந்திரதிக்கினிருக்குந் தசருத்திரரிலொருவன். (வி-ணி.)

பிரபேதம்-விதம். (வழக்.) பிர-உபசருக்கம்.

பிரபை—1. ஒளி. 2. திருவாசி. (1, 2-வழக்.)

பிரபோதசந்திரோதயம்—ஒருநூல்; இது: தமிழில் திருவேங்கடசாமியென்பவராற் செய்த வேதாந்தநூல். (அபிதாநசி.)

பிரபோதநம்—போதித்தல். (வழக்.)

பிரபோதம்—அறிவு. (வழக்.)

பிரபோதிகை — போதிப்பது. (சி. சி. உ: க. ஞானப்.)

பிரம்பம்—கோவை. (வைத்தியபரிபா.)

பிரம்பு—1. அரிசி. (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. பிரப்பங்கிழங்கு. (தைல. தைலவ. காரு.) 3. பிரம்புக்கொடி. (வைத்தியபரி.)

பிரமக்கியாநம் — பிரமஞானம். (வைத்தியபரிபா.)

பிரமக்கியாநி—பிரமஞானி. (வழக்.)

பிரமக்கிரந்தி — ஒருவகைமுடிச்சு; அது: பிராமணரது பூணூலினடுவே முடியுமுடிச்சு. (சைவச. ஆசாரிய. சகூ. உரை.)

பிரமகத்தி — பிராமணக்கொலை. (உ-ம்.) "ஏமலிசிலையிராமற்கிராவணப்பிரமகத்தி" (சேதுபு. சேதுசரு. க.)

பிரமகபாலம்—பிரமன்றலையோடு.(வழக்.)

பிரமகற்பம் — பிரமன்வாழ்நாள்; அஃது: ஆயிரங்கோடாகோடிவருடம். பூரியம்பத்துக்கொண்டது பிரமகற்பமென்பர். (பிங்கல நிகண்டில்.)

பிரமகன் — மூர்த்தியாதிபிரமசுவரூபி. (சி-வி. ஞாந. உ.) (மூர்த்தியாதி பிரமம் என்

றது: மூர்த்திப்பிரமம், தத்துவப்பிரமம், பூதப்பிரமம், பிண்டப்பிரமம், கலாப்பிரமம், பதப்பிரமம் என்பனவாம்.)

**பிரமகாதகன்**—பிராமணக்கொலைபாதகன். (வழக்.)

**பிரமகாயத்திரி** — ஒருமந்திரம். (உ-ம்.) "மன்னியமுச்சவித்துமுக்காற் பிரமகாயத்திரியைமாதத்திஞேதி" (காசிகா. இல்லொ ௩௩.)

**பிரமகீதை**—பிரமன்செய்த உபநிஷத். தமிழில்-தத்துவராயர் மொழிபெயர்த்துக்கூறினர். (அபிதாநசி.)

**பிரமகுலம்**—பிராமணசாதி. (வழக்.)

**பிரமகைவர்த்தநம்**-சூரியபுராணம்.(உ-ம்.) "இரவிதன்கதைபிரமகைவர்த்தமாம்" (கந்தபு. பாயிர. ௫௫.)

**பிரமசம்புபத்ததி** – பதினெண் பத்ததியில் ஒருவகைப்பத்ததி. பத்ததி-ஒழுங்கு.)

**பிரமசரிதன்**—பிரமசாரி. (வழக்.)

**பிரமசரியம்** — நால்வகையாச்சிரமங்களுள் முதலாவது; அது: நைட்டிகம், பௌதிகமென விருவிதமாம். (ஒ. சி. அ: ௩௩. மறை.)

**பிரமசாபாலம்** — உபநிடதத்திலொன்று சாபாலமென்றும் பெயர். (அபிதாநசி.)

**பிரமசாயை**—பிரமகத்தி. (உ-ம்.) "வடவாரி தன்னைப்பிடித்ததுபிரமசாயை" (திரு வி ளை. இந்திரன்பழிதீர்த். ௫அ.)

**பிரமசாரி** — 1. பிரமசரியமநுட்டிப்போன். 2. வீடுமன். (சூ. நிக. உ: ௩௩.)

**பிரமசாவர்ணி**—௧0-ஆம் மநு. (அபிதாநசி.)

**பிரமசூத்திரம்** — வேதாந்தார்த்த சூத்திரம்; இது: வியாசர்செய்தது. (அபிதாநசி.) 2. முப்புரிநூல். மந்திரத்துடன் அணியுநூல்என்பது கருத்து. பிரமம்-மந்திரம்.

**பிரமசைதந்நியம்**—1. கடவுள். 2. பிரமஞானம். (1, 2-வழக்.)

**பிரமஞாநி**—தேவஞானமுள்ளோன்.(வழக்.)

**பிரமண்டை**—பேய்மிரட்டி. (வைத்தியபரி.)

**பிரமணேசன்**—ரௌரவாகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ.)

**பிரமத்தம்**—மதிமயக்கம். (வழக்.)

**பிரமத்தி**—பிரமகத்தி. பிரமத்தி என மருவியது. (வழக்.)

**பிரமதகணம்** — சிவலோகத்திலே மகாதேவன்கோவில் வடக்குவாசற்காவலனுகிய மகாகாளனேடுகூடியிருக்குங்கணம். (உ-ம்.) "கறைமதியெயிற்றுச்சங்குகந்நன்முன்னு ன வெ ண் திப்-பிரமதகணமும்"(திருவிளை.மெய்க்கா.உ௩)

**பிரமதண்டம்**—1. ஆதித்தியனின்றநாளுக்குப் பதினேந்தாநாள். (உ-ம்.) "பாகஞ்செறிசுடர்மன்னியநாளாதியேழுபத்தும்— மோகக்கரும்பதினேந்திருபத்தொன்றுமூன்முறையே-பூகம்பமுற்ற ர்பிரமதண்டங்கொடியென்றுபொல்லா - யோகங்களைவினைக்காகாதெனவுரையொண்ணுதலே" (விதாந. குணு. ௬௪.) 2. குருக்கு. (மலையக.)

**பிரமதண்டு**—1. ஒருபூண்டு; அது: குருக்கு. (வைத்தியமூ. அக.) 2. பிரமதண்டம். அம்சாரியையின்றி வந்தது.

**பிரமதநம்**—1. கடைதல். 2. கொலை.(1,2-வழக்.)

**பிரமதம்**—1. சந்தோஷம். 2. வெறி. (1,2-வழக்.)

**பிரமதாயம்** — பிராமணருக்குக்கொடுக்கும் நன்கொடைப்பொருள். (பதிற்றுப்பத்து.)

**பிரமதாலயம்**—நரகம் (வைத்தியபரி.)

**பிரமதிநம்**—இரண்டாயிரந்தேவயுகங்கொண்ட காலம். (சி-வி. ஞாந. உ௪. உரை.)

**பிரமதீதம்**—தயிர். (வைத்தியபரி.)

**பிரமதீர்த்தம்**-சிதம்பரதசதீர்த்தத்தொன்று; இது: திருக்கோயிலுக்கு வடமேற்கே திருக்காளாஞ்சேரியில் உள்ளது. (கோயிற்பு)

**பிரமதேவன்**-பிரமன். (உ-ம்.) "பிரமதேவனுமிடமுறைவளாங்குப்பிரமனுமுவந்துவாழும்" (மச்சபு. ஆதிசி. ௪.)

**பிரமநாடி**—சுழுமுனைநாடி. (உ-ம்.) "கோதறுமந்தநாடியையே-தென்பொலிபிரமநாடியென்றுரைப்பர்" (சூத. ஞாநயோ. ௧௧: எ.)

**பிரமப்பிரளயம்**—பிரமதேவருடையநாசாவஸ்தாகாலம். (வாசுதேவ.)

**பிரமப்பொழுது** — பிராமிமுகூர்த்தம். (உ-ம்.) "பிரமப்பொழுதத்திலெழுந்துபிரானையுன்னி" (சேதுபு. அமுததீர். ௧௧.)

**பிரமபத்திரம்**— } பிரமபத்திரி, புகையிலை.
**பிரமபத்திரி**— } (வைத்தியமூ. அக.)

**பிரமபதம்**— } பிரமலோகம். (வழக்.)
**பிரமபதவி**— }

**பிரமபிங்கை**—வெள்ளி. (வைத்தியபரி.)

**பிரமபுரம்** — சீகாழிப்பதி. (திருஞானச. தேவார. ஏகபாதம். க.)

**பிரமபுராணம்** — பதினெண்புராணங்களுளொன்று; அஃது: உலகசிருட்டியையும், மநுவந்தரங்களையும், சூரியசந்திரகுலத்து அரசர்களையும், சூரியன்பொருட்டும், சிவபெருமான்பொருட்டும், சகநாதர்பொருட்டுமுள்ள திருக்கோயில்களையும், திருநந்தவனங்களையும்,சகநாதமான்மியத்தையும் உணர்த்துவது. (கந். நவ.)

**பிரமம்**—1. அக்கினி. 2. ஆதித்தன். 3.இருடி. 4. உபநிடதம் நூற்றெட்டினொன்று. 5. கலக்

கம். (சூ. நிக. அ: ருரு.) 6. சந்திரன். 7. சிவன். 8. சுத்தசிவமத்திய நிர்த்தசிவம். (சி. சி. கஉ: எ. ஞானப்.) 9. சுத்தமாயை (சி. பி. கைக.) 10. திருமால். 11. நடு. (சூ. நிக. கூ: கூரு.) 12. பஞ்சமாவெச்சத்தொன்று; அது: வேத மோதல். 13. பதினெண்புராணங்களி லொன்று. 14. பிரமமணம். (இலக்கணவி. சஅரு. உரை.) 15. பிரமன். 16. மந்திரம். 17. முத்தி. 18. யாகம். 19. வேதம். உதாரணங்காட்டாதொழிந்தன வற்றிற்கு (சூ. நிக. கக: ரகரவெ. கஅ-ல்காண்க. (4, கூ. அபிதாநசி.) அபிதாநகோசத்தில், ஏகமாய்ச் சச்சிதாநந்தமாய் உலகந்தோன்றி யொடுங்குதற்கிடமாயுள்ள கடவுளென்பர்.

**பிரமமணம்**—எண்வகைமணங்களுளொன்று; அஃது: ஒத்தகோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங்காத்தால் அவற்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளாய்ப் பூப்புஎய்தியவளைப்பெயர்த்து இரண்டாம் பூப்புஎய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக்கொடுப்பது. (உ-ம்.) "கயலேர்மலருண்கண்கந்நிப்பூப்பெய்தி-யயல்பேரணிகலன்கள்சேர்த்தி-யியலினிரலொத்தவந்தணற்குநீரிற்கொடுத்தல்-பிரமமணமென்னும்பெயர்த்து" (இலக்கணவி. சஅரு. உரை.)

**பிரமமீமாஞ்சை** — உபநிடதங்களை யுற்றுநோக்கி வியாசமுநிவரியற்றிய சூத்திரரூபமாகிய ஒரு வேதாந்தநூல். (சைவச. ஆசாரிய. உக. உரை.)

**பிரமமுனி** — பதினெண்சித்தரி லொருவர். (அபிதாநசி.)

**பிரமமூலி**—பிரமி. (மலையக.)

**பிரமயாகம்**—ஐவகையாகங்களி லொன்று; அது: வேதமோதல். (வள். அஎ. பரி. குறிப்பு.)

**பிரமர்** — ஆதிப்பிரமத்திற்கு நினைவாற் றோன்றிய பிரமர்பதின்மர் என்பர். (பரிபாடலுரை.)

**பிரமாந்திரம்** — உச்சித்துவாரம்; இஃது: அர்த்தசந்திர நிரோதினி நாதநாதாந்தகலைகள் நான்கிற்கும் ஸ்தானம். சத்திதத்துவம்வரையில் வியாப்தி. (சி-வி. கிரி. க0.)

**பிரமரம்**—வண்டு. (சூ. நிக. கூ: கூச.)

**பிரமராசனர்**—தபோதனர். (சிந்தா.)

**பிரமராட்சதன்**— / **பிரமராட்சதை** — } அவமரணமடைந்த பிராமணனாவி யெடுக்குமிராட்சதப்பேய்.

**பிரமராட்சதைமூலம்**—காசிவேர். (வைத்தியாநுபந்த. அக.)

**பிரமரி** — 1. புறக்கூத்திற்குரிய வாடலுளொன்று. (சிலப்.) 2. சுழலல். (சூ.நிக.கூ:சக.)

**பிரமலோகம்**—சத்தியலோகம்; இது: மேலுலகத்துளொன்று. (அபிதாநசி.)

**பிரமவரன்** — சீவன்முத்தர் நால்வகையரிலொருவர்; இவர்: சமாதிஞானத்தையடைந்திருந்து தேசசஞ்சாரஞ்செய்தற் பொருட்டு உணவுமுதலியவற்றை நினைப்பவர். (கைவல். தத்துவ. கக. உரை.)

**பிரமவரிட்டன்**—நால்வகைச் சீவன்முத்தரிலொருவர்; இவர்: சமாதியிலதீதமானவர். (கைவல். தத்துவ. கக. உரை.)

**பிரமவரியான்**—சீவன்முத்தர்நால்வகையரிலொருவர்; இவர்: சமாதிஞானத்தை யடைந்திருந்து சீடன்முதலிய வேற்றோரானுணர்பவர். (கைவல். தத்துவ. கக. உரை.)

**பிரமவருத்தநம்**—செம்பு. (வைத்தியபரி.)

**பிரமவித்தியை**—யசுர்வேத வுபநிடதத் தொன்று. (கூர்மபு. அட்ட. உசு. உரை.)

**பிரமவித்து**—1. சீவன்முத்தர் நால்வகையரிலொருவர்; இவர்: லோகோபகாரநிமித்தஞ் சந்கரும மனுஷ்டிக்கிறவர். (உ-ம்.) "வானிகர்பிரமவித்து" (கைவல். தத்துவ. கூச.) 2. வெள்ளைப் பாஷாணம். (வைத்தியபரி.)

**பிரமவுப்பு**—கரியுப்பு. (வைத்தியபரி.)

**பிரமன்**—1. தொண்டி, வறட்சுண்டி. (வைத்தியபரி.) 2. பிரமதேவன். (உ-ம்.) "பிரமன்மால் காணாப்பெரியோன்காண்க" (திருவா. திருவண்ட. கூஅ.) இவன் வரலாறு குறிகளெல்லாம் (அபிதாநசிந்தாமணியிற்காண்க.) 3. பிரகிருதிமாயை. (கூர்மபு. பிரகிருதி. ரு. உரை.) [தான்வளர்ந்தும் விரிந்தும் பூதங்களைவளர்த்தலால் வந்த பெயர்.]

**பிரமனாள்**—உரோகணி. (சூ. நிக. க: கூஅ.)

**பிரமா** — 1. ஞானம். (சி. சி. அளவை. க. சிவாக். 2. பிரமதேவன்.

**பிரமாகரணம்** — பிரமாணம். (சி. சி. அளவை. க. சிவாக்.) [பிரமைக்குக் காரணமென்றபடி.]

**பிரமாங்கம்**—பஞ்சப்பிரமசடங்கதேவர்பதினொருவர். (உ-ம்.) "பிரமாங்கம்வித்தேசர்பேனுகணமெண்டிக்-குரமொடுகாப்போர்படைகளும்" (சைவச. பொது. ருஉஅ.)

**பிரமாஞ்சலி**— இருகையுங்குவித்து நெஞ்சிடைவைத்து வணங்கல். (உ-ம்.) வந்துழிக் காண்க.)

**பிரமாண்டதாரகர்**—உருத்திராதிகள். (சி. சி. க: உசு. மறை.)

**பிரமாண்டநிலையஸ்ரீகண்டர்**— ஸ்ரீகண்டத்திரயத்துளொருவர்; இவர்: பிரமாண்டத்து நிலையர். (சி. சி. க: ருச. ஞானப்.)

பிரமாண்டநிலையபிரமா—"குணநிலையபிரமா"பார். (சி. சி. க: சுo. ஞானப்.)
பிரமாண்டநிலையவிட்டுணு—"குணநிலையவிட்டுணு"பார். (சி. சி. க: சுo. ஞானப்.)
பிரம்மாண்டபுராணம் — பதினெண் புராணத்தொன்று. (அபிதாநசி.)
பிரமாணஞ்செய்தல்-சத்தியம் பண்ணுதல். (வழக்.)
பிரமாணஞ்ஞன் — பிரமாணத்தையறிந்தவன். (சி. சி. அளவை. ரு. சிவாக்.)
பிரமாணம்-1. அளவை. (சி. சி. அளவையி. க. சிவாக்.) 2. ஆணை, சத்தியம். (சூ. நிக. கo: கo.) 3. எல்லை. யோசனைப்பிரமாணமுண்டு. (வழக்.) 4. நிலை. (உ-ம்.) "பால்பேசலுந்-தூய்மையுட்டோன்றும்பிரமாணமிம்மூன்றும் வாய்மையுடையார்வழக்கு" (திரிகடு. கூஎ.) 5. பிரமிதியினதுகருவி.(தருக்கசங்கி.) 6 மேற்கோள். (சிவாலயதரிசனவிதி.)
பிரமாணன்—மெய்யன். (வழக்.)
பிரமாணிக்கம்—பிரமாணிகம். (வழக்.)
பிரமாணிக்கன் — உண்மையுள்ளவன். (வழக்.)
பிரமாணிகம்—1. உண்மை. 2. திருட்டாந்தம். (1, 2-வழக்.)
பிரமாணித்தல்—1. அளவிடல். 2. பிரமாணமாகக்கொள்ளல். (1, 2-வழக்.)
பிரமாதம்—1. தவறல். (உ-ம்.) "தண்டினர் திரித்தகுடுமித்தலையர்சாரப் - பெண்டுகெணடக்கைபிரமாதமெனவஞ்சி" (இராமா. அசுவமேத. ருகூ.) 2. வருத்தம். (உ-ம்) "மரணப்ரமாதமெனக்கில்லையாம்" (கந்தரல. உக.)
பிரமாதா-அறிபவன். (உ-ம்) பிரமிதிபார்.
பிரமாதாமகன்—மூப்பாட்டன். (வழக்.)
பிரமாதி —வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களிலே பதின்மூன்றும் வருடம். (வருஷாதிநூல்.)
பிரமாதீச — வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களிலே நாற்பத்தேழாம்வருடம். (வருஷாதிநூல்.)
பிரமாநந்தம்—பரமாநந்தம். (வழக்.)
பிரமாயு—பிரமகற்பம். ஆயு-ஆயுள்.
பிரமாயுககாலம்—நூறுபிரமவருடங் கொண்டது. (சைவ. பி.)
பிரமாயுதம்-பத்திலட்சம்.(வழக்குபோலும்.)
பிரமாரண்ணியம்-வேதாரணியம். பிரமம்-வேதம்.
பிரமி—ஒருபூண்டு. (தைல.தைலவ.ககூரு.)
பிரமித்தல்-அதிசயத்தாலும் அச்சத்தாலும் திகைத்தல். (வழக்.)

பிரமிதி-அளத்தல், பிரமாதாபிரமேயத்தை ஐயந்திரிபின்றியுள்ளபடியறிதல்.(சைவப்பி.கூ)
பிரமிப்பு—பிரமித்தல். (வழக்.)
பிரமியம்—1. ஒரு பூண்டு. 2. ஒரு வியாதி. 1, 2-வைத்தியமூ. அக.)
பிரமிருட்டம் — மல்யுத்தத்திற்குரிய எண்வகைக் கரணங்களுளொன்று; அது: உடம்பு முழுதினும் இறுகப்பிடித்து விழுத்தியுழக்குவது. (கூர்மபு. தமோ. கரு. உரை.)
பிரமுகத்துவம்—ஆதிக்கம் (வழக்.)
பிரமுகம்—உத்தமோத்தமம். (வழக்.)
பிரமுகர்-முதலானவர். (சி.சி.சு.கஉ.ஞானப்.)
பிரமுதல்-பொருமிக்கழிதல். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிரமூடன்—மடையன். (வழக்.)
பிரமேகம்— மேகவியாதி. (வழக்.)
பிரமேயம்—அளக்கப்படும் பொருள், அறியப்படும் பொருள் (சி. சி. அளவை. க. சிவாக்.)
பிரமை—1. அறியாமை. 2. பைத்தியம். 3. மயக்கம் (வைத்தியாநுப. அக.) (1. 2. வழக்.)
பிரமோசாநந்தி—சூரியன் முன்னடிக்கும் அப்சரஸ்திரிகளிலொருத்தி. (வி-ணி.)
பிரமோத்தரகாண்டம்—ஒரு நூல்; இது: வரதுங்கபாண்டியன் செய்யப்பட்டது.பஞ்சாக்கர முதலியவற்றின் மகிமைகளை விரித்துக் கூறுநூல். (அபிதாநசி.)
பிரமோதநி—மல்லிகைக்கொடி. (வைத்தியபரி.)
பிரமோதம்—இஷ்டமான வஸ்துவை அநுபவித்தபிறகு வருகிற சந்தோஷம். (வாசுதே.) மிகவுஞ்சந்தோஷம். (வி-ணி.)
பிரமோதூத—வியாழவட்டமாகிய அறுபது வருடங்களிலே நான்காவதாம் வருடம். (வருஷாதி.)
பிரமோபநிடதம்— நூற்றெட்டுபநிடதங்களிலொன்று. அது யசுர்வேதத்திலுள்ளது.
பிரமோபதேசம்-ஞானோபதேசம். (உ-ம்.) "பிரமோபதேசம்பெறுதலேபாங்கு" (சைவ. ஆசாரிய. கூரு.)
பிரமோற்சவம்— கோயில்களில் வருஷத்திற்கொருதரம் நடக்கும் விசேஷ உற்சவம்.
பிரயத்தனம் — பிரயத்தினம், முயற்சி (தருக்கசங்கி.)
பிரயாகம்—கங்கையமுனை கூடுமிடம்.
பிரயாகை —1. ஒரு நதி. (உ-ம்.)"மறைபுகழ் பிரயாகை தன்னின்மாசுநீர்ப்படிந்ததூயோர்" (காசிகா தேவர்கள் பிரம. உக.) 2. கங்கையும் யமுனாவும் கூடுமிடத்துள்ள ஒரு புண்ணியத்தலம். (அபிதாநசி.)

பிரயாசம் — 1. உழைப்பு. 2. வருத்தம். (1,2-வழக்.)
பிரயாசி—1. பிரசாசைக்காரன். 2. பிரயாசைக்காரி. (1, 2-வழக்.)
பிரயாசை—பிரயாசம். (வழக்.)
பிரயாணம்—பயணம். (வழக்.)
பிரயுக்தம்-உண்டாவது. (சி.சி.ரு:க.சிவாக்.)
பிரயுத்தம்— மூகாந்திரம். வழக்குண்டுபோலும்.
பிரயுத்தி-பிரயோசநம்.வழக்குண்டுபோலும்.
பிரயுதம்—பத்திலட்சம்.(பிங்கல. உ௨கஅ.)
பிரயோகம் — 1. உதாரணம். பிரயோகங்காட்டு. 2. ஏவல்.பாணங்களைப்பிரயோகஞ்செய்தான். 3. செலுத்தல். (வி-ணி.) 4. மருந்துசெய்தல். (1, 2, 4-வழக்.)
பிரயோகவிவேகம்— ஒரு தமிழிலக்கணநூல் (அபிதாநசி.)
பிரயோகித்தல்—1. செலுத்தல். 2. முயலல். (1, 2-வழக்)
பிரயோச்சியகர்த்திருத்துவம்—ஏவப்படுகிறது. ஏவப்பட்டுச்செய்தல். (சி.சி.க:க.சிவாக்.)
பிரயோச்சியம் — ஏவப்படுதல். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிரயோச்சியன்—1. அடியான். ஏவப்படுபவன் என்பது பொருள். 2. இயற்றுதற்கருத்தா. (பி. வி.)
பிரயோசகம்—ஏவுகிறது.(உ-ம்.)வந்துழிக்காண்க.
பிரயோசகன்—வேலை செய்விக்கிறவன்.
பிரயோசனம்—பயன். (வி-ணி.)
பிரயோசனன்—பரோபகாரி. (வழக்.)
பிரரோகம்—தளிர். (வைத்தியபரிபா.)
பிரரோகி—வறட்சுண்டி. (வைத்தியபரிபா)
பிரலம்பம்—அசைவு. பிர-உபசருக்கம்.
பிரலம்பன்—ஓரசுரன் (அபிதாநசி.)
பிரலாபசந்நி—அலறுசந்நி. (வைத்தியம்.)
பிரலாபம் — 1. துக்கம். 2. புலம்புகை. (வழக்.)
பிரலாபித்தல்—புலம்பல் (வழக்.)
பிரலோடநம்—உருளுதல். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிரலோபம் — காமம். (உ-ம்.) வந்துழிக்காண்க.
பிரவசநம்—பிரசங்கம் பண்ணுதல். (வழக்.)
பிரவஞ்சம்—உலகம். (வழக் )
பிரவஞ்சன்—பிரபஞ்சன். ஒருவாயு; பிரபஞ்சன்பார்.
பிரவணன்—காமிகாகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ.)
பிரவந்தகம்—செயல். (வழக்.)
பிரவர்த்தகம் — நடத்துகிறது. (சி. சி. உருஎ. சிவாக்)
பிரவர்த்தகன்—பிரவருத்தகன்.
பிரவர்த்தநம் — 1. சொல்லுதல். (சி. சி. ருக. (சிவாக்.) 2. நடக்கை (வி-ணி.) 3. முயற்சி. (வழக்.)
பிரவர்த்தநை-முயற்சி.(வேதா.க.அ.உரை.)
பிரவர்த்தம்—பிரவர்த்தித்தல். (த.நி.போ. கஅ.)
பிரவர்த்தர்—மகேசுவரர். (த.நி.போ. கஅரு.)
பிரவர்த்தி—முயற்சி. (வழக்.)
பிரவர்த்திக்கிறது—தொழிற்படுகிறது. (சி. சி. க: கஉ. (சிவாக்)
பிரவர்த்தித்தல் — சேட்டித்தல், முயற்சி பண்ணல். (உ-ம்.) "பிராணன்முதலாகியஐந்து வாயுக்களும் யாதொரு அகங்காரதத்துவத்தினாலே நிதம் வியாபாரங்களிலே பிரவிர்த்திக்கின்றனவோ." (சி. சி. ஞாந. கஎ. உரை.)
பிரவரசைவர்—எழுவகைச்சைவர்களுளொருவர்; அவர்: சிவதீக்ஷை பெற்ற அநுலோமர். (சைவச. பொது. சஙரு. உரை.)
பிரவரம் — வமிசம். (உ-ம்.) "ஐந்துசைவ இருடிகளின்கோத்திரங்களும் அவாதுகிளைக் கோத்திரங்களும் ஒத்தபிரவரமாயின்" (பெரியபு. தடுத்தாட். ச0. உரை.)
பிரவருத்தகன் — முயற்சி செய்வோன். (வழக்.)
பிரவருத்தநம்—முயற்சி. (வழக்.)
பிரவருத்தித்தல்—முயறல். (வழக்.)
பிரவாகம்—1. இடையறாமல்வரும் பெருக்கு வெள்ளம் (சி. சி. உ: ௬0. மறை.)
பிரவாகாநாதி — ஆற்றிலே முன்னேவந்த தண்ணீரோடிப்போகப் பின்னேயுமொழியாமல் வருவது. (சி. சி. க: கசு சிவாக்)
பிரவாகி—தக்ஷப்பிரமன் புத்திரிகளுளொருத்தி (வி-ணி.)
பிரவாகித்தல்—பெருக்கெடுதல்.
பிரவாகேசுரவாதி—ஈசுவரன் ஒரு ஆன்மா முத்தனானால் அவனிடத்திலே அதிகாரத்தை வைத்துத்தான் பரமற்றிருப்பன் அவனும் பின்னொருவன் முத்தனானால் அவன் கையிலே யதிகாரத்தை வைத்துப்பரமற்றிருப்பன் என்று கூறுமதஸ்தன். (த. நி. போ. கககை.)
பிரவாசநம்—பிரதேசவாசம். (வழக்.)
பிரவாசம் — 1. குழந்தையை எடுத்துக் கொண்டு ஆலயத்திற்குச் செல்லுங்கிரியை. (உ-ம்.) "அந்நப்பிராசநம்" பார். 2. சொற்பகால அந்நியதேசவாசம்.

**பிரவாதம்** — 1. ஊர் வழக்குப் பேசுதல். (வழக்) 2. காற்று.

**பிரவாரணம்**—தடை. பிர-உபசருக்கம். வாரணம்-தடை.

**பிரவாலம்**—இளந்தளிர். (வைத்தியபரிபா.)

**பிரவாளம்**—பவளம். (வைத்யபரிபா.)

**ப்ரவ்க்யாதி**—கீர்த்தி. (வழக்.)

**பிரவிசாரம்**—பரதத்தின் பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (உ-ம்.) "அங்ககாரம்" பார்.

**பிரவிடை**—பெண்பருவம் நான்கிலொன்று பிரவுடை யென்பது பிரவிடையெனமருவி வழங்குகின்றது. (கந்தபு. இந்திரபுரி. ௬௬.)

**பிரவிர்த்தசிவம்**—சகளாகியசிவம். (சி. சி. சு: கக. ஞாநப்.)

**பிரவிர்த்தர்**—அதிகாரசிவன். (சி. சி. பாயிர: க. சிவாக்.)

**பிரவிர்த்திதத்துவம்**—ஈசுரதத்துவம். (சி சி. க: சுரு. ஞாநப்.)

**பிரவ்ருத்தி** — 1. செய்கை. 2. முயற்சி. (1, 2-வழக்.)

**பிரவிருத்தித்தல்**—முயற்சித்தல். (வழக்.)

**பிரவ்ருத்திமான்**—பிரவிருத்தியுடையவன்.

**பிரவிருத்தியர்த்தம்**—பிரவிருத்தியின் பொருட்டு. (சி. சி. ௬: ருசு. சிவாக்.)

**பிரவிருத்திவிஞ்ஞாநம்**—உருவக்கந்தத்தைச் சவிகற்பமாகவுணரும் உணர்வு. (சிவஞாநபா.)

**பிரவீணன்**—சமர்த்தன். (திருவிளை. திருவாலவா ௫.)

**பிரவுடை**—பேரிளம்பெண். (உ-ம்.) "தரித்தவாலைதருணைபிரவுடை, விருத்தையாகும்விய ன்பருவங்களின்" (கந்தபு. இந்திரபுரி. ௬௬.)

**பிரவேசகம்**—முயற்சி. (வழக்.)

**பிரவேசகன்**—பிரவேசிக்கிறவன்.

**பிரவேசப்படுத்தல்**—பிரவேசிப்பித்தல்.

**பிரவேசம்**—1. தொடங்கல். 2. முயற்சி. 3. தோற்றம். (1. 2. 3. வழக்)

**பிரவேசித்தல்**-1. உட்செல்லல். 2. தொடங்கல். 3. தோற்றப்படல். (1, 2, 3-வழக்.)

**பிரவேசிதன்**—பிரவேசிக்கிறவன். (த. நி. போ.)

**பிரவை**—பிரபை, ஒளி. (வழக்.)

**பிரளயகைவல்லியம்**—பிரளயவிடுதி. (சி. சி. சு: சுo. ஞாநப்.)

**பிரளயசொரூபம்** — பிரளயவடிவு; அது: நித்தியப்பிரளயம், அவாந்தரப் பிரளயம், தினப் பிரளயம், பிரமப்பிரளயம், அத்தியந்தப்பிரளயம் என்று ஐந்துவிதமாயிருக்கும். (வாசுதே. உoஉ.)

**பிரளயம்** — 1. உலகவொடுக்கம். அழிவுகாலம். (உ-ம்) "மண்புனறீக்கால்வானம்மழியமாப் பிரளயத்தில்" (மச்சபு. மாச்சா. எ.) இப்பிரளயம் நித்தப்பிரளயம், நைமித்திகப்பிரளயம், பிராகிருதப்பிரளயம், ஆத்யந்தபிரளயம் என நான்கு வகைப்படும். (அபிதாநசிந்தாமணியில் விவர நன்குகாண்க. 2. படையிலோர் தொகை. அதுவாகினி மூன்று கொண்டது. பிங்கல. சுசசு.) 3. வெள்ளம். (பி. நிகண். எச.)

**பிரளயர்**—பிரளயாகலர். (த. நி. போ. கசுஎ.) ஆணவமலம், கன்மம், இரண்டுடன் கூடிய ஆன் மாக்களென்க.

**பிரளயாகலர்** — ஆணவகன்மமென்னுமிரண்டுமலமுமுடைய ஆன்மாக்கள், பிரளயகாலத்திற்கலைநீங்கப் பெறுபவர். (சிவஞா. சித். அ: உ.)

**பிரளல்**—புரளல். (வழக்.)

**பிரளையம்**—பிரளயம்.

**பிரற்றல்**—எடுத்தலோசை. (பி. நி. உகoச.)

**பிராக்கியன்**—அறிவுள்ளவன். (வழக்.)

**பிராக்ஞன்**—பிராஞ்ஞன்

**பிராகபாவம்**—முன்னபாவம். (தருக்கசங்.)

**பிராகாமியம்**—அட்டசித்திகளுளொன்று; அது: இச்சித்தநிவ்வியரூபமான ஸ்திரீகளனேகரை மநச்சங்கற்பத்தினாலுண்டாக்கி யெல்லாருடனும் ஏககாலத்திலே அப்படிப்பட்ட ரூபங்களைக்கொண்டு கூடியிருக்கை. (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

**பிராகாரம்**—சுற்றுமதில். (சூ. நி. க. ரு: சஉ.)

**பிராகிருதசநம்**—கடைத்தரமான மனிதர். (சி. சி. அ: ௬௬. சிவாக்)

**பிராகிருதசிருட்டி**—பிரமசங்கற்பமின்றி பிராகிருத சம்பந்தமாயுண்டாகிய சிருட்டி; அது: மகத்துவ சிருட்டி, தன்மாத்திரைச் சிருட்டி, இந்திரிய சிருட்டி என மூன்று வகைப்படும். (கூர்மபு. பலவகை. எ. உரை.)

**பிராகிருததேகம்**—பிரகிருத சம்பந்தமுள்ள தேகம் (சி. சி. அ: கஉ. சிவாக்.)

**பிராகிருதப்பிரளயம்**—பிரகிருதியில் சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்களும் சம்பந்தப்பட்டு நின்றகாலம். (உ-ம்.) "பிரகிருதிக்குமுன்புகன்ற—விரியுமுக்குணமுந் தாக்குபொற்றுலைநாவெனச்சமமே யின சிறப் பின்-வருபிராகிருதப்பிரளயமாகும்" (கூர்மபு. பிரகிரு. க.)

**பிராகிருதம்**—1. அழியத்தக்கது. 2. ஒழுங்கற்றவடமொழி. (உ-ம்) "பிராகிருதமொழியிற் பயின்றுவருதலால்" (நன். எ௬. விருத்தி.) 3. பிரகிருதசம்பந்தம். (சி. சி. சு: ௬. சிவாக்.)

**பிராகிருதர்**—ஆற்றலு அறிவும் காதலுமில்லாதவர். (சி. சி. பாயிர கூ. சிவஞா.) பூமியிற் செனித்த மேற் சொப்பனத்தில் ஞானம்போல அறிந்தறியாமலும், கிளிஞ்சிலை வெள்ளியென்று அறிவதுபோல விபரீதஞானமுமாய் அதனாலே தேகாதிகளேயான்மாவென்றும் பிரகிருதிசங்கியவஸ்துக்களேயே பரமென்றுமெண்ணுபவர். (சி. சி. பாயிர. கூ. சிவாக்.)

**பிராதுசவிரை**-பிருவிரை. (வைத்தியபரிபா)

**பிராங்கணம்** / **பிராங்கம்** } ஒருபறை (வழக்குண்டு போலும்.

**பிராக்சங்கம்**—தொழுவம். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**பிராசநம்**—சோறூட்டல். (உ-ம்.) "அந்நப்பிராசநம்"பார்.

**பிராசயம்**—ஆதி. (பிங்கல. உஉசஎ.)

**பிராசாதசட்சுலோகி** — ஒரு சம்ஸ்கிருத நூல் என்பர்.

**பிராசாதம்**—ஒரு மந்திரம். (திருவாலைக். கோச்செ. எகூ.)

**பிராசாதமந்திரம்**—ஸ்ரீகண்டராலே சுப்பிரமணியசுவாமிக்குபதேசிக்கப்பட்டதென்றுசொல்லப்படுகிற ஒரு மந்திரம்; அது: இருபது, பதினாறு, பன்னிரண்டு, பத்து, ஒன்பது, எட்டு, ஆறு, ஐந்து கலைகளையுடையதாய் எட்டு விதமாயிருக்கும். (சி-வி. கிரி. எ.) சித்தாந்த சாராவலியிற்காண்க.

**பிராசாபத்தியம்** — 1. உரோகணிநட்சத்திரம். 2. ஒருவகைவிவாகம். (பிங்கல. ககoக.) 3. ஒருவிரதம். 4. பகலில்வருமொன்பதாமுகூர்த்தம். (கூர்மபு. பிரமஞ. கூ. உரை.) 5. பிரமசரியம் நான்கனுளொன்று. (சி. சி. அ: கஉ. மறை.)

**பிராசி**—கிழக்கு. (சூ. நிக. ரு: ரு.)

**பிராசீநபநசம்**—வில்வம். (வைத்தியபரி.)

**பிராசீநம்**—1. பங்கம்பாளை. (வைத்தியமூ. அச.) 2. பழமை. (வழக்.)

**பிராசீநர்**—முன்னோர். (பி. வி.) (வழக்.)

**பிராசேசம்**—பிரதிட்டாகலையிற்புத்தித்தத்துவத்துள்ள எட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

**பிராசேபம்**-பகலில்வருமொன்பதாமுகூர்த்தம். (கூர்மபு. பிரமஞ. கூ. உரை.)

**பிராசோதனி**—கண்டங்கத்தரி. (மலையக.)

**பிராஞ்ஞத்துவம்**—அறிவின்றன்மை.

**பிராஞ்ஞம்**—பிராஞ்ஞத்துவம்.

**பிராஞ்ஞன்**—அறிவன. (வழக்.)

**பிராட்டி**—தலைவி. (உ-ம்.) "எம்பிராட்டிக்கு மெல்லியரானார்" (பெரியபு. திருக்குறிப்புத். கூரு)

**பிராட்டுவிவாகன்** — அந்தணன், சத்திரியன், வைசியன் இவர்களிலொருவனும், மறையோதல் மீமாஞ்சைக்கேள்வி இவற்றையுடையவனும், இலக்கணமுதலிய கருவிநூல்கள் பதினெண் விவகாரபதங்கள் இவற்றையுணர்ந்தவனும், பொறுமை குலமேன்மை நடுவுநிலைமை முதலானகுணங்கள் மதிநுட்பம் இவற்றையுடையவனுமாயிருந்து விவகார நிச்சயஞ்செய்பவன். (மிரு. ச.)

**பிராணத்தியாகம்** — சீவனைக்கொடுத்தல். (வழக்.)

**பிராணம்**—1. காற்று. 2. சீவன். (1, 2-வழக்.)

**பிராணமயகோசம்** — சூக்ஷ்மசரீரத்தில் பிராணனுங் கன்மேந்திரியமுங் கூடினது. (வாசுதே.)

**பிராணவாயு** — பத்துவாயுக்களிலொன்று; இது: மத்தியத்திலேதோன்றிச் சித்திரகாடியிலேவிழுந்து மூலாதாரத்திலேஒடி ஒன்றுகித்து நாபிச்சக்கரத்திலே அங்கென்றுமுட்டி இடைபிங்கலையிலேஒடிக் கபாலத்தைச்சுற்றி நாசியினாலே பன்னிரண்டங்குலம் புறப்பட்டு நாலங்குலம் பாழேபறந்து எட்டங்குலம் நின்று தானின்ற இடத்திலேதாக்கும், நாழியொன்றுக்கு முன்னூற்றறுபது சுவாசமியங்கி இரவுபகலறுபதுநாழிகைக்கு இருபத்தோராயிரத்து அறுநூறுசுவாசமியங்கி இதிலேஏழாயிரத்திருநூறுசுவாசம் பாழேபறந்து பதினேழாயிரத்து நானூறு சுவாசம் உள்ளேயடங்கும். (த. வி.)

**பிராணவான்மவாதி** — பிராணவாயுவேஆன்மாவென்பவன். (சி. சி. கூ: ச. சிவாக்.)

**பிராணன்**—1. உயிர். (வழக்.) 2. பிராணவாயு. (பிங்கல. கூகூ.)

**பிராணாதிபஞ்சகம்** — பிராணன் அபாநன் வியாநன் உதாநன் சமாநன் என்னுமைந்து வாயுக்கள்.

**பிராணாயாமம்**-பிராணவாயுவைத்தடுத்தல்; அது: ரேசகம், பூரகம், கும்பகம் என மூன்று பகுதியையுடைத்து. (உ-ம்.) "சொன்னபிராணாயாமமொருகாற்செய்திடிற்பாவந்தொலைந்து நீங்கும்" (காசிகா. இல்லொ. கூகூ.) [பிராணவாயுவையுள்ளேயடக்கலாற் பெற்றபெயர்.] ஆயாமம்-ஒடுக்கம்.

**பிராணி** — சீவனுடையது. (உ-ம்.) "மண்ணைக்கல்லிற் பிராணிபடும் வருந்தவேண்டாவென்றுரைத்தார்" (பெரியபு. தண்டி. சு.)

**பிராத்தநை**—நேர்கடன். (வழக்.)

**பிராத்தி** — அட்டசித்தியினொன்று. (திருவிளை. அட்டமா. உஉ.)

பிராத்திந்தல்-பிராத்தனை செய்தல். (வழக்.)
பிராத்திப்பு—பிராத்தனை.
பிராதக்காலம்—சூரியோதயத்திற்குமுன் ஐந்துநாழிகை வரையில் நிகழுங்காலம். (சைவவி.)
பிராதம்மியம்—முதன்மை. (வழக்.)
பிராதமிகர்—வானோர்கணமொன்பதினொருவர்; இவர்: கடவுட்டிருவுளப்படியே இராச்சியசம்பந்தமான சாதாரண நன்மைகளை நடத்துந்தன்மைபெற்றோர்.
பிராதமிகன்—முன்பிறந்தோன். (வழக்.)
பிராதர்—மூதாக்கள். (வழக்.)
பிராதா—சகோதரன் (உ-ம்.) "பேசுமிரு பிரசவத்தும்பெண்பிறந்தார் பிராதாப்பெற்ற பிதா." (ஆசௌச. கரு.)
பிராதிபதிகம்—பெயர்ப்பகாப்பதம். (பி.வி.)
பிராபதிகன்—அக்கினி. (உ-ம்.) வந்துழிக் காண்க.
பிராதிபாசிகம்—தோற்றுகிறது. (சி. சி. சு: ௯. சிவாக்.)
பிராதிரு—சகோதரன். (உ-ம்) வந்துழிக் காண்க.
பிராது—முறைப்பாடு. (வழக்.)
பிராந்தவாக்கியம்—பித்தர்வாக்கியம். சி. சி அ: உஎ. ஞானப்.)
பிராந்தன்—மூடன். (வழக்.)
பிராந்தி — 1. கழிதல். 2. மயக்கம்; அது: மனப்பிரமை. (வைராக்கிய ச. கஉ.)
பிராந்திமதலங்காரம்—மயக்கவணி (குவல. க.)
பிராந்தியம்—சுற்றுள்ளதேசம். (வழக்.)
பிராந்து — மதிமயக்கு. (சி. சி. அ: கஎ. கிரம்ப.)
பிராப்தம் — கிடைத்தது. (சி. சி. ௯: ௬௦. சிவாக்.)
பிராப்தி – மனசினாலே நினைத்தபதார்த்தங்களெல்லாம் முன்னே வந்திருக்கை. (சி. சி. உ: ருஅ. சிவாக்.)
பிராப்பியம்—அடைதல், அடையத்தக்கது. (சி. சி. உ: எக. சிவாக்.)
பிராபவம்—முதன்மை. (வழக்.)
பிராபாகரம்—பிரபாகரமதம். (வழக்.)
பிராமணத்தி—பார்ப்பனத்தி. (வழக்.)
பிராமணப்பாம்பு—பிராமணநாகம். (சித்தராரு.)
பிராமணர்—பார்ப்பார்; இவர்: பலவிதமர்வர் அபிதானசிந்தாமணியில் விரிவாக எடுத்துரைத்தனர். ஆண்டுக்காண்க.
பிராமணி—பார்ப்பனி. (வழக்.)

பிராமம் — பிரமசரியம் நான்குவகையுளொன்று. (சி. சி. அ: கஅ. மறை.)
பிராமாணிகத்வம்—பிரமாணத்தினூற் பெறப்படுந்தன்மை
பிராமாணியம் — பிரமாணமாந்தன்மை. (சி. சி. அளவை. ரு. சிவஞா.)
பிராமி—1. சரச்சுவதி. (சூ. நிக. க: ருரு.) 2. மாகாளவைரவன் சத்தி. (வி-ணி. உசு.)
பிராமிபாவனை—சிவபெருமானே யான்மாவுக்குப் பரமான்மாவாய் அக்கினிக்குச் சூடு போலுள்ள பராசத்தி சமேதராய் விளங்கும் பரசிவப்பிரமமென்று தியானித்துவழிபடுதல். (கூர்மபு. வருணாச். சகூ. உரை.)
பிராமிமுகூர்த்தம் — சூரியனுதிக்க ஐந்து நாழிகையுண்டென்னுங்காலம். சி. சி. அ. உகூ. சிவாக்.)
பிராமியம்—1. தலைப்புறம். 2. பிரமலோகம். (சிவதரு.)
பிராமுட்டிவேர் — 1. சித்தாமுட்டி. 2. மயிர்மாணிக்கம். (1, 2 வைத்தியபரிபா.)
பிராயச்சித்தசமுச்சயம்-ஒரு நூல். (வழக்.)
பிராயச்சித்தம்—1. சாந்தி. 2. தண்டனை. (1, 2-வழக்)
பிராயம்—வயது. (வழக்.)
பிராயோவவேசம் — மரணம் வரையும் பசியாயிருத்தல். (உ-ம்.) "துன்னமரார்பிராயோவவேசத்தாலந்தணர்க்காய்த்தொறுவுக்காதவின்னுயிர்விட்டோர்தமக்கும்" (கூர்மபு. சூதகாரு. உஎ.)
பிரார்த்தனை—பிரார்த்தநம், வேண்டுகோள். (வழக்.)
பிராரத்தகன்மம் — அநுபவத்திற்கு வந்த கன்மம். (வழக்.)
பிராரத்தகன்மவாதனை — அநுபவத்திற்கு ஊழ்வினைப்பயன். (வழக்.)
பிராரத்தம்-சஞ்சிதத்திலேபரிபக்குவத்தைக் குறித்ததற்கேற்றதநுகரண புவனபோதங்களையுண்டாக்கிப் புசிப்பிப்பது; அது: தீவிரம், மந்தம், சுப்தம் என மூவகைப்படும். (சி. சி. உ: கஉ. மறை.) [இச்சாபிராரத்தம், அநிச்சாபிராரத்தம், பரவிச்சாபிராரத்தம் என்றுஞ்சொல்லப்படும்.]
பிராரத்தவாதனை— இப்போதநுபவித்தற்கு கன்மப்பயனாகிய வாதனை. (வழக்.)
பிராரத்தவினை — அநுபவிக்குமூழ்வினை. (வழக்.)
பிராரத்துவம்—பிராரத்தம். (வழக்.)
பிராரம்பம்—1. எய்தப்படுவது. (பி. வி.) 2. தொடக்கல். (வி-ணி.)

பிராறு—நிறைபுனல். (சூ. நி. டு. உகூ.)

பிரான்—1. எசமானன், தலைவன். (வழக்.) 2. எப்பொருட்குமிறைவன், கடவுள். 3. சிவன் (உ-ம்.) "பவனெம்பிரான்பனிமாமதிக்கண்ணிவிண்ணோர்பெருமான் - சிவனெம்பிரானென்னையாண்டுகொண்டானென்சிறுமைகண்டு — மவனெம்பிரானென்னநானடியேனென்னவிப்பரிசே - புவனெம்பிரான்றெரியும்பரிசாவதியம்புகவே" (திருவாச. திருச்சத. கூ)

பிரி—பிரியென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும். 2. வெருகு. (வைத்தியமூ. அகரா.)

பிரிச்சல்—பிரிக்குதல். (வழக்.)

பிரிசல்—வேறுபாடு. (வழக்.)

பிரிசாதிநி—ஓர் யோகினி. (வி-ணி. உசக.)

பிரித்தல்—1. குலைத்தல். 2. கூறுசெய்தல். 3. நீக்கல். (உ-ம்.) "பிறப்பு"பார் (1, 2-வழக்.)

பிரிதல்—1. கட்டுவிடல். 2. கூறுபாடாதல். 3. நீங்கல். 4. வேறுபடுதல். (1, 2, 3, 4-வழக்.)

பிரிதி—பிரீதி. (வழக்.)

பிரிதிகி—வழுதலை. (வைத்தியபரிபா.)

பிரிந்திசைக்குறள்—அம்போதரங்கம். (யாப். காரிகை. செய்யு. கூ. உரை.)

பிறிந்திசைத்தல் — வேறுபட்டிசைத்தல். (உ-ம்.) "உயர்திணைமருங்கிற்பாற்பிரிந்திசைக்கும்" (தொல். சொல். ச. சேனா.)

பிரிந்சைத்துள்ளல்—கலிப்பாவினோசையி னொன்று. (யாப்பகாரிகை. செய்பு. க. உரை.)

பிரிந்திசைத்தூங்கல்-வஞ்சிப்பாவினோசை யினொன்று. (யாப். காரிகை. செய்பு. க. உரை.)

பிரிந்தென —பிரிய. (ஐங்குறு.)

பிரிமே—பிரிவாயாக. (ஐங்குறு.)

பிரிநிலை — பலவற்றுளொன்றைப்பிரித்துக் கொள்வது; இஃது: இடைச்சொற்பொருகளி னுமொன்று. (நன்னூ. இடையி. கூ.)

பிரிநிலையுயர்வுநவிற்சியணி— பேதகாதிசயோக்தியலங்காரம்; அது: பலரிடத்திருக்குங் கம்பீர முதலிய தருமங்களினும் வர்ணிக்கப்படு கிறவனிடத்துள்ள அவற்றின் மேன்மைதோன் றுவதற்காகவிதுவேறென்று பிரித்துச்சொல் வது. (குவல. உச.)

பிரிநிலையெச்சம்—பிரிநிலைப்பொருளில்வரு மெச்சம். (நன்னூ. பொதுவி. கூ.)

பிரிப்பு—1. குலைப்பு. 2. பகுப்பு. (1, 2-வழக்.)

பிரிபொருட்சொற்றொடர் — செய்யுட்காகா வென்று விலக்கப்பட்ட ஒன்பது வழக்குகளு ளொன்று; அஃது: ஒருசெய்யுளின் சொற்கள் முழுவதும் ஒருபொருளாக உரைக்கப்படாது பிரிந்து தோன்றவருவது. (இலக்கணவி. சுகூக, சுகூகூ.)

பிரிமொழிச்சிலேடை — சிலேடையணி வகையுளொன்று; அது: பிரிக்கப்பட்டுப் பல பொருள்பயக்குஞ் சொற்களாலாய தொடர். (தண்டி. எடு. உரை.)

பிரியகம்—1. கடம்பு. (மலையக.) 2. வேங்கை மரம். (வைத்தியபரி.)

பிரியசந்தேசம்—சண்பகமரம். (வைத்திய பரிபா.)

பிரியதரிசிநி—வன்னிமரம். (வைத்தியபரி.)

பிரியப்படுதல்—அன்புவைத்தல். (வழக்.)

பிரியம்—1. அன்பு. (உ-ம்.) "பூசனைபிரிய முற்றியற்றியுற்றுளான்" (சிவரக. ஞானவாலன் வயி. கச.) 2. உவகை. (சூ. நிக. அ: சo.) 3. விருப்பம். (உ-ம்.) "சிவபத்தன்"பார்.

பிரியவிரதன்—சுவாயம்புமநுவின் குமாரரி லொருவன்; இவனுக்கு: அக்கி, நிதுருவன், மேதாதி, சதிவபுஷ்கந்த, ஜோதிஷ்கந்த, தருதிமந்த, பாவஸ்வரீ என எழுகுமாரருண்டு. (த.நி. போ.)

பிரியன்—1. கணவன். (உ-ம்.) "பின்னுட் பிரியன்பிரியையென்றுயினம்" (தனிப்பாட.) 2. பிரியமுள்ளவன். (உ-ம்.) "முருகாநீயுமைமூவரும்பிரியராநமக்கே" (சிவரக. தாருக. கூ.)

பிரியாம்பு—மாமரம். (வைத்தியபரி.)

பிரியாமை—நீங்காமை. (வழக்.)

பிரியேனென்றல் — அகப்பொருட்டுறைக் கிளவியினொன்று; அது: தலைமகன் றலைமக ளுக்கு நிற்பிரியேனென்று வற்புறுத்திக்கூறு தல். (வாண. உகூ. மூகத்.)

பிரியை — 1. பெண். (சூ. நிக. உ: டுசு.) 2. மனைவி. (உ-ம்.) "பிரியன்"பார்.

பிரிவினை—1. பிரிவு. 2. வேறுபாடு. (1, 2- வழக்.)

பிரிவு—1. பிரிதல். (உ-ம்.) "சிவனுளத்தி லெம்மைமாபிரிவாற்றிலா - யுமையையவிட்டானீங்கிலானை-யுனையழைப்பதெவ்வாறரோ" (சிவரக. தேவியுடன். உக.) 2. வேற்றுமை.(வழக்.)

பிரிவுழிக்கலங்கல்—அகப்பொருட்டுறைக் கிளவியினொன்று; அது: தலைவிபிரிந்தவிடத் துத்தலைவன் கலங்கிக்கூறுதல். (அகப்பொ. களா. கக.)

பிரிவுழிமகிழ்ச்சி — அகப்பொருட்டுறைக் கிளவியினொன்று; அது: தலைவிபிரிந்துபோகு ழிப்போகின்றதன்மையைக்கண்டு தலைவன் மகிழ்தல். (அகப்பொ. களா. கடு.)

பிரீதி—இச்சை, பிரியம். (வழக்.)

பிரீரிபாசன்—குய்யாட்டகரிலொருவர். (வி-ணி. உஎ.)

பிரு—கத்திரி. (மலையக.)

பிருகச்சாபாலம்—அதர்வவேத உபநிடத முப்பத்தொன்றனுளொன்று. (கந். நவ. சஅ.)

பிருகதாரணியம்-யசுர்வேத உபநிடதமைம் பத்தொன்றனுளொன்று. (கந். நவ. கஅ.)

பிருகதி — 1. கத்தரிச்செடி. (மலையக.) 2. விசுவாவசு என்னுங்கந்தருவனுடைய வீணையின்பேர். (கூர்மபு. வருணு. க. உரை.) 3. மாமரம். (வைத்தியபரி.)

பிருகந்நளை—அருச்சுநன் பேடிவடிவெடுத்த நாட் பூண்டபெயர். (உ - ம்.) "பேதையர்கடம் பயிற்றுவிப்பேன்பெயர்பிருகந்நளை யென் ப' (பாரத. நாடுகர. கக.)

பிருகு—1. ஒரிருடி; இவர்: பிரமாவினிருதயத்திற்பிறந்தவர். (உ - ம்.) "என்ன வையமளேபிருகுமாமுனிவனென்போன்" (சிவரா. வில்வலன். கரு.) 2. சுக்கிரன். (காஞ்சிப். வீராட்டகா. சச.) 3. வருணன்சேய். (உ-ம்.) "ஆழிநீரரசாம்வருணனையவன்சேயறிவுசால்பிருகுவந் நாளில்" (சேதுபு. சடாதீ. சக.)

பிருகுசாபந்தியம் — ஒரு வடமொழிநூல். (சி. சி. அ: உஎ.மறை.)

பிருகுசுதன்—1. சுக்கிரன். (திவாகர.)

பிருகுடி —1. நெற்றி. (பிங்கல. சூ. ருசு.) 2. புருவம். (ஞானமிர்தம்)

பிருங்கம்–1. கையாந்தரை. (உ-ம்.) "பிருங் காமலகம்" (தைல.) 2. வண்டு. (வைத்திய பரிபா.)

பிருங்கராசம் — ஒருவகைத்தைலம்; அது: கரிசாலைச்சாறும் நல்லெண்ணெய்யுஞ்சேர்த்து எரித்து வடிப்பது இதனிலக்கணம் தைல. தைலவ. ருக-ம் கவியிற்பார்.

பிருங்கலாதன் — பிரகலாதனுக்குப் பெயரென்பர். (பரிபாடலுரை.)

பிருங்காமலகதைலம்—ஒருவகைத்தைலம் இதனிலக்கணம். தைல: தைலவ. உஅ-ம் கவியிற்பார்.

பிருங்கி—1. ஏகாதச முக்கிய கணேசுவரரிலொருவர். (வி-ணி. உசுகூ.) 2. ஒரிருடி. (பிரபுலிங்கலீ. கைலாயக. சரு.)

பிருட்டம்—1 அரைத்தமா. (வைத்தியபரி.) 2. இடுப்பின்பூட்டு. (சீவரட். ச. சகனம்.) 3. பிற்பக்கம். (வழக்.)

பிருடை—சுழலாணி. (வழக்.)

பிருத்தியத்துவம்—ஊழியம். (வழக்.)

பிருத்தியர்—அடிமைகள். (சி. பி. கை.)

பிருதிவி-1. ஐந்துபூதங்களிலொன்று; இது: கந்ததன்மாத்திரையிற்றோன்றுவது; இதன் கூறுமயிர், என்பு, தோல், நரம்பு, தசையென்பன. வடிவுநாற்கோணம், நிறம் பொன்மை, குணம் கடினம், சுபாவம் கிடத்தல், தொழில் முரித்தல் பொறுத்தல், குறிவச்சிரம், தேவதை பிரமா, மந்திரம் சத்தியோசாதம், கலைநிவர்த்தி, தூலபஞ்சாட்சரம் நகரம், சூக்குமபஞ்சாட்சரம் அகரம், இதற்குச்சத்த, பரிச, உருவ, ரசம் என்னும் நான்கும் பொதுக்குணம், கந்தம் சிறப்புக்குணம். (சி. பி. கை.) 2. பூமி. (கூர்மபு. தக்கனைச்சபி. சு. உரை) [பிருதுமன்னன் அரசாட்சியைக் கைக்கொண்டபோது பிரசைகளெல்லாரும் வந்து அரசனே? பூமிதேவிநுந்தந்தை யிறந்தமையால் ஒஷதிகளைத் தனக்குள்ளே யிழுத்துக்கொண்டனள் அதனால் ஆகாரமின்றி வருந்துகின்றோம் என்று முறையிட்டனர் அதனைக்கேட்ட பிருதுராசன் கோபங்கொண்டு அசகவமென்னும் வில்லையுந் தேவபாணங்களையுங் கையிலெடுத்துப் பூமியிலெதிர்த்தான்; பூமிதேவியானவள் பயந்து பசுரூபத்தைத்தரித்தோடினள் இவனும் பின்றொடர்ந்து வருவதையறிந்த பூமிதேவி என் பிராணனைக்கொல்லாமல் விடவேண்டுமென்று அபயமிட்டு அரசனே? ஒரு கன்றையுண்டாக்கிக் கொடுப்பையேல் ஒஷதிகளையெல்லாம் பாலாக் கிக்கொடுப்பேனென்ன அரசனதற்கிசைந்து இந்திரன் சந்திரன் முதலாயினோரைக் கன்றுகளாக்கி ஒஷதிகளை யெல்லாம் பாலாகக்கறந்து வேண்டியவளங்களையுமுண்டாக்கிப் பூமிதேவியையுங்கொல்லாமல் முன்போல வைத்துக் கார்த்தான் அதனாற் பூமிக்குப்பிருதிவியென்னு நாமமுண்டாயிற்று.]

பிருதிவிதத்துவபுவநம்நூற்றெட்டு—பிருதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப்புவநங்கள்; அவை: இந்திரதிக்கில் கபாலீசன், அசன், புத்தன், வச்சிரதேகன், பிரமத்தநன், விபூதி, அவ்வியன் சாத்தா, பிநுகி, திரிசோதியன் என்ற உருத்திரர்கள் பத்து. அக்கினிதிக்கில் உருத்திரன், உதாசநன், பிங்கலன், காதகன், அயன், சுவலன், தகநன், வெப்புரு, பிரகாந்தகன், க்ஷயாந்தகன் என்ற உருத்திரர்கள் பத்து. இயமதிக்கில் யாமியன், மிருத்தியு, அரன், தாதா, விதாதா, கத்திரு, காலன், தன்மன், சங்யோத்தா, வியோக்கிருதன் என்ற உருத்திரர்கள் பத்து. நிருதிதிக்கில் நிருதி, மாரணன், அரந்தர், குரூரதிருட்டி, பயாந்தகன், ஊர்த்துவகாயன், விருபாக்ஷின், தூமிரு, லோகிதன், தெங்கிருட்டிணன் என்ற உருத்திரர்கள் பத்து. வருணதிக்கில் பெலன், அதிபெலன், பாசஹஸ்தன், மகாபெலன், சுவேதா, செயபத்திரன், தீர்க்கவாகு, செலாந்தகன், வடவாமுகன், நீமான் என்ற உருத்திரர்கள் பத்து.

வாயுதிக்கில் சீக்கிரன், லகு, வாயுவேகன், தீக்ஷணன், சூக்குமன், க்ஷயாந்தகன், பஞ்சாந்தகன், பஞ்சசிகன், கபத்தி, மேகவாகநன் என்ற உருத்திரர்கள் பத்து. குபேரதிக்கில் நிதீசன், ரூபவான், தன்னியன், சௌமியன், சௌமியதேகன், பிரபத்தநன், சுப்பிரகடன், பிரகாசன் இலக்குமிவரன், சோமேசன் என்ற உருத்திரர்கள் பத்து. ஈசாநதிக்கில் வியாத்தியாதீபன், ஞாநபுகன், சருவன், வேதபாரகன், மாத்திருவிருத்தன், பிங்கலாக்ஷன், பூதபாவன், பெலிப்பிரியன், சருவவித்தியாதிபன், தாதா என்ற உருத்திரர்கள் பத்து. அண்டகடாக ஒட்டுக்கீழே விட்டுணுதிக்கில் அநந்தன், பாலகன், வீரன், பாதாளாதிபதி, விபு, இடபத்துவசன், உக்கிரன், சுப்பிரன், உலோகிதன், சருவன், என்ற உருத்திரர்கள் பத்து. அண்டகடாகத்தின் மேலே பிரமதிக்கில் சம்பு, விபு. கெணுதியக்ஷன்' திரியக்ஷன், திரிதேசகவாதகன், சநவாசநன், விவாகன், நபன், பீபசு, விவக்ஷணன் என்ற உருத்திரர்கள் பத்து. ஆகிய இந்த நூற்றுவரும் இந்திராதியரான உலோகபாலர் பெலத்தையுமடக்கி அவர்களவர்களாற் பூசிக்கப் பட்டுக்கொண்டிருப்பார்கள் இவர்கள் புவநம் நூறு. காலாக்கினி, கூர்மாண்டர், ஆடகேசுரர், பிரமா, விட்டுணு, உருத்திரன் ஆகிய இவர்கள் புவநம் ஆறு. அண்டகடாகத்துக்கு மேலே சூக்குமபிருதிவியில் பத்திரகாளி, வீரபத்திரர்கள் ஆகிய இவர்கள் புவநம் இரண்டு. (இது கந்தபுராண உரையிற்கண்டது.) [நூற்றெட்டுப் புவநநாமங்கள். சிவஞாநசித்தியார் சுபக்கம் எட்டாஞ்சூத்திரம் ஏழாஞ்செய்யுள் மறைஞாநதேசிகருரையிலும்; தத்துவப்பிரகாசம்: கஙசம் செய்யுளுரையிலும், சித்தாந்தசாராவலி. கிரிபாதம் உக-ம் சுலோகவுரையிலும் பிறவற்றிலுந் தேர்ந்து கண்டுகொள்க.]

**பிருதிவிதத்துவம்**—முப்பத்தாறு தத்துவங்களுளொன்று; அது: நிவிர்த்திகலையிலுள்ளது. (சி. வி கிரி. உக. உரை.)

**பிருதிவிபூதவாதிமதம்** — பிருதிவியென்னும் பூதமே பிரமமென்று வாதிப்பவன் மதம். (த. நி. போ. உஎக.)

**பிருதிவிமூர்த்தி** — அட்டமூர்த்திகளிலொருவர். (சி. வி. சரியா. ஙங. உரை.)

**பிருதிவியண்டம்**—பூமியண்டம். (வழக்.)

**பிருது**—1. அயோத்திநகரிலிருந்த ஒரு சக்கரவர்த்தி. (அபிதாநசி.) 2 ஒருதீர்த்தம். (உ-ம்.) "பிறபகற்கலைமடமகடன்புனல்பிருது" (சேதுபு இலக்கும. சு.) 3. சூரியகுலத்தரசரிலொருவன்; இவன்: வேனன் என்பவனுடைய புத்திரன். (உ-ம்.) "பிருதுவென்னுமணிமவுலிப்பெரியோன்றன்னைப்பெற்றனனால்" (கூர்மபு' தக்கனைச்சபி. சு.)

**பிருதுமாநம்**—யானைக்கொம்பினடி. (பிங்கல. உசஉஉ.)

**பிருதுவிகை**—ஏலம். (மலையக.)

**பிருதூதரம்**—ஆட்டுக்கடா. (வைத்தியபரி.)

**பிருதை**—பிரதை, பாண்டுராசனுமனையானவள். குந்தியென்றும்பெயருண்டு. (அபிதாநசி.)

**பிருந்தம்**—1. விலங்கின்கூட்டம். (சூ. நிக. ங: சஉ-ஆம்பாட்டில் விருந்தமென்றார்.) 2. துளசி. (வைத்தியபரி.) 3. பதின்மூன்றுந்தாநமாகிய விந்தம். (சி. வி. ஞாந. உரு.)

**பிருந்தாவனம்**—யமுநாநதிக்கு மேற்கிலே மதுராபுரிக்குச்சமீபத்திலே துளசிவனம். கண்ணன் பத்தர்களுக்கருள்புரிதானமென்பர். (அபிதாநகோ.)

**பிருந்தை**—1. சலந்தரன் மனைவி. (காஞ்சிப். சலந்தராரீ. யக.) 2. துளசி. சலந்தரன் மனைவியெலும்பின் சாம்பலின் முளைத்தகாரணத்தால் பிருந்தையெனப் பெயராயினது. (காஞ்சிப்பு.)

**பிரேட்சை**—1. அறிவு. 2. ஆடல். 3. காண்டல். 4. புத்தி. 5. மரக்கொம்பு. (1, 2, 3, 4, 5-(உ-ம்.) வந்துழிக்காண்க.

**பிரேடணம்**—போதல். (வழக்.)

**பிரேடயன்** — சூத்திரன் பட்டப்பெயர். (பராசர. உக.)

**பிரேத்தியபாவம்**—தேகவியோகமானதின் மறுபடி.

**பிரேதக்குழி** — பிரேதத்தை யடக்குங்குழி. (வழக் )

**பிரேதக்குறி**—சவக்குறி. (வழக்.)

**பிரேதகருமம்**—பிரேதகாரியம். (வழக்.)

**பிரேதகாரியம்**—அபரக்கிரியை. (வழக்.)

**பிரேதகிருகம்**—கோரி. (வழக்.)

**பிரேதகிருத்தியம்**—பிரேதகருமம். (வழக்.)

**பிரேதகும்பம்** — பிரேதத்துக்குடைக்கும் குடம். (வழக்.)

**பிரேதசமஸ்காரம்**—பிரேததகநக்கிரியை. (உ-ம்.) "பிரேதசமக்காரத்தோடுபிறங்குசபிண்டீகரணம்" (திருவானை. கோச்செ. கரு.)

**பிரேதநதி**—நரகம். (வழக்குண்டுபோலும்.)

**பிரேதநிர்க்காரகன்**—சவஞ்சுமப்போன்.

**பிரேதபக்கம்**—அபரபக்கம். (வழக்.)

**பிரேதபதி**—நமன். (வழக்.)

**பிரேதபுரம்**—யமபுரம். (வழக் )

**பிரேதபூடணி**—ஓர்யோகிநி. (வி-ணி. உசக.)

**பிரேதம்**—1. தெற்கு. 2. பிசாசம். (சூ. நிக. க: சுடு.) 3. பிணம். (உ-ம்.) "சஞ்சாரம்"பார். 4. பிதிர். 5. பின். (உ-ம்.) பிரேதபக்கம். (1,4-வழக்.)

**பிரேதராட்சசி**—துளசி. (வைத்தியபரி.)

**பிரேதலோகம்**–பிதிர்திசை. (வழக்குண்டு போலும்.)

**பிரேதவநம்**—மயானம். (வழக்.)

**பிரேயம்**—கள். (வைத்தியபரி.)

**பிரேரககாண்டம்**—பிரேரகாண்டம், சுத்த தத்துவம். (ப-பாச. கூக.)

**பிரேரகம்**–ஏவுதல். (சி. சி. உ: எ0. மறை.)

**பிரேரகன்**—ஏவற்கர்த்தா. (சி. சி. உ: ரு0. ஞாநப்.)

**பிரேரகாசாரியன்** — மூவகை யாசாரியரி லொருவன்; இவன்: சைவத்திற்கு யோக்கியர்க ளாகியமாணாக்கர்களை உமக்கு அருள்செய்தற்கு யோக்கியர்களாகிய ஆசாரியரிவரென்று காட்டி அவரை யடையும்படி செலுத்தியுய்விப்பவன். (சைவச. ஆசாரிய உகூ. உரை.)

**பிரேரகாண்டம்**—சுத்ததத்துவங்கள். (சி. சி. சு: கூகூ. சிவாக்.)

**பிரேரகாவத்தை**–1. இருதயத்திருக்கின்ற பிரணவபஞ்சகலாரூப சிவத்துவமைந்தும், கலை முதல்வித்தியா தத்துவமேழும், ஆன்மதத்துவத் துக்குள் அந்தக்கரணநாலும், புறக்கரண மைந்துள் உருவாதிக்குசிதமாயிருக்கிற சட்சு ஒன்றும, தன்மாத்திரைகளோடொற்றுமையா யிருக்கின்ற பூதங்களெந்தினுள் நேத்திரத்துக் குசிதமாயிருக்கின்ற அக்கினி ஒன்றும் ஆகப்பதி னெட்டுத் தத்துவமுஞ்சேவியாநிற்பது (ப-பாச. உஉ.) 2. கேவலாவத்தையைத்தீண்டாது சக லாவத்தை மாத்திரத்தைத் தீண்டிநிற்பது. (சி. சி. சு: சு0. ஞாநப்.)

**பிரேரகாவத்தையிற்றுரியம்**– சின்மாத்திர மாய்த் தன்னைக்காண்டல். (கூர்மபு. அரியய. கக. உரை.)

**பிரேரகாவத்தையிற்றுரியாதீதம்** — சிவத் திற்கொப்பாகச் சிவத்துவரபி வியத்திமாணகைத் தன்னைக்காண்பது.(கூர்மபு.அரியய.கக.உரை.)

**பிரேரணம்**— / **பிரேரணை**— } ஏவுதல்.(உ-ம்.)"சிவப்பிரே ரணையிலீ.றி யிற்று னே யொன்றையுமறியாதாகையால்" (சி. சி. எ: உ. சிவாக்.)

**பிரேராவத்தை**—ஆன்மாக் கிரியைகளை நடத்துமவத்தை. (வழக்.)

**பிரேரித்தல்** — 1. சாதகர்ணிக்கு மாறுசெ லுத்தல். (சி. சி. க: ருஅ. சிவஞா.) 2. தோற்று வித்தல். (சி. சி. க: ருஅ. மறை.)

**பிரேரிதம்**—ஏவற்பட்டது. (வழக்.)

**பிரேரியம்**—செலுத்தப்படுவது. (சி. சி. சு: கூ0. ஞாநப்.)

**பிரேரியர்**—ஏவற்பட்டவர், செலுத்தப்பட் டவர். (சி. சி. உ: கூ. ஞாநப்.)

**பிரை**—உறை. (உ-ம்.) "பாலினிற்பிரை போல" (திருவிளை. நாக. உஉ.)

**பில்கல்**–1. கொப்புளித்தல். (உ-ம்.) "நஞ்சு பில்கெயிற்றுப்புத்தேளுகணைப்பள்ளிமீது"(கந் தபு. அசமுகிநகர். உசு.) 2. வழிதல். (உ-ம்.) "கணங்களுடற்குருதிபில்கியோட" (கூர்மபு. அந்தகாசுர. கூஉ.)

**பில்கி**–சிறுதுவலையாகவிட்டு. (சிந்தாமணி.)

**பில்குதல்**—பில்கல்.

**பில்லடை**—சஃஃகுல்லி, ஒருணவு. (பிங்கல. ககசுஉ.)

**பில்லணை**—மாதர்காலணியி லொன்று. (வழக்.)

**பில்லி**–1. சூநியவித்தை. (வழக்.) 2. பூனை. [தெலுங்கு.]

**பில்லிக்குராயன்**—இலாமிச்சை.(மலையக.)

**பில்லிப்படை**—பில்லிப்பேய்ப் பரிகலம். (வைத்தியமூ. அக.)

**பில்லியத்தி**—பெருநெருஞ்சில். (வைத்திய பரிபா.)

**பிலகரி** — ஒரிராகம். (பொருட்டொகை நிகண்டு.)

**பிலகாரி**— பெருச்சாளி (வைத்தியபரி.)

**பிலசம்** — 1. கருஞ்சீரகம். (வைத்தியமூ. அக.) 2 பெருஞ்சீரகம். (வைத்தியபரி.)

**பிலஞ்சுலோபம்**–எறும்பு. (சூ.நிக.கூ:எசு.)

**பிலத்துவாரம்**—பாதாளவழி. (வழக்.)

**பிலம்**—1. கீழறை. (சூ. நிக. ரு: கசு.) 2. குகை. (உ-ம்.) "பிள்ளைவெண்பிறையெயிற்ற பிலவாய்மறலியை"(கூர்மபு.தக்கன்வேள்.கூரு.) 3. பாதாளம். (உ-ம்.) "எரிகுண்டநின்றுமகன் பிலத்தெழுவானெனப் – பைத்ததுஞ்சிருள்வா யும்" (திருவிளை. நாக. சு.)

**பிலம்பி**–குச்சித்தமரத்தை. (வைத்தியபரி.)

**பிலவ**–வியாழவட்டமாகிய அறுபதுவருடங் களிலே முப்பத்தைந்தாவதாண்டு.(வருஷாதி.)

**பிலவங்க** — வியாழவட்டமாகிய அறுபது வருடங்களில் நாற்பத்தோராவதாண்டு. (வரு ஷாதிநூல்.)

**பிலவங்கம்**–1. குரங்கு. (பி. நிக. உருoசு.) 2. தவளை. 3. தேரை. (2, 3-வைத்தியபரி.)

**பிலவம்**—1. ஆடு. (வைத்திபரி.) 2. வாகை. (வைத்தியமூ. அக.)

பிலன்—பிலம். (உ-ம்.) "பிலனுறவழுத்தும்" (கந்தபு. திருவிளையாட். உகூ.) னகரம்போலி.

பிலாக்கு—ஒரு மூக்கணி. (வழக்.)

பிலாச்சை—கடற்றவளை. (பரதர் குழூஉக் குறிபோலும்.)

பிலாவநம் — நனைத்தல். (சி வி. கிரி. கரு. உரை.)

பிலாளகம்—புழுகுசட்டம். உ-ம்.) "நாப்பி லாளகமிரத்தம்" (தைல. தைலவ. ருகூ.)

பிலி—பூனைக்காஞ்சொறி. (தைல. தைலவ. கOகூ.)

பிலிற்றல் — 1. கொப்பளித்தல். (உ - ம்.) "தேன்பிலிற்றுநீர்மையதாய்" (வ-மா. கூ.) 2. சிந்தல். (உ-ம்.) "பெருக்கடையமுதத்தண்டுளி சிறிதுபிலிற்றினன்பிலிற்றிடலோடும்" (திரு விளை. நாகமெ. உஉ.) 3. தூற்றல். (வழக்.)

பிலுக்கன்—ஆடம்பரமுடையோன். (வழக்.) இவன் வெறும்பிலுக்கன்.

பிலுக்கு—ஆடம்பரம். (வழக்.)

பிலுக்குதல்—ஆடம்பஞ்செய்தல். (வழக்.)

பிலுகம்—செங்குன்றி. (வைத்தியபரி.)

பிலுபிலுத்தல்—ஈ ர டு க் கொலிக்குறிப்பு. (வழக்.)

பிலுபிலெனல் — ஓரடுக்கொலிக்குறிப்பு. (வழக்.)

பிழம்பு—திரட்சி. (உ-ம்.) "நகைமணிமகுட கோடிநன்னிருட்பிழம்பைநக்கி" (நைடத. சுயம் வர. க.)

பிழா—1. ஓலைக்கலம். (வழக்.) 2. தட்டுப் பிழா. (உ-ம்.) "மலர்வாய்ப்பிழாவிற்புலரவாற்றி" (பெரும்பா. உஎசு.) 3. நீரிறைக்குங்கருவிகளி லொன்று. (சிலப்.)

பிழார்—இறைகூடை. (சூ. நி. எ: ருஅ.)

பிழி—1. கள். (சூ. நி. சு. உக.) 2. தேன். (உ-ம்.) "பின்னுமோர்சிருட்டிக்காகப்பிழிநுகர்ந் தறுகால்பாடும்" (கூர்மபு.) பலவ. சு.)

பிழிதல்—சாரம்வடிதல். 2. பி சை த ல். (உ-ம்.) "பிழிந்தார்களுடற்குருதிபில்கியோட" (கூர்மபு. அந்தகா. கூஉ.)

பிழியர்—கள்விற்போர். (சூ. நிம. கூ: கூசு.)

பிழியல்—தேன். (சிந்தாமணி.)

பிழிவு-1. பிழிதல். 2-தொழிற்பெயர்விகுதி.

பிழுக்கை — ஆடு முதலியவற்றின் மலம். பிழுக்கை வாரியும்பால் கொள்வர். (சுந்தரமூ. தேவாரம். திருவொற்றியூ. க.)

பிழை—1. குற்றம். (உ - ம்.) "பிழைபுரியா தேன்றன்னை" (பிர-காண். சிவதாந. க.) 2. சிறுமை. (உ-ம்.) "பிரகலாதன்-பிழைபடவைது வேதமுநிவரன்பெயர்ந்துபோனன்" கூர்மபு. அந்தகா. அரு. 3. தவறு. (உ-ம்.) பிழையாவரி டத்ததுபேசுதிரே" (சிவரக. நந்திகணங்கள். கூ) 4. தெரிநிலைவினைப்பகுதி.

பிழைக்கடை — பிழக்கடை. மருவிவழங்கு கிறது. மலமூத்திராதி பிழைநீக்குமிடம்; அது: வீட்டின் பின்புறமாம்.

பிழைக்கை—பிழைத்தல். (உ-ம்.) பிழைக் கையிலைக்கொடி. புகலூரந்தாதி; உழைக்கை யிலை என்னுமுதற்குறிப்புள்ள கவியிலறிக.

பிழைத்தல்—1. உய்தல். (உ-ம்.) "தேவரீ ரித் - தவமேவுமுருவெடுத்தேயுறைதலிந்தத்தர ணியெல்லாங்கண்டுபிழைத்திட த் த ா ன் க ண் டீர்" (சிவரக. சிவதன்மா. கூO.) சீவநம்பண்ணு தல். (வழக்.) 3. தவறுசெய்தல். (உ-ம்.) "அங் நிலைபிழைத்ததீயோன்" (திருவிளை. அங்கம். அ.)

பிழைப்பித்தல்—பி ழை க் க ச் செ ய் தல். (வழக்.)

பிழைப்பு—1, உயிர்க்கை. 2. சீவனம். 3. தவறு. 4. வாழ்வு. (உ-ம்.) "சிறும்பிழைப்பை" (திருவாச. நீத்தல். சுக.) (1,2,3 வழக்.)

பிழைபாடு—பிறைபடுதல். (வழக்.)

பிள்ளுதல்—வெடித்தல். பிள்ளல். (வழக்.)

பிள்ளை—1. அணில், கீரி, பூனை, முயல்என் பனவற்றிற்காம். (சூ.நிக.கூ: சுO.) 2. இளமைப் பருவமுடைய குழந்தை (பி ங் க ல. அகூஅ.) 3. கரிக்குருவி. (பிங்கல. உகூ, சுகூ.) 4. காகம். (சூ. நிக. மிக-ளகரவெ. ம.) 5. கிளி. (சிந்தா.) 6. குரங்காதிகோட்டில்வாழ்விலங்கின்பிள்ளை. 7. தெங்குகமுகிவற்றின்கன்று. (சூ.நிக.கூ:கூஅ.) (வழக்.) 8. நாயொழிந்தவற்றிற்காம். (சூ. நிக. கூ: கூஅ) 9. பறவைக்குஞ்சு. (சூ. நிக. கூ: எO.) 10. மகன். (உ - ம்.) "வெம்பிடும்பிள்ளையைப் பார்த்து (தனிப்பா. சிவப்பிரகா. கூ.) 11. வயிர வன். (சூ நிக. க: உஎ.) 12. வெள்ளாளரிலொரு வகையார் பட்டப்பெயர். கங்கையின் பிள்ளை யாயினதாலிப்பெயர் கூறுவர்.

பிள்ளைங்கட்டி—கருப்பங்கட்டி. (வைத்திய பரி.)

பிள்ளைக்கவி—ஒரு பிரபந்தம்; அது: தெய் வங்கொலையகற்றிக்காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி யென் னுமிவ்வேழுறுப்புடன் ஆண்பாற் பி ள் ளை யா யின் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னுமிம் மூன்றுறுப்பையும், பெண்பாற் பிள்ளையாயின் கழங்கு, அம்மனை, ஊ ஞ் ச ல் என்னுமூன்று றுப்பையுஞ்சேர்த்துப்பத்துறுப்புக்கும்பப்பத்து ஆசிரியவிருத்தத்தால் பலசந்தமாய்ப் பாடப்படு வது. பிள்ளைபிறந்தமாத மூன்று, ஐந்து, எழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதி

னைந்து, பதினேழு, பத்தொன்பது இவைகளி லும், ஐந்தாமாண்டிலும், ஏழாமாண்டிலும், இக்கவிகேட்பிக்கப்படும். (இலக்கணவி. அ௦சு)

பிள்ளைக்கற்றுழை—ஓர் கற்றுழை. (வைத்தியபரி.)

பிள்ளைக்கிணறு—உட்கிணறு. (வழக்.)

பிள்ளைக்கைவளை — சிறுவளையல். இதற்குப்பிடிகம் என்று பெயர் கூறுவர். (சூ. நிக. எ: உச.)

பிள்ளைத்தக்காளி—மணத்தக்காளி. (வைத்தியபரி.)

பிள்ளைத்தமிழ் — பிள்ளைக்கவி. (இலக்கணவி. அ௦சு. உரை.)

பிள்ளைத்தாய்ச்சி—கருப்பஸ்திரி. (வழக்.)

பிள்ளைநிலை—போரிற் சென்றறியாத மறமக்கள் தாமே செய்யுந்தறுகணாண்மை (உ-ம்.) "வருவார்தாங்கல்வாழ்வாய்த்துக்கவிழ்தலென் றிருவகைப்பட்டபிள்ளைநிலையும்" (தொல். பொரு. சு௦.)

பிள்ளைபன்மை—மகார். (சூ. நிக. உ: அக.)

பிள்ளைப்பாட்டு — பிள்ளைக்கவி. (வழக்.)

பிள்ளைப்பிறை — இளம்பிறை (பிரபுலிங்கலீ. பிரபுதே. ௯௯.)

பிள்ளைப்பூச்சி — உழுவான் என்கிற ஓர் பூச்சி. (வழக்.)

பிள்ளைமை — பிள்ளைக்கன்மை (உ-ம்.) "பிள்ளைமைவிளம்பினைபேதைநீயென" (இராமா. மந்திர. எஉ.)

பிள்ளையாட்டு —பிள்ளைப்பருவத்தோனைக் கொண்டாடிய வாட்டு. (உ-ம்.) "வாண்மலைந் தெழுந்தோனைமகிழ்ந்துபறைதூங்கநாடவற்கருளியபிள்ளையாட்டும்" (தொ . பொரு. சு௦.)

பிள்ளையார் — 1. இளையபிள்ளையாராகிய முருகக்கடவுள. (உ-ம்.) "போராட்டிசீராட்டும் பிள்ளையார்கழல்போற்றி"(கோயிற்பு.பாயிர.எ.) 2. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். (உ-ம்.) 'புகலியின்மேலேகும்பெருங்காதல்பிள்ளையார்' (பெரியபு. திருஞாந. கூசஎ.) 3. விநாயகர். (உ-ம்.) "பிள்ளையார்புராணம்"_ார்.

பிள்ளையார்சுழி — ஊமையெழுத்து. ஒரு விஷயத்தை யெழுதுவோரெல்லாம் விக்கின நிவிர்த்தியாக, வ இதனையே முதலிலெழுதிக் கொள்வர்.(வழக்.)இதனைச்சத்திசிவவடிவமென் பர் பெரியார்.

பிள்ளைவங்கு—பாய்மரநிற்குங்குழி. ஓர்குழூஉக்குறி.

பிளது—கழுகுவேர். (வைத்தியபரி.)

பிளத்தல் — 1. அறுத்தல். 2. போழ்தல். (1, 2-வழக்.)

பிளப்பு—1. பிளத்தல். பு-தொழிற்பெயர் விகுதி. 2. வெடிப்பு. (வைத்தியபரி.)

பிளவு-1.கீற்று.(பெரியபு.திருக்குறிப்பு.௧எ) 2. கொட்டைப்பாக்கு. (தைல. தைலவ.௧௯௫.) 3. துண்டு. 4. பிளப்பு. (உ-ம்.) "செழுமதிப் பிளவுவேய்ந்ததேவும்" (திருவிளை. அட்ட. ௯.) 5. வெடிப்பு. 6. வெடியுப்பு. (வைத்தியபரி.) (3, 5-வழக்.)

பிளவை—1. பிளக்கப்பட்டதசை. (உ-ம்.) "பைந்திணைப்பிளவை" (மலைபடு. ௧எசு.) 3. வெடித்தபுண்; அஃது: இறைப்பிளவை, இராசபிளவை, உச்சிப்பிளவை, கும்பப்பிளவை, பக்கப்பிளவை, பனிச்சைப்பிளவையெனப் பல வகைப்படும். (வைத்தியமூ. அக.)

பிளாச்சி— } வரிச்சு: (வழக்.)
பிளாச்சு— }

பிளி—1. களஞ்சி. 2. கள். (1, 2-வைத்தியபரிபா.)

பிளிச்சி—சீனக்காரம். (வைத்தியபரி.

பிளிர்த்தல்—கொப்பளித்தல். (உ-ம்.) "விளையுநஞ்சளைந்தொளிர்வனபிளிர்வன" (திருப்பு. ௫௦அ.)

பிளிற்றல்-கொப்பளித்தல்.(சூ.நிக.௧:௬௫.)

பிளிறல்—1. ஆரவாரம். (பிங்கல. உ௧௧௪.) 2. ஒலித்தல்.(உ-ம்.)"பிளிறியோடும்பிடியன்ன பெற்றியாள்" (இராமா. கரன். உக.) 3. கிண்டல். (சூ. நிக. ௯: உ௫.)

பிளிறு — 1. எழுத்திலாவோசை. (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "பெரியதாருகவநமுநித்தலைவோரநுப் பியபிளிறடற்-கரியுரித்து" (சிவரக. தேவியுடன்குமா. க.) 3. பேரொலி. (திருவிளை. அன்னக்கு. ௧எ.)

பிற்குளம்—திருவாதிரை. (பரிபாடல்.)

பிற்கூறு—பிற்பகுதி. (வழக்.)

பிற்கொழுங்கோல்—உத்திரட்டாதி. (சூ. நிக. க: எஅ.)

பிற்பக்கம்—அபரபக்கம். (பரிபாடல்.)

பிற்படுதல்—பின்போதல். (வழக்.)

பிற்பாடு—பிறகு. (சிலப்.)

பிற்றல்—பின்றுதல். (வழக்.)

பிற்றி—பிந்திப்போனது. (வழக்.)

பிற்றை — 1. பிறகு, பின்பு. (புறநானூ.) 2. பின்னைநாள். (உ-ம்.) "பிற்றையிற்றுறந்தேகினன்மதிக்குலப்பெருமான்" (சேதுபு. மங்கலதீ. அஎ.)

பிற்றைநிலை-வழிபாட்டுநிலை. (புறநானூ.)

பிற—1. அசைச்சொல். (உ-ம்.) "யாகாபிற பிறக்கரோபோமாதிகும்" (நன். இடை. உஉ.)

2. தெரிநிலைவினைப்பகுதி. 3. மற்றையவெனப் பொருள்படுமோரஃறிணைப்பன்மைப் பெயர். (நன்னூ. பெயரிய. உக. உரை.)

பிறக்கடியிடல்—ஒடல். (தொல். பொரு. சுO. உரை.)

பிறக்கணித்தல்— } இகழ்தல்,நிந்தித்தல்.
பிறக்கணிப்பு— } (வழக்.)

பிறக்கம்—1. தொகுதி. (உ-ம்.) "மாமணிப் பிறக்கம்" (திருவாச. திருவண்ட. கஉச.) 2. மான்கொம்பு. (வைத்தியபரி.) 3. மலை. (பாரத. இந்திரப்பி. உரு.)

பிறக்கி—அடுக்கி. (உ-ம்.) "சூடுகோடாகப் பிறக்கி" (பொருந. உசக.)

பிறக்கிட்டு—கொண்டையிலே முடித்து. (உ-ம்.) "நீர்திரண்டன்னகோதைபிறக்கிட்டு" (மதுரைக். ருசுஉ.)

பிறக்கிடல்—1. பின்றல். (சூ. நிக. க: கரு.) 2. புறங்கொடுத்தல். (உ-ம்.) "மீதுலாவுமதிக் குடைமாரவேள்வேகமோடுபிறக்கிட" (சேதுபு. கத்துரு. கககச.)

பிறக்து—1. அசைச்சொல். (உ-ம்.) "பிற" பார். 2. தவறு, வழு. (சூ. நிக. க: கச.) 3 பின். (உ-ம்.) "பெரும்புவநத்திற்குநிகர்பிறிதில்லை யெனப்பிறக்கிற்கொண்டே" (வேதாரணியபு. இந்திரன்பாவஞ்சிந்திய. கச.) 4 பிறப்பேன்-தன்மையொருமைவினைமுற்று. (புறநானூ.) 5. பின்புறம். (உ-ம்.) "தசையினீடுபிறக்கினன் மழைதாங்கிநின்றதுதருமமே" (சேதுபு. சங்கதீ. கO.) 6. வேறு. (உ-ம்.) "அசைவிலூக்கத்து நசைபிறக்கொழிய" (சிலப். இந்திரவிழ. கரு.) [இதனை வடமொழிச்சிதைவென்பர்; அது: பொருந்தாமையுணர்க.]

பிறக்குதல்—1. உண்டாதல். (சூ. நிக. கO: ருகு.) 2. உற்பவித்தல். சீதைபிறக்க இலங்கை யழிந்தது. (வழக்.)

பிறகரீசம்—அகில். (மலையக.)

பிறகள்—மற்றையவை. (சிந்தா.)

பிறகிடல்—பின்றல். (பிங்கல. கசுகக.)

பிறகு—1. பின்பு. 2. பின்புறம். (1, 2-வழக்.)

பிறகுத்தம்—வஞ்சிக்கொடி. (வைத்தியபரி.)

பிறங்க—பெருக்க. (புறப்பொ. வெ.)

பிறங்கடை—பிள்ளை. (உ-ம்.) "பிறங்கடை சேர்கருப்பமெலாங்கெடுக்கும்" (சேதுபு. தராசார. உரு.)

பிறங்கல்—1. உயர்ச்சி. (பிங்கல. களகசுO.) 2. ஒலித்தல். 3. ஒளிசெய்தல், விளங்கல். (இராமா. பாலகா. திருவவதார. எக.) 4. செறிதல். (உ-ம்.) "பெற்றியசோலைப்பிறங்கிருள்வாரன்மின்பேதையின்னும்" (வாரண. உஉச.) 5. திரள். (உ-ம்.) "மென்றினைப்பிறங்கலும்" (சிந்தா-நாம. சுசுக.) 6. நிறைதல். 7. பெருமை. 8. மலை. (மணிமேகலை.) 9. மிகுதி. (சூ. நிக. அ: எ.) (2, 6, 7-சூ. நிக. கக: நகரவெ. உ.)

பிறங்கர்து—பேராது. (சிந்தா. நாமக. எஎரு.)

பிறங்கி—பெருத்து. (சிந்தா.)

பிறங்கிய—மிகுந்த. (புறப்பொ-வெ.)

பிறங்கு—தெரிநிலைவினைப்பகுதி.

பிறங்குதல்—1. உயர்தல். (உ-ம்.) "அறம் பூண்டார்-பெருமைபிறங்கிற்றுலகு" (வள். உக) 2. ஒலித்தல். (உ-ம்.) "பிறங்கெக்கலைக்கும்-வித்தினர்போலவிடையுப் விடுத்தனர்" (தணிகை. களவு. உப க.). 3. நிறைதல். (சூ. நிக. அ: கரு.) 4. பிரகாசித்தல். (உ-ம்.) "பிறங்குங்கோலான். (திருவிளை. பழியஞ்சின. கஅ.) 5. பெரிதாதல். (பத்துப்பாட்டு.) 6. வளைதல். (சிலப்.) மிகுதலு மாம் என்பர். 7. வெளிப்படல். (உ-ம்.) வந்துழிக்காண்க.

பிறசாதனம்—தேக்கு. (வைத்தியபரி.)

பிறசாரனி—கொடியார்கூந்தல். (மலையக.)

பிறத்தல்—பிறக்குதல். (உ-ம்.) "கறங்கு" பார்.

பிறத்திப்பூரம்— } நாயுருவி. (வைத்திய
பிறத்தியகபவ்னி— } பரிபா.)

பிறதகி—கரிமுள்ளி. (வைத்தியபரி.)

பிறதேமம்—கடுக்காய். (வைத்தியபரி.)

பிறந்தகம்—தாய்மனை. (வழக்.) பிறந்த என்பது அகரந்தொகுத்தலாயிற்று.)

பிறந்தை—1. சுபாவம் (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. துன்பம். (உ-ம்.) "பிணிக்குடையு முடற்சுமக்கும்பிறந்தைநீங்கி" (சிவராத். கடவுள். கஅ.) 3. பிறப்பிடம். (பரிபாடல்.) 4. பிறப்பு. (உ-ம்.) "வல்லநோன்பும்வரமும்பிறந்தையும்" (சேதுபு. பாலோடை. கரு.)

பிறநிறச்சார்பு — அரதநக்குற்றமைந்தனுளொன்று. (உ-ம்) "தராசம்" பார்.

பிறநூன்முடிந்ததுதானுடன்படுதல்-தந்திரயுத்தி முப்பத்திரண்டனுளொன்று; அது: பிறநூலின் முடிந்தமுடிபைத் தானங்கீகரித்தல். (உ-ம்.) "பிறநூன்முடிந்ததுதானுடன்படுதறன்குறிவழக்கமிகவெடுத்துரைத்தல்" (நன். கச.)

பிறப்பார்—நாய்வேளை. (வைத்தியமூ. அக.) (வைத்தியபரிபாடையில் தைவேளை என்பர்.

பிறப்பித்தல்—1. உண்டாக்கல். (சூ. நிக. க: உ.) 2. சநிப்பித்தல். 3. வெளிப்படுத்தல். (2, 3-வழக்.)

பிறப்பிலான்—பிறப்பிலி.

பிறப்பிலி—1. கடவுள். 2. சிவன். (பி. நிக. ௬௪.) எந்நாலும் யோநிவாயிற்பிறந்ததாகக்கூற வில்லை யென்றறிக.

பிறப்பிறப்பில்லான்—கடவுள். (உ-ம்.) அருணகிரியந்தாதியில்,"எல்லார்பிறப்புமிறப்பு மியற்பாவலர்தஞ் - சொல்லாற்றெரிங்தேகஞ் சோணேச-ரில்லிற் — பிறந்தகதையுங்கேளேம் பேருலகில்வாழ்ந்துண்- டிறந்தகதையுங்கேட்டி லேம்" எனக்கூறுமாறுகாண்க.

பிறப்பு — 1. அச்சம். (பிங்கல. ௧௮௫௨.) 2. உற்பத்தி. (உ-ம்.)"பிறப்பையுமிறப்பையும் பிரிந்தான்" (பாரத. கிருட். ௭௭.) 3. சாதி. (வழக்.) உயர்ந்தபிறப்பிற்பிறந்தவன். 4. துவக்கம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 5. தோற்றம். (உ-ம்.) "இப்பிறப்பிலழுந்தாவகையெனையாண் டவன்"(திருக்கோ. ௧௨௪.) 6. நெருக்கம். (பிங்கல. ௬௮௪௦.) 7. பயம். (சூ. நிக. அ: ௫௫.)

பிறமயிர்—பங்கி. (சூ. நிக. உ: ௧௦௧.)

பிறர்—அந்நியர். (உ-ம்.) "கேட்டோர்க்குப் பரிபவமென்பதுபிறராற்பட்டாலன்றோ" (பாரத. கிருட். ௧௮.)

பிறர்க்குப்போநுள்வரவையுவத்தல்-
பிறர்கருமத்திற்குடன்படல்—
பிறர்கருமமுடிக்கவிரைதல்—
பிறர்செல்வம்போறுத்தல்—
இந்நான்குந்தயாவிருத்தியெட்டினுளெவ்வொன்று. (பொருட்டொகை நிகண்டிற்காண்க.)

பிறர்தம்மதமேற்கோண்டுகளைவு—நூன் மதமேழினொன்று; அது: பிறமதத்தை யங்கீகரித்துத் தள்ளிவிடுதல். (உ-ம்.) "பிறர்தம்மத மேற்கொண்டுகளைவே" (நன். பாயிர. ௧௧.)

பிறர்துயர்க்கிரங்கல்—தயாவிருத்தியெட்டினொன்று. (பொட்டொகை நிகண்டிற்காண்க.)

பிறர்துயர்காத்தல் — அறமுப்பத்திரண்டினொன்று.(பொருட்டொகைநிகண்டிற்காண்க)

பிறர்நூற்குற்றங்காட்டல்— நூன்மதமேழினொன்று; அது: பிறருடைய நூலிலுள்ள குற்றங்களை யெடுத்துக்காட்டுதல். (உ - ம்.) "பிறர்நூற்குற்றங்காட்டலேனைப் - பிறிதொடுபடா அன்றன்மதங்கொளலே" (நன். பாயிர. ௧௧.)

பிறர்போருட்டநுமாநம்—பரார்த்தாநுமாநம். (சி. சி. அள. அ. சிவஞா.)

பிறாநுமாநம் — பிறர்பொருட்டநுமாநம். (சி. சி. அள. அ: சிவஞா.)

பிறரையந்தீர்த்தல்—பிறருடைய சந்தேகந் தீரல்; அது: தயாவிருத்தியெட்டினொன்று. (பொருட்டொகைநிகண்டிற் காண்க.)

பிறரோகி—வறட்சுண்டி. (மலையக.)

பிறவி—1. உற்பத்தி. 2. கன்மமலம். (உ-ம்.) "பிறவிமாயா-விருளெலாம்பிரிக்கலாகும்" (சி.சி. பாயிர. ௫. ஞானப்.) [ஆகுபெயர்.] 3. சகோதரம். (1, 3-வழக்.)

பிறவிவினை—சாதகன்மம். (உ-ம்.) "தையலார்களொருநூறுதநயர்ப்பயந்தாரவர்தமக்குச் - செய்யும்பிறவிவினைமுடித்து" (சேதுபு. அநும குண்ட. ௨௫.)

பிறவினை—பிறகருத்தாவின்புடைபெயர்ச்சியாய்த் தொழிற்படுஞ்சொல். (உ-ம்.)"பிறவினை விகுதி"

பிறவு—பிறப்பு. (உ-ம்.) "எனைப்பிறவாய்ப் பிறந்திறந்தெய்த்தேனை" (திருவாச. திருவம். ௧௪.)

பிறழ்ச்சி—பிறழ்தல். சி-தொழிற்பெயர் விகுதி.

பிறழ்தல்—1. ஒளிசெய்தல். 2. சொல்லல். (பி. நிக. ௨௦௦௬.) 3. திரும்புதல். (உ-ம்.) "நாளைனப்பிறழுமீன்கள்" (கந்தபு. ஆற்று. ௬௮.) 4. நடுக்கம். 5. விளக்கம். (உ-ம்.) "பிறழ்பூங்கரும்பின் றிணியார்வரிசிலை" (திருநூற். ௮௭.) 6. வேறுதல். (1, 4, 6-சூ. நிக. ௧௧: ௪.)

பிறழ்ந்து—திகைத்து. (பரிபாடல்.)

பிறழ்வு — பிறழ்ச்சி. உ-தொழிற்பெயர் விகுதி.

பிறழிய—முரிந்த. (பத்துப்பாட்டு.)

பிறழும்— புரளும். (ஐங்குறு.)

பிறன்—அந்நியன். (வள். ௧௪௭.)

பிறன்கோட்கூறல்—தந்திரயுத்தி முப்பத்திரண்டனுளொன்று; அது: தன்னூலிற்பிறனது கோட்பாட்டைக்கூறுதல். (உ-ம்.) "தானெடுத்துமொழிதல்பிறன்கோட்கூறல்" (நன். ௧௪.)

பிறகாண்டம்-சரகண்டபாடாணம். (வைத்தியபரி.)

பிறண்டு—வேறிடம், (தொல். சொல். ௧. சேநா.)

பிறமுட்டி—1. சித்தாமுட்டிவேர். 2. சாயவேர் என்றுஞ்சொல்வர். 3. மயிர்மாணிக்கம். (1, 2, 3 வைத்தியபரி.)

பிறித்தல் — 1. பங்குபடுத்தல். 2. வேறுபடுத்தல். (1, 2-வழக்.)

பிறிதல்-1. நீங்குதல். 2. வேறுபடல். (1,2-வழக்.)

பிறிதாராய்ச்சியணி— விபாவநாலங்காரம். (குவல. ௬௪.)

பிறிதின்கிழமை—தன்னோடொற்றுமையில்லது. (நன்னூ. பெயரிய. ௪௬. உரை.)

பிறிதினவிற்சி—பிறிதினவிற்சியணி; அது: வருணிக்கவேண்டும்பொருள் அதற்குரித்தான

சொல்லாற் கூறப்படாது மாமகிழ்விக்கும்படி மற்றொருவிதத்தாற் கூறப்படுவது. (உ-ம்.) "கருதுபொருளுக்குரித்தாம்விதத்தின்றிக்காட்டன்மற்றை, ஒருவிதத்தென்னிற்பிறிதினவிற்சி" (குவல. உகூ.)

பிறிதினியைபுநீக்கியவிசேடணம்-பிரிதோடியைபுநீக்கியவிசேடணம். (சி. சி. பாயிர. க. சிவஞா.)

பிறிது—வேறு. (ஐங்குறு.)

பிறிதுபடுபாட்டு — சித்திரகவியிலொன்று; அஃது: ஒரு செய்யுளைத்தொடையும் அடியும் வேறுபட உரைப்பச்சொல்லும்பொருளும் வேறுபடாது வேறொருசெய்யுளாகப் பாடுவது. (இலக்கணவி. ருகல.)

பிறிதுமொழிதல்—கருதியபொருளை மறைத்து அதனைப் புலப்படுத்தும்பொருட்டு, அது போன்றபிறிதொன்றனைச்சொல்வது.(தண்டி. ருக. உரை.)

பிறிதொடுபடாறன்மதங்கோளல்—நூன்மதமேழிலொன்று; அது: பிறர்மதத்திற்குடன்படாதாகித் தன்மதத்தைக்கொளல். (நன்.பாயிர. கக.)

பிறிப்பு—பிரிட்பு. (வழக்.)

பிறியகம்—1. கடம்பு. 2. ஞாழல். 3. வேங்கை. (1, 2, 3-வைத்தியப

பிறிவித்தல்—விடுவித்தல். (உ-ம்.) "பிறிவிப்பான் மலங்களெல்லாம்பின்னுயிர்கருளினாலே" (சி. சி. எ: ச.)

பிறிவினை—பிரிவினை. (வழக்.)

பிறிவு—பிரிவு. (உ-ம்.) "பிறிவிலன்மலத்தினோடும்வியாபிகேவலத்திலான்மா" (சி. சி. ச: கூஅ.)

பிறை—1. இணையாவினைக்கை முப்பத்துமூன்று வகையுளொன்று; அது: பெருவிரலைப் பின்வாங்கிநீட்டி மற்றையவிரல்களை முன்னாக நீட்டுதல். [சிலப்பதிகாரவுரையாசிரியர் இளம்பிறையென்ப.] 2. வாலசந்திரன். (உ-ம்.) "பிறைகலந்தபிரமாபுரமேவிய" (தேவார. பிரமபுர. கூ. சம்பந்த.)

பிறைசூடி—சிவன். (உ-ம்.) "பித்தாபிறைசூடீ" (தேவார. திருவெண்ணெ. க. சுந்தர.)

பிறைதொழுகென்றல் — அகப்பொருட்டுறைக்களவியிலொன்று; அது: பிறையைக் காட்டித்தான்றொழுதுநின்றுநீயும் இதனைத் தொழுவாயாகவெனத்தோழி தலைமகளதுபுணர்ச்சிநினைவறியாநிற்றல். (திருக்கோ. சுஎ. முகம்.)

பிறைமலர்—அகத்தி. (வைத்தியபரி.)

பிறைமுகவாளி— } அர்த்தசந்திரபாணம்,
பிறைமுகாத்திரம்— } பிறைவாயம்மென்றுங்கூறுவர்.

பிறையிரும்பு—அரிவாள். (சிந்தா. நாமக. ருரு.)

பிறேகி—வறட்சுண்டி. (மலையக.)

பிறேசனம்—புரசமரம். (வைத்தியபரி.)

பின்—1. ஏழனுருபிலொன்று. (உ-ம்.) "பின்பாடலைதேமுழைவழியுழியுளி" (நன். பெயரிய. சரு.) 2. பின்பு. (உ-ம்.) "முடிப்பமுடித்துப்பின்பூசுவபூசி"(நீதிநெறி. கூ0.) வழியென்றுலும்பின்னென்னும் பொருடரும். (சூ. நிக. அ: சகூ.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

பின்துடுமி—பின்சிகை. (வழக்.)

பின்கோக்கி — ஆபரணக்கடைப்புணர்ப்பு. (வழக்.)

பின்சிகை—பஞ்சசிகையிலொன்று; அது: பிடரிற்கிடக்கு மயிர்முடி. (வழக்.)

பின்பகல்—அந்திக்காலம். (உ-ம்.) "பின்பகற்பிறர்த்தேருநெஞ்சமுமேமுற்றாய்" (கலி. எச.) உச்சிக்குப்பின்என்றார். (புறப்பொ-வெ.)

பின்பற்றல்— } பின்றொடர்தல். (உ-ம்.)
பின்பற்றுதல்— } "எமக்கிடுமெமக்கிடுமெனப்பின்பற்றியே" (திருவிளை. வளை. உஅ.)

பின்பனி—ஆறுபருவத்தொன்று; அது: மாசி பங்குனி. (சூ. நிக. க: அஎ.)

பின்பனியுரிமை— உலவைக்காற்றுவீசலும் பலபுறவினமுங் கான்கோழியுமகிழ்தலுங் கோங்குமிலவும்பூத்தலும் பேரீந்து பனையிவை பழுத்தலும் பருத்திவெண்சுளைவெடித்தலு மாகும் என்பர்.

பின்பிறந்தாள்—1. இலக்குமி. 2. தங்கை. (1, 2-வழக்.)

பின்பிறந்தோன்—தம்பி. (வழக்.)

பின்பு—பின். (உ-ம்.) "பின்பக்கொடிமன்னுபமங்கியனைப்பெற (கோயிற்பு.வியாக்கி.உக.)

பின்முடுகுவெண்பா — பின்னிரண்டடியுமுடுக்காய்வரப்பாடும் வெண்பா.) (வழக்.)

பின்முரண்—இண்டாஞ்சீரும் நான்காஞ்சீருமுரணத்தொடுப்பது. (யாப்-காரிகை. ஒழிபிய. ரு. உரை.)

பின்மூலம்—சித்தாமுட்டி. (வைத்தியபரி.)

பின்மொழிநிலையல்—பின்மொழிக்கட் பொருணிற்பது. (உ-ம்.) "முன்மொழிநிலையலும் பின்மொழிநிலையலும்"(தொல். சொல். சுகக.)

பின்மோனை—இரண்டாஞ்சீர்க்கண்ணுமிறுதிச்சீர்க்கண்ணுமோனைவருவது.

பின்வருநிலை — ஓரலங்காரம்; அஃது: ஒரு செய்யுளிலே முன்வந்தசொல்லும் பொருளுந்

தனித்தனியாயினுங் கூடியாயினும் பலவிடங்களிலே பின்னும் வருவது; இது: சொற்பின்வருநிலை, பொருட்பின்வருநிலை, சொற்பொருட்பின்வருநிலையென மூவகைப்படும். (உ-ம்.) "மூன்வருஞ்சொல்லும்பொருளும்பல வயிற்பின்வருமென்னிற்பின்வருநிலையே" (தண்டி. சக.)

பின்வருவிளக்கணி — ஆவர்த்திபகாலங்காரம்; அது: விளக்கணியில்விளங்குந் தருமத்தினொற்றுமையை ஆங்காங்குத் திரும்பக்கூறல். (குவல. கசு.)

பின்றல்—பிறகிடல். (சூ. நிக. கூ: கரு.)

பின்று—பின்னைநாள். (வழக்.)

பின்றுதல்—பின்றல்.

பின்றை—1. பின்பு. (உ-ம்.) "இங்கிதுபோய பின்றையிறுதிசெய்கணிச்சியொன்று" (கந்தபு. ததீசியுத். க0௨.) 2. பின்னைநாள். (பிங்கல. உஅரு.)

பின்றொடரி—1. திசைப்பூண்டு. 2 ஆடையொட்டி. (1, 2-வைத்தியபரி.)

பின்றோன்றல் — தம்பி, பின்றோன்றுதலுடையவன். (வழக்.)

பின்னகம்—1. பேதி. (வைத்தியபரிபா.) 2. மயிர்முடி. (உ-ம்.) "ஆண்பான்மயிர்முடியென்பர்" (பிங்கல நிக. க0எரு.)

பின்னடைப்பன்—பசுநோயினொன்று. (வழக்.)

பின்னணி — பிற்படை, கூழை. (சூ. நிக. உ: அரு.)

பின்னதுநிறுத்தல்—தந்திரயுத்திமுப்பத்திரண்டினொன்று; அஃது: ஒருபொருட்குக் கருவியாய் முன்வைத்தற்குரியதை முன்வைத்தற்கிடம்பெறாதாயின் அப்பொருளின் பின்னே அதனைவைத்தல். (உ-ம்.) "முன்மொழிந்துகோடல்பின்னதுநிறுத்தல்" (நன். கச.)

பின்னம்—பின்பு. (உ-ம்.) "மள்ளர்-பின்னந்தண்டஞ்செய்தனர்கேட்க" (திருவிளை. பழியஞ். உசு.)

பின்னர்—1. பிறகு. (உ-ம்.) "பின்னருமேசெப்புகின்றான்" (சிவரக. அபுத்தி. ரு.) 2. பின்னோன். (சிலப்பதி.)

பின்னல்—1. ஒன்றைவிட்டொன்றுபிரிக்கக்கூடாதபடி சிக்குண்டிருத்தல். (உ-ம்.) "ஞானவெள்ளியம்பலத்துளாடுங்—கனைகழனிழலிற்பின்னி" (திருவிளை. பழியஞ். உ.) 2. சடை. (சூ. நிக. உ: க0௨.) 3. பின்னப்பட்டது.(வழக்.) 4. பின்னுதல், கயிறுமுதலியவற்றைப்பின்னலென்க. 5. முடைதல், பாய்முதலியவற்றை முடைதலென்க.

பின்னவர்—சூத்திரர். (சூ. நிக. உ: உகூ.)

பின்னவன்-தம்பி. (உ-ம்.) "பின்னவன்பெற்றசெல்வமடியனேன்பெற்றதன்றோ" (இராமா. கைகேசிசூழ்வி. கக0.)

பின்னி—தங்கை. (உ-ம்.) "வசிட்டமுனிக், கற்பார்தருபின்னியைமன்னுமணக்கடனு ளுடனுநெறிகண்டனனே" (கோயிற்பு. வியாக்கி. உரு.)

பின்னிசுவு — பின்னுக்குவளைக்குந்தம்பவாதம். (சீவரட். கசுரு.)

பின்னிடல்— } பின்னேபோதல். (உ-ம்.)
பின்னிடுதல்— } "செங்மசாகரந்தனைப் பின்னிடப்பெறலாம்" (சிவரக. சிவனடியார். எ.)

பின்னியாக்கம்—குந்துருக்கம். (மலையக.)

பின்னியாசம் —பெருங்காயம். (வைத்தியபரிபா.)

பின்னுதல்—1. கூறல். (ஆசிரியநி. க0: க.) 2. தெற்றல். (வழக்.)

பின்னை—1. இலக்குமி. (சூ. நிக. கக: ணகரவெ. சு.) 2. இளையவள். (உ-ம்.)"வெள்ளிமலையெடுத்துலகமூன்றுங் — காவலோன் பின்னை" (இராமா. சூர்ப்பநகை. ருக.) 3. பின்பு. (உ-ம்.) "யானுமிங்கிருந்தனன் பின்னையாரிருந்துமென்" (கந்தபு. சூரன்றண்டஞ். கஅ.) 4. பின்னைநாள்.

பின்னைகேள்வன் — திருமால். (சூ. நிக. க: கச0.)

பின்னைநாள்—பின்னாள், மறுநாள்.(சூ.நிக. க: அரு. உரை.) ஐ-சாரியையென்றார். (சீவகசிந்தாமணியுரையில்.)

பின்னோன்—1. தம்பி. (சூ. நிக. உ: எஎ.)

பினத்தல்— } பிதற்றுதல். (வழக்.) பினற்
பினத்துதல்— } றுதல்எனவுங் கூறுவர்.

பினுகபாணி—சிவன். (சூ. நிக. க: க.)

பினோர்—பின்னோரென்பதிடைக்குறையாயினது.

பினை—பின்னை என்பது இடைக்குறையாயினது. தொல்காப்பியம் உரிச்சொல்லியலில், பிணையென்பதற்குப் பெட்பின்பொருளாகிய புறந்தருதலென்றும், பெட்பின் பொருளாகிய விரும்புதலென்று முரைகூறினர்.

## பீ.

பீ—1. அச்சம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. மலம். (நன்னூ. உயிரீ. உஅ.)

பீக்கம்—எட்டிக்கொட்டை.(வைத்தியபரி.)

பீக்கருவேல்—ஒரு மரம். (வைத்தியபரி.)

**பீக்கலாட்டம்**—தொந்தரவு. [தெலுங்கு.]
**பீக்கிலரந்தி**-சங்கங்குப்பி. (வைத்தியபரி.)
**பீக்கை**—வசலை. (வைத்தியபரி.)
**பீச்சல்**—கழிச்சல். (வழக்.)
**பீச்சாக்கத்தி**—
**பீச்சாங்கத்தி**— } சிறியகத்தி. (வழக்.)
**பீச்சாங்குழல்**—மலசலம்வாங்குமோர் சூத்திரக்குழல். (வழக்.)
**பீச்சுவிளாத்தி** — ஒருநாற்றமுள்ள விளாமரம். (வழக்.)
**பீசகணிதம்** — வீசகணிதம், ஒரு சோதிடநூல். (வழக்.)
**பீசணி**—ஒரு யோகினி. (வி-ணி.)
**பீசநியாயம்**-மூலநியாயம்; அது: பிசாங்குரநியாயமென்பர். (உ-ம்.) "தாலபீசநியாயம்"பார்.
**பீசம்** — 1. சபீசதீட்சை. (சி. சி. அ: ரு. ஞாநப்.) 2. சுக்கிலம்; இவன்: நீசபீசத்திற்குப் பிறந்தவனென வசும்வழக்குண்டு. 3. தாமரைப் பூச்சுருள். 4. பிடுக்கு. (உ-ம்.) "கோரிசம்"பார். 5. பீசாட்சரம். 6. மூலம். (உ-ம்.) "பீசநியாயம்" பார். 7. விதை. (2, 3, 7-வைத்தியபரி.)
**பீசாங்குரநியாயம்**—சகத்திர நியாயங்களுளொன்று; அது: காரணமிதுவதுவென முற்பிற்பாடு வரையறுக்கப்படாவழக்கு. (உ - ம்.) "தாலபீசநியாயம்"பார்.
**பீசாட்சரம்**—மூலவெழுத்து. (வழக்.)
**பீசி**—பீசத்தையுடையது. (வழக்.)
**பீசைப்புல்**-ஒருபுல். (வழக்குண்டுபோலும்)
**பீஞ்சல்**—பீச்சுவிளா. (வைத்தியபரி.)
**பீட்டை**—இளஞ்சூல். (சூ. நிக. ச: கூஅ.)
**பீடணவைரவன்** — சிவலோகக்கோட்டை உத்தரவாசலிற் சாமுண்டியென்னுஞ் சத்தியுடன்காக்கைவாகநத்தில் தனக்குச்சமாநமான கோடிபடர்களுடன் கூடியிருப்பவன். (வி-ணி.)
**பீடணி**-ஒருபாலாரிட்டதேவதை. (வி-ணி.)
**பீடநம்**—பீடை. (உ-ம்.) வந்துழிக்காண்க.
**பீடம்**—1. ஆசநம். (உ-ம்.) "பீடஞ்செய் தாமரையோன்பெற்றபிள்ளையை" (திருக்கோ. கஉக.) 2. சிவசத்தி. (சைவவி.)
**பீடி**—தெரிநிலைவினைப்பகுதி.
**பீடிகை** — 1. அணிகலச்செப்பு. (பிங்கல. கவுகுஅ.) 2. ஆசநம் 3. கடைவீதி. 4. பூந்தட்டு. 5. முகவுரை. (வழக்.) (2,3,4-பிங்கல.கூஅகஉ.)
**பீடித்தல்**—
**பீடிப்பு**— } துன்புறுத்தல். (வழக்.)
**பீடு**-1. குறைவு. [தெலுங்கு.] 2. பெருமை. (சூ. நிக. அ: கo.) 3. வலி. (ஞானமிர்.)
**பீடை**—1. துன்பம். (சூ. நிக. அ: எகூ.) 2. நோய். (வழக்.)

**பீத்து**—வீம்பு. (வழக்.) சும்மா பீத்தாதே.
**பீத்துதல்**—வீம்புபேசுதல். (வழக்.)
**பீத்தை**—நாடா. ஒரு குழூஉக்குறிபோலும்.
**பீதக்கதலி**-
**பீதகதலி**— } செவ்வாழை. (வைத்தியபரிபா.)
**பீதகந்தம்**—பன்றி. (வைத்தியபரி.)
**பீதகம்**—1. அரிதாரம். 2. இருவேலி. 3. சாந்து. 4. தேன். 5. பித்தளை. 6. பொன். 7. பொன்னிறம். 8. மஞ்சள். 9. வெட்டிவேர். (சூ. நிக. கக: தகரவெ. கக.) (6,7-சூ.நிக.சு:உ.) (1, 2, 3, 4, 5, 7, 8-வைத்தியபரி.)
**பீதகன்**—வியாழன். (பிங்கல. உகூஉ.)
**பீதகாட்டம்**—செஞ்சந்தநக்கட்டை. (வைத்தியபரி.)
**பீதகாபேரம்** — 1. பித்தளை. 2. மஞ்சள். (1, 2-வைத்தியபரி.)
**பீதகாரம்**—
**பீதகாரகம்**- } வேங்கை. (வைத்தியபரி.)
**பீதசந்தநம்**—பொதியையிலுண்டானசெஞ்சந்தநம். (வைத்தியபரி.)
**பீதசம்பகம்**—ஒருவகைச்சண்பகம். (வைத்தியபரி.)
**பீதசாரகம்**—வேங்கை. (வைத்தியபரி.)
**பீதசாரம்**—1. சந்தநம். (மலையக.) 2. செவ்வள்ளி. 3. வேங்கைமரம். (2, 3-வைத்தியபரி.)
**பீதசாரி**—சந்தநம். (வைத்தியபரி.)
**பீதசாலம்**-வேங்கைமரம். (பிங்கல.உசுசுரு)
**பீதத்துரு**—மரமஞ்சள். (வைத்தியபரி.)
**பீதத்துருமம்**—தேவதாரம். (வைத்தியபரி.)
**பீதத்துவயம்**-கஸ்தூரிமஞ்சள், கப்புமஞ்சள் என இருவகைமஞ்சள். (தைல. தைலவ. கூகூ.)
**பீததாரு**—1. செம்புளிச்சை. 2. தேவதாரமரம். 3. புன்னை. (1, 2, 3-வைத்தியபரி.)
**பீதநம்**—1. அரிதாரம். 2. குங்குமம். (1,2-வைத்தியபரி.)
**பீதநேகம்**—பித்தளை. (வைத்தியபரி.)
**பீதநீ**—மூவிலைப்புன்னை. (வைத்தியபரி.)
**பீதபீசம்**—வெந்தயம். (வைத்தியபரி.)
**பீதபூதம்**—கொம்மட்டிமாதளை. (வைத்தியபரிபா.)
**பீதபூதி**—செம்மல்லிகை. (வைத்தியபரி.)
**பீதபூரம்**—கொம்மட்டிமாதளை. (வைத்தியபரிபா.)
**பீதம்**—1. அரிதாரம். 2. சந்தநம். 3. நால்வகைச்சாந்திலொன்று. 4. பொன். (சூ. நிக. சு: உ.) 5. பொன்னிறம். 6. மஞ்சள். (3, 5-பிங்கல. கூஅசச.) (1, 2, 6-வைத்தியபரி.)
**பீதமணி**—புட்பராகம். (வைத்தியபரி.)
**பீதமுகம்**-கொம்மட்டிமாதளை. (வைத்தியபரி)

**பீதயூதி**—செம்மல்லிகை. (மூலயக.)

**பீதராகம்**—1. தாமரைநூல்.(வைத்தியபரி.) 2. பொன்னிறம். பீதம்-பொன். ராகம்-நிறம்.

**பீதரோகணி**—ஒருமருந்து. (வைத்தியபரி பாடையிலே பிருகாளனப் பெயர்கூறுவர்.)

**பீதரோசனை** — ஒரு மருந்து. (வைத்திய. பரிபா.)

**பீதலகம்**— } பித்தளை. (வைத்தியபரி.)
**பீதலம்**— }

**பீதவண்ணம்**—கடுக்காய். (வைத்தியபரி.)

**பீதன்**—அச்சமுள்ளோன். (சூ. நிக. உ: சச.)

**பீதனேகம்**—பித்தளை. (வைத்தியபரி.)

**பீதாம்பரன்**—திருமால், பொன்வத்திரமுள்ளவன். (சூ. நிக. க: கரு.)

**பீதாம்பரி**— } பார்வதி. (உ-ம்.) வந்துழிக் காண்க.
**பீதாம்பரை**— }

**பீதாரு**—வெள்வேல். (வைத்தியபரி.)

**பீதி**—பயம். (உ-ம்.) "பீதிக்கிடமாயிருள் சூழ்பெருங்காடென்றுமுளதால்" (ஞானவா. மனத்தின். கரு.)

**பீதிகை**—செம்மல்லிகை. (வைத்தியபரி.)

**பீதை**—1. பொன்னிறப்பூவுளமருதோன்றி மரம். 2 மஞ்சள். (1, 2-மலையக.)

**பீந்தோல்** — மீந்தோல், மேற்றோல், மீந்தோலென்பது இக்காலத்துப்பீந்தோலென மருவிவந்தது. (நன்னூ. உயிரீற். உஅ. உரை)

**பீநக்கி**—நாக்குப்பூச்சி. (வைத்தியபரி.)

**பீநசக்கிருதம்**—ஒருவகைத்தைலம். அதனிலக்கணம் "இரத்தமூரோசகம்" என்னுஞ்செய்யுளிற் காண்க. (தைல. தைலவ. சoக.)

**பீநசக்குறட்டை**—ஒருபூடு. (வைத்தியபரி.)

**பீநசத்தர்ச்சியம்**—பீநசக்கிருதம். (தைல. தைலவ. சoக.)

**பீநசத்தைலம்**—நல்லெண்ணெய், நொச்சிச்சாறு, இவற்றோடு பிறவுஞ்சேர்ந்து வடிக்கப்படுந்தைலம். அதன்விவரம் "எண்சுரசஞ்சாலை .........பீநசநோய்க்கியமன்மன்றே" (தைல. தைலவ். அகூ-ல் காண்க.)

**பீநசம்**—ஒருவகைநோய். (தைல. தைலவ. உ.)

**பீநத்துவம்**—பருத்திருத்தல். (சி. சி. அள அளவை. ௪. சிவாக்.)

**பீநாற்றமரம்**— } பெருமரம். (வைத்திய பரிபா.)
**பீநாறி**— }

**பீநாறிச்சங்கு**—ஒருசெடி. (வழக்.)

**பீநிசம்**—பீநசம். (வழக்.)

**பீமசேநன்** — வீமனுக்கொருபெயர். (அபிதாநசி.)

**பீமநாதன்**—1. அகங்காரத்திற்கு அபிமாநதேவதை. (சி. சி. உ: எக. சிவாக்.) 2. கைலாயத்தில் நிருதிதிக்கிலிருக்கிற காவலாளி. (அபிதாநசி.)

**பீமபாகம்**—பீமபாகம், நளபாகம் என்னும் பாகவகையிலொன்று. (வழக்.)

**பீமபீடம்**—சத்திபீடங்களுளொன்று. (அபிதாநசி.)

**பீமம்**—1. அச்சம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. வித்தியாகலையிற் புருடதத்துவத்திருக்கும் ஆறு புவநங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.)

**பீமர்** — 1. சிவமூர்த்தியின் திருநாமங்களுளொன்று. (அபிதாநசி.) 2. ராகதத்துவத்திருக்கும் பதினொருருத்திரரி லொருவர். (வி-ணி. உஎச.)

**பீமரதி**—பிறந்த எழுபத்தேழாமாண்டிலேழாமாதத்தேழாமிரவு. (இஃதொருகண்டமென்பர். (சோதிட.)

**பீமருபி**—ஒருபாலாரிட்டதேவதை. (வி-ணி. உகூஅ.)

**பீமன்** — 1. சதருத்திரரிலே வருணதிக்கிலிருக்கும் தசருத்திரரிலொருவன். (வி-ணி.) 2. சிவன்; இது: சகத்திரநாமத்திலொன்றென்பர். 3 பாண்டுமைந்தரிலொருவன். (பாரதத்திலறிக.) 4. விதர்ப்பதேசத்தரசன். (நளன்கதையிலறிக.)

**பீமேசுவரம்**—1. பிரதிட்டாகலையில்ஆகாய தத்துவத்திலிருக்கும் எட்டு புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) 2. வசவர் பூசித்ததலம். (அபிதாநசி.)

**பீமை**—ஒருசத்தி. தண்டியென்னுமசுரனைச் சங்கரிக்கப் பீமை என்னுஞ்சத்தியா யவதரித்தவளென்பர். (அபிதாநசி.)

**பீர்**—1. அச்சம். (பிங்கல. கஅருஉ.) 2. பசலைநிறம். 3. பீர்க்கு. 4. முலைப்பால். 5. துளி. (வழக்.) 6. வெளுத்தல். (சிந்தா.) (2, 3, 4-சூ. நிக. கக: ரகரவெ. கரு.)

**பீர்க்கு**—ஒரு கொடி; அது: கருக்குப்பீர்க்கு, நுரைப்பீர்க்கு, பேய்ப்பீர்க்கு என மூன்று வகைப்படும் (வைத்தியபரி.)

**பீர்விடல்** — பெருக்கெடுத்தல். (உபதே. விபூதி. கூஅ.)

**பீரம்**—1. பீர்க்கு. (பிங்கல. உகூஉஅ.) 2. பூவரசமரம். 3. வாகைமரம். 4. வீரம். (2, 3, 4-வைத்தியபரி.)

**பீரிடுதல்** — பீரிடல், பால் நீர் இவைகள் கம்பிபோலப்பாய்தலெனக.

**பீரிதம்**—சதகுப்பை. (வைத்தியபரி.)

**பீரு** — 1. அச்சமுள்ளோன். (சூ. நிக. கக: ரகரவெ. உச.) 2. புருவம். (வைத்தியபரி.)

பீநகம்—1. ஆந்தை. 2. கரடி. (1, 2-வைத்தியபரி.)
பீநகன்—அச்சமுடையோன். (சூ. நிக உ: சச.)
பீநகா—பீதரோகிணி. (வைத்தியபரி.)
பீநதந்தி-தண்ணீர்விட்டான்கிழங்கு.(உ-ம்.) "செங்குவளையலர்பீருதந்தியதிமதுரம்" (தைல. தைலவ. ருகூ.)
பீரை—பீர்க்கு. (உ-ம்.) "பீரைநாறியசுரை யிவர்மருங்கின்" (புறநா. ககச.)
பீரோடல்—} பால் இரத்தமுதலியன பெ
பீரோடுதல்—} ருக்கெடுத்துப் பாய்தல்.
பீலி—சிற்றாலவட்டம். (சூ. நிக. எ: கூஅ.) 2. சிறுசின்னம். 3. பறைப்பொது. (சூ. நிக. எ: சகூ.) 4. பன்னங்குருத்து. 5. பெருஞ்சவளம். 6. மயில். 7. மயிற்றோகை. (உ-ம்.) "பீலிகட்டியதன்மீதுமொய்த்தொளிபிறங்கு" (அரிச்ச. வேட்டகூ. எ.) 8. மலை. 9. மாதர் காலணியிலொன்று. (சிலப்பதி.) 10. வாய்க்கால்போற் றண்ணீர்பாய்தற்கு மாமுதலியவற் றாற்செய்யப்படுங்கருவி, பத்தல். (4,10-வழக்.) வைத்தியபரிபாடையில் நத்தையோட்டிற்குங் கூறுவர். (2, 5, 8-பிங்கல. கூஅசகூ.)
பீலிக்குஞ்சக்குடை — பிச்சம். (பிங்கல. கருகூச.)
பீலிக்குஞ்சம்—இதற்குத்தொங்கலென்பர். (சூ. நிக. கக: ஙகரவெ. க.)
பீலிக்குடை—மயிற்றோகைக்குடை, இதற்குச் சுழல்எனப் பிங்கலநிகண்டிற் கூறுவர்.
பீலிகை—எறும்பு. (வைத்தியபரி.)
பீலித்தண்டு-பிண்டிபாலம். (சூ.நிக.எ:சo.)
பீலிப்பட்டை — பயிர்க்குநீரிறைக்கும் பூட்டை. (வழக்.)
பீலு—எறும்பு. (உ-ம்.) "பீலுவாதி"பார்.
பீலுவாதம் — பைபீலவாதம். பைபீலம்-எறும்பு.
பீலுவாதி—பைபீலவாதி.
பீவரம்—ஆமை. (உ-ம்.) வந்துழிக்காண்க.
பீவரி—1. அமுக்கிரா. 2. பசு. 3. பருவப்பெண் 4. பெண்கிளி. (1, 2, 3, 4-வைத்தியபரி.)
பீழித்தல்-வருத்துதல். (உ-ம்.) "அறிவிலார் தாந்தம்மைப்பீழ்க்கும்பீழை - செறுவார்க்குஞ் செய்தலரிது" (வள். அசகூ.)
பீழை-துன்பம். (உ-ம்.) "பிரிவின்கட்பீழை தருவதொன்றில்" (வள். அகூக.)
பீள்—1. கருப்பம். (உ-ம்.) "பீளுமீரலும் பித்துநீள்குடர்களும்பிளக்க" (அரிச்ச. வேட்டஞ்செ.சஎ.) 2. பயிரிளங்கதிர்.(சூ.நிக.ச:கூஅ.)
பீளை—கண்ணழுக்கு. (உ-ம்.) "பீளைகால் விழிக்கிழவரை" (திருவி. எல்லா. கசு.)
பீளைசாறி—ஓர்பூடு. (வழக்குண்டுபோலும்.)
பீற்றல்—கந்தை. (வழக்.)
பீறல் — 1. கந்தை. (வழக்.) 2. கிழியல். (உ-ம்.) "பீறற்சீலையிதாருக்கென்று" (அரிச்சந்திர. சூழ். கக.)
பீறு—1. கிழிவு. (வழக்.) 2. தெரிநிலைவினைப் பகுதி.
பீறுகை—பீறுதல்.
பீறுதல்—1. கிழிதல். 2. கீறுதல். (1, 2-வழக்.)
பீனம் — 1. கொடிப்பாசி. (வைத்தியபரி.) 2. பருமை. 3. பாசி. (2, 3-சூ. நிக. கக: னகரவெ. கூ.)

## பு.

புக்ககம்—மாமியார்வீடு. (வழக்.)
புக்கநம் — குலைத்தல். (உ-ம்.) வந்துழிக் காண்க.
புக்கல் — புகுதல். அல்-தொழிற்பெயர் விகுதி.
புக்கி—பராய்மரம். (மலையக.)
புக்கில்—1. பகலிடம். (உ-ம்.) "துகளறு கேள்வியுயர்ந்தோர்புக்கில்" (புறநா. உஉக.) 2. வீடு. (சூ. நிக. ரு: ருக.)
புக்கீமோ — செல்வீராக. (உ-ம்.) "ஜயவ மைந்தன்றனைத்தாகப்புக்கீமோ" (கலி. எஅ.)
புக்கு—பீருய்ப்பாலை. (வைத்தியபரி.)
புக்குத்திருப்பி — வட்டத்திருப்பி. (வைத்தியபரி.)
புக்குப்புக்கெனல்—அக்கினி சுவாலித்தற் குறிப்பு. (வழக்.)
புக்தம்—உணவு. (சி. சி. உ: ருசு. சிவாக்.)
புகட்டல்—1. அறிவுறுத்தல். 2. உட்புகுத்தல். 3. ஊட்டுதல். (உ-ம்.) "அமுதுதன்வாய் செவிதிறந்துபுகட்ட" (திருவிளை.விடையி.ச.) (1, 2-வழக்.)
புகட்டுதல்—புகட்டல்.
புகர்—1. அழகு. (உ-ம்.) "புகர்வெள்ளைநாகர்தங்கோட்டம்" (சிலப். கநாத்திற. கo.) 2. இரத்தக்கறை.(உ-ம்.)"செழும்புகர்வேல்விழித் தேனினஞ்சூழ்" (தஞ்சை. உஅக.) 3. கபிலநிறம். (சூ. நிக. அ: உக.) 4. குற்றம். (பிங்கல. கஅசுக.) 5. சுக்கிரன். (உ-ம்.) "பனை"பார். 6. சோறு. (பிங்கல. ககoஉ.) 7. நிறம். (சூ. நிக. அ: உசு.) 8. பொறி. (உ-ம்.) "புகர்மதவேழ

முட்டிப்போர்விளையாடி" (திருவிளை. உக்கிர பா. அவ. ருக.)

**புகர்முகம்**—யானை. (பி ங்க. உசகஉ.)

**புகர்நாள்**—வெள்ளி. (வைத்தியபரி.)

**புகர்வு**—உணவு. (புறநா.)

**புகரோன்**—சுக்கிரன். (உ-ம்.) "புகரோனை யவனழைத்து" (அரிச்ச. நகர்நீங். உரு.)

**புகல்**—1. உடல். 2. உபாயம். (வழக்.) 3. குதிர். 4. சொல். 5. தஞ்சம். (உ-ம்.) "போரி ழைக்கிலலதேதுபுகலென்றுபுகலா" (சிவரக. தாருக. உடு.) 6. தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "தாமதமுளதோபுகலென்ருன்" (சிவரக. விசை யை. கசு.) 7. புகுதல். (உ-ம்.) "விருந் தினர்"பார். 8. விருப்பம். (உ-ம்.) "சுரும்பார் கண்ணிப்பெரும்புகன்மறவர்" (மதுரைக் ருகசு.) 9. வெற்றி. (1, 3, 4, 9-சூ. நிக. கக: தகரவெ. அ.)

**புகல்வு**—மனச்செருக்கு. (உ-ம்.) "மாறு பொருதோட்டியபுகல்வின்" (குறிஞ்சி. கருடு.)

**புகல**—மகிழ. (சிந்தா.)

**புகலல்**—சொல்லுதல். (உ-ம்.) "எமக்கிவை புகலுற்ருன்" (கூர்மபு. வருணச். சு)

**புகலி**—சீகாழி. (உ-ம்.) "தடமதிற்புகலிசார்ந் தார்" (திருவாத. திருவம்பலச. உக.)

**புகலிடம்**—1. அடைக்கலமாமிடம். (திருக் கோ. சஉ. உரை.) 2. ஊர். (பிங்கல. சஎடு.)

**புகலுதல்** — 1. புகலல். 2. விரும்பல். (புறநா.)

**புகலூர்**—ஒரூர். (உ-ம்.) புகலூரந்தாதிபார்.

**புகவு**—உணவு. (உ-ம்.) "அகநாட்டண்ணல் புகவே" (புறநா. உசக.)

**புகழ்**—கீர்த்தி. (உ-ம். "விரிவரும்புகழ்மே வரிச்சந்திரன்" (அரிச்ச. பாயிர. உ.) 2. தெரி நிலைவினைப்பகுதி. (உ-ம்.) "நெடுமாயன்முதல மரர்புகழ்வேதம் - பணிந்திறைஞ்சுநிமலன் றன் னை" (சிவரக. சத்திரிப்பூ. கசு.)

**புகழ்ச்சி**—கீர்த்தி. (உ-ம்.) "மங்கலவினைக ளெல்லாம்புகழ்ச்சியாற்பொலிந்து தோன்ற" (பெரியபு. தடுத்தாட். கக.)

**புகழ்ச்சிமாலை**—அகவலடியுங் கலியடியும் வந்து மயங்கியவஞ்சிப்பாவால் நல்லாரது சிறப் பைக்கூறுமொரு பிரபந்தம். (உ-ம்.) "மயக்கவ டிபெறுவஞ்சிப்பாவால்வியத்தகுநல்லார் விழுச் சீருரைதல்புகழ்ச்சிமாலை"(இலக்கணவி.அசுசு.)

**புகழ்ச்சோழநாயனர்** — அறுபத்துமூவரி லொருவர். (பெரியபுராணத்திலறிக.)

**புகழ்தல்** — 1. உயர்த்துக்கூறல். (உ-ம்.) "புகழ்ந்தவைபோற்றிச்செயல்வேண்டும்" (வள். ருகஅ.) 2. புசித்தல். (உ-ம்.) "உண்டவிபால் போலுய்த்தனவும்புகழாதிகழ்வான்" (கோயிற் பு. வியாக்கிர. உச.)

**புகழ்தலுவமை**—உவமையணிவகையு ளொ ன்று; அது: உவமேயத்தினைவழாவிடுத்து யா தேனுமொரு மேன்மைகாட்டி உவமானத்தி னைப் புகழ்ந்துசொலுவது. (தண்டி. ருo. உரை.)

**புகழ்ப்பூ**—பொன்னுவிரை. (வைத்தியபரி.)

**புகழ்பொருள்**—வர்ணிக்கப்படுவது. அஃதுவ மேயம்.

**புகழ்பொருளுவமையணி**—இதரவிதரவுவ மாலங்காரம்; அது: முன்னதிலுபமானமாகச் சொன்னதைப் பின்னதிலுபமேயமாக்கியும் உபமேயமாகச்சொன்னதையுபமானமாக்கியுஞ் சொல்லுதல். (தண்டி. ருo. உரை.)

**புகழ்மை**—புகழுடைமை. (உ-ம்.) "பொச் சாப்பார்க்கில்லைப்புகழ்மை" (வள். ருகரு.)

**புகழ்மைநிதரிசநம்**—நிதரிசநவணியி னென்று. (தண்டி. அரு. உரை.) ஒரு பொரு ளுக்குரிய பிரயோசனம் பிறிதொருபொரு ளுக்கு நன்மையாவது தீமையாவது புலப்பட நிகழ்வது.

**புகழ்வு**—புகழ்ச்சி. உ-விகுதி.

**புகழ்வோர்**—துதிப்போர், வந்தியரென்றும் பெயர். (பிங்கல. அசுசு.)

**புகழாப்புகழ்ச்சி** — ஓரலங்காரம்; அது: பழிப்பதுபோலும் பான்மையினுல் ஒரு பொரு ளுக்குமேம்பாடுதோன்றச்சொல்லுவது. (உ-ம்.) "பழிப்பதுபோலும்பான்மையின்மேன்மை புல ப்படவொழிவதுபுகழாப்புகழ்ச்சி"(தண்டி.அஉ)

**புகழாவாகை**—1. மனச்செருக்கு. (பக்துப் பா.) 2. அகத்தி. (உ-ம்.) "புகழாவாகைப்பூவின்" (பெரும்பாணு. சoக.)

**புகழாளன்**—கீர்த்திரிடையோன். இயவுள் என்று நிகண்டிற் கூறினர்.

**புகழுவமை**—உவமையைப்புகழ்ந் துவமிப் பது. [வ-று.] "சிவன்சடையிற்றங்கும்பிறை யேநின்னுதற்கொப்பு" புகழ்தலுவமைபார்.

**புகழேந்தி**-ஒட்டக்கூத்தர்காலத்திலேபாண் டியன் சமஸ்தானத்து வித்துவானுகவிளங்கிய ஒரு தமிழ்ப்புலவர். (அபிதாநசி.)

**புகள்**—அகத்தி. (வைத்தியபரி.)

**புகற்சி**—விரும்பல். (திருவானைக். நைமி சப்ப. கஎ.)

**புகற்றுதல்** — விரும்பச்செய்தல். (உ-ம்.) "மாந்தரையுள்ளம்புகற்றுமே" (சிந்தா. குண. உo.)

**புகற்றும்**—விரும்பப்பண்ணும். (சிந்தா.)

**புகறல்**—குறித்தல். (சூ. நிக. அ: ருடு.)

புகன்று—1. மகிழ்ந்து. (சிந்தா.) 2. விரும்பி. (உ-ம்.) "செருப்புகன்றெடுத்தசேணுயர்நெடுங்கொடி" (திருமுரு. சுஎ.)

புகாமை—பிரவேசியாமை. (வழக்.)

புகார்-1.ஆற்றுமுகம்,கழிமுகம்.(உ-ம்.)'புகாஅர்ப்புகுந்தபெருங்கலம்' (புறநா.௩௦.) 2. காவிரிப்பூம்பட்டினம். (உ-ம்.) "புகார்க்குவேந்தன்—றன்னையகன்சூழிவீட்டித்தென்னவற்கு மறவாகைதந்தவாறும்" (திருவிளை. பதிகம். அ.)

புகிய—புக. (சிந்தா.)

புகுடி—1. புருவம். (சூ. நிக. உ: கஎ.) 2. மாதர்காதணியிலொன்று. [தெலுகு.] இதைப் பூடியென்று கூறுவர்.

புகுத்தல்— } உட்செலுத்துதல். (வழக்.)
புகுத்துதல்— }

புகுதல் — 1. உட்பிரவேசித்தல். (உ-ம்.) "பார்மன்னன்புகும்போதில்லில்"(சி.சி.சு:௩உ.) 2. சம்பவித்தல். (பெரியபு. எறிபத்தநா. ௩அ.) 3. தொடங்கல். (நன்னூ. பாயிர. நுதலிப்புகுதல்.) 4. நுழைதல். (உ-ம்.) "சித்தம்புகுந்துதித்திக்கவல்ல" (திருவாச. திருப்பொற். கரு.) 5. மேற்கொளல். (பரிபா.)

புகுதி — 1. சம்பவிப்பு. இ-தொழிற்பெயர் விகுதி. 2. நுழைதல். (இராமா. இரணியன் வதைப். சுக.) 3. நுழைவாயில். (உ-ம்.) வந்துழிக்காண்க.

புகுபுகேனல்—ஈரடிக்கொலிக்குறிப்பு.

புகுமுகம்புரிதல்—நோக்கிற்கெதிர்நோக்குதல். (உ-ம்.) "காண்டடன்முந்துறுத்தகூற்றுக்கைக்கிளைதலைவனெய்தப்—பூண்டதன்காதனுட்டிப்புகுமுகம்புரிந்தநங்கை-நாண்டக நுதல்வேரோடநகைமுகங்கரந்து"(தணிகை. களவுப. சுக.)

புகூஉ—புகுந்து. (மணிமே.)

புகை—1. தூபம்; இது: தென்கீழ்த்திசைப் பாலன் குறியாம் 2. தெரிநிலைவினைப்பகுதி.

புகைக்கப்பல்—புகையின் பலத்தாலோடுங் கப்பல். (வழக்.)

புகைக்குண்டு — நச்சுப்புகைபுகைக்குங் குண்டு. (வழக்.)

புகைச்சல்—1. இருமல். 2. புகையெழும்புதல். (1, 2-வழக்.)

புகைத்தல்—புகையச்செய்தல். (வழக்.)

புகைதல்—1. சினக்குறிப்பு. (பிங்கல. சஅஎச.) 2. புகையெழல். (வழக்.) 3. மனமெரிதல். (உ-ம்.) "புண்வேற்புடையிற்புகைந்தாணுருவியாதநோக்காள்" (சிந்தா. பதிக. அ.)

புகைநிட்காரணம் — எவட்சாரம். (வைத்தியபரி.)

புகைப்பித்தல் — புகையச்செய்தல். பிறவினைத்தொழிற்பெயர்.

புகைப்பு — புகைத்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

புகைமடக்கி—வெண்காரம்.(வைத்தியபரி.)

புகையாற்றி — ஒட்டடை. (வழக்குண்டு போலும்.

புகையிலை—ஒரு செடி. (வழக்.)

புகையுறை —ஒட்டடை. (வழக்குண்டுபோலும்.)

புகையூட்டுதல்—புகைபிடிப்பித்தல்.

புகையூரல்—ஒட்டடை. (வைத்தியபரி.)

புகைவு— புகைச்சல். (வழக்.)

புங்கம்—1. அம்பு. (உ-ம்.) "புலவர்சொற்றுறைபுரிந்தவும்போன்றனபுங்கம்" (இராமா. கும்பகருணன்வதை. உஉரு.) 2. அம்புக்குதை. (சூ. நிக. கக: நகரவெ. க.) 3. உயர்ச்சி. (உ-ம்.) "நாட்டியப்புங்கமும்" (சிவரக. தேவிநாட்டியம். உக.) 4. சிறுதுகில். (பிங்கல. கஉஎச.)

புங்கவம்—ஏறு. (பரிபா.)

புங்கவர்—வானோர், உயர்ந்தோர்.

புங்கவன்—1. அருகன். (உ-ம்.) "புங்கவன் பூரணன்புத்தன்புராதநன்" (திருநூற். கக.) 2. சிரேட்டன். (உ-ம்.) "முனிபுங்கவனுரைத்தான்" (பிரமோத். பஞ்சா. ௩எ.) 3. புத்தன். (பிங்கல. ககச.)

புங்கவி — தெய்வப்பெண். இ-பெண்பால் விகுதி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

புங்கி—1. முட்காவேளை. (தைல. தைலவ. எசு.) 2. முட்காவேளைவேர். (உ-ம்.) "அமுக்கிரி"பார்.

புங்கு—புங்கமரம். (வைத்தியபரி.)

புச்சம்—1. தேள். 2. வால். (உ-ம்.) வந்துழிக்காண்க.

புச்சி—எருக்கு. (வைத்தியபரி.)

புசங்கேசர்—ஐம்பத்தொருருத்திரரி லொருவர். (வி-ணி.)

புசல்—பெருங்காற்று. (வழக்.)

புசி—தெரிநிலைவினைப்பகுதி.

புசிகாரணம்—போசனபதார்த்தம், புசித்தற்கு காரணமானது. (வழக்.)

புசித்தல்—உண்ணல். (உ-ம்.) "நின்மாலியம்"பார். 2. வினைப்பயனனுபவித்தல்.

புசிப்பன—உண்டற்குரியன. (வழக்.)

புசிப்பாளி—அநுபோகி. (வழக்.)

புசிப்பித்தல்—1. உண்பித்தல். 2. வினைப்பயனநுபவிக்கச்செய்தல்.

புசிப்பு—1. அநுபவிப்பு. 2. புசித்தல். (1, 2-வழக்.)

புசுண்டர்—இவர் காகவடிவமாயிருந்தவொரு முனிவர்; இவர்: வசிட்டரைக்கண்டவுடன் தாம் சதுரயுகங்களிலேகண்ட அநேகவியத்தையுந் திருமால்பலமுறை அவதரித்துங்கூறிஉண்மைப் போல எட்டு வசிட்டரைக் கண்டேன் எனவுங் கூறினவர். (அபிதாநசி.)

புசை — முதலா மிரண்டா மூன்று மேழா மெட்டா மொன்பதாமிராசி. (சோதிடக்கட.)

புஞ்சம்—1. திரட்சி. (உ-ம்.) "புஞ்சவாளுடுக் களன்னநித்திலம்" (திருவிளை. நான்மாட. கo.) 2. நூற்குஞ்சம். (வழக்குண்டுபோலும்.)

புஞ்சவநம்—வாமதேவமந்திரத்தால் ஆயிரம் அல்லது நூற்றெட்டுத்தரமோமஞ்செய்து, அந்த மந்திரத்தினலேயே ஆண்மகவுபிறக்கும் படி ஆலந்தளிர், பால், உளுந்து இவைகளைக் கொண்டு கருப்பவதியின் நாசியிற்பிளியுங் கிரியை (திருவிளை. உக்கிர. கo. உரை.) ஆலந் தளிர் அலைது ஆலமுகிழுமாம். இது கருப்ப முண்டாகிய இரண்டுமதி நான்குமதியிற்செய் வது.

புஞ்சிகை—ஆலங்கட்டி. (வைத்தியபரி.)

புஞ்சிசுகேசி—ஒரு தேவதாகணிகை (த. நி. போ.)

புட்கம்—மூக்கிரட்டை.(வைத்தியமூ.அக.)

புட்கரசிவை — தாமரைக்கிழங்கு. (வைத் தியபரி.)

புட்கரபாகம்—மேடசிங்கதநுக்களுக்கு இரு பத்தோராம்பாகமும், இடபகந்மகரங்களுக்கு பதினலாம்பாகமும், மிதுநதுலாகும்பங்களுக்கு இருபத்துநாலாம்பாகமும், கற்கடக விருச்சிக மீநங்களுக்கு ஏழாம்பாகமுமாயுள்ளது.(விதாந. குணகுண. கககூ.)

புட்கரம்—1. ஆகாயம். 2. ஒரு தலம்; இது: வடநூலிலுள்ளது. (அபிதாநகோச.) 3. ஒரு நாரை. 4. கோஷ்டம். (தைலவரு. சு.) 5. சத்த தீவினென்று. (சூ. நிக. கஉ: சுகூ.) 6. தாமரை. (வைத்தியபரி.) 7. தீர்த்தம். (அபிதாநசி.) 8. நடநசாத்திரம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 9. நிறைவு. 10. நீர். 11. பருந்து. 12. பாண்ட முகம். 13. பிரதிட்டாகலையி லப்புதத்துவத்தி ருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.) 14. யானைத்துதிக்கை நுனி. 15. வான். (1, 3, 6, 7, 9, 10, 11, 12, 14, 15-சூ. நிக. கக: டகரவெ. உசு.)

புட்கரர் — சிவலோகத்தி லுத்தரதிசையில் ஓலக்கஞ்சேவிக்கும் துவாதசமுக்கிய தேவதை களிலொருவர். (வி-ணி.)

புட்கரன் — 1. குய்யாட்டகரிலொருவன். (வி-ணி.) 2. வருணன்மகன். (அபிதாநசி.)

புட்கரிணி—தடாகம். (வழக்.)

புட்கலம்—நாலுகவளம்போசநத்துக்கு அல் லது நாலுவாய்போசநத்துக்குத்தக்க பிச்சை என்பர். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. புட்கலா வர்த்தம். (சூ. நிக. கஉ: எடு.)

புட்கலாவர்த்தம் — சத்தமுகிலினென்று; அது: பொன்பொழிவது. (உ-ம்.)"மைக்குலத்தி னிற்புட்கலாவர்த்தமாமெனவே" (பாரத. குரு குல. உஅ.)

புட்கலை—ஐயனர் தேவிகளிலொருத்தி. (உ-ம்) "பூரணைக்கிறைவாவோலம்புட்கலை கணவாவோலம்" (கந்தபு. மகாகாள, உ.)

புட்கலைமணாளன்—ஐயனர். (கந்தபு. மாகா காள. உ.)

புட்குத்திருப்பி — வட்டத்திருப்பி. (வைத் தியபரி.)

புட்டகம் —சீலை, கப்பிரத்தியமென்பர்.

புட்டம் — 1. காகம். 2. சீலை. 3. நிறைவு. (1, 2, 3-சூ. நிக. கக: டகரவெ. ககூ.)

புட்டி — 1. சந்திரனது சோடசகலைகளி னென்று. (வி-ணி.) 2. பருமை. (வழக்.) சரீ ரம் புட்டியாயிருக்கிறது. 3. வெல்லம், பனங் கட்டி. (வைத்தியபரி.)

புட்டில் — 1. அம்பறுத்தூணி. (பிங்கல. கநுசகூ.) 2. இறைகூடை. (சூ. நிக. எ: நுசு.) 3. குதிரைக்குணவுகட்டுங்கருவி. (சிந்தா.) 4. கெச்சை. (உ-ம்.) "விளங்கொளிப்பக்கரையமை ந்த தாரும்புட்டிலும்" (சிந். கந். உககூ.) 5. தக் கோலத்தின்காய்; அது: புட்டில்போறலினப் பெயர்பெற்றது. (உ-ம்.) "அம்பொதிப்புட்டில் விரைஇக்குளவியொடு" (திருமுரு. ககக.) 6. விரலுறை. சீவகசிந்தாமணியிலே விரற்சரடு என்பர்.

புட்டுத்திருப்பி—ஒருசெடி. (வைத்தியபரி.)

புட்டை—அங்கவாதம். [தெலுகு.]

புட்பகம்-1.அன்னபேதி.2. குபேரனூர்தி, புட்பகவிமானம். (சூ. நிக. கஉ: கசஉ.) 3. சகா தேவன்சங்கு. (அபிதாநசி.) 4. மூக்கிரட்டை. (1, 4-வைத்தியபரி.)

புட்பகாசீசம் — அன்னபேதி. (வைத்திய பரிபா.)

புட்பகாதகம்—மூங்கில். (வைத்தியபரி.)

புட்பகிரி — மேற்றிசைக்கடலில் வருணன் விளையாடுமோர்மலை. (உ-ம்.) வந்துழிக்காண்க.

புட்பகீடம்—தேன்வண்டு. (வைத்தியாநுப.)

புட்பகேசி—உமை. (கோயிற்பு. பதஞ்சலி. கூo. உரை.)

புட்பசரன்—காமன். பூவாளி என்பதற்கு பிரதிநாமமெனக.

புட்பசராசநன்—காமன். புட்பவில்லு மதனுக்குண்டு என்பதை ஆசிரியர்கண்டு, முதலாவதுதொகுதி சு-வது கவியிலறிக.

புட்பசாமரம்—தாழை. (வைத்தியபரி.)

புட்பசாரம்—பூந்தேன். (வைத்தியபரி.)

புட்பசூநியம்—அத்திமரம் (வைத்தியபரி.) அரசு, ஆல், பலா, இத்தியமுதலியவற்றிற்குங் கூறுவர்.

புட்பத்திரவம்— புட்பத்திராவகம்— } பூவில்வடிக்குநீர்.(திரவம்-நெகிழ்ச்சிப் பொருள்.)

புட்பதந்தம்—வடமேற்றிசையானை.

புட்பதந்தமுநிவர்—ஒருமுநிவர். (அபிதாநசி.)

புட்பதந்தன்—கைலேயிலிருந்தகணநாதன். (அபிதாநசி.

புட்பந்தயம்—தேனீ. (வைத்தியபரி.)

புட்பபலம்—விளாங்கனி. (வைத்தியபரி.)

புட்பபாதகம்—மூங்கில். (வைத்தியபரி.)

புட்பம்—1. ஒரு கண்ணேய். 2. புட்பகம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 3 பூ. (உ-ம்.)"மங்களமாகுந்தெய்வவாசபுட்பாதிமல்க" (சிவரக. நைமிச. உஉ.) 4. மகளிர்சூதகம் 5. வாழை. (வைத்தியபரி.) (1, 4-வழக்.)

புட்பமஞ்சரிகை — நீலோற்பலம். (வைத்தியபரி.)

புட்பரசம்—பூந்தேன். (வழக்.)

புட்பரதம்-1. பூந்தேன். 2.பூந்தேர். (வழக்.)

புட்பராகம் — நவமணியிலொன்று, புருடராகம். (வழக்.)

புட்பரேணு—பூந்தாது. (வைத்தியபரி.)

புட்பலம் – விளாங்கனி. (வைத்தியபரி.)

புட்பலாவன்—சாலியனுக்கும் பார்ப்பினிக்கும்பிறந்து பூக்கொய்து மாலேவிற்போன். (மிரு. ச)

புட்பவதி—இருதுவானவள். (வழக்.)

புட்பவாகநன்—அருகன், தாமரைப்பூவைவாகனமாகவுடையவன்.

புட்பவிமாநம்—பூந்தேர். (வழக்.)

புட்பாகம்—மூக்கிரட்டை. (வைத்தியபரி.)

புட்பாசநன்—பிரமன். (வழக்.)

புட்பாசநி — 1. இலக்குமி. 2. சரஸ்வதி.

புட்பாசவம்—தேன். (வைத்தியபரி.)

புட்பாஞ்சலி—இணைக்கை பதினைந்துவகையுளொன்று; அது: இரண்டுகையுங்குடங்கையாய்வந்தொன்றுவது. (சிலப்.அரங்.கஅ.உரை.)

புட்பிகை—பூத்தவள். (வழக்.)

புட்பித்தல்—பூத்தல். (வழக்.)

புட்பேந்திரம்—சண்பகம். (வைத்தியபரி.)

புடகம்—1. இலேக்கலம். 2. தாமரை. (1, 2-வைத்தியபரி.)

புடபேதம்—1. ஆற்றுவளேவு. 2. நகரம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

புடம்—1. சுத்தம் (வழக்.) 2. புறம். (பிங்கல. ககூசுக.) 3. பொன்முதலானசரக்குகளைநெருப்புவெய்யில் தாநியமுதலானவைகளாற் சுத்தம்பண்ணல்; இது: காடைப்புடம், கவுதாரிப்புடம், குக்குடப்புடம், வராகப்புடம், கசப்புடம்எனப் பலதிறப்படும்.

புடல்— புடோல். [தெலுங்கு.]

புடவி—பூமி. (உ-ம்.) "புடவியினிடத்தின் மிக்கபுண்ணியபூமியான–அடவியொன்று" (சிவரக. நைமிச. கஎ.)

புடவிழலம்–சிறுகுரட்டை.(வைத்தியபரி.)

புடார்ச்சுநபுரம் — திருக்குற்றலம்; இது: இருபத்தொருநாமத்துள் ஒன்று. (திருக்குற்றலத்தலபுராணம். புராணவியல். கரு.)

புடாரமுளை —செந்நாயுருவி. (வைத்தியமூ. அக.)

புடிகை —ஏலம். (வைத்தியபரி.)

புடை — 1. அடிப்பு. (வழக்.) 2. அருகு. (உ-ம்.) "எம்மருங்கும்பூதகணம்புடைநெருங்கும்பெருமையும்" (பெரியபு. திருவாரூர். சகூ.) 3. அன்பு. (திருவிளை. வெள்ளையானை. உகூ.) 4. இடம். (சூ. நிக. ரு: சுரு.) 5. ஒலி. (உ-ம்) "புரிநாண்புடைபிற்புறங்காண்டல ல்லால்" (கலி. கரு.) 6. ஒரேழனுருபு. (நன்னூ.பெயரி. சரு.) 7. கிணற்றினுடையபுடைப்பு. 8. தெரிநிலேவினைப்பகுதி. 9. பக்கம். (உ-ம்.) "ததும்பிவிம்மிப்-புடைபரந்து" (அரிச்ச. பாயிர. கம.)

புடைகெடப்போகியசெலவு— நிரைகோடற்குஎழுந்தோர் ஆண்டுநின்று மீண்டுபோய்ப் பற்றூர்புலத்து ஒற்றர்உணராமற் பிற்றைஞான்றுசேறலும், நிரைமீட்டற்குஎழுந்தோர்ஆண்டு ஒற்றப்படாமற்சேறலும். (தொல். பொருள். ருஅ. பேராசி.)

புடைகொள்ளல்—புடைத்தல். (வழக்.)

புடைத்தல்—1. அடித்தல். (உ-ம்.) "கோட்டினுற்புடைத்ததன்றே" (பெரியபு. திருவாரூர். உஎ.) 2. ஒலிவித்தல். (உ-ம்.) "நீளிருந்தடக்கைவரிவிஞண்புடைப்ப" (கூர்மபு. தக்கன்வமி. ருக.) 3. குட்டுதல். (உ-ம்.) "இருகரத்தினுற் சென்னியுறப்புடைத்தவர்" (பிரமோத். உ. ருக.) 4. குத்தல். (சூ. நிக. க: உக.) 5. சுளகுமுதலியவற்றாற்கொழித்தல். 6. தகர்த்தல். (உ-ம்.) "புங்கவனிடுவேளை புடைத்து" (திருவிளே.வளே.உஎ.) 7. பருத்தல். 8. பறவைசிறகடித்தல். (சூ. நிக. கூ: எ௦.) 9. வீங்குதல். (5, 7, 9-வழக்.)

புடைநூல்—சார்புநூல். (உ-ம்.) "இருவர் நூற்குமொருசிறைதொடங்கித்-தி ரி பு வே று டையதுபுடைநூலாகும்" (நன்னூ.பாயிர.அ.)

புடைப்ப—தடிப்ப. (திருவாலவாயத்திரு.)

புடைப்பு—புடைத்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

புடைபடல்—அணுகல். (உ-ம்.) "புடைபட் டிருப்பதென்றுகொல்லோ"(திருவா.புணர்ச்.௯)

புடைபெயர்ச்சி — 1. நிலைமாறுகை. 2. வினைநிகழ்ச்சி. (இலக்கணச்சுருக்கத்திலறிக.)

புடைபெயர்த்தல்—புடைபெயர்ச்சி. (திருவானைக். ஞானவு. ௬௭.)

புடையல்—மாலை. (உ - ம்.) "இரும்பனம் புடையல்" (புறநா. ௯௯.)

புடையூஉ—கொட்டி. (உ-ம்.) "உயர்நிலையி கணமேறிக்கைபுடையூஉ" (மலைபடு. ௨௦௪.)

புடைவை—சீலை (சூ. நிக. எ: ௪௯.)

புடோதகம்—தெங்கு. (வைத்தியபரி.)

புடோல் — ஒரு கொடி; அது: கொத்துப் புடல், நாய்ப்புடல், கன்றிப்புடல், பேய்ப்புடல் என நான்குவகைப்படும். (வைத்தியமூ. அக.)

புண் — 1. ஊன். (சூ. நிக. ௩: ௪௪.) 2. விரணம். (உ-ம்.)"காலதண்டத்தாற்புண்ணுறப் படுவான்" (சிவரக. நாரதருபதேச ௯௨.)

புண்டரம்—1. கழுகு. (சூ. நிக. ௩: ௫௪.) 2. நெற்றிக்குறிகள்; அவை: திரிபுண்டரம், ஊர்த்துவபுண்டரம் என இருவகைப்படும். 3. வங்காளத்துக்குமேற்கிலுள்ளநாடு (அபிதாநசி.) 4. வெண்கரும்பு. 5. வெண்டாமரை. (4, 5 வைத்தியபரி.)

புண்டரிகம்—தாமரை. (உ - ம்.) "புண்ட ரிகப்போதுறையும்புத்தேளிறுமாப்பும்" (திரு விளை. வெள்ளையா. ௧௪.)

புண்டரித்தல்-புண்டரமாய்ப்பூசுதல்.(உ-ம்.) "வெள்ளியதிருநீற்றையுந்திருநுதலிற் பு ண் ட ரித்து" (திருவிளை. அங்கம். ௧௫. உரை.)

புண்டரீகம் — 1. கழுகு. 2. தாமரை. 3. தென்கிழ்த்திசையானை. 4. புலி. 5. வண்டு. 6. வெண்டாமரை. (2, 6-வைத்தியபரி.) (1,3, 4, 5-சூ. நிக. ௧௧: ௬௧ரவெ. ௧௯.)

புண்டரீகை—ஒரு நதி. (வி-ணி. உ௯.)

புண்டவம்—சாரணை. (வைத்தியபரி.)

புண்டாரம்—வெண்கரும்பு.(வைத்தியபரி.)

புண்ணியகந்தம்–சண்பகம்.(வைத்தியபரி.)

புண்ணியகாரம்-தங்கிலியம்.(வைத்தியபரி)

புண்ணியகோடி — வரதராசப்பெருமாள் சிவலிங்கபூசைசெய்த ஆலயம். (உ.-ம்.) "புண் ணியகோடியபகிரிமிசையேபொருவிலா வேதி யுத்தரத்தில்" (கந்தபு. திருநகர. ௬௭.)

புண்ணியசரவணம் — சோலைமலைக்கருகி லுள்ளதோர் பொய்கை (அபிதாநகோ.)

புண்ணியசாந்தம்–1. சாணம். 2. திருநீறு. (1, 2-பிங்கல. ௬௭௬, ௬௭௪.) பு ண் ணி ய சாந்து எனவுங்கூறுவர்.

புண்ணியத்தானம்—1. உதயத்திற்கொன் பதாமிடம். (சோதிடநூ.) 2. புண்ணியதலம். (வழக்.)

புண்ணியத்தோற்றம்நான்கு–தவம், ஒழுக் கம், கொடை, கல்வி என்பன. (சூ. நிக. ௧௨: ௬௭.)

புண்ணியதிரணம்–வெண்டருப்பை. புண் ணியங்கட்குபயோகமாயிருத்தலால் இப்பெயர் பெற்றதென்பர்.

புண்ணியபத்திரை–யமபுரஞ்செல்லும்வழி யிலுள்ள நதி. (அபிதாநசி.)

புண்ணியபூமி–புண்ணியசேத்திரம்.(வழக்)

புண்ணியம் — 1. உதயத்திற்கு ஒன்பதா மிடம். (சோதிட.) 2. நலமானது. (சைவப்பி.) 3. நீத்தவர்க்குச்செய்யுமுபசார மொ ன் ப து. (அபிதாநசி.) 4. விதிக்கப்பட்ட வினைவடிவ மாய்ச் சுகசாதநமாயிருப்பது; அது: பு த் தி, கருணை, சிநேகம், நீதி, பொறை, அடக்கம், ஆதரம், இலச்சை, சிரத்தை, கொல்லாமை, மெய்மை, கள்ளாமை, காமியாமை முதலியன வாம்.

புண்ணியமுதல்வன் — புத்தன். (சூ. நிக. ௧௧: ௧௮.)

புண்ணியமூர்த்தி — 1. சிவன். (சி. சி. அ: ௬௧. சிவாக்.) 2. புத்தன். (சூ. நிக. ௧: ௧௮.)

புண்ணியமேழு — எழுவகைப்புண்ணியங் கள்; அவை: நசுங்கிருதி, தாநம், விரதம், சிநே கம், நயபோசநம், கமை, உற்சாகம் என்பன. (பொருட்டொகைநிகண்டிலறிக.)

புண்ணியமொன்பது—ஒன்பதுவகைப் புண்ணியங்கள்; அவை: எதிர்கொளல், பணி தல், ஆசநத்திருத்துதல், தாள்கழுவுதல், அருச் சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், புகழ் தல், அமுதமேந்தல்என்பன.(சூ.நிக.௧௨:௧௮.)

புண்ணியவதி—ஒரு நதி. (வி-ணி. உ௬௧.) 2. புண்ணியவாட்டி. (வழக்.)

புண்ணியவர்சநம்–கிரியைகட்குமுதலிலே சுத்தமாகச்செய்வது. (திருவானைக்.கோச்.௬௧.)

புண்ணியவாட்டி—புண்ணியவதி. (வழக்.)

புண்ணியவாளன்—தருமவான். (வழக்.)

புண்ணியவான் — புண்ணியன். (உ - ம்.) "சிவபூசைபுரிபுண்ணியவானை" (சிவரக. தேவர் முறை. ௧௫.)

**புண்ணியன்**—1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. சிவன். (உ-ம்.) "போதகனுகித்தேற்றும்புண்ணியன்புலேனுன்செய்த—தீ த க மு ண ர் ந் து" (திருவிளை.அங்கம்.கo.) 3. தருமவான்.(வழக்.)

**புண்ணியாக்கம்**—குர்தருக்கம். (வைத்திய மூ. அக.)

**புண்ணியாகவாசநம்** — ஆசுசநிவாரணம். (உ-ம்.) "விதிவழியேபுண்ணியாகவாசநஞ் செய்து" (நாகைக்காரோ. புண்டரீகமுநி. கக.)

**புண்ணியை**—1. துளசி. (வைத்திய பரிபா.) 2. புண்ணியவதி. (வழக்.)

**புண்ணீர்**—இரத்தம். (உ-ம்.) "ஆனையின் புண்ணீருண்ணவடுத்தகாருடற்பேய்" (திருவி. யானையெ. கூசு.)

**புண்படுதல்** — 1. புண்ணுதல். 2. மநநோ வுண்டாதல். (1, 2-வழக்.)

**புணர்**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. புதுமை. (பிங்கல. கசு௫கூ.)

**புணர்க்கையான்**—மாயத்தையுடையவன். (உ-ம்.) "புணர்கிலாப்புணர்க்கையானே" (திருவா. திருச்ச. எo.)

**புணர்ச்சி**—1. இணக்கம். 2. எழுத்துமுதலியவற்றின்சந்தி. நன்னூ. உயிரீற். க. உரை.) 3. ஓரிடத்திருத்தல். (உ-ம்.)"புணர்ச்சிபழகுதல் வேண்டா" (வள். எ௮௫.) 4. சையோகம். (1, 4-பிங்கல. கூ௮௫உ.)

**புணர்ச்சிமாலை**—தண்டகமாலை; அது: வெண்பாவான் மூந்நூறுசெய்யுட்கூறுவது.

**புணர்ச்சியின்மகிழ்தல்** —தலைவன் புணர்ச்சியால் மகிழ்தல். (வாண. க௮. மூகம்.)

**புணர்ச்சிவிகாரம்**—நிலைமொழியீறும் வருமொழிமுதலும் ஒன்றோடொன்று புணருங்காலத்துவரும். தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் விகாரங்கள். (நன்னூ. பதவியல். சு. உரை.)

**புணர்த்தல்**—1. இணைத்தல். 2. இயைவித்தல். 3. உபாயஞ்செய்தல் 4. புணரச்செய்தல். (1, 2, 3, 4-வழக்.)

**புணர்த்துதல்**—புணர்த்தல்.

**புணர்தல்**—1. இணங்கல். 2. இணைதல். 3. எழுத்துச்சந்தித்தல். 4. கலத்தல். (தஞ்சைவா. உககூ.) 5. சார்தல். (உ-ம்.) "பிரயோகசி புணருமாலைவேளை" (சிவரக. சிவடுண்டிவருபாலன். சா௫.) 6. தோய்தல், படுதல். (உ-ம்.) "பனையின்மென்மூலைமேற்பனிமாருதம்-புணரவாருயிர்வெந்துபுழுங்குவான்" (இராமா. சூர்ப்பந. என.) (1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.

**புணர்நிலை**—ஓரலங்காரம்; அது: தொழில் குணமென்னுமிவை காரணமாக இருபொருளுக்கு முடிக்குஞ்சொல்லாக ஒருவாசகம் புணர்ந்து நிற்கச்செல்லுமோ ரலங்காரம். (உ-ம்.) "வினைபண்பெனவிவையிருபொருட் கொன்றேபுணரமொழிவதுபுணர்நிலையாகும்.(தண்டி. பொருளணி. கூக.)

**புணர்ப்பு**—1. இணைப்பு. (உ-ம்.) வந்துழிக் காண்க. 2. உடல். (சூ. நிக. உ: அ௫.) 3. உபாயம். (உ-ம்.) "பாவகாரிகள்"பார். 4. துணை. (புறநா.) 5. மாயம். (திருக்கோவை. கஎ.)

**புணர்மார்**—கூட்டுதற்கு. (உ-ம்.) "பாடல் கொளப்புணர்மார்" (நெடுநெல். சுஎ.)

**புணர்வு**—1. இசைப்பு. 2. கலவி. (1, 2-சூ. நிக. கக: ணகரவெ. க.)

**புணரி** — 1. அலை. (பட்டினப்பாலை. கஎ. அடியுரை.) 2. கடல். (பி.நி. ௫அ௪.) 3. கரை. (சூ. நிக. கக: ணகரவெ. கக.)

**புணருதல்**—புணர்தல். உகரஞ்சாரியை.

**புணை**—1. தெப்பம். (உ-ம்.) "சிவநாமமெனு நற்புணைபிடித்தால்" (திருவாத. திருப்பெரு. கo.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 4. மரக்கலம். (சூ. நிக. எ: ௫க.) 5. மூங்கில். (வைத்தியமூ. அக.)

**புத்தகம்**—1. ஏடு. (திருவிளை.வாதவூரடிக. சஎ.) 2. சித்திரப்படம். (சூ. நிக. எ: எக.) 3. மயிலிறகு. (வைத்தியபரி.)

**புத்தசைத்தியம்**—பௌத்தவித்தியாசாலை. (சிலப். நாடுகாண். கச. உரை.)

**புத்தப்புதியது**—மிகப்புதியது. (வழக்.)

**புத்தம்** — புத்தமதம்; இது: புறச்சமயமாறினொன்று.

**புத்தர்**—பௌத்தசமையத்தார்; இவர்: விஞ்ஞாநமயகோசமயஞன்மாவென்பர்.

**புத்தன்**—1. அருகன். (உ-ம்.) "புங்கவன்" பார். [அறிவுடையோனென்பது பொருள்.] 2. திருமால். (பிங்கல. கூ௮௫௫.) 3. புத்தன். (சூ. நிக. கக: தகரவெ. உச.) 4. புதுமைசெய்பவன். (வழக்.)

**புத்தாத்திரி**— } அரிநெல்லி. (வைத்திய
**புத்தாரி**— } பரிபா.)

**புத்தி**—1. அந்தக்கரணத்தொன்று; அது: இப்பியன்றுவெள்ளியென நிச்சயிப்பது. (சித்தாந்தப்பிரகாசிகையிற்காண்க. 2. உளளம். (உ-ம்.) "புத்தியின்விருப்பிலர்" (பிரமோத். பஞ்சா.உகூ.) ஆகுபெயர். 3. தக்கன்புத்திரிகளிலொருத்தி. (வி-ணி.) 4. போகம். (காஞ்சிப்பு. மூப்புராரிகோ. எ.) 4. விநாயகக்கடவுளின் சத்திகளிருவரிலொருத்தி. (அபிதாநகோ.)

**புத்திருணமெட்டு**—தருமம், ஞாநம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதன்மம், அஞ்ஞாநம்,

அவைராக்கியம், அனைசுவரியம் என்னுமெண் வகைக் குணம்; இவை: எழுபதுபேதப்படும் என்பர். (சதாசிவரூபம் என்னுநூலில்.)

**புத்தித்துவம்** — புத்தித்தன்மை. துவம்-தன்மை.

**புத்திதத்துவம்**—முப்பத்தாறு தத்துவங்களு ளொன்று; அது: அகங்காரதத்துக்குமேலே பத்துப்பங்கதிகமான வோர்தத்துவம். பத்துக்கோடி கோடியோசனைப்பிரமாணமுள்ளது. (சி-வி. உக.)

**புத்திதம்**—காஞ்சிரை. (வைத்தியபரி.)

**புத்திமற்காரியம்**—சேதநப்பொருளாற்செய்யப்படுங் காரியம். (சி. சி. க: கஅ.)

**புத்திமான்**—சேதநன். (சி. சி. க: கஅ.)

**புத்தியட்டகமுதல்வர்** — புத்திதத்துவத்திலுள்ள எட்டுச்சூக்குமபுவநங்களினது தலைவர்களாகிய அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டியென்னு முருத்திரர்கள். (உ-ம்.) "நெறிசேர்புத்தியட்டகமுதல்வருமவந்தனர்" (கந்த பு. கணங்கள்செல். சு0.)

**புத்தியறிதல்**—1. பெண்கள் இருதுவாதல். 2. விரகறிதல். (1, 2-வழக்.)

**புத்தியிந்திரியம்**—ஞானேந்திரியம்.(சி. சி. உ: சுக.)

**புத்திரகம்**—1. ஒருமரம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**புத்திரகன்** — சாதமார்க்கமுஞ்செய்து சிவபூசையும் அக்கினிகாரிய முதலாயினவுஞ் செய்திறவன். (சி.சி. அ: ச. மறை.)

**புத்திரகாமேட்டி** — புத்திரனைக்குறித்துச் செய்யும் யாகம். இட்டி-யாகம்.

**புத்திரகிருதன்** — புத்திரனாக அங்கீகரிக்கப்பட்டு வளர்க்கப்பட்டவன். (உ-ம்.) வந்துழிக்காண்க

**புத்திரசாரி**—காஞ்சிரை. (வைத்தியபரி.)

**புத்திரசீவம்** — ஒரு மரம். இதன்மணிகள் மாலையாகக்கோத்துக் கழுத்திலணியப்படும். (உ-ம்.) வந்துழிக்காண்க.

**புத்திரசுவீகாரம்** —பிறர்பிள்ளையைத் தன் பிள்ளையாக்கல். (வழக்.)

**புத்திரசெனனி**—தாளி. (வைத்தியபரி.)

**புத்திரத்தானம்**—உதயபத்திற்குமூன்றுமிடம். (சோதிட.)

**புத்திரதீபம்**—புத்திரதீபமணி.(சி.சி.பாயிர. அ சிவாக்.)

**புத்திரத்தீபமணி**—படிகமுதலிய மணிகள் போல் மாலையாகக்கோத்து அணியத்தக்கதொன்று. (சி. சி. பாயிர. ௯. ஞானப்.)

**புத்திரநெறி** — புத்திரமார்க்கம். (சி. சி. அ: கஅ. சிவாக்.)

**புத்திரமார்க்கம்**—புறத்தொழிலகத்தொழிலென்னும் அருவுருவத்திருமேனியைநோக்கிச் செய்யும் வழிபாடு. (உ-ம்.)"புத்திரமார்க்கம்..." (சி. சி. அ: உ0.)

**புத்திரயாகம்**—புத்திரகாமேட்டி. (வழக்.)

**புத்திரர்**—1. சமயதீட்சையுஞ் விசேடதீட்சையும்பெற்றுச் சலத்திலே ஸ்நாநம்பண்ணி மந்திரதேவர்முதலாயினோர் தர்ப்பணத்தை விதிப்படிசெய்து சிவார்ச்சனையை முடித்து அக்கினிகாரியஞ்செய்து சிவத்தியாநம் பண்ணி அதிதிகளுக்குப் பாத்தியாதி தூபதீபங்களாற் பூசைசெய்து அன்னமூட்டி ஆசாரியருஞ்சாதகரு மேவியதைச்செய்பவர். (சைவச. மாணாக்க. உ௫, உசு, உஎ, உஅ. உரை.) 2. பிள்ளைகள் இருவர்கள் பன்னிருவகையராக அபிதானசிந்தாமணியிற் கூறினமை காண்க.

**புத்திரர்பன்னிருவர்**—ஔரசன், க்ஷேத்திரன், தத்தன், கிருத்திரிமன், கூடோற்பந்நன், அபவித்தன், கானீநன், சகோடன், கிரீதன், பௌநர்ப்பவன், சுவயந்தத்தன், பாரசவன் என்னும் பன்னிருபுத்திரர். (மிருச. ) [இந்தப்புத்திரருட் சமசாதி மனைவியரிடத்திற் பிறந்த ஔரசன் முக்கியபுத்திரன்; ஏனையர் கௌணபுத்திரர்கள் இவருள் ஔரசன் தத்தன் இவர்களல்லாதபுத்திரர் பதின்மரையுங் கலியுகத்திலேகௌணபுத்திரர்களாகவுங்கொள்ளுவதில்லை. (மிருச)

**புத்திரவதி** — புத்திரனைப்பொருந்தியவள். (வழக்.)

**புத்திரவேடணை** — பிள்ளையிச்சை; இது: ஈடணை மூன்றினொன்று. (தத்துவக்கட்டளையிலதிக.) ஈடணை-ஆசை.

**புத்திரன்**—மகன். (சூ. நிக. உ: அ0.) புத்தென்னுநரகத்தைநீக்கிக் கரையேற்றுகிறவன்.

**புத்திரனி**—முள்ளிச்செடி. (வைத்தியபரி.)

**புத்திரி**—1. கறிமுள்ளி. 2. கீழ்காய்நெல்லி. 3. மகள். (சூ. நிக. உ: அக.) (1, 2-வைத்தியபரிபா.)

**புத்திரினி**—கீழ்காய்நெல்லி. (வைத்தியபரி.)

**புத்தின்சாரி**—காஞ்சிரை. (மலையக.)

**புத்தீந்திரியம்**— புத்தியிந்திரியம். (வழக்.)

**புத்து**—1. ஒரு நரகம். (இராமா. பாலகா. திருவவதா. ௬௫.) 2. புதிது. (உ-ம்.) "புத்தடியோம்புன்மைதீர்த்தாட்கொண்டாற்போல லாதோ" (திருவாச. திருவெ. ௯.)

**புத்துநணி**—எட்டி. (வைத்தியபரி.)

**புத்துவணி**—காஞ்சிரை. (மலையக.)

புத்தேள்—1. தெய்வம். (உ-ம்.) "புத்தேளு லகத்தற்று" (புறநா. உஉ.) 2. புதுமை. (உ-ம்.) "புத்தேள்வண்டும்"(திருவிளை.தருமிக்கு.கஉ.)

புத்தேளிர்—தேவர்கள். (உ-ம்.) "புத்தேளிர் வாழுமுலகு" (திருக்குறள். சு-ஆம் அதி. அ.)

புத்தேன்—காஞ்சிரை. (மலையகராதி.)

புதப்பிரியம்—மரகதரத்நிநம். புதனுக்குப் பிரியமுள்ளதென்பர். (வழக்.)

புதர் — 1. அறிஞர். (சூ. நிக. உ: அ.) 2. தூறு. 3. தேவர் (உ-ம்.) "புதர்களுநினையாமெ னில்" (சிவர. தாருக. கo.) 4. புல். 5. புலவர். (திருவிளை. மாணிக்க. கக.) (2, 4-வழக்.)

புதல்—1. சிறுதூறு. (உ-ம்.) "மலர்ப்புதன் மானப்பூவேய்ந்து"(மதுரைக்.(நிசுஅ.) 2 தூறு. (உ-ம்.) "பைம்புதலெருக்கி" (முல்லை. உரு.) 3. நாணல். (வைத்தியபரி) 4. புருவம். (பிங் கல. கoருஎ.) 5. புல். (பிங்கல. கஅசுரு.)

புதல்வன்—1. மகன். (உ-ம்.) "தனிப்புதல் வன்றனையணைத்தும்" (சைவச.ஆசாரிய. அஎ.)

புதல்வி—மகள். (உ-ம்.) "வேலுடைப்-பொ ருப்பரங்குணர்வுறப்புதல்விதன்மிசை"(கந்தபு. கடவுள். கஉ.)

புதவம்—1. அறுகு. (உ-ம்.) "புதவமொடு செருந்தி"(பட்டின. உசுக.) 2. வாயில். (உ-ம்.) "நன்னெறிப்புதவம்பலவுள" (சிலப். காடுகா. கஉக.) அம்-சாரியைகொண்டு கதவிற்குங் கூறுவர்.

புதவாரம்—புதன்கிழமை. (வழக்.)

புதவு-1. அறுகு (உ-ம்.) "புல்லரைக்காஞ்சி புனல்பொருபுதவின்" (மலைபடு. சசக.) பிங்க லத்தில் ஓர்வகைப்புல்லென்பர். 2. கதவு.(உ-ம்.) "புனலம்புதவின்" (புறநா. உச.) 3. கோபுர வாயிற்கதவில் விட்டுப்புகும்வழி. (சூ. நிக. ரு: சரு.) 4. வாசல். (உ-ம்.) "கோழிசேக்குங்கூடு டைப்புதவின்" (பெரும்பாண. ருஉ.)

புதன்—1. அறிஞன். 2. ஒருகிரகம். (உ-ம்) "சல்லியன்"பார். 3. ஒருவாரம். (வழக்.) 4. தேவன். 1, 4-(உ-ம்.) வந்துழிக்காண்க.

புதா — 1. கதவு. (சிந்தா.) 2. பெருநாரை. (உ - ம்.) "புள்ளும்புதாவும்வெல்போர்வேந்தா" (சிலப். நாடுகாண். ககஎ.)

புதிது—புதியது. (வழக்.)

புதிநம்—நூதனம். (வழக்.)

புதிதுணல்—புதுப்பிரயோசனத்தைச் சுப திநம்பார்த்துண்ணல். (வழக்.)

புதியர்— } விருந்தர். (சூ. நிக. உ: சo.)
புதியவர்—

புதியனபுகுதல்—முற்காலத்தில்லனசில பிற் காலத்திலக்கணமாதல். (நன்னூ.உரியிய.உசு.)

புதியோர்—புதியவர். (வழக்)

புதினு—ஒரு பூடு. (வைத்தியபரி.)

புது—மைவிகுதி தொக்குநின்ற ஒருபண்புப் பெயர்.

புதுக்கல்— } சுத்திசெய்தல்,புதுப்பித்தல்.
புதுக்குதல்- } (உ - ம்) "விதிமுறைநயாங்க டம்புதுக்க" (தைல. அருபங். சுக.)

புதுச்சரக்கு—ஆமாமியம். (உ-ம்.) "பழஞ் சரக்கு"பார்.

புதுச்சேரி—ஒரு பட்டினம். (வழக்.)

புதுகு—புதிது. (வழக்.)

புதுப்பித்தல்—புதிதாக்கல். (வழக்.)

புதுமை 1. அதிசயம் (வழக்.) 2. நூதனம். (சூ. நிக. அ: சரு) 3. மிகுதி. (சூ. நிக.அ: எ.)

புதுமைசெய்தல்— அற்புதஞ்செய்தல். (வழக்.)

புதுவது - புதியது. (புறநா.)

புதுவை—புதுச்சேரி (ஓரூர் வழக்.)

புதுவைச்சேதிராயன் — வெண்ணெய்ச் சடையபிள்ளை குமாரன். இராமாயண மரங் கேற்றும்போது இவனைப்பாம்புகடிக்க உடனே கம்பரால் விடநீங்கப்பெற்றவன். (அபிதாநசி.)

புதுவோர்—புதியமாந்தர். (உ-ம்.) "குறியவு நெடியவுமுழிழிபுபுதுவோர்"(மலைபடு. உஅஅ.)

புதை—1. அம்புக்கட்டு. (உ-ம்.) "ஞாயிறெறு றம்புதைநிரீஇப்" (பட்டின. உஅஅ.) 2. சரீரம். (சூ. நிக. உ: அரு. 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. மறைவு. (வழக்.) புதைபொருளாயிருக்கின் றது.

புதைத்தல் — 1. சேமித்தல். (சூ. நிக. க: கச.) 2. தாழ்க்குதல். (வழக்.) 3. போர்த்தல். மலைநாட்டுவழக்கு. (சிலப்பதி.) 4. மறைத்தல். (வைத்தியபரி.) 5. மூடுதல். (உ-ம்.) "உள்ளமா முரந்துதமோகுணம்புதைப்பவுரையவிந்திருந்த லும்" (கூர்மபு. தமோ. உ.)

புதைத்துவைத்தல் —சேமத்தின் பொருட் டுத் தாழ்த்துவைத்தல். (உ-ம்.) "ஆழப்புதைத்து வைத்தால்வருமோநும்மடிப்பிறகே" (கந்தர. உo.)

புதைதல் — 1. அத்தமயநமாதல். (உ-ம்.) "புதையப்படுங்கதிரும்" (விதாந. குணகுண. கஉ.) 2. ஆழமாதல். 3. சேமிக்கப்படல். 4. பதிதல். 5. மறைதல். (2, 3, 4, 5-வழக்.)

புதைப்பு — 1. சேமம். 2. தாழ்ப்பு. 3. மறைவு. (1, 2, 3-வழக்.)

புதையல்—1. புதைத்ததிரவியம். 2. புதை ப்பு. (1, 2-வழக்.)

புத்தி—1. அறிவு. (உ-ம.) "புத்தியாலுயர் புதன்" (பாரத. குருகுல. சு.) 2. புத்து. (உ-ம்.)

"வள்ளுவனார்புந்திமொழிந்தபொருள்" (வ.மா. சச.) 3. புதன். (உ-ம்.) "புந்திதருங்கனன்மான் றலைபெண்ணைமுப்பூரஞ்செங்கை" (விதான. குணகுண. கரு.) 4. மனம். (சி. சி. ச: உஅ. ஞானப்.) ஆகுபெயர்.

புந்திதம்—காஞ்சிரை. (வைத்தியபரி.)

புந்தியர்—அறிவாளிகள். புந்தி-அறிவு.

புந்நாகம்—1. கோழிக்கீரை. 2. புன்னையின் விசேடம். (உ-ம்.) "நந்திநறவநறும்புந்நாகம்" (குறிஞ்சி. கூக.)

புநர்ச்சாரணை—செபம். (வி-ணி.)

புநர்செநநம்—மீண்டுபிறத்தல். (வழக்கு.)

புநர்தம்—புநர்பூசம். (உ-ம்.) "வியாழந்தரும் பரிபூசம்புநர்தம்விளக்குமகம்" (விதான. குணகுண. கச.)

புநர்நவம்—வெண்சாரணைக்கிழங்கு. (தைல. தைலவ.)

புநருத்தம்—தோல்வித்தானம் இருபத்திரண்டில்பதின்மூன்றாவது; அஃது: அநுவாதமின்றி முன்சொன்ன சொல்லினையாவது பொருளினையாவது பின்னுங்கூறுதல். (சி. சி. அளவை. [புநருத்தம், புந-பின்னர்; உத்தம்-சொல்லுதல்]

புநருத்தாநம் — மறுபடி யெழுந்திருத்தல். (சி. சி. ௧: ௪. சிவாக்.)

புநருத்தி—இரட்டித்துச்சொல்லல். (சி. சி. ச: கூடு. சிவாக்.)

புநிதம்—1. சுத்தம். (உ-ம்.) "பூமலர்த்தொடையுமீண்டப்பொலிந்ததப்புநிதவீதி" (கந்தபு. ததீசியுத். அ௦.) 2. புநர்பூசம். (சூ. நிக. க: ௭௦.)

புநிதன்—1. அருகன். (உ-ம்.) "பொருளன் புநிதன்புராணன்புலவன்" (சிலப். நாடுகாண். கஎக.) 2. சுத்தன்.

புநிதை—சுத்தியடைந்தவள். (உ-ம்.) "இருதையாய்ப்புநிதையாய்வந்தேத்தறவஞ்சலிப்பாலெய்தி" (கோயிற்பு. பதஞ்சலி. எச.)

புபுட்சு—போகத்திலிச்சையுள்ளவன். (சி. சி. உ: ருசு. சிவாக்.)

பும்—ஓரொலிக்குறிப்பு. (வழக்.)

பும்சத்துவம்—புருடதத்துவம். (சி. சி. உ: சுக. சிவாக்.) அஃதாவது: கலை, காலம், நியதி, வித்தை, ராகம் ஆகிய ஐந்து தத்துவங்களினும் கட்டப்பட்டவனாய் ஆன்மா கன்மமலங்களைப் புசிக்கும் வல்லமையடைகை என்பர். (சி-சி. ஞான. கடு)

பும்சத்துவமலம்— ஆன்மாவைக் கஞ்சுகம் போல ஆவரித்து ஏகதேசவிருத்திபண்ணிக் கொண்டு திரியுங்கலை காலம் நியதி வித்தை ராகம் ஆகிய ஐந்து தத்துவச்சட்டையின்சேர்க்கை. (சி-வி. ஞான. கடு.)

பும்விருகம்—கத்தூரிநாவி. (வைத்தியபரி.)

புமான்—1. ஆண்மகன். (சூ. நிக. உ: ருஎ.) 2. புருடதத்துவம். (உ-ம்.) "சித்மெதாடுபுமான கந்தைமூன்றிலைச்சீவனென்ப" (ஞானவா. ஞானவிண். ௬.)

புயத்தல்—பிடுங்கல், பறித்தல். (மணிமே.)

புயக்கல்—பறித்தல். (உ-ம்.) "சின்மயன் ருளிற்சூழ்ந்தசிந்தையைப்புயக்கலாற்ருன் - மென்மெலப்பிந்திப்பிந்திவிண்ணெறிமுன்னுகின்ருன்" (தணிகை. ககக.)

புயகம்—பாம்பு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

புயங்கநடம்—புயங்கநிருத்தம். (கோயிற்பு. நடராச. கஅ. உரை.)

புயங்கம்—1. பாம்பு. (உ-ம்.) "வாரிதியுமலையு நிலனுமற்றெவையுந்தாங்குபுயங்கம்" (பிரமோத். பிரதோஷ. அ.) 2. புயங்கநடம். (உ-ம்.) "புனிதபுயங்கமுயங்கியபொழுது" (கோயிற்பு. பதஞ்சலி. சஉ.)

புயங்கன்—சிவன். (உ-ம்.) "போற்றியோ நமச்சிவாயபுயங்கனேமயங்குகின்றேன்" (திருவாச. திருச்சத. சுஉ.) புயங்கம்-பாம்பு.

புயம்—தோள். (உ-ம்.) "துன்றுநறுந்தொடைப்புயத்து" (பிரமோ. சிவராத்திரி. ௯.)

புயல்—1. பெருங்காற்று. (புசல் என வழக்குண்டு.) 2. மழை. (புறநா.) 3. மேகம். (உ-ம்.) "மணித்தேரென்றுதையம்புயன்மூடிய தேரின்றியம்பிடுமே" (மறைசை. கக.)

புயவதுப்பு—கலம்பகத்திறுப்பு.

புயாந்தரம்—மார்பு. (வைத்தியபரி.)

புரகரன்—சிவன். (திருவிளை. இந்திரன்முடிமே. கஎ.)

புரசரம்—முன்னிட்டு. (சி. சி. சு: எ. சிவாக்.)

புரசம்—அக்கினிதேவன்கைச்சங்கு. (உ.-ம்.) வந்துழிக்காண்க.)

புரசு—பலாசமரம். (வைத்தியபரி.)

புரசை — யானைக்கழுத்திடுகயிறுகளிலொன்று. (உ - ம்.) "புரசைநாகமுன்கடவினன்" (பாரத. குரு. உஎ.)

புரட்சி — புரளுதல். சி-தொழிற்பெயர் விகுதி.

புரட்டல்—1. குமட்டல். 2. சுருட்டல். 3. திருப்புதல். 4. மாறுபடுத்தல். (1, 2, 3, 4-வழக்.)

புரட்டன்—மாறுபாடுசெய்பவன். (வழக்.)

புரட்டாசி—புரட்டாதி. (வழக்.)

புரட்டாதி—1. ஒரு மாதம். (சூ. நிக. க: அஎ. உரை.) 2. பூரட்டாதி. (பிங்கல. உசுச.)

புரட்டி — 1. புரட்டன். 2. புரட்டுக்காரி. (1, 2-வழக்.)

**புரட்டு** — 1. திருப்பு. 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. பொய். 4. மாறுபாடு. (1,2,3,4-வழக்.)

**புரட்டுதல்**—புரட்டல். (வழக்.) உருட்டல் எனப்பத்தப்பாட்டிலறிக.

**புரட்டை** — 1. புரட்டாசிமாசம். (உ-ம்.) "இட்டகலஞ்செக்குச்சத்தமிகந்நியிவை புரட்டை"(விதாந. குணகுண. உக.) 2. பூரட்டாதி. (சூ. நிக. க: எஅ)

**புரணம்**—1. அசைதல், துடித்தல். (உ-ம்.) "தருதிரண்மங்கைநெடுங்கயநிருநயநங்கள் செறிந்திடு-புரணமும்"(கோயிற்பு.பதஞ்சலி. சக.) 2. பூரணம். (வைராக்கியச. உசு.)

**புரணி**—ஊண். (பிங்கல. களரு.)

**புரத்தல்**—1. ஈதல். 2. உண்டாக்கல். (புறநா.) 3. காத்தல். 4. வணங்குதல். (பிங்கல. கூஅருஅ.) (1, 3-சூ. நிக். கக: வகரவெ. உ.)

**புரந்தரம்**—தோள். (வைத்தியபரி.)

**புரந்தரன்**—இந்திரன். (உ-ம்.)"கொள்ளேன் புரந்தரன்மாலயன்" (திருவாச. திருச்ச. உ.) [பகைவர்ஊரைஅழிப்பவன்என்றும் பகைவர் உடலையழிப்பவன்என்றும்பொருள்கூறுப.]

**புரப்பிரியை**-அநாசிச்செடி.(வைத்தியபரி)

**புரப்பு**--காப்பு. ப்-தொழிற்பெயர்விகுதி.

**புரம்** — 1. இராசதாநி. (சூ. நிக. ரு: ௩௬.) 2. உடல். (பிங்கல. கூகூச.) 3. ஊர். (சூ. நிக. ரு: ௩ரு.) 4. மருதநிலத்தூர். (சூ நிக. ரு: ச0.)

**புரவலன்**—1. அரசன். (உ-ம்.) "புண்ணியந் திரண்டயாக்கைப்புரவலன்வந்தா னென்ன" (அரிச்சந். சூழ்வினை. கச.) [புரத்தலில் வல்லவன் என்றபடி.] 2. காப்போனுக்கும்பெயர். 3. கொடையாளன். (சூ. நிக. உ: சஅ.)

**புரவி** — 1 குதிரை. (உ-ம்.) "பகடு"பார். 2. வாகனம். (உ-ம்) "பெருங்கலையெனுமிகற் புரவிவீரனே" (பாரத. குருகுல. ருஎ.)

**புரவிசயன்**-சிவன். (உ-ம்.) "வாள்விசயன் புரவிசயன்றனைநோக்கிமன்னுதவமபுரிந்ததுவும்"(பாரத. புட்பயாத்.ரு.) [திரிபுரத்தையழித்தவரென்றபடி.]

**புரவிமேதம்** —அசுவமேதம். (உ-ம்.)"விருப்புறும்வேள்விதம்முண்மேம்படும்புரவிமேதம்" (திருவிளை. மூர்த்திவி. அ.)

**புரவிவட்டம்**—வையாளிவீதி. (சூ. நிக. ரு: சசு.)

**புரவு**—1. அரசு. (உ-ம்.) "முன்பிறந்தசூரனுக்குப்புரவுநல்கி" (உபதேச. சூரா. எக.) 2. கொடை. (சூ. நிக. கூ: கூ.) 3. புரத்தல். உ-தொழிற்பெயர்விகுதி. 4. விளைநிலம். (உ-ம்.) "புரவுத்தொடுத்துண்குவையாயினும்" (புறநா. உசு0.)

**புரள்**—புரளல். (உ-ம்.) "நெடியதோருடலம் புரளபட" (திருவிளை. நாக. கஎ.)

**புரளல்**- புரளுதல். (உ-ம்.) "பணை"பார்.

**புரளவிடல்**—நீங்கவிடுதல். (உ-ம்.) "பொருளாககம்புல்லார்புரளவிடல்" (வள். எருரு.)

**புரளி**—1. கரவடம். 2. பொய். (1, 2-வழக்.)

**புரளுதல்** — 1. உருளுதல் 2. கலக்கல். 3. சொற்பிறழ்தல். 4. மாறல். (1, 2, 3, 4-வழக்.)

**புராணசுரம்** — நெடுநாட்பட்ட காய்ச்சல். (தைலவ. தைலவ. ச0. உரை.)

**புராணம்**—1. பழம்பொருள். (உ-ம்.) "பொடியணிபுராணப்புத்தேட்புண்ணியனருளினாலே" (திருவிளை. மெய்க்கா. கஎ.) ஆகுபெயர். 2. பழமை (சூ நிக. அ: சரு.) 3. வேதவாக்கியப்பொருள்களை வலியுறுத்திவிரித்து அறிவிப்பதாய், உலகத்தின தோற்றமும், ஒடுக்கமும், மநுவந்தரங்களியல்பும், முனிவரராசர் கண் மரபும், இவர்கள்சரித்திரமுங்கூறும்நூல்; அது: பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிடியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பிரமகைவர்த்தம்; லிங்கம், வராகம், காந்தம், வாமநம், மச்சம், கூர்மம், காருடம், பிரமாண்டம் எனப் பதினெண்வகைப்படும்.(சைவ. வி.) ஆகுபெயர். [இப்புராணங்களைச் சிவபிரானிடநந்திதேவரும, அவரிடஞ் சனற்குமாரமுனிவரும், அவரிடம் வியாசமுனிவரும், அவரிடஞ் சூதமுனிவரும், அவரிடம் பற்பலமுனிவருங் கேட்டனர். (அபிதாநசிந்தா.) இவையன்றி உபபுராணம பதினெட்டுள்ளன.

**புராணலக்கணம்**— புராணத்துக்குரிய லக்கணம்; அவை: உலகத்தோற்றம், ஒடுக்கம், மநுவந்தரம், முனிவரரசர்மரபு, அவர்கள் சரித்திரங்களென்பன. (கூர்மபு. முகவுரை.)

**புராணன்**—1. அருகன். (உ-ம்.) "பொருளன்புலிந்தன்புராணன்புலவன்" (சிலப். நாடுகாண். களக.) 2. சிவன். (உ-ம்.) "புராணநீதந்தருளாதே" (திருவாச. குழைத்தபத்து. க0.)

**புராணி**—பட்டை.(தைல. தைலவ. கஙரு.)

**புராணிகன்** — 1. புராணஞ்செய்தோன். 2. புராணங்தேர்ந்தோன். (1, 2-வழக்.)

**புராணியை**—மரப்பட்டை.(வைத்தியபரி.)

**புராதநம்**—பழமை. (உ-ம்.) "புகன்றநாமங்களைநோக்கிப்புராதநவிலைசொல்வாள்" (ஞாநவ. லீலை. எரு.)

**புராந்தகன்**—புரதகாகன், சிவன். (சூ. நிக. க: சு.)

**புராரி**—சிவன். (உ-ம்.) "பொன்னவிர்கடுக்கைவேய்ந்தபுராரியை" (கூர்மபு. அந்தகா. ௩.)

**புரி**—1. ஆசை. 2. இராசதானி. (சூ. நிக. ரு: கூகூ.) 3. ஊர். 4. கட்டு. 5. கயிறு. 6. சங்கு. (வைத்தியபரி.) 7. சுருள். 8. செய்தல். 9. தெரிநிலைவினைப்பகுதி. 10. மருதநிலத்தூர். (சூ. நிக. ரு: சo.) 11. மிகுதி. (உ-ம்.) "புரிகதிர்பொன் செய்மாலை" (சிந்தா. பதுமை. கஎள.) 12. முறுக்குதல். (உ-ம்.) "புரிநாண்புடையிற்புறங்கண்டவல்லா" (கலி. கரு.) 13. வேறுபட்டு. (உ-ம்) "புரிதிரிபறியா" (கலி. கூக.) 14. வைக்கோற்புரி. (உ-ம்.) "எரிசேர்புரிபோலுருவினையேனும்" (திருநூற். கஎ.) (1, 3, 4, 5, 6, 8-சூ. நிக. கக: ரகரவெ. அ.)

**புரீஇ**—விரும்பி. (பரிபா.)

**புரிசை**—மதில். (உ-ம்.) "திரைவரைகள் புரிசைமுதற்புறஞ்சூழ்வ" (பெரியபு. சம்ப ச)

**புரிசைக்கிழார்**—முதுமொழிக்காஞ்சி செய்தவர். (அபிதாநசி.)

**புரித்த**—விரும்புவித்த. (சிந்தா.)

**புரித்தன** — 1. அழுத்தின. 2. பூரித்தன. (1, 2-சிந்தா.)

**புரிதல்**—1. ஆராய்தல். (உ-ம்.) "அறம்புரிந்தனன்செங்கோனாட்டத்து" (புறநா. கூரு.) 2. கற்பித்தல். (உ-ம்.) "புரிந்தபுவியார்நிற்கபோயொளிக்குமிட்டையுடன்" (ஞானவா. ஞானவிண. கூரு.) 3. செய்தல். (உ-ம்.) "சாற்றுதற்கரிய நிமலைதன்னையாராதனைபுரிதல்" (சூத. சிவமா. ரு: கூ.) 4. நெறித்தல். (உ-ம்.) "பொட்டிமைலிதிருநுதலும்புரிந்துமுரிந்திசைந்தசைந்த-மட்டுமலிகருங்குழலும்" (கோயிற்பு. பதஞ்சலி. கக.) 5. மிகுதல். (சிந்தா.) 6 விளைதல். (புறநா.) 7. விரும்புதல் (உ-ம்.) "நயம்புரிந்துறையுநர்" (புறநா. கசரு.)

**புரிந்த**—மிக்க. (பரிபா.)

**புரிந்தார்**—சிநேகிதர், மேவினர். (சூ. நிக. உ: ருஉ.)

**புரிநூல்**—முப்புரிநூல். (உ-ம்.) "திகழிடை வெண்கோவணமேன்-மருவரையும்புரிநூலும்" (கோயிற்பு. பதஞ்சலி. கச.)

**புரிமணை** — பாண்டம்வைக்குமணை, புரியணை. (தைல. பாயிர. கூஉ. முகம்.)

**புரிமோகம்**—1. சம்புநாவல். 2. விளாத்தி. (1, 2-மலையக.)

**புரியட்டகம்**—புரியட்டகசரீரம். (சி. சி. உ: ருo. சிவாக்.)

**புரியட்டகாயம்**—சூக்குமதேகம். (சி. சி. உ: கூகூ. ஞானப்.)

**புரியட்டரூபம்**—சூக்கும உடம்பு. (உ-ம்.) "சிவஞானசித்தியாரில், பூதநாசரீரம்" என்னு முதற்குறிப்புச்செய்யுளிற்காண்க.

**புரியணை**—புரிமணை. (உ-ம்.) "பொருந்தாப்பாத்திரத்தாருசுமக்கும்புரியணைபண்ணுவரே" (தைல. பாயிர. கூஉ.)

**புரியம்**— கூத்து. (பி. நிக. கசசரு.)

**புரிவு** — 1. அன்பு. (சூ. நிக. அ: கூகூ.) 2. ஆசை. (உ-ம்.) "உணர்வுற்புரிவுற்றெளிர்வோனே" (அருணகிரிபு. அருணைசலோதய. அஅ.)

**புரிவுற்ற**—பின்னுதலுள்ள. (உ-ம்.) "புணர்ந்தவர்முயக்கம்போற்புரிவுற்ற கொடியொடு" (கலி. கூஉ.)

**புரீடணம்**—புரீடம்.

**புரீடம்** — 1. உழுந்து. (வைத்தியபரி. 2. மலம். (ஆசாரக்கோவை.)

**புரீடமம்** —உளுந்து. (வைத்தியபரி.)

**புரு**—அதிகம். (உ-ம்.) "புருகூதன்" பார்.

**புருகுச்சன்**—அறுவகைச் சக்கிரவர்த்திகளிலொருவன். (சூ நிக. கஉ: ருரு.)

**புருகூதன்**—இந்திரன். (உ-ம்.) "புருகூதன் காதலம்புதல்வனருந்தவம்புரிதல்கண்டு" (பாரத. அருச்சுனன்ற. ருகூ.) யாகத்தில் அதிகமாக அழைக்கப்படுவன் என்பது பொருளாம். புரு-அதிகம்.

**புருடகாரம்**—ஆண்மை. (வழக்.)

**புருடகாலம்**—முப்பத்தைந்து வருடகாலம். (மிருக.)

**புருடசூக்கம்**—புருடசூக்தம் என்னுமொரு மந்திரம். (உ-ம்.) "அவமில்புருடசூக்கத்தை" (சூத. யக்கி. பூ. சஉ: கரு.)

**புருடசூக்தம்**—இருக்குவேதத்தில் பத்தாம் மண்டலத்தில் தொண்ணூறாவதாயுள்ளது.

**புருடத்துவம்**—ஆண்டன்மை. (வழக்.)

**புருடதத்துவம்** — வித்தியாதத்துவமேழினொன்று; அது: கலைமுதல் ராகமீறாகிய ஐந்து தத்துவங்களினாலும் கட்டப்பட்டவனாய் ஆன்மா போத்திருத்துவமுடையனாகு மவதரம். (சி-வி.ஞான.கரு. உரை.) [இந்தப்புருடதத்துவமென்பது தீக்ஷைசெய்யும்போது கலைமுதலைந்து தத்துவச்சட்டையின் சேர்க்கையாகிய பும்சத்துவமென்னும் மலத்தினின்றும் இவனை நீக்கிச் சோதிக்கும்பொருட்டு இருபத்தைந்தாவது தத்துவமென்று கணக்கிட்டமையால் தத்துவவரிசையிற் படிக்கப்பட்டது. உண்மையாகத்தத்துவமல்ல ஆகையாற் புருடதத்துவத்திற் சொல்லிய புவநங்களுக்கு இராகதத்துவத்தில் வாசஞ்சொல்லப்பட்டது.]

**புருடநட்சத்திரம்**—ஆண்நட்சத்திரம்; அவை: பரணி, கார்த்திகை, உரோகிணி, புனர்பூசம், பூசம், அத்தம், அனுடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி என்பன. (விதாக. பஞ்

சாங்க. கசு. உரை.)

புருடநாள்—இரேவதிநாள். (பிங்கல. உசுரு.)

புருடப்பிரமாணம்—நான்குமுழம் (வழக்.)

புருடம் — 1. தற்புருடமந்திரம். (உ - ம்.) "உருட்டிப்புருடத்தோமாங்கிதனில் வைக்க" (சைவச. பொது. கஎo.) 2. தற்புருடமுகம். (உ-ம்.) "புருடங்கீழ்த்திசைக்கு" (சைவச. பொது. சாகூஅ.) 3. புருடப்பிரமாணம், நான்குமுழம். 4. புன்னை. (வைத்தியபரி.)

புருடமிருகம்—தண்ணீர்விட்டான். (வைத்திய பரிபா.)

புருடமேதம் — மனுடபலியிடுகின்றயாகம். (இராமா. பாலகா. மிதிலைக்கா. கஉo.)

புருடர்—ஆடவர். (சூ. நிக. கக: டசரவெ. சுக.)

புருடராகம்—புட்பராகம். (உ-ம்) "மாத்திகழ்புருடராகம்வயிடூரியம்வயிரந்தாமும்" (திருவிளை. மாணிக்கம். சஎ.)

புருடலக்கணம்—ஆடவரிலக்கணம்; அது: சாமுத்திரிகவிலக்கணத்தொன்று.

புருடவாகநம்—பல்லக்கு, நரவாகனம்.

புருடவாகநன்—குபேரன். (சூ. நிக. க: உக.)

புருடன்—1. ஆண்மகன். (வழக்.) 2. ஆன்மாதனக்குள்ள இச்சாசத்தியையும், ஞானசத்தியையுங், கிரியாசத்தியையுந் தனக்கு உடம்பாகப்பொருந்திக் கன்மத்துக்கு ஈடாக விடயங்களை யறுதியிட்டுப் புசிக்கத்தக்கதர்க வருகிற அவசரம். 3. கணவன். 4. சீவான்மா. 5. செவியுற்றிருக்குநரம்பு; இது: தசநாடியிலொன்று. (வைத்தியபரி.) (3, 4-வழக்.)

புருடார்த்தம்—புருடர் அடைதற்குரியபொருள்; அவை: அறம்பொருளின்பம்வீடென்னும் நான்குமாம்.

புருடோத்தமநம்பி—சிவமூர்த்தியைப் பாடிக் கதிபெற்றவர்; இவர்: பாட்டு ஒன்பதாந்திருமுறையிற் சேர்த்திருக்கிறது. (அபிதாநசி.)

புருடோத்தமம்—வாலேரசம். (வைத்தியபரி.)

புருடோத்தமன்—1. சிரேட்டன். (வழக்.) 2. திருமால். (உ-ம்.) "புருடோத்தமன்மணிமார் பமும்பிரிந்தே" (சேதுபு. சேதும. உசு.)

புருண்டி—மல்லிகை. (வைத்தியபரி.)

புருதம்—பொன் (வைத்தியபரி.)

புருபீரு—தண்ணீர்விட்டான். (மலையக.)

புருமோதம்—1. சமட்கொவல். 2. விளாத்தி. (1, 2-வைத்தியபரி.)

புருவம்—நெற்றிப்புருவம். (உ-ம்.) "விற்புருவத்திடன்முநிவர்விழியிலக்காவிடும்" (கோயிற்பு. பதஞ்சலி. உசு.)

புருவமத்தியம்—இலாடத்தாகம். (திருவிளை. வெள்ளியம். க.)

புருவை — 1. ஆடு. (சூ. நிக. ங: கசு.) புறநானூற்றிற் பெண்ணாடென்பர். 2. இளமை. (சூ. நிக. அ: உஎ.)

புருணகத்தி—சிசுவதை. (வி-ணி.)

புருணகம்— } கருப்பத்திலிருக்கின்ற சிசு.
புருணம்— } (வைத்தியபரி.)

புருத்தியர்—வேலைக்காரர். (வி-ணி.)

புருமத்தியம் — புருவநடு. (சி. சி. ச: கூஉ. சிவாக.)

புருரம்—புருவம். (சூ. நிக. உ: கஎ.)

புருரவ — விசுவதேவதைகளு ளொன்று. (வி-ணி.)

புருரவன் — அறுவகைச் சக்கிரவர்த்திகளிலொருவன். (சூ. நிக. கஉ: ருரு.) புரூரவச் என்றும் பெயருண்டு.

புரை—1. அறிவு. (உ-ம்.) "புரையிலாப்பூரியர்கள்" (வள். கககக.) 2. இரகசியம். 3. உட்டுளை. (சூ நிக. அ: சு.) 4. உயர்ச்சி. 5. உவமையுருபு (உ - ம்.) "தேங்கமழ்தளிர்புரைசெய்மேனி" (பிரமோத். பஞ்சா. உஅ.) 6. குடில். 7. குழிப்புண். 8. குற்றம். (உ-ம்.) "அருந்ததியேமுதலாயபுரைதீர்கற்பின்மங்கையரை" (காசிகாண். இல்லொ. கரு.) 9. தெரிநிலைவினைப்பகுதி. 10. தேவாலயம். (பதிற்று.) 11. பன்னசாலை. (இராமா. பாலகா. திருவவதார. சக.) 12. வீடு. (4, 12-சூ. நிக. கக: ரகரவெ. உஎ.) (2, 7-வழக்.)

புரைக்கேறல்—புரையேறல். (வழக்.)

புரைச்சல்—இழைப்பு. வழக்குண்டுபோலும்.

புரைசல்—சச்சரவு. (வழக்.)

புரைசு — புரசு. (வைத்தியபரி.) [இது போலி.]

புரைசை—புரோசை.

புரைத்தல்—மறைவுவெளிப்படல். (உ-ம்.) வந்துழிக்காண்க.

புரைதல் — 1. இழைத்தல். 2. ஒப்பிடல். (உ-ம்.) "துகிற்புரையும்வாய்" (பாரத. அணிவகு. சு.)

புரைபடல்—வருந்துதல். (பரிபா.)

புரைமை—உயர்ச்சி. (உ - ம்.) "மண்பதை காக்குநின்புரைமைநோக்காது" (புறநா. உசo.)

புரைய—ஒருவமையுருபு. (நன்னூ. பொதுவிய. கசு.)

புரையுநர்—ஒப்பார். (உ-ம்.) "புரையுநரில்லாப்புலமையோயென" (திருமுரு. உஅo.)

புரையேறல்— } புரைக்கேறல். (உ - ம்.)
புரையேறுதல்— } "கள்வாய்மடுத்துப்புரையேறி" (கூர்மபு. கடவுள். ௪.) [தவாரநெறியாலுட்புகுதலென்றபடி.]

புரையோர்—1. கீழோர். (சூ. நிக. கக: மகரவெ. கரு 2. திருடர். (பிங்கல. அஎசு.) 3. மேலோர். (உ-ம்.) "வசையில்வான் றுணைப்புரையோர்கடும் பொடு" (குறிஞ்சி. உ௫.)

புரைபு—ஒத்து. (பதிற்றுப்.)

புரைவது—பொருந்துவது. (பரிபா.)

புரோக்கணம்—தெளித்தல். (சைவச. பொது. ௬௫. உரை.)

புரோக்கித்தல்—புரோக்கணம்பண்ணுதல். (உ-ம்.) "புரிமூலத்தாலேநீர்க்கணம்புரோக்கி" (சைவச. பொது. ௬௫௪.)

புரோக்தம்—சொல்லப்பட்டது. (சி. சி. அ: உ௫ சிவாக்.)

புரோகதி—நாய், முன்னடப்பது. (சூ. நிக. ௩: உ௫.)

புரோகிதத்துவம்—வருங்காரியஞ்சொல்லுந் தன்மை (வழக்.)

புரோகிதர் — வருங்காரியஞ்சொல்வோர். (உ-ம்.) "இறைவனமைச்சார்புரோகிதரொடு" (சேதுபு. அநும. க௩.)

புரோகிதன் — அரசர்பஞ்சகுழுவி லொருவன்; அவன்: வருங்காரியஞ்சொல்லுவோனுங் கிருத்தியம் பண்ணுவிப்போனுமாகிற பார்ப்பான்.

புரோகை—பொதியையிற்பிறந்தவோர் நதி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

புரோசநன் — 1. குபேரனுக்கு வாகனமாயிருக்கும் நரன். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. துரியோதனனுக்கொருமந்திரி. (பாரத. வாரணாவத. க0எ.)

புரோசர்—குறுநிலமன்னர். (சூ. நிக. உ: உ௩.)

புரோசன்—ஐந்தாம்வசுவின் மகன். (வி-ணி. உ௫௬.)

புரோசு— புரோகிதன். (உ-ம்.) "புரோசு மயக்கி-மல்லலுள்ளமொடு" (பதிற்று. எ0.)

புரோசை—புரசையினைப் புரோசையெனவுங்கூறுவர். யானைக்கழுத்திடுகயிறு என்பர். (சிந்தா.)

புரோட்சணம்—
புரோட்சணை—
புரோட்சித்தல்— } நீர்தெளிதல். (வழக்.)

புரோட்சிதம்—சுத்தஞ்செய்தல். (வழக்.)

புரோதம்—குதிரைமூக்கு. (உ-ம்.) "அருநிறப்புரோதமும்" (இரகு. யாகப். எ.)

புரோவாதம்—வழிமொழிதற்கு முன்னர்ப் பெறப்பட்டது. (வள். ௬உ. பரி. குறிப்.)

புரோற்கிதம்—புரோற்கீதம்

புரோற்கீதம்—சதாசிவமூர்த்தியுடையஈசானமுகத்தினின்றுற்பவித்த எட்டாகமங்களினொன்று; இதற்குக் கிரந்தசங்கியை மூன்றிலக்கம்: உபபேதர கவசாகமமுதல் ஆதோத்தியமீறுயுள்ள பதினாறு. (சைவச. பொது. ௬௬எ. உரை.)

புல்-1. அநுடநாள். (சூ. நிக. க: எச.) 2. தருப்பைப்புல். (சைல. பாயிர கக.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. பனை. (மலையக.) 5. புணர்ச்சி. (சூ. நிக. கக. லகரவெ. க0.) 6. புல்லரிசி. (உ-ம்.) "நுண்புல்லடக்கியவெண்பலெயிற்றியர்" (பெரும்பா. ௬ச.) 7. புல்லு. (உ-ம்.) "போக்கரிதிவ் வழகையெலாம்புல்லிடையேயுகுத்தீரே" (இராமா. சூர்ப்பந. கஉ௫.) 8. புலி. (உ-ம்.) "புல்லடுவெகுளிவேகப்புழைக்கைமேல்" (பிர-காண். ச: ச0.) 9. புறக்காழ். (சிலப்பதி.) 10. புன்மை. (உ-ம்.) "புல்லாளன்" (சிந். மண்மகளி. உகஎ.)

புல்கல்—புல்லுதல்.

புல்குதல்—புல்கல்.

புல்லகண்டம்—சருக்கரை. (வைத்தியபரி.)

புல்லகம்-நுதலணி. (உ-ம்.) 'தொய்யகம்' பார்.

புல்லமை—அப்பம். (வைத்தியபரி.)

புல்லம்—1. இடவிராசி. (சூ. நிக. க: ௬ச.) 2. எருது. (சூ. நிக. ௩: கச.)

புல்லர்—கீழ்மக்கள். (சூ. நிக. உ: ௫ச.)

புல்லல்—1. அமைதல், பொருந்தல். (சூ. நிக. அ: சக.) 2. கூடுதல். (உ-ம்.) "திண்மை" பார் 3. சார்தல், கிட்டல். (சூ. நிக. க: ச௩.) 4. புணர்தல். (உ-ம்.) "புல்லியகாலையில்" (பிர. காண். பஞ்சாட். உ௬.) 5. பொருந்தல். (உ-ம்.) "கன்னலுஞ்செறிசெந்நெலும்புல்லுமா நிலங் கழிந்து" (திருவிளை. விடையி. க.)

புல்லறிவு—அற்பவறிவு. (வள். புல்லறிவாண்மைபார்.)

புல்லன்—1. அற்பன். புல்-அற்பம். 2. பயன்படாதவன். (உ-ம்.) "மல்விகார்ச்சுனவரையின் பாங்கர்மன்னு — மெல்லையினின்மேவுபுல்லன்" (சிவரக. கத்தரிப்பூ. உஉ.)

புல்லாங்குழல்—ஒருதாகுழல். (வழக்.)

புல்லாடவன்—புல்லாற்செய்த ஆடவன் வடிவம்; இது: தினைப்புனத்திற் செய்திருப்பது. (உ-ம்.) "புல்லாடவனையறியாதிரையெனப்போந்தடுத்து" (தணிகை. களவு. சக௫.)

புல்லாந்தி—பூவா (மலையக.)

புல்லாமணக்கு—ஓராமணக்கு. (வழக்.)

புல்லார்—பகைவர். (பிங்கல. ௬சஎ.)

புல்லி—1. புறவிதழ். (சூ. நிக. ச: ௫க.) 2. பூவினிதழ். (வைத்தியபரி.)

புல்லிகை—ஒருவகைப்பூண்டு. (உ-ம்.) "ஞாலியன்மென்காதிற்புல்லிகைச்சாமரை" (கலி. க௬.)

**புல்லிங்கம்** — ஆண் பால். (பி. வி. சரு. உரை.)

**புல்லிதழ்**—பூவின்புறவிதழ். (உ-ம்.) "புல் லிதழ்பூவிற்குமுண்டு" (நாலடி.)

**புல்லிது**-புன்மைத்து. (உ-ம்.) "புல்லிதுபுல் லிதுபுனத்தைக்காத்திடல்" (கந்தபு.வள்.அ.)

**புல்லிபம்**—புலிநறளை. (வைத்தியபரி.)

**புல்லிய**—1. தாழ்ந்தன. (உ-ம்.) "மலையும் புல்லிய" (இராமா. சூர்ப்பந. சச.) 2. பிரிவில் லாத. (பரிபா)

**புல்லியம்**—புளிநறளை. (வைத்தியபரி.)

**புல்லியர்** — கீழ்மக்கள். புல்லார், புல்லியர் இரண்டு மொன்றென்க.

**புல்லினத்தார்**—ஆட்டிடையர். (உ-ம்.) "எல் லாவிஃதொன்றுகூறுங்குறும்பிவர், புல்லினத் தார்க்கும்" (கலி. கOஎ.)

**புல்லு**—1. புதல். உகரஞ்சாரியை. (பிங் கல. கூஅசுடு.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**புல்லுக்குருவி**—புற்குருவி, ஓர்விதகுருவி. (வழக்.)

**புல்லுச்செதுக்கி** — செதுக்குப்பாரை. (வழக்.)

**புல்லுதல்** — 1. பொருந்தல். (சூ. நிக. அ: சக. 2. தழுவுதல். (உ-ம்) "எடுத்தனண்மோந் துபுல்லியேந்தினள்" (திருவிளை. உக்கிரபாண் டியன்றிருவவ. கடு.) 3. புணர்தல். (வள்.புலவி நுணுக்கம். சு.)

**புல்லுநர்**—மேவினர். (சூ. நிக. உ: ருஉ.)

**புல்லுருவி**-மரங்களிலுங் கீரைப்பாத்திகளி லுமுண்டாயிருக்கு மொருவிதபூடு. (வழக்.)

**புல்லூதியம்**—பனை. (வைத்தியபரி.)

**புல்லூரி**—புல்லுருவி. (வழக்.)

**புல்லூநபுரு**- நியதிதத்துவத்திருக்குமோரு ருத்திரர். (வி-ணி.)

**புல்லெனல்**—1. ஒளிமழுங்கல். (சூ. நிக. அ: உடு.) 2. பொலிவழிதல். (உ-ம்.) "புல்லெ னட்டில்" (சிறுபாணாற்று. கருஉ.)

**புல்லை**—வெண்மைகலந்தசிவப்பு. (வழக்.)

**புல்வரகு**—ஒருபயிர். வழக்குண்டுபோலும்.

**புல்வாய்**-1. ஒருவகைமான்.(உ-ம்.)"புல்வாய் கவ்வயுழையேகவரி-சொல்வாய் நாடிற் பிணை யெனப்படுமே"(தொல். பொரு. சுகக.)2. கலை மான். (சூ. நிகண். ௬: உஉ.) 3. மான். (உ-ம்.) "புலிமுலைப்பால்புல்வாய்க்கன்றருந்தியிடும்பசி நோய்தீர" (திருவிளை. இந்திரன்பழி. எஉ.)

**புல்விரியன்**— ஒரு பாம்பு. (வழக்.)

**புலக்கம்**—பிணங்குவாள். (ஐங்குறு.)

**புலகன்**—பிரமனது வியானவாயுவிற்பிறந்த ஓரிருடி. (வி-ணி.)

**புலங்கிநீ**—த என்னு மட்சரத்தினதிதேவ தை. (சி. சி. அ: உக. மறை.)

**புலங்கோளி**—விட்பி. (இலக்கணவிஞு.)

**புலத்தல்**—1. கல்வியிற்பிணங்கல், புணர்ச் சிக்கிசையாததுபோலிருத்தல். 2. நொந்து கூறல். (வாண. உருகூ. முகம்.) 3. வெறுத்தல். (உ-ம்.) "செலவுகடைக்கூட்டுதிராயிற்பலபுலந் து" (பொருந. களடு.)

**புலத்தவிருக்கம்**-பெருமரம்.(வைத்தியபரி)

**புலத்தியன்**—ஓரிருடி; இவர் பிரமமானச புத்திரர். (அபிதானகோ.) இவர் மரபினர் இரா வணன் முதலோர்.

**புலந்து**—வெறுத்து. (பத்துப்பா.)

**புலப்படல்**—புலப்படுதல், விளங்குதல். (உ-ம்.) "மற்றதகட்புலப்படலால்" (கோயிற்பு. பாயிர. உஉ.)

**புலப்படுத்துதல்** — விளங்கப்பண்ணுதல். (வழக்.)

**புலப்படுதல்**—புலப்படல், வெளிப்படுதல். (ஐங்குறு.)

**புலப்பம்**—பிதற்றுதல். (வழக்.)

**புலப்பாடு**—புலப்படுதல். (வழக்.)

**புலம்**—1. அறிவு. (உ-ம்.) "புலவரையிறந்த புகழ்சாலோன்றல்" (புறநா. உக) 2. இடம். (உ-ம்.) "புலங்கெடவிறுக்கும்வரம்பிலானை" (புறநா. கசு.) 3. ஒலிமுதலைம்புலன். (உ-ம்.) "புலம்வென்ற-புன்மையில்காட்சியவர்" (வள். களச.) 4. திக்கு.(உ-ம்.)"தென்புலவாழ்நர்க்கு" (புறநா. கூ.) 5. தேயம். (உ-ம்.) "அவுபாசநம்" பார். 6. நன்மை. (உ-ம்)"கண்ணெனும்புலங் கொள்வாயுஞ்சிக்கெனவடைத்தேன்"(இராமா. உலாவிய. சச.) 7. மேட்டுநிலம். (வழக்.) 8. வயல். (உ-ம்.) "வித்துமிடல்வேண்டுங்கொல் லோவிருந்தோம்பி-மிச்சின்மிசைவான் புலம்" (வள். அடு.)

**புலம்ப**—1. தனிப்ப. உ-ம்.) "வேரற்-பூவு டையலங்குசினைபுலம்பவேர்கீண்டு" (திருமுரு. உகூஅ.) 2. வாட. (ஐங்குறு.)

**புலம்பல்**—1. இரங்கல். (இராமா.சூர்ப்பந. கOஅ.) 2. ஒலித்தல். (சூ. நிக. கO: சஎ.) 3. வருந்தல். (உ-ம்.) "வேழப்போரினம்புலம்பி றைற்போல்" (சிந். காந்த. ௬கஅ.)

**புலம்பலர்**—வெறுர் (சிந்தா.)

**புலம்பன்**—நெய்தனிலத்தலைவன். (சூ. நிக. உ: எகூ.)

**புலம்பு** — 1. ஒலித்தல். தல்-விகுதியின்றி வந்தது. 2. அச்சம். (பிங்கல. கஅருஉ.) 3. குற் றம். (சிந்தா.) 4. தனிமை. (உ-ம்.)"புல்லென்ற களம்போலப்புலம்புகொண்டமைவாளோ"(கலி.

ரு.) 5. துன்பம்.(உ-ம்.) "பூமிசையேற்றினேன் புலம்பறுகின்றேன்" (மணிமே. மந்திர. கரு.) 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. நடுக்கம். (திவாகர. கக-ஆவது.) 8. புலம்பல். அல்-விகுதியின்றிவந்தது.

**புலம்புதல்**-1. அழுதல்.(வழக்.) 2. ஒலித்தல். (உ - ம்.) "புலம்புதலெனினும்புலம்பலெனினுமொக்கும்" 3 பிதற்றுதல். (வழக்.) 4 பேசுதல். (தைல. பாயிர. கஎ.)

**புலமகள்**—நாமகள். (உ-ம்.) "அண்ணலங் கதிரலமரப்புலமகணகவே" (சிந். இலக். உகூக.)

**புலமாக்கல்**—அறிவித்தல். (உ-ம்.) "மேல்நெறியெலாம்புலமாக்கியவெந்தையை" (திருவாச. திருச்சத. கூஉ.)

**புலமினுக்கி**—விளக்குமாறு. (தைல.பாயிர. கக.)

**புலமை**—மெய்ஞ்ஞானம். (உ-ம்.) "புரையுநரில்லாப்புலமையோயென" (திருமுரு. உஅ0.) [பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாமொருங்கேகொண்ட பேரறிவுடைமையென்பர் சரவணப்பெருமாளையர்.]

**புலமையர்**—புலமையோர், கவிஞர்; இவர்: கவி, கமகன், வாதி, வாக்கியென நால்வகைப்படுவர்.

**புலர்காலை**—சங்காரகாலம். (உ-ம்.) "புலர் காலைமாயைமேவிப்பொருந்தும்" (சிவப்பிர. வியாக். பொது. கசு-ஆம் பக்.)

**புலர்த்தல்** — 1. உலர்த்தல். (பெரியபுரா. தடுத்தாட். கசு.) 2 பூசுதல். (சூ. நிக. கூ: கரு.)

**புலர்த்துதல்**—புலர்த்தல்.

**புலர்தல்** — 1. உலர்தல், புலருதலெனினுமொக்கும். (திருமுருகா கஅச-ஆம் அடி.) 2. தெளிதல். (உ - ம்.) "புலந்ததுபொழுதுநல்லாளெஞ்சமும்புலர்ந்ததன்றே" (சிந். பதுமை. உகூஉ.) 3. வாடல். (வழக்குண்டுபோலும்.) 4. விடிதல். (உ-ம்.) "2"பார்.

**புலர்வு** — 1. புலர்தல். உ-தொழிற்பெயர் விகுதி. 2. வாடுகை (வழக்.) 3. விடிவு.

**புலரி**—விடியல். (உ-ம்.) "புலரிக்காலையெல்லொளி" (பிரமோத்தரகாண்ட. ச: ச0.)

**புலருதல்**-1. காய்தல். (உ-ம்.) "பள்ளியுளீரம் புலராமையேறற்க" (ஆசாரக்.) 2. வாடுதல். (வழக்.) 3. விடிதல். (திருவிளை. வரகுண. ச0.)

**புலவ**—புலானுற்றநாற. (பதிற்றுப்.)

**புலவர்**—1. அறிஞர். (உ-ம்) "புலர்வர்பூநுதல்யானையொடுபுனைதேர்பண்ணவும்" (புறநா. கஉ.) 2. கம்மாளர். 3. கவிவாணர். 4. குறுநில மன்னர். (உ-ம்.) வந்துழிக்காண்க. 5. கூத்தர். 6. தேவர். (உ-ம்.) "புனைசடைமுடியினர்புலவரோவென" (இராமா.சடாயுகா. கக.) 7. புதன். (2, 3, 5, 7-சூ. நிக. கக: லகரவெ. க.)

**புலவல்** — 1. புலத்தல். (உ-ம்.) "போரெதிர்ந்தாற்றுப்புலவனீகூறியென்" (கலி. அக.) 2. புலால்நாற்றம்நாறுதல். (உ - ம்.) "உறலுறுகுறுதிச்செருக்களம்புலவ" (பதிற்றுப் பத்து. அசு: க.)

**புலவன்**—1. அருகன். (உ-ம்.) "பொருளன் புனிதன்புராணன்புலவன்" (சிலப். நாடுகாண். கஎக.) 2. அறிஞன். புலம்-அறிவு. 3. கம்மாளன். (உ-ம்.) "புலவனதுளங்கொடு" (கந்தபு. தெய்வ. உரு.) 4. கவிவாணன். 5. கூத்தன். 6. தேவன். 7. தேவேந்திரன். (சூ.நிக.க:கக.) 8. பாடுவோன். 9. புதன். 10. (சூ. நிக.க:உச.) ஏனையவற்றிற்குதாரணம் புலவர் என்பதிற் காண்க. ஒருமைப்பன்மைவிகுதியின் பேதமின்றிப் பொருளின்பேதமில்லை.

**புலவா**—பூலா. (மலையக.)

**புலவி**—1. ஊடலின்முதிர்வு. (உ-ம்.) "கலவி வித்தாகவூடிக்கட்புனல்குளிக்குநல்லார் - புலவி தீர்செவ்விநோக்கிப்புணர்முலைப்போகந் துய்த்து" (திருவிளை. நகர. க0ரு.) 2. கூடியுங்கூட்டமின்மை. (சூ. நிக. கூ: சஅ.) 3. வெறுத்தல். (ஐங்குறு.)

**புலவிநீட்டம்**—துனி. (சூ. நிக. கூ: கஎ.)

**புலவு**—1. ஊன். (உ-ம்.) "புலவுவாய்ப்புலிமுதல்யாவையும்" (அரிச்ச. வேட்டஞ். க.) 2. குருதி. (உ-ம்.) "கூந்தல்புலவுத்தோய" (சிந்தா. நாமக. உசுச.) [ஆகுபெயர்.] 3. நரகம். (பிங்கல. சருரு) 4. புலால்மணம். (உ - ம்.) "புலவுமணற்பூங்கானல்" (பட்டின. கூச.) 5. முடைநாற்றம். (சூ. நிக. கூ: சசு.)

**புலவுதல்**—வெறுத்தல். (உ-ம்.) "புலவுதி மாதோநீயே" (புறநா. உககூ.)

**புலவுதி**—வெறுத்தி. (புறநா.)

**புலன்**—1. அறிவு. (உ-ம்.)"எப்புலனுமோர்ந்தவன்" (திருவிளை. விருத்தகு. க0.) 2. இந்திரியம். (ஞானமி.) இந்திரியவுணர்ச்சியுமாம். 3. கருத்து. (வழக்.) 4. கழனி. (திருநூற்.) 5. பஞ்சப்புலன்.(உ-ம்.)"கரணம்"பார். 6. பாட்டு. (உ-ம்.) "காமனுங்கனியவைத்தபுலன்கரைகண்டு" (சிந்.நாமக. கூசக.) [ஆகுபெயர்.] 7. வனப்பெட்டினொன்று. 8 விடயம். (உ-ம்.) "மரணமனைத்தும்புலனிவைகாணு" (கோயிற்பு. நடராச. உஉ.)

**புலனி**—ஞண்டு. (வைத்தியபரி.)

**புலனெறிவழக்கம்** —புலனெறிவழக்கு. (உ-ம்.)"பாடல்சான்றபுலனெறிவழக்கம்"(தொல். ருக.)

புலனெறிவழக்கு— புலவராற்று வழக்கம். (தொல. பொரு. ௩: உரை.)

புலனொடுக்கல்-விடயங்களின்வழிமனசைப் போகவொட்டாமற் றிருப்புதல். (உ - ம்.) "சக மார்க்கம்புலனொடுக்கி" (சி. சி. அ: ௨௧.)

புலாகம்—சோற்றுத்திரளை. (உ - ம்.) வந்துழிக்காண்க.

புலாகி—மரம். (வைத்தியபரி.)

புலால்—1. ஊன்முதலியன. (உ-ம்.) "புலான்மறுத்தல்" 2. வெடில். (உ-ம்.) "புலால் கமழ-நீராட்டி" (கோயிற்பு. பாயிர. எ.)

புலால்கட்டி — கடலின் மீன்முதலியவற்றைத்தடுப்போன். ஒரு குழூஉக்குறி.

புலானீர்—இரத்தம். (சூ. நிக. ௩: ௬௫.)

புலி—1. ஒருமிருகம். 2. சிங்கவிராசி. 3. தொடரி. (வைத்தியபரி.) 4. நால்வகைச்சாந்தி னொன்று. 5. வேங்கைப்பட்டை. (தைல. தைலவ. எசு.) (1, 2, 4-பிங்கல. ௩அ௬௩.)

புலிக்கான்முநி— வியாக்கிரபாதமுனிவர். (கோயிற்பு. பதஞ்சலி. எஎ.)

புலிக்கொடியோன்—சோழன். (பிங்கல. எசஎ.)

புலிங்கம்—1. ஊர்க்குருவி. (வைத்தியபரி.) 2. தீப்பொறி. (உ - ம்.) "மயிர்ப்புறந்தொறும் புலிங்கம்வந்தடைந்தன" (கந்தபு. சூரன் றண்ட. எ.)

புலித்தடுக்கி—புலித்தொடக்கி.

புலித்தொடக்கி — 1. இண்டு. (பிங்கல. ௨அஅஎ.) 2. கற்றுழை. 3. தொடரி. இதனை புலிதொடக்கியென்றுங்கூறுவர். (1, 2-மலையக.)

புலித்தோலுடையோன்—சிவன். திவாகர முதலாயவது.

புலிந்தம்—தேயமைம்பத்தாறி னொன்று; அது: மிலேச்சதேசம். (பொருட்டொகை நிகண்டிலறிக.)

புலிந்தன்—மிலேச்சன். (உ-ம்.) வந்துழிக் காண்க.

புலிநகக்கொன்றை-ஒருகொன்றை. இதற்குப் பகன்றையென்னும் பெயருண்டு. (தனியூர்ப்புராணம். பாயிரம். விநாயகவணக்கச்செய்யுளிலறிக.) (மணிமேகலை.)

புலிநடலை—ஆனைத்தடிப்பு.(வைத்தியபரி.)

புலிப்பாணி-போகரிஷியின்மாணுக்கராகிய சித்தர்; இவர்: புலியை வசப்படுத்தினமையாலு நீரைத்திரட்டிக்கையிற்கொண்டமையாலு மிப் பெயர்பெற்றனர்.(வைத்தியஞ்சாலமிவைகளில் வல்லவர். (அபிதாந.)

புலிப்பொறிப்போர்வை—புலியினதுவலியையுடையகவசம். (உ - ம்.) "புலிப்பொறிப் போர்வைநீக்கி" (சிந். நாமக. ௨௩௭.)

புலிபம்—பொன்னுவிரை. (மலையக.)

புலிமுகச்சிலந்தி—ஒரு வட்டசெந்து. (வழக்குண்டுபோலும்.)

புலிமுகப்பூச்சி-ஒருபூச்சி; அது: புலிமுகச் சிலந்தியென்பர்.

புலிமுநி — வியாக்கிரபாதமுனிவர். (உ - ம்.) "தெரிவுறநீடும்புலிமுனியோனும்" (கோயிற்பி. நடரா. ௩௫.)

புலியுகிர்—புலித்தொடக்கி. (மலையக.)

புலியுறுமி— ஒரு பறை. புலியுறுமுவதுபோலொலித்தலாலிப்பெயர் பெற்றது.

புலியூர்-சிதம்பரம். (உ-ம்.)"மருவுதல்"பார்.

புலீச்சரம் — திருப்புலீச்சரம். (உ - ம்.) "அருண்மேவும்புலீச்சரமும் - பற்றும்பெருமானையும்" (கோயிற்பு. வியா. ௨௨.)

புலு—பத்து. (உ ம்) வந்துழிக்காண்க.

புலுட்டுதல்—கருக்குதல். (உ - ம்.) "வழக்குண்டுபோலும்.

புலுட்டை—
புலுண்டல் —
புலுண்டுதல்— } தழைவற்றது. (வழக்குண்டுபோலும்.)

புலுதம் — 1. அளபெடை. (யாப். காரி. உறுப்பிய. க. உரை.) 2. ஒற்றெழுத்து. (சூ. நிக. ௧௦: ௩௧.) 3. காலதசப்பிரமாணத்தொன்று; அஃது: இலகு மூன்றுகொண்டது.

புலை —1. அசுத்தம். (மணிமே.) 2. ஊன். (பிங்கல. ௧எ௫.) 3. பறையன். (உ - ம்.) "நலமென்றுபுலைமலமருந்துஞ்சூகரமாய் வருவன் (சிவரக பசாசுமோசக.௧௧.) 4. புன்மை, தாழ்வு. (உ-ம்.) வந்துழிக்காண்க. 5. பொய். (உ - ம்.) "கள்ளங்கொலைகட்புலைகாமமென்றைந் தும மற்முர்க்கு" (அரிச்ச. நாட். ௬.)

புலைச்சி—1. எவட்சாரம். (வைத்தியபரி.) 2. புலைப்பெண். (உ-ம்.) "கண்ணில்லாளொரு புலைச்சி" (பிரமோ. காண். ௩: ௩.)

புலைச்சேரி—பறைச்சேரி; (உ-ம்.) "அவ்வாறுசெறிமனைகள்புலைச்சேரிசுடுகாடாகும்" (சிவரக. பசாசுமோசந. ௨௨.)

புலைஞர்-1. சண்டாளர். (சூ. நிக. ௨: ௩௬.) 2. பறையர். (வழக்.)

புலைத்தனம்—1. கொலைக்குணம். 2. புன்குணம். (1, 2-வழக்.)

புலைத்தி-புலைமகள். (உ-ம்.) "முருகுமெய்ப் பட்டபுலைத்திபோல" (புறநா. ௨௫௯.)

புலைத்தொழில்— 1. கொலைத்தொழில். 2. புன்றொழில். (1, 2-வழக்.)

புலைப்பாடி—புலைச்சேரி (பெரியபு. திருநாளைப். ௬.)

**புலைமகள்**—புலைப்பெண். (வழக்.)

**புலைமகன்**—புலையன். (வழக்.

**புலைமை**—புலைத்தன்மை, கீழ்மை. (உ-ம்.) "புறங்கடைநின்றான்செய்தபுலைமை" (திருவிளை. அங்கம். கூ.)

**புலையர்**—1. கீழ்மக்கள். (வழக்.) 2. சண்டாளர். (உ-ம்.) "பிணங்கள்சுடுங்கடும்புலையர்" (அரிச்ச. மயாந. ௬௫.)

**புலையன்**—1. கீழ்மகன். (வழக்.) 2. சண்டாளன்; இவன்: பார்ப்பனத்திவயிற்றிற்சூத்திரனுக்குப்பிறந்தபிள்ளை. (உ-ம்.) "அந்தணர்கந்திதோளையணைதலுமவனப்போது-வந்தவன்புலையன்" (அருணகிரிபு. வலம்பு. கககை.)

**புலோமசித்து**—இந்திரன். புலோமன் என்னும் அசுரனைச்செயித்தவன்.

**புலோமசை**—இந்திராணி; இவள்: புலோமன்குமாரி. (உ-ம்.) "பொன்னவிர்திதலைமுலை சுமந்தொல்கும்புலோமசை" (கூர்மபு. பிரகிருதி. க.)

**புலோமன்** — 1. இந்திராணியின்றந்தை. (உ-ம்.) "புலோமசை"பார். 2. ஒருதாநவன்; இவன்: இந்திரனாற்கொல்லப்பட்டவன்.

**புலோமை**—1. ஒரு அசுரன். 2. காசிபன் மனைவி. (அபிதாநசிந்.)

**புவநசம்**—புவநத்திற்பிறந்தது. (சி-லி. ஞாந. அ: உரை.)

**புவநம்**—1. உலகின்பொது. (உ-ம்.) "புவநமலிபோகங்கள்பொருந்தமருந்தவம்புரிந்தால்" (கோயிற்பு. வியாக். ச.) [பிருதிவிதத்துவத்தில் நூற்றெட்டு, அப்புதத்துவத்தில் எட்டு, தேயுதத்துவத்தில் எட்டு, வாயுதத்துவத்தில் எட்டு, ஆகாயதத்துவத்தில் எட்டு, தன்மாத்திரையில் நான்கு, கன்மேந்திரியத்தில் ஒன்று, ஞானேந்திரியத்தில் ஒன்று, மநத்தில் ஒன்று, அகங்காரத்தில் ஒன்று, புத்தியில் எட்டு, பிரகிருதியில் எட்டு, புருடனில் ஆறு, இராகத்தில் ஐந்து, நியதிமுதலியதத்துவத்தில் எட்டு, மாயையில் எட்டு, சுத்தவித்தையில் ஒன்பது, ஈசுவரத்தில் எட்டு, சாதாக்கியத்தில் ஒன்று, சத்தியில் ஐந்து, சிவத்தில் பத்து ஆகப்புவநங்கள் இருநூற்றிருபத்துநான்கென்ப. (சி. சி. அ: எ, அ, கூஉரை.] 2. நீர். (தைல. தைலவ. கஉகூ.) 3. பூமி. (1, 3-பிங்கல. ௬௩௬௬.)

**புவநாத்துவா**—ஆறத்துவாக்களிலொன்று. (சி. பி. கை. ௬.)

**புவநி**-பூமி. (உ-ம்.)"புவநிமாந்தருக்கின்னருள்சுரந்திடும்பொறையால்" (பிர-காண்.௪௫:௫.)

**புவநை**—ஒரு சத்தி, பார்வதி. (காஞ்சிப்பு. நகரப். ௬௬.)

**புவர்லோகம்**—புவலோகம். (வழக்.)

**புவலோகம்** — சந்திரசூரியர் முதலியோர் வசிக்கும்பதம். (உ-ம்.) "புவலோகங்கடந்து [illegible] போய்ப்புண்ணியருக்கெண்ணிறந்தபோகமூட்டும்" (திருவிளை. மலயத்துவச. ௨அ.)

**புவன்**—சிவன். (உ-ம். "பிரானை"பார். [தானேயுண்டானவன் என்றபடி.]

**புவி**—1. தேர். (உ-ம்.) "வகத்தநுவோடுக்தீயோன்கதுமெனப்புவிக்கணுற்றான்" (கந்தபு. சூரபன். வதை. ௨௬௪.) 2. பிருதிவிதத்துவம். (வை தி. அகூ.) 3. பூமி. (உ-ம்.) "[illegible] யைமுன்போனிலைபெறநிறுவிற்றன்றே" (கூர்மபு. அந்தகா. ௬.)

**புவிந்தவிருக்கம்**—பெருவாகை. (வைத்தியபரிபா.)

**புவிபீநு**-தண்ணீர்விட்டான்.(வைத்தியபரி.)

**புவியாடம்**—இரசகர்ப்பூரம்.(வைத்தியபரி.)

**புழது**—மலைவெருகு. (உ-ம்.) "அழுந்துபட்டலமரும்புகழமல்சாரல்" (மலைபடு. ௨கக.)

**புழப்பு**—பொன்னாவிரை. (வைத்தியபரி.)

**புழல்**—1. உட்பொய். (உ-ம்.) "பூழிபுசம் புழற்காளாம்பி" (சிறுபாண். ககூச.) 2. சலதாரை.(வழக்குண்டுபோலும்.) 3. துளை. (உ-ம்.) "புழற்றலைப்புகர்க்கலையுருட்டி" (புறநா. ௪௫௨.) 4. துளையுடைப்பொருள். (சூ. நிக. அ: ௩.) 5 மீன். (பிங்கல. ௨௬௨எ.)

**புழு**—1. கிருமி. (உ-ம்.) "காயமெலாம்புழுநெளியக்கவித்தபுண்ணும்" (பிர. காண். ௬: ௨.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

**புழுக்கம்**—1. உட்டணம். 2. பொருமை. (1, 2-வழக்.)

**புழுக்கல்**—1. அரிசி. (உ-ம்.) "செம்பொன் வண்ணப்புழுக்கலாகிவிர்ந்தசோறு" (திருவிளை. நாட். ௬௨.) [தொழிலாகுபெயர்.] 2. அவித்தல். (வழக்.) 3. சோறு. (உ-ம்.) "குய்யுடைப்புழுக்கல்" (கந்தபு. மார்க். ௪௬௧.) உணவுமென்பர். சிந்தாமணியில். 4. மூத்திரைப்பண்டம். (உ-ம்.) "மோதலை"பார்.

**புழுக்கு**—1. அவிப்பு. 2. இறைச்சி. (உ-ம்.) "யாமைப்புழுக்கின்" (புறநா. ௨௧௨.) 3. குழம்பு. (பெரும்பா. ௧௯௫. உரை.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. புழுக்கியவுணவு. (உ-ம்.) "[illegible] யேற்றுமின்புழுக்கே" (பதிற்றுப். [illegible]) [மலைநாட்டுவழக்கு.]

**புழுக்குத்தல்**—புழுவரித்தல். (வழக்.)

**புழுக்குத்தி** — கொண்டலாத்தி, ஒருகுருவி. (வழக்.)

**புழுக்குத்துதல்**—புழுவரித்தல். (வழக்.)

**புழுக்குதல்**—அவித்தல். (வழக்.)

புழக்கை—1. அடிமை. (வழக்.) 2. புழுக்கு தல். (ஐ-தொழிற்பெயர்விகுதி.

புழக்கைச்சி—அடிமைப்பெண். (வழக்.)

புழக்கையன்—அடிமை. (வழக்.)

புழக்கொத்தி—புழுக்குத்தி.

புழக்கொல்லி—ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

புழகு—1. அம்புக்குப்பி. (பிங்கல. கருசஉ.) 2. காவிப்புழுகு. (உ-ம்) "ஒவில்கருப்பூரங்குங்குமம் புழுகுசந்தனக்காப்புடனேசாத்தி" (சிவரக. ரசாசமிமாசங. கக.)

புழுகுசம்பா—ஒரு நெல். (வழக்.)

புழுகுப்பூனை — நாவிப்பிள்ளை. (தனியூர்ப் புராணம் பாயிரத்திலறிக.)

புழுங்கல் — 1. உட்டணமாதல். 2. சினக் குறிப்பு. (உ-ம்.) "புற்று"பார். 3. புழுக்கின தானியம். (1, 3-வழக்.)

புழுங்கலரிசி—அவித்தநெல்லரிசி. (வழக்.)

புழுங்குதல்—1. அவித்தல். 2. உட்டணித் தல். 3. புழுங்கல். சினக் குறிப்பு. (பிங்கல. கஅளச.) 4. பொய்யவிதல்செய்தல். 5. பொருமைப்படல். 6. மநங்கொதித்தல். (உ-ம்.) "வெங்கணைவிடுத்துநின்றெதிர்புழுங்கினான்" (கூர்ம பு. தக்க. வமி. டுஎ.) 7. வருந்தல். (இராமா. சரன்வதை. உ.) (1, 2, 4, 5-வழக்.)

புழுத்தல் — 1. புழுத்துப்போதல். 2. புழுவுண்டாதல். (1, 2-வழக்.)

புழுதி—பராகம், துகள். (சூ. நிக. சு: உ௦.)

புழுப்பகம்—மூக்கிரட்டை. (வைத்தியபரி.)

புழுப்பகை—வாய்விளங்கம். (தைல. தைலவ கூசு.)

புழுப்பு—புழுத்தல். பு-தொழிற்பெயர்விகுதி.

புழுமேய்ச்சல்—
புழுமேய்தல்—
புழுவெட்டு—
புழுவெட்டுதல்—
} புழுவரித்தல். (வழக்.)

புழை—1. உட்டுளை. (உ-ம்.) "புழைக்கை" (பிங்கல. உஉஅச.) 2. எவறை. (சிலப்.) 3. துவாரம். (உ-ம்.) "புண்ணிலாம்பெரும்புழையிற்கனனுழைந்தாலெனா" (இராமா. கையடை. கக.) சிறியவழி. என்பர் மணிமேகலையில். 4. வயலிற்கடைமடை. (உ-ம்.) "மழைக்குரலெனமயிலகவவார்செனெற், புழைக்கடைப் புனல லைத்தொழுகும்பொற்பிற்றே" (சிங்.கஙக.நிஅ.)

புழைக்கடை—வயலிற்கடைமடை. (சிந்தா.)

புழைக்கை—1. துதிக்கை. (உ-ம்.) "யாளிகரிபுழைக்கைமுகந்தொன்றற்சொன் றாட்டிபூட்டி" (திருவிளை. இந்திரன்பழி. எஉ.) 2. யானை. (உ-ம்.) "புல்"பார். 3. யானையாளி. (ஆ. நி. கூக.)

புள்—1. அவிட்டநாள். (உ-ம்.) 'புகருடைவாரத்துட்புட்பனைபூசமுரோகிணியும்'(விதாந. குண. சு.) 2. கணந்துட்புள், ஒரு பறவை. (சிலப்.) 3. பறவைப்பொது. (உ-ம்.) "புள்ளலம்பிய" (அரிச்ச. நாட்டு. உக.) 4. மதுபானம். (பரிபா.) 5. வண்டு. (உ-ம்.) "புள்ளார்மலர்பொழில்சூழ்தணிகேசன்" (தனிப்பா. 2-ஆம் பாக. சசசக.) 6. வினை. (உ-ம்.) "புட்கைபோகியபுன்றலைமகாரோடு" (மலைபடு. உருக.) 7. வாஸ்வமூகூர்த்தம். (உ-ம்.) "அரண்பாம்பநுடமகம் புட்புனலாடி" (விதாந. குண. எக.)

புள்ளடி—1. அரதனக்குற்றமைந்தனுளொன்று. (உ-ம்.) "கீற்று"பார். [பறவையின்பாதவடிவுபோலிருப்பதென்பது,காகபாதமென்பதுமிது.] 2. உரைகல். 3. ஒரு பூடு. 4. புள்ளின் பாதம். (2, 3, 4-வழக்.)

புள்ளம்—1. அரிவாள். (உ-ம்.) "புள்ளங்கள் சூற்சங்கிற்றீட்டுவார்" (அரிச்ச. நாட். சரு.) 2. கொடுவாள். (பிங்கல. கருருஅ.)

புள்ளரசு—கருடன். (உ-ம்.) "கடவுளவிர் சுடமேற்கட்செவியஞ்சாதே - படர் சிறைய புள்ளரசைப்பார்த்து" (நன்னெறி. கூ.)

புள்ளி—1. அரதநக்குற்றமைந்தனுளொன் றாகிய,விந்து. (உ-ம்) "தராசம்"பார். 2. ஆய்தம். (யாப். காரிகை. உறுப்பி. க. உரை.) 3. இலக்கப்புள்ளி. 4. ஒற்றெழுத்து. (உ-ம்.) "புள்ளியீற்றின்முன்"என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திலறிக. 5. ஒற்றெழுத்து மேலிடும் புள்ளி.(உ-ம்)"புள்ளிவிட்டவ்வொடு"என்னுஞ் சூத்திரத்திலறிக. 6. நண்டு. 7. பல்லி. 8. மதிப்பு, அல்லது உயர்ச்சி. அடையாளமுமாம். (6, 7 வைத்தியபரி.) (3, 8-வழக்.)

புள்ளிக்கணக்கு-மதிப்பிடுங்கணக்கு.(வழ

புள்ளிக்காரன்—பணக்காரன். (வழக்.)

புள்ளிநீர் — சச்சிலம். (உ-ம்.) "புள்ளிநீர் வீழ்ந்தது" (சிங். முத்தியி. அசு.)

புள்ளிமான்—ஒருமான். (வழக்.)

புள்ளியம்—சிறுகுறிஞ்சா. (வைத்தியபரி.

புள்ளிரி—சந்தனம். (வைத்தியபரி.)

புள்ளிவண்டு—கழுதைவண்டு. (வழக்குண்டு போலும்.)

புள்ளு—சிறுபுள்ளடி. (வைத்தியபரி.)

புள்ளுவம்—வஞ்சகம். (சூ. நிக. அ சுஅ

புள்ளுவமகன்—வேடன். (சிந்தா.)

புள்ளுவர்—1. கீழோர். (பிங்கல. அஎஉ. 2. பாலைநிலமாக்கள். (சூ. நிக. உ: கூஎ.) 3. வஞ்சகர். (உ-ம்.) "பொன்னேய்நெய்யொடுபாலமுதுண்டொருபுள்ளுவன்" (நாலாயி. பெரி

யாழ். கூ-ஆம் பத்-தன்னேர். க.) 4. வேடர். "புள்ளுவர்கையினுமுய்யும்புள்ளுள" (சிந். முத்தி. அஅ.)

**புளகப்பால்** — சிறுவாலுளுவை. (வைத்தியபரி.)

**புளகம்**—1. அரிதாரம். (வைத்தியபரி.) 2. கண்ணடி. (உ-ம்.) "செம்பொற்புளகத்திளஞா யிறுசெற்றகோயில்" (சிந். கஙக. ஙககக.) 3. சோறு. (பிங்கல. ஙஅசுஎ.) 4. மயிர்சிலித்தல். (உ-ம்.) "நீர்சொரியாநிற்பக்கண்புளகங் - களங் கந்தர" (ம-ருதி. ருo.)

**புளகித்தல்**—
**புளகிதம்**—
**புளகிப்பு**— } மயிர்சிலிர்ப்பு. (வழக்.)

**புளத**—புளகம். (உ-ம்.) "மயிர்புளகரும்ப" (சிவரக. வரலா. சு.)

**புளப்பாகல்**—சிறுவாலுளுவை. (மலைபக.)

**புளி**—1. அறுசுவையிலென்று. (நன்னூ. உயிரீற்று. உரு.) 2. புள்ளி. (உ-ம்.) "தயிர்ப்புளி மொய்த்ததோணலார்முழுதுமீண்டினர்" (சிந். கோவிந். கரு.) [விகாரம்.] 3. புளியமரம். (உ-ம்.) "மேனிசுந்தரிபரிக்கந்திபுளி" (தல. தைலவ. எஙு.) 4. தெரிநிலைவினைப்பகுதி.

**புளிக்கறி**—புளிங்கறி. (நன்னூ. உயிரீற்று. உரு.)

**புளிக்கீரை**—ஒரு கீரை. (வழக்.)

**புளிச்சகாய்மரம்**—ஒருமரம், புளிச்சற்காய் மரம். (வழக்குண்டுபோலும்.)

**புளிச்சை** — ஒரு செடி. (வழக்.)

**புளிஞ்சோறு** — புளியோதநம். (நன்னூ. உயிரீற். உரு. உரை.)

**புளிஞர்**—வேடர். (சூ. நிக. உ: சுஅ.)

**புளித்தல்**—புளிப்பு. (வழக்.)

**புளிதம்**—தசை. (சூ. நிக. ங: சஅ.)

**புளிந்தயிர்**—புளித்தயிர். (வழக் )

**புளிந்தன்**—வைசியப்பெண்ணைக் காவிஞ லே மன்னன்கூடிப்பெற்றபிள்ளை, வேடன். (உ-ம்.) "நாய்கர்கந்நியைக்காவின்மன்னன் - பொருந்தவந்துதித்தபிள்ளைபுளிந்த னென் று மைக்கும்பேரான்" (சூத. சிவமா. கஉ: கஅ.)

**புளிநடலை**—புளிநறளை. (மலையக.)

**புளினம்** — மணற்குன்று, மணற்றிட்டை. (உ-ம். )'இரதத்திரள்புளிநம்'(இராமா.கர.கூச.)

**புளிநர்**—வேடர். (உ-ம்.) "புடைசூழ்ந்தார் புளிநரே" (திருவிளை. மாபாதக. கஙு.)

**புளிநறளை**—புளிமதுரை. (வைத்தியபரி.)

**புளிப்பு** — புளிக்கை, ஒருசுவை. (உ-ம்.) நன்னூ-சுவைப்புளிமுன்"என்னுஞ்சூத்திரத் திரவுரையிலறிக.

**புளிமதுரை**—புளிநறளை. (மலையக.)

**புளிமா**—1. ஒருமாமரம்; இதன்காய் இருப் பைக்காய்போற் சிறியதாயிருக்கும். 2. நிரை நேராய்வருஞ்சீர்க்குவாய்பாடு. (உ-ம்.) "தேமா புளிமாகருவிளங்கூவிளம்" (யாப். காரிகை. உறு. ச.)

**புளிமாங்கனி** — நிரைநேர்நிரையாய்வருஞ் சீர்க்கு வாய்பாடு. (யாப்காரி. உறுப். ச.)

**புளிமாங்காய்** — நிரைநேர் நேராய்வருஞ் சீர்க்கு வாய்பாடு (யாப். காரி. உறுப். ச.)

**புளிமாதளை**—ஒரு மாதளை. (வழக்.)

**புளிமாநீழல்** நிரைநேர் நேர்நிரை யாய்வருஞ்சீர்க்கு வாய்பாடு. (யாப். காரி. உறுப். ரு.)

**புளிமாந்தண்பூ** — நிரைநேர் நேர்நேராய் வருஞ்சீர்க்கு வாய்ப்பாடு. (யாப். காரி.உறுப்.ரு.)

**புளிமாநறுநிழல்** — நிரைநேர் நிரைநிரை யாய்வருஞ்சீர்க்கு வாய்பாடு. (யாப். காரி. உறுப். ரு.)

**புளிமாநறும்பூ** — நிரைநேர் நிரைநேராய் வருஞ்சீர்க்கு வாய்ப்பாடு. (யாப் காரி.உறுப்.ரு.)

**புளிமீன்** —ஒருமீன். (வழக்குண்டுபோலும்.)

**புளியம்**—ஒருகுறிஞ்சா. (வைத்தியபரி.)

**புளியம்பாசி**—ஒருநீர்ப் பூண்டு. (வைத்திய பரிபா.)

**புளியறுணை**—ஒரு பூண்டு. (வைத்தியபரி.)

**புளியாமணக்கு**—ஒருபூண்டு. (வழக்குண்டு போலும் )

**புளியாரை**—ஒருகீரை. (உ-ம்.) "துரோணம்" பார். (தைல. தைலவ. ருக.)

**புளியோதநம்**—புளிஞ்சோறு; இது நிவே தநச்சாதவகையிலொன்று. (வழக்.)

**புளுகன்**—பொய்யன். (வழக்.)

**புளுகு**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பொய். (வழக்.)

**புளுகுதல்**—பொய்சொல்லுதல். (வழக்.)

**புற்கசர்** — ஒரு இழிந்தசாதியர். (கூர்மபு. பொதுவிதியுரை. கஙு.) நிஷாதனுக்குச் சூத்தி ரப்பெண்ணிடம் பிறந்தவர்; இவருக்குவேலை கல் வியெலி முதலியனபிடித்தல் தொழில். (அபி தாநசி.)

**புற்கம்**—1. குறை. (உ-ம்.) வக்துழிக்காண்க. 2. புல்லறிவு. (உ-ம்.) "கற்பக்கழிமடமஃகுமட மஃகப்-புற்கந்தீர்ந்திவ்வுலகிற்கோ ளு ண ரு ம்" (நா-க. உஎ.)

**புற்கலம்**—உடல். (உ-ம்.) "பூதமுதற்சாத கத்தாம்புற்கலத்தின்" (சிலப். அரங்கே. உக. உரை.)

புற்கலன் — 1. உயிர். (சூ. நிக. உ: ௬௦௫.) 2. பூதாதியாங்காரம். (உ-ம்.) "அபிமானம்"பார். (கூர்மபு. பிரகிருதி. அ.)

புற்த—1. கபிலநிறம். (சூ. நிக. கக: ககர வெ. கூ.) 2. குறை. (உ-ம்.) வந்தழிக்காண்க.

புற்தநுவி—ஒருவகைப்பட்சி. (வழக்.)

புற்கெனல்—1. அந்திப்பொழுதின்குணம் என்பர். 2. புகர்நிறக்குறிப்பு. (சூ. நிக. கக. ககர வெ. கூ.)

புற்கை — மிக்கநீராலடப்பட்ட உணவு. (உ-ம்.) "நெடுநீர்ப்புற்கைநீத்தனம்வரற்கே" (புறநா. கூச.) இது கூழ் என்பர்.

புற்கொடி—சுரைக்கொடி. (மலையக.)

புற்கோரை—ஒரு புல். இதனைப் புல்லாங் கோரையென்றுங்கூறுவர்.

புற்பதி—1. பனை. (மலையக.) 2 வாழைக் கிழங்கு. (உ-ம்.) "இஞ்சி"பார். (தைல.தைலவ. கஅ.)

புற்பாய—புல்லினுற்செய்தபாய். சாப்பை என்பர் நிகண்டில். (வழக்.)

புற்பிடி—காசையென்னுமொருவகைப்புல். (பிங்கல. உகூகக.)

புறிபு—முல்லை. (மலையக.)

புற்புதம்—நீர்க்குமிழி. (உ-ம்.) "பரவை"பார். (திருநூற். கூ.)

புற்போதி—பூவரசு. (மலையக.)

புற்றப்—புற்று. (ஐங்குறு.)

புற்றஞ்சோறு—புற்றும்பழஞ்சோறு.

புற்றம்பழஞ்சோறு— கறையான்கூடு. (வைத்தியபரி.)

புற்றளி—1. அரவம். 2. பனை. (மலையக.)

புற்றீப்பு—ஈசலான். (வைத்தியபரி.)

புற்று—1. கன்னப்பற்று. (வழக்.) 2. வன்மீகம். (உ-ம்.) "புற்றிடங்கொண்டபுராதனனை" (அப்பரியபு. தடுத்தாட். கஉ௫.)

புற்றுக்குதைச்சி—புற்றுஞ்சோறு. (வைத்தியபரி.)

புறக்கணித்தல்—, புறக்கணிப்பு— } வெறுப்புற்றுநோக்கல், அசட்டையாய் வேறு கருதியிருத்தல். (வழக்.) திரியப்பார்த்தலென் பர் சிந்தாமணியில்.

புறக்கரணம்—புறக்கருவி.

புறக்கருவி—தூலதேகசம்பந்தமாகிய ஆன் மாவுக்குரிய வெளிக்கருவிகள்; அவை: தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிரெனப்பிருதிவியின் கூறு ஐந்தும், நீர், உதிரம், மச்சை, மூளை, சுக்கிலமென அப்புவின்கூறு ஐந்தும். ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பலெனத் தேயுவின்கூறுஐந்தும். ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தலென வாயுவின்கூறு ஐந்தும். குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியமென ஆகாயத்தின்கூறு ஐந்தும். பிருதிவியின் வழியவான இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினியென நாடிகள் பத்தும் [வாயுவின் வழித்தான பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயனென வாயுக்கள் பத்தும். ஆகாயத்தின்வழித்தான அர்த்தவேடணை, புத்திரவேடணை, உலகவேடணையென ஈடணைமூன்றும். வாக்காதியின் வழித்தானவசனம், கமனம், தானம், விசார்க்கம், ஆநந்தமென ஐந்தும். பிரகிருதியின்வழித்தான சாத்துவீகம், இராசதம், தாமதமெனக் குணம் மூன்றும். விந்துவின்வழித்தானசூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகாரியென வாக்குநான்குமாகிய அறுபதுமாம். (கட்.கொத்.)

புறக்காழ்—1. புறவயிரம். (வைத்தியபரி.) 2. பெண்மரம். (சூ. நிக. ச: ௫ள.)

புறக்கூத்து —பொதுவியலாகிய கூத்து. (மணிமே.)

புறக்கொடை—தோற்றுப் பின்காட்டிப்போதல். (வள். எகூகூ. பரி.)

புறகிடல்—புறங்கொடுத்தல். (உ-ம்.) "அன்னேனுக்குப்புறகிட்டகன்றேடும்" (திருவிளை. வரகுண. கரு.)

புறங்கடை—1. தலைவாயில். (உ-ம்.) "புறங்கடையதாகும்பொருள்" (நீதிநெறி. கூச.) 2. பின்னிடத்தோன். (பத்துப்பா.)

புறங்காட்டல்—1. தோற்றோடுதல். (உ-ம்.) "புறங்காட்டிப்போங்காட்டில்" (கோயிற்பு. பாயிர. எ.) 2. முதுகுகாட்டிப்படுத்தல்; இது: கோவைத்துறைகளினொன்று.

புறங்காடு—இடுகாடு. (சூ. நிக. ௫: ௫௧.)

புறங்காணுதல் — தோற்றோடச்செய்தல். (வழக்.)

புறங்காத்தல் — பிறர்வருந்தாமற் காத்தல். (உ-ம்.) "குடிபுறங்காத்தோம்பிக்குற்றங்கடிதல்". (வள். ௫௪௧.)

புறங்காப்ப—காப்ப. (சிந்தா.)

புறங்கால்—புறவடி. (வழக்.)

புறங்கூற்று—முன்னன்றிப்புறத்தே இகழ்ந்துகூறுமொழி. (சிவஞானபோ. அவையட. சிற்.)

புறங்கூறல் — பிறரைக் காணுதவிடத்து இகழ்ந்துகூறுதல். (வை-நீ. கசகூ.)

புறங்கை — உள்ளங்கைக்குப் புறம்பானது. (உ - ம்.) "புல்லறிவோடுபுறங்கையைநக்குதல் போலாமால்" (காசிகா. ௫: கூ.)

**புறங்கொடுத்தல்** — 1. எதிர்முகமாகாது போதல். (உ - ம்.) "நாணென்னுநல்லாள்புறங் கொடுக்கும்" (வள். கஉசு.) 2. தோற்றுத்திரும் புதற்கு முதுகுகொடுத்தல். என்பர்.

**புறச்சத்தாநுவேதம்**—சச்சிதாநந்தசுவரூப மாவதே பிரமமெனச்சிந்திப்பது. (உ-ம்.)"இனந் தபுறச்சத்தாநுவேதமதுகிளப்பில், சச்சிதாநந்த வுருவாகுவதேபிரமந்தானெனவேதியா கித்த லதுவாகுமென்க" (வேதா-சூ. கசக, கருய.)

**புறச்சமயம்**—நால்வகைச்சமயங்களி லொன்று; அது: தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். (கந். நவ. உ.) [தார்க்கிகர் முதற் பாஞ்சராத்திரியீறாகிய அறுவரும், வேதம் பிரமாணமெனப் பொதுவகையாற் கொள்ளினும் அவருட்டார்க்கிகர் தன்னுற்பிரமாணங் கொள்ளாமையானும் வேதப்பொருளோடு மூரணிப் பொருட்டன்மை கோடலானும், மீமாஞ்சகர் கருமகாண்டமாகிய வேதமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு ஞானகாண்டமாகிய உபநிடதங்களை யிகழ்தலானும், ஏகான்மவாதிகள் ஞானகாண்டமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு கருமகாண்டத்தை யிகழ்தலானும், ஏனை மூவரும் வேதவாக்கியங்களிற் றத்தமதத்திற்குப் பொருந்துவன மாத்திரையே எடுத்துக் கொண்டு ஏனையவற்றிற்குப்பிரமாணங் கொள்ளாமையானும் வேதப்புறமாகிய நூல்களைப் பிரமாணங்கோடலானும்,இவ்வறுவரும்சிவாகம நிந்தகராதலானும் இவர்சமயம் புறச்சமயமென வேறுவைத்தெண்ணப்பட்டன. (சிவஞானபா. சு.)]

**புறச்சுட்டு**—அ, இ, உ என்னு மூன்றெழுத்துக்களும் அக்கொற்றனென்றாற்போல மொழிக்குப்புறத்தே சுட்டுப்பொருளில் வந்து நிற்பது.

**புறச்சுவர்தீற்றல்** — சொந்தமானவர்களை விட்டுப் பிறனுக்குபகாரம்பண்ணுதற்குக் கூறு முபமானமானபழமொழி. (பாரத. சூதுபோர். இ.)

**புறச்சேரி** — இழிகுலத்தாரிருக்குந்தெரு. (உ-ம்.)"பறழ்ப்பன்றிப்பல்கோழி,யுறைக்கிணற் றுப்புறச்சேரி" (பத்துப்பா.)

**புறஞ்சிறை** — 1. புறநகர். (மணிமே.) 2. மாளிகைமதிற்புறம். (உ-ம்.) "புறஞ்சிறைவயிரியர்க்காணின்" (பதிற்றுப்பத்து. கூச: அ.) 3. வேலிப்புறம். (புறநா.)

**புறஞ்சேரி**—புறநகர். (மணிமே.)

**புறணி** — 1. குறிஞ்சிநிலம். 2. தோல். 3. புறங்கூறல். (வழக்.) 4. புறம். 5. மரப்பட்டை. (பிங்கல. கூஅசுக.) 6. முல்லைநிலம். (1,2,4,5-சூ. நிக. கக: நகரவெ க.)

**புறத்தவன்**—ஐயனார். (சூ. நிக. க: உஅ.)

**புறத்தான்**—புறம்பானவன். (வழக்.)

**புறத்தி**—புறம்பானவள். (வழக்.)

**புறத்திணை**—வெட்சி முதலிய எழுவகை யொழுக்கம். எல்லாராலுமனுபவித்துணரப் பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுவதாய் அறனும் பொருளுமென்னு மியல்பினையுடையதாய்ப் புறத்தேநிகழு மொழுக்கமென்க. புறம்-வெளி. திணை-ஒழுக்கம்.

**புறத்தியான்**—அந்நியன். (வழக்.)

**புறத்திருசியாநுவித்தம்**—பாகிய திருசியாநுவித்த சவிகற்பசமாதி; இது: "கடாதிவிடயத் தினிலொன்றினைக்...........விடாதநுதாகஞ் செய்திடுதலேபுறத் துமெய்த்திருசியாநுவேதப் பெயர்கொள்கின்ற — கெடாததொருசவிகற்ப சமாதியெனலாகும்"என்னும்,(வேதா.சூ.கசக-ஆங் செய்யுளாற்பெறப்படும்.

**புறந்தரல்**— } 1. ஓம்பல். (உ-ம்.) "வெயில்
**புறந்தருதல்**— } புறந்தருஉ மின்னவியக் கத்து" (மலைபடு. கூஎச.) 2. தோற்றல்.(வழக்.)

**புறந்தருநர்**—பாதுகாப்பார். (புறநா.)

**புறந்தருவார்**—பாதுகாக்கிறவர்கள். (உ-ம்.) "புறந்தருவார்போற்றிசைப்பப்பொற்கொடியார் வளர்கின்றார்" (பெரியபு. மானக்கஞ். கஉ.)

**புறந்தாள்**—புறங்கால். (வழக்.)

**புறநகர்**—1. அகநகர், இடைநகர், புறநகர் எனப்பகுத்துக்கூறு மூன்றிலொன்று; இதற்குப் புடைநகரென்றும்பேயர். (காஞ்சிப்.நகரப். உரு.) 2. நகர்ப்புறம். மருஉ முன்பின்னாக மருவியதென்க.

**புறநடம்** — வென்றிக்கூத்துமுதலானவை. (சிலப்பதி.)

**புறநானூறு** — எட்டுத்தொகையு ளெட்டாவது தொகை; கடவுள்வாழ்த்துட்பட நானூறுசு வற்பாக்களையுடையது. அப்பாக்களுள் முதற் செய்யுளாகிய கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடிய பெருந்தேவனாராலும் மற்றை முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பது பாக்களும் முரஞ்சூசி யூர்முடிநாகராயர்முதற் கோவூர்கிழாரிறுதியாக வுள்ள புலவர்பலராலு மியற்றப்பட்டுள்ளன.

**புறநிருவிகற்பசமாதி**—சவிகற்ப சமாதிக ளிரண்டனையும் அப்பியசித்த பலத்தினாலுண் டான பிரமாநந்தத்தில் மனஞ்சென்றொடுங்கிச் சலனமின்றி அலையில்லாத சமுத்திரம்போ லிருப்பது; இது: "இச்சமாதிகள்பயின்றவலியி னாற்றோன்றுமிரும்பிரமாநந்தநிலைதனின் மனஞ் சென்றொடுங்கி-நிச்சலமாயலையில் கடல்போ

விருத்தல்புறத்துநிருவிகற்பசமாதியாம்" என்னும், (வேதா. சூ. கருo-ஆஞ்செய்யுளாற்பெறப்படும்.)

புறநிலை—1. ஒரு பிரபந்தம்; அது: நீதொழுதெய்வ நிற்புறங்காப்ப வாழ்வையென வெண்பா முதலும் ஆசிரியமிறுதியுமாகப் பாடுவது. (தொன்னூல். உஅரு. உரை.) புறநிலைவாழ்த்தென்பதுமிது. 2. தூலஅம்ச கூட்டங்களாகிய இருபத்தைந்துதத்துவம். (த. நி. போ. கoo.)

புறநிலைமருதம்—ஒருபண். உழைகுரலாய்க் கைக்கிளை குரலாயமேர்செம்பாலை. (உ-ம்.) "அகநிலைமருதமும்புறநிலைமருதமும்" (சிலப். வேனிற். ருஎ)

புறநிலைவாழ்த்து—புறநிலை. (வழக்.)

புறநீர்க்குந்தம்—கண்ணோயுளொன்று. (வழக்குண்டுபோலும்.)

புறநீர்மை—1. ஒருபண்; இது: பள்ளியெழுச்சியிற் பாடற்குரியதென்பர். (சிலப்பதிகா.) (தேவா. சுந்தரமூ. திருவாரூர்ப்பதிகம். அந்தியுந.) 2. வெளிக்குணம். புறம்-வெளி.

புறப்பகை—வெளிப்பகை. (வழக்.)

புறப்படுதல்—1. உண்டாதல். 2. பயணப்படுதல். (உ-ம்) "இப்படிபடைபுறப்படவுலகமுற்றதுகலகமே" (பா... அணிவகு. கரு.) 3 புறத்திலுருவுதல். 4. வெளிவருதல். (உ-ம்.) "ஐயமிடவென்றுகடிதரிசிகொடுபுறப்பட்டு" (கோயிற்பு. பதஞ். உo.) (1, 3-வழக்.)

புறப்பற்று—வெளிப்பற்று; அவை: பெண்டு பிள்ளை பண்டபதார்த்தங்களாம்.

புறப்பணை—முல்லை. (மலையக.)

புறப்பாடு—புறப்படுகை. (வழக்.)

புறப்பி—பனைமரம் (வைத்தியபரி.)

புறப்புறச்சமயம்—நால்வகைச்சமயங்களிலொன்று; அஃது: உலோகாயதம் நால்வகைப் பௌத்தம், ஆருகதம் என அறுவகைப்படும் (சி. சி. உ: எகூ. சிவஞா.) [இச் சமயங்களையுடையார் வேதம் சிவாகமமென்னுமிரண்டையும் நிந்திக்குநாத்திகராதலா லிச்சமயங்கள் புறப்புறச்சமயமெனப்படும். (சிவஞானபா. ரு.)

புறப்புறம்—புறப்பொருளிலே பாடாண் பொதுவியல் என்னுமிரண்டியலுட் கூறப்படுவன.

புறப்பூதம்—உடம்பகத்தன்றிப் புறத்திலிருக்கும் பிருதிவிமுதலியபூதம். (சி. சி. உ: கூகூ. சிவஞா.)

புறப்பெண்டீர்—பரத்தையர். (இறையனு.)

புறப்பேதி—பூவரசு. (வைத்தியபரி.)

புறப்பொருள்—அறம்பொருளென்னுமிருவகைப்பாற்பட்டிருக்கும்பொருள். இதனால் இன்பம் அகப்பொருளாம்.

புறப்பொருள்வெண்பாமாலை—ஒருதமிழ் நூல்; இது: சேரர் பரம்பரையினராகிய ஐயனாரிதனாரென்னும் அரசராலியற்றப்பட்டது. தமிழிலக்கணமைந்தனுட் பொருளின் பகுதியாகிய புறப்பொருளைக்கூறுவது.

புறம்—1. இடம். (உ-ம்.) "பொறிப்புற-மடநடைமஞ்ஞை" (திருமுரு. கூoக.) 2. ஒரேழாம் வேற்றுமையுருபு. (உ-ம்.) "உள்ளகம்புறமில் விடப்பொருளுருபே" (நன். பெயரிய. சரு.) 3. பக்கம். (உ-ம்.) "அசித்தொருபுறமாயொன்றிற்சித்தொருபுறமாய்நில்லாது" (சி. சி. சு: கச.) 4. பின்புறம். (வழக்.) 5. புறப்பொருள். (உ-ம்.) "புரிபுநீபுறமாறிப்போக்கெண்ணி" (கலி. கரு.) 6. புறம்பு. (உ-ம்.) "இல்லின்புறம்போந்தார்" (திருவிளை. வளை. ரு.) 7. முதுகு. (உ-ம்.) "தோள்கரம்புறந்தன்னிலன்னையுந்துணைவர் நால்வருந்தொக்குவைகவே" (பாரத. வேத்திர. உ.) 8. மதில். (பிங்கல. சுஉஅ.) 9. மெய். (உ-ம்.) "பொன்றெளித்தெழுதியன்னபூம்புறம் பசலை மூழ்கி" (சிந். நாமக. கூசஉ.) 10. வீரம். (சூ. நிக. நகரவெ. ரு) 11. வெளி. (புறப்பொ. முகவுரை.) இன்னும் புறம் என்பதற்குச் சிந்தாமணியில் இறையிலிநிலமென்பர்.

புறம்பணை—1. குறிஞ்சிநிலம். 2. நகரத்திற்குப் புறம்பேயணைந்த மருதநிலம். (சிந்தா.) 3. முல்லைநிலம். (1, 3-சூ. நிக. ரு: கூகூ.)

புறம்பயம்—ஒரு திருப்பதி. (உ-ம்) "புறம்பயமதனிலறம்பலவருளியும்" (திருவாச. கீர்த்தி. கூo.)

புறம்பு—1. தனியானது. (வழக்.) 2. பக்கம் (உ-ம்.) "புரந்தரன்முதலாங்கடவுளர்போற்றப் பொலிவதத்திருமலைப்புறம்பு" (பெரியபு. திருமலை. கூ.) 3. புறவிடம். (உ-ம்.) "புறம்புசெய்... பாதகமறுக்குங்கூடற்பகவன்" (திருவிளை. அங்க. கo.) 4. முதுகு. (உ-ம்.) "அன்னையுந், தன்னைப்புறம்பழித்தூநீவ" (கலி. ருக.)

புறம்போக்கு—புறம்போக்குத்தரிசு, வெறுநிலம். (வழக்.)

புறமார்க்கம்—புறக்கூத்து; அது: பெருநடை, பிரமரிமுதலியவாகப் பலவகைப்படும். (திருவிளை. கான்மாறி. கo. உரை.) (சிலப். அரங். கசு. உரை.)

புறமாறல்—கைவிடல். (உ-ம்.) "வாராய்நீ புறமாறவருந்தியமேனியாட்—காரிருட்டுணையாகியசைவளிவலைக்குமே" (கலி. கஉக.)

புறமுழவு—எழுவகைமுழவுகளுள் ஒன்று; அஃது: அதமக்கருவியாகிய கணப்பறைமுதலாகப்பலவகைப்படும். (சிலப். அரங்கே. உஎ. உரை)

புறவடி—புறங்கால். (வைத்தியபரி.)

புறவணி — 1. குறிஞ்சிநிலம். 2. முல்லைநிலம். (பிங்கல. ருஅஎக.)

புறவம்—1. காடு. (வைத்தியபரி.) 2. சீகாழிக்கொருபெயர். (தேவார. திருஞான.) பிரமபுரம் வேணு. 3. புறா (உ-ம்) "பூவைகாள்செங்கட்புறவங்காளாலோலம்" (கந்தபு வள். ருச.) 4. முல்லைநிலம். (உ-ம்) "செழும்-புறவமேய்ந்ததுபூம்புனலாதரோ" (அரிச்ச. நாட். சஅ)

புறவயிரம்—1. ஆண்மரம். 2. வெளிவயிரம். (1, 2-வைத்தியபரி.)

புறவரி—தலைநெடனலையாது புறத்து நின்றுநிலவது. (சிலப்.)

புறவாயம்—சன்னேவு முதலியவற்றிற்குச் சூழப்பூச மருந்துப்பூச்சு. (வழக்.)

புறவிடை—புறத்திற்செல்லுதற்குப் பெறும் விடை. (உ-ம்.) "மறுவலும்வணக்கிப்புறவிடைகொண்டு" (தணிகை. புராணவ. எரு)

புறவிதழ்—புல்லிதழ் (வைத்தியபரி.)

புறவீச்சு—ஒரு சந்நி. (வழக்.)

புறவீச்சுச்சந்நி—புறவீச்சு. (வழக்.)

புறவு—1. இளங்காடு. (உ-ம்.) "செழுந்தேன்றிகழ்பொழிற்றில்லைப்புறவிற் சேறுவகுத்த" (திருக்கோ. கசரு.) 2. காடு, சிறுகாடு. (உ-ம்.) "மண்ணணிக்கரையின் வளர்புறவின்மாடும்" (பெரியபு. சண்டே. உஎ.) 3. குறிஞ்சிநிலம். (சூ.நிக. க: கூகூ.) 4. புறா. (உ-ம்.) "மயிக்களேர்த்தினியை மாண்புறவை" (கந்தபு. வள். கருo.) 5. முல்லைக்கொடி. (ஐங்குறு.) 6. முல்லைநிலம். (உ-ம்.) "புறவினறம்புதுமலரின்" (பெரியபு. திருநா. கூ.) 7. விலங்கின்கூட்டம். (வழக்.)

புறவுரை—பாயிரம். (உ-ம்.) "முகவுரை பதிகமணிந்துரை நூன்முகம்—புறவுரை தந்துரைபுனைந்துரைபாயிரம்" (நன். க.)

புறவேலை — சக்கிரவாளத்தைச் சூழ்ந்த சமுத்திரம். (வேலை-கடல்.)

புறன் — 1. இகழ்ந்துகூறமொழி (உ-ம்.) "புனைநுகையைசேளாம்புறன்" (சிவஞானபோ. அவையடக்.சிவஞா.) [புறங்கூற்றுமொழியெனவும் பொருள்படும்.] 2. புறம். (உ-ம்.)"உள்ளும் புறம்புகலாதே" (திருவிளை. அட்ட. உகூ.) 3. முதுகு. சற்றெழுத்துப்போலி.

புறநடை — புறத்து அடையாய்வருவது. (உ-ம்.) "இஃதுஇந்நூலிற்குப்புறனடையுணர்த்திற்று" (நன். பொது. எo. இராமா.) புறனடைச்சூத்திரம்.

புறனழிந்தல்—ஒருவன் காணாதசவழிபிகழ்ந்துரையால் அவன்புகழைபழித்துச்சொல்லல். (உ-ம்.) "புறனழீஇப்பொய்த்துநகை" (வள். கஅஉ.)

புறா—ஒருபுள்; அது. காட்டுப்புறா, தவிட்டுப்புறா, பச்சைப்புறா, பெரும்புறா, மணிப்புறா, மலைப்புறா, மாடப்புறாவெனப் பலவகைப்படும். (உ-ம்.) "சேநம்வெம்பணியொண்புறா" (கந்தபு. சுரம்புகு. எ.)

புறாக்காலி— } ஒரு பூடு. (வழக்குண்டுபோ
புறாமுட்டி— } லும்.)

புன்கண்—1. தரித்திரம். (உ-ம்.) "புன்கணஞ்சி" (புறநா. சகூ.) 2. துன்பம். (உ-ம்.) "புன்கணுற்றரம்பைமாதர்" (அரிச்ச.மயாந.கூ.) 3. நோய். (சூ. நிக. அ: எஎ.)

புன்கம்—சோறு. (உ-ம்.) "சாந்தவிறகினுவித்தபுன்கம்" (புறநா. ககஅ.)

புன்காலி — 1. காயாமரம். 2. பதிரிமரம். (1, 2-வைத்தியபரி.)

புன்கு—1. புன்கமரம். (உ-ம்.) "குங்குமம்" பார். (தைல.தைலவ. கoசு.) 2. புனமுருங்கை. (வைத்தியபரி.)

புன்குமரம்—பொன்னுங்காய்மரம். (வைத்தியபரி.)

புன்குரி—புங்கம்பட்டை. (தைல. அரும்பத.)

புன்குருக்கண்—எருது. (உ-ம்.) 'மேற்பட்டு லண்டிளிறவெனுக்கும்புன்குருக்கண்' (கலி. கoக.) [ஆகுபெயர்.]

புன்சடை—சிறுசடை. (உ-ம்.) "நிமிர்புன்சடைநின்மலனே" (திருநாவு. தேவார. அங்கமாலை.) புன்மை-சண்டுச்சிறுமைகுறித்தது.

புன்செய்—சிறுதானியம் விளைநிலம். (வழக்.) 2. கொல்லை. (புறநா.)

புன்சொல்—எளியசொல். (உ-ம்.) "புன்சொலோறும்" (கந்தபு. அவையட. கூ.)

புன்பயிர்—சிறுதானியப்பயிர். (காஞ்சிப்பு. நாட்டுப். சகூ.)

புன்புலம்—புன்செய். (புறநா.)

புன்மதி—1. எளியபுத்தியையுடையோன். (உ-ம்.) "புரோசனப்பெயர்ப்புன்மதி தன்னை கொன்று" (பாரத. திரௌபதி. கரு.) 2. பாலசந்திரன்; இது "புன்றன்சதிர்மதிபுனையும் பரன்மிகுபொன்னம்பலமதனுள்புக்கான்" என்னும், (கோயிற்பு. திருவிழா. ச—ஆம்) செய்யுளாற் பெறப்படும். புன்மை எளிமையும், இளமையுமுணர்த்தியதென்க.

புன்முறுவல்—மந்தசிரிப்பு. (உ-ம்.) "நிலா" பார்.

புன்மை—1. ஈனம். (உ-ம்.) "புன்மைபாவுந்தீர்த்தோனே" (பாரத. கிருட்டி. கஉ.) 2. மறதி. (சூ. நிக. அ. ருக.)

புன்வங்கம்—சிறுவழுதுணைவேர். (உ-ம்.) "அமுக்கிரி"பார். (தைல. தைலவ. சஉ.)

புன்றலை—1. சிவந்த தலை. (உ-ம்.) "புட்கை போகியபுன்றலைமகாரோடு" (மலைபடு. உருக.) 2. புற்சென்றதலை. (உ-ம்.)"தருவினன்னபுன் றலைமகாரோடு" (மலைபடு. உகஎ.)

புன்றேக்கு—சிறுதேக்கு. (உ-ம்.)"அமிர்தை" பார்.

புன்னறவம்—இஞ்சி. (வைத்தியபரி.)

புன்னறுவம்—சாறணை. (மலையக.)

புன்னுக்கோல்லி — ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

புன்னுகம்—1. புன்னை. 2. கோழிக்கீரை. (1, 2-வைத்தியபரி.)

புன்னுகவராளி—ஒரிராகம். (வழக்.)

புன்னிடா—தகரை. (மலையக.)

புன்னீர்—உதிரம். (வைத்தியபரி.)

புன்னெறி—1. ஈனவழி. 2. பாவநெறி. (உ-ம்.) "புன்னெறியொழுக்கம்பூண்ட" (திருவிளை. யானையெ. ௬௪.)

புன்னை—புன்னைமரம். (உ-ம்.) "மன்றல் செயங்கியின்மாதுபொழிந்திடுபொறிமானை-நின்றலர்புன்னைவிரிந்தபொதும்பரினிலைபாராய்" (சிவரக. கத்தரிப். எ.)

புனக்கல்—தேகக்கல்.

புனஸ்காரம்—வணக்கம். [புரஸ்காரம் என்பதன் விகாரம்.]

புன்காலி—காயாமரம். (வைத்தியபரி)

புனம்—1. காடு. (உ-ம்.) "புனத்தினுங்கடிய கல்லினும்" (திருவிளை. வெள்ளையானை. உக.) 2. குறிஞ்சிநிலம். (உ-ம்.) "புனப்பண்ணைமணி விளைடும்" (பெரியபு. திருநாவு. ௩.) 3. கொல்லை. (பத்துப்பா.) 4. மலைச்சாரலிலுள்ளசோலை. (ப-மொ.) 5. வயல்.

புனமல்லி—காட்டுமல்லி. (வைத்தியபரி.)

புனமுருக்கு—பலாசு. (சூ. நிக. ச: உச.)

புனமுருங்கை — ஒரு முருங்கை. (உ-ம்.) "ஆதொண்டை"பார். (தைல. கஎ.)

புனல்—1. குளிர்ச்சி. (பரிபா.) 2. நீர்.(உ-ம்.) "அலைப்புனன்மருதூர்"(ம-தி. எக.) 3. பகவில் வருமாறும்முகூர்த்தம். (உ-ம்.) "அறன்பாம்பு தடமகப்புட்புனலாடியந்தணன்"(விதான.குணகுண. எ௬.) 4. பூராடம். (உ-ம்.)"பாதம்புனல் பத்தின்" (விதான. குணகுண. உ௬.)

புனல்வேந்தன்—வருணன். (சூ.நிக.ச:௫௪.)

புனலுப்பு—பூரணதியுப்பு. (வைத்திய.அநு. அக.)

புனலை — நெய்க்கொட்டான்மரம். (வைத்தியபரி.)

புனவர்—குறிஞ்சிநிலமாக்கள். (சூ. நிக. உ: ௬௬.)

புனற்பாகல்—வாலுளுவை. (வைத்தியபரி.)

புனறவம்—சாரணை. (வைத்தியபரி.)

புனனாடன்—சோழன். (உ-ம்.) "புயல்போற் கொடைக்கைப்புன்னாடன்" (தண்டி. ௩௦. உரை.)

புனனாடு—சோணாடு; இது: கொடுந்தமிழ் நாட்டிளென்று. (உ-ம்.) "சீதமலாடுபுனனாடு" (நன். பெயரிய. க௬. உரை.)

புனிசும்—சங்கபாஷாணம். (வைத்தியபரி.)

புனிதமை—உள்ளான். (வைத்தியபரி.)

புனிதவதியார்—காரைக்காலம்மையார். (அபிதாநசி.)

புனிறு—1. ஈன்றணிமை. (உ-ம்.) "புனிற்றிளங் கன்றுதுள்ளி"(பெரியபு.திருவாரூ.உஉ.) 2. புதுமை. (சூ. நிக. அ: ௫௫.)

புனுகு—புழுகு. (உ-ம்.) "தொட்டால்மணக் கும்புனுகுசவ்வாதுகத்தூரியுமே" (தனிப்பா. உ-ஆம்பாக ௬கக.) (வழக்.)

புனை—1. அலங்காரம். 2. அழகு. 3. சிலை. (வழக்குண்டுபோலும்.) 4. தெரிநிலைவினைப் பகுதி. 5. பொலிவு. 6. மூங்கில். (வைத்தியபரி.) 7. விலங்கு (சூ. நிக எ: உக.) (1, 2, 5-பிங்கல. ௬அஎ௬.)

புனைசுருட்டு — சூது, செய்த உபாயமாகிய சூது என்பது கருத்து. (வழக்.)

புனைதல்—1. அணிதல். (உ-ம்.) "கொடி புனைந்தகுகன்"(அரிச்ச.நாட்டு. க௫.) 2. அலங்கரித்தல். (உ-ம்.) "புனைதேர்பண்ணவும்" 3. அழகுசெய்தல். 4. செய்தல்.(உ-ம்.)"வரிமணற் புனைபாவைக்கு"(புறநா. கக.) (2,3-புறநா. கஉ.)

புனைந்துரை — 1. சிறிதினைப்பெருக்கிப் பெரிதினைச்சுருக்கிக்கூறல். ஓரலங்காரம். 2. பாயிரம். (உ-ம்.) "புறவுரை"பார்.

புனைவிலி—உபமானப்பொருள். (வழக்.)

புனைவிலிபுகழ்ச்சியணி — அப்பிரத்துதப் பிரஞ்சாலங்காரம். (குவல. உஎ.)

புனைவுளி — வன்னிக்கப்படுபொருள், உபமேயம்.

புனைவுளிவிளைவணி—பிரத்துதாங்குராலங்காரம். (குவல. உஅ.)

## பூ

பூ—1. அழகு. (சூ. நிக. அ: உ௫.) 2. இந்துப்பு. 3. ஒரு கண்ணோய். 4. கூர்மை. 5. தாமரைப்பூ. (உ-ம்.) "பூவெனப்படுவதுபொறிவாழ் பூவே"(நால்வர்நானமணி.)6. தெரிநிலைவினைப்

பகுதி. 7. பிறப்பு. 8. புகர். (உ - ம்.) "பூநுதலிரும்பிடிகுளிர்ப்பவீசி" (திருமுரு. ௩௦௩.) 9. பூத்தொழில். (உ-ம்) "சில்பூங்கலிங்கத்தள்" (கலி. ௬௫.) 10. பூநீற்றுக்குமுன்றேன்றாங்கதிர். (உ - ம்.) "பகன்முன்மூளைத்தெழுமபூமொழியே" (தைல. சைலவ. ௩.) 11. பூமி. (உ - ம்.) "பூவிற்புனலிற்பொருப்பில்வாழும்" (இராமா. சூர்ப்பந. ௬அ.) 12. பொலிவு.(உ-ம்.) (சூ. நிக. அ: சசு.) 13. மகளிர்சூதகம். (வழக்.) 14. மலர்; அது: கொடிப்பூ, கோட்டுப்பூ, நிலப்பூ, புதற்பூவென நால்வகைப்படும். (உ - ம்.) "குலவுச்சினைப்பூக்கொய்து" (புறநா. கக.) 15. மூப்பு. (4, 7-பிங்கல ௬அஎ௫.) (3, 13-வழக்.) (2, 15-வைத்தியபரி.)

பூக்க—பொலிவதாக. (சிலப்பதி.)

பூக்கஞ்சா—ஒரு கஞ்சா. (வைத்தியபரி.)

பூக்கம் — 1. ஊர். (சூ. நிக ௫: ௬௪.) 2. கமுகு. (சூ. நிக. ச: ௧௦.) 3. மது. 4. மருதநிலத்தார். (சூ. நிக. ௫: ௪௦.) (2, 3-வைத்தியபரிபா.)

பூக்கம்பனம்— } பூமிநடுங்கல். (வழக்.)
பூக்கம்பம்— }

பூக்கனிந்து—பூத்தொழில்முற்றுப்பெற்று. (உ - ம்.) "நோக்குநுழைகல்லாநுண்மையபூக்கனிந்தரவுரியன்னவறுவைநல்கி" (பொருந. அஉ.)

பூக்குதல்—பூத்தல்.

பூகதம்பம்— } நிலக்கடம்பு. (வைத்தியமூ.
பூகதமயம்— } அக.)

பூகதர்—புகழ்வோர். (பிங்கல. அ௬௬.)

பூகதன்—பூமியில்வந்தவன், பூமியிற்பிறந்தவன். (உ.-ம்.) "பூகதனாகியவன்றே" (பாரத. திரௌபதி. ௫உ.)

பூகம்—1. கமுகு. 2. கழுகு. 3. கூந்தற்பனை. (வைத்தியபரி.) 4. திரள். (பிங்கல. உஉ௬௬.) (1, 2-பிங்கல. ௬-எ௬.)

பூகம்பநம்—பூமிநடுங்கல். (வழக்.)

பூகம்பம்—1. அத்தத்தியனின்றநாளுக்கேழாநாள். (உ - ம்.) "பாகஞ்செறிசுடர்மன்னியநாளாதியேழும்பத்தும்.........பூகம்பமுற்கம்" (விதாந. குணகுண. ௬௪.) 2. பூமிநடுக்கம்.

பூகரபம்—கையாந்தகரை. (வைத்தியமூ. அக.)

பூகாம்-1. கையாந்தகரை. 2. நஞ்சு. (1, 2-வைத்தியபரி.)

பூகாகம்—1. அன்றில். 2. கரும்புறு. (1, 2-வைத்தியபரி.)

பூகேசம்—1. ஆலமரம். 2. நீர்ப்பாசி. (1, 2-வைத்தியரி.)

பூகோளசாத்திரம்—புவனமண்டலசாத்திரம். (வழக்.)

பூங்கஞ்சா—பூக்கஞ்சா. (வைத்தியபரி.)

பூங்கணை—புட்பபாணம். (உ.-ம்) "பூங்கணைவேளைவென்றானைநினைத்திலைவடிக்கலின்றான்" (சிவரக. ஞானவாலன். கலியாண. ௪.)

பூங்கதிர்—வெண்கதிர். (வைத்தியபரி.)

பூங்கரும்பு — செங்கரும்பு. (வைத்தியமூ. அக.)

பூங்கலன்—திருப்பூங்கூடை. (உ-ம்.) "பொச்சைதருகுசைப்புல்லும்பொலிசமித்தும்பூங்கலனும்" (கோயிற்பு. இரணி. ௬௬)

பூங்கா—நந்தவனம். (உ-ம்.) "வாழ்ந்தருகுமன்பரெனமன்னுமொருபூங்கா" (திருவாத. திருப்பெரு. க௬.)

பூங்காரம்—மந்தாரம். (வைத்தியபரி.)

பூங்காரை—ஒரு காரை. (வழக்.)

பூங்காவி—ஒரு காவி. (வழக்.)

பூங்குறுணல்—மெல்லியகுறுநொய். (வழக்.)

பூங்குறுநொய்—பூங்குறுணல். (வழக்.)

பூங்கோரை—ஒரு புல். (வழக்.)

பூச்சக்கரம்—1. ஒரு வாணம். 2. பூமண்டலம். (1, 2-வழக்.)

பூச்சாரம்—1. நிலத்தன்மை. 2. பூநீறு. 3. பூவினிரசம். (1, 2, 3-வழக்.)

பூச்சி—செந்து. (உ-ம்.) "அங்நோய்முழுதுஞ்சுடர்ப்பூச்சியாம்" (தைல. தைலவ. ௬௬.)

பூச்சிகாட்டுதல்-வெருட்சிகாட்டுதல். (வழக்)

பூச்சியம்—1. அருமை. 2. இன்மை. 3. பூசிக்கப்படத்தக்கது. (சி. சி. ஞானப்.) 4. பூசித்தல். (உ-ம்.) "ஒப்பரியதவம்புரியுமுனிவருமபூச்சியஞ்செய்முனிவோனுமாகி" (மச்சபு. மச்சா. கக. 5. மேன்மை. (1, 2, 5-வழக்.)

பூச்சியர்—பூசிக்கப்படத்தக்கவர். (சி. சி. க: கஅ. சிவாக்.)

பூச்சியன் — 1. கறுப்பும்வெள்ளையுமானமாடு.(வழக்.) 2. பூசிக்கப்படத்தக்கவன்.(உ.-ம்.) "புரந்தரனேமுன்னுபவிமையோர்க்கெல்லாம்வைப்பெனும்பூச்சியனுகி" (மச்சபு.மச்சா. கக.)

பூச்சு — 1. குற்றமறைக்கை. 2. பூசுதல், மேற்பூச்சு. (உ.-ம்.) "தேசுற்றிடுபூச்சன்பொடுசேர்ப்பார்" (சிவரக. நைமிசா. உ ௩.) 3. வெளிக்காட்சி, பிலுக்கு. (1, 3-வழக்.)

பூசகன்—பூசைசெய்வோன். (வழக்.)

பூசங்கள்—புனர்பூசமும் பூசமும். (உ - ம்.) "பரணியழற்றேர்பூசங்களத்தம்" (விதாந. பஞ்சா. கஎ.)

பூசணம்—ஒட்டடை. (வழக்.)

பூசனை—பூசனை, ஆராதனை. (சூ.நிக.௬:௧௬.)

பூசம்—ஒரு நாள். (உ-ம்.) "நன்னயம்பெறு பூசமுட மாரையும்" (சிவரக. தேவியிமய. கக.)

பூசயம்—கோரைக்கிழங்கு. (வைத்தியபரி.)

பூசல்—1. கழுவல். (நன்னூ. பெயரி. எ. உரை.) 2. தூற்றல். (உ-ம்.) "புன்கணீர்பூசறு..." (வள். எக.) வெளிப்படுதலாம். 3. பூசுதல். (உ-ம்.) "ஆதித்தன்றனைநோக்கிப்பூதிபூசல்" (சிவரக. சிவதன்மா. உஉ.) 4. பெரிதொலித்தல். (உ-ம்.) "சிறுநாண்பெரும்பூசலோசையிடியிற்றொடர" (இராமா. நகர்நீங்கு. ககக.) 5. போர்த்தொழில். (உ-ம்.) "பூசலவுணர்புள் விலங்குபூதமனிதர்முதலுலகும்" (திருவிளை. அட்ட. உஎ.) 6. வருத்தம். (பதிற்றுப்.)

பூசறுத்தல் — சுத்திபண்ணல். (உ-ம்.) "வாசநீரும்வண்சுண்ணமுமுறைமுறை வழங்கப் பூசுறுத்துழிப்பூசினர்" (பாரத.கிருட்.அச.)

பூசன்மாற்று — பூசலைமாற்றுதல்; இதன் கருத்து: (தொல். பொரு. புறத்திணை. கூ-ஆம் உரையிற்காண்க.)

பூசனுயனூர் — அறுபத்துமூவரிலொருவர். (பெரியபு.)

பூசனி — 1. ஓர் கொடி. (பதார்த்தகுண. கூஉஅ.) காயின்மேற் பூசனிந்திருப்பதனு லிப் பெயராம். 2. நிலப்பூசனிக்கிழங்கு. (தைலவ. தைலவ. ருகூ.)

பூசாக்கல்—சுக்கான்கல். (வைத்தியபரி.)

பூசாந்திரப்—ஒரு கடுக்கன். (வழக்.)

பூசாபந்தம் — ஓரடியொருவரியாக நான்கு வரியெழுதி அந்நான்குவரியுள் மேல்வரியிரண்டுந் தம்மிற்றுமே கோமூத்திரியாகவும் கீழ்வரியிரண்டுந் தம்மிற்றுமே கோமூத்திரியாகவும், மேல்வரிகீழ்வரி மூன்றினும்வந்து கோமூத்திரியாகவும், கீழ்வரிமேல்வரி மூன்றினும் வந்து கோமூத்திரியாகவும்வருவது. (உ-ம்.) வந்துழிக் காண்க.

பூசாரம்—பூமிசாரம். (வழக்.)

பூசாரி — 1. கோயிற்பூசைபண்ணுவோன். [பூசாசாரியென்பதன் மரூஉ.] 2. (பரதம்.) சுத்தசாரி. (உ-ம்.) "பழிப்பறுசுத்தசாரியெனு மேனுறுபூசாரிகள்பதினாறும்" (திருவிளை. கான்மாறி. கக.)

பூசி—தசை. (சூ. நிக. கூ: சச.)

பூசித்தல்—பூசனைசெய்தல். (உ-ம்.) "சிவனைப்பூசித்தல்" (சிவரக. மேரு. ச.)

பூசிதம்—பூசித்தல். (வழக்.)

பூசிதன்—பூசிக்கப்படுவோன். (வழக்.)

பூசிப்பு — பூசித்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

பூசு— தெரிநிலைவினைப்பகுதி.

பூசுதல்—1. பூசல், அலங்கரித்தல். (சூ. நிக. கூ: ரு.) 2. கழுவல். (நன்னூ. பெயரி. கூ.) 3. சந்தனமுதலியவற்றைப்பூசுதல். (வழக்.)

பூசுரர்—1. பிராமணர். (உ-ம்.) "அவந்தியென்றுரைசெய்மாநகரத்தொருபூசுரன்" (திருவிளை. மாபாத. உ.) 2. முனிவர். (உ-ம்.) "பூசுரர்மகிழ்ச்சிபூப்ப" (கூர்மபு. பதிக. உகூ.)

பூசை—1. ஆராதனை. (உ-ம்.)"படித்தவருமறைப்படியேபூசைசெய்ய" (சிவரக. பசாசுமோச. எ.) 2. பூனை. (உ-ம்.) "கிளர்மாடத்துள்ளும்பூசையறுத" (இராமா. நகர்நீங்கு. கOO.)

பூஞ்சணம்—பூஞ்சு, நூலாம்படையென்றும், ஒட்டடையென்றுங்கூறுவர்.

பூஞ்சல்—கண்மயங்குதல். (வழக்.)

பூஞ்சலாடுதல் — கண்ணொளிமபங்குதல். (வழக்.)

பூஞ்சற்கண்—மயங்கினகண். (வழக்.)

பூஞ்சாடுதல் — பூச்சியாடல்போற்காணல். (வழக்குண்டுபோலும்.)

பூஞ்சாந்து—பூசாந்திரப்பட்டை. (உ-ம்.) "சதபுட்பியும்வாலரியுரிபூஞ்சாந்தோடு" (தைல. தைலவ. ருகூ.)

பூஞ்சாரி—தைவேளை. (வைத்தியபரி.)

பூஞ்சான்—ஒருபுல். (வழக்குண்டுபோலும்.)

பூஞ்சி—பூஞ்சு. (வழக்.)

பூஞ்சு—பூஞ்சணம். (வழக்.)

பூஞ்சுண்ணம் - பூந்தாது. (வைத்தியபரி.)

பூஞ்சை —ஒட்டடை. (வழக்.)

பூஞை—பூனை. (சூ. நிக. கூ: உகூ.)

பூட்கரம்—கோட்டம். (மலைபடு.)

பூட்கை—1. மேற்கோள். (உ-ம்.) "...டாப் பூட்கையுறந்தைபுமவிதே" (சிறுபாணு. அகூ.) 2. யாளி. 3. யானை. 4. வலி. (உ-ம்.) "ஓடாப் பூட்கைப்பிணிமுகம்வாழ்த்தி" (திருமுரு. உசஎ.) (2, 3-சூ. நிக. கூ: தசாதெ. உச.) பிங்கல நிகண்டில் யானையாளியென்பர்.

பூட்சி — 1. உடல். (சூ. நிக. உ: அரு.) 2. புனைவு. (சி-தொழிற்பெயர்விகுதி.)

பூட்டகம்—வீம்பு. (வழக்.)

பூட்டங்கம்—வில்லங்கம். (வழக்.)

பூட்டல்—பூட்டுதல். (வழக்.)

பூட்டன்—பாட்டன் தகப்பன். (வழக்.)

பூட்டு — கதவுமுதலியவைபூட்டும் பூட்டு. (உ-ம்.) "திண்கைதொட்டுவிடுமுன்யாத்த-கொடும் பூட்டுவிடுந்திறந்து" (திருவிளை. விருத்த.உஉ.) 2. தந்திரம். 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. பிணிப்பு. (உ-ம்.) "கடும்பரிநெடுந்தேர்பூட்டு விட்டு" (புறநா.கசக.) 5. பொருத்து. 6. வின்னாண். (சூ. நிக. எ. ச.)

பூட்டுதல் — 1. அடைத்தல். 2. அணிதல். (உ-ம்.) "அஞ்சகமொழுதத்-தகிலுந்தளி பூட்டத்தகாள்" (திருக்கோ. கக௫.) 3. காலேற்றல். 4. பிணைத்தல். (1, 3, 4-வழக்.)

பூட்டுவிற்பொருள்கோள் — செய்யுட்கண் முதலினுமீற்றினுமற்கு மொழிகடம்முட்பொருளேக்கமுடையபொருள்கோள். (நன். பொது. கூ௪. உரை.)

பூட்டை — 1. இறைகூடை. (சி. சி. ரு: அ. மறை.) 2. ஏற்றமரம். சிலவிடத்தில் (வழக்குண்டு. 3. காராம்பி. (சூ. நிக. எ: ரு௨.)

பூட்பராசன் — கருஞ்சீரகம். (வைத்தியமூ. அக.)

பூடணம் — ஆபரணம். (உ-ம்.) "கன்னமணந்திடுபூடணவர்க்கங்கண்டசரம்" (சிவரக. தேவியிமயம். எ.)

பூடணை — உபசாரம். (வழக்.)

பூடராம் — சந்திரசோடசகலைகளிலொன்று. (வி-ணி. உ௬௪.)

பூடா — 1. இரவிலேங்கும் நான்காம்முகூர்த்தம். (விதாந. சூறு. எகூ. உரை.) 2. ஒரு சூரியன்; இவன் ஆறுயிரங்கிரணங்களையுடையவன். (கூர்மபு. தக்கன்வேள். கூ௪. உரை.) பூடனென்றும் பெயருண்டு. (அபிதானசி.)

பூடிதம் — அலங்கரிப்பு (வழக்.)

பூடு — 1. உள்ளிப்பூடு. 2. புல்லு. 3. பூண்டு (1, 2, 3-வைத்தியபரி.)

பூண் — 1. ஆபரணம். (உ-ம்.) "பூண்மலிபொற்றபொலந்திருமார்ப" (பிர-காண். சோமவாரவி. கஎ.) 2. உலக்கைமுதலியவற்றிலிடும் பூண். 3. கவசம். (உ-ம்.) "பூணணிமார்பபோற்றி" (சிங். நாமக. உ௯ரு.) 4. தெரிநிலைவினைப் பகுதி.

பூண்கொள்கலம் — பீடிகை என்றபெயர். (சூ. நிக. எ: ௯அ.)

பூண்டி — ஒரூர். (வழக்.)

பூண்டு — 1. பூடு, புல்லுமுதலியன. (வழக்.) 2. வெள்ளைப்பூண்டு. (உ-ம்.) "இஞ்சி"பார். (பதல. பதலவ. க௫.)

பூணல் — பூணுதல். (திருவிளை. மேருவைச். ௬௪.)

பூணநூல் — உபவீதம். (உ-ம்.) "பூணநூன் மார்பும்" (திருவிளை. எல்லாம். ௯.)

பூணி — 1. எருது. (சூ. நிக. ௯: ௬௪.) 2. ஒருவகைப்பறவை. (சிங்கா.)

பூணினடைபுணர்வு — கயில் என்றுபெயர். (பிங்கல. க௨௦அ.)

பூணுதல் — 1. அணிதல். (உ-ம்.) "அவற்றை யொராங்-காதலடங்காதமாதத்துடனெடுத்துப் பூண்டு" (சைவச. சுகுமுனி. ௯.) 2. அடைதல். (உ-ம்.) "களைப்புமையாமல்"(திருவிளை. திருநக. ௬௪.) 3. பொருந்துதல். (உ-ம்.) "அம்பிகாபதிபாதசரண்பூண்டு" (சிவரக. சிவசன்மா. ௯.)

பூணூல் — உபவீதம். (சூ. நிக. எ: ௨௯.)

பூதகட்டுதல் — பொய்யாதைசேர்த்தாக்கல். (வழக்.)

பூத்தல் — 1. உண்டாதல். (உ-ம்.) "மனைவனுவகைபூத்து" (திருவிளை மெய்க்கா. அ.) 2. சிருட்டித்தல். (உ-ம்.) "போதுறைகடவுண்மீட்டுலகம்பூத்ததை" (கூர்மபு. தேவி. ௬.) 3. பூப்புண்டாதல். (உ-ம்.) "கீத்சபருவமோரைந்து நீங்கித்தனதுமனைக்கிழத்தி-பூத்துநீராடியகாட்டொட்டு" (கூர்மபு. வருணாச். உக.) 4. பொலிவுபெறுதல். (உ-ம்.) "பொருளற்றார்பூப்பரொருகால்" (வள். உசஅ.) 5. மலர்தல். (நன். னூ. உயிரீற்றுப். சக. உரை.)

பூத்தாளம் — அருமைபண்ணல். (வழக்.)

பூத்தித் — நிலசம்பத்து. (வழக்.)

பூத்தியபாவை — அழமைத்திறம். (சி. சி. ௬: ௬௪. சிவாக்.)

பூத்தியன் — வேலைசெய்துகூலிபெறுபவன். சி. சி. ௬: ௬௪. சிவாக்.)

பூத்திராணை — சணம்பு, மருள். (வழக்குண்டு.)

பூத்திரு — நாய்வேளை. (வைத்தியபரி.)

பூத்துப்பூத்தேனல் — இளைப்புக்குறிப்பு. (வழக்.)

பூதக்கண்ணாடி — சிறிதைப் பெரிதாகக்காட்டுங் கண்ணாடி. (வழக்.)

பூதக்குயம் — ஆலம்விழுது. (உ-ம்.) "பூதக்குயங்கள்லைவவேய்பிரம்பாம்" (சைதல. பாயிர. ௬௨.)

பூதகம் — கமுகு. (வைத்தியபரி.)

பூதகம்பம் — கைப்பூ, ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

பூதகரப்பன் — பிரதி. (வைத்தியமூ. அக.)

பூதகி — கிருட்டிணனை மூலைப்பாலின் மூலமாய்விடமூட்டிக்கொல்லும்படி கஞ்சனாலேவப்பட்ட வோரலகை.

பூதகேசரி — வெட்பாலை. (வைத்தியமூ. அக.)

பூதகேசனி — சடாமாஞ்சில். (வைத்தியமூ. அக.)

பூதகேசி — காஞ்சிரை. (வைத்தியபரி.)

பூதசங்கை — ஒருயோகினி. (வி-ணி. உ௬௪.)

பூதஞ்சேந்தனார் — இனியவைநாற்பதுசெய்தவர். (அபிதானசி.)

பூதசதுக்கம் — தவவேடம்பூண்டு அநீதிசெய்வோரை யடித்துண்ணும் பூதநிற்குஞ்சதுக்கம். (சிலப்பதி.)

பூதசரீரம்—பௌதிகசரீரம், பஞ்சபூதசம்பந்தமானவுடம்பு. (சைவப்பி. கக.) நரகத்தையநுபவிக்க ஆன்மாக்களெடுக்குஞ்சரீரம்.

பூதசாரசரீரம் — புரியட்டகத்திலே யுண்டான சுவர்க்கவநுபவத்திற்கானசரீரம்; இது: புண்ணியசன்மத்திற்கீடாகச் சுவர்க்க பலங்களைப் புசிக்கும்படி ஆன்மாக்களெடுப்பது (சைவப்பி. கக.) பூதசாரம்-பஞ்சபூதசத்து.

பூதசிருட்டி— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பஞ்சபூதசிருட்டி. (உ-ம்.) "இரண்டாஞ்சிருட்டிமிக - வோதுந்தன்மாத்திரையாகும்பூதசிருட்டியதிற்றோன்றும்" (கூர்ம பு. பலவகை. எ.)

பூதத்தாழ்வார்—ஓராழ்வார்.* (அபிதானசி.)

பூதசுத்தி—ஆன்மசுத்தி; அஃதாவது: பூதசுத்தி, அந்தரியாகம், சமாதி என்னுமூன்றனொருகுதியாம். (சைவசமயநெறிவியல். ருoஉ-ஆவது குறளுரையிற் காண்க.) இவற்றின் விரிவைச் சிவபூசைவிதியிலறிக.

பூததாநியம்—எள். (வைத்தியபரி.)

பூததீர்த்தம்—பஞ்சதீர்த்தங்களு ளொன்று: அது: மணிக்கட்டுவழியாகப் பூதங்களுக்குத் தர்ப்பணஞ்செய்யப்படும். (சைவச. பொது. கூகூ. உரை.)

பூததேசி—வெண்ணொச்சி. (வைத்தியமூ. அக.)

பூதநாசநம்—1. உருத்திராக்கம். (வழக்குண்டு போலும்.) 2. கடுகு. 3. சேங்கொட்டை. (வைத்தியபரிபா.)

பூதநாசரீரம் — பஞ்சபூதத்தாலாய தூலவுடம்பு. (உ-ம்.) "பூதநாசரீரம்போனாற்புரியட்டரூபந்தானே" (சி. சி. உ: கூகூ.)

பூதநாசினி—பெருங்காயம். (உ-ம்.) "அரேணுகம்"பார். (சைல. தைலவ. ககூ.)

பூதநாடி — பசாசுபிடித்தவர்க்கியங்கு நாடி. (வழக்.)

பூதநாதன்— } சிவன். (உ-ம்.) "பூதநாதன்
பூதநாயகன்— } பொருவருந்தொண்டி னுக்கு" (பெரியபு. திருமலை. கச.)

பூதநாயகி—உமை. (வழக்குண்டுபோலும்.)

பூதநிருத்தம்—ஒருகாலை முடக்கியாடல். (உ-ம்.) வந்துழிக்காண்க.

பூதநை—1. கடுக்காய்மரம். 2. சடாமாஞ்சில். 3. பூதநையென்னுமோரரக்கி. (உ-ம்.) "பூதநைதன்னுயிர்மூலைபொழிபாலொடு போதரவுண்டபுயல்வண்ணா" (பாரத. பதினாரும். க.) (1, 2-வைத்தியநூல்களிலறிக.)

பூதப்பட்டை—பூதகரப்பான்பட்டை. (வைத்தியபரி.)

பூதப்பாண்டியன்—ஒருபாண்டியன். (அபிதானசி.)

பூதப்பிரதிபந்தம் — ஆத்மதெரிசகமாகியு முன்னனுபவித்த விடயாநுபவத்தைச் சிந்தித்தல். (வேதா-சூ. கசக. உரை.) 2. மோட்சாபேட்சையாற் சர்வசங்கப்பரித்தியாகம் பண்ணிக் குருவையடைந்து சிரவணாதிகஞ் செய்தாலும் முதல் கிரகத்தாச்சிரமத்திற் போகித்திருந்த வநிதாதி வஸ்துக்களை ரூபயௌவநசிங்காராதி சற்குணங்களநுபவித்தமை சமஸ்காரபலத்தால் வந்துவந்து உனக்குச் சுகதுக்கத்தை அடிக்கடி கொடுத்துச்சிந்திப்பித்து ஆன்மாவைச்சாட்சாத்காரமாக வொட்டாதது. (வி-ணி. கூஅ.)

பூதபத்திரி—துளசி. (வைத்தியபரி.)

பூதபரிணமசரீரம்—தூலசரீரம். (சி. சி. உ: கூஅ. மறை.)

பூதபலம்—பலா. (வைத்தியபரி.)

பூதபலி—பூதயாகம்; இது: ஐவகையாகத் தொன்று.

பூதபாலம்—நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப் புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

பூதபுராணம் — சங்கமருவியவோர் நூல். (அபிதானசி.)

பூதம்—1. ஆல். (வைத்தியபரி.) 2. இறந்தகாலம். 3. உயிர். 4. ஐம்பூதம். (உ-ம்.) "பெருமைபெறும்பூதங்களோந்தாகி" (சிவரக. சுகமுனி. க.) 5. ஐவகையாகத்துளொன்று. 6. ஒருதந்திரம்; இதிற்: பூதப்பிரேதப் பிசாசுகளையோட்டும் மருந்துகளும் மந்திரங்களுங்கூறப்படும். (சி-பி. கை. கரு.) 7. கமுகு. 8. கூந்தற்பனை. 9. சங்கு. 10. சடாமாஞ்சில். (தைலவ.) 11. சுத்தம். (உ-ம்.) "பூதநீர்க்கமண்டலம்பொழிந்தகாவிரி" (பெரியபு. நாட்டு. உ.) 12. தருப்பை. 13. நரகமுதலியவாதைகளைப்புசிக்கும்படி பாவபலத்துக்கீடாக ஆன்மாக்களெடுக்குந்தநு. (சி. சி. உ: கூஎ. மறை.) 14. பரணி. (உ-ம்.) "பூதமதியெவி" (விதான. குணகுண. உகூ.) 15. பூதகணம். (உ-ம்.) "துன்னியகுறுந்தாட்பூதம்" (கூர்மபு. பலவகை. கூ.) (1, 3-சூ. நிக. கக: தகரவெ. ச.) (2, 10, 14-வைத்தியபரி.)

பூதமாதேவாம்போதரி—ஐம்பத்தோருருத்திரசத்திகளிலொருத்தி. (வி-ணி. உஎஎ.)

பூதமுகூட்டை—வட்டத்திருப்பி. (வைத்தியபரிபா.)

பூதயாகம் — பஞ்சயாகத்தொன்று. (வன் அஎ. பரி. குறிப்.)

பூதர்—1. இவர் பதினெண்கணத்தொருவர். (சூ. நிக. கஉ: ககசு.) 2. சீவர். பூதம்-உயிர்.

**பூதரம்**—1. பூமிதாங்கல். பூ-பூமி. தரம்-தாங்கல். 2. மலை. (உ-ம்.) "பூதரந்தனைச்சிறைதடிந்திடுபுரந்தரனை" (கந்தபு. சூரன்.)

**பூதலந்திரி**—துளசி. (வைத்தியபரி.)

**பூதலம்**—பூமி. (உ-ம்.) "அவளன்னைப்-பூதலத்திடைத்தெருட்டுவார்போல்" (திருவிளை. இரசவா. அ.)

**பூதவச்சம்**—பீநாறி. (வைத்தியபரி.)

**பூதவம்**—1. ஆல். 2. மருது. (1, 2-வைத்தியமூ. அக.)

**பூதவாகம்**—தான்றி. (வைத்தியபரி.)

**பூதவாகன்** — ஞாநேந்திரியதத்துவத்திருக்கும் பஞ்சபுவநபதிகளிலொருத்தன். (வி-ணி. உ௭௩.)

**பூதவாசகம்**—பெருந்தேக்கு. (வைத்தியபரி.)

**பூதவாசம்**—தான்றி. (வைத்தியமூ. அக.)

**பூதவாதம்**—ஒரு சமயம். (வழக்குண்டு.)

**பூதவியற்பஞ்சவிஞ்சதி**—எழுவகைப் பஞ்சவிஞ்சதிகளுளொன்று; அது: சுரோத்திராதியைந்து, வாக்காதியைந்து, விடயம்பத்து, அந்தக்கரணம் நான்கு, பகுதியொன்று என்னுமிருபத்தைந்துமாம். (த. நி. போ. ௬௦௪.)

**பூதவிருக்கம்**—1. ஆல். 2. பீநாறி. 3. பெருவாகை.) (1, 2, 3-வைத்தியபரி.)

**பூதவிருள்**—உலகவிருள், புறவிருள். (வழக்.)

**பூதவீடு**—பஞ்சபூதங்களாலாயதேகம். (உ-ம்.) "ஒருத்தருமறியாத்தனிவீட்டிலுறையுணர்வற்றிருபூதவீட்டிலிராமல்" (கந்தரல. ௬௫.)

**பூதவுப்பு**—சத்தியுப்பு. (வைத்தியபரி.)

**பூதவேசி**—பூதாவேசி.

**பூதன்**—1. இருள்கிறவன், உள்ளவன். (உ-ம்.) "அட்டகுணபூதன்" (சி. சி. அ: ௧௨, நிரா.) 2. கடுக்காய். (வைத்தியமூ. அக.)

**பூதனம்**—கடுக்காய். (வைத்தியபரி.)

**பூதனை**—கஞ்சனேவலாற்கண்ணனைக் கொல்லவந்தவோரரக்கி. (அபிதாநசி.)

**பூதாங்குசம்**—பேய்மருட்டி. (வைத்தியமூ. அக.)

**பூதாத்திரி** — கீழ்க்காய்நெல்லி. (வைத்தியமூ. அக.)

**பூதாதி**—பூதம்முதற்காரணமாகவுடைய பிரபஞ்சம். (உ-ம்.) "பூதாதியிறுமுதலுந்துணையாக" (சிவஞானபோ. வெண்பா. ௬.) 2. பூதாதியாங்காரம். (சித்தாந்தப்பிர.)

**பூதாதிகம்**—தமோகுணம். (த. நி. போ. ௯௩௩.)

**பூதாதியகங்காரம்** – தாமதகுணத்திக்கமாய்த் தோன்றுமகங்காரம். (கூர்மபு. பிரகிரு. அ. ௨௮.)

**பூதாநம்**—பூமிதாநம். (உ-ம்.) "கோதாநம் பூதாநமொருகோடிபுரிந்துளோர்கள்" (சிவரக. தேவர்முறை. ௧௧.)

**பூதாரி**—பெருங்காயம். (வைத்தியபரி.)

**பூதாவேசி** — வெண்ணொச்சி. (வைத்தியபரிபா.)

**பூதி**—1. ஊன். (சூ. நிக. ௩: ௬௪.) 2. கொடுமை. (சூ. நிக. அ: ௯௦.) 3. சுத்தம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 4. செல்வம். (உ-ம்.) "பூதியினைத்தான்கொடுக்கையாற்பூதியென்னும் பேரோதுவர்" (சைவச. பொது. ௨௦௩.) 5. தூர்க்கந்தம். 6. நரகம். 7. நாய்வேளை. (வைத்தியபரி. 8. புழுகுசட்டம். (உ-ம்) "இலவதநோர் பூதியிருபதிற்றொன்பதும்" (வைதல. ஙதலவ. ௬௩.) 9. புழுதி. (பிங்கல. ௬௪௫.) 10. பொன். (ஆசிரியநிக.) 11. மூடை. (பிங்கல. ௯௩.) 12. விபூதி. (உ-ம்.) "உடலிற்பூதிபூசி" (சிவரக. பஞ்சாக்ஷரமோசுக. ௯.) [தன்னைத்தரித்தவர்களுக்கு ஐசுவரியத்தைக்கொடுத்தலாற் பெற்றபெயர்.] (5, 6-பி. நிக. ௯.௮௦.)

**பூதிகந்தம்**—சந்தகம். (உ-ம்.) வந்துழிக் காண்க.)

**பூதிகம்**—1. அகில் 2. ஆயில்மரம். 3. ஆயிற்பட்டை. (உ-ம்.) "அமுகஙிர்"பார். 4. ஒரு வாசனைப்புல். 5. சாதிக்காய். 6. நிலவேம்பு. 7. பூமி. (சூ. நிக. ௫: ௨.) (1, 2-தைல. தைலவ. ௬௨.) (4, 5, 6-வைத்தியபரி.)

**பூதிகாட்டம்**—செம்புளிச்சை. (வைத்தியமூ. அக.)

**பூதிகாதைலம்**—ஒருவகைத்தைலம்; இது: ஆயிற்பட்டைமுதலியவற்றில் வடிக்கப்படுவது. (இதனிலக்கணம். தைல. தைலவ. ௬௩, ௬௪-விற் காண்க.)

**பூதிகாய்**—ஆலமரப்பட்டை. (வைத்தியபரி.)

**பூதிசாரிசை**—நாவி. (வைத்தியபரி.)

**பூதிநி**—ஒரு பாலாரிட்டதேவதை. (வி-ணி. உ௩௪.)

**பூதியம்**—தாதுவளை. (வைத்தியபரி.)

**பூதிமாருதம்**—வில்வமரம். (வைத்தியபரி.)

**பூதியம்**—1. உடல். (பி-நிக. ௯௯௪.) 2. பூமி. (ஆசிரிய நிக. ௫: ௯.)

**பூதிவர்கம்**—வில்வமரம். (வைத்தியமூ. அக.)

**பூதேசன்**— சிவன். (உ-ம்.) "பாலோசுநன்" பார்

**பூதேவர்**—பார்ப்பார். (பாரத. உடையவர்)

**பூதேவி**—திருமாலின்தேவி. (அபிதாந.)

**பூதை**—அம்பு (சூ. நிக. ௫.)

**பூந்தட்டு** — பூந்தட்டு. [illegible] (சூ. நிக. ௭: ௫௫-ஆங்கவ்[illegible])

பூந்தாது—1. கோங்கு. (வைத்தியமூ.அக.) 2. பூவிற்றுகள்.

பூந்தாழை—அன்னுசி. (பதார்த்த. அ௲௪. மூகம்.)

பூந்தி-1.புன்கு.2.பூவந்தி.(1,2-வைத்தியபரி.)

பூந்துணர்—1. புனமுருங்கை. (வைத்திய பரி.) 2. பூங்கொத்து. (உ-ம்.) "இருப்பையின் பூந்துணர்" (அரிச்ச. நாட்டு. க௲.)

பூந்தை-1. ஒரூர். 2. பூதனறந்தை. மரூஉ.

பூநாகம்-1. நாங்கூழ். (உ-ம்.) "வயிறதனிற் பூநாகந்தன்னைச்சார்ந்து" (அகத். குருநாடி. உக௦.) 2. பூநீறு. (வைத்தியபரி.)

பூநாதம்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

பூநிம்பம்—நிலவேம்பு. (வைத்தியமூ. அக.)

பூநிறம்—மாந்தளிர்க்கல். (உ-ம்.) வந்துழிக் காண்க.

பூநீபம்—நிலக்கடம்பு. (வைத்தியபரி.)

பூநீர் — 1. உவர்மண்ணிலெடுக்கும் நீர். 2. பனிநீர். 3. வண்ணுனெடுக்கு மூவர்மண். (1, 2, 3-வைத்தியபரி.)

பூப்பகம்—பெண்குறி. (சூ. நிக. உ: அக)

பூப்பட்டை — இலவங்கப்பட்டை. (வைத்தியபரி.)

பூப்பருத்தி—பூவரசு. (வைத்தியபரி.)

பூப்பலகை—ஒரு மரம். (வழக்.)

பூப்பலா-ஒருவகைவிருக்கம். (த. நி. போ. ௲௨.)

பூப்பு — 1. பூத்தல். (பு-தொழிற்பெயர் விகுதி.) 2. மகளிர்சூதகம். (திரிகடு. கஎ.)

பூப்புடம் — 1. பூப்புடத்தைலம். (ஜதல. அநுபந்த.கடு.) 2. குழிப்புடம். (வைத்தியபரி.)

பூப்பேசல் — பரத்தையர் விவாகத்தொரு கருமம். (க-வி. சுசு. உரை.)

பூப்பேட்டி—மூழிவாய். (சூ. நிக. எ: ருடு.)

பூபதம்—மரம். (வைத்தியபரி.)

பூபதி —1. அரசன். பூ-பூமி. பதி-தலைவன். 2. ஒரு குளிகை. (வைத்தியர்கள் பூபதிமாத்திரையென்பர்.) 3. மல்லிகை. (வைத்தியபரி.)

பூபன்—அரசன். (உ-ம்.) "விராடபூபனுஞ் சதாநிகநிருபனும்"(பாரத. படையெழுச்சி. ௬.)

பூபாலர்—பூவைசியர். (பிங்கல. எஎஎ.)

பூபாலன்—1. அரசன். (சூ. நிக. உ: கூ.) 2. வேளாளன். ஒருமைப்பாலில் வந்தபெயர்.

பூபாளம் — புருடராகத்தொன்று; இதன் மனைவிகள்: வேளாவளி, மலகரி, பௌளி, சாதி பிராமணசாதி. அதிதேவதை திருமால். (வி-ணி. உகக.)

பூம்பட்டு—பூத்தொழிலமைந்தபட்டு.(சிலப். பதி. ஊர்காண். அகூ-ஆம் அடி உரை.)

பூம்பனை—ஆண்பனை. (வழக்.)

பூம்பாளை—இளம்பாளை. (வழக்.)

பூம்பிஞ்சு—இளம்பிஞ்சு. (வைத்தியபரி.)

பூமகள்—1. இலக்குமி. 2. பூமிதேவி. பூ என்பதும்மலருக்கும் பூமிக்கும் பெயராதலா விருவருக்கும் பெயராயிற்று.

பூமகன்—1. செவ்வாய். (உ-ம்.) "பூமகன் வாரத்துடன்வருபூராடம்" (விதாந. குணகுண. ௬.) 2. பிரமா. (உ-ம்.) "திருமலிபூமனுதியை வருமாமொருபரமிச்சிறியனேற்கு" (கொலை மறு. க.)

பூமகா—கையாந்தகரை. (வைத்தியபரி.)

பூமண்டலம் — 1. பரதத்தின்பொது லக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (திருவிளை. கான்மாறி.) 2. பூமிவட்டம். (வழக்.)

பூமந்தை—ஒரு செடி. (உ-ம்.) வந்துழிக் காண்க.

பூமலி—மூளை. (வைத்தியபரி.)

பூமலேக்கிநம்—, பூமலேசனம்— 1. சங்கங்குப்பி. 2. ஞாமல். (1,2-வைத்தியபரி.)

பூமன்—1. செவ்வாய். 2. பிரமன். (1, 2-சூ. நிக. கக: மகரவெ. கடு.)

பூமாதளை — காயிலாமற் பூமாத்திரம்விடும் மாதளை. (வைத்தியபரி.)

பூமாது—1. இலக்குமி. 2. சரஸ்வதி. 3. பூமிதேவி. (உ-ம்.) "பூமாதினிதயகமலத்துவைகும் பொலிவானும்" (திருவா. நான்மணி.)

பூமாயி—ஒரு பாலாரிட்டதேவதை. (வி-ணி. உ௲அ.)

பூமாரி—வேம்பு. (தைத்தியபரி.)

பூமான்—புமான். (சூ. நிக. உ: ருஎ.)விகாரம்.

பூமி—1. தேசம். (உ-ம்.) "தங்கள்பூமியிலான போதொருவடிவமொத்ததுதானையே" (பாரத. அணிவகு. கசு.) 2. பூநீறு. (வைத்தியபரி.) 3. பூவுலகு.(உ-ம்.)"வேலேசூழ்தருபூமியின்பாரமாகியசுயோதனுதியரென்னுநூறுபசுப்படுத்து" (பாரத. சஞ்சய. கஎ.) இது பலவிதப்படுமென்பர். (அபிதாநசி.)

பூமிக்கூர்மை—வெடியுப்பு.(வைத்தியபரி.)

பூமிகதம்பம்—நிலக்கடம்பு.(வைத்தியபரி.)

பூமிதநுவகம்—வெள்ளெருக்கு. (வைத்தியபரி.)

பூமிச்சருக்கரை—சீந்திச்சருக்கரை. (வைத்தியபரி.)

பூமிச்சேநக்கன்-உவர்மண்.(வைத்தியபரி.)

பூமிசாத்திரம் — பூமியைப்பற்றி விபரிக்கு நூல். (பூகோளநூல்.)

பூமிசைநடந்தோன்—1. அருகன். (சூ.நிக. க: க.) 2. புத்தன். (சூ. நிக. க: க௲.)

பூமிதாநம் — பூதாநம்; அஃது: உலகெலா மொருகுடைக்கீழாளுமரசன் பலாசு, வில்வம், அரசு, கருங்காலி, மூங்கிலென்னு மிம்மரங்களால் திக்குயானைதாங்குவதான மண்டபமமைத்து, நான்குவாயில்கடோறும் மணிமாலை, தோரணம், தருப்பைதூக்கி, பன்னிரண்டங்குல உயரமும், எழுமுள நீளமுமுடையதாய் மூத்துவிளிம்பிற்றிண்ணைசெய்து, அதனெண்டிசைகளினுங் குண்டம்வகுத்து, ஈசாந இந்திர திக்குகளினடுவே பிறை, தேர்ச்சக்கரம், கமலப்பூ என்பவற்றுளோர் வடிவிற் பிரதாநகண்டஞ் சமைத்த ஒரு துலாம், அரைத்துலாம், காற்றுலாம் என்பவற்றுளோ ரளவுடைத்தாய்ப் பொன்னாற் சதுரமாகத்தகடுசெய்து ஏழ்தீவு, ஏழ்கடல், ஏழ்மலை, மேரு, நதி, நதங்கள், தருக்கள், தெய்வங்கள்யாவுஞ் சிற்பவிதியிற் சித்திரித்துச் சிவபெருமானுக்குப் பூசையியற்றிச் சுவர்ணபூமிக்குப் பஞ்சகௌவியங்களால் அபிடேகஞ்செய்து குண்டநடுவேயுள்ள துலைக்கண்வைத்துச்செய்யுந் தானமாம் (சிவராத். உற்பவ. கஎ. உரை.) இவ்வாறின்றி நன்செய், புன்செய்களைத் தானஞ்செய்தலென்றுங்கூறுவர்.

பூமிதேவி—நிலமாது. (வழக்.)

பூமிநடுக்கம்—பூமியதிர்ச்சி. (வழக்.)

பூமிநாதம்—இந்துப்பு. 2. காந்தம். 3. பூநீறு. (1, 2, 3-வைத்தியபரி.)

பூமிநாயகம்—நாக்குப்பூச்சி.(வைத்தியபரி.)

பூமிநாயகன்—1. காஸ்மீரபடிகம். 2. நிலவேம்பு. (1, 2-வைத்தியபரி.)

பூமிபரீட்சை — கலைஞாந மறுபத்துநான்கினுளொன்று. (அபிதாநசி.)

பூமிபிசாசம்—பனை. (வைத்தியபரி.)

பூமிவிளா - நிலவிளா. (வைத்தியபரி.)

பூமிவேர்-பூநாகம். (உ-ம்.)வந்துழிக்காண்க.

பூமின் — 1. இலக்குமி. (சூ. நிக. க: கூசு.) 2. பூமிதேவி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

பூயாரி—வேம்பு. வைத்தியபரி.)

பூர்ணகம் — பொற்சிறைப்பறவை. (வழக்குண்டுபோலும்.)

பூர்ணபாத்திரம்—ஓரளவை; அஃது: இருநூற்றைம்பத்தாறு கைபிடிகொண்டது.(உ-ம்.) வந்துழிக்காண்க.

பூர்ணம்—நிறைதல். (சூ. நிக. எ: கரு.)

பூர்ணமிருதம்—சந்திரனதுசோடசகலைகளினொன்று. (வி-ணி. உசசு.)

பூர்ணிமை—பூரணை. (வழக்.)

பூர்த்தி—1. நிறைவு. (வழக்.) 2. வரம்பிலின்பமுடைமை; அஃது: இறைவனெண்குணங்களினொன்று. (வள். க-ம் அதி. கூ.)

பூர்த்தியன்—வேலைசெய்து கூலிபெறுகிறவன். (சி. சி. க: கூசா. சிவா.)

பூர்ப்பியம்—பழங்கதை. (உ-ம்.) வந்துழிக்காண்க.)

பூர்வகட்சியநுமாநம் — போதுநாற்றத்தாலறிதல். (சி. சி. அளவை. கஉ.)

பூர்வகாத்திரம்—தலை. (சிந்தா. காந். கூகரு. உரை.)

பூர்வசம் — முன்பிறந்தது. 2. மூத்தது. 1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.

பூர்வசர்—முன்னோர். (வழக்.)

பூர்வசைவர்—தீட்சாகருமத்தாலே மோட்சமடையலாமென்று சாதிக்குஞ்சைவர். (சி. சி. அ: உஎ. சிவாக்.)

பூர்வதநம்—முந்தினது. (உ - ம்.) "ஒருத்தனுக்கு அதிகபலமும் ஒருத்தனுக்கு அற்பபலமுமாயிருப்பதற்கும் பூர்வதநகிரமமே காரணம்" (சி. சி. உ. கூக. சிவாக்.)

பூர்வபட்சம்—1. பிறர்கூறும்பக்கம். (சி. சி. க. கூக. சிவாக்.) 2. விரோதபட்சத்தானது கூற்று.

பூர்வம்—1. கிழக்கு. 2. முதுமை. 3. முன்பு. (1, 2, 3-சூ. நிக. கக: ரகரவெ. உகூ.)

பூர்வமீமாஞ்சகர்—இயற்கையாதி கன்மங்களிலே மோட்சமடையலாமென்று சொல்லுகிற மதஸ்தன்.

பூர்வமீமாஞ்சம்—மீமாஞ்சம் இருவகையுள் முந்தியது கன்மபாகத்தைக்கூறுவது.

பூர்வாகமம் — ஒரு அருகநூல். (உ - ம்.) "அங்காகமம்"பார்.

பூர்விகம்—பழமை. (வழக்.)

பூர்விகர்—பழையோன். (வழக்.)

பூர்வோத்திரவிரோதம் — முன்சொன்னதற்குப் பின்சொன்னது விரோதமாயிருத்தல்.

பூரகம்—1. பூரித்தல். (வழக்.) 2. மத்தங்காய்ப்புல். (வைத்தியபரி.) 3. வெளிக்காற்றையுள்ளேபூரித்தம். (சி-வி. யோக. ச. உரை.)

பூரட்டாதி—ஒருநட்சத்திரம். (சூ.நிக.க:எஅ.)

பூரணசாத்திரம்—, பூரணசூத்திரம்—, பூரணநூல்— } அகத்தியர்செய்த வொருநூல். (வைத்தியம்.)

பூரணபாத்திரம் — இருநூற்றைம்பத்தாறு நிறைகையரிசிகொண்டபாத்திரம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

பூரணம்—1. எல்லாம். 2. நிறைவு. (சூ. நிக. அ: கரு.) 3. பெருக்கம். (1, 3-வழக்.)

பூரணமி—பூரணை. (வழக்.)

பூரணமை—பௌர்ணமை. (வழக்.)

பூரணலேகியம்—ஒருவகைலேகியம்.

**பூரணன்**—1. அரன். (உ-ம்.) "பூரணன்திரு முன்னர்" (சிவரக. மேரு. உo.) 2. அருகன். (உ-ம்.)"புங்கவன்"பார். 3. மூர்த்தபாஷாணம். (வைத்தியபரி.)

**பூரணாகுதி** — ஓமச்சடங்கை நிறைவேற்றுங் கடைசியாகுதி. (உ-ம்.) "பொங்குமாகுதிகள் செய்தார்பூரணாகுதிபூரித்தார்" (சிவரக. நைமி சா. சரு)

**பூரணாதியுப்பு**—யாகவுப்பு. (வைத்தியபரி.)

**பூரணாதிலேகியம்**—பூரணலேகியம்.

**பூரணி**—1. இலவமரம். 2. நிறைவுள்ளவன். (வழக்.) 3. பஞ்சசத்திகளிலொன்று. (சி. சி. க: ருகூ.ஞானப்.) 4. லவங்கம். (1,4-வைத்தியபரி.)

**பூரணை**—1. ஐந்தாம் பத்தாம் பதினைந்தாந் திதிகள்வரும் பக்கங்கள். (வருஷாதிநூல்.) 2. ஐயன்றேவிகளிலொருத்தி. (உ-ம்,) "புட்கலை" பார். 3. பௌரணை. (சூ. நிக. க: அசு.) 4. நிறைவு. (உ-ம்.) "பூரணையாற்பதினாற்கயிற் றொக்கப்புவநமெலாம் - நீரணைமாருதந்தாங்கிய தாக்கும்" (திருநூற். கூக.)

**பூரணைகேழ்வன்**-ஐயன். (சூ. நிக. க: உஅ.)

**பூரணோதரி**-ஐம்பத்தோரு ருத்திரசத்திகளி லொருத்தி. (வி-ணி. உஎஎ.)

**பூரத்திரயம்**—பூரம், பூராடம், பூரட்டாதி. (விதான. குணகுண. கூ. உரை.)

**பூரத்காரம்**—சீனக்காரம். (வைத்தியபரி.)

**பூரபதி**—பச்சைக்கருப்பூரம். (வைத்தியபரி.)

**பூரம்**—1. ஒருநாள். (சூ. நிக. க: எo.) 2. ஒருமருந்து. 3. கருப்பூரம். 4. நீர்க்குண்டு. 5. பச்சைக்கருப்பூரம். (தைல. தைலவ. சசு.) 6. பூரணம். (வழக்.) 7. பூரான் (4, 7-வைத்திய பரி.)(2,3-வைத்தியநூலிலறிக.)இரசகர்ப்பூரத் திற்கும் பெயர்கூறுவர்.

**பூரவாகநி**—சரச்சுவதி. (திவாகரத்திலறிக.)

**பூரவுப்பு**—சத்தியுப்பு. (வைத்தியபரி.)

**பூராடம்**-ஒரு நட்சத்திரம். (சூ. நிக. க: எசு.)

**பூராயம்**—1. ஆராய்வு. (வழக்.) அந்தரங்க மெனவுங்கூறுவர். 2. விசித்திரம். (உ-ம்.) "பூராயமாகவுநீமற்றொன்றைவிரித்துப் புலம்பா தே" (தாயு. நினைவொன்று. ரு)

**பூரான்** — 1. ஒரு விஷசெந்து. 2. பனங் கொட்டைமுதலியவற்றினுட் பருப்பு. (1, 2-வைத்தியபரி.)

**பூரி**—1. ஒரு பணிகாரம். 2. ஒரிசை. 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. நாணி (சூ.நிக.எ:ச.) 5. பொன். (வைத்தியபரி.) (1, 2-வழக்.)

**பூரிகல்யாணி**— } ஒரிராகம். (வழக்.)
**பூரிகலியாணி**- }

**பூரிகா**—அகில். (வைத்தியபரி.)

**பூரிகை**—1. அப்பவருக்கம்.(பிங்கல. கககஅ.) 2. ஊதுமெம்பூரிகை. (உ-ம்.) "தபலை"பார். 3. நொலையல். (பிங்கல. கககசு.)

**பூரிகொடுத்தல்**—பூரிதானஞ்செய்தல்.(பால பாட. ருரு) பூரி-பொன்.

**பூரித்தல்**—1. உவத்தல். (உ-ம்.) "புனிதமா மிதுவென்றுளம்பூரித்தாள்" (சிவரக. தேவி நாட். கசு.) 2 நிரப்புதல். (உ-ம்.) "பூரணாகுதி" பார். 3. நிறைத்தல். (உ-ம்.)"பிராணவாயுவைக் கும்பித்தும் இரேசித்தும் பூரித்தும் தன்வசம் பண்ணிக்கொண்டு" (சி. சி. கூ: ச. சிவாக்.) 4. பருத்தல். (உ-ம்.) "பூரித்ததநச்சுமையாற்றுகி லாள்பொறையுற்றவருந்தியிருந்தனளோ" (சிவரக. கணபதிவந்தனை. எ.)

**பூரிதம்**— } 1. பூரணம். 2. மிகுகளிப்பு. 3.
**பூரிப்பு**- } மிகுதி. (1, 2, 3-வழக்.)

**பூரியம்** — சாந்திட்டதொட்டி (மதுரைக். கஅ. உரை.)

**பூரிமாயன்**—நரி. (சூ. நிக. கூ: உச.)

**பூரியம்** — 1. அரசர்வீதி. (பி. நிக. சுசசு.) 2. அரசரிருக்கை. (பிங்கல சுருகூ.) 3. ஊர். (சூ. நிக. ரு: கூச.) 4. பாரார்த்தம் பத்துக் கொண்டது. (பிங்கல. உஉஅo.)

**பூரியர்**—கீழோர். (உ-ம்) "பூரியரெண்ணி யாங்கே" (திருவிளை. மாயப். உக.)

**பூரியன்**—கீழ்மகன். (உ-ம்.) "புன்றொழில் படைத்தனடையபூரியனுணர்ந்தே" (கந்தபு. அவைபுகு. கருo.)

**பூரு**-1. குருகுலத்தரசரிலொருவன். (பாரத குருகுல. உo) 2. புருவம் (உ-ம்.) "யோகத் துறாருணர்வாலெகித்துணைவிழிபூருவினிடை யேசெருகிடவே" (சிவரக. நைமிச. கூகூ)

**பூருகம்**—மரம். (சூ. நிக ச: சச.)

**பூருண்டி** — 1. மல்லிகை. (சூ. நிக. ச. சுசு 2 வேலிப்பருத்தி. (வைத்தியபரி.)

**பூருது**—பூநீறு. (தைல. தைலவ. கசுடு)

**பூருவகாட்சியநுமானம்**-நாற்றமுதலியன து பற்றிப்போதுமுதலிய காட்சிப்புலனாதற்குரிய பொருளை யுயிரிறோடுணர்வுதெரிவது. (சி. சி அளவை. கஉ. சிவஞா.)

**பூருவசநன்**—தலைமகன். (வழக்.)

**பூருவான்**—சேட்டபுத்திரன். (வழக்.)

**பூருவஞானம்** — முன்னனுபவத்தை யறிய மறிவு. (வழக்.)

**பூருவதுவந்தம்**—ஊழ்வினைப்பயன். (வழக்.)

**பூருவதோந்தம்**—பூருவதுவந்தம். (வழக்.)

**பூருவநியாயோத்தரம்** – முன்னேயிவனற விவகாரவிடயத்தில் நியாயத்தானத்தில் விவகா

வழியாக என்னால் வெல்லப்பட்டானென்று சொல்லுதல். (மிருச. ௪௦.)

பூர்வபக்கம் — பூர்வபட்சம், வளர்பிறைப் பக்கம். (வழக்.)

பூருவபற்குநி—பூரம். (வைத்தியபரி.)

பூருவம்—1. ஆதி. (உ-ம்.) "பூருவந்தனினன் முகன்புனலையும்படைத்து" (விருத்தா.கிரி.௧௨) 2. கிழக்கு. (உ-ம்.) "பச்சிமத்தடைந்தபரிதிபூரு வத்திற்பருப்பதத்துதித்திடுமளவு" (சிவரா. உற்பவ. ௨௬.) 3. பழமை 4 முதன்மை 5. முதிர்ச்சி. (தைல.தைலவ.) 6. முன்பு. (சூ.நிக. ௧௧: ரகரவெ. ௨௩) (3, 4-வழக்.)

பூருவமீமாஞ்சை — சைமினிசூத்திர ரூபத் தால் துவாதச அத்தியாயமாய்த் தர்மார்த்தப்பிர திபாதகமாய் லோகவேதாதிகரண மென்பது முதலான சகஸ்திரநியாயத்தாற் சொல்லப்பட் டிருப்பது. (த. நி. போ. ௧௭.)

பூருவாசாடம்—பூராடம். (உ-ம்.) வந்துழிக் காண்க.

பூருவாண்ணம் —பூருவாண்ணியம்.

பூருவாண்ணியம்— முன்னேரம்.

பூருவாப்பியாசம்—பழையவழக்கம்.(வழக்.)

பூருவாபரம்—முன்பின். (வழக்.)

பூருவீகம்—1. ஆதி 2. பழமை. (1,2-வழக்.)

பூரை-1. ஒன்றுமில்லாமை. (உ-ம்.) "அமர ரிதபூரையதிசயமென்றுள்பாடவரே வனும்" (திருப்பு ௫௦௩.) 2. பூரணம். (சௌந்தரிய. ௫௬.)

பூரைபூரை — போதும்போதும். (உ-ம்.) "பூரைபூரையென்றிருவடியாலகமத்தபுத் தி ளிர்" (அரிச்ச. மீட்சி. ௧௬.)

பூல்—புல்லாந்தி. (தைல. தைலவ. ௧௩௫.) 2. பூலா. (வைத்தியமூ. அக.)

பூலத்தி—மருதமரம். (வைத்தியமூ. அக.)

பூலதை — 1. நாங்கூழ். 2. படர்கொடி. 3. பூநாகம். (தைல. தைலவ. ௭௪) (1, 2-வைத் தியபரி.)

பூலா—1. ஒரு செடி; அது: நீர்ப்பூலா, பவ ளப்பூலா, முட்பூலா, வறட்பூலாஎனப் பலதிறப் படும். (வைத்தியபரி.) 2. பெருங்கிச்சிலிக் கிழங்கு. (தைல.தைலவ.௪௪.) (உ-ம்.) "சாந்து" பார்.

பூலாங்கிழங்கு — பெருங்கிச்சிலிக்கிழங்கு. (உ-ம்.) "அசிதளம்"பார். (தைல. தைலவ. ௬.)

பூலாசம் — புல்லாந்தி. (தைல. தைலவ. ௧௩௪.)

பூலித்தகடு — மணியழுத்தவைக்குந் தகடு. (வழக்குண்டுபோலும்.)

பூலித்தல்—புளகித்தல். (உ-ம்.) "பூலித்தகங் குழைந்துபொான் னூசலாடாமோ" (திருவாச. திருப்பொன். அ.)

பூலை— கிச்சிலிக்கிழங்கு. (தைல. தைலவ. ௧௩௫.)

பூலோகம்—பூமி; இது: மேலேழுலகினொன்று. (சூ. நிக. ௪௨: ௭௦.)

பூவண்டம்— } வெங்காயம். (வைத்திய
பூவண்டமயிர்— } பரிபா.)

பூவணம் — ஒரு தலம். (திருவாச. கீர்த்தி. ௫௦.)

பூவந்தம்—நிலவாகை. (வைத்தியபரி.)

பூவந்தவம்—நிலாவிரை. (வைத்தியமூ.அக.)

பூவந்தி—1. ஒரு மருந்து. 2. நொய்க்கொட் டான். 3. புன்குமரம். 4. பொன்னுங்காய்மரம். 5. ஓர் ஊர். 6. ஒரு தின்பண்டம். (5, 6-வழக்.) (2, 3, 4-வைத்தியபரி.)

பூவர்—பூ. (உ-ம்.) "பூவர்சோலைபுகுவலென் றெண்ணினான்" (சிந்தா. பதுமை. ௧௬௩.)

பூவரசு—ஒருமரம். (தைல.தைலவ.௧௩௫.)

பூவல்—1. சிவப்பு. (சூ. நிக. அ: ௨௦.) 2. செம்மண். (சிலப்.) 3. செம்மணல். (உ-ம்.) "தருமணற்றுழப்பெய்தில்பூவலூட்டி" (கலி. ௧௧௪.)

பூவலம்—ஒரு தலம். (உ-ம்.) "பூவலமதனிற் பொலிந்தினிதருளி" (திருவாச. கீர்த்தி. ௫௬.)

பூவலயம்— பூமண்டலம். (உ-ம்.) "பூவலயம் பூமலைதகவானோர்பொழிவுற்றார்" (கோயிற்பு. நடராச. ௬௪.)

பூவழலை—பூநீறு. (வைத்தியபரி.)

பூவள்ளம் — 1. சங்கக்கிண்ணம். 2. மண் கிண்ணம். (1, 2-தைல. பாயிர. ௪அ.)

பூவன்பழம் — நெய்க்கொட்டான் பழம். (வைத்தியபரி.)

பூவன்வாழை—ஒரு வாழை. (சோழதேச வழக்.) (வைத்தியபரி.)

பூவாணம்—ஒருவிதவாணம். (வழக்.)

பூவாதிகாரம்—சீனக்காரம்.(வைத்தியபரி.)

பூவாமற்காய்க்குமரம் — ஆல் முதலியன. (சூ. நிக. ௪: ௫௨.)

பூவாவஞ்சி—கருவூர். (உ-ம்.) "பூவாவஞ்சி யுந்தருகுவன்" (புறநா. ௬௨.)

பூவாளி—1. மன்மதன். (சூ. நிக. ௧: ௨௫.) 2. மன்மதன்பாணம். (வழக்.)

பூவிந்து—1. அப்பிரகம். 2. வீரம். (1, 2-வைத்தியபரி.)

பூவிந்துநாதம்—அப்பிரகம். (வைத்தியபரி.)

பூவிரட்டை—இரட்டைவடிவானபூ.(உ-ம்.) "இலைவிரட்டை"பார்.

பூவிரணம்—ஆண்குறிமலரின்புண். (உ-ம்.) "பூவிரணம்போக்கிவிடும்" (பதார்த்தகுண.)

**போழ்தல்**—பிளத்தல். (உ-ம்.) "அரம்போழவ் வளைக்குழமகள்" (ஐங்குறு. கஅக)

**போழ்து**—பொழுது. (உ-ம்.) "புதல்வர்" பார்.

**போழ்முகம்**—பன்றி. (பிங்கல. உறுஎஉ.)

**போழ்வு**—பிளப்பு. (உ-ம்.) "முரம்புகண் ணுடைந்தபரலவற்போழ்வில்" (மலைபடு. கககூ.)

**போழல்**—1. பிளக்குதல். (தைல. தைலவ. கச.) 2. வெடித்தல். (வழக்.)

**போளம்**—இலவங்கப்பட்டை. (மலையக.)

**போளி**—அப்பவருக்கத்தொன்று. (வழக்.)

**போற்றரவு**—போற்றல். அரவு-தொழிற் பெயர் விகுதி.

**போற்றல்**—காத்தல். (உ-ம்.) "போற்றினரி யவைபோற்றல்சுற்றத்தின் - தேற்றுதல்யார்க்கு மரிது" (வள். கூகூ) 2. துடைத்தல். (சிந்தா.) 3. தெளியவறிதல். (உ-ம்.) "அருந்திய தற்றதுபோற்றியுணின்" (வள். கூஉஉ.) 4. போற்றுதல், துதித்தல் 5 வணங்கல். (உ-ம்.) "மன் றமர்நடமுன்போற்றி" (கோயிற்பு. இரணிய. சoஎ.) 6. விரும்பல் (சிந்தா.)

**போற்றலர்**—பகைவர். (வழக்.)

**போற்றார்**—பகைவர். (உ-ம்.) "இடனறிந்து போற்றார்கட்போற்றிசெயின்" (வள். சகூ.)

**போற்றி**—எதிர்காலவினைமுற்றாய் ஈகாத்தல் செய்யென்னும்பொருளிலும், தொழிற்பெயர் முற்றாய்நின்று செயப்பாட்டுவினையாய்ப்போற் றப்படுவதென்னும் பொருளிலும் வியங்கோட் பொருளிலும் வரும்மொருமொழி (பெரியபு. இல்லைவாழ். கூ) விரும்பியென்னும் வினையெச் சப்பொருளிலும் வரும். (சிந்தா.)

**போற்றிசைத்தல்**—வந்தனஞ்சொல்லல், வாழ்த்தொலிசொல்லல். (உ-ம்.) "போற்றிசைத் துப்புரந்தரன்" (பெரியபு. திருவாரூர். சக.) "புறந்தருவார்போற்றிசைப்ப" (பெரியபு. மானக் கஞ்ச. கஉ.)

**போற்றிப்பஃறொடை** — ஒரு நூல். (இரு பா. உ.)

**போற்றிமார்**—ஒருவகைப்பிராமணர்; இவர் குடநாட்டுள்ளவர்கள்.

**போற்றிய**—வாழ்த்துப்பொருளில்வந்த ஒரு வியங்கோள்.

**போற்று**—1. காப்பு. 2. துதி. 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. போற்றுதல்; இது: முதனி லைத்தொழிற்பெயர். (பெரியபு. ஞான. சooஅ.)

**போற்றுதல்**—1. காத்தல். (உ-ம்.) "வேள்வி புலவாமலொருதன்மை வல்லவாரீயய தவல் கேபோற்றியென்னு" (கந்தபு. அசுரர். கூக.) 2. துதித்தல். 3. பேணுதல். (உ-ம்.) "எற்றனை குறுதக்கனக்கடவுளரியாரும்- போற்றியேதனை ச்சூழ்தர" (கந்தபு. பிரமயாகப். கூ.) 4. வணங் கல். 5. வளர்த்தல். (வழக்.) (4, 5-போற்றல் பார்.)

**போறல்**—போலுதல். (உ-ம்.) "கொங்கை போறலரிது" (தஞ்ச. கக.)

**போறி**—போல்கின்றாய். (ஐங்குறு.)

**போன்ம்**—போலும். (உ-ம்.) "தந்தையைக் கொன்றானைத் - தோளிற்றிருகுவான்போன்ம்" (கலி. சoக.) இது விகாரச்சொல்.

**போன்றிசின்**—போன்றது. இசின்-அசை. (ஐங்குறு.)

**போனகத்தி**—சமைக்கிறவள். (வழக்.)

**போனகம்**—1. சோறு. (உ-ம்.) "தெய்வ வாடகமனைச்செல்வப்போனகம்" (பாரத. வார ணை. ச.) 2. போசநம். (உ-ம்.) "போனகமென் பதுதானுழந்துண்டல்" கொன்றைவேந்.)

**போனபோக்கு**—நேரிட்டபடி. (வழக்.)

**போனம்**—1. உணவு. (உ-ம்.) "ஞானக்கிரி யைநடிப்பவர்க்குநாடோறும் - போனத்தளவே புசிப்பன்றி" (ஒழிவி. சரிதை. சு.) [போனக மென்பதன் விகாரம்.] 2. நிலக்கடம்பு. (வைத் தியபரி.)

**போனிறம்**—பொன்னிறம். (உ-ம்.) "போ னிறப்புத்திசேனன்" (சிந்த. காந். டகூசு.) [விகாரம்.]

## பௌ.

**பௌட்கரம்**—ஒருபாகமம். [இதற்குவியாக் கியாநஞ்செய்தவர் உமாபதிசிவாசாரியர்.]

**பௌட்டிகம்**—1. சோமயம். பூமியில் விழு முன் தாமரையிலையிலேற்பது சைவச. பொது. கசக. உரை.) 2. விருத்திசெய்வது.

**பௌடம்**—ஒருதேசம். பொருட்டொகை நிகண்டில், போடமென்றார். போடம்-பௌட மென்றாயதுபோலும்

**பௌடிகம்** — 1. பதினெண் புராணத் தொன்று. (பொட். நிகண்டு.) 2. முதல்வேதம். (பிங்கல. உoசo.)

**பௌண்டரம்** — 1. ஒருநாட்டுக்குப் பெய ரென்பர் (அபிதாநகோசத்தில்.) 2. வீமசேந னுடையவொருசங்கு. (பகவற்கீதை. க: கரு.)

**பௌத்தம்** — 1. அவைதிகசாத்திரங்கள் மூன்றினொன்று; இது: சௌத்திராந்திகம், வைபாடிகம், யோகசாரம், மாத்தியமிகம் என நான்கு பிரகாரமாய்ப் பிருதிவியாதி புத்தியந்த மான இருபத்துமூன்று தத்துவாத்மகமான பிர பஞ்சம், தீபச்சுவாலையைப்போலக்ஷணிகமாத்திர

மென்றுரைக்கும். (த. நி. போ.) 2. புத்தமதம். (வழக்.)

**பௌத்தமதம்** — புத்தசமயம். (சி. சி. உ: ருங. சிவாக்.)

**பௌத்தர்**—புத்தர்; இவர்: ஞானவிருத்தியாகிய புத்தியே ஆன்மா என்னும் ஞானமுடையவர். (சி. சி. உ: எங. சிவாக்.)

**பௌத்தன்**—புத்தமதத்தான். (வழக்.)

**பௌத்தாகமம்**—புத்தர்களுக்குரிய வாகமம்; இது: மூவகைப்படுமென்பர். (மணிமேகலையுரையில்.)

**பௌத்திரம்**—1. பரிசுத்தம். (வி-ணி.) 2. புத்திரற்குரியது.

**பௌத்திரன்**—1. சுத்தன். 2. மகன் மகன்.

**பௌத்திராட்டகர்**—வஸ்திரிபாதன், ருத்திரகோடி, அவிமுத்தன், மகாபலன், கோகர்ணன், பத்திரகர்ணன், சுவர்ணாக்ஷன், ஸ்தாணு என்பவர். (வி-ணி.)

**பௌத்திரி**—பேர்த்தி. புத்திரன், புத்திரி இவர்கள் மகள். (வழக்.)

**பௌத்திரை** — 1. ஒரு நதி. (வி-ணி.) 2. பௌத்திரமுடையவள், (திருவிளை. மலையத்துவ. கஎ.)

**பௌதன்** — புதன்மகன், புரூரவாவென்பவன். (வழக்.)

**பௌதிகதீட்சை**—உலோக தருமணி திட்சை. (சைவச. ஆசாரிய. சுஉ. உரை.)

**பௌதிகப்பிரமசாரி**—பாலியவயதுதொடுத்துக் கந்நிகா கல்யாணகாலம்வரையும் விரதநியமித்துத் துறவியாயிருப்பவன். (சைவச. ஆசா. சுo. உரை.)

**பௌதிகபாவனை**—உருவபாவனை. (கூர்ம. வருணைச். சங. உரை)

**பௌதிகம்** — 1. சாகவியவிழா ஒன்பதனுளொன்று; அது: ஐந்துநாளளவுள்ளதாகக்கொடியேற்றிப் பலியிட்டு மில்லாமலுஞ் செய்யப்படுவது. 2. கருநெல்லி. (வைத்தியபரி) 3. பூதங்களாலாயது.(உ-ம்.)"பந்தமாயசித்தாயான் மாப்பௌதிகமாகுமன்றே" (சி. சி. சு: கஉ.)

**பௌதிகபோகசந்நியாசி**—சகுணபாவனையாகிய பௌதிகபாவனையில் நிற்பவன். (கூர்ம பு. வருண. சo.) உரை.)

**பௌதிகயோகி**—மூவகையோகிகளுள் ஒருவர். (கூர்மபு. வருண. சo. உரை.)

**பௌதிகாசாரியன்** — சாதகாசிரியன். (சி. சி. அ: டு. சிவாக்.)

**பௌதீகம்**—1. உலகம். 2. பூதசம்பந்தம்.

**பௌமதேயு** — காஷ்டாதியுள்ள அக்கினி. (த. நி. போ.)

**பௌமம்**—நிலத்திற்பிறப்பன.

**பௌமன்**—செவ்வாய். (சூ. நிக. க: சுo.)

**பௌமி**—சீதை, பூமிசம்பந்தமாகப்பிறந்தவள்.

**பௌர்ணமி** — } பூர்ணை. (வழக்.)
**பௌர்ணிமை** — }
**பௌர்ணை** — }

**பௌரம்**—பட்டினம். புரசம்பந்தமென்பர்.

**பௌரவர்** — பூருவங்கிசத்தவர், குருகுலவேந்தர். (பிங். ம. எகூஅ.)

**பௌராணகம்**—புராணமதம். (வழக்.)

**பௌராணிகர்** —புராணத்தைமுக்கியமாகக் கொண்டவர். (சி. சி. உ: எக. சிவாக்.)

**பௌருடம்** —பௌருஷம்; அது: புருடத்துவம். (வழக்.)

**பௌருடேயம்** —புருஷராற்கூறப்பட்டது. (சி. சி. அளஅ. எக. சிவாக்.)

**பௌரோகித்தியம்** — புரோகிதத்தன்மை (வழக்.)

**பௌலத்தியர்** — இராவணன், குபேரன் முதலாயினோர். புலத்தியன் மரபினராதலினால் வந்தபெயர்.

**பௌலோமி** — புலோமன்புத்திரி, புலோமசை. (வழக்.)

**பௌவநம்** -- புவனசம்பந்தம். (சி. சி. டு: எ. ஞானப்.)

**பௌவம்**—1. கடல். (உ-ம்.) "பௌவமூழ் குசூர்" (திருவிளை. அட்டமா ரு.) 2. நீர்க்குமிழி. (உ-ம்.) "பௌவவாரிதி" (கூர்மபு. வருண ரு.) 3 பூர்ணை. 4 மரகதணு. (3, 4- சூ. நிக. கக: வைரமேக. கசு.)

**பௌவியர்**—புட்பதீபத்தரசன். (வி-ணி)

**பௌளி**—1. குறிஞ்சிராகம் (பொருட்டொகை நிகண்டு.) 2. பூபாளத்தின் மனைவி.

## ம.

ம—1. அசோகு. 2. ஆணவமலம். (காஞ்சிப் பு. பாயிர. ச.) 3 சிவன. 4 பிரமன். 5. பெருங்காயம். 6. விட்டுணு. 7. விடகலை. (சி-வி. கிரி. க. உரை.) (1, 2-வைத்தியபரி.) (1,3,4,6- (உ-ம்.) வந்தழிக்காண்க.)

**மக்கட்பாட்பு**—மண்பதை. (பிங்கல.கூருக.)

**மக்கடா**—மந்தன். (வழக்)

**மக்கநம்**—கேலி. (வழக்.)

**மக்கம்**—1. எருக்கு. (மலையக.) 2. ஒரு தேயம். (உ-ம்.) "வேரியம்பணைசூழ்மக்கமிக்கொக்கு" (திருவிளை. நரிபரி. கoரு.) 3. நெய்வார்தறி. [தெலுகு.]

மக்கல் — உக்ததல். (வழக்.)

மக்கள்—1. மாார். (உ-ம்.) "மக்களையிங்கில் லார்சவா" (நளவெண்பா.) 3 மனிதர். (சூ. நிக. உ: அசு) —

மக்களித்தல் 1. சளுக்ருதல். 2. திரும்புதல். (1, 2-வழக்.)

மக்களிப்பு - மக்களித்தல். (வழக்.)

மக்காச்சோளம்—பெரியசோளம். (வழக்.)

மக்கு — 1. அடைமண். கம்மாளர் வழக்கு. 2. தொங்கலைவினைப்பகுதி. 3. மந்தகுணம். (வழக்.)

மக்குதல்—அழிதல். (வழக்.)

மக்குலம்—சிலாசத்து. (வைத்தியபரி.)

மக—1. இளமை. (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. பிள்ளை. (இராமா. நகாநீங்குட. ககடு.) 3 மகத்து. (தஞ்சைவாண. பருங்தொன்றவென்னு மூதற்குறிப்புள்ளகவியிற் காண்க.)

மககத்துழை — மாவிலை. (தைல. அநுபந்த. சுக)

மககம்—ஆமை. (வைத்தியபரி.)

மகட்பாற்காஞ்சி—ஒரு துறை. (புறநா.)

மகடி—ஒருதுகுழல். (வழக்.)

மகடூஉ—பெண். (பி. நிக. கூசடு)

மகடூஉக்குணம்—பெண்ணுக்குரிய குணங்கள்; அவை: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. நாணம்: பெண்டிர்க்கியல்பாகவுள தொருதன்மை. மடம்: கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை. அச்சம்: பெண்மையிற் றன் காணப்படாததோர் பொருள்கண்டவிடத் தஞ்சுவ . பயிர்ப்பு: பயிலாதபொருட்கண் அருவருப்பு தோற்றும் நிலைமை. (இறையனு.)

மகண்மறுத்தல்—ஒரு துறை. (புறநா.)

மகண்மா -1. அலி. (உ-ம்.) "மைந்தரைப் பார்ப்பவை மகண்மாக்குலங்களும்" (சிந்தா. விமலை. கச.) 2. ஓர் மிருகம்; இது: பெண்கள் முகம்போல முகத்தையுடையதென்பர். (காஞ்சிபு. நகரேற்றுப. கசு.)

மகத்—1. சிதம்பரம். (உ - ம்.) "இரண்மய கோசமகத்தனிபுண்டரிகம்" (கோயிற்பு. வியாக் கிர. உக.) [பெரிதாதலின் இப்பெயர் பெற்றது.] 2. பெரிது.

மகத்தத்துவம் — மான் என்னுந்தத்துவம். மகத்தத்துவத்தாற் புத்தியென்று மொருபெயருண்டு. (மணிமேகலை.)

மகத்து—1. அதிகமானது. 2. சாமவேத உபகூடத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உலா.) 3. (சைவமதத்தில்)சிவதத்துவம்.(சி-லி. ஞான. க.) 4. (வேதாந்தாதி மதங்களில்) பிரகிருதிதத்துவம். (சி-லி.ஞான. க.) 5. பெரியவர்.

மகத்துச்சநி—மகநட்சத்திரத்துவருஞ்சநி. (உ-ம்.) "அடையார்தமக்கு-மகத்துச்சநியன்ன சங்கிரவர்னன்" (தஞ்சைவா.) இவன் மிகத் துன்புஞ்செய்வானென்பர்.

மகத்துதி —மாயாதத்துவத்திலிருக்கும் எட்டுப் புவநங்களுளொன்று. (சி-லி ஞான.)

மகத்துவம்—மேன்மை. (உ - ம்.) "புலவீர் காண்மகத்துவமாமணிகொளிக்கும்" (சிவரக. அபுத்திபூருவ. ரு.)

மகத்த்துவம்- அறிவு, புத்திதத்துவம்; இது: மகேசன் புருடனையும் பிரகிருதியையும்நோக்க அவை தத்தம நிலைகளினின்றும் சலனப்படும். அப்போது பிரகிருதியினின்று தோன்றிற்று. (உ-ம்.) "அன்னதோர்கங்குற்புலரியிலுலகுக்காதியாமநாதியாமகேசன்—புருடன்வளர்பிரகிருதியைநோக்கத்-தந்நிலைகலங்குமதனிடையுதித்த துயர்மாதத்துவந்தானே" "அனையகன்மகத்துவதினைப்புத்திமகான்மதிபிரக்கினை யான்மாவனைதருங்காதியேதையீச்சுரனென் றுரைப்பர்" (கூர்மபு. பிரகிருதி. எ, அ.)

மகதந்திரம் — சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று. (அபிதாநசி.)

மகதம்—1. தேயம் ஐம்பத்தாறினொன்று. (சிந்தா.) 2. பதினெண்பாடையினொன்று. (பொருட்டொகை நிகண்டு.)

மகதர் —மாகதர்.

மகதி—1. திப்பிலி. (வைத்தியபரி.) 2. நாரதருடைய வீணையினொருபேர். (உ - ம்.) "மகதியாழ்" (சிவரகசி. பாவநாச. உ.)

மகதியாழ்—நாரதமுனிவரதுயாழ். (உ - ம்.) "மகதியாழ்முனிவார்த்தைகேட்டருளின் மைந்தன்" (சிவரக. பாவநாச. உ.)

மகதை—திப்பிலி. (வைத்தியபரி.)

மகந்தரம் — 1. கள். 2. பதநீர். (1, 2- வைத்தியபரி.)

மகப்பால்வார்த்தல் – அநாதப்பிள்ளைக்குப் பாலூட்டல்; இஃது: அறம் முப்பத்திரண்டி னொன்று. (பொருட்டொகை நிகண்டு.)

மகப்பெறுவித்தல்–மகவைப்பெறுவித்தல்; இஃது: அறம முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிகண்டு.)

மகபதி —இந்திரன். (உ-ம்.) "கயாசுரனேச்சினன்மகபதிமயங்க" (கந்தபு. ததீசியுத்தர. கருரு.)

மகம் —1. இருபத்தொன்று. (தைலவ.) 2. ஒரு நட்சத்திரம். (சூ. நிக. கக: ககரவெ. உ.) 3. யாகம். (உ - ம்.) "எண்ணிலாமகங்களாற்றிலம்" (பிரமோ. சோமவார. கவ.)

மகம்பூ—பெருஞ்சீரகம். (வைத்தியபரி.)

**மகமதுமார்க்கம்**—துலுக்கர்மார்க்கம். (வழக்.)

**மகமாயி**—பார்ப்பதி. (உ-ம்.) "மகமாயிபரையாம்" (சிவரக. தாருக. உக.) திருக்கானப்பேரூராலயத்திருக்குந்தேவியாருக்கும் பெயர். (அபிதானகோ.)

**மகமேரு** — மகாமேருமலை. (சி. சி. க: எ௦. மறை)

**மகமை**—தருமக்கொடை. (வழக்.)

**மகரக்குழை**—மகரகுண்டலம். (உ-ம்.) "சோதிமகரக்குழைசெறிதோளிராறுடையானை" (திருப்போ. காப்பு ரு.)

**மகரக்குறுக்கம்**—ணகாரனகாரங்களிலொன்றின்முன்னும் வகாரத்தின்பின்னுமவரும் மகரம். (நன். எழுத்தி. சக. உரை.)

**மகரக்கொடியோன்**—மகரத்துவசன் (வழக்.)

**மகரகந்தம்** — 1. தேமா. 2. வெண்காயம். (1, 2-வைத்தியபரி.)

**மகரகுண்டலம்**—காதணியிலொன்று; அது: மகரவடிவாகச்செய்யப்பட்டது (உ-ம்.) "மகரகுண்டலமணித்திருவில்" (அரிச்சபு. நாட்டு. உஎ.)

**மகரகேதனன்**—மன்மதன் (சூ.நிக.க: கூரு.)

**மகரகேது**—மகரகேதனன்.

**மகரசகா**—வாடாப்பூவுள்ள மருதோன்றி. (வைத்தியபரி.)

**மகரசங்கிராந்தி**—தைமாசப்பிறப்பு. (வழக்.)

**மகரசாலம்**—மாமரம். (வைத்தியபரி.)

**மகரத்துவசன்**—மகரகேதனன்.

**மகரதோரணம்** — மகரவடிவாகச் செய்யப்பட்ட தோரணம். (உ-ம்.) "கொடிநெருங்கினமகரதோரணங்கள்வெண்குடையொடும்சருடிப், படிநெருங்கின"(சிவரக.தேவியிமை.உசு.)

**மகரந்தப்பூ**—வெந்தயம். (வைத்தியபரி.)

**மகரந்தம்** — 1. கள். 2. குயில். 3. தேமா. 4. தேன. 5. பூந்தாது. (உ-ம்.) "மாமகரந்தமாகந்தக்-கொம்பெலாமிருந்துகுயி லினங்கூவ" (பாரத. அருச்சுனன்றவ. ருரு.) 6. பூந்தேன். (1, 2, 3, 4, 6 வைத்தியபரி.)

**மகரந்தவதி**—பாதிரிப்பூ. (வைத்தியபரி.)

**மகரந்தாட்டகாசம்**—முசுலைச்செடி. (வைத்தியபரி.)

**மகரந்தேளகம்**— புஷ்பம். (வைத்தியபரி.)

**மகரப்பகுவாய்**—சுறுவினது அங்காந்தவாய்போலப்பண்ணின தலைக்கோலம் (உ-ம்.) "திருநுதன்மகரப்பகுவாய்தாழமண்ணுறுத்து" (திருமுரு. உரு.)

**மகரம்**—1. இராசசின்னத்தொன்று. (சூ.நிக. கக: ௯௨௦.) 2. ஒரு சாயகிதம். (வழக்.) 3. ஓரிராசி. (வருஷாதிநூல்.) 4. ஓரெழுத்து. (நன்னூ. மெய்யீ. ௩௩. உரை.) 5. குபேரனவநிதிகளுளொன்று. (பொருட். நிகண்டு.) 6. குறங்குசெறியாபரணம். (சிந்தா. நாமக. கசரு. உரை.) 7. சுறுமீன். (உ-ம்.) "மகரசலந்தரனாத்தருவேதவநத்தன்" (மறைசை. க௦.) 8 பூந்தாது. (சூ. நிக. கக: கரவெ. க.) 9. முதலை. (வி-ணி.)

**மகரப்பூ**—வெந்தயம். (வைத்தியபரி.)

**மகரமாதம்**—தைமாதம். (வழக்.)

**மகரயாழ்**—நால்வகையாழிலொன்று; அது: பதினேழு நரம்புகொள்ளப்படுவது. (மணிமே. சிறைக்கோட்ட. உரு. உரை.)

**மகரயூகம்**—படைவகுப்பிலொன்று.(கூர்மபு. தக்க-வமி. சஉ. உரை.) [மகரவியூகம்"பார்.]

**மகரரேகை** — தனவானிலக்கணம், கையில்லிருப்பது.

**மகரவலயம்**—தலைக்கோலம். (பரிபாடல்.க.)

**மகரவாகனன்**—வருணன். (வழக்.)

**மகரவாய்** — மகரவாயாகச்சமைந்த தலைக்கோலம். (கலி கசுச.)

**மகரவாய்மோதிரம்**— கால்விரலணியுளொன்று. (சிலப் கடலாடு. அரு. உரை.)

**மகரவாழை**—காட்டுமல்லிகை. (மலையக.) 2. மருது என்றுபேர். (பி. நிக. உஎ௦க.)

**மகரவியூகம்**—மகரரூபமாக வகுக்கப்பட்ட படைத்தொகுதி. (உ-ம்.) "வருபடைதன்னைநிறுத்திவிதம்படமகரவியூகம்வகுத்து" (பாரத. பதின்மூன்றாம்போ. எ.)

**மகராகரம்**—மகராலயம்; அது: கடல்.

**மகராங்கன்**—காமன். (வழக்.)

**மகராசழலி**—மண்ணீரல். (வைத்தியபரி.)

**மகராசன்**—1. அரசன். 2. பாக்கியவான். (1, 2 வழக்.)

**மகராசி**—பாக்கியவாட்டி. (வழக்.)

**மகராலயம்**—கடல். (உ-ம்.) "இருணார்மகராலயமீர்" (கோயிற்பு. வியாக்கிரபாத. க௦.)

**மகரி**—கடல், மகரத்தையுடையது.

**மகரிகை**—1. குரங்குசெறியென்னுமணி. (உ-ம்.) "மாதின்மகரிகைவயங்குபொற்பூண்குழூறுகவானேபோலும்" (கந்தபு.மாயை.ருக.) 2. யானையணிகளிலொன்று.(உ-ம்.)"மகரிகையுமிருபணைகளும்விரிநுதன்மருவுகலனொடுமினலெனவொளிவிட" (பாரத. பதினாறாம்போர். ௨௦.)

**மகருதம்**—கொடிவேலி. (மலையக.)

**மகலோகம்**—மேலேழுலகிலொன்று; அது: மரீசி, மார்க்கண்டர், சித்தர் முதலியோர் வசிக்கும் பதம்.

**மகவாட்டி**—குழந்தைப்பிள்ளைக்காரி. (வழக்.)

**மகவான்**—1. இந்திரன். (பிங்கல. ௧௬௦.) 2. சிவன். (மரு-தி. அ.) [ஒளியையுடையவனென்றபடி.]

**மகவு**—விலங்கின்பிள்ளை. (பிங்கல. உ௫அ௯.) 2. மகன். (உ-ம்.) "மகவினுசையாவினையக்கொள்ளைகொள்ள" (அரிச்ச. மயாந. உ௦.)

**மகள்**—1. புத்திரி. (பி. நிக. ௯௨௧.) 2. பெண். (உ-ம்.) பூமகள்.

**மகளிக்கீரை**—ஒரு கீரை. (வழக்.)

**மகளிர்**—பெண்கள். (உ-ம்.) "வேதியர்மகளிரேமுதல" (பிரமோ. சிவராத். ௬.)

**மகளிரான்மலர்மரம்** — மகடூஉக்காரணமாக மலருமரம்; அவை: அசோகு, ஏழிலைம்பாலை, குரா, குருக்கத்தி, சண்பகம், பாதிரி, புன்னை, மகிழ், மா, முல்லை இவை முறையே உதைக்க, நட்புற, அணைக்க, பாட, நிழலபட, நிந்திக்க, ஆட, சுவைக்க, பார்க்க, நகைக்கத் தளிர்த்துப் பூப்பனவாம். (சூ. நிக. ௯௨: ௧௦அ.)

**மகன்**—1. ஆண்பாற்பிள்ளைப்பொது. (பிங்கல. அ௬௬.) 2. கணவன். (சிலப்.) 3. புருடன். (உ-ம்.) "நோதகவுண்டோநும்மகனார்க்கினி" (சிலப். கொலைக்கள. ௬௭.)

**மகன்மை**—1. ஆண்டன்மை. மகன்-புருடன். மை-விகுதி தன்மைப்பொருளுணர நின்றது. 2. புத்திரத்தன்மை. (உ-ம்.) "அரசிளங்குமரற் கேற்பவன்பினுன்மகன்மைகொண்டார்" (பெரியபு. தடுத்தாட். ௫.)

**மகன்றில்**—ஒரு புள். (உ-ம்.) "சோர்துன்றிருத்தறேற்றுமெணபிரிமகன்றிலொத்தாள்" (சிந்தா. நாமக. உ௭௬.) நீர்வாழ்பறவை என்பர். (புறநா.)

**மகனை**—மகனுகவுள்ளாய். (புறநா.)

**மகா**—பெருமைமிகுதி மேன்மையிவற்றை விளக்குமோருபசருக்கம். (உ-ம்.) "தேவாதிதேவமகாசிருத்ரகோரசசிசேகரேச" (சிவரக. கணபதிவந்தனை. ௯௨.)

**மகாகண்டம்**—ஒருபௌத்தநூல். (மணிமே.)

**மகாகணரோகம்**—கணரோகபேதத்துளொன்று; அது: முகம், புறங்கால், புறங்கை என்னுமிடங்களில் மினுமினுப்பு, நகமும்விழியும் வெளிறல், மயக்கம், மிகுந்தவெதும்பல், உதடு புண்போற்சிவந்திருத்தல் என்னுமிக் குணங்களை யுண்டாக்கும். (சீவரட். உ௧௬.)

**மகாகந்தம்**—உள்ளி. (வைத்தியபரி.)

**மகாகபித்தம்**—வில்வமரம் (வைத்தியபரி.)

**மகாகாயம்**—பெருவெளி, ஆகாயம். (வழக்.)

**மகாகாயன்** — திருக்கையிலையின் றெற்கு வாயில்காப்போன். (அபிதாநசி.)

**மகாகாலம்**—1. நெடுங்காலம். 2. மாமரம். (வைத்தியபரி.)

**மகாகாலன்**—சிவபிரானுக்கொரு பெயர். (அபிதாநசி.)

**மகாகாளம்**—1. ஒரு சிவதலம். 2. ஒரு தீர்த்தம். 3. பிரதிட்டாகலையில் தேயுதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. உ௯. தாற்.) (சி. சி. அ: எ. ம௬௬.) (1, 2-அபிதாநகோ.)

**மகாகாளர்**—1. அரிகரபுத்திரர் சேநாபதி. 2. சிவகணத்தலைவர். 3. சிவமூர்த்தத்துளொன்று. (1, 2, 3-அபிதாநசி.)

**மகாகாளன்**—1. அதிசுட்யாட்டகரிலொருவர். (வி-ணி. உ௭௧.) 2. சிவலோகத்திலே மகாதேவனரண்மனையில் வடக்குவாசற் காவலன். (வி-ணி. உ௬௬.)

**மகாகாளி**—சத்திகளிலொருத்தி. (வி-ணி. உ௬௧.)

**மகாகாளிசரண்**—களாவிழுது. (தைல. தைலவ. ௧௧௬.)

**மகாகாளேசுவரம்**—ஒரு சிவதலம். (அபிதாநசி.)

**மகாதம்பி**—பெரும்பூசனி. (வைத்தியபரி.)

**மகாதம்பிநீ** — ஒரு பாலாரிட்டதேவதை. (வி-ணி உ௬அ.)

**மகாகேசம்**—மனுஷர்கையில் நூறுமுழம். (த. நி. போ. ௬௬உ.)

**மகாகைலாயம்**—சிவபிரான் வீற்றிருப்பது. இதன்விவரம், அபிதாநசிந்தாமணியிற்காண்க.

**மகாகோணி**—இலட்சங் கோடாகோடி. (வழக்குண்டுபோலும்.)

**மகாகோரம்** — நரகத்தொன்றினிடம். (அபிதாநசிந்தாமணியில் அதிகோரமென்றுள்.)

**மகாகோளி**—ஒரு சரக்கதிரவியம். (உ-ம்.) "வாலுகமகாகோளிமகிழம்" (தைல. தைலவ. ௭௭.)

**மகாச்சர்யம்**—ஆலமரம். (வைத்தியபரி.)

**மகாசகா**— / **மகாசகை**— } வாடாப்பூவுள மருதோன்றிமரம். (வைத்தியபரி.)

**மகாசங்கம்**—ஆயிரங்கோடாகோடி.

**மகாசங்காரம்**—சர்வோபதாந காரணமாகிய மகாமாயையிற் சர்வதத்துவங்களு மொடுங்குஞ் சங்காரம். (சி-வி. ஞாந. உ௪. உரை.)

**மகாசங்கை**—சங்கை பதின்மடங்கு கொண்டது. (த. நி. போ. உ௫.)

**மகாசண்டன்**—நமன் ஏவலாளன். (சிவதரு. ௭: ௪௦௦.)

**மகாசாத்தா**—அரிகரபுத்திரன். (அபிதாநசி.)

மகாசதாசிவன்—இருபத்தைந்து திருமுகத்தை யுடையவனென்றுஞ், சதாசிவமூர்த்திக்கு மேற்பட்டவரென்றுங்கூறுவர். (அபிதாநசி.)

மகாசநம்—1. உயர்ந்தோர். 2. பிராமணர். (1, 2-வழக்.)

மகாசம்பு—பெருநாவல். (வைத்தியபரி.)

மகாசம்மோகநம்—அறுபத்துநாலு கலைகளி னொன்று; அது: விழித்திருப்பவர்களைமெய் மறந்து நித்திரைகொள்ளச்செய்வது. (சௌந் தரியலகரி. கூ0. உரை.)

மகாசமுத்திரம்—எண்மாநத்திற் பதினெட் டாவது தானம். (சி-வி. ஞாந. உடு. உரை.)

மகாசாகரம்—சாகரம்பதின்மடங்கு கொண் டது. (த. நி. போ. உ௫.)

மகாசாந்தபநம்—ஆறுநாளாயநுட்டிக்கு மோர் விரதம்; அது: முதனாட்சலமும், இரண் டாநாட்கோமயமும், மூன்றுநாட்பாலும், நாலா நாட்டயிரும், ஐந்தாநாணெய்யும், ஆறுநாட் டருப்பையவித்தநீரும் உண்டனுட்டிப்பது. (உ-ம்.) "வந்தழிக்காண்க.

மகாசாலி—பெரும்பீர்க்கு. (வைத்தியபரி.)

மகாசித்தர் — ரைவதகமென்னும் ஐந்தாம் பவநாதார மேகாசிரயபட்டணத்திலிருப்பவர். (வி-ணி. உகூக.)

மகாசித்தன்—கைலாயத்தின் கீழைத்துவார காவலாளி. (அபிதாநசி.)

மகாச்சுவாலை — விபசாரிகளடையுமொரு நரகம். (அபிதாநசி.)

மகாசுவாசரோகம்—சுவாசரோக பேதத்து ளொன்று. (சீவரட். ௫அ.)

மகாசுவேதம் — சிறுவாலுளுவை. (வைத் தியபரி.)

மகாசேநர்—ஐம்பத்தோருருத்திரரிலொரு வர். (வி-ணி. உஎசு.)

மகாசைவர்—வைதிகப்பிராமணர்களுள்ளே சிவதீட்சைபெற்றவர். (சைவவி. கூக.) [இவர் சிவப்பிராமணரிடத்துத் தீட்சைபெற்ற பூசுர ரென்று சிலர் சொல்லுவர்.] (சைவச.)

மகாசோபம்—நூறுகோடி கோடாகோடி. (வழக்குண்டுபோலும்.)

மகாத்துமா—1. அறிஞர். (சி. சி. ௬: உஎ. சிவாக்.) 2. பெரியவர்.

மகாத்துதி — வித்தியாகலையில் மாயாதத்து வத்திலுள்ள எட்டுப்புவநங்களுளொன்று. (சி. சி. அ: மறை.)

மகாத்மியம்—மான்மியம். (த.நி.போ.உசஎ.)

மகாதசர் — வித்தியா தத்துவத்திலிருக்கு மோருருத்திரர். (வி-ணி. உஎச.)

மகாதலம்—1. அரிதாரம். (வைத்தியபரி.) 2. கீழேழுலகிலொன்று. (சூ. நிக. கஉ: எக.)

மகாதாநம்—1. சத்திரியராற்செய்யப்படுந் தாநங்களிலொன்று. (த. நி. போ. உ௫) 2. பெருங்கொட்டை. (வைத்தியபரி.)

மகாதிசை — சோதிடத்திலே பலாபலனை யறிவிப்பது. [தசை-திசையென வழங்குகின் றது.]

மகாதிம்பம்—பெருமரம். (வைத்தியபரி.)

மகாதுருமம்—அரசு. (வைத்தியபரி)

மகாதேசம்—பாதரசம். (வைத்தியபரி.)

மகாதேவம் — நிவிர்த்திகலையில் இருபத் தெட்டுப் புவநங்களுளொன்று. (சி. சி. எ. மறை.)

மகாதேவன்—1. கடவுள், சிவன். சந்திரனை யதிட்டித்திருக்குஞ் சிவமூர்த்தம் என்பர். (அபி தாநசிந்தாமணியில்.)

மகாதேவாஷ்டகர்—குரோதசன், சண்ட சண்டன், சங்வரதன், சோதிபிங்கலன், சுரா கன், பஞ்சாந்தகன், ஏகவீரன், சிகேசன் என் னும் பிரகிருதிதத்துவத்திருக்கும் அஷ்டகர். (வி-ணி. உஎகூ)

மகாதேவி—பார்வதி. (வழக்.)

மகாநடம்—தமித்தியர் பட்டணங்களினொ ன்று. (த. நி. போ. கூகூச.)

மகாநடனன்—சிவன். (வழக்.)

மகாநதி—கங்கை. (வழக்.)

மகாநவமி — புரட்டாதிமாசத்துச் சுக்கில பக்ஷ நவமி. (சை. வி.)

மகாநாகம்—1. சுரப்புன்னைமரம். (வைத் தியபரி. 2. பெருஞ்சர்ப்பம்.

மகாநாமியம்—பிராமணர் செயற்பாலவாகிய சோடச கர்மங்களிலொன்று. (த.நி.போ.உச.)

மகாநிம்பம்—பெருவேம்பு (வைத்தியபரி.)

மகாநீலம்—கையாந்தகரை. (மலையக.)

மகாநுபாவன்—மகாத்தமன். (வழக்.)

மகாநேமி—காகம். (வைத்தியபரி.)

மகாப்பிரகாசசத்தி—அப்பிரகம். (வைத் தியபரி.)

மகாப்பிராணம்—காகம். (வைத்தியபரி.)

மகாபட்சி—ஆந்தை. (வைத்தியபரி.)

மகாபத்திரம்—பனைமரம். (வைத்தியபரி.)

மகாபத்மம் — 1. எண்மாநத்திற்பதினுலா வது தானம். (சி-வி. ஞாந. உ௫.) 2. சூரியனது குதிரையைப்பந்திக்குமொருசர்ப்பம். (வி-ணி. உசடு.)

மகாபதுமம்—1. குபேரநவநிதியினொன்று. (பொருட். நிகண்டு.) 2. பத்துக்கோடாகோடி. (வழக்.)

**மகாபதுமன்**—அட்டநாகத்தொன்று; இது: படத்திலும் முகத்திலும் இராசரத்தநக்கல்லை யொத்த புள்ளிகளையுடையதாயிருக்கும். (சீவ ரட். ௩௩௨.)

**மகாபலை**—அதர்மத்தின் புத்திரர் மூவரு ளொருவன். (வி-ணி. உ௫எ.)

**மகாபாரதம்**—சாரங்கதேவமுனிவரால் வட மொழியிலே ஓரிலக்கங்கிரந்தமாகச் செய்யப் பட்ட பாரதநூல். அகத்தியமுனிவருந் தமிழில் ஆராயிரஞ்சூத்திரமாகச்செய்யப்பட்ட பாரதநூ லுமாம். (அபிதாநகோ)

**மகாபல**—பிரட்டகலையில் பிருதுவிதத் துவத்திருக்கும் நூற்றெட்டுப் புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி உக. ௬௩.)

**மகாபலலிங்கநாதர்**—திருக்கோகர்ணத்தா லயத்திருக்கிற சுவாமிபெயர். (அபிதாநகோ.)

**மகாபலம்**—1. கொளிஞ்சி. (மலையக.) 2 தூதுவளை. 3. தெங்கு. (2, 3-வைத்தியபரி)

**மகாபலன்** — சதருத்திரரில் வருணதிக்கி லிருக்குஞ் தசருத்திரரிலொருவன். (வி-ணி. உ௯௦)

**மகாபலி** — பலிச்சக்கிரவர்த்தி. (மணிமே. சிறைக்கோட்ட. ௫௪. உரை.)

**மகாபலை**—வில்வம். (வைத்தியபரி.)

**மகாபாகன்**—பாக்கியமுள்ளவன். (சி. சி. ௬: ௩௪. சிவாக்)

**மகாபாடியம்**—பேருரை. (பி. வி எக.)

**மகாபாதகம்**—பெரும்பாதகம்; அவை: கொலை, களவு, பொய், கள்ளருந்தல், குருநிந் தை யென்பன. இப் பஞ்சபாதகமும், இவை யன்றி, பிரமக்கொலை, வேதாத்தியயனம்விடு தல்,பிறர்மனைநயத்தன்முதலியனவுங்கூறுவர். (அபிதாநசி.)

**மகாபாரதம்**—ஒருநூல்; இது: சபாதலக்ஷங் கிரந்தமுள்ளது)

**மகாப்பிரகாசசத்தி**—அப்பிரகம். (வைத் தியபரி.)

**மகாபித்தம்**—வில்வமரம் (வைத்தியபரி.)

**மகாபுண்ணியை**—ஒருநதி.(வி-ணி. உ௩௨.)

**மகாபூ**—பெருஞ்சீரகம். (மலையக.)

**மகாபூரி**—ஆயிரங்கோடிகோடி கோடா கோடி. (வழக்குண்டுபோலும்.)

**மகாபெலா**—பேராமுட்டி. (மலையக.)

**மகாமகம்**—மாசிமகத்திற்குருவருநாள், சிங்க ராசியிற் பிருகற்பதி பிரவேசமாயிருக்கும் மாசி மாசத்துப் பௌர்ணிமை; அது: கும்பகோணத் திலேயுள்ள மகாமக தீர்த்தத்திலே ஸ்நாநஞ் செய்தற்குரிய விசேஷபுண்ணியநாள். (அபி தாநசி.)

**மகாமந்திரர்**—விஞ்ஞாநகலர்களிற் பக்குவ மலர். (சி-வி. ஞாந. ௬. உரை.) [அட்டவித்தி யேசுவரரைக்காட்டிலும் தாரதம்மியத்தாற் கொஞ்சங்குறைந்த மலபரிபாகமுள்ளவர்களாய் அவர்களுடைய பரிவாரங்களாய்ச் சப்தகோடிபே ருள்ளார்; இவர்கள்: சுத்ததத்துவவாசிகள். இவர் களில் மூன்றரைக்கோடிப்பேர் மலபரிபாகதார தம்மியத்தாலே குருக்களாயிருக்கிறார்கள். இவர் களை யதிகாரமுடிவில் பரமேசுவரர் (சதாசிவர்) குருமூர்த்தியதிட்டாநமின்றி நேரிடத் தாமே யநுக்கிரகம் பண்ணுகிறார். மற்றப்பாதி மூன் றரைக்கோடிப்பேர்களையும் மாயாதத்துவாவிலதி காரமுள்ளவர்களாகச்செய்து சங்காரகாலத்தில் குருமூர்த்தியையதிட்டித்து அநுக்கிரகிக்கிறார். இவ்வாறன்றி விஞ்ஞாநகலர்களிற் பக்குவம் வந்தபேர்களில் தீவிரபக்குவம்வந்தபேர்கள் சிவ னாலே தீட்சைபண்ணிக்கொண்டு மலநீங்கித் தூலமலவாசனைக்கீடாக வைந்தவதேகிகளாய்த் தூலசிவத்துவாவியத்தி விளங்கிச் சுத்தவித்தை யிலே யிருக்கின்றார்கள் இவர்கள் சத்தகோடி பேர். இவர்கள் அட்டவித்தியேசுரராலே பிரே ரிக்கப்படுவரென்றும், இவர்கள் மூன்றரைக் கோடி பேர் குருவையதிட்டித்துச் சகலரை யநுக்கிரகிக்குமிடத்துக் காரணமாயிருந்து மகாப்பிரளயத்திலே மோக்கத்தை யடைவர். மற்ற மூன்றரைக்கோடியரும், சிவன் குருவை யதிட்டியாமல் விஞ்ஞாநகலரையும் பிரளயாகல ரையுமநுக்கிரகிக்குமிடத்துக்காரணமாயிருந்து அதிகாரத்தில் வைராக்கியத்திலேசிருட்டிக்குப் பின்பாக மோக்கத்தை யடைவார்களென்றும் சிவப்பிரகாசவுரையிற்கண்டது. (சி. பி. அ.)]

**மகாமாயி**—துர்க்கை. (வழக்.)

**மகாமாயை**—சுத்தமாயை (சி. சி. ௧: ௫௧. சிவாக்.)

**மகாமாரி**—ஒரு தேவதை, மூன்றுசிரமுங் கறுப்புநிறமு சதுர்ப்புயமுமாயு தங்கவுமுள் ளவளென்பர். (அபிதாநசி.)

**மகாமிருகம்**—யானை. பிங்கலத்திற் பெருமா என்றார்.

**மகாமுடி**—யோனி. (வைத்தியபரி.)

**மகாமுத்திரை**—ஒருவகைமுத்திரை. (சை வச. பொது. ௫௨௫. உரை.)

**மகாமுநி**—1. அகத்தியன். (வழக்.) 2. புத் தன். (சூ. நி. ௧: ௩.)

**மகாமெலம்**—கொம்மட்டி. (வைத்தியபரி.)

**மகாமேகராசாங்கத்தைலம்**—ஒருவகைத் தைலம். (தைல. வருக்க. சுருக்கம்.)

**மகாமேதை**—மருளூமத்தை. (மலையக.)

மகாமேரு—பொன்மலை. (உ-ம்.) "சாற்று மகாமேருவரைச்சிகரத்துற்றூல்" (சிவரக சிவ தன்மா. உக.)

மகாமேருதாநம்—க்ஷத்திரியனூற் செய்யப் படுந் தாநங்களிலொன்று. (த. நி. போ. உரு.)

மகாமோகம்—ஐவகைத் தமோசிருட்டியின் மூன்ருவது. (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

மகார்யுகம்—ஒரு சதுர்யுகம். (கூர்மபு. பிர மா. ரு. உரை.)

மகார்-புதல்வர். (உ-ம்.) "மூக்குலத்தரசினு மூதன்மையாலுய- ரிக்குலத்திவனலாதில்லைமா மகார்"(பாரத.குருகுல.எரு.)[மக்கட்பான்மை]

மகாரசசூதம்—ஒரு மாமரம். (உ-ம்.) வந்து ழிக்காண்க.

மகாரசம்—ஒரு மரம். (வைத்தியபரி.)

மகாசிங்கி—நாதம். (வைத்தியபரி.)

மகாரதம்—பதினோராயிரந்தேர்க்கு முதற் றேர். நால்வகை யிரதத்தொன்று. (பொருட். நிகண்டு)

மகாரதன்—பதினோராயிரந்தேருக்குத் தலை வன். (வழக்)

மகாரவுப்பு—கல்லுப்பு (வைத்தியபரி.)

மகாராட்டிரம்-1. ஒருதேயம். (மணிமேக.) 2. ஒரு பாடை. (பொருட். நிகண்டு.)

மகாருத்திரன்—மகாசங்கார கருத்தாவாகிய சிவன். (வழக்.) (சிவஞானபோதப்பாயிரவுரையி லறிக.)

மகாரோகம்-குட்டமுதலிய பெருவியாதி. (வழக்)

மகாரௌரவம் — ஒரு நரகம். (பொருட். நிகண்டு.)

மகாலக்ஷுமி—மகாலட்சுமி. (வழக்.)

மகாலய — பிரதிட்டாகலையி லாகாயதத்து வத்திலிருக்கும் எட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. தாற்.)

மகாலய அமாவாசை — புரட்டாசிமாசத் தில் அபரபட்சத்தில், கன்னிராசியில் சூரியன் பிரவேசிக்குநாள் மகாலயமெனப்படும். (அபி தாநசி.)

மகாலிங்கோற்பவம்—இருபத்தைந்து மூர்த்தத்தொன்று. (வி-ணி. உகூஅ)

மகாலோகம்—மேலேழுலகங்களினொன்று. இவ்வுலகம் சுரர்லோகத்தின்மேல் இரண்டு கோடி யோசனாந்தத்தில் இருக்கின்றது. இதில் மார்க்கண்டமுநி அதிபதியாகி மரீசிமுதலான முநிவருடனிருப்பரென்பர். (வி-ணி. உருO.)

மகாவக்கிரன் — ஞானேந்திரிய தத்துவத்தி ருக்கு மைந்துருத்திரரி லொருவர். (வி-ணி. உஎஉ.)

மகாவன்னி—கமலாக்கினி. (தைல. தைலவ. சுகூ.)

மகாவரி— அரி பதின்மடங்குகொண்டது. (த. நி. போ. உரு.)

மகாவல்லி — 1. வசந்தமல்லிகை. (வைத் தியபரி.) 2. வில்வம். (மலையக)

மகார்வாக்கியம்—அதர்வணவேத உபநிடதங் களுளொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

மகாவிடம்—இருதலைப்பாம்பு.(வழக்குண்டு போலும்.

மகாவிடமுட்டித்தைலம்—எட்டிவேர் முத லியவைசேர்த்து வடிக்குந்தைலம். (தைல. தை லவ. எஉ, கூசு.)

மகாவிடுவம் — மகாவிசுவம், மேடசங் கிராந்தி யென்பர்.

மகாவிந்தம்—1. ஒரெண். (சூ. நிக. கக: நகரவெ. அ) 2. நளனகரம் (நைடதத்திலறிக.)

மகாவிந்து—அப்பிரகம். (வைத்தியபரி.)

மகாவிரதம் — அதிமார்க்கநூல் மூன்றி னொன்று. இதில் பாசுபதர்கூறியமுறைமைய, மாயை கன்மங்களுடன் ஆணவமலமூ முண் டென்றும், ஆன்மாக்களுக்குப் பெத்தமுத்தியி னும் ஞாநசத்தியேயன்றிக் கிரியாசத்தி யில்லை யென்றும், சாத்திரத்திற்கூறுமுறையேதீக்கை பெற்று, சாத்திரத்திற்கூறியபடியே எலும் பணிகள் முதலிய சரியைகளை யநுட்டிப்போர் முத்தராவரென்றும், இந்தமுத்தருக்குக்கேவல ஞாந சத்திமாத்திரமேயுண்டு. ஞாநக்கிரியை யென்னு மிரண்டுசத்தியும், பரமேசுரனொருவ னுக்கேயென்றும் கூறப்படும். (சி. பி. கச.) 2. சைவத்தினுட்சமயங்களாறனு ளொன்று.

மகாவிரதன் — சிவன் என்புமாலைதரித்த மூர்த்தியாயருள்வரென்பவன். (கந். நவ. ரு.) இவன் அகப்புறச்சமயிகளிலொருவன்.

மகாவிருக்கம்—சதுரக்கள்ளி. (மலையக.)

மகாவிருத்தி—சேம்பு. (வைத்தியபரி.)

மகாவீரியன் — 1. காலதத்துவத்திருக்கு மோருருத்திரர். (வி-ணி.) 2. வித்தியாதத்து வத்திருக்கு மாசாரியதசகரிலொருவர்.(வி-ணி.)

மகாவைரவன்—சிவலோக கோட்டைவாச லுட் பூருவவாசலில் பிராம்மியென்னுஞ் சத்தி சமேதராய் அமிசவாகநத்தில் தனக்குச்சமான மானபடர் ஏழுகோடியர்சூழவருபவன். (வி-ணி. உசுO.)

மகான் —1. அறுவகை யாகமசம்பந்தங்களி லிரண்டாவது; அது: அநந்தேசுரர் சீகண்ட ருக்குச்சொல்லிய ஆகமசம்பந்தம். (சி-வி. சரி. உ.) 2. ஆதிசிருட்டி. (கூர்மபு. பல்வகை. எ.) 3. நூலரூபி. (சி-வி. ஞாநபா. உ.) 4. பிரகிருதி

மாவை. (சி. சி. க: கக. சிவாக்.) 5. புத்திதத்துவம். (உ-ம்.) "மகத்துவம்"பார்.

**மகி**—பூமி. (சூ. நிக. ரு: அ.)

**மகிகை**-மூடுபனி. (உ-ம்.)வந்துழிக்காண்க.

**மகிடம்**—எருமைக்கடா. (உ-ம்.) "புனல்வால் கடோயமகிடம்புக" (அரிச்ச. நாட். உ௬.)

**மகிடமர்த்தினி** — துர்க்கை, மகிடாசுரனைச் சங்கரித்தவள். (வழக்.)

**மகிடவாகநன்**—யமன். (சூ. நிக. க: ௯O.)

**மகிடாதரன்** —ஓரசுரன்; இவனைத் துர்க்கை சங்கரித்தாள். (வழக்.)

**மகிடித்தல்**—மச்சளித்தல். (வழக்.)

**மகிணன்**—மகிழ்நன். (உ-ம்.) "வல்லழ விறைத்ததுமகிணன்மேனிமேல்" (பிரமோத். பஞ்சா. உ௬.)

**மகிந்தகம்**—1. எலி. 2. கிரி. 1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.

**மகிபதி**—அரசன், உலகிற்குநாயகன்.(வழக்.)

**மகிபன்**—மகிபதி. (வழக்.)

**மகிபாலன்**—மகிபன்.

**மகிமா** — அட்டசித்தியிலொன்று; அது: மிகப்பருத்தல். (உ-ம்) "உவரிஞாலமுதன்மே லென் - றறையுஞ்சிவாகமமாறுறமுள்ளும்புற னுமகலாதே – நிறையும்பெருமைதனைப்பன்றே மகிமாவென்னுங்கிரம்பியநூல்" (திருவிளை. அட்டமா. உக.)

**மகிமை**—பெருமை. (உ-ம்.) "ஆலயத்தி னின்மகிமைவேதஞ்சொலவரியா" (சிவரக. மேரு. எ.)

**மகிழ்**—1. ஒரு மரம். (உ-ம்) "மருது"பார். 2. கள். (உ-ம்) "மழைவிழனமருளுமகிழ்செய் மாடத்து" (பொருந. அ௬.) [ஆகுபெயர்.] 3. தெரிநிலைவினைப்பகுதி 4. மகிழ்ச்சி. (உ-ம்.) "மகதியாழ்முனிவன்மகிழ்சிறந்தினிகவைபுகல்வா ன்" (கூர்மபு. பிரகிருதி. க.)

**மகிழ்ச்சி**—1. இன்பம். (சூ. நிக. அ: ௯அ.) 2. களிப்பு, சந்தோடம். (உ-ம்.) "மாமகிழ்ச்சி யிற்றனினைமறந்தனன்" (சிவரக. மேரு. ௬௯.)

**மகிழ்தல்** — களித்தல், சந்தோஷித்தல். (வழக்.)

**மகிழ்ந்து**—1. உண்டு. (உ-ம்.) "வாங்கமைப் பழுங்கள்தேறன்மகிழ்ந்து" (புறநா. கஉ௬.) 2. விரும்பி. (சிந்தா.)

**மகிழ்நன்**—1. கணவன். (உ-ம்.) "வசுசுக ளென்றருந்திமகிழ்நனெண்ணிஞன்"(பாரத. குருகுல. ௬௫.) 2. மருதநிலத்தலைவன். (சூ. நிக. உ: எக.)

**மகிழம்**—மகிழமரம். (பரிபாடல்.)

**மகிழ்வு**—1. களிப்பு. (உ-ம்.) "இன்பமுமகிழ்வுமெங்கும்"(பெரியபு. நாட்டு. ௯க.உரை.) 2. சந்தோஷம். (உ-ம்.) "வந்தினிதாடப்பெற்ற மாந்தர்போன்மகிழ்வினீடி" (சேதுபு. சேதுச. ௬.)

**மகிளம்**—பூவிதழ். (வைத்தியபரி.)

**மகிளி**—ஒருகிளை. (வழக்.)

**மகிளித்தல்**—மச்சளித்தல். (வழக்.)

**மகீருகம்**—தாபரயோனி. (உ-ம்.) "மாச்சினைத் தடஞ்சந்தகமகீருகநிழலில்" (பாரத.நச்சு.௬௬.)

**மகீலதை** — நாங்கூழ். (உ-ம்.) வந்துழிக் காண்க.

**மகுடா** — தாணுவாஷ்டகரிலொருவன். (வி-ணி)

**மகுடம்** — 1. சதாசிவமூர்த்தியுடைய தற்புருடமுகத்தினின்றுற்பவித்த ஐந்தாகமங்களி லொன்று; இதற்குக்கிரந்தசங்கியை இலட்சம். (த. நி. போ. க௬௦.) 2. பாட்டின்கடையின்பாதியின்மேல் வருவது. (வழக்.) 3. மத்தளமுதலிய வற்றின் விளிம்பு. (வழக்குண்டுபோலும்.) 4. முடி. (உ-ம்.) "நெடுநாளிற்றேடியமகுடம்" (சிவரக. தேவியிமய. ௬.)

**மகுடயோகம்** — ஐந்தாமிடத்திற் குருவும் ஒன்பதாமிடத்திற் பஞ்சமாதிபதியும் பத்தாமிடத்திற் சனியும் இருக்கவரும்யோகம். (சோதிடக்கடல்.)

**மகுடவர்த்தனர்**—பரம்பரையாக முடியணிந்த அரசர். (பா. வெ. ௬௯.)

**மகுடாதிபதி**-கிடதாரியானவரசன். (வழக்.)

**மகுலம்**—மகிழமரம். (வைத்தியபரி.)

**மகுளி**—தாளம். (பரிபாடல்.)

**மகுளிபாய்தல்**— அரக்குப்பாய்தல். (உ-ம்.) "மகுளிபாயாதுமலிதுளிதழாலின்" (மலைபடு. ௪O௬.)

**மகூலம்**—மலர்ந்தபூ. (வைத்தியபரி.)

**மகேச்சுரதத்துவம்**-சதாசிவ தத்துவத்தில் கிரியையேறி ஞானங்குறைந்து இச்சாசத்திரூபியாயிருக்குந் தத்துவம்; அஃது: ஈசுரதத்துவம், அதிகாரதத்துவம் சகளதத்துவம் பிரவிர்த்தி தத்துவம் எனவும் பெயர்பெறும். (கூர்மபு. உருஞ. உ. உரை.)

**மகேச்சுரன்** — புருடதத்துவத்தையும் பிரகிருதிதத்துவத்தையும் பிரேரிப்பவராகிய அநந்தேசுரர்; இவர்: "அவ்யக்தமாய் அழிவின்றிப் புனிதமாய் அநந்தமாய் யார்க்குந்தெரிவதாகி யெங்கணுமேகமாய்ச் சிறப்புடனெவற்றினு நிறைந்த கருதரும் பொருளென்று சொல்லப் படுவர்" (கூர்மபு. பிரகிருதி. உரை.) (உ-ம்.) "எவ்வுயிர்க்கும்வித்தாகுமீசனே மகேசுரனும், செவ்விதருமவனிரண்டாமுருவண்டஞ்செறிந்

ததனிற்-றிவ்வியத்தின்முதலுதித்ததேவன் மூன்றுமுருவும், அவ்விறைநான்முகமூறாதலாங்க வுனன்காமுருவம்" (கூர்மபு. பிரகிரு. உக.) [தேவர்களெல்லாரிலும் மகத்துவமுடையவராயிருத்தலினால் வந்தபெயர். (கூர்மபு. பிரகிரு. உச.)]

மகேச்சுவரி—பார்வதி, சத்தமாதர்களிலொருத்தி (அபிதாநசி.)

மகேசம்—அப்பிரகம். (வைத்தியபரி.)

மகேசன்—அதிகார அவத்தையில் பிரவிருத்தித் தொழிலியற்றி உருவமென்னுந் தடத்தக் குறியே குறியாகவுடையவர். (உ-ம்.) "வேதநாயகசங்கரசீவபர்க்கவீமசந்திரவேணி-யாதிருத்ரமகேசவீசாகநின்னருள்புரிவாயென்பாள்" (சிவரக. தேவிநாட்டியம். ரு.)

மகேசுரபேதவிக்கிரகங்கள் — கல்யாணசுந்தரர்முதலிய இருபத்தைந்து மகேசுரமூர்த்தங்கள். (த. பி. உ0.)

மகேசுரம்— ஈசுரத்துவம். கன்மசாதாக்கியரென்னுஞ் சதாசிவநாயனார் இச்சையுடன் ஆத்மாநுக்கிரகநிமித்தமாகப் பஞ்சகிருத்தியத்தைத் திருவுளத்தடைத்து அநுக்கிரகிக்கு மவதரம். (சதாசிவரூபம்.) 2. சத்திகாரியமான வைந்தவத்தை நடத்தும் வடிவுடையது

மகேசுரன் — சிவபெருமான் உருவத்திருமேனிகொள்ளும்பொழுது பெறும்பெயர். (சைவவி. ச.)

மகேசுரியபாவனை — சிவப்பொருளை யவ்வியத்தவஸ்துவாகத் தியாநித்தல். (கூர்மபு. வருண. சகு. உரை.)

மகேசுவரம்-மகேசுரம். (சிவப்பிரகாசக்சட்.)

மகேசுவரர்—அதிகாரசிவன். (பௌட்.உச.)

மகேசுவரன்—சாதாக்கியத்திலபத்திலொரு அம்சமாகத்தோன்றி அசுத்தமாயாகிருத்தியத்தைப் பண்ணுபவர். (சி. சி. உ: எச. சிவாக்.)

மகேசுவரி—மகேசுவரற்கானசத்தி. (சி. சி. உ: எடு சிவா.)

மகேசை—மகேசுவரி. (சி. பி.)

மகேந்திரகதலி—ஒருவாழை. (வைத்தியபரி)

மகேந்திரசாலம்—ஒரு மாயாவித்தை; அது: கலைஞாந மறுபத்துநான்கினொன்று. (வழக்.)

மகேந்திரநகரி—அமராவதி, இந்திரநகர்.

மகேந்திரபுரி — தென்சமுத்திர மத்தியிலிருந்த சூரனுடைய நகரம். (அபிதானகோ.)

மகேந்திரம்—1. ஒரு நகரம்; அது: சூரநகர். (கந்தபு. மகேந்திரஞ்செல். க.) 2. ஒரு மலை. (பொருட். நிகண்டு) 3. பிரதிட்டாகலையில் வாயுதத்துவத்திலிருக்கு மெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. தாற்.)

மகேந்திரி—காவல்வைரவன்சத்தி. (சி-வி. கிரி. உகு: தாற்.)

மகேந்திரை—ஒரு நதி. (உ-ம்.) வந்துழிக் காண்க.

மகோததி—கடல். (உ-ம்.) "மகோததியேழுந்தோற்ற" (தட்சணகைலாசபு. புவனோற். க0.)

மகோதயம் — ஒரு புண்ணியகாலம்; அது: தைமாசத்திலே திங்கட்கிழமையும் அமாவாசையுந் திருவோணநட்சத்திரமும் விதிபாதயோகமுங்கூடிய காலம். (சைவவி. ருரு.)

மகோதரம் — 1. ஒரு ரோகம், நீர்நோய்; அது: முதலில் வயிற்றை விகாரப்படுத்திப் பின் சகல அர்க்கங்களையும் பிறப்பிக்கும். (உ-ம்.) "மகோதரஞ்சோபைபாண்டுகுன்மக்கட்டியும் போம்" (தைல. தைலவ. கூஉ.) 2. பெருவயிறு. (வழக்.)

மகோதரன்—இராவணன்மந்திரிகளிலொருவன். (அபிதாநசி.)

மகோந்நதம்—பனைமரம். (வைத்தியபரி.)

மகோபநிடதம்—உபநிடதமுப்பத்திரண்டினொன்று.

மகோற்கடர் — விநாயகமூர்த்தங்களிலொன்று. (அபிதாநசி.)

மகோற்சவம்—பெரியதிருவிழா. (வழக்.)

மகோற்பலம்—தாமரை. (மலையக.)

மகோன்மதம்—மருள்வெறி. (வழக்.)

மகௌகக்கிரமம் — குருபரம்பரைக்கிரமமிருவகையுளொன்று. (சி-வி. சரி. க. அவதாரிகை.)

மகௌகழறை—வேறுவேறு வகுக்கப்பட்ட பலவற்றைத்திரட்டிக்கூறுமுறை. (சிவஞானபா)

மகௌடதம் — 1. சுக்கு. 2. திப்பிலி. 3. வசம்பு. (1, 2, 3-வைத்தியபரி.)

மகௌடதி—நன்மருந்து. (வைத்தியபரி.)

மங்கணசித்தர்—ஒரு பெரிய சித்தர் (அபிதாநசி.)

மங்கல்யம்—மங்கலியம். (உ-ம்.) "சசிதேவி மங்கல்யந்தந்தரட்சா" (கந்தர. உக.)

மங்கல்—1. ஒளியின்மை. (வழக்.) 2. கெடுதல். (உ-ம்.) "தூதர்தமையேபிடித்து மங்கவடித்து" (சிவரக. கத்தரிப்பூ. உஅ.)

மங்கல்லியம்—1. சந்தனம். (வைத்தியபரி.) 2. தயிர். (உ-ம்.) "மோதகமிட்டலிபுராதனத்தொன்றேனுமூரிமங்கல்லியத்தான்" (தைல. தைலவ. அக.)

மங்கலகிரி — திருமால் நரசிங்கமூர்த்தியாயிருக்கிற அகோபலம், மங்கலகிரி, சுவாலை என்னு மூன்று தலங்களிலொன்று. (அபிதானகோ.)

மங்கலத்திருநாள்—புத்தன் அவதாரதினத்திற் புத்தர்கொண்டாடப்பட்டதிருநாள். (அபிதாநசி).

மங்கலத்துகில்—வெண்டுகில். (சிந்தா.)

மங்கலநாயகியம்மை—கும்பகோணத் தாலயத்திருக்குர்தேவியார் பெயர். (அபிதாநகோ.)

மங்கலநாண்—கழுத்திலணியுமங்கலசூத்திரம். (உ-ம்.) "ஒன்றியமங்கலநாணிஞெளிபோற்றி" (கோயிற்பு பாயிர. ரு.)

மங்கலப்பாடகர் — கடிகைமாக்கள், சோபனம்பாடுவோர். (சூ. நிக. உ: சஎ.)

மங்கலப்பிரதை—மஞ்சள். (வைத்தியபரி.)

மங்கலம்—1. சிறப்பு. (உ-ம்.) "சைவமங்கலவே.தியத்தாபன்" (திருவிளை. விருத்த. கரு.) 2. சுபம். (உ-ம்.) "மங்கலந்திகழ்மனையெலாம்" (பாரத. கிருட்டிண. சுஎ) 3. சோபநம்.(உ-ம்.) "தெய்வமங்கலவரிசைகள்" (திருவிளை.விருத்த கரு.) 4. மங்கிலியம். (உ-ம்.) "தோற்றருமங்கலம்புலையன்காணவும்போறுவதோ" (அரிச்ச. மயாந. சசு.) 5 வாழ்த்து. (வழக்.) மங்கலம்பாடுதல். 6. விவாகச்சடங்கு. (உ-ம்.) "தந்தமர் மங்கலங்காண்பான்" (திருவிளை. விருத்த. சுடு.) (அட்டமங்கலமுமாம். அபிதாநசி.)

மங்கலமொழி—1 செய்யுட்களின் முதற்கவியின் முதலில்வரவேண்டு மங்கலச்சொல்; அவை: அமிழ்தம், ஆபரணம், உலகம், எழுத்து, கங்கை, கடல், சீர், சொல், திரு, தேர், நிலம், நீர், பரி, பரிதி, புகழ், புயல், பூ, பொன், மணி, மதி, மலை, யானை முதலியன. (இலக்கணவி. எஎச. உரை.)

மங்கலவணி—வெள்ளணி. (சிந்தா.)

மங்கலவள்ளை—உயர்குலத்துதித்தமடவரலைவெண்பாவொன்பதனுல் வகுப்புறப்பாடுதல். (உ-ம்.) "ஒன்பதுவெண்பாவகுப்பானுயர்குலமங்கையையப்பாடுதல்மங்கலவள்ளை" (இலக்கணவி. அஉஅ.)

மங்கலவாரம்—1. செவ்வாய்க்கிழமை. 2. நல்லநாள். (1, 2-வழக்.)

மங்கலவாழ்த்து—இடையூறுநீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவது; இது: வாழ்த்தும், வணக்கமும், முதலிய பொருளுரைத்தலும்என மூவகைப்படும். (சிவஞானசித்தியார் முதலிய நூல்களினுரைமுகத்திற் காண்க.)

மங்கலவேள்ளை—சந்தனம. (மணிமேக.)

மங்கலன்—செவ்வாய். (சூ. நிக. க: சுo.)

மங்கலி—1. நாவிதன். (சூ. நிகண்டிற் சிமங்கலியென்முர், பிங்கலநிகண்டி மங்கலியனென்முர். 2. மங்கிலியதாரி. (வழக்.)

மங்கலியகம்—சிறுகடலை. (உ-ம்.) வந்துழிக்காண்க.

மங்கலியம்—தாலி, மங்கலநாண். அOச.)

மங்கலியன்—நாவிதன். (பிங்கல. அOச.)

மங்கலை—1. இலக்குமி. 2. உமை. (உ-ம்.) சௌந்தரியல-தருணமங்கலையுனதுசிந்தையென்னு முதற்குறிப்புள்ளகவி. 3. சுமங்கலி. (1, 3-வழக்.)

மங்களகௌசிகம்—ஒரு பண்ணென்றும், ஓர்ராகமென்றுங்கூறுவர்.

மங்களநாயகி — திருமங்கலக்குடி, திருக்கண்டியூர், திருநல்லம், திருவாரூர், திருவிடம்பாவநம், திருப்பரிதிநியமம் என்னுந் தலங்களிலெழுந்தருளியிருக்கிற தேவியார்பெயர். (அபிதாநகோ.)

மங்களப்பாடகர்—மங்கலப்பாடகர். (வழக்.)

மங்களம்—மங்கலம். (வழக்.)

மங்களாசரணத்திரயம் — மங்களவழிபாடு மூன்று; அவை: வாழ்த்து, நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம். (வி-ணி. கக.)

மங்களாசரணை—மங்களவழிபாடு, தற்சிறப்புப்பாயிரமென்பர். (அபிதாநசி.)

மங்களை—1. உமை. (உ-ம்.) "சர்வாணி"பார். பார்வதிதேவியின்றோழியரிலொருத்தி. (அபிதாநசி)

மங்காமைகாத்தான்—ஒருவகைநெல். வழக்குண்டுபோலும்.

மங்கிணி—மிக்கமந்தன். (வழக்.)

மங்கிலம்—காட்டாக்கினி.

மங்கிலியம்—மங்கலியம். (வழக்.)

மங்குங்காலம் — தன்புறுகாலம். (வழக்.) மங்குங்காலமாக்காய்க்கும்.

மங்குசநி—முதன்முறைவரு மேழரைநாட்டுச்சநி. (வழக்குண்டுபோலும்.)

மங்குதல்—1. கெடுதல். (இராமா. அரசியற்ப. உ.) 2. மழுங்கல். (வழக்.)

மங்குல்—1. ஆகாயம். 2. இருள். (உ-ம்.) "மங்குன்மாப்புகை" (புறநா. கOரு.) 3 திக்கு. (உ-ம்.) "மங்குல்வானத்துத்திங்களேய்க்கும்" (பெரும்பா. சஅO.) 4. மேகம். (உ-ம்.) "மங்குல்சூழ்விமானமுன்றில்" (பாரத. வாரணு. சுக.)

மங்குல்வாணி—அசரீரி. (உ-ம்) "மங்குல்வாணியுதித்திமயமயிலேவருத்தந்தணிமனத்தில்" (அருணகிரிபு. அருந்தவ. கசுஉ.)

மங்குலம்—மங்குளம்.

மங்குலி—இந்திரன். (உ-ம்.) "அமிர்தங்கடைந்தவனஞ்சுமங்குலி" (திருப்பு. ருருக.) மேகத்தையுடையவன்.

மங்குளம்—1. நிறமழுக்கம். 2. பார்வைமந்தம். 3. மந்தாரம். (1, 2, 3-வழக்.)

**மங்கை**—1. இரசம். 2. கற்றாழை. 3. பெண். (உ-ம்.) "ஆமெங்கையரனந்தர்" (அரிச்ச. காசி கா. கஉ.) 4. பெண்களுக்குரியபருவ மேழனு ளொன்று. (சூ. நிக. உ: ருஅ.) (1, 2-வைத் தியபரி.)

**மங்கைதீர்க்கம்**—மணவாட்டிநாளுக்கு மணவாளனுள் பதின்மூன்றுக்கு மேற்பட்ட நாளாயிருத்தல்; இது: விவாகப்பொருத்தத்து ளொன்று.

**மங்கைநாயகி**—அகத்தியான்பள்ளி, விசயமங்கையிற் கோயில்கொண்டிருக்குந் தேவியார் பெயர். (அபிதானகோ.)

**மங்கைபாகன்** — மங்கைபங்காளன். (சூ. நிக. க: சு.)

**மங்கையர்க்கரசியார்**—1. கூன்பாண்டியன் மனைவி. 2. திருவேதிகுடி யாலயத்திருக்குந் தேவியார்பெயர். (அபிதானகோ.)

**மச்சகந்தி** —வியாசன்றாய். (பாரத.)

**மச்சதேசம்**—விராடபுரம். (பாரத.)

**மச்சம்**—1. சிவபுராணம் பத்தனுளொன்று; அது: சம்ஸ்கிருதபாஷையிலே பதினாலாயிரங் கிரந்தமுடையதாய் விஷ்ணுவினது மீனவதார மான்மியமும் அவ் விஷ்ணு சலப்பிரளயகாலத்திலே மனுவையும் பிறவற்றையும் ஓர்பேழையி னுள்ளே வைத்து ரட்சித்ததையும் பிரமசிருட்டியும் திரிபுரத்தசுரர் சங்காரமும் தாரகாசுரனுக்குந் தேவர்களுக்கும் இடைநிகழ்ந்த யுத்தமும் பார்ப்பதியம்மையார் திருக்கல்யாணமும் கந்தசுவாமியின் அவதாரமும் விஷ்ணு அவதாரமுமாகிய கதைகளை யுணர்த்துவது. (கந். நவ. உஎ.) 2. தேயமைம்பத்தாறிலொன்று. (பொருட். நிகண்டு.) 3. பங்குனிமாதம். (உ-ம்.) "பயமார்கடமச்சத்திற்குந்திரிக்குட்பகர் திங்களின்" (தைல. பாயிர. ருச.) 4. மாற்றுநிதானமறிய வெட்டிவைத்திருக்கும் பதிற்பொன். (உ-ம்.) "வன்றெண்டர்மச்சம்வெட்டிக்கைக்கொண்டு" (பெரியபு.ஏயர்.கoக.) 5. மீன். (வழக்.)

**மச்சநம்**—ஸ்நானம். (சி. சி. அ: கஉ. சிவாக்.)

**மச்சமுநி**—ஒரு சித்தர். (பொருட்-நிகண்டு.)

**மச்சயந்திரம்**—ஒரு யந்திரம். இதன் விவரம், (அபிதானசிந்தாமணியிற்பார்.)

**மச்சரம்**—ஒருவன் தன்னினுமதிக பாக்கியவந்தனாயிருந்தால் அவன் செல்வத்தைப்பார்க்கச் சகிக்காமல்வருகிற சித்தவிருத்தி. (வாசுதே. கூஎ.) 2. பொறாமை. (உ-ம்.) "மச்சரமில்லாதவர்க்குமுந்நூலின்மார்பருக்குமகத்தாஞ் செல்வம்மெச்சுபதி" (சிவரக. கணபதிவந்தனை. கசு.)

**மச்சாவதாரம்**-மீனவதாரம்; இது: திருமால் தசாவதாரத்துளொன்று. (சூ. நிக. கஉ: கoசு.)

**மச்சான்**—மைத்துனன். (வழக்.)

**மச்சி**—பூனைக்காலி. (வைத்தியபரி.)

**மச்சிகை**—மோர். (உ-ம்.) "மச்சமச்சமச்சிகையெண்மாங்காய்நீக்கே" (தைல. தைலவ. கருக.) [தெலுங்கு.]

**மச்சிப்பாசி** — பொன்னாங்காணி. (வைத்தியபரி.)

**மச்சியம்**—1. கடுகுரோகிணி. (மலையக.) 2. மச்சம். (சி. சி. உ: அக. மறை.)

**மச்சியாச்சி**— } பொன்னாங்காணி. (மலையக.)
**மச்சியாத்தி**— }

**மச்சு**—1. குற்றம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. பூனைக்காலி. (மலையக.) 3. மேனிலை. (வழக்.)

**மச்சுப்போதல்**—மக்கிப்போதல். (வழக்.)

**மச்சுனமை**—மைத்துனவுரிமை. (வழக்.)

**மச்சுனன்**—மைத்துனன். (வழக்.)

**மச்சுனி**—மைத்துனி. (வழக்.)

**மச்சேந்திரநாதர்**—நவநாதசித்தரிலொருவர். (சி. பி. கை. கரு.) பொருட்டொகை நிகண்டு சித்தரென்பதின்மர் பார்.

**மச்சை**—1. பழத்தின்சதை. (உ-ம்.) "துன்றியவதன்பான் மச்சைக்களவில்லை" (ஞானவா. வில்வபல. கஉ.) 2. மறு. (வழக்.) 3. மீனம்பர்; இது: கடலிலுண்டாவது. 4. மூளை. (சி. சி. பர. லோகாயதமதமறுதலை.)

**மசக்கல்**—கசக்குதல். (வழக்.)

**மசக்குதல்**—1. கலக்குதல். 2. மயக்குதல். (1, 2-வழக்.)

**மசக்கை**—கருப்பமசக்கு. (வழக்.)

**மசக்கைக்காரி**—கருப்பஸ்திரி. (வழக்.)

**மசகம்**—1. கொசுகு. (சூ. நிக. கூ: சுசு.) 2. மயக்கம். (வழக்.)

**மசகவரி**—கொசுகுவலை. (சிந்தா. காந்தருவதத்தை. கூசசு. உரை.)

**மசகி**—அத்திமரம். (வைத்தியபரி.)

**மசகு** — 1. கடலிற்றிசைதெரியாதவிடம். (வழக்குண்டுபோலும்.) 2. வண்டி யச்சுக்கிடுமெண்ணெமைக்குழம்பு. (வழக்.)

**மசகுதல்**—மயங்குதல். (வழக்.)

**மசங்குதல்**—1. கசங்கல். 2. மயங்கல். (1, 2-வழக்.)

**மசம்**—1. கொசுகு. மசகமென்பது மசமெனவந்ததென்க. 2. கோபம். 3. தொனி. (1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.

**மசமசத்தல்**— } நினைவுகொள்ளல். (வழக்.)
**மசமசப்பு**— }

**மசமசெனல்**—மசமசத்தல். (வழக்.)

**மசரதம்**—பேய்த்தேர். (உ-ம்.) "மசரதமனையவர்வாழும்வாழ்வும்" (இராம. திருவவதார.

உக.) மசர் பேய்க்கொருநாமமாகக்கூறுவர்.
**மசனம்**—வருத்தல். (வழக்.)
**மசாகம்**-குருவி. (உ-ம்.) வந்துழிக்காண்க
**மசால்**—தீவர்த்தி. [அரபி.]
**மசி**—தெரிநிலைவினைப்பகுதி.
**மசிகம்**-பாம்பளை. (உ-ம்) வந்துழிக்காண்க.
**மசித்தல்**—நசித்துக்குழைத்தல். (வழக்.)
**மசிதல்**—நசித்துக்குழைதல். (உ-ம்.) அப் பங்காமசிபஇடி" (தைல. தைலவ. சுகூ)
**மசியல்**—மசிக்கப்பட்டது. (வழக்.)
**மசிவு**—மசிதல். உ-தொழிற்பெயர்விகுதி.
**மசுக்கரம்**—மூங்கில். (மலையக.)
**மசுரம்**—கடலை. (உ-ம்.) வந்துழிக்காண்க.
**மசூரம்**—மூட்டைப்பூச்சி. (உ-ம்.) வந்துழிக் காண்க.
**மசூரி** — 1. சின்னமுத்துப்போலுண்டாவ தொரு நோய். 2. துருக்கர்கல்லறை. (1, 2-வழக்.)
**மசூரிகம்** —மசூரி.
**மஞ்சகம்**—1. கட்டில். 2. கொக்கு. (வைத்தியபரி.)
**மஞ்சட்கடம்பு**—ஒரு மரம். (வழக்.)
**மஞ்சட்கல்**—ஒரு கல். (வழக்.)
**மஞ்சட்காப்பு**— மஞ்சட்பொடிச் சாந்து. (வழக்.) தேவியின் அபிடேகதிரவியம்.
**மஞ்சட்காமாலை**—ஒரு நோய். (வழக்.)
**மஞ்சட்காளான்** — ஒருவகைக் காளான். (வழக்.)
**மஞ்சட்செவ்வந்தி**—ஒரு செவ்வந்தி.(வழக்.)
**மஞ்சணத்தி**— } மஞ்சணா. (வைத்தியபரிபா.)
**மஞ்சணறி**— }
**மஞ்சணை** — எண்ணைக்குங்குமம். (வைத்தியபரி.)
**மஞ்சநச்சாலை** — நீராடுந்தாநம். (உ - ம்.) "மாலை"பார். மஞ்சநம்-முழுகுதல்.
**மஞ்சநி**.- வேலிப்பருத்தி (வைத்தியபரி.)
**மஞ்சம்**—1. ஆசநத்திலிவருதற்குக்கீழிட்ட படி. (உ - ம்.) "மஞ்சமேறிமணித்தவிசேறினர்" (பாரத. குருகுல. ௪உ0.) 2. கட்டில். 3. கொம் மட்டிமாதுளை. (வைத்தியபரி.)
**மஞ்சம்புல்**—ஒரு புல். (வழக்.)
**மஞ்சரி** — 1. ஒரு பிரபந்தம். (வழக்.) 2. தளிர். (சூ. நிக. கக: ஞகரவெ. கூ.) 3. நாயுருவி. (மலையக.) 4. பூங்கொத்து. (உ-ம்.) "மஞ்சரிப் படலைநீங்காவண்டினம்புதுநீராடும்" (சேதுபு. திருநாட். உகூ.) 5. பூமாலை. 6. முத்து. (5, 6-வைத்தியபரி.)

**மஞ்சரிருபிணி**—ஐம்பத்தோருருத்திரசத்தி களி லொருத்தி. (வி-ணி.)

**மஞ்சரீகம்** — மிருதுவானமருக்கொழுந்து. (வைத்தியபரி.)
**மஞ்சலிக்காய்** — உருத்திரசடை. (வைத்தியபரி.)
**மஞ்சள்**—1. அரிசனம்; அது: கஸ்தூரிமஞ்சள், சொர்ச்சிமஞ்சள், கரிமஞ்சள், கிழங்குமஞ்சள், விரலிமஞ்சள், மரமஞ்சள்எனப் பலதிறப் படும். (உ-ம்.) "அரியட்சி"பார். 2. குருவி. 3. தேசிப்பழம். 4. நாயுருவி. மஞ்சள் தேவியின் அபிடேகதிரவியமாதலால், சுமங்கலிகள் கணவர் தீர்க்காயுள்பெற இறைவியைவேண்டியணிவர். காரணமாமத்திற் கூறியிருக்கின்றது. (3, 4, (வைத்தியபரி.)
**மஞ்சளலரி**—ஓரலரி. (வழக்.)
**மஞ்சளிளங்கலையன்**—ஒருவிதநெல். வழக் குண்டுபோலும்.
**மஞ்சன்**—மகன். போலி.
**மஞ்சா** — 1. இலைக்கள்ளி. (மலையக.) 2 கட்டில். (சி. சி. அ: உஅ. சிவாக்.)
**மஞ்சாக்குரு**—தேசிப்பழம். (வைத்தியபரி.)
**மஞ்சாடி**—1. இரண்டுகுன்றிமணிகொண்ட நிறை. 2. ஒரு மரம். 3. செவ்வள்ளிக்கொடி. 4. நுணவேர்ப்பட்டை. (3, 4-வைத்தியபரி.)
**மஞ்சாரி**—கஞ்சாங்கோரை. (மலையக.)
**மஞ்சாளி**—வயிரநிறுக்குநிறை. [தெலுங்கு.]
**மஞ்சி**—1. படகு. (வழக்குண்டுபோலும்.) 2. பேழை. 3. மரலநார். (1, 3-வழக்.)
**மஞ்சிகம்** —1. தாளிக்கொடி. (மலையக.) 2. பெட்டி. (பிங்கல. கஎடுகூ.)
**மஞ்சிகன்**-நாவிதன். (உ-ம்.) "குணுங்கர்"பார்.
**மஞ்சிகை**—1. குண்டலம். (பிங்கல.ககஎசு.) (காதணி என்பர். சிந்தா.) 2. கையாந்தகரை. 3. தாளிக்கொடி. 4. பேழை. (சூ. நிக. எ:கூகூ.) (2, 3-மலையக.)
**மஞ்சிட்டம்**—மஞ்சாடி. (மலையக.)
**மஞ்சிட்டி**—1. ஒரு செடி. 2. நுணவேர்ப் பட்டை. (வைத்தியபரி.)
**மஞ்சிடலை**— } வாழை. (மலையக.)
**மஞ்சிபலை**— }
**மஞ்சிதேவர்** — இவர் காசியிலிருந்தபெருமாள் விக்கிரகத்தை யெழுந்துசென்று எல்லாருங்காண விசுவநாதலிங்கத்தை வணங்கும்படி செய்தவர், அதுகண்டு அங்கிருந்த வைணவர்கள் சிவதூஷணஞ்செய்யாதடங்கினர். (அபிதாநகோ.)
**மஞ்சிமம்**—அழகு. (உ-ம்.) வந்துழிக்காண்க.
**மஞ்சிரம்**—காலாழி. (உ-ம்.)வந்துழிக்காண்க.
**மஞ்சில்** — பழையவரம்பின்வழி. (உ - ம்.) வந்துழிக்காண்க.

**மஞ்சிறு**—கையாந்தகரை. (மலையக.)

**மஞ்சீரகம்**—கழற்சிக்கொடி. (வைத்தியபரி.)

**மஞ்சு**—1. அழகு. 2. ஆபரணம். (சூ. நிக. கக: ஞகரவெ. உ.) 3. இளமை. 4. பனி. 5. மேகம. (உ-ம்.) "மஞ்சலம்பிடியேறென்ன" (அரிச்ச. சூழ். உக.) வெண்மேகம் என்பர். (சிந்தா.) 6. யானைமுதுகு. 7. வலி. (1, 3, 4, 6, 7-பிங்கல. ௬௬கக.)

**மஞ்சுகம்** — கொக்கு. (உ-ம்.) வந்துழிக் காண்க.

**மஞ்சுகேசனி** — ஒரு தேவதாகணிகஸ்திரி. (வி-ணி. உ௬௬.)

**மஞ்சுவந்தம்**— இமயத்துக் குத்தரதிசையி லுள்ள ஒருமலை, இதிலே ஒரு பெரிய தடாகத் தில், பஞ்சவர்ணமுள்ள தாமரைகளுண்டாகின் றன. (அபிதானகோ.)

**மஞ்சுளம்** — அழகு, மிருது. (திருவிளை. உக்கிரகுமார. ௬௫.)

**மஞ்சூரம்**—கடலை. (மலையக.)

**மஞ்ஞை**—மயில். (சூ. நிக. ௬: ௫0.)

**மஞ்ஞையீர்க்கு**—மயிலிறகு. (வைத்தியபரி.)

**மஞ்ஞையூர்தி** — கந்தசுவாமி. (சூ. நிக. க: உச.)

**மட்கல்**—1. அழுக்கேறல். 2. ஒளிமழுங்கல். (1, 2-வழக்.)

**மட்கலம்**—மட்பாண்டம் (பெரிய. அரிவாட். க௫.)

**மட்குகை** — 1. மண்ணாற்செய்தகுகை. 2. மழுங்குதல். (1, 2-வழக் )

**மட்குதல்**—மட்கல். (வழக்.)

**மட்சிகம்**—ஈ. (உ-ம்.) வந்துழிக்காண்க.

**மட்சிகை**—மட்சிகம்.

**மட்டக்கோல்**—மட்டங்கட்டுங்கோல்.(வழக்)

**மட்டங்கட்டுதல்**—சரியாய்நிறுத்தல். (வழக்.)

**மட்டச்சுறு**—ஒரு மீன். ஒரு குழூஉக்குறி.

**மட்டசுத்தம்**—மட்டம். (வழக்.)

**மட்டத்தரம்**—குறைந்ததரம். (வழக்.)

**மட்டத்துருத்தி**—ஒருவிசிறி.(சூ.நிக.எ.சுக.)

**மட்டந்தட்டல்**—அடக்கல். (வழக்.)

**மட்டந்தட்டுதல்**—மட்டந்தட்டல். (வழக்.)

**மட்டப்பலகை**—சமனறிகருவி. (வழக்.)

**மட்டம்**—1. எல்லை. (சூ. நிக சக: டகரவெ. உஉ.) அம்-சாரியையாம் ) 2. ஒப்புரவு, சமம். 3. ஓரளவுகோல். 4 மிதம். 5. மூன்றொத்து டைய தாளம். (சிலப். அரங்கேற்று. க௫௪. உரை.) 6. வாலக்குதிரை. (2, 3, 4. 6-வழக்.)

**மட்டலது**—ஒருகருவி.(வழக்குண்டுபோலும்.)

**மட்டாயுதம்**—வாள். (சூ. நிக. எ: க.)

**மட்டி**—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பரும் படி. [தெலுகு.] 3. மட்டிக்காரை. 4. மதிகே டன். (3, 4-வழக்.)

**மட்டிடுதல்**—மட்டுச்செய்தல். (வழக்.)

**மட்டித்தல்**—1. பூசுதல். (உ-ம்.) "குங்குமஞ் சாந்தமிவைபலவுமட்டித்து" (திருவிளை.மூர்த் தி. உச.) 2. மட்டுக்கட்டுதல். 3. மண்டலித்தல், வட்டமாக்கல். (2, 3-வழக்.)

**மட்டிப்பால்**— ஒருவகைச் சாம்பிராணி. (வைத்தியபரி )

**மட்டிப்பு**—மட்டித்தல்.

**மட்டியம்**—சத்ததாளத்தொன்று. (பொருட் நிகண்டு.)

**மட்டிலை**—பச்சிலை, (உ-ம்.) "மட்டிலைதக் காளி" (தைல. தைலவ. க௬௫.)

**மட்டு**—1. அளவு. (உ-ம்.) "மட்டிலாமட வார்" (அரிச்ச. நாட்டு. ௫௦ ) 2. உத்தேசம். (வழக்.) 3. எல்லை. (சூ. நிக. கக: டகரவெ. உஉ.) 4. கள். (உ-ம்.) "வெப்புடையமட்டுண்டு" (புற நா. உச.) 5 காமபானம். (உ-ம்.) "மட்டுடை மண்மகள்மலர்ந்தபோதினுல்" (சிந்தா. நாமகள். சுக.) 6. தேன். (உ-ம்.) "மட்டலம்புகோதை யார்" (திருவிளை. வளைய. ௬ச.) 7 மதுவைக் குஞ்சாடி. (உ-ம்.) "மட்டுவாய்திறப்பவும்" (புற நா. கக௬.)

**மட்டுக்கட்டுதல்**— தடைப்படுத்தல். (வழக்.)

**மட்டை**—1. உடற்குறை (சூ. நிக. உ: அக.) 2. பனைமுதலியவற்றின்மட்டை. (உ-ம்.) "மட் டைகளப்பங்காமசியவிடி" (தைல. தைலவ. க௬௫.) 3 முட்டாள். (வழக்.)

**மட்டைக்கோரை**—ஒருபுல். (வழக் )

**மட்டைத்தேன்** — பின்னைத்தேன். (வைத் தியபரி.)

**மட்பகை** — 1. குயவன். 2. மட்கலத்தை யறுக்குமாயுதம். (உ-ம்.) "மட்பகையின்மாணத் தெறும்" (வள். அஅ௬.)

**மட்பகைஞர்**—குயவர். (உ-ம்.) "மட்பகைஞர் திகிரியெனவருவினையின்வாய்ப்பட்டுமம்ம ரெ ய்தி" (கூர்மபு. திருக்கல். க௬ )

**மட்பகைஞன்**—குயவன். (சூ.நிக.உ:௬உஎ.)

**மட்பனை**—நிலப்பனை. (உ-ம் ) "மாதவனுக் திக்கத்தமட்பனையெருவைதொட்டி" (தைல. தைலவ. க௬ச )

**மடக்கடி**—தந்திரம். (வழக்.)

**மடக்கடிபண்ணல்** — தந்திரம்பண்ணல். (வழக்.)

**மடக்கம்**—1. அடக்கம். 2. வளைவு. (1, 2-வழக்.)

**மடக்கல்** — 1. அடக்கல். 2. வளைத்தல். (1, 2-வழக்.)

மடக்கலங்காரம்—எழுத்துக்களின் கூட்டம் இடைவிட்டும் இடைவிடாதும் பின்னும்வந்து வேறு பொருடரும் அலங்காரம். (சண்டியல. சொல்லணியில்.)

மடக்கியல்—சுரிதகம். (யாப். காரி. செய். ௪0. உரை)

மடக்கிறல்—ஒருவகைவிரல். (வழக்குண்டு போலும்.)

மடக்கு—1. ஒரு பாத்திரம்; அது: போகல என்ப:. (தைலவ.) 2. ஓரலங்காரம், மடக்கலங்காரம். 3. திருப்பு. 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. மடிப்பு, வளைத்தல். 6. மாறிமாறிவருதல். (3, 5, 6 வழக்.)

மடக்குதல்—1. அடக்கல். 2. கீழ்ப்படுத்தல், வளைத்தல். 3. திருப்பல். 4. மாறிமாறிச்செய்தல். (1, 2, 3, 4-வழக்.)

மடக்குமடக்கெனல்—ஈரடுக்கொலிக் குறிப்பு. (வழக்.)

மடக்குவரி—இறைமேலிறை. (வழக்.)

மடக்கொடி — பெண். அடையடுத்தவாகு பெயர்.

மடங்கடித்தல்—தோற்றோடச்செய்தல். (வழக்.)

மடங்க—இறைஞ்ச. (புறநா.)

மடங்கல் —1. அத்தி. 2. இடி. (உ-ம்.) "கோளிருந்தனவோமடங்கல்கொழுந்து விட்டனவோ" (அரிச்ச. இந்திர. உக.) 3. இயமன். 4. இறுதி. 5. இறைஞ்சல். (உ-ம்.) "இகழ்பாடு வோரெருத்தமடங்க"(புறநா. ௨0) 6. கருணை. 7. கீழ்ப்படிதல். (வழக்.) 8. சிங்கம். (உ-ம்.) "மடங்கலுங்கொண்டுமுடுகிற்றே" (அரிச்ச. நாட்டு. கஉ.) 9. தாழை. (வைத்தியபரி.) 10. மடங்குதல். 11. யாளி. 12. யுகமுடிவு. 13. வடவாமுகாக்கினி. (உ-ம்.) "ஆழிகிளாந்தெழும் மடங்கலும்" (அரிச்ச-நாட்டு.கஉ.) 14. வியாதி. (2, 3, 6, 8, 9, 10, 11, 12-பிங்கல. ௬௬௬௨.) ஒடுக்கமுமாம் என்றார் பரிபாடலில்.

மடங்கற்கொடியோன்—வீமன். (சூ. நிக. ௧: கசு.)

மடங்கு—1. அளவு, பங்கு. (உ-ம்.) "தோற்றி யிமெண்டத்தின்பதின்மடங்குபுனல் சூழும்" (கூர்மபு.பிரகி.கக.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

மடங்குதல் —1. அமரல். 2. கீழ்ப்படிதல். 3. சாயல். 4. தணியல். 5. நிலைதளர்தல்.(உ-ம்.) "மடங்காவண்பின்வள்ளலைப்பூசைசெய்வான்" (திருவிளை. நான்மா. கஅ.) 6. மீளல். (1, 2, 3, 4, 6-வழக்.)

மடத்தனம்—அறியாமை. (வழக்.)

மடதி—ஆலங்கட்டி. (வைத்தியபரி.)

மடந்தை—1. பெண். (உ-ம்.) "மடந்தை யாய்வந்தமாலோன்" (கந்தபு. ததீசியுத். அக.) மகளெனினுமாம். (புறநா.) 2. பெண்களுக்குரியபருவமேழனுளொன்று. (சூ. நிக. ருஅ.)

மடந்தைப்பருவம்—பெண்களுக்குரிய பதினறுவயசுப் பருவம். (சி. சி. அ: ௩௨: மறை.)

மடநடை—மென்னடை. (சிந்தா.)

மடப்பம் — 1. ஐஞ்ஞூறு கிராமத்திற்குத் தலைக்கிராமம். (சூ. நிக. ரு: ௬எ.) 2. மகளிர் குணங்களிலொன்று. (புறநா.)

மடம்—1. அழகு. (சிலப்.) 2. அறியாமை, அன்றியுங் கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. (உ-ம்.)"மடப்பாவைதன்வரமுமென் வரமும்" (பாரத. நிருட்டிண. கக.) 3. சத்திரம். (உ-ம்.) "திருமுதுகுன்றின்மட்மூமியற்றி" (விருத்தாசல. கரு.) 4. முனிவர்வாசம். (சூ.நிக. கக: டகரவெ. ௧0.) 5. மென்மை. (புறநா.)

மடமடக்கி—வட்டத்திருப்பி.(வைத்தியபரி.)

மடமடத்தல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.(வழக்.)

மடமடப்பு—மடமடத்தல்.

மடமடெனல்—மடமடப்பு. (வழக்.)

மடமை—அறிவின்மை; அன்றிப்: பெண்கள் நாற்குணத்துளொன்றுமாம்.

மடல்—1. ஈந்து கமுகு தாழை தெங்கு பனை வாழை யிவற்றின் பூமூடி. (உ-ம்.) "மடல்பெரிதுதாழை. (மூதுரை.) 2. உலாமடல், வளமடல்என விருவகைப்படும். (பொருட்டொகை நிகண்டு.) 3. காதின்மடல். (திருவிளை. உக்கிரகுமார. ௬௬) 4. பனைமட்டைக்கங்கு. (உ-ம்.) "ஒழிமடல்விறகிற்கழிமீன்சுட்டு" (புறநா.உக.) 5. பூவிதழ். (உ-ம்) "மடலவிழ்கடிகமழைந்தரு மலர்பல" (திருவாத. திருப்பெரு. ௬.)

மடலரிதாரம்—ஒரரிதாரம். (வைத்தியபரி.)

மடலித்தல்—1. நெளியல். 2. மடங்கல். (1, 2-வழக்.)

மடலூர்ச்சி—மடலூர்தல். (சி-தொழிற்பெயர் விகுதி)

மடலூர்தல் — பனைமடற்குதிரையிவர்தல்; இஃது: அக்பொருட்டுறையிலொன்று. (வள். ககஅ-அ. ௬.)

மடலேறுதல்—மடலூர்தல்.

மடவர்-அறிவிலிகள்.(உ-ம்.)"மண்ணுலகின் முறைபுரியாமடவரை"(கோயிற்பு இரணிய.௬.)

மடவரல்—1. இளம்பெண், மடப்பந்தோன்றுதலையுடையவள். (உ-ம்.) "மன்னியகற்பின ருந்தியைமடவரலுமையவள்கேட்டு" (பிரமோ. பிரதோ. க.) 2. மடப்பம். (புறநா. அக.)

மடவரலியர்—பெண்கள். (திருவாச. அதிசய. க.)

மடவள்—அறியாமையுடையாள். (புறநா.)

மடவளாகம்—மதிலின்புறத்திலுள்ள வீதி. (உ-ம்.) "தம்பதிகுன்றத்தூரின்மடவளாகந்தானுக்கி" (சேக்கிழார்பு. ௧௧.)

மடவார்—1. அறிவீனர். (சிந்தா.) 2. பெண்கள். (உ-ம்.) "மடவார்குடைவாவிவிட்டு"(அரிச்ச. நாட்டு. ௫௧.)

மடவாள்—இளம்பெண். (உ-ம்.) "என்றது கேட்டதுடியிடைமடவாளிளங்கொழு றுவ ரேன்ற" (பிரமோ. ௪: ௧௫.)

மடவியர்—பெண்கள். (உ-ம்.)"தளவநகைமடவியர்கண்மைந்தர்சுற்றம்"(சிவரக. பாக்கிய. ௬.)

மடவை — 1. ஒருமீன். (ஒருகுழூஉக்குறி போலும். 2. கடவுமரம். (உ-ம்.) "மதித்துமருப்பிணைசேரெருமைத்தலைமடவையிடைக் கழல்வைப்பார்போன்" (சேதுபு தேவிபுர. ௬௪.) 3. தணக்கு. (மலையக.) 4. மடமுடையையெனப் பொருள்படுமொருமுன்னிலை. (இறைய.)

மடவைக்கெண்டை — ஒரு மீன். (வழக்குண்டுபோலும்.)

மடவோன்—அறிவில்லாதவன். (புறநா.)

மடற்சீதம் — கௌரிபாஷாணம். (வைத்தியபரி.)

மடற்றுத்தம்—ஒரு துத்தம். (மலையக.)

மடன் — 1. அறியாமை. 2. அறிவிலான். (1, 2-வழக்.) னகரம் போலி.

மடாதிபத்தியம்—மடத்தலைமை. (வழக்.)

மடாஅ—சேர்த்து. (புறநா.)

மடாரெனல்—ஒரொலிக்குறிப்பு. (வழக்.)

மடி — 1. அடங்கல். 2. இறுதி, கேடு. 3. சோம்பல். 4. தாழை. 5. தாழைவிழுது. (தைல. தைலவ. ௪௨௫.) 6. புடவை. 7. புலம்பு. 8. பொய். 9. மடங்குதல். (வழக்.) 10. மடிப்பு. (உ-ம்.) "சுருள்பார்" 11. மடிப்புப்புடவை. (உ-ம்.) "குறியவுநெடியவுமடிதரூஉ விரித்து" (மதுரைக். ௫௨0.) 12. தெரிநிலைவினைப்பகுதி. 13. வயிறு. (உ-ம்.)"முருகனைமடிமேல்வைத்து" (அரிச்ச. மயாந. ௨0.) 14. வியாதி. (2, 7, 8-பிங்கல. ௯௯௧௯.) (1, 3, 4, 6, 14-சூ. நிக. ௧௧. டகரவெ ௪.)

மடிக்குதல்-1. கொல்லுதல். 2. மடக்குதல். (1, 2-வழக்.)

மடிச்சுக்கட்டி — ஒரு புழு. (வழக்குண்டு போலும்.)

மடிசெய்தல்-சோம்பல்செய்தல், பின்னே செய்வோமென்று ஓய்ந்திருத்தல். (உ-ம்.)"பருவமடிசெய்து" (ஞன். ௬0௨அ.)

மடித்தல்—1. கொல்லுதல். (உ-ம்.) "வலித்தாரையுமடித்தான்சிலைபிடித்தான்" (இராமா. கரன்வ. ௬0.) 2. மடிக்குதல். (வழக்.) 3. மடித்திருக்தல், சோம்பியிருத்தல். (உ-ம்.) "மடியிலான்செல்வம்போல்" (கலி. ௯௫.)

மடித்தலம்—மடி. (உ-ம்.) "அந்தளிர்க்கையவரிரப்பவண்ணறன்மடித்தலந்-தந்திருக்குமாதை" (திருவிளை. அட்டமா. ௬.) தலம்-இடமுமாம்.

மடிதல்—1. அழிதல். (உ-ம்.) "ஞாலமடியுநாளிதுவேயென்னு"(திருவிளை.நான்மாட.௧௯.) 2. கெடுதல். (சூ. நிக. அ: ௬௧.) 3. சாதல். 4. தலைசாய்தல். கதிர்மடிந்துகிடக்கிறது. 5. துயில்கொள்ளல். (உ-ம்.) "மன்பதையெல்லாமடிந்தவிருங்கங்குல்" (கலி. ௬௫.) 6. தொழிலொழிந்திருத்தல். (உ-ம்) "மல்லற்பேரூர்மடியின்மடியா" (பெரும்பா. ௨௫௪.) 7. மடங்குதல். (உ-ம்.) "நவியம்"பார். (3, 4-வழக்.)

மடிந்து — மநவெழுச்சிதவிர்ந்து. (உ-ம்.) "துவவுமடிந்துண்டாடியும்" (பட்டின. ௯௧.)

மடிப்பிளை—வங்கமணல். (வைத்தியபரி.)

மடிப்பு — 1. மடக்கு. 2. மடித்திருப்பது. (1, 2-வழக்.)

மடிமை—சோம்பு. (வைத்தியபரி.)

மடிய—துயில்கொள்ள. (பத்துப்பா.)

மடியாண்மை—மடியாளுந்தன்மை; அதாவது: சோம்புதலைஉடைமைக்கேதுவாய தாமதகுணம். (உ-ம்.) "மடியாண்மைமாற்றக்கெடும்" (வள். ௬0௯.)

மடியின்—தங்கின். (உ-ம்.) "மல்லற்பேரூர்மடியின்மடியா" (பெரும்பா ௨௫௪.)

மடில்—தாழை. (வைத்தியபரி.)

மடிவிடுதல்—மடிதளர்தல்; அது: பசுமுதலியன சினைக்குறிகாட்டல். (வழக்.)

மடிவித்தல் —கொல்லல். (வழக்.)

மடிவு — 1. கேடு. 2. சாவு. 3. சோம்பு. 4. மடிதல். (1, 2, 3, 4-வழக்.)

மடு—1. ஆற்றினுட்பள்ளம். (உ-ம்.) "ஆறிடுமேடுமடுவும்போல்" (நன்னெறி.) 2. குளம். (உ-ம்.) "கொழுந்தாரகைமுகைகொண்டலம்பாசடைவிண்மடுவில்" (திருக்கோ. ௧௨௪.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

மடுக்கும்—உண்பிக்கும். (புறநா.)

மடுத்தல்—1. அழுத்தல். (உ-ம்.) "ஞானவாரிமடுத்தானந்தம்பொழிந்து" (சி. சி அ: ௧௧. நிரம்ப.) 2. உண்ணுதல். (திருவிளை. குண்டோதர. ௧௪.) 3. கலத்தல். (உ-ம்.) "இறைவனின்னருட்கடற்-றுறையின் வாய்மடிப்ப வே" (திருவிளை. அட்ட. ௧௩.) 4. சேருதல். (உ-ம்.) "வாழுகிர்த்தலைமடுத்தகழ்ந்துகுடர் மாலைவிட்டெலைப்பிசைந்ததே"(கூர்மபு. தக்கவ. ௭௯.) 5.

தடுத்தல், தடைபடல். (வன். அதி. சுகூச.) 6. நிறைத்தல். (திருவிளை. குண்டோதர. உக.) 7. பாய்தல். (உ-ம்.) "பொன்னி-மடுத்தநீள்வண ணப்பண்ணை" (பெரியபு. தடுத்தாட். சoஅ.)

மடுப்ப—1. உண்ண. (பரிபா.) 2. ஊட்ட. (புறநா.)

மடுப்பு—நிறைத்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

மடை—1. ஆணி. (உ-ம்.) "மடைகலங்கி நிலைதிரிந்தனவே" (புறநா. கஎ.) 2. ஆபரணக் கடைப்பூட்டு. (சூ. நிக. கக: டகரவெ. கo) 3. சோறு. (உ-ம்.) "மடையுடன்பஞ்சாமிர்தம்பஞ்ச சௌவியமுமாட்டி" (சிவரக. பசாசுமோசன. சo) 4 தவாரம். (வழக்.) 5. நீர்பாயுமடை. (உ-ம்.) "மடைவளர்தண்புறம்பணையில்" (பெரியபு. தடுத்தாட். அகூ.) 6. மூட்டுவாய் (உ-ம்.) "மடைமாணுண்ணிழைபொலியத்தொடைமாண்டு" (நெடுநல். கஉச.)

மடைத்தொழிலாளர்—சமையற்காரர்; இவர்: அரசர்க்குறுதிச்சுற்றத்தொருவர். (பிங்கல. எஎக.)

மடைநூல்—பாகசாஸ்திரம். மடை-சோறு. (சிந்தா.)

மடைப்பள்ளி—அடுக்களை. (பிங்கல. சுகூஉ.)

மடையன் — சமையற்றொழில்செய்வான். (வழக்.)

மணி—1. அணு. (உ-ம்.) "மண்டிணிந்தநில னும்" (புறநா. உ.) 2. ஒப்பனை. 3. கழுவுதல். முதனிலைத்தொழிற்பெயர். 4. சுதைமண். (உ-ம்.) "கண்ணுள்வினைஞரும்மண்ணீட்டாள ரும்" (சிலப். இந்திரவிழ. கூo.) 4. பூமி. (உ-ம்.) "மண்ணில்வீழ்ந்துவணங்கியிருந்தனர்" (அரிச்ச வஞ்சனை. கூ.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. முழவின்மார்ச்சனை. (2, 6-சூ. நிக. கக: ணகர வெ. கக.)

மண்கணை—ஒரு பறை. (உ-ம்.) "மண்கணை முழவம்விம்ம" (கந்தபு. தாரகன்வதை. ருசு.) (பிங்கலநிகண்டிற் குடமுழாவென்றார்.

மண்கல்—செங்கல். (வழக்.)

மண்தகை—1. குழவிக்கூடு. 2. நிலவறை. 3. மண்ணாற்செய்தகுகை. இதிற் பொற்கொல்லர் பொன்னுருக்குவர். (1, 2, 3-வழக்.)

மண்துத்துநோய்—மல்கலாக்கியசூலை. (சீவரட். உoஅ.)

மண்சிலை—கற்காவி. (வைத்தியபரி.)

மண்சுதை—சுண்ணம். (வைத்தியபரி.)

மண்டக்கு — முத்துக்குளிப்பவர்களையிழுக் குங்கயிறு. (மண்டக்குக்கயிறென்பர். ஒரு குழூ உக்குறி.

மண்டகம்—அப்பம். (வைத்தியபரி.)

மண்டபம் — கீழ்மண்டபம், மேன்மாடம் இரண்டிற்கும்பெயராம். (உ-ம்.) "சக்கரதீர்த்தக் கரைமேன்மண்டபத்துள்" (அரிச்ச.பாயிர. கசு.)

மண்டம்—1. ஆமணக்கு (மலையக.) 2. தலை. 3. மண்டை. (1, 3-வைத்தியபரி.)

மண்டர்—படைவீரர். (உ-ம்.) வந்தழிக் காண்க.

மண்டல் — நெருங்கல். (காஞ்சிப்பு. திருநாட். உக.)

மண்டலநிலை—1. இருகாலும் பக்கல்வளைய மண்டலித்துநிற்றல்; இது: சரம்விடுநிலை நான்கி னொன்று. (சூ. நிக. சஉ: கூo.) 2. தேசிக்கூத் திற்குரியநிலை. (உ-ம்.) "கொண்டதேசிப்பகுதி யெல்லாமண்டலநிலையின்வருதசவுடைத்தே" (சிலப். அரங்கேற்று. சுடுஉ. உரை)

மண்டலபுருடன்—சூடாமணிநிகண்டு செய்த வாசிரியன்.

மண்டலம் — 1. கும்பமுதலியனவைக்கு மிடம். (உ-ம்.) "புரிநூற்கும்பமண்டலங்கள் முனிவில்லிதானமுறை-பிறழாதியற்றி" (பிர மோ. பிரதோ. கூ) 2. கூட்டத்தவர். (உ-ம்.) "அரசமண்டலங்களெல்லாம்" (இரகு. மாலை. கஉஅ.) 3. சக்கரம். (ஆகுபெயர்.) 4 சூரியமண் டலம் முதலியன. (உ-ம்) "மண்டலம்பொழி யமிழ்தின்மெய்குளிரவேலைச்சேரன்" (பாரத. குருகுல கூ.) 5. தேயம். (வழக்) (பாண்டி மண்டலம். 6. நாற்பதுநாள்கொண்டது, தைல வருக்கத்தில் நாற்பத்தெட்டுநாளொன்று. (உ-ம்.) "இருபொழுது" பார். 7. பூமி. (உ-ம்) "மண்ட லந்தன்னைநிழலெனுமரசினைற்றனது" 8 யசுர் வேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு அட் டமூ. உக. உரை) 9. வட்டம். (உ-ம்) "மண் டலம்பயிலுரகர்பெருயிர்ப்பிறுன்மயங்கி" (நகு ரைக்கதியுமொன்றென்றார். (அபிதாநசி.) 10. வியூகம் நான்கு வகையினொருவகை; அது: பாம்பு மண்டலமிட்டிருப்பதுபோலச் சேனையை நிறுத்துவது. (வள். எகூஎ. பரி.) 11. வாசம். (வைத்தியபரி.) 12. வில்லிருந்து அம்பு எய் வார்க்குரிய நால்வகை நிலைகளுளொன்று (திரு விளை. யானையெய்த. கூo. உரை) (8,9-பாரத. குருகுல. கூ.)

மண்டலபட்டி—சிற்றிலுப்பை. (வைத்திய பரிபா.)

மண்டலமாக்கள்—அரசர். (உ-ம்.) "உள் வரிபெற்பதுணர்த்துங்காலை- மண்டலமாக்கள் பிறிதோருருவம்" (சிலப். வேனிற். அசு. உரை.)

மண்டலாதிபதி—ஏகசக்கிராதிபதி. (வழக்.)

மண்டலாதிபன்—மண்டலாதிபதி. (வழக்.)

மண்டலாபிடேகம்—நாற்பதுநாள் மட்டுக்கு நாள்வட்டம்பண்ணு மபிடேகம். (வழக்.)

மண்டலி — 1. ஒருவகைப்பாம்பு. (பிங்கல. ௩௧௧௮) 2. சீதமண்டலி, ரத்தமண்டலி என விருவகைப்படுமென்பர். (வைத்தியபரி.) (த.நி. போ. ௯௭௦.) 3. தெரிசிலைவினைப்பகுதி. 4. நாய். 5. பாம்பு. 6. பூமி. 7 பூனை. (4, 5, 6, 7-சூ. நிக. ௧௧: ணகரவெ. ௯௫)

மண்டலிசிதம் — 1 கடுகு. 2. தேன். 3. வேர்வை (1, 2, 3-வைத்தியபரி.)

மண்டலித்தல்— } 1. வட்டமிடல். 2.
மண்டலிப்பு — } வட்டம். (1, 2-வழக்.)

மண்டலீகர்—அவ்வத்தேசத்தையாளு மன்னர். (உ-ம்.) "வாங்கும்வெஞ்சிலைமன்னவகுமாரரின்மண்டலீகரினுள்ளார்" (பாரத. படையெழுச்சி. ௭)

மண்டலேச்சுவரர் — 1. தாணுவாஷ்டகரிலொருவர். (வி-ணா. உ௭௩.) 2. திருவாரூரிலே கோயில்கொண்டிருக்கிறசுவாமி திருநாமம். (அபிதாநகோ.)

மண்டலேச்சுவரன்—மண்டலாதிபதி. (வழக்.)

மண்டலேசன்-மண்டலேச்சுவரன்.(வழக்.)

மண்டலேசுரம்—தன்மாத்திராதத்துவத்திலிருக்கும் பத்துப் புவனங்களுளொன்று. (சி. சி அ: ௭. மறை.)

மண்டலேசுவரம்-பிரதிட்டாகலையில் தன்மாத்திரா தத்துவங்களிலிருக்கும் ஐந்து புவனங்களுளொன்று. (சி-வி கிரி. உக. தாற்.)

மண்டி —1. ஒருகால் முடக்கியிற்கு நிலை. 2. கள்முதலியவற்றினடிப்பட்டது 3. நிலைகலங்கி. (உ-ம்.) "நாண்முதனான்கு-மண்டியொருசார்மறுதலைப்ப" (திருவிளை. வளையல். உ௩) 4. பெரியகடை. 5. மடுத்து. (புறநா.) 6. மிக்குச்சென்று. (உ-ம்.) "அறுவேறுவகையினஞ்சுவரமண்டி" (திருமுரு. ௫௮.) மிக்குஎன்றார் பரிபாடலில். (1, 2, 4-வழக்.)

மண்டிகை-அப்பவருக்கம்.(பிங்கல.௧௧௧௮.)

மண்டிதம்—சிறுகீரை. (மலையக.)

மண்டிய—அடர்த்துச்செய்த. (புறநா.)

மண்டியிடுதல்—மண்டிபோடுதல். (வழக்.)

மண்டிலம்—1. ஓரிருக்கை. (உ-ம்.) "தனிப்புடமண்டிலமேகபாதம்" (சிலப். வேனிற். உ௬. உரை.) 2. குதிரை. 3. சூரியசந்திரமண்டிலம். 4. காடு. 5. பார்வட்டம். 6. வட்டம். (உ-ம்.) "பரிப்புச்சூழ்ந்தமண்டிலமும்" (புறநா. ௩௦.) 7. வட்டமாயோடல், மண்டலமாவோட்டலென்பர். (சூ. நிக. ௯: ௪௨.) (2,3-பிங்கல. ௩௬௧௧.) (4, 5-புறநா.)

மண்டினார்—மிக்குச்சென்றார். (சிந்தா.)

மண்டு—மண்டுதல், நிறைதல். (உ-ம்.) "பரமர்மண்டுதவமறைக்குலத்தோர்" (பெரியபு. திருஞான. ௫௫.)

மண்டுகால்—முட்டுக்கால். (வழக்.)

மண்டுதல்—1. ஆவலாய்ப்பருகல், மிகக்குடித்தல். 2. தாக்கல். 3. நெருங்கல். (உ-ம்.) "விரித்சடைமண்டியமலைந்திட" (கோயிற்பு. பதஞ்சலி. ௫௦.) 4. மிக்குச்செல்லுதல். (உ-ம்.) "கடன்மண்டமூவத்துக்கயவாய்கடுப்ப" (மலைபடு. ௫௨௮.) 5. மிகல். (1, 2, 5-வழக்.)

மண்டூகபன்னி—அழிஞ்சில். (வைத்தியபரி.)

மண்டூகம்—1. கீச்சுக்கிட்டம. (வைத்தியர் வழக்கு. மண்டூகசெந்தூரம். 2. தவளை. (சூ. நிக. ௩. ௭௭.)

மண்டூரம் — 1. கீச்சுக்கிட்டம். 2. பழஞ்செங்கற்கிட்டம். (1, 2-வைத்தியபரி.)

மண்டை—1 உண்ணுதற்குரிய ஒருவகைப்பாத்திரம். (உ-ம்.) "தண்டெண்டையுமபிடித்துக்காவலர்" (மணிமே. சக்கரவாள. ௬௨.) ஒருவகைமண்கலம் என்றார் சிலப்பதிகாரத்தில். பாணர்கையிலுள்ள ஏற்கும் பாத்திரம் என்றார் புறநானூற்றில். 2. தலையோடு. (வழக்.)

மண்டைக்காப்பான்—ஒருநோய். (வழக்.)

மண்டைக்குடைச்சல் — தலைக்குத்து. (வழக்.)

மண்டைச்சூலை — ஒருநோய், கபாலசூலை (வழக்.)

மண்டைப்பீனசம்—ஒருநோய். (வழக்.)

மண்டைலம்—ஒருதைலம், மண்ணில்வடித்தெடுக்குந்தைலம்.

மண்டோதரி — இராவணன்மனைவி. (திருவாச. குயிற்ப. ௨.)

மண்ணம்—சுண்ணம்பு. (வைத்தியபரி.)

மண்ணரசு— 1. பூமியையுடையவரசர். 2. பூவரசமரம். (உ-ம்.) "மூதிரூழலாற்றிமண்ணரசுமாலுகமென்னும்" (தைல. தைலவ. ௬௨௪.)

மண்ணல் — 1. அலங்கரித்தல். (பிங்கல. ௬௧௫௪.) 2. ஒப்பனை. (சூ. நிக. ௯. ௫.) 3. கழுவுதல. (உ-ம்.) "உன்னுமடியாருளத்துக்கறையைமண்ணண" (தணிகைப்பு. காப்பு. ௨.)

மண்ணவர்—மனிசர். (உ-ம்.) "மைத்தகடன் மண்ணவர்கடம்முருவில்வம்மென்" (திருவாத. திருப்பெரு. ௮.)

மண்ணா—ஒருமீன். ஒரு குழைஉக்குதிபோலும்.

மண்ணி—பண்ணி. (பத்துப்பா.)

மண்ணியற்று — மண்பாத்திரம், மண்ணுவியற்றப்பட்டது. (வழக்.)

மண்ணில்வேந்நன்—1. அரசமரம். 2. வெற்றிலை. (1, 2-மலையக.)

மண்ணினுதனம்—உவர்மண். (வைத்தியபரி)

மண்ணீட்டாளர்—1. குயவர். (உ-ம்.) "கண்ணுள் வினைஞருமண்ணீட்டாளரும்" (சிலப். இந்திரவிழ கூ0.) 2. சிற்பாசாரியர். (சூ. நிக. உ. கூ0.)

மண்ணீடு—1. சுதையாற்செய்யப்பட்ட பாவை. (மணிமேக.) 2. திண்ணை. (சூ. நிக. ரு: ருரு.) 3. வேயாமாடம். (சூ. நிக. ரு: ருஉ.)

மண்ணீர்—கழுவுநீர். (உ-ம்.) "மண்ணீருமாகா" (வாக்குண்டாம். கஉ.)

மண்ணுணி—1. ஒரு பாம்பு. 2. விட்டுணு. (1, 2-வழக்.)

மண்ணுதல்—1. அலங்கரித்தல். 2. ஒப்பமிடுதல். (உ-ம்.) "மண்ணுறுமணி" (புறநா. ககஎ.) 3. கழுவுதல். (1, 2, 3-மண்ணலப்பார்.)

மண்ணுநவி-குழித்தைலம். (வைத்தியபரி.)

மண்ணுறுத்தல்—1. அலங்கரித்தல். (திருமுருகாற.) 2. பண்ணுதல். (பத்துப்பா.)

மண்ணுலிக்காரம்—அரிதாரம். (வைத்தியபரி.)

மண்ணை—1. அறிவிலான். (உ-ம்.) "அந்தன்மகன்வதிரன்மண்ணையாய்வருந்து மறிவுபோய" (சேதுபு. இராமநாத. அ.) 2. இளமை. (சூ. நிக. கச: ணகரவெ. கஎ.) 3. பசாசு. (உ-ம்.) "மககண்மண்ணைகண்மற்றவையால் வருநோய்கள்" (விருத்தா. கிரிச். கூஅ.) 4. வாலுளுவை. (மலையக.)

மண்மேற்றார்—மண்சுமப்போர், ஒருசாதி

மண்மேலோர்—மனிதர். (சூ. நிக. உ: அச.)

மண்பாச்சி—மண்ணீரல். (வைத்தியபரி.)

மண்பொதுத்தந்தை—பிரமன். (உ-ம்.) "வானவர்பூதவபோற்றிமண்பொதுத் தந்தை போற்றி" (சிவரக. கைமிச. கக)

மண்மகள்—பூமிதேவி. (பிங்கல. எஅ0.)

மண்மகள்புதல்வர்—சூத்திரர். (பிங்கல. எஅ0.)

மண்மாரி—மண்மழை. (வழக்.) எழுவகைச் செந்நிலாருமேசம் பொழியுமென்க. (பிங்கல. அக.)

மண்வெட்டி—ஓராயுதம். (இ-சுருவிப்பொருஞானத் திய விருசி.)

மணக்கால்நம்பி—ஒரு வைணவாசாரியர். (அபிதானசி.)

மணக்குடையார்—இவர் திருவள்ளுவர் குறளுக் குரைசெய்தவர். (அபிதானசி.)

மணங்கு—1. இருவாட்சி. (மலையக.) 2. ஒரு நிறை. (வழக்.)

மணத்தக்காளி—ஒரு செடி. (வழக்.)

மணத்தல்—1. கமழ்தல். பண்படியாகப் பிறந்தமைதாழிற்பெயர் 2. கூடுதல். (காஞ்சிப்பு. பாயி. தணந்தபெருந்தயரென்னு முதற்குறிப் புக்கவி.) 3 மோத்தல். (வழ.)

மணந்த—சேர்ந்த. (புறநா.)

மணப்பு—வாசனை. (தைல. தைலவ. கசச.)

மணப்பொருத்தம்—விவாகத்திற்குரிய பொருத்தம்; அவை: இராசி, இராசித்தலைவர் இரைசச, கணம், ஸதிரீதீர்க்கம், திநம், மாகேந்திரம், யோநி, வசியம், வேதை என்பன. (சோதிடக்.)

மணம்—1. கலியாணம்; அது: பிரமமணம் முதலாக எட்டுவகைப்படும். (அபிதாநசி.) 2. கூட்டம். 3. வாசனை. (உ-ம்.) "மணங்கமழ்குழலாய்" (அரிச்ச. மயான. க0.) (1, 2-சூ. நிக கக: ணகரவெ. உக.)

மணமகள்—மணவாட்டி. (வழக்.)

மணமகன்—மணவாளன். (உ-ம்.) "மணமகனேடுங்கௌவையம்புனல்வேலிசூழ்கடிநகர்விடுத்தான்" (திருவிளை. விருத்த. கசு.)

மணமலி—மருக்கொழுந்து. (வைத்தியபரி.

மணமுரசு—விழாமுரசுமாம். (சிலப்.)

மணல்—கருமணல், வெண்மணல் எனப் பலவகைப்படும். (வழக்.)

மணல்வாரி—1. ஒரு நெல். 2. ஒரு புல் (1, 2-வழக்.)

மணலி—1. நாய்ப்பூளை. 2. மணலிக்கீரை 3. மருக்கொழுந்து. (மலையக.) (1,2-வைத்தியபரிபா.)

மணலிக்கீரை—ஒருபூண்டு. (வைத்தியபரி.

மணலூர்—1. பாண்டியனகரம். 2. மணிபுரம் (அபிதாநகோ.) 3. சோழநாட்டிலுமோரூர் என்பர்.)

மணலை—ஒரு மீன். (வழக்குண்டுபோலும்.

மணவண்ணம்—உப்பிலி, ஒருகொடி. (வைத்தியபரி.)

மணவறை—1. பள்ளியறை. (உ-ம்.) "நானத்தீபமுமல்கியமணவறை" (பிரமோத். பஞ்சா. உச.) 2. விவாகம்பண்ணுமிடம். (திருவிளை. திருமணப். கஅக.)

மணவாட்டி—மணமகள். (உ-ம்.) "வந்த மணவாட்டிசிவசிந்தனையுஞ்சைவதவ வடிவும் நோக்கி" (திருவிளை. விருத்த. கரு.)

மணவாளதாசர்—ஒரு தமிழ்ப்புலவர், திருவரங்கக்கலம்பகஞ் செய்தவர். (அபிதாநகோ.)

மணவாளர்—நாயகர். (உ-ம்.) "சுந்தரசித்தேசுரிதன்மணவாள" (சிவரக. நந்திகேசுரர் நமனுக்கு. க0.)

**மணவாளமாமுனி**—தென்கலைவைணவாசாரியர். (மணிமேக.) இவர் சரிதச்சுருக்கம், (அபிதானகோசத்திற் பார்.)

**மணவாளி**—1. புதுமணப்பெண். 2. மாப்பிள்ளை. (1, 2-வழக்.,

**மணவியது**—மணமுடையது. (வழக்.)

**மணவீசம்**—மாதளை. (வைத்தியமூ. அக.)

**மணவை**—அடுப்பு. (உ-ம்.) "தாழியிட்டுமணவையிட்டைந்தாநாள்" (தைல. தைலவ. எகு.)

**மணற்காளான்**—1. தவளை. 2. மணலிலே முளைக்குங்காளான். (1, 2-வழக்.)

**மணற்குன்று**—புளினம். (சூ. நிக. ௫: உக.)

**மணற்கூகை**—தவளை. (வைத்தியபரி.)

**மணற்கோவை** — ஒரு கொவ்வை. (வைத்தியபரி.)

**மணற்றவளை** — தவளையினோர் பேதம் (வழக்.)

**மணன்**—கலியாணம். (பரிபாடல்.)

**மணாட்டி**— மணவாட்டி. (திருவிளை. தடாதகைப்பி. திருவவ. உங.)

**மணாளன்**—மணவாளன். (உ-ம்.) "கலைமகள் மணாளன்" (கூர்மபு. அரியய. கசு.)

**மணி**—1 அடிக்குமணி, கைமணி. நாதப்பிரமசொரூபத்தெரிவிப்பது. இதன் நாதம் எவ்வளவுதூரங் கேட்கப்படுகிறதோ அவ்வளவில் லுள்ளார் பாவ நீங்குவர்.(அபிதானசி.) 2. அழகு. (உ-ம்.) "மூன்றிலும்மணிமாடமுமொய்க்குமே" (அரிச்ச. நாட்டு. ௫௫.) 3. ஆட்டின்கழுத்திணதர். 4. இரண்டரைநாழிகைகொண்டநேரம். 5. இரத்தினம். (உ-ம்.) "வெயின்மணிக்கடை" (திருவிளை. மெய்க்கா. உ௮.) 6. உருத்திராட்சமணி. (உ-ம்.) "மாசிலாதமணிதிகழ்மேனிமேல்" (பெரியபு. திருக்கூட். சு.) 7. எதிமணி, சேகண்டி. 8. ஒன்பது. (தைல. தைலவ. ககச.) 9. கண்மணி. (உ-ம்.) "மணியாங்தைலவருக்கச் சுருக்கம்" (தைல. கடவுள். ௬.) 10. கருமை. 11. கல். (உ - ம்.) "அடிமணியிட்டாயன்றே" (இராமா. மகுடபங்கப். சஉ.) அடிமணி-அஸ்திபாரக்கல். 12. சங்குமுதலியவற்றாலாய மணி. 13. சிந்தாமணியென்னுந் தேவரத்தினம். (உ-ம்.) "மண்ணோர்புகழ்தில்லைவனம்பிரியாமணியே" (கோயிற்பு. வியாக்கிர. கஎ.) 14. சேட்டாதேவிபக்கத்திலிருக்குமவள். (சைவச. பொதுவி. சகுக. உரை.) 15. தன்னைத்தானறிந்து நின்றவைத்தியாசிரியன் கோசபீசம்முதலிய ஔடதங்களை முறைப்படியமைத்துப் புடக் தீர்த்தெடுத்தமைத்ததோர் குளிகைக்கல்; அதனைத் தமரிட்டுத் தரிப்பவராது கோய்முதலிய வைகள் உடனே நசிக்குமென்று அகத்தியர் கரிசலைமுதலிய நூல்கள்கூறும். (உ-ம்.) "வேதினிமந்திரமென்னைமணியென்னைமருந்தென்னை" (திருவிளை. நான்மாட. உச.) 16. தாமரைக்கொட்டை. 17. நவமணிப்பொது. (உ-ம்.) "அருள்கூரக் - காரவாவியருழலுமை துபுரக் கதிர்மணியிடைடத்தோற்று" (தணிகைக. திருநாட். எ.) 18. நன்மை. 19. நீலரத்தினம். (உ-ம்.) "மணிநிறவண்ணன்" (கூர்மபு. அந்தகா. கூ.) 20. நென்முதலியதானியம், மணிபிடியாயிருக்கிறது. 21. பளிங்கு. (உ - ம்.) "மலர்தாயபொழினண்ணிமணிநீர்க்கயநிற்ப" (கவி. ௬௫.) 22. பறவையின்கழுத்தாரம். 23. பெண்குறியிலோருறுப்பு. (உ - ம்.) "அந்தவல்குலையுமுள்ளவதன்மணியையுஞ்சுவைத்து" (கொக்கோகம்.) 24. பொன். (ஆசிரியநிக. சு: க.) 25. பொன்முதலியவற்றாலாயமணி. 26. மாணிக்கம். (சிந்தா. முத். கசுo.) 27. மாத்திரை. (உ - ம்.) "மணிவடகஞ்சுதை" (தைல. வைத்திய. கக.) 28. முத்து. (உ-ம்.) "மலைவளர்சந்தகில்பீலிமலர் பரப்பிமணிகொழிக்கும்-அலைதருதண் புனற் பெண்ணையாறு" (பெரியபு. தடுத்தாட். அ௨.) 29. யானைமணி. (உ-ம்.) "யானைவரும்பின்னே மணியோசைவருமுன்னே" (1, 3, 4, 7,12,15, 20, 22, 25, 29-வழக்.) (10, 18, 19-பிங்கல. ௬ககஎ.) (சிந்தாமணியில், உருண்டை என்பர்.

**மணிக்கட்டு**—கையிலோருறுப்பு. (சூ. நிக. உ: கக.)

**மணிக்காம்பு**—தக்காளி. (வைத்தியபரி.)

**மணிக்கிரீவன்** — குபேரன்மக்களி லொருவன். (அபிதானசி.)

**மணிக்கோவை**—மணிமாலை. (சூ. நிக. கக: மகரவெ. அ.)

**மணிகடம்**—உத்தாமணி. (உ-ம்.) வந்துழிக் காண்க.

**மணிகண்டன்**—சிவன், நீலகண்டன் என்பதாம். (சூ. நிக. க: க.)

**மணிகர்ணிகை** — மணிகன்னிகை; இது: காசித்தலத்திலோர் தீர்த்தத்துறை. (கந்தபுராணம். தக்கன் சிவபூசைசெய்தபடலம் 2-ஆவது கவியில் மணிகன்னிகையென்று கூறினர்.)

**மணிகாண்டத்திரயம்**—ஒருவியாக்கியானம். (த. ந். போ. ௬oச.)

**மணிகாரகன்**—இரத்தினங்களை வேடகஞ் செய்வான் அல்லது சாணைபிடிப்போன். (வழக்.)

**மணிகாரம்**—வெண்காரம். (வைத்தியபரி.)

**மணிகாரன்**—வைசியப்பெண்ணை வைசியன் கரவினாற்கூடிப்பெற்ற பிள்ளை. (சூத. எக.) (அபிதானசி.)

மணிக்காளி—மணித்தக்காளி. (வைத்திய பரிபா.)

மணிகூடம்—ஒருபர்வதம்; அது: இந்திரன் விளையாட்டுச்செய்குன்று. (அபிதாநசி.)

மணிச்சிகை—செம்மணிப்பூ. (உ-ம்.) "செங்கொடுவேரிதேமாமணிச்சிகை" (கு-பா. கூச.)

மணிச்சோதி—வாயுதேவன்வில். (உ-ம்.) வந்துழிக்காண்க.

மணிசகம்—சந்திரகாந்தம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

மணிசேகரம் —'யமனுடைய அந்தப்புரம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

மணித்தக்காளி—ஒரு செடி. (வழக்.)

மணிதீபம்-பாற்கடன்மத்தியிலுள்ளவொரு தீவு. (அபிதாநகோ.)

மணிநாள்—ஒன்பதுநாள். (தைல. தைலவ. ககரு.)

மணிநெய் — சிறுமுத்துக்கொட்டைநெய். (உ-ம்.) "குடிநீர்விதிமணிநெய்யிதுவே" (தைல. தைலவ. கஉரு.)

மணிப்பவம்—இருபது. (உ-ம்.) "சிந்துவாரஞ்சடக்கடைதொடிமணிப்பவஞ்சேர்" (தைல. தைலவ. ககச.)

மணிப்புங்கு—1. நெய்க்கொட்டான். (மலையக.) 2. பூவந்தி. 3. பொன்னுங்காணி. (2, 3-வைத்தியபரி.)

மணிப்புளகு—மணிப்புங்கு.

மணிப்புறு—ஒரு புறு. (வழக்.) (சிந்தா.)

மணிப்புன்கு—பொன்னுங்காய். (தைலவ.)

மணிப்ரபை—நிருதிமனைவி. (உ-ம்.) வந்துழிக்காண்க.

மணிபர்வதம்—ஒரு பர்வதம். (உ-ம்.) வந்துழிக்காண்க.)

மணிபிடித்தல்—தானியம்பிடித்தல். (வழக்.)

மணிபீசம்—மாதுளை. (வைத்தியபரி.)

மணிபுட்பகம் — சகாதேவனுடைய கையிலிருக்குமொரு சங்கு. (பகவத்கீ. க: கரு.)

மணிபூரம்—கலிங்கதேசத்திலுள்ளவொரு பட்டினம். (அபிதாநகோ.)

மணிபூரகம்—ஆறுதாரங்களின் மூன்றாவது; இது: சுவாதிட்டானத்திற்குமேல் எட்டுவிரற்பிரமாணத்திலே நாபித்தானத்திலுள்ளது. கோழிமுட்டைத்திரட்சிபோன்றுநிற்கும். ஆயிரத்தெட்டு நரம்பு சுளிநாடிகளுக்கெல்லாம் வேராய் மேகவன்னமாய்ப் பத்திதழுடைய கமலமாயிருக்கும். இதில் விசுவேசுரி எழுந்தருளியிருப்பள். (தத்துவவி )

மணிபூரம்—கொப்பூழ். (திருவிளை. வெள்ளியம்ப. சு.)

மணிமதி—இல்வலன், வாதாபி இருந்தபட்டினம். (அபிதாநகோ.)

மணிமந்தம்—இந்துப்பு. (வைத்தியபரி.)

மணிமாலை—1. ஒரு பிரபந்தம்; அஃது: எப்பொருண்மேலும் வெண்பா இருபதும் கலித்துறை நாற்பதும் விரவிவரச்செய்வது. (பொருட்-நிகண்டு) 2. பிரபை. 3. மணிகளாற்செய்த மாலை. (2, 3-வழக்.)

மணிமுசுட்டை — பேய்முசுட்டை. (வைத்தியபரி.)

மணிமேகலை — 1. ஒரு பெண்டெய்வம். 2. கோவலன்புத்திரி. 3. பஞ்சகாவியத்தொன்று. (அபிதாநசி.) (1, 2-அபிதாநகோ.)

மணியகாரன்—விசாரணைகாரன். (வழக்.)

மணியம்—மணியவேலை. (வழக்.)

மணியாசம்—மணியாசப்பலகை. (வழக்.)

மணியாசி—1. ஒருமரம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. மணியாசிக்கட்டை. (வழக்.)

மணியாசிக்கட்டை—சாந்தழுத்தித் தேய்க்கும் பலகை. (வழக்.)

மணியாமணக்கு—பறங்கியாமணக்கு. (மலையக.)

மணியீரல்—ஈரல். (வழக்.)

மணியுப்பு—கறியுப்பு. (வைத்தியபரி.)

மணியுயிர்—ஐவகையுயிர்களு ளொருவகையுயிர். (சைனநூல் வழக்கிது.) (மணிமே.)

மணிராக்கம்—இங்குலிகம். (வைத்தியபரி.)

மணிலிங்கம்—புதன். (த. நி. போ. உககூ.)

மணிவடம் — 1. அக்கமாலை. 2. இரத்தினமாலை. (1, 2-வழக்.)

மணிவண்ணன் – காவிரிப்பூம்பட்டினத்துக் கோயில்கொண்டிருக்குந் திருமாலின் பெயர். (அபிதாநகோ.)

மணிவிளக்கு —அரதநதீபம். (சிந்தா.)

மணிவினைஞர்—முத்துக்கோப்பார். (மணிமே.) (சூ. நிகண்டிலுங்காண்க.)

மணிவீசம்—மாதுளை. (மலையக.)

மணீசகம்—சந்திரகாந்தம். (உ-ம்.) வந்துழிக்காண்க.

மணை — 1. சிறுபீடம். 2. திருவலகு. 3. பணிமுதலியமுட்டு. 4. பருத்திமணை. 5. பலகை. (சிந்தா.) 6. பாதபடி. (உ-ம்.) "நூலேகரகம்முக்கோன் மணையேயாயுங்காலையந் தணர்க்குரிய" (இலக்கணவி. கூஉச.) 7. மழுங்கல். (1, 2, 3, 4, 7-வழக்.)

மத்—1. உடையது. ஸ்ரீமத் கம்பராமாயணம். (வழக்.) 2. ஓரிசை. (சிலப்பதி. அரங்கேற்றுகாதை. உஎ-அடி. உரை.)

மத்தகம்—1. சென்னி. (சூ. நிக. உ: கூஅ.) 2. நெற்றி. (உ-ம்.) "மத்தகஞ்சேர்தனிநோக்கி னன்வாக்கிறந்தூறமுதே-யொத்து" (திருக்கோ. கoசு.) 3. யானைமத்தகம். (சூ.நிக.கூ:சு.)

மத்தங்காய்ப்புல்—ஒரு புல். (வழக்.)

மத்தப்பிரமத்தன்—மிருகளிப்புடையோன். 2. மிகுவெறியன். (1, 2-வழக்.)

மத்தம் — 1. ஊமத்தை. (தைல. தைலவ. கoரு.) 2. எருமைக்கடா. (உ-ம்.) வந்துழிக் காண்க. 3. களிப்பு. (வழக்.) 4. செருக்கு. (உ-ம்.) "மத்தமறப்பதுபார்வை"(கம்பரா.ருஉ.) 5. மூத்தூ. (பெரும்பா.கருசு.) 6. வெறி.(தாயு. சச்சிதா. சு.)

மத்தரி—ஒருவகை வாத்தியம். (வழக்.)

மத்தவாரணம்—பாக்குவெற்றிலைத் தூவையல். (வைத்தியபரி.)

மத்தளம்—ஒருவகையுத்தமத் தோற்கருவி. (சிலப். அரங்கே. உஎ. உரை.) [மத்து-ஓசைப் பெயர்; இசையிடனுகிய கருவிகட்கெல்லாம் தளமாதலான் மத்தளமெனப் பெயராயிற் றென்பர்.]

மத்தன்—உன்மத்தன். (தாயு. பொன். கூரு.)

மத்தனம்—கடைதல். தகரவொற்றுவிகாரம்.

மத்தனலிங்கம்—மருக்காரை. (மலையக.)

மத்தாடி—கருவூமத்தை. (மலையக.)

மத்தாப்பு—ஒரு வாணம். (வழக்.)

மத்தி—நடு. (வழக்.)

மத்திகூர்மை—இலாலவணம்.(வைத்தியபரி)

மத்திகை—1. குதிரைச்சம்மட்டி. (உ-ம்.) "மோதுமத்திகைபோன்மூலைமேற்பட" (இராமா. மிதிலை. எஅ.) 2. பூமாலை. 3. விளக்குத் தண்டு. (1, 2, 3-சூ. நிக. சக: தகரவெ. உசு.)

மத்தித்தல்—1. கடைதல். (உ-ம்.) "பாற்சமுத்திரத்தைமத்தித்ததிருமால்" (கூர்மபு. திருக்கல். சஅ.) 2. தேய்த்துக்குழப்புதல். (வழக்.)

மத்திபம்—குறை. (வழக்.)

மத்திமக்கிரகம் — சந்திரசூரியர். (விதானமாலை.) [இவை சிலநாள் சுபக்கிரகம் சிலநாளசுபக்கிரகமாதலினிப்பெயர் பெற்றன.]

மத்திமகண்டம்—நவகண்டத்தொன்று. (சூ. நிக. கஉ: கக.)

மத்திமசங்காரம்—மானயவரைக்குமழிகிற சங்காரம். (சி. சி. க: கூரு. மறை.)

மத்திமச்சம்—வாலுளுவை.(வைத்தியபரி.)

மத்திமசாகசம் — ஐந்நூறு அல்லது ஐந்நூற்றுநாற்பது பணத்தொகை. (மிருச.உகூக.)

மத்திமதானம்—மூவகைத் தானத்தொன்று. (சூ. நிக. கஉ: கஉ.)

மத்திமதீபம்—ஓரலங்காரம்; அது: நடுநிலைத் தீவகம்.

மத்தியதேயம்—ஓர் தேயம். (திருவிளை. மேருவை. சஅ.)

மத்தியப்பிரளயம்—ஐவகைச்சங்காரத்துண் மூன்றுவது; இது: வித்தியாகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம். இச்சங்காரஞ் செய்பவர் உருத்திரர். (சி. சி. குறிப்பு)

மத்திமபதலோபசமாசம்—நடுவெருமொழி தொக்குநிற்பது. (பி. வி. )

மத்திமபுருடன்—முன்னிலை. (பி. வி. கூஉ.)

மத்தியம் — 1. இடை. (பிங்கல. கoo அ.) 2. காந்தாரத்துளைக்கு அடுத்ததுளை (பெரியபு. ஆனாய். உசு.) 3. குறைவு. (வழக்.) 4. சமனிசை. (சூ. நிக. கo: சo.) 5. நடு. (சூ. நிக. ரு: கூசு.)

மத்திமமாறுங்குலம் — 1. யவை ஏழுகூடினது.(வி-ணி. உகூஎ.) 2. உத்தமனுங்குலமேழுகூடினது. (த. நி. போ. கூஉசு.)

மத்தியன் — 1. அதிகுய்யாட்டசாரிலொருவன்.(வி-ணி. உஎக.) 2. நடுவுள்ளவன்.(வழக்.)

மத்திமை—1. நடுவிரல். (உ-ம்.) "அங்குட்டமத்திமையநாமிகையாணிறணிக" (சைவச. பொது. சஅக.) 2. மத்திமைவாக்கு. (உ-ம்.) "உள்ளுணரோசையாகிச்செவியினிறுதல் செய்யா-துள்ளியபிராணவாயுவிருத்தியையுடையதன்றித் - தெள்ளியவக்கரங்கள்சிந்திடுஞ் செயலதின்றி - மெள்ளவேயெழுவதாகு மத்திமைவேறதாயே" (சி. சி. சிற். க: உக.)

மத்திமைவாக்கு — நான்குவகை வாக்குகளிலொன்று; அது: செவியிற் கேட்கப்படாததாயும் மெல்லோசையாய்க்கண்டத்திலே விளங்குதலுண்மையாற் சொல்லுவான் றன்னுள்ளே உணருஞ்சவிகற்பவுணர்வுக்கேதுவாய் உள்ளேயுணரப்படுமோசையாதலுஞ் சூக்குமரூபமாயக்கரங்கள்பிறிந்துதோன்றினும் பல்விதழ்நாவண்ணங்களிற்பட்டுச் சிதறிப்போதலின்மையுமாகிய அவ்விரண்டிலக்கணத்தானும் முறையே பைசந்திக்கும் வைகரிக்கும் வேறுயறியப்படுவது. (சி. சி. க: உக. சிவஞா.) [இது மகாரத்தைப்பற்றிவரும் இதற்குத்தானம் நெஞ்சுங்கண்டமும், வடிவு பிராணவாயு. (சிவப்பிர. வியாக். பொது.]

மத்தியகந்தம்—மாமரம். (மலையக.)

மத்தியசங்காரம்—மாயைமட்டுஞ்சங்காரப்படுவது, மத்திமசங்காரம் எனக.

மத்தியசிருட்டி—குணநிலைய ஸ்ரீகண்டருத்திரன், பிரகிருதியிலிருந்து புவனாதாரக்கொத்துமாத்திரமாயிருக்கிற குணதி பிருதிவியந்த

மான இருபத்துநாலு தத்துவங்களையும் போக்கியப்பொருள்களையும், நாலு தேகங்களையும், அசத்தாத்துவவாசிகளாகிய பிரமா விட்டுணு முதலிய தேசிகளையும் பகுடர்ந்து இருட்டி. (சி. சி. ௪: ௩௫. மறை.)

**மத்தியத்தன்** — நடுநியாயக்காரன். (வழக்.)

**மத்தியதேசம்** — விராடநாடு. (அபிதாநசி.)

**மத்தியந்தனர்முனிவர்** — வியாக்கிரபாதமுனி தந்தையார். (அபிதாநகோ.)

**மத்தியப்பிராணயாமம்** — மாத்திரைகாலம் இருபத்துநான்குவகையில் கும்பித்தல். (சி-வி. யோக. ௫ ம். உரையும்.)

**மத்தியபதலோபம்** — தற்புருடனுள் உருபும் பொருளும் உடன்தொகுதல. (பி-வி. ௩௭.)

**மத்தியபாநமதரோகம்** — மதரோகபேதமேழனுளொன்று; அது: சரீரத்திற் பலவிதக் கெடுதி முகத்திலுளிநீங்குதல் சொனிகெடல் எவரிடத்தும் நிராசையென்னும் குணங்களை யுண்டாக்கும். (சீவரட். எ௨.)

**மத்தியம்** — 1. இடை. (வழக்.) 2 கள். (உ-ம்.) "மத்தியபாநியன்மேனென்மறைவர்க்கோறல்செய்து" (சிவரக. வில்வல. ௪0.) 3. நடு. (பிங்கல. ௪௬௨.)

**மத்யம்** — எண்மாணத்திற் பத்தொன்பதாவது தாநம். (சி-வி ஞாந. ௨௫ உரை.)

**மத்தியம்பீ** — வசம்பு. (வைத்தியபரி.)

**மத்தியமண்டபம்** — மகாநுரை. (வைத்தியபரி)

**மத்தியமம்** — 1. ஏழிசையி னொன்றாகிய உழையென்பது; அது: ம என்பது. (கொ. ௪0.) 2. நடுவிரல். 3. மத்தி. (2, 3-வழக்.)

**மத்தியமாவதி** — ஓரிராகம். (வழக்.)

**மத்தியமேசம்** — பிரதிட்டாகலையின் சேயுதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களு ளொன்று. (சி-வி. கிரி. ௨௯. சாற்.)

**மத்தியமை** — 1. குமரி. 2. நடுவிரல். (1, 2-வழக்குண்டுபோலும்.

**மத்தியலோகம்** — பூலோகம். (வழக்.)

**மத்தியவிருந்தம்** — உந்தி. (வைத்தியபரி.)

**மத்தியாந்நம்** — பகலில் உச்சிக்குமுன்மூன்று நாழிகையும் பின்மூன்று நாழிகையுங்கொண்ட நேரம். (வருஷாதிநூ.)

**மத்தியாநம்** — உச்சிப்பொழுது. (உ-ம்.) "மத்தியாநத்தவண்வந்துசார்ந்தனன்" (சேரந் தெண்டியார் தெரிச. ௧௬.)

**மத்தியாமோதம்** — மகிழமரம். (வைத்தியபரி.)

**மத்தியாலவத்தை** — ஆன்மா எல்லாக்கருவி கரணாதிகளுடனே கூடிநின்று எவற்றையு மறிந்த சாக்கிராவத்தையிற்றானே பஞ்சாவத்தையும் பொருந்திநிற்குமவதரம்; எங்ஙனமெனில்: முற்கண்டபுருஷனைத் தூரத்திற்கண்டு நாமசாதிகளினது மறதி மத்தியாலவத்தையிற் சாக்கிராதீதம், பெருமூச்செறிந்து விசாரித்தறிவோமென்பது சாக்கிரதுரியம், முன்கண்டவிடமாத்திரந்தோன்றுவது சாக்கிரசுழுத்தி, முன்னவ்விடத்திற்கண்ட புருஷனிவனென்பது சாக்கிர சொப்பனம், சந்தோஷத்தோடுபார்த்துக் கட்டிக்கொள்வது சாக்கிரசாக்கிரம். (சி. சி. சித். ௪: ௩௫. உரை.) [இந்த ஐந்தவத்தையும் லலாடமாகிய சாக்கிரத்தானத்தே நிகழ்வது.]

**மத்தியாலவத்தையிற்சாக்கிரதுரியம்** — ஒருபொருளைத் தூரதிற்கண்டு விசாரித்தறிவோமென்புது. (கூர்மபு. அரியய. ௧௧. உரை.)

**மத்தியாலவத்தையிற்சாக்கிராதீதம்** — ஒருபொருளைத் தூரத்திற்கண்டவிடத்து நாமசாதிகளினது மறதி. (கூர்மபு. அரியய. ௧௧. உரை.)

**மத்திமை** — 1. இடை. 2. காமமும் நாணமும் சமமாகவுள்ளவள். 3. நடுவிரல். (1, 3-வழக்.)

**மத்திரம்** — சிபிபுத்திரனாகிய மத்திரனாலே இமயமலைச்சாரலிலே நிருமிக்கப்பட்ட தேசம். (அபிதாநகோ.)

**மத்திரர்** — மத்திரதேசத்தவர்கள். (உ-ம்.) "வாஞ்சாமனத்தின்வயமத்திரர்மாகதேயர்" (பாரத. வெளிப்பா. ௨௧.)

**மத்திரன்** — மத்திரதேசத்தரசன். (பாரத. சம்பவ. ௮௫.)

**மத்திராகரணம்** — பிறவிமயிர்களைதல். (உ-ம்.) வர்து ஃகாண்ச.

**மத்திரி** — பாண்டுவினிரண்டாம்மனைவி. (பாரத. சம்பவ. ௧0௧.)

**மந்திரிப்பு** — செற்றம். (சிந்தா.)

**மத்திரை** — மத்திரி.

**மத்து** — 1. ஊமத்தை. (வைத்தியபரி.) 2. தயிர். 3. தயிர்கடைகருவி. (உ-ம்.) "மத்தெறிதண்டயிர்போலக்கலங்கி" (திருவிளை. பழியஞ்ச. ௪௧.) 4. தயிர்ச்சலம். (உ-ம்.) "அவந்தி மத்துமாற்றப்பளவைபடிப்பலமாம்" (தைல. தைலவ. ௫௯.)

**மத்துவம்** — மத்துவமதம். (வழக்.)

**மத்துவன்** — 1. மத்துவமதத்தோன். (வழக்.) 2. வேதாந்தசூத்திரத்தற்கு ஒரு பாஷ்யமியற்றியவர்.

**மந்துவாசவம்** — பன்னீர். (வைத்தியபரி.)

**மத்துவாசாரியர்** — துவைதமதந் தாபித்தவர். (அபிதாநகோ.)

**மத்தை** — ஊமத்தை. (தைல. தைலவ. எ௨.)

**மதகம்** — சுக்கு. (தைல. தைலவ. ௮௬.)

**மதகரிக்கணை** — யானைத்திப்பலி. (வைத்தியபரி.)

மதது—குளத்தின்சலதாரை. (உ-ம்.) "வாவி சோரிரப்பிமதகினில்-தாவிநீழ் க ரை சா டி" (அரிச்ச. நாட்டு உகு.)

மதங்கயம்—மதகயம். (உ-ம்.) "மதிக்கு மதங்கயமனையவரக்கன்" (சேதுபு.பிரமகத். எ.)

மதங்கநாதர்—நவநாதசித்தரி லொருவர். (பொருட்-நிகண்டு.)

மதங்கம்-1. ஓராகமம். 2. கலம்பகவுறுப்புப் பதினெட்டினொன்று அம்-சாரியை 3. மதங்க மலை.

மதங்கர்—பாணர். (சிலப். அரும்பத.) குழலருமாம்.

மதங்கமலை—இது சுக்கிரீவன் வாலிக்குப் பயந்தொளித்திருந்தமலை. (இராமா. கிஷ்கிந்தா. அரசிய கூச.)

மதங்கன்-ஒரு முனி. (உ-ம்.) "வள்ளலுமவ ணின்றேகிமதங்கனதிருக்கையான" (இராமா. கிஷ்கிந்தா. அரசிய. கூச.) [இவர் தவத்தினாலே யுமையைப்புத்திரியாகப் பெற்றவர் அதனாற் பார்வதிக்கு மதங்கியெனப்பேர்வந்தது. (அபிதானகோ.) துந்துபிக்கும் பெயர் கூறுவர்]

மதங்காகமம்-ஒருவடமொழிநூல். (வழக்.)

மதங்கி—1. உமை. மதங்கன்பார். 2. காளி. (உ-ம்.) "அந்தரி" பார். 3 பாடுவிச்சிப்பெண். (சூ. நிக. சுகு.) 4. பாண்மகள். (பிங்கல. அகவ.)

மதங்கை—அத்தி. (வைத்தியபரி.)

மதசந்தி—மதங்களி. (மணிமே.)

மதசாரிணை—தண்ணீர்விட்டான். (வைத்தியபரி.)

மதநண்டி—வல்லாரை. (வைத்தியபரி.)

மதந்தல்—1 கொழுத்தல், 2 செருக்குதல். (1, 2-வழக்.)

மதத்தன்—1. சமயவாதி. 2. மதமுடையவன். (1, 2-வழக்.)

மதநகாகனம்—குயில். (வைத்தியபரி. பாரதம் குருகுலச்சருக்கத்தில், மாரகாகனமென்றூர்.)

மதநகாதுரவம்—புறா. (உ-ம்.) வந்துழிக் காண்க.

மதநகாமப்பூ — மதநகாமேசுரப்பூ, ஒரு சரக்கு. (வைத்தியபரி.)

மதநசலாகை—1. ஒரு மருந்து. 2. பெட்டைக்குயில் 1, 2-(உ-ம்.) வந்துழிக்காண்க.

மதநநூல் — மதநசாத்திரம், லீலை நூல். (வழக்.)

மதநபாடகம் —குயில். (உ-ம்.) வந்துழிக் காண்க.

மதநம்—1. [illegible] (உ-ம்.) வந்துழிக்காண்க. 2. கடைதல். (பிங்கல. உகஉஉ.) 3. காமநோய். (சூ. நிக. அ: எசு.) 4. மருக்காரை. (மலையக.) 5. மன்மதன் பஞ்சபாணவத்தைக் குணங்களினொன்று. (சூ. நிக. கஉ: சக) மெழுகுகளிலே தேன்மெழுகுக்கும் பெயர்கூறுவர்.

மதநராசன்—ஒரு ராசன்; இவனைக்குறித்தொரு கதையுண்டு, (சந்திரஹாசச்சரிதையிற் காண்க.)

மதனலிங்கம்—அருக்கிரா. (வைத்தியபரி.)

மதநன்—மன்மதன். (உ-ம்.) "மதநனுங்கலை முருகனுமெனும்படிவளர்ந்தான்" "பாரத. குரு. க.)

மதநாங்குசம்—1. குய்யம். 2. நகம். (1, 2-வழக்குண்டென்பாரும்)

மதநாலயம் —தாமரை. (வைத்தியபரி.)

மதநிகை—மல்லிகைக்கொடி. (வைத்தியபரி.)

மதநீர்—மதசலம் (உ-ம்.) "மதநீர்பாயமேவிந்தனா" (கந்தபு. ததீசியுத். சு0.)

மதநை—கள். (வைத்தியபரி.)

மதப்பு — 1. கொழுப்பு. 2. செருக்கு. 3. மயக்கு. (1, 2, 3-வழக்குண்டு.)

மதப்பூ — மராட்டிமொக்கு. (உ-ம்.) "சத புட்பிப்பூ" (தைல. தைலவ. ககரு.)

மதபலி—, மதபாணை — } வட்டத்திருப்பி. (மலையக.)

மதம் — 1. ஐசுவரிய கோலாகலத்தினாற் கர்வித்துக் கிர்த்தியாகிருத்தியங்களறியாமல் விகற்பித்துவருகிற சித்தவிருத்தி. (வாசுதே. கஎ.) 2. கருத்து, குறிப்பு (சூ. நிக. அ: கச.) 3. களிப்பு. (பிங்கல. களஅரு.) 4 கன்மதம். (உ-ம்.) "பொற்புறவடியுமதஞ்சந்தகாரிலைவ புடப்பொடி" (தைல. தைலவ. கஉகு) 5. கொழுப்பு. 6. சமயம், கொள்கை, (சைவப்பி. சச.) 7. செருக்கு; அஃது: உட்பகையாறினொன்று.) (சூ. நிக. கஉ: நிக.) 8. தன்னிலேயில்லாத குணங்களையேற்றித் தன்முயற்சி கருதல். (சைவப்பி. கஉ.) 9. தாது. (உ-ம்.) வந்துழிக்காண்க.) 10. தேன். (உ-ம்.) "மதங்கமழ்கோதையல்குல்" (சிந்தா. இலக்கணை. சஅஉ.) 11. பெற்றதைப் பெரிதாகமதிப்பது. (சி. சி. உ: அ0. மறை) 12. யானைமதம். (சூ. நிக. கக: தகரவெ. உஅ.) 13. வலி. (சூ. நிக. அ: உசு.) 14. வெறி. (5, 14-வழக்.) பரிபாடலிற் பெருமிதம் என்றூர்.

மதம்பாய்கவடு — மதநீர் பாய்தலாலுண்டாந்தழும்பு. (சூ. நிக. ரு: எ. சாட்டமென்பர்.)

மதமடு—வெள்வெண்காயம். (மலையக.)

மதமத்தகம்—கஞ்சா. (வைத்தியபரி.)

மதமத்தம்பூ—ஊமத்தை. (வைத்தியபரி.)

மதமந்தன் — மதத்தினல் மயங்கிக்கிடப்போன். (வழக்.)

மதமதக்கத்தாழி — மண்ணினற் செய்து அதிகமுதிர்ந்தோரை அடக்கம்பண்ணிவைக்கு மொருவகைப் பாத்திரம். (முதுமக்கட்டாழி யென்பர் மணிமேகலையில்.)

மதமதப்பு—மிகுமதப்பு. (வழக்.)

மதமதெனல்—1. ஈரடுக்கொலிக்குறிப்பு. 2. சுரணைகுன்றல். 3. மதமுறல். 4. விரைவுக் குறிப்பு. (1, 2, 3, 4-வழக்.)

மதமழகம்—காரை. (வைத்தியபரி.)

மதயந்தி—மதயந்திகை.

மதயந்திகை — ஒருமல்லிகை. (வைத்திய பரி.)

மதர்—1. களிப்பு. (உ-ம்.) "வரிமதர்மழைக் கண்மெல்லியசொல்லாம்" (கந்தபு. இரணியன் புல. ௬.) 2. செருக்கு. (வழக்.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. மயக்கம். (உ-ம்.) "கண்மதர் நீங்கி" (கூர்மபு. அட்டமூ. வி. ௮.) 5. மிகுதி. (நிகண்டில் மதர்வுஎனக் கூறினர்.) உகரஞ் சாரியையெனக.

மதர்த்தல்—1. கதிர்த்தல். (உ-ம்) "மதரரி மழைக்கணம்பா" (சிந்தா. சீவகன்றற. க௩௨.) 2. களித்தல். 3. செருக்குதல். 4. செழித்தல். (உ-ம்.) "மதர்த்துநீண்டசேலாருங்கணுமைடங் கனுறை" (ஏகாதசி. உருக். ௪0.) (2, 3-வழக்.

மதர்ப்பு — 1. களிப்பு. (பிங்கல. கஎஅரு.) 2. செருக்கு. 3. செழிப்பு. 4. மிகுதி. 5. வலிமை. (2, 3, 4, 5-வழக்குண்டுபோலும்.)

மதர்வு—1. அழகு. 2. இடம். 3. உள்ளக் களிப்பு. 4. மிகுதி. 5. வலிமை (சூ. நிக. கக: தகரவெ. உஎ.)

மதர்வை — 1. களிப்பு. (பிங்கல. கஎஅரு.) 2. மயக்கம், (உ-ம்.) "மருப்பிளம்பிறைநுதன் மதர்வைவெங்கதிர்-பரப்புகிடந்தென" (சிந் தா. நாமக. உசுரு.)

மதராகன்—1. சேவல். 2. மன்மதன். 1,2- (உ-ம்.) வந்துழிக்காண்க.

மதரோகம்—மதத்தையுண்டாக்கு மொரு வகை ரோகம். சீவரட். எ௨.)

மதலிங்கம்—அமுக்கிரா. (மலையக.)

மதலை—1. கொடுங்கை. (உ-ம்.) "மதலைமாடமும்வாயிலுஞ்சேர்த்துமின்" (மணிமே. க௩: ௩௫.) 2. கொன்றைமரம். (உ-ம்.) "மதலைப் பசும்பொன்மலர்வேணிநம்பர்" (மதுரைப் பதிற்று. ௬எ.) 3. சரக்கொன்றை. (உ-ம்.) "கிஞ்சுகி"பார். 4. தூண். 5. பற்றுக்கோடு. (உ-ம்.) "வானூன்றியமதலைபோல" (பெரும்பாண். ௬௬௬.) 6. பிள்ளை. 7 மரக்கலம் (உ-ம்)"மதலை தவழுதுறையிடை" (திருப்பு. உக.) (4, 6-சூ. நிக கக: தகரவெ. க.)

மதலைத்தூக்கு-இசைத்தமிழ்நூலிற்கூறப் பட்ட வெழுவகைத்தூக்கினென்று.(மணிமே.)

மதவலி—1. அரசன். (சிந்தா.) 2. முருகன். (உ-ம்.) "சூர்மருங்கறுத்தமொய்ம்பின்மதவலி" (திருமுரு. உ௭௰.) 3. மிக்கவலி. (புறநா.)

மதவையயம்-சாஞ்சொறி.(வைத்தியபரி)

மதன்—1. அழகு. (சிறுபாண. உ௫௬.) 2. அறியாமை. (உ-ம்.) "உறுநர்த்தாங்கியமதனுடை நோன்றாள்"(திருமுரு. ௪.) 3. கலக்கம். (உ-ம்.) வந்துழிக்காண்க. 4. காமன், மன்மதன். (உ-ம்.) 'விற்காட்டமகரத்துமதனம்பாகி' (திருவாதவூ. திருப்பெரு. ௨0) திருமாலின் மானசபுத்திரன் என்பர் அபிதானகோசத்தில். 5. செருக்கு. (உ-ம்.) "மன்னெயில்கதவுமதனுடைநோன் றாள்" (பட்டினப்பாலை உஎக) 6. மதமுடையான். (பாரதவெண்பா.) 7. மனவெழுச்சி. (உ-ம்.) 'மண்டமர்பரிக்குமதனுடைநோன்றாள்' (புறநா. எ௫) 8. மாட்சிமை. (பிங்கல. [illegible]) 9. மிகுதி. (உ-ம்.) "மதனுடைநோன்றாள்" (புறநா உகரு.) 10. வலி. (உ-ம்.) "மதனுடை முழவுத்தோளோச்சி" (புறநா. ௯0.) 11. வளமை. (உ-ம்) வந்துழிக்காண்க.

மதனை (-வெள்ளி)—அருகன். (சூ.நிக.க:உ.)

மதாகம்—இலுப்பை. (வைத்தியபரி.)

மதாசலம்—யானை. (உ-ம்)"மதாசலமகுடமான்றேர்வாம்பரிவயவர்வெள்ளப்பதாதியும்" (பாரத. பதினெரா. கக.)

மதாணி—1. பதக்கம். (சூ. நிக. எ: உரு) 2. பேரணிகலம். (உ-ம்.) "திண்கதிர்மதாணி" (மதுரைக்கா. ௪௬௬)

மதாநுசாரம் — சமயத்தைக்கைக்கொள்ளுதல். (வழக.)

மதாநுசாரியர்— சமயநிலையநுசரிப்போர். (வழக்.)

மதாநுஞ்ஞை — தனக்குப்பிரதிகூலமாய்ப் பரனுக்குச்சம்மதமான அர்த்தத்தைத் தானேயங்கீகரித்தது; இது தோல்வித்தானம் இருபத் திரண்டுவகையிற் பதினெட்டாவது. (தர்க்க பரி ௫௬) [மத-அறியப்பட்ட, அநுஞ்ஞை-சம்மதி]

மதாரம்—1. கஸ்தூரி. 2. பன்றி. 3. யானை. (1, 2, 3-வைத்தியபரி.)

மதாரன்—ஆர்த்தன். (உ-ம்) வந்துழிக் காண்க.

மதாலம்—கொன்றை. (மலையக.)

மதாவளம்—யானை. (சூ. நிக. ௬: ௫.)

மதாளித்தல்— } செழித்துவளர்தல்
மதாளிப்பு— } (வழக்.)

மதி—1. அசோகு. 2. அதிமதுரம். (வைத்தியபரி.) 3. அறிவு. (பெரியபு. திருநாவுக்கரசு. கoஅ.) 4. கற்கடகவிராசி. (உ - ம்.) வந்துழிக்காண்க. 5. குபேரன். (உ - ம்.) "தென்றிசைமதியின்வாளி" (பாரத. நிரைமீ. கoo.) 6. சந்திரன். (உ - ம்.) "மதியிலாவிசும்பும்" (பாரத. பதினெ. நி.) 7. தக்கன் புத்திரிகளிலொருத்தி. (வி-ணி. உருக.) 8. தெரிநிலைவினைப்பகுதி. 9. வியமத்தொன்று; அது. வேதவேதாந்தத்தை பாதரவுடனேகேட்பதும், அதிற்சொல்லுகிற பொருளை அநுபவத்திலே காண்பதும். (த. நி. போ.) 10. பிறை. (உ-ம்.) "மாகமீன்றமாமதியன்ஞான்வளர்கின்றான்" (சிந்தா. நாமக. ருஙரு.) 11. புத்திதத்துவம். (உ-ம்.) "மகத்துவம்" பார். 12. மாதம். (உ-ம்.) "மாசி" பார். 13. மிருகசீரிடம். (சூ. நிக. க: சுக.) 14. முன்னிலைபசைச்சொல். (உ-ம்.) "சென்மதி" (பிங்கல. ருகஉஉ.) 15. வரிசை. (பரிபாடல்.) வைத்திய அநுபந்தத்தில் செம்பு, வெள்ளிக்குங்கூறுவர்.

மதிக்கமாரி—நணமெட்டினென்று; அது. நிரைமீகர்மாரடுத்துவருகிறது. (சூ.நிக.கஉ:கூரு.)

மதிக்கலை—மதியின்பங்குபதினாறு. (உ-ம்.) "அலவிமூலகதிர்வள்ளியாமதிக்கலையொவ்வெரன்பிற்கு" (தைல. தைலவ. ருசு.)

மதிகந்தி—பளிங்கு. (வைத்தியபரி.

மதிகூர்மை—இந்துப்பு. (வைத்தியபரி.)

மதிசகன்—மந்தன். (பிங்கல. கசறு.)

மதித்தல்—1. அறிவு. (வேதா. சூ. எ.) 2. உபசரித்தல். (உ-ம்.) "வந்தநான்மறையோன்றன்னைமதிக்கலனெங்கி" (கூர்மபு. அந்தகா. சo.) 3. கடைதல். (உ-ம்.) "மகரிர்கற்பாம்பரவை கண்மதிக்குமெண்ணின்-மந்தரம்போன்றுனென்சோன்" (கந்தபு. தக்ஷிய. அ.) 4. கருதல். (உ - ம்.) "என்னமதித்தே" (திருவிளை. பழியஞ். கசு.) 5. துணிவு. (உ-ம்.) "வல்லோர்போலொருபனுவன்மதித்தோம்" (கோயிற். பாயிர. உஎ.) 6. வரையறுத்தல். (சூ. நிக. அ: ருநி.)

மதிநம்—மோர். (வைத்தியபரி.)

மதிநயன்—சந்திரதயன், சந்திரமதிதந்தை, (அரிச்சந்-பு. விவாககா. கூ.)

மதிதனு—பொன்மணல். (வைத்தியபரி.)

மதிநாக்கிநி — கடைந்தெடுத்த நெருப்பு. (வி-ணி.)

மதிநாள்—மிருகசீரிடம். (சூ. நிக. க: சுக.)

மதிநி—மைத்துனி. (வழக்.)

மதிநுட்பம்—இயற்கையாகிய நுண்ணறிவு. (உ-ம்.) "மதிநுட்பநூலோடுடையார்க்கு" (வள். கஙசு.)

மதிப்பகை—இராகு; இது கருநிறமுள்ளது. (சூ. நிக. க: சுரு.)

மதிப்பாகக்கல்—கத்திதீட்டுங்கல். (சிந்தா.)

மதிப்பு—மதித்தல். (வழக்.)

மதிபதிச்சம்—வாலுளுவை. (மலையக)

மதிமகன்—புதன். (சூ. நிக. க: சுக.)

மதிமண்டலம் — 1. சந்திரமண்டலம். 2. புருவமத்தியம். (உ-ம்.) "அலர்மதிமண்டலத்தின்" (சி. சி. அ: உக.) (ஞானப்.)

மதிமணல்—வெள்ளிமணல். (வைத்தியபரி.)

மதிமயக்கி —1. கொன்றை. 2. திகைப்பூண்டு. (1, 2-வைத்தியபரி.)

மதிமான்கள்—புத்திமான்கள். (சி. சி. அ: உஎ. ஞானப்.)

மதிமேகக்கல் — மந்தாரச்சிலை. (உ - ம்.) வந்துழிக்காண்க.

மதியட்டமம்—சந்திரலக்கிநத்துக்கு எட்டாமிராசி. (உ-ம.) "ஆன்றமதியட்டமம்" (விதாந. குணகுணப். அரு.)

மதியம்—1. கணிசம். 2. சந்திரன். (உ-ம்.) "வளருமதியநட்பெய்திநற்காலின் மகிழ்ந்து நிற்ப" (விதாந. குணகுண. கூ.) 3. மத்தியாநம். 4. மாதம். (உ-ம்.) "மாதவவொழுக்கந்தாங்கி வருமுறைமதியமூன்றிற்-பாதகங்கழிந்து" (திருவிளை. மாபாத. ருஅ.) (1, 3-வழக்.)

மதியாணிக்கட்டை— நுகத்தினடுவாணி. (வழக.)

மதிபுணி—இராகு.

மதிரவி—வாலைரசம். (வைத்தியபரி.)

மதில்—1. இஞ்சி. (உ-ம்.) "மதின்முகங்கைகரிசாலைஎண்ணுவிவ்வைந்தும்வகைக்கிரதம் படிபடிபெய்" (தைல. தைலவ. ட.) 2. மதிள். (சூ. நிக. நு: சரு.)

மதில்காத்தல் — பகைவர்மேலிடாமல்மதிலைக்காவல்செய்தல்; இது, புறப்பொருட்டுறைகளிலொன்று. (சூ. நிக. கஉ: கஉ.)

மதில்வளைத்தல்—மாற்றார்மதிலைச்சூழ்தல்; இது, புறப்பொருட்டுறைகளிலொன்று. (சூ. நிக. கஉ: கஉ.)

மதிவல்லி — கொத்தான்கொடி. (உ - ம்.) "மதுபன்னிகன்னிசிவை.........மதிவல்லி" (தைல. தைலவ. ருசு.)

மதிவல்லோர்—மந்திரிமார். (வழக்.)

மதிவாணன்—ஒருநாடகத்தமிழ்நூல்செய்த பாண்டியராசன். (அபிதானகோ.)

மதிவாம்பல்—சீந்தில். (மலையக.)

மதிள்—மதில். (வழக்.)

மதிற்கள்ளி—வேலிக்கள்ளி. (தைல. தைலவ. எக. உரையும்.)

மது—1. அசோகு. 2. அதிமதூரம். 3. அமுதம். 4. இலுப்பைப்பூத்திராவகம். 5. ஓரரக்கன். (உ-ம்.) "மதுவைவென் றனனியானென" (சிவரக. தாருக. உக.) 6. கள். (உ-ம்.) "இன்னினை மதுவுண்மள்ளர்" (அரிச்ச. காசி. அ.) 7. தேன். 8. நீர். 9. பால். 10. பூந்தேன். (உ-ம்.) "மதுமலர்கரமிசைகொண்டு" (திருவாதவூ. திருப்பெரு. உ.) 11. மகரந்தம். 12. மஸ்துள்ளது. 13. வசந்தகாலம். (சூ. நிக. கக: நகரவெ. க.) (1, 2, 3, 4, 6, 7, 8, 11, 12-வைத்தியபரி.)

மதுக்கிரமம்—தேன்கூடு. (வைத்தியபரி.)

மதுக்கிருது—தேனீ. (வைத்தியபரி.)

மதுக்குடிகை— } எலுமிச்சை. (வைத்திய
மதுக்குடு— } பரிபா.)

மதுக்கெண்டை—ஒரு மீன். (வழக்.)

மதுக்கோடம்—1. குயில். 2. தேன்கூடு. (வைத்தியபரி.)

மதுகண்டம் — குயில். (உ-ம்.) வந்துழிக் காண்க.)

மதுகந்தம்—1. இலுப்பைமரம். 2. மகிழமரம். (வைத்தியபரி.)

மதுகம்—1. அதிமதூரம் 2. அழகு. 3. இலுப்பை. 4. இனிமை. 5 எட்டிமரம். 6. தார 7. துத்தநாகம். 8. வண்டு. (5, 7-வைத்தியபரி.) (1, 2, 3, 4, 6, 8-பிங்கல உகஉ௬.)

மதுகாமாவிரம்- அதிமதூரம் (வைத்தியபரி)

மதுகரம்-1. ஆண்வண்டு. (சூ.நிக.ஈ:கா௬.) 2. எட்டி. 3. கள். 4. தேனீ. 5. வண்டு. (உ-ம்.) "மதுகரங்காள்" (வாண. அ.) 6. வச்சநாபி. (தைல. தைலவ. கக) (2, 3, 4-வைத்தியபரி.)

மதுகவடி—வெட்டிவேர். (தைல. தைலவ. எக.)

மதுகாயநம்—குயில். மது-வசந்தகாலம். காயநம்-பாடுவது.

மதுகாரி—தேனீ (வைத்தியபரி.)

மதுகாரை — ஒரு பூடு. (உ-ம்.) வந்துழிக் காண்க.

மதுகேசடம்—மதுகாரி.

மதுகை—1. அறிவு (சிந்தா.) 2. வலி. (உ-ம) "வரிகழல்வரிசிலைமதுகைமைந்தரை" (இராமா. சடாயுகாண். கக.) 3. வெற்றி (உ-ம்) வந்துழிக்காண்க.

மதுகைடவர்—மது, கைடவன் இரண்டு அசுரர். மாலாற் கொல்லப்பட்டவர்.

மதுச்சிட்டம்—மெழுகு. (வி-ணி.)

மதுச்சிரம்—சிந்தில். (வைத்தியபரி.)

மதுஸ்மிகி—1. பறங்கிப்பட்டை. (தைல. தைலவ. கஉ௬.)

மதுசகன்— } காமன். வசந்தகாலத்தைச்
மதுசகாயன்- } சகாயமாயுள்ளவன்.

மதுசந்தம்—முந்திரிகை. (வைத்தியபரி.)

மதுசாரா—பெருங்குரும்பை. (வைத்தியபரி.)

மதுசாரதி—மன்மதன். (உ-ம்.) வந்துழிக் காண்க.

மதுசூதநன் - } விட்டுணு. (உ-ம்.) 'மன்னுகின்
மதுசூதநர்— } றமதுசூதன்' (நாலாயி. கருப்பூர. ௫.) மதுவையழித்தவன் என்றபடி.]

மதுத்துருமம் -இலுப்பைமரம். (வைத்தியபரிபா.)

மதுதிருணம்—கரும்பு. (வைத்தியபரி.)

மதுதூதம்—மாமரம். (மலையக.)

மதுதூலி-கருப்பஞ்சாற்றுப்பாணி. (வைத்தியபரி.)

மதுநாலிகேரம்-ஒருவகைத்தெங்கு. (வழக்குண்டுபோலும்.

மதுநேத்திரு—மதுலோலகம்.

மதுநோலேகம்—தேனீ. (வைத்தியபரி.)

மதுபதி—காளி. (சூ. நிக. க: ௬௬.)

மதுபம்-1. கள். (வைத்தியபரி. 2. வண்டு. (சூ. நிக. ௬: ௬௪.)

மதுபரணிகை—1. அவுரி. 2. சிந்தில். (1, 2-வைத்தியபரி.

மதுபருக்கம்—பால், பழம், சர்க்கரை, நெய் கலந்தமைத்தவுணவு. (உ-ம்.) "கொங்கவர்மாலை சூட்டிக்குளிர்மதுபருக்கமூட்டி" (திருவிளை. உக்கிர. வேல்வளை. எ. உரையும்.) [இதனை மதுபர்க்கம் எனக்கூறிப் பால், பழம், தேன் முதலியவைசேர்ந்த தொகுதி என்பர். (சிந்தா.)

மதுபருணிகை—அவுரி. (மலையக.)

மதுபாலம்—ஒருவகைத்தெங்கு. (வைத்தியபரிபா.)

மதுபர்ணி—சிந்திற்[illegible]. (உ-ம்.) "மதிவல்லி" பார்.

மதுபாயி - வண்டு. (உ-ம்.) வந்துழிக்காண்க.

மதுபீசம்—மாதுளை. (வைத்[illegible]ரி.)

மதுமஞ்சம்—முந்திரிகை. ([illegible])

மதுமந்தை—ஒருமத்தை. (உ-ம்.) வந்[illegible] காண்க.

மதுமல்லிகை-இரட்டைமல்லிகை. (மலையக.) அடுக்குமல்லிகையென்பர். (வைத்தியபரியாடையில்.)

மதுமாங்கனி—தேமாங்கனி. (உ-ம்.) "மது மாங்கனிமாதலங்கதலியரா-வாரங்கொளுஞ்சி" (தைல. தைலவ. கரு.)

மதுமூலம்—ஒரு கிழங்கு. (உ-ம்.) வந்துழிக் காண்க.

மதுர்ச்சி-பொன்னிமிளை. (வைத்தியபரி.)

மதுரகவி—1. திருமாலின்பெருண்டரி லொருவர். (அபிதானகோ.) 2 நாற்கவியிலொன்று; அது பொருட்செல்வம், சொற்செல்வம், தொடை, தொடைவிகற்பஞ்செறிய உருபக முதலிய வலங்காரத்தோடு இன்னிசையை யுடையதாய் அமுதமுறப்பாடுங்கவி. (சூ. நிக. கஉ: உச)

மதுரசப்பீலு-பெருங்குரும்பை.(மலையக.)

மதுரசம்—1. இனிமை (வழக்.)2 கொடிமுந்திரிகை. (மலையக.) 3. பேரீந்து. (வைத்தியபரி.)

மதுரசம்பிரம்-இன்னெலுமிச்சை.(வைத்தியபரி.)

மதுரசை—பெருங்குரும்பை. (உ-ம்.) "அரேணுகம்" பார்.

மதுரபர்ணம்—கமுகு. (மலையக.)

மதுரபாடனம்—கலைஞாந மறுபத்துநான்கிலொன்று. (பொருட்-நிகண்டு.)

மதுரம்—1. அதிமதுரம். (உ-ம்.) 'அசீதளம்' பார். (தைல தைலவ. கூ, கா.) 2. இனிப்பு. (வழக்.)3. கொடிமுந்திரிகை. 4. சமனிசை. (பிங்கல. கசஉ0.) 5. செஞ்சந்தனம். 6. நால்வகைக்கவியிலொன்று,மதுரகவி.(3,5-மலையக)

மதுரவசநியம்மை-கோட்டுரிலேகோயில கொண்டிருக்குந்தேவியார் பெயர். (அபிதானகோ.)

மதுரவல்லி— } சர்க்கரைவள்ளி. (வைத்தியபரிபா.)
மதுரவள்ளி— }

மதுராந்தகம்—தொண்டை நாட்டிலுள்ள வொரு திருமால்திருப்பதி. (அபிதானகோ.)

மதுராபுரி—மதுரைப்பட்டினம். (பெருவழக்.)

மதுராலாபினி—நாகணவாய்ப்புள். (உ-ம்.) வந்துழிக்காண்க.

மதுரிந்நல்— } தித்தித்தல். (வழக்.)
மதுரிப்பு— }

மதுரிபு—விட்டுணு. மதுவென்பவனுக்குப் பகையாயுள்ளவன். ரிபு-பகை.

மதுரேசன்—1. கிருட்டிணன். 2. சோமசுந்தரக்கடவுள். (உ-ம்.) "மதுரேசன்மின்னு பொலங்கழற்பங்கயபதம்" (திருவிளை.விடைவி-கூ.) 3. பாண்டியன். மதுரைக்குநாயகன் என்பது கருத்து.

மதுரை—1. ஒரு நகரம். (உ-ம்.) "தென் மதுரைமூதூருமல்லவோசிவலோகம்" (திருவாத. மண்சு. கள.) 2. கள். (சூ. நிக. கூ: ருO.) 3. யமுனைக்கரையிலுள்ளவொருநகரம்.கிருஷ்ணனுக்குரியது. (அபிதானகோ.)

மதுரைக்கணக்காயனார்— நக்கிரருக்குத் தந்தை. (இறையனாரகப்.)

மதுரைக்கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்—ஒரு புலவர். (புறநா.)

மதுரைக்காஞ்சி—ஒருதமிழ்நூல். (பத்துப்பா.)

மதுரைக்கூலவாணிகன்சீத்தலைச்சாத்தனார்—ஒரு புலவர்.

மதுரைத்தமிழ்க்கூத்தனார்—ஒரு புலவர் (புறநா.)

மதுரைத்தமிழ்நாகனார்—ஒரு சங்கப்புலவர். (திருவள்ளுவமாலை.)

மதுரைதத்தனார்—ஒருசங்கப்புலவர்.(திருவள்-மாலை.)

மதுரைநாடு—குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்குமிடையிலுள்ளநாடு.(சிலப்.வேனிற்-க. உரை.)

மதுரைப்படைமங்கமன்னியார் — ஒரு புலவர். (புறநா.)

மதுரைப்பாலாசிரியனார் — ஒரு சங்கப் புலவர். (திருவள்-மாலை.)

மதுரைப்பூதனிளநாகனார்—ஒரு புலவர். (புறநா.)

மதுரைப்பெருமருதனார்—ஒரு சங்கப்புலவர். (திருவள்-மாலை.)

மதுரைப்பேராலவாயர்—ஒரு புலவர். (புறநா.)

மதுரைமருதனிளநாகனார்—ஒரு புலவர். இறையனாரகப்பொருளுக் குரைசெய்த நாற்பதின்மரு ளொருவர். (புறநா.)

மதுரைமாதேவி—மீனாட்சிதேவி.(வழக்.)

மதுரையறுவைவாணிகனார்—ஒரு சங்கப் புலவர். (திருவள்-மாலை.)

மதுரையாசிரியர்கோடங்கொற்றனார்—இடைச்சங்கப்புலவர்களு ளொருவர். (சிலப். உரைப்பா. ௬.)

மதுரையிளங்கண்ணிக்கௌசிகனார்—புறநானூறுபாடிய புலவருளொருவர்.

மதுரையோலைக்கடைக்கண்ணம்புகுந்தாராயத்தனார்—ஒரு புலவர். (புறநா.) மதுரை முன்வரப்பெற்ற பெயருடைய புலவர் இன்னும் பலருளர் விரிப்பிற்பெருகும். (அபிதானசிந்தாமணியிற்காண்க.)

மதுரைவீரன்— இவன் காசியரசன்மகன். இவன சரிதம் அபிதானகோசத்திற்காண்க.

மதுலேகம்—
மதுலேகி—
மதுலோலுபம்— } வண்டு. (உ-ம்.) மந்தூழிக்காண்க.

மதுவநம்—1. கிட்கிந்தைக்குச்சமீபமான சுகவீர்வனவனம். 2. குயில். (வைத்தியபரி.) 3. யமுனைக்கரையிலுள்ளவொருவனம். (1, 3-அபிதானகோ.)

மதுவம்—கள். (வைத்தியபரி.)

மதுவர்க்கம்— மதுபருக்கம்.(உ-ம்.)''மதுரமாமதுவர்ககவகைபினும்''(சிவாக.வரலா.ஈசு.)

மதூகம்—1. அதிமதுரம்.(உ-ம்.)''கத்தூரிமுகுளமுநளரிசிகிச்சிலிமதூகம்'' (தைல. தைலவ. ௬௮.) 2. இலுப்பை. 3. எட்டிமரம். 4. வண்டு. (2, 3, 4-வைத்தியபரி.)

மதூச்சிட்டம்—மெழுகு. (உ-ம்.) ''மதூச்சிட்டமுறனைவடி'' (தைல. தைலவ. கக௨.)

மதூசம்—காஞ்சிரை. (மலையக.)

மதூந்நம்—சிறுநாகப்பூ. (உ-ம்.) ''மஞ்சிட்டி சணபகப்பூ மதூத்தங்காஸ்மிரங் குற்சூரம்'' (தைல. தைலவ. ௬௯.)

மதூலி—1. அதிமதுரம். 2. மாமரம். (1, 2-மலையக.)

மநோகரியஞ்ஞர் — மிருகாரிப்புடையோர். (வழக்.)

மந்தக்குயாரி—1. சமியாமைமிருல் வருமோர் மீனாய. 2. தாமதகுணம். (1, 2-வழக்.)

மந்தகேசாந்தி—ஒரு நோய். (வழக்.)

மந்தகதி—தாமதநடை. (வழக்.)

மந்தநர்—வித்தியாதத்துவத் திருக்குமாசாரிய தசகரிலொருவர். (வி-ண். ௨௭௬.)

மந்தகாசம்—1. சயரோகம். 2. புன்னகை. (1, 2-வழக்.)

மந்தகேந்திரம்— கிரகனடைமி றெுன்று. (சோதிட.)

மந்தசம்—வெண்ணெய். (வைத்தியபரி.)

மந்தசானம்—அக்கினி. (உ-ம்.) வந்தூழிக்காண்க.

மந்தணம்—இரகசிய ஆலோசனை. (உ-ம்.) 'என்றுமிவர்மந்தணத்தினெய்தப் பெறுதாரே' (பாரத. கிருட்டி. ௫௨.)

மந்தநாம்—1. அதிகமெது.(சி-லி. கிரியா. ௩. உரை.) 2. சோம்பு. 3. நான்குவகைச்சத்திநிபாதத்தொன்று.(சிவஞாந ககு-ஆம்சூ. 2-ம் அதிகரணம். மன்னுமிருளா. உரை.) 4. பழம். 5. வெண்ணெய் (2, 4, 5-வைத்தியபரி.)

மந்ததாமிச்சிரம்—தமோமய சிருட்டியை வகையிலொன்று. ''சீர்மன்னுதாமிச்சிரமந்ததாமிச்சிரமெனவகுப்பார்'' (கூர்மபு-பலவகை.உ.)

மந்தநம்—1. அழித்தல். 2. ஆலோசனை. 3. கடைதல். 4. புகழ் 5. யானைமுகபடாம். (உ-ம்) வந்தூழிக்காண்க.

மந்தப்படுதல்—1. அசீரணித்தல். 2. அவிவேகப்படுதல். 3. கூர்மையற்றுப்போதல். (1, 2, 3-வழக்.)

மந்தபாலமுனிவர்—ஒரு முனிவர்; இவர் காண்டவவனவாசி. பாரதத்திலறிக (அபிதானசி.)

மந்தம்—1. அசீரணம். 2. அற்பம். 3. ஈனம் (உ-ம்.) 'குரல்'' பார். 4. ஒரு நோய். 5. கண்மீறுமையென்று. 6. கூர்மையின்மை. 7. சோம்பல். (உ-ம.) ''மந்தமறவுழுது விளைத்திடல் சாலிவயலினுமே'' (அருணகிரிபு. வலம்புரி. ௧௦௩.) 8. தாமதம். 9. நல்வகைச்சத்திநிபாதத்தொன்று. (சிவஞாந. ககு. ஆம்சூ. உ-ம். அதிகரணம்.மன்னுமிருளா, உரை.) 10. மந்தவிசை; சமனிசையென்க. (சூ. நிக. ௧௦: ௪௦.) 11. மந்திரோச்சாரணவகைமூன்றனுளொன்று; அது: தன் காதுமாத்திரங் கேட்கும்படி நாநுனி இதழைத்தீண்ட மந்தமாக வுச்சரித்தல். (உ - ம்.) ''மந்தந்தலத்து செவிகேட்கச் சொலுமாற்றம்'' (சைவச. பொது. ௧௫௨.) 12. மெது. (சி-லி. கிரி. ௩. உரை.) (1, 2, 4, 5, 6, 8-வழக்.)

மந்தமா—யானை. (சூ. நிக. ௩: ௫.)

மந்தமாருதம்—சிறுதென்றல். உ-ம்.)''மந்தமாருதந்தவழுமவழியேயோடிவந்து'' (சிவராக. அபுத்திபூ. க௨.)

மந்தரம்—1. ஒரு மலை. (இராமா. அகலிகைப. ௨௧.) 2. சோம்பு. 3. பழம். 4. மந்தவிசை. (சூ.நிக.௧௦:௪௦.) 5. மறைவிடம்.(உ-ம.) ''மான்மதங்கமழ்கொடிமந்தரந்தொறும்'' (பாரத. வேத்திரகி. ௨௧.) 6. வெண்ணெய். (2, 3, 6-வைத்தியபரி.)

மந்தரன்—சோம்பன். (வழக்.)

மந்தராகாந்தி—பிடாலவணம். (வைத்தியபரி.)

மந்தராசு—வெள்ளெருக்கு. (வைத்தியபரி.)

மந்தரை—கைகேசியின்றோழி. (இராமா. மந்தரைசூழ்.)

மந்தவாகினி—ஒரு நதி. (அபிதானகோ.)

மந்தவாரம்—சனிக்கிழமை. (வழக்.)

மந்தவிசை—மந்தவோசை. (பிங்கல.க௪. கக.)

மந்தவிரோதி—சுக்கு. (வைத்தியபரி.)

மந்தவோசை—மந்தவிசை. (வழக்.)

மந்தன்—1. கூர்மையில்லாதவன். (உ-ம்.) ''சூரியன் மந்தனரியநூல் கொள்ளுமுறை''

(இன்னிசை. கசு: க.) 2. சனி. (உ-ம்.) "செய்யோன்" பார்.

மந்தா—பூதாதியகங்காரம். (உ-ம்.) "புறகலனுமமாச்சீவன்மந்தாவெனப்புகல்வார்" (கூர்ம பு. பிரகிரு. அ.)

மந்தாகிநி—கங்கை. (உ-ம்.) "வாசச்-சந்தனம் மந்தாகினிமஞ்சனம்" (திருவிளை. இந்திரன் பழி. அச.)

மந்தாசம்—மந்தாசியம். (வழக்.)

மந்தாசியம்—புன்சிரிப்பு. (வழக்.)

மந்தாரக்கல்—ஈரற்கல். (உ-ம.) வந்துழிக் காண்க.)

மந்தாரக்கொன்றை — ஒருகொன்றை. (உ-ம.) வந்துழிக்காண்க.

மந்தாரநம்—வெள்ளெருக்கு. (வைத்திய பரிபா.)

மந்தாரகாசம்—ஒரு நோய். (வழக்.)

மந்தாரசந்தி—பிடாலவணம். (வைத்திய பரி.)

மந்தாரசெங்கடையோன்—தூரிசு. (வைத்தியபரி.)

மந்தாரச்சிலை-ஒரு மருந்துக்கல், மந்தாரக்கல். (வைத்தியபரி.)

மந்தாரகுளாசரோகம்—தமக சுவாசரோகம். (சுவாட். சுஎ.)

மந்தாரப்புண்—ஆருப்புண். (உ-ம்.) "எந்த மந்தாரபபுண் ணுயில்" (தைல. தைலவ. கoஉ.)

மந்தாரம்—1. ஐந்தருவினொன்று. (உ-ம்.) "அம்பிகையும்பர்கண்மாதர்முடியொடு மந்தாரத்தினலங்கல்சேர்ந்த" (சிவாக. கங. கூ.) 2. செம்பரத்தை. (உ-ம்.) "திண்ணுயுருவிசீவந்திபரி-புண்ணுற்றுஞ்-சிந்தமந்தாரம்" (தைல. தைலவ. கoஉ.) 4. மந்தாரமரம். (உ-ம்.) "வன்னிகொன்றைவழைசண்பகமாரமலர்ப்பலாசொடுசெருந்திமந்தாரம" (பெரியபு. தடுத். தா. கூச.) 5. மப்பு. (வழக்.) 6. மூண்முருக்கு. (மலையக.)

மந்தாரமந்தி—சூதபாடாணம். (வைத்திய பரிபா.)

மந்தாரமேரு—தொட்டிப்பாடாணம். (வைத்தியபரி.)

மந்தாரிப்பு—பூங்காரம். (வைத்தியபரி.)

மந்தாரை—ஒரு பூச்செடி; அது: காட்டு மந்தாரை, அந்திமந்தாரை, கொக்குமந்தாரை, சிவப்புமந்தாரை, வெள்ளைமந்தாரை யெனப் பலதிறப்படும். (வழக்.)

மந்தி — 1. ஆடுதின்னுப்பாலை. 2. கருங் குரங்கு. (வழக்.) 3. குரங்கு. (பிங்கல. உருoச.) 4. பெண்குரங்கு. (உ-ம்.) "பலவின்சுளைபைந் தேனுேடுங்கடுவன்-மந்தியின்வாய்க் கொடுத் தோம்புஞ்சிலம்ப" (திருக்கோ.கூசு.) 5. வண்டு. (1, 5-வைத்தியபரி.)

மந்திட்டி—மஞ்சிட்டி. (வழக்.)

மந்தித்தல்—அசிரமைப்படல். (வழக்.)

மந்திநி—1. ஆடுதின்னுப்பாளை. (வைத்திய பரி.) 2. தயிர்கடைதாழி. (சூ. நிக. எ: கூசு.)

மந்திப்பு—மந்தம். (வழக்.)

மந்திரக்காரன்—மந்திரவாதி. (வழக்.)

மந்திரகலை—கிரியைகட்குரித்தாகிய மந்திரத்தைக்கூறுவது; இது: தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலையென ஆகமப்பகுப்பின் மூன்றனுளொன்றென்க. (சித்தாந்தப்பிரகாசி.)

மந்திரகாஷாயம்—மந்திரகாவி.

மந்திரகாவி—மந்திரத்துடன் கொடுக்கும் ஒரு காவிப்புடவை; இது: சைவாதீனங்களிலாசிரியராற் கொடுக்கப்பெறுவது.

மந்திரகூர்மை-இந்துப்பு. (வைத்தியபரி.)

மந்திரங்கள் — கடவுளைநோக்கியழைத்தல், புகழுதல், வேண்டல், ஏவுதல், ஆராய்தல், வினவல், விடுதல், புலம்பல் முதலிய செயல்களைத் தனித்தனியே யுடையனவாய் ஞானக் கிரியைகளையுடையனவாய்ப் பத்தி, சுத்தி, சித்திகளைப பயபபனவாயுள்ள வாசகங்கள். (சைவப்பி. கூக.) [மந்திரம்-நினைக்கப்படுவது. நினைப்பது, உபதேசிக்கப்படுவது, உச்சரிக்கப்படுவது, உபசரிப்பது.]

மந்திரசஞ்சீவி — இந்திரகோபம். (வைத்தியபரி.)

மந்திரசந்தி-1. ஐம்பத்தோராமந்திரசத்தி களிலொருத்தி. (வி-ணி. உளஎ.) 2. மந்திர வலி. (வழக்.)

மந்திரசாத்திரம் — மந்திரவித்தை; இது, கலைஞானமறுபத்துநான்கினொன்று. (பொருட்நிகண்டு.)

மந்திரசித்துவன் — நீ. அவியை மந்திரத்துடன் சொக்கப்பெறு நாவுடையவனென்க.

மந்திரசித்தி — மந்திரத்தான்வரும்பேறு. (வழ .)

மந்திரசுத்தி-பஞ்சசுத்தியினொன்று; அது: தன்றுசநத்திற் சிவாசனமும் மார்பிற் சிவமூர்த்தியும் நியசித்துச் சந்தநதிலகமிட்டு மூலத்தாற் கிரசிலேபுட்பமிட்டுஆன்மபூசைசெய்து குறில், நெடில், அளபெடையென்னும் மாத்திரைகளின் முறைப்படி பிரணவமாதியாகவும், நமோந்தமாகவும் மந்திரங்களை உச்சரித்தல். (திருவாத. திருப்பெரு. எo. உரை.)

மந்திரசெபம்—மந்திரவுச்சாரணம்; அது: மூவகை மாநசம், மந்தம், வாசகமெனமூவகைப்

படும் சைவச. பொது. கருஉ. உரை.) மந்திரத்தை உபாஞ்சு என்பர்.

மந்திரத்தம்பநம் - } மந்திரத்தாற் றம்பித்
மந்திரத்தம்பம் — } தல். (வழக்.)

மந்திரதன்—உபாத்தியாயன். (வழக்குண்டு போலும்.)

மந்திரதாபநம்— மந்திரவிதியுடன் கூடிய தாபிபபு. (வழக்.)

மந்திரநர்நம்—சங்கிதாமந்திரமபதிஞென்றையுஞ்செபித்து முழுகுவது.

மந்திரநியாசம்—வாச்சியமந்திரங்களாகிய சிவசத்திபேதங்களை உள்ளத்திலே சிந்தித்து அவைகளையறிவிக்கும் வாசகமந்திரங்களை உச்சரித்துச் சிவலிங்கமுதலிய திருமேனியிலே நியசித்துச் சிவபெருமானுக்கு உபசாரவடிவத்தை அம் மந்திரங்களினலே சிரமுதலாக அமைத்தல். (சி. சி. க: கூ0. சிவஞா.) [நியசித்தல்-வைத்தல், பதித்தல்.]

மந்திரபசு—பூனை. (வைத்தியபரி.)

மந்திரபுரீசர்- திருவுசாத்தானத்துக்கோயிலிலிருக்கும கடவுளின்பெயர். (அபிதாநகோ.)

மந்திரம்—1. ஆலோசனை. (உ-ம்.) "மந்திரத்தலைவன்சொல்வான்"(அரிசச. சூழ். ருஈ.) 2. இராசமனை. (பிங்கல. கருஉ.) 3. உபநிடதமுபபத்திரண்டினென்று. (பொருட்-நிகண்டு.) 4. எண்ணம், விசாரம், 5. கள்ளு. 6. குதிரைப்பந்தி. 7. கோயில். 8. நினைககபபடுவது, உசசரிக்கப்படுவது. (மந்திரங்கள் பார்.) 9. மந்திராத்துவா, ஆறத்துவாவினென்று. 10. வித்தியாதரலோகம். (சிந்தா.) 11. வீடு. 12. வேதம். (4, 5, 6, 7 10-பிங்கல. ருகூ0.)

மந்திரமகேசுரர்-மந்திரேசுரர், அபரமுத்தராயுள்ள ஒருவகை யீச்சுரர். (சி. சி. க: உ௫. சிவஞா.)

மந்திரமூன்று—வேற்றுருவடைவிப்பதும், ஆகாயத்திற்றிரியச்செய்வதும், பசியை நீக்குவதுமாம். சைனவழக்கு. (மணிமேக.)

மந்திரமூர்த்திகள்—சுத்தாவத்தையி லிருக்கின்ற அபரமுத்தர். (சி. சி. க: உ௫. மறை.)

மந்திரயாகம்—செபயாகம். (சிவதரு.)

மந்திரயோகம்— ஆதாரங்களிற்றியானஞ்செய்வது. (த. நி. போ.)

மந்திரயோநி-மந்திரங்கள் தோற்றுமிடம்; அது: மகாமாயை. (சி. சி. க: ௩அ. மறை.)

மந்திரர் — அபரமுத்தசிவமாயிருப்பவர்களிலொருவர். (சி. சி. அ: உ. ஞாநப்.)

மந்திரரூபி— கந்ததன்மாத்திராதத்துவத்திலிருக்கும் ஒரு புவநாதிபதி. (வி-ணி. உ௭உ.)

மந்திரவாதி-மந்திரவித்தைக்காரன்.(வழக்)

மந்திரவாள் — 1. அந்தரங்கவாள். 2. அரசிற்குரியவாள். (1, 2, வழக்.)

மந்திரவித்தை-மந்திரசாத்திரம். (வழக்.)

மந்திரவுரையளவை- உபாசநாகாண்டம் பற்றி மநாதிகளடக்கித் தெய்வம்வழிபடும்வாய்மையை உயிரிஞேடுணர்வுதெரிவது. (சி. சி. அளவை. கரு. சிவஞா.)

மந்திராக்கதை-மந்திராட்சதை, மந்திரத்துடன்கூடிய மஞ்சளரிசி. (வழக்.)

மந்திராத்துவா— ஆறத்துவாக்களிலொன்று. (சி-பி.)

மந்திராலோசநை – இரகசியாலோசனை. (வழக்.)

மந்திரான்மா — பஞ்சான்மாவிலொன்று. அத்துவிதவாக்கியத் தெளிவுரையிற் காண்க.

மந்திரி—1. குபேரன். (சூ. நிக. க: உ௧.) 2. நிராய். (மலையக.) 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. தேர்ச்சித்துணைவன்; இவன்: அரசர்க்கைங்குழுவிலொருவன். 5. வியாழன். (பிங்கல. உ௩உ.) 6. வெள்ளி. (சூ. நிக. கக. லகர்வெ. உக.)

மந்திரிகூடம்—கருங்கல். (வைத்தியபரி.)

மந்திரிகை—யசுர்வேத வுபநிடதங்களிலொன்று. (கங். நவ. க௮.)

மந்திரித்தல்—மந்திரஞ்செபித்தல். (வழக்)

மந்திரித்தனம்— மந்திரிக்குரிய தன்மை. (வழக்.)

மந்திரித்துவம்—மந்திரித்தனம். (வழக்.)

மந்திரேசுரர்— விஞ்ஞாநகலரில் தாரதம்மியமாகப்பக்குவமானமலமுள்ளவர்கள். (சி-வி. ஞாநபா. க.)

மந்திரோச்சாரணம்— மந்திரத்தை உச்சரித்தல்; அது: மாநதம், மந்தம், ஒலிஎன மூவகைப்படும். (சைவச. பொது. கருக. முகம்.)

மந்திரோபாசநை—மந்திரங்களாற் றெய்வத்தை யுபாசித்தல். (வழக்.)

மந்துரை-1.குதிரைலாயம். (உ-ம்.) "தரங்கவேலைகடம்மையேதாளுறப்பிணித்துத்-துரங்கமாவெனத்தொகுத்தமந்துரைபல" (திருவிளை. நகர. எக.) 2. தொழுவம். 3. படுக்கை.

மந்தேகர்—சூரியரோடு போர்புரியும் ஒருவகை யசுரர். (உ-ம்.) "மந்தேகரெல்லாமலைவுற்றுமடிந்துவீழ" (பாரத. எட்டாம். ருரு.) (அபிதாநசி.)

மந்தோதரி—இராவணன் பாரி. (அபிதாநகோ.)

மந்தை—ஆடுமாடிவற்றின்கூட்டம்.(வழக்.)

மந்தைக்கல்— மந்தையிலே நாட்டியிருக்கின்ற ஆவுரிஞ்சுதறி. (வழக்.)

மந்தையன்—அவிவேகி, கூர்மையற்றவன். (வழக்.)

மந்மத—அறுபது வருடங்களில் இருபத்தொன்பதாவதாண்டு. (பஞ்சாங்.)

மந்மதகலை—கொக்கோகம்.

மந்மதம்—காமம். (உ-ம்.) வந்துழிககாண்க என்பதினிக்கூறவில்லை.

மந்மதன்—காமன். (உ-ம்.) "மன்மதன்றன்னைப்பார்த்து" (மச்சபு. ஆதிசி. ரு.) மன்மதன் எனவும் வரும்.

மந்வந்தரம்—மநுவின்காலம்; அஃது: எழுபத்தொரு சதுர்யுகங்கொண்டகாலம். (உ-ம்.) "பாகுபடுசதுரயுகமெழுபானொன்றிறத்தன் மந்வந்தரமாம்" (கூர்மபு. பிரமா. எ.)

மநக்குருடு—அறிவீநம். (வழக்.)

மநக்கோட்டம்—அழுக்காறு. (பிங்கல ககஉஎ.)

மநக்கோட்டரவு—மனவாட்டம். (வழக்.)

மநங்குறவுதல்—மநங்கோணல். (வழக்.

மநசு—மனம், தைசதவகங்காரத்தினின்றுந் தோன்றிஎதிர்ப்பட்டதொருவிடயத்தைஇஃதியாதாகற்பாற்றெனநின்று சிந்திப்பது. (சி. சி. உ: கo. சிவாக்.)

மநஞ்செய்தல—நினைத்தல். (உ-ம்.) "இது மறுத்தனன்யானெனமநஞ்செயாது" (பாரத. குருகுல. ௩௬.)

மநநதழக்கு-அழுக்காறு. (பிங்கல. ௬கoஉ.)

மநத்தாபம்—மனவிதநம். (வழக்.)

மநத்தாராளம்—மநப்பூரணம். (வழக்.)

மநது—மநசு. (உ-ம்.) "மநதுமேமிகவாஞ் சித்தமென்றனள்" (சிவரக மேரு. உரு.)

மநநத்திராணதன்மித்துவம்—நினைக்கிறவனை இரட்சிக்குந்தன்மம். (சி. சி. க: ருக. ஞாநப்.)

மநநம்-1. குருஉபதேசிக்கப்பட்ட வேதாந்தப்பொருளை மநதிற்றரித்து அநுபவித்தல். (ஞாநக்கட்.) 2. சிந்தித்தல். (வழக்.)

மநநெறிவு—மநக்குறை. (வழக்.)

மநம்—1. அந்தக்கரணநான்கினொன்று. 2. இந்துப்பு. மனம் எனவும் வரும்.

மநவாசகங்கடந்தார்—மெய்கண்ட தேவரது சீடர் நாற்பத்தொன்பதின்மர்களுள் ஒருவர். (மெய்கண்டசாத்திரமுகவுரையிற்காண்க.)

மநன்—மநம். (உ-ம்.) "மனனஞ்சாகலினிது" (இனியவைநாற்பது. அ.)

மநிசன்—மநிதன். (போலி.)

மநித்தர்—மநிதர். (உ-ம்.) "மநித்தர்தம் வரவு காணுவண்ணம்" (பெரியபு. திருவாரூர். உஉ.) விரித்தல் விகாரம்பெற்று வந்தது.

மநிதர்—மாநிடர். (வழக்.)

மநு—1. தருமநூல் பதினெட்டினொன்று. (பொருட்-நிகண்டு.) 2. பதினான்கு. (உ-ம்.) "கண்டதாளிரட்டிசெய்துகருதியமநுவுங் கூட்ட" (சரசோதி. நாழிகைப்பட. அ.) [குறிப்பு மொழி.] 3. மந்திரம். (உ-ம்.) "இறைவிதன் மநுவினைச்செப்ப" (திருவிளை. விருத்த. ரு.) 4. மநுவரசனாகியவொரு சோழன். (பெரியபு. திருவாரூர்ச்சி.) 5. மநுடன். 6. விண்ணப்பம். (5, 6-வழக்.) மனுவெனவும் வரும்.

மநுக்கள்—1. சுவாயம்பு முதற்பதினால்வர்; இவர்: உலகத்தைக்காக்கக் கடவுளாலே நியமிக்கப்பட்டவர். (பொருட்-நிக.) 2. மநிதர். (வழக்.)

மநுடன்—மநிதன். (வழக்.)

மநுமக்கள்—மநுடர். (வழக்கு.) மனுக்கள் எனவும் வரும். மனுமக்கள் பார்.

மநுவந்தரம்—மநுவின்காலம். (வழக்கு.) மனுவந்தரம எனவும் வரும்; அஃதாவது: தேவவருடம் ஐயாயிரத்திருநூற்றுநாற்பத்திரண்டும் மாதம் பத்தும் நாள் எட்டும் சாமம் நான்கும் முகூர்த்தம் இரண்டும் காலேரைக்காலே காணியரைக்காணி நாழிகையுங்கொண்ட காலமாகிய எழுபத்தொருசதுரயுகங்கொண்ட கால அளவாம். (அபிதானசி.)

மப்பு — 1. மந்தம், 2. மந்தாரம். (1, 2-வழக்கு.)

மம்மர் — 1. துன்பம். (சூ. நிக. அ. எ௬.) 2. மயக்கம். (ஞானமி.)

மம்மட்டி—சிற்றுமுட்டி. (மலையக.)

மம்மாயி—பாங்கிஷபேதி. (மலையக.)

மமகாரம்—ஒரு பொருளை எனதென்பது. (இது புறப்பற்று.)

மமகாரன்—ஓரசன். (பிரபுலிங். மாயையினுற்பத்தி. உo.)

மமதை—அகந்தை. (வழக்கு.)

மழத்தை—ஆதாளை. (வைத்தியபரி.)

மமைந்தறிஞ்சி—பெருங்குறிஞ்சி. (வைத்தியபரி.)

மயக்கமின்மை — அறத்துறப்பெட்டினுளொன்று. (சூ. நிக. கஉ. அ௬.) (சைன.)

மயக்கம்-1. மூக்குற்றத்திலொன்று. (வள். ௬௬. அதி. கo.) 2. சோம்பு. (வைத்தியபரி.) 3. கலத்தல். (நன்னூ. எழுத்தி. ருரு.)

மயக்கரவம்—ஒருவகைப்பாம்பு. (வழக்கு.)

மயக்கல்—மயக்குதல். (வழக்கு.)

மயக்கவணி—ஓரலங்காரம். (உ-ம்.) "நின் முகத்தைச்சந்திரனென்றுசகோரந் தொடர்கின்றது." இதனைத்தண்டியலங்காரத்திற் பிரி

பதிசயமென்பர். (தண்டி. பொருளணி. சுசு. உரை.)

மயக்கவேழிப்பு—ஓரலங்காரம்; அஃது: ஒருபொருளை மற்றொரு பொருளென்றுகொள்ளும் பிராந்தியை உண்மைகூறியொழித்தல். (உ-ம்.) "சுரமன்றுகாமநோய்வெப்பம். (விசா. அணி. கக.)

மயக்கி—கெடுத்து. (ஐங்குறு.)

மயக்கு — 1. தெரிவிலேவினைப்பகுதி. 2. மயக்கம். 3. கலப்பு.

மயக்குதல்—அறிவுகலங்கச்செய்தல் (உ-ம்.) "மயக்கும்மன்பது போய்மாயை மயங்குமென்றிடவிருப்ப" (பிரபுலி. பிரபுதே. கஅ.) கலத்தலுமாம்.

மயங்கல்— } 1. அறிவுகலங்குதல். (பிரபுலி. பிரபுதே. கஅ.) 2. கூடுதல். (நன்னூ. எழுத்தி. சுo.)
மயங்குதல்— }

மயங்கி—கலங்கி. (பத்துப்பா.)

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா— தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும் ஆறுறுப்பும் மிக்குங் குறைந்தும் பிறழ்ந்தும் பலவாறு மயங்கிவருவது. (யாப். காரி. செய்யு. கக.)

மயடம்—புற்குடிசை.

மயப்பு—சாரம்.

மயம்—1. அழுகு. (சூ. நிக. அ: உடு.) 2. சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று. (பொருட். நிகண்டு.) 3. செருக்கு. (திருநூற்றந்தாதி.)

மயர்வு—மயக்கம். (சூ. நிக. அ: சுசு.)

மயல்—1. ஆசை. (பிங்கல. சுகூசுக.) 2. செத்தை. 3. பேய். 4. மயக்கம். (2, 3, 4-சூ. நிக. கக: யகரவெ. சு.)

மயற்கை—தூரால். (சிந்தா.)

மயன்—1. ஓர் தெய்வத்தச்சன், இவன் அசுரத்தச்சன். (பாரத. இராசசூ. உ, டு.) 2. தச்சன். (சூ. நிக. உ: உகூ.)

மயானம்—சுடுகாடு. (சூ. நிக. டு: டுக.)

மயிசுசி—பெரும்பாக்கு. (வைத்தியபரி.)

மயிடம்—1. இலவம் பிசின். (வைத்தியபரி.) 2. எருமை. (வழக்.)

மயிடற்செற்றள்-துர்க்கை. சூ. நிக. க:சo)

மயிடன்-சூரபன்மன் மந்திரி. (அபிதா. சி.)

மயிடி—எருமை. (வைத்தியபரி.)

மயிந்தன்—சுக்கிரீவன் சேனைவீரன். (அபிதா. சி.)

மயிந்துதல்—பதங்குதல்.

மயிர்—உரோமம். (வழக்கு.)

மயிர்க்கம்பி-ஊமத்தங்காய். வைத்தியபரி)

மயிர்க்கிடுகு—மயிர்க்கேடகம். (சிந்தா.)

மயிர்க்கிளர்ச்சி–உரோமச்சிலிர்ப்பு.(வழக்)

மயிர்க்குச்சு–கொண்டைக்குஞ்சம்.(வழக்.)

மயிர்க்குட்டம்—ஓர் நோய் வழக்குண்டு போலும்.

மயிர்க்குட்டி—கம்பளிப்பூச்சி. (சி. சி. உ: சுசு.)

மயிர்க்குரு-உரோமத்துவாரங்களிற்றோன்றிட்ட சிரங்கு. (வழக்.)

மயிர்க்குழற்சி—குந்தளம். (சூ. நிக. உ: கoக.) (வழக்.)

மயிர்க்கூச்சு—உரோமபுளகிதம்.

மயிர்க்கொன்றை-ஓர் கொன்றை.(வழக்.)

மயிர்க்கோரை—ஓர் புல். (வழக்கு.)

மயிர்களைவோன்—நாவிதன். (வழக்.)

மயிர்சிங்கி — ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

மயிர்சிலிர்த்தல்—மயிர்பொடித்தல்.

மயிர்பொடித்தல்—உரோமஞ்சிலிர்த்தல். (கருவைப். பதிற்றுப்-நி. கண்டகண்கள்-என்னு முதற்குறிப்புள்ள செய்யுளிற்காண்க.)

மயிர்மாட்டி—ஓர் ஆபரணம். (வழக்கு.)

மயிர்மாணிக்கம் — 1. கோரோசனை. 2. பற்படாகம். (1, 2-வைத்தியபரி.)

மயிர்முடி—கொண்டை. (சூ. நிக. உ: கoo.)

மயிர்வாரி—சீப்பு. (வழக்கு.)

மயிர்வினைஞர்—நாவிதர். (வழக்.)

மயிரகம் — 1. நாயுருவி. (வைத்தியபரி.) 2. மயிர்ப்படாம். (சூ. நிக. எ. எo.)

மயிராகமம்-ஊமத்தங்காய்.(வைத்தியபரி)

மயிரெறிகருவி—கத்தரிகை. (திருவானை. அகிலா. சுஅ.)

மயிரை—1. ஆரல். 2. தக்கோலம். (வைத்தியபரி.)

மயிரோசனை—மயிர்மாணிக்கம். (ஓர் மருந்து.)

மயில்-1. செங்கத்தரி. 2. மயூரம்.(1-வைத்தியபரி. 2. வழக்.)

மயில்மனிவன்—அகத்தி. (வைத்தியபரி.)

மயில்விரோதி — பச்சோந்தி. (வைத்தியபரி.)

மயிலடி–1. எருமை. 2. குருந்து. 3. மாதர்கால் விரலணியிலொன்று.) (1, 2-வைத்தியபரி. 3. வழக்.)

மயிலம்—1. குப்பைமேனி. (மலையக.) 2. கந்தர்தலங்களிலொன்று. 3. மயிலிறகுமாலென்பர்.

மயிலாடுதுறை—மாயூரம் என்னும் சிவஸ்தலம். (அபிதானகோ.)

மயிலாநந்தர்—திருவள்ளுவர் மாணக்கர்களுள் ஒருவர். அபிதானசி.)

மயிலாபுரி—
மயிலாப்பூர்— } ஓரூர். (பெரியபு. திருக்குறிப். சo.)

மயிலிகம்-மருளூமத்தை. (வைத்தியபரி.)

மயிலியம்—செம்பருத்தி. (வைத்தியபரி.)

மயிலெள்—ஓர் எள். (வழக்கு.)

மயிலேபம்—தக்கோலம். (வைத்தியபரி.)

மயிலை—1. இருவாட்சி. 2. மயிலாபுரி. 3. மீன. 4. மீனராசி. 5. வெட்சி.(1, 3, 4, 5- சூ. நிக. கக: எ) (2. திருஞான-தேவார. மயிலாப்பூர்த். க.)

மயிலைநந்தி-மருதோன்றி.(வைத்தியபரி.)

மயிலைநாதர்-நன்னூலுக்கு ஒருரையாசிரியர். (அபிதானசி.)

மயிலைமான் — ஓர் சைன அரசன். இவனால் மயிலாப்பூர் உண்டானதென்பர். (அபிதா-சி.)

மயிற்றுந்நம்—துருசு. (வைத்தியபரி.)

மயு—குதிரைமுகம்.

மயுகம்—
மயூரம்— } 1. அழகு. 2. கிரணம்.

மயூரக்கிரீவகம் -துத்தம். (வைத்தியபரி.)

மயூரகம் —1. ஊமத்தை. 2. துருசு. 3. நாயுருவி. 4. நாய்வேளை. 5. மயில். (1,2,3,4,5-வைத்தியபரி.)

மயூரம்—1. குரோசாணி. 2. நாயுருவி. 3. மயில். 4. மயிர்க்கொன்றை. (1, 2, 3, 4-வைத்தியபரி.)

மயூரன் — பூரபன்மன் மந்திரிகளுளொருவன். (அபிதா-சி.)

மயூராதனம் — இருமுழங்கையும் உந்திப்புறத்திலழுந்தப் புவியிற்கையூன்றிக் கால்நீட்டித் தலைநிமிர்ந்திருத்தல். (பொருட். நிகண்டு. சுருஉ.)

மயூராரி-ஓந்தி, மயிலுக்குப்பகை. பல்லியுமாமென்பர்.

மயேச்சுரர்— ஒரு யாப்பிலக்கணஞ்செய்த நூலாசிரியர். (அபிதா-கோ.)

மயேசன்—
மயேசுரன்—
மயேசுவரன்— } சிவன்.

மயேசுவரி—பார்வதி. (சூ. நிக. கஉ: சுஎ.)

மயேந்திரசாலம்-ஓர் மாயாவித்தை; அது, கலைஞானம் அறுபத்துநான்கினொன்று. (பொருட்-நிகண்டு.) மகேந்திரசாலம் எனவும் வரும்.

மயேந்திரம்-ஓர் மலை. (உ-ம்.) "மயேந்திர மண்டந்தாங்கும்" (இராமா. கிஷ்கிந். மயேந்திர. உக.)

மயேனம்-அரேணுகம்; இது: வால்மிளகு. (வைத்தியபரி.)

மர்க்கடகம்-பெருங்காயம்.) வைத்தியபரி.)

மர்க்கடநியாயம்—ஒரு நியாயம். (சிந்தா.)

மர்க்கடபிப்பிலி—நாயுருவி. வைத்தியபரி.)

மர்க்கடம்—குரங்கு. சூ. நிக. ரு: உஎ.)

மர்க்கடாசியம் — 1. செம்பு. 2. தாமரை. (1, 2-வைத்தியபரி.)

மர்க்கடி—பூனைக்காலி. (வைத்தியபரி.)

மர்த்தனம் — 1. அடித்தல். 2. பிசைதல். (1, 2-வழக்.)

மர்மம்—மருமம்.

மர்க்கரம்—கையாந்தகரை. (வைத்தியபரி.)

மரக்கலம்—நாவாய். (சூ. நிக. எ: கூ.)

மரக்கற்றாழை—யானைக்கற்றாழை. (வைத்தியபரி.)

மரக்கால் — 1. ஆயிலியம். 2. உப்பளம். 3. சோதி. 4. திருமால்கூத்து. 5. துர்க்கைகூத்து. 6. முகத்தலளவைக்கருவியிற் குறுணியென்னும் அளவுடைய கருவி. (1, 3, 4- சூ. நிக. கக: உரு.) (2. பிங்கல-ருசுஉ. 5. சூ. நிக. கூ: நிக. 6. பிங்கல. ருகரு.)

மரகதபச்சை—நாகப்பச்சை. (வைத்தியபரி.)

மரகதபத்திரி—நீர்ப்பாசி. (வைத்தியபரி.)

மரகதம்—நவமணியினொன்று. (சூ. நிக. கஉ: கoரு.)

மரகதவல்லி—1. உமையவள். பச்சைக் கொடிபோல் பவளென்பர். 2. தர்மதேவதை. (சூ. நிக. க: ருக)

மரகம்—பேதி.

மரகதன்—குபேரன் (சூ. நிக. க: உக.)

மரங்கொத்தி—ஓர் புள். (வழக்.)

மரச்செறிவு—சோலை. (சூ. நிக சு: கூசு.)

மரசபின்—பெருவகுரும்பை. (வைத்தியபரி.)

மரணகண்டி—
மரணகண்டிகை— } ஓர் நூல், இது சோதிடம்.

மரணச்சனி—மூன்றுமுறை பன்னிரண்டாமிராசியில்வருஞ் சனியென்பர்.

மரணம்—சாவு. (சூ. நிக. கூ: உo.)

மரணயோகம்—மூவகை யோகத்தி லொன்று. (வருஷாதி நூல்.)

மரணசூதகம்— மரணத்தினுமேலற்ப் பட்ட ஆசௌசம.

மரணித்தல்—
மரணிப்பு— } மரணமடைதல். (வழக்.)

மரணை-1. சாதல். 2. ஞாபகம் (1, 2-வழக்.)

மரத்தல்—மதமதத்தல். (வழக்.)

மரநம்—சாவு.

மரந்தம்—பூந்தேன். (வைத்தியபரி.)

மரநாய்—மரத்தில்வாழும் நாய். (வழக்.)

மரநோய்—புல்லுருவி. (வைத்தியபரி.)

மரப்பொந்து—மரக்குகை.

மரபு—1. குணம். 2. பழமை. 3. முறைமை 4. வம்சம். (1. பிங்கல. கஎகூ) (2, 3-சூ. நிக. கக: சுகரவெ. க.) (4-இராமா. கிஷ்கிந்தா வாலிவதை. அஎ.) 5. வழிபாடு. (சிந்தா.)

மரபுப்பெயர்—தொன்றுதொட்டு அவ்வவற்றிற்கு வழங்கிவரும் பெயர். (உ-ம்) "பனை, பலா" முதலியன. (நன்னூ. பெயரி. கஅ.)

மரம்—விருக்கம். (வழக்கு.)

மரமஞ்சள்—ஓர்வகை மஞ்சள். (வைத்திய மூ. ஆ. தி.)

மரமரம்—சருகு முதலியவற்றால் எழும் ஒலி. (வழக்கு.)

மரயம்—புளியம் பிராணி. (வைத்தியபரி.)

மரல்—1. அரலையென்னும் ஒரு புதர். (பிங்கல. உஅசுகூ) 2. மருள்.

மரலுகம்—குங்குமப்பூ. (வைத்தியபரி.)

மரவட்டணம்— } 1. மரத்தட்டு. (வழக்கு.)
மரவட்டணை— } 2. பரிசைக்கும பெயர்
மரவட்டம்— } கூறுவர்.

மரவட்டு—மரவட்டம்.

மரவட்டை—ஓர் அட்டை. (வழக்கு.)

மரவடி—பாதகுறடு. (சிந்தா.)

மரவணில்—ஓர் அணில். (வழக்கு.)

மரவண்டு—மரத்தைக்குடையும் ஓர்வண்டு (வழக்கு.)

மரவம்—1. குங்குமமரம். (சூ. நிக. ச: எ.) 2. வெண்கடம்பு. (மணிமே.)

மரவள்ளி—ஒருவகைச்செடி. இதன்கிழங்கு அனல், பித்தவாயு, மந்தம் இவற்றை உண்டாக்குமென்பர். (வைத்தியமூ.)

மரவினைவிஞன்— } தச்சன். (சூ நிக. உ:
மரவினையாளன்— } உக.)

மரவுப்பு—ஓர் உப்பு. (வைத்தியமூ) இது சில மூலிகைகளின் சாம்பலிலிருந்து செய்யப்படுகிறது.

மரவுரி—வற்கலை. (சூ நிக. எ: எகூ.) இது, தபோதனர்கள் வஸ்திரமாக உடுத்திக்கொள்வது.

மரவெலி—ஓர் எலி. (வழக்கு.)

மரவெறும்பு—ஓர் எறும்பு. (வழக்கு.)

மரவை—மரத்தாற்செய்த ஒருவித பாத்திரம. (வழக்கு.)

மரா—1. அரசமரம். 2. ஆச்சாமரம். 3. வெண்கடம்பு. (1, 2, 3-வைத்தியபரி.)

மராட்டம்—1. இடம். (பிங்கல. எகக.) 2. பிறமயிர். (பிங்கல. கஎக.) 3. பெண்பான் மயிர். (பிங்கல. சஎகு.)

மராட்டிமொக்து—ஒரு லாகரி வஸ்து. (வழக்கு.)

மராட்டியம்— } மராஷ்டம்-ஒரு பாஷை.
மராட்டிரம்— } (வழக்கு.)

மராட்டியர்—ஒருபாஷைக்காரர். (வழக்கு.)

மராடம்—1. தேயம் ஐம்பத்தாறினுென்று. (பொருட். நிகண்டு.) 2 பதினெண்பாடையினுென்றுமாம். 3. மருக்காரை. (மலையக.)

மராம்—1. கடம்பு. (மலையக.) 2. வெண்கடம்பு. (சிலப்.)

மராமரம்—ஆச்சாமரம். (சூ. நிக. ச: உக.)

மராரம்—பண்டசாலை.

மராலம்—மராளம்.

மராளம்—1. அன்னம். (பிங்கல. உகூகஉ.) 2 பாம்பு. (பிங்கல. உகூ0 .) 3. மாதுளை. (மலையக.)

மராளாசனம்—தாமரை மலர். (வைத்தியபரி.)

மரிக்கை—மரித்தல் தொழிற்பெயர்.

மரிகடகம்—பெருங்குரும்பை. (வைத்தியபரி.)

மரிச்சம்—மாமரம். (வைத்தியபரி.)

மரிசம்—மிளகு. (மலையக.) நிகண்டில் மரீசம் என்பர்.

மரிசி—புதுவரப்பின்வழி. (சூ. நிக ி: கூச.)

மரிசிநம்—பொறுமை.

மரிசு—1. வரம்பு. (பிங்கல. ௫எகூ.) 2. வரம்பருகு. (பிங்கல. ௫எச.)

மரித்தல்— } 1. சாதல். 2. நினைத்தல்.
மரிப்பு— } (1, 2-வழக்கு.)

மரியாதம்—நீதி. (சூ. நிக. அ: சச.)

மரியாதை—1. ஒழுங்கு. 2. நீதி. (1, 2-வழக்கு.)

மரியை—நிபந்தனை. (வழக்கு.)

மரீஇய—அடிப்படையிருந்த. (பத்துப்பா.)

மரீசம்—மிளகு. (சூ. நிக. ச: கூஎ)

மரீசி—1. ஒரு முனிவர். இவர் பிரம புத்திரர்களி லொருவர். (காஞ்சிப். ஒழுக்கப். ௫௰.) 2. கிரணம். 3. மிளகு. (மலையக.)

மரீசிகம்— } கானல்.
மரீசிகை— }

மரீசினம்—வால்மிளகு. (வைத்தியபரி.)

மரு—1. ஓர் பரிமளப்பூடு. 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. வனம். 4. வாசனை. (1-வழக்கு. 3-சூ. நிக. அ: ௫கூ.)

மருக்கடம்—1. சிலம்பி. 2. மர்க்கடம்.

மருக்கடாசியம்—மார்க்கடாசியம்.

மருக்கம்—1. காற்று. 2. குரங்கு. 3. சரீரம். இம்மூன்றிற்குமுதாரணம் வரிற்கொள்க. 4. மருக்கொழுந்து. 5. மிளகு (4, 5-வைத்தியபாரி)

மருக்காரை—ஓர் காரைச்செடி. வழக்கு.)

மருக்கொழுந்து — ஓர் வாசனைப்பூடு. (வழக்கு)

மருக்கொழுந்துச்சக்களத்தி -அளத்துப்பச்சை. (வைத்தியபாரி.)

மருகம்—மான்.

மருகல் — திருமருகலென்னும் ஓர் ஊர். (திருஞான. தேவார. திருமருகற்பதிகம். க.)

மருகன்—குடியிலுள்ளவன். (பத்துப்பா.) 2. மருமகன். (திருவிளை. மாமனாக. கூ.)

மருகாந்தாரம்—ஒரு தீவு. (அபிதா. சி.)

மருகி — மருமகள். (இராமா. ஆரணிய சடாயு. காண். சஅ.)

மருகு—1. காட்டுமல்லிகை. (மலையக.) 2. மகரவாழை. 3. மருக்கொழுந்து. (2, 3-வைத்தியபாரி.) 4. மருமகன்.

மருங்கு—1. இடை. (சூ. நிக. உ: புஅ.) 2. ஒழுங்கு. (வழக்கு.) 3. குலம். (மணிமே.) 4. செல்வம். (மணிமே.) 5. பக்கம். (சூ. நிக. ௯: கூகூ.) 6. வடிவு. (சிந்தா.)

மருங்குல்—1. இடை. (உரிச்சொல். நிக. உ: கச.) 2. உடம்பு. (பத்துப்பா.)

மருச்சகம்— கொம்மட்டிமாதுளை. (வைத்தியபாரி.)

மருச்சகன்—அக்கினி. (பாரத. வாரணவத. கஙகூ.)

மருச்சுதன்—1. அனுமான். 2. வீமன். வாயுமகன் என்பது பொருள்.

மருட்சி—மயக்கம். (திருவிளை. மூர்த்திவி. சகூ.)

மருட்செந்தொடை — இனவெழுத்துப்பெற்றுமோனை முதலாகிய தொடையுந் தொடைவிகற்பமும் போலாது வேறுபடத்தொடுப்பது. (யாப். காரி. ஒழிபி. கூ-ம் பாட்டுரை.)

மருட்டம்—கள். (வைத்தியபாரி.)

மருட்டல்—மயக்குதல். (வழக்கு.)

மருட்டி—1. கள். 2. மயக்கந்தருவது. 3. வினையெச்சம். (1. வைத்தியபாரி.) (2. வழக்கு.) 4. மயக்கந்தருபவளுமாம்.

மருட்டு—தெரிநிலை வினைப்பகுதி.

மருட்டுதல்—மயக்குதல். (வழக்கு.)

மருட்டும்—1. ஒக்கும். 2. கலங்கச்செய்யும். (ஐங்குறு.)

மருட்பா—ஐந்துபாவினுளொன்று. முதற்கண் வெண்பாவும், இறுதிக்கண் அகவலுமாக வருவது (யாப். காரி. செய்யு. கநி.)

மருண்மா—யானை. (சூ. நிக. கூ: ௫.)

மருணீக்கியார்— திருநாவுக்கரசு நாயனருக்குத் தந்தையாவிட்ட பிள்ளைத் திருநாமம (அபிதா. சி.)

மருந்தீப்போதி-நாயுருவி. வைத்தியபாரி.)

மருந்து—காற்று. (சூ. நிக. க: சஎ.)

மருந்துபலம்—ஆலங்கட்டிமழை

மருந்துமாவாழை — ஓர் வகை வாழை. (வைத்தியபாரி.)

மருந்துவக்கலைஞன் -வைத்திய சாத்திரி. இவன் அரசர்க்குறுதிச் சுற்றத்தொருவன். (பிங்கல. எஎக.)

மருந்துவம்—வைத்தியம். (வழக்கு.)

மருந்துவர்—1. அச்சுவினி தேவதைகள். (திருவிளை. திருமண. அடு.) 2. வைத்தியர். (வழக்கு.)

மருந்துவர்நாள்— அச்சுவினி (சூ. நிக. க: ௬எ.

மருந்துமாவாழை—மருத்துமா வாழை

மருந்துவன்-1. இந்திரன். (சூ நிக. க:உ0.) 2. வைத்தியன். (வழக்கு)

மருந்துவன்றாமோதரனார்- கடைச்சங்கப் புலவரிலொருவர். (வள். மாலை. கக)

மருந்துவாகம்—1. தீ. 2. புகை.

மருந்துவி—மருந்து கொடுப்பவள். (மணிமே.)

மருந்துவிச்சி — வைத்தியஞ்செய்பவள். (வழக்கு.)

மருதக்கருப்பொருள் — மருதநிலத்துக்குரிய கருப்பொருள். அவை இந்திரன் முதல் வருபுனலாடலீறுயின. (நம்பியக. அகத்திணை. உகூ.)

மருதத்திணை-மருதநிலம். (நம்பியக அகத்திணை. கூ.)

மருதநிலவேந்தன்—இந்திரன். (சூ. நிக. க: உ0)

மருதப்பண்-நால்வகைப்பண்ணினொன்று. (பிங்கல. கஙஎ௫.)

மருதப்பறை-மருத நிலத்துக்குரிய பறை. (சூ. நிக. எ: சக.)

மருதப்புறம் — அகப்புறப் பெருந்திணைகளுள் ஒன்று. குற்றிசையும், குறுங்கலியுமாம். அவைதலைவன் முன்னின்று மாதர்பழி கூறலாம். (உ-ம். புறப். வெண். பெருந்திணைப்படலம். கஎ, கஅ-ஆம் செய்யுளிற் காண்க.)

மருதம்—1. ஐவகை நிலத்தொன்று. வயலும், வயல்சார்ந்தஇடமுமாம். (நம்பியக. அகத்

திணை. ௪.) 2. ஓர் மரம். 3. மருதநிலப்பண். 4. வயல். (2, 3, 4-சூ. நிக. கக: ரகரவெ. உக.)

மருதமலை—கொங்குநாட்டின்கணுள்ள ஒரு சுப்பிரமணிய ஸ்தலம். (அபிதா. கோ.)

மருதமுதற்பொருள்—மருதநிலமும், அதற்குரிய சிறுபொழுது பெரும்பொழுதுகளுமாம். (நம்பியக. அகத்திணை. ௪: கஅ.)

மருதனிளநாகனார்—சங்கமருவிய புலவர்களிலொருவர். (அபிதா. சி.)

மருதாணி—ஓர் பூடு.

மருதா—மருதமரம். (வழக்கு.)

மருதூர்—ஒரு சிவஸ்தலம். (உ-ம்.) மருதூரந்தாதி.

மருதூர்நம்பி—எழுபத்துநாலு சிம்மாசனாதிபதிகளிலொருவர். (அபிதா. சி.)

மருதோநாட்—பாரத யுத்தகாலத்தில் படைவீரர் தங்கிய இடம். (அபிதா. கோ.)

மருதோன்றி—ஒரு மரவிசேடம். (வைத்தியமூ.)

மருந்தம்—1. தாலம்ப பாஷாணம். 2. நஞ்சு. (1, 2 வைத்தியபரி.)

மருந்து—1. அமுதம். 2 இனிமை. (ஐங்குறு.) 3. மருந்து. (1, 3 சூ. நிக. கக: நகரவெ. ௪.)

மருபதிரியம்—ஒட்டை. மரு-வனம்.

மருப்பு—1. இஞ்சி. 2. மரக்கொம்பு. 3 விலங்கின்கொம்பு. 4, பிறைக்கோடு (சிந்தா.) (1 2, 3-வைத்தியபரி.) 5. யாழ்த்தண்டு. (பத்துப்பா.)

மருபுநா—வாழை. (வைத்தியபரி.)

மருபூ—பாலை. (வைத்தியபரி.)

மருமகள்—மருகி. (வழக்.)

மருமகன்—மருகன். (வழக்.)

மருமம்—1. இரகசியம். 2. உயிர்நிலை. 3. மார்பு. (1-வழக்கு. 2. புறப்-மாலை. 3. சூ. நிக. உ: ௬௦.)

மருமரம்— } அசையுஞ் சிலையானும்
மருமராந்தகம்— } இலையானுமெழுமொலி. (சூ. நிக. கo: ௪௫.)

மருமான்—1. மருமகன். 2. வழித்தோன்றல். (1, 2-சூ. நிக. ரகரவெ. கஉ.)

மருவகம்—1. இராகு. 2. ஓர் நாரை. 3. புலி. 4. மருக்காரை. 5. மருக்கொழுந்து. (4,5-வைத்தியபரி.)

மருவல்—மருவுதல், தொழிற்பெயர். இது, அணைத்தல், கலக்கல், கிட்டல், பொருந்துதல் என்பவற்றிற் கெல்லாம் பொதுச்சொல்லாக வுரைப்பர்.

மருவலர்—பகைவர். (சூ. நிக. உ: ௯௪.)

மருவார்—பகைவர். (இராமா. கிஷ்கிந்தா. அரசியல். கo.)

மருவாரி—பாலை. (வைத்தியபரி.)

மருவு-வாசனை. உகரஞ்சாரியை யென்பர்.

மருவுதல்—கிட்டல். (சூ. நிக. கூ: ௪௬.)

மருவூர்ப்பாக்கம்—காவிரிப்பூம் பட்டினத்தின் புறநகர். (அபிதா. கோ.)

மருள்—1. உவமையுருபு. (புறநா.) 2. ஓர் புதர். 3. குறிஞ்சியாழ்த்திறம். 4. தெரிநிலை வினைப்பகுதி. 5. பிசாசம். 6. மயக்கம். (2, 3, 5, 6 பிங்கல. ௬௬௬௪.)

மருள—வியக்க. (பரிபா.)

மருளல்—மருளுதல், மயங்குதலாம்.

மருளி—மயக்கம். (இ. பகுதிப்பொருள் விகுதி.) (சிந்தா.)

மருளுமத்தை—ஓர் ஊமத்தை (வைத்தியபரி.)

மரூஉ—மருவிவழங்கு மொழி. (நன்னூ. பெயரி. கo.)

மரூகம்—மயில்.

மரை—1. காட்டுக்குதிரை. 2. தவளை. (வைத்தியபரி.) (பிங்கல. உ௪௬o) 3. தாமரை. முதற்குறை.

மரைக்காயர்— } துலுக்கரிலொரு வகை
மரைக்கார்— } யார். (வழக்கு.)

மல்—1. திருமால்கூத்து. 2. மற்போர். (வழக்கு) 3. வருவாய். 4. வலி. 5 வளம். (1, 4, 5 சூ. நிக. கக: லகரவெ. கூ) 3 சூ நிக. அ: ௩௬.)

மல்குதல்—1. பெருகல். (சிந்தா.) 2. நிறைதல். (சூ. நிக. அ: கரு.)

மல்கின்று—நிறைந்தது. (சிந்தா.)

மல்குவித்தல்—நிறைப்பித்தல்.

மல்பூரு—சார்போகரிசி. (வைத்தியபரி.)

மல்லகசெட்டி—மற்கட்டு மோர்சாதியரென்பர்.

மல்லகதி—குதிரைக் கதியைந்திலொன்று. (சூ. நிக. கஉ: ௪௪.)

மல்லகம்—சிறுவாலுளுவை. (வைத்தியபரி.)

மல்லசம்—மிளகு. (வைத்தியபரி.)

மல்லம்—1. கதுப்பு. 2. தட்டம். (அகராதி நிகண்டு.) 3. வலிமை. இதில் அம்-சாரியை

மல்யுத்தம்—அறுபத்துநாலு கலைஞானத்தொன்று. (பொருட். நிகண்டு.) மற்போர்.

மல்லர்—திருக்குறளுக்குரையிட்ட ஆசிரியர்களுளொருவர். (அபிதா. சி.)

மல்லாங்கம்—மற்கட்டுஞ்சாலையென்பர்.

மல்லரி—மல்லாரி.

மல்லல்—1. அழகு. (புறப். மாலை.) 2. வலிமை. 3. வளம். (2, 3 சூ. நிக. கக. லகரவெ. தஎ.) மிகுதிக்குங்கூறுவர்

மல்லன்—மற்போர்செய்வோன். 2. வலியன். (1, 2 வழக்கு.)

மல்லாத்தல்— } உட்புறம் மேலாய்க்கிடப்பித்தல். (வழக்கு.)
மல்லாத்துதல்— }

மல்லாடல்—திருமாலாடல். இது வாணாசுரனைவெல்லத்திருமால் மல்லனுய்ச்சென்று அவனை நெரித்தாடியதென்பர்.

மல்லாரி—1. சண்டைக்காரி. 2. பம்பை வாத்தியம். (1, 2-வழக்கு.)

மல்லாந்தல்—மல்லாத்தல்.

மல்லாலர்—விநாயகர் ... ரத்தென்று. (அபிதா. சி.)

மல்லி—1. கொத்துமல்லி. (வழக்கு.) 2. மல்லிகை. (வைத்தியபரி.) 3. மிகப்பருத்தவளென்றுங்கூறுவர்.

மலலிகம்—1. பிரப்பஞ்செடி. 2 மல்லிகை. 3. மருளுமகதை. (1, 3 வைத்தியபரி.)

மலலிகாமோதிநி-குண்டுமெல்லிகை.(வைத்தியபரி.)

மல்லிகார்ச்சுனம்—ஒரு சிவதலம். இது வடக்கேயுள்ளது.

மல்லிகை—1. ஒரு பூச்செடி (வைத்தியபரி.) 2. விளக்குத்தண்டு (பிங்கல. ௩௩௩௩.)

மல்லிகைச்சம்பா-ஒருவகை சம்பாநெல். (வைத்தியமூ.)

மல்லிநாதர்—நைடதம், மாகம். ரகுவம்சம இவைகளுக்கு வியாக்கியானஞ் செய்தவர். (அபிதா. கோ.)

மல்லிபத்திரம்—ஒருகாளான். (வைத்தியபரி. அநுபந்த.)

மல்லு—மல். உகரஞ்சாரியையென்க.

மல்லூகம்—புழு.

மல்லை—1. ஒரூர். (தஞ்சை. கோ. கஅ௩.) இதைமாவலிவாணன்புரமென்பர். 2. கப்பறை (வைத்தியபரி.) 3. வட்டம். (பிங்கல. உஉஅ௬.)

மல்வென்றி—ஒருதுறை. (புறப். மாலை.)

மலக்கடி—கலக்கம். } (வழக்கு.)
மலக்கம்—கலக்கம். }

மலக்கனம்—பொன்னம்பர். இது கடற்சரக்கு. (வைத்தியமூ.)

மலகரி—ஓர் இராகம். (வழக்கு.)

மலங்க—1. கெட. 2. சுழல. 3. பிறழ. (1, 2, 3. சிந்தா.)

மலங்கல்—மலங்குதல்.

மலங்கு—1. ஓர்மீன. (சூ. நிக. ௩: எச.) 2. தெரிநிலை. வினைப்பகுதி.

மலங்குதல்—கலங்குதல். (பிங்கல. கஙூஉ௦.)

மலசந்தர்—மலசமபநதர். (வழக்கு.)

மலசம்—சிதல்.

மலடன்—பிள்ளைப்பெருதவன். (வழக்கு.)

மலடி—பிள்ளைப்பெருதவள். (வழக்கு.)

மலடு—கருவற்றது. (வழக்கு.)

மலந்தையறுப்போன்-கடுக்காய். (வைத்தியபரி.)

மலதிரம் — கஞ்சாங்கோரை. (வைத்தியபரி.)

மலத்துவாரம்—அபானவாய். (வழக்கு.)

மலப்பாண்டம்—உடம்பு. (வழக்கு.)

மலபரிபாகம்- } பாசம்தனது தன்மை நீங்கிப்பக்குவமடைதல்.பரி-
மலபாகம்— } என்பதுபசருக்கம்.

மலப்பை— மலாசயம். ஐந்தாசயத்திலொன்று. (ஞானு.)

மலம்— 1. அழுக்கு. இது பலவிதமாம். (பிங்கல. கஅ௬௦) 2. பீ. (உ-ம.) "சலமலம் விடுக்கும்போதும" (காஞ்சிப். ஒழுக்க. ௬.) 3. கோவை. (வைத்தியபரி.) பற்று, ஆர்வம், செற்றம் முதலியவற்றிற்கும் மலமெனக்கூறுவர். (சிந்தா.)

மலமலத்தல்— }
மலமலப்பு— } ஒலிக்குறிப்பு.(வழக்கு)
மலமலெனல்— }

மலயகந்தினி—உமாதேவியின் சேடியருளொருத்தி.

மலயக்கால்-தென்றல். (சூ. நிக. க: சகூ.)

மலயசம்—சந்தனம் (சூ. நிக. ச: உ.)

மலயத்துருமம்—சந்தனமரம். (வைத்தியபரி.)

மலயம்—1. சந்தனம். (மலையக.( பொதியமலை. (சூ. நிக. ரு: க௬.)

மலர்—1. தெரிநிலை வினைப்பகுதி 2. பூ. (...)

மலர்ந்து—மலையாமணக்கு. (வைத்தியபரி.)

மலர்ச்சி—1. பொலிவு. (சூ. நிக. அ: சகூ.) 2. மலர்தல்.

மலர்தல்—1. எதிர்தல். 2 தோன்றல். (1, 2 சூ. நிக. கக: லகரவெ. கο.) 3. விரிதல். (சூ. நிக. ச: ௰ο.) களிப்புமாமென்பர்.

மலர்ந்த—மிக்க. (பரிபா.)

மலர்ந்தன்று—பரந்தது. (பரிபா.)

மலர்வு—மலர்ச்சி.

மலரவன்— பிரமன். (நீதிநெறிவி. 'கலைமகள்' என்னுமுதற்குறிப்புள்ள செய்யுளிற் காண்க.)

மலருத்துநாயுகம்-கருவண்டு(வைத்தியபரி)

மலநதல்—மலர்தல். (வழக்கு.)
மலரோன்—பிரமன். (சூ. நிக. க: கடு.)
மலவார்சயம் — மலாசயம். ஐந்தாசயத்தி னொன்று. (ஞானம்.)
மலாகை-1. தூதி. 2. தூர்த்தை. 3. பெண் யானை. இவற்றிற்குதாரணம் வரிற்கொள்க.
மலாக்கா—ஒருதேசம். அத்தேசத்திலிருந் துவருஞ் சந்தனக்கட்டை மிகவும் வாசனையு டையது. (வழக்கு.)
மலாக்காக்கெந்தம்—மலாக்காச்சந்தனம் (வைத்தியபரி.)
மலாசயம் — ஐந்தாசயங்களு ளொன்று. (ஞானமி. அ. அகவலுரை.)
மலாகு—சிறுபூளை. (மலையக.)
மலாஞ்சி—வெள்ளுள்ளி. (வைத்தியபரி.)
மலாடனார்-ஒருசங்கப்புலவர். (வள். மாலை. உரு)
மலாடு — கொடுந்தமிழ் நாட்டிலொன்று. அது மலையமானாடு. (நன்னூ. பெயரி. கஅ. உரை.)
மலாம்—பொன்வெள்ளி முதலிய பூச்சு. (வழக்கு.)
மலார்—வளார். (வழக்கு.)
மலாரடி—கலக்கம். வழக்குண்டுபோலும்.
மலாநு—மலையாமணக்கு. (வைத்தியபரி.)
மலாவகம்-பிண்ணாக்கு. (சூ. நிக. கூ: உ௪.)
மலி—திரள். (பரிபா.)
மலிசம்—அரசமரம். (வைத்தியபரி.)
மலிதல்—1. நிறைதல். (பிங்கல. உஉஉஅ.) 2. மிகுதி. (பரிபா.)
மலிந்து—விரைந்து. (புறப். மாலை.)
மலிநி—தீட்டுள்ளவள். (வழக்கு.)
மலிபு—நிறைவு. (புறப். மாலை.)
மலிய—மகிழ. (புறப். மாலை.)
மலிர்நிறை—நீர்வெள்ளம். (பதிற்றுப்.)
மலிர்புனல்—வெள்ளம். (பரிபா.)
மலிர—நிறைய. (சிந்தா.)
மலிரும்—ஒழுகும். (பரிபா.)
மலிவு—1. உவகை. (பரிபா.) 2. மலிதல்.
மலினம்—1. அழுக்கு. (சூ. நிக அ: உக.) 2. குற்றம். (வழக்கு.)
மலினமுகம்— கருங்குரங்கு. வழக்குண்டு போலும்.
மலீமசம்-1. அழுக்கு. 2. இரும்பு.
மலூகம் — குருவி.
மலை—1. உவமை. (தண்டி. பொருளணி. கூகூ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. பருப்பதம். (வழக்கு.)
மலைக்கடுகு—ஓர்கடுகு. (வைத்தியபரி.)
மலைக்கருடு—சாத்திரவேதி.
மலைக்கற்றாழை—ஒரு கற்றாழை.
மலைக்குண்டுவேர்—அதிமதுரம். (வைத் தியபரி.)
மலைக்கும்—மாறுபடுத்தும். (மணிமே.)
மலைக்குருவி—சாத்திரவே...
மலைகலக்கி—ஓர்பூடு. (வை... ...பரி.)
மலைச்சக்கரம்—சாலக்கிர மயன்பர்.
மலைச்சக்கரைவள்ளி — ஒருவகை வள் ளிக்கொடி. (வைத்தியபரி.)
மலைச்சார்வு—
மலைச்சாரல்— } மலையருகு. (வழக்கு.)
மலைசாரி—கிளிஞ்சில். (வைத்தியபரி.)
மலைத்தல்— 1. தடுமாறல். 2. மலைப்பு, பொருதல். 3. மாறுபடுதல். (புறநா.)
மலைத்து—மாறுபட்டு. (பத்துப்பா.)
மலைத்தும்பை— ஓர்தும்பை. (வைத்திய பரி.)
மலைத்துவரை—ஓர்துவரை. (வைத்திய பரி.)
மலைத்தேன் — மலையில் வைத்திருக்கும் தேன். (பெரியபு. கண்ணப்ப. ௪0௬.)
மலைத்தோடகீது—கன்மதம்.
மலைதல்—1. அணிதல். 2. உவமை. 3. ஒருவழிப்படாது திகைத்தல். 4. பொருதல். (1, 4 சூ. நிக. கக: லகரவெ. உக.) 3(வழக்கு.) 5. மேற்கொள்ளல். (புறப். மாலை.)
மலைதாங்கி—1. பொன்முசுட்டை. 2. வட் டத்திருப்பி. (1, 2 வைத்தியபரி.)
மலைந்து—மாறுபட்டு. (சிந்தா.)
மலைநாடன்—சேரன். (வழக்கு.)
மலைநாடு-சேரநாடு. (பெரியபு.விறன்மி.க)
மலைநாதம்-1. கன்மதம். 2 சாத்திரவேதி. 3. வக்கிராந்தபாஷாணம். (1, 2, 3 வைத்திய பரி.)
மலைநார்—கல்நார். (வைத்தியபரி.)
மலைநெல்—மலையில்விளையும் நெல். (சூ. நிக. ௬: ௬௬.)
மலைப்பச்சை—ஒருவகை மரம். (சூ. நிக. ௬: ௬௨.)
மலைப்பருத்தி-ஒருவகைப்பருத்தி.(வழக்.)
மலைப்பாம்பு— மலையிலுள்ள ஒருவகைப் பாம்பு. (திருககுற்றால. மந்தமாரு. ௬அ.)
மலைப்பாலை—ஓர்மாவிசேடம். (வைத்திய பரி.)
மலைப்பாழி—மலைக்குகை.
மலைப்பிஞ்சு—கல். (வைத்தியபரி.)
மலைப்பிறங்கம்—உலோகமணல். (வைத் தியபரி.)

மலைப்பு—1. கூத்தின்விகற்பம். (சூ. நிக. கூ: சக.) 2. திகைப்பு. (வழக்கு.) 3. போர். (சூ. நிக. கூ: சக.) 4. மாறுபாடு. (புறப். மாலை.)
மலைப்புறு—ஒருவகைப்புறு. (வழக்.)
மலைப்பூடு—ஒருவகைப்பூடு. (வழக்.)
மலைபடுகடாம்—ஒருநூல். (மணிமே.)
மலைபடுதிரவியம் — மலையிலுண்டாகும் பொருள். அவை மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம். (சூ நிக. கஉ: சஅ.)
மலைமடந்தை—உமை. (சூ. நிக. க. ருஉ.)
மலைமதம்—கன்மதம். (வைத்தியபரி.)
மலைமல்லிகை—ஓர்மல்லிகை. (வைத்திய பரி.)
மலைமார்—சூடுதற்கு. (பத்துப்.)
மலைமுழை— } மலைக்குகை. (பிங்கல. மலைமுழைஞ்சு- } ருoஎ.)
மலைமுள்ளங்கி—ஒருபூடு. (வைத்தியபரி.)
மலையத்தி—ஒருவகையத்தி. (வழக்.)
மலையத்துவசன்-ஓர் பாண்டியன். (திருவிளை. தடாதகை. க.)
மலையம்—1. மலயம். 2. மலை. அம்-சாரியை.
மலையமான்—சேரன். (சூ. நிக. உ: கஅ.)
மலையமான்பெருமுடிக்காரி- கடையெழுவள்ளலிலொருவனாகிய காரியென்பவன். (அபிதா. கோ.)
மலையரசன்-இமயபர்வதராசன் (வழக்.)
மலையரணி — நால்வகையரணிலொன்று. (சூ. நிக. கஉ: கரு.)
மலையன் — 1. ஒரு சாமை. (வழக்.) 2. கடையெழுவள்ளலி லொருவன். (புறநா.) 3. குறிஞ்சி நிலத்தலைவன். (சூ. நிக. உ: கூகூ.) 4. சேரன். (பிங்கல. எசுடு.)
மலையாடு — 1. ஒருவகை ஆடு. (பிங்கல. உசஅஅ.)
மலையாத்தி—ஒருவகை ஆத்தி. (வழக்.)
மலையாமணக்கு — ஒருவகை ஆமணக்கு. (வழக்.)
மலையாளபகவதி — கன்னியாகுமாரியிற் கோயில் கொண்டிருக்குந் தேவதை. (வழக்.)
மலையாளம்—ஒரு தேயம். (வழக்.)
மலையாளி — 1. மலையாள தேசத்தவன். 2 மிளகு. (வைத்தியபரி.)
மலையானிலம் — மலயாநிலம், தென்றல். (பெரியபு. தடுத்தாட். கசுடு)
மலையிருவேலி — 1. ஓர் இருவேலி. 2. ஓர்வகைபபுல். (1, 2-வைத்தியமூ.)
மலையிலுப்பை —ஓர்மரவிசேடம். (வைத்தியமூ.)

மலையினுச்சி — 1. சிகரம். (வழக்.) 2. மாமிசபேதி. (வைத்தியபரி.)
மலையின்முனிவன்—1. அகத்தி. 2. மிளகு. (1, 2-வைத்தியபரி.)
மலையீஞ்சு— } ஓர் ஈந்து. (வழக்.) மலையீந்து— }
மலையுருக்கன்—ஓர் வெற்றிலைக்கொடி.
மலைவசம்பு—மிளகு. (வைத்தியபரி.)
மலைவாசபஞ்சம்-1. குங்குமப்பூ. 2. கோட்டம். 3. மிளகு. (1, 2, 3-வைத்தியபரி.)
மலைவாசம்—மிளகு, (வைத்தியபரி.)
மலைவாணர்—வேடர். (வழக்.)
மலைவாழை—ஒரு வாழை. (வழக்.)
மலைவீரியம்-அன்னபேதி.(வைத்தியபரி.)
மலைவு—1. உவமை. (சூ. நிக. அ: எஅ.) 2. மலைதல், மிபார். 3. மயக்கம். (வழக்.) 4. மாறுபாடு. (தண்டி. கஉக. சூ. உரை.)
மலைவெட்பு—சந்தனம். (மலையக.)
மலைவேம்பு—ஓர்வேம்பு. (வைத்தியபரி.)
மவுசுதம்—பொட்டிலுப்பு.(வைத்தியபரி.)
மழ—1. இளமை. (நன்னூ. மெய்யீ. ருகூ. 2. பிள்ளை. (திருவிளை. விருத்தகுமார. ரு.)
மழநாடு—மலைநாட்டிலே திருப்பாச்சிலாச்சிராமத்தைச்சேர்ந்தநாடு. (அபிதாநகி)
மழபுலவஞ்சி—ஓர் துறை. (புறநா.)
மழம்—இளமை. (புறநா.)
மழலை — இளஞ்சொல். திருக்கோவை- 'உருகுதலைச்சென்ற' என்னுமுதற்குறிப்புள்ள செய்யுளுரையிற் காண்க. நிரம்பாமென்சொலென்றுங்கூறுவர், நிகண்டிலறிக.
மழவர்—1. இளமையர். 2. வீரர். (புறநா.)
மழவு—1. இளமை. (பிங்கல. ககூசஅ.) 2. குழந்தை. (உ - ம்.) "அம்மழவினுக்குநிட்கிராமணந்தானுற்றுதல்வேண்டுமென்னவனே"(திருவாளை. கோச்செங்க. அச.)
மழவூர்நம்பி- எழுபத்துநாலு சிம்மாசனதிபதிகளிலொருவர். (அபிதாநசி.)
மழித்தல் — மொட்டையாக்குதல். (வள் கூடாவொழுக். க0.)
மழு-பாசு. அது, கோடரி. (சூ. நிக. எ: உ.)
மழுக—மழுங்க. (பரிபா.)
மழுக்கம் — 1. கூரின்மை. 2. மழுங்கல். (1, 2-வழக்.)
மழுக்கல்— } 1. அடித்தல். (ஒழிவிலொடுக்கம். "நல்லபாமசிவன்" மழுக்குதல்- } என்னுமுதற்குறிப்புள்ள செய்யுளிற்காண்க.) 2. கூர்மைமழுங்கச்செய்தல். (வழக்.)
மழுங்கல் — 1. ஒளிகெடல், 2. கூர்மை கெடுதல், 3. பொலிவழிதல். (1, 2, 3-வழக்.)

மழப்பல்—மழுப்புதல்.
மழப்பன்—குதர்க்கன். (வழக்.)
மழப்புதல் — வீண்பேச்சால் மறைத்தல். (வழக்.)
மழமட்டை—மிகமழுங்கல். (வழக்.)
மழவாளி — 1. சிவன். (பிங்கல. கூச.) 2. பாசுராமன். (உ-ம்) "மழுவாளிக்கன்றளித்த, ஐய்த்தாற்சிறிதையந்தவிர்ந்தாரு முளரையர" (இராமா. ஆரணி. விராதன்வதை. ரு௬)
மழவேந்தி-மழுவைத்தாங்கியவன்-சிவன். பாசிராமன்.
மழை — 1. குளிர்ச்சி. 2. நீர். 3. மாரி. 4. மேகம்.(1,3,4-பிங்கல.ஙகூஎ.)2-சூ.நிக.க:ருச.)
மழைக்கண்ணி—ஒரு பறவை.
மழைவண்ணக்குறிஞ்சி-ஒரு மரவிசேடம். இதற்கு நீலி என்று பிங்கலத்திற் பெயர் கூறுவர். (பிங்கல. உகூகூ.)
மள்ளம்—வலி. (பிங்கல. களகூக.)
மள்ளர்—1. உழவர். (சூ. நிக. உ: எக.) 2. குறிஞ்சி நிலமாக்கள். (சூ. நிக. உ: கூகூ.) 3. திண்ணியர். (சூ. நிக. உ: ௫0.) 4. மருதநில மாக்கள். (சூ. நிக. உ: எக.) 5. மறவர். 6. வீரர். (5, 6-சூ. நிக. கக: ளகரவெ. க0.)

மள்ளன்—இளையோன். (பரிபா.)
மள்ளு—மல்லு, கைமரம். (வழக்.)
மளமளத்தல்—, மளமளப்பு—, மளமளெனல்— } ஈரடுக்கு ஒலிக்குறிப்பு (வழக்.)
மளாரிடுதல்—, மாளாரெனல்— } ஒலிக்குறிப்பு. (வழக்.)
மளிகாரம்—வெண்காரம். (வைத்தியபரி.)
மளிகை—பண்டசாலை .(வழக்.) பண்டம் பலபொருள்.
மளுக்கெனல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)
மற்கரை—குகை.
மற்குணம் — மூட்டுப்பூச்சி. "மற்குணத் தொகுதிபோற் பிசைந்து" (பார. வாரணுவத. கூ.)
மற்சரம்—விரோதம். (வழக்.)
மற்போர்—மல்லுயுத்தம். (வழக்.)
மற்றது—அடுத்தது, பிறிது, வேறு. என்னும் பொருளில்வருமென்பர். (வழக்.)
மற்று—1. அசைநிலை. 2. பிறிது. 3. வினைமாற்று. இம்மூன்று பொருளையுந்தரும் இடைச்சொல். (நன்னூ. இடையி. கச.) இது மற்றையெனவும் வரும்.
மற்றையது—சுட்டியதற்கினம். (நன்னூ. இடையி. கரு.)

மறர்களவழி—ஒருதுறை. (புறப்-மாலை.)
மறக்கற்பு—சிறியகற்பு.
மறக்காஞ்சி—ஒருதுறை. (புறப்-மாலை.)
மறத்தல்—மறதி. (வழக்.)
மறத்தியர்—பாலைநிலப்பெண்கள். (சூ.நிக. உ: கூஎ.)
மறதி—மறப்பு. (வழக்.)
மறநிலைப்பொருள் — சூதில்வெல் பொருளும், தெண்டத்திற் பொருளும், பகைவர் பொருளும். ஆம். (சூ. நிக. கஉ: ௩உ.)
மறநிலையறம்-செஞ்சோற்றுக்கடன் கழியாதாரைச்செகுத்தல், பகைவர் கவர்ந்த நிரையை மீட்டல், பகைவரை வெல்லுதல், இம்மூன்றுமாம். (சூ. நிக. கஉ : கூக.)
மறநிலையின்பம்—ஏறுதழுவல், வில்லால் இலக்கமெய்தல் முதலிய மறத்தனையாற் கன்னியைமணமுடித்தின்புறுதல். (சூ.நிக.கஉ:கூரு.)
மறப்பிலி—கடவுள். (வழக்.)
மறப்பு—மறதி. (வழக்.)
மறம் — 1. ஆண்மை. (புறநா.) 2. கலம்பகத்திலோருறுப்பு. (வெங்கைக்கலம்பகம். ௫.) 3. கொடுமை. 4. கொடுவினை. 5. சண்டை. 6. சினம். 7. நமன். 8. பாவம். 9. பிணக்கு. 10. மாறுபாடு. 11. வலி. 12. வீரம்.(5,6,7,8, 9,11,12-பிங்கல. ௩கூ௩௩)(3,4,10-புறப்-மாலை)
மறமலி—யானை.
மறமுல்லை—ஒரு துறை. (புறப்-மாலை.)
மறல்—1. எழுச்சி. (பிங்கல. உகஅஎ.) 2. காலன். (சூ. நிக. க: ௩0.) 3. பகை. (சூ. நிக. அ: கூக) 4. பிணக்கு. (பிங்கல. ககசO) 5. போர். (சூ. நிக. கூ: சகூ.) 6. மயக்கம். (பிங்கல. கஅஅ௫.) 7. மறப்பு. (பிங்கல. கஅகூஎ.) 8. மறுத்தல். (பரிபா.) 9. வறுமை. (பிங்கல. கஅகூகூ) சாதலுமாமென்பர்.
மறலல்—போர்செய்தல். (புறப்-மாலை.)
மறலி — 1. அகில். 2. குங்குமப்பூ. 3. தசகோலம். 4. பொறுமை. 5. நமன். 6. மயக்கம் 7. மறதி (4, 5, 7-பிங்கல. ௩கூசO.) (6-சூ. நிக. கக: றகரவெ. கரு.) 8. மாறுபாட்டு. (சிந்தா.) (1, 2, 3-வைத்தியபரி.)
மறலினர்—மாறுபட்டார்.
மறலுதல்—எதிர்தல். (பரிபா.)
மறலும்—மாறுபடும். (மணிமே)
மறவர்—1. அரசர். (புறநா. ௬௩. உரை.) 2. கொடுவினையாளர். (புறப்-மாலை. 3. படைவீரர். (பிங்கல. அஎக.) 4. பாலைநிலமாக்கள். (சூ.நிக. உ: கூஎ.) 5 வலிமையர். மறம்—வலி. (பிங்கல. ௩கூ௩௩.) 6. வீரர். (மணிமே.) 7. வேடர். (சூ. நிக. உ: கூஅ.)

மறவன்—1. சிலேட்டுமம். (தைலவ.) 2. வலியன். 3. வீரன். (புறப் மாலை.)

மறவாதீமே—மறவாதே. (ஐங்குறு.)

மறவி— 1. இழிவு. 2. கள். 3. பதநீர். (வைத்தியபரி.) 4 பொருமை. (பிங்கல. ௯௬௪௨) 5. மறதி. (1, 2, 5-சூ. நிக. ௧௧: றகர வெ. ௧௬.)

மறனுடைப்பாசி-ஒருதுறை.(புறப்.மாலை.)

மறி—1. அழுங்கு. 2. ஆடு. 3. குதிரை. 4. மான். இவற்றின் குட்டி. (சூ. நிக. ௯: ௯௮.) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. மான். (சூ. நிக. ௯: ௨௨.) மேடராசி. (சூ. நிக. ௪: ௯௪.) விலங்கின் பின்ளைக்கும் பெயர். (சூ. நிக. ௯: ௯௭.)

மறித்தல்—1. காவற்படுத்தல். 2. தடுத்தல். 3. திருப்புதல். (1, 2, 3-வழக்.)

மறித்து—மீட்டு. (சிந்தா.)

மறித்தும்—பின்பும். (வழக்.)

மறிதரல்—மீளல். (வழக்.)

மறிதல்—1. தடைபடல். 2. திரும்புதல். 3. மடங்கல். (1, 2, 3-வழக்.)

மறிப்பு—1. காவற்படுத்தல். 2. தடுப்பு. 3. திருப்பு. (1, 2, 3-வழக்.)

மறிய—1. மடங்க. 2. மீள. (சிந்தா.)

மறியல்—1. சிறை. 2 தடை. (1. 2-வழக்.)

மறிவு-1. கேடு. 2. மறிதல். (1, 2-ஐங்குறு.)

மறு—1. குற்றம். (சூ. நிக. அ: ௫அ.) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. மறு. (உ-ம்.) "அம் பொற்பதிர்வின் மறுவாயிரத் தெட்டணிந்து" (சிந்தா. கடவுள். ௨.) 4. வேறு. (வழக்.)

மறுக்கம்—சுழற்சி. (வழக்.) மனக்குழப் பம். (உ-ம்.) மறுக்கம் விளக்குமே. (திருவிளை விடையிலச. ௰௧.)

மறுக்கிடுதல்—பெயர்தல். (வழக்.)

மறுக்குந்து — ஓர் செடி. (வழக்குண்டு போலும்)

மறுக்குதல்—1. மறுதலித்தல். 2. மனஞ் சுழலச்செய்தல். (1, 2-வழக்.)

மறுக—கொண்டுபோக. (பத்துப்பா.)

மறுகல்1. சுழலல். (பிங்கல. ௨௧அ௪.) 2. சுழலாதேகொள் (சிந்தா.) மறுகுதலுமாம்.

மறுகலித்தல்—மறுகுதல். (வழக்.)

மறுகு—1. குறுந்தெரு. (சூ. நிக. ௫: ௪௭.) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. தெரு. (பிங்கல. ௯௪௦.) 4. நெடுந்தெரு. (சிந்தா.)

மறுகுதல்—1. மறுகல். 2. மனங்குழம்பல். (வழக்.)

மறுகுபு—கலங்கி. (ஞானமி.)

மறுகை—1. பொதிக்கட்டு. 2. மறுபக்கம். (1, 2-வழக்.)

மறுத்தல் — நீக்கல். (வழக்.) வெட்கம். (சூ. நிக. அ: ௪௨.) கொடாமைக்கும்பெயர் கூறுவர்.

மறுத்து—ஒழிந்து. (பரிபா.)

மறுத்தர—மீள. (ஐங்குறு.)

மறுதலித்தல்— } மறுத்தல். (வழக்.)
மறுதலிப்பு— }

மறுதல்—மாறுதல். (வழக்.)

மறுதலை—1. மறுதலிப்பு. 2. வேறிடம். (வழக்.)

மறுப்படுதல்—1. ஊறடைதல். 2. வசைப் படல். (1, 2-வழக்.)

மறுப்பு—மறுக்குதல். (வழக்.)

மறுபொருளுவமை — ஓரலங்காரம். (தண்டி. பொருளணி. ௫. உரை.) வீரசோழி யத்தில். எதிர்ப்பொருளுவமை யென்பர்.

மறுமை—வருபிறப்பு. (சூ. நிக. அ: ௯௨.)

மறுமொழி—உத்தரம். (சூ. நிக. ௧௧: தகர வெ. ௰௨.)

மறுவரல்—சேர்தல். (ஐங்குறு.)

மறுவல்—1. கஸ்தூரிமிருகம் .(வைத்திய மூ.) 2. மறுபடி. (காஞ்சிப். திருக்கண்புதை. ௨௪அ.)

மறுவி—1 கஸ்தூரி. (தைலவ.) 2. கஸ் தூரி மிருகம். (வைத்தியபரி.)

மறை—1. அடைக்கலம். (சூ. நிக. ௯: ௯௫.) 2. ஆகமம். (ஞானமி.) 3. இரகசியம். (நாலடி. பிறர்மறையின்கட்செவிடாய். என்னுஞ்செய் யுளிற்காண்க.) 4. எதிர் மறுத்தலாகியவிடை. (நன்னு. பொது, ௯௫. உரை.) 5. ஒளிப்பிடம். ஆகுபெயர். 6. தெரிநிலை வினைப்பகுதி. 7. கேடகம், வினைமுதல் விகுதிதொக்கு நின்ற தென்க. 8. மந்திரம். (வள். நித்தார்ப. அ.) 9. வேதம். (பிங்கல. ௨௰௯.)

மறைக்காடு—வேதாரணியம். (மறைசை யந். ௧.)

மறைக்கொடியோன்— 1. துரோணசா ரியன். (பிங்கல. ௭௯௨.) 2. பிராமணன். (பிங் கல. ௭௯௦.)

மறைசை — வேதாரணியம். (மறைசை யந்தாதியிற்காண்க.)

மறைஞானசம்பந்தர்—உமாபதிசிவாசாரி யாருக்கு ஆசிரியர், சிவதருமோத்தரத்தைத் தமிழிற்செய்தவர். (அபிதா. கோ.)

மறைத்தல்—மறையச்செய்தல். (வழக்.)

மறைதல்—ஒளித்தல். (வழக்.)

மறைந்து—கீழ்மேலாய். (புறப். மாலை.)

மறைப்பு—மறைத்தல். (வழக்.)

மறைபடல்—மறைக்கப்படுதல். (வழக்.)

மறைபாடு—மறைபடல். (வழக்.)
மறைபுகல்—அடைக்கலம்புகுதல். (சூ. நிக. கூ: சுரு.)
மறைபொருள்—உட்பொருள். (வழக்.)
மறைமுதல்— } சிவன். (சூ. நிக. க: கூ.)
மறைமுதலி— }
மறைமொழி— மந்திரம். (வள. நீத்தார். அ. உரை.)
மறையாதீமே—மறையாதே. (ஐங்குறு.)
மறையிலார்—கீழோர். (சூ. நிக. உ: ருச.)
மறையோன்—1. பிரமன். (பிங்கல. கருசு.) 2. வியாழன். (சூ. நிக. க: சுஉ.) 3. வேதமுணர்ந்தோன்.
மறைவு—மறைதல், தோற்றாமை. (வழக்.)
மன்—1. அசைநிலை. 2. அரசன். 3. ஆக்கம். 4. உத்திரட்டாதி. 5. ஒழிவு. 6. கழிவு. 7. நிலைபேறு. 8. மந்திரம். 9. மிகுதி. (1, 3, 5, 6, 7, 9-நன்னூ. இடையி-கரு.) (2, 4, 8-பிங்கல-ருகூசச.) மன் என்பது அசைநிலையில் வரும்போது மன்னையெனவும் வருமென்பர்.
மன்பது—உயிரப்பன்மை. (பரிபா.)
மன்பதை—மக்கட்பரப்பு. (சூ. நிக. உ: அச.)
மன்மத—இருபத்தொன்பதாவது வருஷத்தின் பெயர். (வருஷாதிநூல்.)
மன்மதன்—காமன். (சூ. நிக. க: உரு.)
மன்மதாலயம்—மாமரம். (வைத்தியபரி.)
மன்ற—1. அசைச்சொல். (வள். ஈகை. கூ.) 2. அறுதியாக. (பத்துப்பா.) 3. வெளியாக. 4. நிச்சயமாக. (3, 4-புறநா.)
மன்றம்—சபை, பொதுவிடம். 2. செண்டுவெளி. (1, 2-புறநா.) 3. நிச்சயம். (சூ. நிக. அ: சக.) 4. நெடுந்தெரு. (சூ. நிக. ரு: சஎ.) 5. மணம். (பிங்கல. ருகூசரு.)
மன்றல்—1. கலியாணம். 2. பாலையாழிசை. 3. மிக்கபரிமளம். (1, 2, 3-பிங்கல. ருகூசசு.)
மன்றாட்டம்— } இரந்துவேண்டுதல். (வழக்.)
மன்றாட்டு— }
மன்றாடுதல்— }
மன்று—1. சபை. (சூ. நிக. ரு: சசு.) 2. நடு. (பதிற்றுப்.)
மன்னர்பின்னோர்—வைசியர். (சூ. நிக. உ: உரு.)
மன்னல்—1. அடுத்தல். 2. நிலைபெறுதல். 3. பெருமை. 4. வலிமை. (1, 3, 4-பிங்கல. ருகூசஎ.) (2-சூ. நிக. அ: சகூ.)
மன்னவன்— } 1. அரசன். 2. உத்திரட்டாதி. 3. எப்பொருட்குமிறைவன. (1, 2-பிங்கல. ருகூசஅ.) (3-சூ. நிக. உ: சுo.)
மன்னன்— }

மன்னார்—1. ஓரூர். இது கடற்கரையிலுள்ளது. (வழக்.) 2. பகைவர். (சூ. நிக. உ: ருக.)
மன்னார்கோயில்—ஓரூர். திருமால் திருபதிகளிலொன்று. (வழக்.)
மன்னுலகம் — சுவர்க்கம். (சிந்தா.) 2. நிலையுலாவுலகம்.
மன்னித்தல்— } பொறுத்தல். (வழக்.)
மன்னிப்பு— }
மன்னியர்—நிலைபெறுவாயாக. (பதிற்றுப்.)
மன்னிறைதருதல்—வேளாண்மாந்தரியல்பினொன்று. (சூ. நிக. கஉ: எஎ.)
மன்னுதல்—மன்னல்.
மன்னும்—இடைச்சொல். (சிலப்.)
மன்னை — மன் என்பது மன்னையென விறுதிவிகாரமாய் நின்றதென்க. (நன்னூ. இடையி. கருந.) கழுத்திணோர்பாகத்திற்கும் பெயர்கூறுவர்.
மன்னைக்காஞ்சி—ஒருதுறை. (புறப்-மாலை.)
மனக்கசிவு—மனவுருக்கம். (வழக்.)
மனக்கனிவு—மனக்கசிவு. (வழக்.)
மனக்கிடை— } மனவெண்ணம். (வழக்.)
மனக்கிடக்கை— }
மனக்குருடு—அறிவீனம் (வழக்.)
மனக்கோட்டம் — மநக்கோட்டம். பார்.
மனங்கசிதல்— } மனமுருகல். (வழக்.)
மனங்கரைதல்— }
மனசு—மநது. (வழக்.)
மனது—மனம். (வழக்.)
மனம்—1. உள்ளம். (சூ. நிக. அ: ருச.) 2. இந்துப்பு.
மனவாசகங்கடந்தார் சித்தாந்த சாஸ்திரம் பதினான்கனுள் ஒன்றாகிய உண்மைவிளக்க நூலாசிரியர். (அபிதா-கோ.)
மனவு—1. சங்குமணி 2. புடைவை. (வைத்தியபரி.) 3. மணிப்பொது. (1, 2-பிங்கல. ருகூசரு.)
மனனம்—அநுசிந்தனைசெய்தல். (தர்க்காமிருதம்.)
மனாகை—பெண்யானை.
மனா— அக்குமணி. (சிந்தா.)
மனாலம்—குங்குமம். (பதிற்றுப்.)
மனாவு—அரைப்பட்டிகை. (சூ. நிக. எ: உஅ.)
மனிதன்—மானிடன். (வழக்.)
மனிலர்—ஓரூர். (வழக்குண்டுபோலும்.)
மனு—மநு-பார்.
மனுக்கள்—மநுக்கள் பார்.
மனுடன்—மநுடன், மனிதன். (வழக்.)
மனுமக்கள்—மனிதர்கள். ஒருகாலத்திலே மநுக்களாற் படைக்கப்பட்டவர்களுக்கு இப்

பெயர்கூறுவர். இவர்களைப்போன்றிருத்தலாற் பிரமன் முதலானோர் படைக்கப்பட்டவர்களுக் குமிப்பெயராமென்பர்.

**மனுவந்தரம்**—மநுவந்தரம்பார்.

**மனுவர்**—கொல்லர். (சூ. நிக. உ: உக.)

**மனை** — 1. இரண்டாயிரத்துநானூறு குழி கொண்ட நிலமென்றும், பதினாறரைக்காற்குழி கொண்ட நிலமென்றுங்கூறுவர். 2. மனைவி. 3. வீடு. (2, 3-சூ. நிக. கக: னரவெ. கஎ.)

**மனைக்கோள்**—பல்லி. (பிங்கல. உடுகசு.)

**மனையறம்**—இல்லொழுக்கமாகிய தருமம். (வழக்.)

**மனையாட்டி**— } மனைவி. (சூ. நிக. உ: **மனையாள்**— } எக.)

**மனைவி**—நாயகி. (சூ. நிக. கக: னகரவெ. கஎ.)

**மனைமரம்**—தேற்றுமரம். (பரிபா.)

**மனோகரம்**—1. அழகு. (பிங்கல. ககசுரு) 2. மகிழ்ச்சி. (வழக்.)

**மனோசன்**—மன்மதன். (சூ. நிக. க: உசு.)

**மனோசிலை**—ஒருமருந்து விளைவுப்பாடாண முப்பத்திரண்டினுளொன்றென்பர்.

**மனோபவன்**— } மன்மதன். (சூ. நிக. க: **மனோபு**— } உசு.)

**மனோமயகோசம்**-பஞ்சகோசத்தொன்று (ஞானமி.)

**மனோரஞ்சிதம்**—மணப்பிரியம். (வழக்.)

**மனோரதம்**—1. இன்பம். 2. விருப்பம். (வழக்.)

**மனோரமியம்**—மனத்திருத்தி. (வழக்.)

**மனோரமை**—மேருமலைமகளும் இமயமலை மனைவியுமாகியமேனை. (அபிதா. சிங்.)

**மனோவதி**— பிரமன் பட்டணத்திற்கொரு பெயர். (அபிதா. கோ.)

**மனோன்மனி**—1. அப்பிரகம். (வைத்திய பரி.) 2. ஆன்மாக்களின் மலங்களைநீக்கிச்சிவா னந்தத்தைத்தருஞ்சிவசத்தி. (அபிதா. சி.)

**மனோன்மனித்தாய்**— இந்துப்பு. (வைத்தியபரி.)

## மா.

**மா**—1. அசைச்சொல். இது வியங்கோளில் வருவது. (நன்னூல்-இடையி. உ0.) 2. அழகு. 3. அழைத்தல். 4. இடித்தமா. (பிங்கல-ககஎ.) 5. இலக்குமி. 6. எதிர்மறையுபசருக்கம். 7. ஓரெண். 8. கறுப்பு. 9. குதிரை. 10. பன்றி புரவி யானை யிவற்றினுண்பெயர். (சூ. நிக. ரு: ரு0.) 11. பூமி. 12. சரச்சுவதி. 13. சிலை. 14. செல்வம். 15. துகள். 16. நஞ்சுக்கொடி. (வைத்தியபரி.) 17. நிறம். 18. பெருமை. 19. மாமரம். 20. வண்டு. 21. வயல். (பிங்கல. ௩எக.) 22. வலி. 23. விலங்கின்பொது. 24. வெறுப்பு. (சூ. நிக. கக. வகரவெ. கக.) (2, 3, 5, 7, 8, 9, 11, 12, 17, 18, 19, 20, 22, 23-(பிங்கல. ௬௬சசு.) மா என்பதற்குச் சீவகசிந்தாமணி யுரையில் ஆகாது என்பது பொருளாகக்கூறுவர். பொருநராற்றுப்படையில், ஒருமாநிலத் திற்கும் பெயர்கூறுவர்.

**மாக்கசங்கு**—இந்துப்பு. (வைத்தியபரி.)

**மாக்கடு**-சூரத்துக்கடுக்காய்.(வைத்தியபரி.)

**மாக்கல்**—கானற்கல். (வைத்தியபரி.)

**மாக்கள்**—1. மனிதர்கள். (சூ. நிக. க:அச.) 2. விலங்குகள். (சூ. நிக. ரு: சக.)

**மாகசம்**—கையாந்தகரை. (வைத்தியபரி.)

**மாகட்டகம்**-செந்நாயுருவி. (வைத்தியபரி.)

**மாகண்டம்**—இருபத்தேழு யோகத்தொன்று. (வாநவசாதிநூல்.)

**மாகத்தி**—நெல்லிமரம். (வைத்தியபரி.)

**மாகுதந்தன்**-ஒருவேதியன், குக்குடவடிவ மாகி காசியில்வந்து கதியடைந்தவன். (காசிகாண்-மூத்திமண்ட. கஎ.)

**மாகதம்**—மகதேயத்துள்ளது.

**மாகதர்**—1. இருந்தேத்துவோர். (மதுரைக்கா.) 2. மகதேயத்தவருமாம்.

**மாகதன்** — 1. சத்திரியப்பெண் வைசிய னைக்கூடிப் பெற்றபிள்ளை. (அபிதான-சி.) 2. மகதேயத்தவனாகிய சராசந்தன். (அபிதாந.)

**மாகதி**—1. சீனி. 2. சோணநதி. (அபிதாந கோ.) 3. திப்பிலி. 4. முல்லைக்கொடி. 1,3,4-(வைத்தியபரி.)

**மாகந்தம்**—மாமரம். (மலையக.)

**மாகந்தி**—1. அமுக்கிரா. 2. நெல்லி (1,2-வைத்தியபரி.)

**மாகம்**—1. ஆகாயம். (சூ. நிக. ம: ௬.) 2. இக்கு. (சிந்தா) 3. மகம். 4. மாகன்செய்த காவியம். (அபிதா-கோ.) 5. மாசிமாதம். (சோதிட.) (3-பிங்கல-உசஅ.)

**மாகரி** — ஆண்யானை. (மா-விலங்கிறுன். கரி—யானை.)

**மாகயம்** — கௌரிபாடாணம். (வைத்திய பரி.)

**மாகாணம்**—நாடு. (வழக்.)

**மாகாணி** — ஓரெண். அது: பதினாறிலொன்று. (வழக்.)

**மாகாளம்**—ஒரு சிவதலம். (தேவார. திருஞான-க.)

**மாகாளர்**—1. அரிகரபுத்திரர் சேனாபதி.) 2. சிவகணத்தலைவரிலொருவர்.(1,2-அபிதாந.)

**மாகாளன்**—அயன்படைத்தலைவன்.

**மாகாளி**—1. களாவிழுது. 2. சத்தமாதரி லொருத்தி (மீனாக்ஷி. பிள்ளைத். காப்பு. ௧௦.) 3. மாவலிக்கிழங்கு. (1, 3-தைலவ.)

**மாகாளிசரண்**—களாவிழுது. (தைலவ.)

**மாகாளேசுரர்**—திருவிடும்பைமாகாளத்தி லெழுந்தருளியிருக்குமிறைவர்நாமம். (அபிதா. கோ.)

**மாகிஷ்மதி** — நர்மதாதீரத்துள்ள வொரு நகரம். (அபிதா. கோ.)

**மாகிட்டியான்**—அரசனுக்கு வைசியப்பெண்ணிடமுதித்தவன். (அபிதாநசி.)

**மாகிலம்**—இராச்சியம்.

**மாகிரன்**—இந்திரன்.

**மாதுந்தம்**—பூனைக்காலி. (வைத்தியபரி.)

**மாதலவர்**—வேடர். (சூ. நிக. உ: சுஅ.)

**மாகேசுவரசூத்திரம்**—வடமொழி வியாகரணத்துக்குமுதனூலாகச்சிவபிரான்றனதுடமருகத்தினின்றுந்தோற்றுவித்த சப்தமூலசூத்திரங்கள். (அபிதா. கோ.) பாணினிமுனிவருக்குக்கூறினரென்றுங்கூறுவர்.

**மாகேயம்**—பவளம் (வைத்தியபரி.)

**மாகேயி**—
**மாசை**— பசு. (உ-ம்.) வரிற்கொள்க.

**மாங்கல்லியம்**—மங்கிலியம். (வழக்.)

**மாங்கர்**—1. ஓரால். 2. ஓர்மீன். (வழக்குண்டுபோலும்.

**மாங்காடு**—குடமலைப்பக்கத்துள்ளவோரூர். (அபிதாந-கோ.)

**மாங்கிசம்**—மாமிசம். (வழக்.)

**மாங்கிசச்சிலை**—சாதிக்கல்லு.

**மாங்கில்லியம்**—தாலி. (வழக்.)

**மாங்குடிக்கிழார்**—ஒருதமிழ்ப்புலவர். (அபிதா-சி.)

**மாங்குடிமருதனார்**— கடைச்சங்கப்புலவரி லொருவர். (வள். மாலை: உ௪.)

**மாச்சக்காய்**—மாசக்காய். (வைத்தியபரி.)

**மாச்சல்**—வருத்தம். (வழக்.)

**மாச்சி**—பாம்புகொல்லி. (வைத்தியபரி.)

**மாச்சிதேவர்**—ஒரு வீரசைவ வடியவர். (அபிதாநசி.)

**மாசக்காய்**—ஒரு மருந்துச்சரக்கு. (வழக்.) இதனை மாச்சக்காயென்பர். (வைத்தியபரி.)

**மாசங்கம்**—சூதகம்.

**மாசம்**—மாதம். (வழக்.)

**மாசலம்**—1. நோய். 2. முதலை.

**மாசலன்**—களவன்.

**மாசவிடாய்**—மாதவிடாய், மாதர்பூப்பு.

**மாசாத்தன்**—1. ஐயனார். (சூ. நிக. க: உஅ.) 2. கண்ணகியின் தந்தை. (மணிமே.) 3. கைலாயஞானவுலாவை அங்கே கேட்டுவந்து திருப்பிடவூரிலே வெளியிட்டவர். (அபிதாநசி.)

**மாசாத்துவான்** — கோவலன் தந்தை. (அபிதா. கோ.)

**மாசி**—1. ஒரு மாதம். 2. மகநக்ஷத்திரம். (1, 2-சூ. நிக. கக: ககரவெ. கரு.) 3. மாசிக்காய் (வைத்தியபரி.)

**மாசிகை**—பறவை.

**மாசிங்கம்**—கலைமான்கொம்பு. (வைத்தியபரி.)

**மாசிப்பத்திரி**—ஓர்பூடு. (வைத்தியமூ.)

**மாசியம்**— இறந்தோர்க்கு மாதந்தோறும் செய்யுங் கடன் (வழக்.)

**மாசிரம்**—சீக்கிரம்.

**மாசிலாமணிநாதர்** — திருவாவடுதுறையி லெழுந்தருளியிருக்கிற இறைவர் நாமம். (அபிதா-கோ.)

**மாசு** — 1. அழுக்கு. (பிங்கல-௧அ௯௦.) 2. குற்றம். (பிங்கல-௧அ௯௧.) 3. மேகம். (பிங்கல். ௫அ.)

**மாசுகம்**—பீர்க்கு. (வைத்தியபரி.)

**மாசுணம்** — 1. பாம்பு. 2. பெரும்பாம்பு. (1, 2-சூ. நிக. ௬: ௪௦, ௪அ.)

**மாசெடி**—வான்மிளகு. (வைத்தியபரி.)

**மாசேனன்**—1. அருகன். (சூ. நிக. க: க.) 2. திருமால். 3. காசியையடைந்து தீர்த்தமாடி முத்திபெற்றவன். வாமதேவமுனிவர் மாணாக்கன். (அபிதாந-சி.)

**மாசை**—பொன். (சூ. நிக. ௬: உ.)

**மாஞ்சி**—1. சடாமாஞ்சில். 2. பெருங்கோரை. 3. மண்ணீரல். (1, 2, 3-வைத்தியபரி.)

**மாஞ்சிரோகணி** — ஓர் பூடு. இது கண்புகைச்சலை நீக்கும். (வைத்திய-மூ. அக.)

**மாஞ்சில்**—மாஞ்சி.

**மாட்சி**—
**மாட்சிமை**— 1. நன்மை. (புறநா.) 2. (பெரியபு. தடுத்தாட். ௫௬.)

**மாட்டல்**—1. மூட்டல். (சூ. நிக. ௬: உ௧.) 2. வருத்தல். (ஐங்குறு.)

**மாட்டாமை**—இயலாமை. (தண்டி-பொருளணி. ௧௧-ஆம் சூத்திரவுரை.)

**மாட்டார்**—இயலாதோர். (சூ. நிக. உ: ௪௬.)

**மாட்டி**—1. அழித்து. (முல்லைப்.) 2. எரித்து. (சிறுபா.) 3. பொருத்தி. (வழக்.)

**மாட்டிய**—கொளுத்திய. (பெரும்பா.)

**மாட்டிலையான்**—பெரிய ஈ (வழக்குண்டு.)

**மாட்டுதல்** — 1. இயலுதல். 2. கட்டுதல். 3. செலுத்தல். (சிந்தா.) 4. சொருகுதல். (பெ

ரியபு. இளையான்குடி. கக.) 5. பூணுதல். (1, 2, 5-வழக்.)

மாட்டுமுழலைக்காளான் — ஒருவகைக் காளான். (வழக்.)

மாட்டேறிந்தோழுகல்- } ஒன்றற்குச் சொல்லப்
மாட்டேற்று— } பட்டஇலக்கணத்தை அதனைப்பெறுதற்குரிய மற்றொன்றற்குமாட்டிச் சொல்லி நடத்தல். (நன்னூ. பொதுப்பா: கச.)

மாடகம் — வீணைமுறுக்காணி. (சூ. நிக. கo: சரு.)

மாடக்குழி — விளக்குவைக்குஞ் சுவரறை.

மாடப்புறா—ஒருபுறா (சூ. நிக. ரு: ௬க.)

மாடப்புறக்கண்ணிறம்—அழுக்கிரா. இதன் பழநிறம் மாடப்புறாக்கண் ணிறம்போவிருப்பதனுலிப்பெயர் பெற்றதென்பர்.

மாடம்-1. உப்பரிகை. (வழக்.) 2. உழுந்து. (சூ. நிக. ச: சக.) 3. வீடு (சூ. நிக. கக: டகரவெ. உ.)

மாடல்—செய்தல். (உ-ம்.) வரிற்கொள்க.

மாடன்—ஒரு பேய். (வழக்.)

மாடி—மேல்மேடை. (வழக்.)

மாடியம்—உடம்புக்கீடு; கவசம். (சிந்தா.)

மாடு —1. இடம். (பிங்கல. எகக.) 2. செல்வம். 3. பக்கம். 4. பசுப்பொது. 5. பொன். (2, 3, 5-சூ. நிக. கக: டகரவெ. க.) (4-வழக்.)

மாடை—பொன். (சூ. நிக. ரு: உ)

மாண்— } 1. தெரிநிலை வினைப்பகுதி.
மாண்டல்- } 2. மாட்சிமை. (சூ. நிக. அ: ருo.)

மாண்டவியர்- ஒரு முனிவர் இவரே விதுரனுகப் பிறந்தவர். (அபிதானகோ.)

மாண்டன்று -மாட்சிமையுற்றது. (ஐங்குறு.)

மாண்டார்-1. இறந்தவர். (வழக்.) 2. மாட்சிமையுடையார். (வள். வினைத்திட். ௫.)

மாண்டுகேம்—உபநிடத முப்பத்திரண்டனுளொன்று. (பொருட். நிக.)

மாண்பு-1. அழகு. 2. மாட்சிமை. (சூ. நிக. அ: ருo.)

மாணம் —மாட்சிமை. அம்-சாரியை யென்பர்.

மாணல்—மாட்சிமை. (பிங்கல. கஎசுஉ.)

மாணவகன்-1. பிரமசாரி 2. மாணுக்கன். (வழக்.)

மாணவம் — பதினுறுகோவையுள்ள முத்தாரம். (உ-ம்.) வரிற்கொள்க.

மாணவன்—மாணுக்கன். (வழக்.)

மாணுக்கன்—கற்போன். (சூ. நிக. உ: எ.)

மாணுமை—மாட்சிமைப்படாமை. (வழக்.)

மாணூர்— பகைவர். (வள். கூடாநட்பு. ரு.)

மாணி—1. ஆண்குறி. (வழக்.) 2. குறள் வடிவம். (தேவார. மாணிகுழி.) 3. பிரமசாரி. (இராமா. கிஷ்கிந்தா. அனுமப்ப. உக.)

மாணிக்கத்தியாகர்-திருவொற்றியூரி லெழுந்தருளியிருக்கு மிறைவர்நாமம். (அபிதானகோ.)

மாணிக்கம்—நவமணியிலொன்று.(வழக்.)

மாணிக்கவண்ணர்-திருமருகல், திருவாழ்கொளிபுத்தூரிவைகளிலே கோயில்கொண்டிருக்குமிறைவர்நாமம். (அபிதானகோ.)

மாணிக்கவரதர் - திருமாணிகுழியிறைவர் நாமம். தேவியர்மாணிக்கவல்லி.(அபிதானகோ)

மாணிக்கவாசகர்— திருவாதவூரடிகளுக்கொருபெயர். (திருவிளை. மண்சுமந்த ௬oக.)

மாணிகுழி —ஒரு சிவஸ்தலம். (தேவார. திருமாணி குழிப்பதிகம் பார்.)

மாணிபத்திரன் — குபேரன் சேநாபதி. (அபிதானசிந்.)

மாணிபந்தம் —பாடி. (வைத்தியபரி.)

மாணை—ஒர்கொடி (இராமா. அயோத்தி. வனம்புகு. ௬௯ )

மாந்தியானம்— } மந்தியானபோதிற்செ
மாந்தியானிகம் } ய்யுங்கடன். (வழக்.)

மாந்திரம் -1. அளவு (வழக்.) 2. தனிமை. 3. தும்பி. (வைத்தியபரி.)

மாத்திரி—சல்லியன் றங்கையும், பாண்டுவினிரண்டாமனைவியுமானவள். (அபிதானகோ.)

மாத்திரை—1. அளவு. (பிங்கல. உஉஉரு.) 2. காலநுட்பம் (பிங்கல.உஅo.) 3.காலவிரைவு. (பிங்கல. உஅக.) 4. குளிகை. (வழக்.)

மாத்திரைக்கோல்—1. அளவுகோல். (வழக்.) 2. சித்தர்கள் வைத்திருக்கும் ஒருவகைக்கோல். (திருவிளை. எல்லாம்வல்லசித்தர். கரு.)

மாத்திரைச்சுருக்கம்-ஒரு பொருள் பயந்துநிற்குமொரு சொல் ஒரு மாத்திரைகுறைய வேறோர்பொருள் பயக்கப்படுவது. (தண்டி. சொல்லணி. க௫.)

மாத்திரைவருத்தனம்-ஒருபொருள் பயப்பதொருமொழி ஒரு மாத்திரைகூடப்பிறிதோர் பொருள் பயப்பப்படுவது. (தண்டி. சொல்லணி. சக.)

மாத்துமிகன்—தேகாவயவமே பொருளெனவும், அதுகெட்டால்வேறுபொருளினின்றெனவுங்கூறுமொருசமயி. (அபிதானசிந்.)

மாத்துவிகம்—இலுப்பைப்பூச் சாராயம்.

மாதங்கம்—யானை. (சூ. நிக ரு: ச.)

மாதங்கர்—சண்டாளர். (சூ. நிக. உ: ருச.)

மாதங்கன் — மைத்திரனுக்குதித்த மைந்தற்கும், வைதேகனுக்குதித்த மைந்தற்கும் மாதங்கன் என்று பெயர். (சூதசங். சாதிவரலா. ௯௪.)

மாதங்கி—1. உமாதேவி. மதங்கமுனிவருக்குப்புத்திரியாக அவதரித்த காரணத்தால் இப்பெயர் வந்தது (அபிதானகோ.) 2. காளி. (சூ. நிக. ௧: ௯அ.) 3 யாழ்த்தெய்வம். (சிந்தா.)

மாதநூரம்—மகளிர் சூதகம். (வழக் )

மாதப்பிறப்பு-சூரியனோரி ராசியினின்று மற்றோரி ராசிக்குச் செல்லுஞ் சமயம். (வருஷாதிநூ.)

மாதம்—1. கிராம்பு. (வைத்தியபரி.) 2. மாசம். (வழக்.) கடைதல், கொல்லல், பெருமை, மகிழ்ச்சி முதலியனவுங்கூறுவர்.

மாதர்—1. இடைச்சொல். 2. அழகு. 3. ஆசை. 4. பெண்கள். (1, 2, 3, 4-சூ. நிக. ௧௧: தகரவெ. ௧௯.)

மாதர்துணச்சலம் — கெந்தகம். (வைத்தியபரி.)

மாதர்கோய்சகம்—சீவியென்று பெயர். (சூ. நிக எ: எக.)

மாதரி—காளி. (சூ. நிக. ௧: ௯அ.)

மாதலி-இந்திரன் சாரதி. (இராமா. யுத்த. தேரேறு. ௬௨.)

மாதலுங்கம்—மாதளை. (வைத்தியபரி.)

மாதவசூரி—ஒரு வைணவர்; இவர் சரிதம் (அபிதானசிந்தாமணியிற்காண்க.)

மாதவதர்சர்-ஒருவைணவர். (அபிதானசிந்.)

மாதவப்பிரியம்—செம்பூசனி. (வைத்தியபரி.)

மாதவம்—1. கள். (சூ. நிக. ௯: ௨௧.) 2. தவம். 3. வசந்தகாலம். (2, 3-சூ. நிக. ௧௧: தகரவெ. ௬.) இனிமைக்கும் பெயர் கூறுவர். (உ-ம்) உண்டேற்கொள்க.

மாதவர்—முனிவர். (சூ. நிக. ௨: ௨.)

மாதவன்—1. திருமால். (சூ. நிக. ௧: ௧௧.) 2. வசந்தன், வசந்தகாலத்துக்குரியவன், மன்மதன்.

மாதவாசாரியர் — வித்தியாரணியருக்குப் பெயர் (அபிதானகோ.)

மாதவி—1. குருக்கத்தி. 2. கோவலன் காதல்மாது. (மணிமே.) 3. சீனி. 4. தவசிமுருங்கை. 5. துளசி. 6. வசந்தகாலமல்லிகை. 1, 3, 4, 5, 6-வைத்தியபரி.) கண்ணன் மனைவி, தூதிகை, நாடகக்கணிகைக்கும்பெயர் கூறுவர்

மாதவிகை — வசந்த மல்லிகைக் கொடி. (வைத்தியபரி,)

மாதவிடாய்— } மாதர்க்குவரும் மாதத்
மாதவிலடை— } தீட்டு. (வழக்.)

மாதவியசங்கிதை—காலநிர்ணயம், வித்தியாரணியர்செய்தசோதிடகிரந்தம். (அபிதானகோ.)

மாதவீயம் — பராசரமிருதி வியாக்கியானம் மாதவாசாரியார்செய்தது. (அபிதானகோ.)

மாதளச்சிலை-மாந்தளிர்க்கல். (வைத்தியபரி.)

மாதளை—மாதுளை. (வைத்தியபரி.)

மாதனம்—கிராம்பு. (வைத்தியபரி.)

மாதா—1. உமை. (சூ. நிக. ௧: ௯௨.) 2. ஞாதா. (தர்க்காமிர்தம்.) 3 தாய். 4. நாமகள். (3, 4-பிங்கல. ௯௬௫.)

மாதாமகன் — தாயைப்பெற்ற பாட்டன். (வழக்.)

மாதாமகி-தாயைப்பெற்றபாட்டி. (வழக்.)

மாதி—1. மண்டலமாவோடல். (சூ. நிக. ௯: ௬௨.) 2. மா. (மலையக )

மாதிகம்-குதிரைபோம் மார்க்கம். (சூ. நிக. ௯: ௧௧.)

மாதிபோதி—நெருஞ்சி. (வைத்தியமூ.)

மாதிரம்—1. ஆகாயம். 2. திக்கு. 3. பூமி. 4. மலை 5. யானை. (1, 2, 3, 4, 5-சூ. நிக. ௧௧: தகரவெ. ௨௦.)

மாதிரி—1. அதிவிடயம். (மலையக.) 2. மாதிரிகை (வழக்.)

மாதிரிகை—விதம். (வழக்.)

மாதிரு—ஆகாயம், இரேபதி, இலக்குமி, பசு, பார்ப்பனி, பூமியென்றுங்கூறுவர். (உ-ம்.) உண்டேற்கொள்க. மாதா. (வழக்.)

மாதினியார்-திருநாவுக்கரசுநாயனார் தாயார் (பெரியபு. திருநாவு. ௧௧.)

மாது-1. அசைச்சொல். (நன்னூ இடையி. ௨௨.) 2. காதல். (சிந்தா.) 3. பெண். (சூ நிக. ௨: ௭௯ )

மாதுகரி—நால்வகைப் பிச்சையிலொன்று. இது: வண்டானது பூக்களிடஞ்சென்றுவாதை பண்ணாது மதுவை வாங்குமாறுபோல விரத்தனானவன் பலரிடத்தும் வாதைபண்ணாது எளிதாக அன்னப்பிச்சை வாங்குவது என்பர். (சைவசமயநெறி. பொதுவி. உடுள. பாட்டுரை)

மாதுங்கம்-கொம்மட்டிமாதுளை. (மலையக.)

மாதுபாகம்—புட்பராகம்.

மாதுமையம்மை-திருக்கோணமலையிலெழுந்தருளியிருக்கிற தேவியார் திருநாமம். (அபிதானகோ.)

மாதுரம்—மல்லிகை. (வைத்தியபரி.)

மாதுரி—சாராயம். (வைத்தியபரி.)

மாதுரியம்—மிக்கஇனிமை. (வழக்.)
மாதுரு—மாதா. (வழக்.)
மாதுருக்கசோழவர்–இவர் சத்தமாதர்கள் (இவர்சரிதம் அபிதானசிந்தாமணியிற்காண்க.)
மாதுலங்கம்—1. கொம்மட்டிமாதுளை. 2. மாதுளை. (1, 2-வைத்தியபரி.)
மாதுலம்—ஊமத்தை. (வைத்தியபரி.)
மாதுலன்–தாயுடன்பிறந்தமாமன். (சூ. நிக. உ: எஎ.)
மாதுலா—
மாதுலி— } மாமன் மனைவி.
மாதுவசை–பெண்வசம்பு. (வைத்தியபரி)
மாதுவம்—1. கள். 2. நற்சூரம். (1, 2-வைத்தியபரி.)
மாதுளங்கம்–
மாதுளம்— } மாதுளை. (வைத்தியபரி.)
மாதேவன்—1. சிவன். (சூ. நிக. க: எ.) 2. பதினொருஉருத்திரரிலொருவர். (பொருட்.நிக)
மாதேவி—1. பார்ப்பதி. (வழக்.) 2. சீதேவியார். (வைத்தியபரி.)
மாதேவியம்மை—திருவம்பர் மாகாளத்தி லெழுந்தருளியிருக்கிற தேவியார் நாமம். (அபிதா. கோ)
மாந்தக்கோதி—ஒரு சுரம். (வழக்.)
மாந்தச்சன்னி—ஒரு நோய். (வழக்.)
மாந்தப்புல்–காவட்டம்புல் (வைத்தியபரி.)
மாந்தம்—1. ஒரு நோய். மந்தம். (வழக்.) 2. காவட்டம்புல். (வைத்தியபரி.)
மாந்தர்—மனிதர். (சூ. நிக. உ: அச.)
மாந்தல்—1. உண்டல். 2. குடித்தல். (பிங்கல. உ000.) 3. சாதல். (1, 3-சூ. நிக. கக: லகரவெ. உ0.)
மாந்தளிர்—மாவின்றளிர், இது துவர்பத்தினொன்று. (சூ. நிக. கஉ: க0ரு.)
மாந்தளிர்ச்சிலை — கற்காவி. (வைத்தியபரி.)
மாந்தளிர்ப்பச்சை–கொக்குக்கல். (வைத்தியபரி.)
மாந்தாதா—சூரியகுலத்தரசரிலொருவன். (அபிதா. கோ.)
மாந்தி—1. குடித்து. 2. மாமரம். (சூ. நிக. ச: கக.)
மாந்தியம்—மந்தமாயிருப்பது. (வழக்.)
மாந்திரியம்—1. தும்பி. (வைத்தியபரி.) 2. மந்திரசம்பந்தமானது.
மாந்திரியர்—மந்திரவாதிகள். (வழக்.)
மாந்துதல்—மாந்தல். துச்சாரியை.
மாந்தை — ஓர்வூர். (மாந்தைக்கம்மாளர் என்பது வழக்.) குமணராசன் ஊருக்கும் பெயர் கூறுவர். (குமணசரித்திரம்பார்.)
மாநடன்—சிவன்.
மாநாயகன் — கண்ணகிபிதா. (அபிதா. கோ.)
மாப்பிள்ளை—மணமகன். (வழக்.)
மாபலன்—1. காற்று. (பிங்கல, உரு.) 2. சூரபன்மன்படைத்தலைவன். (அபிதானசி.)
மாபலி—மாவலிச்சக்கரவர்த்தி. (அபிதா. கோ.)
மாபலிவாணன்—மாவலிவாணன்.
மாபுராணம்—இடைச்சங்கமருவியவொரு நூல். (அபிதானசி.)
மாபூதி—ஏழ்நரகிலொன்று. (சூ நிக. கஉ: எசு)
மாம்பிரம்—சிறுதேக்கு. (வைத்தியபரி.)
மாமகம்—மாசிமகம் இதுபன்னிருவருடத்துக்கொருதரம் வருவது. (திருவிளை. அருச்சனை. உரு.)
மாமடிகள் — மாமனார். (மீனாக்ஷியம்மை. பிள்ளை. அம்புலி. சு.)
மாமணி—மாணிக்கம். (சூ. நிக. சு: ரு.)
மாமல்லபுரம்–மாவலிநகரம். இதனை நூல்களில் "மல்லை" எனக்கூறுவர். (பெரியபு. திருக்குறிப்புத். சக.)
மாமன்—அம்மான். (வழக்.)
மாமாத்திரர்—வைத்தியர். (சூ. நிக. உ: உஎ.)
மாமி—அம்மான் மனைவி. (வழக்.)
மாமிசச்சிலை—கார்சிறக்கல்.
மாமிசபேதி—ஓர் பூடு. (வைத்தியபரி.)
மாமிசம்—இறைச்சி. (வழக்.)
மாமிசி—சடாமாஞ்சில். (வைத்தியபரி.)
மாமுடி – நெட்டி. (வைத்தியபரி.)
மாமுனி—1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. நாயுருவி. (வைத்தியபரி.)
மாமூலனார்–சங்கப்புலவருளொருவர். (அபிதானசி.)
மாமை—1. அழகு. 2. கரியநிறம். (மலைபடு.) 3. நிறம். (1, 3-சூ. நிக. கக: மகரவெ. கசு.)
மாய்—ஆச்சா. (மலையக.)
மாய்ச்சல்—சாவருத்தம். (வழக்.)
மாய்த்தல்— 1. கொல்லல். (வழக்.) 2. மறைத்தல். (சிந்தா.)
மாய்தல்—மாய்வு.
மாய்ந்திசினோர்—மாய்ந்தோர். (புறநா.)
மாய்ந்தென—மாய. (புறநா.)
மாய்ப்பு— மாய்த்தல். பு. தொழிற்பெயர் விகுதி.

மாய்வு—1. சாவு. 2. மறைவு. (சூ. நிக. கக: ககரவெ. உ.)

மாயநகர்— தாருகாசுரன் அரசிருந்தநகர். (அபிதா. கோ.)

மாயகம்—விளாமரம். (வைத்தியபரி.)

மாயம்—1. கறுப்பு. (சூ. நிக. அ: உஉ.) 2. கனவு. 3. பொய். 4. வஞ்சனை. (3, 4-சூ. நிக. கக: ஞகரவெ. ரு.)

மாயவள்—1. இடாகினி. (சூ. நிக. க: கூ.) 2. தெய்வப்பெண். (பிங்கல. கஅகூ.)

மாயவன்— 1. கரியவன். 2. திருமால். (பிங்கல. கூ௦.)

மாயவன்மேனி-நாகப்பச்சை. (வைத்திய பரி.)

மாயவன்வித்து—1. விட்டுணுகிரந்தி. 2. வெள்ளரிவிதை. (1, 2-வைத்தியபரி.)

மாயா—சத்தபுரியிலொன்று. (அபிதாநசி.) இது அரித்துவாரமென்பர்.

மாயாகாரியம்— தனுகரணபுவனபோகம். (சி. சி. உ. சூத். அஎ. உரை.)

மாயாசாலம்—மாயவித்தை. (வழக்.)

மாயாசீதை— இந்திரசித்தினுற் செய்யப் பட்ட பொய்ச்சீதை. (இராமா. யுத்தகா. மாயா சீதைப்படலம்.)

மாயாசுதன்—மாயாதேவிசுதன்.

மாயாதம்—முதலை.

மாயாதாரணை— நவதாரணையி லொன்று. (பொருட். நிக.)

மாயாதேவி—புத்தன்றாய். (சூ. நிக க: கஅ)

மாயாதேவிசுதன் — புத்தன். (சூ. நிக. க: கஅ.)

மாயாப்பிரதிபிம்பர்—மாயையாற் பிரதி பலிக்கும் உருவுடையோர். (நாநாசிவவாதக்கட் டளை.)

மாயாப்பிரலாபம்-ஒரு ஞானநூல். (அபி தாநசி.)

மாயாபுரம்—தாருகாசுரன் பட்டினம். (அபிதாநசி.)

மாயாபுரி — 1. சப்தபுரிகளி லொன்று. (பொருட். நிக.) 2. பித்தளை. (சூ. நிக. கூ: க௦.)

மாயாமலம்—மும்மலத்தொன்று. (சி. சி. உ. சூத். அகு. உரை.)

மாயாவதி—இரதிதேவி.

மாயாவாதம்—ஒருமதம். (சி. சி. பரபக். மாயாவாதிமதம். க.)

மாயாவாதி—ஒருசமயி. (அபிதா. கோ.)

மாயாவி — ஓரசுரன் இவன் வாலியாற் கொல்லப்பட்டவன். (அபிதா. கோ.)

மாயாளி-வட்டத்திருப்பி. (வைத்தியபரி.)

மாயு—பித்தம். (வைத்தியபரி.)

மாயூரம்-ஒரு சிவதலம். (மாயூரப்புராணம் பார்.) சுவாமிபெயர் மயூரநாதர். மயிலுக்கும் பெயர்கூறுவர்.

மாயேசுவரி—சத்தமாதரிலொருத்தி, பார் வதி. (பொருட்-நிக.)

மாயை — 1. காளி. (சூ. நிக. க: கூக) 2. சத்தபுரியிலொன்று. (பொருட்-நிக.) 3. பிர பஞ்சத்திற்குக்காரணமாயிருக்கின்ற மாயாதத் துவம். 4. வஞ்சனை. (பிங்கல-கஅகூ.) 5. வித் தியாதத்துவம் எழிஞென்று. (சித்தாந்தப்பிர காசிகையிற் காண்க.) இன்னும் பலபெயர்கூறு வர். அபிதாநசிந்தாமணியிற் காண்க.

மாயைபுரி-மாயாநகர், இது கயமுகாசுரன் அரசாண்டது. (அபிதா-கோ)

மாயோள்—பெண். (சூ. நி. உ: ருகூ)

மாயோன்பூடு—துளசி. (வைத்தியபரி.)

மயோன்மருகன்—குமரக்கடவுள். (சூ. நிக. க: உகூ.)

மாயோனுள்-திருவோணம்.(சூ.நிக. க:எகூ)

மாயோன்வித்து-1. அரிதாரம.(வைத்திய பரி.)

மார்-1அசை. (மலைபடு.) 2. இடைச்சொல். 2. பலர்பாற்படர்க்கைப்பெயர்விகுதி. (நன்னூ- பெயரி. உக. உரையிற்காண்க.) 4. மார்பு. (உ-ம்.) "அன்னதானத்திற்கே, மார்தட்டிய முல்லைத்தாண்டவராயவரோதயனே" (தனிப் பாட-டிரடு.) 5. வினைமுற்றுவிகுதி. (நன்னூ. வினையி. அ)

மார்கழி—1. ஒரு மாதம், வருஷாதினு. 2. மிருகசிரிடம். (சூ. நிக. உ: சுகூ.)

மார்க்கசகாயர் — திருவிரிஞ்சைத் தலத் திறைவர்நாமம். (அபிதாநசி.)

மார்க்கணம் — 1. அம்பு. 2. இரப்பு. 3. தேடல்.

மார்க்கணர்—இரப்போர்.

மார்க்கண்டர்— } மிருகண்டு முனிவர்
மார்க்கண்டேயர்- } புத்திரர்.(அபிதாநசி)

மார்க்கண்டேயம் — பதினெண்புராணத் தொன்று. (அபிதாநசி.)

மார்க்கண்டேயனுர்—ஒருபுலவர். (புறநா னூ)

மார்க்கம் — 1. ஆராய்வு. 2. ஓர் கூத்து. (சூ.நிக. கஉ: ச.) 3. கையார்ந்தகரை. (வைத் தியபரி.) 4. சமயம். 5. தாளப்பிரமாணத்தொ ன்று. (பொருட்-நிக.) 6. வீதி, 7. வழி. (பிங் கல. சஎக.) (1-வழக்.) (4,6-சூ. நிக. கக: டகர வெ. உஉ.) 7. வடுகு. (சிலப்)

மார்க்கவம்—கரிசாலை (தைலவ.)
மார்க்கவன்-நிஷாதனுக்கு அயோகஸ்திரியிடம் பிறந்தவன். (அபிதாநசி.)
மார்ச்சனம்—துடைத்தல். (வழக்.)
மார்ச்சனி — விளக்குமாறு. (வழக்குண்டு போலும்.)
மார்ச்சனை — 1. முழவின்வார். 2. மூழவொலி. (2-சூ. நிக. கக: ணகரவெ. கக.)
மார்ச்சாரகம்— } மயில். (வைத்தியபரி.)
மார்ச்சாரகண்டம்— }
மார்ச்சாரி—கஸ்தூரி. (வைத்தியபரி.)
மார்ச்சாலநியாயம்-மீமாஞ்சையிற் கூறிய சகத்திரநியாயத்தொன்று. அது, பூனை தன் குட்டியைத் தானுகவே கௌவிக்கொண்டு போய் வைத்துக்காப்பது என்பதுகருத்து.
மார்ச்சாலம்—பூனை. (பிங்கல. உகூகஅ.)
மார்த்தாண்டம் — 1. எருக்கு. 2. பன்றி. (1, 2-வைத்தியபரி.)
மார்த்தம் — மிருதியின்வழிச்செல்வது. (திருவிளை. வேதத்துக்குப். சக.)
மார்த்தவமதம்-துவிதமதசித்தாந்தங் கூறுவது. (அபிதாநசி.)
மார்த்தாண்டன்—சூரியன்.(சூ.நிக.க:கூ.)
மார்பம்— } மார்பு. (சூ. நிக. உ: கூo.) அம்சாரியை.
மார்பு— }
மார்பு—1. வடிவு. (பெரும்பா ) 2. மார்பம்.
மாரகாகளம்—குயில். (உ-ம்.) "மாரகாகளமெழுவதோர் மதுமலர்க்காவில்" (பாரத. குருகுல. அ.)
மாரசம்-வெள்ளிபற்பம். (வைத்தியபரி )
மாரணம்—கொலைசெய்தல். (சூ. நிக. க: கூகூ.) அட்டகருமம்பார். மந்திரத்தாற் கொலைசெய்தலுமாம்.
மாரணயாகம்—மாரகஞ்செய்யும் வேள்வி.
மாரண்டம் — பாம்புமுட்டை. (வைத்தியபரி.)
மாரதம்—மகாரதம்.
மாரதர் — மகாரதர் நால்வகையிரதவீரரிலொருவர்.
மாராத்துச்சாமை-ஒருசாமை.(வழக்குண்டு போலும்.)
மாரம்—கோடகசாலை. (வைத்தியபரி.)
மாரன்—காமன். (சூ. நிக. க: உகூ.)
மாராட்டம்—ஒருதேயம். (திருவிளை. நரிபரியாக்கி. கoசு.)
மாராயிராமன்— புகழேந்திப்புலவர்காலத்திலே தொண்டைநாட்டுச் செஞ்சிநகரையாண்டசிற்றரசன். (அபிதா. கோ.)
மாராயம்—உவகை. (சூ. நிக. அ: சo.)

மாரி—1. ஓர் பறவை. 2. ஓர் வியாதி. 3. கள். 4. காடுகொள். 5. சாவு. 6. மழை. 7. மேகம். (1, 2, 3, 4, 5, 6, 7-பிங்கல. கூகூஎ.) இன்னும் யமனிடமிருக்குந்தேவதையென்றும், சமதக்கினிமுனிவர் பத்தினியாகிய ரேணுகையென்றும், இவளே பூமிக்கொரு தெய்வமாயினளென்றுங்கூறுவர். (அபிதாநசி.) இரேணுகைபார். தன்புத்திரனுலேவேறுடலிற்றலையைமாறிவைத்ததனுலே மாறியெனவும் பெயர் கூறுவர். (வழக்.)
மாரிசாதம்—வானம்பாடி.
மாரிநாள்—உத்திரநாள். (பிங்கல. உகூ.)
மாரீசம்—1 உபபுராணம் பதினெட்டினுென்று (பிங்கல. சசகூ.) 2. வஞ்சகம். (வழக்.)
மாரீசன்—1. இராவணன்மாமனுன ஓராக்கன். (இராமா. ஆரணிய. மாரீசன் வதைப்படலம்.) 2. வஞ்சகன். (வழக்.)
மாருதம்—1. காற்று. (சூ. நிக. க: சஎ.) 2 பூனைக்காலி. (வைத்தியபரி.)
மாருதவன்னக்கல்– காக்கைக்கல். (வைத்தியபரி.)
மாருதவீமன்—ஏகம்ப பாஷாணம்.(வைத்தியபரி )
மாருதர்சனம்—பாம்பு காற்றையுணவாகக்கொள்வது என்பது பொருள்.)
மாருதாபகம்— } எலுமிச்சை. (வைத்தியபரி.)
மாருதாயம்— }
மாருதி—1. அனுமன். 2. வீமன். (சூ நிக. கக: யகரவெ கஉ.)
மாருதிச்சிறியாண்டான்— உடையவரடியவர். (அபிதநசி.)
மாருதிப்பெரியாண்டான் -எழுபத்துநாலுசிம்மாசனுதிபதிகளிலொருவர். (அபிதாநசி.)
மாருதிநாதம்-வங்கமணல்.(வைத்தியபரி.)
மால்—1. அருகன். (சூ. நிக. க: ௬.) 2. இந்திரன். (பிங்கல. கசுo.) 3. கண்ணேணி. 4 கருமை. 5. காற்று. 6. சோழன். (சூ. நிக. உ: கக.) 7. திருமால். 8. புதன். 9. பெருமை. 10. மயக்கம். 11. மேகம். 12. விட்டுணுகரந்தை (வைத்தியபரி.) 13. வேட்கை. (3, 4, 5, 7, 8, 9, 10, 11, 12-பிங்கல. கூககூக.)
மால்கெந்தி—அரிதாரம். (வைத்தியபரி.)
மால்பாகலட்சுமி—அரிதாரம். (வைத்தியபரி.)
மால்பு —கண்ணேணி. (சூ. நிக. எ: கூச.)
மால்விந்து—அப்பிரகம். (வைத்தியபரி.)
மால்வணங்கீசர்—திருமாற்பேற்றிறைவர் நாமம். (அபிதா-கோ.)
மாலகம் —வேம்பு. (வைத்தியபரி.)

மாலதி—1. சிறுசண்பகம்.(பிங்கல. உ௬௰௬.) 2. நிருவாணம். 3. மல்லிகை.(பிங்கல.உ௯௭௪.) 4. விளக்குத்தண்டு. (2, 4-பிங்கல. ௬௯௰௬.) இரவு. இளம்பெண்முதலியனவுங்கூறுவர்.

மாலதிபத்திரி—சாதிபத்திரி. (வைத்தியபரி.)

மாலதிபலம்—சாதிக்காய்.(வைத்தியபரி.)

மாலம்—1. குங்குமமரம். 2. வங்காளப்பச்சை. (1, 2-வைத்தியபரி.) பேய், வயலுக்குங் கூறுவர்.

மாலயம்—1. மாளயம். 2. சந்தனம். (மலையக.)

மாலர்—பார்பனப்பெண்ணுக்குஞ் சூத்திரனுக்கும்பிறந்தோர். (சூதச. சாதிவ. .) வேடருக்கும் பெயர்கூறுவர்.

மாலநம்பு—மாராட்டிமொக்கு. (தைலவ.)

மாலவம்—மாளவம்.

மாலவன்—புதன்.

மாலனிறம்—பச்சை. )வைத்தியபரி.)

மாலர்கண்டம்—நாயுருவி. (வைத்தியபரி.)

மாலாதீபகம் — ஓரலங்காரம், ஒருசொல் மாலைபோலத் தொடர்வதாகியெல்லா வாக்கியங்களொடுஞ்சென்று பொருள் விளக்குவது. (தண்டி. பொருள. ௬௧.)

மாலாபலம்—உருத்திராக்கம்.

மாலி—1. ஓரரக்கன். (அபிதாநசி.) 2. சூரியன். (பிங்கல. உ௪0.) 3. கள். (சூ.நிக.௯:உ௧.) 4. மாலையணிந்தவன். (வழக்.)

மாலிகை—மாலை. (திருவிளை. திருமணப் ௧௬.)

மாலிங்கம்-லிங்கபாஷாணம்(வைத்தியபரி)

மாலியம்—நிர்மாலியமென்பது மாலியமெனவும் வரும். புட்பம்.

மாலியவான்—ஓரரக்கன். (அபிதாநசி.)

மாலின்றரம்—அரிதாரம். (வைத்தியபரி.)

மாலினி — 1. ஒரு நதி. (அபிதா-கோ.) 2. காளி. (சூ. நிக. ௯: ௬௮.) 3. கைலையில் உமையின்றோழியரிலொருத்தி. (அபிதாநசி.) பூமாலைக்காரிக்கும் பெயர் கூறுவர்.

மாலுகம்—வேம்பு. (வைத்தியபரி.)

மாலுக்கிளையாள்—துர்க்கை.(திவாகரம்.)

மாலுங்கம்—புளிமாதுளை.(வைத்தியபரி.)

மாலுதல்-மயங்குதல். உரிச்சொலடியாகப் பிறந்தொழிற்பெயரென்பர்.

மாலுதானன்—கண்குத்திப்பாம்பு. (சூ. நிக. ௯: ௭௮.) மாலுதாசனன் என்றுங்கூறுவர். பிங்கலத்திலதிக

மாலுந்திவந்தோன்—பிரமன். (சூ. நிக. ௯: ௬௫.)

மாலுமி—மீகாமன். (சூ. நிக. உ: ௬௫.)

மாலுறல்—மாலுதல்.

மாலூர்தி—கருடன்.

மாலூரம்—வில்வமரம். (வைத்தியபரி.)

மாலை—1. அந்தி. 2. இயல்பு. 3. இரா. 4. ஒழுக்கம். 5. பூமுதலியதொடுத்தமாலை. 6. வரிசை. (1, 2, 3, 4, 5, 6-பிங்கல. ௬௯௫0)

மாலைக்கண்- மாலைக்காலத்திருட்பிடிக்குங் கண். (வழக்.)

மாலைநுழைந்சான் —ஓர் பூடு. (வைத்தியபரி.)

மாலைமாற்று — இறுதியிலேதொடங்கிப் படிக்கும்போதும், முதற்கணின்று படிக்கும் போதும் ஒரு கவியாகவேற்றுமையின்றி வருவது. (தண்டி. சொல்லணி. ௧௫.)

மாலையணி-ஓரலங்காரம்.(முன்வந்தசொல் லைபின்னு மறுவதித்துமொழிதல். (உ-ம்.) "மன்னிவன்கண்காதளவுங்காதுதோண்மட்டிசையுந்-துன்னுபுயஞ்சானுத்தொடும்"(சந்திரா.)

மாலையுவமை-ஓரலங்காரம். ஒருபொருட்குவரும்பலவுமைகள். ஒன்றற்கொன்றுசம்பந்தமுடையதாய்பபுட்பமாலைபோல வருவது. (தண்டி. பொருள. ௬0)

மாலைவன்னி-சல்லிக்கொடி.(வைத்தியப.)

மாலோன்—1. திருமால். 2. புதன்.

மாவகம்—1. இலுப்பை. 2. காஞ்சிரை. (1, 2-வைத்தியபரி)

மாவட்டை—செவ்வட்டை

மாவண்கிள்ளி-ஒருசோழன். (அபிதாநசி.)

மாவலர்—1. குதிரைப்பாகர். (சூ. நிக. உ: ௬௯.) 2. யானைப்பாகருமாம்.

மாவலி—ஒருசக்கரவர்த்தி. மாபலிபார்.

மாவளத்தான்—சோழனலங்கிள்ளியுடன் பிறந்தவன். (அபிதாநசி.)

மாவிப்பட்டை — மாவிலிங்கப் பட்டை. (வைத்தியமூ.)

மாவிட்டம்—கடனுரை. (வைத்தியபரி.)

மாவிரதம்— உட்சமயமாறினொன்று. (சூ. நிக. ௧௨: ௰௮.)

மாவிரதியர்— உட்சமயிகள் அறுவரிலொருவர்.

மாவிருக்கம்—1. சதாக்கள்ளி. (வைத்தியபரி.) 2. மாமரம். (வழக்.)

மாவிலங்கு—<br>மாவிலங்கை— } ஓர் மரம். (வழக்.)

மாவிலந்தம் — விடத்தேரென்னுமொரு மரம். (வைத்தியபரி.)

மாவிலிங்கு—ஓர் மரம். (வழக்.)

மாவிளம்—வில்வம். (மலையக.)

மார்வுத்தன்-1. குதிரைப்பாகன். 2. யானைப் பாகன். (1, 2-வழக்.)

மாவெனல்-அழைத்தல். (பிங்கல. ககககக.)

மாழ்கு—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. மயக்கம். 3. மிருகசீரிடம். (சூ. நிக. க: ககக.)

மாழ்குதல்— } மயங்குதல். (சூ. நிக. அ:
மாழாத்தல்— } ககக) மாழ்கலெனவும்வரும்

மாழாந்து—மயங்கி. (பொருநரா.)

மாழை—1. அழகு. 2. அறிவின்மை. 3. இளமை. (சிந்தா.) 4. உலோகக்கட்டி. 5 ஓலை. 6. திரட்சி. 7. புளிமா. 8. பொன். 9. மாமரம். (1, 2, 4, 5, 6, 7, 8-பிங்கல. ஙககசஉ.)

மாழையங்கண்ணி—திருவலிவலத்திறைவியின்பெயர். (அபிதா. கோ.)

மாள—முன்னிலையசைச்சொல். (நன்னூ. இடையி. உக.)

மாளயபக்ஷம்—புரட்டாசி மாதத்து அபரபக்கத்துப்பிரதமைமுதற்பூர்வ பக்கத்துச் சதுர்த்திமட்டுமுள்ள காலம்; இதிற்பிதிர்சிராத்தஞ்செய்வர்.

மாளல்—சாதல். (சூ. நிக. கூ: உ0.)

மாளவகௌளம்—ஓரிசையென்பர்.

மாளவம்— தேயம் ஐம்பத்தாறினொன்று. (பொருட். நிக.) மாளுவம் எனவுங்கூறுவர். உச்சையினியின் முக்கிய நகரென்பர்.

மாளவி—ஓரிராகம். (பொருட். நிக.)

மாளிகை-1. அரசரில். (சூ. நிக. ரு: ரு0.) 2. வீடு. (திருவிளை. நகரப். ஙக.)

மாளிகைத்தேவர்—திருவிசைப்பாப்பாடியவர்களிலொருவராகிய திருமாளிகைத்தேவர் (இவர்சரிதம். துறைசைப்புராணத்திலறிக.)

மாளுதல்—மாளல்.

மாற்பித்தியார்—ஒரு புலவர். (புறநா.)

மாற்றம்—1. சொல். (சூ. நிக. க0: உ.) 2. மாற்றுதல். (அம். தொழிற்பெயர்விகுதி.)

மாற்றல்—1. ஒன்றுகொடுத்தொன்றுவாங்கல். 2. கொடாமை. (பிங்கல. உகஙக.) 3. நீக்கல். (1, 3-வழக்.)

மாற்றலர்—பகைவர். (சூ. நிக. உ: ருக.)

மாற்றவள்— } 1. சக்களத்தி. 2. வேற்று
மாற்றாள்— } மாது. (இராமா. ஆரணிய

கா. சூர்ப்பந. கஉக.)

மாற்றறிவாதர்—திருப்பைஞ்ஞீலியிறைவர் நாமம். (அபிதா. கோ.)

மாற்றார்—மாற்றலர்.

மாற்றி—ஒட்டி. (ஐங்குறு.)

மாற்று—1. உவமை. (ஞானமி.) 2. எதிர். 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. பொன்வெள்ளியின் றரமறியவுரைப்பது. (வழக்.)

மாற்றுதல்—நீக்குதல். (ஐங்குறு.)

மாறல்—1. கொடுத்து வாங்குதல். 2. தவிர்தல். 3. மறுபுறமாக்கல். (1, 2, 3-வழக்.) 4. விற்றல். (சூ. நிக. கூ: கச.)

மாறன்—1. சடகோபவாழ்வார். (வழக்.) 2. பாண்டியன். (திருவிளை. பாயிர. எஉ.)

மாறன்பொறையன்—ஐந்திணையைம்பது பாடியவர். (அபிதா. கோ.)

மாறனலங்காரம் — ஒரணியிலக்கணம். (அபிதாநசி.)

மாறனார் —மதுரை யாசிரியன் மாறனார். இவர் கடைச்சங்க காலத்துள்ளவொரு புலவரென்பர். (அபிதா. சி.)

மாறடி—மாறுபாடுள்ளவன். (வழக்.)

மாறுதல்—1. எதிராடுதல். (வழக்.) 2. மயங்கல். (பெரியபு. திருக்குறிப்புத். சக.)

மாறாட்டம்—மாறுபாடு. (திருவிளை. மாமனாகவந்த. உஎ.)

மாறு—1, இறந்துபாடு. 2. எதுப்பொருள் படுவதோரிடைச் சொல். 3. ஒப்பு. (உ-ம்.) மாறுமாலன்றனந்தமண். (யாப். காரி. ஒழிபியல். க: உரை.) 4. துடைப்பம். (சூ. நிக. எ: நிஎ.) 5. தெரிநிலை வினைப்பகுதி. 6. பகை: (திருவிளை. பாயிர. கஉ.) 7. பிரதி. 8. வளார். (5, 6-வழக்.) 9. விதம். (1, 2, 9-புறநா.)

மாறுகோள்—1. ஒவ்வாமை. 2. விரோதம். (1, 2-வழக்.)

மாறுதல்-1. கழித்தல் (பரிபாடல்.) 2. மாறல்

மாறுபடல்—1. மாறிப்போதல். 2. விரோதித்தல். (1, 2-வழக்.)

மாறுபடுபுகழ்நிலை— ஓரலங்காரம். அது கருதியபொருளை மறைத்து அதனைப்பழித்தற்குமற்றொன்றைப்புகழ்வது. (தண்டி. பொருளணி. உஅ: உரை.)

மாறுபடுபொருண்மொழி — அலங்காரத்தில் வழுக்களிலொன்று. (தண்டி. செசல்லணி. க00.)

மாறுபாடு—1. மாறுபடுதல். 2. விரோதித்தல். (1, 2-வழக்.)

மாறேவி—தாளகம். (வைத்தியபரி.)

மாறேடை—துளசி. (வைத்தியபரி.)

மாறேக்கம்—கொற்கையைச் சூழ்ந்தநாடு. (புறநா.)

மாறேக்கத்துநப்பசலையார்—ஒருபுலவர். (புறநா.)

மான் — 1. குதிரை. 2. புத்திதத்துவம். (பரிபாடல்.) 3. மகரராசி. 4. மலை. 5. 'மகன்.' 6. விலங்கின்பொது. (1, 3, 4, 5, பிங்கல. ஙககக.) 7. தெரிநிலை வினைப்பகுதியுமாம்.

**மான்தளம்பு** — அடம்பு. (வைத்தியபரி.)

**மான்செவி**-இலைக்கள்ளி. மான்செவிபோ லிதனிலையிருக்குமென்பர். (வைத்தியபரி.)

**மான்மகன்**—1. பிரமன். (சூ. நிக. க: கசு.) 2. மன்மதன். (சூ. நிக. க: உசு.)

**மான்மதம்**—கத்தூரி. (சூ. நிக. ஈ: உசு.)

**மான்மியம்**-மகிமை. (உ-ம்.) சிதம்பரமான் மியம்.

**மான்முருந்து**—1. துருசு. 2. துளசி. (1, 2-வைத்தியபரி.)

**மான்மைத்துனன்**— துருசு. (வைத்திய பரி.) சிவனுக்கும் பெயர் கூறுவர்.

**மான்மைந்தன்** — மன்மதன். (சூ நிக. க: உசு.)

**மான்றலை**-மிருகசீரிடம். (சூ. நிக. க: சுகூ.)

**மான்றல்**—மயங்கல் (சூ. நிக. அ: சுசு.)

**மான்று**—மயங்கி. (மணிமே )

**மான**—உவமையுருபு. (நன்னூ. பொதுவி. கசு )

**மானக்கஞ்சாறனார்** — அறுபத்துமூன்று நாயன்மார்களிலொருவர். (பெரியபு.)

**மானசசரசு**—கைலாசத்திற்கு பேரவனத் திலுள்ள வொருவாவி. மானசாவி யென்றும் பெயர். (அபிதா. கோ.)

**மானசதீர்த்தம்**-பிரமலோகத்துள்ளவொரு வாவியென்பர். (அபிதாநசி.)

**மானசம்**—1. மானதம், அது மனத்தாற் செய்வது. (திருவிளை. எழுகடல். சு.) 2. மான சவாவி மானசமடு எனவுங்கூறுவர். (இராமா. பாலகா. வெள்விப்ப. ௫.)

**மானசசெபம்**-மனத்தாற்செய்யுஞ்செபம். மானதம், மந்தம், உரையெனமூவகையினுளொன் றென்க.

**மானதக்காட்சி**— மானதப்பிரத்தியட்சம். (சி-சி. அளவை-க.)

**மானதம்**—மானசம்.

**மானதநானம்**-எழுவகை நானத்தொன்று. (சைவசமயநெறியிற்காண்க.)

**மானதபூசை**—மனத்தாற்செய்யும் பூசை. (வழக்.)

**மானதவாவி**-மானசதீர்த்தம். இது பிரமா வினுலகத்துள்ளதென்றும், இமயமலையிலுள்ள தென்றுங்கூறுவர். (அபிதாநசி.)

**மானதீபம்**—உபநிடதமுப்பத்திரண்டினுளொ ன்று. இதற்கு வேறுநாமமுளதுபோலும்.

**மானபேதம்** — சிற்பநூன் முப்பத்திரண் டினுளொன்று. (பொருட்-நிக.)

**மானமா**—கவரிமா. (சூ. நிக. ஈ: உக.)

**மானம்**—1. அளவு. 2. ஒப்பு. (சிந்தா.) 3. குற்றம். 4. பெருமை. 5. வலி. 6. விமானம். 7. வெட்கம். (1, 3, 4, 6, 7-சூ. நிக. கக: னகரவெ. 2.) (5-சூ. நிக. அ: உகூ.) புறப்பொ ருள் வெண்பாமாலையுரையில் அபிமானத்துக் குங் கூறினர்.

**மானரியம்**—பூராயம்.

**மானல்**—1. ஒத்தல். 2. மயக்கம். (சூ. நிக. கக: னகரவெ. உ.)

**மானவம்**-உபபுராணத்தொன்று. (பிங்கல. சசரு )

**மானவர்**—1. மனிதர். (சூ. நிக. உ: அச.) 2. மானமுள்ளவர். (வழக் )

**மானவு**—தெளிவு. (பிங்கல. கஎஅஎ.)

**மானன்**— மானமுடையவன். மானம்-பல பொருளொருசொல்.

**மானுகம்** —பெருநாரை.

**மானார்**—1. பகைவர். 2. பெண்கள்.

**மானி**—1. மங்கையர்க்கரசியார். (திருவால. திருவிளை.) 2. மானமுடையவன். 3. (வழக்.)

**மானிகை**—சாராயம். (வைத்தியபரி.)

**மானிடம்**-மனிதப்பிறவி. (சிந்தா. முத்தியி. கரு௩.)

**மானிடமேந்தி**-சிவபிரான். (சூ நிக. க: கூ.)

**மானிடயாகம்** — விருந்தோம்பல். (வள். விருந்தோ. அ உரை.)

**மானிதம்**—1. கனம். 2. மானம்.

**மானிநை** —மகத்துவம்.

**மானித்தல்**—சங்கித்தல். (வழக் )

**மானியம்**—மானியம் (வழக்.)

**மானியம்**—அரசர்கள் சம்மானமாகவிட்ட நிலம். (வழக்.)

**மானினி**—பெண். (சூ நிக. உ: ருசு.)

**மானுதல்** — ஒத்தல். பிங்கலத்தில் மான் என்பது உவமைக்குக் கூறியதனுல் இடைச் சொலடியாகப்பிறந்த தொழிற்பெயராம்.

**மானேறு**—1. உத்திரம். (பிங்கல. உருo ) 2. கலைமான். (பிங்கல. உசகூக.)

## மீ.

**மீக்கது**—மிஞ்சியது.

**மீக்குவன்**—மிக்கான். (வழக்.)

**மீக்கவை**-1. தீயவைகள். (வள். பொறை யுடைமை. அ: உரை.) 2. மிகுதியானவை. (வழக்.)

**மீக்கான்**—மேலானவன். (வழக்.)

**மீக்கு**—மிகுதி. (வழக்.)

**மீக்கோர்**—அறிவுடையோர், உயர்ந்தோர். (வழக்.)

மிகல்—மிகுதல். (வழக்.)
மிகிரம்—1. காற்று. 2. மேகம்.
மிகிரன்—1. சந்திரன். 2. சூரியன்.
மிகீஇ—மிக்கு. (பதிற்றுப்பத்து.)
மிகுண்டம்—சாரணை. (மலையக.)
மிகுத்தியல்—வில்வம். (வைத்தியபரி.)
மிகுக்குதல்—மிகுத்தல். (வழக்.)
மிகுதம் — மிகுதி. (வழக்.)
மிகுதல்—அதிகப்படல். (வழக்.)
மிகுதி—1. அதிகம். (சூ. நிக. அ: எ.) 2. மனச்செருக்கு. (வள். பொறையுடைமை. அ. உரை)
மிகுந்தவனம்-தண்ணீர்விட்டான்(மலையக)
மிகுப்பலத்தம்—காத்தொட்டி. (மலையக.)
மிகை—1. அதிகம். (நன்னூ. பாயி. கஉ. உரை.) 2. குற்றம். 3. துன்பம். 4. பகை. (திருவிளை. திருமணப். கஉ.)
மிகைபடக்கூறல் — அதிகப்படச்சொல்லல் அது நூற்குற்றம் பத்திலொன்று.(நன்னூ. பாயிர. கஉ. உரை.)
மிகையதன்செய்கையுருவகம் – ஓரலங்காரம். (சந்திராலோ)
மிகையொற்றுமையுருவகம் — ஓரலங்காரம் (சந்திராலோ.)
மிச்சை—1. அஞ்ஞானம். 2. தரித்திரம். 3. பொய். (1, 2, 3-பிங்கல. ௬௧௬௫) 4. விலாமிச்சை. (தைலவ.)
மிச்சம்—1 சேடம். 2 பொய். (திருநூற்றந்.) 3. மிகுதி. (வழக்.)
மிச்சிரகாவனம்—இந்திரன்பூந்தோட்டம்
மிச்சிரம்-கலப்பு. (சிந்தாந்தப்பிரகாசிகை)
மிச்சில்—1. எச்சில். 2. கரி. (தைலவ.) 3. மிகுபொருள் (1-பிங்கல. ௨௦௬௪) (3-சூ. நிக ௬: ௨௬.)
மிசி—1. சதகுப்பை 2 தாளிசபத்திரி. (1. 2-வைத்தியபரி)
மிசிகம்—பாம்புவளை.
மிசிரகேசி—வசுதேவன்றம்பியாகிய வற்சகன்பாரி. (அபிதானகோ.)
மிசிரம்—கலப்பு. (வழக்.)
மிசிரன் — கல்வியாலுயர்ந்த பெரியோர்க்குரிய வரிசைப்பெயர். (அபிதானகோ.)
மிசுக்கன்-1. ஈனன். 2.தரித்திரன் வழக்.)
மிசுக்கை—அற்பத்தனம். (வழக்.)
மிசை—1. உணவு. 2. சோறு. (வைத்தியபரி.) 3. மீமிசைச்சொல். 4. மேடு (புறநா.) (1, 3-சூ. நிக கக: சகரவெ. கரு.)
மிசைஞர்—தின்பார். (ஞானாமிர்தம்.)
மிசைதல்—உண்ணுதல். (ஞானாமிர்தம்.

மிசைமீன்—இன்பீராக. (பத்துப்பாட்.)
மிசைவடம் —வீரதண்டை.
மிச்சகம்—எலுமிச்சை. (வைத்தியபரி.)
மிஞ்சல்—1. கடத்தல். 2. மிகுதியாதல். (வழக்.)
மிஞ்சி —மிக்கு. (சிந்தா.)
மிஞ்சு—வண்டு. (வைத்தியபரி.)
மிஞ்சுதல்—மிகுதியாதல். (வழக்.)
மிஞிறு—வண்டு. (திலைமாறிவந்தசெதன்க.)
மிடல்—வலி. (சூ. நிக. அ: உஅ.)
மிடறு—1. கழுத்து. (பிங்கல. கoஉஅ.) 2. தொண்டை. (சூ. நிக உ: கு.)
மிடா—1. குழிசி. (பிங்கல· களசo.) 2. பானை. (பிங்கல. களசக.)
மிடாச்சு—குக்கில். (வைத்தியபரி.)
மிடி—1. மிடியென்னேவல். 2. வறுமை. (சூ. நிக. அ: சுகூ.)
மிடித்தல்-வறுமையுறல்.(பிங்கல.உசுகுடு.)
மிடித்தார்—வறுமையுற்றார். (சிந்தா.)
மிடிமை—வறுமை. மை. விகுதி. மிடிவு எனவும்வரும்.
மிடுக்கு—வலி. (உ-ம்.) "மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே" (புகலூர்த்தேவாரம்.)
மிடுக்கன்—வலிமையோன். (வழக்.)
மிடுமிடுத்தல்— / மிடுமிடுப்பு— } விரைவு. (வழக்.)
மிடுமிடெனல்-விரைவுக்குறிப்பு. (வழக்.)
மிடை—1. தாறு. (பிங்கல. உஅ௫௫.) 2. தெரிநிலைவினைப்பகுதி.
மிடைதல்-1. நுழைதல். (சூ. நிக. அ: கஎ.) 2. வருந்துதல். (திருநூற்றந்.)
மிடைந்த —நெருங்கிய. (ஐங்குறுநூறு.)
மிணுமிணுத்தல்— / மிணுமிணுப்பு— / மிணுமிணெனல்- } ஓரொலிக்குறிப்பு. (வழக்.)
மிண்டல்—1. மதத்தாலடர்த்தல். (வழக்.) 2. மிண்டுதல், நெருங்கல்.
மிண்டன்—திண்ணியன். (சூ. நிக. உ: ௫o.)
மிண்டி —கிளப்புமோர்கருவி. (வழக்.)
மிண்டு —தெரிநிலைவினைப்பகுதி.
மிண்டுதல்—1. நெருங்கல். 2. மதத்தாலடர்த்தல் (1, 2-வழக்.)
மித்தம்—1. ஆலசியம். 2. நித்திரை.
மித்தியம்—பொய்.
மித்தியை—1. கபடம். 2. பொய்.
மித்திரதேவர்-பக்ஷதேவனுக்குத்தக்ஷயாகத்தில் வீரபத்திரர்போக்கிய கண்ணைக்கொடுத்தவர். (அபிதா. சி.)

மித்திரநாள்—அனுடம். (சூ. நிக. ௯: ௭௬.)
மித்திரபேதம்— மித்துருபேதம். (பஞ்ச தந்திரத்தொன்று.)
மித்திரம்—நட்பு. (உ-ம்.) மித்திரபேதம்.
மித்திரமுனி—ஒருமுனிவர். (அபிதானசிந்.) பாரதம்பழம்பொருந்து சருக்கத்திற்காண்க.
மித்திரர்—சிநேகிதர். (பிங்கல. ௯௪௪௯.)
மித்திரன்—1. அரிட்டன் தந்தை நாலாம் ரேவதிநாயகன். (அபிதானகோ.) 2. சூரியன். (சூ. நிக. ௧: ௰௫.) 3. சிநேகன். (வழக்.)
மித்திராவருணர் — மித்திரன் வருணன் என்னுமிருவர் இவர்கள் அக்கதிய வசிட்டர் களுக்குப்பிறப்பிடமானவர். (அபிதானசிந்.)
மித்திரை—சினேகமாயிருப்பவள். தோழி யெனினுமாம்.
மித்துரு—சினேகன். (வழக்.)
மித்துருத்தானம்—சென்மத்துக்குநான்கா மிடம். (சோதிட.)
மித்துருப்பதமை —சுபமணல்.
மித்துருபேதம்-சினேகமாயிருந்து பேதித் தல் இதுபஞ்சதந்திரத்திலொன்று.
மித்தை—பொய். (சூ. நிக. ௰: ௬.) ஆகுது கவியில் மிச்சையென்பார்.
மிதக்கல்—, மிதக்குதல் } மேலேகிளம்புதல். (வழக்.)
மிதசுரம்—மத்திமசுரம்.
மிதத்தல்—மிதக்குதல்
மிதத்துதல்— மேற்கிளம்பி வைத்தல். (வழக.)
மிதப்பு—1. உயர்ச்சி. 2. தூண்டிலின்மீன் பிடித் தற்கறிகருவியாக நீர்மேலே மிதக்கும் பொருள். (1, 2-வழக்.) 3. மிதத்தல். 4. மேடு.
மிதம்—1. அளவு, பரி என்னுமுபசருக்கஞ் சேர்த்துப்பரிமிதமெனவுங்கூறுவர். 2. தாழ்வு. (வழக்.)
மிதவை—1. கூழ். (புறநா.) 2. சோறு. (சூ. நிக. ௬: ௨௨.) 3. தெப்பம். (சூ.நிக.௭:௰௨.)
மிதி—1 ஞானம். (தர்க்காமிருதம்.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நெய்வார்கருவியி லொன்று.
மிதித்தல்—, மிதித்திடல்— } குதித்தல். (சூ. நிக. ௬: ௬௫.)
மிதிபாகல்—ஒரு பாகல். (வழக்.)
மிதிப்பு-மிதித்தல்.பு-தொழிற்பெயர்விகுதி
மிதியடி—பாதுகை. (சூ. நிக. ௭: ௬௨.)
மிதியடியின்மேலிட்ட கோட்டை—குடை (சூ. நிக. ௭: ௬௨.)
மிதியல் — மிதிப்பு. அல்-தொழிற்பெயர் விகுதி.

மிதிலன்—நிமிபுத்திரன். (அபிதானசிந்தா)
மிதிலை— சனகனகர். (இராமா. பாலகா. மிதிலைக்காட்சிப்.)
மிதுக்கங்காய் — ஒரு கொடியின் காய். (வழக்.)
மிதுக்கை—ஓர் கொடி. (வழக்.)
மிதுனி—கரிக்குருவி. (வைத்தியபரி.)
மிதுரி—செம்முள்ளி. (வைத்தியபரி.)
மிதுனம்—1. ஆண்பெண்கூடியஇரட்டை யின்னகம் துனம் என்றும் வழக்குண்மையறிக. 2. மிதுனராசி. (சூ. நிக. ௧: ௬௪.)
மியா—முன்னிலையசைச்சொல். (நன்னூ. இடையி. ௨௪.)
மியூல—, மியூலசீவி— } ஓர் பூடு என்பர்.
மிரட்டல்—, மிரட்டுதல்— } வெருட்டல். (வழக்.)
மிரட்டினி—சொக்குபொடி. (வைத்தியபரி.)
மிரதம்—பாம்பு. (வைத்தியபரி.)
மிருளுதல்—வெருளுதல். (வழக்.)
மிரிகை—மூறுக்காணி.
மிரிச்சகடி—ஒருநாடகம். இது சூத்திரக னாலே செய்யப்பட்டது. அது பத்துப்பாகமு டையது. (அமிதாநகோ.)
மிரிசபத்திரி—வறட்கண்டி. (வைத்தியபரி.)
மிரிஞ்சி—செம்முருங்கை. (மலையக.)
மிரியல்—மிளகு. (சூ. நிக. ௪: ௬௮.)
மிரியால்—செவ்வியம். (வைத்தியபரி.)
மிருகவிழலம்—திப்பிலிமூலம். (வைத்திய பரி.)
மிருகசீரிடம்—ஓர் நட்சத்திரம். (சூ. நிக. ௧: ௬௬.)
மிருகண்டன்—பிருகுபுத்திரனாகிய தாதை க்கு ஆயதி என்பவள் பெற்றபுத்திரன். மார்க் கண்டேயன் தந்தை. (அபிதாநகோ.)
மிருகண்டு — மார்க்கண்டர் தந்தை. (அபி தா-சிந்.)
மிருககண்டூயர்—மிருகண்டைப்பெற்றவர். (அபிதானசிந்.)
மிருககாமிநி—வாய்விளங்கம். (வைத்திய பரி.)
மிருகதஞ்சகன்—நாய்.
மிருகதரன்—1. சந்திரன். 2. சிவன்.மானைத் தங்கலால்வந்த பெயர்.
மிருகதூர்த்தன்—நரி. (வைத்தியபரி.)
மிருகநாதன்—சிங்கம். (வைத்தியபரி.)
மிருகநாபி — 1. கஸ்தூரி. 2. கஸ்தூரிப் பூனை. (1, 2-வைத்தியபரி.)
மிருகநாபிசம்—கஸ்தூரி. (வைத்தியபரி.)

மிருகபதி—சிங்கம், மிருகாசன். (வழக்.)
மிருகம்—மான். (சூ நிக. ௯: உஉ.) 2. விலங்கின்பொது. (பிங்கல. உ௬௪உ.)
மிருகமதம்—மான்மதம், கத்தூரி. (பிங்கல. க௩௪0)
மிருகமதவாசை—கஸ்தூரிமல்லிகை. (வைத்தியபரி.)
மிருகராசன்—சிங்கம. (சூ. நிக. ௯: உ.)
மிருகவாகனன் — வாயு. மிருகம் - மான். மான்வாகனனென்பதாம்.
மிருகாங்கம்—1. காற்று. 2. சந்திரன்.
மிருகாங்கன்—1. சந்திரன். 2 சிவன்.
மிருகாசனம்—சிங்கம் புலி முதலியவைகள். அவை மிருகங்களையுணவாகவுள்ளன. என்பதாம்.
மிருகாண்டசம்—கஸ்தூரி.(வைத்தியபரி.)
மிருகாண்டி—மிருகத்தன முள்ளவன். (வழக்.)
மிருகாயினம்—மான்ரேூல். (வைத்தியபரி.)
மிருகாரி—சிங்கம். நரி, நாய், புலிகளுக்குப் பெயர். மிருகசத்துரு என்பதாம்.
மிருசகம்—எலுமிச்சம்பழம்.(வைத்தியபரி.)
மிருசு—வண்டு. (வைத்தியபரி.)
மிருஞ்சி—செம்முருங்கை. (வைத்தியபரி.)
மிருடன்—உருத்திரன். சுகத்தைக்கொடுப்பவனென்பது பொருள். (அபிதானகோ.)
மிருடாநி—பார்வதி.
மிருடாகம்—மாமரம்.
மிருடார்த்தகம்—அபாவ அளவை. அது, ஆமைமயிரென்க.
மிருட்டி — 1. சமைத்தல். 2. அசுத்தி. 3. தெளித்தல். 4. நெருக்கம்.
மிருடி— } மான்.
மிருடிகம்— }
மிருடை—துர்க்கை.
மிருணலி—தாமரை. (வைத்தியபரி.)
மிருத்தாலகம்—உவர்மண். (வைத்தியபரி.)
மிருத்திகம்—முந்திரி. (வைத்தியபரி.)
மிருத்திகை— } மண். (வைத்தியபரி.)
மிருத்தியம்— }
மிருத்தியல்—தூதுவளை. (வைத்தியபரி.)
மிருத்தியு—இயமன். (அபிதானகோ.)
மிருத்தியுஞ்சயன்—சிவன்.
மிருத்தியுநாசகன் — 1. சிவன். 2. பாதரசம். (வைத்தியபரி.)
மிருத்தியுபலம்—இலந்தை (வைத்தியபரி.)
மிருத்தியுபலை— } வாழை. மூங்கில். (வைத்தியபரி.)
மிருத்தியுபுஷ்பத்தயம்— }
மிருத்தியுப்பிரசூனம்— } கரும்பு. (வைத்தியபரி.)
மிருத்தியுபுட்பம்— }
மிருத்து—1. மண். (உ-ம்.) "எழுநதியடைத் தீங்கிருநிலமிருத்திட்டு" (மதுரையங்.) 2. மரணம்.
மிருத்துகரன்—குயவன்.
மிருத்துகாரகன் — மரணத்தைச்செய்யுங் கிரகம். (ச்சாதிட.)
மிருத்துகாவதி — மாளவதேசத்திலுள்ள ஒரு பட்டணம். (அபிதானகோ.
மிருத்துசூதி—நண்டு. (வைத்தியபரி.)
மிருத்துஞ்சயம்—ஓர் மந்திரம். அது, மரணத்தை விலக்குவது. (திருவிளை. கரிக்குருவி)
மிருத்துவீசம்—மூங்கில். (வைத்தியபரி.)
மிருதகம்— பிரேதம்
மிருதங்கபலம்—பலா. (வைத்தியபரி.)
மிருதங்கம்—1. கலைஞானமறுபத்துநான்கினொன்று. (பொருட்-நிக.) 2. முழவு. (வழக்.) 3. மூங்கில். (வைத்தியபரி.)
மிருதசஞ்சீவி— } மூர்ச்சைதீர்த்துக் குற்றுயிர்தருமருந்து (சூ. நிக. ௬: ௯௫.)
மிருதசஞ்சீவனி— }
மிருதபாஷாணம்—பாஷாணமறுபத்துநான்கினொன்று. (வைத்தியபரி.)
மிருதம்-1. நீர்வள்ளி. (வைத்தியபரி.) 2. மரணம். 3. பாஷாணம் முப்பத்திரண்டினொன்று.
மிருதாமதம்—திருசு. (வைத்தியபரி.)
மிருதாரசிங்கி — 1. ஈயம். 2. ஓர் பூடு. 3. சிங்கிபாஷாணம். (1, 3-வைத்தியபரி.)
மிருதி—1. தருமநூல். (பொருட். நிக.) 2. நினைப்பு. (உ-ம்.) "மிருதிமதாலங்காரம்."
மிருதிமதாலங்காரம்—நினைப்பணி. சந்திராலோகத்திலறிக.
மிருது—1. சாந்தம். (வழக்.) 2. மந்தம். 3. மென்மை. (சூ. நிக. அ: கசு.) 4. நெல்லிக்காய். (வைத்தியபரி.)
மிருதுபர்வகம்—பிரம்பு. (வைத்தியபரி.)
மிருதுபலம்—பேரீந்து. (வைத்தியபரி.)
மிருதுபுட்பம்—வாகை. (வைத்தியபரி.)
மிருதுமம்—விலாமிச்சு. (வைத்தியபரி.)
மிருதுரோசனி—இலைக்கள்ளி.
மிருதுலோமகம்—முயல்.
மிருதூற்பலம்—நீலோற்பலம். (மலையக.)
மிருதை—பூமி.
மிருநாளம்—1. தாமரைக்கொடி 2. விலாமிச்சு. (1, 2-வைத்தியபரி.)
மிருமணி—கவரொட்டி.
மிலாங்கலி—1. காந்தை. 2. செங்காந்தாள. (1, 2-வைத்தியபரி.)

மிலாந்துதல்—அலமந்துபார்த்தல். (வழக்.)
மிலாந்தி—அலமந்துபார்ப்போன். (வழக்.)
மிலாறு—வளார். (வழக்.)
மிலிந்தம்—வண்டு. (வைத்தியபரி.)
மிலேச்சம்—சாதிலிங்கம். (வைத்தியபரி.)
மிலேச்சி—சூடி. (ஐங்குறுநூறு.)
மிலேந்த—சூடிய. (பத்துப்பா.)
மிலேச்சகந்தகம் — வெள்வெங்காயம். (வைத்தியபரி.)
மிலேச்சதேசம் — சோனகர்முதலியோர் தேசமென்பர். (வழக்.)
மிலேச்சத்தனம் — அறிவிலாத்தன்மை. (வழக்.)
மிலேச்சம்—செம்பு. (தைலவ.)
மிலேச்சமுகம்—செம்பு. (வைத்தியபரி.)
மிலேச்சர்—அநாரியர். (சூ. நிக. உ: ஙக)
மிலேச்சன்—1. அறிவீனன். (வழக்.) 2. பார்ப்பனிகரவினுல் அரசனைக்கூடிப் பெற்ற குமரன். (சூதசங்.சாதிவரலா.கஎ.) 3. மிலேச்ச தேசத்தோன்.
மிலேச்சாசம்—கோதுமை. (வைத்தியபரி.)
மிலேச்சாசியம்—செம்பு.
மிலேச்சிதம்—இலக்கணவழுவானபேச்சு
மிலேச்சல்— / மிலேச்சுதல்— / மிலேதல்— } சூடுதல். (சூ. நிக. கூ: ரு.)
மிழலை—1. நிரம்பாமென்சோல். (சூ. நிக. கo: அ.) 2. மிழலையென்னுமோர்நாடு (பெரியபு. பெருமிழக்குறும்பநா.)
மிழலைக்கூற்றம்—தமிழ்நாட்டின்ஓர்பழைய ஊர். (அபிதானசிந்.)
மிழற்றல்— / மிழற்றுதல்— } சொல்லல். (சூ.நிக.கo.ரு.) நிரம்பாமென்சொற்கூறுத லென்றுங்கூறுவர்.
மிளகாணை—ஓர் செடி. (மலையக.)
மிளகாய்ச்செடி—ஓர்செடி. (வழக்.) இது அந்நியதேசத்துச்செடியென்றும், இந்தியாவுக்குவந்து பயோகமாயினது என்றுங்கூறுவர்.
மிளகாழ்வான் — உடையவரால் நியமிக்கப்பட்ட எச சிம்மாசனுதிபதிகளில் ஒருவர். (அபிதானசிந்.)
மிளகு—ஓர் சரக்கு. உறைப்புச்சுவையுடையது. (வைத்தியபரி.)
மிளகுசம்பா—ஓர் நெல். (வழக்.)
மிளகுதக்காளி — மணத்தக்காளி. (வைத்தியபரி.)
மிளகுதிரி—ஓர் குருநோய்.
மிளப்பு—இலவங்கம். (வைத்தியபரி.)

மிளிர்—1. பெருமை. (ஆசிரிய. நிகண். அ: அ.) 2. மூதணிலைக்கெதாழிற்பெயர்.
மிளிர்தல்—ஒளிசெய்தல். (பிங்கல. கஙகூ.)
மிளிர்ந்த—பிறழ்ந்த. (சிந்தா.)
மிளிர்ந்து — 1. குதித்து. 2. பிறழ்ந்து. 3. புரண்டு (1, 2, 3-சிந்தா.
மிளிர்வு—ஒளிசெய்தல். (பிங்கல. கஙகூ.)
மிளிர—1. பிறழ. (சிந்தா.) 2. கீழ்மேலாக. (பத்துப்பாட்.)
மிளிறு—காடி. (பிங்கல. உசகூச.)
மிளை—1. காவல். (பத்துப்பாட்.) 2. காவற்காடு. (சிலப.) 3. குறுங்காடு. (புறப்-வெ.)
மிறல்—பெருமை.
மிறுங்கம்—கையாந்தகரை. (வைத்தியபரி.)
மிறுசீரம்—இலாமிச்சை. (வைத்தியபரி.)
மிறுத்தாலகம்—துவரை. (வைத்தியபரி.)
மிறுத்திகம்—கொடிமுந்திரிகை. (வைத்தியபரி.)
மிறுது—1. சமுத்திரப்பச்சை. 2. நெல்லி. (1, 2-வைத்தியபரி.)
மிறை—1. குற்றம். (பிங்கல. கஅகூக.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. வருத்தம். (சூ. நிக. அ: கூச.) அச்சத்துக்கும்பெயர் கூறுவர்.
மிறைக்கவி—சித்திரகவி. (சூ.நிக.கஉ.உஎ.)
மிறைக்கொளீஇ—வளைவுதவிர்த்து. (புறப்பொருள்வெண்.)
மிறைந்தல்— வேதனைப்படல். (சூ. நிக. கூ: கo.)
மின்—1. ஒளி. (சூ. நிக. அ: உஉ.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. மின்னல். (சூ.நிக.க:கஉ.)
மின்மினி— இருளிலே மின்னுகிறவொரு செந்து. (வழக்.) இது பறப்பதாயும், ஊர்வனவாகிய புழுவாயுமிருக்குமென்பர்.
மின்னம்மை—திருப்பூவணத்திற் கோயில் கொண்டிருக்குந்தேவியார். (அபிதானகோ.)
மின்னல்—1. ஒளிசெய்தல். (சூ. நிக. அ: உரு.) 2. மின். (சூ. நிக. க: கஉ.)
மின்னற்றழுக்கு—நாகமணல். (வைத்தியபரி.)
மின்னார்—மாதர்கள். (காஞ்சிப்.நகரப்.உச.)
மின்னி—1. கருத்தக்காக்கணம். 2. நீர்ப்பயறு (வைத்தியபரி.)
மின்னுதல்—1. பிரகாசித்தல். 2. மின்னலுண்டாதல். (1, 2-வழக்.)
மின்னெறிதல்—மின்வீசுதல். (வழக்.)
மினக்கேடு—வியர்த்தம். (வழக்.)
மினுக்கம்—மினுக்கல்.
மினுக்கல்—ஒளிசெய்தல். (வழக்.)
மினுக்கு—1. ஒளி. 2. தெரிநிலைவினைப்பகுதி.

மினுக்குதல் — ஒளிதோன்றச் செய்தல். (வழக்.)
மினுக்குப்பசை — நெய்வாரிமெம் பசையி னென்று. ஒருகுழூஉக்குறி.
மினுங்குதல்—ஒளிர்தல். (வழக்.)
மினுமினுத்தல்— } ஒளி செய்தல்.
மினுமினுப்பு— } (வழக்.)

மீ.

மீ—1. ஆகாயம். (சூ. நிக. க: சசு.) 2. மிகுதி. (உ-ம்,) "மீதூண்விரும்பேல்" (ஆத்தி சூடி.) து-சாரியை என்பர். 3. மேலாகியபண்பு 4. மேலிடம். (3,4-நன்னூ. உயிரீற்றுப். கஎஅ. உரை.)
மீக்குவம்—மருதமரம். (மலையக.)
மீக்கூர்தல்— மிகப்பெருகுதல். மீ-மேல். கூர்தல்-மிகுதல்.
மீக்கூற்றம்—மேலாகியசொல். (பத்துப்.)
மீக்கூறல்-மேலாகப்புகழ்ந்துகூறல். (காஞ் சிப். தழுவக்கு. ருசு.)
மீக்கூறு— } புகழ். (சூ. நிக. கo. கரு.)
மீக்கூற்று- }
மீக்கோள்-1. ஏறுதல். (சூ. நிக. க: ருரு.) 2. மேற்போர்வை. (நன்னூ. உயிரீற்றுப். கஎஅ. உரை.)
மீகண்—1. கண்ணினது மேலிடம். (நன்னூ. உயிரீற்றுப். கஎஅ.) 2. மேலிடம். மீ.மேல். கண். இடம்.
மீகாமன்- } மாலுமி. (சூ. நிக. உ: ருரு. தண்டியலங்.)
மீகான்— }
மீகை—1. புலிதொடக்கி. (வைத்தியபரி.) 2. மேலேயெடுத்தகை. (பதிற்றுப்பத்து.)
மீச்சிதக்கலி-வெள்ளாவிப்பானை. (வைத் தியபரி.)
மீச்செலவு— மேற்போதலாகிய அக்கிர மம். (நீதிநெறிவிளக்கம். கஎ.)
மீசரம்—1. அதிகம். 2. விரைவு. (1, 2- வழக்.)
மீசு—மிகுதி. (வைத்தியபரி.)
மீசுரம் —மீசரம். (வழக்.)
மீசை—1. மிசை. 2. மேலிடம். 3. மேலு தட்டின்மேலுள்ளரோமவரிசை. (1,2-சிந்தா.) (3 வழக்.)
மீட்சி-1. மீளுதல் (பாரத. நிரைமீட்சிச்.) 2. மீளுமிடம். (பரிபாடல்.)
மீட்சியளவை—பாரிசேடம். (மணிமே.)
மீட்டல்— } 1. திருப்புதல். 2. வீணை
மீட்டிடுதல்- } வாசித்தல். (1, 2-வழக்.)
மீட்டுதல்— }

மீட்பு--மீட்குதல்.பு-தொழிற்பெயர்விகுதி.
மீடம்—மூத்திரம். (வைத்தியபரி.)
மீதல்—மிகுதல். (வழக்.)
மீதி—1. காஞ்சிரை. (வைத்தியபரி.) 2. மிசசம். (வழக்.)
மீது— மேல். (பெரியபு. திருக்குறிப்புத். எசு.) து-சாரியையென்பர்.
மீதுந்து—நெல்லி. (வைத்தியபரி.)
மீதுரை — பல்கால்விளம்பல. (சூ. நிக. கo: ரு.)
மீதூர்தல்- } நெருங்கல். (சூ. நிக. க: கரு.)
மீதூரல்— }
மீந்த—இது மிகுந்த என்பதன் மரூஉ.
மீந்தோல் — மேற்றோல். இக்காலத்துப் மீந்தோலெனவழங்குகின்றது. (நன்னூ. உயி ரீற்றுப். பவ்வீநீமீஎன்னுஞ்சூத்திரவுரையிற் காண்க.)
மீப்போர்வை—படாம். (பரிபாடல்.) யாக் கையின்மேற் போர்க்கப்பட்டதென்பர்.
மீமாஞ்சகன் — மீமாஞ்சமதத்தன். (அபி தானசிந்.)
மீமாஞ்சை— } சைமினி முனிவராலியற்
மீமாஞ்சம்— } றிய பூர்வமீமாஞ்சை. (பரி பாடல்.) (சூ. நிக. கஉ. ஆவதில் மீமாஞ்சம் என்றார், சைமினி முனிவரால் இயற்றப்பட்ட மதம். அபிதானசிந்.)
மீமிசை — மேன்மேல், ஒருபொருட்பன் மொழியென்பர். (நன்னூ. பொதுவியல். சஎ.)
மீமிசைச்சொல்-பொருளொன்றேசொல் வேறு. நாகிளங்கமுகு என்றதுதாரணம்.
மீயான்—மீகாமன். (மணிமே.)
மீரம்—சமுத்திரம்.
மீலம்—வானம்.
மீலிதம்—ஓரலங்காரம். (சந்திராலோ.)
மீள்வித்தல்—மீளச்செய்தல்.
மீளல் — மீளுதல். அல் - தொழிற்பெயர் விகுதி.
மீளாக்கதி-மீளாதகதி, மோக்கம். (சூ. நிக. கு: உ.)
மீளி—1. கூற்றுவன். 2. தலைமை. (புறப் பொருளவெண்.) 3. திண்ணியன். 4. பாலை நிலத்தலைவன். (சூ நிக. உ: கஎ.) 5. பெருமை. 6. மறம். 7. மேன்மையுள்ளோன். 8. வலி. (1- பத்துப்பாட்.) (3, 5, 7, 8-சூ. நிக. கக. ஊகார வெ. கு.) (6-புறநா.) புறப்பொருள் வெண்பா மாலையில் தலைவனெனவுங்கூறுவர்.)
மீளிமை—1. வன்மை. (சிந்தா.) 2. வீறத் திறம். (திருவானை. நகரப். ருகு.)

மீளுதல் — திரிதல். திரும்புதல் எனினு மாம். (பிங்கல. கஅகo.)

மீறல் — மீறுதல் — 1. அடங்காமற்போதல். 2. அதிகரித்தல். (1, 2-வழக்.)

மீன் — 1. சித்திரைநாள். 2. நெய்தனிலப் பறை. 3. மச்சம். 4. விண்மீன். (1, 3, 4-சூ. நிக. கக: னகரவெ. கஎ.) (2-பிங்கல. ருகஅக.)

மீன்கொத்தி — ஓர்புள். (வழக்.)

மீன்கொல்லி — மீனஞ்சு.

மீன்சிதள் — மீன்செதிள்.

மீன்செகிள் — மீன்செதில் — மீன்செதிள் — இம்மூன்றும் மீனின்புறத்தின்பொருக்காகிய முள்ளென்பர். (நன்னூ.மெய்யீற்றுப். ௪o. உரை.) (வழக்.)

மீன்பீலி — கெண்டைப்பீலிமீன். ஒருகுழூஉக்குறி.

மீன்வெட்டி — சுரு. (வைத்தியபரி.)

மீனக்கொடியன் — 1. பாண்டியன். 2. மதன். (திருவிளை. பாயிர. கஅ.)

மீனங்கு — விரியன். (வைத்தியபரி.)

மீனஞ்சு — மீனெரிஞ்சான்பூண்டு. (வைத்தியபரி.)

மீனம் — 1. அரிராசி. (சூ. நிக. க: கக.) 2. மீன். (பிங்கல. உகூஉஎ.) 3. மீனமாதமாகிய பங்குனிமாதத்திற்கும்பெயர்.

மீனம்பர் — ஓர் மருந்து, இது கடலிலுண்டாகுஞ் செம்மீன் வைரமென்பர்.

மீனவன் — பாண்டியன். (உ-ம்.) "தேனுர்கமழ் தொங்கன்மீனவன் கேட்பத்" (யாப்பருங் கலக்காரிகை. பாயிரம். உ.)

மீனாங்கன் — மன்மதன். (அபிதானகோ.)

மீனாட்சி — மீனாட்சி எனவும்வரும். 1. மதுரையங்கயற்கண்ணியம்மை. (வழக்.) 2. பொன்னாங்காணி. (தைலவ.ருக.)

மீனாட்சிபீடம் — சவசத்திபீடங்களுள்ஒன்று (அபிதானகோ.)

மீனாண்டி — சருக்கரை. (வைத்தியபரி.)

மீனம்பூச்சி — மின்மினிப்பூச்சி. (வைத்தியபரி.)

மீனாய் — நீர்நாய், ஒருகுழூஉ உக்குறிபோலும்.

மீனெரிஞ்சான் — மீனஞ்சு.

மீனெறி — மீன்கொத்திக்குருவி, சிரல்எனப் பிங்கலத்தில், உகூகூஎ. ஆஞ்செய்யுளிற்கூறினர்.

மீனேறு — மகரமீன். (சூ. நிக. கூ: எக.)

## மூ.

மூக்கடு — சுக்கு மிளகு திப்பிலியென்னு மூன்றையும் உணர்த்துமொரு குறிப்புமொழி. (உ-ம்.) "மூக்கடுமுஸ்தைமஞ்சிட்டிமுப்பலம்" (தைல. தைலவ.)

மூக்கடுகம் — திரிகடுகம். (சுக்குத்திப்பிலி மிளகு.) (சூ. நிக. கஉ: கரு.)

மூக்கடுகு — மூக்கடுகம்.

மூக்கணி - 1. தேங்காய். (உ-ம்.) "கனிகிழங்கிக்குச்சர்க்கரைமுக்கண்" (திருப்பு. சகஉ.) 2- மூன்றுகண்கள். (உ-ம.) "முக்கணுயகன்" (பிரமோத். பஞ்சாட்.)

மூக்கண்டகி — நெருஞ்சில். (வைத்தியபரி.)

மூக்கண்ணன் — 1. சிவன், திவாகரம். 2. விநாயகன. (சூ. நிக. க: உக.) 3. வீரபத்திரன். (சூ. நிக. க: உஉ.)

மூக்கண்ணி — காளி. (சூ. நிக. க: கூஅ.) 2. தேங்காய். (உ-ம்.) "முக்கண்ணியமிழ்து" (தைல. தைலவ. கoகூ.) 3. பார்வதி. (திருவிளை நான்மாடக். 2.)

மூக்கணவன் — ஓர் கொடி. (வைத்தியபரி.)

மூக்கயான் — மூக்கண்ணன். (வழக.)

மூக்கனி — மூக்கண்ணி.

மூக்கந்தம் — முருங்கைமரம். (வைத்தியபரி.)

மூக்கரணம் — மனம், வாக்குக், காயங்களாகிய முப்பொறி. (சூ. நிக. கஉ: ரு.)

மூக்கருணை — கருணை, காராக்கருணை, புளிக்கருணையெனனு மூவகைக்கருணைகள். (தைல தைலவ. கருரு.)

மூக்கருவு — 1. நாபிக்கொடி. 2. முட்டை. (1, 2-வைத்தியபரி.)

மூக்கல் — 1. எடுத்தலோசை. (சூ. நிக. ௰: சரு.) 2. முக்குதல். (வழக்.)

மூக்கலிப்பு — கோட்டம். (வைத்தியபரி.)

மூக்கனி — முப்பழம். அது கதலி, பலா, மா இவற்றின் கனி. (சூ. நிக. கஉ: ௬.)

மூக்காடு — மூடிகொள்வது (உ-ம்.) "முக்காடேதுக்கடி" (குதம்பைச்.) (வழக்.)

மூக்காணி — 1. சிற்றிலகத்தொன்று, மூன்று காணி. எண்சுவடி. 2. பாண்டிநாட்டிற்கொற்கைக்குச்சமீபமானவோரூர். கொற்கையிலுள்ளதென்பர்.

மூக்காணியர் — பிராமணரிலோர்வகை. ஆதியில் முக்காணியென்னுமூரை யிடமாகவுள்ளவர். திரிசுதந்தரரென்பர்.

மூக்காரம் — எருதினுக்கிரசத்தம். (வழக்.) எருதுபோர்விளைக்குங்குறி.

மூக்காரி — சலமென்னுமோரளவை. (உ-ம்.) "தசமுட்டிதசமம்புமுக்காரி. (தைல. தைலவ. கூஅ.) [இது பன்னிரண்டுமரக்கால்கொண்டது போலும்.]

**முக்கால்**—1. மூன்றுகால். 2. மூன்றுமுறை. (காஞ்சிப். சனற்குமார. கசு.)

**முக்காலம்**—இறப்பு. நிகழ்வு. எதிர்வாகிய மூன்றுகாலங்கள். (உ-ம்.) "மன்னுமுக்குண முக்காலமில்லதுவாய்." (கூர்மபு.பிரகிருதி.டு.)

**முக்காலி**—1. அக்கினி. (உ-ம்.) "புதியவழி முக்காலி" (தைல. அநுபங். கூக.) [மூன்றுகாலுள்ளகாரணத்தால் அக்கினிக்குப் பெயர்வந்தது.] 2. கலம்வைக்கும் மரத்தட்டாயிருக்கிற யோராசனம். (வழக்.)

**முக்காவல்நாடு**—ஒரு நாடு. (புறநா.)

**முக்காவேளை**—ஓர் பூடு. (வைத்தியமூ. அகராதி.)

**முக்காழ்**—மூன்றுகோவையாகிய முத்துவடம். (உ-ம்.) "மயிர்ப்புறஞ்சுற்றியகயிற்கடை முக்காழ். (மணிமே. மாலர்வனம் கசுடு. அடி.)

**முக்காழி**—மூன்று கொட்டையுள்ளது. (வழக்.)

**முக்கி**—உண்டு. (புறநா.)

**முக்கியசிருட்டி**—தாவரசிருட்டி. (கூர்ம. பலவ. அ. உரை.) [தாமதகுணமயமாயுள்ள தமம் முதலிய ஐவகைப்பேதங்களையும் பிரமதேவர் கொண்டமையால் விருட்சம், புதல், கொடி, பூண்டு, புல் என ஐவகைப்பட்டுத்தாவர சிருட்டிதோன்றினவென்றும், அவைகள் கிளைத்தல் முளைத்தல் செழித்தல் கருகல்முதலிய வினைகட்கேற்ப ஓரறிவுடையனவாகலிற் றமதத்திற்றமதகுணமயமென்றும், பிரமனவற்றைநோக்கி இவை முன்னர்த்தோன்றியவாறெனச் சொன்னமையால் முக்கிய சிருட்டியெனப் பெயர்பெற்றனவென்றுஞ் சொல்வர்.)

**முக்கியம்**—1. ஆத்துமகாரிய உபாதி எழனுடனே கூடியிருந்தநிலை. (ஞானக்கட்டளை. (தொம்பத.) 2. சூக்குமவாயுக்கள் நாலிலொன்று. இது, கையெலும்பிரண்டும் கதிரெலும்பிரண்டுங்கூடின இடம் நின்று ஆக்கையைச் செவ்விதாக்கி நிற்கும். (த-வி-ம்) 3. பிரதானம். (உ-ம்.) "முறியோடவர்பிண்டியாரடியாரென்னுமுக்கியமே" 4. மேன்மை. (திருநூற். எஈ.)

**முக்கியன்**—மமாதி யந்தக்காணங்களைச் சேட்டிப்பிக்கிற சிவசம்பந்தவாயுக்கள் நான்கனுளொன்று. (த நி. போ.)

**முக்கியானந்தம்**—விருப்பு வெறுப்பில்லாத உபேக்ஷாபுத்தியிற்றோன்றுவது. (வேதா. சூ. கூசு. உரை.)

**முக்கியார்த்தம்**—கருத்து. (வி-ணி.) முக்கியப்பொருள். (வேதா. சூ. ககஅ.)

**முக்து**—தெரிநிலைவினைப்பகுதி.

**முக்துடுமி**—சூலம்.

**முக்குடை**—மூன்றுகுடை. அவை: சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பன. (மணிமே.)

**முக்குடைச்செல்வன்**—அருகன். (சூ.நிக. க: ௩.)

**முக்குணபூதங்கள்**—முக்குணத்துடனே பிறந்தனவாகிய தன்மாத்திரையான பஞ்சபூதங்கள். (நாஞ. சிவ.)

**முக்குணம்**—சத்துவம் ரசசு தாமதமாகிய மூன்றுகுணங்கள். (உ-ம்.) "முக்காலம்"பார்.

**முக்குதல்**—முட்டுப்பட்டனுங்குதல். (உ-ம்.) "மெலவியலேமுக்குகின்றதூலவழறணிக்கும்" (பதார்த்தகுண. அ௩அ.)

**முக்குந்துருக்கம்**—மூவகைக்குங்கிலியம். அவை: கருங்குங்கிலியம, வெண்குங்கிலியம், பச்சைக்குங்கிலியம் என்பன. (தைல. தைலவ. க௩டு.)

**முக்குலம்**—மூன்றுகுலம். அவை: அக்கினிவமசம், சந்திரவம்சம், சூரியவம்சமெனபன. (பாரத. குருகுலச். உஅ.)

**முக்குளம்**—1. கங்கை., சரஸ்வதி, யமுனையென்னு நதிகளைப் பொருந்தியிருக்குமோர் கிராமம். 2. திருவெண்காட்டுத்தலத்திலிருக்குமொரு தீர்த்தம். (திருஞான. தேவாரம்.) 3. பூராடம். (சூ நிக. க: எகூ.)

**முக்குளி**—கோழிமுளையான். (மலையக.)

**முக்குளித்தல்**—அமிழ்ந்துதல். (வழக்.)

**முக்குளிப்பான்**—1. ஒரு நோய். 2. ஒரு பறவை.

**முக்குற்றங்கடிந்தோன்**—புத்தன். (திவாகரம்.)

**முக்குற்றம்**-மூன்றுகுற்றம். அவை: காமம், வெகுளி, மயக்கம் என்பன. (சூ நிக. கஉ: கூ.)

**முக்குற்றமில்லோன்**—புத்தன். (சூ. நிக. க: கஅ.)

**முக்குன்றி**—மூன்றுகுன்றி. அவை: வெண்குன்றி, செங்குன்றி, கருங்குன்றி யென்பன. (தைல. தைலவ. எஉ.)

**முக்கூட்டு**-1. அடுப்பு. (வழக்.) 2. பாணி. (சூ. நிக. க: கஎ.)

**முக்கூட்டெண்ணெய்**—ஒரு மருந்தெண்ணெய். நெய், எள்ளினெய், ஆமணக்குநெய் சேர்ந்தது. (வைத்தியபரி.)

**முக்கூடல்**—பாண்டிநாட்டிற் சித்திராநதிக்கரையிலுள்ள ஒரு விட்டுணுத்தலம். இதற்குப் பட்பிரபந்தமுண்டு.

முக்கூடற்பள்ளு — ஒரு பிரபந்தம். முக்கூடல்பார்.

முக்கோடி— பிருதிவி முதற்குணமீருகும் அசுத்தகோடி, பிரகிருதிமுதற்காலமீருகுஞ் சுத்தாசுத்தகோடி, சுத்தவித்தை முதற்சிவமீருகுஞ் சுத்தகோடியென்னு மூணறுகோடிகள். (சி. சி. அ. ௬௦. ஞான.)

முக்கோணம்—மூன்றுமூலை. (வழக்.)

முக்கோல்–1. திரிதண்டம். அது: மூன்றுகோல் ஒன்ருகச்சேர்த்துக் கட்டப்பட்டதண்டு. (உ-ம்.) "முனிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகி" (பாரத. (அருச். தீர். கக.) 2. திருவோணம். (சூ. நிக. க: எகூ.)

முக்கோற்பகவர் — திரிதண்ட சந்நியாசிகள். (நம்பியக. களவிய. செவிலிபின்றேடிச் சேறலின். விரிச்சூத்திரத்திலறிக.)

முககாரரளர்-சிவலோகத்திற்றகூிணதிசையோலக்கஞ் சேவித்திருக்கும் பதினெட்டுக்கணேசரிலொருவர். (வி. ணி. உ௬௪.)

முகங்கொடுந்தல் — எதிர்முக நோக்கியிசைந்திருத்தல். (பாரதகிருட்டி. ௯௦எ.)

முகங்கோள்ளுதல்—சிலந்தியுடைய முனைகொள்ளுதல். (வழக்.)

முகசம்—பல்.

முகசீரி—நாக்கு.

முகசுரம்—பனங்கள். (வைத்தியபரி.)

முகசோதி—எலுமிச்சை. (வைத்தியபரி.)

முகஞ்செய்தல் — 1. சிலந்திகுமிழித்தல். 2. பலித்தல். (வழக்.)

முகடி—மூதேவி. (உ-ம்.) "முழுமதிபுரிந்த சிந்தூரவரிவையருடன் கலந்திடு முகடியுநலம் பிறந்திடவருள்வாயே" (திருப்பு. ௪௬.)

முகடு—1. உச்சி. (இராமா. பாலகா. மிதிலைக்காட்சி. க௬௦) 2. மலைவீடு முதலியவற்றினுச்சி. 3. மேல்என்பதுபோல் ஏழாம்வேற்றுமைப்பொருளின்கண் வருமொரு சொல்லுருபு (உ-ம்.) "பனிக்கடன் முகட்டின்" (கூர்மபு. வருணை. ௬.)

முகடுதுமித்து—தலையைத்திறந்து. (பெரும்பா. உ௪௬.)

முகத்தல்–1. தோண்டல். (பிங்கல. உகச௬.) 2. நால்வகையளவிஞென்று. (நன்னூல். பொதுவியல். கஎ.) 3. மணத்தல். (உ-ம்.) 'புலிபார்' 4. மொள்ளல். (உ-ம்.) "ஆழவமுக்கி முக்கினும்" (மூதுரை. க௬.)

முகத்தலளவு—நாழி முதலியவற்ருலளக்குதல், நால்வகையளவி ஞென்று. (நன்னூ. பொதுவிய. கஎ.)

முகத்தலளவையாதுபெயர்— அளத்தற்குரிய பெயரை யளக்குங் கருவிக்கு வழங்குவது. (வ-று.) நாழியுடைந்தது. (நன்னூ. பெயரிய. ௬௬.)

முகத்தலை—ஒரு சிவதலம் (உ-ம்.) "முகத்தலைமூதூர்த்தவள மாமணிப்பூங்கோயில்" திருவிசைப்பாவிலறிக.

முகத்தவை—மனதுக்கினியவை. (உ-ம்) "முகத்தவை மொழியவு மொல்லாண்மிகக்கவுழ்ந்து" (நெடுநல். கடு௬.)

முகத்தாட்சணியம்—ஒருவர் முகங்கண்டவுடனே யுண்டாகுமிரக்கம். (வழக்.)

முகத்துதி—ஒருவன் முன் புகழ்தல். (வழக்.)

முகத்துவாரம்—வீட்டின் முன் வாயில். (வழக்.)

முகதலை — முதனெய்யும் சீலைத்தலைப்பு. (வழக்.)

முகதர்—சமுகம். (அரபி.)

முகதீதகம்-ஈரவெண்காயம் (வைத்தியபரி)

முகநட்பு—முகத்திற்கு முன்காட்டு நட்பு (வள். நட்பு.)

முகநிலைப்பசாசக்கை – மூவகைப்பசாசக்கைகளிலொன்று, அது சுட்டுவிரல் பெருவிரல், நகங்கூடியுகிர்விட்டுநிற்பது. (சிலப். அரங். எஎ. பக்கம். உரை.)

முகப்ப—எடுப்ப. (சிந்தா.)

முகப்பரு—முகத்திலுண்டாகுஞ்சிறுசிரங்கு. (வழக்.)

முகப்பு—1. தலைப்பு. 2. முகத்தல். பு-தொழிற பெயர் விகுதி. 3. முன். (1, 3-வழக்.)

முகபடாம் — யானையின் முகப்போர்வை. (பிங்கல. கஉஅஎ.)

முகபூடணம்—தாம்பூலம். (வைத்தியபரி.)

முகம்—1. அஞ்சிதமுதற் பதினுறுவகைப்படும். (பொருட்டொகை நிகண்டிலறிக.) 2. (பாதம்.) அந்தரக்கொட்டு. (சிலப். அரங்கேக்சஎ. உரை.) 3. இடம். (புறநா.) 4. இந்திரகோபம் (வைத்தியபரி.) 5. தியானம். (ஜைந. சிந்தா.) 6. தொடக்கம். 7. தோற்றம். 8. பக்குவம். (உ-ம்.) "வீழ்முகக்கேழலட்டபூசல்." (மதுரை. உ௬டு.) 9. முகப்பு. 10. முதன்மை. 11. முனை. 12. வதனம். அது சரீரத்திலோர் உறுப்பு. (உ-ம்.) "விழியங்கவண்மா முகமே விடுமோ. (சிவாக. கணபதி. எ.) மூஞ்சி என்று கூறியிருக்கின்ருர் மணிமேகலையில். 13. வாயில். (6, 7, 9, 10, 11-வழக்.)

முகமலர்தல் — முகந்தழைத்தல். (உ-ம்.) "முறுவன்மிகமுகமலர்த்தி" (கோயிற்பு.பதஞ்சலி. கஎ.)

முகமன்—உபசாரம். (உ-ம்.) "உலப்புறு முகமன்கூறி" (கூர்மபு. திருக்கல். சுக.)
முகமாற்று—ஒரு மயக்கவித்தை, முகமயக் கென்பர். (வழக்.)
முகமுறித்தல்—வெறுப்பித்தல். (வழக்.)
முகமுறிதல்—
முகமுறிவு— } வெறுத்தல். (வழக்.)
முகமுடி-பிறக்கும்போது முகத்தை மூடியிருக்குமபை. (வழக்குண்டுடே.லும்.)
முகரம்—1. காகம். 2. சங்கு. ஒலிக்கும் பெயாகூறுவர்.
முகரன்—பயனில் சொல்வோன். (வழக்.)
முகராகம்– பாதத்தின்பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுள் ஒன்று. (உ-ம்.) உபாங்கம்பார்.
முகரி—1. தாழை. (தைலவ.) 2. தாழை விழுது. (உ-ம்.) "மதிவல்லிபார்", (தைல. தைலவ. ஙுகூ.)
முகரிமை— திவ்வியஞானம், பேரறிவு. (உ-ம்.) மூலபலவடகருந்தி முகரிமையினுடனினிதுமுறையினுற்றல்.(திருநெல்.துறவ.க.)
முகருதல்—மூகத்தல். (வழக்.)
முகேரெனல்—அனுகரணவோசை. (சூநிக. கo: சஅ)
முகலதேசம்—ஓர் தேயமென்பார்.
முகலாங்கலம்—பன்றி. (வைத்தியபரி.)
முகவந்து—முகத்திற் படருமொரு தேமல் (வழக்.)
முகவட்டு-முகத்திலணியுமொருவிதபடாம் (திருவிளை. மாயப்பசு. கும.)
முகவல்லபம்—மாதுளை. (வைத்தியபரி.)
முகவாசம்—1. இலவங்கம், ஏலம், சாதிக்காய், தக்கோலம், பச்சைக்கர்ப்பூரம் என்பவற்றின் பொடியைப்பனிநீரோடு கூட்டிச்செய்த குளிகை. (சைவ. வி.) 2. தாம்பூல திரவியம். (சிந்தா)
முகவாசல்—தலைவாசல். (வழக்.)
முகவாத்தியம்—முகவீணை. (வழக்.)
முகவாதம்—ஒ நோய். (வழக்.)
முகவுரை — 1. பாயிரம், நூலுக்குமுன் சொல்லப்படுவதாதலினிப்பெயர்த்து. (நன்னூ பாயிர க.)
முகவெள்ளைப்பருந்து — ஒரு பருந்து. (வழக்.)
முகவை — 1. அகப்பை. முகக்கப்பட்டதென்பது பொருள். 2. இராமநாதபுரம். இது மதுரைக்குக் கீழ்த்திசையிலுள்ளது. (வழக்) 3. முகத்தல். (பதிற்றுப்பத்.)

முகவைப்பாட்டு—இது களத்திலேதானியங்கள் தூற்றித்தெளிக்குமுன் விக்கினம்வாராமற்பொலிவளர்ந்திருக்கப்பாடும்பட்டு, வள்ளுவர் இக்காலத்துப்பாடுகின்றனர்கள். முற்காலத்தில் வேதாளங்களால் விக்கின நேரிட்டதனால் அதனைநீக்கிப் பொலிவளரும்படி திருவள்ளுவர் விபூதியைத்தூவிப் பஞ்சாகர மந்திரமுஞ்சொல்லிப பாடினரென்பதுலகிலே பெருவழக்காயிருக்கின்றது.
முகன்—மூகம். மகரனகரப்போலி. (நன்னூ எழுத். சுள.)
முகனை—முதன்மை. (வழக்.)
முகனைக்காரன்—முதலாளி. (வழக்.)
முகாந்தரம்—ஏது. (வழக்.)
முகாம்—தங்கல். (அரபி.)
முகாமை—முதன்மை. (வழக்.)
முகாரி—ஓரிராகம். (வழக்.)
முகான்—முகாம். (வழக்.)
முகில்—1. மேகம்.(உ-ம்.) "முகிலெனவே பிறங்குமேனிக்கருமையிலும்"(அரிச்ச. பாயிர. சு.) 2. மொக்கு. (வைத்தியபரி.)
முகிவு—1. கடை. 2. மரணம்.(1, 2-வழக்.)
முகிழ்—1. அரும்பு முத்தணிமுகிழ்முலை மூளரிவாண்முகம். (பிரமோத். பஞ்சாட். உo.) 2. காம்படி. 3. தெரிநிலை வினைப் பகுதி. 4. விரியாத்தளிர். (பரிபாடல்.)
முகிழ்த்தல்—1. அரும்புதல். (உ-ம்.) முத்திபார். 2. குவிதல். (உ-ம்.) முகிழ்த்தகையினராய். (சிவரக. மேரு. கக.) 3. சிலிர்த்தல். (உ-ம்.) "மான்முதலாங்கன விலங்குமயிர் முகிழ்த்துவந்தணைய" (பெரியபு ஆனய. ஙo)
முகிழ்ந்து—அரும்பி. (சிந்தா.)
முகிழ்ப்பது — தோன்றுகின்றது. (பரிபாடல்.)
முகிழ்ப்பு-குவிவு. பு-தொழிற்பெயர்விகுதி
முகிழம் — 1. தாமரை வளையம். (உ-ம்.) "சாந்து"பார். 2.மலரும்பருவத்தரும்பு(வழக்.)
முகிழி—முகிழ்.
முகிழிதம்—அரும்பு. (வழக்.)
முகிற்குன்றம் — வக்கிராந்த பாஷாணம்.
முகினி —புளியமரம். (மலையக.)
முகுடம்—முடி. (உ-ம்.) "முகுடமும் பெருஞ்சனையும்" (பாரத. குருகுல. கச.)
முகுந்தநிதி-
முகுந்தம்— } குபேரனவநிதிகளிலொன்று (பொருட். திகண்டு.)
முகுந்தன்-விட்டுணு. (உ-ம்.) "முகுந்தன் வாசகங்கேட்பதன் முன்னமே" (பார்தபடையெழுச்சி. உ.)
முகூர்த்தம்—முகூர்த்தம், (வழக்.)

முகுரம்—1. மல்லிகை. (வைத்தியபரி.) 2. கண்ணாடி. (சூ. நிக. எ: ௯௯.) 3. தளிர்.

முகுலம்-1. ஆன்மா. 2. சரீரம். 3. மலரிதழ்.

முகுலி—தாழை. (வைத்தியபரி.)

முகுளம்—அரும்பு. (சூ. நிக. ச: ௪௮.)

முகூர்த்தம் 1. இரண்டுநாழிகைகொண்ட நேரம். (வழக்.) 2. சுபவேளை. (உ-ம்.) தளப்பலா முகூர்த்தம வல்லோன் சாதேவனல்ல லில்லை. (பாரத. முகூர்த்தங். உ.)

முகூர்த்தவிதானி — முகூர்த்தம் பார்ப்பவன். (சிந்தா.)

முகை—1. கூட்டம். (பிங்கல. உஉ௬.) 2. மலரும்பருவத்தரும்பு. (சூ. நிக. ச: ௪௮.) 3. மிடா. (பிங்கல. ௯௪௦.) 4. தெரிநிலை வினைப் பகுதி.

முகைந்தல்—அரும்புதல். (உ-ம்.) "மெல் லிதழ்-குயிறறியதெனமுகைத்தலர்ந்த கோங்க மே" (தணிகை நாட்டு. ௬௯.)

முகைநயலூர்-சோழநாட்டிலுள்ளவோரூர். (புறநா.)

முகைநயலூர்ச்சிறுகருந்தும்பியார்-கடைச் சங்கப்புலவரொருவர் (திருவள் மாலை.)

முகைவிம்மும்—மலரும. (சிந்தா.)

முங்குதல்—முழுகுதல். (பரிபாடல்.)

முச்சங்கம் — பாண்டிநாட்டில் வழங்கிய முதலிடை கடையாயசங்கம். இறையனாரகப் பொருளுரையிற்காண்க.

முச்சடை—அழகு. இது (வழக்குண்டு.)

முச்சத்தி — இச்சாஞானகிரியா சத்திகள். (திருவிளை. இந்திரன்மு. ௧௭.)

முச்சந்தி—1. திரிகாலசந்தி. அது; காலை, உச்சி, மாலையென்பன. 2. மூன்று தெருக்கூடுமிடம். (1. 2-வழக்.)

முச்சனியப்பேடு— } சோம்பு. (வைத்தியபரி.)
முச்சனியம்— }

முச்சி—1. தலை. (பிங்கல. ௬௦௯௧.) 2. உச்சிக்கொண்டை. (உ-ம்.) "சுரும் புறுபடலை முச்சிச்சூரரிப்பிணவுபோல்வாள்" (பெரியபு. கண்ணப். ௯௦.) மணிமேகலையில் மயிர்முடியென்பர். 3. சிறுசுழகு. (வழக்.)

முச்சிய—சூட்டினவாகிய. (பரிபாடல்.)

முச்சியர்—1. உறைகாரர். 2. மரவினையாளர். 3. வன்னக்காரர்.

முச்சிரம்—பெருஞ்சீரகம். (வைத்தியபரி.)

முச்சில்—முறம். (பிங்கல. ௯௯௮௪.) முச்சியெனவீறு குறைந்தும்வரும்.

முச்சிலிக்கா—முச்சிலிக்கை. (இந்துஸ்.)

முச்சிலிக்கை — உடன்படிக்கை உறுதி. (இந்துஸ்.)

முச்சினி—மூன்றுமாதம். (வைத்தியபரி.)

முச்சீரகம் — மூன்றுசீரகம். அவை; நற்சீரகம், பெருஞ்சீரகம், கருஞ்சீரகமென்பன. (வைத்தியபரி.)

முச்சீரடி—சிந்தடி. (உ-ம்.) "சிந்துமுச்சிரடி" (யாப்-காரிகை. உறுப். ௯உ.)

முச்சுடர்—மூன்றுசுடர். அவை; அக்கினி, ஆதித்தன், சந்திரனென்பர். (பொருட். நிகண்.)

முச்செய்கை—மூன்றுசெய்கை. அவை; படைத்தல், காத்தல், அழித்தலென்பன. (சூ. நிக. ௯உ: ௬.)

முச்சொலலங்காரம் — ஒரு மொழியாய் மூன்று பொருளைத்தருவதென்பர்.

முசகம்—எலி.

முசங்கி—ஒருவகைக்கொவ்வை. (வைத்தியபரி.)

முசர்— } தயிர். (தைலவருக்.)
முசரு— }

முசல்—முயல். (வழக்.)

முசல்வலி—ஓர் வலிப்புநோய். (வைத்தியபரி.)

முசலம் — 1. இருப்புலக்கை. (பிங்கல. ௯௯௦௦.) 2. உலக்கை. (சூ. நிக. எ: ௬௯.) 3. மெருகன்கிழங்கு. (உ-ம்.) "முசலமுள்ளி நேர் நேர்முத்தவியிட்டாக்கில்" (தைல தைலவ.௬௦.)

முசலி—1. உடும்பு. 2. ஓந்தி. 3. தாழை. 4. நிலப்பனை. (தைல. தைலவ கஉ௬.) 5. பலபத்திரன். 6. மெருகன்கிழங்கு. (உ-ம்.) பருமுசலி மூட்டியப்பான். (தைல. தைலவ. ௯௭.) (1. 2. 3, 5-சூ. நிக. ௧௧: ௪௧௨௰௮. ௯௯.)

முசலிக்கொங்கை—தாழைவிழுது. (தைல. தைலவ. ௯௬.)

முசலிகாசநம்— } யோகநிலையினொன்று.
முசலிகாதநம்— } அது இருகாலுமிருகையுஞ்சம்மணமாகமடக்கி மார்புநிலத்திலே தோயக்கிடப்பது.

முசலிகை—உடும்பு. (பிங்கல. உ௬உ௯.)

முசலை—முயலை, ஓர் கோரைக்கிழங்கு.

முசற்காது—ஓர் பூண்டு.

முசற்கொம்மட்டி — ஓர்பூடு. (வைத்திய. மூ. தி.)

முசாதகம்-வெண்டாமரை. (வைத்தியபரி)

முசாவரி—முசாபர். (அரபி.)

முசாபர்—பயணம். (அரபி)

முசிக்க—மெலிய. (பரிபாடல்.)

முசிதுதல்—முசித்தல். (வழக்.)

முசிகுந்தம்—1. குபேரன்வில். 2. சூரியன் கைச்சங்கு. (அபிதாந-சி.)

முசித்தல்—இளைத்தல். இது முதலாறுபதம் வழக்கிலறிக.

முசிப்பாற்றல்—இளைப்பாற்றல்.

முசிப்பாற்றுதல்—முசிப்பாறல்.

முசிப்பாறல்—முசிப்பாறுதல்.

முசிப்பு—இளைத்தல்.

முசிறன்—கொடையாளி.

முசிறு—முயிறு.

முசு—ஒருசாதிக்குரங்கு. (நன்னூ. எழுத். ௭௧. உரை.)

முசுக்கட்டை — கம்பளிக்கொண்டான். (மலையக.)

முசுக்கட்டைப்பூச்சி — கம்பளிப்பூச்சி. (வைத்தியபரி.)

முசுக்கை—முசுமுசுக்கை. (தைலவ-௯௦.)

முசுகுந்தன்—அறுவகைச் சக்கரவர்த்திகளி லொருவன். (சூ. நிக. ௧௨: ௫௫.)

முசுட்டை—ஒரு கொடி. பேய்முசுட்டை, பொன்முசுட்டை எனப் பலவகைப்படும். (வைத்திய. ௯௦.)

முசுடர் — கீழ்மக்கள். (சூ. நிக. ௨: ௫௪.)

முசுடு—முயிறு. (வழக்.)

முசுண்டம்—முசுண்டி.

முசுண்டர்—கீழ்மக்கள். (சூ. நிக. ௨: ௫௪.)

முசுண்டி—ஓராயுதம். (பிங்கல. ௧௫௯௯.) ஓர் வாத்தியத்துக்கும் பெயர்கூறுவர்.

முசுண்டை—முசுண்டைக்கொடி. (உ-ம்.) "சுரிமுகிழ்முசுண்டையொடு முல்லைதாஅய்." (மதுரை. ௨௮௧.)

முசும்புதல்—முறுமுறுத்தல். (வழக்.)

முசுமுசுக்கை-ஒருகொடி. (வைத்தியபரி.)

முசுமுசுத்தல் — ஒருவகைத்தினவாதல். (வழக்.)

முசுமுசெனல்—தினவுக்குறி. (வழக்.)

முசுவல்—முசுட்டை. (மலையக.)

முசுறி—ஓரூர். (உ-ம்.) "முழங்குகடன்முழவின் முசுறியன்ன" (புறநா. ௯௪௯.)

முசுறு—முயிறு.

முசுறுப்புல்—அளத்துப்புல். (வைத்தியபரி.)

முஞ்சகேசன்— } திருமால்.
முஞ்சகேசி— }

முஞ்சம்—அம்பு 2. பூணூற்பூண்டு.

முஞ்சரம் — தாமரைக்கிழங்கு. (வைத்தியபரி.)

முஞ்சல்—1. சாதல். (சூ. நிக. ௯: ௨௦.) 2. முற்றல்

முஞ்சி — முஞ்சிப்புல். (உ-ம்.) "மூரணி றைந்தமெய்க்கேள்வியோனருளினன் முஞ்சி யும்புரிநூலும். (பாரத. சம்ப . ௭.)

முஞ்சுதல் — 1. சாதல். (உ-ம்.) "மூஞ்சு தானைகளார்ப்பொடுசூழீஇ" (கந்தபு. மீட்சி. ௧௪.) 2. முற்றல்.

முஞல்—கொசுகு.

முட்கடு—ஓர் கடமரம்.

முட்கத்தரி — முள்ளங்கத்திரி. (வைத்தியபரி.)

முட்காம்—முரட்டுத்தனம். (வழக்.)

முட்காரன்—முரடன். (வழக்.)

முட்காய்வேளை-ஒருசெடி. (வைத்தியபரி)

முட்கிளுவை—ஒரு மரம். (வழக்.)

முட்கீரை—ஓர் கீரை.

முட்கொன்றை — ஒருவகைக்கொன்றை. (வழக்.)

முட்கோல்—தாற்றுக்கோல். (இருப்புமுள். (சிந்தா.)

முட்சங்கு — ஒரு சங்கு. (தைல. தைலவ. ௧௯௫.)

முட்செடி—முண்டகம். (பிங்கல ௨௮௫.௬.)

முட்செவ்வந்தி — ஒருவகைச்செவ்வந்தி. (வழக்.)

முட்ட—நிறைய. (காஞ்சிப். நாட். ௧௪௨.)

முட்டடி—சமீபம். (வழக்.)

முட்டடைப்பன்—ஓர் நோய். (வழக்.)

முட்டம்—காகம். (தேவாரம். குரங்கணின் முட்டத்திருப்பதிகத்திற்காண்க.)

முட்டல்—1. உதைத்தல். 2. இட்டல்.

முட்டாக்கு—முக்காடு. (வழக்.)

முட்டாட்டம்—முரட்டுத்தனம்.

முட்டாது—1. ஒன்றுகுறையாமல். (சிந்தா.) 2. முட்டுப்படாமல். (உ-ம்.) "நெடுவெணெல் வினரிசிமுட்டாது" (மலைபடு. ௫௯௪.)

முட்டாள்—மூடன். (வழக்.) முட்டு-வழு.

முட்டி—1. ஆயுதப்பிடி. 2. இணையாவினைக் கைமுப்பத்துமூன்று வகையுளொன்று. (சிலப். அரங்கே. ௧௮. உரை.) 3. எட்டி. (தைல. தைலவ. ௭௪.) 4. ஒருபலம். (தைல. தைலவ. ௧.) 5. ஒருபிடி. 6. ஒளித்துவைத்துக்கேட் கின்றபொருளைக்குறித்துச்சொல்வது. (சிநேந் திரமாலையிற்காண்க.) 7. கலசம். இது கலை ஞானம் அறுபத்துநான்கினுளொன்று. 8. காஞ் சிரை. (மலையக.) 9. கைப்பொத்து-முட்டிக் யகை. 10. சிற்றுமுட்டி. (வைத்தியபரி.) 11. பிச்சை அது ஒருபிடி பிச்சையென்க. 12. பேய்த்தும்மட்டி அளக்கம்பார். 13. பேரா முட்டி (வைத்தியபரி.) 14. வினையெச்சம். 15. வெல்லம். (வைத்தியபரி.) (5, 9-வழக்.)

முட்டிக்கத்தரி — ஒரு வழுதலைச்செடி. (வழக்.)

முட்டிக்காய்—தூமுட்டிக்காய். (வைத்தியபரி.) தூமுட்டி - சிறுகும்மட்டி.

முட்டிகை—1. உலைக்குறடு. 2.கைக்குத்து. 3. மத்திகை. (1, 2-வழக்.)

முட்டிச்சுரை—கின்னரச்சுரை. (வழக்.)

முட்டு—1. அளாவுதல். 2. இடறுதல் 3. இயைதல். 4. உணவொழிதல். 5. ஒழிதல். 6. கடிவாளம். (பிங்கலத்தில் மூட்டென்பர்.) 7. குறைதல். 8. குறைவு (உ-ம்.) "மூவேழ் துறையுமுட்டின்றுபோகிய" (புறநா. கசுசு.) 9. சேர்தல். 10. தடை (உ-ம்.) வாக்குமுட்டுப் பட்டது. 11. தெரிநிலைவினைப்பகுதி. 12. நிறைதல். 13. நெருக்கம். (உ-ம்.) முட்டுப்பாடாயிருக்கின்றது. 14. பெண்கள்பூப்பு (உ-ம்.) முட்டுத்துறை. 15. பொருதல். 16. மூழங்கால். 17. மேடு. (உ-ம்.) முட்டுக்குவித்தான். 18. மோதுதல், முட்டுதல். 19. வருந்தல். 20. வழு. (நன்னூ. விருத்தி பாயிர. உரை.) (1, 2, 3, 4, 5, 7, 9, 12, 15, 18-செந்தமிழ். தொகுதி. ஏ: பக்கம். எ0.) (10, 13, 14, 16, 17-வழக்.)

முட்டுக்கட்டுதல்-மீண்டுகெட்டுதல்.(வழக்.)

முட்டுக்கட்டை—எதிர்க்கட்டை. (வழக்.)

முட்டுக்காய்—இளந்தேங்காய். (வைத்தியபரி.)

முட்டுக்கால் — 1. உதைகால். 2. முழந்தாள். (1, 2-வழக்.)

முட்டுக்கொடுத்தல்—மீண்டுகொடுத்தல்.

முட்டுடைமுடுக்கர்—போக்கில்லாத அருவழி. (சிந்தா.)

முட்டுதல்—1. எதிர்த்தல். (சூ. நிக. கூ: சஎ.) 2. குறைதல். (உ-ம்.) "செய்கடன்முட்டாவண்ணந்திருப்பணிசெய்யுநாளில். (பெரியபு. அரிவாட்டா. கஉ.)3. நிறைவுறல்-பானைமுட்டியது. 4. மோதுதல், இருவருமுட்டினார்கள். (3, 4-வழக் )

முட்டுப்பாடு — 1. இலம்பாடு. 2. தீது. (சூ. நிக. அ: கஎ.) 3. நெருக்கிடை. 4. வருத்தம். (1, 3, 4-வழக்.)

முட்டை—1. அண்டம். (சூ. நிக. கக: ணகரவெ. எ.) 2. சிறுகாண்டி. (வழக்.) 3. தவிடு. (சூ. நிக. எ: சுஉ.)

முட்டைநாறி—1. எருமுட்டை. 2. பீநாறி. (1, 2-வைத்தியபரி.)

முட்டைப்பாசி—ஒரு நீர்ப்பூடு. (வைத்தியபரி.)

முட்டையகப்பை -கோழிமுட்டைபதியும் பள்ளமுள்ள அகப்பை. (தைலவ. பாயிர கூக.)

முட்பன்றி—முள்ளம்பன்றி. (வைத்தியபரி.)

முட்பாடாணம்—பன்றிமுள். (வைத்தியபரி)

முட்புறக்கனி — பலாக்கனி. (திருவிளை. நாட்டு. ச0.)

முட்பூல்—ஒருசெடி. (வழக்.)

முடக்கம்—1. அடக்கம். (சூ. நிக. கூ. கசு.) 2. தடை. 3. முடங்குதல். (1, 2, 3-வழக்.)

முடக்கல் — 1. மடங்குதல். (வழக்.) 2. வளைத்தல். (உ-ம்.) "முடக்கியகைச்சிலையேந்தி" (திருவிளை-பழியஞ். கஉ.)

முடக்கற்றான்—ஒரு பூண்டு. (தைல. தைலவ. எசு.)

முடக்கன்—தாழை. (வைத்தியபரி.)

முடக்கு — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. மடக்கு. 3. முடக்கறை. (புறப்பொ-வெ.)

முடக்குச்சரக்கு—அவியற்சரக்கு. (வைத்தியபரி.)

முடக்குதல் — 1 மடக்குதல். (வழக்.) 2. வளைத்தல் உ-ம்.)'முடக்கியகைச்சிலையேந்தி' (திருவி. பழியஞ். கஉ.)

முடங்கல்-1. ஓலைச்சீட்டு. (நைடத. இந்தி. டு.) 2. தாழை. (உ-ம்.) "முடங்கன்மலர்பரப்பி" (தைல. தைலவ. கரு.) 3. நோய். 4. மடங்கல். 5. முள்ளி. (மலையக.) 6. மூங்கில். (வைத்தியபரி.) 7. வளைவு. (உ-ம்.) "முடங்கன்மதிசெஞ்சடைமுடித்து" )திருவிளை-யானையெய். கூ.) (3, 4-சூ. நிக. கக: டகரவெ. ரு.)

முடங்கன்முலை — தாழைவிழுது. (தைலவருக்.)

முடங்கி—1. கிடைப்பாடானவன். 2. மூலை. (1, 2-வழக்.)

முடங்கு—தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "முதுகடும்புலியேறன்னமுடங்குடற் குரவன்றானும்" (திருவிளை. அங்கம். கரு.)

முடங்குதல்—மடங்குதல். (உ-ம்.) "மொழிதரும்பூசைமுடங்குறுவண்ணம்" (சிவரக. ஆயுத-தேவ. எ.)

முடங்குளை—சிங்கம். (வைத்தியபரி.)

முடத்தாமக்கண்ணியார்—சங்ககாலத்துப் புலவருளொருவர். (அபிதானசிந்.)

முடத்தி—முடப்பெண். (வழக்.)

முடத்திருமாறன் — இடைச்சங்கமருவிய பாண்டியருளொருவன். (அபிதானசிந்.)

முடம்—1. குற்றம். (உ-ம்.) "பண்ணேபாணிதூக்கேமுடமே" (சிலப். அரங்கேற்-சுசு.) 2. நொண்டி - காலுறுப்புக்குறைந்தவன். 3. வளைவு. (உ-ம்.) "முடமதிமலைந்தான்" (திருவிளை வளையல். கூ.)

முடலை—1. உண்டை. 2. திரட்சி. 3. நாற்றம், (வழக்.) 4. பெருமை. (சூ. நிக. அ. க0.) 5. முறுக்கு. (உ-ம் )"முடலையாக்கைமுழுவலி

மாக்கள்" (பெரும்பாணு. சுக.) 6. வலி. (சூ. நிக. அ: உஅ.) (1,2-சூ நிக. கக: சகரவெ உ.)

முடவன்—1. சநி. (உ-ம்.) "நிடவுயிர்க்கைந் தினும்பத்தினுஞ்செஞ்சுடர்திங்கள்சேயோன்-முடவனுநிற்றந்தைதாய்மாதுலன்பிள்ளைதான் முடியு" (விதான. சாதக. உ.) 3. நொண்டி. (வழக்.) அருணனுக்கும் பெயர்கூறுவர்.

முடவுதல்—நொண்டுதல். (வழக்.)

முடி—1. ஐம்பாலினொன்று. அஃது: உச்சியின் முடித்தல். (பிங்கல. கoஎo.) 2. கிரீடம். (சூ. நிக. எ: உஉ.) 3. குடுமி. (சூ. நிக. உ: கூஅ.) 4. தலை. (உ-ம்.) "மின்னுமுடிமன்னுநதிவீசு திரை" (திருவாத. திருப்பெ. கூ.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. நாற்றுமுடி, மயிர்முடி முதலியன. 7. முடிச்சு. (6, 7-வழக்.)

முடிக்கோரை—ஒரு புல் (வைத்தியபரி.)

முடிச்சு — 1. முடித்தல். 2. முடியப்பட்டது. (1, 2-வழக்.)

முடிதல்—1. அழித்தல். (உ-ம்.) "அடியேனையொக்க முடியாதிருத்தல நியாயமிக்கயமனே" (அரிச். மயா. கூஉ.) 2. கட்டல். (உ-ம்.) "நெய்யினின்முடித்தகூந்தல்" (அரிச். மயா. உ.) 3. வீடுபெறுதல். (சிந்தா.)

முடிந்துக்காட்டல — மேலோர்முடித்தவாறு முடித்துக்காட்டல். அது: தந்திரயுத்திகளினொன்று. (நன். பா. கச.)

முடிதல்—1. கட்டுதல். 2. கருதியபொருடருதல். (உ-ம்.) "அவைதாமுடிந்தாலும் பீழைதரும்" (வள். சுகுஅ.) 3. கெடுதல். 4. சாதல். (சூ. நிக. கூ: உo.) 5. தொடுத்தல். 6. முற்றுதல். (1, 3, 5, 6-வழக்.)

முடிதீட்டினான்—வணங்கினான். (சிந்தா.)

முடிதும்பை—ஓர் பூடு.

முடிதுளக்கி—தலைசாய்த்து. (சிந்தா.)

முடிந்தது—தோன்றியது. (பரிபாடல.)

முடிந்ததுமுடித்தல் — ஓர் யுத்தி. அது: சிறப்புவாய்பாட்டான் முடிந்ததைப் பொது வாய்பாட்டான்முடித்தல். (நன்-பா. கச.)

முடிநர்—முடிவார். (உ-ம்.) "செம்புநிறை கொண்மரும்வம்புநிறைமுடிநரும்" (மதுரை. கூகச.)

முடிநாதம்-இந்திரகோபம்.(வைத்தியபரி)

முடிப்பது-தோன்றுகின்றது.(பரிபாடல்.)

முடிப்பு — 1. தீர்மானம். 2. முடிச்சு. (வழக்.)

முடிமார் — முடிப்பவர். (உ-ம்.) "தாவில் கொள்கைத்தந்தொழின்முடிமார்" (திருமுரு. அகூ.)

முடிமேலழகி-கோடகசாலை. (மலையக.)

முடிமேன்முடி-செருந்தி. (மலையக.)

முடியாமை—முற்றாமை. (வழக்.)

முடியுப்பு—கல்லுப்பு. (வைத்திய-மூ.)

முடியுறுப்பைந்து—கோடகம், கிம்புரி, முகுடம், தாமம், பதுமம். (பிங்கல. கககூக.)

முடிவது—தோன்றுவது. (பரிபாடல்.)

முடிவிடங்கூறல்—ஓர்யுத்தி. அது தான் சொல்லுமிலக்கணத்திற்கு இலக்கியந்தோன்றுமிடத்தைச்சொல்லுதல். (நன். பாயி. கச.)

முடிவில்லாமை—1. அனந்தம். (சூ. நிக. கக: னகரவெ. கo.) 2. நித்தியம். (வழக்.)

முடிவு—1. கடை. (உ-ம்.) "உடுபதத்தினு முடிவில்லை" (பாரத. கிருட். சுo.) 2. சாவு. (வழக்)

முடிவேர்—வெட்டிவேர். (தைல. தைலவ. கூ. ௯.)

முடுக்கர்—1. அருவழி. (சிந்தா. பதுமை. நிக.) 2. நீர்குத்தினஇடம். (உ-ம்.) "குமிழிசுழலுங்குண்டு கயமுடுக்கர்" (மலைபடு. உகூகூ.) 3. மலைக்குகை. (சூ. நிக. ரு: கச.) 4. முடுக்குத்தெரு (பரிபாடல்.)

முடுக்கல்—1. அவசரப்படுத்தல். 2. துட்டல். 3. நெருக்கல். (1, 2, 3-வழக்.)

முடுக்கு—1. கோண். (உ-ம்.) "முடுக்குறு மருப்பிற்கோத்து"(திருவிளை. மாயப். கக.) 2. கோணத்தெரு. (சூ. நிக. ரு. சஎ.) 3. துரிதப்படுதல். 4. நெருக்குதல். 5. மூலை. (3, 4, 5-வழக.)

முடுக்குதல்-1. கடாவுதல். (உ-ம்.) கைவல் கம்மியன் முடுக்கலிற்புரைதீர்ந்து. (நெடுநல். அரு) 2. தாத்தல். (உ-ம்.) மானவெஞ்சினவேன்மள்ளர் வல்லைமேபாய் முடுக்கலுற்றார் (திருவிளை. யானையெய். கூசு.)

முடுகல்-1. எதிர்த்தல் (சூ. நிக. க: சஎ.) 2. துரிதல (உ-ம.) "நடைமறுகியபொடி முடுகிடலும்" (இராமா. இந்திரசித்துவதை க.) 3. சீக்கிரம், விரைவு. (சூ. நிக. கூ: கூக.) 4. வலி. (சூ. நிக. அ: உஅ.) 5. வியாபித்தல். (உ - ம்.) "வெங்கணைத்திரளெரிந்து நீர்முடுகியூழியின் முடிவையொத்தலும்"(ஞானவா. லீலை கதை. எக.)

முடுகியல் — கலிப்பாவினோருறுப்பு. அது அராகம். (பிங்கல. உoஅரு.)

முடுகு-1. முடுகியல். 2. தெரிநிலைப்பகுதி.

முடுகுதல்—1. எதிர்த்தல், முடுகல். 2. சீக்கிரப்படல். 3. நெருங்கல். 4. வலிமையாதல். (1, 2, 3, 4-வழக்.)

முடுகுவெண்பா — ஒருவகை வெண்பா.

அது முன்முடுகு வெண்பா. பின்முடுகு வெண்பா. என இருவகையாம்.

முடும்பைநம்பி—எழுபத்துநான்கு சிம்மாசனதிபர்களிலொருவர். (அபிதானசிந்.)

முடுவல்—1. நாய். (சூ. நிக. ௩: ௨௫.) 2. பெண்ணாய். (உ-ம்.) "முடுவ றந்தலைபைங்கணைத் தடியொடு" (மலைபடு. ௩௬௬.)

முடுவற்படையோன்—1. நாய்களைப்படையாக வைத்திருக்கின்றவன். 2. வயிரவன். (சூ. நிக. ௧: ௨௭)

முடை—1. தவிடு. (சூ. நிக. ௭: ௯௨.) 2. தெரிநிலைப்பகுதி. 3. புலால். (வைத்தியபரி.) 4. புலானாற்றம். (உ-ம்.) "முடைகமழ்ந்துதிர முமிழும்" (கூர்மபு. தக்கன்வமி. ௫௫.)

முடைஞ்சல்—மிடைதல். (வழக்.)

முடைதல்—பின்னுதல். (வழக்.)

முண்டகம்—1. அதர்வணவேதஉபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. ௨௱.) 2. கடன்முள்ளி. (புறநா.) 3. கருக்குவாளிமரம். (மலையக.) 4. கருப்புக்கட்டி. (வைத்தியபரி.) 5. கழிமுள்ளி. (உ-ம்.) "கடுஞ்சூன் முண்டகங்கதிர்மணி கழாஅலவும்" (சிறுபா. ௧௪௮.) 6. கள். 7. தாமரை. (உ-ம்.) முண்டகக்கரத்தாலேந்தி. (அரிச்ச. மாயா. ௨0.) 8. தாழை. (மலையக.) 9. நீர்முள்ளி. (வைத்தியபரி.) 10. நெற்றி. 11. பதநீர். (வைத்தியபரி.) 12. முள்ளுச்செடி. (சூ. நிக. ௪: ௬௯.) (6, 10, 12-சூ. நிக. ௧௧: ணகரவெ. ௭.)

முண்டகாசனை—இலக்குமி. (உ-ம்.) "முண்டகாசனை கொழுநன்ற சமுகனதாவி முடிக்க" (ஏகாதசி. உருக்கு. ௪.)

முண்டகோபநிடதம்—ஓர் உபநிடதம் அதர்வணவேதத்தைச்சார்ந்ததென்பர். அஞ்ஞானமாகிய களுவைச் சிதைத்தற்கு முண்டகம் போலுதலின் முண்டகோபநிடதமென்று பெயராயிற்று. முண்டகம்-மயிரறிகருவி. (அபிதான சேர்.)

முண்டணி—கொட்டாங்கரந்தை. (வைத்தியபரி.)

முண்டநம்—மொட்டை. (வழக்.)

முண்டநி—நொச்சிவேர். (உ-ம்.) இந்திராணிபார்.

முண்டபலம்—தேங்காய். (வைத்தியபரி.)

முண்டம்—1. உடற்குறை. (வழக்.) 2. உபநிடதமுப்பத்திரண்டினுளொன்று முண்டகவுபநிடதத்திற்கு பெயரொன்பார். 3. தலை. (உ-ம்.) முக்கண்ணன்பார். 4. திரட்சி. (சூ. நிக. ௮: ௬.) 5. திரிபுண்டரம். (பெரியபு. மானக்கஞ். ௨௨.) 6. நெற்றி. (சூ. நிக. ௨: ௯௭.)

முண்டன்—மொட்டைத்தலையன். (வழக்.)

முண்டாசுரன்—துந்துபியின் புத்திரன். (அபிதானசிந்.)

முண்டி—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. பிரதிட்டாகலையிலப் புதத்துவத்தி லிருக்கும் எட்டுப்புவனங்களுளொன்று. (சி-வி. கிரி. ௨௯. தாற்.) 3. மொட்டைத்தலையன். (வழக்.)

முண்டித்தல்—, முண்டிதம்—மழித்தல், மொட்டையாக்கல். (சூ. நிக. ௯: ௯0.)

முண்டிதன்—மொட்டைத்தலையன். (வழக்.)

முண்டிரம்—உபநிடத முப்பத்திரண்டினுளொன்று. (பொருட். நிக.)

முண்டீரம்—ஒரு கீரை. (வைத்தியபரி. அநுபந்த.)

முண்டு—முண்டுதல்.

முண்டுதல்—முரண்டு பண்ணல். (வழக்.)

முண்டை—தலையில் மயிரில்லாதவள், விதவை. (உ-ம்.) "பூசிமுடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலு - மாசைமிகுந்த வாசியர்க்காம் - காசிற்ற முண்டையர்க்காக" (ஒழிவி. பொது வி ௫௯.)

முண்ணயகி—ஓர் செடி. (வைத்தியப. அநுபந்த.)

முண்மா—முட்பன்றி. (வைத்தியபரி.)

முண்முருக்கு—ஒருமுருக்கு. நிகண்டிற் கவிரென்பர்.

முணங்கல்—அடங்குதல் அல்விகுதி.

முணங்கு—அடக்கம். (சூ. நிக. ௯: ௧௯.)

முணங்குதல்—முணங்கல்.)

முணை—விகுதி. (சிந்தா.)

முணைஇய—வெறுத்த. (பதிற்றுப்பத்து.)

முணுமுணெனல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)

முத்கலை—இருக்குவேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. ௨௱.)

முத்தக்காசு—கோரைக்கிழங்கு. (உ-ம்.) முத்தக்காசு, சீரகம், இச்சிலி. (தைல. தைலவ. ௫௬.)

முத்தகச்செய்யுள்—தனித்தனியே முற்றுப்பெறுஞ்செய்யுள். (தண்டி. பொருள். ௩.)

முத்தகஞ்சுகம்—தோலுரித்தபாம்பு-முத்தம்-விடுதல். கஞ்சுகம், சட்டை.

முத்தகம்—1. இசைப்பா வகையுளொன்றென்பர். (சிலப்பதிகாரத்தில்.) 2. கருக்குவாளிமரம். (மலையக.) 3. குருக்கத்தி. (பிங்கல ௨௭0௬.) 4. தனித்தனியே முற்றுப்பெறுஞ்செய்யுள். (தண்டி. பொ. ௩)

முத்தகேசி—ஒருபாலாரிட்டதேவதை.

முத்தங்கொள்ளல்—முத்தமிடல். (உ-ம்.)

"அழகியபிரானேனுவென்னுவள்ளி முத்தங்கொண்டு" (திருவிளை. இரச. ௨௧.)

முத்தசீவான்மா—மலங்கழன்று சிவதத்துமடைந்த ஆன்மா. (சி. சி. ௨. ௭௬. ஞாநப.)

முத்தம்—1. இசங்கஞ்செடி. (வைத்தியமூ.) 2. உதடு. 3. எண்வகையோகவுறுப்பினென்று. (ஆதனம்பார்.) 4. கொஞ்சுதல். (உ-ம்.) "வருதுளிமுத்தமத்தாய் வாய்முத்தங்கொள்ளமாற்றி" (பெரியபு. கண்ணப். ௨௬.) 5. கோரைக்கிழங்கு. (வைத்தியபரி.) 6. சிற்றுமணக்கங்கொட்டை. (தைல. தைலவ. ௧௬௫.) 7. நவமணியிற் கருடப்பச்சையின்குணம். அது குல்லைநிறம். (திருவிளை. மாணிக்க. ௬௬.) 8. பிரியம். 9. மருதநிலம். 10. முத்தப்பருவம். (பிள்ளைத்தமிழிலறிக.) 11. முத்து. அம்சாரியை. 12. விடுதல். (2, 8, 9, 11-சூ. நிக. ௧௧: தகரவெ. ௨௪.)

முத்தமிழ் — இயலிசை நாடகமென்னு மூவகைத்தமிழ். (சூ. நிக. சிறப்பு. ௫.)

முத்தர்—முத்திக்குரியோர். (வழக்.)

முத்தரையர்—சேரனுடு, சோழனுடு, பாண்டிநாடு. என்னு மூன்று நிலங்கட்குந்தலைவராகிய பெருஞ்செல்வரென்க. (நாலடியார். தாளாண்மை. ௪௦. உரை.)

முத்தலைக்கழு—சூலம். (உ-ம்.) "முத்தலைக் கழுக்கள் வீசுவன. (திருவிளை. நகர. ௨௪.)

முத்தலையயில்—சூலாயுதம். (உ-ம்.) "அல்லதங்கவர்தங்களைமுத்தலையயிலான்மெல்லலவேயெடுத்தேந்திடும்" (கந்தபு. ததீசியுத்.)

முத்தலைவேல்—சூலம். (பிங்கல. ௧௬௬௫.)

முத்தவி — ஆமணக்கெண்ணெ. (முசலம் பார்.)

முத்தவிராழ்—கொற்றக்குடை. (சிந்தா.)

முத்தாசி—முருங்கை. (வைத்தியபரி.)

முத்தன்—1. அரன். (பிங்கல. ௬௪.) 2. முருகன். (சூ. நிக. ௪: ௬.) 3. முத்திபெற்றோன் (வழக்.) 4. வயிரவன். (சூ. நிக. ௧: ௨௭.)

முத்தாகரம்—முத்துச்சிப்பி. முத்துக்குறைவிடமானது.

முத்தாடல்—முத்தமிடுதல். (வழக்.)

முத்தாதநம் — இடக்காற் பரட்டாற் சீவனியையழுத்தி வலக்காற்பாடு அப்பரட்டின் கீழழுந்தவிருத்தல். (ஆசனம்பார்.)

முத்தாதி—1. கோரைக்கிழங்கு. 2. அமுக்குராக்கிழங்கு. (வைத்தியபரி.)

முத்தாந்தம்—முத்தியந்தம். (முத்திமுடிவு.) (சி சி. அ. ௧௬. சிவஞா.) முத்தியந்தம் முத்தாந்தமென மரீஇயிற்று.

முத்தாபலம்—இசங்கு. (சூ. நிக. ௫: ௬௪.)

முத்தாமணக்கு—ஓராமணக்கு. (வழக்.)

முத்தாலதை—சமஸ்கிருத தருக்க சாஸ்திரம். என்பர்.

முத்தாலை—ஒருதொட்டியப்பெண். இவள் கற்புகுறைந்தனளென்று சந்தேகித்து இவள் தமையன்மரர், இவளைக்கருமவசத்தாற்கொல்லத்தொடங்கும்போது. இவள் குசவனை வேண்டி மட்கலம் சுடுசூளையிற்புகுந்து வெந்து நீறாகித்தெய்வமாகினள். இவளை முத்தாலம்மனென்று பெயர்கூறுவர். (அபிதாநசிந்.) தொட்டியர் வழிபாடுசெய்வர். (வழக்.)

முத்தாவதேசுரர் — திருத்துருத்தியில் எழுந்தருளியவிறைவர் பெயர். (அபிதாநகோ.)

முத்தான்மா — மலம்நீங்கப்பெற்றவான்மா. (சி. சி. ௧. ௬௬. ஞாநப்.)

முத்தானம் — மூவகைத்தானம். உத்தமதானம, மத்திமதானம், அதமதானம். (சூ. நிக. ௧௨: ௧௧.)

முத்தி—1. கொஞ்சுதல். (முத்தங்கொண்டு.) (உ-ம.) "மடிமீதடுத்து விளையாடிநித்த மணிவாயின் முத்திதரவேண்டும்" (திருப்பு. ௧அ௬.) 2. பதமுத்தி, பரமுத்தி. என இருவகைபடும். அவற்றுள், பதமுத்தியாவது—சாலோகம், சாமீபம், சாரூபம் என மூன்றும். பரமுத்தியாவது—சாயுச்சியமெனவொன்றும். இவற்றை முறையே சரியை, கிரியை, யோக, ஞானமஎன நான்கினையுமுடையார் அடைவரென்பதாம். (அபிதாநசிந்.) 3. பிறப்பு நீங்குதற்கும் பெயர் கூறுவர்.

முத்திகம்— யசுர்வேதவுபநிடதங்களுளொன்று. (கூர்ம. அட்டமூர்த். ௨௧. உரை.)

முத்திசாதநம்—முத்தியைச்சாதிக்குங் கருவியாயுள்ளவை. அவை; தீக்ஷையும், அதற்கங்கமாகிய சரியை முதலியவைகளும். (உ-ம்.) "உதவேமுத்திசாத நவித்தினைத் தவிரவேறுண்டோ" (சிவரக். உருத்திரா. ௬௬.)

முத்தித்தலம்—அயோத்தி, மாயாபுரி, மதுரா, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என ஏழாம். இவைகளைச்சத்தபுரியென்பர். (அபிதாநசிந்.)

முத்திதன்—முத்தியைத்தருபவன். கொடுப்பவன்.

முத்திநெறி—ஞானமார்க்கம். (உ-ம்.) முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனை. (திருவாச. அச்சோ.)

முத்திப்பதம்— பதமுத்திகள். (காஞ்சிப். தழுவக்குழைந். ௬௪.)

முத்திமண்டபம்—காசியில் விசுவநாத சந்நிதியிலுள்ள மண்டபம். (உ-ம்.) "விசுவலிங்க

பூசைபுரி கருணையாளர்-நேசமுற முத்திமண்டபத்தையன்னபூரணியை நினைக்கின்றோர்கள்" (சிவரக. நந்து-கடனுக்கு. ௨௦.)

முத்திமுடிவு—சாயுச்சியம். (சி. சி. அ. கஅ.)

முத்தியிரண்டு—இருவகை முத்தி. அவை சிவன்முத்தி விதேகமுத்திகள். பதமுத்தி, பரமுத்தி எனவுங்கூறுவர்.

முத்திரமம்—இலவங்கப்பட்டை. (வைத்தியபரி.)

முத்திராங்கிதன்—முத்திரிக்கப்பட்டவன் (வழக்.)

முத்திரி—அடையாளம். (வழக்.)

முத்திரிகை—முத்திரை.

முத்திரித்தல்-முத்திரைவைத்தல். (வழக்.)

முத்திருக்கஞ்சேடி—ஒரு பூடு. (வைத்தியமூ. தி.)

முத்திரை—1. அடையாளம். இலாஞ்சனையென்பர். (பிங்கல. ௨௨கஙு.) 2. சந்தருவவேதத்திலே சொல்லப்பட்டவிளைவாய்க்கடுத்த எட்டாவது துளை. (பெரியபு. ஆனாய. ௨சு. உரை.) 3. தேவர்களைச்சந்தோஷிப்பித்தலும் அசுரர்களைத்துரத்தலுஞ் செய்வதாகியவொருவித அடையாளம். ஆவாகனம், தாபனம், சந்நிதானம் முதலிய பலவகைப்படும் அவையெல்லாம் நித்தியகன்ம நெறியில் விரிவாகக்காணலாம். (அபிதானசிந்.)

முத்திரைநான்கு—சாம்பவி, கேசரி, ஞானம் மௌனமென்பன. (தனி. போ. க௦௪.)

முத்திரையாழி — முத்திரை மோதிரம். (உ-ம்.) "எடுத்து முத்திரையாழியுமீந்தனன்" (சிவரக. மேரு. சுக.)

முத்திவிக்கினம்-முத்திக்கிடையூறு. அஃது அறியாமை, ஐயம், திரிபு. (அபிதானசிந்.)

முக்கிவிக்கினத்திரயம்—அஞ்ஞானம், சமுசயம், விபரீதம், என்பன இம்மூன்றும் முத்திவிக்கினமாம்.

முத்திளம்—கக்கரிக்காய். (வைத்தியபரி.)

முத்தீ— 1. ஆவகனீயம், தெட்சணாக்கினி, காருகபத்தியம். அவை: சதுரமும் முக்கோணமும் வில்வடிவமாயுமுள்ளன. (திருவிளை. சுஙு. குறிப்பு.) 2. மூவகைத்தீ. இவை உதரத்தீ, விந்துத்தீ, சினத்தீ என்பன. (சூ. நிக. கஉ: எ.)

முத்து—1. ஓரிரத்தினம். (சூ. நிக. கூ: கூ.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

முத்துக்குமாரன் — புள்ளிருக்குவேளூர் முருகர்பெயர். (உ-ம்.) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.

முத்துக்குளித்தல்—முத்தெடுக்கநீரில்முழுகல். (வழக்.)

முத்துக்கோட்டை — ஆமணக்கங்கொட்டை. (வழக்.)

முத்துச்சம்பா—ஒரு நெல். (வழக்.)

முத்துச்சல்லி—முத்துக்கோவையாற் செய்யப்படுந் தொங்கல்விசேடம். (வழக்.)

முத்துச்சலாபம்-முத்துக்குளிப்பின்பேறு. (வழக்.)

முத்துச்சநிக்குமிடம்— முத்துக்கள் பிறக்குந்தானம். அவை: (காூ-ஆம். திருவிளை. மாணிக்க. ருக-முதல் ருகூ-வரை காண்க.) இப்பதின்மூன்றுடன் வேறு எழுசேர்த்து இருபதாகவுங் கூறுவர். (அபிதா ௯௪௦.)

முத்துச்சோளம் — ஒருவகை வெள்ளைச்சோளம். (வைத்தியபரி.)

முத்துடக்கன் — நிலக்கடம்பு. (வைத்தியபரி.)

முத்துதல்—சேர்தல். (சிந்தா.) முத்தமிடுதலுமாம்.

முத்துநீர்—பனிநீர். (பரிபாடல்.)

முத்துமாதளை—ஓர் மாதுளை.

முத்துளம்—மூங்கில். (வைத்தியபரி.)

முந்தை—1. கோரைக்கிழங்கு. (தைலவ.) 2. கிரட்சி. (பிங்கல. ௨௩ஙு.) 3. மிகவுந்தெளிவிலான்.

முத்தையன்— புள்ளிருக்குவேளூர் முருகக்கடவுளின்பெயர்.

முத்தொருகன்—நிலக்கடம்பு. (வைத்தியபரி.)

முத்தொழில்— 1. முச்செயல். அது: சிருட்டி, திதி, சங்காரமென்பன. (வள். கடவுள் வா. உரை.) 2. வைசியர் பொதுத்தொழில்.

முத்தொள்ளாயிரம் — ஒரு நூல். சேர சோழ பாண்டியர் ஒவ்வொருவருக்குந் தொள்ளாயிர வெண்பாவாகச் சங்கமருவியபுலவர்கள் செய்தது. இக்காலத்தில் சிலகவிகளே இருக்கின்றன. (அபிதானகோ.)

முதங்கி — வெள்ளைக்கத்திரி. (வைத்திய. அரும்.)

முதம்—உவகை. (உ-ம்.) "வரிகழல்வநசப் பொற்றாண்முதமுறப்பாவிப்பாவித் தமர்ந்தனன்" (வேதாரணியபு. விசுவாமித்திரர் மேநகைச். கஙு.)

முதல் — 1. அடி. (சிந்தா-நாம. ௨ருசு.) 2. ஆகாயம். (பரிபாடல்.) 3. ஆதி. (உ-ம்.) "முதலிடைகடையில்லாத்தேவரும்" (கந்தபு. ததீசியுத். கருரு.) 4. இடம். (சூ. நிக. ரு: சுரு.) 5. ஓர் எழுத்துரு. (உ-ம்.) "சுரன்முதல்வந்தவுரன்மாய்மாலே" (நன்னூ. பெயரிய. சரு. உரை.) 6. கடவுள். (உ-ம்.) "முடியாமுதலே" (திரு

வாச.) 7. காரணம். (உ-ம்.) "நோய்முதனாடி" (வள்-கூசஅ.) 8. சிறுநூறு. (உ-ம்.) "முளி முதல்" (கலித். கூக.) 9. தெரிநிலைவினைப் பகுதி. 10 முதலவன். (சிந். உகூச.) 11. முதற்பொருள். (சிந்தா.) 12. வட்டிக்குக்கொடுக்கும்பணம். (வழக்.)

முதல்வள்ளல்—செம்பியன், காரி, விராடன், நிருதி, துந்துமாரி, சகான், நளன் என வெழுவர். (சூ. நிக. உ: உரு.)

முதல்வன்—1. அரசன். (பிங்கல. எகூரு.) 2. அரன். (உ-ம்.) "முப்புரமுறித்தசெங்கண் முதல்வனதருளால்" (கந்தபு. பிரமயாகப். க.) 3. தந்தை. (கலித். உஉ௫.) 4. தலைவன். (உ-ம்.) "முற்றுநீர்க்கடலிற்றமியனாய்ப்போதுமுதல்வன்யாரெனவயனுரைத்தான்" (கூர்மபு அரியய. கரு.) 5. முன்னவன். (வழக்.)

முதல்வி—தலைவி. (சூ. நிக. உ: கூஉ.)

முதலக்கரம் — முதலெழுத்து முப்பது. அவை: உயிர் பன்னிரண்டுமெய் பதினெட்டென்பர். தொல். எழுத். க.)

முதலது — முதலானது.

முதலநுமானம் — சூன்முதிர்ந்தமுகிலைக் கண்டகாரண ஏதுவாகக்காரியமாகிய மழை பெய்யுமென்றுணர்தல். முதற்காரணத்தைக் கொண்டநுமானித்தல்.

முதலல்—1. தொடங்கல். 2. முதலாகவருதல். (தொல். எழுத். கூஎ.) முதலுதல் எனவும் வரும்.

முதலவன்—முதல்வன்.

முதலா—தோன்றாத. (சிந்தா.)

முதலாயிரம்— திவ்யப்பிரபந்தத்துள் பெரியாழ்வார் முதலிய எழுவர் அருளிச்செய்த பத்துப் பிரபந்தங்களுள்ளது. (மணிமேகலை.)

முதலாளி — முதன்மைக்காரன். (வழக்.) முதல்-வட்டிக்குக்கொடுக்கும்பணம். ஆளி-ஆள்பவன். பணத்தையாள்பவன் எனவுங்கூறுவர்.

முதலி — 1. கர்த்தா. (உ-ம்.) "அறிந்திடு முதலியாயின்" (சி. சி. ௩: ௪ ஞாநப்.) 2. முதலவன். (பெரியபு. கண்ணப்ப. ககவ.)

முதலுதல்-1. தொடங்கல். 2. முதலாதல். முதலல் எனவும் வரும்.

முதலெழுஞ்சநி—மகம் (சூ. நிக. க: எக.)

முதலெழுத்து — தனியெழுத்து. அஃது: உயிருமெய்யுமாகியமுப்பதெழுத்து. (நன்னூ. எழுத்தியல். ௪.)

முதலை—1. கரா. 2. செங்கிடை. 3. மயிலிறகடிக்குருத்து. (1, 2, 3-சூ. நிக. கக: தகரவெ. உகூ.)

முதலைக்கோரை—ஒருபுல். வழக்குண்டு போலும்.

முதலைப்பூண்டு—ஒரு பூண்டு. (வைத்தியபரி.)

முதலோன்—முதல்வன்.

முதள்—மொக்கு (வைத்தியபரி.)

முதளை — 1. ஒரு நீர்ப்பூண்டு. 2. முதலை. (வழக்.)

முதற்கருவி—மத்தளம். (சிலப்.)

முதற்காரணகாரியம் — ஆதிகாரணகாரியம். (நன்னூ. பெயரிய. ௪க. உரையிலறிக.

முதற்காரணம்— காரியத்தோடொற்றுமையுடையதாய் அக்காரியத்திற்காதியாயிருப்பது.

முதற்சங்கம் — இது தென்மதுரையிலுள்ளது. (அபிதானகோ.) இச்சங்கத்திருந்ததமிழாராய்ந்தோர் நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பது என்பர்.

முதற்பா—வெண்பா, யாப்-காரிகை. செய்யுளியல் கு-ஆம் பாட்டுரையில் ஆதிப்பா என்றார்.)

முதற்பெயர்— முதலைக்குறித்துவரும் பெயர். (நன்னூ. பெயரிய. உ௫.)

முதற்பேறு—1. தலைப்பிள்ளை. (வைத்தியபரி.) 2 முதற்பலன். (வழக்.)

முதற்பொருள்—1. அகப்பொருள் மூன்றினொன்று. (உ-ம்.) அகப்பொருள்பார். 2. எவற்றிற்கும் முதல்வராயிருக்குங்கடவுள். (உ-ம்.) உத்தாநம்பார். 3. மூலதனம். (வழக்.)

முதற்று—முதலாகவுடையது. (புறநா.)

முதன்மடக்கு—மடக்கலங்காரத்துளொன்று. அஃது: அடிகளொன்றேனும் பலவேனும் அடி முதலில் மடங்கிவருவது. (தண்டி-சொல்லணி. உ)

முதன்மாணாக்கர்—முதற்பக்ஷமான சீடர். (நன்னூ-பாயிர. ௯அ.)

முதன்மை—1. அதிகாரம். (உ-ம்.) "முப்பொருளுமபபொருட்குமுதன்மையாகும்" (சிவஞா. சிவதன்மா. உ௦.) 2. முன்னீடு (வழக்.)

முதனாள்—1. அசுபதி. (சூ. நிக. க: கஎ.) 2. முந்தினநாள். (வழக்.)

முதனிலை—1 காரணம். (தஞ்சைவா.) 2. பகுதி. (நன்னூ பதவிய. உரை.)

முதனிலைத்தீபகம்— செய்யுளலங்காரத்தினொன்று. அது: தீபகச்சொல் முதனிற்பது. (தண்டி. பொருள-௯அ.)

முதனிலைத்தொழிற்பெயர்— தொழிற்பெயர்விகுதிகுன்றி முதனிலை மாத்திரமே தொழிற்பெயராய்ப்பொருள்தருவது. (நன், மெய்யீ ௪-உரை.)

முதனூல் — எடுத்துக்கொண்ட விஷயத்தைக் குறித்து வேறொருநூலைப் பின்றொடரா தூமுதலாகச் செய்யப்படுநூல் எனினுமாம். (உ-ம்.) "முனைவன்கண்டது-முதனூல்" (நன்னூ. பாயிர. கூ.)

முதாரி—1. நிறைகன்றுத்தாய்ச்சி. 2. முதுகன்று. 3. முதுமை. (உ-ம்.) "முதாரிப்பாண" (புறநா. காகூஅ.) 4. முன்கையின்மாதரணியுமோரணி. (உ-ம்.) "முன்கைமுதாரியிட்டகையைக்காட்டாய்" (குற்றாலக்குறவஞ்சி குறத்தி சொல்வது.)

முதிசல— அரத்தை. (வைத்தியபரி.)

முதிதபாவனை—ஐந்துபாவனைகள். அவை: ஆக்கமுடையோர்களுடைய நல்ல அதிர்ஷ்டமானது எப்பொழுதும் நீங்காதிருத்தல் முதலியன. (பௌத். மணிமே.)

முதிதம்—உவகை.

முதிது—முதியது.

முதிதை—மகிழ்ச்சி. (பரிபாடல்.)

முதியதுழல்— குதிரை வாலிப்பூண்டு. (தைல தைலவ. எக.)

முதியகோல்லை—பழங்கொல்லை. (சூ. நிக. ரு. ஆவதில். முதைப்புனமென்பர்.)

முதியம்—நாய்வேளை. (மலையக.)

முதியர் — 1. பெரியார். 2. மூத்தோர் (1, 2-வழக்.)

முதியார்கூழல்—முதியார் கூந்தல். (தைல. தைலவ. கக.)

முதியாள்—மூத்தவள். (உ-ம்.) முந்தையின் முதியாளொடு முருகனைமுறையிற்கூவி. (கந்தபு. வள்ளி. கருரு.)

முதியான்—1. ஓர் பறவை. 2. மூத்தவன். (வழக்.)

முதியோர் — 1. பெரியோர். (பெரியபு. தடுத்தாட். அ.) 2. மூத்தோர். (வழக்.)

முதிர்—முதிர்ந்த, முதிர்கின்ற, முதிருமென வினைத்தொகையாகவரும்.

முதிர்ச்சி—முதிர்வு. (வழக்.)

முதிர்தல்—1. சூழ்தல். 2. தேறுதல். 3. பழுத்தல். (உ-ம்) "வநசார" பார். 4. முற்றுதல். 5. வளர்தல். (1, 4-சிலப்) (2, 3, 5-வழக்.)

முதிர்ப்பு—முதிர்ச்சி. பு. தொழிற்பெயா விகுதி

முதிர்பு — 1. முதிர்ந்து. வினையெச்சம். (புறநா.) 2. முதிர்வு.

முதிர்வித்தல்—பக்குவமாக்குதல். (உ-ம்.) "மலமுதிர்வித்து" (சி. சி. அ. கo. மறை.)

முதிர்வு—முதிர்ச்சி. (வழக்.) மூப்புமாம்.

முதிர்வேனில் — ஆனி. ஆடியின்பருவம். (சூ. நிக. க: அஎ.)

முதிர்வேனிலுரிமை — தென்றற்காற்று வீசலும், கானறேன்றலும், காடை, வலியான், வானம்பாடி, காகம், கவுதாரி இவை மகிழ்தலும், மல்லிகை, புளி, பாதிரி இவை மலர்தலும், பாலை, காஞ்சிரம், நாவல், இலுப்பை இவை காய்த்தலுமாம். (தொன்னூல்.)

முதிரம்—ஒரு மலை. (உ-ம்.) "மட்டார்மறுகின் முதிரத்தோனே" (புறநா. கசுo.) மேகத்துக்கும் பெயர் கூறுவர்.

முதிருதல்—முதிர்தல் உ-சாரியை.

முதிரை—1. அவரை, துவரை முதலியன. (பதிற்றுப்.) 2. கொள்ளு. (தைல. தைலவ. எகூ.) 3. பயறு. (1, 2, 3-மலையக.)

முது— 1. பேரறிவு. (பத்துப்பாட்.) 2. பழமை. மை. விகுதி குறைந்து நின்றது.

முதுக்குறைதல்—1. அறிவுமிகுதல். (உ-ம்.) "முகத்தின் முதுக்குறைந்ததுண்டோ" (வள். எoஎ ) 2. பெண்கள் பருவமாகிப்புத்தியறிகை. (யாப். காரி. உறுப்பியல். கரு. உரை.)

முதுக்குறைந்தோர் - பேரறிவுடையோர். (உ-ம்.) 'முற்றத்துறக்கு முதுக்குறைந்தோர்' (கூர்ம. உ: உo.)

முதுக்குறைமை—பேரறிவுடைமை. (சிந்தா. குண. உoக.)

முதுக்குறைவு—முதுக்குறைதல்.

முதுகாஞ்சி—புறப்பொருள் வெண்பாமாலையிலொருதுறை. அதுமேலாயவரும்பொருளைத் தக்கபடியறிவித்து நிலைநில்லாமையைமுறைப்படச்சொல்லியது.

முதுகாடு—சுடுகாடு. (உ-ம்.) "முதுகாட்டிற்காக்கையுவக்கும்பிணம்" (வாக்குண்டாம். உச.)

முதுகு—1. பின்புறம். (சூ. நிக. உ: கூஅ.) 2. புறம். (உ-ம்) "பருப்புமுதுகிற்செம்பொற்சிகரமென" (திருவிளை. விருத்த. உச.)

முதுகுப்பிளவை—ஓர் சிலந்தி. (வழக்.)

முதுகுன்று—திருமுதுகுன்று. அது விருத்தாசலம். (வழக்.)

முதுசொல்—பழஞ்சொல். (சூ.நிக.கo.கo.)

முதுநாரை — முதற்சங்கத்தார் இயற்றிய தமிழ்நூல். (அபிதானசிந்.)

முதுபாலை—ஓர் துறை. கானகத்துக்கணவனையிழந்த மடந்தையது தனிமையைச்சொல்லியது (புறப். வெ. மாலை.)

முதுமக்கட்டாழி—பிணங்களையிட்டுமேலே மூடி கவிக்குஞ்சாடியென்றும், இன்னும் பண்டைக்காலத்தில் முதிர்ந்தவர்கள் துன்பமின்றி

யிருத்தற்காகவும், ஒருவகையார் தவஞ்செய்தற்காகவும் உபயோகிக்கப்பட்டுவந்த தாழிகளும் இப்பெயரால் வழங்கப்பட்டுவந்தன என்றுங்கூறுவர். (மணிமே.)

முதுமகன்—1. சனி. (சூ. நிக க: கூ.) 2. விருத்தன். (உ-ம்.) தொடி பார்.

முதுமை—1. பழமை. (பிங்கல. ௨௨௦அ.) 2. பழமொழி. (சூ. நிக. க0: க0.) 3. மூப்பு. (வழக்.)

முதுமொழி—1. பழஞ்சொல். (வழக்.) 2. பிரணவம். (கலித். ௩௩௩.) 3. வேதம். (பரிபாடல்.)

முதுமொழிக்காஞ்சி — 1. ஒரு துறை. அது அறிவுடையோர் உலகியலுள் முடிந்த பொருளாகிய அறம் பொருளின்பத்தையறியச் சொல்லியது. (புறப். வெண்.) 2. ஒரு நூல். (வழக்.)

முதுமொழிவஞ்சி—ஓர் துறை. பழைய வரலாறறிவினையும் வாளினையுமுடைய மறக்குடியில், தன் அப்பனுடையநிலைமையைச்சொல்லியது. (புறப். வெண்.)

முதுவர்—1. புலவர். 2. மந்திரியார். (சூ. நிக. உ: உக.) 3. மிக்கார். (உ-ம்.) 'முதுவருண் மூந்துகிளவாச்செறிவு" (வள். எகடு.) 4. மூத்தோர். (வழக்.) 5. மூதுணர்ந்தோர், பழமையறிந்தோரெனினுமாம். (சூ. நிக. உ: ச0.)

முதுவுழிஞை — காவற்காட்டினையுடைய குறும்பிலேயிரைகண்டுபாயும் பறவையொப்ப வீரர்கைவளர்ந்துகுதித்தது.(புறப்.பொ.மாலை.)

முதுவெள்ளிலை-ஓரூர். இது குறிஞ்சிநில மன்னவரிருப்பு. (உ-ம்.) "முதுவெள்ளிலை மீக்கூறும்" (மதுரைக்காஞ்சி. ௧௧௯.)

மூதைப்புனம்—பழங்கொல்லை. (சூ நிக. இ: கூக.)

முதையல்—1. கபெரு. (வைத்தியபரி.) 2. முதிர்காடு. (சூ. நிக. ச: ௫ள.)

முந்த—முற்பட, முன்னுக.

முந்தல்—முந்துதல், முற்படல். (இராமா. கிட்கிந்தா. அரசியற். உக.)

முந்தன்—1. ஆன்மா. (உ-ம்.) "முந்தனை யான்மாவென்று மான்மாவைமுந்தனென்றும்" (சி. சி. ச: உஅ.) 2. கடவுள். (சி. சி. ௩: உஅ.) 3. மூத்தோன். (வழக்.)

முந்தி—1. முன்றானை. (உ-ம்.) அரண்மனை மோர்முந்தியிலாவது வாங்கவேண்டும் (வழக்.) பாத்திரமில்லையென்றுவாங்காதிருந்தாற்பின்பு வழக்கமில்லை யென்று சொல்லுதற் கிடமாம் அதனால், முந்தியிலாவதுவாங்கியொழுகவிட்டு விடவேண்டுமென்பதுகருத்து. 2. முன்னுக.

முந்திரி—ஒரு சிற்றிலக்கம். அது மூந்நூற்றிருபதுபாகத்திலொன்றாளன்சுவடியிற்காண்க.

முந்திரிகை—1. ஒருமரம். (சூ.நிக.ச:உ௩.) 2. ஓரெண், முந்திரி. (நன்னூ. உயிரீற்று. சகூஉரை.) 3. கொடிமுந்திரிப்பழம். (உ-ம்.) அசீதளம்பார். (1, 2-வழக்.)

முந்தினசங்காரம்— பிரகிருதிமட்டு மழிகிற சங்காரம். (சி. சி. க௯டு. மறை.)

முந்து—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. பழமை. (சூ. நிக. அ: சடு.) 3. முற்பட.(உ-ம்.) "முந்துநீகண்டுழி முகனமர்ந்தேத்தி" (திருமுரு. உடுக.)

முந்துதல்—முந்தல்.

முந்துறக்காண்டல்—அகப்பொருட்டுறையினொன்று. அகப்பொருளில் இடந்தலைப்பாட்டின் விரிவிற்காண்க

முந்துறல்—முற்படுதல்.

முந்துறுத்து-முன்னிட்டுக்கொண்டு. (புறநா.)

முந்தூழ்-1. பழவினை. 2. மூங்கில். (உ-ம்.) "கூழுற்றலமருமுந்தூழகலறை" (மலைபடு. க௩௩.)

முந்தை-1. இளமைப்பருவம்.(திரிகடு.௫.) 2. பழமை. (உ-ம்.) "முந்தைமறை" (பெரியபு. ஆனாய. க௨.) 3. முன்னே. (புறநா.)

முந்தையோர்-முன்னோர். (உ-ம்.) "முழுதுலகழித்ததந்தை முந்தையோர் முறையினின்றும்வழுவினன்" (இராமா. அயோத். ௫க.)

முந்நாடு-சேரசோழபாண்டியர்களுக்குரிய மூன்றுநாடு. வள். மாலை, மும்மலையுமுந்நாடும் என்னும் வெண்பாவிலறிக.

முந்நீர்-கடல்.(சிந்தா.அவைய.உ.)[படைத்தல், காத்தல், அழித்தலென்னுமுந்நீர்மையையாற்பெற்றபெயர்.] மூன்றுநீரையுமுடையதென்பாருமுண்டு. அவை ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீரென்பர். புறநானூற்றில்.

முந்நூல்—1. பூணூல். (உ-ம்.) "தன்னுராமுலாவு முந்நூலெனவேயணிந்துறையும்" (கந்தபு. ததீசியுத்தா. க௨.) 3. மூவகைநூல். அது முதனூல், வழிநூல், சார்புநூல் என்பன (நன்னூ. பாயிர. ௫.)

முநி—முனிபார்.

முப்பகை — முத்திவிக்கினமாகிய பகை மூன்று, அவை காமம், மயக்கம், வெகுளியென்பன. முக்குற்றமென்பனவுமாம்.

முப்பத்தாறுதத்துவம் — சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை எனச்சிவதத்துவமைந்தும், காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை எனவித்தியா

தத்துவமேழும், மனம், சித்தம், புத்தி, அகங்காரம், செவி, தோல், கண் முதலிய ஆன்மதத்துவமிருபத்துநாலுமாம். (கந்தபு. நவ. ௬௯.)

முப்பத்திரண்டறம்— ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்ட நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ் சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெ, பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கந்நிகாதானம் என்னும் முப்பத்திரண்டுவகைத் தருமம். (உ-ம்.) (சிவாக. நைமி. ௨௧.) காஞ்சிப்புராணங்கழுவாய்ப்படலத்திற் சிலவேறுப்படுத்துக்கூறுவர்

முப்பத்திரண்டுபசாரம்—ஆசமநம், ஆவாகநம், பாததியம், அர்க்கியம், ஆசமநீயம், ஸ்நாநம், வஸ்திரம், எக்கியசூத்திரம், பூஷணம், கந்தம், அக்ஷதை, புட்பம், தூபம், தீபம், நைவேத்தியம், அமுதாசநம், நிசாதநம், தர்ப்பணம், பலார்ப்பணம், தாம்பூலம், பிரதெக்ஷணம், நமஸ்காரம், தோத்திரம், புராணபடனம், சாத்திரம், சாமரம், விசிறி, மஞ்சம், சங்கீதம், கண்ணாடி, வாச்சியம், ஆத்மாரோபணம். (த-நி-போ.)

முப்பத்துமூவர்தேவர்—ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர்பதினொருவர், வசுக்களெண்மர், அசுவனிதேவர்களாகிய மருத்துவரிருவர் என்பர். இம் முப்பத்துமுக்கோடிதேவர்க்கும் தலைவர் முப்பத்துமூவரென்பர். (பொருட்டொகை. நிக.)

முப்பலை—கடு-நெல்லி. தான்றியென்பன. (சூ. நிக. ௧௨: ௧௩.)

முப்பழம் — முக்கனி. அவை: மா, பலா, வாழை இவற்றின்கனி. (சூ. நிக. ௧௨: ௬.)

முப்பாட்டன்—பாட்டனுடைய பாட்டன். (வழக்.)

முப்பாட்டி—முப்பாட்டன்மனைவி. (வழக்.)

முப்பால்–1. அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பன. (உ-ம்.) திருக்குறளிற் காண்க. 2. ஆண், பெண், அலி எனவுங்கூறுவர். 3. சிவஞானபோதத்தில். அவன், அவள், அது என்பர்.

முப்பாலகர்—மூவகைப்பாலகர் அவர்பால் குடிக்கும்பாலகர், பாலுமன்னமுமருந்தும்பாலகர், அன்னமாத்திரம்புசிக்கும் பாலகர். (தைல. தைலவ. ௧௧௭.)

முப்பாலர்—முப்பாலகர். (தைல. தைலவ. ௧௧௬.)

முப்பாழ்— அசுத்தமாயைப்பாழ், சுத்தமாயைப்பாழ், மகாமாயைப்பாழ் என்பன. (கூர்ம பு.. திருக்கல். ௪௪. உரை.) சகம், சீவன், ஈசுரன் இம்மூன்றும் முப்பாழென்பர்.

முப்பான்–முப்பது. (நன்னூ. உருபுபுணரி. ௪௦. உரை.)

முப்பிணி—மூன்றுவியாதி, அவை: வாத, பித்த, சிலேற்பன மென்பன. (தைலவ.)

முப்புடைக்காய் — தேங்காய். (காஞ்சிப். நகரப். ௨௪.)

முப்புரம்–திரிபுரம், அவை: இருப்புமதில், பொன்மதில், வெள்ளிமதிலென்பன. (பொருட்-நிகண்.)

முப்புரமெரித்தான்— 1. சிவனார்வேம்பு. 2. பங்கம்பாளை. (1, 2-வைத்தியபரி.)

முப்புரி — 1. முப்புரம். 2. மூன்றுகயிறு. (வழக.)

முப்புரிநூல் — பூணூல். அது: மூன்றுபுரி சேர்ந்தநூல். (வழக்.)

முப்புருடத்துவம்–தூலபுருடத்துவம், சூக்குமபுருடத்துவம், பரபுருடத்துவம் என்பன. (சி. சி அ: ௬௦. ஞானப்.)

முப்புவநம்—சுவர்க்கம், மத்தியம், பாதலமென்பன. (உ-ம்.) "தருவானுமுப்புவனத்தினுமில்லை" (திருவிளை. தலவிசேட. ௨.)

முப்புள்ளி — ஆய்தவெழுத்து. ஃ இம்மூன்றுபுள்ளியுங் கேடகமென்னு மாயுதத்திலிருக்கின்ற முப்புள்ளிபோலிருத்தலால், ஆய்தப்புள்ளி, ஆய்தமுப்புள்ளி, புள்ளியெனப் பெயர்கூறுவர். (நன்னூல். குறியதன்முன்னர் என்னுஞ்சூத்திரவுரையிற்காண்க.)

முப்பூப்புடம் — மூவிதமாகிய பூப்புடம். அவை: மணவைப்பூப்புடம், குழிப்பூப்புடம், பதனப்பூப்புடம் என்பன. (தைல. வைத்தியசாலைவிதி. ௧௨.)

முப்பூரம் — பூரம், பூராடம், பூரட்டாதி ஆகிய மூன்றுக்கும் பெயர். (விதாந.)

முப்பேதம் — சுகதபேதம், சுசாதிபேதம், விசாதிபேதம் என்பன. 1. மரத்துக்கிலைகாய் முதலியவித்தியாசம். 2. மரத்துக்குமறுமரம். 3. மரத்துக்குங்கல்லுக்குமுள்ள வித்தியாசம் எனவறிக.

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்–சிவமூர்த்தியை முக்காலத்துந்தீண்டிப்பூசிக்குந் த

வப்பேறடைந்த சிவவேதியராகிய ஆதிசைவர். (பெரியபு.)

முப்பொருள்—திரிபதார்த்தம். பதி, பசு, பாசமென்க.

முப்பொறி-மநம், வாக்கு, காயம் என்பன. (சூ. நிக. ௧௨: ௫.)

மும்மடங்கு—மும்மடி. (வழக்.)

மும்மடியாகுபெயர்-ஒன்றற்கிருமடியாகு பெயராய்நிற்பது அதனலாய மற்றொன்றற் கும் பெயராய்வழங்குவது. (வ-று.) "கார்" அறுத்தது. (நன்னூ. பெயரி. ௩௩. உரை.)

மும்மண்டலம்-அக்கினிமண்டலம், சந்திர மண்டலம், சூரியமண்டலம். (பொருட். நிக.) பூமி அந்தர சுவர்க்கமென் றுங்கூறுவர்.

மும்மணிக்கோவை-ஒரு பிரபந்தம். அது ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை முறையே தொகை முப்பதுபெறவடுக்கி, யந்தாதித்தொ டையாகப்பாடுவது, சிதம்பர மும்மணிக்கோ வையிலறிக.

மும்மணிமாலை — ஒரு பிரபந்தம், அது, வெண்பா, கலித்துறை, அகவல்மூன்றும், அந் தாதித்தொடையாகப்பாடுவது. (பொருட். நிக.)

மும்மதக்கோடு — தாலம்ப பாஷாணம். (வைத்தியபரி.)

மும்மதத்தன்—விநாயகன். (உ-ம்.) "மும் மதத்தனெனவொருபெயர்தனக்கும்"(தணிகை காப்பு.) மும்மதத்தின் விவரத்தைச்சிவஞான சித்தியார், காப்பு. சிவஞா. உரையிலறிக.)

மும்மதம்—பானேயின், கன்னமதம், கை மதம், கோசமதமென்க.

மும்மலம் — ஆணவம், மாயை, காமியம் என்னும் மூவகைப்பாசம். (திருவானைக். பா யிர. ௮.) மலம்-அழுக்கு.

மும்மீன்—மிருகசீரிடம். (சூ. நிக. ௧: ௯௬.)

மும்முட்டி-போராமுட்டி, சிற்றுமுட்டி, நாக முட்டி யென்பன. (தைல. தைலவ. ௭௬.)

மும்முரசு — மங்கலமுரசு, வெற்றிமுரசு, கொடைமுரசாகிய மூன்றுமாம். (வள். மாலை. ௧௦. உரை.) மங்கலமுரசைநீக்கி, நியாயமுர சைக்கூட்டி மூன்றாகக்கூறுவர். (புறநானூற் றில்.)

மும்முரம்—உக்கிரம். (வழக்.)

மும்முரித்தல்-உக்கிரங்கொள்ளல். (வழக்.)

மும்மூர்த்தி—1. திரிகடுகு. (தைலவ.) 2. மூன்றுமூர்த்தி, அவர்; பிரமா, விட்டுணு, உரு த்திரனென்பவர். (உ-ம்.) "பொற்பூடணர்மும் மூர்த்திகளாம் விமலனார்க்கே" (சிவரக. கண பதிவந்தனை ௧௫.)

மும்மை—1. முப்பிறப்பு. உம்மை, இம்மை, மறுமை. (சூ. நிக. ௧௨: ௫.) 2. மூன்றாயிருக் குந்தன்மை. 3. மூன்று. (தைலவ.) இலக்கண நூலார் குணியைக்குணமாகக் குணமாகக்கூறு வதோர் மரபுவழுவமைதியென்பர்.

முமுட்சு-முத்திவிருப்பமுடையான். இவன் கருமமுதிர்ச்சியால் இவ்விகபரம் உண்மையெ னில், இன்மையாகவும், இன்மையெனில், உண் மையாகவுந் தோன்றுகின்றதேயென ஐயமுற் று இவற்றினுண்மை வெளிப்படு நிமித்தம், இச்சக சம்பந்தமில்லாத சற்கருமங்கள் செய் பவன். (வேதா. சூ. ௩௩.) இவன் ஐவகையதி காரிகளிலொருவன்.

முமுட்சுத்துவம் — மோட்சத்தையறிந்து அடையவேண்டு மென்கிற அதிதீவிரமாகிய பக்குவத்துடனே கூடியிருக்கிற தன்மை. (வா சுதேவ.)

முமூடர் — முழுமூடர். (உ-ம்.) "மொழித் தேனியம்பு மும்மூடர்சொற்கொண்டு" (திரு நூற். ௯௩.) [முழுமூடரென்பது முமமூடரெ னத்திரிந்தது.] பின் மும்மூடரென விகாரமா யிற்று.

முயக்கம்—1. இருத்தல். (உ-ம்.) "முன்பு மாதவப்பயத்தினலவண்முயக்கமாவார்"(தணி கை. நாட்டு. ௬௮.) 2. முயக்கு.

முயக்கு—முயங்கல்.

முயங்கல்—1. புணர்தல். (உ-ம்.) "முதல் விழைந்தொருவனுடனியைந்த பொருள்பற்றி யின்புறமுயங்கினும்" (பாரத. குருட்டிண.) 2. பொருந்தல். (உ-ம்.) "சடைமுயங்குபுனலன்" (தேவார. பிரமபுர. ஏ. சம்பந்த.)

முயங்குதல்—புல்லுதல். (புறநா.)

முயங்குதலுறுத்தல் — தலைவிமுயங்குதற் குடன்பட்ட அருமையை வலியுறுத்திக்கூறு தல். (தஞ்சவாணன். ௧௭.)

முயல்—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. மு சல். (திருவானை. நாட்டு ௩௨.)

முயல்வு-முயற்சி. உ-தொழிற்பெயர்விகுதி

முயலகன் — தாருவன முனிவர்கள சிவ மூர்த்தியைக்கொல்ல ஆபிசார யாகஞ்செய்ய அதிலெழுந்தபூதன். (அபிதானசிந்.)

முயலகனேய்—ஓர் வியாதி. (உ-ம்.) "பயி லுமுயலகன்பொன்னைத் — திருடியுமக்குவந்த தென" (விருத்தா. தீர்த்த. ௧௯.)

முயலல்—முயலுதல். (உ-ம்.) "என்றுமருந் தவமுயலல்" (கோயிற்பு. பாயிர. ௨௮.)

முயலாமை —முயலாதிருத்தல். (வழக்.)

முயலின்கூடு-சந்திரன். (சூ. நிக. ௧: ௫௯.)

முயலுதல்—முயற்சிசெய்தல். (வழக்.)

முயலுப்பு—வளையலுப்பு. (வைத்தியபரி.)

முயலே—ஒரு கோரைக்கிழங்கு. (வைத்திய பரி.)

முயற்கறை—முயற்களங்கம். இது சந்திரனுக்குள்ளது.

முயற்கூடு—முயலின்கூடு, சந்திரன். (மறைசைய. ௧.)

முயற்சி—தாளாண்மை. (சூ. நிக. ௯. ௫௭.)

முயற்சிநாயகர் — திருமீயச்சூரியி லெழுந்தருளியிருக்குஞ்சுவாமிபெயர். (அபிதானகோ.)

முயற்சிவிலக்கு — முயற்சிதோன்றக்கூறி விலக்குமலங்காரம். (தண்டி. பொருள். ௬௯. உரை.)

முயற்செவிக்கள்ளி—ஒரு கள்ளி. (வைத்தியபரி.)

முயற்புல்—ஒரு புல். (வைத்தியமூ. அ.)

முயற்று — முயற்சி. (உ-ம்.) "முயலாது வைத்து முயற்றின்மையாலே—புயலாகவூழ்த் திறத்தின்னர்" (நீதிநெறிவி. ௫௦.)

முயறல்—முயலுதல.

முயன்று—வருந்தி. (தஞ்சை. ௧௧.)

முயிறு — ஓர் எறும்பு. (உ-ம்.) "முயிறலைத் தெழு முழுமரத்தின்" (இராமா. பிணிவீட். அ.)

முரகரி—விட்டுணு. (திருப்பு. அ௦.) முரனென்னுமசுரனைக்கெடுத்தவர்.

முரங்கினம்—மிளகு. (வைத்தியபரி.)

முரசக்கொடியோன்—தருமன். (சூ. நிக. ௧: ௧௬.)

முரசபந்தம்—நான்கடியுடையதாய் மேலிரண்டடிகளுந் தம்முட்கோமூத்திரியாகவும், சிறுவார்போக்கி முதலடியிரண்டா மடியினும் மூன்றாமடியினும் நான்காமடியினுங் கீழேற்று மீண்டு மேலேபோய்க் கீழாயிறங்கி முடியவும் இற்வாறேயிறுதியடியும் மேலேபோய்க் கீழேயிறங்கி மேலேபோய் முடியவும் தக்கதாகப் பெருவார் போக்கி எழுத்துக்க ளமைத்துப் பாடப்படுவது. (தண்டி. ௯௫. உரை.)

முரசபலம்—பலா. (வைத்தியபரி.)

முரசம்—வாச்சியப்பொது. அம்-சாரியை.

முரசவாகை — அரசனது மாளிகையிடத்துப் பலிபெறும் முரசின்றன்மையைச் சொல்லியது (புறப். வெண். மாலே.)

முரசவுழிஞை-பொன்னுற் செய்தவுழிஞை மாலையைச்சூடி ஆடுவெட்டியிடும் பலியை நுகரும்முரசின் நிலைமையைச்சொல்லியது. (புறப். வெண். மாலே.)

முரசு—1. உத்திரட்டாதிநாள். (சூ. நிக. ௧: ௭அ.) 2. பேரிகை. (வழக்.) அட்டமங்கலத்தொன்றென்றுங்கூறுவர். 3. வாச்சியப்பொது (சூ. நிக. ௭. ௬௯.)

முரசை — குபேரன் மனைவிக்குப் பெயர். (அபிதானசிந்.)

முரஞ்சல்—முதிர்வு. (தொல். உரியியல்.)

முரஞ்சிய—முற்றிய. (உ-ம்.) 'கோடுபல முரஞ்சிய கோளியாலத்து" (மலைபடு. உ௬அ.)

முரஞ்சியூர்முடிநாகராயர் — தலைச்சங்கப் புலவருளொருவர். (சிலப்.)

முரஞ்சுதல்—முதிர்தல். (புறநா.)

முரடன் — பதமையில்லான், முரட்டாள். (வழக்.)

முரடு—1. கரடு. இம்மரத்தில் முரடுபாய்ந்திருக்கின்றது. 2.பதமையின்மை.(1,2-வழக்.)

முரண்—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. பகை. (தைல. தைலவ. ௧உ௬.) 3. போர். (சூ. நிக. ௯: ௬௯.) 4. மாறுபாடு. (உ-ம்.) 'முரண்மாதவங்கண்முயன்று' (தஞ்சை. ௧௧.) 5. வலி. (உ-ம்.) 'முரண்டகுதடந்தேர்நண்ண' (கந்தபு. வம. ௭.)

முரண்டல்—மாறுபடல். (வழக்.)

முரண்டன்—மாறுபாடுள்ளவன். (வழக்.)

முரண்டு—மாறுபாடு. (வழக்.)

முரண்டொடை— சொல்லும்பொருளுமுரணத்தொடுப்பது. (யாப்பு. காரி. உறுப்பி. ௧௧.)

முரண்படுதல்—மாறுபடுதல். (வழக்.)

முரண்விளைந்தழிவணி-ஓரலங்காரம். அஃது ஓரிடத்துள்ளனவுங்காரிய காரணங்களாகாதனவுமாகிய இரண்டு தருமங்கட்குமேன்மேலுந்தோன்றியழியும் பகைமையைச்சொல்லுதல். (சந்திரலோகம்.)

முரண்வினைச்சிலேடை—ஒருவகைச் சிலேடையணி. அஃது ஒன்றற்கொன்று மாறுபாடாயுள்ளவினையான்வருவது. (தண்டி. ௭௬. உரை.) [முரண்—மாறுபாடு]

முரணல்—மாறுபடல். (வழக்.)

முரணித்தோன்றல் — வேற்றுப்பொருள் வைப்பணி வகைகளுளொன்று. அது, மாறுபட்டுத்தோன்றும் இயல்புடையதாய் வேற்றுப்பொருள் முரணித்தோன்றல். (தண்டி. ௭உ. உரை.)

முரணிய—மாறுபட்ட. (பரிபாடல்.)

முரம்பு — 1. பருக்கைக் கற்களையுடைய மேட்டுநிலம். (உ-ம்.) "முரம்புகண்ணுடைந்த நடவைதண்ணென" (மலைபடு. ௬௯உ.) 2. பாறை. 3. மேடு. (2, 3-சூ. நிக. ௧௧: ௯௧௧௭வெ. உஉ.)

முரல்—1. ஒரு மீன். (வழக்குண்டுபோலும். 2. முதனிலைத்தொழிற்பெயர்.

முரல்வு—உள்ளோசை. (பிங்கல. கரகூகூ.)

முரல—சதற. (உ-ம்.) "குடுமிக்கூகை குராலொடுமுரல" (மதுரை. ௧௭௦.)

முரலல்—ஒலித்தல்.

முரலி—முரளி.

முரவை—வரி. (உ-ம்.) "முரவைபோகிய முரியாவரிசி" (பொருந. ௧௧௩.)

முரள்-இப்பி. (உ-ம்) "நந்தும்முரளுமீரறிவினவே" (தொல். பொருள். ௫௮௬.)

முரளி—மூக்கால் வாசிக்குங்குழல். (வழக்.)

முரற்கை—1. கலிப்பா. (சூ. நிக. ௧௦: ௨௧.) 2. தாளம். (மலைபடு. ௩௯௦.)

முரற்சி—1. ஒலித்தல். (பரிபாடல்.) 2. கயிறு. (பதிற்றுப்.)

முரற்றல்—ஒலித்தல். (பிங்கல. ௨௧௧௧.)

முரற்றுதல்—முரற்றல்.

முரறல்—சங்கிலொலி. (பரிபாடல்.)

முரன்— ஓரரக்கன். முராரியெனத்திருமாலுக்குப்பெயருண்மையாற்காண்க. நரகாசுரன் சேநாபதியென்பார். (அபிதானசி.)

முராசுரன் — நரகாசுரன்றமையன். (அபிதானகோ.)

முராரி-திருமால். (உ-ம்.) "விடுத்தனுமுராரியேயி" (கந்தபு. ததீசியுத். ௩௩.)

முரி—1. பாதி. (கலித்தொகை. ௯௪.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

முரிதல் — 1. ஒடிதல். 2. கெடுதல். 3. தோற்றல். (1, 2, 3-வழக்.)

முரித்தல்—1. ஒடித்தல். 2. கெடுத்தல். 3. தோல்விசெய்தல்.

முரிதல்—1. ஒடிதல். (சூ. நிக. ௩: ௨௧.) 2. கெடுதல். (பிங்கல. ௧௩௬௨.) 3. தோற்றல். (வழக்.)

முரிபு—1. எருத்திளிமில். (சூ. நிக. ௩: ௧௪.) 2. முரித்தல். பு-விகுதி.

முரிமுரி—எட்டி. (வைத்தியபரி.)

முரிய—வளையாநிற்க. (சிந்தா.)

முரியல்—முரியப்பட்டது.

முரிவு-ஒடிவு 2. முறிவு. உ-தொழிற்பெயர் விகுதி. 3. வருத்தம். (சிந்தா.)

முருக்கல்—முருக்குதல்.

முருக்கி—அழித்து. (சிறுபா. ௨௪௭.)

முருக்கிலை-பெருங்குரும்பை. (வைத்தியபரி.)

முருக்கு—1. எலுமிச்சை. (தைல. தைலவ. ௭௩.) 2. முருக்கமரம். (வைத்தியபரி.)

முருக்குதல்—1. அழித்தல். (உ-ம்.) "முன்மலைவாளை முருக்கினனே" (சிவதரு. செனனமரண. ௭௭.) 2. கொல்லல். (பிங்கல. ௨௧௨௩.)

முருகநாயனார் — அறுபத்து மூவரிலொருவர். (பெரியபு.)

முருகன்—1. இளையோன். (உ-ம்.) "முருகனைமடிமேல்வைத்து" (அரிச்ச. மயாந. ௨௦.) 2. குமாரக்கடவுள். (சூ. நிக. ௧: ௨௩.) 3. வெறியாட்டாளன். (உ-ம்.) "முந்தையின்முதியாளோடு முருகனைமுறையிற்கூவி" (கந்தபு. வள்ளி. ௬௫.)

முருகியம் — குறிஞ்சிநிலப்பறை. (சூ. நிக. ௭: ௬௧.)

முருகு—1. அகில். (மலையக.) 2. அழகு. 3. இளமை. 4. எலுமிச்சை. (சூ. நிக. ௬: ௧௭.) 5. கள். 6. காதணியினொன்று. (வழக்.) 7. குமரன். 8. தெய்வத்தன்மை. 9. தேன். (உ-ம்.) முருகுகொப்பளிக்குந்தாரோய். (பிமோத். உ. ௩௦.) 10. மணம். (உ-ம்.) முருகுலாந்தாமரைத்தாள்சிவப்பூர. (கூர்மபு. கடவுள். ௭.) 11. விறகு. (வைத்தியபரி.) 12. விழா. 13. வேள்வி. (உ-ம்.) "அடியோங்கிப்பிற்பெயராப்படையோர்க்குமுருகயர" (மதுரை. ௩௭. ௩௮.) (2, 3, 8-கூர்மபு. கடவுள். ௭. உரை.) (5, 7, 12-சூ. நிக. ௧௧: ௧௪௯.)

முருகுவளர்கோதை—திருக்கண்ணார் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேவியார் பெயர். (அபிதானகோ.)

முருங்கல்—அழிதல். (திருவிளை. வெள்ளியம். ௩௩.)

முருங்கிலம் — பெருங்குரும்பை. (வைத்தியபரி.)

முருங்கு—1. தெரிநிலை வினைப்பகுதி. 2. முருக்கமரம். (வைத்தியபரி.)

முருங்குதல்—முருங்கல்.

முருங்கை -ஓர் மரம். அது காட்டுமுருங்கை, செம்முருங்கை, தவசிமுருங்கை, புனமுருங்கை எனப்பலதிறப்படும். (வைத்திய. மூ.)

முருடர்—வேடர். (சூ. நிக. ௨: ௬௮.)

முருடு—1. ஒரு வாச்சியம். (இராமா. பாலகா. திருவவ. ௩௩.) 2. பத்தல். 3. பறைப்பொது. (பிங்கல. ௧௫. ௩௦.) 4. பெருங்குறடு. (சூ. நிக. ௭: ௫௦.) 5. மத்தளம். 6. விறகு. (பிங்கல. உ௮௫௭.) 7. வெட்டியமரத்தின்கட்டை. (வழக்.) (2, 5-சிலப்.)

முருந்தம்—1. இறகினடியிற்குருத்து. 2. குருத்து. (சூ. நிக. ௯: ௬௭.) 3. வெண்மை. (1, 3-சூ. நிக. ௧௧: ரகரவெ. ௩௩.) அம்-சாரியை.

முருந்து — 1. முருந்தம். 2. கொழுந்து. (வைத்தியபரி.)

முருவிலி—1. தழுதாழை. (வைத்தியபரி.) 2. ஐவ்வாவொட்டி. (மலையக.)

முல்லை — 1. ஐந்நிலத்தொன்று. அது. காடுங்காடு சார்ந்த இடமும். நம்பியகப்பொருள் அகத்திணையியல் 'வரையேசுரமே' என்ற சூத்திரவுரையிலறிக. 2. உசிமல்லிகை. 3. ஒரு பண். (உ-ம்.) "குழல்வளர்முல்லையிற் கோவலர்தம்மொடு" (சிலப். அந்திமாலை. கரு.) 4. கஞ்சா. 5. கற்பு. (சிந்தா.) 6. காட்டுமல்லிகை. 7. வெற்றி. (சூ. நிக. ௧௧: லகரவெ. ௧௭.) 8. அரசன் தன்னைமேவிய அன்புடையாளைக்கூடியமி குதியைச் சொல்லியது என்பர். (புறப்பொருள்வெ. மாலையில்.) (2, 6-வைத்தியபரி.) புறப்-மாலையிற்கார்முல்லை முதற்பலவகைப்படுமென்பர்.

முல்லைக்கருப்பொருள்--முல்லைநிலத்துற்பத்திப்பொருள். அவை. முல்லைத்தெய்வமுதற்கான்யாறுடலிருபவாம். (நம்பியகப். அகத்திணையில். நெடுமால். சூ.)

முல்லைக்குழல்—முல்லைக்கொடியால் முப்புரியாகத் தெற்றியவளையை வளைவாய்க்கட்செறித்து ஊதுங்குழல். "முல்லையந்தீங்குழல் கேளாமோதோழி" என்பதனாற் பெறப்படும். (சிலப். ஆய்ச்சியர்.)

முல்லைசான்றகற்பு--முல்லைசூடுதற்கமைந்தகற்பு. (சிறுபா ௩௦.)

முல்லைசான்றபுறவு--இருத்தலாகியஉரிப்பொருளமைந்தகாடு (மதுரை. ௨௮௫.)

முல்லைத்தலைவன்—குறும்பொறைநாடன் (சூ. நிக. ௨: ௭௦)

முல்லைநிலத்தூர்—பாடி. (சூ. நிக. டகரவெ. ௭.)

முல்லைநிலப்பண் — சாதாரி. நம்பியகப். அகத்திணையில். நெடுமால். சூ.)

முல்லைநிலப்பறை—பம்பை. (சூ. நிக. ௭: ௪௧.)

முல்லைநிலப்புள்—காட்டுக்கோழி.

முல்லைநிலப்பெண்— ஆய்ச்சி. (சூ. நிக. ௨: ௭௦.)

முல்லைநிலமாக்கள்—ஆயர். (சூ. நிக. ௨: ௬௬.)

முல்லைநிலமிருகம்—மான், முயல். (நம்பியக.)

முல்லைப்பாட்டு—ஒருதமிழ்நூல்.(மணிமே.)

முல்லையர்—இடையர். (சூ. நிக. ௧: ௬௬.)

முல்லைவனநாதர் — திருமுல்லைவாயிலில் எழுந்தருளியவிறைவர்.

முலங்கம்—சல்லிக்கொடி. (வைத்திய அரும்.)

முலமுலெனல்—ஈரடுக்கொலிக்குறிப்பு.

முலவை—நாய். (வைத்தியபரி.)

முலாம்—மலாம்பூச்சு. (வழக்.)

முலை—கொங்கை. (உ-ம்.) "பெருங்குலவு பூண்முலையீர்" (திருவாச. திருப்பொன். ௬.)

முலைக்கண்—சிவீமுகமென்றுபெயர். (சூ. நிக. ௨: ௬௦.)

முலைத்தாய்—செவிலித்தாய், முலைப்பால் கொடுத்ததாயென்க.

முலைப்பாலி — புற்றும்பழம். (வைத்தியபரி.)

முலையமுது—முலைப்பால்.(வைத்தியபரி.)

முவலம் —அவுபலபாஷாணம். (வைத்தியபரி.)

முழக்கம்—ஒலி. (வழக்.)

முழக்கல்—ஒலித்தல். (சூ. நிக. ௧௦: ௪௬.)

முழக்கு—1. ஒலி. (உ-ம்.) "இடியடங்கின முழக்கிழந்தபல்லியம்" (இராமா. நகர்நீங்கு. ௧௦௩.) 2. தெரிநிலைவினைப்பகுதி.

முழக்குதல்—தொனித்தல். (வழக்.)

முழக்கோல்—நிலமளக்குங்கோல்.(வழக்.)

முழங்கல்—ஒலித்தல். (வழக்.)

முழங்கால்—முழந்தாள். (சூ. நிக. ௨: ௮௭.)

முழங்கை — கையிலொருபாகம். (சூ. நிக. ௨: ௬௬.)

முழந்தாள்-முழங்கால்.
முழந்து—முழங்கால். } சூ. நிக. ௨: அ௭.

முழம் — அங்குலம் இருபத்துநாலுகொண்டது. (வழக்.)

முழல்—கழற்சிக்கொடி. (மலையக.)

முழவம்—1. குடமுழா. (பிங்கல. ௧௫௯௦) 2. வாச்சியப்பொது. (பிங்கல. ௧௫௩௦.)

முழவின்மார்ச்சனை—முழவின்மண். (சூ. நிக. ௧௧: ணகரவெ. ௧௧.)

முழவு — 1. ஒருவகைவாத்தியம். அஃது: அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, பண்ணைமுழவு, நாண்முழவு, காலைமுழவு எனப்பலவகைப்படும். (கூர்ம. திருக்கல். ௫௫. உரை.) 2. பறைப்பொது. (சூ. நிக. ௭: ௪௩.) 3. மத்தளம். (உ-ம்.) "மண்ணின்முழவினொலியின்றே" (இன்னா. ௩௨ )

முழவுக்கனி—பலாக்கனி, மத்தளம்போற்கனியிருத்தலாலிப்பெயர் கூறுவர்.

முழா—முழவு. (சிந்தா.)

முழுக்க —முழுதும். (உ-ம்.) "வைரமாகிய முள்ளைமுழுக்கநிரைத்து"(சிந்தா.முத்தி.௬௯௮: உரை.)

முழுக்காட்டு—நீராட்டு. (வழக்.)

முழுக்காடுதல் — அப்பியங்கஸ்நானம். (வழக்.)

முழக்காளி — சலாபங்குளிக்கிறவன். ஒரு குழூஉக்குறி.

முழுக்கு—ஸ்நானம். (வழக்.)

முழுகல்— } முழுகுதல். (இராமா.கிட்கிந்
முழுகுதல்— } தா. பம்பைப். கஎ.)

முழுங்கல்— } விழுங்கல். (வழக்.)
முழுங்குதல்— }

முழுத்தம்—முகூர்த்தம். (வழக்.)

முழுத்தல்—முழுமையாதல்.

முழுது — எல்லாம். திவாகரம். அருகன் பெயர்பார்.

முழுதோருங்துணர்ந்தோன் — அருகன். (திவாகரம்.)

முழுதோன்—முழுதுமானவன்.

முழுநாயகம்—ஓர்கொடி. (வைத்தியபரி.)

முழுநாள் — இராசிக்குப்பங்குபடாநாள். (முழுநட்சத்திரம்.)

முழுநீறுபூசியமுநிவர் – தொகையடியாரி லொருவகையர். (பெரியபு)

முழுநோக்கு—பூரணநோக்கு. இது: கிரக நோக்கினுளொன்று.

முழுப்பொருள்—சிவன். (உ-ம்.) "முந்து வாக்கினுக்குமெட்டாத முழுப்பொருளா முதல் வா" (சிவரக. கணபதிகுமரன். எ.)

முழுமக்கள்—மூடர். (உ-ம்.) "முழுமக்கள் காதலவை" (திரிகடு. கூ.)

முழுமகன்—அறிவிலான். (சூ. நிக. உ: ருரு.)

முழுமணி—தொளையாமணி. (வழக்.)

முழுமனை — அறுபதடிநீளமும், நாற்பதடி அகலமுள்ள நிலம். (வழக்.)

முழுமுதல் — குறைவிலாமுதற்பொருள். (உ-ம்.) "முழுமுதலாகிநிதமாய்" (கூர்மபு. பிர திரு. கூ.)

முழுமை—எல்லாம் (வழக்.)

முழுவது—எல்லாம். (சூ. நிக. அ: கரு.)

முழுவதுஞ்சேறல் — ஓரலங்காரம். வேற் றுப்பொருள் வைப்பணி வகையி னொன்று. (தண்டி. பொருள். சஉக.)

முழுவல்—1. நீர்ப்பறவை விசேடம். (பரி பாடல்.) 2. முத்தங்கொள்ளல். (உ-ம்.) திருக் கோவையாருரையில் வந்திருக்கிறது.

முழை—குகை. (உ-ம்.) "முழைபுகுசிய மன்ன மொய்ம்புடைப்பிரகலாதன்" (கூர்மபு. அந்தகா. கக.)

முழைஞ்சு— மலையினுட்குகை. (உ-ம்.) மோனர்பார்.

முள் — 1. தாற்றுக்கோல். (சிந்தா.) 2. தண்மை. (சூ. நிக. அ: கக.) கூர்மையெனினு மாம். (உ-ம்.) முள்ளெயிற்றெளிவில்வீச. (கூர்மபு. தக்கவேள். கஎ.) 3. முள்ளு.(வழக்.) செடி, மரம், மீன் முதலியவற்றினுண்டு.

முள்காத்தல்— } மௌனமாயிருத்
முள்காந்திருந்தல்— } தல். (நன்னூ. எழுத்தியல். சக, உரை.

முள்வாயன்—ஒரு கறையான். (வழக்.)

முள்ளங்கத்தரி—முள்ளாங்கத்தரி. (வழக்.)

முள்ளங்கி—ஒரு கிழங்கு. (வைத்தியபரி.)

முள்ளம்பன்றி—முட்பன்றி. (சூ. நிக. ௩: உ.)

முள்ளி—1. ஒரு செடி. அது கறிமுள்ளி, அடுக்குமுள்ளி, ஆற்றுமுள்ளி, கழுதைமுள்ளி, செம்முள்ளி, நீர்முள்ளி, வறள்முள்ளியெனப் பலதிறப்படும். 2. கள். (வைத்தியபரி.)

முள்ளிக்கீரை—ஒருவகைக்கீரை (வழக்.)

முள்ளியார் — ஆசாரக்கோவை நூலாசிரி யர். (அபிதானசிந்.)

முள்ளிலவு—ஒருமரம். (வைத்திய.மூ தி.)

முள்ளு—1. ஒருகருவி. தாற்றுக்கோலென் பர். சீவகசிந்தாமணியில். 2. கூர்மை. உ-கரஞ் சாரியை. 3. மரம், மீன் முதலியவற்றின்முள். (2, 3-வழக்.)

முள்ளுடைமலம் — முள்ளுள்ளவை. (சூ. நிக. ச: கூ.)

முள்ளுநாயகம்-ஓர்கொடி.(வைத்தியபரி.)

முள்ளூர் — மலையமான் திருமுடிக்காரியூர். (புறநா.)

முள்ளொலி—ஓரொலி. (வழக்.)

முளகரியம்—அகத்தி. (வைத்தியபரி.)

முளரி—1. அக்கினி. (வைத்தியபரி.) 2. கடைக்கொள்ளி. (சூ. நிக. கூ: கக.) 3. காடு. 4. தாமரை. (உ-ம்.) "முகிழ்"பார். 5. நுண்மை 6. முட்செடி. (பிங்கல. உஅ௫அ.) 7. விறகு. (நெடுந. ௫௫.) (3, 5-பிங்கல. ௬௧௯அ.)

முளரிநாளம்—தாமரைவளையம்.(தைலவ.)

முளவு—முட்பன்றி. (உ-ம்.) 'மூண்டெழு சினத்துச்செங்கண்முளவுமுள்ளரிந்துகோத்த' (பெரியபு. கண்ணப். ௨0.)

முளவுமா—எய்ப்பன்றி. (சிந்தா.)

முளா—முள்ளங்கி. (வைத்திய. மூ. தி.)

முளி—1. செம்முள்ளி. (தைல. தைலவ. எ௨.) 2. மரக்கணு. 3. தெரிநிலை வினைப்பகுதி

முளிதல்—காய்தல். (பிங்கல. கூ௩0ச.)

முளிய—வேவ. (மணிமே.)

முளை—1. அங்குரம். (உ-ம்.) "வித்தின் முளைக்குழாநீருண்டேலுண்டாம்" (நான்மணி. கூச.) 2. ஆப்பு. 3. தண்டாயுதம். (பிங்கல. கஇஎஎ.) 4. தெரிநிலை வினைப்பகுதி. 5. பரு வின்முளை. 6. பூட்டுக்கதவு இவற்றின்முளை. 7.

மகன். 8. மூங்கில். (2, 4, 5, 6-வழக்.) (7, 8 பிங்கல. ௬கஎக.)

முளைக்குதல்—முளைத்தல். இது: வித்தின் முளை வெளிப்படுதலாம்.

முளைக்கொட்டு—ஆற்றுக்காலாட்டிப் பெண்களினோர் விளையாட்டு (வழக்.)

முளைத்தல்-1. உண்டாதல். (உ-ம்.) "தறு கண்வேள்விமுளைத்ததோர் வெங்கண்வாளரவை" (திருவி. நாக. க.) 2. முளைக்குதல். (வழக்.) 3. வெளிப்படத்தோன்றல். (உ-ம்.) "கேடகத்துட்டாழ் வுற்றடங்குவர்-முளைப்பர்" (திருவி. அங்கம். கஎ.)

முளைப்பு—முளைத்தல். பு-தொழிற்பெயர் விகுதி.

முளைமூலம்—ஒருரோகம். (தைல. தைலவ. கசo.)

முளையான்—குழந்தை. (வழக்.)

முற்கம்—பச்சைப்பயறு. (தைலவ.)

முற்காம்—ஓராயுதம். இதற்கு: முசண்டி யென்றபெயர். (பிங்கல. கடுகூக)

முற்கலம்-உபநிடதமுப்பத்திரண்டினுளொன்றென்பர்.

முற்கலன்—மகாசீலமுடைய ஓர் முநிவன். (அபிதாநகி.)

முற்காசு-கோரைக்கிழங்கு.(வைத்தியபரி)

முற்காந்நம் — அரிசியின் நான்குமடங்கு கொண்ட சிறுபயறும் தேங்காய்த்துருவலும் கூட்டிப் பாகம்பண்ணப்பட்டது. (சைவச.)

முற்கு —கொர்ச்சிதம். (நன்னூ. எழுத்திய. ௬. உரை)

முற்குளம்—பூராடம். (சூ. நிக. க: எகூ.)

முற்கோழங்கோல்—பூரட்டாதி. (சூ. நிக. க: எஅ.)

முற்சநி—மகநாள். (சூ. நிக. க: எக.)

முற்படல்— } 1. எதிர்ப்படுதல். 2. முந்து
முற்படுதல்- } தல். (1, 2-வழக்.)

முற்பனி—முன்பனி. மார்கழி, தை மாதங்களின் பனி. (பிங்கல. ௬௦உ.)

முற்பாடு—1. முற்படுகை. 2. முன். (பதிற்றுப்பத்.)

முற்பூண் — மங்கலியம். (பாரத. திரௌ. அஎ.)

முற்றத்துறத்தல்—முழுதும்விடுதல். அதாவது: பொருள்களையும், உடம்பினையும், உவர்த்துப்பற்றுவிடுதல். (வள். கசஅ. பரி.)

முற்றம்—முன்றில், வீட்டுமுற்றம். (உ-ம்.) "அவுபாசனநெறியின்முற்றத்தமர்ந்த விருந்தினர்க்கருத்தல்" (கூர்மபு. வருணா. உ௬.)

முற்றல் — 1. காழ்கொள்ளல். 2. முடிதல். (உ-ம்.) "மூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றோ" (இராமா. கிட்கி. அரசி. சஉ.) 3. முதிருதல். (நன்னெறி. ௬அ.) 4. மூப்பு.(உ-ம்.) "முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பு"(தேவார. பிரமபுர. உ.)(சம்பந்த.) 5. விளைத்தல். (சூ. நிக. கக: நகரவெ. கடு.)

முற்றளபெடை-எல்லாச்சீர்க்கண்ணு மளபெடைவரத்தொடுப்பது. (யாப்-காரி. உறுப்பி. உ௦. உரை.)

முற்றி—முதிர்ந்து. (ஐங்குறு.)

முற்றறிவன்—கடவுள். (தருக்கசங்கிர. கக. மூலம்.)

முற்றறமை—முடியாமை. (வழக்.)

முற்றாய்தம்-தன்மாத்திரையிற் குன்றாவாய்தவெழுத்து. (நன்னூல். எழுத். ௬௫.)

முற்றி — 1. தங்கி. (மதுரை. உ௬அ.) 2. தழும்பிருந்து. (சிந்தா.)

முற்றிக்கை — முற்றுகை, விளைத்தலாம். (வழக்.)

முற்றிகாம்—முற்றியலிகாம.

முற்றிமை-முதுக்குறைமை (சிந்தா. இலக். கஈ௬ச.)

முற்றியலுகாம்—தன்மாத்திரை குறையாத வுகாம். (நன்னூ. எழுத்திய. ௬௯. உரை.)

முற்றியைபு—எல்லாச்சீர்க்கண்ணுமியைபு வரத்தொடுப்பது. (யாப்-காரி. உறுப்பி. கக.)

முற்றில்—1. சிறுசுளகு. (சிந்தா. குண. உசக.) 2. விசாகநாள். (சூ. நிக. க: எச.)

முற்று — 1. எல்லாச்சீர்க்கண்ணுமோனை முதலாயினவருவது. (யாப். காரி. உறுப்பி. கக) 2. தெரிநிலை வினைப்பகுதி. 3. முடிவு. (சூ. நிக. எ: கஅ.) 4. விளைத்தல். (உ-ம்.) "நீர் முற்றிமதில் பொருஉம்" (கலி. ௬எ.)

முற்றுகாம் — முற்றியலுகாம். (நன்னூ. எழுத். ௬௯. உரை.)

முற்றுகை — முற்றுதல். கை-தொழிற்பெயர் விகுதி.

முற்றுதல்—1. சூழ்தல். (உ-ம்.) "நீர்முற்று மண்டமீ" (கூர்மபு. பிரகிரு. உச.) 2. மிகுதல். (பத்துப்.) 3. முடித்தல். (புறநா.) 4. முதிர்தல். (முற்றல்பார்.) 5. வயிரங்கொள்ளல். (வழக்.) 6. விளைத்தல். (உ-ம்.) "முற்றினரிராமனை மூடுகுதேரினர்" (இராமா.கரன்வதை.௬௦ச)

முற்றுபு—சூழ்ந்து. (பரிபாடல்.)

முற்றும்—1. எல்லாம், முழுதும். (உ-ம்.) "சிவலிங்கபூசைசெய் தண்டமுற்றுமளித்திடுந் திண்ணனர்" (சிவரக, தேவியுடன். கக.)

முற்றுமடக்கு—ஓரலங்காரம். அஃது அடி முழுதுமடங்கிவருவது. (தண்டி. சொல்லணி. ச. உரை.)

முற்றுமுடுகுவெண்பா—நான்கடியுமுடுக் காய்வருவது.

முற்றுமுதிர்வு—ஓர் துறை. மதிலினுள் ளோன் முரசுகாலையொலிப்பப் புறத்திருந்த வுழிஞையானது வெய்யகோபத்தின் மிகுதி யைச்சொல்லியது. (புறப். வெ. மாலை.)

முற்றுமுரண்—எல்லாச் சீர்க்கண்ணுமுரண் வரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பிய. கக.)

முற்றுமோனை—எல்லாச் சீர்க்கண்ணு மோ னைவரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பிய. கக.)

முற்றுருவகம்-உருவகஅணிவகையுளொன் று. அது அவயவமும், அவயவியுமாகமுற்றும் உருவகஞ்செய்யப்படுவது. (தண்டி. ருகு. உரை)

முற்றுழிஞை—உழிஞைப்பூ மாலையைச் சூடிப் பகைவரை வென்ற சிறப்புரைத்தது. (புறப். வெ. மாலை.)

முற்றுவமை—பூரணவுவமை, உபமானம், உபமேயம், பொதுத்தன்மை, உவமையுருபு இந்நான்குங்குறையாமல்வருவதென்பர். (தண் டி.)

முற்றுவித்தல்—முதிர்வித்தல். (வழக்.)

முற்றுவினை—வினைமுற்று. (நன்னூ. வி னையி. ச உரை.)

முற்றூட்டு—பிறர்வாராத எல்லை. (திருக் கோ. உ௯உ.) சர்வசுதந்தரமாகவனுபவிக்கப் படுவதான பூமியுமாம். (வழக்.)

முற்றெச்சம்—வினையெச்சமாக வழங்கப் படும் வினைமுற்று. (நன்னூ. வினைபிய. ௩உ.)

முற்றெதுகை—எல்லாச்சீர்க்கண்ணுமெது கைவரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பிய. கக.)

முற்றோன்றல்—தமையன். (வழக்.)

முனண்டகம்—ஔபல பாஷாணம். (வைத் தியபரி.)

முறம்—1. சுளகு. 2. விசாகநாள். (1, 2- சூ. நிக. கக: ழகரவெ. கூ.)

முறி—1. உயர்ந்தவெண்கலம். 2. எழுது முறியாகியவோலை. 3. தளிர். (சூ.நிக.௬:௬எ.) 4. துண்டு. 5. தெரிநிலை வினைப்பகுதி. (1, 2, 4 வழக்.)

முறிக்குதல்—முறித்தல். (வழக்.)

முறிகரை—இடிகரை. (வழக்.)

முறிகுளம்—பூராடம். (பிங்கல. ௬கஅக.)

முறிச்சாதனம்—முறிப்பத்திரம். உறுதிப் பத்திரமாகியவோலை யென்பர்.

முறிந்தல்—ஒடித்தல். (உ-ம்.) "பொருசிலை முறித்தவீரன்" (பாரத. கிருட்டிண. கசுக.)

முறிதல்—ஒடிதல். (சூ. நிக. கூ: உக.)

முறிதிரிசூலை—ஒரு சூலை நோய்.

முறிந்த—தளிர்த்த. (சிந்தா.)

முறிப்பு—முறிவு.

முறியல்-முறிதல்.அல்.தொழிற்பெயர்விகுதி

முறியன்—விற்றற்குரிய அடிமைக்காரன். (வழக்.)

முறிவு—முறிதல்.

முறிவெட்டியான்—ஒரு கடற்களான்.

முறுக்கரவு—ஒரு பாம்பு.

முறுக்கல்—1. கோபித்தல். 2. கயிறுமுத லியவற்றைத்திரித்தல். (1, 2-வழக்.)

முறுக்கவரை—ஒருவகை அவரைக்கொடி. (வழக்.)

முறுக்காணி—வீணையின் மாடகத்தின் பெயர். (சூ. நிக. ௧0: ௬கூ.)

முறுக்கு—1. பணிகாரம். 2. தெரிநிலை வினைபபகுதி. 3. விருப்பு. (1, 2, 3-வழக்.)

முறுக்குதல்—முறுக்கல்.

முறுகப்பழுத்தல்-மிகவுநெகிழும்படிபழுத் தல். (மலைபடு. ௧௬உ.)

முறுகல்—1. கடுமைபடல். 2. திருகல். 3. முதிருதல். 4. வேகங்கொள்ளுதல். (1, 2, 3, 4-வழக்.)

முறுகு—மிகு. (சிந்தா.)

முறுமுறுப்பு—கோபக்குறிப்பு. (வழக்.)

முறுவல்—1. இறந்துபோன நாடகத்தமிழ் நூல்களுள் ஒன்று. (அபிதானகோ.) 2. எயிறு. (சூ. நிக. உ: கச.) 3. சிரிப்பு. (உ-ம்.) முடி வறவருமுடியென்ன முறுவலித்திறைவன். (கந் தபு. பிரமயா. ௬.) மெல்ல நகுதலென்பர். சில வரைகாரர்.

முறுவலித்தல்— } சிரித்தல். (உ-ம்.) "அழி முறுவலிப்பு— } ழைமுறுவலித்து" (பிர மோத். பஞ்சாட். உக.)

முறுவற்குறிப்புணர்தல்—1. தலைவிமுறு வலினது குறிப்பைத் தலைமகனுணர்தல். (வா ணன். கா. முகம்.)

முறை—1. அடைவு. (புறநா.) 2. ஊழ். 3. ஒழுக்கம். (சூ. நிக. அ: ௬௬.) 4. கட்டு. 5. கற்பு. (பரிபாடல்.) 6. குணம். (பிங்கல. ௬வ௫கூ.) 7. கூட்டு. 8. தரம். (உ-ம்.) "பன்முறை பரவித் தாழ்ந்து" (திருவிளை. நான்மட. உ௫.) 9. நீதி. (உ-ம்.) "நின்மொழிவழிமுறைசெய்து" (திரு விளை. நாகமெய்த. ௬கூ.) 10. பழமை. (பிங்கல. உஉ0அ.) 11. புத்தகம். (உ-ம்.) "இளையபாக் கன் முறைவரைகுவனென" (கந்தபு. அவை.

யடச். க.) 12. மறுபிறப்பு. (பரிபாடல்.) 13. முறையீடு. (வழக்.) 14. வகை. (புறப். வெ. மாலை.) 15. வரிசை. (வழக்.) (2, 4-பிங்கல. ருகஅரு.)

முறைக்காய்ச்சல் — ஒன்றைவிட்டொரு நாள்வருஞ்சுரம். (தைல. தைலவ. சo.)

முறைகாரர் — முறைப்படி திருப்பணி செய்வோர். (வழக்.)

முறைத்தல்—விறைத்தல். (வழக்.)

முறைநிரனிறை-நேர்நிரனிறை. (நன்னூ. பொதுவிய. ருரு.)

முறைப்படுதல்—முறையிடுதல். (வழக்.)

முறைப்பாடு-தனக்குநேரிட்ட ஆபத்தைக் கூறிநீக்கும்பொருட்டு, வேண்டுகையாகிய முறையீடு. (பெரியபு. தடுத்தா. ருக.)

முறைப்பு—விறைப்பு. (வழக்.)

முறையக்கி—குப்பைமேனி. (மலையக.)

முறைமை—1. கிரமம். (வழக்.) 2. முறை. (பிங்கல. ருகஅரு.)

முறையிடுதல் — தனக்குநேரிடுமாபத்தை நீக்கும்பொருட்டுப்பலருமறிய இதுமுறையோ வென்று அலறுவது (பெரியபு. தடுத்தா. சரு.)

முறையிலுயர்வுநவிற்சியணி — ஓரலங்காரம். அது: காரணகாரியமொருகாலத்துநிகழ்வதாகக்கூறுவது. (அணியிலக்க. கo. பக்கம்.)

முறையிலார்—கீழ்மக்கள். (சூ. நிக. உ: ருச.)

முறையின்வைப்பு — நாலழகினொன்று. (நன்னூ. பொதுப். கரு.)

முறையீடு—முறையிடல். (பெரிய. தடுத் தாட். சரு. உரை.)

முறைவேண்டுநர்—வலியரால்நலிவெய்தி அது தீருமாறு வேண்டிநிற்பவர். (வள். ருஅகு.)

முன்—1. அநாதி. (உ-ம்.) "முன்னவன்பதி யாயினும்" (கோயிற்பு. வியாக்கிர. கரு.) 2. அசையாகவருவது. (பெரியபு. இயற்பகைநாய. உ.) 3. ஒரேழனுருபு. (உ-ம்.) "கற்றோர்முற் றோன்றாகழிவிரக்கம்" (நன்னூ. பெயரிய. சரு. உரை.) 4. பக்கம். 5. பழமை. (உ-ம்.) "முன்னைமறையோதமுழங்கியகான்வழியும்" (கோயிற்பு. வியாக்கிர. கக.) 6. முதல். (உ-ம்.) "முன்னொருவரறியாமே" (பெரியபு. தடுத் தாட். அரு.) 7. முன்பு. (உ-ம்.) "துன்னார்கண் முன்னேவாழியிம்மூதூர்மறுகச்" (திருக்கோ. உரு0.) 8. மேல். 9. விரைவுப்பொருளுணர்த்துவ தோரிடைச்சொல். (உ-ம்.) "முன்னிவனை யவவீதிமுரண்டோர்க்காலூர்கவென" பெரியபு. திருவாரூ. ச.) 10. முற்காலம். (உ-ம்.) "தோழி நீத்தென்னைமுன்னேதுறந்து" (திருக்கோ. உரு0.)

முன்கடை—வீட்டுவாயில். (ஐங்குறு.)

முன்குடுமி—பூர்வசிகை. ஒருவகைப்பார்ப் பார் முதலியோர்க்குள்ளது. (வழக்.)

முன்கோபம் — வெம்பல்முதலியன. (சூ. நிக. அ: சுரு.)

முன்கை—கெண்டைக்கை. (வழக்.)

முன்சொல்-பழமொழி. (சூ. நிக. கo: கo.)

முன்பகல்—நாட்காலம். (கலி. எச.)

முன்பன்—முதல்வன். (வழக்.)

முன்பனி-1. மார்கழி, தைமாதங்களிற்பனி. (சூ. நிக. க: அஎ.)

முன்பனியுரிமை — கொண்டல்வீசலுங், கூகை ஆந்தையிவைமகிழ்தலு, மாவுஞ்சிவந்தியு மலர்தலும், இலந்தைபழுத்தலுஞ், செந்நெல் விளைதலுங், கரும்புமுதிர்தலுமாகும்.

முன்பாலைநாடு—குமரியாற்றிற்கும், பஃறுளியாற்றுக்கும், இடையிலுள்ளநாடு (சிலப்.)

முன்பிறந்தாள்-அக்காள். (சூ.நிக. க: எகூ.)

முன்பு-1. பழமை. (சூ. நிக. கக: ரகரவெ. உரு.) 2. முன். (உ-ம்.) "எம்மான்முன்புசென்று" (சிவரக. கணபதிவந்தனை. கக.) 3. வலி. (உ-ம்) "வலிமுன்பின்வல்லென்றயாக்கை" (கலு. ச.)

முன்மொழிவெண்பா — முன்னிரண்டடி முடுகிவருவதாய்வரும் வெண்பா.

முன்மொழி—1. தொடர்மொழியின் முன் னிற்குஞ்சொல். (நன்னூ. பொதுவிய. கக.) 2. முதுரை.

முன்மொழிந்துகோடல்-ஓர் யுத்தி. அது: முன்னே ஒன்றனைச்சொல்லிப்பின்பு அதனை வேண்டுமிடந்தோறுமெடுத்துக்கொள்ளல். (நன்னூ. பாயிர. கரு.)

முன்றந்தை-தந்தையின்தந்தையாகிய பாட்டன். (வழக்.)

முன்றாய்—தாயின்றாயாகியபாட்டி. (வழக்.)

முன்றானை-வஸ்திரத்தின்முகப்பு. தோகை யென்றுபெயர். முன்றோகையென்றுகூறினர். (சூ. நிகண்டில்.)

முன்றில் — முற்றம். இல்முன் என்பது, முன்றிலெனமாறி, றகரவொற்று விரிந்து, இலக்கணப்போலியாயிற்று.

முன்றேர்க்குரவை-மன்னனுடையவெல் லுந்தேர் முன்வீராடியது. (புறப். வெ.மாலை.)

முன்றுறையர்— | பழமொழிசெய்த
முன்றுறையரையர்— | ஆசிரியர். (அபி தானசிந்.)

முன்றேடரி —நாயுருவி. (வைத்தியபரி.)

முன்றேன்றல்-தமையன். (பிங்கல. ருகo.)

முன்னடைப்பான்—மிருகங்கட்கு வருமோர் நோய். (வழக்.)

முன்னணி—முற்படை. (வழக்.)

முன்னவனை—முதற்பிள்ளை. (வழக்.)

முன்னதம்—காலக்கணத்தொன்று. அது: பதாகையிற்சுட்டுவிரலைப் பிரித்திடலாம். பதாகைக்கையாவது பெருவிரல் குஞ்சித்து ஏனைய விரல்களை நிமிர்த்தல். (சிலப்.)

முன்னம்—1. கருத்து. (நம்பி. யகப். ஒழிபிய. உ.) 2. குறிப்பு (சிந்தா.) 3. சீக்கிரம். (வழக்.) 4. சீக்கிரிமரம். (பிங்கல. உளசுகூ.) 5. மனக்குறிப்பு. (உ-ம்.) "முன்னமுகத்தினுணர்ந்து" (புறநா. கூ.) 6. மனம். (பிங்கல. களஎகூ.) 7. முற்காலம். (உ-ம்.) "அளியுடன் கூர்ம முன்னமுறைந்திடும்" (கூர்ம. பதிக. உ.) 8. முன் (திருவிளை. பழியஞ்சின. ௨௯.) மலையகராதியில் உசில் என்பர்.

முன்னர்—1. ஆதி. (உ-ம்.) முன்னர்ப்பிற்கூடம் பின்மாடே. (திருவிளை. நகரசி. உ.) 2. இடம். (பிங்கல. ௯கக.) 3 முன். (உ-ம்.) "பூரணன் திருமுன்னரில் யாவரேபுகுவார்" (சிவரக. மேரு. உ௦)

முன்னல்—1 நினைத்தல். 2. நெஞ்சு. (1, 2-சூ. நிக. கக: னகரவெ. ௫.)

முன்னவர்—1. பிராமணர். (உ-ம்) "முன்னவரென்பகற்றோர்" (திருவிளை. மாணிக்க. சுகூ.) 2. முன்பிறந்தவர். (வழக்.)

முன்னவள்—1. தமக்கை. 2. மூதேவி. (1, 2-வழக்.)

முன்னவன்—1. கடவுள். 2. சிவன். (பிங்கல. கூ௪.) 3. தமையன். (சூ. நிக. உ: ௭௦.) 4. முதலானவன். (வழக்.)

முன்னவிலக்கு—ஓரலங்காரம். இது: குறிப்பினால் ஒன்றினைமறுத்து மேன்மைதோன்றச் சொல்லுவது. (தண்டியலங். பொருளணி. கூ.)

முன்னன்—மூத்தவன். (வழக்.)

முன்னி—1. முற்பட்டு. (உ-ம்.) "முன்னியோரிமை யொடுங்குமுன் முடித்திடுதலும்" (கூர்ம. தக்கன். வே. ௬௦.) 2 மேற்கொண்டு. (திருமுரு. கஉகூ.)

முன்னிசிவு—சரீரத்தை முன்னுக்கு வளைக்கும். தசத்தம்பவாதரோகம். (சீவரட். ககரு.)

முன்னிடுதல்—நேரிடுதல். (வழக்.)

முன்னிய—கருதிய. (பொருந. கூ.)

முன்னியவினை — முற்பிறப்பிற் கருதிச் செய்தவினை. (திருமுரு. கூகூ.)

முன்னிலை—1. காரணம். 2. காரியத்திற்கு முன்னிற்பது. 3. மூவிடத்தொன்று. (நன்னூ. பெயரி. கூ.)

முன்னிலைத்தீவகம்—முதனிலைத்தீவகம்.

முன்னிலைப்பன்மைவினைமுற்று — திர், ஈர் என்னும் விகுதிகளையுடைய பன்மைவினைமுற்று. (நன்னூ. வினையிய. கக.)

முன்னிலைப்புறமொழி—முன்னிற்போர்க்குப் பிறரைக் கூறுமாறுபோலக் கூறுதல். அகப்பொருட்டுறையினொன்று.

முன்னிலைமொழி—அறத்தொடுநிலை. (நம்பியகப்.)

முன்னிலையசைச்சொல்— முன்னிலையிடத்துவருமசைச்சொல், மியாமுதலாயின. (நன்னூ. இடையிய. உக.)

முன்னிலையாக்கல்—ஓர்துறை, தலைமகன், தலைமகளை முன்னிலையாக்கிக்கூறுதல். (தஞ்சை. வா.)

முன்னிலையேவலொருமைவினைமுற்று—முன்னிலையேவலாகவருமொருமைவினைமுற்று (நன்னூ வினையிய. கசு.)

முன்னிலையேவற்பன்மைவினைமுற்று—மின், உம் விகுதியையுடைய மொழிகள்.

முன்னிலையொருமைவினைமுற்று — ஐ, ஆய், இ என்னும் விகுதிகளையுடைய விருதினைமுக்கூற்றொருமைவினைமுற்று.

முன்னிற்றல்—1. அழியாதுநிற்றல். (உ-ம்.) "யாவுளமுன்னிற்பவை" (வள். கா௬.) 2. முன்னேநிற்குதல். (வழக்.)

முன்னின்று—முன்னின்றது. (ஐங்குறு.)

முன்னின்றுணர்த்தியோம்படைசாற்றல்—ஓர்துறை. முன்னின்றுணர்த்திய பாங்கி, எமமைப்பாதுகாக்கவேண்டுமென்றுகூறல். (தஞ்சை. பகற்குறி. கருகூ.)

முன்னீடு—1. தலைமை. 2. முன்னேற்றி. (1, 2-வழக்.)

முன்னுதல்—1. அணுகுதல். (சிந்தா.) 2. நினைத்தல். 3. முற்படுதல். (உ-ம்) "மற்றவண் முன்னினளால்" (தணிகை. சீபரி. ௫௬உ.)

முன்னுபு—1. பொருந்தி. (சிந்தா.) 2. முன்னி.

முன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல் — அகப்பொருட்டுறையினொன்று. (தஞ்சைவா. கஉ.)

முன்னூல்— 1. கடவுள்மொழிந்தமுதனூல். (நன்னூல்-பாயிர. கூ.) 2. பழையநூல். (வழக்.)

முன்னேரம்—இளம்பகல். (வழக்.)

முன்னேறுதல்—முந்துதல். (வழக்.)

முன்னை—1. அக்காள். 2. அண்ணன். 3. ஒருமரம். அவை: எருமைமுன்னை, காட்டுமுன்னை, பசுமுன்னை, பேய்முன்னை யென்பன. (தைல. தைலவ.) 4. பழமை. (பிங்கல. உஉ௦அ.) (1, 2-வழக்குண்டுபோலும்.)

முன்னைநாள் — நென்னல், நெருநல் என வழங்குவர். (பிங்கல. ௨௮௪.)
முன்னையோர்—பழைமையோர். (வழக்.)
முன்றேற்றி—முன்னீடு. (வழக்.)
முன்றோடி— நாயகனுக்குமுன்போவான். (வழக்.)
முன்னோர்—1. பழையோர். 2. மந்திரிகள். (சூ. நிகண். ௨: ௨௧.)
முன்னோன் —1. அப்பன். (புறப். வெ. மாலை.) 2. அருகன். (சூ. நிக. ௧: ௩.) 3. சிவன். (சூ. நிக. ௧: ௩.) 4. தமையன். முன்னவனென்பது பார். 5. விநாயகன். (சூ. நிக. ௧: ௨௧.)
முனி — 1. அகத்தி. 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. முனிவன். 4. யானைக்கன்று. 5. வில். (1, 3, 4, 6-பிங்கல. ௩௬௮௪.)
முனிந்துநுமம்—காரகத்தி.(வைத்தியபரி.)
முனித்துறை—சடங்கு. (பரிபாடல்.)
முனிதல்—1. சினத்தல். (உ-ம்.) "மடங்கலின்முனிந்துசென்றான்" (இராமா. கரன். ௩௫.) 2. வெறுத்தல். (பிங்கல. ௧௮௦௨.)
முனிந்துறை—வெந்தயச்செடி.(வைத்தியபரி.)
முனிமூத்திரம்—கல்லுப்பு.(வைத்தியபரி.)
முனிநர்—வெறுப்பவர். (ஐங்குறு.)
முனிபித்தலம்—தாமிரம். (வைத்தியபரி.)
முனிமை—முனித்தன்மை. (சிந்தா.)
முனிவரேழுவர்—எழுமுனிவர் பார்.
முனிவு — 1. கோபம். (பிங்கல. ௧௮௭௩.) 2. வெறுப்பு (பிங்கல. ௧௮௦௨.)
முனீந்திரன்—புத்தன். (சூ. நிக. ௧: ௧௭.)
முனை — 1. கூர்மை. (உ-ம்.) "யாக்கைமூத்தவனொருவன்வைகிமுனையவாள்பயிற்றி" (திருவி-அங்கம். ௨.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. நுனி. (உ-ம்.) "சூலமுனைகளாலேகுத்தினா" (சிவரக-சிவதன்மா. ௩௩.) 4. இடம். 5. பகை. 6. படை. 7 முதன்மை. 8. யுத்தம். (உ-ம்.) "வெம்முனைநோககிநிற்பர்" (திருவிளை. நகர. ௭௧.) 9. வினை. 10. வெறுப்பு. (5, 9, 10-பிங்கல. ௩௬௮௫.)
முனைஇ—1. முனைந்து, வெறுத்து. 2. வினையெச்சம். (புறநா.)
முனைத்தல்-1. கோபித்தல். 2. பகைத்தல். 3. போர்கலத்தல். 4. முந்திநிற்றல்-முன்னுக்குநிற்றல. தொழிற்பெயர்.
முனைத்திடாமை—1. இஃது குடம். இஃது ஆடையெனச்சுட்டியறியப்படுவதாய் வேறுநில்லாமை. (சி. சி. ௭௧. சிவஞா.)
முனைதல் — 1. பெருங்கோபம். (சூ. நிக. ௮: ௩௩.) 2. போர்கலத்தல்-தொழிற்பெயர்.

முனைந்தோர்—பகைவர். முனைதல்-பகைத்தல்.
முனைப்பாடி—பாடிவீடு. (பிங்கல. ௧௨௩.)
முனைப்பாடியார் — 1. அறநெறிச்சாரநூலாசிரியர். (அபிதானசிந்.) 2. திருமுனைப்பாடிநாடருமாம். (பெரியபு. தடுத்தாட். ௧.)
முனைமுகம் — போர்முகம், போர்முனை. (உ-ம்., "முனைமுகத்துநில்லேல்" (கொன்றைவேந்தன்.)
முனையடுவார்நாயனார் — அறுபத்துமூவருளொருவர். (பெரியபு.)
முனைவர் — 1. பகைவர். முனை-பகை. 2. முநிவர் (உ-ம்.) "முனைவர்வாழ்மைமிசத்தின்மொழிந்தனன்" (சிவரக. தேவிமேரு. ௧௩.)
முனைவன்—1. அருகன். (சூ. நி. ௧: ௧.) 2. பகைவன். முனை-பகை. 3. புத்தன். (பிங்கல. ௧௧௩௪.)
முனைவு—1. அவாவின்மை. (சூ. நிக. அ: ௪௨.) 2 கோபம்.

## மூ.

மூ—1. மூப்பு. (நன்னூ. பதவி. ௨. உரை.) 2. தெரிநிலை வினைப்பகுதி.
மூக்க—மூத்திடுக. (சிந்தா.)
மூக்கரட்டை—மூக்கிரட்டை. ஒரு செடி. (வைத்தியபரி.)
மூக்கரிகத்தி — இலைமூக்கரிகத்தி, குளிர் எனறு. சூ நிக. எ. ஆவதில் கூறுவர்.
மூக்கறை—நாசியறுபட்டவன். (வழக்.)
மூக்கறைச்சி—1. அரிதாரம். (வைத்தியபரி.) 2. நாசியறுபட்டவள். (வழக்.)
மூக்காவளை—ஓர் பூடு.
மூக்கிரட்டை — மூக்கரட்டை. (வைத்தியபரி.)
மூக்கிலழகி—குமிழ் (வைத்தியபரி.)
மூக்கிலி — 1. ஓர் பூடு, சொக்கலிப்பூடு. (மலையக.) 2. மூக்கில்லாதவள். 3. மூக்கில்லாதவன். (உ-ம்.) "மூக்கிலிமுகத்தில்" (பிரபுலிங்க. வசவண்ணர் வந்தகதி. ௩௧.) வைத்தியபரிபாடையிற் கோட்டமென்றுங்கூறுவர்.
மூக்கில்—வசம்பு. } (வைத்தியபரி.)
மூக்கினி—முந்திரி. }
மூக்கிற்கல்—காக்கைக்கல்.(வைத்தியபரி.)
மூக்கு—1. காம்பு. (ஐங்குறு.) 2. நாசி. (சூ. நிக. ௨: ௩௫.)
மூக்குச்சாந்திரம்—சரசாத்திரம். (வழக்.)
மூக்குத்தழுக்கு— } மாதர்மூக்கணி.(வழக்.)
மூக்குத்தி— }

மூக்கை—மொக்கு. } (வைத்தியபரி.)
மூக்கோலியன்—சங்கு }

மூக்கோற்றி–1. ஓர் காய். 2. ஓர் கோரை. 3. மூக்கணி. (வழக்.)

மூக்கொற்றிப்பூண்டு–ஓர் பூண்டு.(வழக்.)

மூகம்—1. ஊமை. 2. மௌனம். (சூ. நிக. கூ: டுரு.)

மூகன்—1. ஊமை. 2. சிவபிரானாற் கொல்லப்பட்டஒருதானவன். பாரத அருச்சுனன் றவநிலைச்சருக்கத்திற்காண்க.

மூகாம்பை — சையபர்வத சமீபத்திலிருக்குந்தேவியின்பெயர். (அபிதாநகோ.)

மூகை—1. ஊமை. (பிங்கல. கூகக.) 2. சங்கஞ்செடி. (வைத்தியபரி.)

மூங்கர்—ஊமையர்.

மூங்கன்—ஊமையன். (வழக்.)

மூங்கா—கீரி. (தொல். மரபு. கூ. உரை.) (வைத்தியப)

மூங்கி—சிறுபயறு. (மலையக.)

மூங்கில்—ஓர் மரம். (வழக்.)

மூங்கிலரிசி — இதற்குத் தோரையென்று கூறுவர். (சூ. நிக. கக: ரகரவெ. கக.)

மூங்கிலுப்பு—இருப்பு. (வைத்தியபரி.)

மூங்கிற்போராந்து–மூங்கிலின் மூலை.(வைத்தியபரி.)

மூங்கினெல்—குறிஞ்சி நிலத்திலுண்டாகுமொருவகை நெல்.

மூங்கை—ஊமை. (சூ. நிக. ..: ..)

மூங்கைப்பிள்ளையார்– இவர் குமரக்கடவுளின் அம்சமாகத்தோன்றியவர். திருவிளை. சங்கத்தார்கலகந்தீர்த்த படலத்திற்காண்க.

மூங்கையார்—ஊமையர்.

மூச்சு—சுவாசம். (பிங்கல. உ0..)

மூசல்—1. சாதல். 2. மொய்த்தல். (சூ.நிக. கக: சகரவெ. உ.)

மூசாநந்தம்–வெண்டாமரை.(வைத்தியபரி.)

மூசாம்பராம்—காசுக்கட்டி.(வைத்தியபரி.)

மூசாவோ—சோம்பு. (வைத்தியபரி.)

மூசுதல்— மூசல், தொழிற்பெயர்.

மூசுமல்லிகை—ஓர் பூடு. (வைத்தியபரி.)

மூசை—மட்குகை.

மூஷிககர்ணி—எலிச்செவிக்கீரை. (வைத்தியபரி.)

மூஷாநந்தம்—துருசு. (வைத்தியபரி.)

மூஷிகம்–ஒரு தேயம். இப்பொழுது கொச்சியென்பர். (அபிதாநகோ.)

மூஞ்சல்—மூசல்.

மூஞ்சி–முகம்.(பெருவழக்குண்டு.) மணிமேகலையிற்கூறியிருக்கின்றார்.

மூஞ்சூறு—சுந்தரி. (பிங்கல. உடுருஎ.) (சூ. நிக. அ. சுசுந்தரியென்பர்.)

மூஞ்சூற்றுமுளரான்—ஓர்கிழங்குக்கொடி.

மூட்டம்–1. உலைமுகம். (வைத்தியபரி.) 2. மூடியிருப்பது. (வழக்.)

மூட்டல்–1. பொருத்தல்- (சூ. நிக. கூ: உக.) 2. ஏவிவிடுதல். 3. பற்றுப்பண்ணுதல். (2, 3-வழக்.)

மூட்டு—1. கடிவாளம். (பிங்கல. ககஉஎ.) 2. சந்து. (சூ. நிக. உ: கO2.) 3. தெரிநிலை வினைப்பகுதி.

மூட்டுதல்—மூட்டல்.

மூட்டை—1. ஓர் பூச்சி. 2. பலவித பண்டப்பை. (1, 2-வழக்.)

மூடதை—அறியாமை.

மூடத்தன்மை–அறிவிலாத்தன்மை.(வழக்.)

மூடம்—1. அறிவின்மை. 2. எட்டுமரக்கால் கொண்டவளவு. (தைலவ.) 3. மந்தாரம். (1, 3-வழக்.)

மூடர்–1. அறிவிலோர். (வழக்.) 2. கீழோர். (பிங்கல. ...)

மூடல்—மூடுதல். (வழக்.)

மூடனார்—மிளகு. (மலையக.)

மூடி—1. கொத்துமல்லிப்பூண்டு. (வைத்தி மூ. தி.) 2. மேன்மூடி. (வழக்.)

மூடிகர்—பெருச்சாளி. (பிங்கல. உருகக.)

மூடுசன்னி—ஓர் சன்னி. (வழக்.)

மூடுதல்—மூடல், மறைக்குதல். (வழக்.)

மூடை—பொதிப்பை. (பத்துப்பாட்.) இதனைமூட்டையென வழங்குவர்.

மூண்டன்—மிளகு. (வைத்தியபரி.)

மூத்தல்—முதிர்தல். (வழக்.)

மூத்தாள்—1. கிழவி. (சூ நிக. உ: கூ..) 2. மூதேவி. 3. முன்பிறந்தாள். (2, 3-வழக்.)

மூத்திராவுப்பு—சிறுநீருப்பு.(வைத்தியபரி)

மூத்திரகிரிச்சம்— } ஓர் நோய். (வைத்தியபரி.)
மூத்திரகிரிச்சனம்– }

மூத்திரக்குளவி—ஓர் குளவியென்பர்.

மூத்திரசங்கம்–நீரிழிவென்னுமோர்நோய்.

மூத்திரசுக்கிலம் —வெட்டைநோய். அது: மூத்திரத்துடன் சுக்கிலமிறங்குதல். (வழக்.)

மூத்திரம்—சிறுநீர். (வழக்.)

மூத்திராசயம்— மூத்திரந்தங்குமிடமாகிய சலபடை. ஞானாமிர்தம்.அ வதுகவியிற்காண்க.

மூத்தோர்—1. பண்டிதர். (சூ. நிக. உ: அ.) 2. மந்திரத்தலைவர். (பிங்கல. அOசO.) முதியோர். (வழக்.)

மூத்தோன்—1. அண்ணன். (சூ. நிக. உ: எஎ.) 2. முதிர்ந்த வயதுடையோன். (வழக்.) 3. விநாயகர். (சூ. நிக. க: உக.)

மூதண்டகஷாயம் — அறுகவேரும் மிளகுங்கூட்டிச் செய்யப்படுங் கஷாயம். இதனால் மூலச்சூடு தணியுமென்பர். (வைத்தியபரி.)

மூதலங்கு—1. காடுகாள். (சூ. நிக. க: ௩௩.) 2. மூத்தவளாகிய மூதேவி. (உ-ம்.) மூதணங்கோடின்மை விடுத்திடும். (திருவிளை. மாணிக்கம்விற். ௰அ.)

மூதம்—இந்திரியம். (வைத்தியபரி.)

மூதரித்தல்—
மூதலித்தல்—
மூதலிப்பு— } ஒப்புவித்தல்.

மூதறிஞர்—பேரறிவுடையோர். (நன்னெறி. உஅ.)

மூதறிவு—பேரறிவு.

மூதா—தம்பலப்பூச்சி. (வைத்தியபரி.) (சூ. நிக. ௩: ௬௫.)

மூதாக்கள்—முதியோர்கள். (வழக்.)

மூதாட்டி—முதியவள். (திருவிளை. மண்சுமந். எ.)

மூதாதை—பாட்டன். (சூ. நிக. க: ௭௫.)

மூதாநந்தம்—மனைவி கணவனோடிறத்தல். (ஜைந. வழக். மணிமே.)

மூதாளர்—முதியோர். (புறநா.)

மூதிக்கம்—சிவனார்வேம்பு. (வைத்தியபரி.)

மூதிரி—எருமை. (வைத்தியபரி.)

மூதிரை—திருவாதிரைநாள். (சூ. நிக. க: ௩௯.)

மூதிற்பெண்டிர்—மறக்குடிமகளிர். (சிலப்.)

மூதின்முல்லை—வீரக்கல்லாமல், அம்மறக்குடியிற்பிறந்தமகளிர்க்குங் கோபமுண்டாதலைமிகுத்துச்சொல்லுதல் (புறநா.)

மூதுணர்வு — பேரறிவு. மூதுணர்வுள்ளோரெனவழக்கினும் வருதலுண்டு.

மூதுரை—1. ஔவையார்செய்தது. இதனை வாக்குண்டாமென்றுங்கூறுவர். 2. பழமொழி. (சூ. நிக. ௧௦: ௯௦.)

மூதேவி—சேட்டை. (சூ. நிக. க: ௩௩.)

மூதேவிநாயகன்—துப்பிரன். (அபிதாநசிந்)

மூந்தை—இசங்கு. (மலையக.)

மூப்பன்—1. முதன்மைக்காரன். 2. முதியோன். 3. ஓர்சாதிப் பட்டப்பெயர். (1, 2, 3-வழக்.)

மூப்பு—1. தலைமை. 2. முதுமை. (1, 2-வழக்.)

மூய்தல்—மூடுதல். (சூ. நிக. ௯: ௧௫.)

மூயினை—நிரம்பின. (பதிற்றுப்பத்.)

மூர்க்கநாயனார் — அறுபத்துமூவரிலொருவர். (பெரியபு.)

மூர்க்கம்—1. உக்கிரம். 2. சலஞ்சாதித்தல். 3. நாகப்பூச்சி. (வைத்தியபரி.)

மூர்க்கர்—கீழோர். (சூ. நிக. உ: ௰௪.)

மூர்க்கன்—1. உக்கிரமுள்ளோன். (வழக்.) 2. நாகப்பாம்பு. (சூ. நிக. ௩: ௪அ.)

மூர்க்கை—அகங்காரி. (வழக்.)

மூர்ச்சனம்—
மூர்ச்சனை— } 1. நினைவுமயக்கம். (வழக்.) 2. நெட்டுயிர்ப்பு. (சிந்தா.)

மூர்ச்சிதம்—நினைவுமயக்கம். (வழக்.)

மூர்ச்சித்தல்—
மூர்ச்சிப்பு— } நினைவுமயங்கிக்கிடத்தல் (வழக்.)

மூர்ச்சை—அறிவுமயக்கம். (வழக்.)

மூர்ச்சைதீர்த்துக்குற்றுயிர்தருமருந்து—மிருதசஞ்சீவனி. (சூ. நிக. ௯: ௬௫.)

மூர்ச்சைவாயு — அறிவை மயக்குமொரு வாயு. (வழக்.)

மூர்த்தகோலம்—குடை. மூர்த்தம்-சிரசு.

மூர்த்தசம்—தலைமயிர். (வைத்தியபரி.)

மூர்த்தம் — 1. இரண்டுநாழிகைகொண்ட நேரம், இரண்டரை நாழிகைகொண்ட நேரமென்றுங்கூறுவர். 2. உடம்பு. (சூ.நிக.உ:அ௫.) 3. தலை. (சூ. நிக. ௨: ௯அ.)

மூர்த்தாசம்—கஞ்சிநுரை. (வைத்தியபரி.)

மூர்த்தன்வியம்—கிளர்ச்சி. (வழக்.)

மூர்த்தி—1. அருகன். (ஜைந. வழக்.) 2. சிவன். 3. திருமால். 4. புத்தன். 5. வடிவுடையவன். 2, 3, 4-நிகண்டுகளிற்காண்க.

மூர்த்திகரம்—தெய்விகம். (வழக்.)

மூர்த்திநாயனார்— அறுபத்துமூவரிலொருவர் (பெரியபு.)

மூர்த்திமான்—அர்ச்சை, இலிங்கம் முதலிய வடிவங்களிலுள்ளிருக்கும் கடவுள் அர்ச்சைவிக்கிரகம்.

மூரல்—1. சிரிப்பு. 2. சோறு. 3. பல். (பிங்கல. ௩௯அ.)

மூரி—1. எருது. 2. எருமை. 3. சோம்பல். 4. பழமை. 5. பெருமை. 6. முரண். 7. நெரிவு. 8. வலி. (சூ. நிக. கக: ரகரவெ. ௯0.) (1, 2, 3, 5, 6, 7-பிங்கல. ௩௯அக.) (4, 8-சூ. நிக. கக: ரகரவெ. ௯0.) நெரிவு என்பது நிமிர்தீரவுடல் நெளித்தல். (இராமா. பாலகா. உண்டாட்டுப் ௩௫.)

மூரிமுரித்தல் — நிமிர்தீரவுடல் நிமிர்தல். இதனை மூரிநிமிர்த லென்றுர். (புறநானூற்றில்.)

மூலக்கடுப்பு—ஒரு நோய். (வழக்.)

மூலங்காப்பான் — ஒரு காப்பானேய். (வழக்.)

மூலக்கோதி—மூலக்கொதிப்பு.

மூலகதலம்—ஒரு முருங்கை. (வைத்திய பரி.)

மூலகந்தம்—வெட்டிவேர். (சூ. நிக. ச: அ.) (இருவேலியென்பர்.)

மூலகப்பல்லவம்-முருங்கைமரம். (வைத்தியபரி. அநுபந்த.)

மூலகம்—1. கிழங்கு. (சூ. நிக. ஈ: சஙி.) 2. முள்ளங்கி. 3. புழுக்கொல்லி. 4. வறட்சுண்டி. (2, 3, 4-வைத்தியபரி.)

மூலகன்—இவன்மூலமாக க்ஷத்திரிய வம்சம் தழைத்தமையால் இப்பெயர் பெற்றனன். (அபிதாநசிந்)

மூலகன்மம்—அநாதியாகிய வான்மாவைப் பற்றியிருக்குங்கன்மம். அது: சஞ்சிதம், பிராரத்தவம், ஆகாமியம் இம்மூன்றிற்கும் மூலமாயிருப்பது. (சி. சி. உ. சூ. ஙங. உரை.)

மூலகிரந்தி—ஓர் கிரந்தி. (வழக்.)

மூலகிராணி—ஓர் நோய். (வழக்.)

மூலசம் — மூலத்திலிருந்துற்பத்தியாகும் பயிர் முதலியன. மூலம்-வேர்.

மூலத்தானம் — ஆலயங்களின் கர்ப்பகிரகம். (வழக்.)

மூலத்தின்சாரம்—1. அமுரி. 2. இந்துப்பு. (1, 2-வைத்தியபரி.)

மூலதனம் — மூலதிரவியம், முதற்பணம். (வழக்.)

மூலப்பகுதி-முக்குணமுந்தோன்றுதற்கிடமாகிய பிரகிருதி என்றறிக. (சிந்தாந்தப்பிரகாசிகை.)

மூலப்பட்டை — சித்திர மூலப்பட்டை. (வைத்தியபரி.)

மூலப்பிரகிருதி—மூலப்பகுதி.

மூலபலதம்—பலா.

மூலபலம்-அறுவகைப்படைகளிலொன்று, மூலப்படை. (இராமா. யுத்தகா. மூலபலவதைப்.) பலம்-சேனை.

மூலபாடம் — உரையின்றி யெழுதும் பாடம். (நன்னூ. பாயிர. உக.)

மூலம்—1. ஓர் நட்சத்திரம். 2. ஓர் நோய். 3. உரையில்லாப்பாடம். 4. காரணம். 5. கிழங்கு. 6. தலைமை. 7. தாலம்பபாஷாணம். 8. மூலாதாரம். 9. வேர். (1, 4, 5, 6, 9-சூ நிக. கக: லகரவெ. உ.) ஏனையன. (வழக்.)

மூலமந்திரம்—பஞ்சாக்கரமந்திரம்.

மூலர்—திருமூலர், இவர் திருமந்திரஞ்செய்தவர்.

மூலவல்லி—வெற்றிலை. (வைத்தியபரி.)

மூலவாயு—ஓர் நோய். (வழக்.)

மூலவியாதி — மூலமுளையாகிய வேர் நோய்.

மூலவிக்கிரகம் —மூலத்தான விக்கிரகம். (வழக்.)

மூலவிருள் — ஆணவமலம். தத்துவக்கட்டளையிலறிக.

மூலாக்கினி—மூலத்தக்கினி. (வழக்.)

மூலாதாரம் — ஆறுதாரங்களி லொன்று. (திருவிளை. வெள்ளியம். சு.)

மூலி— | 1. மருந்துப்பூடு. 2. வேருள்ள
மூலிகை- | தாகிய மரமுதலியன. (1, 2-வைத்தியபரி.)

மூலியம்—1. கொண்டபொருள். 2. சம்பளம்.

மூலேரம்—சடை.

மூலை —கோணம். (வழக்.)

மூவகைத்தமிழ்—இயலிசை நாடகத்தமிழ். (பிங்கல. கசுஙஉ)

மூவகைத்தானம்—1. உத்தமதானம். 2. மத்திமதானம். 3. கடைப்படுதானம். (பிங்கல. ஙசகூ, ஙசஎ, ஙசஅ)

மூவகைப்புண்ணியபாவவழக்கம் — செய்தல், செய்வித்தல், உடன்பாடு. (பிங்கல. ஙசகூ.)

மூவகைமொழி — உண்மைகூறல், பழித்தல், புகழ்தல். (பிங்கல. ஙசㅇ.)

மூவகைவீதி-மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி யெனவரு மூன்றே. இதன் வகையைப் பிங்கலந்தையிற்காண்க.

மூவகைச்சீர் — மூன்றசைகூடிவருஞ்சீர். (யாப். காரி. உறுப்பிய. கச.)

மூவட்சி —தேங்காய். முக்கண்ணுடையது. (தைலவ.)

மூவர்—திருமூர்த்திகள் (இராமா. பாலகா. மந்தரைசூ. கக.)

மூவரசர்—சேரசோழபாண்டியர். (வழக்.)

மூவறிவுயிர் — சிதலெறும்பு முதலியன. (நன்னூ. உரிமிய. கூ.)

மூவன் — பெருந்தலைச் சாத்தனாரிபழ்ந்து பாடப்பெற்ற ஓர் சிற்றரசன். (அபிதாநகோ.)

மூவா—இறவாத. (சிந்தா.)

மூவாசை—மண், பெண், பொன்னசை. (வழக்.)

மூவிசை—மந்தம், மத்திமம், தாரம். (சூ. நிக. கㅇ சㅇ.)

மூவிடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை (நன்னூ. பெயரிய. கூ)

மூவிலை—1. குப்பைமேனி. 2. நரிப்பயறு. 3. மண்ணி. 4. மும்புரமெரித்தான். (வைத்தியபரி.)
மூவிலைமினனி—அவரை. (வைத்தியபரி.)
மூவிலைவேல்—சூலம். (சூ. நிக. எ: அ.)
மூவுதல்—முடிதல், இறத்தல். (சிந்தா.)
மூவுலகம்—மூன்றுலகம், பூமி, அந்தரம், சுவர்க்கம். (சூ. நிக. கஉ: க.)
மூவுலகளந்தோன் — திருமால். (திவாகரம்.)
மூவுலகுணர்ந்தமூர்த்தி—அருகன். (சூ. நிக. ள: க.)
மூவேல்—கருவேல், குட்டிவேல், வெள்வேல். (வைத்தியபரி.)
மூழ்—முகிழ்.
மூழ்கல்—1. முழுகுதல். 2. கெடுதல். (1, 2-வழக்.)
மூழ்கி—அழுந்தி. (பரிபாடல்.)
மூழ்த்தம்—முகூர்த்தம். (சிந்தா.)
மூழ்த்தல்—முதிர்தல். (பதிற்றுப்.) மொய்த்தலெனவுங்கூறுவர்.
மூழ்த்து—முதிர்ந்து. (பதிற்றுப்பத்.)
மூழமுட்டி—மிளகு. (வைத்தியபரி.)
மூழி—1. அகப்பை. (சூ. நிக. எ: ருஎ.) 2. சோறு. (சூ. நிக. கக: ழகரவெ. க.) 3. நீர்நிலை. (பிங்கல. சு௦௪.) 4. பாண்டவிசேடம். 5. பெட்டி. (4, 5-சிந்தா.)
மூழிக்களம் — திருமாலின்திருப்பதிகளிலொன்று (நூற்றெட்டுத்திப்பதியந்தாதி.)
மூழிவாய்—பூப்பெட்டி. (சூ. நிக. எ: ருரு.)
மூழை—1. அகப்பை 2. சோறு. (சூ. நிக. கக: ழகரவெ. க.)
மூள்தம்—புகுதம். (சிந்தா.)
மூளல்—மூளுதல்.
மூளி—1. காதறை. 2. விளிம்பற்றது. (வழக்.)
மூளுதல்—1. கூடுதல். (திருவிளை. நகரப். எசு.) 2. நெருப்பு முதலியன பற்றியெரிதல். (பெரியபு. கண்ணப்பநாய. உ௦.) 3. முயற்சித்தல். (திருவிளை. திருநாட். கஅ.)
மூளை — தலை முதலியவற்றினுள்ளதாகிய வொருவகை மாமிசம். (இராமா. பாலகா. கோலங்கா. சக.)
மூறுவா—பெருங்குரும்பை. (வைத்தியபரி.)
மூன்றம்பக்கம் — சயையென்ற பெயர். கூ. அ கரு ஆம். திதி. (பிங்கல. உகூஉ.)
மூன்று—ஒரெண் (வழக்.)
மூன்றுமுட்டி — 1. குமுட்டி. 2. சிற்றுமுட்டி. 3. பேராமுட்டி. (1, 2, 3-வைத்தியபரி.)

## மெ.

மெச்சல்—, மெச்சுதல்— கொண்டாடல். (சூ. நிக. க: ரு.)
மெட்டு—1. ஆயத்துறை. 2. வீணையில் வைத்திருக்கும்மெட்டு. (1, 2-வழக்.)
மெத்த—மிக. (வழக்.)
மெத்தல் — நிரம்பல். (திருவாலவாய். திருவிளை.)
மெத்தி—1. அப்பி. (சிந்தா.) 2. நிரப்பி. (வழக்.)
மெத்து — மென்மை. (உ - ம்.) "மத்து மந்தரம்வாசுகிகடைகயிறடைநாண் மெத்துசந்திரன்" (இராமா. பாலகா. அகலிகை. உக.)
மெத்துதல்—1. மிகுதல். 2. நிறைத்தல். (1, 2-வழக்.)
மெத்தெனல்—, மெத்தெனவு— மிருது (வழக்.)
மெத்தை—1. ஓர் பூடு. (வைத்தியபரி.) 2. அணை. 3. சட்டை. (2, 3-சூ. நிக. கக: லகரவெ. கூ.) 4. மேல்வீடு. (வழக்.)
மெது—மிருது. (வழக்.)
மெதுக்கு—ஓர் செடி. (வழக்.)
மெதுமெதுத்தல்—, மெதுமெதெனல்—, மெதுமெதுப்பு— மிருதுவாயிருத்தல். (வழக்.)
மெய்—1. அறிவு. (புறநா.) 2. உடல். (சூ. நிக. ஈ: அடு.) 3. உண்மை. (சூ. நிக. க௦: கூ.) 4. ஒற்றெழுத்து. (நன்னூ. எழுத்திய. அ.)
மெய்க்கீர்த்திமாலை—ஓர் பிரபந்தம் (உ-ம்.) "சொற்சீரடியாற்சொனிப்படு புகழைவேந்தர் பாற்கூறலின் மெய்க்கீர்த்தியாகும்" (இலக்கணவி. பாட்டிய. எக.)
மெய்க்கூத்து — சாந்திக்கூத்து நான்கினொன்று. சாந்திக்கூத்துப்பார்.
மெய்க்கொட்டை-பலாக்காய்மூளை (வைத்தியபரி.)
மெய்கண்டதேவர்—சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமம் பெற்றவர். சித்தாந்த சாத்திரத்தின் முதனூலாகிய சிவஞானபோதமருளிச்செய்தவர்.
மெய்காப்பாளர்—காவலர். (சூ. நிக. உ: ஈகூ.)
மெய்கூறல் — உண்மைபேசல். அது: மும்மொழியினென்று. மூவகைமொழிபார்.
மெய்கோட்டிக்கைதவித்தல் — பிங்கலந்தையில், குடந்தமென்பர்.
மெய்ஞ்ஞானசாகரம்—ஒரு நூலென்பர்.
மெய்ஞ்ஞானதீபம்—ஒரு நூலென்பர்.

மெய்ஞ்ஞானநீலகண்டேசுரர் — திருப்பைஞ்ஞீலியிற் சுவாமிபெயர். (அபிதானகோ.)

மெய்ஞ்ஞானம் — உண்மைஞானம். (சிவஞானபோ. அ. சூத்திரவுரை.)

மெய்ஞ்ஞானவிளக்கம் — ஓர்நூலென்பர்.

மெய்ஞ்நிலைநகை — சிறுவிரலும், அணிவிரலும், நடுவிரலும், சுட்டுவிரலும்விட்டுநிமிரச் சுட்டுவிரன்மேற்பெருவிரல்வைப்பது. (சிலப்.)

மெய்த்தல் — உண்மையாதல் (வழக்.)

மெய்த்திறம் — நூல்வகைகள். மெய்-மெய்யுணர்த்துவனவாகிய நூல், திறம் — வகை. (மணிமே.)

மெய்ந்நலம் — வலி. (சூ. நிக. அ: உஅ.)

மெய்ப்படாம் — நிலையங்கி (வழக்.)

மெய்ப்பரிசம் — மெய்ப்பொறியாற்பரிசித்தல். இது எட்டுவகைப்படும். (சூ. நிக. கஉ: கூ0.)

மெய்ப்பாடு — 1. அகப்பாட்டுப்பன்னிரண்டுறுப்பினுளொன்று. நம்பியகப். ஒழிபியல். "திணையேகைகோ" என்னுஞ் சூத்திரத்திற் பார்க்க. 2. புகழ். (பிங்கல உ0கு.)

மெய்ப்பித்தல் - உண்மையைப் புலப்படுத்தல் (வழக்.)

மெய்ப்பிரம் — மேகம். (பிங்கல. க: நிகூ.)

மெய்ப்பு — மெய்த்தல். தொழிற்பெயர்.

மெய்ப்பூச்சு - அங்கராகம். (சூ. நிக. கூ: கநி.)

மெய்ப்பை — சட்டை. (சூ. நிக. எ: எசு.)

மெய்ப்பொருள் — 1. உண்மைப்பொருள். 2. கடவுள். 3. கல்வி. (உ-ம்.) "கைப்பொருடன்னின் மெய்ப்பொருள்கல்வி" யென்னும் ஔவையார்வாக்கா லறிக.

மெய்ப்பொறி - பஞ்சேந்திரியங்களிலொன்று. (வள். கடவுள்வா. சு. உரை.)

மெய்புகுகருவி - கவசம். (பிங்கல. கக0எ.)

மெய்ம்மயக்கம் - } ஒற்றெழுத்தியைபு.
மெய்ம்மயக்கு — } (நன்னூ. எழுத்திய. ருகு. சூத்திரவுரை.)

மெய்ம்மலம் — உடம்பின் மாசு. (பிங்கல. கஅகு.)

மெய்ம்மறத்தல் - } தன்னை மறத்தல்.
மெய்ம்மறதி — } (வழக்.)

மெய்ம்மறை — மெய்புகுகருவி. (பதிற்றுப்பத்.)

மெய்ம்மாசு — மெய்ம்மலம்.

மெய்ம்மை - உண்மை. (சூ. நிக. கஉ: எ.)

மெய்ம்மொழி — வேதம்

மெய்யர் — 1. பார்ப்பார். (சூ. நிக. உ. கு.) 2. புத்திரர். (சூ. நிக. உ: அ0.) 3. முனிவர். (சூ. நிக. உ: உ.) 4. மெய்சொல்வோர். (வழக்.)

மெய்யறிவு — உண்மைஞானம்.

மெய்யன் — 1. கடவுள். 2 சத்தியவான். 3 மகன். (சூ. நிக. உ: அ0.) (1, 2-வழக்.)

மெய்யாப்பு — சட்டை. (பரிபா.)

மெய்யுவமம் - வடிவுவமை. (நன்னூ. சொல்லதி. பொதுவிய. கசு உரை.)

மெய்யுறுபுணர்ச்சி — உள்ளப்புணர்ச்சியின்பின்னிகழ்வது; "உள்ளப்புணர்ச்சியுமெய்யுறுபுணர்ச்சியும்" என்னும் நம்பியகப். அகத்திணையியற்சூத்திரத்திலறிக.

மெய்யுறை — மெய்புகுகருவி.

மெய்வழி — விலாப்புடை. (சிந்தா.)

மெய்வழிநீர் — அமுரி.

மெய்வாழ்த்து — மெய்ப்பொருளைக்கூறுவதனால் மெய்வாழ்த்து. இதனை வாயுறைவாழ்த்தென்பர். (யாப். காரிகை. செய்யுளிய. க?-ம். பாட். உரை.)

மெய்விரதன் — தருமராசன். (சூ. நிக. உ: கசு)

மெய்விவாகம் - தலைமகனுந் தலைவியுமிருவர்சுற்றமும் இசைவுற்று முடிக்கின்ற மணம். (வழக்.)

மெருகிடுதல் - மணி முதலியவற்றைமிருதுவாக்கல். (வழக்.)

மெருகு — 1. மிருது. (வழக்.) 2. மெருகன்கிழங்கு. (வைத்தியபரி.)

மெல்கல் — இலேசாதல்.

மெல்கோல் — பற்கொம்பு. (சிந்தா.)

மெல்ல - மிருதுவாக. குறிப்புவினையெச்சம்.

மெல்லம்புலம்பு - மென்மையாகிய கடற்கரை. (ஐங்குறு.)

மெல்லல் — மெல்லுதல். (வழக்.)

மெல்லன் — நெய்தனிலத்தலைவன். (சூ. நிக. உ: எகு.)

மெல்லி — மென்மையையுடையவளாகிய பெண். (உ-ம்.) "மெல்லிநல்லாடோள்சேர்" (கொன்றைவேந்.)

மெல்லிது — } மிருதுவாயிருப்பது.
மெல்லியது - } (வழக்.)

மெல்லியர் — 1. அற்பகுணங்களையுடையார். (புறநா.) 2. மாதர். 3. மென்மையர். (2, 3-வழக்.)

மெல்லியல் — 1. மரத்திளங்கொம்பு. (பிங்கல. உஎகூ.) 2. மென்மையுடையவள். (நாலடி. பிறன்மனைநய. சு.) (தொல். பொருள். அகத். ச0.)

மெல்லியார்கூந்தல் - அம்மையார்கூந்தல். (வைத்தியபரி.)

மெல்லிலை — 1. வெற்றிலை. 2. வினைத்தொகை. (சிந்தா.)

மெல்லினம்—ங், ஞ், ண், ந், ம், ன் என இவ்வாறும் மெல்லினமாம். (நன்னூ. எழுத்திய கச.)

மெல்லினவெதுகை – மெல்லினவெழுத்துக்களெதுகையாய்வருவது. (யாப். காரிகை. ஒழிபி. சு. உரை.)

மெல்லுதல்—மெல்லல். (வழக்.)

மெல்லெனல்—மந்தக்குறிப்பு. (வழக்.)

மெல்லெனவு — மெத்தெனவு என்றது போல மிருதுவையுணர்த்தும்.

மெலித்தல்—1. மெல்லிதாக்கல். (வழக்.) 2. செய்யுள்விகாரத்தொன்று. (உ-ம்.) "வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்" (நன்னூ. உயிரீற்றுப். ரு.)

மெலிதல்—1. இடைதல் 2. புறப்பொருட்டுறையினொன்று. "ஒன்றார்கூறுமுறுபழிநாணிமென்றோளரிவை மெலிவொடுவைகின்று" (புறப். மாலை.) 3. மெலிவு. (1, 3-வழக்.)

மெலியது—மென்மையானது. (வழக்.)

மெலிவித்தல்—1. இசையை மெல்லிதாக்கல். (பெரியபு. ஆனாயநாய. பு. உஎ.) 2. கனங்குறைத்தல். 3. வாட்டல். (2, 3-வழக்.)

மெலிவு—1. இளைப்பு. 2. வருத்தம். (1, 2-வழக்.)

மெலிவொடுவைகல்-புறப்பொருட்டுறையினொன்று. "மணிவளை நெகிழ மாணலந்தொலைய, அணியிழைமெலிவின் ஆற்றல்கூறின்று" (புறப். மாலை.)

மெலுக்கு—வெளியலங்காரம். (வழக்.)

மெழுக்கிடுதல்—
மெழுக்கு—
மெழுகல்—
மெழுகிடல்—
மெழுகிடுதல்— } மெழுகுதல். (வழக்.)

மெழுகு—1. அரக்கு. (சூ. நிக. கக: ரகரவெ. ௬எ.) 2 தெரிநிலைவினைப்பகுதி.

மெழுகுசாரணை—ஓர் சாரணை. (வழக்.)

மெழுகுதல்—தரைமெழுகல். (வழக்.)

மெழுகுபதம்-தயிலங்காய்ச்சும்போது கடுகு மெழுகுபோலத்திரளும் பக்குவம். பதம்—பக்குவம். (வழக். வைத்தியம்.)

மெழுகுபாகல்—ஒரு பாகல். (வழக்.)

மெழுகுபீர்க்கு-ஒருபீர்க்கு.(வைத்தியபரி.)

மெழுகுமண்–பசைமண். ஒரு குழூஉக்குறி.

மெள்ள—மெல்ல. (வழக்.)

மென்கணம்-மெல்லினம் (நன்னூ. எழுத். 'மெல்லினம்' என்னுஞ் சூத்திரவுரையிலறிக.)

மென்பறை —பறவைக்குஞ்சு. (ஐங்குறு.)

மென்பால்—1. மருதநிலம். (சூ. நிக. ௫: ௩௬.) 2 நாடகவரங்கிற்கு வகுக்கப்பட்டநிலம் மூன்றனுளொன்று. அது வெட்டினகுழியில் மணங் குறைவாயிருப்பது. (சிலப்.)

மென்புலம்-மருதமும்நெய்தலும்.(புறநா.)

மென்மெல—மெல்லமெல்ல. (ஐங்குறு.)

மென்மை—மிருது. அஃது எண்வகையூற்றினொன்று. (நன்னூ உரியிய க௬௫சூத்.உரை.)

மென்றல்—மெல்லுதல். (வழக்.)

மென்றொடர் — மென்றொடர்க்குற்றியலுகரமொழி. (யாப். காரி. உறுப்பிய. க. உரை.)

மென்னடை–அன்னம். (பிங்கல. உ௬கக.)

மென்னை—கழுத்து. (வழக்.)

## மே

மே—1. மேவல்; முதனிலைத்தொழிற்பெயர். 2. மேன்மை. (காஞ்சிப். திருநெறிக்காரைக்காட். ௨௬.)

மேக்கு—1. மேல். 2. மேற்றிசை. (1, 2-சூ. நிக. கக: ககரவெ. சு.)

மேகு—மேவுக. (திருவானைக். நகரப். கக.)

மேகக்கிராணி–ஓர்கிராணிநோய். (வைத்தியபரி.)

மேககாந்தி—ஓர் நோய். (வழக்.)

மேககாரகம்—ஓர் நோய்.

மேகச்சிலை—1. மாக்கல். 2. வங்கக்கல்.

மேகசடை — கருமஞ்சேசிலை. (வைத்தியபரி.)

மேகசம்—முத்து. இது மேகத்திற்பிறப்பதனாற்பெற்ற பெயரென்க.

மேகசாரம் — கர்ப்பூரம். (வைத்தியபரி.)

மேகசிந்தகம்–
மேகசீவகம்— } சாதகப்புள்.

மேகசூலை—ஓர் சூலைநோய். (வைத்தியபரி.)

மேகத்தின்விந்து — பூநாகம். (வைத்தியபரி.)

மேகநாதம்—1. சிறுகீரை. 2. பலாசு. 3. மலைப்பச்சை. 4. மேகமுழக்கம். (1, 2, 3-வைத்தியபரி.)

மேகநாதன்—1. இந்திரசித்து. (இராமா. பாலகா. திருவவ. கூ) 2. நவச்சாரம்.

மேகநீர்—
மேகநோய்– } ஓர் நோய். (வழக்.)

மேகப்பச்சை—நாகப்பச்சை. (வைத்தியபரி.)

மேகப்புள்—வானம்பாடி. "வெள்ளெயிற்றரவுமேய்ந்தமிச்சிலின்மெலிந்துமேகப், புள்

வயிற்பிறந்தபுட்போல்" (சிந்தா. முத்தியிலம். உ௬௬.)

**மேகபடலம்** —1. ஓர் கண்ணோய். 2. மேகச்செறிவு.

**மேகபுட்பம்** —1. நீர். 2. மழை.

**மேகம்** —1. ஓர் நோய். 2. கடுக்காய். 3. குயில் 4. முகில். (சூ. நிக. க: ௬௨.) 5. முத்தக்காசு. (வைத்தியபரி.)

**மேகமந்தாரம்**—மந்தாரச்சிலை.

**மேகழலி**—புல்லாமணக்கு. (வைத்தியபரி.)

**மேகயோனி**—புகை. (வைத்தியம்.)

**மேகாரணம்**—ஓர் புண். (வைத்தியபரி.)

**மேகராகக்குறிஞ்சி** — ஓர் பண். சம்பந்த மூர்த்திநாயனார் திருவையாற்றுப்பதிகம்.

**மேகராடி**—மயிலடிக்குருந்து. (வைத்திய பரி.)

**மேகலம்** — 1. நருமதையடுத்த தேசம். (அபிதானசிந்.) 2. மேகலமலை. (அபிதானகோ.)

**மேகலன்**—ஒரிருடி. இவன் விந்தியபர்வததருகிலுள்ளவன். (அபிதானசிந்.)

**மேகலாகன்னிகை**—நருமதை. மேகலபர்வதத்தினுற்பத்தியாகும்நதியாகலின் இப்பெயர் பெற்றது. (அபிதானகோ.)

**மேகலாபதம்**—இடை.

**மேகலை**—1. இடைக்கட்டு. (திருவானைக். கோச்செங். ககரு.) 2. ஓமகுண்டத்தைச்சுற்றியிடும்வளையங்கள். (திருவிளை.திருமணப்.௬எ.) 3. தாசு. 4. நருமதை. (அபிதானசிந்.) 5. மாதரிடையணியுள் எழுகோவைமணி. 6. வெற்பினுரு.

**மேகவண்ணக்குறிஞ்சி** —1. ஓர் மரம். 2. மழைவண்ணக்குறிஞ்சி. (1, 2-வைத்தியபரிபா.) சூ. நிகண்டில். இதற்குப் பாணம் என்றுங் கூறுவர்.

**மேகவர்ணனை** —அவுரி;மேகநிறத்தையுடைமையால்வந்த பெயராம்.

**மேகவாகனகற்பம்** —இக்கற்பத்தில் திருமால் சிவனை மேகவுருக்கொண்டுதாங்கிப் படைத்தனரென்பர். (அபிதானசிந்.)

**மேகவாகனன்**—இந்திரன். (சூ. நிக. க: கக.)

**மேகவாய்**—தயிர். (வைத்தியபரி.)

**மேகவாயு**—ஓர் நோய். (வைத்தியபரி.)

**மேகவிரஞ்சி**—
**மேகவிரிஞ்சி**— } முப்பத்திரண்டிராகங்களிலொன்று. (பொருட். நிகண்.)

**மேகவிருளி**—பித்து. (வைத்தியபரி.)

**மேகவூறல்**—மேகநீர்பாய்தல். (வழக்.)

**மேகவெட்டை**—ஓர்நோய்.(வைத்தியபரி.)

**மேகன்**—ஓர் அசுரன். (அபிதானசிந்.)

**மேகாதுந்தம்**—மயிலினிறகடி. (வைத்தியபரி.)

**மேகாநந்தி**—மயில்;மேகத்தைக்கண்டானந்திப்பதென்று பொருள்.

**மேசகம்**—1. இருள். 2. கருமை. 3. புகை. 4. முகில்.

**மேசகை**—1. இருள். 2. கருமணிச்சிலை. (வைத்தியபரி.)

**மேசை**—ஒருவிதமானபீடம். (வழக்.)

**மேட்டி**—
**மேட்டிமை**- } இறுமாப்பு. (வழக்.)

**மேட்டிரம்**—1. ஆட்டுக்கடா. 2. ஆண்குறி.

**மேடசிங்கி** — புழுக்கொல்லி. (வைத்தியபரி.)

**மேடம்**—1. ஆடு. (சூ. நிக. ௩: கக.) 2. ஓர் ராசி. (சூ நிக. க: ௬௪.)

**மேடமாதம்**—சித்திரைமாதம்.

**மேடவிலோசனம்**—பேரவுரி.

**மேடவீதி**-சித்திரை, வைகாசி, ஆனிமாதங்களிற் சூரியன்செல்லும்வீதி. (சூ.நிக.கஉ:க௩.)

**மேடியுப்பு**—வளையலுப்பு. (வைத்தியபரிபா.)

**மேடு**—1. உயர்வு. (பிங்கல கஎ௬0.) 2. திடர். (பிங்கல. ௪அக.)

**மேடுகம்**—சுவர்.

**மேடை**— 1. உப்பரிகை. 2. வேதிகை. (1, 2-வழக்.)

**மேண்டம்**—ஆடு. (வைத்தியபரி.)

**மேத்தியம்**—1. சுத்தம். (சூ நிக. எ. ௩க.) 2. சீரகம. (வைத்தியபரிபா.)

**மேத்திரம்**—ஆட்டுக்கடா.

**மேதகம்** —1. கோமேதகம். (திருவிளை. மாணிக்க. ௪௬.) 2.சாலங்கபாஷாணம். (வைத்தியபரி.) 3. மேதகவு; மதிப்பென்பர்.

**மேதகையர்**—மேலுயர்ந்தோர்.

**மேதச்சி**—கற்பரிபாஷாணம். (வைத்தியபரிபா.)

**மேதம்**—1. கொலை 2. நிணம். 3. யாகம்.

**மேதவர்**—சண்டாளனுக்கு வைதேகஸ்திரீயிடமபிறந்தவர். (அபிதானசிந்.) இவர் மூங்கில்வேலைசெய்பவரென்பர்.

**மேதாதிதி**—1. கண்ணுவர் குமரன். (அபிதானசிந.) 2.சுவாயம்புவமனுபுத்திரனாகிய பிரியவிரதன்புத்திரன். (அபிதானகோ.)

**மேதாவதி**— அறிவுள்ளவள். (வழக்.)

**மேதாவி**— அறிவுள்ளவன். (வழக்.)

**மேதாவிநி**—நாகணவாய்ப்புள்.

மேதாவியர்—அறிஞர். (சூ. நிக. உ: ஈ:)
மேதி—1. எருமை. (பிங்கல. உசஎசு.) 2. வெந்தயம். (வைத்தியபரிபா.)
மேதிக்கண்ணன்—வீரமயேந்திரத்து வட கீழ்க்கோபுரத்து வாயிற்காவலாளியாகிய ஓர் அசுரன். (அபிதானசிக்.)
மேதிக்கவுணன்—மூர்த்தபாஷாணம். (வைத்தியபரிபா.)
மேதிச்சென்னிமிதித்தாள்—துர்க்கை. (சூ. நிக. க: சுக.)
மேதிமாமுகன் — சூரபன்மன் மந்திரிகளி லொருவன். (அபிதானசிக்.)
மேதியன்—இயமன், எருமைக்கடாவாகனத் தையுடையவன்.
மேதினி—பூமி. (சூ. நிக. டு: அ.)
மேதினித்திரவம்—1. பூதாளி. 2. மல்லி யிலை. (1, 2-வைத்தியபரி.)
மேதை—1. இறைச்சி. 2. கள். 3. தோல். 4. நரம்பு. 5. புதன். 6. பேரறிவு. 7. பொற்ற லைக்கையாந்தகரை. 8. மேன்மை. (1,2,3,5, 6-சூ. நிக. கக: தகரவெ. கல.) (4-பிங்கல. ருகருசு.) (7-வைத்தியபரி.) (8-சூ. நிக. அ: கூச)
மேதையர்—புலவர்.
மேதோசம்—எலும்பு.
மேந்தி— } வெந்தயம். (வைத்திய
மேந்திகை— } பரி.)
மேந்தோன்றல் — மேம்படத்தோன்றல். (புறநா.)
மேநகை-தேவதாசிகளிலொருத்தி. இவள் காசிபருக்குச் சுரபியிடம் பிறந்தவள். (அபிதான சிக்.)
மேநசம்—வெண்காரம். (வைத்தியபரி.)
மேம்படல்—உயர்தல்.
மேம்படீஇய— மேம்படுதற்கு. (உ-ம்.) "ஆற்றவீரவமம்மெனம்மேடாண்மைமேம்ப டீஇயவென்பார்" (சிந்தா. காந்தருவதத். உகூ0.)
மேம்பாடு—1. ஊற்றம். 2. மேன்மை. (1-சூ. நிக. கO: கடு.) (2-வழக்.)
மேய்ச்சல்— } விலங்குண்ணுதல்.
மேய்தல்— } (வழக்.)
மேய்த்தல்—மேயச்செய்தல். (வழக்.)
மேய்ந்து—பருகி. (உ-ம்.) "கலங்குதெண் டிரைமேய்ந்துகணமழை" (சிந்தா. நாமகள் ரு)
மேய்ப்பான்-ஆடுமாடு மேயச்செய்பவன்; இடையன். (வழக். மேய்க்கி என்றுங் கூறுவர்.
மேய்ப்பு—மேய்ச்சல். (வழக்.)
மேயம்-ஞேயம், அறியத்தக்கது. (தர்க்கா மிருதம்.)

மேயல் — 1. மேய்ச்சல். (ஐங்குறு.) 2. மலை. (பிங்கல. சகடு.)
மேயினர்—பொருந்தினர். (உ-ம்.) "வரம் பெறுநெறியவர் மலைதன்மேயினர்" (சிந்தா. காந்தருவ. கசுகூ.)
மேரு — 1. ஆசனபீடம். 2. மேருமலை. (சூ. நிக. நி: கரு.)
மேருசாவர்ணி — ஒருமநு. இவர் இமய மலையிற பாண்டவாக்குத்தருமமுபதேசித்தவர். (அபிதானசிக்.)
மேருமணி—நாயகமணி. (வழக்.) உருத்தி ராக்கமுதலிய மாலைகளின்மேலேயுள்ளது.
மேருமந்தரபுராணம்—ஒரு தமிழ்ச்சைன நூல். (மணிமே.)
மேருவில்லி—சிவன்; மேருவைவில்லாகவு டையவன். குன்றவில்லி என நிகண்டிற்கூறி னர்.
மேருவின்வாரி-பொன்மணல். (வைத்திய பரி.)
மேல்—1. அதிகம். 2. ஆகாயம். 3. இடம். 4. எழனுருபு. 5. மேற்கு. 6. மேற்புறம். 7. மேன்மை. (2, 5, 7-பிங்கல. ருகககூ.) (3-பிங் கல. எகக.) (4-நன்னூ. பெயரியல். சடு.) (1, 6-வழக்.)
மேல்காற்று—இதற்குக் கோடையென்று பெயர். (சூ. நிக. க: சஅ.)
மேல்கோட்டை—மைசூருக்குஅருகிலுள்ள பட்டணம். இவ்வூர்மலையில் விஷ்ணு ஆலயமி ருக்கிறதாம். (அபிதானசிக்.)
மேல்சாதி—மேற்சாதி. (வழக்.)
மேல்பால்விதேகம்- } நவகண்டத்தொ
மேல்பாலிரேபதம்— } ன்று. (சூ. நிக. கஉ: கக.)
மேல்வட்டம்— ஆகாயத்திற்றோன்று மூர் கோள். மேல்-ஆகாயம். வட்டம்-ஊர்கோள்.
மேல்வாய்—1. அண்ணம். 2. ஒன்றுமுத லாய் மேற்பட்டகணக்கு. (வழக்.)
மேல்வாய்ப்புறம்— அண்ணம். (சூ. நிக. உ: கூடு.)
மேல்வாரம்—இறைப்பங்கு. (வழக்.)
மேல்விசாரணை — எல்லாவேலைக்காரர்க ளையும் விசாரிக்கிற முதன்மையான விசாரிப்பு. (வழக்.)
மேல்விதேகம் —மேல்பால்விதேகம். (சூ. நிக. கஉ: கக.)
மேலவர்-1. பெரியோர். (வழக்.) 2. வான வர். (பிங்கல. கஎஎ.)
மேலனம்—1. கலப்பு. 2. கூட்டம். 3 பழக்கம்.

மேலாலம்—மழை.

மேலாலவத்தை— மேல்நோக்கியிருக்கும் ஐந்தவத்தை. திருவாலவாய்க்கட்டளையிற்காண்க.

மேலிடுதல்—அதிகரித்தல். (வழக்.)

மேலீடு-1. அதிகரிப்பு. (வழக்.) 2. மாதர் காதணியிலொன்று. (வழக்.) 3. மேன்மை.

மேலுதடு—இதற்கு ஓட்டமென்றுபெயர். (பிங்கல. ௪0௬௬.)

மேலுலகம்—தேவருலகம். (சூ. நிக. ௫: ௬.)

மேலேழுலகம்—பதினுலுலகைப்பார்.

மேலை—மேல். ஐ-சாரியை.

மேலைத்திருக்காட்டுப்பள்ளி-காவிரியின் றென்கரையிலுள்ள ஒரு சிவதலம். (அபிதான கோ.)

மேலையகந்தாழ்வான்- நாதமுனிகளிடம் பண்ணுடன் பரபந்தமோதிய ஸ்ரீவைஷ்ணவர். (அபிதானசிந்.)

மேலையோர்—மேலோர். ஐ சாரியை.

மேலோர்—1. தேவர். (சூ. நிக ௧: ௬௨.) 2. மேலவர். (வழக்.)

மேவல்—1. அதிகரித்தல். 2. ஆசை. (சூ. நிக. அ: ௭௫.) 3. சொல்லல். 4. நிரவுதல். 5. பொருந்தல். (1, 3, 5 பரிபாடல்.)

மேவலர்—பகைவர். (பிங்கல. ௯௭௭.)

மேவார்—பகைவர். (உ-ம்.) "மேவாரல்லர் தமரழைத்தால்" (பாரத. சூதுபோர்.)

மேவினர்—மித்திரர். (சூ. நிக. ௨: ௫௨.)

மேவு— } மேவல்.
மேவுதல்- }

மேழகம்-1. ஆடு. 2. கவசம். 3. தருவாட்டேறு. (1, 2-சூ. நிக. ௧௧: ழகரவெ. ௭.) 3. (பிங்கல. ௨௪அ௨.)

மேழி—கலப்பையின் கைப்பிடி. (உ-ம்.) 'மேழிபிடிக்குங்கைவேல்வேந்தர்நோக்குங்கை' (ஏரெழுபது.)

மேழிப்படையோன் — பலதேவன். (சூ. நிக. ௧: ௪0.)

மேழியர்—பூவைசியர், வேளாளர். (பிங்கல. ௭௭௭.)

மேளகம்—கஞ்சி. (வைத்தியபரி.)

மேளம்—வாத்தியபொது. (வழக்.)

மேளாபம்—கூட்டம்.

மேற்கட்டி — விதானமென்பர். (பிங்கல. ௯௭௬௨.)

மேற்கதுவாய்முரண்-முதலயற்சீரொழித் தல்லா மற்றெல்லாச்சீர்க்கண்ணும் முரண்வரத் தொடுப்பது. (யாப். காரி. உறுப்பி. ௨0. உரை.)

மேற்கதுவாய்மோனை—முதலயற் சீரொழித்து மற்றெல்லாச்சீர்க்கண்ணும் மோனை வரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பி. ௨0 உரை.)

மேற்கதுவாயளபெடை — முதலயற்சீரொழித் தல்லனமூன்றின்மிசை யளபெடை வரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பிய. ௨0-ம். பாட்டுரை.)

மேற்கதுவாயியைபு — முதலயற் சீரொழித்து மற்றெல்லாச்சீர்க்கண்ணு மியைபுவரத் தொடுப்பது. (யாப். காரி. உறுப்பி. ௨0. சூத். உரை.)

மேற்கதுவாயெதுகை— முதலயலின்றி மற்றெல்லாச்சீர்க்கண்ணு மெதுகைவரத்தொடுப்பது.

மேற்கு—1. மேல். (பிங்கல. ௬௬௬௬.) 2. மேற்றிசை. (சூ. நிக ௫: ௬.)

மேற்கோள் — 1. ஆசிரியவசனமாகிய மூன்றுன்வழக்கு. (நன்னூ. பொதுப். ௯.) 2. சனி. (பிங்கல. ௨௬௪.) 3. யாக்கையின் மேற்கொளளப்படுவதாகிய போர்வை. நிகண்டிலறிக. 4. மேற்கொள்ளப்படுவது, பிரதிக்ஞை யென்பர். (தர்க்கசங்கிரகம். ௪௯.)

மேற்செம்பாலை—ஓரிசை. இது தாரமே குரலாய் வருவது. (பிங்கல. ௧௪0௧.) தாரம்—வல்லிசை.

மேற்செல்லல்- போர்குறித்துச்செல்லல். (பெரியபு. இயற்பகைநா. ௨0.)

மேற்படல்—1. அதிகமாதல். 2. வெல்லுதல். (1, 2-வழக்.)

மேற்றிசை—மேற்கு. (வழக்.)

மேற்றிசைப்பாலன்-வருணன். (சூ. நிக. ௧௨: ௭௯.)

மேன்மக்கள்-பெரியோர். (உ-ம்.) 'மேன் மக்கள் மேன்மக்களே' (மூதுரை.)

மேன்மேல்—மிகவதிகம். இது அடுக்குத் தொடர்.

மேன்மை—மேலாந்தன்மை. (வழக்.)

மேனா—மேலன. (பதிற்றுப்.)

மேனகை—மேநகைபார்.

மேனாடு-பொன்னுங்காணி. வைத்தியபரி.)

மேனாதம்—1. பூனை. 2. மயில். 3. வெள்ளாடு. (3-வைத்தியபரி.)

மேனி—1. குப்பைமேனி. (வைத்தியபரி.) 2. நிறம். 3. வடிவம். (2, 3-சூ. நிக. ணகரவெ. ௧௫.) அழகுக்கும் பெயர்; வழக்கிற் கூறுதல் காண்க.

மேனை — மலையரசன்மனைவி. (திருவிளை. தடாதகைப்பிராட்டியார். திரு. ௬௯.)

## மை.

மை—1. அஞ்சனம். 2. கருமை. 3. குற்றம். 4. மலடு. 5. செம்மறியாடு. 6. மேகம். 7. யாடு. (1, 2, 3, 4, 6, 7-பிங்கல. ௬௯௯௭.) (5-சூ. நிக. ௬: ௬௭) 8. இருளுமாம். (சூ. நிக. ௧௧: யகரவெ. ௧௧.) 9. தெரிநிலைவினைப்பகுதியுமாம்.

மைக்கொன்றை—ஓர் மரம். (வைத்தியபரி.)

மைகம் — வச்சிராந்தபாஷாணம். (வைத்தியபரி.)

மைச்சந்தன்—கச்சற்பாஷாணம். (வைத்தியபரி.)

மைச்சாலி—கருங்குறுவைநெல். (தைலவ.)

மைச்சான்—மைத்துனன். (வழக்.)

மைச்சுனி—மைத்துனி. (வழக்.)

மைசூர் — ஓர் பட்டினம். இப்பட்டினங் குடநாட்டைச் சார்ந்ததெனபர்.

மைந்தன்—மைந்தன். (வழக்.)

மைத்தல்—1. ஒளிகெடுதல். (சிந்தா.) 2. மசித்தல்.

மைத்திரம்—சிநேகம். (வழக்.)

மைத்திரன்—1. சிநேகன். 2. அருடணனுக்குப்பிறந்தவன். (சூத. சங். சாதிவ.) அருடணன்-வைசியவிராத்தியன் வைசியப்பெண்ணைச் சோரத்திற் புணர்ந்து பெற்றபிள்ளை.

மைத்திராவருணி — அகத்தியமுனிவருக்கொருபெயர். (அபிதாநசிந்.)

மைத்திராவருணன் — இருத்துவிக்கென்றுசொல்லப்படும் யாககர்த்தாக்கள் பதினறுபேர்களிலொருவர். (காஞ்சிப். சிவாத். ௬௭.)

மைத்திரி—தக்ஷன்மகள். (அபிதா.)

மைத்திரியம்—சிநேகம்.

மைத்திரேயர்—ஓர் முனிவர். (அபிதாநசிந்.)

மைத்திரேயவுபநிடதம் — நூறுஉபநிடதங்களிலொன்று. (அபிதாநசிந்.)

மைத்திரேயன்—வைதிரேயனுக்கு அயோகவஸ்திரீயிடம் பிறந்தவன். (அபிதாநசிந்.)

மைத்துனமை—மைத்துனவுரிமை.

மைத்துனன்—மச்சான். (சிந்தா.)

மைத்துனி—மைச்சினி. (வழக்.) அம்மான் மகள் என்பர். திருவாலவாய்த்திருவிளையாடற்புராணத்திலறிக.

மைதல்—மசிதல். (வழக்.)

மைதிலி—சீதை, மிதிலையிற்பிறந்தவள்.

மைதுலை—பஞ்சகௌடத்தொன்று. பஞ்சகௌடமாவன:—சுத்தகௌடம், கானகுப்பிசம், சாரசுவதம், உற்கலம், மைதுலை என்பனவாம்.

மைதுனம்—மிதுனசம்பந்தம். அது ஆண்பெண் புணர்ச்சியென்க.

மைதுனன்—மைத்துனன்.

மைதுனி—மைத்துனி.

மைந்தர்—1. புத்திரர். 2. மனிதர். (திருவிளை. நகரப். ௭௮.)

மைந்தன்—1. கிட்கிந்தையிலிருந்த ஓர்வானரவீரன். (அபிதாந.) 2. திண்ணியன். 3. மகன். (சூ. நிக. ௧௧: நகரவெ. ௭.)

மைந்து—1. அழகு. 2. மயக்கம். (பிங்கல. ௧௮௮௫.) 3. வலி. (பிங்கல. ௧௭௯௯.)

மைநாகம்—ஓர்மலை; மலையரசன் புத்திரன்; இம்மலை இந்திரனுக்குப்பயந்து கடலுக்குள ஒளித்திருக்கின்றது. (பிரபுலிங்க. கோரக்கர்கதி. ௬௨. உரை.)

மைநகம்—வச்கிராந்தபாஷாணம். (வைத்தியபரி.)

மைநா—ஓர் புள். (வழக்.) நாகணவாய்ப்புள்ளென்பர். மைனு எனவும் வரும்.

மைம்மா—பன்றி. (சூ. நிக. ௬: ௧௧.)

மைம்மீன்—சனிமீன். (புறநா.)

மைம்முகன்—முசு. இது குரங்கினுள் ஒருவகைச்சாதி. (சூ. நிக. ௬: ௨௯.)

மைம்மை—1. மலட்டெருமை. (பிங்கல. ௨௭௭௮.) 2. மலடி. (சூ. நிக. ௨: ௬௯.)

மைமல்—மாலைநேரம். (வழக்.)

மையம்—நடு. (சூ. நிக. ௫: ௬௯.)

மையல்—1. ஊமத்தை. (வைத்தியபரி.) 2. மயக்கம். (பிங்கல. ௧௮௮௫.) 3. மோகம். (வழக்.)

மையலவர்—பித்தர். (சிந்தா.)

மையாந்தல் — மயங்குதல். (வள். ௧௧௨. அதி. ௨.)

மையாந்து—புற்கென்று. } (புறப்பொருள்வெ.மாலை)
மையார்க்தும்—புற்கென்னும் }

மையுடை—கருவேல். (தைலவ.)

மைனம்—மீன். (வைத்தியபரி.)

மைனிகன்—கறையான்.

## மொ.

மொக்கணி—ஒருவிதமான தோற்பை; இது குதிரைக்குக்கொள்ளுக்கட்டுவதென்பர். (திருவால. திருவிளை. அரும்பத.) (திருவாசக. கீர்த்தித்திருவகவல்.)

மொக்களித்தல்—தாமதித்தல். (வழக்.)

மொக்கன்—பருத்தவன். (வழக்.)

மொக்கு—1. மரத்தின்கணு. (வழக்.) 2. மொட்டுப்பூ. (வைத்தியபரி.)

மொக்குள்—1. கொப்பூழ். 2. நீர்க்குமிழி. 3. பூவரம்பு (2, 3-சூ. நிக. கக: ககரவெ. கக.) கொப்புளமென்பர் பத்துப்பாட்டில்.

மொக்குளித்தல்-குமிழியிட்டொலித்தல். (வழக்.)

மொக்கை—1. கூரின்மை. 2. பருமை. (1 2-வழக.)

மொக்கைச்சோளம்-ஒருவகைசசோளம் (வழக.)

மொகமொகெனல்—உபயவோசை. (சூ. நிக. சo. சக.)

மொகி—கொக்கு (வைத்தியபரி.)

மொங்கன்—மொழுங்கன். (வழக்.)

மொச்சம்—வாழை. (வைத்தியபரி.)

மொச்சை—ஒருவகைப்பயறு. (வழக்.)

மொசகம்—வாழை. (வைத்தியபரி.)

மொசம்—இலவம்பிசின் (வைததியபரி.)

மொசித்த—தின்ற. (புறநா.)

மொசிந்து—சொய்த்து. (பதிற்றுபபத்.)

மொசுமொசுத்தல்- } 1. ஒலிக்குறிப்பு 2.
மொசுமொசுப்பு— } தினவுக்குறிப்பு(1, 2-வழக்.)

மொஞ்சகுக்கையர்—சமணர். (திருவால. திருவிளை.)

மொஞ்சி—தனம்.

மொட்டம்பு — ஓர்வகையம்பு. (பிங்கல. கஙிசக.)

மொட்டல்— } மொட்டுதல், அரும்
மொட்டித்தல்— } பல்.

மொட்டு—1. குமிழ்ப்புவடிவமுள்ளது. 2. பூவரும்பு. (சூ. நிக. ஈ: சஅ.) 3. தெரிநிலை வினைப்பகுதி.

மொட்டுதல்—அரும்புதல். (வழக்.)

மொட்டை — 1. கூரின்மை. 2. மழுங்கல். 3. முண்டிதம். (1, 2, 3-வழக்.)

மொட்டைச்சி—1. பூநீறு. 2. மொட்டையாயிருப்பவள். (வழக்.)

மொட்டையடித்தல்— முண்டிதமாக்கல். (வழக.)

மொட்டையன் — மொட்டைத்தலையன். (வழக்.)

மொடுமொடுக்கெனல் — ஒலிக்குறிப்பு. (வழக்.)

மொடுமொடுத்தல்— } ஈரடுக்கொலிக்
மொடுமொடுப்பு— } குறிப்பு (வழக்.)

மொடுமொடெனல்- உபயவோசை. (சூ. நிக. சo: சக.)

மொண்டன்— } 1. ஒரு சாமை. (வழக்.) 2.
மொண்டி — } மொண்டுசெய்பவன்.

மொண்டு—1. முரண்டு. 2. முகந்து எனப் பொருள்படு மொரு வினையெச்சம. (திருவிளை. நாட்டுப். சக.)

மொத்தம்—எல்லாம். (வழக்.)

மொத்தல்—மொத்துதல. (வழச.)

மொத்தி—புடைப்பு. (வழக.)

மொத்தினி—நுரை. (வைத்தியபரி.)

மொத்து—தெரிநிலைவினைபபகுதி.

மொத்துதல்-அடிசதல். (சூ. நிக. க: நo.)

மொத்தை—பருமை. (வழக்.)

மொதுமொதெனல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)

மொந்தணி — 1. திரட்சி. 2. பருமை. (வழக்.) 3. மரக்கனுவுக்குங் கூறுவர்.

மொந்தன்-ஓர்வகை வாழை (வழக்.) சோழ நாட்டிலதிகமாயுள்ளது.

மொந்தை—1. ஓர்கட்பறை. (சூ. நிக. எ: சுக.) 2. ஓர்வகைப்பாத்திரம். 3. பருமை. (2, 3-வழக்.)

மொப்பு—குட்டி பாலைக்குடிக்காமல் திணியினலே ஆடுமுலையிற் சுற்றிக் கட்டிவைப்பது. இது-இடையர்வழக்கு.

மொய்—1. கூட்டம். 2. தெரிநிலைவினைப் பகுதி. 3. போர். 4. போர்க்களம். 5. வலிமைப் பணம் 6. மொய்த்தல். 7. யானை. 8. வண்டு. (1, 3, 4. 6, 7, 8-சூ. நிக. கக: யகரவெ. கூ.) (பகையென்பர். புறப்பொருளில்.) திரட்சிய மாம். (5-வழக்.) அர்இிக்கும் பெயரென்பர். (வைத்தியபரி)

மொய்ச்சல்— }
மொய்த்தல்— } நெருங்கல். (புறநா.)
மொய்ப்பு — }

மொய்ம்பு—1. தோள். 2. வலி. (1, 2-பிங்கல. சooo.)

மொநுமொநுத்தல்— }
மொநுமொநெனல்— } ஒலிக்குறிப்பு. (வழக்.)
மொலுமொலுத்தல்— }

மொல்லுமொல்லெனல்-ஈரடுக்கொலிக் குறிப்பு. (வழக்.)

மொழி—1. சொல். (புறநா.) 2. தெரிநிலை வினைப்பகுதி. (1-நன்னூ. எழுத்திய. ந.) 3. கணு. (திருவால. திருவிளை.)

மொழிதல்—சொல்லுதல். (புறநா.)

மொழிந்தது மொழிதல்- செய்யுள்வழுவிளொன்று. (தண்டி. சo உ.)

மொழிபெயர்ப்பு — ஒருபாஷையிலுள்ள நூலை மற்றொருபாஷையிற்செய்தல், (நன்னூ. சிறப்புப். ச.)

மோழிமாற்று—பொருள்கோளெட்டினொன்று. (நன்னூ. பொதுவிய. சுஉ.)
மோழி ௯௱ம-பழஞ்சொல். (சூ.நிக.கo:கo.)
மோழக்கன்—தடித்தவன். (வழக்.)
மோழக்கெனல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)
மோழங்கன்—மொழுக்கன்.
மோள்ளல்— } முகத்தல். (உ-ம்.)
மோள்ளுதல்- } "மொண்டுவாக்கி" (திருவிளை. நாட்டுப். சகூ.)

## மோ.

மோ—1. தெரிநிலைவினைப்பகுதி. 2 முன்னிலையசைச்சொல். (உ-ம்.) மொழிமோ. (நன்னூ இடையிய. உக.)
மோக்கம்—1. முத்தி. (சூ. நிக ரு: உ.) 2. விடுசதல். (சூ நிக கூ: உஎ.)
மோக்கல— } 1. மணங்கொள்ளல். 2.
மோக்குதல்- } முகத்தல். (தைலவ.)
மோகநீயம்—இது இறைவன்குற்றமெட்டினொன்று. (சூ நிக.கஉ:அஎ.)
மோகப்படை—எதிரியை மயக்கும் படைக்கலம். (திருவிளை. இந்திரன்பழி. சகூ.)
மோகம்-1. உட்பகையாறினொன்று. அது மயக்கம். (பிங்கல. சoரு.) 2. பஞ்சபாணவவத்தையினொன்று. அது அழுதலும் பிதற்றலுமாம். (சூ நிக. கஉ: ருo, ருக.) 3. பாதிரி. 4. முருங்கை. 5. வாழை. 6. விருப்பம் (பிங்கல. கஅகூகூ.) (3, 4, 5-வைத்தியபரி.)
மோகர்-1. சித்திரகாரர். (சூ. நி‌க. உ: உஅ.) 2. மோகமுடையவர். (வழக்.)
மோகரம்—1. உக்கிரம். 2. மயக்கம்.
மோகரித்தல்- } 1. ஆக்கிரமிப்பு. 2. மயங்
மோகரிப்பு— } கல் (வழக்)
மோகவுவமை— உபமானோபமேயங்களை உள்ளவாறுணராமல் மயக்கத்தினாற்கூறுவது. (தண்டி. ருo. பக்.)
மோகன்—மன்மதன். (பிங்கல. கசரு.)
மோகனக்கல் — கோயிலின்வாயில் மேற்படிக்கல். (வழக்)
மோகனப்படை—மோகப்படை.
மோகனம் — 1. அறிவைமயக்கும் நூல். இது கலைஞான மறுபத்துநான்கி லொன்று. (பொருட்டொகை.) 2. கணையைந்தின் செயலினொன்று. (பிங்கல. கசகூ.) 3. கருமமெட்டினுளொன்று (அட்டகர்மம்பார்.) 4. மயக்கம்.
மோகனமாலை—ஓராபரணம்.
மோகனீயம்—மொகநீயம் பார்.
மோகி—கஞ்சா. (வைத்தியபரி.)

மோகிதன்—1. காமமுள்ளவன். 2. மோகமுள்ளவன். (வழக்.)
மோகித்தல்- } மயங்கல். (வழக்.)
மோகிப்பு— }
மோகினி—1. ஒரு தேவதை. (வழக்.) 2. திருமால்கொண்ட அவதாரங்களு ளொன்று. (அபிதாநசிந்.) 3. மாயை. (ஞானமிர்தம்.)
மோகூர்—பழையனென்னுங் குறுநிலமன்னனூர். (பத்துப்பாட்.)
மோசகம்—1. துறவு. 2. வாழை. (வைத்தியபரி.)
மோசகன்—1. தட்டான். 2. திருடன். 3. துறவி. (1, 2, 3-வழக்.)
மோசகி — கிலுகிலுப்பைச்செடி. (வைத்தியபரி.)
மோசநி—இலவமரம். (வைத்தியபரி.)
மோசம்—1. அபத்தம். 2. பிசகு. 3. முருங்கை. 4. வஞ்சனை. (1,2, 4-வழக். 3-மலையக.)
மோசனம்—விடுத்தல். (சூ. நிக. கூ: உஎ.)
மோசாடம் — 1. சந்தனம். 2. வாழைப்பழம். (1, 2-வைத்தியபரி.)
மோசி-ஓர் புலவர். இவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரென்று சொல்லப்படுவார். (புறநா.)
மோசை—1. அவுரி. 2. இலவு. 3. வசம்பு. 4. வாழை. (1, 2, 3, 4-வைத்தியபரி.)
மோட்டுத்தனம்-முருட்டுத்தனம்.(வழக்.)
மோட்டை—மோழை. (வழக்)
மோடி—1. காடுகாள். (சூ. நிக. க: ௬௬.) 2. துர்க்காதேவி. (புறப்பொருட்.) 3. மேட்டிமை (வழக்.) 4. மோடியென்னு மோர்வித்தை.
மோடு — 1. உயர்ச்சி 2. பெருமை. 3. மேடு. 4. வயிறு. 5. முகடு. (வழக்.) (1, 2, 4-பிங்கல. சooக.) (3-சூ. நிக. டகரவெ. உக.)
மோத்தல்—மோந்தறிதல்.
மோத்தை—வெள்ளாட்டுக்கடா. (சூ. நிக. ௬: கஅ.)
மோதகப்பிரியன்—விநாயகன். (வழக்.)
மோதகம் — 1. உருண்டை வடிவமாகிய பணியாரம். 2. பிட்டு. (சிலப்.) 3. அப்பவர்க்கமுமாம். (சூ நிக. கூ: உரு)
மோதகமரம் — குதிரைப்பிடுக்கன் மரம். இதனைப் பீநாறிமரமென்று வைத்தியபரிபாடையிற்கூறுவர்
மோதகி—விட்டுணுவின் கதாயுதம். பிங்கலத்திற் கௌமோதகியென்றூர்; முதற்குறையாக வழங்குவர்போலும்.
மோதநம்—மகிழ்ச்சி.

மோதம்—1. அசமதாகம். 2. ஓமம். (1, 2-வைத்தியபரி) 3. மகிழ்ச்சி.

மோதயந்தி — காட்டுமல்லிகை. (வைத்தியபரி.)

மோதல்—1. அடித்தல். (சூ. நிக. கூ: ருo.) 2. இடித்தல். (தைலவ.) 3. பருத்தல். (வழக்.)

மோதனம்— }
மோதிதம்— } உவகை.

மோதிநி—1. கஸ்தூரி. 2. மல்லிகை. (1, 2-வைத்தியபரி.)

மோதிரக்கள்ளி—ஓர் கொடி. (வைத்தியபரி.)

மோதிரக்கன்னி—ஓர் செடி.

மோதிரம்—விரலணி. (சூ. நிக. எ: உசு.)

மோதை—வசம்பு. (வைத்தியபரி.)

மோப்பம்— }
மோப்பு— } மோத்தல். (வள். கூ: சo.)

மோய்—தாய். (சூ நிக. உ: எசு)

மோர்—மச்சிகை. (சூ. நிக கூ: உஎ.)

மோரடம்—1. கருப்புவேர். 2. பெருங்குரும்பை. 3. வீழி. (தைலவ) (1, 2-வைத்தியபரி.)

மோரா—ஓர் பழையபொற்காசு. (வழக்.)

மோலி—1. மௌலி, கிரீடம். (தணிகைப். நாட்டுப. க.) 2. தலை. (வைத்தியபரி.)

மோவாய்—தாடி. (சூ. நிக உ: கூசு.)

மோழல்—பன்றி. (சூ. நிக. ரு: கக.)

மோழை—1. கஞ்சி. (சூ. நிக. கூ: உக.) 2. மோட்டை. 3. வெடிப்பு. (வழக்.) 4. இலுப்பை முதலிய மரங்களில் உருண்டைவடிவமாய்த் தோன்றியிருப்பதற்குங்கூறுவர். (வழக்.) இலுப்பைமரத்திலே மோழைகளுண்டாவன போல இவனுக்குப் பிள்ளைகளுண்டாகியிருக்கின்றனவென்ப துலகர் பழமொழி.

மோளிகைமாறையர்—ஓர் பத்தர். (அபிதாநசிந்.)

மோனம் — மௌனம். (சூ. நிக. கூ: ருகு.)

மோனர்-மௌனர். (இராமா. ஆரணிய கா. அகத்தியப். ரு.)

மோனிகம்-பெருச்சாளி. (வைத்தியபரி.)

மோனை—1. ஆதி. (சூ. நிக. அ: கஅ.) 2. மோனைத்தொடை. அது முதற்சீரின் முதலெழுத்தோடு பின்வருஞ்சீர்களின் முதலெழுத்தொன்றிவரத்தொடுப்பது. (யாப். காரி. உறுப்பிய. கசு.)

## மௌ.

மௌகலி— }
மௌகுலி— } காகம்.

மௌஞ்சி—முஞ்சிப்புல்லாற்செய்த அரைஞாண். இது பிரமசாரிகளணிவது.

மௌட்டியம் — செருக்காலாகிய அறியாமை. (வழக்.)

மௌடி—மோடிவித்தை.

மௌண்டிதம்—1 உபநிடதம் முப்பத்திரண்டினொன்றென்பர். 2. முண்டிதம்.

மௌத்திகம்—முத்து. (சூ. நிக. சு: சு.)

மௌநசாரம்-சிவசாரம. (வைத்தியபரி.)

மௌலி—1. ஆண்பான் மயிர்முடி. (பிங்கல. சoஎகூ.) 2. முடி. (சூ. நிக. எ: உஉ.)

மௌவல்-1. காட்டுமல்லிகை. 2. முல்லை. (சூ. நிக. சு: உஉ.) (1-வைத்தியபரி.)

மௌளம்—மோளம்.

மௌற்கலியர்—1. ஓர் முனிவர். 2. நளாயினி புருடர். (1, 2-அபிதாநசிந்.)

மௌனதேசிகர்-தாயுமானவருக்கு ஞானாசாரியர். (அபிதாநசிந்.)

மௌனம்—மோநம். (சூ. நிக. கூ: ருகு.)

மௌனி—1. ஆமை. (வைத்தியபரி.) 2 மோனமுடையவன். (தர்க்காமிருதம்.)

## ய.

யக்கர்— தேவசாதியரில் ஒரு வகுப்பினர். (அபிதாநசிந்.)

யக்கராசன்—இயக்கர்வேந்தனாகிய குபேரன். (சூ. நிக. க: உக.)

யக்நர்—இயக்கன்.

யக்கியபுருடன்-யாகவடிவனாகியதிருமால் (உ-ம்.) 'எசசமேசுரும்புளர்துழாயலங்கலான்' (காஞ்சிப். சார்ந்தாசயப்படலம். உரு.)

யக்கியம்—யாகம்.

யக்கியயோக்கியம்—அத்திமரம். (வைத்தியபரி.)

யக்கியாரி—சிவன்.

யங்கூரா-அதிவிடயம். (வைத்தியபரி.)

யசசு—புகழ். (வழக்.)

யசமாநன்—"எசமாநன்" பார்க்க.

யசனம்-யாகஞ்செய்தல். (சூ. நிக. கூ: கரு.)

யசு—இரண்டாம்வேதம். (சூ. நிக. சo: உரு) யசுவென்றும் பெயர்.

யசோதரகாவியம்—ஐங்கமருவிய சிறுகாவியங்களுளொன்று. இதை யியற்றியவர் ஜைனமுனிவர்களிலொருவர். (அபிதாநசிந்)

யசோதரன்—ஓரரசன் (அபிதாநசிந்.)

யசோதை — கண்ணனை வளர்த்ததாய். (அபிதாநசிந்.)

யசோவதி-ஒரு பட்டணம். (அபிதாநசிந்.)

யஜ்ஞக்கன்—விஷ்ணுவாற் கொல்லப்பட்ட அரக்கன். (அபிதாநசிந்.)

யஜ்ஞகோபன் — மாலியவந்தன்குமாரனாகிய அரக்கன். (அபிதாநசிந்.)

யஜ்ஞம்—யாகம். (அபிதாநசிந்.)

யஜ்ஞமூர்த்தி—யாகவடிவனாகிய திருமால். (அபிதாநசிந்.)

யஜ்ஞவல்கர்—ஒரு மகாமுனி. (அபிதாநசிந்.)

யஜ்ஞவல்க்கியமுனி — தருமருக்கு அசுவமேதயாகஞ் செய்வித்தவர்.

யத்நம்—முயற்சி. (தர்க்காமிருதம்.)

யதாசத்தி—இயன்றமாத்திரம். (வழக்.)

யதார்த்தம்—மெய். (தர்க்காமிருதம்.)

யதி—1. காலப்பிரமாணம் பத்தினொன்று. இதைப் பொருட்டொகைநிகண்டிற் சதியென்பர். 2. முனி. (திருவிளை. திருமணப். கூ0.) 3. வழுக்கவொன்பதினொன்று. அது: ஓசைகொண்டு சீர்முடியுமிடத்து முறைப்படக் கூறாதநிலைமையுடையது. ஈண்டு முறைப்படவாராமை — ஒற்றுமைப்படாமை. (தண்டி. கக0.) இன்னுஞ்சிலபொருளும்கூறுவர்; அவை வழக்கிற் காணப்படவில்லை.

யதிராசன்—இளையாழ்வார் துரியாச்சிரமம் வகிக்கையில் பெருமாள் அவருக்கிட்டபெயர். (அபிதாநசிந்.) இளையாழ்வார் — இராமாநுஜாசாரியர்.

யதீந்திரசாமி—கூரத்தாழ்வானுக்கு ஒருபெயர். (அபிதாநசிந்.)

யதீந்திரப்பிரவணர் — மணவாளமாமுனிகள். (அபிதாநசிந்.)

யது—ஓரரசன், யயாதியின் முதற்புத்திரன். (அபிதாநசிந்.)

யதுகிரி—திருநாராயணபுரம். (அபிதாநசிந்.)

யதோத்தேசபக்கம்—வேந்தன் இருந்துழியிருந்து நிலமுழுவதுந் தன்னாணையின் நடைபெறச் செய்தல். (நன்னூல். எழுத்ததிகாரம். முதல்)

யந்திரம்—செக்கு, திரிகை, தேர், மந்திரசக்கர முதலியவை. (வழக்.)

யமகண்டம் — ஒருவேளை. இது: ஞாயிற்றுக்கிழமையில் கடு நாழிகைக்குமேல் கஅஐ நாழிகைவரையும், திங்கட்கிழமையில் ககவ நாழிகைக்குமேல் கடு நாழிகைவரையும், செவ்வாய்க்கிழமையில் எஇ நாழிகைக்குமேல் ககவ நாழிகைவரையும், புதன்கிழமையில் ஙஐ நாழிகைக்குமேல் எஇ நாழிகைவரையும், வியாழக்கிழமையில் உதயாதி ஙஐ நாழிகைவரையும், வெள்ளிக்கிழமையில் உஉஇ நாழிகைக்குமேல் உகூவ நாழிகைவரையும், சனிக்கிழமையில் கஅஐ நாழிகைக்குமேல் உஉஇ நாழிகைவரையுமுள்ளகாலமாகும். இக்காலத்தில் நற்காரியம் செய்யக்கூடாதென்பர். (பஞ்சாங்கம்.)

யமகம்—ஒரு அடியின்முதலில்வந்த சொற்களே ஏனையடிகளின்முதலிலும் வரப்பெறுஞ் செய்யுள். திருவரங்கத்தந்தாதி முதலியவைகளிற்காண்க.

யமகீடம்—ஓர் புழு.

யமத்துருமம்—இலவமரம். (வைத்தியபரி.)

யமதக்கினி—சமதக்கினி. (அபிதாநசிந்.)

யமதூதி—பாம்பின் நச்சுப்பற்களினொன்று (உ-ம்.) நச்சுப்பல் பார். (திருமுரு கசஅ.)

யமப்பிரியம்—ஆலமரம். (வைத்தியபரி.)

யமபடர்—இயமன் ஏவல் வீரர்.

யமபுரம்—இது தென்றிசைக்கும், நிருதிதிசைக்கும் நடுவிலுள்ள யமபுரியென்பர். (அபிதாநசிந்.)

யமம் — தருமநூல்பதினெட்டி னொன்று. (பொருட். நிக.) இன்னும் வேறுபொருளும் கூறுவர்.

யமரதம்—எருமைக்கடா. ரதம் என்று வாகனத்திற்கும் பெயராம்.

யமன்—1. நமன். 2. பாம்பினச்சுப்பற்களினொன்று. (உ-ம்) யமதூதிபார். (1 சூ. நிக. கக: மகரவெ. ச.)

யமி—யமுனைக்கொருபெயர். (வழக்.)

யமுனை—காளிந்திநதி. (அபிதாநசிந்.)

யமுனைத்துறைவர்—1. ஆளவந்தார். இவர் இராமாநுஜர் ஆசாரியர். 2. யமுனைத்துறையிலுள்ள கோவர்த்தனபுரத்துப்பெருமான். (1, 2-அபிதாநசிந்.)

யயாதி—குருகுலத்தரசரில் நகுடன்புத்திரன். (உ-ம்.) "யயாதியென்றுகொண் டிவனையே" என்றுபாரதம்குருகுலச்சருக்கத்திற்கூறியது காண்க.

யவகம்—ஒருவகைத்தானியம்.

யவசம்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

யவசி—கழுதைப்பாலை. (தைலவ.)

யவசூகம்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

யவநிகை—திரைச்சீலை.

யவபலம்—மூங்கில். (வைத்தியபரிபா)

யவம்—1. நெல். (சூ. நிக. கக: வகரவெ. கக.) 2. வாற்கோதுமை. (தர்க்காமிர்தம்.)

யவலாசம்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

யவனப்பிரியம்—மிளகு. (வைத்தியபரி.)

யவனம் — தேயமைம்பத்தாறினொன்று. (பொருட்டொகை.)

யவனர்—1. கம்மாளர். 2. சித்திரகாரர். 3.

சோனகர். (1, 2, 3-சூ. நிகண். கக: வகரவெ. கசு.) 4. மிலேச்சர் (சிலப்.)

யவனாசாரியன் - சோதிட சாத்திரகர்த்தாவாகிய வொருமுனியென்பர்.

யவனாலசம்—வெடியுப்பு. (வைத்தியபரி.)

யவாகு—கஞ்சி. (சூ. நிகண். சு. உசு.)

யவாசம்-சிறுகாஞ்சொறி. (வைத்தியபரி.)

யவாநி—
யவாநிகை— } ஓமம். (வைத்தியபரி.)

## யா.

யா — 1. அஃறிணைப்பன்மைப்படர்க்கை வினா. (நன்னூ. பெயரிய உசு. சூத்திரவுரை.) 2. ஒருவகைமரம். (ஐங்குறுநூறு.) 3. ஓரசைச்சொல். (நன்னூ. இடையிய. உஉ.)

யாக்கியவற்கியம் — 1. தர்மநூல் பதினெட்டினொன்று.(பொருட். நிக) 2. உபநிடதமுப்பத்திரண்டினொன்றென்றுங் கூறுவர்.

யாக்குநல்—யாத்தல்.

யாக்கை—1. உடல் (சூ. நிகண். உ: அடு.) 2. மூயங்குதல்.(சிந்தா.) 3. யாத்தல். கை தொழிற்பெயர்விகுதி.

யாக்ஞவற்கியர் — வைசம்பாயநமுனிவர் மாணாக்கர் (அபிதாநசிந்.)

யாககேது -இராவணனுடைய இருபதுகோடிவீரருககுத் தலைவன்; இலக்குமணனாலே கொல்லப்பட்டவன். (அபிதாநசிந்.)

யாகசந்துரு — இராவணன் மந்திரியருளொருவன். (அபிதாநசிந்.)

யாகசேனன் — ஓரரசன, பாஞ்சாலன். (அபிதானசிந்.)

யாகம்—வேள்வி. (பிங்கல. கஅ0ரு)

யாங்கனம்—எவ்வாறு. (புறநா.) யாங்ஙனமென்பது யாங்கன மென மருவிவந்ததுபோலும், என்பர்

யாங்கு—1. இடத்தையச்சொல். (சூ. நிக. க0: கக.) 2. எப்படி. (ஐங்குறுநூ.)

யாங்ஙனம் எங்ஙனம்.(நன்னூ. எழுத்திய. ருக. உரை)

யாசகம்—இரப்பு. (வழக்.)

யாசகன்—ஏற்போன் (சூ. நிக. க: சஅ.)

யாசன்-ஒருமுனி. துருபதனுக்குப் புத்திரகாமேட்டிசெய்வித்தவர். (அபிதாநசிந்.)

யாசனை—பிச்சை.

யாசித்தல்—
யாசிதம்— } இரத்தல். (வழக்.)

யாடம்—சிறுகாஞ்சொறி. (தைலவ.)

யாடு—ஆடு. (உ-ம்.) "கோணைவேங்கைகள் யாட்டினோடுறவுகொண்டோங்கும்" (காஞ்சிப். நாட்டுப். சஎ.)

யாண்—அழகு. (ஞானமிருதம்.)

யாண்டு—1. எவ்விடம். (சூ. நிக. ரு: சுஎ.) 2. வருடம். (இறையனாரகப்பொருள். க: உரை.) 3. இடத்தையச்சொல் (சூ. நிக. க0. கக)

யாண்டை—எவ்விடம். (இராமா. அயோத்தியா. ஙீளகண்டுநீ. கூ0) ஐ-சாரியை.)

யாணர்-1. அழகு. 2, கம்மாளர், 3. நன்மை. 4. புதுமை. (1, 2, 3, 4-பிங்கல. ச00ரு.) 5. புதுவருவாய். (பதிற்றுப்பத்.) 6. முறை. (7) வளப்பம். (6, 7-ஞானமிருதம்.)

யாத்தல்—யாப்பு.

யாத்திரை—பயணம். (வழக்.)

யாதம்—பசுக்கூட்டம்.

யாதவநிகண்டு—ஒருஸம்ஸ்கிருதநிகண்டு. (அபிதாநசிந்.)

யாதவப்பிரகாசர்—கோவிந்தஜீயர். (அபிதாநசிந்.)

யாதவம்—பசுக்கூட்டம்.

யாதவமதம் — யாதவபபிரகாசர்நியமித்த வொருமதம. (அபிதாநசிந்.)

யாதவமஹாராஜன் - தொண்டைநாட்டில் நாராயணபுரத்தையாண்டவோரரசன் இவன் திருக்காளத்தியிற் சிவபணி செய்தவன். (திருக்காளத்திப்புராணம் பார்க்க.)

யாதவர்-யதுவமிசத்திற்பிறந்த பல அரசர்கள். (அபிதாநசிந்.)

யாதவன்—1. யதுகுலத்தவன். கிருட்டினனுக்கும பெயர்கூறுவர். (உ-ம்.) "யான்விதுகுலத்தில் யாதவன" (பாரத. இராயசூயம்.) யாதவம்என்று பசுக்கூட்டத்திற்குபெயருண்மையால் அதுபற்றி யிடையனை யாதவன் எனபர் போலும்.

யாதன்—சதிகோத்திரன் குமரன். புட்கரத்தீவையாண்டவன். (அபிதாநசிந.)

யாதனம்—தெப்பம்.

யாதனாசரீரம் — வினைப்பயன்களை யநுபவிப்பதற்கு ஆன்மாக்களெடுக்குஞ்சரீரம். (சிவஞானசித்தி. உ. சூ. ருசு. பாட்.)

யாதனை—1. துன்பம். (சூ நிக. அ: எச.) 2. நரகநோய். (சூ. நிக. அ: எஎ.)

யாதிகன்—வழிச்செல்வோன.

யாது-1. அஃறிணையொருமைபபடர்க்கை வினாப்பெயர். (நன்னூ. பெயரிய. உ[illegible].) [illegible] ஐயச்சொல். (பிங்கல உ0சுக.)

யாதுதானவர்-இராக்கதர். (பிங்கல. உ0ச.)

யாப்பருங்கலம்-ஓர் யாப்புநூல்; இதற்கு விருத்தியுரையுண்டு.

யாப்பியம்—எளிமை.

யாப்பு-1. உறுதி. (பத்துப்பாட்.) 2. கட்டு. 3. செய்யுள். (2, 3-சூ. நிக. ௧௧: பகரவெ. ௩.)

யாபம்—மைதுனமென்பர்.

யாபனம்—1. இகழ்ந்துவிடல். 2. தாமதித்தல். 3. பொழுதுபோக்கல்.

யாம்—நாம், தன்மைப்பன்மை. (நன்னூ. பெயரிய. ௩௦.)

யாமம்—1. இடையிரவு. (ஐங்குறுநூ.) 2. இராத்திரி. (சூ. நிக். ௧: அ௨.) 3. சாமம். 4. தெற்கு. (2, 3-பிங்கல. ௪௦௦௪.)

யாமளம்—பச்சை, யாமளமெனினும் சாமளமெனினு மொக்கும்.

யாமளேந்திரர்—இந்திரகாளியமென்னும் இசைத்தமிழ்நூலாசிரியர். (அபிதானகோ.)

யாமளை—1. காளி. (சூ. நிக. ௧: ௩அ.) 2. பார்வதி. (சௌந்தரியலஹரி. ௪.)

யாமி—தக்கன்மகள்; இவள் தருமப்பிரசாபதிபின்றேவி. (அபிதானசிந்.)

யாமிநீபதி—1. கர்ப்பூரம். 2. சந்திரன். (1, 2-வைத்தியபரி.)

யாமியம்—1. தெற்கு. (சூ. நிக. ௫: ௫.) 2. யமபுரிக்குச்செல்லும்வழியிலுள்ள பட்டணம். (அபிதானசிந்.)

யாமினி—1. இராத்திரி. (சூ. நிக. ௧: அ௨.) 2. காசிபன்றேவி. (அபிதானசிந்.)

யாமுனம்—அஞ்சனக்கல்.

யாமுனர் — யமுனைத்துறைவருக்கு நாதமுனிகட்டளையால் மணக்கால்நம்பி யிட்டபெயர். (அபிதானசிந்.)

யாமை—ஆமை. (நன்னூ. பெயரிய. ௧௦. உரை.)

யாய்—தாய். (ஐங்குறுநூ.)

யார்—1. நத்தைச்சூரி. (வைத்தியபரி.) 2. உயர்முப்பால்குறித்த வினாவினைக்குறிப்பு.

யார்பதம்—வாலுளுவை. (வைத்தியபரி.)

யாரை—இதில் ஐ-சாரியை

யாவகம்—செம்பஞ்சு. (வைத்தியபரி.)

யாவசூகம்—வெடியுப்பு.

யாவணது—எவ்விடத்துள்ளது. (புறநா.)

யாவது—எத்தன்மையது. (ஐங்குறுநூ.)

யாவதும்—1. எல்லாம். (சிந்தா.) 2. சிறிதும். (பத்துப்பாட்.)

யாவநாளம்—சோளம். (வைத்தியபரி.)

யாவம்—1. அரக்கு. 2. செம்பஞ்சு. (1, 2-வைத்தியபரி.)

யாவர்—உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினாப்பெயர். (நன்னூ. ௨௧.)

யாவள்-உயர்திணைப்பெண்பாற் படர்க்கையொருமைவினாப்பெயர் (நன்னூ. பெயரிய. ௨௦. உரை.)

யாவன் — உயர்திணையாண்பாற்படர்க்கையொருமை வினாப்பெயர். (நன்னூ. பெயரிய. ௧௧.)

யாவிர்-எப்பெற்றிப்பட்டீர், பெற்றி-தன்மை. (புறநா.)

யாவை—அஃறிணைப் படர்க்கைப்பன்மை வினாப்பெயர். (நன்னூ. பெயரிய. ௨௩.)

யாழ்—1. அச்சுவனிநாள். 2. திருவாதிரைநாள். 3. மிதுனராசி. 4. வீணை. அது நான்குவகைப்படும். (மணிமே.) (1, 2, 3-பிங்கல. ௪௦௦௫.)

யாழ்ப்பாணம்—ஓரூர். (வழக்.)

யாழ்ப்பாணர்—1. ஒரு தேயத்தார். 2. வீணைவாசிக்கு மொருசாதியார். 3. பலவகைப் பாணர்களி லொரு சாதியாரென்பர். (மணிமேகலையில்.)

யாழ்முரி-ஓர்பண், இதனை யாழ்மூரியென்றும் வழங்குவர். திருஞான. தே. தரு. பதிகம்.

யாழ்மூரிநாதர்-தருமபுரத்தெழுந்தருளிய சுவாமிபெயர். (அபிதானகோ.)

யாழ்வல்லோர்-கந்தருவர். (சூ.நிக.௧:௪௪.)

யாழ்வாசனை—யாழ்வாசித்தல். (சிந்தா.)

யாழ—முன்னிலையசைச்சொல். (நன்னூ. இடையிய. ௨௧.)

யாழல்—கறையான். (வைத்தியபரி.)

யாளி-1. சிங்கம். (உ-ம்.) "யாளிவெம்பதாகை" என்னுங்கவியிற்காண்க. (பாரத. இராயசூயம்.) 2 சிங்கராசி. (சூ. நிக. ௧: ௯௫.) 3. யானையாளி (சூ. நிக. ௩: ௨.)

யாளிதத்தன்—ஒரு முனி. (ஞானாமி.)

யாளிமுகன் — சூரபதுமன்கட்டளையால் இலங்கையாண்டவரசன். (அபிதானசிந்.)

யாளியூர்தி—காளி. (சூ. நிக. ௧: ௩௧.)

யாற்றுநீர்ப்பொருள்கோள் — பொருள்கோளெட்டினொன்று. (நன்னூ. பொதுவியல். ௬௦.)

யாறு—ஆறு. (நன்னூ. பெயரிய. ௧௦. சூ. உரை.)

யானம்—1. சிவிகை. (சூ. நிக. ௭: ௪௭.) 2. மரக்கலம். 3. வாகனவிகற்பம். (2, 3-சூ. நிக. ௭கரவெ. ௧௫.)

யானை-1. ஆனை. (நன்னூ. பெயரிய. ௧௦.) 2. வடதிசைப்பாலன்குறி. (சூ. நிக. ௧௨: அ௦.)

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை—ஒரு சேரன். (புறநா.)

யானைக்குருகு-சக்கரவாகப்புள். (சூ. நிக. ௬: ௩௬.) இதை யானையங்குருகெனக்கூறி, அது, விண்டாழுங்குருகென்பர் மதுரைக்காஞ்சியில்.

யானைகைக்கோள் — பகைவாரணங்கெட யானையையும் காவலையும் பகைவரை எறிந்து கைக்கொண்டது. (புறப்பொ. வெ. மாலை. ௬.)

யானைச்சீரகம் — கத்தரிநாயகம். (வைத்தியபரி.)

யானைத்தடிச்சலல்—
யானைத்தடிப்பு— } புளிநரளை. (வைத்தியபரி.)

யானைத்தண்டம்-யானைசெல்லும் புறவழி. (சூ. நிக. ௫: ௬௬.)

யானைத்திப்பிலி-ஓர் திப்பிலி. (வைத்தியபரி.)

யானைத்தீ-பெரும்பசியை விளைவிப்பதோர் நோய். (அபிதாநசிந்.)

யானைநெருஞ்சி-பெருநெருஞ்சி.(மலையக.)

யானைப்புச்சான் — ஓர்செடி. (வைத்தியபரி.)

யானைப்பெருங்காயம்- ஓர் பெருங்காயம். (வழக்.)

யானைமஞ்சள்—ஓர் பெருமஞ்சள். (வைத்தியபரி.)

யானைமறம்—அரசனது யானையின் மறத்தைக்கூறியது. (புறப்பொ. வெ. மாலை.)

யானைமீன்-ஓர் பெருமீன். (சூ நிக ௬:௭௧.)

யானைமுகவற்கிளையோன்-வீரபத்திரன். (சூ நிக. ௧: ௨௨.)

யானைமுகன்-விநாயகன். (சூ. நிக. ௧: ௨௧.)

யானையுண்குருகு—ஓர் பறவையென்பர்.

யானையுரித்தோன்-சிவன் (திவாகரம்.க)

யானையைவிழுங்குமீன்—திமிங்கிலம். (சூ. நிக. ௬: ௭௧.)

யானையைவிழுங்குமீனைவிழுங்குமீன்—திமிங்கிலகிலம். (சூ. நிக. ௬: ௭௧.)

யானைவணங்கி—தேட்கொடுக்கி. (வைத்தியபரி.)

யானைவாழை—ஓர் வாழை. (வழக்.)

யானைவீரர்-எண்பேராயத்தொருவகையார். (மணிமே. ௧. காதை. ௧௭. அடி.)

யானைவென்றி — யானையின்வெற்றி கூறியது. (புறப்பொரு. வெ. மாலை.)

## யு.

யுகந்தரம்-1.தேயம் ஐம்பத்தாறினொன்று. (பொருட்-நிக.) 2 நெடுங்காலஞ்சீவித்த ஆமையென்பர். (அபிதாநசி.)

யுகபத்திரம்—கோவிதாரமரம். (வைத்தியபரி.)

யுகபத்திரிகை—அசோகமரம். (வைத்தியபரி.)

யுகம்—1. இரண்டு. (இராமா. நகரப். ௪௧.) 2. காவங்கட்குத் தலைமையாயுள்ள நால்வகையுகம். (காஞ்சிப். சிவபுண்ணிய. ௧௧௪.) இதன் விவரத்தை அபிதாநசிந்தாமணியிற்காண்க. 3. மண்ணுலகு. (பிங்கல. ௪௪அ.)

யுகமுடிவு-ஊழிக்காலம். (சூ. நிக. ௧: அ௮.)

யுகவத்திரகம் — காட்டாத்தி. (வைத்தியபரி.)

யுகளம்—இரண்டு. (சூ. நிக. ௬: ௬௬.)

யுகாதி—1. அருகன். (சூ. நிக. ௧: ௫.) 2. யுகத்தின்முதல்.

யுகாந்தம் —உலகமுடிவுகாலம். (வழக்.)

யுஞ்சாநன் — யோகத்தை முயலுபவன். (தர்க்காமிருதம்.)

யுத்தம்-1. உசிதம். 2. போர் (1, 2-வழக்.)

யுத்தவேது -ஓரலங்காரம்; பொருத்தமான காரியத்திதாடுகூடிய ஏது யுத்தவேது எனப்படும். (தண்டி. ௬௨.)

யுத்தர்—யோகத்தில் முழுகினோன்.

யுத்தி—1. ஆராய்வு. 2. ஓரலங்காரம். (விசாக. அணியிலக். பக். ௬௦.) 3. பொருந்துமாறு. 4 விவேகம். (1, 3-வழக்.) (2-நன்னூ. பொதுப். ௧௫. ௧௭. உரை.) (4-நன்னூ. ௧௪. ௬. உரை.)

யுநகம்—இரண்டு, இன்னும் பலபொருள் கூறுவர். வழக்கறிந்துகொள்க.

யுதசித்—கேகயதேசாதிபதி. (அபிதானகோ.) இன்னும் பலருக்குங்கூறுவர்.

யுதிட்டிரன்-தர்மராசன். (சூ. நிக. ௧: ௧௪.)

யுயுச்சு-திருதராட்டிரனுக்குத் தாசியிடம் பிறந்தவன். (அபிதாநசிந்.)

யுவ—ஒன்பதாவது வருடம். (வருஷாதிநூல்.)

யுவதி—பதினறுவயதுப்பெண். (சூ. நிக. ௨: ௬௫.)

யுவநாசுவன்—சூரியகுலத் தரசரி லொருவன். (அபிதாநசிந்.)

யுவராசன்—இளவரசன். (மணிமே.)

யுவன்—பதினறுவயதிற்குமேல் முப்பது வயதுகாட்பட்டவனென்பர்.

## யூ.

யூகம்—1. அகப்பொருளறிதல். 2. ஆராய்தல். 3. கருங்குரங்கு. (பிங்கல. ௨௫௦அ.) 4. கவந்தம். 5. குரங்கு. (பிங்கல. ௨௫௦௬.) 6.

கோட்டான். 7. படை. (சூ. நிக உ: அஉ.) 8. படைவகுப்பு. (பிங்கல, கடுoகூ.) 9. பெண் குரங்கு. (பிங்கல. உகூoஎ.) 10. விவேகம். (வழக்.) தருக்கத்துக்குங்கூறுவர். (1, 2, 4, 6-பிங்கல. சooகூ.)

யூகி-1. தெரிநிலைவினைப் பகுதி. 2. விவேகி. (வழக்.) 3. தேரையர்மாணுக்கரு ளொருவர். (அபிதானசிந்)

யூகித்தல்—யோசித்தல். (வழக்.)

யூகிபாடை—ஒருவகைப் பாஷையென்பர்.

யூகை—பேன். (வைத்தியபரி.)

யூதநாதன்— } இனத்தைக்காக்கும் யானை.
யூதபதி— } (சூ. நிக. கூ: கூ.)

யூதம்—1. யானைக்கூட்டம். யூதநாதன்பார். 2. விலங்கின்கூட்டம. (பிங்கல. உசுoo.)

யூதமதம்-யூததேசத்தவர்களுடைய மதம். (அபிதானசிந்.)

யூதர் — ஒரு தேசத்தவரென்பர். (வழக்.)

யூதி—காட்டுமுல்லை. (வைத்தியபரி.)

யூதிகம்—முல்லை (வைத்தியபரி)

யூதிகை—முல்லை. (சூ. நிக. சு உஉ.)

யூபம் — 1. உடற்குறை; இதைக் குறைத்தலைப்பிணமென்பர் மதுரைக்காஞ்சியில். 2. படைவகுப்பு 3. யாகம். (சூ. நிக. கூ: கரு.) 4. வேள்வித்தம்பம். (1, 2, 4-பிங்கல. சooஎ.)

யூபாக்ஷன்—இராவணன் சேநாதிபதிகளி லொருவன். (அபிதானசிந்.)

## யோ.

யோக்கியதை—தகுதி. (தர்க்காமிருதம்.)

யோக்கியம்—தக்கது. (தர்ககாமிருதம்.)

யோக்கியன்—தகுதியுடையவன் (வழக்.)

யோககட்டு-இருகால்களையும் மாறிமடக்கி அக்காலகளைபு மிடையையுஞ் சேர்த்துப் பட்டத்தினுற் கட்டியிருப்பது. (திருவிளை. இரசவாத. ககூல காண்க.)

யோகக்காட்சி—இயமம் நியமம் முதலிய அட்டாங்கயோக சமாதியால் ஓரிடத்திருந்து மூவிடத்தும் முக்காலத்தும் உள்ள பொருள்களெல்லவற்றையும் காண்கின்றகாட்சி. (சி.சி. சுபக்கம் பாயிர. எ.)

யோகசந்தி— நவச்சாரம். (வைத்தியபரி.)

யோகசம் — சிவாகமம் இருபத்தெட்டி னொன்று. (பொருட். நிக.)

யோகசமாதி—இயம நியம முதலிய அட்டாங்கயோக சமாதி "யோகக்காட்சி"பார்.

யோகசாரன்—புறப்புறச்சமயிகளிலொருவன். (அபிதானகோ.)

யோகநந்தேசர்- திருவியலூரிலெழுந்தருளிய சுவாமிபெயர். (அபிதானகோ.)

யோகநித்திரை—அறிதுயில்

யோகப்பட்டை— } யோகிருப்பாரிடையிற்கட்டுங் கச்சு.(திரு
யோகபட்டம்— } விளை. இரசவாதஞ்செய்த. கக.)

யோகம் — 1. அரைப்பட்டிகை. (சிலப்.) 2. இயம நியம முதலிய எண்வகை. (அபிதானசிந்.) 3. உபாயம். 4. உயர்ச்சி. 5 கூட்டம். 6. தியானம். 7. தீக்கையேழினென்று. (உ-ம்.) "நோக்கூறுமொழியெண்ணநூல்யோகமத்திரியாநுவலுமேழுள்"(காஞ்சிப். தழுவக்குழைந்த. ருகூ.) 8. யோகசாத்திரம். அது கலைஞான மறுபத்துநான்கிலொன்று. (பொருட்டொகை.) 9. பஞ்சாங்கவுறுப்பினுளொன்று. (3, 4, 5, 6-சூ. நிக. கக: ககூவெ. கூ.) 10. மருந்து. (சூ. நிக. ரு: சுரு.) 11. ஓர் நூலென்பர் சிந்தாமணியில்.

யோகர்-1.சமணசீத்தோர். (சூ நிக. உ: கூ.) 2. யோகமுடையவர்.

யோகரங்கம் — கொளிஞ்சிமரம். (வைத்தியபரி.) யோகாரங்கம் என்றுங் கூறுவர்.

யோகரூடி—காரணவிடுகுறிபபெயர். (நன்னூல். எழுத்திய. எ. உரை)

யோகவாகி—இரசம்.

யோகஸ்நானம்—எழுவகை ஸ்நானத்தொன்று. அது, யோகாப்பியாசத்தால் ஆன்மசுத்தியடைதலென்பர்.

யோகாசனம்—யோகஞ்செய்பவர்க்குரிய வாசனம. அது சுவத்திகாசனமுதல் ஒன்பது வகையாம. (பொருட்-நிக) இனி நிற்றல், இருத்தல், கிடத்தல் முதலியனவாகவுஞ் சிலப்பதிகாரவுரையிற்கூறுவர். அபிதானசிந்தாமணியில் இன்னும் பலவிதமாகக்கூறுவர்.

யோகாசாரம்—ஒரு மதம். (அபிதானசி.)

யோகி-1. அரன். (சூ. நிக. க:க.) 2. அருகன் (சூ. நிக. க: ர) 3. ஐயன் (சூ. நிக. க: உஅ.) 4. யோகமுடையான். (தர்க்காமிருதம்.)

யோகித்தல்—யோகிப்பு, தியானித்தல்.

யோகினி-1. ஓர் பெண்தெய்வம். அபிதானசிந்.) 2. காளி. (சூ. நிக. க: ருகூ.)

யோகினித்திசை — யோகினிநிற்கும் நிலையாகியதிசை. இன்னதினத்தில் இன்னதிசையில் நிற்குமென வருஷாதிநூலிற்கூறியிருப்பது காண்க.

யோகு-யோகம். (காஞ்சிப். சனற்குமாரப். கஉ.)

யோசனம்—யோசனை.

யோசனவல்லி—1. மந்திட்டிவேர். (தைலவ.) 2. வல்லாரை. (வைத்தியபரி.)

யோசனை—1. ஆலோசனை. (வழக்.) தியானிப்புமாம். 2. ஓரெல்லையளவு. நாற்காதத்தை யோசனையென்பது ஜைநநூல்வழக்கு. (சிந்தாமணி விமலையாரிலம். ௩௬. குறிப்புரை.)

யோசனைகந்தி-வியாசர்தாய். இவளைப பரிமளகந்தியென்பர். (அபிதானசிந்.)

யோசித்தல்—1. ஆராய்தல். (வழக்.) 2. கூட்டுதல். சிவத்துடன் ஆன்மாவை யோசித்தல் என்னும் வர்க்கியம் சித்தாந்தசாராவளியிற் காண்க.

யோத்திரம்-1. சிவசாரம். (வைத்தியபரி.) 2. நுகக்கயிறு.

யோதனன்—} யோதேயன்—} போர்வீரன்.

யோநி—1. பிறப்பு (சி. சி. ௨௬: ௮௯.) 2. பெண்குறி. (பிங்கல. ௪00௯) 3. மணப்பொருத்தம் பத்தினொன்று. பஞ்சாங்கத்திற்காண்க. 4. நாடகவிலக்குறுப்பினு ளொன்று. அது நான்குவகைப்படும். (சிலப்.)

யோநிகாரம்—படிகாரம். (வைத்தியபரி.)

யோநிபேதம் — பிறவிபேதம்; அது எழுவகையாகி எண்பத்துநான்கு நூறாயிரமாம். "உரைசேருமெண்பத்துநான்குநூ றாயிரமாம் யோனிபேதம்"என்னுந் திருஞானசம்பந்தநாயனார்தேவாரத்தி லறிக.

யோநிமுத்திரை—முக்கோணமாகவிடுகிற முத்திரையென்பர்.

## யௌ.

யௌகிகம்—பகுபதம்

யௌதகம்—சீதனம்

யௌதம்—1. ஓரளவு. 2. பெண்கள்கூட்டம்.

யௌவநாசுவன் — யுவநாசுவன் குமரன். (அபிதானகோ) அம்பரீடன் குமரன் என்பர். (அபிதானசிந்தாமணியில்.)

யௌவநிகை—பதினாறுவயதுதொடங்கி ஐம்பதுவயதுக்குட்பட்ட பெண்.

யௌவனதசை—வாலிபப்பருவம் (வழக்.)

யௌவனம்-இளமை. (சூ. நிக. ௮: ௨௭.)

## வ.

வஃகான்—வகரம். (நன்னூ. எழுத்தியல். ௬௪.)

வக்கணம்—1. நாகரிகம். 2. நிந்தை. 3. வருணனை. (1, 2, 3-வழக்.)

வக்கணத்தி—ஓர்பூண்டு. (வைத்திய. மூ. அக.)

வக்கணை—வக்கணம்.

வக்கபாகை—ஓரூர். இது, பாரதம் செய்வித்த வரபதியாட்கொண்டானென்னுமரசன் நகர். (பாரத. பாயிர.)

வக்கரித்தல்—திரும்புதல். (வழக்.)

வக்கரை—1. ஓர் தலம். (உ - ம.) "உமபொலாம படந்தித்தவக்கரையாா பாதுசிவகாமி பங்கர்" என்னுங் கலைசைச்சிலேடைவெண்பா வாலறிக. 2. பக்கரை.

வக்கா—ஓர் பறவை. (குற்றாலக்குறவஞ்சி. ௧௩௯.)

வக்கிரகட்கம்-கரவாளம். (வைத்தியபரி.)

வக்கிரகண்டகம் — இலந்தை, வளைந்த முளளுடையது. (வைத்தியபரி.)

வக்கிரகிரீவம்-ஒட்டகம். கிரீவம்—கழுத்து.

வக்கிரதுண்டம்—1. கருடன் 2. கிளி. வக்கிரம்—வளைவு. துண்டம்—மூக்கு.

வக்கிரதுண்டர்—விநாயகர். விநாயக கவசத்திற்காண்க. (அபிதானசிந்.)

வக்கிரநாசிகம் — 1. ஆந்தை. 2. கிளி. (வைத்தியபரி.)

வக்கிரபாலன்-சூரபன்மனுக்கோர் மந்திரி. (அபிதானசிந்.)

வக்கிரபுட்பம் முருக்கம்பூ. வைத்தியபரி.

வக்கிரம்—1. கொடுமை. 2. பொறாமை 3. மடங்குதல். 4. மீளல். 5. வட்டம். 6. வளைவு (1, 3, 4, 5-சூ. நிக. ௧௧: ௧௧௭வெ. அ) 2-பிங்கல. ௧௮௬0.) (6-உரிச்சொல். நிக. ௮: ௧௫)

வக்கிரவத்திரம்-பன்றி. வத்திரம்-முகம். (வைத்தியபரி.)

வக்கிரவாலதி—நாய். வாலதி—வால்.

வக்கிரன்—1. இடைவள்ளலிலொருவன். (சூ. நிக. ௨: ௨௯) 2. குரூரன் (வழக்.) 3. சனி. வக்கிரனுஞ் சுக்கிரனும்போல விருக்கிறார்களென்பது பழமொழி. 4. செவ்வாய். (சூ நிக. ௧௧: ௬0.)

வக்கிராங்கம்-அன்னம். (சூ. நிக. ௯: ௫0.)

வக்கிராங்கி — கடுகுரோகணி (வைத்தியபரி.)

வக்து—1. முதனிலைத்தொழிற்பெயர். 2. வழி. அவனிடத்தில் வக்கில்லை யென்பது. உலகவழக்கு.

வகுதல்—வதக்குதல் (பெரியபு. கண்ணப்ப ௧௪௯)

வகத்திரம்—வாகை. (வைத்தியபரி.)

வகாரம்— } ஓரெழுத்து. (நன்னூ. மெய்யீ
வகாரம்— } கூஉ.)

வகாரவுப்பு—கல்லுப்பு. (வைத்தியபரி.)

வகித்தல்—சகித்தல். (வழக்.)

வகிர் — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பிளவு. (திருவாச. திருப்பொற். உ.) 3. வழி. (பிங்கல. சஎகூ.) 4. வார். (சூ. நிக. அ: ருகூ.)

வகிர்தல்-1. கோதுதல். 2. பங்குசெய்தல். 3. போழ்தல். (1, 2, 3-வழக்.)

வகிரா—எருமை. (வைத்தியபரி.)

வகிருதல்—வகிர்தல்.

வகுஞ்சம்—இரவு. (பிங்கல. உஉகூ.)

வகுண்டம் கவிழ்தும்பை. (வைத்தியபரி.)

வகுண்டிகை — கஞ்சாங்கோரை. (வைத்தியபரி.)

வகுண்டிமம்-வாலுளுவை. (வைத்தியபரி.)

வகுணி —ஒலி. (சூ. நிக. கo: சஅ.)

வகுத்தல் — வகைசொல்லல், வகைசெய்தலுமாம்.

வகுத்தான்—தெய்வம். (வள். ருஅ. ஆம் அதி. எ.)

வகுத்துக்காட்டல் — ஒருத்தி. (நன்னூ. பொதுப்பா. கஅ.)

வகுதி—வகுப்பு. தி-தொழிற்பெயர்விகுதி.

வகுந்து—வழி (சூ. நிக ரு: கூஉ.)

வகுப்பு—1. அழகு. (பிங்கல. ககூசக.) 2. பதப்பு. (வழக்.)

வகுலி—ஓர்மீன்.

வகுள்—சமுத்திராபச்சை.(வைத்தியபரி.)

வகுளப்பிகம்—வஞ்சிக்கொடி. (வைத்தியபரி.)

வகுளம் —மகிழமரம். (சூ நிக சு: ரு.)

வகுளாபரணர்- சடகோபர். (அபிதாநசிந்.)

வகுளி—ஒலி.

வகுளிநாதர்—நவநாதசித்தர்களிலொருவர். (பொருட். நிக.)

வகை—1. இனம். 2. உபாயம். 3. குறுந்தெரு. (சிந்தா.) 4. முறை. 5. வகுப்பு. (1, 2, 4-வழக்.)

வகைப்படுத்தல்- } பங்கிடுதல். (வழக்.)
வகையிடுதல்— } வகையாகவைத்தலெனினுமாம்.

வகையுளி — அவ்வச்சொன்முடிபே சீர்முடிவாக்கித் தளைகொள்ளிற் றளைகெடுமாதலாற் றளைகெடாவண்ணம் சீர்முடிவுசெய்து தளைகோடல். (உ-ம்) "நிலமிசை நீடுவாழ் வார்" என்பதில் நிலமிசை யெனவும், நீடு எனவும், வாழ்வார் எனவும், பிரித்துத் தளைகொள்ளிற் றளைகெடுதலால் நிலமிசை யெனவும், நீடுவாழ் எனவும், வார் எனவும் பிரித்துத் தளைகொள்ளிற் றளைகெடாமையு மறிக. (யாப். காரி. ஒழிபி. அ: உரை.) இவ்வகையுளி பிரபந்தமுதலிற் கூறுகின்ற மங்கலச்சொல்லில்வரிற் குற்றமாம். "வகையுளிசேர்தல்வனப்பின்றாய்நிற்ற" லென்னும் வெண்பாப் பாட்டியற் செய்யுளாலறிக.

வங்கக்கல்—சுக்கான்கல். (வைத்தியபரி.)

வங்கசேநகம்—வெள்ளகத்தி. (வைத்தியபரி.) வங்கசேனகம் எனவும் வரும்.

வங்கணம்—1. சிநேகம். (உ-ம்.) "சிங்கியைக்காணேனேயென்வங்கணச்சிங்கியைக்காணேனே" (குற்றாலக்குறவஞ்சி. கஙசு.) 2. செங்கத்தரி. 3 சேம்பு. (2, 3-வைத்தியபரி.)

வங்கணன்—சிநேகன். (வழக்.)

வங்கநீறு—ஈயமணல். (வைத்தியபரி.)

வங்கம்—1. ஈயம். 2. கத்தரி. 3. துத்தநாகம் (வைத்தியபரி) 4. தேயமைம்பத்தாறினொன்று. (பொருட். நிக.) 5. பதினெண்பாடையினொன்று (நன்னூ. பெயரிய. கசு. உரை.) 6. நாவாய். 7. வெள்ளி. (1, 2, 6, 7-சூ. நிக. கஉ: ஙகரவெ. உ.)

வங்கமணல்—வங்கநீறு. (வைத்தியபரி.)

வங்கர்—1. ஒரு தேயத்தவர். (திருவிளை. திருமணப். எச.) 2. சண்டாளர். (சூ. நிக. உ: கூசு.)

வங்கனூர் — ஒரு சங்கப்புலவர். இவரை ஆலங்குடிவங்கனாரென்பர். திருவள்ளுவமாலையிலறிக.

வங்கா—ஒரு கருவி (வழக்.)

வங்காரம்—1. உலோகக்கட்டி (பிங்கல. கஉசரு.) 2. பொன் (உ-ம்.) "வங்காரச்சிலை" சொக்கநாத சேதுபதிவண்ணம் முதலிலறிக.

வங்காரவச்சி — } ஓர் கீரை. (வைத்திய
வங்காரவாசி— } பரி.)

வங்காளத்திப்பிலி—ஒருதிப்பிலி. (வழக்.)

வங்காளப்பச்சை-ஓர்பூடு.(வைத்தியபரி.)

வங்காளம்-தேயமைம்பத்தாறினொன்று.

வங்கி—1. கொடிவேலி. (வைத்தியபரி.) 2. மாதர் முழங்கைமேலணியுமோரணி.(வழக்.)

வங்கிசம்—வம்மிசம். (வழக்.)

வங்கிபுரத்தாச்சான் — எழுபத்துநான்கு சிங்காசனாதிபதிகளி லொருவர்.

வங்கிபுரத்துநம்பி—வைஷ்ணவாசாரியர்களி லொருவர்.

வங்கியசூடாமணிபாண்டியன் — இவன் வங்கியசேகரபாண்டியனுக்குமகன். திருவிளையாடற்புராணத்தி லறிக.

வங்கியசோழன்—ஒரு சோழன். (அபிதானசிந்.)
வங்கியதீபபாண்டியன்—ஒரு பாண்டியன். (அபிதானசிந்.)
வங்கியபதாகன்—ஒரு பாண்டியன். (அபிதானசிந்.)
வங்கியம் — 1. இசைக்குழல் (பிங்கல. கசுஉஅ.) 2. மூங்கில். (வைத்தியபரி.)
வங்கு—1. கழுதைப்புலி. (வைத்தியபரி) 2. மலைமுழை. (பிங்கல. ருoசு.)
வங்குகட்டை—மரக்கலத்தறி. ஒருகுழூஉக்குறிப்பாலும்.
வங்குசம்—கூடைநீர் (வைத்தியபரி.)
வங்குளம்—காற்று. (வைத்தியபரி.)
வங்கூழ்—காற்று. (சூ. நிக. க: சஎ.)
வங்கை—பகை
வச்சகத்தண்டுலம் — வெட்பாலையரிசி. (வைத்தியபரி.)
வச்சகம்—மலைமல்லிகை. (வைத்தியபரி.)
வச்சணந்திமாலை — இது செய்யுளிலக்கணஞ்சொன்ன நூல். (அபிதானசிந்.)
வச்சநாபி—நஞ்சு. (வைத்தியபரி.)
வச்சநி—மஞ்சள். (வைத்தியபரி.)
வச்சயம்—கலைமான. (சூ. நிக. ங: உஉ.)
வச்சரி—வேம்பு. (வைத்தியபரி.)
வச்சாதநி—சீந்தில் (வைத்தியபரி.)
வச்சி—காயா. (வைத்தியபரி.)
வச்சியம்—வசீகரித்தல். (பரிபாடல்.)
வச்சிரக்கல்—ஓர்கல். (வைத்தியபரி.)
வச்சிரக்கோட்டம் — காவிரிப்பூம்பட்டினத்திற் பூர்வத்தில வச்சிரமிருந்த கோயில். (அபிதானசிந்.)
வச்சிரகந்தம் -அரிதாரம்.(வைத்தியபரி.)
வச்சிரகம் — தாமரைக்காய் (வைத்தியபரி.)
வச்சிரசிதன்—கருடன். (வைத்தியபரி.)
வச்சிரசுவாலை -1 கும்பகன்னன்மனைவி. (அபிதானகோ.) 2. மீன். (வைத்தியபரி.)
வச்சிரசேலதம்-கோரைக்கிழங்கு.(வைத்தியபரி.)
வச்சிரத்தலைச்சி—கருவண்டு. (வைத்தியபரி.)
வச்சிரதசநம்-1. எலி. 2. பன்றி. (வைத்தியபரி)
வச்சிரதந்தன் — 1. இராவணனுக்கோர் மந்திரி. (இராமா. யுத்தகா. மந்திரப். உஅ.) 2 பகதத்தன்புத்திரன். (அபிதானசிந்.)
வச்சிரதந்தி—ஓர் புழு.
வச்சிரதரன் — இந்திரன். (உ-ம்.) "சத்தமேகங்களும்வச்சிரதரனுமையிற் சஞ்சரித்திடவில்லையோ" (தாயுமானவ. பரிபூரண. கஉ.) வச்சிரம் - வச்சிராயுதம். தரன் - தரித்தவன்.
வச்சிரதாரணை—நவதாரணையி லொன்று. (பொருட்-நிக.)
வச்சிரதிலதம்—முத்தக்காசு. (வைத்தியபரி)
வச்சிரதுண்டன்-கருடன். (வைத்தியபரி.)
வச்சிரநாடு — சோணையாற்றின்கரையிலுள்ளநாடு (அபிதானகோ.)
வச்சிரநிம்பம்—கருவேம்பு. (மலையக.)
வச்சிரப்பகை—ஓர் பகை. (வழக்)
வச்சிரபாணி -இந்திரன். (சூ. நிக. க: கக.)
வச்சிரபீசகம்—கொடிபபுன்கு.(வைத்தியபரி.)
வச்சிரபீசம் — கழற்சிக்காய் (வைத்தியபரி)
வச்சிரபுட்பம்—எட்பூ. (வைத்தியபரி.)
வச்சிரம் — 1. அக்கினிபேதி. 2. எட்பூ 3. குலிசம. 4. சதுரக்கள்ளி. 5 சிறப்புள்முப்பத்திரண்டிலொன்று. (பொருட்-நிக.) 6. நித்தியயோகத்தொன்று. பஞ்சாங்கம்பார். 7. மாவயிரம். (சிந்தா.) 8. வைரமணி. (1, 2-வைத்தியபரி.) (3, 4, 8-சூ. நிக. கக: சகரவெ. கக.) 9. வச்சிரப்பகையுமாம்.
வச்சிரமாலி—சண்முகசேனுவீரன். (அபிதானசிந்.)
வச்சிரமுட்டி — மாலியவந்தன்புத்திரன். (அபிதானகோ.)
வச்சிரரசம்—சூத்தரசம். (வைத்தியபரி.)
வச்சிரவராகி — சமணர்கொண்டாடும் ஓர் மாயாசத்தியென்பர்.
வச்சிரவல்லி-1. பிரண்டை 2. பொழுதுவணங்கிபூச்செடி. (1, 2-வைத்தியபரி.)
வச்சிரவாகு — சூரன்மைந்தரிலொருவன். (அபிதானசிந்.)
வச்சிரவிருக்கம்—புல்லுருவி. (வைத்தியபரி.)
வச்சிரன்—1. இந்திரன், வச்சிராயுதத்தையுடையவன் 2. கண்ணன் பௌத்திரனாகிய அநிருத்தன்புத்திரன். (அபிதானகோ.)
வச்சிராங்கபாண்டியன்-ஓர் பாண்டியன். (அபிதானசிந்.)
வச்சிராங்கம்—சதுரக்கள்ளி. (மலையக)
வச்சிராங்கன் — திதியின்றவத்தால்வந்த புத்திரன் (அபிதானகோ.)
வச்சிராங்கி — தாரகாசுரன் தாய். (அபிதானசிந்.)

வச்சிராட்சி—பிரண்டை. (வைத்தியபரி.)
வச்சிராதம்—பன்றி. (வைத்தியபரி.)
வச்சிரி—இந்திரன். இ—விகுதி.
வச்சை—உலோபம். (உ-ம்.) "கடுவச்சை யன்போலொர்மன்னன். (இராமா. பாலகா. பூக்கொய். கக)
வசக்குதல்—படியச்செய்தல். (வழக்.)
வசகம்—கொடிவேலி. (வைத்தியபரி.)
வசட்டி—வயிரமண். (வைத்தியபரி.)
வசத்திற்சோதினி—எலுமிச்சை. (வைத்தியபரி.)
வசதி—1. ஊர். 2. நல்லிடம். 3 வீடு. (1, 2, 3-சூ. நிக. கக: சகரவெ. கரு.)
வசந்தகாலம்—சித்திரை வைகாசிமாதம். (வழக்.)
வசந்தகுசுமாகரம்—ஒருபூடு. (வைத்தியபரி.)
வசந்ததரு—மாமரம். (வைத்தியபரி.)
வசந்ததூதம்-1. குயில். 2. மாமரம். (1,2-(வைத்தியபரி.)
வசந்தம் — 1. இந்திரமாளிகை. (பிங்கல கக௯அ.) 2. இளவேனில். (பிங்கல உ௯அ.) 3. ஓர் இராகம். (பொருட்-நிக.) 4. சல்லாபம். (பிங்கல. ௬௦௬௦) 5. வாசம். (சூ. நிக. கக: நகர வெ. எ.)
வசந்தமலர்—இலவங்கம். (வைத்தியபரி.)
வசந்தமாலை—ஓர் பிரபந்தம். (பொருட்-நிகண்டு.)
வசந்தன் — 1. ஓர் வானரவீரன், இவன் கும்பகன்னனுற் கசக்கிப்பூசிக்கொள்ளப்பட்டவன். (அபிதாநசிந்) 2 காமன். (பிங்கல.கசரு.) 3. தென்றல். (பிங்கல. உ௯.)
வசந்திகை—தேமல். (பிங்கல. க௦அரு.)
வசநாவி—வச்சநாபி. (வைத்தியபரி.)
வசநீயம்—வசநிக்கத்தக்கது. அசிர்வசநீயம் பார்.
வசப்படல்—வசமாதல். (சூ. நிக. கூ: உரு.)
வசப்படுத்தல்—வசமாக்குதல். பிறவினை. (வழக்.)
வசப்படுதல்—வசப்படல்.
வசம்—1. அமைதல் 2. ஒழுங்கு. 3. கீழ்ப்படிதல். 4. கைவசம். 5. வசம்பு. (வைத்தியபரி.) (1, 2, 3, 4-வழக்.)
வசம்பு—ஓர் மருந்து. (வைத்தியபரி.)
வசமாக்கல்—வசப்படுத்தல். (சூ. நிக. கூ: ௬௦. மூலம்.)
வசமாதல்—வசப்படல்.
வசரம்—கோழி. (வைத்தியபரி.)
வசலை—பசலை; அது, ஓர் கொடி.

வசவதேவர்—ஓர் வீரசைவர். (அபிதாநசிந்.)
வசவபுராணம்—வீரசைவவடியார்கள் மகத்துவங்கூறியநூல். (அபிதானசி.)
வசவி—தட்டை. (சூ. நிக. உ: கூ௫.)
வசவு—இழிவுரை. (வழக்.)
வசளை—பசளை. (வைத்தியபரி.)
வசனம்—சொல். (சூ. நிக. க௦: ரு.)
வசனித்தல்—சொல்லல். (வழக்.)
வசார் — 1. நெருப்பு. 2. வசம்பு. (1, 2-வைத்தியபரி.)
வசானியம்—செவ்வியம். (வைத்தியபரி.)
வசி—1. கூர்மை. 2. தழும்பு. 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. நீர். 5. பஞ்சாக்கரமந்திரவகையிலொன்று. (தணிகைப். அவையடக். உ.) 6. மழை. (சிலப்.) 7. வசியம். 8. வாள். (1, 2, 6, 7-பிங்கல. ௬௦கக.) (8 பிங்கல. ௫ள.) 9. வெள்வெண்காயம். (வைத்தியபரி) பிளப்பென்பர் பத்துப்பாட்டில். இருப்பிடம், குற்றம், சூலம், திரட்சி முதலியவற்றிற்குங் கூறுவர். உதாரணங் காணிற் கொள்க.
வசீகம்—மிளகு (வைத்தியபரி)
வசீகரணம்—1. கலைஞானமறுபத்துநான்கிலொன்று. (பொருட்-நிக.) 2. மன்மதன்கணையிலொன்று. (சூ. நிக. கஉ: ௬௫.)
வசிகரம்—1. சீந்தில். 2. யானைத்திப்பிலி. 3. வசியம். (1, 2-வைத்தியபரி.) (3-வழக்.)
வசிகரித்தல்— } வசப்படுத்தல். (வழக்)
வசிகரிப்பு— }
வசிகாரமம் — 1. சிலந்தி. 2. செருந்தி. (வைத்தியபரி.)
வசிட்டர்—ஓர்முனி. இவர் பிரமாவின் மாநசபுத்திரருளொருவர். (அபிதாநசி.)
வசித்தல்—1. கண்டமாக்கல். (பரிபாடல்.) 2. தங்கல். (சூ. நிக. கூ: கரு.) 3. வசியஞ்செய்தல். (வழக்.)
வசித்துவம்—அட்டமாசித்திகளிலொன்று. (பொருட்-நிக.)
வசிதை—வசித்துவம்.
வசிந்து—பிளந்து. (பத்துப்.)
வசிநி—வன்னிமரம். (வைத்தியபரி.)
வசியம்—1. கிராம்பு. (வைத்தியபரி.) 2. வசமாதல், அஃது அட்டகர்மத்தொன்று. அட்டகர்மம் பார்.
வசிரம்—1. ஆனைத்திப்பிலி. 2. கடலுப்பு. (1, 2-வைத்தியபரி)
வசிவு—1. பிளந்துவடுப்படுதல். (பத்துப்.) 2. வளைதல். (பிங்கல ககூசஎ.)
வசீகரணம்—வசிகரணம்.
வசீகாரம்—வசிகரிப்பு.

வசீகரன்—வசியஞ்செய்பவன். (வழக்.)

வசீரம்—யானைத்திப்பிலி. (வைத்தியபரி.)

வசு—1. அட்டவசுக்கள். 2. நீர். (வைத்தியபரி.) 3. நெருப்பு. 4. பசுவின்கன்று. 5. பொன். 6. வெள்வெங்காயம். (வைத்தியபரி.) (1,3,4, 6-பிங்கல. சமகஉ.) அபிதானசிந்தாமணியில் அநேகருக்குப்பெயராகூறுவர்.

வசுக்கள்—அட்டவசுக்கள். (மணிமே.)

வசுகந்திகை—நாய்வேளைச்செடி. (வைத்தியபரி.)

வசுகூபம்—அமுரி (வைத்தியபரி.)

வசுதேவன்—கண்ணபிரான்றந்தை. (அபிதானசிந்.)

வசுதை—மண்ணுலகு. (பிங்கல. சசஅ.)

வசுந்தரை—பூமி. (சூ. நிக. ு. எ.)

வசுநரை—புளி. (வைத்தியபரி.)

வசுநாள்—அவிட்டம். (பிங்கல. உகூக.)

வசுமதி—பூமி. (சூ. நிக. ு: அ.)

வசுவசி— } சாதிபத்திரி. (வைத்தியபரி.)
வசுவாசி— }

வசூரி—ஓர் நோய். (வழக்.)

வசை—1. குற்றம். (சூ. நிக. அ: ுஅ.) 2. மலட்டுப்பசு. (சூ. நிக. கூ: கஉ.) 3. இகழ்ச்சி. (வள். உச-ஆம் அதி. அ) பெண், பெண்யானை, மனைவி முதலியவற்றிற்குங்கூறுவர்.

வசைச்சொல்—இகழ்ச்சிச்சொல். (வழக்.)

வசைந்தல்—வளைத்தல்.

வசைதல்-வளைதல். (வழக்குண்டுபோலும்.)

வஞ்சகம்— வஞ்சம். வஞ்சகம்பேசேல். (கொன்றைவே.)

வஞ்சகழுடி—ஆமை. (வைத்தியபரி.)

வஞ்சகவொழிப்பு— ஓரலங்காரம். இது: பெயர்முதலியசொற்களால் வர்ணியத்தினது தர்மத்தை மறுத்தல். (விசா. அணியிலக்.)

வஞ்சகன்—வஞ்சிப்போன். (சூ.நிக. உ: சச.)

வஞ்சகாரம்—கொடிவேலி. (வைத்தியபரி.)

வஞ்சநவிற்சியணி—ஓரலங்காரம். இது: ஓர் காரணத்தானிகழ்ந்த சத்துவமாகிய குணத்தை மற்றொருகாரணங்கூறி மறைத்தலாம். (விசா. அணியிலக்கணம்.)

வஞ்சப்பழிப்பணி — ஓரலங்காரம். இது, நிந்தையினானிந்ததோன்றுதலாம். இதனை வடநூலார் வியாஜநிந்தாலங்காரமென்பர். (விசா. அணியிலக்கணம்.)

வஞ்சப்புகழ்ச்சியணி—ஓரலங்காரம். அது, பழிப்பினாற்புகழ்ச்சிதோன்றல், புகழ்ச்சியாற் பழிப்புத்தோன்றல், புகழ்ச்சியாற் புகழ்ச்சி தோன்றலென மூன்றுவகைப்படும். (விசா. அணியிலக்கணம்.)

வஞ்சப்பேய் — காளியேவல்செய்வாள். (சூ. நிக. க: கூகூ.)

வஞ்சம்—1. அழிவு. (ஞானமிருதம். கூஉ.) 2. கபடம். (சூ. நிக. கக: ஞகரவெ ு.) 3. கொடுமை. 4. பொய். 5. வாள். (3, 4, 5-பிங்கல. சOகரு.)

வஞ்சலம்—பாம்பு. (வைத்தியபரி.)

வஞ்சனம்—வஞ்சகம். (வழக்.)

வஞ்சனி—1. இடாகினி (பிங்கல. கஉக.) 2. வஞ்சப்பெண்ணுமாம்.

வஞ்சனை—1. தெய்வப்பெண். 2. பொய். 3. வஞ்சம். (1, 2, 3-பிங்கல. சOகச.)

வஞ்சி—1. ஒருவகைமரம். (ஐங்குறுநூ.) 2. ஓர்கொடி. 3. ஓர்பா. 4. கருவூர், சேரனகரென்பர் பரிபாடலில், சோழனகரென்பர் பெரியபுராணத்தில், இரண்டுமுண்மையேயாம். 5. குடை. 6. சீந்தில். (வைத்தியபரி.) 7. தெரிநிலைவினைப்பகுதி. 8. பகைவர்மேற்செல்லல். 9. பகைவர்மேற்செல்லுவோரணியுமாலை. (சூ. நிக. கஉ: கஉ.) 10. பெண். 11. மருதயாழ்த்திறத்திலொன்று. (1, 2, 3, 5, 7, 11-பிங்கல. சOகரு.)

வஞ்சிச்சீர்—வஞ்சியுரிச்சீர், மூவசைச்சீர்.

வஞ்சித்தல்—வஞ்சனைசெய்தல்.

வஞ்சித்தளை—கனிமுன் நிரையும் நேரும் வரின், ஒன்றியவஞ்சித்தளையும், ஒன்றாதவஞ்சித்தளையும் என இருவகையாம். (யாப். காரி. உறுப்பியல். கO.)

வஞ்சித்தாழிசை — இருசீரடி நான்காய், மூன்றுசெய்யுள் ஒருபொருண்மேலடுக்கிவருவது (யாப். காரி. செய்யுளியல். கச)

வஞ்சித்திணை — அரசன் வஞ்சிப்பூவைத் தலையில்சூடிப் பகைவருடையபூமியைக் கைக்கொள்ளக் கருதுதல். (புறநா.)

வஞ்சித்துறை — இருசீரடிநான்காய் ஒருபொருண்மேலொன்றாய்வருவது. (யாப். காரி. செய்யுளியல். கச.)

வஞ்சித்தூக்கு-பரிபாட்டினுறுப்பினுளொன்று. (பரிபாடல்)

வஞ்சிதன் —வஞ்சிக்கப்பட்டவன். (வழக்.)

வஞ்சிப்பா — நால்வகைப்பாவினொன்று. (யாப். காரி. செய்யுளியல். க.)

வஞ்சியரவம் — ஓர்துறை. (புறப். வெ. மாலை.)

வஞ்சியுரிச்சீர் — தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனியாய்வருவன. (யாப். காரி. உறுப்பியல். ச.)

வஞ்சிரம்—ஓர் மீனென்பர்.

வஞ்சிவிருத்தம்—முச்சீரடி நான்குகொண்டுவருவது. (யாப. காரி. செய்யுளியல். கச.)

வஞ்சிவேந்தன்—சேரன். (சூ. நிக. உ: கஅ.) வஞ்சியென்பது கருவூருக்குப் பெயராதலால், அதனைப் புகழ்ச்சோழநாயனார்புராணத்திற் சோழர்க்குரிய நகரெனக்கூறலான், வஞ்சிவேந்தனென்பது சோழனுக்குமொரு பெயராம்; இங்ஙனமாதலால் அக்கருவூர் ஓர்காலத்துச் சேரனுக்கும் ஓர்காலத்துச் சோழனுக்கும் உரிமையாயிருந்ததென்பது கருதப்படுகிறது.

வஞ்சினக்காஞ்சி — ஓர் துறை. இது அரசன் பகைவரைத் தாழ்வித்தற்பொருட்டு இவ்வாறு செய்வேனெனச் சொல்லிய கூறுபாட்டைச் சொல்லுதல். (புறநா.)

வஞ்சினம்—சபதம். (சூ. நிக. க0: க0.)

வஞ்சுளம்—1. அசோகு. 2. வேங்கை. (1, உ-வைத்தியபரி.)

வஞ்சுளான்—கரிக்குருவி. (சூ.நிக.கூ:டுஎ.)

வட்க—கெட. (சிந்தா.)

வட்கர்—குற்றம் (புறநா)

வட்கல் 1. ஒளிமழுங்கல் (சூ. நிக. அ: உடு) 2. வெட்கம் (சூ நிக. அ: சஉ)

வட்கார்—பகைவர் (சூ. நிக. உ: டு.)

வட்காரம்—வெடிகாரம். (வைத்தியபரி.)

வட்டக்கிலுகிலுப்பை — ஓர் கிலுகிலுப்பைச்செடி. (வைத்தியபரி.)

வட்டகை—1. பலவூர்சூழ்ந்தவட்டம். 2. சிறுகிண்ணம். (1, 2-வழக்.)

வட்டணம் — பரிசை. சூ நிக. ஏழாவது தொகுதி கஅ ஆவது கவியில் மாவட்டணமென்றார்; முற்றுந்துறையாக வட்டணமென்பார்போலும்.

வட்டணிக்கை-, வட்டணித்தல்- } வட்டமாக்கல் (வழக்)

வட்டணை—1. தாளம்போடுதல். (சூ. நிக. கூ: கூச.) 2. வட்டம். (பிங்கல. உஉஅகூ.) 3. வர்த்தனை. (மணிமே.)

வட்டத்திருப்பி—1. ஆடுதின்றாப்பாளை. 2. பங்கம்பாளை. 3. பொன்முசுட்டை. (1, 2, 3-வைத்தியபரி.)

வட்டத்துத்தி—ஒருவகைச்செடி. (வைத்தியபரி.)

வட்டநரிவெருட்டி-வட்டக்கிலுகிலுப்பை. (வைத்தியபரி)

வட்டப்பாலை—நான்குவகைப்பாலையினொன்று. (சிலப். ஆய்ச்சியர். சு0டு. பக்.)

வட்டப்புல்-காவட்டம்புல்.(வைத்தியபரி.)

வட்டம்—1 ஆலவட்டம். (பத்துப்பாட்.) 2. ஓர்கோள். (சிலப்.) 3. கைம்மணி. 4. சீலை. 5. திரிகை. 6. நாணயமாற்றும்பொழுதுகொடுக்கும் லாபப்பொருள். 7. நீர்ச்சால். 8. நீர்நிலை. 9. பரிசை. 10. பரிவேடம். 11. வாருவலயம். (4, 8, 9-சூ. நிக கக: டகரவெ. கரு.) (3, 9-பிங்கல. சஉஉக.) (5-வழக்.) வட்டமென்பர்பரிபாட்டில். வட்டவடிவு முதலியவற்றிற்கும் பெயர் கூறுவர். உதாரணங்காணிற் கொள்க.

வட்டமிடுதல்- தேவதோத்திரத்தை மறுபடி மறுபடி மனனஞ்செய்தல். (வழக்.)

வட்டயடக்கி—வட்டத்திருப்பி. (வைத்தியபரி.)

வட்டாடல் — 1. ஒருவகை விளையாட்டு, உண்டையுருட்டல் (மணிமே.) 2. சூதாடல். (சூ. நிக. கக: டகரவெ. கூஅ.)

வட்டாரம்—சுற்றுப்பக்கம். (வழக்)

வட்டி — 1. கடகப்பெட்டி. (புறநா.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. முதற்பொருட்கு வரு மூதியம். (வழக.)

வட்டிகை —1. எழுதுகோல். 2. கூடை. (பிங்கல. ககூஅஎ.) 3. சித்திரம். (சூ. நிக. அ: எகூ.) 4. நால்வகைச்சாந்தினொன்று. (சூ. நிக. கூ: கரு.) 5 வாத்திகை. (1, 5-மணிமே.)

வட்டித்தல்—1 ஆணையிடுதல். (சூ. நிக. க0: க0.) 2. தாளம்போடல். (சூ. நிக. கூ: டுச.) 3. வட்டமாக்குதல்.

வட்டித்து—சுழற்றி. (சிந்தா.)

வட்டிப்பூ—1. தாமரைப்பூ.(வைத்தியபரி.) 2. வட்டித்தல. (வழக்.)

வட்டிப்போர்—சுழற்றியெறிவோர். (பரிபாடல்.)

வட்டில்—1. உண்கலம். (வழக்.) 2. ஓர் பாத்திரம். (சூ. நிக. எ: கூஉ)

வட்டினி — வட்டாடும்போது கொடுக்கும் பந்தயப்பொருள் (இராமா.மிதிலைக்காட்.கள)

வட்டு—1. கறிமுள்ளி. (வைத்தியபரி.) 2. சூதாடுகருவி. (வள்.கல்லாமை.க.) 3. திரட்சி. (சூ. நிக அ: கூ.) 4. நீர்வீசுகருவிகளினொன்று. (பரிபாடல்.)

வட்டுச்செடி—ஓர் செடி.

வட்டுடை—முழந்தாளளவாக வீரருடுக்கு மோருடைவிசேடம். (சிந்தா.)

வட்டுவட்—ஓர்வகை வெற்றிலைப்பை. (வழக்.)

வட்டை—வழி. (சூ. நிக. டு: கூஉ.)

வட்புலி—சிங்கம். (வைத்தியபரி)

வடக்கிருத்தல்—மகாப்பிரஸ்தானம்.(செந்தமிழ். தொகுதி. அ. முதற்பகுதி) அது பற்றிக் கந்தோர் பதவிவேண்டி வடதிசைநோக்கித் தியானமுற்றிருத்தலாம். (புறநா.)

வடக்கு—வடதிசை. (வழக்.)

வடகம்—1. அத்தவாளம். 2. தோல். (1, 2-பிங்கல. ௬0௧௭.) 3. வற்றலாகிய ஒருவித உணவுப்பண்டம். (வழக்.) போர்வைக்குங் கூறுவர்.

வடகலை—கிரந்தநூல்கள். (இராமா. பாயிரம்.)

வடகாற்று—வாடை. (சூ. நிக. ௧௧: டகர வெ. ௧௧.)

வடகிழக்கு—வடகிழ்த்திசை. (வழக்.)

வடகீழ்த்திசை — வடக்குங் கிழக்குமாய தோராகோணத்திசை.

வடகீழ்த்திசைப்பாலன்—ஈசானன். (சூ. நிக. ௧௨: ௭௧.)

வடகீழ்த்திசைப்பாலன்தூறி—நாகம். (சூ. நிக. ௧௨: அ0.)

வடகீழ்த்திசையானை—சுப்பிரதீபம். (சூ. நிக. ௧௨: ௭௬.)

வடசொல் — ஆரியமொழி. ஆரியத்திற்குரிய சிறப்பெழுத்துத்திரிந்து தமிழில் வந்து வழங்குமொழியை வடசொல்லென்க. நன்னூலிற் பெயரியலிலே பொதுவெழுத்தாலியன்ற மொழியும் வடசொல் என்பது பொருந்தாது.

வடதிசைப்பாலன்—குபேரன். (சூ. நிக. ௧௨: ௭௧.)

வடதிசைப்பாலன்தூறி—பானை. (சூ. நிக. ௧௨: அ0.)

வடதிசையானை — சார்வபௌமம். (சூ. நிக. ௧௨: ௭௬.)

வடந்தை—வடகாற்று. (பிங்கல. ௨௬.)

வடபத்தி—ஆல். (வைத்தியபரி.)

வடபரதம் — பரதகண்டத்தி னோர்பிரிவு. (சூ. நிக. ௧௨: ௬௬.)

வடபால்விதேகம் — வடவிதேகம். (சூ. நிக. ௧௨: ௬௬.)

வடபாலிரேபதம்—நவகண்டத்தொன்று. (சூ. நிக. ௧௨: ௬௬.)

வடம்—1. ஆலமரம். (சூ. நிக. ௪: ௧௪.) 2. ஒழுங்கு. (ஞானாமிருதம்.) 3. கயிறு. (பிங்கல. ௧௬௫.) 4. வின்னாணி. (பிங்கல. ௧௫௬௭.)

வடமதுரை — வடநாட்டின்கண்ணுள்ள ஒருவிட்டுணுத்தலம். (அபிதானகோ.)

வடமர்—வடவர், பிராமணருள் ஒரு வகுப்பினர். இவர் வடக்கிருந்து தென்னாட்டுக்கு வந்தவர்.

வடமலை—1. மகாமேரு. 2. வேங்கடம். இதனைக் குமரக்கடவுள் தலமென்றுந் திருமால் திருப்பதியினென்றெனறுங்கூறுவர்.

வடமீன்—அருந்ததி. (சூ. நிக. ௧: ௭௬.)

வடமூலகன்—சிவபிரான்.

வடமேற்கு—வாயுதிசை. (வழக்.)

வடமேற்றிசைப்பாலன்—வாயு. (சூ. நிக. ௧௨: ௭௧.)

வடமேற்றிசைப்பாலன்தூறி—கழுதை. (சூ. நிக ௧௨: அ0.)

வடமேற்றிசையானை—புட்பதந்தம். (சூ. நிக. ௧௨: ௭௬.)

வடமொழி—வடசொல். பார்.

வடலி—இளம்பனை. (வைத்தியபரிபா.)

வடவர் — வடநாட்டிலுள்ளோர். (பத்துப்பாட்.)

வடவனல்—வடவாநலம்.

வடவாக்கினி — ஊழித்தீ. இது, கற்பாந்தகாலத்தில் உலகையழிக்குந் தீ.

வடவாசுதர் — தேவமருத்துவர். வடவா-வடவை-அச்சுவினி. சுதர்-பிள்ளை.

வடவாநலம்— | ஊழித்தீ. (சூ. நிக. ௧: ௫௧.)
வடவாமுகம்— |
வடவாமுகாக்கினி— |

வடவிதேகம்—நவகண்டத்தொன்று. (சூ. நிக. ௧௨. ௬௬.)

வடவேங்கடம்—ஓர்மலை. இது, தமிழ்நாட்டின் வடக்கெல்லையாகவுள்ளது. (தொல். பாயிர. நச். உரை.)

வடவை — 1. ஊழித்தீ. 2. எருமை. 3. பெண்குதிரை. 4. பெண்யானை. 5. அச்சுவனிக்கும் பெயர். (1, 2, 3, 4-பிங்கல. ௬0௧அ.)

வடாது — 1. வடக்கு. (உ-ம்.) "வடாது திசைமேனள்" (இராமா. ஆரணிய. அகத்தீச. ௬0.) 2. வடக்குள்ளது. மரூஉச்சொல். (நன் பெயரிய. ௪0. உரை.)

வடி—1. கள். (பிங்கல. ௧௪௪௬.) 2. கூர்மை. "வடிவேல்" (வழக்.) 3. திருத்தம். (புறநா.) 4. தெரிநிலைவினைபபகுதி. 5. மாவடு. (ஐங்குறு.) 6. மாவடுவகிர். (திருக்கோவை. ௯௨.)

வடிக்குதல்—1. களங்கமறுத்தல். 2. வடியச்செய்தல். (1, 2-வழக்.)

வடிகயிறு — குதிரைவாய்வடம். (சூ. நிக. ௭: ௨௧.)

வடிகாது—தாழ்ந்தகாது. (உ-ம்.) "குழைவிரவுவடிகாதாகோயிலுளாய்" (சுந்தரமூ. தேவார.)

வடித்தல்—1. கூர்மையாக்குதல். 2. சுட்டுவிரலும் பெருவிரலுங்கூட்டி யாழ்நரம்பை அகமும் புறமு மாராய்தல். (மணிமே.) 3. தெளித்தெடுத்தல். 4. பயிற்றல். (சிந்தா.) 5. வசமாக்குதல். (சூ. நிக. ௬: ௯0.)

வடிதல்—1. நீர்முதலிய ஒழுகுதல். (வழக்.) 2. நீளம். (சூ. நிக. அ: கரு.) 3. வற்றுதல். ஆற்றில் நீர்வடிந்தது என்பது (வழக்கு.)

வடிந்த—அழகுபெற்ற. (புறநா.)

வடிப்ப—பயிற்ற. (சிந்தா.)

வடிப்பம்—1. அழகு. 2. செப்பம். (1, 2-வழக்.)

வடிப்பு—வடித்தல் பு-தொழிற்பெயர் விகுதி.

வடிப்போர்—பயிற்றுவோர். (சிந்தா.)

வடிம்பலம்பநின்றபாண்டியன்— இவனை உக்கிரவர்மனென்பர் சிலப்பதிகாரவுரையில்; இவன் கடல்சுவற வேலெறிந்தவுடன் அக்கடல் வற்றி இவன்கால்விளிம்புமட்டாகக் கழுவியது. அதனால் வடிம்பலம்பநின்றானெனப் பெயராயிற்று. "ஆழிவடிம்பலம்பநின்றானு" மென நளவெண்பாவிற்கூறுதல் காண்க.

வடிம்பு—1. நுதி. 2. விளிம்பு (திருவால. திருவிளை. கடல்சுவற. சு.) வடிம்பு என்றுக் கால்விளிம்பெனக்கொள்க.

வடியல் — வடிதல். அது, ஒன்றிலிருந்து நீர்முதலிய வொழுகல். (வழக்.)

வடியா—திருந்தாத. (புறநா.)

வடிவம்—1. உடம்பு. அம்-சாரியை. 2 உருவம். (பிங்கல. கூகூரு.)

வடிவு—1. அல்குல். (பிங்கல. ௪00௩.) 2. அழகு. (சூ. நிக. அ: சு.) 3. உடம்பு. (சூ. நிக. உ: சச.)

வடிவுவமை — உவமையணியிலொன்று. (தண்டி. பொருளணி. ௨கூ.)

வடிவெழுத்து — கட்புலனுக்கு விடயமாயெழுத மெழுத்து. (நன். உருபு. உஅ. உரை.)

வடு—1. குற்றம், வசையுமாம். 2. செம்பு. 3. தழும்பு. 4. வண்டு 5. பிஞ்சு. (பிங்கல. உஅஉஅ.) (1, 2, 3, 4-பிங்கல. ௪0௩௧.)

வடுகச்சி—வடுகப்பெண். (வழக்.)

வடுகநம்பி — எழுபத்துநான்குசிங்காதனாதிபதிகளி லொருவர். (அபிதானசி.)

வடுகநாதன்—வடுகன். பிரமன் றலைகிள்ளியவனென்பர். (அபிதானசிந்.)

வடுகன்—வயிரவன். (சூ. நிக. க: உஎ.)

வடுகன்றாய்—காடுகாள். (சூ. நிக. க: ௩௩.)

வடுகி—காடுகாள் (சூ. நிக. க: ௩௩.)

வடுகு — 1. இந்தளராகம். 2. ஓர் பாஷை. 3. ஓர்வகைக்கூத்து. (சிந்தா.) 4. மருதயாழ்த்திறம். (1, 2, 4-பிங்கல. ௪0உ0.)

வடுகேசுவரர் — திருவடுகூரிலிருக்குஞ் சுவாமிபெயர். (அபிதானகோ.)

வடுப்படுத்தல்—கதுவாய் என்பர். இதற்கு வடுப்படுத்துதல் என்பதே பொருளாம். (பிங்கல. ககூஅ௩.)

வடுப்படுத்துதல் — 1. குற்றப்படுத்தல். 2. வசையாக்கல். (வழக்.)

வண்டை — உழுந்துமுதலியவற்றாற்செய்யும் அடை. (வழக்.)

வண்ணகை—வழங்குகை. (சிலப்.)

வண்டத்தனம்—குறும்புத்தனம். (வழக்.)

வண்டம்—துந்தாயுதமென்பர்.

வண்டமை—கருச்சங்கு. (வைத்தியபரி.)

வண்டர்—1. கடிகைமாக்கள். (சூ. நிக. உ: சஎ.) 2. திண்ணியர். (சூ. நிக. உ: ரு0.) 3. துட்டர். (வழக்.)

வண்டரம் — நாய், மார்பு, முகில் என்பர். (உ-ம்.) வரிற்கொள்க.

வண்டல்—1. சேறுமுதலிய அடைதல். 2. மகளிர்விளையாட்டு. (சூ. நிக. கூ: ௩.) 3. விளையாட்டுச்சிற்றில் (ஐங்குறுநா.)

வண்டலம்—சேறு. அம்-சாரியையெனக.

வண்டன்—1. திண்ணியன். (பிங்கல. அஎ0.) 2. துட்டன். (வழக்.)

வண்டனார்—ஓர் முனிவர். (சி[illegible])

வண்டாலம் — குந்தாலி, (வழக்.) கல்லை வெட்டு மோர் கருவி. இதனைக் கூந்தாலி என விகாரமாக்கியுங் கூறுவர்.

வண்டானம்—1 கொய்யடிநாரை. (பிங்கல. உ௩எச.) 2. நாரை (சிந்தா.)

வண்டி—பண்டி. (வழக்.)

வண்டியம்—பேராமுட்டி. (வைத்தியபரி.)

வண்டில் — தேர்முதலியவற்றி னுருளை. (வழக்.)

வண்டு—1. அம்பு. 2. குற்றம். 3. கைவளை. 4. சங்கு. 5. நூல் 6. பூசநாள். 7. வண்டு. (1, 2, 3, 4, 5, 6, 7-பிங்கல. ௪0உஉ.)

வண்டுகொத்தி — ஓர் குருவி. வழக்குண்டு போலும்.

வண்டுகொல்லி—1. சண்பகம். 2. தேவதாரம். (1, 2-வைத்தியபரி.)

வண்டுணாமலர்மரம்—1. சண்பகமரம். 2. வேங்கைமரம். (1, 2-வைத்தியபரி.)

வண்டுளம் — நந்தியாவட்டம். (வைத்தியபரி.)

வண்டை—ஓர் செடி.

வண்ணக்கஞ்சாத்தனார் — கடைச்சங்கப் புலவருளொருவர். (வள். மாலை.)

வண்ணக்குழிப்பு—சந்தக்குழிப்பு. (வழக்.)

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா— கலிப்பாவி னொருபேதம். அஃது தரவு, தாழி

சை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னு மாறுறுப்பினையுங் கொண்டு, வருவது. (யாப். காரி. செய்யுளியல். கக.)
வண்ணம்-1. அழகு. 2 குணம். 3. சந்தம், இது பலவகைப்படும். 4. சாதி. (பத்துப்பாட்.) 5. நிறம். (நன்னூ. வினையிய. உ: உரை.) 6. முடுகியல். (பிங்கல. ௨0௮௩.) 7. விதம். (காஞ்சிப். திருவேகம். எ0.) 8. இயற்கையழகென்று கூறுவர். (பரிபா.) (1, 2, 3-பிங்கல. ௪0௨௩.)
வண்ணமகள் — கோலஞ்செய்வாள். (சூ. நிக. உ ௬௩.)
வண்ணமாலை—வர்ணமாலை. அஃது அரிச்சுவடி.
வண்ணாத்தி — 1. பூநீறு. 2. வண்ணான் மனைவி (வழக்.)
வண்ணாத்திப்பூச்சி—ஓர் பூச்சி. (வழக்.)
வண்ணான்—வகாலி. (வழக்)
வண்ணிகன்—வர்ணிகன், எழுத்துக்காரன்.
வண்ணித்தல்—வர்ணித்தல். (சிந்தா.)
வண்மை—1. உண்மை. 2. கொடை. 3. புகழ். 4. வலிமை. 5. வளமை. 6. வாகை. (வைத்தியபரி.) (1, 2, 3, 4, 5-சூ. நிக. கக. ணகரவெ கள.)
வணக்கம்-1. கீழ்ப்படிதல். 2. தொழுதல். (1, 2-வழக்.)
வணக்கல்—வளைத்தல். (வழக்)
வணக்கு — 1. முதனிலைத்தொழிற்பெயர். 2. வழிபாடுசெய்தல் (சி. சி. உ: ௬௬.)
வணங்கல்-1. பணிதல். (சூ நிக. ௯: ௬௯.) 2. வளைதல். (பழமலையந்.) 'மெல்லவணங்'கென்னும் முதற்குறிப்புக் கவியிற்காண்க.)
வணங்காமுடியினன் — துரியோதனன். (சூ. நிக. உ: ௧௫.)
வணர்—1. நெறிப்பு (பரிபாடல்.) 2. வளைவு. (சூ. நிக அ: ௫.)
வணர்ந்து—வளைந்து. (பத்துப்பாட்.)
வணிகம்—வாணிகம் பார்.
வணிகரேண்துணம் — தனிமையாற்றல் முதலிபனவாம். (பிங்கல. எஎக)
வணிகன்—வாணிகன். (வழக்.)
வணிதம்—பலவூர்சூழ்ந்தவட்டம். (வழக்.)
வத்தகம்—1. வர்த்தகம். 2. வெட்பாலை. (வைத்தியபரி.)
வத்தகன்—வர்த்தகன், வியாபாரி. (வழக்.)
வத்தங்கி—ஓர் மரம் (வைத்தியபரி.)
வத்தம் —சோறு. (வைத்தியபரி.)
வத்தமம்—ஆமணக்கு. (வைத்தியபரி.)
வத்தமானம்—வர்த்தமானம், நிகழ்காலம். (வழக்.)
வத்தனை—வர்த்தனை. (வழக்)
வத்தாக்கு— } கொம்மட்டி. (வைத்
வத்தாலை— } தியபரி.)
வத்தி—1. இரத்தினத்தின்கீழ் பதிக்கும் தகடு. ஓர் குழூஉக்குறிபோலும். 2. பரிமளதிரவியங்களைக் கூட்டியரைத்து நீளமாகச்செய்த திரி. (வழக்)
வத்தித்தல்— வர்த்தித்தல், பெருகல். (வழக.)
வத்தியம்—மரணம்.
வத்திரசோதிநி—எலுமிச்சை. (வைத்தியபரி.)
வத்திரதாரு-செபபுளிச்சை.(வைத்தியபரி)
வத்திரம்—1 ஆடை. (சூ. நிக. எ: ௬௩.) 2. முகம. (சூ. நிக. உ: ௬௩.)
வத்திரி —தோல்வார்
வத்திரோணம் -பெருமரம்.(வைத்தியபரி)
வத்து-1. மது. (வைத்தியபரி) 2. வஸ்து, பொருள. (தர்க்காமிர்தம்.)
வத்துதாரணை — நவசாரணை பிறௌ ஈறு. (பிங்கல. ௪௩அ.)
வத்துநிச்சயம்— } பிரபஞ்சகாரணமாய
வத்துநிர்ணயம்- } கடவுளுண்டென் றும அவனிவனேயென்றுங் கண்ட முடிவு.
வத்துப்பு—கறியுப்பு. (வைத்தியபரி.)
வத்துபரிச்சேதம் — ஒருபொருளை இஃதாகும் இஃதன்றென்று பகுத்தறிகை.
வத்துவித்தியாபதி—சிற்பநூல் முப்பத்திரண்டிலொன்று. (பொருட்-நிக.)
வத்தூரம்—பொன்னூங்காணி. (வைத்தியபரி.)
வத்தேக்கு-1. கொம்மட்டி. 2. வத்தங்கிச் சாயமரம (வைததியபரி.)
வத்தை—ஒருவித மரத்தோணி. (வழக்.)
வதக்கம்—வாட்டம். (வழக்.)
வதக்கல்— } வாட்டல். (வழக்.)
வதக்குதல்— }
வதகம்—மரணம்.
வதங்கல்— } வாடுதல். (வழக்.)
வதங்குதல்— }
வதந்தி—வார்த்தை. (வழக்.)
வதம் — 1. கொலை. (வழக்.) 2. விரதம். (சிந்தா.)
வதரம்—இலந்தை. (வைத்தியபரி.)
வதரி—இலந்தை. (சூ. நிக. ௬: கஅ)
வதரியாச்சிரமம் — வடநாட்டிலுள்ள ஓர் விட்டுணுத்தலம். (உ-ம்.) "போவதரிதானுலும் போய்த்தொழுவோநெஞ்சமே,மாவதரியாச்சிரமத்து" (நூற்றெட்டுத்திருப்பதியந்.)

வதவல்—வாடினது. (வழக்.)
வதன்-கொலைசெய்வோன். வதம்-கொலை.
வதனம்—முகம். (ஞானாமிர்தம். எ.)
வதாங்கம்—நஞ்சு. (வைத்தியபரி.)
வதாலகம்—
வதாலம்— } ஓர் மீன்.
வதானியன் — வரையாதுகொடுப்போன். (வடமொழிவழக்.) வதானியம்-வள்ளற்றன்மை.
வதி—1. சேறு. (வழக்.) 2. வதஞ்செய்பவன். 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. வழி. (சூ. நிக. ൭: ௬௨.)
வதிதல்—தங்கல். (சூ. நிக. ௬: ௧௧.)
வதிரன்-செவிடன். (பிங்கல. ௯௯0) வெதிரன் எனவும் வரும்.
வதில்—பதில். (வழக்.)
வது-பெண். (வழக்.) வதுவரன்களை யாசீர்வதிக்கவேண்டு மென்பர்.
வதுகி—வைக்கோல். (வைத்தியபரி.)
வதுமரம்—முள்ளிப்பாலை.
வதுவடி—பாலை. (வைத்தியபரி.)
வதுவை—1. கலியாணம். (சூ. நிக. ௧: ௪.) 2. கலியாணஞ்செய்தமக்கள். 3. மணமாலை. (2, 3-பத்துப்பாட்.) 4. வாசம். (பிங்கல. ௨0௭௧.)
வதூ—பெண் (நன்னூ. மெய்யீற்றுப். ௯௯. உரை.)
வதூசரை—ஓர் நதி. (அபிதானகோ.)
வதை-கொலை. (இராமா. மிதிலைக்காட்சிப். ௧௨0.)
வதைத்தல்—கொல்லல். (பிங்கல. ௨௧௨௯.)
வந்தன்று—வந்தது. (ஐங்குறுநூ.)
வந்தனம் — 1. வணக்கம். 2. வந்தேம். (புறநா.)
வந்தனித்தல்—வந்தித்தல்.
வந்தனை—வணங்கல். (பிங்கல. ௧௯எ௯.)
வந்தி-1. தெரிநிலைவினைப்பகுதி. 2. மலடி. (சூ. நிக. ௨: ௬௯.)
வந்திகள்—1. கடிகைமாக்கள். (சூ. நிக. ௨: எ௪.) 2. வந்தியர்.
வந்திசின்—1. வந்தேன். (புறநா.) 2. வருவாயா. (ஐங்குறுநூ.)
வந்தித்தல் — 1. பங்கம்பாளை. 2. வணங்கல். (1-வைத்தியபரி.) (2-பிங்கல. ௧௯எ௯.) 3. வழிபாடுசெய்தல். (சி. சி. ௨: ௨௯. உரை.)
வந்தித்துநிற்போர்—பாணர். (சூ. நிக. ௨: ௯௪.)
வந்தியர் — 1. புகழ்வோர். 2. மலடிகள் (சூ. நிக. ௧௧: நகரவெ. எ.) 3 கடிகைமாக்களுமாம்.
வந்து—காற்று. (பிங்கல. ௨௯.)
வந்துறுங்கள்—வந்துறும், வரும். கள்—அசை. (சிந்தா.)
வந்தேன—1. வந்தானாக. 2. வா. (1, 2-ஐங்குறுநூ)
வநசந்தனம்—1. அகில். 2. தேவதாரம். (1, 2-வைத்தியபரி.)
வநசந்திரிகை—காட்டுமல்லிகை. (வைத்தியபரி.)
வநசீரம்—காட்டுச்சீரகம். (வைத்தியபரி.)
வநசை—இலக்குமி-நிகண்டில், அலர்மகளென்பர்.
வப்பிரம்—ஈயம். (வைத்தியபரி.)
வபநம்—1. சுக்கிலம். (வைத்தியபரி) 2. சௌளம. (திருவானைக்கா. கோச்செங். ௧௬௧.)
வபை—நிணம், இது; வயிற்றின்நாபிக்குள் வெண்டுகில்போன்றிருக்கும் யாகஞ்செய்வார் ஆட்டினில் இவ்வபையை யெடுத்துக்கொண்டு நெய்யிலிட்டுக் காய்ச்சி ஓமஞ்செய்வர். (திருவிளை. மாணிக்க. ௯௪.)
வம்-1 வா. (புறநா.) 2. வாருங்கள். (திருநூற்றந்.)
வம்பம்-சாலங்கபாடாணம். (வைத்தியபரி)
வம்பமாக்கள்—புதியமாக்கள். (சிலப்.)
வம்பல்—திசை. (பிங்கல. ௬௧.)
வம்பலர்—1. அயலவர். (சூ நிக. ௨: ௯௯) 2. புதியவர். (சூ. நிக. ௨: ௪0.) 3 வழிப்போவார். (புறநா.)
வம்பலன்—அயலான். (மணிமே.)
வம்பன்—துஷ்டன். (வழக்.)
வம்பி-1. கருவண்டு. 2. துட்டை. (வழக்.)
வம்பு — 1. உவமை (ஞானாமிர்தம்.) 2. கயிறு. (சிலப்.) 3 நிலையின்மை. 4. புதுமை. 5. முலைக்கச்சு. 6. வஞ்சனை. 7. வாசனை. 8. வீயபு. (வழக்.) 9. புதிய அழகென்பர் சிந்தாமணியில். (3, 4, 5, 6, 7-பிங்கல. ௪0௨௯.)
வம்புத்தனம்—நேரின்மை.
வம்மதி—வருவாயாக. (ஐங்குறுநூ.)
வம்மின்—வாரீர். (புறநா.)
வம்மென — 1. வாருமென்று. (பத்துப்பாட்.) 2. வாவென. (சிந்தா.)
வம்மே—வாருமின். (ஐங்குறுநூ.)
வம்மோ—வா. (ஐங்குறுநூ.)
வமநி—1. அட்டை 2. பருத்தி. (1, 2-வைத்தியபரி.)
வமிசம்-1. சந்ததி. 2 சுற்றம். (1,2-வழக்.)
வயக்கம்-சோதி. (உ-ம்.) "வயக்கமாண்டமுப்புரிசை யன்றிறுத்தவள்ளல்" (காஞ்சிப். சனற்குமார. ௯.)

வயக்குதல்—1. வசக்குதல். 2. வயங்கச் செய்தல். (1, 2-வழக்.)
வயதுண்டம் — கவிழ்தும்பை. (வைத்திய. மூ. அக.)
வயதுண்டலி — கவிழ்தும்பை. (வைத்திய பரி.)
வயங்கல் — 1. ஒளிசெய்தல். (பிங்கல. ககரு அ.) 2. நடத்தல்.
வயசு—வயது. (வழக்.)
வயணம்—வகை, (வழக்.)
வயத்தன்—வசமாயி நப்பவன். (வழக்.)
வயதரம்—கடுக்காய். (வைத்திய.மூ.அக.)
வயது — ஆயுள். (உ-ம்.) "நாலிருவயது நண்ணினுள்கௌரி" (திருவானை.கோச்செங். கருக.)
வயதேற்றி—திப்பிலி. (வைத்தியபரி.)
வயப்படல்— } வசப்படுதல். (வழக்.)
வயப்படுதல்- }
வயப்புலி— } சிங்கம்.(பிங்கல.உ௫0௧)
வயப்போத்து- } (சூ. நிக. ௩: உ.)
வயம்-1. கிராம்பு. (வைத்தியபரி.) 2. நீர். 3.பறவைப்பொது.(காஞ்சிப்.திருநெறிக்.கசு.) 4. வசம். 5. வலிமை. 6. வெற்றி. (பரிபாடல்.) (2, 5-பிங்கல. ௫0உஎ.)
வயமது—சீந்தில் (வைத்தியபரி.)
வயமம்—அத்தி. (வைத்தியபரி.)
வயமா—1. குதிரை. 2. சிங்கம். 3. புலி. 4. யானை. (1,2,3,4-சூ. நிக. கக: யகரவெ.எ.)
வயமான்—புலி (புறநா.)
வயல்—1. கழனி 2. வெளி. (1, 2-பிங்கல. ௫0உஅ.)
வயல்சூழ்சோலை—இளமரக்கா. (பிங்கல. உ0௫௫.)
வயல்நெட்டி—ஒருவகை நெட்டி. (வைத்தியபரி.) வயனெட்டியெனவும் வரும்.
வயல்மாதளை—ஒருவகை மாதளை. (வைத்தியபரி.) வயன்மாதளை எனவும் வரும்.
வயல்மெருகு—ஒருவகைமெருகன்கிழங்கு (வைத்தியபரி.) வயன்மெருகு எனவும் வரும்.
வயலை—ஓர்கொடி. (உ-ம்.) "வயலைப்பசுங் கொடியும்" (காஞ்சிப். நாட். க௪௪.)
வயவர்-1. படைத்தலைவர். (பத்துப்பாட்.) 2. வீரர். (மணிமே.)
வயவரி—புலிதொடக்கி. (பிங்கல. உ௪கக.)
வயவன்—1. காரிப்பிள்ளை. (பிங்கல. உ௩௪௫.) 2. தலைவன் 3. திண்ணியன். (சூ. நிக. உ: ௫0.) 4. வலியன். 5. வீரன். (2, 4, 5-பிங்கல. ௫0உக.)

வயவு — 1. இச்சை. (பரிபாடல்.) 2. வயாவு, வயாவென்பது ஈற்றயல்குறுகி உகரச் சாரியை பெற்றதென்பர். 3. வலி. (பதிற்றுப்.) 4. வேட்கைநோய். (மணிமே.)
வயவை—வழி. (சூ. நிக. ௫: கூஉ.)
வயளை—வயலை.
வயற்கள்ளி—பொரிப்பூண்டு. (வைத்தியபரி.)
வயற்கொடுக்கி — ஒருவகைக்கொடுக்கி. (வைத்தியபரி.)
வயற்கோவியன்—ஓர் பாம்பு. (வைத்தியபரி.)
வயற்சுள்ளி—பொரிப்பூண்டு. (மலையக.)
வயற்செம்பை—ஓர் செம்பை; செம்பை-சிற்றகத்தி. (மலையக.)
வயற்றுத்தி—ஓர் துத்தி. (வைத்தியபரி.)
வயனம்—வசனம். (திருவிளை. மாறியாடி. உஎ.)
வயா-1. ஆசை. 2. கருப்பம். 3. வருத்தம். 4. வேட்கைநோய். (மணிமே.) (1, 2, 3-பிங்கல. ௫0௩0.)
வயாஅம்—விரும்பும். (ஐங்குறுநூ.)
வயாமது—சீந்தில். (மலையக.)
வயாவு—வயா.
வயான்—காரிப்பிள்ளை. (பிங்கல. உ௩௪௫.)
வயானம்—பறவை. (சூ. நிக. ௩: கூஅ.)
வயிக்கிராந்தம்—ஓர் முதபாஷாணம். (வைத்தியபரி.)
வயிடூரியம்—நவமணியிலொன்று. (சிலப். க௪: ககஉ. உரை.)
வயிந்தவம்-வைந்தவம்: அது சுத்தமாயை. (சி. சி. க: உ௫. உரை.)
வயிர்—1. கொம்பு. (பிங்கல. கஉகூஅ.) 2. கொம்பென்னும்வாச்சியம். (பத்துப்பாட்.) 3. மூங்கில். (ஐங்குறுநூ.)
வயிரகாணி — பெருநெருஞ்சில். (வைத்தியபரி.)
வயிரம்—1. கூர்மை. 2. கோளகை. 3. சினம். 4. தண்டாயுதம் ( [illegible] ) 5 நவமணியிலொன்று 6. மாவயிரம் 7. வச்சிராயுதம். 8. வலி (1, 3 5, 6, 7-பிங்கல ௫0௩௧.) (2, 8-சிந்தா.)
வயிரவம்—பைரவம்
வயிரவாசி—1. வலம்புரி. 2. நந்தியாவட்டம். (1, 2-வைத்தியபரி.)
வயிரவல்லி—பிரண்டை. (வைத்தியபரி.)
வயிரவளை—நரிப்பயறு. (வைத்தியபரி.)
வயிரவன்—1. வைரவன். (சூ. நிக. ௪: உஎ.) 2 சிறுகீரை. (வைத்தியபரி.)

வயிரவி—பைரவி.

வயிரவூசி — மணிகளைத் துளையிடுமூசி. (நன்னூ பெயரிய. உ உரை.)

வயிரவேர் — சாயவேர். (வைத்தியபரி )

வயிராகம்-வைராக்கியம். (உ-ம்.) "ஊன்று ஞானமோடுயர்வயிராக நல்லொழுக்கம்" (பிரபு லிங்கலீ. கைலாச. சஈ.)

வயிராவி — ஓர் வைரவசமயவேடத்தன். (வழக்.) பாண்டிநாட்டிற்சிலர் உள்ளார்கள் அவர்கள் வயிராவிப்புலவரெனச் சிலவூர்களி லிருக்கிறார்கள்.

வயிரி—1. வல்லூறு 2. விரோதி. 3. வைர முள்ளவன். (1, 2, 3-வழக்.)

வயிரித்தல்— } வைரமாதல். (வழக்.)
வயிரிப்பு— }

வயிரியர்—1. கூத்தர். (சூ. நிக உ: கூஅ ) 2. பாணர். (பிங்கல. அகரு )

வயிரோசனி — சிவதை. (வைத்தியபரி )

வயிற்றுக்கிராந்தம் — குமுதபாஷாணம். (வைத்தியபரி.)

வயிற்றுவலி— }
வயிற்றுளைவு— } ஓர்விதநோய். (வழக்.)
வயிற்றெரிவு— }

வயிறு—உதரம (பிங்கல. கoகூ )

வயிறுவாய்த்தல் — பிரசவித்தலென்னுங் குறிப்புமொழி. (இராமா. ஆரணிய சடாயு காண். உரு.)

வயிநதேயன்-கருடன். (சூ. நிக. கூ: ருஉ.)

வயிலந்தி—உள்ளங்கால். (வைத்தியபரி )

வயின்—1. இடம். 2. ஏழாம்வேற்றுமை யுருபு. (நன்னூ. பெயரிய. சரு.) 3 முறை. (புறநா.) 4. வயிறு 5. வீடு. (1, 4, 5-சூ. நிக கக: யகரவெ. சு.)

வயேகடம்—மரமஞ்சள். (வைத்தியபரி.)

வயோதிகம்—விருத்தாப்பியம். (வழக்.)

வயோதிகர்—கிழவர். (வழக்.)

[illegible]வகவம்—ஈயம் (வைத்தியபரி )

வ[illegible]ம்—1. எருக்கலம்பால், 2 வருக்கம்.

வர்ச்சநீயம்—தள்ளத்தக்கது

வர்ச்சியம்—வருச்சியம். (வழக்.)

வர்ணகம்—1. சந்தனம். 2. திலகமரம். (1, 2-வைத்தியபரி.)

வர்ணம்—குங்குமம். (வைத்தியபரி.)

வர்ணவதி—மஞ்சள். (வைத்தியபரி.)

வர்ணி—பொன். (வைத்தியபரி.)

வர்ணியம்—உபமேயம். (விசாக. அணியி லக் கூ )

வர்த்தகம்—வருத்தகம், வியாபாரம்.

வர்த்தநம்—வருத்தநம்.

வர்த்தமானம்-1. சிற்றாமணக்கு. 2. நிகழ் காலம். (தர்க்காமிரு.)

வர்த்தனை—பெருகுகை. (வழக்.)

வர்த்தி—வத்தி.

வர்த்தித்தல்—தங்குதல், (மணிமே.)

வர்மம்—வன்மம். (வழக் )

வரகு—ஒரு தானியம். (சிலப். ஊர்காண் உகக. உரை )

வரகுணபாண்டியன் — ஓர் பாண்டியன். (அபிதானகோ )

வரங்கிடத்தல்—வரம்வேண்டிக்கிடத்தல். (மணிமே ) "வரங்கிடந்தான்றில்லையம் பல முன்றிலம்மாயவனே" எனத்திருக்கோவையா ரிலுங் கூறியதறிக.

வரட்சி-வரளுதல். சி-தொழிற்பெயர்விகுதி

வரட்கூனோடி—ஓர் செடி. (வைத்தியபரி ) இதை நிகண்டில் சமங்கையென்பர்.

வரடம்—1 அன்னம் 2. முலலை. (1, 2-வைத்தியபரி )

வரண்டகம் — உண்டை, சுவர் முதலிய வற்றிற்குரைப்பர் (உ-ம.) வரிற்கொள்க.

வரண்டம்-சாலே, தூண்டிறகயிறு முதலிய வற்றிற்குரைப்பர். (உ-ம்.) வரிற்கொள்க.

வரண்டாலு—ஆமணக்கு (வைத்தியபரி.)

வரண்டியம் — பேராமுட்டி. (வைத்திய பரி )

வரணம்—ஒட்டகம், சூழ்தல், பால், மதில் முதலியவற்றிற்குக்கூறுவர் உதாரணம் வரிற் கொள்க.

வரத்து—வருகை (வழக்.)

வரதம்—வரந்தருதலாகக் கையமைத்தல் (திருவா நான்மணிமா. கஶ ) இது வரதகம் எனவும் கூறுமென்பர்.

வரதன்—1. அரி (பிங்கல. கஙo ) 2. அருகன். (சூ நிக. க: ரு.) 3. வரந்தருமவன். (வழக்.)

வரதாரு —தேக்கமரம் (வைத்தியபரி.)

வரதுங்கபாண்டியன்— அதிவீரராமபாண்டியன் தமையன். இவனை வரதுங்கராம்பாண்டியன் எனவுங்கூறுவர் (பிரயோகத்திர. சிறப்பு பாயி.)

வரதை—வரந்தருபவள் (வழக் )

வரந்தருவான்-வில்லிபுத்தூராழ்வார் குமாரன். (பாரத. பாயிரத்திறகாண்க.)

வரநதி—கங்கை. (சூ. நிக க: கூஈ.)

வரப்பு—வரம்பு. (வழக்.)

வரப்புக்கடா—நண்டு. (வைத்தியபரி.)

வரப்புள்—வயல். (பிஙகல. ருஎக.)

வரபலம்—தென்னைமரம். (வைத்தியபரி.)

வரம் — 1. தேவசகை. அது, வேண்டும் பொருள்.(பத்துப்பாட்.) 2. நவங்தியினென்று. (பொருட்டொகை. நிக.) 3. மஞ்சள். (வைத்தியபரி.) 4. மேன்மை. (உ-ம.) "சுரநதிமுத லாவரநதிமூன்றும்" (திருவாரூர். நான்மணிமா. கஉ.) 5. ஏர் முதலியவற்றிற்குங் கூறு வர். (உ-ம்.) வரிற்கொள்க.

வரம்பருது—கங்கு. (பிங்கல. ருஎச.)

வரம்பிலாற்றலுடைமை— } கடவுளெண் வரம்பிலின்பமுடைமை— } குணத்தொ ன்று. (வள். கடவுள்வாழ்த். கூ. உரை.)

வரம்பு—1. அணை. (வழக்.) 2. எல்லை. (நன்னூ. விருத்தி. உரியிய உ0. உரை.) 3. ஒழுங்கு. 4. வயல்வரம்பு. (3, 4-வழக்.)

வரயோகம்—சுபயோகத்தொன்று. நந்தை யுடன்கூடினசதயம்,கார்த்திகை, திருவாதிரை, சித்திரை இவை வரயோகமாம். பிரதமை, சஷ்டி, ஏகாதசி யிம்மூன்றும் நந்தையாம். (விதான மாலை. குணகுணப். சு0.)

வரர்—தேவர். (பிங்கல. கஎஎ.)

வரருசி-பாணினிவியாகரணத்துக்கு வியாக் கியானஞ்செய்த முனிவர். (அபிதானகோ.)

வரல் —வருதல். (உ ம்.) வரனசைஇயின் னுமுளேன். (வள். )

வரலாற்றுவஞ்சி — ஓர்பிரபந்தம். இது, குலமுறை, பிறபபு, கீர்த்தி முதலியவற்றை வஞ்சிப்பாவாற்கூறுவது. இலக்கணவிளக்கப் பாட்டியலில். தனிநிலைச்செய்யுள் வகையினொ ன்றென்றார்.

வரவு — 1. வணக்கம். (பரிபாடல்.) 2. வருகை. உ-தொழிற பெயர்விகுதி. (நன்னூ. பதவியல். கக. உரை.)

வரவெதிர்ந்திருத்தல்—ஓர் துறை.(புறப். வெ. மாலை.)

வரளல்— } வாட்சி. (வழக்.)
வரளுதல்- }

வராரை — ஆரைக்கீரையினொருவகை.

வரற்கியம் — கோடைக்கிழங்கு. (வைத்தியபரி.)

வரன்—1. அயன். 2. அருகன். (சூ. நிக. க: க.) 3. கணவன். 4. சீவன் முத்தர்களிலொருவன். (கைவல்லியநவ. தத்துவவி. கல0.) 5. பாமன். 6. புத்தன். (சூ. நிக. க: கஎ.) (1, 3, 5-சூ. நிக. கக: சகரவெ..கரு.)

வரன்றல்—கொழித்தல். (பிங்கல.உசகூக.)

வரன்றி—அரித்து. (சிந்தா.)

வராக்கு—கொம்மட்டி. (வைத்தியபரி.)

வராககண்ணி—அசுவகந்தி. (தைலவ.)

வராககற்பம்—ஒருகற்பம். (அபிதானசிந்.)

வராகபுடம்— ஐம்பதெருவைத்தெரிக்கும் புடம். இது, வைத்தியர் வழக்கு.

வராகபுராணம்- பதினெண்புராணங்களி னென்று. (பொருட். நிக.)

வராகம்—1. நிலப்பனை. (வைத்தியபரி.) 2. பதினெண்புராணத் தொன்று. (பொருட். நிக.) 3. பன்றி. (பிங்கல. உகூ0உ.)

வராகன்—1. ஓர் நாணயம். (வழக்.) 2. வராகாவதாரமான பெருமான். (பிங்கல. கரு0.) 3. கூத்தன்குதம்பை. (வைத்தியபரி.)

வராகன்பூடு—கூத்தன்குதம்பை. (வைத்தியபரி.)

வராகனிடை ஒன்பதுபணவிடைகொண்ட நிறை. (வைத்தியசாரசங்.)

வராகாதநம் — காலுங்கையும் ஊன்றிக் கவிழ்ந்துநிற்பது. இவ்வாதனம், பொருட்டொகை நிகண்டிற்கூறவில்லை. வந்துழிக்காண்க.

வராகி—1. சத்தமாதருள்ஒருத்தி. (சூ. நிக. கஉ: கஎ ) 2. சிற்றரத்தை. 3. நிலப்பனை. 4. பன்றிமொத்தை. (2, 3, 4-வைத்தியபரி.)

வராகிமாலை — வராகியைப் பற்றித்துதிக்கும் பிரபந்தம்.

வராகிவேய்—பன்றிமுள். (வைத்தியபரி.)

வராங்ககம்—இலவங்கப்பட்டை. (வைத்தியபரி.)

வராங்கனை — 1. கூந்தற்பனை. 2. வரமுடையபெண்.

வராங்கி—மஞ்சள். (வைத்தியபரி.)

வராசனம்—சீனமுட்செவ்வந்தி.

வராட்டி—எரு. (வழக்.)

வராடகம்—1. கயிறு. 2. தாமரைக்காய். 3. பலகறை. (2-சூ. நிக. ச: கூ0.)

வராடம்- } பலகறை. (சூ. நிக. கூ: கஉ.)
வராடி }

வரால் ஒருவகைமீன்.(நாஞ்சிப்.நாட்.எஉ.)

வராலகம்— } இலவங்கம். (வைத்தியபரி.)
வராலம்— }

வராலி—பிரமி. (வைத்தியபரி.)

வராளம்—பாம்பு. (வைத்தியபரி )

வராளி—ஓரிராகம். (வழக்.)

வராணி—பாலை. (வைத்தியபரி.)

வரி—1. இசை. 2. இசைப்பாட்டு. 3. எழுத்து. 4 கடல். 5. கடன். 6. குடியிறை. 7. சந்தித்தெரு. 8. தெரிநிலைவினைப்பகுதி. 9. தேமல். 10. நிறம். 11. நீளம். (சூ. நிக. அ: கரு.) 12. நெல். 13. புள்ளி (ஐங்குறுநூ.) 14. புகர். (பத்துப்பாட்.) 15. வண்டு. (பிங்கல. உருஅஉ.) 16. விரல் முதலியவற்றினிரேகை. (வழக்.) (1, 2, 3, 4, 5, 6, 7, 9, 10-பிங்கல. ரு0கூஉ.)

வரிக்கடை-வண்டு. மறைசையந்தாதியில். (உ-ம்.) "வரிக்கடை" யென்னு முதற் குறிப்பையுடைய செய்யுளிற் காண்க.

வரிக்குப்பச்சை — நாகபபசசை. (வைத்தியபரி.)

வரிக்கும்-மீகாலஞ்செய்யும். (ஐங்குறுநூ.)

வரிக்கோரை ஒருவகைக்கோரை.(வழக்.)

வரிகரம்—பொரிகாரம். (வைத்தியபரி.)

வரிச்சுருள்-செவ்வட்டை.(வைத்தியபரி.)

வரிசந்தி—நாற்றெருக்கூடுமிடம். (பிங்கல கூசஅ.)

வரிசி—தூண்டில்.

வரிசை—1. ஒழுங்கு. (உ-ம்.) "வரிசைநீடுயர்மாளிகை" (திருவால. திருவிளை. சக.) 2. சிறப்பு. 3. தரம். 4. மேம்பாடு. 5. நற்சீர். 6. வெகுமானம் (திருவிளை. இந்திரன்முடிமேல்வளையறிந். ஙஎ.) (2, 3, 4-புறநா.)

வரிசைமகளிர்-விறலியர். (பதிற்றுப்பத்.)

வரிசையாளர்—கீழ்க்குடிகள். (பதிற்றுபத்.)

வரிட்டன் — சீவன்முத்தர்களிலொருவன். (கைவல்லிய. தத்துவவி. க00.)

வரித்தல்—1. எழுதுதல். (சூ. நிக. கூ: கஉ.) 2. கட்டல். (வழக்.) 3. நியமித்தல். (திருவிளை. இந்திரன்முடிமேல்வளை. உகூ.) 4. பூசுதல். (சூ. நிக. கடு.)

வரிதகம்-சொல்வகை நான்கினுமொன்று. அது, முப்பத்திரண்டியால்வருவது. (சிலப்.)

வரிதல்—1. எழுதுதல். (பிங்கல. உகஉச) 2. கட்டுதல். (வழக்.)

வரிப்ப—மீகாலஞ்செய்ய. (ஐங்குறுநூ.)

வரிப்பிரோத்தம்—சததபபை.(மலையக.)

வரிப்புறம்—அணில். (சூ. நிக. ங: உக.)

வரியரிசி—சிரகம். (வைத்தியபரி)

வரியான் — சீவன் முத்தர்களிலொருவன். (கைவல்லிய. தத்துவவிளக். க00.)

வரியோட்டி- } ஒருவகை மீன் ஒரு குழூஉக்குறி.
வரியோரா— }

வரிவரி — தண்ணீர்விட்டான் கிழங்கு. (தைலவ.)

வரிவரிமணலி—கற்றாழை. (மலையக.)

வரிவநம்—தில்லைமரம். (மலையக.)

வரிவயம்—புலி (புறநா.)

வருக்கக்கோவை —ஓர் பிரபந்தம. (பொருட். நிக.)

வருக்கம்-1. இனம். 2. ஒழுங்கு. 3. குலம். 4 .. (1, 2, 3, 4-வழக்.)

வருக்கமாலை-ஓர்பிரபந்தம்.(பொருட்.நிக.)

வருக்கமோனை—அடிகள்தோறும் வருக்கவெழுத்துக்கள் மோனையாய்வரத் தொடுப்பது (யாப். காரி. ஒழியியல். கூ.)

வருக்கவெதுகை-அடிகள்தோறும்வருக்கவெழுத்துக்கள எதுகையாய்வரத்தொடுப்பது. (யாப் காரி. ஒழியியல் கூ.)

வருக்து —கஞ்சி. (வைத்தியபரி.)

வருக்கை—பலா. (சூ. நிக. ச: கக.)

வருகம்—1. இலை. 2. பரிவாரம் 3. மயிற்றோகை.

வருகாலம்—எதிர்காலம். (வழக்.)

வருகை —வரவு. (வழக்.)

வருச்சித்தல்- } தள்ளப்படுதல். (வழக்.)
வருச்சியம்— }

வருட்டம்—வேம்பு. (வைத்தியபரி.)

வருட்டல்— } வற்புறுத்தல். (சூ. நிக. கூ: கூ 6.)
வருடுதல்- }

வருடகம்—முடக்கொத்தான். (வைத்தியபரி.)

வருடபுட்பம்—தாழம்பூ. (தைலவ.)

வருடம்—1. ஆண்டு. (சூ. நிக. க: அஅ.) 2. பாரதவருடமுதலிய வருடம். 3 மழை. (சூ. நிக. க: அக.)

வருடல்— } தடவல். (சூ. நிக. கூ: ஙஉ)
வருடுதல்- }

வருடை—1. ஆடு. (சூ. நிக. ங: கங.) 2. எண்காற்புள். (பிங்கல. உஙஉஎ.) 3. மேடம். (சூ. நிக. ங: கஅ.)

வருணகம்—1. சந்தனம். 2 திலகமரம். (வைத்தியபரி.)

வருணசிவாசாரியர் — சைவசித்தாந்தபத்ததி செய்தவர்களிலொருவர். (அபிதானசிந்.)

வருணம்—1. அழகு. 2. குலம். 3. நிறம். (சூ. நிக. அ: உகூ.) 4. நீர். 5. பொன்முதலிய வற்றிற்குங்கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க. (1, 2, 4-பிங்கல. ச0ஙஅ.)

வருணவதி—மஞ்சள். (வைத்தியபரி.)

வருணவிந்து—முத்துச்சிப்பி. (வைத்தியபரி.)

வருணன்—1. துவாதசாதித்தரிலொருவன். (பொருட். நிக.) 2. மேற்றிசைப்பாலன் (சூ. நிக. கஉ: எக.)

வருணாள்—சதயம். (சூ. நிக. க: எஎ.)

வருணனை — வருணிப்பு. (தண்டியலங். பொதுவணி. எ.)

வருணி—பொன். (வைத்தியபரி.)

வருணித்தல்—வருணனை.

வருத்தநம்—1. தெழில். 2. பெருகுகை. (1, 2-வழக்.) இன்னும் பலபொருள் கூறுவர்.

வருத்தம்—துன்பம். (வழக்.)
வருத்தல்— } துன்புறுத்தல். (வழக்.)
வருத்துதல்— }
வருதல் — 1. அவதரித்தல். (பரிபாடல்.) 2. வளர்தல். (திருவாரூர் நான்மணி. கஉ.)
வருதி—வருவாய். (புறநா.)
வருதியர்—வருக (பத்துப்பாட்.)
வருதும்—வருவோம். (ஐங்குறு.)
வருந்தல்— } துன்புறல். (வழக்.)
வருந்துதல்— }
வருந்துரு—கோங்கு. (வைத்தியபரி.)
வருநர்—விருந்தினர். (புறநா.)
வருபுனல்—யாறு. (வழக்.) (புறநா.)
வருமானம்—வரவுப்பொருள். (வழக்.)
வருவல்—வருவேன். (புறநா.)
வருவாய்—வரும்படி. (ஐங்குறுநூ.)
வருவித்தல்—வரச்செய்தல். (வழக்.)
வருதம்—1. இருப்பிடம. 2. கவசம்.
வருதிநி-படை. (பாரத.கக-ஆம்போர்.等௫.)
வரேண்யம்—குங்குமம். (வைத்தியபரி.)
வரை—1. அளவு. 2. இடம் 3. எல்லை. (புறநா.) 4. எழுத்து. 5. கல். 6. சிகரம். 7. பக்கமலை. (பத்துப்பா.) 8. பெருமலை 9. மலை. 10. மூங்கில். 11. வரைவு. 12. விரலிறை. (1, 9, 10, 11, 12-பிங்கல.) (2, 5, 6-பரிபாடல்.)
வரைக்குடிலம்-வங்கக்கல்.(வைத்தியபரி.)
வரைதல்—எழுதுதல். (பிங்கல. உகஉ௪) 2. கொள்ளல். 3. நீக்கல். 4. விவாகஞ்செய்தல். வரைதல்வேட்கை. (நம்பியக.) (2, 3-சூ. நிக. கக: ககரவெ. கள.)
வரைதி—கூறுபடுப்பை (புறநா.)
வரைந்த—எல்லையிட்ட. (பத்துபபாட்.)
வரைப்பு—1. எல்லை. (சூ நிக அ: கக.) 2. குளம். 3. மதில். (2, 3-பத்துப்பாட்.)
வரைபகவெறிந்தோன்-கந்தன். (சூ. நிக. க: உ௬.)
வரையரமகளிர்– மலையில்வாழுந்தெய்வப் பெண்கள். நம்பியகப்பொருளில் இரவுவரல் விலக்கலிற் காண்க.
வரையறுத்தல் — மதித்தல், (பிங்கல, களஎஎ.) எல்லைப்படுத்தலுமாம்.
வரையறை—1. அளவு. 2. எல்லை.(வழக்.)
வரையாடு—மலையாடு. (வழக்.)
வரையாமை—நியதியில்லாமை (மணிமே.)
வரையர்ள்—நியதியில்லான். (மணிமே)
வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல்—அகப்பொருட்டுறையினொன்று.
வரைவு—வரைதல்.
வரைவுமலிவு — அகப்பொருட்டுறையினொன்று.
வல்—1. சூதாடுகருவி. 2. வலி. 3. விரைவு. (சூ. நிக. கக. லகரவெ. க௦.)
வல்கம்—பட்டை. (தைலவ.)
வல்கி—வீணை. வல்லகி என்றுங் கூறுவர்.
வல்கிதம் — குதிரையைங்கதியினொன்று. (சிந்தா. காந்தருவதத். உகஉ-கவி உரையில் வற்கிதமென்று கூறியிருக்கிறார்.) அவர்கூறிய ஐங்கதியாவன—“விக்கிதம் வற்கிதம்வெல்லுமுபகண்டம், மத்திமஞ் சாரியோ டைந்து. நிகண்டில் இவ்வாறுகூறாது வேறுகூறுவர்.
வல்சி—1. அரிசி.(திருவிளை. குண்டோதரனுக். கடு.) 2. உணவு. 3. சோறு. (2, 3-பத்துப்பாட்.)
வல்லடி—வல்வந்தம். (வழக்.)
வல்லணங்கு—காளி. (சூ. நிக. க: ௬அ.)
வல்லதம்—கொலை.
வல்லடம்—வல்லமை. (வழக்.)
வல்லபன்—வல்லோன். (வழக்.)
வல்லபாசாரியார்-வேதாந்தசூத்திரத்திற்கு வியாக்கியானஞ்செய்தவர். (அபிதானகோ.)
வல்லபை — விநாயகருக் கோர் மனைவி. (காஞ்சிப். அநேகதங். ௬, க௦, கக.)
வல்லம்—1. ஓர் ஊர். (வழக்.) 2. தொண்டைநாட்டில் ஓர் சிவதலம். (தேவார. திருவல்லப்பதிகம். க.) 3. வாழை (வைத்தியபரி.)
வல்லமை—வல்லபம்.
வல்லரி—1. கொடி. 2. தளிர். (சூ. நிக. ௬: ௬௭.) 3. பசுங்காய். 4. பூங்கொத்து. (1, 3, 4-வைத்தியபரி.)
வல்லவன்—1. கணவன் (சூ நிக. உ: எஅ.) 2. வல்லான் (வழக்)
வல்லவி—1. காயகி. (சூ. நிக. உ: எ௬.) 2. வல்லமையாள். (வழக்.)
வல்லா-வல்லமையில்லாதன. (ஐங்குறுநூ.)
வல்லாங்கு—சதுரப்பாடு. (புறநா.)
வல்லாண்முல்லை—ஒரு வீரனுடைய வீட்டையும்,ஊரையும் இயல்பினையுஞ்சொல்லி யவனுண்மைத்தன்மையை நன்மைபெருகச்சொல்லுதல். (புறநா.)
வல்லாதா-சேங்கொட்டை.(வைத்தியபரி.)
வல்லாதீமே — வல்லமையில்லாயாயிரு. (ஐங்குறுநூ.)
வல்லாய்-வல்லமையில்லாய (ஐங்குறுநூ)
வல்லார்—1. மாட்டாதார். சூ நிக. உ: ௬௬.) 2. வன்மையையுடையார். (வழக்.) வன்மையிலாரெனில். ஆ - எதிர்மறைவிகுதிபுணர்ந்து கெட்டது.

வல்லாரை—1. ஓர் பூடு. (வைத்தியபரி.) 2. கேட்டைநாள். (சூ. நிக. க: எடு.)

வல்லாளன்-1. கொங்கணதேசத்துஅரசன் என்றும் விசயநகரத்து அரசன் என்றுங்கூறு வர். (அபிதானசிந்.) 2. வன்மையுள்ளவன். (வழக்.) 3. விநாயகபத்தரிலொருவன். விநாயக புராணம் வல்லாளன் முத்தியடைந்தபடலத் திற்காண்க.

வல்லாறு—வல்லவண்ணம். (ஐங்குறுநூ.)

வல்லான்—வல்லவன். (பதிற்றுப்பத்.)

வல்லி-1. அளவு. 2. இடைச்சேரி. 3. உப நிடதம்.(பொருட்டொகை-நி.) 4. கால்விலங்கு. 5. கொடிமருந்து. 6. நீங்கல். (சூ. நிக. க: சரு.) 7. படர்கொடி. 8. பலாசு. 9. பிரிதல். (பிங்கல. கககஅ.) 10. முருக்கு. (மலையக.) 11. வள் ளிக்கொடி. (1, 2, 4, 7-சூ. நிக. கக: லகரவெ. அ.) (5, 8, 11-வைத்தியபரி.)

வல்லிக்கயிறு—அரைஞாண். (சிந்தா.)

வல்லிகம்—1. கொடி. 2. மிளகு. (1, 2-வைத்தியபரி.)

வல்லிகை—காதணி. (சூ. நிக. எ: உரு.)

வல்லிசம்—மிளகு. (தைலவ.) வல்லீசம் என்றுங் கூறுவர்.

வல்லிசாதகம் — கற்பகத்திற்படர்கொடி. (வைத்தியபரி.)

வல்லிசூரணை புளிவசளை (வைத்தியபரி.)

வல்லிசை—1. உச்சவிசை. (சூ. நிக. கo: சo.) 2. பாம்பு. (வைத்தியபரி.)

வல்லியம்-1. இடையரூர்.(பிங்கல. கூசஅ.) 2. செவ்வல்லி. 3. புலி. (சூ. நிக. ரு: ரு.) 4. மஞ்சள். (2, 4-வைத்தியபரி.)

வல்லியை—அழுக்கிராக்கிழங்கு.(தைலவ.)

வல்லிவன்னி—சித்திரமூலம். (தைலவ.)

வல்லினம்—வல்லெழுத்து. (நன்னூ.எழுத் திய. கரு.)

வல்லினமோனை—எல்லாவடிகளின் முதற் கண்ணும் வல்லினவெழுத்துக்கள்வருவது. (யாப் காரி. ஒழிபியல். கூ. உரை.)

வல்லினவெதுகை — எல்லாவடிகளின் முதற்சீர்க்கண்ணும் வல்லினவெழுத்துகளே தொகையாய்வருவது. (யாப். காரி. ஒழிபியல். கூ. உரை.)

வல்லுதல்—வன்மையுடைத்தாதல். (வழக்.)

வல்லுநர்—வல்லார். (சூ. நிக. உ: சகூ.)

வல்லுநையோ—வல்லாயோ (ஐங்குறுநூ.)

வல்லுரம் — காடு, மணல், வயல் முதலிய வற்றிற்குரைப்பார். (உ-ம்.) வரிற்கொள்க.

வல்லுவள்—வல்லாள். (ஐங்குறுநூ.)

வல்லுவை—வல்லாய். (ஐங்குறுநூ.)

வல்லுளி—பன்றி. (சூ. நிக. ரு: கக)

வல்லூகம்—1. ஆண்குரங்கு. 2. கரடி. (1, 2-வைத்தியபரி.)

வல்லூரம்—பாழ்நிலம்.

வல்லூறு — இராஜாளியென்னும்பறவை. இது பஞ்சபக்ஷிகளிளொன்று.(சூ நிக.கஉ:ரூஉ.)

வல்லெனல்—அநுகரணவோசை.(சூ.நிக. கo: சஅ.)

வல்லை—1. கடுப்பு. (சூ. நிக. க: ருக) 2. காலவிரைவு.. (சூ. நிக க: அக.) 3. குறுங்காடு. (வைத்தியபரி) 4. புன்முருக்கு. 5. முருக்கு. 6. பெருங்காடு. (சூ. நிக. ச: டுரு.) 7. வட்டம். (சூ. நிக. அ: உ.) 8 வலிமை. (சூ. நிக. கக: லகரவெ. கஎ.) 9. வன்மையையுடையாய். (புறநா.)

வல்லையம்—ஓர் ஆயுதம். (வழக்.)

வல்வேலம்—வன்மையில்வேலம். (புறநா.)

வல்லோரொழிப்பு—ஓலங்காரம். இது, பிறரைய முற்றுவினவிய தஞ்சொல்லி னுண் மைப்பொருளை வல்லோர் அச்சொல்லுக்கு மற் ொருதாற்பரியத்தைக்கற்பித்து மறுத்தல். (விசாகப. அணியிலக். எ. பக்கம்.)

வல்லோன்—வல்லான். (சூ. நிக. உ: சகூ.)

வல்வாலோட்டி—ஓர் முட்செடி. (வைத் தியபரி.)

வல்விலங்கு—யானை. (பிங்கல. உசகஉ.)

வல்விலோரி – கடையெழுவள்ளலிலொரு வன். (சூ. நிக. உ: உச.) இவனை ஓரியெனவுங் கூறுவர்.

வல்வினைவரிசி-பொரி, அவல் முதலியன (சிந்தா.)

வலக்காரம்—1. பொய். (சூ. நிக. கo: கூ.) 2. விரகு, உபாயம். (உ-ம்.) "சிறுவலக்காரங் கள்செய்தவெல்லாம்"(திருககோவை. உஉஎ.)

வலக்கும்—சூழும். (புறநா.)

வலங்கமர்—ஓர்சாதியார். வழக்குண்டுபோ லும்.

வலங்கை—1. வலக்கை. 2. வலப்புறம். (1, 2-வழக்.)

வலங்கொள்ளல் — 1. வலம்வருதல். 2. வெற்றியடைதல். (1, 2-வழக்.)

வலசாரி-வலமாய்ச்சுற்றிப்போதல்.(வழக்.)

வலசை—கூட்டம். (வழக்.)

வலஞ்சுழி—திருவலஞ்சுழியென்னுஞ் சிவ தலம். இது சுவாமிமலைக்குச்சமீபமாயுள்ளது.

வலத்தல் — 1. கட்டுதல். (பத்துப்பாட்.) 2 சூழ்தல். (சிந்தா.) 3. சொல்லல். 4. முடை தல். (சூ. நிக. கூ: உஅ.) 5. வலமாதல். (வழக்.)

வலந்த—1. கட்டின. (புறப்பொ. வெ) 2. சூழ்ந்த (புறநா)
வலந்து—கொடுத்து (பரிபாடல்.)
வலந்தது—கூறியது. (சிந்தா)
வலந்தம்—வளைவு.
வலந்திரி—ஓர் கொடி
வலம் 1. ஆணை. (பரிபாடல்.) 2. இடம். (சூ நிக. ரு: சுடு) 3 ஏழனுருபு. (நன்னூ. பெயரிய. சடு) 4 வலப்பக்கம் (வழக்.) 5. வலி (புறநா) 6. வெற்றி (சூ நிக. அ: ரூஉ.)
வலம்புரி—1. ஓர் மரம். 2. சங்கு வலம்புரியாயிருப்பது. 3. நந்தியாவர்த்தம். 4. வலம்புரி வடிவாகச்செய்ததலைக்கோலம்.(பத்துப்பாட்) (1, 2, 3-சூ நிக. கக: லகரவெ. கஉ)
வலம்புரிக்காய்—ஒருவகை மருந்துக்காய். (வைத்தியபரி)
வலம்புரிப்புல் — ஒருவகைப்புல் (வைத்தியபரி.)
வலம்புரிவிநாயகர் — காஞ்சியிலிருக்கும் ஓர் விநாயகர் காஞ்சிப்புராணததிற்காண்க
வலயம்—1 கடல். (பிங்கல. ருஅரு) 2. நீர்நிலை. (பிங்கல. ரூ0௭.) 3. பாத்தி. (சிலப்) 4. வட்டம். (சூ. நிக. அ: உ.) 5. வளையல். (பெரியபு. திருநாவுக்கரசுநா. க.) 5. வாகுவலயம்.
வலவன்—1. சமர்த்தன். (வழக்) 2. திருமால். 3. தேர்ப்பாகன். 4. வெற்றியாளன். (2, 3, 4-சூ. நிக கக: லகரவெ. க.)
வலவா—கட்டாத. (பத்துப்பாட்.)
வலவை—1. இடாகினி. (பிங்கல. கஉக.) 2. காளி. (பிங்கல. கககு) 3. காளியேவற்பெண். 4. நாணிலி. 5. வல்லபம். (4, 5-சிலப்.) 6. வல்லவள். (வழக்.) 7. வல்லோன். 8. வெற்றியையுடையை. (சிந்தா.) (3, 7-சூ. நிக. கக: லகரவெ கரு.)
வலன்—1. ஓரசுரன். இவனுடம்பு நவமணியாயினதென்பர். (திருவிளை மாணிக்கம்விற்றபடலம். கஅ.) 2. வல்லபன் 3 வலப்பக்கம். 4. வலிமை. 5. வெற்றி. (சூ. நிக. அ: ரூஉ.) 2, 3, 4-வழக்.)
வலாகம்—கொக்கு. (சூ. நிக. ரு: கரு.)
வலாகை—கொக்கு.
வலாகம—1. குயில். 2. தவளை. (1, 2-வைத்தியபரி.)
வலாத்காரம்—வலாற்காரம். (வழக்.)
வலாரி—இந்திரன், வலனென்னுமசுரனை வென்றவன். (திருவிளை. இந்திரன்பழிதீர்த். ருஅ.)

வலி-அகங்காரம். (பரிபாடல்) 2 ஓரலங்காரம். அது, தொகைச்சொற்றொடர் புண்டாகாதொப்பது. (தண்டி. பொதுவணி உரு) 3. ஓர் ...ய (வ...) 4 தெரிநிலை...பகுதி 5. நறுவிலிமரம். (வைத்தியபரி) 6. பற்றிரும்பு. (பிங்கல. கரு0உ) 7. வன்மை. (பிங்கல. கஎரு0.) பிங்கலத்தில், ஒலி. கபடம். வலியோன் இம்மூன்றிற்குங் கூறுவர்.
வலிக்கட்டு — வீணையினோருறுப்பு. அதற்குத் திவவென்றுபெயர். (சூ. நிக. க0: சரு)
வலிச்சரற்கோடி—ஓர் கொடி (வைத்தியபரி.)
வலிசம்—வளிசம், தூண்டில்.
வலித்த—கருதிச்செய்யப்பட்ட. (புறநா.)
வலித்தது—துணிந்தது. (சிந்தா.)
வலித்தல்—1. இழுத்தல. 2. உடன்படல். (சூ. நிக ௬: ருக.) 3. நெருக்குதல். 4. தோணி தாண்டல். 5. நிச்சயித்தல். 6 நினைத்தல் (சூ. நிக. அ: ருகு) 7. பேசல் 8. மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்கல். (நன்னூ. உயிரீற். ரு.) 9. வலியுண்டாதல். 10. வளைத்தல். (சூ நிக. கூ: உரு.) (3, 7-பிங்கல. ச0ருக)
வலித்திடல்-சொல்லல். (சூ. நிக. ச0: ரு.)
வலிதம்—1 அசைவு. 2. சூழ்வு.
வலிதல்-1. தகைல். 2. துணிதல். 3. வலிந்துகோடல். (வழக்.)
வலிது—வலியது. (வழக்)
வலிந்துகோடல் — அருமையிற்கருத்துக்கொள்ளல்.(நன்னூ. உருபுபுணரி. கஅ. உரை.)
வலிப்பு-1. இழுப்பு. 2. வலி. (1, 2-வழக்.)
வலிப்புறீஇ—வற்புறுத்தி. (சிந்தா.)
வலிமாந்தம்-மாந்தம் எட்டினொன்று. பொருட்டொகை ங்க.)
வலிமினம்-துணிவீர். அம்-அசை.(சிந்தா.)
வலிமுகம்—குரங்கு. (பிங்கல. உரு0சு.)
வலிமை—வன்மை. (வழக்.)
வலிய-தாளுகை. (பெரியபு. தடுத்தாட். ருஅ.)
வலியறிதல் — நால்வகை வலிமையையும் அளந்தறிதல்-நால்வகையாவன:-வினைவலி, தன்வலி, மாற்றான்வலி, துணைவலி. (வள். சஅ. அதிகாரம்.)
வலியன்— / வலியான்— } 1. கரிக்குருவி. (திருவிளை. கரிக்குருவிக். உக.) நிகண்டில், வலியான் என்பது வேறுபறவையென்பர். 2. வலிமையுடையான். (வழக்.)
வலியுறுக்கும்—இறுகப்பிடிக்கும்.(புறநா.)
வலியுறுத்தல் — உறுதிப்படுத்தல் சிவஞானபோதம. க-ஆம் சூத்திரம். உ-ஆம். அதிகரணம் முதலாவதுவெண்பாவுரையிற்காண்க.

வலிவலம் — ஒரு சிவதலம். திருஞானசம்பந்த. தேவாரத்திற் காண்க.
வலீநகம்—தாழை. (வைத்தியபரி.)
வலீநம்—தேன். (வைத்தியபரி.)
வலு — 1. பலம். 2. பற்று. (1, 2-வழக்.) கொசுகுமுதலியவற்றுக்குங்கூறுவர். (உ - ம்.) வரிற்கொள்க.
வலுத்தல்— } பலப்படுதல். (வழக்.)
வலுப்பு— }
வலுவந்தம்—வலாற்காரம். (வழக்.
வலூகம்—தாமரைக்கிழங்கு. வைத்தியபரி.
வலை—1. மீன்முதலியபிடிக்குங்கருவி. (சூ. நிக. எ: ருக.) 2. யாகபத்தினிகள்நெற்றியிலணிந்துகொள்வது. (புறநா )
வலைக்கயிறு—சாலம். (பிங்கல. கருகக.)
வலைக்குணுக்கு-வலையைத்தாழச் செய்யும் உருண்டை (ஒரு குழூஉக்குறி.)
வலைகாரன்—வலையன். (வழக்.)
வலைச்சி—நெய்தநிலப்பெண். (வழக்.)
வலைச்சேரி—நெய்தநிலத்தார். (அமுதாம்பிகைப்பிள்ளைத்தமிழ் அவையடக்கத்திலறிக.)
வலைஞர் — நெய்தநிலமாக்கள் (பிங்கல சுOO.)
வலையம்—வலயம்.
வலையர்—வலைஞர். (வழக்.)
வலைவர்-வலையையுடையவர். (ஐங்குறுநூ.)
வவக்கானி-யானையிலத்தி. (வைத்தியபரி.)
வழக்கம்-தொன்றுதொட்டுநடைபெறுதல். (வழக.)
வழக்கறிதல்—உலகநடையையறிதல். (நன்னூ. பொதுப். சக.)
வழக்காட்டு—வடல். (மணிமே.)
வழக்காடுதல்- } வழக்குச்செய்தல்.
வழக்கிடுதல்- } (வழக்.)
வழக்கு—1. அறப்பால் மூன்றனுளொன்று; அது, ஒருபொருளைத் தனித்தனியே யெனதெனதென்றிருபபார் அதிகாரணமாகத் தம்முண்மாறுபட்டடப்பொருண்மேற் செல்வது. (வள். உரைப்பாயிரம்.) 2. இயங்குதல் (புறப்பொ. வெ.) 3. வழக்கம். (வழக் )
வழக்கோரம் — ஒருபக்கமான வழக்கு. (வழக்.)
வழகம்—பவளம். (வைத்தியபரி.)
வழங்க—அசைய. (புறநா.)
வழங்கல்— } 1. ஆட்சிபண்ணல். (6 டக்.)
வழங்குதல்— } 2. ஈகை. 3. உலாவல். (2,3-(பிங்கல. சOசO.) 4. சொல்லல். (பிங்கல. உOOக ). 5. நடத்தல். (சூ. க்க. க: கஎ.)
வழங்குநர்—கொடுப்பவர். (பத்துப்பாட்.)
வழங்கும்—இயங்கும். (புறநா.)
வழட்டுதல்—வழுந்துதல்.
வழப்பம்—வழக்கம். (வழக்.)
வழலுதல்—வழுந்தல்.
வழலை—1. ஓர் பாம்பு. (வழக். 2. சவுக்காரம். 3. முப்பூ. (2, 3-வைத்தியபரி.)
வழலையுப்பு-சவுக்காரவுப்பு. (வைத்தியபரி)
வழலைரசம்—சுத்தரசம். (வைத்தியபரி.)
வழாநிலை - திணை பா லிடம் பொழுது வினு இறை மரபு ஆகியவிவைகள் வழுவாதுவழங்குவன (நன்னூ. பொதுவிய. கூசு. உரை.)
வழாஅது—பிழையாமல். (புறநா.)
வழாஅல்—வழுவுதல்
வழாறு—நிறைபுனல். (சூ. நிக. டு: உசு.)
வழி — 1. இடம். 2 ஏழனுருபு. (நன்னூ. பெயரிய சடு.) 3. ஏவல், வழியென்னேவலென்க. 4. ஒழுக்கம். 5. திரட்சி. 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. பழமை. 8. பின் 9 மக்கட்பன்மை. 10. மகன். 11. மரபு. (சூ. நிக. கக. ழகரவெ. சு.) 12. மார்க்கம். (வழக்.) 13. முறைமை. (பிங்கல. உஉOசு.) 14. வழிபாடு. (புறநா. கஎ.) (1, 4, 5, 7, 8, 9. 10-பிங்கல. சOசக.)
வழிகீகுதல்—வழித்தெடுத்தல். (வழக்.)
வழிக்கொள்ளுதல்- பிரயாணஞ்செய்தல். (திருவிளை. விறகுவிற்ற. சஅ.)
வழிகட்டுதல்—வழிமறிதல். (வழக்.)
வழிகாட்டி—ஒன்றைமுதலிற் செய்துகாட்டினவன் (வழக்.)
வழிச்செல்வோன் — பதிகன். (சூ. நிக. உ: சO.)
வழித்தடை—சகுனப்பிழை. (வழக்.)
வழித்தல்—வழிக்குதல்.
வழித்தெய்வம் — மரபிற்குரியதெய்வம். (சூ. நிக. பாயிர டு.)
வழித்தோன்றல்—மகன். (சூ. நிக. கக: ரகரவெ. கஉ.)
வழிதல்—வடிதல். (வழக்.)
வழிநூல்—நூன்மூன்றனு ளொன்று. (நன்னூ. பொதுப். எ.).
வழிப்படுத்தல்— } உட்படுத்தல், ஒழுங்
வழிப்படுத்துதல்- } காக்கலுமாம் (வழக்.)
வழிப்படுதல்—வழியொழுகல். (நீதிநெறிவிளக்கம். சஅ.)
வழிப்பறித்தல் — ஆறலைத்தல். (சூ. நிக. கூ: உடு.)
வழிபடல்— } 1. வழிபாடுசெய்தல். (திரு
வழிபடுதல்- } விளை. வேதத்துக்குப். க.) 2. வணக்கமுமாம்.

வழிபடுவோர் — வழிபட்டு நடப்போர். (புறநா.)
வழிபாடு-1. வழிபடல்.(வழக்.) 2. வணக்க முமாம.
வழிபாடுமறுத்தல்- அகப்பொருட்டுறையி ஞென்று. (நயபியகப். களவியல். இயற்கைப புணர்ச்சி. கக.)
வழிமுரண்—ஓரடிக்கண்ணுஞ் சீர்கள் ஒன் றற்கொன்று மறுதலைப்படவருவன. (யாப். காரி. ஒழிபிய. கூ. உரை.)
வழிமொழிய—வழிபாடுகூற. (புறநா.)
வழிமோனை — ஓர் மோனை. (யாப். காரி. ஒழிபிய கூ. உரை.)
வழியல்—வழித்தெடுத்தது (வழக்.)
வழியுணவு — தோட்கோப்பு (பிங்கல. ககoஎ.)
வழியுரைப்போர்—தூதர்.(சூ நிக.உ:சக.)
வழியெதுகை—ஓரடிக்கண்ணுமுள்ள சீர் கள் மறைய ஒன்றற்கொன்று எதுகையாய் வருவன. (யாப். காரிகை. ஒழிபிய. கூ. உரை)
வழிவழி—மேன்மேலும் (ஐங்குறுநூ.)
வழு—1. குற்றம். (சூ. நிக. கஉ: கஉஅ.) 2. திணைபாலிடமுதலியன வழுவிவருவது. (நன் னூ. பொதுவிய. உச.) 3. தெரிநிலைவினைப் பகுதி. 4. பாதகம். (புறநா.)
வழுக்கல்—1. அடித்தல். (சூ. நிக. கூ: ருo.) 2. வழுக்குதல். (வழக.)
வழுக்காய்—இளங்காய். (வைத்தியபரி.)
வழுக்கு—1. தவறு. (சூ. நிக. அ: கூக.) 2. தெரிநிலைவினைபபகுதி. 3. நிணவிசேடம.(ஐங் குறுநூ.) 4. வழும்பு (சூ. நிக. ரு: சகூ.) 5. மறத்தல். (சூ. நிக. அ: கூக)
வழுக்குதல்—வழுக்கல். (வழக்.)
வழுக்குப்பாசி — ஓர் நீர்பபூடு. (வைத்திய பரி.)
வழுக்கை—தேங்காய்வழுக்கை, இளங்கா யெனபதாம். (வழக்.)
வழுக்கைப்பலா — ஒரு பலா. (வைத்திய பரி.)
வழுத்தல்— } 1. வாழ்த்தல். (சூ. நிக. கo: சு.)
வழுத்துதல்- } 2. சொல்லல். (திரு வாலவாய். திருவிளை.)
வழுதலை — வழுதுணை. (சூ. நிக. கக: ஙகா வெ. )
வழுதி—பாண்டியன். (சூ. நிக. உ: உo.)
வழுது — 1. பொய். (சூ. நிக. கo: கூ.) 2. வைகசீகால். (சூ. நிக. ச: ஙகூ.)
வழுதுணை — 1. கண்டங்கத்தரி. (உ-ம்.) "வட்டும்வழுதுணையுமபோல்வாருமவாழ்வரே" (நாலடியார். நன்றியில். ச.) 2. வைத்தியபரி பாடையிற் கத்தரியென்பர்.
வழுந்துதல்—வழுந்தல்,காய்ப்பேறல்(வழக் குண்டிப்பாலும்.)
வழும்பு—1. அழுக்கு 2. நிணம். (உ-ம்.) "நீண்டாவழும்புஞ்செந்நீரும்" (திருவரங்கக் கலம்பகம்.) 3. வழுவழுத்தலாகிய அழுக்கு. (1, 3-நாலடி. கயமை. உ.)
வழுவமைதி—திணை பால் இடம் பொழுது வினு இறை இவை வழுவிவரினும் ஒவ்வொரு காரணத்தா லமைத்துக்கொள்ளத்தக்கனவாம். (நன்னூ. பொதுவிய. உச. உரை.)
வழுவமைப்பு—வழுவமைதி.
வழுவல்—1. தவறுதல். (இராமா. அயோத் தியா. குகப்பட. ஙகூ.) 2. நழுவுதல். (வழக்.) 3. வழும்பு.
வழுவழுத்தல்—வழுவழுப்பு. (வழக்.)
வழுவன்கூறு—ஒருவகைமீன். ஓர் குழூஉக் குறிப்பாலும்.
வழுவாங்கி—ஓர் பூண்டு. (வைத்தியபரி.)
வழுவாடி—காரியத்தை நழுவவிடுகிறவன். (வழக.)
வழுவாமை—தவறாமை. (வழக்.)
வழுவி-1. அத்தி.(வைத்தியபரி.) 2. தவறி. வினையெச்சம்.
வழுவு-தவறு. (திருவிளை. தருமிக்குப்.ககூ.)
வழுவுதல்—தவறுதல். (வழக்.)
வழுவை—யானை. (சூ. நிக. ரு: கு.)
வழூஉ—குற்றம் (நன்னூ. பொதுப். சஉ.)
வழூஉச்சொற்புணர்த்தல்— நூற்குற்றம் பத்திலொன்று. (நனனூ. பொதுப்பா. கஉ.)
வழை—சுரபுன்னை. (பிங்கல. உகூகo.)
வழைச்சு—இளமை. (சிந்தா.)
வழையமது—இளமது. (பரிபாடல்)
வள்—1. காது. 2. கூர்மை 3. பற்றிரும்பு. (பிங்கல. சoசரு) 4. பெருமை. (பத்துப்பாட்.) 5. வலிமை. 6. வளம். 7. வார். 8. வாள். (1, 2, 5, 6, 7, 8-சூ. நிக. கக: ளகரவெ. அ.)
வள்வு—வார். (புறப்பொ. வெ)
வள்ளடி—செவிமூலம் (வைத்தியபரி.)
வள்ளம்—1. ஒருவகைச் சிறுதோணி. (வழக்.) 2. நாழிகைவட்டில். 3. மரக்கால். (2, 3-சூ. நிக. கக: ளகரவெ. ககூ.) 4. வட்டில்.
வள்ளல்—1. வண்மை. (சிநதா.) 2. வரை யாதுகொடுபபோர். இவர். முதலவள்ளல். இ டைவள்ளல். கடைவள்ளலென மூவராவர். (சூ. நிக. உ: உரு, உசு.) 3 வள்ளிக்கீரை. (வைத்தியபரி.)

வள்ளலார்—ஒழிவிலொடுக்கமெனும் ஞான நூல் செய்தவர். (அபிதானகோ.)

வள்ளன்மை — வள்ளற்றன்மை. மை—விகுதி.

வள்ளி—1. ஆபரணம். 2. ஓர்கொடி. (வழக்) 3. ஓர்துறை. (புறப். மாலை.) முருகற்குவெறியாடுவதாகிய கூத்தென்பர். 4. ஓர்வகைக்கிழங்கு (ஐங்குறுநூ.) 5. கைவளை. 6. சுப்பிரமணியர் தேவி. (வழக்.) 7. படர்கொடி. 8. வள்ளிபூ. (பத்துப்பாட்.) (1, 5, 7-சூ. நிக. கக: எகரவெ. சO.)

வள்ளிக்கண்டம் -சீந்தில். (வைத்தியபரி.)

வள்ளித்தண்டு -பிரம்பின்வட்டம். (சூ.நிக. எ: கக)

வள்ளிமணவாளன்—முருகன். (சூ. நிக. க: உச.)

வள்ளிய—செழித்த. (ஐங்குறுநூ.)

வள்ளியம்—1. மிளகு. (வைத்தியபரி.) 2. மெழுகு. (தைலவ.) 3. வள்ளற்றன்மையையுடையேம. (வள். ௯கக.)

வள்ளியோர் — வரையாது கொடுப்போர். (உ-ம்.) "வள்ளியோரின் வழங்கினமேகமே" (இராமா. ஆற்றுப். ச.)

வள்ளுரம்—1. தசைப்பொது. 2. பசுவினிறைச்சி. (1, 2-சூ நிக. கக: எகரவெ. கக)

வள்ளுவர்—1. ஒரு சாதியார். 2. திருவள்ளுவநாயனார். (1, 2-வழக்.)

வள்ளுவன்—நிமித்திகன். (சிந்தா.)

வள்ளூரம்—ஊன். (சிந்தா.)

வள்ளை—1. உலக்கைப்பாட்டு. (திருவள். மாலை. ௫. உரை.) 2. ஓர் கொடி. (வைத்தியபரி.)

வளப்படுத்தல் —சீர்ப்படுத்தல். (வழக்.)

வளப்படுதல்—சீர்ப்படுதல் (வழக.)

வளப்பம்—1. கொழுப்பு. (சூ. நிக. அ: ௬O.) 2. வளமை. (வழக்.)

வளப்பாடு—1. பெருக்கம். (பரிபாடல்.) 2. வளமை.

வளம்—1. அழகு. 2 கொழுப்பு. 3. செல்வம். (புறநா.) 4. செழுமை. (சூ. நிக. ழகரவெ. ௬.) 5. தகுதி. 6. நன்மை. (புறப். மாலை. 7. பதவி. 8. பலபண்டம். 9. மாட்சிமை. 10. வருவாய். (ஐங்குறுநூ.) (1, 7, 8-சூ. நிக. கக: ளகரவெ க௫.) (2, 5, 9-பிங்கல. சOசஉ.)

வளமடல்—ஓர் பிரபந்தம் இது, அறனும் பொருளும் வீடுமென்று கூறும் அம்மூன்றுகூறு பாட்டின் பயனை யெள்ளி மங்கையரைச்சேர்தலான் உளவாகிய மெல்லிய காமவின்பத்தினையே பயனெனக்கொண்டு தனிச்சொலின்றி, இன்னிசைக்கலிவெண்பாவாற்றலைமகன் இரந்து குறைபெறாது மடலேறுவதாயீரடியெதுகையாகவரப் பாடுவதாம். (இலக்கணவி. பாட்டிய. ௯௬.)

வளமை—1. கொழுப்பு. 2. செல்வப்பொலிவு. (வழக்.) 3. மாட்சிமை. (1, 3-சூ. நிக. கக: ளகரவெ. க.)

வளமையர்—பூவைசியர். (சூ. நிக. உ: உ௬.)

வளர்ச்சி—உயர்தல். (வழக்.) விருத்தியென்றுஞ்சொல்வர்.

வளர்த்ததாய் -செவிலித்தாய். (நம்பியகப். அகத்திணையிய.) 'செவிலிநற்றாய்தோழியாகி' யென்னுஞ் சூத்திரத்திற காண்க.

வளர்த்தல்—வளரச்செய்தல். (வழக்.)

வளர்த்தி — வளர்ச்சி. (வழக்.)

வளர்த்துதல்—வளரச்செய்தல். (வழக்.)

வளர்தல் —வளருதல். (வழக்.)

வளர்ப்பு—வளர்த்தல் (வழக்.)

வளருதல் —உயர்தல். (வழக்.)

வளவளத்தல்— } பயனின்றிப்பிதற்றல்.
வளவளப்பு — } (வழக்.)

வளவன்—1 சோழன். (சூ. நிக. உ: கக.) 2. வளத்தையுடையவன்.

வளவி—வீட்டிறப்பு. (சூ. நிக. ௫: ௫உ)

வளவு—1. கொல்லை. 2 வீடு. (1, 2-வழக்.)

வளன்—வளம். இறுதிபோலியாயினது.

வளாகம்—1. இடம். (சூ. நிக ௫: ௬௫.) 2. திணைபபுனம. (பிங்கல ௫உO.) 3. வளைத்தல். (சூ. நிக. ௬: உ௬.)

வளாய்—1. சூழ்ந்து. (சிந்தா.) 2. விரவி. (பரிபாடல்.)

வளார்—இளங்கொம்பு. (பிங்கல. உஎ௬௬.)

வளாவ—சூழ (பரிபாடல்.)

வளாவல்— } 1. கலத்தல் 2. வளைத்தல்.
வளாவுதல்- } (பிங்கல. சOசஎ.)

வளி—1. காற்று. (சூ. நிக. க: ச.) 2. சுழல்காற்று. (பிங்கல. ௬O.)

வளிசம் —தூண்டில். (சூ. நிக. எ: ௬உ)

வளிமறை—கதவு. (புறப்பொ.வெ.மாலை.)

வளுந்தல்—தோல்வெளவுதல்.

வளை—1. கங்கணம். (பிங்கல. ககஎஎ.) 2. கைவளை. (திருவிளை. வளையல். ௬உ.) 3. சக்கரம. (சூ. நிக எ: உ.) 4. சங்கு. (நைடத. நகரப். க.) 5. தெரிநிலைவினைப்பகுதி. 6. துழைவளை. 7. வீட்டின் மேற்கோவையின் ஒருறுப்பு. (6, 7-வழக்.)

வளைஇ — 1. சூழ்ந்து. (புறநா.) 2 வளைமுத்து. (பத்துப்பாட்.)

வளைஇய —சூழப்பட்ட. (புறநா.)

வளைக்குதல்— } வளைத்தல். (வழக்.)
வளைச்சல்— }

வளைத்தல்-1. சூழ்தல். (சூ. நிக. கூ: உரு.) 2. தடுத்தல். (திருவால. திருவிளை.) 3. வாருதல். (சூ. நிக. கூ: ருக.)

வளைதடி—ஓராயுதம். (வழக்.)

வளைதல்—1. சூழ்தல். 2. தடுத்தல்.(வழக்.) 3 வளை. (சூ நிக. அ: ரு.)

வளைந்த—நினைந்த (மணிமே.)

வளைப்பு—1. காவல். (சிந்தா.) 2. வளைத்தல். பு-தொழிற்பெயர்விகுதி.

வளைபோழ்நர்—சங்கறுப்போர். (சூ. நிக. உ: ருரு.)

வளையகம்—சங்கு. (வைத்தியபரி.)

வளையம்-1. சங்கு. 2. சீதாங்கபாஷாணம். 3. தாமரையுட்சுருள். (1, 2, 3-வைத்தியபரி) 4. வட்டம். (வழக்.)

வளையல்—கைவளை. (உ-ம்.) (திருவிளை. வளையல்விற்றபடலம்.)

வளையலுப்பு—ஒருப்பு. (வைத்தியபரி.)

வளையா—மீதாலாத (புறப்பொ.வெ.மாலை.)

வளையாபதி — ஓர் காவியம். இது, ஐந்து காப்பியங்களினொன்று. (சிந்தா.)

வளைவு-1. வட்டம். 2. வணக்கம். 3. வளைதல். (1, 2, 3-வழக்.)

வற்கடம் — பஞ்சகாலம். (இறையனாரகப்பொருள். பாயி.)

வற்கடை—குறைவு.

வற்கென்ற—வலிமையுற்ற. (புறப்பொரு. வெ. மாலை)

வற்கம்-1. கஞ்சி. 2. குதிரைவாயின்வடம். (சூ. நிக. எ: உக.) 3. மரப்பட்டை. (1, 3-(வைத்தியபரி.)

வற்கமார்க்கம்—நாயுருவி. (மலையக.)

வற்கரி—1. கரகம். (சூ நிக. எ: சுசு.) 2. குதிரைகயிறு.

வற்கலம்— } மரவுரி. (சூ. நிக. எ: எசு)
வற்கலை— }

வற்காலி-1 பள்ளையாடு (பிங்கல.உசஅஎ) 2. வெள்ளாடு (சூ. நிக. ரு: கஅ.)

வற்கிதம்-குதிரை ஐங்கதியினொன்று. (சிந்தாம. காந்தருவதத். உகூஉ.)

வற்து—1. ஆடு. 2. கஞ்சி. (1, 2-வைத்தியபரி.)

வற்துசா—கார்போகரிசி. (வைத்தியபரி.)

வற்துலிகம்—வலியான்குருவி. (வைத்தியபரி.)

வற்சகன் — வசுதேவன்தம்பி. (அபிதானகோ.)

வற்சதரம்—இளங்கன்று. (வைத்தியபரி.)

வற்சம் — 1. எருமை. 2. பசுவின்கன்று. (பிங்கல. உசகூஅ.)

வற்சமம்—குடசப்பாலை. (வைத்தியபரி.)

வற்சரம்—வருடம். (சூ. நிக. க: அஅ.)

வற்சலம்—கன்றைவளர்க்கும்பசு (பிங்கல. உசகூச)

வற்சலமணி — கோரோசனை. (வைத்தியபரி.)

வற்சலை—1. ஈன்றபசு. (சூ.நிக.உஉ:கஉ.) 2. பலராமன் மகளாகிய அபிமந்யுமனைவி.(அபிதானகோ.)

வற்சை—மலட்டுப்பசு. (பிங்கல. உசகூரு.)

வற்பம் — 1. பஞ்சகாலம். 2. வன்மை. (மணிமே.)

வற்பு—1. உறுதி. 2. வலிமை. (இராமா. அயோத்தியா. நகர்நீங். ககூ.)

வற்புறுத்தல்—வன்மையுற உறுதிப்படுத்தல் (இராமா. அயோத்தி. நகர்நீங். ககூ.)

வற்றம்—வற்றுதல். அம் - தொழிற்பெயர் விகுதி.

வற்றல்—1. உலர்தல். 2. காய்ந்த உணவுப்பொருள. (நன்னூ. பெயரிய. ருரு. உரை.) 3. வடித்தல். (1, 2, 3-வழக்.)

வற்றலை—ஓர் கிழங்குக்கொடி.

வற்று— } 1. காய்தல். 2. வடிதல். (1, 2-வழக்.) 3. வல்லது. (பரிபாடல்.)
வற்றுதல்— }

வற—வற்ற. (பரிபாடல்)

வறட்காலம்—கறுப்புக்காலம். (சிலப்.)

வறட்சுண்டி-ஆடுதின்னுப்பாளை.(மலையக.) (நிகண்டிற்சமங்கையென்று பெயர்கூறுவர்.

வறட்டல் — 1. காயச்செய்தல். 2. வறுத்தல் (வழக்.)

வறட்பூல்—ஒரு பூல். (வைத்தியரி.)

வறண்டி — குப்பைமுதலிய வாருங்கருவி. (வழக்.)

வறண்முள்ளி—ஓர் முள்ளி.(வைத்தியபரி.)

வறத்தல் — 1. காய்தல. 2. சுருங்கல். (1, 2-வழக்.)

வறதாரு—கழிமுள்ளி. (வைத்தியபரி.)

வறப்பு—1. குறைவு. 2. வறத்தல். (1, 2-வழக்.)

வறம்— } 1. நீரில்லாமை. 2. வற்கடம். (1, 2-புறநா.) 3. வறுமை. (மணிமே)
வறன்— }

வறல் — 1. உலர்தல். (பத்துப்பாட்டு.) 2, சுள்ளி. (புறநா.)

வறலாரை — ஓர் ஆரை. (வைத்தியமூ. அக.) வறளாரையுமிது.

வறவு—கஞ்சி. (வைத்தியபரி.)

வறவோட்டி—ஒருவகைப்பூண்டு. (வைத்தியபரி.)

வறள—வற்ற. (பரிபாடல்.)

வறள்வு—
வறளல்—
வறளுதல்— } வறளுதல். (வழக்.)

வறன்—1. வறட்காலம். 2. வெம்மை. (1, 2- ஐங்குறுநூ.)

வறுஅற்க—வற்றுதொழிக. (பரிபாடல்.)

வறிஞர் — தரித்திரர். (நாலடியார். செல்வநிலையாமை.)

வறிது-1. உள்ளீடில்லாதது. (ஐங்குறுநூ.) 2. குறைவு. (பிங்கல. கூ0உ0) 3. சிறுமை. (பிங்கல. உஉஉஎ.) 4. பயனின்மை. (சூ. நிக. அ: ௭0.)

வறிதுநகைதோற்றல் — அகப்பொருட்டுறையிலொன்று. (தஞ்சைவாணன். களவியல். கடு.)

வறியர்—
வறியோர்— } வறிஞர்.

வறுங்காலம்—வறப்புக்காலம். (வழக்.)

வறுத்தல்—தீயாலுலர்த்தல். (வழக்.)

வறுதல்—தீயாலுலர்தல்.

வறுநிலம்—பாழ்நிலம். (வழக்.)

வறுமை—தரித்திரம். (சூ. நிக. அ: சுக.)

வறும்புனங்கண்டுமறுகல்—அகப்பொருட்டுறையிலொன்று. வறுங்களநாடிமறுகலென்பது மிது நம்பியகப். களவியல். பகற்குறியிடையீட்டு விரியிற்காண்க.

வறும்புனம்—1. பாலைநிலம். 2. விளைவுகொய்புனம். (1, 2-வழக்.)

வறைகள்-1. துவட்டினகறிகள். (சிந்தா.) 2. பொரியல்கள். (பத்துப்பாட்.)

வறையல்—1. துவட்டற்கறி. (வழக்.) 2. பிண்ணாக்கு. (சூ. நிக. கூ: உச.)

வன்கட்பிணா—பாலைநிலப்பெண். (சூ. நிக. க: கூஎ.)

வன்கண்—1. அஞ்சாமை. (ஐங்குறுநூ.) 2. கொடுமை (இராமா. அயோத்தி. நகர்நீங். கசுக ) 3. கொடுமைபார்வை. (வழக்.)

வன்கண்ணர்—வைராக்கியர். (உ-ம்.) மறைசையந்தாதி நிருமலர் என்னுமுதற்குறிப்புள்ள கவியிற்காண்க.

வன்கண்மை —தறுகண்மை. (புறநா.)

வன்கணம்-வல்லெழுத்து (நன்னூ. எழுத்திய. கள. உரை.)

வன்கனத்தம் — தவசிமுருங்கை. (வைத்தியபரி.)

வன்காய்—கடுக்காய். (வைத்தியபரி.)

வன்கிடை—அருங்கிடை. (வழக்.)

வன்கோலை—அருங்கொலை. வன்மை, நண்டருமை குறித்துநின்றது. (வழக்.)

வன்சொல்—கடுஞ்சொல். (வழக்.)

வன்சொல்விலக்கு—ஓரலங்காரம். அது, வன்சொற்சொல்லி விலக்குவது. தண்டியலங். பொருளணியிய. விலக்கணிகளுட்காண்க.

வன்பால்—1. குறிஞ்சி. 2. பாலை (1, 2- சூ. நிக. நி: கூ.)

வன்பு—1. வன்மை (வழக்.) 2. வார். (புறநா.)

வன்புல்—பெண்மா . (சூ. நிக. ச: நிஎ.)

வன்புலம்-குறிஞ்சியும் முல்லையும்.(புறநா.)

வன்பந்தானம்—உயிர்நிலை. (வழக்.)

வன்மம் — வைராக்கிய மனங்கொள்ளல். (வழக்.)

வன்மரம்—அகக்காழ் உள்ளமரம். (சூ. நிக. ச: நிஅ.)

வன்மி —வன்மமுடையவன். (வழக்.)

வன்மித்தல்-வைரங்கொள்ளுதல். (வழக்.)

வன்மிகம்—புற்று. (சூ. நிக. நி: சு0.)

வன்மீகி—வான்மீகி. (வழக்.)

வன்மீன்—முதலை. (சூ. நிக. கூ: எச.)

வன்மை—1. கடினம். இது, எண்வகையூறறிலொன்று. (நன்னூ. உரியிய. கரு. உரை.) 2. வலிமை. (வழக்.)

வன்னக்கல்—மந்தாரச்சிலை.

வன்னம்—1 எழுத்து. (காஞ்சிப். சனற்குமார. கஅ.) 2. தவகம். (வைத்தியபரி.) 3. நிறம். (சிவஞா. போதச் அ. சூத். கூ. அதிக.)

வன்னநதி—1. உமை. (காஞ்சிப சனற்குமார. கஅ.) 2. சரசுவதிக்கும்பெயர்கூறுவர்.

வன்னி—1. கிளி. 2. கொடுவேலி 3. தணக்கு. 4. நெருப்பு. 5. பிரமசாரி. 6. வன்னிமரம் (1, 4, 5, 6-பிங்கல. ௪0௪சு.) (2, 3-மலையக.)

வன்னிகர்—பொடுதலை. (வைத்தியபரி.)

வன்னிகர்ப்பம்—மூங்கில். (வைத்தியபரி)

வன்னித்தல்—வர்ணித்தல் (வழக.)

வன்னித்தீ—நவச்சாரம். (வைத்தியபரி.)

வன்னித்தும்பை— ஒருதும்பை (வைத்தியபரி.)

வன்னிப்பரியம் — கொடுவேலி. (வைத்தியபரி.)

வன்னிப்பு—வன்னித்தல் (வழக்.)

வன்னியம்—வர்ணிக்கப்பட்டது.

வன்னியர்—ஓர் சாதியார். (அபிதானகோ)
வன்னிலோகம்—செம்பு. (வைத்தியபரி.)
வன்னிவண்ணம் — 1. செந்தாமரை. 2. செவ்வாம்பல். (1, 2-வழக்.)
வன்னேற்று—நத்தைச்சூரி (மலையக.)
வனகந்தம்—காட்டுக்கருணை (வைத்தியபரி.)
வனகவம்—காட்டுப்பசு.
வனச்சார்பு—முல்லைநிலம். (சூ. நிக. ங: ௩௦.)
வனச்சுவை—1. நரி. 2. நாவி. 3. புலி. (1, 2, 3-வைத்தியபரி.)
வனசங்கடம்—கடலை. (வைத்தியபரி.)
வனசம்—தாமரை. (சூ. நிக. ச: ௩௪அ.)
வனசரம்-மூவகை யானையினொன்று. அது வனத்திற்பிறந்த யானை. (பாரத. பதினாலாம் போர். ஈரிருதேரினர் என்ற செய்யுளிற் காண்க.)
வனசரர்—1. வனத்திற்சஞ்சரிப்பவர். 2. வேடர்.
வனசரோசலி—காட்டுப்பருத்தி.
வனசிருங்காடம்-யானைநெருஞ்சில். (வைத்தியபரி.)
வனசூகரி — காட்டுப்பன்றியின் பெண். (வைத்தியபரி.)
வனசை—1. இலக்குமி. 2. சந்தனம். (வைத்தியபரி.)
வனசோபனம்—தாமரை. (வைத்தியபரிபா.)
வனதித்தம்—குடசப்பாலை. (வைத்தியபரி.)
வனதீபம்—சண்பகம். (வைத்தியபரி.)
வனநரம்—குரங்கு. (வைத்தியபரி.)
வனப்பிரியம்—குயில். (வைத்தியபரி.)
வனபத்தியம் — பூவாமற்காய்க்குமரம். (வைத்தியபரி.)
வனபதி — பூவாதுகாய்க்குமரம். (சூ. நிக. ச: ௩௨.)
வனபந்தம்—தடாகம். (வைத்தியபரி.)
வனபலம் — யானைத்திப்பலி. (வைத்தியபரி.)
வனபிப்பிலி—காட்டுத்திப்பிலி (வைத்தியபரி.)
வனப்பு—அழகு. (சூ. நிக. அ: ௨௪)
வனம்-1. அழகு. (ஞானாமிர்தம்.) 2. காடு. 3. ஊர்சூழ்சோலையென்பா. (சூ.நிக.ச.௩௪-ல்.) 4. சுடுகாடு (சூ. நிக. ங: ௩௯.) 5. துளசி. (சூ. நிக. ச: ௬.) 6. நீர். (சூ. நிக. க: ௩௫.) 7. புற்று. (வைத்தியபரி.) 8. மிகுதி. (சூ. நிக. கக: னகரவெ. கஎ.)

வனமல்லி—காட்டுமல்லிகை. (வைத்தியபரி.)
வனமா—1. கொடுவேலி. 2. முதிரை. (1, 2-வைத்தியபரி.)
வனமாலி — 1. திருமால். (சூ. நிக. க: ௧௬.) 2. பிரமி. (வைத்தியபரி.)
வனமுதிரை—முதிரை. (வைத்தியமூ.)
வனமோசை—காட்டுவாழை. (வைத்தியபரி.)
வனருகம்—தாமரை. (வைத்தியபரி.)
வனலட்சுமி—வாழை. (வைத்தியபரி.)
வனவசம்—சந்தனம். (வைத்தியபரி.)
வனவாசம்—நாபி. (வைத்தியபரி.)
வனவிலாசினி- ஓர் செடி. (வைத்தியபரி.)
வனுகி—முயல். (வைத்தியபரி.)
வனிசை—கா.
வனிதை —பெண். (சூ. நிக. உ: ௩௬.)
வனீரம்—காட்டுத்திப்பலி.(வைத்தியபரி.)
வனைதல்—1. அலங்கரித்தல். (சூ. ௧௧. ௯: ௫.) 2. செய்தல். (சூ. நிக. ௯: உ.)

## வா.

வா—வாவென்னேவல், அழைத்தல்.(வழக்.)
வாக்கல்—வடிக்கப்பட்டசோறு. (புறநா.)
வாக்கடல்—வாதுபண்ணல். (வழக்.)
வாக்காள்—சரஸ்வதி. (சூ. நிக. க: ௩௫.)
வாக்கி — 1. நான்குபகைப்புலவருள் ஒருவன். இவன்: அறம் பொருள் இன்பம் வீடென்னும் நால்வகைப் பொருளைக் கேட்கவிரித்துக் கூறுவோன். (சூ. நிக. கஉ: உஉ.) 2. வாக்கையுடையவன். (வழக்.) 3. வார்த்தை. (சிந்தா.)
வாக்கியதமம் — மௌனம், பேச்சொடுங்குதல்.
வாக்கியப்பொருட்காட்சியணி — 1. ஓரலங்காரம். அஃதாவது இரண்டுவாக்கியார்த்தங்களுக்கு ஐக்கியத்தை யாரோபித்தல்.(விசாக. அணியியல் கக.)
வாக்கியம்—1. வசனம். (வழக்.) 2. வினைமுதலவயசெயப்படுபொருள் பயனிலையோடு முடிந்தசொற்றொடர். செயப்படுபொருளின்றியும் வரும.
வாக்கின்குணநான்கு — மெய்யுரை, நல்வார்த்தை, இனியகூறல், பயனபடுசொற்கூறல் என்பன. (மணிமே.) (பௌத்தமதம்.)
வாக்கின்செல்வன்-வியாழன். (திருவிளை, உக்கிரகுமார. ௪௬.)
வாக்கின்செல்வி—சரஸ்வதி.
வாக்கீசர்—வாகீசர்.

வாக்கு — 1. சொல். (சூ. நிக. ௪0: உ.) 2. திருத்தம் (சிந்தா.) 3 நால்வகைவாக்கு. அவை: சூக்குமை,பைசந்தி,மத்திமை, வைகரிஎன்பன. (அபிதாநசி.) 4. பக்கம்.(திருவிளை.தடாதகைப். உ௯.) 5. முதனிலைத்தொழிற்பெயர். 6. முப்பொறியினென்று. (சூ. நிக. கஉ: ௫.) 7. விதம். (வழக்.)

வாக்குதல்—வார்த்தல். (திருவிளை. உக்கிர பாண்டியன்திரு ௬௯.)

வாக்குந்தம்பம்-கலைஞானமறுபத்தினான்கி னொன்று: ... ார்த்தையைத்தடைபண்ணுதல். (அபிதாநசிந்.)

வாக்குத்தானம்—ஜன்மத்திற்கு இரண்டாமிடம். (உள்ளமுடையானிற் காண்க.)

வாக்குத்தீக்கை — எழுவகைத் தீக்கையி னொன்று. (காஞ்சிபு. தழுவக்குழந். ௫௯.)

வாக்குபதி—வியாழன். (வழக்.)

வாக்குவித்தல்—வார்ப்பித்தல். (வழக்.)

வாகசம்—பெரும்பாம்பு. (வைத்தியபரி.)

வாகசி — குத்திரப்பேச்சு. (வழக்குண்டு போலும்.)

வாகடம்—வைத்தியசாத்திரம். (வழக்.)

வாகடர்—வடநாட்டிலிருந்த ஒரு வைத்திய நூலாசிரியர். இவர்செய்தநூல் வாகடமெனவும் பெயருண்டு. (அபிதானசிந்.)

வாகம் — 1. குதிரை. (ஆசிரியநி. ௫: ௬.) 2. செங்கீரை 3. பலண்டுருகபாஷாணம். (2, 3-வைத்தியபரி.) 4. புயம். 5. வாகனம்.(பாரத. அருச்சுனன்றீர்த்த. உஎ.)

வாகரம்—1 கோணாய். 2. சாணைக்கல் 3. தடை. 4. நிச்சயமுதலியவற்றிற்குக்கூறுவர். (உ-ம்.) காணிற்கொள்க.

வாகரன்—1. பண்டிதன். 2. வீரன்.

வாகன்—1. அழகன். 2. காவாள், சுமையாள். (1, 2-வழக்.)

வாகனப்புடவை-புடவைக்கட்டைத் தாங்குஞ் சேலை. (வழக்.)

வாகனம்-ஏறிநடத்தப்படுபவை. (பெரியபு. தடுத்தாட். உ0)

வாகிடி—நீர்ப்பன்றி (வைத்தியபரி.)

வாகித்தம்—பானைக்கதுப்பு.

வாகியம்—பாகியம், வெளி. (வழக்.)

வாகிருவன்—சாதுரியன். (வழக்.)

வாகினி — 1. ஓர் தொகை. அது: கணம மூன்றுகொண்டது (பிங்கல. ௯௬௪௫.) 2. படை. (பிங்கல. ௬௫0௪.) 3. பாதிரி.(மலையக.)

வாகீகம்—1. பண்டி. 2. பெரும்பறை)

வாகீசர்—திருநாவுக்கரசு நாயனார். (காஞ்சிப். பாயிரம். ௧௧.)

வாகீசுவரி }
வாகீசை— } சரஸ்வதி. (அபிதாநகோ.)

வாகு—1. அழகு. 2. ஒழுங்கு. 3. தோள். 4. பக்கம். (1, 3-சூ. நிக. ௧௧: ௧௧௰வெ. ௧௬.) 2, 4-வழக்.)

வாகுசம்—1. எள். 2. கிளி. (1, 2-வைத்தியபரி.)

வாகுசி—கார்போகரிசி. (வைத்தியபரி.)

வாகுதம்—ஓர் பறவையென்பர்.

வாகுதை—சரஸ்வதிநதி யருகிலுள்ள ஓர் நதி (அபிதாநசிந்.)

வாகுமாலை—ஓர்வகை மாலை. (வழக்.)

வாகுரம்—வலை.

வாகுலம்—பகிழங்கனி. (வைத்தியபரி.)

வாகுலிகன்—அடைபபைக்காரன்.

வாகுவம்—சுக்கு. (வைத்தியபரி)

வாகுவலயம்—தோளணி. (சூ.நிக.எ:உ௬.)

வாகுனி—கீழ்காய்நெல்லி. (மலையக.)

வாகை—1. ஒழுக்கம். 2. குணம். 3. கொடுத்தல். 4. தவம் 5. தொழில். 6. நிலவாகை. (வைத்தியபரி.) 7. மிகுதி. 8. ஓர் துறை. இது: வாகைப்பூச்சூடி மாறுபாடுற்ற வேந்தைக்கொன்று ஆரவாரித்தது. புறப. மாலை. 9 வாகை மரம். (வழக்.) 10 வாகைமாலை. 11. வெற்றி. 1, 2, 3, 4, 5, 7, 11-சூ நிக.௧௧:௧௧௰வெ.௧௬.)

வாகைமன்றம் — பலபேய்கள் கூட்டங் கொண்டிருக்கும் வாகைமரத்தடி. (மணிமே.)

வாகைமாலை—ஓர்பிரபந்தம். இது: மாற்றுரைவென்றுவாகைமாலைசூடுவது. (பொருட். நிக.)

வாகைமிலைதல் — பகைவரைவென்றோர் வென்றதற்கறிகுறியாகவாகைமலரையணிந்து கொள்ளுதல். (மணிமே.)

வாகையரவம்—ஓர் துறை. இது: வெள்ளைமாலையுங்கருங் கழலையுஞ்செங் கச்சையுமணிந்தது. (புறப். பொ.)

வாங்கம்—கடல்.

வாங்கல்—1. இழுத்தல். 2. ஏற்றுக்கொள்ளல். 3. நீளல். 4. வளைத்தல். 5. வளைவு. (சூ. நிக அ: ௫) (2, 4-சூ. நிக. ௧௧: ௯௧௰வெ. ௬.) (1, 3-வழக்.)

வாங்கா—ஓர் ஊதுகுழல். (வழக்.)

வாங்கி—தழுவி. (சிந்தா.)

வாங்கு—தெரிநிலைவினைபபகுதி.

வாங்குதல்—வாங்கல்.

வாங்கும்—1. அலையும். 2. அறும். (1, 2-பரிபாடல்.)

வாச்சி—ஆடாதோடை. (வைத்தியபரி.)

வாச்சியம்—1. பொருள். (உ-ம்) நால்வர் நான்மணிமாலை பெருந்துறை புகுந்து என்ற முதற்குறிப்புள்ள வெண்பாவிலறிக. 2. வாத்தியம்.

வாசகம்—வசனம். (சூ நிக. ௧௦: ௬)

வாசஞ்செய்தல்—1. இருத்தல். 2. மணங்கூட்டுதல். (வழக்.)

வாசசல்லியம்—1. கஸ்தூரி. 2. எலும்பு. (1, 2-வைத்தியபரி.)

வாசதம்—கழுதை. (வைத்தியபரி.)

வாசந்தம்—1. ஒட்டகம். 2. குயில். 3. தென்காற்று. 4. மிருகத்தினிளங்கன்று.(உ-ம்) வரிற்கொள்க.

வாசந்தி—1. குருக்கத்தி. (சூ. நிக. ௪: ௫.) 2. திப்பிலி. 3. வசந்தமல்லிகை.

வாசபேயம்—ஓர் யாகம். (திருவிளை. தலவிசே. ௬)

வாசம்—1. அரிசி. 2. ஆடை. 3. இருப்பிடம். 4. இலாமிச்சை. 5. ஊர். (ஆசிரிய. நிக. ௫: ௨௦.) 6. சண்பகம். 7. நாள். (ஆசிரிய. நிக. ௩: ௬௬.) 8. நெய். 9. பஞ்சவாசம். (அபிதானசிந்.) 10. புட்சிறகு. 11. பூமணம். (1, 4, 6, 8-வைத்தியபரி.) (2, 3, 10, 11-சூ. நிக. ௧௧: சகரவெ ௧.)

வாசல்—வாயில். (வழக்.)

வாசவர்—பஞ்சவாசம்விற்போர். (சிலப்.)

வாசவன்—இந்திரன். (சூ. நிக ௧: ௧௩.)

வாசவுப்பு—கல்லுப்பு. (வைத்தியபரி.)

வாசனம்—1. ஆடை. (பிங்கல. ௧௨௭௬.) 2. வாசனை. (தெலுங்கு.)

வாசனி—மேற்கட்டி.

வாசனை—1. பழக்கம். (தர்க்கசங்கிர உரை. ௬௬.) 2. மணம். (வழக்.) 3. யாழ்வாசித்த லென்க. (பெரியபு. ஆனாய. ௬௬.)

வாசா—வாக்கு. (உ-ம்.) "வாசாகயிங்கரிய மன்றி" (தாயுமான. திருவருள்விலா. ௪.)

வாசாங்கியம்—மிளகு. (வைத்தியபரி.)

வாசாதி—ஆடாதோடை. (வைத்தியபரி.)

வாசாமகோசரம் — வாக்குக்கெட்டாமை. (வழக.)

வாசாலகம்—, வாசாலம்— } வாக்குவல்லபம்.

வாசாலகன்—, வாசாலன்— } வாக்குவல்லவன். (வழக்.)

வாசாலை—வாக்குவல்லவி. (வழக்.)

வாசி—1. அச்சுவினிநட்சத்திரம். 2 அதிகம். 3 இசைக்குழல். 4. இலாபம் 5. குதிரை. 6. சுவாசம். 7. மாமரம். (வைத்தியபரி.) 8. வாசியென்னேவல். (1, 3, 5, 8-சூ. நிக. ௧௧: சகரவெ. ௧௨.) (2, 4, 6-வழக்.) பஞ்சாக்கர பேதங்களிலொன்றுமாம்.

வாசிக்கல்—காக்கைக்கல் (வைத்தியபரி.)

வாசிகந்தம்—ஓர் பூடு.

வாசிகம்—வாக்காறசெய்வது. (திருவிளை. எழுகடல் ௭.)

வாசிகன்—தூதன்.

வாசிகை — 1. கோத்தமாலை. (பிங்கல. ௭௬௫௦) 2. மாலை (ஆசிரியநிக. ௪: ௫௦)

வாசிட்டம் — 1. தருமநூல் பதினெட்டினொன்று. (பிங்கல. ௪௪௬.) 2. இராமருக்கு வசிட்டர்சொன்ன நூல்.)

வாசிட்டலிங்கம்-உபபுராணம் பதினெட்டினொன்று. (பிங்கல. ௪௪௫)

வாசித்தல்—1. படித்தல். (பிங்கல. ௨௦௩௦.) 2. மணத்தல். 3. வீணைமுதலியவாசித்தல். (2, 3-வழக்.)

வாசிராயநீயம்-உபநிடத முப்பத்திரண்டினொன்று (பொருட்-நிக.)

வாசிலி—வெண்குதிரை.

வாசிபட்சம்—கடலை (வைத்தியபரி.)

வாசு—அருவேலி.

வாசுகம்—சவட்டுமண். (வைத்தியபரி.)

வாசுகி—1. அட்டநாகத்தொன்று. (சூ. நிக. ௧௨: ௭அ.) 2. திருவள்ளுவர்மனைவிக்கொரு பெயர். (அபிதானசிந்.) 3. விந்து. (வைத்தியபரி.)

வாசுதேவன்—கண்ணன். (சூ. நிக. ௧: ௧௪.)

வாசுரை — 1 இரவு 2. பூமி. 3. பெண். 4. பெண்யானை. (உ-ம்.) வரிற்கொள்க.

வாசை—ஆடாதோடை. (பிங்கல. ௨அ௬௫.)

வாஞ்சனம்—, வாஞ்சனை— } வாஞ்சை. (வழக்.)

வாஞ்சித்தல்—ஆசைப்படுதல். (தா... ... தண்ணீர்ப்பந். ௫.)

வாஞ்சிதம்—வாஞ்சனம்.

வாஞ்சினி—விருப்பமுள்ளோன். (வழக்.)

வாஞ்சை—ஆசை. (வழக்.)

வாட்கலியன்-திருமங்கையாழ்வார். (உ-ம்.) 'கட்டவிழ்தார்வாட்கலியன்காப்பு' (நூற்றெட். திருப்பதியங். பாயிரம்.)

வாட்கோரை-செருந்தி. (பிங்கல. ௨௧௬௫.)

வாட்சூலை—ஓர் நோய். (வழக்.)

வாட்டம்—1. குறைவு. 2. சோர்வு. 3. மெலிவு. 4. வாடுதல். (1, 2, 3, 4-வழக்.)

வாட்டரவு—வாட்டுதல். அரவு—தொழிற்பெயர் விகுதி.

வாட்டல்—வாட்டுதல்.

வாட்டாழை—கடற்றாழை. (வைத்தியபரி.)

வாட்டியம்—1. சந்தனம். 2. புட்பம். 3. மஞ்சள் (1, 2, 3-மலையக.)
வாட்டு—1. தெரிநிலை வினைப்பகுதி 2. வதக்கிய பதார்த்தம். வரகரிசிச்சோறும் வழுதுணங்காய்வாட்டும். (ஔவை. தனிப்பாடல்.)
வாட்டுதல்—1. துரைபுறுவித்தல். 2. வாடப்பண்ணுதல். (1, 2-வழக்.)
வாட்படை—வாள்வீரர்தொகுதி. (சிந்தா.)
வாட்படையாள்—துர்க்கை. (பிங்கல.௧௨௪)
வாட்யாயனி—அதிபலை. இதுபேராமுட்டி. (வைத்தியபரி, அநுபந்த.)
வாடகை—வீடு முதலியவற்றி லிருப்பதற்குக்கொடுக்குங்கூலி. (வழக்.)
வாடபதி—சரீரக்கொழுப்பு.(வைத்தியபரி)
வாடல்—1. மெலிதல் 2. வதங்கல். (1; 2-வழக்.)
வாடற்க—குறையாதொழிக. (பரிபாடல்.)
வாடாக்குறிஞ்சி—குரவகம். (சூ.நிக ௪:௨௧.)
வாடாமல்லிகை—ஒரு பூச்செடி. (வழக.)
வாடாமாலை—பொன்னரிமாலை.(பத்துப.)
வாடாவள்ளி—வள்ளிக்கூத்து. (பத்துப)
வாடிக்கை—வழக்கம (வழக)
வாடி—1 அடைப்புள்ளவிடம். (வழக்.) 2. தொட்டால்வாடி. (வைத்தியபரி.) 3. வினையெச்சம. மதில் முதலியவற்றிற்குங்கூறுவர்.
வாடுகீ—வெள்ளரி. (வைத்தியபரி.)
வாடுதல்—வாடல்.
வாடேன்—உப்புக்கண்டம். (பத்துப்பாட்.)
வாடை—1. இடைச்சேரி. 2. ஓர் மருந்து. 3. வடகாற்று. 4. வாசனை. (வழக்.)5. வீதி. (சூ. நிக. ௪௧: டகரவெ. ௧௧.) (1, 2 3-பிங்கல. ௨0௬௪)
வாடைப்பாசறை — ஓர் துறை. இது: பாசறையிடத்துவீரர் நடுக்கமுறவந்த வாடைக்காற்றின் மிகுதிசொல்லியது. (புறப். பொ.)
வாண்டியம்—பேராமுட்டி. (வைத்தியபரி)
வாண்மங்கலம்—ஓர் துறை. இது: அரசன் வாளைப்புகழ்ந்தது. (புறப். பொ.)
வாண்மண்ணுநிலை — ஓர் துறை. இது: தீர்த்தத்தினாலே மஞ்சனமாட்டிய வாள்வீரஞ்சொல்லியது. (புறப. பொ.)
வாண்மீன்—ஓர் மீன். (வழக்.)
வாணகந்தி — 1. அரசமரம். (வைத்தியபரி.) 2 ஓர் கந்தகம்.
வாணம்—1. அம்பிற்குப்பெயர்கூறுவர். 2. மத்தாப்பு முதலிய வாணம். (வழக்.)
வாணன்—1. ஓரசுரன் (உ-ம்.) "வாணனூரழல் குழையில்மானுமே" (நைடத.நகரப்.௯௪) 2. கார்த்திகை. (பிங்கல. ௨௪௧.) 3. வாழ்நன் எனவும் பிரித்துரைப்பர். அம்பலவாணன் என்று வழங்குதலறிக.
வாணகம்—அம்பு முதலியவற்றிற்குப் பெயர் கூறுவர். (உ-ம்) வரிற்கொள்க.
வாணுக்கம்பு—சிலம்பக்கோல். (வழக்.)
வாணுடகோள்—ஓர் துறை. இது: பகைவர் அரணினைக்கோடலைநினைந்து வாளைப்புறவீடுவிட்டது. (புறப். பொ.)
வாணி—1. அசமதாகம். 2. அம்பு. 3. இந்துப்பு. 4. ஓர்கூத்து. 5. சரஸ்வதி. 6. சொல். 7. மனோசிலை. (1, 3-வைத்தியபரி.) (2, 4, 5, 6-பிங்கல. ௬0௩0.)
வாணிகச்சம் — வறட்சுண்டி. (வைத்தியபரி.)
வாணிகம்—இலாபம். (வழக்)
வாணிகவாகை ஓர் துறை. இது வணிகனுடைய ஆறுசெய்திபுமுயர்த்திச் சொல்லியது. (புறப்-மாலை.)
வாணிகவென்றி—ஓர் துறை. இது: பொருளிற் பற்றிலனுப்பபிறர்மிடியை நீக்கல் கடனுகச்சொல்லியது. (புறப்-மாலை)
வாணிகன்—1. செட்டி. (சூ. நிக. ௧௧: டகரவெ. ௨௨.) 2. துலாராசி. (சூ. நிக. ௧: ௬௫.)
வாணிகேள்வன்—பிரமன். (சூ.நிக.௧:௧௬.)
வாணிச்சி—செட்டிப்பெண். (வழக்.)
வாணிதம்—கள். (வைத்தியபரிபா.)
வாணிபம்—வாணிகம். (வழக்.)
வாணிபர்—வாணிபஞ்செய்வோர். (வழக்)
வாணியன்—1. சூத்திரன் வைசியபபெண்ணைப்புணரப பிறந்தவன். (அபிதானசிந்.) 2. பிரமனுமாம்
வாணிலை—ஓர் துறை. இது: பகைவர்மேற்செலவிரும்பிவாளை நன்னாளிலே புறவீடு விட்டது.
வாணிவி—1. கூத்தி. 2. விவேகமுள்ளவள்.
வாணுள்—உயிர். (சிந்தா.)
வாத்தியம்—கஞ்சக்கருவி முதலிய வாத்தியங்கள். (வழக்.)
வாத்தியான்—உபாத்தியாயன். (வழக்)
வாத்து—1 ஓர் பறவை. (வழக்.) 2. வாஸ்துபுருஷன். (தைலவ.) 3. வாத்து தேவதைகள். இவர்கள் அநேராகஅபிதானசிந்தாமணியிற்கூறுவர்.
வாத்துசாந்தி—வாத்து புருஷனுக்குச்செய்யுஞ்சாந்தி (வழக்.)
வாத்துபோதம்—சிற்பநூல் முப்பத்திரண்டினுளொன்று. (பொருட். நிக.)
வாத்துமன்—வாஸ்து புருடன். (வழக்.)

வாதக்கடல்—நவட்சாரம். (வைத்தியபரி)
வாதகரப்பான் — ஓர் நோய். (வழக்.)
வாதகாசம்—ஓர்காசநோய். (வைத்தியபரி.)
வாதகி—சத்திசாரம்.
வாதகிராணி—ஓர் கிராணி. (வழக்.)
வாதகுன்மம்—ஓர் நோய். (வழக்.)
வாதங்கினி—ஓர் மரம்.
வாதசகன்—அக்கினி.
வாதசிரோமணி—நவட்சாரம். (வைத்தியபரி.)
வாதசுரம்—வாதத்தால்வந்தசுரம். (வழக்.)
வாதசூலை—ஓர் சூலைநோய்.(பொருட்-நிக.)
வாதசோணிதம்—ஓர் நோய்.
வாதநாசனம்—ஆமணக்கு. (தைலவ.)
வாதநாடி — வாதத்தினியல்பைக்காட்டும் ஓர் நரம்பு. (குறுநாடியிலறிக.)
வாதநிகண்டு—இரசவாதநிகண்டு. (வைத்தியபரி.)
வாதப்பிரமி—மான். (வைத்தியபரி.)
வாதபித்தசூலை—அறுவகைச்சூலையிலொன்று. (பொருட்-நிக.)
வாதபேதம்—பலாசு. (வைத்தியபரி.)
வாதம்— 1. இரும்புமுதலியலோகங்களைப் பொன்னாக்கும்வித்தை. 2. காற்று. 3. தருக்கம். 4. மூவகைப்பிணியிலொன்று. 5. வில்வம். (2, 3-சூ. நிக. கக: தகரவெ. ச.) (4-பொருட்-நிக.) (5-வைத்தியபரி.)
வாதமடக்கி—1. ஓர் மரம் 2. தழுதாழை. 3. நந்தக்காரி. 4. முடக்கொத்தான். (1, 2, 3, 4-வைத்தியபரி.)
வாதமண்டலி — சுழற்காற்று. மண்டலித்தல்-வட்டமாதல். வாதம்-காற்று.
வாதமயவுப்பு—கறியுப்பு (வைத்தியபரி.)
வாதமிருகம்—கலைமான், காற்றுக்கு வாகனமாகிய மான்.
வாதரக்காச்சி—வாதராயணமரம். (வைத்தியபரி.)
வாதரங்கம்—அரசு. (வைத்தியபரி.)
வாதரம்—அதிமதுரம். (வைத்தியபரி.)
வாதரவி—சரீரக்கொழுப்பு.(வைத்தியபரி.)
வாதராசன்—நவச்சாரம். (வைத்தியபரி.)
வாதராட்சதன்—ஓர் மரம். (வழக்.)
வாதராயணம் — ஓர் மரம். அது: வாதரக்காச்சி.
வாதராயணன்—வியாசமுனி. (காஞ்சிப். சார்ந்தாசயப். கo.)
வாதலம்—அதிமதுரம். (வைத்தியபரி.)
வாதவைரி — ஆமணக்கு. (மலையக.)

வாதனம் — வாசனம், வத்திரம். (பிங்கல. சஉஎரு.) ஒலிக்கும் வருத்தத்திற்குங்கூறுவர்.
வாதனை—1. தடை. 2. வருத்தம். (வழக்.)
வாதாட்டம்—, வாதாடல்— } வழக்காடல். (வழக்.)
வாதாட்டுதல்— தருக்கத்திற்குட்படுத்தல். (வழக்.)
வாதாயம்—பச்சிலை. (வைத்தியபரி.)
வாதாயனம்—பலகணி. (சூ. நிக. கு: ௧௪.)
வாதாரி—ஆமணக்கு. (வைத்தியபரி.)
வாதாலம் — ஒரு மீன். (வழக்குண்டுபோலும்.)
வாதாவி—ஓரசுரன். (அபிதாநசி.)
வாதி— 1. எதுவும் மேற்கோளுமெடுத்துக் காட்டிப் பிறன்கோளைமறுத்துத் தன்மத நிறுத்தப் பாடுபவன். (சூ. நிக. கஉ: உஉ.) 2. கெந்தியுரி பாஷாணம். (வைத்தியபரி.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. வாதஞ்செய்பவன்.
வாதிக்குதல்—1. வாதித்தல். 2. வருத்தப்படுதல். (1, 2-வழக்.)
வாதிகம்—சோம்பு. (வைத்தியபரி.)
வாதிகாரம்—வெடிகாரம். (வைத்தியபரி.)
வாதிங்கனம்—சோம்பு. (வைத்தியபரி.)
வாதித்தல் — 1. தர்க்கித்தல். 2. வருத்தப்படுத்துதல். (வழக்.)
வாதிப்பு—வாதித்தல். (வழக்.)
வாதிராசன்—நவச்சாரம். (வைத்தியபரி.)
வாதிரு—காற்று.
வாதிவம்—வஞ்சி. (வைத்தியபரி.)
வாது — 1. சண்டை. 2. தர்க்கம். (1, 2-வழக்.)
வாதுமை—ஓர் மரம். (வைத்தியபரி.)
வாதுலி—வௌவால்.
வாதுவர்—1. குதிரைப்பாகர். 2. யானைப்பாகர். (1, 2-சூ. நிக. கக: தகரவெ. உக.)
வாதுளம் — சிவாகமம் இருபத்தெட்டிலொன்று. (பொருட்-நிக.)
வாதூகம்—சோம்பு. (மலையக.)
வாதூலம்—சுழல்காற்று.
வாதை—1. துன்பம். (வழக்.) 2. வேதனைநோய். (பிங்கல. ககoரு.)
வாதோரணமஞ்சரி—ஓர் பிரபந்தம். இது: கொலைபுரியானையை யடக்கி வசப்படுத்தினவர்க்கும், எதிருறுகளிற்றை வெட்டியடக்கினவர்க்கும், அதனைப் பற்றிப்பிடித்துச் சேர்த்தவர்க்கும், உள்ளவீரப்பாட்டின் சிறப்பை வஞ்சிப்பாவாற்றொடுத்துப் பாடுவதென்பர். (பொருட்-நிக.)
வாந்தம்—வாந்தி. (வழக்.)

வாந்தி—சத்திபண்ணல். (வழக்.)
வாந்திசோதனி—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)
வாந்தித்தல்—சத்தித்தல். (வழக்.)
வாந்தியம் — 1. தான்றி. 2. வாலுளுவை. (1, 2-மலையக.)
வாப்பியம்—கோஷ்டம். (வைத்தியபரி.)
வாபம்-1. சௌஞ்செய்தல். 2. நெய்குதல்.
வார்பீசம்—சாதகப்புள்.
வாம்பல்—மூங்கில். (மலையக.)
வாமசுக்கிலம்—பொன்னுவிரை. (வைத்தியபரி.)
வாமதந்திரம்—வாமசமயநூல். (வழக்.)
வாமதேவன்-1. ஓர் முனிவன். (காஞ்சிப். புராணவரலா. ௬.) 2. சிவன். (சூ. நிக. க: க.)
வாமபுரகோபம்-துத்தம்.(வைத்தியபரி.)
வாமம்—1. அழகு. 2. இடபக்கம். 3. ஒரு சமயம். (சூ. நிக. கஉ: ௬அ.) 4. ஒளி. (சூ. நிக. அ: உஉ.) 5. குறுமை. 6. சிவனைம்முகத்தொன்று. (சூ. நிக. கஉ: சு௬.) 7. தொடை. (1, 2, 5, 7-சூ. நிக. கக: மகரவெ. உ.) தீமை முதலியவற்றிற்குமகூறுவர்.
வாமரோதயவாஞ்சி—மண்ணீரல். (வைத்தியபரி.)
வாமல்—வாமலோசிகம். (மலையக.)
வாமலூரம்—புற்று.
வாமலோசிகம்—கற்றாழை. (மலையக.)
வாமவர்த்தம் — இடம்புரிச்சங்கு. (வைத்தியபரி.)
வாமன்—1. அருகன். (சூ. நிக. க: க.) 2. சிவன். (பிங்கல. ௬ச.) 3. புத்தன். (மணிமே.)
வாமனம்-1. குறள். 2. தென்றிசையானை. 3. பதினெண்புராணத்தொன்று. (1, 2, 3-சூ. நிக. கக: மகரவெ. எ.)
வாமனன்— 1. குறள்வடிவுகொண்ட திருமால், தசாவதாரத்தொன்று. (பெரியபு தடுத்தாட். ௬0)
வாமனசாரியர்-மேருமந்தரநீலகேசிசெய்த ஒரு ஜைநநூலாசிரியர். (அபிதாநசி.)
வாமனதபுரம்-பூர்வத்தில் ஜைநர்வசித்துக் கொண்டிருந்தது. இப்பொழுது மைலாப்பூரென்பர். (அபிதாநசி.)
வாமி — 1. பார்வதி. 2. வாமசமயத்தவள். வாமசமயத்தவன். (வழக்.)
வாமை-உமாதேவியின் அட்டமூர்த்தங்களினொன்று (சிவபூசைக்கலித்துறையிற் காண்க.
வாய் — 1. இடம். 2. ஊதுகுழல் 3. ஐம்பொறியினொன்று. (உ-ம்.) "மெய்வாய்கண் மூக்குச்செவியென" (நாலடி. துறவு. ௬.) 4. சொல். (உ-ம்.) "வஞ்சியானென்பதனுல்வாய் நேர்ந்தேன்" (யாப் காரி.உ.உரை.) 5. துவாரம், வாயில். (வழக்.) 6. தெரிநிலைவினைப்பகுதி. 7. வடு. (சிந்தா.) 8. வாய்மை. (மணிமே.) 9. விளிம்பு. (சிந்தா.) (1, 2-சூ. நிக. கக: யகரவெ. கஉ.) ஏழாம்வேற்றுமையுருபுமுதலியனவுமாம்.
வாய்க்கால்—1. நீரொழுகுங்கால். (உ-ம்.) "வாய்க்காலனையார்தொடர்பு" (நாலடி. நட்பாராய். அ.) 2. மகநட்சத்திரம்.(சூ. நிக. க: எக.)
வாய்க்கிரந்தி—ஓர் நோய். (வழக்.)
வாய்க்கிருது — அசங்கதவார்த்தை. வாய்சொல். (வழக்.)
வாய்ச்சி — மரஞ்செதுக்கும் ஓர் ஆயுதம். தச்சர் குழூஉக்குறி.
வாய்த்த —1. தப்பாத. 2. வாய்ந்த. (1, 2-சிந்தா.)
வாய்த்தல் — 1 கிடைத்தல். (சூ. நிக. ௬: ௬ச.) 2. சிறத்தல். (வழக்.) 3. பொருந்தல். (நன்னூல். பொதுப்பா. சஎ.) 4. மாட்சிமை. (பிங்கல. கஎ௬உ.)
வாய்த்தன்று—வாய்த்தது. (பரிபாடல்.)
வாய்தல்-வாயில். (உ-ம்.) "வந்தபின்மனைவியாரும்வாய்தலினின்றுவாங்கி" (பெரியபு. இளையான்குடி. க௬.)
வாய்ப்ப-பொருந்த.(நன்னூ.பாயிரம்.சஎ.)
வாய்ப்பது—தப்பாதது. (ஐங்குறுநூ.)
வாய்ப்பாடம்—ஏடுபாராமற்சொல்லும் பாடம். (வழக்.)
வாய்ப்பியர்—அகத்தியர் மாணக்கர். (அபிதாநசிந்.)
வாய்ப்பு—1. நயம். 2. வாய்த்தல். (1, 2-வழக்.)
வாய்ப்புண் — வாய்க்கிரந்தியாகியவோர் நோய். (வழக்.)
வாய்ப்புள்—நன்னிமித்தம். (சூ. நிக. க0: கக.) நற்சொலென்பர் முல்லைப்பாட்டில்.
வாய்பாடு — சிலசொற்கள்தன்வகைப்படநிற்பது. (நன்னூ. விருத். பதவிய. க0. உரை.)
வாய்பிதற்றல்—வாய்குளறுதல். (வழக்.)
வாய்பூசல்— } வாய்சுத்திசெய்தல்.
வாய்பூசுதல்— } (உ-ம்.) "நீருண்டார் நீரால்வாய்பூசுப" (நான்மணிக்கடிகை. ௬௫.)
வாய்மட்டம்—வாய்வளையம். (வழக்.)
வாய்மை—1. மெய்ம்மை. (வள். ௬0௧.) 2. வாக்கு. (திருவிளை. வெள்ளையானை. உ.)
வாய்மைநான்கு—துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணமார்க்கம்,(மணிமே.) ஜைநவழக்கு.

வாய்மொழி—வேதம். (பரிபாடல்.)
வாய்வது — 1. உண்மை. 2. கிடைப்பது. (1-பத்துப்பாட்) (2. தணிகை. நாட் சரு.)
வாய்வளையம்—வாய்மட்டம். (வழக்.)
வாய்விலங்கம்— } ஓர் மருந்து. (வைத்
வாய்விளங்கம்— } தியபரி.)
வாய்வெருவுதல்—அயர்ச்சியால்வாய்குளறுதல். (இராமா. ஆரணிய. அகத்திய. ௫.)
வாயகம் —கூட்டம்.
வாயசம்—காக்கை. (சூ. நிக. ௩: ௬0.)
வாயசி — செம்மணத்தக்காளி. (வைத்தியபரி.)
வாயடை—உணவு. (பரிபாடல்.)
வாயல்—வாசல். (வழக்.)
வாயலகு — புள்ளின்வாயலகு. (பிங்கல. ௨௩௬௭.)
வாயவி—வடமேற்றிசையென்பர்.
வாயவியம் — எழுவகைநானத்தொன்று. அது: பசுநடையினெழுதூளியிற் படிதலாம்.
வாயவீயம்—வாயுசம்பந்தமாயது. (தர்க்காமிர்தம்.)
வாயாடி—வாய்ப்பேச்சில்வல்லபன். (வழக்.)
வாயாள்—நேர்ந்திலள். (பரிபாடல்.)
வாயில்—1. ஐம்பொறி. 2. கதவு. (சிலப்.) 3. காரணம். 4. திறம். 5. துவாரம். 6. தூது. (அகப்பொருள். விளக். ௬௫.) 7. பரிகாரம். (ஞானமிர்தம்.) 8. வழி. (சிந்தா.) (1, 2, 3, 4-பிங்கல. ௬0௫௨.) (1, 5-சூ. நிக. க: லகரவெ. ௬௭.)
வாயில்வேண்டல் — அகப்பொருட்டுறையினொன்று. (அகப்பொருள்விளக். அகத்திணை. ௬௫.)
வாயிலாளர்—வாயில்காப்போர். (சூ. நிக. ௨: ௰௫.)
வாயில்களாறு—மெய், வாய், கண், மூக்குச்செவி யென்னு மிந்திரியமைந்தும், மனமொன்றுமாம். (மணிமே.) வாயில்களொன்பது அவை. நவதுவாரம். விநாயகராகவலிற்பார்.
வாயிலோர்—1. தமிழ்க்கூத்தர். (சூ. நிக. ௨: ௩௮.) 2. தூதுவர். வாயில்—தூது. 3. வாயில்காப்போர். (வழக்.)
வாயினிலை—ஓர் துறை. இது: அரசனுக்கு என்வர வினைச்சொல்லென வாயிற்காவலனுக்குச்சொல்லியது. (புறப்பொ.)
வாயிற்காட்சி — காட்சிபேதத் தொன்று. அது: இந்திரியக்காட்சி. (சி. சி. சுபக்கம். ௬. உரை.)
வாயு—காற்று. (பிங்கல. ௨௩.)
வாயுக்குத்து—ஓர் நோய் (வழக்.)
வாயுகோணம்—வடமேற்குமூலை. (வழக்.)
வாயுச்சகன்—அக்கினி, வாயுவைச்சகாயமாயுள்ளவன். மருச்சகன் என்பதுபோலக்கொள்க.
வாயுசூலை—ஓர் சூலை, வாதசூலை. (பொருட். நிக.)
வாயுத்தம்பம்— } அறுபத்துநான்கு கலை
வாயுத்தம்பனம்— } ஞானத் தொன்று. (பொருட். நிக.)
வாயுதாரு—மூங்கில். (உ-ம்.) வரிற்கொள்க.
வாயுபுத்திரன் — 1. அநுமன். (இராமா. கிட்கிந்தா. அனுமப்படல. ௬௭.) 2. வீமன். (சூ. நிக. ௨: ௧௬.)
வாயுமூலை—வடமேற்கு. (வழக்.)
வாயுவாகம்—புகை.
வாயுவின்கூறு—பரிசம்உணர்தல் முதலியன. (தர்க்கசங்கிர. ௧௨.)
வாயுவு—வாயு. (வழக்.)
வாயுறை—பசுமுதலியவற்றிற்குக்கொடுக்குந்தீனி. (உ-ம்.) "யாவர்க்குமாம் பசுவிற்கொருவாயுறை" (திருமந்திர. இரந்தார்க். ௨.)
வாயுறைவாழ்த்து—ஓர் பிரபந்தம். (பொருட். நிக.) இது: முன்னர்த் தாங்கக்கூடாத இழித்துரையாயினும் பின்னர்ப்பெரிதும்பயன் பயக்குமென வெண்பா முதலும் ஆசிரியம் இறுதியுமாகக்கூறுவது. இதனைப்புறப்பொருள்வெண்பா மாலையிலே ஓர் துறையாகக் கூறுவர்.
வாயுறைவாழ்த்துமருட்பா-மருட்பாவான் கினொன்று. யாப். காரி. செய்யுளிய. ௧௫. சூத்திர. உரையிலறிக.
வாயூறல்— } 1. அபேக்ஷித்தல். (உ-ம்.)
வாயூறுதல்— } 'தேனூறுகிளவிக்குவாயூறிநின்றவன் செங்கீரையாடியருளே' (முத்துக்குமாரசுவாமிபிள்ளைத். செங்கீரைப். ௫.) 2. வாய்நீரூறுதலுமாம். (வழக்.)
வார்—1. கச்சு. 2. கடைகயிறு. (சிந்தா.) 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. தோல்வார். (வழக்.) 5. நீர். 6. நீளம். 7. நேர்மை. (1, 5, 6, 7-சூ. நிக. கக: ரகரவெ. க௫.)
வார்க்குதல் — 1. உலோக முதலியவற்றையுருக்கிவிட்டு உருவங்களாக வகுத்தல். (வழக்.) 2. வார்த்தல். (நன்னூ. பாயிர. ௩அ௪. உரை.)
வார்க்கோலபுரம்—தோயமாபுரம். (பாரத. நிவாதகவசகால. ௨௫.)
வார்கொண்டமுலையம்மை—மேலைத்திருக்காட்டுப்பள்ளியிலிருக்குந்தேவியார் பெயர். (அபிதானகோ.)

வார்சியாயநீயம் — உபநிடதமுப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.)
வார்த்தசாகி—கற்றாழை. (வைத்தியபரி.)
வார்த்தல்—வார்க்குதல். (வழக்.)
வார்த்தாகி—சிறுவழுதலை. (மலையக.)
வார்த்தாபம்—கத்தரி. (மலையக.)
வார்த்திகம்—1. கிழத்தன்மை. (வழக்.) 2. தாளதசபபிரமாணம்பத்திலேமார்க்கப்பிரமாணமாகிலொன்று. 3. பொழிப்புரை. சிவஞானபோதச்சிறப்புப்பாயிரவுரையிற்காண்க.
வார்த்திகன்—கிழவன். (வழக்.)
வார்த்தை—வசனம். (சூ. நிக. கo: ரு.)
வார்தல்-1. இசைக்கரணமெட்டினொன்று. (திருவிளை. இசைவாத. ௩எ.) 2. ஒழுகல. (ஐங்குறுநூ) 3. நீளல். (சூ. நிக. அ: கரு.) 4. வாருதல். (வழக்.)
வார்ந்த—நேரிதாகிய. (பத்துப்பாட்.)
வார்ப்பு — வார்த்தல். பு-தொழிற்பெயர் விகுதி.
வார்பு—வார்தல். (புறநா.)
வார்வை-தொத்துளிப்பாய். (பத்துப்பாட்.)
வாரஇராக்த்ளிகன் — ஞாயிறு (ககவ), திங்கள் (எஇ), செவ்வாய் (௩ளு), புதன் (உசுவ), வியாழன் (உஉஇ), வெள்ளி (கஅளு), சனி (கடு) நாழிகைவரையிலுமாம். (வருஷாதிநூல்.)
வாரஇராதுகாலங்கள்—ஞாயிறு (உசுவ), திங்கள் (௩ளு), செவ்வாய் (உஉஇ), புதன் (கடு), வியாழன் (கஅளு), வெள்ளி (ககவ), சனி (எஇ), நாழிகைக்குமேல் (௩ளு) நாழிகைவரையும். (வருஷாதிநூல்.)
வாரகசியம்—கொட்டைக்கிழங்கு. (வைத்தியபரி.)
வாரகம்-1. குதிரை. 2 நிலப்பனை. (வைத்தியபரி.)
வாரகி—கடல். (உ-ம்.) வரிற்கொள்க.
வாரகிருமி—அட்டை. (வைத்தியபரி)
வாரகிரம்—சீப்பு முதலியவற்றிற்குக்கூறுவர்.
வாரங்கம்—1. ஆயுதப்பிடி. 2. புட்பொது.
வாரசூந்யம்—ஞாயிற்றுக்கிழமையில் அநுஷம், கேட்டை, மகம், விசாகம், பரணி, மிருகசிரமும், திங்கள்கிழமையில்பூராடம், அநுஷம், மகம், பூரட்டாதி, கார்த்திகை, விசாகமும், செவ்வாய்க்கிழமையில் அவிட்டம், சதயம், திருவோணம், கேட்டை, திருவாதிரையும், புதன்கிழமையில் மூலம், திருவோணம், கார்த்திகை, அவிட்டம், அசுவினி, பரணியும், வியாழக்கிழமையில் மிருகசிரம், பூராடம், இரேவதி, புனர்பூசம், பூசமும், வெள்ளிக்கிழமையில் விசாகம், ரோகணி, அவிட்டம், மிருகசிரம், அஸ்தம், அநுஷமும், சனிக்கிழமையில் அஸ்தம், பூசம், புனர்பூசம், உத்திரம், இரேவதியும் வருவனவாம். (வருஷாதிநூல்.)
வாரசூலத்தின்பரிகாரம்—வடக்கு பால், கிழக்கு தயிர், தெற்கு தயிலம், மேற்கு வெல்லம் இவைகளையுண்டேனுங் கொண்டேனுஞ் செல்லவேண்டும். (அபிதாநசிந்.)
வாரசூலம்—திங்கள் சனி கிழக்கு, செவ்வாய் புதன் வடக்கு, வெள்ளி ஞாயிறு மேற்கு, வியாழன் தெற்கு சூலங்களாம். (அபிதாநசிந்.)
வாரடம்—வயல்.
வாரடி—பலகறை. (வைத்தியபரி.) நிகண்டில் வாரடியென்பர்.
வாரணபுசை—வாழை. (வைத்தியபரி.)
வாரணம்—1. கடல். 2. கவசம். 3. கோழி. 4. சங்கு. 5. தடுத்தல். 6. யானை. (1, 2, 4, 5-சூ. நிக. கக: ரகரவெ. உரு.) (3, 6-மணிமே.)
வாரணவல்லபை-வாழை (வைத்தியபரி)
வாரணவாசி—காசி. (திருவிளை. மூர்த்தி. உ.)
வாரணாசி—காசி. (சூ. நிக. டு: ௬க.) இது: வாரணை அசி யென்னுமிரண்டு நதிகள்கூடுவதால் இப்பெயர் பெற்றது. வாரணா என்பதை வாரணையென்றுங்கூறுவர்.
வாரணாவதம்—துரியோதனன் பாண்டவர்களையிருத்திக் கொல்லுமாறு அரக்குமாளிகையமைத்தவிடம். (அபிதாநசிந்.) பிரயாகையென்றுங்கூறுவர்.
வாரணை—தடுத்தல். (பிங்கல. உககசுஅ.)
வாரத்தண்டு—கறிமுள்ளி. (வைத்தியபரி.)
வாரபகற்துளிகன் — ஞாயிறு. (உசுவ.) திங்கள். (உஉஇ) செவ்வாய். (கஅஷ) புதன். (கடு) விழாம். (ககஇ) வெள்ளி. (எஇ) சனி. (௩ஷ) நாழிகைக்குமேல் குளிகைகாலம். (அபிதாநசிந்.)
வாரபுசை—வாழை. (வைத்தியபரி.)
வாரம் — 1. அன்பு. 2. இயக்கநான்கனுளொன்று. (சிலப்.) 3. எழுகிழமை. இவை: ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி யெனப்படுவனவாம். (அபிதாநசிந்.) 4. கடல். 5. சுரித்கம். (யாப். காரி. செய்யுளிய. கo. உரை.) 6. சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைய பாடல். (சிலப்.) 7. நீர்க்கரை. 8. பங்கு. 9. பக்ஷபாதம். (சிந்தா.) 10. மலைச்சாரல். (1, 4, 7, 8, 10-பிங்கல. ௬oநடு.) சிலப்பதிகாரத்தில், தெய்வப்பாடலென்பர். இன்னும் பலபொருள் கூறுவர்.

வாரம்படல்—பக்ஷபாதமுறல். (சிந்தா.)

வாரல் — 1. அள்ளுதல். 2. ஓலைமுதலிய வாருதல். 3. தவரல் (பிங்கல. கடு௦௦.) 4. மயிர்கோதுதல். 5. வாரற்க. எதிர்மறைவியங்கோள். 6. வாராதே. (ஐங்குறுநூ.) (1, 2, 4-வழக்.)

வாரவிசேஷம் — ஞாயிறு உத்தியோகஞ்செய்ய, திங்கள் விதைவிதைக்க, செவ்வாய் போர்செய்ய, புதன் வித்தியாரம்பஞ்செய்ய, வியாழன் வாதஞ்செய்ய, வெள்ளி மயிர்கழிக்க, சனி தவஞ்செய்ய வுத்தமம். (அபிதானசிந்.)

வாராக்கதி — மீளாதகதி, அது: முத்தி. (சிந்தா.)

வாரார்கம்—ஒரு வடநூல். அது: கணிதநூல் வகைகளிலொன்று. (மணிமே.)

வாராகி—1. ஓர் கிழங்கு. 2. சத்தமாதர்களிலொருத்தி. 3. பெண்பன்றி.

வாராமைக்கழிதல் — ஓர் துறை. இது: நிமித்தம் வேறுபடத் தலைவன் வாராதொழிய அதற்குத் தலைவி வருந்தியது. (புறப்பொ.)

வாரானை—வருகை. ஆனை-தொழிற்பெயர் விகுதி (நன்னூ. பதவியல். கரு. உரை.)

வாராவந்தி—கட்டாயமாய்வந்தது. (வழக்.)

வாராவரத்து—அநீதமாய்வருதல். (வழக்.)

வாரி—1. இசைக்குழல். (பிங்கல. கசஉஅ.) 2. கடல். 3. கதவு. 4. சீப்பு. 5. செண்டுவெளி. 6. நீர். 7. நீளமானகோல். 8. பகுதி. 9. மதில். 10. மதிற்சுற்று. 11. யானையைப்படுக்குமிடம். (பத்துப்பாட்.) 12. வருவாய். 13. வழி. 14. வாயில். (சூ. நிக. ௫: ௫௬.) 15. விளைவு. (புறநா.) 16. வினையெச்சம். 17. வெள்ளம். (2, 3, 6, 8, 9, 10, 12, 13, 15, 17-பிங்கல. ௬௦௫௪.) (7-வழக்.)

வாரிகிருமி—அட்டை. (வைத்தியபரி.)

வாரிசம்—1. உப்பு. 2. சங்கு. 3. தாமரை. (1, 2, 3-வைத்தியபரி.)

வாரிசரம்—மீன். (வைத்தியபரி.)

வாரிசாதம்—தாமரை. (வைத்தியபரி.)

வாரிசாமரம்—நீர்ப்பாசி. (வைத்தியபரி.)

வாரித்தல்—தடுத்தல். சூ. நிக. ௯: உ௯.)

வாரித்திரம்-1.ஓலைக்குடை. 2.சாதகப்புள்.

வாரிதம்—மேகம்.

வாரிதி—கடல். (பிங்கல. ௫அ௪.)

வாரிதித்தண்டு—பவளம். (வைத்தியபரி.)

வாரிநாதம்—சங்கு.

வாரிதிவிந்து—கடல்நுரை. (வைத்தியபரி.)

வாரிநாதன்—வருணன். வாரி-கடல்.

வாரிப்பிரசாதம்-தேற்றுமரம். (வைத்தியபரி.)

வாரிபர்ணி-வள்ளைக்கீரை. (வைத்தியபரி.)

வாரிராசிதம்-வெள்ளிமணல் (வைத்தியபரி)

வாரிரதம்—தெப்பம். வார்-நீர்.

வாரிருகம்—தாமரை. (வைத்தியபரி.)

வாரிவாகம்—மேகம். வாகம்-வாகனம்.

வாரீசம் — 1. கடல். 2. தாமரை. (1, 2-வைத்தியபரி.)

வாருகம்—1. ஆற்றுத்தும்மட்டி. 2. வெள்ளரிசி. (1, 2-வைத்தியபரி.)

வாருகோல் — துடைப்பம். (உ-ம்.) "வங்காளமேறினும் வாருகோலொருகாசு மட்டன்றி யதிகமாமோ" (குமரேசசதகம்.)

வாருண்டம்—எண்காற்புள். (சூ நிக. ௬:௫௬.)

வாருணம் — 1. அட்டாதசோபபுராணத்தொன்று. (பிங்கல. ௪௬௫.) 2. கடல். 3. மாவிலங்கு. (வைத்தியபரி.) 4. மேற்கு. (2, 4-பிங்கல. ௬௦௫௭.)

வாருணி—1. அகத்தியன். வருணன் வீரியத்துகருபிறந்ததனு லிப்பெயர் வந்ததென்பர். (அபிதானசி.) 2. ஆட்டாங்கொடி. (தைலவ.) 3. கள். (பிங்கல. ௧௩௬௬.) 4. சதயநாள். வருணசம்பந்தமுடையதனுலிப்பெயராயினது. 5.வருணன் குமாரி. (அபிதானசிந்.)

வாருதல்—1. கொள்ளல். (சூ. நிக. ௬: ௯௧.) 2. மயிர்கோதுதல். (வழக்.) 3. யாழ்நரம்புகளைக் கூடத்தழுவல். (பத்துப்பாட்.)

வாருதி—சவச்சாரம்.

வாருவகை—தண்ணீர். (வைத்தியபரி.)

வாரேன—வாவென. (பரிபாடல்.)

வாரை — 1. ஆவரை. (வைத்தியபரி.) 2. காத்தண்டு. இது: சுமைதடியென்க. (வழக்.)

வால்—1. இளமை. (சிலப்.) 2. சுத்தம். 3. தோகை. 4. பெருமை. 5. மிகுதி. 6. வெண்மை. (1, 2, 3, 4-பிங்கல. ௬௦௫அ.) 5, 6- சூ. நிக. கக: வகரவெ. கக.)

வால்வெள்ளி—ஓர் நட்சத்திரம். (வழக்.)

வாலகிருமி—பேன். (வைத்தியபரி.)

வாலகில்லர்— } பிரமன் மானசபுத்திரனுகிய கிருது என்பவனுக்குப்பிறந்தவர், தாய் கிரியை, இவர்கள் அறுபதினுயிரவர் அங்குஷ்ட அளவினதாகிய தேகத்தைப்பெற்றவர், மகா தவசிரேட்டர், இவர்கள் நாள்தோறுஞ் சூரியரதத்தைப் பிரதக்ஷிணஞ்செய்துகொண்டிருப்பர், இந்திரனைக் கருடனுலவமானப்படும்படி சாபமிட்டவர், இவர்கள் பிரமன் உரோமங்களில் பிறந்தவர்என்றுங்கூறுவர். (அபிதானசிந்.) இராமா. ஆரணிய. அகத்தியப்படலத்தில். "புண்டையவயன்றருபாலகில்லரும்" என்றார்.
வாலகில்லியர்- }

வாலசிகிச்சை—ஓர் நூல். (சிந்தா.)
வாலதி—விலங்கின்வால். (சூ. நிக. ரு: ௬௨.)
வாலபத்திரம்—கருங்காலி. (மலையக.)
வாலபுட்டி—முல்லை. (மலையக)
வாலம்–1. கந்தைத்துணி.(வழக்.) 2. வால். அம்-சாரியை.
வாலமாலம்—அரிதாரம். (வைத்தியபரி.)
வாலரசம்—சாதிலிங்கத்தில்வடித்த ரசம். (வைத்தியபரி.)
வாலரியுரி—கிளியூறற்பட்டை. (தைலவ.)
வாலவம் — பாலவம். இது புலிக்கரணம். (வருஷாதிநூல். நிக. பக்.)
வாலன்—வாலப்பருவன். (வழக்.)
வாலவாயம்–வைடூரியம். (பிங்கல கஉகக.)
வாலாம்பிகை — திருநெய்த்தானத்திருக்குந் தேவியார் பெயர். (அபிதானகோ.)
வாலாமை—1. ஆசௌசம். இது: சுத்தமின்மையாம். வால்—தூய்மை. (சிலப்.) 2. மகளிர்சூதகம். (சூ. நிக. அ: எக.)
வாலான்—ஓர் நெல். (வழக்.)
வாலி—1. அலாயுதன். 2. கரிக்குருவி. 3. கிட்கிந்தை மன்னன். 4. குதிரைவாலி. (1, 3-சூ. நிக கக: லகரவெ. உரு.) (2, 4-வைத்தியபரி.)
வாலிகை—மணல்.
வாலிதன்று—நன்றன்று. (சிந்தா.)
வாலிசர்—வாலீசர்.
வாலிது–தூயது. (உ-ம்.) "வாலிதாம்பக்கம் இருந்தைக்கிருந்தன்று" (நாலடி. அறிவின்மை. அ)
வாலிபம்—பாலியம். (வழக்.)
வாலிபன் — இளமைப்பருவமுடையவன். (வழக்.)
வாலிய—வெள்ளிய. (ஐங்குறுநூ.)
வாலியம்—பாலியம்.
வாலியோன்—பலராமன். (புறநா.)
வாலீசர்—வாலிபர். (உ-ம்.) "பாலரொடு வாலீசர்" (சி. சி. சு-பக். ௬.)
வாலீசுவரர்—குரங்கணின் முட்டத்திலேயிருக்குஞ் சுவாமிபெயர். (அபிதானகோ.)
வாலு—வாலுளுவையரிசி.(வைத்தியபரி.)
வாலுகப்பிரபை-எழ்நரகவட்டத்தொன்றுசுடுமணல்வட்டம் (சூ. நிக. கஉ: எஉ.)
வாலுகம்—1. மணல். (வைத்தியபரி.) 2. வெண்மணல். (பிங்கல. ருடுஉ.)
வாலுகை—வாலுளுவை. (வைத்தியபரி.)
வாலுங்கி—1. கக்கரி. (பிங்கல. உகுகக.) 2. வாலுளுவையரிசி. (வைத்தியபரி.)
வாலுறை—அடுப்பு. (வைத்தியபரி.)
வாலுவர்—மடையர். (பிங்கல. அஉக.)
வாலுளுவை—ஓர் மருந்து. (வழக்.)
வாலூகம்—நஞ்சு. (வைத்தியபரி.)
வாலேபம்—கழுதை. (பிங்கல. உ௬கூஉ.) சூ. நிகண்டில். வாலேயமென்பர்.
வாலை — 1. இரசம். (வைத்தியபரி.) 2. இளமைப்பருவம். (வழக்.) 3. ஓர் சத்தி—வாலாம்பிகையார். 4. திராவகம் வடிக்கும் பாத்திரம். (வைத்தியபரி.) 5. பன்னிருவயதிற்பெண். (வழக்.)
வாலைசாரம்–சத்திசாரம். (வைத்தியபரி.)
வாலைரசபதிகாரம்—சீனக்காரம். (வைத்தியபரி.)
வாவயம்—துளசி. (வைத்தியபரி.)
வாவரியுரி—கிளியூறற்பட்டை. (தைலவ.)
வாவல்—1. கடத்தல். 2. வௌவால். (1, 2-சூ. நிக கக: வகரவெ. கூ.)
வாவி–குளம். (பெரியபு. தடுத்தாட். கசுரு.)
வாவுதல் — தாவுதல். (இராமா. பாலகா. அகலிகைப். ருசு.)
வாழ்க்கை—1. ஊர். (சூ. நிக. ருு: ௬௬.) 2. செல்வம். (சூ. நிக. அ: ருஉ.) 3. மருதநிலத்தூர். (சூ. நிக. ருு: ௬௦.) 4. வாழ்தல். கை—தொழிற்பெயர் விகுதி. 5. வாழ்நாள். (பதிற்றுப்பத்.)
வாழ்க்கைத்துணை — இல்லவள். (சூ. நிக. உ: எகூ.)
வாழ்கென—வாழ்க. (சிந்தா.) ஈறின்று.
வாழ்ச்சி—வாழ்நாள். (பதிற்றுப்பத்)
வாழ்த்தல்—துதித்தல். (உ-ம்.) "வாழ்த்த வாயுநினைக்க மடநெஞ்சும்" (தேவார. திருநாவுக்கர. தனித்திருத். எ.)
வாழ்த்து — 1. ஆசீர்வாதம். (காஞ்சிப். ஒழுக்கப். கஉ.) 2. ஓரலங்காரம். (தண்டி. பொருளணி. ருரு.) 3. சோபனம் பாடுதல். (வழக்.) 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. மங்களாசரணைமூன்றிலொன்றுமாம். (தண்டி. பொதுவியல். எ.)
வாழ்த்துதல்—வாழ்த்தல்.
வாழ்த்துவிலக்கு — ஓரலங்காரம். அது: வாழ்த்தி தன்னிலைமைகுறித்து விலக்குவது. (தண்டி. பொருளணி. கூ.)
வாழ்தல்—உயிர்வாழ்தல். (வள். ககரு௬.)
வாழ்நர்—வாழ்வோர். (புறநா.)
வாழ்வாட்டி—சுமங்கலி. (வழக்.)
வாழ்விழந்தாள்—அமங்கலி. (வழக்.)
வாழ்வு—சீவிதம். (சிந்தா.)
வாழகம்—குந்திருக்கம். (வைத்தியபரி.)
வாழபுளப்பி—முல்லை. (வைத்தியபரி.)

வாழவந்தநாயகி — திருவாஞ்சியத்திருக்கும் தேவிபெயர். (அபிதானகோ.)
வாழாக்கேடி - விவாகமுற்றிருந்தும் வாழாமற் கேடுற்றிருப்பவள். (வழக்.)
வாழி—1. முன்னிலையசை இடைச்சொல். (சூ. நிக. கo: கக.) 2 வாழியவென்னும் வியங்கோள் ஈறுகெட்டுவாழியெனவும் வரும். (நன்னூ. உயிரீற்றுப். கஅ.)
வாழித்தல்- } மதர்த்துவளர்தல். (வழக்.)
வாழிப்பு — }
வாழிய—1. முன்னிலையசைச்சொல். (நன்னூ. இடையியல். உக.) 2. வாழ்த்துப்பொருளில் வரும் வியங்கோள் வினைமுற்று. (நன்னூ. வினையியல். கக.)
வாழியர்—வாழ்க (ஐங்குறுநூ.)
வாழுதல்—வாழ்தல். (வழக்.)
வாழுமோர்—வாழ்பவர். (பதிற்றுப்பத்.)
வாழை—கதலி. (சூ. நிக. ச: கஉ.)
வாழைப்பழத்தி — எருமைநாக்கிப் பூடு. (வைத்தியபரி.)
வாள்—1. ஒளி. 2. வாளாயுதம். (1, 2-பிங்கல. சoருக.)
வாள்கைக்கொண்டாள் — துர்க்கை. (சூ. நிக. க: சக )
வாள்வரிக்கொடுங்காய் — வளைந்த வரிகளையுடைய வெள்ளரிக்காய். (சிலப்.)
வாள்வீரம்—கூவிளமரம் (பரிபாடல்.)
வாளகம்—வெட்டிவேர். (வைத்தியபரி.)
வாளம்–1. சக்கரவாளகிரிக்கும் பெயர்கூறுவர். 2. சக்கரவாளப்புள். (இராமா. கிட்கிந்தா. பம்பை. உச.) 3. நேர்வாளம் (வைத்தியபரி.) 4. வாள். அம்-சாரியை.
வாளரம்—ஒருவகையரம். (மணிமே.)
வாளவரை—ஓரவரை. (பதார்த்தகுணசிந் எஅஉ.)
வாளா—1. சும்மா, பயனில்லாமை. (திருவிளை. இடைக்காடன் பிணக். எ.) 2. மௌனம். (சூ. நிக. க: ருரு.)
வாளாண்மை—1. வாளாற்செய்யும் ஆண்மை. 2. வாளையாளுந்தன்மை.(1,2-வள் கூஉச. உரை.)
வாளாமை—சும்மாயிருக்குந்தன்மை. மை-விகுதி. மௌனமாம்.
வாளி—1. அம்பு. (இராமா. உத்தரகாண்டம். இராவணன்வதை. ககஅ.) 2. மாதர்காதணியிலொன்று. (வழக்.) 3. வட்டம். (சிந்தா.) 4. வட்டமாயோடல். (சூ. நிக. க: சஉ.)
வாளியம்பு—அலகம்பு. (சிந்தா.)
வாளுழவன்–வாட்படைவீரன். (திருவிளை. அங்கம்வெட். கச )
வாளை — ஓர்மீன். (இராமா. உயுத்தகாண்டம். முதற்போர்ப். உருக.)
வாளைகடியன்–விடமுள்ள ஓர்கடற்பாம்பு. (வழக்குண்டுபோலும்.)
வாளேறு—வாள்வெட்டு. (சிந்தா.)
வாற்கோதுமை — ஒருவகைத் தானியம். (வழக் )
வாற்சல்லியம்—சிநேகம். (வழக்.)
வாறது—அரியாது. (பத்துப்பாட்.)
வாறன்—கப்பலின்கயிறு. ஓர் சூழுஉக்குறி.
வான்—1. ஆகாயம். 2. இடைச்சொல். 3. ஓர் மரம். 4. பெருமை. 5. மழை. 6. மேகம். 7. வலி. (1, 2, 3, 4, 5, 6, 7-பிங்கல. சoகூஉ.)
வான்துணம்—ஒலி. (பரிபாடல்.)
வான்கொடி—வானவல்லி, மின்.
வான்கோழி—ஓர் கோழி. (உ-ம்.) "கானமயிலாடக்கண்டிருந்தவான்கோழி"என்று மூதுரையிற் கூறுவர்.
வான்பயிர் — மழைநீரைநோக்கியிருக்கும் புன்னிலப்பயிர். (வழக்.)
வான்புலம்—உண்மையறிவு. (சிந்தா.)
வான்மிளகு—ஓர் மிளகு. (வைத்தியபரி.)
வான்மீகபலம்—எலுமிச்சை. (வைத்தியபரி )
வான்மீகம்–1. குங்குமப்பூ.(வைத்தியபரி.) 2. வான்மீகியாலியற்றிய இராமாயணம். (வழக்.)
வான்மீகி — இராமாயணஞ்செய்தவோர் முநிவர். (இராமா. பாலகா. நாட்டுப்படலம்.க.)
வான்மீகியார் — 1. ஒரு புலவரென்பர். இவர் பாடலொன்று புறநானூற்றிலுள்ளது. 2 முதற்சங்கத்திருந்த ஒரு சிறந்த தமிழ்ப்புலவர். (அபிதானகோ.) இவர்செய்த நூலை நச்சினார்க்கினியர். தலையாயவோத்தென்பர்.
வான்மீன்—நட்சத்திரம். (பிங்கல. உகூக )
வானக்கல்-1.காக்கைக்கல். 2 வீடுமுதலியவற்றின் அஸ்திபாரக்கல்லென்றுங்கூறுவர்.
வானகம்-1. தேவலோகம். (உ-ம்) "வானகங்கையுறினும்வேண்டார்" (நாலடி. மானம். கo.) 2. மஞ்சாடி. (வைத்தியபரி.)
வானசாத்திரம்–நாள்கோள்களின்போக்குவரவுமுதலியவற்றையறியுநூல். (வழக் )
வானட்சத்திரம்—வால்வெள்ளி. (வழக்.)
வானநாடு—1. தேவலோகம் (திருவிளை. இந்திரன்முடிமேல்வளை. கூஅ.) 2. பொன்னாங்காணி. (வைத்தியபரி )

வானப்பிரத்தம் — 1. இலுப்பை. (வைத்தியபரி.) 2 நான்காசிரமங்களிஞென்று, அது: வனத்திற்றவஞ்செய்தல். (பொருட்டொகை.) வள். சக. உரை. 3. பலாசு. (வைத்தியபரி.)

வானப்பிரத்தன் – வனத்திற்றவஞ்செய்யு மூன்ருமாசிரமி. (அபிதாநசி.)

வானப்பிரத்தி — 1. பூவாதுகாய்க்குமரம். (வைத்தியபரி.)2. வனத்திற்றவஞ்செய்பவள்.

வானப்பிரியை—இலுப்பைமரம். (வைத்தியபரி.)

வானபத்தி—பூவாதுகாய்க்குமரம். (வைத்தியபரி.)

வானபத்தியம்—பலாசு (வைத்தியபரி,)

வானம் — 1. வீடுமுதலியவற்றின் அஸ்திவாரம் (வழக்.) 2. ஆகாயம். 3. உலர்மரம். 4. மரக்கனி. 5. மழைமுதலியவற்றிற்கும் பெயர் கூறுவர். (2,3,4-பிங்கல. சoகூo.) (5-மணிமே.)

வானம்பாடி—சாதகப்புள். (ஐங்குறுநூ.)

வானமடை—கௌரிபாஷாணம். (வைத்தியபரி.)

வானமாதேவியாண்டான்—நாதமுனிகளையாசிரியித்த ஸ்ரீவைஷ்ணவர். (அபிதாநசி.)

வானமாமலைஜீயர் — மணவாளமாமுனிகளாலேற்படுத்தப்பட்டவர். (அபிதாநசி.)

வானரக்கொடியோன் — அருச்சுநன். (பிங்கல. எசஈ)

வானரகதி—குதிரைக்கதியைந்திஞென்று. (சூ. நிக. கஉ: சக.)

வானரநேயம்—பழமுண்ணிப்பாலை.(மலையக.)

வானரப்பகை—நண்டு. (வைத்தியபரி.)

வானரம்—குரங்கு. (பிங்கல. உ௫0ஈ.)

வானலம்—ஒருவகைத்துளசி. (வைத்தியபரி.)

வானவர்—தேவர். (பிங்கல. களஎ.)

வானவரம்பன்—சேரன்.(சூ. நிக. உ: கஅ)

வானவல்லி—மின்னுக்கொடி. (சிலப்.)

வானவன் — 1. சேரன். (பிங்கல. எச௫) 2. தேவன். (இராமா. சுந்தரகா. காட்சிப் கூ)

வானவில்—இந்திரவில். (பிங்கல. அகூ.)

வானவூர்தி—விமானம். (புறநா)

வானுசி—கார்போகரிசி. (வைத்தியபரி.)

வானி—1. ஆன்பொருந்நதி. 2. துகிற்கொடி. 3. படை. 4. மேற்கட்டி. 5 வானிப்பூ. (பத்துப்பாட்.) (1, 2, 3, 4-பிங்கல. சoகூக.)

வானிதி—மனேசிலை. (வைத்தியபரி.)

வானியம்—வனம்.

வானிறை—நீர்நிறைந்தமேகம். (பரிபாடல்.)

வானிரியம்—போரமுட்டி. (வைத்தியபரி.)

வானீரம்—நீர்வஞ்சி. (வைத்தியபரி.)

வானுயர்—வானிலுள்ளாள். (சிந்தா.)

வானுலகம்—சுவர்க்கம். (பிங்கல. க.)

வானேறு—இடி. (பிங்கல. கூo.)

வானேர்—வானவர். (சூ. நிக. க: சஉ.)

வானேர்கோமான்—இந்திரன். (சூ. நிக. க: உo.)

வானேர்முதுவன்—பிரமன். (சூ.நிக.க.கஈ.)

வானேர்வரம் — தேவர்கள்பேறு நான்கு. அவை: இலகு, சூக்குமம், அக்ஷயம், பிரகாசம் முறையே, இலகு—கனமின்மை. சூக்குமம்—கண்டிப்பின்மை, நுண்மையுமாம். அக்ஷயம்—கேடின்மை பிரகாசம்—சோதிமயம். பொருட்டொகை. நிக. ஈஈஎ, ஈசக-வரையறிக.

## வி.

வி - 1. அதிகம், அறிவு, இன்மை, நிச்சயம், பிரிவு, வித்தியாசம், வெறுப்பு இவற்றைக் காட்டும் ஓர் உபசர்க்கம். உதாரணம் பின்வந்துழிவந்துழிக்கண்டுணர்க. 2. ஆகாயம். 3. திசை. இன்மையன்றி பிறிது, மறை யென்னும் இருபொருளிலும் வருமென்பர். (இலக்கணக்கொத்து. ஒழிபிய. கச. சூத்திரத்தில்.

விக்கம்—யானைக்கன்று.

விக்கல்—ஓர் நோய், விக்குதல். (வழக்.)

விக்கிதம் — குதிரை ஐங்கதியிஞென்று. (சிந்தாமணி. காந்தருவதத்தையாரிலம்பகம் உகஉ. கவியுரை.)

விக்கியாதம் } கீர்த்தி. (வழக்.)
விக்கியாதி— }

விக்கியாபனம்—விக்ஞாபனம், அறிவிப்பு. (வழக்.)

விக்கியானம்—கல்வி. (வழக்.)

விக்கிரகம்—1. உடம்பு, உருவம். (பிங்கல. கூகச.) 2. பிரிவு. (வள். கூகூ. அதிகாரம். முகவுரை.)

விக்கிரம — பதினைன்காவதாண்டு. (வருஷாதிநூல்.)

விக்கிரமகஞ்சுகபாண்டியன்—ஒரு பாண்டியன். (அபிதாநசி.)

விக்கிரமசிங்கன் – விக்கிரமாதித்தனென்பர்.

விக்கிரமசோழன்—ஒரு சோழன். (அபிதாநசி.)

விக்கிரமபாண்டியன்—ஓர் பாண்டியன். (அபிதாநசி.)

விக்கிரமம்—1. ஒழுங்கு வித்தியாசம். வி-வித்தியாம்-கிரமம்-ஒழுங்கு. 2. பராக்கிரமம். (திருவிளை. யானையெய். உ.)

விக்கிரமவாதுபாண்டியன்-ஒரு பாண்டியன். (அபிதானசிங்.)

விக்கிரமாதித்தன்— } பாணவம்சத்தரசன்
விக்கிரமார்க்கன்— } (அபிதானசிங்.) பவியின் வம்சத்தவனென்றுங்கூறுவர். உச்சயினி புரத்தரசனென்றுங்கூறுவர்.

விக்கிரமி—1. சிங்கம், பராக்கிரமத்தையுடையதென்பது. 2. பராக்கிரமத்தையுடையவனென்பதுமாம்.

விக்கிராந்தம்—வீரம். (வைத்தியபரி.)

விக்கிரோசனம்—இகழ்ச்சி.

விக்கினகரம்—விக்கினந்தடுத்தல்.

விக்கினம்-இடையூறு. (சூ. நிக. அ: கூஎ.)

விக்கினேசன்— } விநாயகன். தன்னை
விக்கினேசுவரன்— } வேண்டினவர்க்கு விக்கினத்தைத்தீர்ப்பதற்கும், வேண்டாதவர்க்கு விக்கினத்தைக்கொடுப்பதற்குந் தலைவனாதலால் இப்பெயராயிற்றென்பர்.

விக்குள் — விக்கல். உள்தொழிற்பெயர் விகுதி. (நன்னூ. பதவிய. கரு. உரை.)

விகங்கதம்—இலந்தை. (வைத்தியபரி.)

விகங்கம்—1. அம்பு. 2. அன்னம். (பிங்கல உகுகக.) 3. பறவை. (பிங்கல. உகுகரு.)

விகசதா—மூக்கிரட்டை. (வைத்தியபரி.)

விகசம்—1. மஞ்சாடி. (மலைய்க.) 2. மலர்தல்.

விகசனம்—புன்னகை.

விகசித்தல்—மலர்தல். (வழக்.)

விகசிதம் — 1. புனமுருக்கு. (வைத்தியபரி.) 2. மந்தகாசம். 3. மலர்தல். (2, 3-வழக்.)

விகடகவி — பரிகாசக்கவிசொல்வோன். (வழக்.)

விகடசக்கரன்—காஞ்சிவிநாயகர். (காஞ்சிப். பாயிர. உ.)

விகடம்—வேறுபாடு. (சூ. நிக. அ: சுரு.)

விகடி-விகடஞ்செய்பவன், விகடஞ்செய்பவள். (வழக்.)

விகண்டிதம்—கண்டிப்பின்மை. (வழக்.) வி-இன்மை.

விகண்டித்தல்— } விகண்டிதம்.
விகண்டிப்பு— }

விகணனம் — மிகுதியாகக்கணித்தல். வி-மிகுதி. கணனம்-கணித்தல்.

விகணிதம்—கணிப்பிலாமை.

விகதம்-இட்டமானது. } உதாரணம்வரிற்
விகதி—தோழன். } கொள்க.

விகந்தகம்—இலந்தை. (வைத்தியபரி.)

விகதநம்—கதநமின்மை.

விகமநம்—வித்தியாசநடை. கமனம்-நடை.

விகமம்—பிரிவு. (வைத்தியபரி.)

விகர்ணன் — துரியோதனன்றம்பி. (அபிதானகோ.)

விகர்த்தன்—சூரியன். (பிங்கல. உசo.)

விகரம்—1. இயைபின்மை. 2. நோய். 3. பிரிவு 1, 2, 3- (உ-ம்.) வரிற்கொள்க.

விகலம்—குறைபாடு. (பிங்கல. உஉகo.)

விகலாசுரன்-பாற்கடலில்வந்து தேவரை வருத்திசசிவமூர்த்தியாற் கிழியுண்டிறந்தவன். (அபிதானசிங்.)

விகலிதம்—1. சிந்தல். 2. வடிதல். (வழக்.)

விகலை—காலநுட்பம். (சூ. நிக. க: எகூ.)

விகற்பத்தின்முடித்தல்- விளங்குதற்பொருட்டுப் பலவேறுபாடுகளின்சிறப்புவாய்ப்பாட்டால் முடித்தலாம். (நன்னூ. பொதுப்பா. கசு.)

விகற்பம்—1. உறழ்ச்சி. (நன்னூ. உயிரீற்றுப். கக. உரை.) 2. வேறுபாடு. 3. பேதம். (2, 3-தர்க்காமிர்தம்.)

விகற்பித்தல்—வேறுபடுத்தல்.

விகற்பு—விகற்பித்தல் பு-தொழிற்பெயர் விகுதி.

விகன்னன்—செவிடன். வி—இன்மை—கன்னம்—காது.

விகனம்—கனமில்லாதது. வி—இன்மைப் பொருளில் வந்தது.

விகாகம்—அமிழ்ந்துதல்.

விகாசதம்—விகாசம்.

விகாசம்— } 1. விரித்தல். (வழக்.) 2.
விகாசனம்— } வெளிப்படுத்தல்.

விகாதம்—விரோதம். (வழக்.)

விகாதித்தல்—விகாதஞ்செய்தல். (வழக்.)

விகாய்—ஓர் மரம். (வைத்தியபரி.)

விகாரப்புணர்ச்சி — நிலைமொழியேனும் வருமொழியேனும், இவ்விருமொழியுயேனுந் தோன்றல் திரிதல் கெடுதலென்னும் விகாரத்தோடுபுணர்வது. இலக்கணச்சுருக்கம். புணரியல்.

விகாரம்-1. காமக்கவலை. 2. வேற்றுமைப் படுதல். (1, 2-வழக்.)

விகாரவுவமை-ஓரலங்காரம். உவமையை விகாரப்படுத்தி உவமிப்பது. (தண்டி. பொருளணியில். கஎ.)

விகாரி — 1. இருபத்திரண்டாவதாண்டு. (வருஷாதிநூல்.) 2 விகாரமுடையவள் விகாரமுடையவன் என்றும் பொருளாம்.

விகாரித்தல்—1. பேதித்தல். 2. மோகித்தல். (1, 2-வழக்.)
விகிதம்—1. சிநேகம். (வழக்.) 2. விதிக்கப்பட்டது. (தர்க்காமிர்தம்.)
விகிர்தி — 1. இருபத்துநான்காவதாண்டு. (வருஷா.) 2. விகுதி. (நன்னூ. பதவிய. சு. உரை.) 3. வேறுபாடு. (பிங்கல. கஅகக௬.)
விகிரம்—பறவை. (சூ. நிக. ௩: ௬அ.)
விகிருதம்—செய்யப்படாதது. கிருதம்—செய்யபபட்டது.
விகிருதாசுரன் — விநாயகராலிறந்தவன். (அபிதாநசிந்.)
விகிருதி—1. விகிர்தியென்னும் இருபத்துநான்காவது வருடம். (வருஷாதி) 2 வேறுபடுதல். (வழக்.) 3. கவலை முதலியவற்றிற்குப் பெயர்கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.
விகீரணம்—எருக்கிலை. (வைத்தியபரி.)
விகுணம்—குணமின்மை. (வழக்.)
விகுணி-1. கள். (சூ. நிக. அ: ௩௦) 2 குணமில்லாதவள். (வழக்.)
விகுதி—1. பகுபதவுறுப்பினொன்று. (நன்னூ. பதவிய. சு.) 2 விகாரம். (நனனூ. விருத். பதவிய. சு. உரை)
விகுரம்—வெள்ளெருக்கு. (வைத்தியபரி.)
விகூனிகை—மூக்கு. (வைத்தியபரி)
விகேடகன்—தீங்குசெய்வோன்.
விகேடம் — } தீங்கு, துக்கம்.
விகேடனம் - }
விகௌதுகம் — சந்தோஷமின்மை முதலிய பொருளைத்தரும். கௌதுகம்-சந்தோஷ முதலிய பொருளைத்தருதலைக்கௌதுகம் என்னும் பதத்தைப்பார்த்தறிக.
விங்களம்—கபட முதலியவற்றிற்குப் பெயரென்பர். (உ-ம்.) வரிற்கொள்க.
விங்களித்தல் — சூதுசெய்தன் முதலிய பொருளைத்தருமென்பர். (உ-ம்.) வரிற்கொள்க.
விச்சதையன் —புல்லூரி. (வைத்தியபரி.)
விச்சநந்தா—வெள்ளெருக்கு. (வைத்தியபரி.)
விச்சல்லி—பேய்த்திம்மட்டி. (வைத்தியபரி.)
விச்சலன் — கலியாணபுரத்தையாண்ட சமணராசன். (அபிதாநசிந்.)
விச்சாதரர்—வித்தியாதரர். (தண்டியலங். பொருளணியிய. எசு. உரை.)
விச்சிக்கோன்—கபிலராற் பாடப்பெற்ற ஓர் சிற்றரசன். (புறநா.)
விச்சித்திரம்—விசித்திரம்.
விச்சிரமம்—ஓய்வு. (வழக்.)
விச்சிராந்தி—விசிராந்தி, ஓய்வு. (வழக்.)
விச்சிரானம்—பேதிமருந்து.
விச்சிரிப்பு—சீச்சிலுப்பான். (வழக்.)
விச்சிறல்—கோரை. (மலையக.)
விச்சிரவா — விசிரவசு முனிவருக்கு ஒரு பெயர். (அபிதாநசிந்.)
விச்சிரவாது—புலத்தியன் குமரன். (அபிதாநசிந்.)
விச்சின்னம்—வேறுகாத்தன்மை.
விச்சு-வித்து. (உ - ம்.) "விச்சின்றிநாறு செய்வரனும்" (திருநாவுக்கர. தேவார. திருவாரூர். உ.)
விச்சுவகன்மன்—இவன்றேவ கம்மாளரிலொருவன்.
விச்சுவகாசிபம் — சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.)
விச்சுவகாரணன்—தன்திருவுருவில் உலகந்தோன்றியொடுங்குமாதலாற் சிவபிரானுக்கு விச்சுவகாரணனென்று ஒரு பெயராம். (சி. சி. க: சஅ. உரை.)
விச்சுவசாரம்— } சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.)
விச்சுவதருமம்- }
விச்சுவதேவர்—விசுவதேவர், பிதிர்த்தேவர்களிலொருவகையார்.
விச்சுவநாதன்—சிவபிரான், உலகநாதனென்பதாம்.
விச்சுவநேமிதானம்—ஒரு தானம். (அபிதாநசிந்.)
விச்சுவபோதம் — சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.)
விச்சுவம்—விசுவம், உலகம். (சி. சி. க: சஅ. உரை.)
விச்சுவரூபி-உலகமாய் நிற்றலால் விச்சுவரூபியென்று சிவபிரானுக்கொருபெயர். (சி. சி. க: சஅ. உரை.)
விச்சுவாதிகன்—உலகினைக்கடந்து நிற்றலாற் விச்சுவாதிகனென்று சிவபிரானுக்கொரு பெயர். (சி. சி. க: சஅ. உரை.)
விச்சுவாவசு-ஒருகந்தருவன் (திருவிளை. தடாதகைப். கூடு.)
விச்சுவேசம்-சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.)
விச்சுவேசன்—விசுவேசன், சிவபிரான்.
விச்சுளி-ஓர் பறவை. (வைத்தியமூ.அக.)
விச்சை—1. அறிவு. (திருவிளை. விருத்தகுமார. அ.) 2. தெரு. (பிங்கல. கசூ௦.) 3. வித்தை, கல்வி (சூ. நிக. க௦: உ௦.) 4. வெள்ளெருக்கு. (வைத்தியபரி)

விசத்துரு—அடம்பு. (மலையக.)
விசதம்-1. அழகு முதலியவற்றிற்குக்கூறு வர். (உ-ம்.) வரிற்கொள்க. 2. வெளிப்படை. (வழக்.)
விசப்பிரசூனம்-தாமரை.(வைத்தியபரி.)
விசம்—தாமரைநூல். (மலையக.)
விசமம்—சமமின்மை. (வழக்.)
விசய-இருபத்தேழாவதாண்டு. (வருஷாதி நூல்.)
விசயச்சந்தம் — எழுநூறுகோவை முத்துத்தாழ்வடமென்பர்.
விசயநகரம்-ஓர் பட்டினம். அது கன்னடதேசத்திலுள்ள இராஜதானியென்பர். (அபிதாநசிந்.)
விசயம்-1. சருக்கரை. 2. சிவாகமம் இருபத்தெட்டினொன்று. (பொருட். நிக.) 3. சூரியமண்டலம். 4. வெற்றி. (1, 3, 4-சூ. நிக. கக: சகரவெ. கரு.)
விசயன்—1. அர்ச்சுனன். (சூ.நிக.உ:கஎ.) 2. வெற்றியுடையவன்.
விசயர்—விட்டுணுபத்தரிலொருவர். (அபிதாநசிந்.)
விசயார்த்தம்—கைலைமலை. (சூ.நிக.டு:கரு.)
விசயை-1. சீவகனுடையதாற்றாய்.(சிந்தா.) 2. துர்க்கை. (சூ. நிக. க: சo.)
விசர்க்கம்—தள்ளுதல், விடுதல் முதலிய பொருளைத்தரும். (வழக்.)
விசர்ச்சனம்—விடுதல். (வழக்.)
விசர்ப்பம்—1. ஓர் சிலந்தி. 2. பரத்தல். 1, 2-(உ-ம்.) வரிற்கொள்க.
விசரி—தும்பை. (வைத்தியபரி.)
விசலம்—1. கஞ்சி. 2. தளிர். (1, 2-வைத்தியபரி.)
விசலி—சீந்தில். (வைத்தியபரி.)
விசலிதன்—சலனகுணமுள்ளவன்.
விசவல்லி—கீழ்காய்நெல்லி. (மலையக.)
விசளம்—விசலம். (வைத்தியபரி.)
விசளை—சட்டி. (சூ. நிக. எ: சுஎ.)
விசனம்—துன்பம். (வழக்.)
விசாகதத்தன்—முத்திராராக்ஷசம் என்னும் நாடகஞ்செய்த ஓர் கவிஞர். (அபிதாநகோ.)
விசாகம் — ஓர் நட்சத்திரம். (சூ. நிக. க: எச.)
விசாகன்—குமரன். (திவாகரம் க: ச.)
விசாதி—அந்நியசாதி. அஃதாவது, மாவும், இலுப்பையும், ஒன்றினுக் கொன்றந்நிய சாதியென்றறிக. (சிவஞா. சித்தி. அளவை. டு. உரை.)
விசாரகன்-ஞாயம் விசாரிப்பவன்.(வழக்.)
விசாரசருமர்-சண்டேசுரநாயனார். (பெரியபு. சண்டேசுர. கஉ.)
விசாரணம்—1. கொலை. 2. தியானம்.
விசாரணை-1. ஆராய்ச்சி. 2. விசாரித்தல். (1, 2-வழக்.)
விசாரம்—1. ஆலோசனை. 2. கவலை. (1, 2-வழக்.)
விசாரி — 1. தெரிநிலைவினைப்பகுதி. 2. விசாரமுடையோன்.
விசாரித்தல்-, விசாரிப்பு— } 1.ஆராய்தல். 2. விசாரணைசெய்தல். (1, 2-வழக்.)
விசாலம்—1. அகலம். (சூ. நிக. அ: கூ.) 2. கடம்பு. (மலையக.) 3. கிரிவிரசத்திற்கும் மிதிலைக்குமிடையிலேஉள்ளநாடு.(அபிதாநகோ.) 4. சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று. (பொருட். நிக.) 5. பேய்த்திமிட்டி.(வைத்தியபரி.)
விசாலாக்ஷி — காசியிலிருக்குந் தேவியார் பெயர், விசாலமான கண்ணை யுடையவள். (வழக்.) திருப்பைஞ்ஞீலி, திருப்பாச்சிலாச்சிராமம் இவற்றிலெழுந்தருளியிருக்குந் தேவியார் பெயருமாம். (அபிதாநகோ.)
விசாலித்தல்-, விசாலிப்பு— } விரிதல். (வழக்.)
விசாலை—கங்கைக்கரையிலுள்ள ஓர் பட்டணம். (அபிதாநசிந்.)
விசி—1. அரி. (சூ. நிக. எ: டுஉ.) 2. அலை. 3. தெரிநிலைவினைப்பகுதி. 4. வார்.
விசிகம்—அம்பு. (பிங்கல. கடுருகூ.)
விசிகரம்-அலை. (உ-ம்) (திருக்குற்றாலப். பாயிரம். அம்பரத்தின்விசிகரம்போல்.)
விசிகிலம்—மல்லிகை. (வைத்தியபரி.)
விசிகை—முலைக்கச்சு. (பிங்கல. கஉகo)
விசிட்டம்-1. மேன்மை. (வழக்.) 2. விசேஷணத்தோடுகூடியது. (தர்க்காமிருதம்.)
விசிட்டாத்வைதம் — ஒரு மதம். இது, விட்டுணுவைப் பரமாகக்கொள்ளுமதம். (அபிதாநசிந்.) அத்துவிதம் எனபதில் விசிட்டம் என்னுமடைக் கட்டிக்கூறினர்என அத்துவித வாக்கியத்தெளிவுரை முதலிற் கூறியிருக்கின்றார். ஆண்டுக்காண்க.
விசித்தல்—கட்டல். (சூ. நிக. கூ: உரு.)
விசித்தி — பிரித்தல் முதலியவற்றிற்குங் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.
விசித்திரம்—1. அதிசயம். (வழக்.) 2. பேரழகு.
விசித்திரவீரியன் — சந்திரகுலத்தரசன். இவன் சந்தனுகுமாரன். (அபிதாநசிந்.)
விசித்திராங்கம்—மயில்.
விசிதம்—விபூதி.

விசிதவேர்ளியுப்பு — வளையலுப்பு. (வைத்தியபரி.)
விசிப்ப—விம்ம. (புறநா.)
விசிப்பு — விசித்தல். பு—தொழிற்பெயர் விகுதி.
விசிமந்தம் — வேம்பு. (வைத்தியபரி.) நிகண்டிற் பிசிமந்தமென்பர்.
விசிமிகினி—வேம்பு. (மலையக.)
விசிரகந்தி — பொன்னரிதாரம். (வைத்தியபரி.)
விசிரவசு — புலத்தியன் புத்திரன். (அபிதானகோ.)
விசிராமம்—மனமமைதி.
விசிலம்—கஞ்சி. (வைத்தியபரி.)
விசிறி—சிற்றாலவட்டம். (சூ. நிக. எ: ௩அ.)
விசிறுதல்—வீசுதல். (வழக்.)
விசினி—தாமரைப்பூந்திரள். (வைத்தியபரி.)
விசு—1. அதிவிடையம். (வைத்தியபரி.) 2. பதினைந்தாவதாண்டு. (வருஷாதிநூல்.)
விசுக்கிடுதல்—விதனப்படுதல். (வழக்.)
விசுக்கெனல்—சீக்கிரக்குறிப்பு. (வழக்.)
விசுத்தம்—மிகுசுத்தம். வி—அதிகம்.
விசுத்தி—1. அடிநாத்தானம். அஃது ஆறு தாரத்தொன்று. (பொருட். நிக.) 2. மிக்கசுத்தம். வி—அதிகம்.
விசுதம்—தறிப்புடோல். (வைத்தியபரி.)
விசும்பு—1. ஆகாயம். 2. திசை. 3. தேவலோகம். 4. மேகம். 5. வீம்பு. (வழக்.) (1, 2, 3, 4-பிங்கல. ச௦௩௩, ச௦௬௪.)
விசும்புதல் — அசட்டையாய் விலக்கல். (வழக்.)
விசுநுதி—கீர்த்தி.
விசுவகர்மன்- } விசுவகன்மா- } தேவதச்சன், பிரபாசனுக்கு யோகசித்தி யிடத்திற் பிறந்த புத்திரனென்பர். (அபிதானகோ.)
விசுவசித்து-பதினெட்டு யாகத்தொன்று. (பொருட். நிக.)
விசுவசேநர் — சேனைமுதலியார். (அபிதானசிந்.)
விசுவதினம்-இராப்பகல் நாழிகை சரியாயிருக்கு நாளென்பர். (சோதிடர்.)
விசுவதேவர்-1. சிவபிரானுக்கொருபெயர் உலகிற்குத்தெய்வமாயுள்ளவர். 2 பிதிரர்களிலொரு வகையார். சிராத்ததினத்திற் பூசிக்கப்படுபவரென்றும், அவர்பதின்மரென்றுங் கூறுவர் அபிதானசிந்தாமணியில்.
விசுவநாக்கரம்—1. சுக்கு. 2. வேர்க்கொம்பு. (1, 2-வைத்தியபரி.)
விசுவநாதன் — 1. சிவனுக்கொருபெயர். உலகநாயகனென்பதுபொருள். 2. காசியிலெழுந்தருளியிருக்கின்ற சுவாமிபெயர். (வழக்.)
விசுவநாள்-உத்திராடம். (பிங்கல. ௨௫௬.)
விசுவபதி—அக்கினி. (அபிதானசிந்.)
விசுவபேடகம் — வேர்க்கொம்பு. (வைத்தியபரி.)
விசுவம்-1. அதிவிடயம். 2. உலகம். இது விச்சுவமெனவும்வரும். 3. எல்லாம். 4. சுக்கு. (1, 4-வைத்தியபரி.)
விசுவநுபன்—திருமால், விச்சுவனெனினுமாம் இதற்கு உலகவடிவமா யிருப்பவனென்பது பொருள். இக்கருத்தை காஞ்சிப்புராணத்திற் சார்ந்தார் சயப்படத்தில் உ௫-வது கவியில் "விச்சுவன் சிறைப்புள்ளர சுயர்த்தவன்" எனக்கூறுமாறறிக.
விசுவநுபி—1. அக்கினியினெழுவித நாவினொன்று. (எழுநாவைப்பார்.) 2. விசுவருபன்.
விசுவரோசனம்—ஓர் கிழங்கு.
விசுவா—தக்கன்பெண். (அபிதானசிந்.)
விசுவாசம்—பத்தி. (வழக்.)
விசுவாசி-1. விசுவாசமுடையவன், (வழக்) 2. வேங்கை. (வைத்தியபரி.)
விசுவாசித்தல்—விசுவாசமுறல். (வழக்.)
விசுவாத்துமன்- } விசுவாத்துமா- } விசுவாந்தரியாமி பார்.
விசுவாமித்திரப்பிரியம் — தென்னை. (வைத்தியபரி.)
விசுவாமித்திரப்புல்—ஓர் புல். (வழக்.)
விசுவாமித்திரர்—ஓர் முனிவர். (மணிமே.)
விசுவாவசு—இருபத்தொன்பதாவதாண்டு. (வருஷாதிநூல்.)
விசுவேசன்— } விசுவேசுரன்- } விச்சுவேசன் எனினுமாம். (காஞ்சிப். சார்ந்தார்சயப். ௧௧.)
விசுவௌடதம்—சுக்கு. (வைத்தியபரி.)
விசுளி—கள். (வைத்தியபரி.)
விசூகை — ஓர் நோய். அது, மிக்க தலைச்சுழற்சியென்பர்.
விசேடகாலங்காரம்—ஓரலங்காலம். ஒப்புமையாற பொதுமையுற்றிருந்த இரண்டு பொருளுக்கு ஒரு காரணத்தால் விசேடந்தோன்றவுரைத்தலாம். (விசாகப். அணியிலக். அ௨.) இவற்றைத் தமிழிலிற் சிறப்பணியென்பர்.
விசேடணம்—1. அடைமொழி. (நன்னூ. பொதுவிய. ௫௦. உரை.) 2. வேறுபடுத்துவது. (தர்க்காமிர்தம்.)
விசேடதீக்கை—ஒருவகைத்தீக்கை. (சி. சி. அ: ௬. உரை.)

**விசேடபித்திர்கள்**—ஈசர், சதாசிவர், சாந்தர் என்பர். (அபிதாநசி.)

**விசேடம்** — 1. சிறப்பு (தருக்கசங்.) 2. மேன்மை. (வழக்.)

**விசேடித்தல்**—விசேடப்படுத்தல். (வழக்.)

**விசேடியம்**—1. அடைகொளி. (நன்னூ. பொதுவிய. ருo. உரை.) 2. வேறுபடுத்துவது. (தர்க்காமிருதம்.)

**விசேடோக்தியலங்காரம்**—ஓர் அலங்காரம். இது, குறைவில்லாதகாரணமிருந்துங்காரியம் பிறவாமையைச் சொல்லுதலாம். காரணவாராய்ச்சியணியென்பர். (விசாகப். அணியிலக். ருரு.)

**விசேதம்**—துக்கமுதலியவற்றிற்குப் பெயர் கூறுவர்.

**விசை**—1. தரம். (திருவிளை. வலைவீசின. ருகூ.) பொறி (வழக்.) 2. விரைவு. (பிங்கல. உகஙச.)

**விசைக்கம்பு**—, **விசைத்தடி**— நெய்வார்கருவியினொன்று. (ஒரு குழூஉக்குறி.)

**விசைத்தல்**—வேகமுறல். (வழக்.)

**விசைப்ப**—துள்ள. (புறநா.)

**விசையேற்றுதல்** — பொறியேற்றுதல். (வழக்.)

**விசோகம்**—சோகரகிதம்.

**விஞ்சதி**—இருபது. (ஞானாமி. அ.)

**விஞ்சுதல்**—மிகுதல். (பிங்கல. உஉருஉ.)

**விஞ்ஞை**—கல்வி. (சூ. நிக. கo: உo.)

**விஞ்ஞையர்** — 1. கல்வியையுடையவர். 2. வித்தியாதரர். (சூ. நிக. க. சஃ.)

**விஞ்ஞாதம்**—மேலாய அறிவு. வி-மேன்மை. ஞாதம்-அறிவு.

**விஞ்ஞாபனம்**—அறிவிப்பு. (வழக்.)

**விஞ்ஞானம்**—விசேட அறிவு.

**விஞ்ஞானமயகோசம்**-பஞ்சகோசத்தொன்று. (சி. சி. ச: உரு.)

**விஞ்ஞானகலர்** — மூவகையான்மாக்களுளொருவர். (சிவஞா. போத. அ: உரை.)

**விட்கம்பம்**—நித்தியயோகத்தொன்று. (வருஷாதிநூல்.)

**விட்சி**—ஓர் மரமென்பர்.

**விட்சேபசத்தி**—ஓர் சத்தி. அது, சுருங்கி விரியத்தக்கது. (நாஞசிவவாதக்கட்டளையிலறிக.)

**விட்சேபம்** — 1. கலக்கம். 2. விரித்தல் முதலிய பல பெயர் கூறுவர். (உ-ம்.) வரிற் கொள்க.

**விட்டது**—தங்கிற்று. (சிந்தா.)

**விட்டம்**—1. அவிட்டம். (சூடாமணி. உள்ளமுடையான். கசஅ.) 2. வீட்டுவளைகளிரண்டும் நீங்காமல் இணைக்கப்படுவது. (வழக்.) இதற்கு நீங்காவிட்டமெனவுங்கூறுவர்.

**விட்டாம்**—தவத்தோர்பீடம். (சூ. நிக. எ: ருரு.)

**விட்டரி**—அகத்தி. (மலையக.)

**விட்டல்**—விடல். (திருவால. திருவிளை.)

**விட்டவர்**—துறந்தோர். (வழக்.) பகைவருமாம்.

**விட்டவாதுபெயர்**—அவ்வூர்வந்ததென்புழி. ஊர் என்பது இடமாகிய தன்பொருளைவிட்டுத் தன்னிடத்திலுள்ள மனிதரையுணர்தலால் விட்டவாகுபெயர். (நன்னூ. பெயரிய. ருரு.)

**விட்டார்கள்**—தங்கினார்கள். (சிந்தா.) பகைவருமாம்.

**விட்டாற்றி**—ஆறுதல். (வழக்.)

**விட்டி** — விட்டிக்கரணம். (விதானமாலை. பஞ்சாங்கப். ருo.)

**விட்டிசை** — தனிச்சொல். (யாப். காரி. செய்யுளிய. கo. உரை.)

**விட்டிசைத்தல்**—பிரிந்திசைத்தல். (உ-ம்.) அ-ஆ. இழந்தானென்றெண்ணப்படும் (நாலடி.)

**விட்டில்**—1. ஓர் பறவை. இதனை வெட்டுக்கிளியென்பர். இது, நாட்டுக்குற்றமேழினொன்று. (பொருட்-நிகண்.) 2. பராய்மரம். (சூ. நிக. ச: உo.)

**விட்டுணு** —1. திருமால், வியாபகமுடையவர் என்பர். (பிங்கல. கருo.) 2. வியாபகம்.

**விட்டுணுகரந்தை**—, **விட்டுணுகாந்தி**— ஓர் பூடு. (வைத்தியபரி.)

**விட்டுணுகிராந்தி**—ஓர் பூடு. இதன்குணம் பதார்த்தகுண சிந்தாமணியிற் காண்க.

**விட்டுணுநந்தி**—மூங்கில். (வைத்தியபரி.)

**விட்டுணுப்பிரியம்**—துளசி. (வைத்தியபரி.)

**விட்டுணுபதம்**—1. பரமபதம். 2. வியாபகமான இடம். இது, ஆகாயமென்பர். இதனால் விஷ்ணுபதத்திலிருந்து கங்கைவந்தது என்பதற்கு, ஆகாயத்திலிருந்து கங்கைவந்தது என்பர். 3. பாற்கடல்.

**விட்டுணுபுராணம்**— பதினெண்புராணங்களினொன்று. (அபிதாநசிந்.)

**விட்டுணுமூர்த்தி** — திருமால். இவரியல்பு அபிதாநசிந்தாமணியிற் பாக்கக்காணலாம்.

**விட்டுணுவர்த்தனன்** — இவன் மைசூர் அரசன். சைநமதத்திலிருந்து கஉ-ம் கிறிஸ்துவ சகத்தில் வைஷ்ணவனானவன்.

விட்டேறு—வேல். (பிங்கல. கஙஎகூ.) (சூ. நிக. எ-ஆம் தொகுதி, கO-ஆம்பாட்டில். கோல் என்பர்.

விட்டை—இலத்தி. (உ-ம்.) "கழுதைவிட் டைகைநிரம்பினுற்போதுமா" (பழமொழி.)

விடக்கு— ஊன். (பிங்கல. கூஎடு.)

விகடன்—சுமாலிகுமாரன். (அபிதானசிந்)

விடகாரி—விடவைத்தியன். (வழக்.)

விடங்கம் — 1. அழகு. 2. ஆண்மை. 3. கொடி. 4. கொடுங்கை. 5. முகடு. (பிங்கல. சOகூசு.)

விடங்கர்—1. சிறுவழி. (சூ. நிக. ௫: கூச.) 2. திருவாரூர்த்தியாகராசருக் கொரு பெயர். (பெரியபு. திருவாரூர்ச். சடு.) டங்கம்-உளி. உளியினற்செய்யப்படாதவராகிய சுயம் புமூர்த்தி யென்றதாம்.

விடங்கொல்லி — ஓர் பூடு. இது, சிறியா நங்கைவேரொன்பர் சிலர்.

விடசங்கமர்-யாதவமஹாராஜனுக்கு அநுக் கிரகித்தவர். (அபிதானசிந்.)

விடஞ்சிங்கி—சுக்கு. (வைத்தியபரி.)

விடணம் — ஆண்குறி. (உ-ம்.) 'இதிரன் விடணமங்கிற்றுமண்வி" (திருவானைக். கௌ தமப். கடு.)

விடத்தலை—விடத்தாளி. (வைத்தியபரி.)

விடத்தாலம்—ஓர் மருந்து. (வைத்தியபரி.)

விடத்தேர் — ஓர் மரம். (தண்டியலங்.) (வைத்தியமூலிகையகராதியில் ஓ'பூடென்பர்.

விடத்துக்காசன்—கருடப்பச்சை. (வைத் தியபரி.)

விடதந்தகம்—பாம்பு. (வைத்தியபரி.)

விடதம்—துருசி. (வைத்தியபரி.)

விடதரம்-பாம்பு. இது, விடத்தைத்தரித்த லால் வந்த பெயர்.

விடதாளம்—நவதாளத்தொன்று. (பிங்கல. சகூகூ.)

விடந்தீஞ்சான்—கொல்லைப்பல்லி. (வைத் தியபரி.)

விடப்பூடு—அங்கப்பிச்சு. (வைத்தியபரி)

விடபம்-1. இடபம். 2. இடபராசி. 3. சிறு தூறு. 4. தளிர். 5. மரக்கொம்பு. (1, 2, 5-சூ.நிக.கக:டகரவெ.கசு.) (3,4-வைத்தியபரி.)

விடபன்மன் — ஓர் அசுரகுலத்தலைவன். (அபிதானசிந்.)

விடபி—மரப்பொது. (சூ. நிக. ச: சச.)

விடம்—1. அதிவிடயம். 2. காய்ச்சுப்பு. 3. தாமரைநூல். 4. தேள். 5. நஞ்சு. 6. பாஷா ணம். 7. மரப்பொது. (1, 2, 3, 6-வைத்திய பரி.) (4, 5, 7-பிங்கல. சOகூள.)

விடமம்—1. விஷமம். அது சமமின்மை. 2. தொந்தரவு. (வழக்)

விடமாக்கனி—எட்டிப்பழம். (தைலவ.)

விடமுட்டி—காஞ்சிரமரம் (வைத்தியபரி.)

விடமூங்கில்—ஓர் செடி. (வழக்.)

விடயபஞ்சகம்-கண்டுகேட்டுஉண்டுஉயிர்த் துற்றறித லென்பர்.

விடயம்—1. அதிவிடயம். (வைத்தியபரி.) 2. இந்திரியங்களால் அறியப்படும் பொருள். அவை குடமுதலியன. (தர்க்கசங்கிர. சகூ.) சத்தபரிசரூபரச கந்தங்களென்பர் ஞானமிர் தத்தில். 3. தேசம்.

விடர்-1. பிளப்பு. (பிங்கல. ௫உஅ.) 2. காடு. (சூ. நிக. ச: ௫௫.) 3. தூர்த்தர். (சூ. நிக. உ: சடு.) 4. முழை. (பத்துப்பாட்.)

விடராசன்—கருடப்பச்சை. (வைத்தியபரி.)

விடரு—அதிவிடயம். (வைத்தியபரி.)

விடருகம்—பூனை. (பிங்கல. உ௫கஅ.)

விடல்—1. குற்றம். (பிங்கல. கஅகூக.) 2. விடுதல், வியோகம். (சூ. நிக. கO: கூகூ.)

விடலம்-1. உள்ளி. 2. நஞ்சு. (1, 2-வைத் தியபரி.)

விடலி — பன்னீராண்டு வயதுள்ளபெண். விடளியென்றும் வழங்கப்படும். (திருவானைக். கோச்செங்கண. ககூக)

விடலை —காமத்துறைவன். முப்பது வய திற்குட்பட்டவனென்பர். 2. திண்ணியோன். 3. பாலைநிலத்தலைவன். 4. பெருமையிற்சிறந் தோன். (1, 2, 3, 4-பிங்கல. சOசுகூ.)

விடவல்லி—கீழ்காய்நெல்லி. (வைத்தியபரி)

விடவர்தகரப்பன் — ஓர் கரப்பன்நோய். (வழக்.)

விடவிடேனல்—நடுக்கக்குறிப்பு. (வழக்.)

விடவு—கமர். (வழக்.)

விடன்—காமத்தலைவன்.

விடாணம் — விலங்கின்கொம்பு. (பிங்கல. உ௫சசு.)

விடாதவாகுபெயர்—கடுத்தின்றுனென் - புழிக்கடுவும் புளியுஞ், சுவையாகிய தத்தம் பொருளைவிடாதுநின்றுதம்பொருளின் வேறல் லாத காய்கனியென்னும் பொருளையுணர்த்த லால் விடாதவாகு பெயரென்பர். (நன்னூ. பெயரிய. ௬௯. உரை.)

விடாப்படை—கைவிடாப்படை, சத்திரம். (பிங்கல. கடுஅள.)

விடாமழை—சோனை. (பிங்கல. கூச.)

விடாய்-1. சோர்வு. 2. தாகம். (1, 2-வழக்.)

விடாய்த்தல்—விடாய்ப்பு.

விடாய்ப்பு—1. சோர்வுறல். 2. தாகமுறல். (1, 2-வழக்.)
விடாயுதம்—பாம்பு. (வைத்தியபரி.)
விடாலகம்- } 1. பூனை. 2. பொன்னரிதா
விடாலம்— } ரம். (1, 2-வைத்தியபரி.)
விடானனம்—பாம்பு.
விடானி—சதுரக்கள்ளி. (வைத்தியபரி.)
விடிதல்—இருள்நீங்கல். (வழக்.)
விடியல்—வைகறை. (சூ. நிக. க: அரு.)
விடிவு—விடிதல்.
விடிவுறல்—துன்பநீங்கியின்பமாதல். (பரிபாடல்.) 2. விடிதலுறலுமாம்.
விடீஇய—விடுத்தற்பொருட்டு. (மணிமே)
விடு—1. தெரிநிலைவினைப்பகுதி. 2 விஷுபுண்ணியகாலம். (திருவானைக். கோச்செங்கணர். சரு.)
விடுக்கிய—விடுத்தற்கு.
விடுகதை—நொடி. (சூ. நிக. கக: டகரவெ. கஎ.)
விடுகாலி—கட்டாமற்றிரியுமாடு. (வழக்.)
விடுகை — விடுதல். கை-தொழிற்பெயர் விகுதி.
விடுசரம்—வூர்ப்பன்றி. (வைத்தியபரி.)
விடுத்தல்—1. தங்குதல். (திருவால. திருவிளை.) 2. மோசனம். (சூ. நிக. கூ: உஎ.)
விடுத்தேன்—விடைகொண்டேன். (புறநா.)
விடுதர — வந்துவிட. (புறப்பொருள்வெ. மாலை)
விடுதல்—நீக்குதல். (வழக்.)
விடுதலம்—நிலாமுற்றம். (திருவால. திருவிளை.)
விடுதலை—விடுதல்.
விடுதி—1. தங்குதல். (சிந்தா.) தங்குமிடமுமாம். 2. விடுதல். தி—தொழிற்பெயர்விகுதி.
விடுதும்—செலுத்தக்கடவேம். (புறநா.)
விடுந்தலைப்பு-கஞ்சம். (சூ. நிக. எ: எஉ.) மூன்றனையென்பர்.
விடுநை—ஒழிவாய். (புறநா.)
விடுப்பு — விடுத்தல். பு—தொழிற்பெயர் விகுதி.
விடுபடை—கைவிடுபடை, அத்திரம். (பிங்கல. கருஅக)
விடுபு—விட்டு. (பத்துப்பாட்.)
விடுமலர்—கட்டுவிட்டபூ. (பரிபாடல்.)
விடுவாய்ச்செய்தல் — அறுத்திடல். (சூ. நிக. கூ: உச.)
விடுவித்தல்—விடுதலைச்செய்தல். (வழக்.)
விடேசி—அம்பு.

விடேலெனல்—அநுகாரணவோசை. (சூ. நிக. கo: சஅ.)
விடை—1. இடபம். 2. இடபராசி. 3. உத்தரம். இது: எட்டுவகைப்படும். (உ-ம்.) "சுட்டு மறைநேரேவல்வினுத, லுற்றதுரைத்தலுறுவ துகூறலினமொழி" (நன்னூ. பொதுவிய. ருச.) 4. எருமையேறு. (புறப். மாலை.) 5. கிடாய் (பத்துப்பாட்.) 6. கோழிச்சேவல். (வழக்.) 7. மிகுதி. (புறப். மாலை.) 8. விடுத்தல். (சூ. நிக. கக: டகரவெ. உச.) (1, 2, 3-பிங்கல. சoஎo.)
விடைக்கந்தம்—செம்மணத் தக்காளி. (தைலவ.)
விடைக்கோழி—கோழிச்சேவல். (வழக்.)
விடைத்தல்—1. சினக்குறிப்பு. 2. பெருஞ்சினம். (பிங்கல. கஅஎரு.) விரோதித்தலுமாம்.
விடைப்பு—வேறுபடுத்தல். (சிந்தா.)
விடையான்—சிவன். (உ-ம்.) "விடையாயெனுமால்" (திருமருகல். திருஞான. தேவார. க.)
விண்—1. ஆகாயம். 2. தேவலோகம். 3. மேகம். (1, 2, 3-சூ. நிக. கக: ணகரவெ. கஅ.)
விண்டபூரகம்—மாதளை. (வைத்தியபரி.)
விண்டல்—1. மூங்கில். (பிங்கல. உஎருகூ.) 2. விள்ளல். (வழக்.)
விண்டு-1. அட்டாதசதருமநூலினென்று. இதனை விட்டுணுவெனவுங்கூறுவர். (பொருட். நிக.) 2. காற்று. 3. தகரை. 4. மலை. 5. மூங்கில். (பிங்கல. உஎருக) 6. மேகம். 7. விட்டுணு. 8. விட்டுணுகரந்தை. (3, 8-வைத்தியபரி) (2, 4, 6, 7-சூ. நிக. கக: ணகரவெ. கூ.)
விண்டுகம்—தாமரை. (வைத்தியபரி.)
விண்டுசித்தன்—1. ஓர் முனிவன். (பாரத. நச்சுப்பொய். உ.) 2. பெரியாழ்வார். (அபிதாநசிந்.)
விண்டுகம்—தகரை. (மலையக.)
விண்டுபதம்—1. ஆகாயம், வியாபகமான இடம் என்பது பொருளாம். 2. பரமபதம், விட்டுணுபதம், விஷ்டுணுபதம் என்பதற்கும் இப்பொருளே காண்க.
விண்டுபுரம்—காஞ்சிபுரத்திற்கொருபெயர். (அபிதாநசிந்.)
விண்ணப்பம்—வேண்டுகோட்பணிமொழி (உ-ம்.) 'ஐமேலுந்துமன்றையில்விண்ணப்பமின்றேயடியிட்டேன்' மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி. பணிவிடையென்னும் முதற்குறிப்புச் செய்யுளிற் காண்க.
விண்ணல்—தாவட்டம்புல். (வைத்தியபரி.)

விண்ணவன்—1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. திருமால். (சூ. நிக. க: க௬.) ஓலைவட் டெப்பிரதியிற்காண்க.

விண்ணு—கடுகுரோகணி. (வைத்தியபரி.)

விண்ணுங்கு—ஓர் மரம்.

விண்ணுணம் — 1. சாலம். 2. நாகரீகம். (1, 2-வழக்.)

விண்ணி-போர்க்களம் அல்லது படைவீடு. (திருமொழி. ௬. ௬ ௬.)

விண்ணுகம்—கறிமுள்ளி. (மலையக.)

விண்ணுலகம் — தேவலோகம். (சூ. நிக. ௫: ௬ )

விண்ணெனல் — ஒலிக்குறிப்பு. (உ-ம்.) "நரம்புவிண்ணென இசைத்தது" (நன்னூ. பொதுவிய. ௬. உரை )

விண்ணேறு—இடி. (பிங்கல. ௬௦.)

விண்ணோர்—தேவர்கள். (உ-ம்.) "வெள்ளந்தாள்விரிசடையாய் விடையாய்விண்ணோர் பெருமானே" (திருவாச. சதகம்.)

விண்பல்—மூங்கில். (மலையக )

விண்மணி—சூரியன். (சூ. நிக. க: ௩௭ )

விண்மீன்—நட்சத்திரம் (சூ. நிக. க: எக.)

விண்முழுதாளி-இந்திரன். (சூ.நிக.க:கக.)

விண்விண்ணெனல்—சுரடுக்கொலிக்குறிப்பு. (வழக்.)

விண்விழுங்கோள்ளி—உற்கை. (சூ நிக. க: ௫க.)

விணிகை—மூலக்கச்சு.

வித்தகம் — 1. சாமர்த்தியம். (திருவிளை. கீரனைக்கரையேற். ௬.) 2. ஞானம்—வித்தகர் பார். 3 திருத்தம். (பரிபாடல்.)

வித்தகர்—1. அறிஞர். வித்தகம்—ஞானம். 2. கம்மாளர். (பிங்கல. எ௮௮.) 3 சாமர்த்திய முடையோர். (வழக்.) 4. தூதர். (சூ. நிக. உ: சக.)

வித்தகன்—வைரவன். (சூ. நிக. க: உஎ.)

வித்தம்-1. ஞானம். 2. பழிப்பு. 3. பொன். (1, 2, 3-சூ. நிக. கக: தகரவெ. உஉ.)

வித்தரித்தல்—1. பெருக்கல். 2. விரித்துச்சொல்லல். (1, 2-வழக்.)

வித்தல்-1. பரப்புதல். (சிந்தா.) 2. விதைத்தல். (புறநா.)

வித்தன் — ஞானத்தையுடையவன். வித்தம்—ஞானம்.

வித்தாரகவி-நாற்கவியினென்று. (சூ. நிக. கஉ: உக.)

வித்தாரம்—1. அகலம், விரிவு. (வழக்.) 2. சிற்பநூல்முப்பத்திரண்டினென்று.(பொருட். நிக.) 3. வித்தாரகவி. இது: நால்வகைக்கவியி னென்று. 4. விற்பனம். (உ-ம்.) "பொதியக் குறுத்தவித்தார மூனிக்கருள்கோலக்குழகர்" மறைசையந்தாதி. அறுத்தவித்தார என்னும் முதற்குறிப்புள்ள செய்யுளிற்காண்க.

வித்தாரி—1. விற்பன்னன். 2. விற்பன்ன முடையவள். (1, 2-வழக்.)

வித்திகம்—இந்துப்பு. (வைத்தியபரி.)

வித்தியம்—தான்றி. (வைத்தியபரி.)

வித்தியாகரன்—அறிஞன்.

வித்தியாகலை—பஞ்சகலையினென்று. (சி. சி. அ: அ. உரை.)

வித்தியாசம்—வேறுபாடு. (வழக்.)

வித்தியாதத்துவம்— தத்துவத்திரயங்களி னென்று. (சி. சி. உ: எஉ. உரை.)

வித்தியாதரர்—கந்தருவர். (திவாகரம். க.)

வித்தியாதேவி—சரஸ்வதி. (வழக்.)

வித்தியார்த்தி—கற்போர். (வழக்.)

வித்தியாரணியர்—ஓர் சுமார்த்தவேதியர். இவர் வேதஞ் சூதசங்கிதை முதலியவற்றிற் குரைகள் செய்தவர். (அபிதானசிந்.)

வித்தியாலயம்-கல்விபயிலுமிடம். (வழக்.)

வித்திரகம்—வெள்ளெருக்கு (மலையக.)

வித்திரம்—தொளைத்தல்.

வித்திரிதி — விஸ்திரிதி. அது: விசாலம். (வழக்.)

வித்து—1. காரணம். (சிந்தா.) 2. தெரிநிலைவினைப்பகுதி. 3. விதை. (வழக்.)

வித்துசம்—தாளி. (மலையக.)

வித்துத்து—மின்னல். (சூ. நிக. க: கூஉ.)

வித்துதல்—விதைத்தல். (வழக்.)

வித்துபு—விதைத்து. (பரிபாடல்.)

வித்துந—மின்னல். (பிங்கல. ௬௬.)

வித்துநமம்—1. இளந்தளிர். (வைத்தியபரி.) 2. பவளம். (பிங்கல. கஉக௫.)

வித்துவாமிசன்— } புலவன். (வழக்.)
வித்துவான்— }

வித்துன்மாலி—இராவணசேனுபதி.(அபிதானசிந்.)

வித்துவேடணம்—1. அட்டகர்மத்தொன்று. (உ-ம்.) "அட்டகர்மம்பார்" 2. கலைஞானமறுபத்தினென்கினென்று. (பொருட். நிக.)

வித்தை—1. கல்வி. (சூ. நிக. க௦: உ௫.) 2. ஞானம். 3. தந்திரத்தொழில். (2, 3-வழக்.) 4. வித்தியாதத்துவம் ஏழினென்று. (சி. சி. உ: ௫௫.)

வித்தைகள்-கல்விகள். இவை பதினென்கு வகைப்படும். (அபிதானசிந்.)

விதண்டை—விதண்டாவாதம். அது: தான் கூறும் விஷயத்திற்குற்றமிருக்கப் பிறர்கூறும்

விஷயத்திற் குற்றஞ்சாதிப்பது. (திருவிளை. கீரனைக்கரையேற்றி. கக.)

விதத்தல்—விதப்பு.

விதந்து—1. சிறப்புவிதியாக வெடுத்துச் சொல்லி. (நன்னூ.விருத்தி பதவிய.கO.உரை.) 2. மங்கலியமிழந்தவள். (வழக்.)

விதப்பு-1. சிறப்பாகவெடுத்துச்சொல்லல். (நன்னூ. உயிரீற்றுப். கடு. உரை.) 2. நடுக்கம். 3. மதிலுறுப்பு. (பிங்கல. சுசுO.) 4. மிகுதி. 5. விபரம். (2, 4, 5-பிங்கல. சOஎஉ.)

விதம்—வகை. (வழக்.) இன்னும் பலபொருள்கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

விதம்பம்—கற்பரி பாஷாணம் (வைத்திய பரி.)

விதர்ப்பம்—ஓர் தேயம். (அபிதாநசிந்.)

விதரணம்—1. ஈகை. (சூ. நிக கூ: க) 2. விவேகம். (வழக்.)

விதரணை—விவேகம். (வழக்.)

விதரம்—பிளப்பு.

விதலம் — கீழேழுலகிலொன்று. (சூ. நிக. கஉ: எக.)

விதலை—1. நடுக்கம். (பிங்கல. கஅ௫ச.) 2. பூமி. (பாரத. ராசசூய. உக.)

விதவை-1. கைம்பெண் (சூ. நிக உ: கூகூ.) 2. பாற்சோறு (பத்துப்பாட்.)

விதனம்—வேதனை. (வழக்.)

விதனித்தல்—வேதனையுறல். (வழக்.)

விதா—பயனின்மை. (பிங்கல. ககூOக)

விதாதா—1. அருகன் (சூ. நிக. க: ச) 2. பிரமன். (பிங்கல. க௫க)

விதாதிரி—திப்பிலி. (வைத்தியபரி.)

விதாயம்—பகுக்கப்படுமளவு. (வழக்.)

விதாரகம்—கிணறு.

விதாரணம் -கிழித்தல், கொல்லல் முதலிய வற்றிற்குங்கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

விதாரம்—ஓர் மரம். (திருவிளை. மாணிக்கம் விற். கூகூ.) முள்ளிலவென்பர்சிலர். கிழித்தல், பிளத்தல் முதலிய வற்றிற்குமுரைப்பர்.

விதாரி—புன்முருக்கு. (வைத்தியபரி.)

விதாரு—பல்லி.

விதானம்—1. ஒழுங்கு. (வழக்.) 2. மேற்கட்டி. (பிங்கல. கஉகஉ.) விரிவு முதலிய பல பொருட்கும் பெயர் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

விதி—1. ஊழ். (சூ. நிக. அ: கூகூ.) 2. செய்தொழில். (சூ. நிக. கூ உ.) 3. தெரிநிலைவினைப் பகுதி. 4. நியமம். (திருவிளை. திருநகரப். கக.) 5. பிரமன். (பிங்கல. க௫க.) 6. வினை. (சூ. நிக கக: தகாவெ க.)

விதிக்கு—கோணத்திசையென்பர்.

விதித்தல்—1. சிருட்டித்தல். (சூ. நிக. க: உ.) 2. சொல்லல். 3. நியமித்தல் (வழக்.)

விதித்தோன்—1. கடவுள். 2. பிரமன். (1, 2-வழக்.)

விதிப்பு—1. விதித்தல். 2. நியமித்தல்.

விதிபாதம்—யோகமிருபத்தேழிலொன்று. (வருஷாதிநூல். ௫க. பக்.) (திருவிளை. தீர்த்த விசே. உக.)

விதியர்—கணக்கர், மந்திரிகளுக்குங்கூறுவர்.

விதியுளி—1. யாகம். (சூ. நிக. க: கக.) 2. விவாகம். (சூ நிக. க: ச.)

விதிர்க்குவிதிர்க்கெனல் — படபடத்தற் குறிப்பு. (வழக்.)

விதிர்த்தல் — 1. அசைத்தல். (திருவிளை. மாணிக்க. கூகூ) 2. நடுங்கல்.

விதிர்த்து—சிதறி. (புறநா.)

விதிர்ப்பு-1. அச்சம். 2. நடுக்கம். 3. மிகுதி. (2, 3-பிங்கல. சOசச.)

விதிர்விதிர்த்தல் — நடுநடுங்கல் (உ-ம்.) "மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன்" (திருவாசக திருச்சதகம்.)

விதிர்விதிர்த்து—நடுநடுங்கி. (சிந்தா)

விதிவினை — உடன்பாட்டுவினை. (நன்னூ. வினையிய. ௯: உரை)

விது—சந்திரன். (பிங்கல. உஉ௫.)

விதுகம்—விலகல்.

விதுதம்—தள்ளப்பட்டது.

விதுதமுகம் — வேண்டாமைக்குத் தலையசைத்தல். இது: முகம் பதினொன்கிலொன்று. (பொருட். நிக.)

விதுப்பு—1. ஆசை. (இராமா. பாலகா. நாட்டுப். கக.) 2. நடுக்கம். 3. விரைவு (1, 2-புறநா.)

விதும்ப—நடுங்க. (திருவால. திருவிளை.)

விதும்பல்—ஆசைப்படல்.

விதும்பி—மனமசைந்து (சிந்தா.)

விதும்பினூர்—நடுங்கினர். (சிந்தா.)

விதுரம்—1. கலக்கம். 2. பிரிவு.

விதுரன்—திருதராட்டிரன் மந்திரி. (அபிதாநசிந்.)

விதுளநீர்—வாய்விளங்கம். (வைத்தியபரி.)

விதூடகக்கூத்து—ஒருவகைக் கூத்து. சிலப். ஊர்காண்காதையிற்காண்க.

விதூடணம்—பெருந்தூஷணம். (வழக்.)

விதூமன்—ஓர் கந்தருவன். இவன் முசுகுந்தச் சக்கரவர்த்தியாகப் பிறந்தானென்பர். (அபிதாநசிந்.)

விதேகமுத்தி—ஓர் முத்தி. அது தேகநீங்கியபின் அடையுமுத்தி.

விதேகன் — மிதிலையில் அரசுபுரிந்த ஓர் அரசன். இவன் அரசுபுரிந்தமையால் மிதிலைக்கு விதேகம் என்று ஓர் பெயராயிற்று. (அபிதாநகோ.)

விதேகை—மிதிலை. (பிங்கல. ௬௩அ.)

விதேசம்—பிறதேசம்.

விதேயம்—சாத்தியம். (தர்க்காமிருதம்)

விதேயன்-சொற்படிகேட்போன். (வழக்.)

விதை — 1. தெரிநிலைவினைப்பகுதி 2. வித்து. (பிங்கல. ௨அ௨௯)

விதைத்தல்—வித்திடுதல். (வழக்)

விதையம்—விதேகதேசம். (சிந்தா.)

விந்தம்—1. ஒருவகை மாணிக்கம் (சிலப்.) 2. ஓர் எண். (சூ. நிக. ௧௧: நகரவெ. அ) 3. அட்டகுலபர்வதத்தொன்று. (அபிதாநசிந்.) 4. குதிரைப்பற் பாஷாணம். 5. பச்சைக்கர்ப்பூரம். (வைத்தியபரி.)

விந்தர்—இடையர். (பிங்கல. ௫௪௫.)

விந்தாம் — கற்கடக பாஷாணம். (வைத்தியபரி.)

விந்தியம்—விந்தமலை. (அபிதாநசிந்.)

விந்தியவாசி — } 1. கோட்டம். (மலையக.)
விந்தியவாசினி- } 2. துர்க்கை, விந்தைதமலையாலயத்தில் வசித்திருப்பதால் வந்தபெயர்.

விந்து—1. சுத்தமாயை. (சி. சி. ௧: ௧௬. உரை.) 2. தாது. (வழக்.) 3. துளி. (சி. சி. ௨: ௯அ.) 4. புருவமத்தியம். அநுட்டானவிதியிலறிக.

விந்துகம்—தாளிச்செடி. (வைத்தியபரி.)

விந்தூகம்—சாதிலிங்கம். (வைத்தியபரி.)

விந்தை-1. ஆச்சரியம். (வழக்.) 2. கல்வி. (சூ. நிக. ௧0: ௨0.) 3. துர்க்கை. (பிங்கல. ௧௨௪.) 4. விற்பன்னம். (வழக்.)

விந்தையம்—செங்கத்தரி.(வைத்தியபரி.)

விநதம்—1. தொனி. 2. வளைவு.

விநதன் — ஓர் வானரத்தலைவன். (அபிதாநசிந்.)

விநதை — கருடன்றாய். (திருவிளை. மாணிக்க. ௯௯.)

விநயபிடகம்-பௌத்தாகமத்துளொன்று. (அபிதாநசிந்.)

விநயம்—புத்திநுட்பம். (வழக்.)

விநாசகம் — } அழிவு. (வழக்.)
விநாசம் — }
விநாசனம்— }

விநாடி— } ஓர் காலநுட்பம். பஞ்சாங்கத்திலறிக.
விநாடிகை- }

விநாயகசட்டி-கார்த்திகையிற் கார்த்திகை கழிந்த இருபத்தேழாநாள் வருஞ்சட்டி.

விநாயகன் — 1. கணபதி. (அபிதாநசிந்.) 2. அருகன். (சூ. நிக. ௧:௨௧) 3. புத்தன். (சூ. நிக. ௧: ௧௭.)

விநாயகபுராணம் ஓர் புராணம். இதனைப் பார்க்கவபுராணமெனவுஞ் சொல்வர்.

விநாழிகை — நாழிகையில் அறுபதிலோர் பங்கென்பர்.

விநிகதம்—உற்பாதம்.

விநிதை—அயோத்தி. (சூ. நிக. ௫: ௪௨.)

விநியோகம்—1. உபயோகம். (வழக்.) 2. விடுதல்.

விநோதக்கூத்து — இருவகைக் கூத்தினென்று. அது, ஆறுவகைப்படும். குரவை, கலிநடம், குடக்கூத்து,கரணம்,நோக்கு,தோற்பாவை என்பர். (சிலப். அரங்கேற்றுகாதை.)

விநோதம்—1. சந்தோஷமுதலிய பலபெயர் கூறுவர். (உ-ம்) வரிற்கொள்க. 2. பொழுது போக்கு, விளையாட்டு (நன்னூ. சிறப்புப்பாயிரம். உரை)

விப்பிரநாராயணர்-தொண்டரடிப்பொடியாழ்வாருக்கொருபெயர். (அபிதாநசி.)

விப்பிரப்பிரியம் — முருக்கமரம். (வைத்தியபரி.)

விப்பிரம்—அழகுமுதலியவற்றிற்குப் பெயர் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

விப்பிரயோகம் — பஞ்சபாணவத்தையினென்று, வெய்துயிர்த்திரங்கல். (சூ. நிக. ௧௨: ௫0.)

விப்பிரர்—பார்ப்பார். (பிங்கல. ௭௨௯.)

விப்புருதி—ஓர் சிலந்திக்கட்டி. (வழக்)

விபக்கம்—துணிந்தபொருளில்லாதவிடம். (தர்க்கசங்கிர. ௫௫.)

விபக்கன்—பகைவன். (வைத்தியபரி.)

விபக்கைகதேசவிருத்திசபக்கவியாபி — இது: விபக்கத்துள் ஏகதேசத்துள்ளதாகிச் சபக்கங்களில் வியாபித்திருக்கும்பொருளாவது வாகக் கூறுதலாம். (அநுமானவிளக்கம்.)

விபகரித்தல்—வழக்குச்சொல்லல். (வழக்.)

விபகாரம்—விவகாரம் (வழக்.)

விபங்கம்—பங்கமில்லாமை.

விபசாயம்—கிருஷி. (வழக்.)

விபசாரம்—வியபிசாரம். (வழக்.)

விபசாரி—வியபிசாரி. (வழக்)

விபஞ்சி— } வீணை (திருவிளை. விறகுவிற். ௨௪.)
விபஞ்சிகம்- }
விபஞ்சிகை- }

விபட்சம்—பிறபட்சம். (வழக்.)

விபட்சன்—சத்துரு. (வைத்தியபரி.)
விபண்ணகம்—பலாசு. (வைத்தியபரி.)
விபணம்—விலை.
விபணி—கடைமுதலியவற்றிற்குப் பெயர் கூறுவர்.
விபந்தம்—காஞ்சிரமரம். (மலையக.)
விபத்தன்—ஆபத்துடையோன். (வழக்.)
விபத்தி — 1. தரித்திரமுதலியவற்றிற்குப் பெயர்கூறுவர். 2. வேற்றுமை. (உ-ம்.) "எழுவாய்விபத்தி, திரிபில்பெயர்" (பிரயோகவிவேகம். காரகப் அ. உரை.)
விபத்து—ஆபத்து. (வழக்.)
விபரம்—விவரம், விரிவு. (வழக்.)
விபரித்தல்—விவரித்தல். (வழக்.)
விபரியயம்—திரிவு (தர்க்காமிருதம்.)
விபரீதம்—வேறுபாடு. (பிங்கல. சஅகூச.)
விபரீதவுவமை—ஓரலங்காரம். இது, ஒரு பொருளுக்குப் பண்டைக்காலந்தொட்டுப் பலராலும் வழங்கப்பட்ட உபமானத்தை உபமேயமாக்கி விபரீதமாகச்சொல்வதாம். (தண்டியலங். பொருளணி உஅ-ஆம். பக்.)
விபரீதவெதிரேகம் — இது: தன்னுறுப்பாகிய வெதிரேக வாக்கியத்தை மாறுபடக் கூறுவதாம். (அநுமானவிளக்கம்.)
விபரீதாந்நுவயம்— திட்டாந்தவுறுப்பாகிய அந்நுவயவாக்கியத்தை முறைபிறழக் கூறுவதாம்.
விபவ — இரண்டாவதாண்டு. (வரிஷாதிநூல்.)
விபவம்—1. செல்வம். (சூ. நிக. அ: கூஉ) 2. திருமாலின் ஐவகைச்சொரூபத்திலொன்று. இவை. ராமகிருஷ்ணாதியவதாரங்கள். (அர்த்தபஞ்சகம்)
விபாகரும்—பிரிவான் ஆவது. (தர்க்காமிருதம்.)
விபாகம் — 1. பங்கு. (வழக்.) 2. பிரிவு. (தர்க்காமிர்தம்.) உருசிமுதலியவற்றிற்குப்பெயர்கூறுவர். (உ-ம்.) விரிற்கொள்க.
விபாகரன்—சூரியன்.
விபாசம்—பந்தமோசனம்.
விபாண்டகர்—கலைக்கோட்டுமுனிவர்தந்தை. (இராமா. திருவவதாரம். கூக.)
விபாவரி—இராத்திரி. (சூ. நிக. க: அஉ.)
விபாவனம்—1. ஆராய்வு. 2.புனிதமின்மை. பாவனம்-புனிதம்.
விபாவனை — 1. ஆராய்வு, விசேடமாகவெண்ணுதல். 2. ஓரலங்காரம். இது, ஒன்றனைக்கூறுமிடத்து உலகத்தாராற் பிரசித்தமாகவறியப்பட்ட காரணத்தினையொழித்து வேறொரு காரணமாவது இயற்கையிலமைந்ததன்மையாவது குறிப்பினுல் வெளிப்படும்படி சொல்லப்படுவதாம்.(தண்டியலங். பொருளணியிய. ருo.)
விபினம்—காடு. (சூ. நிக. ச: ருரு.)
விபீடணன்-இராவணனிளையோன்.(இராமா. உயுத்தகாண். விபீஷணனடைக்கலப் படலம்.)
விபீதகம்—
விபீதம்— } தான்றி. (வைத்தியபரி.)
விபு—ஆகாயமுதலிய பலபெயருக்குங்கூறுவர். (உ-ம்.) விரிற்கொள்க. வியாபகமுடையது. (தர்க்காமிருதம்.)
விபுசத்துரு— தண்ணீர்விட்டான்கிழங்கு.
விபுணன்—சிறந்தோன். (வழக்.)
விபுத்துவம் — பரிபூரணத்தன்மையாதல்.
விபுதர்—1. மிக்கவறிவினர். 2. வானோர். (பிங்கல. களஎ.)
விபுதர்கந்தம்—நெய்ச்சட்டி. (தைலவ.)
விபுலம்-1. பூமி. (சூ. நிக. கக: ணகரவெ. கஅ.) 2. பெருமை. 3. விரிவு. (2, 3-பிங்கல. சoஎகு)
விபுலரசம்—கரும்பு. (வைத்தியபரி.)
விபுலை—பூமி. (சூ. நிக. ரு: எ.)
விபூடணம்—ஆபரணம். (வழக்.)
விபூதி—1. ஓர் நரகம். 2. குற்றம். 3. கொடுமை. 4. செல்வம். 5. தசை. 6. திருநீறு. இதன் விவரத்தை அபிதானசிந்தாமணியிற் காண்க. (1, 2, 3, 4, 5, 6-பிங்கல. சoஎகூ.)
விபூயம்—முஞ்சிப்புல். (வைத்தியபரி.)
விபேகம்—விவேகம் (வழக்.)
விபேகி—புத்திமான். (வழக்.)
விபேதனம்—பிரித்தல்.
விப்படம்—கடுகுச்செடி. (வைத்தியபரி.)
விம்பப்பிரதிவிம்பபாவம் — பிம்பப்பிரதிபிம்பபாவம். இது, ஓர் அலங்காரம். அது: சுபாவத்திலே பின்னங்களாயிருந்தாலுமொன்றற்கொன்றுண்டாகிய வொப்புவமையினால்அபின்னங்களாகிய வுபமானோபமேயங்களுடையதருமங்களை யிரண்டுவாக்கியங்களிலே தனித்தனி சொல்லுதலாம். (விசா. அணியிலக். கஅ-ஆம் சூத்திரம்.)
விம்பம்-1. உருவம். (உ-ம்.) "பிரதிபிம்பம்" பார். 2. கொவ்வை. (சூ. நிக. ச: கூரு.) 3. சாரங்கபாஷாணம். 4. சிவாகமமிருபத்தெட்டிலொன்று. (பொருட்-நிக.) 5. பலண்டுருகபாஷாணம். (3, 5-வைத்தியபரி.)
விம்பிகை—கொவ்வைக்கனி. (வைத்தியபரி.)

விம்பித்தல் — பிரதிவிம்பந்தோன்றுதல். (வழக்.)
விம்பு—கழுகு. (வைத்தியபரி.)
விம்மல் — 1. அழுகை. (சூ. நிக. கூ: அ.) 2. இரங்கல். 3. ஒலித்தல். (2, 3-பிங்கல. சOஎ.) 4. பருத்தல். (வழக்.)
விம்மாந்து— } பொருமி. (சிந்தா.) (புறநா.
விம்மி— } உஅஎ.)
விம்மிதம்—அதிசயம். பிங்கல. உஅஎ.)
விம்முதல்—விம்மல். (வழக்.)
விம்முறவு—வருத்தம். (சிந்தா.)
வியர்த்தம்— } அழித்தல்.
விமர்த்தநம்— }
விமரிசம்— } சிந்தித்தல். (நன்னூல்.
விமரிசநம்— } விருத்தி.சிறப்புப். உரை.)
விமரிசன்—ஓர் வேடன். (அபிதாநசிந்.)
விமரிசை—சிறப்பு. (வழக்.)
விமலசுவாமி—சைநர்களிற் பதின்மூன்றாவது தீர்த்தங்கரர். (அபிதாநசி.)
விமலம் — 1. அழுக்கின்மை. (சூ. நிக. அ: சச.) 2. சிவாகமம் இருபத்தெட்டினொன்று. (பொருட்-நிக.) 3. சிவசூரியபீடம். (அபிதாநசிந்.)
விமலன் — 1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. சிவனுக்குங்கூறுவர்.
விமலி— } 1. இலக்குமி. (சேந்தன். திவா
விமலை— } கரம். கூ-ஆம் பக்.) 2. கோதாவரி. (சூ. நிக. ரு: உஉ.) 3. சரஸ்வதி. (பிங்கல. கருஅ.) 4. சிவசூரியபீடத்தமருஞ்சததி. (அபிதாநசி.) 5. துர்க்கை. சூ. நிக. க: சO) 6. பரிசுத்தமுடையவள். (வழக்.) 7. பார்வதி. (சௌந்தரியலகிரி. அகூ.)
விமார்க்கம்—கெட்டமார்க்கம். (வழக்.)
விமானம்—1. உரோகணிநட்சத்திரம். (பிங்கல. உசஉ.) 2. ஒருவகை இரதம். (திருவிளை. இந்திரன்பழி. அஉ.) 3. தேவலோகம். (சூ.நிக. ரு: ரு.)
விழுத்திரம்—தளிர். (வைத்தியபரி.)
விமோசனம்—விட்டுநீங்கல். (வழக்.)
விமோடம்—சதகுப்பை. (வைத்தியபரி.)
விய—இருபதாவதாண்டு. (வருஷாதிநூல்.)
வியங்கம்—தவளை.
வியங்கியம்-குறிப்பு. (நன்னூ.பொதுப்பா. சஉ. உரை.)
வியங்கோள் — 1. இருதிணையைம்பான் மூவிடங்களில்வரும் ஏவல்வினைமுற்று. (நன்னூல் விருத்தி. வினையிய. கசு-ஆவது உரை.)
வியசனம்—உபத்திரம். (வழக்.)
வியஞ்சகம்—விளக்குங்கருவி. (சிவஞானபோதம். சO: க. வெண்பாவுரை.)
வியஞ்சனம்—அடையாளமுதலியவற்றிற்குப் பெயர்கூறுவர்.
வியட்டி-வேறுவேறான பிரிவு (திருவிளை. வேதத்துக்குப்பொருளருளிச். ருரு.)
வியடம்பகம்—ஆமணக்கு (வைத்தியபரி.)
வியத்தம்-1. காட்சிக்கமைந்தது. 2. விளக்கம். இவற்றின் கருத்தை அவ்வியத்தத்திற் காண்க.
வியத்தல்—அதிசயப்படல். (வழக்.)
வியத்தி—வெளிப்படல்.
வியத்தோறும்—வியக்குந்தோறும். (புறநா.)
வியதிபாதம் — நித்தியயோகத்தொன்று. (வருஷாதிநூல். ருசOக.)
வியதிரேகம் —வெதிரேகம்.
வியதை—வேதனை.
வியந்தரம்—பேய். (சூ. நிக. க: கரு.)
வியந்தன்று—மதித்தது. (புறநா.)
வியந்து —ஆச்சரியம். (ஞானமிருதம்.)
வியப்பு—1. அளவு. (ஞானமிருதம்.) 2. அதியம். (சூ. நிக. அ: சஅ) 3 ஓரலங்காரம். இது ஒருபயனைக்கருதி அதற்குப் பகையாகிய முயற்சியைச்செய்தல். (உ-ம்.) "ஓதுந்திறத்திலுயர்ந்தோர்கடாழ்குவரெப்,போதுமுயர்வெய்தற்பொருட்டு. (விசாகப். அணியிய. ச.) 4. சினக்குறிப்பு. 5. சினம். (4, 5-பிங்கல. சOஎஅ) 6. மேம்பாடு. (பத்துப்பாட்.)
வியபிசாரம்—1. நியமமின்மை. 2. விபசாரம், பிறழ்வு. (1, 2-தர்க்காமிருதம்.)
வியபிசாரி—வியபிசாரமுடையவள். (வழக்.)
வியம்—1. உடம்பு. (பிங்கல. கூகூச.) 2. ஏவல். (தணிகை. திருநகரப். கOஅ.) 3. பறவை. (பிங்கல. உருகூரு.) 4. அதிகம், வியனெனவும் வரும். 5. வழி. (பத்துப்பாட்.)
வியர்—வேர்வை. (மணிமே.)
வியர்த்தம்—பயனின்மை. (வழக்.)
வியர்த்தல்— } 1. சினக்குறிப்பு. (பிங்கல.
வியர்ப்பு— } கஅஎச.) 2. வேர்த்தல். (சூ. நிக. கூ: கச.)
வியர்வு— } வேர்வை. (வழக்.)
வியர்வை— }
வியல்—1. அகலம். 2. காடு. 3. பெருமை. (1, 2, 3-பிங்கல. சOஎகூ) 4. பொன். (வைத்தியபரி)
வியல்கறு—திப்பிலி. (வைத்தியபரி.)
வியல்பூதி—வில்வம். (மலையக.)

**வியலிடம்**—அகலம். (சூ. நிக. அ: கஉ.)
**வியவகாரம்**—1. வழக்கம். (தர்க்காமிருதம்.) 2. வழக்கு. (திருவள். உரைப்பாயிரம்.)
**வியவசாயம்**—ஞானம். (தர்க்காமிருதம்.)
**வியவர்**—ஏவல்செய்வோர். (சிந்தா.)
**வியவன்**—1. ஏவுவான். (சூ. நிக உ: ௭௦.) 2. திண்ணியன். (சூ. நிக. உ: ௯௦.)
**வியன்** — 1. அகலம். (பத்துப்பாட்.) 2. அதிகம். (வழக்.) 3. வேறுபாடு. (சிலப்.)
**வியனிலையுருவகம்**—ஓரலங்காரம். இது: அவயவியை உருவகஞ்செய்தும், அவயவங்களுள்ளுஞ் சிலவற்றை உருவகஞ்செய்தும், சிலவற்றை வாளாவிடுத்தும், ஒரு தொடரிற் சொல்வது வியனிலையுருவகமாகும். (தண்டி. பொருளணியிய. ௪௪. பக்.)
**வியனிலைமருட்பா**—வெண்பாவடியும் அகவலடியும் ஒவ்வாது வருவன வியனிலைமருட்பா. (யாப். காரி. செய்யுளிய. கடு. உரை.)
**வியனுலகு**—தேவலோகம். (சூ. நிக. ௯: ௩.)
**வியாக்கியானம்**—உரை (வழக்.)
**வியாக்கியானன்**— / **வியாக்கியானி**— / **வியாக்கியாதா**— } உரைகாரர். (வழக்.)
**வியாக்கிரகதி**—தாசுதசுதியைந்தி லொன்று. (சூ. நிக. கஉ: ௭௧.)
**வியாக்கிரதலம்**—ஆமணக்கு. (வைத்தியபரி.)
**வியாக்கிரநகம்**—புலிதொடக்கி. (மலையக)
**வியாக்கிரபாதன்**-புலிக்கான்முனி (கோயிற்புராணம். வியாக்கிரபாதச்சருக்கம்.)
**வியாக்கிரபுச்சம்** — ஆமணக்கு. (வைத்தியபரி.)
**வியாக்கிரபுரம்**—சிதம்பரம் புலியூர் என்பதற்குப்பரியாயப்பெயர்.
**வியாக்கிரம்**—புலி. (சூ. நிக. ௩: ௩.)
**வியாக்கிரி**—கண்டங்கத்திரி. (மலையக.)
**வியாகரணம்**—இலக்கணம், கலைஞானம் அறுபத்திநான்கினொன்றுமாம். (பொருட்.நிக)
**வியாகாதம்** — நித்தியயோகத்தொன்று. (வருஷாதிநூல். ௫க. பக்.)
**வியாகிருதம்**—பிரிக்கப்பட்டது.
**வியாகிருதி**—ஓர் மந்திரம். (திருவானைக். கோச்செங். ககஅ.)
**வியாகுலம்**—வருத்தம். (வழக்.)
**வியாகுலித்தல்**—துக்கப்படல்.
**வியாச்சியம்**—வழக்கு. (வழக்.)
**வியாசநிந்தை**-ஓரலங்காரம். இது நிந்தையினால் நிந்தை தோன்றுதலாம். (விசாக. அணியிலக். ௩க.)

**வியாசம்**—1. காரணம் முதலிய பலபெயர் கூறுவர். 2. விரிவு. (1, 2-வழக்.)
**வியாசன்**-பராசரமுனிவர்புத்திரர். (பாரத. சம்பவச்சருக்கம்.)(உ-ம்.)'பராசரன்றருமதலை' என்னும் முதற்குறிப்பையுடைய செய்யுளிற் காண்க.
**வியாத்தி**—1. உடனிகழ்ச்சி. (தர்க்காமிருதம். 2. சமனிறைவு. மரபட்டவணையிற்காண்க
**வியாதம்**—1. துயரம். 2. வேறுபாடு.
**வியாதன்**—வியாசன்.
**வியாதி**—1 கோட்டம். (வைத்தியபரி.) 2. நோய். (வழக்.)
**வியாதிகாதம்**—கொன்றை. (மலையக.)
**வியானவாயு**—தசவாயுக்களிலொன்று தத்துவக்கட்டளையிலறிக.
**வியாப்பியம்** — 1. ஒன்றிலொன்றடங்கிநின்ற நிறைவு. மரபட்டவணையிற்காண்க. 2. கோட்டம். (மலையக.)
**வியாபகத்துவம்**-நிறைந்திருக்குந்தன்மை
**வியாபகம்** — அதிகதேசவிருத்தி, எங்கு நிறைந்தது. (தர்க்காமிருதம்.)
**வியாபநம்**—வியாபகம்.
**வியாபாரம்**—தொழில். (தர்க்காமிருதம்)
**வியாபாரி**-வியாபாரஞ்செய்பவன்.(வழக்.)
**வியாபி**—1. எங்குநிறைந்தவன். 2. எங்குநிறைந்தவள் (1, 2-வழக்.)
**வியாபித்தல்** — எங்கு நிறைந்திருத்தல். (வழக்.)
**வியாயம்**—இளைப்பு முதலிய பெயர் கூறுவர்.
**வியாவர்த்தகம்**-வியாவிருத்திஜனகம்.(தர்க்காமிருதம்.)
**வியாவிருத்தி** —பிரிவு, பிரித்தல். (தர்க்காமிருதம்.)
**வியாழகேந்திரம்**—வியாழன் வலிபெற்றிருக்குந்தானம். அது. உதயமென்பர். (விதானமாலை. குணகுணப். க௦௩-ம் பாட்டுரை.)
**வியாழவட்டம்** — வியாழத்தின் சுற்று. அது. பன்னிருவருடமென்பர்.
**வியாழன்**-தேவகுருவாகியபிரகற்பதி.(பிங்கல. உ௩உ.)
**வியாளம்**—1. பாம்பு. (பிங்கல. உ௬௦௧.) 2. புலி. (பிங்கல. உ௭கக.)
**வியாளாயுதம்** — புலிதொடக்கி. (வைத்தியபரி)
**வியானன்**—தசவாயுக்களிலொன்று. (பொருட். நிக. அ௬௧.) அது உடன்முழுது வியாபித்திருப்பது.

**வியூகம்** — 1. படைவகுப்பு. (அபிதாசிந்.) 2. விஷ்ணுவின் மூர்த்தொழிற்கர்த்தர்களான சங்கர்ஷண, பிரத்யும்ந, அநிருத்தர்கள் பிரிவு. 3. விலங்கின்கூட்டம். (சூ. நிக. ௯: ௪௨.)

**வியோகம்**—விடுதல். (சூ. நிக. ௧0: ௬௯.)

**வியோடம்**–1. சுக்கு. 2. திரிகடுகம். (1,2-வைத்தியபரி.)

**வியோமம்**–1. ஆகாயம். (சூ. நிக. ௧: ௪௬.) 2. நீர். (வைத்தியபரி.)

**வியோமமஞ்சரம்**— } கொடி. (வைத்திய
**வியோமமண்டலம்**– } பரி.)

**விரகதம்**—வெள்ளைச்சாரணை. (மலையக.)

**விரகம்**—காமநோய். (பிங்கல. ௧௩0௪.)

**விரகறம்**—வெள்ளைச்சாரணை. (மலையக.)

**விரகு** — 1. அறிவு. (புறநா.) 2. உபாயம். 3. பண்ணியாரம். உபாயங்களாற்பண்ணப்படுதலின் விரகென்றார். (2, 3-பத்துப்பாட்)

**விரசம்**—இரசமில்லாமை. (வழக்.)

**விரசாநதி**—விரசை.

**விரசுதல்** — கலத்தல். (திருவிளை. தடாதகைப்பிராட்டியார். ௨௭.)

**விரசை**–வைகுண்டலோகத்திலுள்ள ஆறு (அபிதாநசி.)

**விரணகம்**—ஆமணக்கு. (வைத்தியபரி.)

**விரணகிருது**—சேங்கொட்டைமரம். (மலையக.)

**விரணம்** — புண். (வழக்.) 2. விழற்புல். (மலையக.)

**விரணம்போக்கி** — ஆடுதின்னாப்பாளை. (வைத்தியபரி.)

**விரத்தம்**—வெறுப்பு. (வழக்.)

**விரத்தன்** — வெறுப்புள்ளவன், பற்றற்றவன்.

**விரத்தி**–1. விரத்தன். 2. வெறுப்பு, துறவு.

**விரதம்**—1. சத்தியம். (சூ. நிக. ௧0: ௧0.) 2. தவம். இது: புண்ணியமேழினுளொன்று. (பொருட்-நிக.)

**விரதன்**—விரதமுடையோன். (வழக்.)

**விரதி**—1. துறவி. (வழக்.) 2. விரதமுள்ளவன்.

**விரயம்**—செலவு. (வழக்.)

**விரல்**—அங்குலி. (சூ. நிக. ௨: ௧௧.)

**விரல்நொடி**–1. நாயுருவி. (வைத்தியபரி.) 2. கைவிரலினொடி.

**விரலணி**—மோதிரம். (சூ. நிக. ௭: ௨௯.)

**விரலிப்பச்சை**–பச்சைக்கற்பூரம். (வைத்தியபரி.)

**விரலேறு**–ஒருவகைத்தோற்கருவி. (சிலப்)

**விரவல்**—கலத்தல். (வழக்.)

**விரவலர்**—பகைவர். (தண்டியலங். பொதுவி. ௧௰. உரை.)

**விரவி**—வெள்ளரி. (வைத்தியபரி.)

**விரவு**—1. உவமவுருபு. (சிந்தா.) 2. விரவுதல்.

**விரவுத்திணை**—பொதுத்திணை.

**விரவுப்பெயர்**—பொதுப்பெயர். (நன்னூ. உயிரீற்றுப். ௬. உரை.)

**விரளம்**—தயிர்முதலியவற்றிற்குப் பெயர் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

**விரற்சுற்று**—நகச்சுற்று, ஓர் வியாதி. (வழக்.)

**விரற்புட்டில்**—விரலுறை. (சிந்தா.)

**விராகம்**—வெறுப்பு. (வழக்.)

**விராகன்** — 1. அருகன். (சூ. நிக. ௧: ௧.) 2. இச்சையற்றவன். (வழக்.)

**விராகு**—விராகம். (சிந்தா.)

**விராட்டு**–1. சுவாயம்புமநுவின் பிதா மாதாவுக்கு ஒரு பெயர். அது: பிரமனே சுவாயம்பு மநுவிற்கு பிதாவாகியும், மாதாவாகியுந் தோற்றிய வடிவமென்பர். 2. பரப்பிரமம்.

**விராடம்**—ஓர் தேயம். (பாரத. விராடபருவத்தைக்காண்க.)

**விராடன்**—விராடதேயத்தரசன். (பாரத. விராடபருவம்.)

**விராணி**—யானை. (வைத்தியபரி.)

**விராத்தியன்** — அநுலோமப் பெண்ணும் பிரதிலோமத்தாணுங்கூடப் பிறந்தபிள்ளையின் பெயர். (பிங்கல. ௬௰)

**விராதம்** — எதிரிடைமுதலிய பலபெயர் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

**விராதன்**—இராமனாலே தண்டிக்கப்பட்ட ஓர் அரக்கன். (இராமா. ஆரணியகா. விராதன் வதைப்)

**விராமம்**–ஒற்றெழுத்து. (பிங்கல. ௨0அஅ.)

**விராய்**—விறகு. (வைத்தியபரி.)

**விராலம்**—பூனை. (வைத்தியபரி.)

**விராலி**—ஓர் செடி. (வழக்.)

**விராவம்**—ஒலி.

**விராவுதல்**—விரவுதல்.

**விரானு**—காக்கணம். (வைத்தியபரி.)

**விரி**–1. தெரிநிலைவினைப்பகுதி. 2. பொதியெருதின்மேலிடுஞ்சேணம். (வழக்.)

**விரிகாசம்**—பொரிகாரம். (வைத்தியபரி.)

**விரிச்சி** — 1. நற்சொன்னிமித்தம். (சூ. நிக. ௧0: ௧௧.) 3. விரிச்சித்துறையுளொன்று. (புறப்-மாலை.)

**விரிச்சிகன்**–1. கணி. கேள்விகேட்கப்படுபவன். (சிந்தா.) 2. சூரியன். (ஞானமிருதம்.)

விரிசா—கையாந்தகரை. (வைத்தியபரி.)
விரிசிகை-முப்பத்திரண்டு கோவையுள்ள மாதர் இடையணி. (சூ. நிக. எ: உஎ.)
விரிசு—ஓர் வாணம். (வழக்.)
விரிஞ்சன்—பிரமன். (சூ. நிக. க: கசு.)
விரிஞ்சி—இவர், புலிவயிற்றிற்பிறந்த ஒரு முனிவர். (மணிமே.)
விரித்தல் — 1. அலர்தல். 2. சொல்லல். (பிங்கல. உ00௬.) 3. பரப்பல். (இராமா. அயோத்தி. கைகேயிசூழ். ௯0.) 4. விளக்குதல். (1, 4-வழக்.)
விரித்திடல்—அலர்தல். (சூ. நிக. கூ: கூஉ.)
விரிதருதோகை — மயிலின் விரிந்ததோகை இதற்குப் பிங்கலத்தில் மோசகமென்பர். (பிங்கல. உ௬கஎ.)
விரிதல் — 1. அகலுதல். 2. அலர்தல். 3. பரத்தல். (புறநா) 4. விசாலித்தல். (1, 2-(வழக்)
விரிதாறு—பெருந்தாறு. (வைத்தியபரி.)
விரிப்பு—விரித்தல். பு-விகுதி.
விரிபுலப்பொருட்டற்குறிப்பணி-ஓரலங்காரம். (உ-ம்.)"காமத்தீயினபுகைபோன்றிருக்கின்றதுஇருள்" என்பது இதில் இருளாகிய விஷயம் விரிந்துநின்றது. புகைக்கூட்டம். விஷயி. (விசாக. அணியிலக்.)
விரிபூடு—பற்படாகம். (வைத்தியபரி.)
விரிமலர்—தொடர்ப்பூடு. (பிங்கல. உஅஉச)
விரிமுரண் — இசைப்பாவகையுளொன்று. (சிலப்)
விரியல்—1. ஒளி. (சூ. நிக. அ: உஉ.) 2. பரத்தல். (சூ. நிக. கூ: ௬உ) 3. மலர்தல். (சிலப்.)
விரியன்—ஒருவகைப்பாம்பு.(சித்திராரூடம்)
விரியுருவகம்—ஓரலங்காரம். இது ஆகிய முதலிய சொற்கள் வெளிப்பட்டு நிற்றலையுடையது. (தண்டி. ௬௫.)
விரியுவமை—ஓரலங்காரம். இது உவமானமும், உவமையுருபும், பொதுத்தன்மையும், உவமேயமும் வெளிப்படையாய் விரிந்துநிற்க வருவது. (உ - ம்.) "பால்போலுமின்சொல்" (தண்டி. ௬0)
விரிவு—1. விசாலம். (பிங்கல. உகஎ.) 2. விரிதல். உ—தொழிற்பெயர் விகுதி.
விரீஇ—விரீகி. (சிந்தா.)
விரீகி—1. அரிசி. 2. காரேலம். 3. நெல். (1, 2, 3-வைத்தியபரி.)
விருக்கக்குக்குடம்-காட்டுக்கோழி (வைத்தியபரி.)
விருக்கசஞ்சாரி—குரங்கு. (வைத்தியபரி.)
விருக்கசம்—பல்லி.
விருக்கசாம்-1. குரங்கு. (வைத்தியபரி.) 2. கோட்டில்வாழ்விலங்கு.
விருக்கதேனி—புல்லூரி. (வைத்தியபரி.)
விருக்கநாதன்—அரசு (வைத்தியபரி.)
விருக்கம்—மரம். (சூ. நிக. ச: சச.) புண்ணியதருக்களின் விவரத்தை அபிதானசிந்தாமணியிற்காண்க.
விருகத்திரணம்—மூங்கில். (மலையக.)
விருக்கபாதம்—ஆலமரம்.(வைத்தியபரி.)
விருக்கராசன் — அரசமரம். (வைத்தியபரி.)
விருக்கவீடு — மரப்பொந்து. (வைத்தியபரி.)
விருக்காதினி—காட்டுப்பாகல். (வைத்தியபரி.)
விருக்கு—சாதிலிங்கம். (வைத்தியபரி.)
விருகதூமம்—நீர்மேற்படர்கொடி.
விருகம்—செந்நாய். (பிங்கல. உ௯க௬.)
விருகற்பாடலி — விளாமரம். (வைத்தியபரி.)
விருச்சலாபம் -நெருஞ்சி. (வைத்தியபரி.)
விருச்சி—சிற்றாமணக்கு. (வைத்தியபரி.)
விருச்சிக்காணி—தேட்கொடுக்கி (வைத்தியபரி.)
விருச்சிகம் —1. சாரணை. (வைத்தியபரி.) 2. தேள். (சூ நிக. ச: எ) 3. விருச்சிகராசி. (சூ. நிக. கூ: கூ௫.)
விருச்சிகன்—இவர் பொதியின்மலைச்சாரலிலேதவஞ்செய்துகொண்டிருந்த ஒருமுனிவர். (மணிமே.)
விருசகத்தி—விரியறுகு. (வைத்தியபரி.)
விருசம்—1. இஞ்சி. 2. எலி. 3. விருசமரம். (1, 2, 3-வைத்தியபரி.)
விருசு—விருசமரம். (வழக்.)
விருட்டி—மழை. பஞ்சாங்கத்திலறிக.
விருடலோசனன்—எலி. (வைத்தியபரி.)
விருத்தகங்கை — கோதாவரி. (சூ. நிக. ௫: உஉ.)
விருத்தகிரி—விருத்தாசலம். (வழக்.)
விருத்தசங்கம் — கிளிஞ்சில். (வைத்தியபரி.)
விருத்தத்தானம்—செய்யுட்குரிய தானப்பொருத்தத்தினொன்று. வெண்பாப் பாட்டியயல் "குறிலைந்தும்" என்னும் முதற்குறிப்பு வெண்பாவிற்காண்க.
விருத்ததை—எதிரிடை, ஒவ்வாமை.
விருத்தத்துவம்—கிழத்தன்மை. (வழக்.)
விருத்தபம்—மிளகு. (வைத்தியபரி.)

விருத்தபலம்—1. இலந்தை. 2. மாதளை. 3. மிளகு. (1, 2, 3-வைத்தியபரி.)

விருத்தபன்னி—பங்கம்பாளை. (மலையக.)

விருத்தபுட்பம்—கடம்பு. (வைத்தியபரி.)

விருத்தம் — 1. ஏதுப்போலியுளொன்று. (தர்க்கசங். கூக. உரை) 2. கிழத்தன்மை. 3. சிற்பநூல்முப்பத்திரண்டினுளொன்று (பொருட். நிக. கூகூடு.) 4. சூதுவிளையாட்டிற்கூறுந்தொகை. (வழக்.) 5. நிலக்கடம்பு. (மலையக.) 6. பாவினத்தொன்று. (யாப். காரி. செய்யுளிய. க. உரை.) 7. மாறுகொள்வது, முரணுவது. (தர்க்காமிருதம்.) 8. வட்டம், வெறுப்பு முதலியவற்றிற்கும் பெயர்கூறுவர். (2, 8-சூ. நிக. கக: நகரவெ. அ.)

விருத்தமல்லிகை—குடமல்லிகை. (வைத்தியபரி.)

விருத்தவியபிசாரி — துணிபொருளின் மறுதலைப்பட்ட பொருளைத்துணியும் விருத்தவேதுவுக்குமிடங்கொடுக்கின்ற தன்மையிலுள்ளபொருளை ஏதுவாகக்கூறுவதாம். (அநுமானவிளக்கம்.)

விருத்தன் —முதியோன். (வழக்.)

விருத்தாசலம்—விருத்தகிரி. (பழமலையந்தாதி. ச00.)

விருத்தாதீபகம்—ஓரலங்காரம். (தண்டி. பொருளணியிய கூக.)

விருத்தாந்தம்—வர்த்தமானம். (வழக்.)

விருத்தாப்பியம்— கிழத்தன்மை. (வழக்.)

விருத்தான்னம் — பழஞ்சோறு. (வைத்தியபரி.)

விருத்தி—1. அடிமை. (சூ. நிக. உ: சக.) 2. இருப்பு. (சிலப்.) 3. இலாபம். 4. சீவிதம். (சிந்தா.) 5 செல்வம். (சூ நிக. அ: கூஉ.) 6. தொழில். 7. நிகழ்ச்சி. (தர்க்காமிருதம்.) 8. நித்தியயோகத்தொன்று. (வருஷாதிநூல்.) 9. மருது. (மலையக.) 10. வளர்தல். 11. விரிவுரை. 12. விலக்குறுப்பினொன்று. (சிலப்) (3, 6, 10, 11-சூ நிக கக: ரகரவெ கூ.)

விருத்திசந்தி—அ ஆ ஆகாரங்களின் ஒன்றன்முன் ஏகார ஐகாரங்களில் ஒன்றுவந்தால், அவ்விரண்டுங்கெட ஓர்ஐகாரந்தோன்றுதலும், அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் ஓகர ஔகாரங்களில் ஒன்று வந்தால் அவ்விரண்டுங்கெட ஓர் ஔகாரம் தோன்றுவதாம். (நன்னூ. மெய்ப்புணரியல் கூகூ உரை)

விருத்தியர்—தொழிலாளர். விருத்தி-தொழில். (வழக்.)

விருத்திரன்—இந்திரனாற் கொல்லப்பட்டவோரசுரன். (திருவிளை. இந்திரன்பழி. கஎ.)

விருத்தை—மூத்தாள். (சூ. நிக. உ: கூச.)

விருதம்—வெள்ளெருக்கு. (வைத்தியபரி.)

விருதர்—வெற்றியோர். விருது-வெற்றி.

விருதா—பயனின்மை. (வழக்.)

விருதி-மறைத்தல் முதலிய பெயர்கூறுவர்.

விருது—1. அடையாளம். இது: வீரங்கள் முதலிய வெற்றியாற்பெறுவது. (திருவிளை. விறகுவிற். எ) 2. கொடி. 3. வெற்றி. (2, 3-வழக்.)

விருந்தம்—1. காதலி. (சூ. நிக. உ: எகூ.) 2. காமபு. (தைலவ.) 3. சுற்றத்தின்கூட்டம். 4. விலங்கின்கூட்டம். 5. வேம்பு. (வைத்தியபரி.) (3, 4-சூ.நிக. கக: ரகரவெ. கூக.)

விருந்தர்—புதியர், விருந்து-புதுமை.

விருந்தனை—மணமகள். (பிங்கல. கூகக)

விருந்தாகம்—சோம்பு. (வைத்தியபரி.)

விருந்தாரம் — 1. அழகு. 2. மேன்மை. என்பா.

விருந்தாவனம்-வடமதுரைக் கருகிலுள்ளவோர் வனம். (அபிதானசி.)

விருந்தினர்—விருந்தர். விருந்து-புதுமை.

விருந்து — 1. புதிதாய்வந்தோர்க்குச்செய்யும் உணவு. (வழக்.) 2. புதுமை. (சூ. நிக. அ: சகு.) 3. வனப்பெட்டினுளொன்று. (யாப். காரி. ஒழிபிய. கூ: உரை.) 4. விருந்தினர். (வள். விருந்தோம்பல். க.)

விருந்தை — 1. சலந்தரன்மனைவி. (அபிதானசிந்.) 2. துளசி. (வைத்தியமரி.)

விருந்தோம்பல் — வேளாண்மை மாந்தரியல்பினொன்று. (சூ. நிக. கஉ: க0எ.)

விருப்பம்-, விருப்பு— } ஆசை. (சூ. நிக அ: எகு.)

விருபன்—வெள்ளெலி. (வைத்தியபரி.)

விரும்பல்—, விருப்புதல்- } ஆசைப்படுதல். (சூ.நிக.கக: ரகரவெ. அ.)

விரும்பின்று—விரும்பியது. (ஐங்குறு.)

விருமன்னியம்—சேங்கொட்டை. (வைத்தியபரி.)

விருமழலி—பிரமியிலை. (வைத்தியபரி.)

விருவிருத்தல்—, விருவிருப்பு—, விருவிரெனல்- } சீக்கிரக்குறிப்பு. (வழக்)

விருளை — கடிவாளப்பூண். (பிங்கல. கசுஉகு.)

விருபகம் — ஓரலங்காரம். இது: விரோதமான தன்மையுடைய உருவகமாம். வி-விரோதம். (தண்டி. பொருளணி. சகு.)

விருபம்-1. விகாரரூபம். (வழக்.) 2. வேற்றுமை. (சூ. நிக. அ: கூகு.)

**விருபாக்கன்**—1. சிவன், பதினோருருத்திரர்களிலொருவன். விகடவிழியாகிய நெற்றிக் கண்ணுடைமையால் இப்பெயர்கூறுவர். விருபாக்கமென்னுந் தலத்திலிருக்குஞ் சுவாமிக்குமிப்பெயர் கூறுவர். (திருவிளை. அருச்சனைப். கக.)

**விருபி**— } 1. இயமன் மனைவியென்பர்.
**விருபை**— } 2. வடிவற்றவள். (வழக்.)

**விரை**—1. கலவைச்சாந்து 2. நறும்புகை. 3. மலர். (ஞானமிருதம்.) 4. வாசனை. (1, 2, 4-சூ. நிக. கக: ரகரவெ. உஎ.) 5. தெரிநிலை வினைப்பகுதியுமாம்.

**விரைஇ**—1. கலந்து (பத்துப்பாட்) 2. தெளித்து. (பரிபாடல்.)

**விரைதர்வேன்**—கடுகவருவேன். (சிந்தா.)

**விரைதல்** — விரைவுசெய்தல். (இராமா. ஆரணிய. சூர்ப்பநகைப். கஉரு.)

**விரையாதீமே**—விரையாதே (ஐங்குறு.)

**விரையாது**—கலங்காமல். (சிந்தா.)

**விரைபு**—விரைந்து. (பரிபாடல்.)

**விரைவனர்**—கடுகினர். (புறப். மாலை.)

**விரைவு**—வேகம். (வழக்.)

**விரோசனம்**—கழித்தல். குமரேசசதகத்தில், மாதத்திரண்டுவிசைஎன்னுஞ்செய்யுளிற் காண்க.

**விரோசனன்**—1. சூரியன். (பிங்கல. உகo) 2. பிரகலாதன்புத்திரன். (அபிதானசிந்.)

**விரோதச்சிலேடை**—ஓரலங்காரம். இது முன்னர்ச் சிலேடிக்கப்பட்ட பொருள்களுள் ஒன்று பின்வரும் பொருள்களோடு விரோதமுறத்தொடுக்கப்படுவதாம். (தண்டி. பொருளணி. ககஎ. பக்.)

**விரோதம்**—1. ஓரலங்காரம். இது மாறுபட்ட சொல்லாலாவது பொருளாலாவது மாறுபாட்டுத்தன்மைதோன்றச்சொல்லுவது. (தண்டி. பொருளணியியல். கஉஉ. பக்.) 2. பகை. 3. வேற்றுமை. (2, 3-வழக்.)

**விரோதவுவமை**—ஓரலங்காரம் உபமானவுபமேயங்கள் தம்முள் விரோதகுண முடையனவாகச் சொல்வது. "செம்மைமரைமலருந் திங்களுநும்முகமும்—தம்மிற்பகை விளைக்குந் தன்மையவே" யென்னுந் தண்டியலங்காரவுரைச்செய்யுளிற்காண்க.

**விரோதி**—1. இருபத்துமூன்றாவதாண்டு. (வருஷாதிநூல்.) 2. சத்துரு. (வழக்.) 3. தெரிநிலைவினைப்பகுதி.

**விரோதிகிருது**—நாற்பத்தைந்தாவதாண்டு. (வருஷாதிநூல்.)

**விரோதித்தல்**—1. பகைத்தல். 2. வேற்றுமைப்படுத்தல். (1, 2-வழக்.)

**வில்**—1. ஒளி. 2. மூலநட்சத்திரம். 3. வில். (1, 2, 3-பிங்கல. சoஅக.)

**வில்லங்கம்**—தடை. (வழக்.)

**வில்லம்**—1. பெருங்காயம். 2. வில்வம். (1, 2-வைத்தியபரி.)

**வில்லவன்**—சேரன். (சூ. நிக. உ: கஅ.)

**வில்லி** — 1. மன்மதன். (சூ. நிக. க: உகூ.) 2. விற்போர்செய்பவன். 3. வீரபத்திரன். (சூ. நிக. உ: உஉ.)

**வில்லிபுத்தூராழ்வார்**—தமிழிற்பாரதஞ் செய்த கவிஞர்.

**வில்லிமோகன்** — மன்மதன். (சூ. நிக. கஉ: கூ.)

**வில்லுகன்**—சிற்றுமுட்டி. (வைத்தியபரி)

**வில்லேருழவர்**—வில்வீரர், வில்லை ஏராகக்கொண்டு பகைவரை உழுகின்றவர்கள். (வள். அஎஉ.)

**வில்லை**—தகட்டுவட்டம். (வழக்.)

**வில்வம்**—ஓர் மரம். (அபிதானசிந்.)

**விலக்கணம்**—வித்தியாசம்.

**விலக்கம்**—விலக்கு.

**விலக்கல்**— }
**விலக்கு**— } மாற்றுதல் (பிங்கல உககூ)
**விலக்குதல்**- }

**விலக்குருவகம்**—ஓரலங்காரம். இது விலக்கோடுகூடிவரும் உருவகம் விலக்குருவகமாம். (தண்டி. பொருளணி. சo. பக்.)

**விலக்குவமை**—ஓரலங்காரம். இது உபமேயத்திற்கு உயர்வுதோன்ற உபமானத்திலே ஒப்புமைக்குவிலக்காயுள்ளசிலதன்மைகள்புலப்படும்படி சொல்லுவதாம். (தண்டி. பொருளணி. கூஅ. பக்.)

**விலக்குறுப்பு**—நாடகத்தின் விலக்குறுப்புக்கள். அவை பதினொன்குவகைப்படும். (அபிதானசிந்.)

**விலகல்**— } 1. எறிதல். (பிங்கல. உககஉ.)
**விலகுதல்**- } 2. நீங்கல். (வழக்.)

**விலங்காசு**—சிங்கம். (சிந்தா.)

**விலங்கல்**—1. மலை. (பிங்கல. சகரு) 2. விலகுதல். (இராமா. ஆரணிய சடாயுகாண். உஉ.)

**விலங்கி**—1. வேலி. (ஞானமிருதம்.) 2. விலகி.

**விலங்கினர்**—விலகினர்.

**விலங்கு**—1. ஒழிவாய். (பரிபாடல்.) 2. காற்றளை, கால்விலங்கு. 3. குறுக்கு. 4. தெரிநிலைவினைப்பகுதி. 5. பறவை. (இராமா. ஆர

ணிய. சடாயுகாண். உஉ.) 6. மிருகத்தின் பொது. (2, 3, 6-சூ. நிக. கக: லகரவெ. கஉ.)

விலங்குதல்—1. எதிர்நின்று தடுத்தல். (புறநா.) 2. குறுக்கிடுதல். (ஐங்குறுநூ.) 3. துலங்கல். (சூ. நிக. அ: உரு.) 4. விலக்கல்.

விலங்குநர்—தடுப்போர். (பதிற்றுப்.)

விலங்குவோள்—விலகுபவள். (ஐங்குறுநூ)

விலத்தல்— } நீக்குதல்.
விலத்துதல்— }

விலம்—அகில். (மலையக.) வில்லம் என்பது விகாரமாயினது.

விலம்பம்— } தாமதம். (சூ. நிக. அ: சுஅ.)
விலம்பனம்— } விளம்பனமென்றும் பாடமுண்டு.

விலா-விலாப்பக்கம். (உ-ம்.) "தளர்விலாப் புடைவீங்கிட வுணல்வேண்டுந்தயைபுரி யென்றனம்" (அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ். சித்து.)

விலாங்கு—ஓர் மீன். (வழக்.)

விலாசம்-1. பத்திரிகையின்புறவெழுத்து. (வழக்.) 2. விளையாட்டு. வில்லிபாரத. சம்பவச்சருக்கம். எயினலம்புனையென்னு முதற் குறிப்புள்ளகவியிற் காண்க. 3. வேடிக்கைத் தானத்திற்கும் பெயர்கூறுவர்.

விலாசனை—மகளிர்விளையாட்டு. (சூ. நிக. க: ரு.)

விலாசி—இலக்கணையின்றேழி. (சிந்தா.)

விலாசிநி—வேசி.

விலாப்புடை—விலாப்பக்கம். (சிந்தா.)

விலாமிச்சை—ஒரு வாசனைப்புதல். (தைலவ. ருகு.)

விலாலம்—விலாளம். அது-பூனை.

விலாவணை— } அழுகை. (சிந்தா.)
விலாவம்— }

விலாழி-1. குதிரைவாயினுரை. (இராமா. பாலகாண். மிதிலைக். எ.) 2. யானைக்கை யுமிழ்நீர். (சூ. நிக. ரு: அ.)

விலாளம் — 1. ஆண்பூனை. (பிங்கல. உகுஉ௦.) 2. பூனை. (பிங்கல. உகுகஅ.)

விலுபன்னி — பெருங்குரும்பை (வைத்தியபரி.)

விலேசயம்-1. எலி. 2. குகை. 3. பாம்பு. 4. முயல். (1, 2, 3, 4-வைத்தியபரி.)

விலேபநம்— } பூசுதல். (வழக்.)
விலேபம்— }

விலேபி—கஞ்சி. (வைத்தியபரி.)

விலை — 1. கிரயம். 2. விற்றல். (1, 2. வழக்.)

விலைஞர்—விற்போர் (பத்துப்பாட்.)

விலைமகள்—வேசி. (பிங்கல. கூசச.)

விலோசனம்—கண். (சூ. நிக. உ: கூசு.)

விலோதம் — 1. துகிற்கொடி. 2. பெண்மயிர். 3. மயிர்ச்சுருள். (1,2,3-பிங்கல. ச௦அ௦.)

விலோதனம் — பெருங்கொடி. (பிங்கல. கஉகூஅ.)

விலோலம்—சஞ்சலம்.

விவகரித்தல்—விவகாரஞ்செய்தல். (வழக்.)

விவகலிதம்—விபகலிதம். கணிதம் எட்டினொன்று. (பொருட் நிக. சுஅச.)

விவகாரம்—வழக்கு. (வழக்.)

விவகாரி—வழக்காளி. (வழக்.)

விவகாரிகம்—வழக்கு. (வழக்.)

விவசம்—பரவசம். (வழக்.)

விவசாயம்—வேளாண்மை. (வழக்.)

விவத்து— } ஆபத்து. (வழக்.)
விவத்தை— }

விவர்த்தம்— } திரிவு.
விவர்த்தநம்— }

விவரணம்—வெளிப்படுத்துவது. (தர்க்காமிருதம்.)

விவரநாலிகை-மூங்கில். (வைத்தியபரி.)

விவரம்—1. மலைமுழை (சூ. நிக. ௩: கூச.) 2. வகை. (வழக்.)

விவரித்தல்—வருத்தச்சொல்லல். (வழக்.)

விவரிதம்—விபரிதம்.

விவாகம்—கல்யாணம். (சூ. நிக. கூ: ச.)

விவாதம்—வழக்கு. (வழக்.)

விவாரம்—விரிதல்.

விவிதம்—நாநாவிதம். (சூ. நிக. அ: கூக.)

விவேகம்—புத்தி. (வழக்.)

விவேகி—அறிவுடையவன். (வழக்.)

விவேகித்தல்—ஆராய்ந்தறிதல். (வழக்.)

விவேசனம்—அறிதல்.

விழ — 1. மணம். (திருவால. திருவிளை.) 2. விழவு. (சிந்தா.)

விழம்பு—சோறு. (வைத்தியபரி.)

விழல் — 1. ஓர் புதல். (வழக்.) 2. பயனின்மை. (பிங்கல. ககூ௦ரு.) 3. விழுதல். 4. வீண்.

விழலர்—வீணர். (வழக்.)

விழவு-1. திருவிழா. 2. மிதுனராசி. (1,2-(பிங்கல. ச௦அஉ)

விழா—திருவிழா. (சூ. நிக கூ: ச.)

விழாலரிசி—விழாலரிசி. இஃது ஓர் மருந்து. (தைலவ.)

விழி-1. கண். (உ-ம்.) "விழிமலர்ப்பூசனை" (காஞ்சிப். கடவுள்வாழ்த். ரு.) 2. தெரிநிலை வினைப்பகுதி.

**விழித்தல்**—1. உயிர்வாழ்தல். (மணிமே.) 2. பார்த்தல். (வழக்.) 3. விளங்குதல் (சிலப்.)
**விழித்திமைப்பவர்**—மக்கள். (சிந்தா.)
**விழிப்ப**—விளங்க. (சிந்தா.)
**விழிப்பு**—விழித்தல். பு-விகுதி.)
**விழிவிழுங்கி**-கண்ணோயுள் ஒன்று.(வழக்.)
**விழு**—சிறப்பு. (புறநா.)
**விழுக்காடு**-1. பங்கு. (சிந்தா.) 2. விழுதல். (திருவால. திருவிளை.) காடு-தொழிற்பெயர் விகுதி.
**விழுக்கு** — நிணம். (சூ. நிக. ௩: சடு.) 2. நெஞ்சிற்றசை. (புறப்-மாலை.)
**விழுகுதல்**— } **விழுகை**— } வீழ்தல். (வழக்.)
**விழுங்கல்**-1. கொல்லல். (சிந்தா.) 2. நுங்கல். (சூ. நிக ௯: ௯.)
**விழுத்தகை**—வீறு. (பரிபாடல்.)
**விழுத்தம்**—கருஞ்சீரகம்.(வைத்தியபரி.)
**விழுதல்**—1. சாதல். 2. வீழ்தல். (1, 2-வழக்.)
**விழுதி** — வீழிச்செடி. (வழக்.)
**விழுது**—1. ஆலமர முதலியவற்றின்வீழ். (உ - ம்.) "விழுதுடைத்தனியாலெனவிருந்த தொல்வியாதனைமுகநோக்கி" (வில்லி. பாரத. சம்பவச்சருக்கம். ௯௦) 2. நெய்வார்கருவியினொன்று. ஒரு குழூஉக்குறி.
**விழுப்பம்**—1. ஆசை. (பிங்கல. ௯அ௯௯.) 2. சிறப்பு. (வள். ௧௩௧)
**விழுப்பு**—1. அநாசாரம். 2. விழுதல். (1, 2-வழக்.)
**விழுப்பொருள்** — சிறந்த நுண்பொருள். (யாப். காரி. பாயிரம். ௫. உரை.)
**விழுபாலை**—ஓர் கொடி.
**விழுமம்**-1. சிறப்பு. 2. சீர்மை. 3. துன்பம். (1, 2, 3-சூ. நிக. ௧௧: ழகரவெ. ௫.) 4. நன்றி. (சூ. நிக. அ: ௫௯.)
**விழுமிய**—சீரிய. (பத்துப்பாட்.)
**விழுமியம்**—சிறப்புடையேம். (புறநா.)
**விழுமியோர்**—பெரியோர். (புறநா.)
**விழவிழெனல்** — வழுவழுப்பாயிருத்தல். (வழக்.)
**விழைச்சு**—1. இளமை. 2. புணர்ச்சி. (1, 2-பிங்கல. ௬௦அ௫.)
**விழைதல்**—விழைவு. இது. ஆசைப்படல், புணர்தல் என்னும் இரண்டுபொருளில் வரும்.
**விழைந்தோன்**-1. கணவன். 2. சிநேகன். (1, 2-சூ. நிக. ௧௧: ழகரவெ. ௯எ.)
**விழைவு**-1. ஆசை. (சூ. நிக. அ: எ௫.) 2. புணர்ச்சி. (சூ நிக. ௯: ௯எ.)

**விள்வார்**—வேறுபடுவார். (புறப். மாலை.)
**விள்ளல்**— } **விள்ளுதல்**- } 1. சொல்லல். (சௌந்திரியலகிரி. ௬௫. உரை.) 2. தழுவல், ஆலிங்கனஞ்செயல். (சூ. நிக. ௯: ௧௧.) 3. மலர்தல். (சூ. நிக. ௪: ௫௦) 4. வேறுபாடு. (சூ. நிக. அ: ௯௫.)
**விள**—1. இளமை. 2. கமர். 3. விளாமரம். (1, 2, 3-பிங்கல. ௪௦அ௯.)
**விளக்கணி** — ஓரலங்காரம். இது வர்ணியங்களும் அவர்ணியங்களும் ஒரு தருமத்தின் முடிதலாம். (விசாக. அணியிலக். ௧௫.)
**விளக்கம்**—1. தெளிவு. (வழக்.) 2. பிரகாசம். (பெரியபு. திருவாரூர்ச். ௯.) 3. மோதிரம். (பத்துப்பாட்.)
**விளக்கல்**—1. அழுக்கைநீக்கிப்பிரகாசிப்பித்தல். 2. தெளிவித்தல். (1, 2-வழக்.)
**விளக்கு**—1. ஒளி. 2. சோதிநட்சத்திரம். (1, 2-சூ. நிக. ௧௧: ளகரவெ. ௯.) 3. தீபம். (வழக்.) 4. தெரிநிலைவினைப்பகுதி.
**விளக்குதல்**—விளக்கல். (வழக்.)
**விளக்குநிலை**-1. ஓர் பிரபந்தம். (பொருட். நிக.) 2. பாடாண்பகுதியுள் ஓர் துறை. (புறப். மாலை)
**விளக்குமாறு**—துடைப்பம். (வழக்.)
**விளகம்**—சேங்கொட்டை.(வைத்தியபரி.)
**விளங்கம்** —வாய்விளங்கம்.(வைத்தியபரி.)
**விளங்கல்**—1. ஒளிசெய்தல். (சூ. நிக. அ: உ௯.) 2. தெரிதல். (வழக்.)
**விளங்கு** —1. சிற்றரத்தை.(வைத்தியபரி.) 2. தெரிநிலைவினைப்பகுதி.
**விளங்குதல்**—விளங்கல்.
**விளங்குதி**—விளங்குவாயாக. (புறநா.)
**விளங்குபோன்**—கண்ணாடி. (புறநா.)
**விளத்தல்**—விளத்துதல்.
**விளத்தாரு**—அடம்பு. (வைத்தியபரி.)
**விளத்துதல்**—விலக்குதல்.
**விளம்பம்** —விளம்பனம்.
**விளம்பரம்**—அறிக்கைப்பத்திரம்.(வழக்.)
**விளம்பல்**—சொல்லல். (சூ. நிக. ௯௦: ௫.)
**விளம்பனம்**—தாமதம். (சூ. நிக. அ: ௬அ.) விலம்பனம் எனவுங் கூறுவர்.
**விளம்பி**-முப்பத்திரண்டாவதாண்டு. (வருஷாதி நூல்.)
**விளம்பிதம்**— தாளப்பிரமாணத்தொன்று. அது, தாமதப்பட்டு முற்றுதலென்பர்.
**விளம்பிநாகனார்**-நான்மணிக்கடிகைநூலாசிரியர். (அபிதானசிந்.)
**விளம்புதல்**—விளம்பல்.

விளர் — 1. இளமை. 2. கொழுப்பு. 3. வெண்மை. (1,2,3-சூ. நிக. கக: ளகரவெ. உ.)

விளர்த்தல்— } வெளுத்தல். (உ-ம்.)"மெய்
விளர்ப்பு — } யெலாம்விளர்த்திட்டாள் " (பாரத. சம்பவ. கடு.)

விளரி-1. இளமை. 2. ஏழிசையினொன்று. (பொருட்-நிக. ருஎஅ.) 3. சாப்பண். (புறப்-மாலை.) 4. நெய்தநிலத்துயாழ். 5. யாழினோர் நரம்பு. 6. வேட்கைப்பெருக்கம். (1, 4, 5, 6-சூ நிக. கக: ளகரவெ. கடு.)

விளரிப்பாலை-பாலையாழ்த்திறத்தி னொன்று. (சூ. நிக. ௧௦: ௪௦. உரை.)

விளவு — 1. காமர். 2. விளாமரம். (1, 2-சூ. நிக. கக: ளகரவெ. க.)

விளவுதல்—விளாவல்.

விளா—விளாமரம், விளவுபார்.

விளாகம்—போர்க்களம்.(சூ. நிக. ௫: ௫௦.)

விளாத்தி—விளா. (வைத்தியபரி)

விளாவல்—1. கலத்தல். (வழக்.) 2. சூழுதல். (தணிகை. திருநாட்டுப். கஉ௬.)

விளி — 1. அழைப்பு. (பிங்கல. கக௬௬௬.) இது, எட்டாம்வேற்றுமைப்பொருள்.(நன்னூ. பெயரியல். ௬௫.) இசைப்பாட்டு. (சூ. நிக. ௧௦. ௬உ.) 3. ஓசை. 4. கொக்கரிப்பு. (3,4-சிந்தா.)

விளித்தல்—1. அ ழை த் த ல். (பிங்கல. உ௬௬௬.) 2 கெடுத்தல்.

விளிதல் — 2. கெடுதல். (வள். ௬௬உ.) 2. சாதல். (பிங்கல க௬௦எ.)

விளிந்து — நாணமுற்று. (திருவால. திருவிளை.)

விளிப்பது—1. அழைப்பது. 2. பாடுவது. (மணிமே.)

விளிப்பு-1. ஓசை (மணிமே.) 2. அழைத்தல்.

விளிம்பு—அருகு. (இராமா. ௬கரப். உ௦.)

விளிய — 1. அவமானப்பட. (திருவால. திருவிளை.) 2. கெட. (வள். ௬௬உ.)

விளிவித்தல்—1. அழைப்பித்தல். 2. கெடுவித்தல்.

விளிவின்று-இடைவிடாமல். (பரிபாடல்.)

விளிவு — 1. அவமானம். (திருவால. திருவிளை.) 2. கேடு (பத்துப்பாட்.) 3. கோபம். (உ-ம்) 'விளிவுதோன்றமிதிப்பனபோன்றன' (இராமா. பாலகா. நீர்விளையாட். உ௬.) 3. சாதல். (சூ. நிக. ௬: உ௦)

விளை — பயிர்விளையும் நிலம். இது, ஆகுபெயர். (வழக்)

விளைக்கிய—விளைத்தற்கு. (சிந்தா.)

விளைச்சல்—விளைவு. (வழக்.)

விளைஞர்—மருதநிலமாக்கள். (சூ. நிக.உ: எக.)

விளைத்தல்—விளைவித்தல்.

விளைதல்-1. உண்டாதல்.(பிங்கல.கஅஉக.) 2. தானியம்விளைந்து முற்றுதல். (வழக்.)

விளைந்த—முதிர்ந்த. (புறநா.)

விளைந்து—விளைந்தேன். (புறநா.) தன்மையொருமை வினைமுற்று.

விளைநிலம்—வயல். (சூ. நிக. ௫: ௬க.)

விளைப்பு—விளைத்தல். உ-விகுதி.

விளைமீன்-ஓர்மீன்.(வழக்குண்டுபோலும்)

விளையாட்டு—விளையாடுதல. (வழக்.)

விளையாநிலம்-களர்நிலம்.(பிங்கல.௫எஅ.)

விளையுள்—1. வயல். (பிங்க்ல. ௫எக.) 2. விளைவு. (மணிமே.)

விளைவித்தல்—விளையச்செய்தல். (வழக்.)

விளைவிலள்—பருவமுறாதவள். (ஐங்குறு.)

விளைவு—1. ஆக்கம். 2 சம்பவிப்பு. 3. தானியம். 4. பழம். (புறப்-மாலை.) 5. முதுமை. (பிங்கல க௬௫௦.) 6, மேகம். (பிங்கல. ௫அ.) (1, 2, 3-வழக்.)

விற்குதல்—விற்றல். (வழக்.)

விற்பக—வில்விட, ஒளிசெய. (சிந்தா.)

விற்படை—அம்பு. (சிந்தா.)

விற்பத்தி—கல்வியறிவு. (வழக்.)

விற்பன்னம்-விற்பனம், விவேகம்.(வழக்.)

விற்பனை—விற்றல். (வழக்.)

விற்புருதி—ஓர் சிலந்தி. (வழக்.)

விற்புருதிக்கிழங்கு—அமுக்கிராக்கிழங்கு. (வைத்தியபரி.)

விற்புருதிநாயகம்—அமுக்கிரா.(வைத்தியபரி.)

விற்பூட்டு-பொருள்கோளெட்டினொன்று. (நன்னூ. பொதுவிய. ௬௪.)

விற்றல்-விலைசெய்தல். (சூ நிக. கக: ௬௪.)

விறக்க—மிக (பதிற்றுப்பத்.)

விறது—காட்டம். (சூ. நிக. ௪: ௫௬.)

விறத்தல்-1. அச்சம். 2. செறிவு. 3. பலம். விறத்தல் எனினும் விறப்பு எனினுமொக்கும். (விறப்பு-பலம். (1, 2, 3-பிங்கல. ௪௦அஎ.)

விறந்த—மிக்க. (ஞானமிர்தம்.)

விறந்து—செறிந்து. (பத்துப்பாட்.)

விறப்பு—1. அச்சம். 2. செறிவு. 3. பலம். (1,2,3-பிங்கல. ௪௦அஎ.)4. போர். 5. வெற்றி. (சூ.நிக.கக: றகரவெ.அ.) மிகுதியுமாமென்பர்.

விறல்—1. பெருமை. (பிங்கல்.உஉஉ௫.)2. வலிமை. 3. வென்றி. (2, 3-பிங்கல. ௪௦அஅ.)

விறல்கோளணி-ஓரலங்காரம். இது: வலியுடைய பகைமின்மேலாதல் அதனது துணை

யின்மேலாதல் பராக்கிரமத்தைச் சொல்லுத லாம். (விசாக. அணியிய. ௫அ.)

விறலி—பாடுவிச்சி. (சூ. நிக. உ: எ௫.)

விறலியர்–1. விறல்பட ஆடு மகளிர். (பத்துப்பாட்.) 2. பாடன்மகளிருமாம். (பிங்கல. அகள.)

விறலியாற்றுப்படை– பாடாண்பகுதியுள் ஓர் துறை. (புறப்-மாலை.)

விறலோன்—1. அருகன். (சூ. நிக. க: ௫.) 2. திண்ணியன். (சூ. நிக. உ. ௬ㅇ.)

விறன்மிண்டர்—அறுபத்துமூன்று நாயன் மார்களிலொருவர்.(பெரியபு.விறன்மிண்டநாய ஞர்புராணத்திலறிக.)

விறட்டி—எரு. சோழதேயவழக்கு.

விறுமதரு—புன்முருக்கு. (வைத்தியபரி.)

விறுமழலி—பிரமி. (வைத்தியபரி.)

விறுமை—பிரமை. (வழக்.)

விறுவிறுத்தல்—, விறுவிறுப்பு—, விறுவிறெனல்– 1. விரைவுக்குறிப்பு. 2. விறுவிறுப்புக்கொள்ளல். (1, 2-வழக்.)

விறைத்தல்–, விறைப்பு— திமிர்ப்பு. (வழக்.)

வின்னம்—பின்னம். (வழக்.)

வின்னு—கடுகுரோகணி. (வைத்தியபரி.)

வின்னூலாளன்—துரோணுசாரியன். (சூ. நிக. உ: ௬.)

வினகம்—சேங்கொட்டைமரம்.(வைத்தியபரி.)

வினயம்—தேவபாணி. (சிலப்.)

வினவல்—, வினவுதல்– வினுவல்.

வினு—1. கேள்வி. இவ்வினு அறுவகைப் படும். (நன்னூ. பொதுவிய. ௬௬.) 2. சொல். (சூ. நிக. கㅇ: உ.)

வினுத்தருவார்—வினுவுவார். (சிந்தா.)

வினுதல்—, வினுவல்– வினுவுதல்.

வினுவிடை–சல்லாபம். (சூ. நிக. கㅇ: கஉ.)

வினுவுத்தரம்-சித்திரகவியிலொன்று.இது: பலமொழிகளாகப்பிரிந்து பொருள்படத்தக்க ஒரு பெயரை எடுத்துக்கொண்டு அம்மொழிகளே விடைகளாமாறு வினுக்களைவினவி அப் பெயரையுங்கூறி முடிப்பதாம். (தண்டி. க௫.)

வினுவுதல்—கடாவுதல்.(சூ. நிக. கㅇ: கஉ.)

வினுவெண்பா—ஓர்நூல். அது, சித்தாந்த சாத்திரம் பதினுன்கிலொன்று.

வினுவெதிர்வினு—வினுவிற்கு விடையாக வினுவுதல். (நன்னூ. பொதுவிய. ௬௬. உரை.)

வினுவெழுத்து—ஆ, எ, ஏ, ஓ, யா இவ் வைந்தும் வினுவெழுத்தாம். (நன்னூ. எழுத்திய. கஉ.)

வினை—1. இரண்டு. (தைலவ.) 2. ஊழ் வினை. (நாலடி. அறன்வலியுறுத். ௬.) 3. காரியம். (ஞானுமிருதம்.) 4. தானம். (பரிபாடல்.) 5. தொழில். (சூ. நிக. ௬: உ.) 6. போர். (சூ. நிக. ௬: சக.) வஞ்சத்திற்குங் கூறுவர்.

வினைச்சொல் — செய்யவன் கருவி நிலஞ் செயல் காலஞ் செய்பொருள் ஆகிய ஆறையும் விளக்கிநிற்குஞ்சொல்.(நன்னூ. வினையிய. க.)

வினைஞர்—1. சூத்திரர். (சூ. நிக. உ: உ௬.) 2. தொழில்செய்வோர். (பதிற்றுப்.)

வினைத்திரிசொல்–ஒருபொருளையே தெரிவிக்கின்றபலசொற்களாகியும், பலபொருளைத் தெரிவிக்கின்ற ஒரே சொல்லாகியும், அருமையாக அறியப்படுகிற அருத்தத்தை யுடைய வினைச்சொல். (நன்னூ. பெயரிய. கச.)

வினைத்தொகை—பெயரெச்சத்தின் விகுதியிடைநிலைகள் தொக்குநிற்பபதங்கள்வந்து புணரும் புணர்ச்சியாம். (நன்னூ. பொதுவிய. க௬.)

வினைப்பகாப்பதம்—நட, வா, உண், தின் முதலியன. (நன்னூ. பதவியல். ௬. உரை.)

வினைப்பகுதி-வினைச்சொல்லிற் பகாப்பதமாய் முன்னிற்குமுறுப்பு. அவை நட, வா முதலியன (நன்னூ. பதவியல். கㅇ.)

வினைப்பகுபதம்— பகுதி விகுதி முதலிய உறுப்புக்களுடைய தெரிநிலைவினைப்பகுபதம் குறிப்புவினைப்பகுபதம் எனவிருவகைப்படும். (நன்னூ. பதவியல். ௫. உரை.)

வினைமுதல்—கருத்தா. (நன்னூ. பெயரிய. ௬அ. உரை.)

வினைமுற்று — குறிப்புவினைமுற்றென்றும் தெரிநிலைவினைமுற்றென்றும் இருவகைப்படும். முறையே நன்னூல் வினையியல் பொருண் முதலாறினுமென்னுஞ் சூத்திரத்திலும்,பொதுவியல்பாறையும் என்ற சூத்திரத்திலுங்காண்க.

வினையாளர்–தொழில்செய்வோர். (வழக்.)

வினையியற்சொல் — செந்தமிழ்நிலத்து மொழியாய்க்கற்றோர்க்குங் கல்லாதவர்க்குந்தம் பொருளை யியல்பாகவிளக்கும் வினைச்சொல். (நன்னூல். பெயரிய. கச.)

வினையுரைப்போர்–தூதர்.(சூ.நிக.உ:சக.)

வினையுவமம்—தொழிலுவமம். இது: தொழில்காரணமாகவந்தவுவமை. (தண்டி.பக்.உㅇ.)

வினையெச்சக்குறிப்பு–குறிப்புவினையெச்சம். இது: பால்வினை யெஞ்சிநிற்பது. (நன்னூ. வினையிய. உ௬. உரை.)

வினையெச்சம் — குறிப்புவினையெச்சம். தெரிநிலைவினையெச்சமென விருவகைப்படும். தெரிநிலைவினையெச்சம், தொழிலுங்காலமுந் தோன்றிப் பால்வினையொழியநிற்பது. (நன்னூ. வினையிய. உரு.)

வினைவயிற்பிரிதல்-அகப்பொருட்டுறையி னொன்று. அது: வேந்தர்க்குற்றுழியுதவியிற் பிரிதலென்பர். (தஞ்சைவா. சகஎ.)

## வீ.

வீ — 1. ஒழிவு. 2. கேடு. 3. தெரிநிலை வினைப்பகுதி. 4. நீக்கம். 5. பறவை. 6. பெருமை (சிந்தா.) 7. மலர். (1, 2, 4, 7-பிங்கல. சoஅக.) (5-சூ. நிக. ரு: கூஅ.)

வீக்கம்—1. கட்டு. அம் - தொழிற்பெயர் விகுதி. 2. பெருமை. (சிந்தா.) 3. மிகுதல். 4. வீங்குதல். (3, 4-வழக்.)

வீக்கி—1. அடைத்து நிறைத்து. (சிந்தா.) 2. கட்டி, முறுக்கி என வினையெச்சமுமாம்.

வீக்குதல்-1. கட்டுதல். (சூ. நிக. கூ: உரு.) 2. முறுக்குதல். (சிந்தா.)

வீகம்—1 காற்று. 2. பக்ஷி. (1, 2-வைத்தியபரி.) 3. மோதிரம். (பிங்கல. கககூஎ.)

வீங்க—இறுக. (சிந்தா.)

வீங்கல்—1. பாத்தல். (திருவிளை. இந்திரன் பழிதீர்த்த. கஎ.) 2. மிகுதல். (சிலப்.) 3. வீக்கம். (வழக்.)

வீங்கி -1. சேங்கொட்டை.(வைத்தியபரி.) 2. வினையெச்சம். (வழக்.)

வீங்குதல்—1. இறுதல். (பத்துப்பாட்.) 2. வீங்கல். (வழக்.)

வீச்சம்—நாற்றம். (வழக்.)

வீச்சு—1. அடி. 2. எறிதல். 3. ஓர் நோய். (1, 2, 3-வழக்.)

வீச்சுவலை—ஓர் வலை. (வழக்.)

வீசகணிதம்—கணிதவகையி னொன்று.

வீசகரி—வேங்கை. (வைத்தியபரி.)

வீசகா—வேங்கைமரம். (வைத்தியபரி.)

வீசகோசம்—தாமரைக்கொட்டை.

வீசம் — 1. ஓர் கணிதம். 2. கொட்டை. 3. சுக்கிலம். 4. மாகாணி. (வழக்.) 5. மூலம். 6. மூளை. (2, 3, 5, 6-வைத்தியபரி.)

வீசல் — 1. அடித்தல். (வழக்.) 2. ஈதல். 3. எறிதல். (சூ. நிக. கக: சகரவெ. உ.)

வீசனம்—சிற்றாலவட்டம்.(சூ.நிக.எ:ருஅ.)

வீசி—1. அலை. 2. இளைப்பாற்றி.

வீசிதரங்கம்-ஒரு நியாயம்.(தர்க்கசங்கிரக வுரை.)

வீசிய—சிதறிய. (புறநா.)

வீசுகாலேணி — ஒருவகை ஏணி. இதை வீச்சேணி யென்றுங் கூறுவர். கொடிக்கால்களில் உபயோகப்படுத்துவரென்பர். (வழக்.)

வீசுதல்—வீசல்.

வீசை—ஓர் நிறை. (வழக்.)

வீஞ்சுதல்—சொல்வதற்கொவ்வாமற்போதல். (வழக்.)

வீட்சணம்— } பார்வை. (வழக்.)
வீட்சணை— }

வீட்டாள்—மனைவி. (வழக்.)

வீட்டிறப்பு—இறை. இதை மேற்கூறையினடிவாரமென்பர். (சூ. நிக. ரு: ருஉ.)

வீட்டுதல்—கொல்லல். (சூ. நிக. கூ: ருரு.)

வீட்டுமம் —வைராக்கியம்.

வீட்டுமன்—வீடுமன். (சூ. நிக. உ: கரு.)

வீட—நீங்க. (பத்துப்பாட்.)

வீடல்—1. சாதல். (சூ. நிக. கூ: உo.) 2. விடுதல். (சிந்தா.)

வீடி -கொத்தான். (வைத்தியபரி.) இறந்து என வினையெச்சமுமாம்.

வீடிகை—வெற்றிலை. (வைத்தியபரி.)

வீடு—1. ஒன்று (தைலவ.) 2. மனை. (சூ. நிக. ரு: ருக.) 3. மோக்கம். (சூ. நிக. ரு: உ.) விடப்பட்டது வீடென்பர். 4. விடுதல்.(சிந்தா.)

வீடுகோளுதல்-மீட்டல்.(புறப்.மாலை.)

வீண்—பயனின்மை. (சூ. நிக. அ: எo.)

வீணன்—பயனில்லாதவன். (வழக்.)

வீணாதண்டம்— } முதுகந்தண்டெலும்பு.
வீணாதண்டு— } (ஞானாமிர்தம்.)

வீணாள்—வீணன். (வழக்.)

வீணை—யாழ். (பிங்கல. கசருo.)

வீணைச்செல்வம்-இசைப்பாட்டு.(சிந்தா.)

வீணைவல்லவர்—கந்தருவர். (திவாகரம்.)

வீத்துகம்—1. சதகுப்பை. 2. வெள்ளரி. (1, 2-மலையக.)

வீதசோகம்—அசோகு. (வைத்தியபரி.)

வீதசோகன்—அருகன். (சூ. நிக. க: உ.)

வீதம்-வேறுவேறாய்ப்பகுத்தபங்கு.(வழக்.)

வீதராகம்—1. பற்றின்மை. 2. வைராக்கியம்.

வீதராகன்—1. பற்றற்றவன். (சிந்தா.) 2. புத்தன்.

வீதல்—1. கெடுதல். 2. சாதல். 3. வறுமையெய்தல். (1, 2, 3-சூ. நிக. கக: தகரவெ. ருo.)

வீதி—1. தெரு. 2. நேரோடல். (1, 2-பிங்கல. சoககூ.) 3. விசாலம். (வழக்.) வழிமுதலியவற்றிற்கும் பெயர் கூறுவர். (உ-ம்.) வரிற்கொள்க.

வீதிக்குதல்- } பங்கிடுதல். (வழக்.)
வீதித்தல்— }

வீது — வறுமை. சூ. நிக. கூ: கூ௫-ஆங் கவியில் வீதென்பவறுமையெய்தல் என்பது பழம் பாடம்.

வீபற்சு—அருச்சுனன். (பிங்கல. எசாக.)

வீம்பு—வம்புவார்த்தை. (வழக்.)

வீமசேநன்—வீமன். (அபிதாநசிந்.)

வீமதேவன்—1. சிவன்திருநாமங்களினொன் று. (அபிதாநசிந்.) 2. பதினொரு ருத்திரர்களி லொருவன். (பொருட். நிக. அகூ)

வீமம்—பயங்கரம். (வழக்.)

வீமன்—1. தமயந்தியின் பிதா. 2. பாண்டு புத்திரர்களிலொருவன். (1, 2-அபிதாநசிந்.)

வீயா—வீடாத. (பத்துப்பாட்.)

வீயாது—மாறாது. (பத்துப்பாட்.)

வீரங்கழல் — வீரர்கள் வலக்காலிலணியு மணிவடம். (சிவ போதச்சிற்றுரையிலறிக)

வீரகண்டாமணி — வீரர்க்காற்கட்டுமணி. (வழக்.)

வீரகத்தி—வீரரைக்கொன்ற பாவம். (வழக்.)

வீரகம்—மீன். (வைத்தியபரி.)

வீரகோளரி — நவவீரரிலொருவர். (அபி தாநசிந்.)

வீரச்சதங்கை — வீரர்கள் வலக்காலில் அணியும் பொற்சதங்கை. (வழக்.)

வீரச்செல்வி—துர்க்கை. (பிங்கல. கஉச.)

வீரசாகி—1. செங்கொட்டை. 2. சேமரம். (வைத்தியபரி.)

வீரசிங்கன் — இலங்கையிலிருந்த ஒரு சேனாபதி. (அபிதாநசிந்.)

வீரசுவர்க்கம் — போரிலிறக்கும் வீர ரடையும்பதவி. (அபிதாநசிந்.)

வீரசேனன்—நளன்பிதா. (அபிதாநசிந்.)

வீரசைவம்—ஓர் சமயம். (அபிதாநசிந்.)

வீரசைவர் — வீரசைவ சமயத்திலுள்ள லிங்கதாரிகள். (வழக்.)

வீரசோர்க்கம்—வீரசுவர்க்கம்.

வீரசோழியம்—தமிழிலக்கணநூலு ளொன்று.

வீரட்டம் — சிவபிரான் சேவகஞ்செய்த அட்டவீரட்டமென்கிற எட்டுத்தலங்களுக்கும் பொதுப்பெயர். அவை: "பூமன்சிரங்கண்டியூர் தகன்கோவல்புரமதிகை, மாமன்பறியல்சலந்த ரன்விற்குடிமாவழுவூர், காமன்கொறுக்கைய மன்கடவூரிந்தக்காசினியிற், றேமன்னுகொன் றையுந்திங்களுஞ்சூடி தன்சேவகமே"என்னுஞ் செய்யுளிற்காண்க.

வீரட்டானம் — 1. ஓர் சிவதலம். (தேவா. திருநாவு. க.) 2. கூத்தின்விகற்பத்தினொன்று. (பிங்கல. கஈசகு.)

வீரட்டானேசுரர்-திருக்கண்டியூர்முதலிய அட்டவீரட்டத்திலும் எழுந்தருளியிருக்குஞ் சுவாமிபெயர். (அபிதானகோ.)

வீரணம்—இலாமிச்சை. (வைத்தியபரி.)

வீரணி—1. மிளகு. 2. இலாமிச்சை. (1, 2- மலையக.)

வீரத்துவம்—வீரத்தன்மை. துவம்-தன்மை.

வீரதட்டி—மான்றோற்பட்டை.(வைத்திய பரி.)

வீரதண்டை — வீரத்தாலணியுந்தண்டை யென்பர்.

வீரதரு—1 மருது. 2. விடத்தேர். (1, 2- (வைத்தியபரி.)

வீரதீரன்—நவவீரரில் ஒருவன்.(அபிதாநசி.)

வீரதை—வீரம். (வைத்தியபரி.)

வீரந்தரம்—மயில். (வைத்தியபரி.)

வீரநாராயணசோழன் — ஒரு சோழன். இவன் தில்லைக்கனகசபைக்குப் பொன்வேய்ந் தவன். (அபிதாநசி)

வீரபட்டயம்- } வெற்றிபெற்றவீரர் நெற்
வீரபட்டிகை- } றியிலணியும பொற்றகடு. (இராமா. ஆரணியகா. கரன்வதை. கருகூ.)

வீரபத்திரன்—தக்கன்யாகமழிக்கத் தோன் றியவன். (அபிதாநசி.)

வீரபாண்டியன்—ஒரு பாண்டியன். (அபி தாநகோ.)

வீரம் — 1. ஆதனம் எட்டினொன்று. 2. சவ்வீரம் (வைத்தியபரி.) 3. சிவாகமம்இருபத் தெட்டினொன்று. 4. நவரசத்தொன்று. (சூ. நிக. கஉ: கoச.) இது: ஓரலங்காரமுமாம். 5. பராக்கிரமம். (சூ. நிக. அ: உக.) 6. மலை. (பிங் கல. சகரு.) (1, 3-பொருட்-நிக.)

வீரமகரம் — கடல்கடந்து பகைவருரைக் கைப்பற்றினதேர்வேந்தர்முன்பிடிக்கும்விருது என்பர்.

வீரமாகாளர் — மகாளரென்றுங்கூறுவர். இவர்: அரிகரபுத்திரன்சேனாபதி.

வீரமாமகேந்திரம்-சூரபன்மன்பட்டணம். (அபிதாநசிந்.)

வீரமாமுனி — ஐரோப்பியமதகுரு. இவர்: தமிழ்நாட்டிற்குவந்து தமிழ்கற்றுத் தேம்பாவ ணிதொன்னூல் முதலிய நூல்களைச்செய்தார். (அபிதாநசி.)

வீரமார்த்தாண்டசோழன்—ஒரு சோழன். (அபிதாநசிந்.)

வீரமார்த்தாண்டன் — குமாரக்கடவுளுக்குத் துணையாயிருந்த நவவீரரிலொருவர். (அபிதான சிந்.)

வீரர்—பராக்கிரமமுடையவர். (வழக்.)

வீராக்கதன்— } நவவீரரிலொருவன்.
வீராந்தகன்— } (அபிதானசிந்.)

வீரலக்குமி — அட்டலக்குமிகளிலொருத்தி. (பொருட்-நிக.)

வீரவாகுதேவர்-குமாரக்கடவுளுக்குத்துணை யாயிருந்த நவவீரரில் ஒருவர். (அபிதானசிந்.)

வீரவாகுபாண்டியன்— ஜெகநாதபாண்டி யன் குமரன். (அபிதானசிந்.)

வீரவிருக்கம்—சேமரம். (வைத்தியபரி.)

வீரவுப்பு—கல்லுப்பு. (வைத்தியபரி.)

வீரவெட்சிமாலை—நிரைகோடற்கு வெட் சிப்பூமாலையைச்சூடிப்போய் நிரை கவர்ந்து வரில் அவனுக்குமுன்பு தசாங்கம் வைத்துப் போய்வந்த வெற்றியைப்பாடுவது. (பொருட்-நிக.)

வீரவெண்டயம் — வீரத்தாலணியுமொரு வகையணி. (வழக்.)

வீரன் — 1. அருகன். (சூ. நிக. க: உ.) 2. திண்ணியன். (சூ. நிக. உ: ரு௦.)

வீராணி—வீராணிக்கிழங்கு.

வீராதனம்—எண்வகை ஆதனத்தொன்று. (வீரம்பார்.)

வீராப்பு—பொருமல். (வழக்.)

வீராவேசம்—வீரவெறியால்வரும் ஆவே சம். (வழக்.)

வீரி—1. காளி. (பிங்கல. ககக.) 2. பங்கம் பாளை. (மலையக.) 3. வீரமுடையவள். (வழக்.)

வீரிடம்—நாவல். (மலையக.)

வீரிடுதல்—ஒலிக்குறிப்பு. (வழக்.)

வீரியம்—1. இந்திரியம். (மாயப்பசுவை வதைத். உக.) 2. வீரம். (சூ. நிக. அ: உக.)

வீரியர்—வீரர். (புறப். மாலை.)

வீரை—1. ஓர் மரம். 2. கடல். 3. துன்பம். (1, 2, 3-பிங்கல. ௪௦கஉ.) 4. வட்டத்திருப்பி. (தைலவ.) 5. வாழை. (வைத்தியபரி.)

வீவு—1. குற்றம். (ஞானமிர்தம்.) 2. கெடுத்தல். (பத்துப்பாட்.) 3. சாவு. (சூ.நிக.கூ:உ௦.)

வீழ்—1. தெரிநிலைவினைப்பகுதி. 2. மரத் தின்விழுது. (நாலடியார். தாளாண்மை. எ.)

வீழ்க்கை—1. சோதிநட்சத்திரம். (பிங்கல. உ௫கூ.) 2. வீழ்தல், விருப்பமுமாம்.

வீழ்ச்சி—விழுதல். (நன்னூ. பெயரியல். கக. உரை.)

வீழ்த்தல்— } விழுவித்தல். (வழக்.)
வீழ்த்துதல்— }

வீழ்தல்—1. ஆசை. (பிங்கல. கஅகூகூ.) 2. ஆசைப்பெருக்கம். (சூ. நிக. அ: எகூ.) 3. விழுதல். (வழக்.)

வீழ்நாள்—கழியுநாள். (வள். ௩௮. அதி. உரை.)

வீழ்பு—சுள்ளி. (மணிமே.)

வீழ்வு—விழுதல். உ—தொழிற்பெயர் விகுதி.

வீழி—1. ஓர் செடி. (உ - ம்.) "மாளிகை கவின்பெருகுவீழிநகரே" (தேவார. திருஞான. திருவீழிமிழலைப. க.) 2. திருவீழிமிழலையென் னுந்தலம். (வழக்.)

வீழுதல்—வீழ்தல்.

வீழூம்—திரளும். (சிந்தா.)

வீளை—1. சத்தம். (புறப். மாலை.) 2. சீழ்க்கை. (சிந்தா.)

வீற்றம்—வேறுபாடு. அம்—சாரியை.

வீற்றிருத்தல்—1. நிலைபெற்றிருத்தல். (பரிபாடை.) 2. வருத்தமின்றியிருத்தல். (சிந்தா.) புறப்பொருள்வெண்பாமாலையுரையில், செம் மாந்திருத்தலென்பர்.

வீற்றினிதிருந்த பெருமங்கலம்—பாடாண் பகுதியுள் ஓர் துறை. (புறப். மாலை.)

வீற்று—வேறுபாடு. (சூ. நிக. அ: கரு.)

வீறல்—வீறுதல்.

வீறப்பு—இறுமாப்பு. (வழக்.)

வீறு—1. உயர்ச்சி. 2. சிறப்பு. (வள். சுசுரு. உரை.) 3. நல்வினை. (சிந்தா.) 4. பெருமை. (பிங்கல. உஉஉரு.) 5. பொலிவு. (பத்துப்பாட்.) 6. மருந்துவேகம். 7. வெற்றி. (சிந்தா. மண் மகளிலம்பகம். க௬௦. உரை.) 8. வேறொன் றற்கில்லாவழகு. (சிந்தா.) 9. வேறு. (புறநா.) தனிமைக்குங் கூறுவர். (1, 6-வழக்.)

வீறுதல்—பெருமையுறுதல். (வழக்.)

## வெ.

வெஃகல்—1. ஆசைப்பெருக்கம். (சூ.நிக. அ: எகூ.) 2. விருப்பம். (பிங்கல. கஅகூக.)

வெஃகா— கச்சித்திருப்பதிகளிலொன்று. இது: விட்டுணுதலமென்பர். (நன்னூ. பொது வியல். கூ. உரைமேற்கோள்.)

வெஃகாமை-வேண்டாமை. (வள்-வெஃகாமை.)

வெக்காலி—ஓர் மரம். (பெருவழக்.)

வெக்காளம்—மழையில்லாக்காலம். (வழக்.)

வெக்காளித்தல்—வானந்தெழிதல். (வழக்)

வெக்கை-1. கடாவிடுங்களம்.(பதிற்றுப்.) 2. காந்தல். 3. நிலக்கொதிப்பு. (2, 3-வழக்.)
வெக்கைநோய்—வெப்பநோய். (வழக்.)
வெகு—பல. வெறி வெகுவிதம். (வழக்.)
வெகுச்சுருதம்-வெகுச்சுருதமனம். இது: சிற்பநூன்முப்பத்திரண்டிலொன்று (பொருட்-நிக.)
வெகுசு—மிகுதி. (வழக்.)
வெகுட்சி-வெகுளி. இது: கோபம் என்க.
வெகுண்டம்—கரும்பு. (வைத்தியபரி.)
வெகுத்தம்—மகத்துவம்.
வெகுத்துவம்—பலதன்மை. (வழக்.)
வெகுதானிய — பன்னிரண்டாவதாண்டு. (வருஷாதிநூல்.)
வெகுபத்திரி — 1. அரிநெல்லி. 2. கறிமுள்ளி. (1, 2-வைத்தியபரிபா.)
வெகுபுத்திரி — 1. கீழ்க்காய்நெல்லி. 2. துளசி. (1, 2-தைலவ.)
வெகுமதி— } மரியாதை. (வழக்.)
வெகுமானம்— }
வெகுமானித்தல் — மரியாதைசெய்தல். (வழக்.)
வெகுரசம்—கரும்பு. (வைத்தியபரி.)
வெகுநுபன்—ஓந்தி. (வழக்.) அடிக்கடி நிறம் மாறுவதால் இப்பெயர் பெற்றது.
வெகுலாங்கம்—ஆடுதின்னாப்பாளை. (மலையக.)
வெகுலாதி—சிற்றேலம். (மலையக.)
வெகுவாசமுடையயோகி-வசம்பு.(வைத்தியபரி.)
வெகுள்வு—வெகுளல்.
வெகுளல்—வெகுளுதல். அல்—விகுதி.
வெகுளி—சினம். (பிங்கல. ௧அ௭௨.)
வெகுளிவிலக்கு — ஓரலங்காரம். அது: வெகுளிதோன்றக்கூறிவிலக்குவது. (தண்டி. பொருளணி. ௬௭.)
வெகுளுதல்·வெகுளல், கோபித்தலென்க.
வெங்கண் — கொடுமை. (திருவிளை. நாகமெய். ௧.)
வெங்கண்ணனார் — கடைச்சங்கமருவிய புலவருள் ஒருவர். (அபிதானசிந்.)
வெங்கணத்தி—ஓர் பாம்பு. (வழக்.) வெங்கிணத்தியென்றுங்கூறுவர்.
வெங்கலம்—சுடுனையுள்ளபாத்திரம். (தைலவ.)
வெங்களம்—போர்க்களம். (பாரதம். ௧௬-ம் போர்ச்சருக்கம். ௨.)
வெங்காயம்—ஈருள்ளி. (வழக்.)
வெங்காரம்—வெண்காரம். (வழக்.)

வெங்தரு — சேகாழிக்கொருபெயர். (அபிதானசிந்.)
வெங்கோல்—கொடுங்கோல்.(வள். வெருவந்தசெய்யாமை. ௬.)
வெச்சேனல்— } வெம்மையாதல். (மீனாட்சிபிள்ளைத்தமிழ். ௧.)
வெச்சேனவு— }
வெஞ்சயம்-1.பாலைநிலப்பண்.(நம்பியகப். அகத்திணை.) 2. கடும்போர். (சூ. நிக. ௬: ௪௬.)
வெஞ்சனம்—கறிபதார்த்தம். (வழக்.)
வெட்கம்—நாணம். (சூ. நிக. அ: ௪௨.)
வெட்கல்— } நாணுதல். (வழக்.)
வெட்குதல்— }
வெட்கினுவை—கினுவையின் ஓர் பேதம். (வழக்.)
வெட்சி—1. பகைவர்நிரைகவர்வார்க்குரிய மாலை. (சூ. நிக. ௧௨: ௧௨.) 2. பகைவர்பசுக்கூட்டத்தைக்கவர்தல். 3. வெட்சிச்செடி. (சூ. நிக. ௧௧: டகரவெ. ௨௬.)
வெட்சியரவம்-ஓர் துறை. (புறப்-மாலை.)
வெட்டல்-1. தறித்தல். (வழக்.) 2. மெய்ப்பரிசமெட்டிலொன்று. (சூ. நிக. ௧௨: ௬0.)
வெட்டவெளி—வெட்டைவெளி, வெறுவெளி. (வழக்.)
வெட்டறுழலி—நத்தைச்சூரி. (வைத்தியபரி.)
வெட்டனவு—வெட்டெனல்.
வெட்டி — 1. இருவேலி. (மலையக.) 2. வழி. சோழநாட்டின் வழக்கு. 3. வீண்.(வழக்.)
வெட்டிப்பேசல் — கண்டித்துப்பேசல். (வழக்.)
வெட்டிமை—1. கடுமை. 2. சினம். (1,2-வழக்.)
வெட்டியான் — 1. ஓர் பூச்சி என்பர். 2. பறையன். இவனுக்குச் சுடுகாடுகாக்குந் தொழில். (அபிதானசி.)
வெட்டிநம்பு — இரும்பைவெட்டுமோர் உளி. ஒரு குழூஉக்குறி. (வழக்.)
வெட்டு—வெட்டுதல்.
வெட்டுக்கிளி—ஓர் சிறு பறவை. (வழக்.)
வெட்டுதல்—வெட்டல்.
வெட்டெனல்— } கடுமைக்குறிப்பு.
வெட்டெனவு— }
வெட்டை — 1. உட்டினம். 2. ஓர் நோய். 3. கடினம். 4. வெளி. (1, 2, 3, 4-வழக்.)
வெட்டைவெளி—வெறுவெளி. (வழக்.)
வெட்பாலை—ஓர் மரம். (பிங்கல. ௨௭௨௬.)
வெட்பாவட்டை — ஓர் பாவட்டஞ்செடி. (வழக்.)
வெட்பூல்-வெள்ளைப்பூலாச்செடி.(வழக்.)

வேடி—1. அச்சம். 2. இடி. (சூ. நிக. சுு: கஉ.) 3. கன். (சூ. நிக. சுு: ௬௦.) 4. கேடு.(பத்துப்பாட்.) 5. துப்பாக்கிமுதலியவற்றிற் பிறக்குமொலி. (வழக்.) 6. நறும்புகை. 7. பிளவு. (ஐங்திணை.) 8. புகைத்தல். (சிந்தா.) 9. பொட்டிலுப்பு 10. வெடியுப்பு. 11. வெளி. (9, 10, 11-வைத்தியபரி.) (1, 6, 11-சூ. நிக. கக: டகரவெ. ௫.) சிற்றேலம் என்றுங்கூறுவர் வைத்தியபரிபாடையில்.

வெடிக்குதல்—வெடித்தல். (வழக்.)

வெடிகிரந்தி—ஓர் கிரந்திநோய். (வழக்.)

வெடிகுரல் — கண்டத்திற்பாடுங்குற்றம். (திருவிளை. விறகுவிற். ௬௦.)

வெடிசூலை—ஓர் சூலைநோய். (வழக்.)

வெடித்தல்—விள்ளுதல். (வழக்.)

வெடிப்பு—1. கமர். 2. விள்ளுகை. (1,2-வழக்.)

வெடிபகீரதி—படிகாரம். (வைத்தியபரி.)

வெடிபட்டு—சிதறி. (புறநா.)

வெடிபலவன்—பேய்ப்பலவன். இதைப் படுவன்கீரையென்பர் (மலையகராதியில்.)

வெடியுப்பு—ஓர் உப்பு. (வழக்.)

வெடில் —ஓர்வித நாற்றம்.

வெடுக்கன்—கோபி. (வழக்.)

வெடுக்கு-வெடுக்கெனல்,கடுமைக்குறிப்பு.

வெடுவெடுத்தல் — கடுமையாய்ப்பேசல். (வழக்.)

வெடுவெடெனல் — 1. அநுகரணவுபயவோசை. (பிங்கல. உகககூ.) 2. சினக்குறிப்பு. (வழக்.)

வெண்கடம்பு—ஓர் கடம்பு. (சிந்தா.)

வெண்கடுகு—ஓர் கடுகு. (சூ. நிக. ச: உ௨.)

வெண்கருவிளை — வெள்ளைக்காக்கணம். (பிங்சல. உஅகூகூ.)

வெண்கலம் — ஓர் உலோகம். (பிங்கல. கஉசக.)

வெண்கலி— கலித்தளையானுந் துள்ளலோசையானும்வருவது. (யாப்-காரி.செய்யுளியல். கக. உரை.) வேற்றுத்தளையருகிவரவும் பெறும்.

வெண்கவி — 1. வெண்பா. 2. பொருட்பொலிவிலாக்கவி. (வழக்.)

வெண்காக்கணம்—வெள்ளைக்காக்கணம். (வழக்.)

வெண்காசம்-கண்ணோயுள் ஒன்று.(வழக்.)

வெண்காட்டுநங்கை — சிறுத்தொண்டர் மனைவி. (பெரியபு.)

வெண்காடு-திருவெண்காடு என்னுஞ் சிவதலம். (தேவாரம். சம்பந்தர் பதிகம்.)

வெண்காந்தள் — ஓர் கொடி. (பிங்கல. உஅகூ.)

வெண்காரம்—வெங்காரம்.(வைத்தியபரி.)

வெண்காரை—வெள்ளைக்காரை. (வழக்.)

வெண்கிடை—, வெண்கிடைச்சி— } வெள்ளைநெட்டி. (பிங்கல. உஅகூச.)

வெண்குங்கிலியம் — வெள்ளைக்குங்கிலியம். (வழக.)

வெண்குட்டம்—வெள்ளைக்குட்டம். இது ஓர் நோய். (பொருட். நிக.)

வெண்குமுதம்—வெள்ளாம்பல். (வைத்தியபரி.)

வெண்குன்றி—1. அதிமதுரம். 2. வெள்ளைக்குன்றி. (1, 2-வைத்தியபரி.)

வெண்குன்று—முருகன் மலைகளிலொன்று. (அபிதானசிந்.)

வெண்கூதாளம் —சீர்த்தாளி. (மலையக.) வெண்டாளியென்பர் பத்துப்பாட்டில்.

வெண்கை -எழிற்கை. அது பொருள்களை அவிநயிக்குந்தொழிற்கையல்லாத வெறுமனே தாளத்திற் கிசைவிடும் எழிற்கை என்றார். (பதிற்றுப்பத்.)

வெண்கொடிவேலி — வெள்ளைக்கொடிவேலி. (வழக்.)

வெண்கோல்—வெள்ளி. (வைத்தியபரி.)

வெண்கோட்டம் — அக்கிரா. (வைத்தியபரி.)

வெண்சலசமுற்றுள்—சரஸ்வதி. (சூ. நிக. க: ௬௫.)

வெண்சாமரம்—, வெண்சாமரை— } வெள்ளைச் சாமரம். (வழக்.)

வெண்சீர் — நேரீற்று மூவசைச்சொல். (யாப். காரி. உறுப்பிய எ. உரை.)

வெண்சீர்வெண்டளை-காய்முன் நேரொன்றிவருவது (யாப். காரி. செய்யுளிய. க. உரை.)

வெண்செந்துறை — இரண்டடிகள் தம்முளளவொத்து விழுமியபொருளும் ஒழுகிய ஓசையுமாய் வருவது. (யாப். காரி. செய்யுளி. கூ. உரை )

வெண்டகரை—ஓர்பூடு. (வைத்தியபரி.)

வெண்டயம்—ஒருவகைச் சதங்கை. (வழக்.)

வெண்டல்—காய்தல். (வழக்.)

வெண்டலை-தலையோடு. (வைத்தியபரி.)

வெண்டளை —வெண்பாவிற்குரியபந்தம். இது இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளையென விருவகைப்படும். (யாப். காரி. செய்யுளிய. க.)

